
ஓநாய் குலச்சின்னம்
சீன நாவல்
ஜியோங் ரோங்

# ஓநாய் குலச்சின்னம்

## ஜியாங் ரோங்

ஆங்கில மொழிபெயர்ப்பு

ஹோவர்டு கோல்டுபிளாட்

தமிழில்: சி. மோகன்

## ஜியாங் ரோங்

1946ஆம் ஆண்டு ஜியாங்சூ—வில் ஜியாங் ரோங் பிறந்தார். அவருடைய தந்தையின் வேலை நிமித்தமாக, அவர்களுடைய குடும்பம் 1957இல் பீஜிங்கிற்குக் குடிபெயர்ந்தது. 1966இல் ‘சென்ட்ரல் அகாதெமி ஆ∴ப் பைன்ஆர்ட்’இல் ஜியாங் கல்வி மேற்கொண்டார்.

கலாசாரப் புரட்சியைத் தொடர்ந்து, சீனாவில் ஏற்பட்ட நிகழ்வுகளின் விளைவாக, அவருடைய படிப்பு இடையிலேயே தடைப்பட நேர்ந்தது. அவருடைய இருபத்தோராவது வயதில் — 1967இல் —உள்மங்கோலியாவின் ‘கிழக்கு உஜிம்கியுன் பேனர்’இல் அங்குள்ள நாடோடி மக்களோடு சேர்ந்து வாழ்ந்து உழைப்பதற்காக அனுப்பப்பட்டார். அங்கு அவர் பதினோரு ஆண்டுகள் வாழ்ந்தார். அங்கு செல்லும்போது தன்னோடு இரண்டு பெட்டிகள் நிறைய மேற்கத்திய செவ்வியல் படைப்புகளைக் கொண்டு சென்றார். மேலும் அங்கிருந்த பதினோரு ஆண்டுகளில் மங்கோலிய வரலாறு, கலாசாரம், மரபு ஆகியவற்றைத் தீர்க்கமாக அறிந்துகொண்டார்.

குறிப்பாக, மேய்ச்சல்நில ஓநாய்கள் பற்றிய புராணீகங்களை அறிவதில் தீவிர நாட்டமும் வேட்கையும் கொண்டிருந்தார். ஓய்வு நேரங்களில் அவை பற்றிய கதைகளைக் கேட்டறிந்ததோடு, மேய்ச்சல்நில மக்களின் ஆசானும் குலச்சின்னமுமான ஓநாய்கள் குறித்து நேரடி அனுபவமும் ஞானமும் பெறுவதற்காக ஒரு ஓநாய்க்குட்டியை எடுத்து வளர்க்கவும் செய்தார்.

1978இல் பீஜிங் திரும்பி, ‘சமூக அறிவியல்களுக்கான சீன அகாதெமி’யில் தன் கல்வியைத் தொடர்ந்தார். பின்னர், தன் வாழ்வைக் கல்வித் துறையாளராக அமைத்துக்கொண்டார். 2006ஆம் ஆண்டு ஓய்வு பெற்றார்.

இவரின் முதல் நாவலான ‘ஓநாய் குலச்சின்னம்’மேய்ச்சல்நில வாழ்க்கை பற்றிய ஒரு வரலாற்றுப் புனைவு. சுய வாழ்க்கை அனுபவங்களின் ஊடுபாவலோடு உருவாகியிருக்கும் படைப்பு.

2004இல் வெளியான இந்நாவல், அடுத்த இரண்டாண்டுகளுக்குள் நாற்பது லட்சம் பிரதிகள் சீனாவில் விற்பனையானது. ‘மேன் ஆசியன் விருது’ தொடங்கப்பட்ட முதல் ஆண்டான, 2007இல் இந்நாவல் அவ்விருதைப் பெற்றது. நாவல் வெளியாகி சில ஆண்டுகள் வரை தன்னை வெளிக்காட்டிக்

கொள்ளாதிருந்த ஜியாங், இப்புத்தகத்தின் எந்தவொரு நிகழ்விலும் விருது வழங்கும் விழாக்களிலும் கலந்துகொண்டதில்லை. ‘மேன் ஆசியன் விருது’வின் தேர்வுக் குழுவுக்கு இவர் அனுப்பிய புகைப்படம் மற்றும் வாழ்க்கைக் குறிப்பு மூலமே இவர் வெளி உலகுக்கு அறியப்பட்டார். எனினும், அந்த விருதையும் அவர் நேரில் சென்று பெறவில்லை. ஜியாங்கின் இயற்பெயர்: லூ ஜியாமின்.

## மொழிபெயர்ப்பாளர் குறிப்பு

கலாசாரப் புரட்சியைத் தொடர்ந்து சீனாவில் மேற்கொள்ளப் பட்ட புரட்சிகர நடவடிக்கைகள் மூலம், ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக நிலவிவந்த மிகவும் தொன்மையானதும் மகத்தானதுமான மேய்ச்சல்நில நாகரிகம் அதற்கடுத்த முப்பது ஆண்டுகளுக்குள்ளாக அழித்தொழிக்கப்பட்ட வன்முறையின் வரலாற்றுப் புனைவு இந்நாவல்.

இளைஞர்களும் மாணவர்களும் மலைப்பகுதிகளுக்கும் கிராமப்புறங்களுக்கும் சென்று அங்குள்ள மக்களோடு இணைந்து வாழ்ந்து உழைக்க வேண்டுமென மாவோ விடுத்த அழைப்புக்கேற்ப, நூறு இளம் மாணவர்கள் வட — மத்திய உள்மங்கோலியாவின் மிகவும் தொன்மையான மேய்ச்சல் நிலத்துக்குச் சென்றனர். பழங்குடியினரிடமும் கிராமப்புற மக்களிடமும் நிலவிவரும் ‘நான்கு பழமை’களான பழைய சிந்தனை, பழைய கலாசாரம், பழைய சடங்குகள், பழைய பழக்கவழக்கங்கள் ஆகியவற்றை அகற்றிப் புரட்சியைப் பூரணமாக்கும் நடவடிக்கையின் ஓர் அங்கமிது. ஆனால் ஒத்த சிந்தனையும் மனோபாவமும் கொண்ட நான்கு மாணவர்கள் அங்கு ஒரு குடிலில் சேர்ந்து வாழ்ந்து — இருவர் ஆடுமேய்ப்பர்களாகவும், ஒருவன் மாடு மேய்ப்பனாகவும், ஒருவன் குதிரை மேய்ப்பனாகவும் — மேய்ச்சல் தொழிலில் ஈடுபட்டிருக்கும்போது, தொன்மையான மேய்ச்சல் நில தார்மீகங்களால் வசீகரிக்கப்படுகிறார்கள். தொன்மங்களால் ஈர்க்கப்படுகிறார்கள். மேய்ச்சல் நிலத்தின் ஆன்மாவிடம் தங்களை ஒப்படைக்கிறார்கள்.

இந்நால்வரில் ஒருவனான ஜென் சென் மேய்ச்சல்நில ஓநாய்களின் வசியத்துக்கு ஆட்படுகிறான். ஓநாய்கள் குறித்து நேரடி அனுபவமும் ஞானமும் பெறுவதற்காக ஒரு ஓநாய்க்குட்டியை எடுத்து வளர்க்கிறான். அந்தச் சீன இளைஞனின் பார்வையில், சுய வாழ்க்கை அனுபவங்களின் ஊடுபாவலோடு உருவாகியிருக்கும் மகத்தான படைப்பு இந்நாவல்.

ஓநாய் குலச்சின்னமானது மேய்ச்சல் நிலத்தின் ஆன்மா. மங்கோலிய மேய்ச்சல்நில நாடோடி மக்களின் ஞானகுருவாகவும், போர்க் கடவுளாகவும், மேய்ச்சல்நிலக் காவலனாகவும், குலச்சின்னமாகவும் விளங்கிய ஓநாய்கள் அழித்தொழிக்கப்பட்டு மேய்ச்சல்நில ஆன்மா சிதைவுற்ற கதை.

மேய்ச்சல் நிலமானது பெரிய உயிர். அங்கு வாழும் பிற உயிரினங்கள், மனிதர்கள் உட்பட, சிறிய உயிர்கள். பெரிய உயிரைச் சார்ந்தே சிறிய உயிர்கள் வாழ்கின்றன. மேய்ச்சல் நிலமெனும் பெரிய உயிரைப் பேணிப் பராமரித்துப் பாதுகாப்பவர்கள் மங்கோலிய நாடோடி மக்களும் ஓநாய்களுமே. பெரிய உயிர் — சிறிய உயிர்கள் என்ற எளிய மேய்ச்சல்நில தர்க்கமுறை அங்கு ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஓர் இசைமையுடன் நிலவிவருகிறது. ஆனால் 'மனிதனே பிரதானமானவன்' என்ற மாவோவின் சிந்தனை அங்கு அதிகாரம் செலுத்தத் தொடங்கியதும் மேய்ச்சல் நிலத்தின் பாதுகாவலர்களான ஓநாய்கள் குரூரமான வழிமுறைகளில் அழித்தொழிக்கப்படுகின்றன. மேய்ச்சல் நிலத்தின் இருப்புக்கு ஆதாரமாக இருந்த ஓநாய்கள் மறைந்ததும் அது தன் ஆன்மாவை இழக்கிறது. மேய்ச்சல் நிலம் பாலை நிலமாகிறது. மேய்ச்சல்நில நாடோடி மக்களின் ஓநாய் அரசனான முதியவர் பில்ஜி பயந்ததெல்லாமே, அவர் இறந்து இருபது ஆண்டுகளுக்குள்ளாக நடந்து முடிகின்றன.

மேய்ச்சல் நிலம் பாலை நிலமாகி, பீஜிங்கைப் புழுதிப்புயல் தாக்குகிறது. 'பீஜிங்கில் கடுமையான புழுதிப்புயல்' என்ற செய்தியை இப்போதெல்லாம் நாமும் அவ்வப்போது கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

ஹேன் சீனக் குடியானவர் கலாசாரத்தின் மீதான எள்ளலோடும் மங்கோலிய மேய்ச்சல்நில நாடோடி மக்கள் கலாசாரத்தின் மீதான தீரா வேட்கையோடும் படைக்கப் பட்டிருக்கும் இந்தச் சீன நாவல் 2004இல் வெளியானது. அதற்கடுத்த இரண்டு வருடங்களுக்குள்ளாக சீனாவில் மட்டும் நாற்பது லட்சம் பிரதிகள் விற்பனையானது. இன்றுவரை, சீனாவில் மாவோவின் 'சிவப்புப் புத்தகம்' நூலுக்கு அடுத்தபடியாக அதிக அளவில் விற்பனையான புத்தகமாக இருந்துகொண்டிருக்கிறது.

இம்மொழிபெயர்ப்பை நான் மேற்கொள்ளவும், அது புத்தகமாக வெளிவரவும் முழுமுதல் காரணம் நண்பர் வெற்றி மாறன். இந்நாவலை ஆங்கிலத்தில் படித்துவிட்டுப் பெரும் பரவசத்துக்கு ஆளான அவர், அது தமிழில் அவசியம் வர வேண்டுமென வேட்கை கொண்டார். அதற்கான செயல்முனைப்பிலும் ஈடுபட்டார். அதன் விளைவே இந்நூல். 'அதிர்வு' பதிப்பகம் இதற்கெனவே அவரால் தொடங்கப்பட்டது. என் கலை இலக்கிய வாழ்வில் ஒரு நிறைவான

பணி இது. இப்பணியை எனக்களித்த வெற்றி மாறனுக்கு என்றென்றும் என் நன்றி உரியது.

இந்நாவலின் இ—புத்தக வடிவம் நண்பர் மாமல்லன் முன்னெடுத்த முயற்சிகளாலும் உரிய வழிகாட்டுதலாலும் மட்டுமே சாத்தியமாகியிருக்கிறது. அவருக்கு என் அன்பும் நன்றிகளும்.

இந்நாவலின் பிரதான பாத்திரமான சீன இளைஞன் ஜென் சென்னின் மேய்ச்சல்நில நாடோடி வாழ்க்கையில் அவனுடைய ஞானத் தந்தையாக இருந்து ஓநாய் குலச்சின்னத்தின் திகைப்பூட்டும் புதிர்ப் பிராந்தியத்துக்குள் அவனை இட்டுச் சென்ற முதியவர் பில்ஜி, நாம் மறந்துபோன, ஆனால் நம் வாழ்வுக்கான ஆதர்ச ஒளியாக நாம் ஏற்றுக்கொண்டிருக்க வேண்டிய ஜே.சி. குமரப்பாவை ஏதோ ஒரு வகையில் என் மனதில் நினைவூட்டிக் கொண்டிருந்தார். உலக இலக்கிய வளங்களைத் தம் மொழிபெயர்ப்புகள் மூலம் நமக்களித்த க.நா.சு.வையும், ஜே.சி. குமரப்பாவையும் இந்த அருமையான தருணத்தில் தலை தாழ்த்தி வணங்குகிறேன்.

இந்நாவல், நம் வாழ்வுக்கான சுடர்; ஞான சிருஷ்டி.

சி. மோகன்

சென்னை

10. 11. 2019

# 1

ஜென் சென், தான் பதுங்கியிருந்த பனிக்குகையிலிருந்து தொலைநோக்கிக் கருவியின் மூலம் பார்த்தபோது, மங்கோலிய மேய்ச்சல்நில ஓநாயின் தீர்க்கமான பார்வையைக் கண்டான். அவனுடைய உடலின் மெல்லிய முடிகள், முள்ளம் பன்றியினுடையதைப் போலக் குத்திட்டு, அவனுடைய தோலிலிருந்து சட்டையை உண்மையிலேயே இழுத்து வெளியேற்றுவதைப் போலிருந்தன. அங்கு அவனுக்குப் பின்னால் முதியவர் பில்ஜி இருந்தார். இம்முறை, அவனுடைய உடலிலிருந்து அவனுடைய ஆன்மா வெளியேறுவதைப் போல ஜென் உணரவில்லை. ஆனால் வியர்த்துக் கொட்டியது. அவன் மேய்ச்சல் நிலத்தில் இரண்டு ஆண்டுகளாகத் தங்கியிருந்த பிறகும் மங்கோலிய ஓநாய்கள், குறிப்பாக ஓநாய்க் கூட்டங்கள் பற்றிய பயம் அவனுக்குப் போகவில்லை. மலைகளின் ஆழ்ந்த பகுதியில், முகாமுக்கு வெகு தொலைவில், மிகப் பெரிய ஓநாய்க் கூட்டத்தை அவன் நேருக்கு நேராக இப்போது எதிர்கொண்டிருந்தபோது அவனுடைய மூச்சு காற்றில் நடுங்கியது. அவனிடமோ பில்ஜியிடமோ ஆயுதமேதும் இல்லை. துப்பாக்கிகள், கத்திகள், சுருக்குக்கயிற்றுத் தடிகள், குதிரையில் அமரும்போது காலில் மாட்டிக்கொள்ளக்கூடிய மிகச் சாதாரணமான ஒரு ஜோடி உலோக வளையங்களோகூட அவர்களிடம் இல்லை. அவர்களிடம் இருந்ததெல்லாம் இரண்டு மேய்ச்சல் தடிகள் மட்டுமே. ஓநாய்கள் அவர்களுடைய வாசனையைப் பிடித்துவிடும் பட்சத்தில், அவர்களுடைய வான் சமாதி முன்னதாகவே நிகழ்ந்துவிடும்.

மற்றொரு தொலைநோக்கியின் மூலம் ஓநாய்கள் வட்டமாய் சூழ்ந்திருப்பதைப் பார்த்துக்கொண்டிருந்த முதியவரை நோக்கி ஜென் திரும்பியபோது அவன் பதற்றத்தோடு மூச்சுவிட்டான். “அதைவிடவும் மிகுந்த தைரியம் உனக்குத் தேவைப்படப் போகிறது” என்று பில்ஜி மென்மையாகச் சொன்னார். “நீ ஒரு ஆட்டைப் போல் இருக்கிறாய். உன்னுடைய சீன எலும்புகளில் ஓநாய்கள் பற்றிய பயமிருக்கிறது. இங்கு நடந்த எந்தவொரு சண்டையிலும் உங்களால் வெற்றி பெற முடிந்ததில்லை என்பதற்கு இதுவே ஒரே விளக்கமாக இருக்கும்.” அவனிடமிருந்து எந்தவொரு பதிலும் இல்லை. அவர் குனிந்து தணிந்த குரலில், “திடமாக இரு. நம்மிடமிருந்து ஏதேனும் அசைவை அவை கவனித்துவிட்டால்

நம் கதி அவ்வளவுதான்'' என்றார். ஜென் தலையசைத்தான். கை நிறையப் பனி எடுத்து அதை உருட்டிப் பனிப் பந்தாக்கினான்.

அருகாமைச் சரிவில் மங்கோலிய மான் கூட்டம், ஓநாய்க் கூட்டம் பற்றி அறியாமல் மேய்ந்துகொண்டிருந்தது. மனிதர்களின் பனிக்குகைக்கு நெருக்கமாக ஓநாய்க் கூட்டம் தம் வலையை இறுக்கின. ஒரு பனிச்சிற்பத்தைப் போல ஜென் நின்ற இடத்திலேயே உறைந்து போயிருந்தான். ஜென் மேய்ச்சல் நிலத்துக்கு வந்ததிலிருந்து, ஓநாய்க் கூட்டத்தை நேருக்கு நேர் எதிர்கொள்வது இது இரண்டாவது முறை. முதல் எதிர்கொள்ளலில் ஏற்பட்ட இதயப் படபடப்பு அவனுடைய நாளங்கள் வழியாக ஊடுருவியது.

இரண்டு ஆண்டுகளுக்கு முன்பு, நவம்பர் இறுதியில் பீஜிங்கிலிருந்து உற்பத்திக் குழு உறுப்பினராக எல்லைப் பகுதியிலான மேய்ச்சல் புல்வெளிக்கு அவன் வந்து சேர்ந்தான். கண்ணுக்கெட்டிய தூரம் வரை பனி அப்பகுதியை மூடியிருந்தது. மகத்தான ஷிங்கிய மலைப் பிரதேசத்திற்குத் தென்மேற்கிலும், பீஜிங்கிற்கு நேர் வடக்கிலும் ஓலோன்புலாக் அமைந்திருந்தது. புற மங்கோலியாவோடு சேர்ந்து அது எல்லையைப் பங்கிட்டிருந்தது. வரலாற்று ரீதியாக, மஞ்சூரியாவுக்கும் மங்கோலியப் புல்வெளிப் பிரதேசத்துக்கும் இடையேயான தென்பிராந்தியப் பாதையாக அது இருந்தது.

மேலும், பெரும் திரளான மக்களுக்கும் நாடோடிப் பழங்குடியினருக்கும் இடையேயான யுத்தங்களுக்கான பகுதியாகவும் இருந்தது. நாடோடிகளுக்கும் விவசாயிகளுக்கு மிடையே தங்களுடைய மேலாதிக்கத்தை நிறுவுவதற்கான போராட்டக் களமாகவும் எப்போதுமே இருந்திருக்கிறது.

'படித்த இளைஞர்கள்' என்று சொல்லப்படுகிற பீஜிங் மாணவர்களுக்கு அதுவரை குடில்கள் ஒதுக்கப்படாத நிலையில் ஜென், முதியவர் பில்ஜியுடனும் அவருடைய குடும்பத்தாருடனும் வசிப்பதற்கு அனுப்பப்பட்டான். ஆடு மேய்ப்பனுக்கான கடமைகள் அவனுக்குக் கொடுக்கப்பட்டன. அவன் அங்கு வந்து சேர்ந்து ஒரு மாதத்துக்குக் கொஞ்சம் மேலாக ஒருநாள், எண்பது லீ (ஒரு மைலில் மூன்றில் ஒரு பங்கு தூரம்) தொலைவிலுள்ள தலைமையிடத்துக்குப் பாடக் குறிப்புகள் மற்றும் சாதனங்களோடு அன்றாடத் தேவைகளுக்கானவற்றையும் வாங்கிவர அவனும் முதியவரும் அனுப்பப்பட்டனர். அவர்கள் திரும்புவதற்குச் சற்று முன்பாக, புரட்சிகரக் குழுக்

கூட்டத்தில் கலந்து கொள்ளும்படி முதியவருக்குத் தெரிவிக்கப்பட்டது. பாடம் சம்பந்தப்பட்டவை தாமதமின்றி விநியோகிக்கப்பட வேண்டுமென்று தலைமையகம் சொன்னதால், தனியாகச் செல்லும்படி ஜென்னுக்குத் தெரிவிக்கப்பட்டது.

அவன் கிளம்புவதற்குத் தயாரான சமயத்தில் பெரியதும், வேகமாகச் செல்லக்கூடியதும், பாதையை நன்கு அறிந்ததுமான தன்னுடைய குதிரையை முதியவர் அவனுக்குக் கொடுத்துவிட்டு அவனுடைய குதிரையை மாற்றிக்கொண்டார். குறுக்குவழியைத் தேர்ந்தெடுக்காமல் வண்டிப் பாதையில் செல்லும்படி ஜென்னை பில்ஜி எச்சரித்தார். அப்பாதையில் இருபது அல்லது முப்பது லீ தூரத்தில் குடில்கள் காணப்படுமென்பதால் எவ்வித அசம்பாவிதமும் நேராமல் தன் பயணத்தை அவனால் அமைத்துக்கொள்ள முடியும்.

குதிரைமீது ஏறி அமர்ந்து கிளம்பியதும், மங்கோலியக் குதிரையின் சக்தியை ஜென் உணர்ந்தான். முழு வேகத்தில் பாய்ந்து செல்வதற்கான உத்வேகம் எழுந்தது. ஒரு மேட்டினை அடைந்தபோது, அங்கிருந்து படைக் குழுமம் தங்கியிருந்த சிகானூல் மலையின் உச்சியைப் பார்க்க முடிந்தது. முதியவரின் எச்சரிக்கையை மறந்து அவன் பாதையை விட்டு விலகினான். (மலையைச் சுற்றி வளைந்து செல்லும் வண்டிப் பாதை இருபது லீ கூடுதல் தூரம் கொண்டது.) முகாமுக்கு நேரடியாகப் போய்ச் சேர்கிற குறுக்குவழியில் தன் பயணத்தைத் தொடர்ந்தான்.

வெப்பம் தணியத் தொடங்கியது. அவன் தன் இருப்பிடத்துக்குப் பாதி தூரத்தில் இருக்கும்போது, சூரியன் கடும் குளிரால் நடுக்கம் கொண்டு தன் புகலிடமான தொடுவானத்தை அடையும் முன்பே பார்வையிலிருந்து விலகியது. பனி படர்ந்த நிலப்பரப்பிலிருந்து கடுமையான குளிர் காற்று மேலெழுந்தது. ஜென்னின் தோலாடை இறுகி உடைந்துவிடக் கூடும் என்பது போல மாறியது. அவன் குதிரைமீது அமர்ந்திருந்த தோலில் உறைபனி படர்ந்திருந்தது. பனிப்பொழிவு மேலும் கடுமையாகியதாலும், பாதை வழியில் சிறு சிறு குன்றுகள் எதிர்பட்டதாலும் வேகம் மட்டுப்பட்டது.

குடியமர்வுக்கான எவ்வித அறிகுறிகளும் தென்படவில்லை. குதிரை நேராகவும் மிதமாகவும் துரித நடையில் சென்றதால், எந்த வேகத்தில் எந்தத் திசையில் செல்வதென்பதை குதிரையே தீர்மானித்துக் கொள்ளட்டும் என்பதான சகஜ

உணர்வு ஜென்னிடம் ஏற்பட்டு கொஞ்சம் நிம்மதி அடைந்தான். மேலும், எந்த அளவு கடினமாக உழைக்க வேண்டுமென்பதையும் அதுவே முடிவு செய்யட்டும் என ஆறுதலாக இருந்தான். தகுந்த காரணம் எதுவுமில்லாமல், ஜென் திடீரென பதற்றமடைந்தான். அவன் பயத்தால் நடுநடுங்கினான். குதிரை பாதையைத் தவற விட்டுவிடக் கூடுமெனவும், சீதோஷ்ண நிலை மிகவும் மோசமாகக் கூடுமெனவும், பனிப்புயலில் மாட்டிக் கொள்வோமெனவும் பயந்தான். பனிக் கட்டிகள் கவிந்த மேய்ச்சல் நிலத்தில் உறைந்து செத்துவிடுவோமென பயந்தான். அவன் பயப்பட மறந்துபோன ஒரே விஷயம் ஓநாய்கள்.

நீர்த்தடத்தால் உருவான ஒரு மலை இடுக்கை அடைந்தபோது குதிரை நின்றுவிட்டது. இடுக்கின் கீழ் ஓரிடத்தை நோக்கிய வாக்கில் அது தன் தலையை ஆட்டியபடி, வெறுப்பை வெளிப்படுத்தும் வகையில் கனைத்தது. அதன் வேகம் சீராக இல்லை.

ஜென் சென், இதற்கு முன்னர் ஒருபோதும் பனி படர்ந்த மேய்ச்சல் நிலத்தின் ஆழ்ந்த பகுதிகளில் தனியாக சவாரி செய்ததில்லை என்பதால் வரவிருக்கும் அபாயம் பற்றிய அறிகுறியை அவன் உணரவில்லை. மூக்குத் துவாரங்கள் கனன்று கொண்டிருக்க, கண்கள் விரிவடைந்து கோபவயப்பட்டிருந்த குதிரை, அவர்கள் முன் தென்பட்டதற்குத் தலை திருப்பியிருந்தது. அதனுடைய நுண்ணுணர்வை அறியாத ஜென், அதன் கடிவாளங்களைப் பிடித்து இறுக்கி, அதன் தலையைத் திருப்பி, அதைத் தொடர்ந்து துரிதநடையில் செலுத்த முற்பட்டான். அதனுடைய நடையின் தன்மை மிகவும் தடுமாற்றத்துடன் காணப்பட்டது. நடை, துரித நடை, குலுங்கல் ஆகியன ஒருங்கே அமையப் பெற்றதாய் தாறுமாறாகவும், குதிரை திடீர் ஓட்டம் எடுத்துவிடும் போலவும் இருந்தது. ஜென் கடிவாளங்களை மிகவும் இறுக்கிப் பிடித்தான்.

அது வெளிப்படுத்திய அபாய அறிகுறிகள் எதையும் அவன் எச்சரிக்கையுடன் கவனியாது இருப்பதில் விரக்தியடைந்திருப் பதைப் போல, குதிரை திரும்பி, அவனுடைய தோல் காலணியை நிமிண்டியது. அத்தருணத்தில் குதிரையின் கண்களில் தெரிந்த பயத்திலிருந்து அவர்கள் எதிர்கொண்டிருக்கும் அபாயத்தை ஜென் அறிந்துகொண்டான். ஆனால் அப்போது காலம்

வெகுவாகக் கடந்துவிட்டிருந்தது. குதிரை நடுங்கும் கால்களுடன் இருண்ட மலை இடுக்கின் ஒளியூட்டப்பட்ட வெளிக்கு அவனைக் கொண்டு வந்திருந்தது.

இடுக்கின் கீழ் அவன் திரும்பிப் பார்த்தான். மிகுந்த பயத்தால் அவன் குதிரையிலிருந்து கீழே விழுந்துவிடுவான் போலிருந்தது. பனி மூடிய சரிவில் ஐம்பது அடிக்கும் குறைவான தூரத்தில், தங்க நிறத்திலான, கொலை வெறிப் பார்வை கொண்ட மங்கோலிய ஓநாய்க் கூட்டம் தென்பட்டது. அவை எல்லாமே அவனை நேரடியாக, அல்லது ஓரக் கண்களால் ஊசிகளால் துளைப்பதுபோல் தீர்க்கமாகப் பார்த்துக்கொண்டிருந்தன. முன்னால் இருந்த ஓநாய்கள் மிகப் பெரியவை. சாதாரணமாக சிறுத்தைகளின் அளவை ஒத்திருந்த அவை, பீஜிங் மிருகக்காட்சி சாலையில் அவன் பார்த்திருந்த ஓநாய்களை விட குறைந்தபட்சம் இரண்டு மடங்கு பெரியவை. மூக்கிலிருந்து வால் வரை நீளத்திலும் சரி, உயரத்திலும் சரி அவை இருமடங்கு பெரியவை. பனி படர்ந்த வெளியில் அமர்ந்திருந்த கிட்டத்தட்ட பத்து, பனிரெண்டு ஓநாய்கள், திடீரென எழுந்து நின்றன. உறையிலிருந்து உருவப்படப் போகிற வாளைப் போலவும், வில்லிலிருந்து புறப்படப் போகிற அம்பைப் போலவும் அவற்றின் வால்கள் நேராக நீண்டன. அவை பாயத் தயாராக இருந்தன. மற்றவைகளால் சூழப்பட்டிருந்த தலைமை ஓநாய், சாம்பல் வண்ணத்திலிருந்தது. அதனுடைய கிட்டத்தட்ட வெள்ளைக் கழுத்தும், மார்பும், வயிறும் வெள்ளைத் தங்கம் போல் தகதகத்துக் கொண்டிருந்தன. கூட்டம், முப்பது அல்லது நாற்பது ஓநாய்களைக் கொண்டதாய் இருந்தது.

பின்னர், ஜென்னும் பில்ஜியும் அந்த சம்பவம் பற்றிய சூழ்நிலைகள் குறித்துப் பேசிக்கொண்டிருந்தபோது, முதியவர் புருவத்தின் வியர்வையைத் தன் விரலால் துடைத்துக்கொண்டபடி, “அவை ஒரு ஆலோசனைக் கூட்டம் நடத்தியிருக்க வேண்டும். மலையின் மறுபக்கம் மேய்ந்துகொண்டிருக்கக்கூடிய குதிரைக் கூட்டத்தின் மீது தாக்குதல் நடத்துவதற்கான திட்டங்களை ஆண் தலைமை பெரும்பாலும் வகுத்திருக்கக்கூடும். அவற்றின் தோல் மினுமினுப்பிலிருந்து அவை பசியோடு இல்லை என்பதையும், உன்னுடைய அதிர்ஷ்டத்தையும் நீ அறிந்துகொண்டிருக்கலாம்” என்றார்.

உண்மையில், அவற்றைப் பார்த்த மாத்திரத்தில் ஜென்னுடைய மனம் சுத்தமாகத் துடைக்கப்பட்டுவிட்டது. அவன் கடைசியாக நினைவு கூர்ந்த

விஷயம், நிசப்தமான அத்தருணத்தில் அவனுடைய தலைக்கு மேலாக எழுந்த அச்சமூட்டும் சப்தமே. அது, ஒரு காசின் முனையைச் சுண்டிவிடும்போது எழும் ஒரு கூரான ஒலியைப் போலிருந்தது. அவனுடைய ஆத்மா அவனுடைய உடலைக் கிழித்துக்கொண்டு வெளியேறியபோது ஏற்பட்ட ஒலியாக அது இருக்கலாம். அவனுடைய வாழ்க்கை ஒரு நிமிடத்திற்கோ அல்லது அதற்கும் மேலோ நின்றுவிட்டதாக அவன் உணர்ந்தான்.

நீண்ட நாட்களுக்குப் பிறகு, ஓநாய்க் கூட்டத்தை எதிர்கொண்ட சம்பவத்தை நினைவு கூரும்போதெல்லாம் அப்பா பில்ஜிக்கும் அவருடைய குதிரைக்கும் அவன் மௌனமாக நன்றி செலுத்துவான். அந்தக் குதிரை தன் வாழ்நாள் முழுவதும் ஓநாய்ப் பிரதேசத்தில் வசித்திருந்ததும், வேட்டைக்கு மிகவும் கச்சிதமான வகையில் அது அமைந்திருந்ததுமே அவன் கீழே விழாமல் இருந்ததற்கான ஒரே காரணம். அவர்கள் வாழ்க்கை ஊசலாட்டத்தில் இருந்த அந்த மோசமான தருணத்தில், குதிரை வெகு அமைதியாகச் செயல்பட்டது. அது ஏதோ ஓநாய்க் கூட்டத்தையே பார்க்காதது போன்ற பாவனையோடும் அல்லது அவற்றின் ஆலோசனைக் கூட்டத்துக்கு இடைஞ்சல் செய்யும் நோக்கமற்றது போலவும், அது தொடர்ந்து சாவகாசமாக தன் போக்கில் பயணத்தைத் தொடர்ந்தது. அது இயல்பாகக் கொண்டிருந்த துணிச்சலோடும், முழுக் கட்டுப்பாட்டோடும் எவ்விதப் பதற்றமுமில்லாமல் சென்றது. பாய்ந்து செல்லாமல் மிகவும் நிதானமான வேகத்தில் குதிரை தொடர்ந்து சென்றதானது, ஜென் நேராக உட்கார்ந்துகொள்ள ஏதுவாக அமைந்தது.

ஒருவேளை குதிரையின் அதீத துணிச்சலே ஜென்னின் ஆத்மா மீண்டும் திரும்பி வர வகை செய்திருக்கும். ஆனால், ஒரு கணம் வானில் குளிர் காற்றில் நிலைத்திருந்த அந்த ஆவி, மீண்டும் அவன் உடலுக்குத் திரும்பியபோது, அவன் மறுபடியும் பிறந்திருப்பதாகவும் ஆழ்ந்த அமைதியையும் உணர்ந்தான்.

சேணத்தின்மீது உறுதியாக உட்கார்ந்துகொண்டான். பதற்றத்தோடு அவற்றைப் பார்வையில் வைத்திருந்தான் என்றபோதிலும் மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களின் வேகம் பற்றி அவன் நன்கறிவான். இந்த இடைவெளியை விநாடிகளில் அவை இல்லாமலாக்கிவிடும். பயத்தைக் காட்டாதிருப்பது

எவ்வளவு முக்கியமானது என்பதையும் அவன் அறிவான். இந்த மேய்ச்சல்நிலக் கொலைகாரர்களின் தாக்குதலைத் தவிர்க்க அது மட்டும்தான் ஒரே வழி.

தலைமை ஆண் ஓநாய் அவற்றுக்குப் பின்னால் இருந்த மலையைப் பார்ப்பதை அவன் உணர்ந்தான். கூட்டத்திலிருந்த மற்றவையும், ரேடார் கருவி தன் இலக்கைக் குறி வைப்பதைப் போல, அத்திசை நோக்கித் தம் கூர்மையான காதுகளைத் திருப்பின. நிராயுதபாணியாக ஒரு மனிதனும் அவனுடைய குதிரையும் தங்களை தைரியமாகக் கடந்து செல்வதுபற்றி மேற்கொள்ள வேண்டிய ஆணைகளுக்காக அவை மௌனமாகக் காத்திருந்தன. தலைமை ஆண் ஓநாயும் அதனைப் பின்பற்றுபவையும் இது குறித்து என்ன செய்வதென்று ஏதும் தீர்மானித்திருக்கவில்லை.

மனிதனும் குதிரையும் மிக நெருக்கமாக அண்மித்திருந்தபோது, சூரிய அஸ்தமனம் மெதுவாக மங்கி மறையத் தொடங்கியது. அடுத்த இருபது, முப்பது அடிகள் ஜென் சென்னின் வாழ்க்கையில் மிக நெடிய பயணமாக அமையவிருந்தது. அந்தப் பயணத்தில் சில எட்டுகள் வைத்தபோது, ஒரு ஓநாய் அவனுக்குப் பின்னிருந்த சரிவு வரை ஓடிச் சென்றதை அவன் உணர்ந்தான்.

மேலும் படையினர் அங்கு காத்திருக்கிறார்களா என்று வேவு பார்த்து வர தலைமை ஓநாயால் அது அனுப்பப்பட்டிருக்கிறது என்பதை அவன் உள்ளுணர்வால் அறிந்தான். அவனுடைய ஆன்மா மீண்டும் வெளியேறக் கடும் முயற்சி செய்வதை அவன் உணர்ந்தான்.

குதிரையின் நடை சற்றே பிறழத் தொடங்கியது; ஜென்னுடைய கால்களும் குதிரையின் விலாப் பகுதிகளும் நடுங்கின. குதிரை, தன் காதுகளைப் பின்புறமாகத் திருப்பி, வேவு பார்க்கும் ஓநாயின் நடவடிக்கைகளைக் கண்காணித்தது. ஓநாயின் பிரமாண்டமான இரைப்பைக்குள், மேலும் கீழும் சவரக்கத்தியின் கூர்மையுடன் அமைந்திருந்த பல் வரிசை வழியே தான் சென்றுகொண்டிருப்பதாக ஜென் தனக்குத் தானே கற்பனை செய்துகொண்டான்; அவன் பாதி நுழைந்திருக்கும்போது வாயை மூடிப் பல்லால் இறுக்கிக் கடித்தது. குதிரை, தன் பின்னங்கால்களில் பலம் சேர்க்க முயற்சித்து, மரணச் சடங்குக்குத் தயாரானது. ஆனால், அதன் பின்னிருந்த சுமை அதற்குப் பெரும் தொந்தரவாக அமைந்தது.

திடீரென ஜென் சென், ஒரு மேய்ப்பனைப் போல, மங்கோலிய சொர்க்கமான டெஞ்ஞரிடம் அந்த இக்கட்டான தருணத்தில் வேண்டத் தொடங்கினான்: அறிவும், ஆற்றலும்மிக்க சொர்க்கமான டெஞ்ஞரே, உன் நேசக்கரத்தை எனக்கு நீட்டு. அடுத்து, சுவாசத்தை உள்ளிழுத்தவாறு பில்ஜி அப்பாவை வேண்டினான். மங்கோலிய மொழியில் 'பில்ஜி' என்றால் 'ஞானம் நிறைந்தவன்' என்று பொருள். முதியவர், மேய்ச்சல் நிலம் பற்றிய தன்னுடைய அறிவை இவனுடைய மூளைக்குள் நேரடியாகக் கடத்த ஒரு வழி அறிந்தால்தான் இதிலிருந்து மீள முடியும். ஓலோன்புலாக்கின் நிசப்தத்தை எந்தவொரு எதிரொலியும் குலைக்கவில்லை. நம்பிக்கையின்மை அவனைப் பீடித்தது; ஜென் தன் கண்களை உயர்த்தினான்; அவன் சொர்க்கங்களின் குளிர் நீல அழகைக் கடைசியாகப் பார்க்க விரும்பினான்.

பில்ஜி அப்பா சொன்ன ஏதோ ஒன்று வானிலிருந்து விழுந்து, அவன் செவிப்பறையை இடி போலத் தாக்கியது: துப்பாக்கிகள், சுருக்குக்கயிற்றுத் தடி மற்றும் உலோகத்தால் செய்யப்பட்ட எந்தவொரு பொருளுக்கும் ஓநாய்கள் பயப்படும். அவனிடம் துப்பாக்கியோ சுருக்குக்கயிற்றுத் தடியோ இல்லை. ஆனால் உலோகத்தாலான ஏதாவதொரு பொருள் அவனிடம் இருக்கிறதா? அவனுடைய பாதம் வெதுவெதுப்பாக இருந்தது. ஆம்! அவனுடைய பாதங்களுக்கு அடியில் இரண்டு பெரிய உலோக வளையங்கள் இருந்தன. அவனுடைய கால் தசைகள் பரவசத்தில் துடித்தன.

பில்ஜி, அவருடைய குதிரையை அவனுக்கு இரவலாகத் தந்தபோதிலும் சேணம் ஜென்னுடையது. ஆரம்பத்தில் அவனுக்காகக் கால் வளையம் தந்தபோது, பில்ஜி மிகப் பெரிய ஒன்றையே தேர்வு செய்தார். என்றோ ஒரு நாள் அவை அவனைக் காப்பாற்றும் என்று அறிந்திருந்ததைப் போல அவருடைய அச்செயல் அமைந்திருந்தது. முன்னர், அவன் சவாரி செய்யப் பழகிய சமயத்தில், சிறிய கால் வளையங்கள் சேணத்தில் அமர்வதற்கு சிரமமாக இருக்கும் என்பதோடு, குதிரை உன்னைக் குப்புறத் தள்ளினால் உன் பாதம் அதில் மாட்டிக்கொண்டு நீ அதோடு இழுத்துச் செல்லப்படுவாய்; அதனால் நீ மோசமாகக் காயப்படுவாய் அல்லது மரணம் கூட நேரலாம் என்றார் முதியவர். அந்த வளையங்களின் பெரிய துவாரங்களும் வட்டமான அடிப்பகுதியும் மற்ற சிறிய கால் வளையங்களின் சிறு துவாரங்களையும்

தட்டையான அடிப் பகுதியையும் விட இரு மடங்கு பெரியவை; எடையும் இரு மடங்கு கூடுதல்.

ஓநாய்க் கூட்டம் உளவாளியின் அறிக்கைக்காகக் காத்திருந்தது. குதிரையும் சவாரி செய்பவரும் இப்போது அவற்றுக்கு நேரெதிரில் இருந்தனர். ஜென் கால் வளையங்களிலிருந்து பாதங்களை விரைவாகக் கழற்றிக் கீழே குதித்தான். தோல் வாரோடு அவற்றை உருவினான். ஒவ்வொரு கையிலும் ஒன்றைப் பிடித்துக்கொண்டு, அவனுடைய முழு பலத்தையும் ஒன்று சேர்த்து,குதிரையைச் சுற்றி வந்து, ஓநாய்க் கூட்டமிருந்த திசை நோக்கி கர்ஜனை செய்தபடி, கனமான கால் வளையங்களை மார்பளவுக்கு உயர்த்தி அவை இரண்டையும் இணைத்துப் பேரொலி எழுப்பினான்.

‘கிளாங் கிளாங். ’

சம்மட்டியால் பட்டறைக் கல்லின்மீது அடிக்கப்படுவதைப்போல், கூரான, காதைப் பிளக்கும் சப்தம், மேய்ச்சல் நிலத்தின் நிசப்தத்தைக் கிழித்துக்கொண்டு ஒவ்வொரு ஓநாயின் காதுக்குள்ளும், துணிச்சலுக்குள்ளும் நேரடியாக ஒரு கத்தியைப் போல் புகுந்தது. இயற்கை சாராத உலோக சப்தங்கள் எந்த ஒரு மோசமான இடியையும் விடக் கூடுதலாக அவற்றை அச்சுறுத்தின. அவை உருவாக்கிய சப்தம் அவற்றிடம், வேட்டைக்காரனின் வலையில் சிக்கிக்கொள்வதை விடவும் மிக பயங்கரமான நாசகார விளைவினை ஏற்படுத்தின.

முதலில் ஜென் எழுப்பிய ‘கிளாங்’ சப்தங்கள் காற்றில் ஒலித்தபோது ஓநாய்கள் நடுங்கின. அடுத்து சிதறிய சப்தம் அவற்றைத் திரும்பச் செய்தன; தலைமை ஓநாய் வழிநடத்த, அவை மலைகளுக்குள் மஞ்சள் புயலைப் போல பாய்ந்து சென்றன. உளவாளியும் தன் பொறுப்பைத் துறந்துவிட்டு, கூட்டத்தின் மற்ற உறுப்பினர்களைத் தொடர்ந்து பாய்ச்சலாகச் சென்றது.

ஒரு ஜோடி உலோக வளையங்களுக்கு ஓநாய்கள் பயப்பட்டதைக் கண்டு ஜென்னுக்குத் தன் கண்களை நம்பவே முடியவில்லை. அவனுடைய தைரியம் தாமதமாகத் திரும்பவும் வந்து சேர்ந்ததும், கால் வளையங்களை ஒன்று சேர்த்து ஆவேசமாக சப்தமெழுப்பினான். அதன் பிறகு, ஒரு மேய்ப்பனைப்

போல கைகளைக் காற்றாடி போலச் சுழல விட்டபடி கத்தினான்: "சீக்கிரம், சீக்கிரம்! எல்லாப் பக்கமும் ஓநாய்கள் இருக்கின்றன."

அவனுக்குத் தெரிந்தவரை, மங்கோலிய மொழியை ஓநாய்கள் புரிந்துகொள்வதோடு, மனித சைகைகளின் அர்த்தமும் அவற்றுக்குத் தெரியும். ஒருவேளை, வேட்டைக்காரர்களால் வலை விரிக்கப்பட்டிருப்பதாகக் கருதி அவை பயப்பட்டுக் கலைந்து போயிருக்கலாம்.

ஆனால், அவை ஒழுங்கான பாணியில், தொன்மையான அமைப்புரீதியான ஒற்றுமையைக் காப்பாற்றியபடியும், மேய்ச்சல் நில ஓநாய்களின் குழு அமைப்பு இயல்புக்கேற்பவும் கலைந்துபோயின. ஆண் தலைமை முன்னிற்க, மிகவும் மூர்க்கமான ஓநாய்கள் முன்னின்று செயல்படுபவையாகவும், கூட்டத்தின் பெரிய ஓநாய்கள் அவற்றுக்குப் பின் நிற்பவையாகவும் அணி வகுக்கிற ஒழுங்கமைவு. பறக்கும் பறவைகளிடமோ, பிற காட்டு விலங்குகளிடமோ பொதுவாகக் காணப்படுகிற குழப்பங்கள் ஒருபோதும் இவற்றிடம் காணப்படுவதில்லை. அக்காட்சியைக் கண்டு ஜென் எக்களிப்படைந்தான்.

ஒரு நொடியில், ஓநாய்க் கூட்டம் எவ்விதத் தடயமுமின்றி மறைந்துபோனது. அந்த மலை இடுக்கில் மிஞ்சியிருந்ததெல்லாம் வெண்பனி மூட்டமும் சுழித்தோடும் பனிச் செதில்களுமே.

இதற்கிடையே இரவு கவிழ்ந்தது. ஜென் குதிரை மீதேறி கால் வளையங்களுக்குள் கால்களை முழுவதுமாகப் பொருத்திக்கொள்வதற்கு முன்பாகவே, குதிரை மின்னலெனக் கிளம்பி, அண்மையிலுள்ள முகாமை நோக்கி விரைந்தது. கடுங்குளிர் காற்று அவன் உடலெங்கும் பரவிச் சென்றது; அவன் உடலிலிருந்து வெளிப்பட்ட குளிர் வியர்வை ஐஸ் கட்டியாக மாறியது.

ஓநாயின் இரைப்பையிலிருந்து தப்பியதைத் தொடர்ந்து, டெஞ்ஞரிடம் பக்தி பாராட்டுபவனாக, அங்கு வசித்த மங்கோலியவாசிகளைப் போலவே, உடனடியாக மாறிப்போனான்.

மேலும், அவனிடம் மங்கோலிய ஓநாய்களிடத்து பயம், பக்தி, மோகம் ஆகியன கலந்த ஒரு மனோபாவம் உருவானது. அது அவனுடைய ஆன்மாவைத் தொட்டுவிட்டது. இவ்வளவு வலிமையான ஈர்ப்பை அது எப்படி தன்வசம் கொண்டுள்ளது?

அடுத்த இரண்டு வருடங்களுக்கு, ஜென்னின் பார்வையில் மற்றுமொரு ஓநாய்க் கூட்டம் தென்படவில்லை. அவன் பகலில் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருக்கும் போது, எப்போதாவது தனித்த ஒரு ஓநாயையோ, சமயங்களில் இரண்டு ஓநாய்களையோ வெகு தொலைவில் கண்டிருக்கிறான். அவன் முகாமிலிருந்து வெகு தொலைவு தள்ளியிருந்த சமயங்களில்கூட, ஒரு நேரத்தில் நான்கு அல்லது ஐந்து ஓநாய்களுக்கு மேல் கண்டதில்லை. எனினும், ஓநாய்களால் கொல்லப்பட்ட ஆடு, மாடு, குதிரைகளின் எச்சங்களை அவன் அடிக்கடி பார்த்திருக்கிறான். ஒன்றிரண்டு செத்த ஆடுகள், மூன்று அல்லது நான்கு மாடுகள், நான்கு அல்லது ஐந்து குதிரைகள் என அவை இருக்கும். ஆனால், சமயங்களில் இறந்த உடல்கள் பரந்த வெளியெங்கும் சிதறிக் கிடக்கும். அவன் மக்களைச் சந்திக்கச் செல்லும்போது, வழக்கமாக ஓநாய்களின் தோல்கள் உயர்ந்த கம்பங்களில், காற்றில் கொடிகள் பறப்பதைப் போல, தொங்கிக்கொண்டிருப்பதைப் பார்த்திருக்கிறான்.

இப்போது பனிக்குகையில் பில்ஜி, ஒரு சிறு அசைவுமின்றிப் படுத்தவாக்கில் கிடந்தார். மான்கள் சரிவில் புல் மேய்ந்து கொண்டிருப்பதையும் ஓநாய்க் கூட்டம் மிக மெதுவாக நகர்ந்து அவற்றை நெருங்குவதையும் அவருடைய கண்கள் உன்னிப்பாகப் பார்த்துக்கொண்டிருந்தன. ‘‘அமைதியாக இரு’’ என்று ஜென்னிடம் முணுமுணுத்தார். ‘‘ஒரு வேட்டைக்காரனாக நீ முதலில் அவசியம் அறிய வேண்டிய பாடம், பொறுமை.’’

பில்ஜி அவனுக்குப் பக்கத்திலிருப்பது ஆறுதலாக இருந்தது.

ஜென், தன் கண்களைக் கசக்கியவாறு பனிப் படலத்தை நீக்கிவிட்டான். பில்ஜியை அமைதியாகப் பார்த்தபடி, தன்னுடைய தொலைநோக்கியை மறுபடியும் தூக்கிப்பிடித்து மான்களையும் ஓநாய்களையும் பார்வையிட்டான்.

முன்னர் அவன் ஓநாய்களை எதிர்கொண்ட சம்பவத்திலிருந்து நாடோடிகளான மேய்ச்சல்நில வாசிகள் ஒருபோதும் ஓநாய்களால் சூழப்படுவதிலிருந்து வெகு தொலைவில் இல்லை என்பதைப் புரிந்துகொண்டான். அநேகமாக ஒவ்வொரு இரவும் நூறு லீ மற்றும் அதற்கும் அதிகமான தொலைவில் புல்வெளிப் பிரதேசத்தின் புற எல்லைகளில், குறிப்பாக உறைபனிக் காலத்தில், ஓநாயின் ஆவி வடிவிலான உருவங்களை அவன் பார்த்திருக்கிறான். இரண்டு அல்லது

மூன்று, சமயங்களில் ஐந்து அல்லது ஆறு ஓநாய்கள் தங்கள் ஜொலிக்கும் பச்சை வெளிச்சக் கண்களோடு சுற்றித் திரியும். ஓர் இரவு அவனும் பில்ஜியின் மருமகளான கஸ்மாயும், ஃப்ளாஷ் லைட்டுகளின் துணையோடு இருபத்தைந்து ஓநாய்கள் திரிவதைக் கணக்கிட்டிருக்கிறார்கள்.

கொரில்லாப் போராளிகளைப் போலவே நாடோடிகளும் எளிமையான வாழ்க்கை முறையைக் கடும் முயற்சியோடு மேற்கொள்பவர்கள். பனிக்காலத்தில் பார வண்டிகளும் நீளமான விரிப்புகளாலான தற்காலிக வேலிகளும் கொண்டு ஆட்டுப் பட்டிகள் அரைவட்ட வடிவில் அமைக்கப்படும். இந்த வேலிகள் காற்று வருவதைத் தடுக்க உதவுமே தவிர ஓநாய்கள் வருவதைத் தடுப்பதில்லை. தெற்குப் பகுதியிலான பெரிய திறப்பினை நாய்களின் கூட்டமும் பெண்களும் காவல் புரிந்து கண்காணிப்பார்கள். அவ்வப்போது ஓநாய்கள் பட்டிகளுக்குள் நுழைந்து நாய்களோடு சண்டையிடும். குடில்களின் சுவர்களில் மோதும் உடல்களின் சப்தம், மறுபக்கம் உறங்கிக் கொண்டிருப்பவர்களை எழுப்பிவிடும். ஜென் சென்னுக்கு இருமுறை இவ்விதம் நேர்ந்திருக்கிறது. அடிக்கடி, இரண்டு தரை விரிப்புகளின் தூரத்துக்குள்தான் நாடோடிகள் ஓநாய்களிடமிருந்து விலகியிருந்திருக்கிறார்கள்.

இரவில் ஓநாய்கள் வேட்டைக்காக வரும்போது ஜென் லேசாகத் தூங்கிப் போயிருப்பான். கஸ்மாயிடம் அவன், அவள் காவல் புரியும்போது ஓநாயேதும் பட்டிக்குள் எப்போதாவது நுழைந்தால் அவனைக் கூப்பிடும்படி கேட்டிருந்தான். ஓநாயை விரட்டியடிக்க அவளுக்கு உதவி செய்வதாகவும், தேவைப்பட்டால் அதனுடன் நேருக்கு நேர் மோதுவதாகவும் அவளிடம் உறுதிஅளித்திருந்தான். ஓநாய்மீது இவ்வளவு ஈடுபாடு கொண்ட ஒரு சீனனை அவர் இதுவரை கண்டதில்லை என தன் குறுந்தாடியைத் தடவியபடி, சிரித்துக்கொண்டே பில்ஜி கூறினார். பீஜிங்கிலிருந்து வந்திருக்கும் ஒரு மாணவன் வழக்கத்துக்கு மாறாகப் பெரிதும் ஈடுபாடு காட்டுவதில் அவர் சந்தோஷமடைந்திருப்பது தெரிந்தது.

அங்கு அவனுடைய முதல் பனிக்காலத்தின்போது பனி பெய்த ஓர் இரவில், ஒரு ஓநாய்க்கும், நாய்க்கும், ஒரு பெண்ணுக்கு மிடையே சண்டை நடப்பதைக் கையில் ஃப்ளாஷ் லைட் ஏந்தியபடி, ஜென் மிக நெருக்கமாகப் பார்க்க நேரிட்டது.

“ஜென்ஜென்! ஜென்ஜென்!”

கஸ்மாயின் வீறிட்ட கூப்பாடுகளும், நாய்களின் காட்டுத்தனமான குரைப்புகளும் ஜென்னை எழுப்பிவிட்டன. தன் காலணி களை இழுத்துவிட்ட பிறகு, மங்கோலிய மேலங்கியின் பட்டன்களை மாட்டிக்கொண்டு, குடிலுக்கு வெளியே நடுங்கும் கால்களுடன் ஓடினான். கையில் மேய்ச்சல் தடியும் ஃப்ளாஷ் லைட்டும் இருந்தன. மிக நெருக்கமாக அடைக்கப்பட்டிருந்த ஆடுகளின் கூட்டத்திலிருந்து ஓநாயை வெளியேற்றும் வகையில், ஓநாயின் வாலைக் கஸ்மாய் பிடித்து இழுத்துக்கொண்டிருப்பது, பனியினூடாகப் பாய்ந்த விளக்கின் ஒளியிலிருந்து வெளிப்பட்டது. அவள்மீது எப்படியாவது தன் பற்களைப் பதிக்க ஓநாய் முயற்சி செய்தது. இதற்கிடையே, கொழுத்த, முட்டாள் ஆடானது ஓநாயால் செயலற்றுப்போய் கல்லாய் சமைந்தும் காற்றினால் கிட்டத்தட்ட உறைந்தும் போயிருந்தது. ஓநாயின் முன்பாதி நகர முடியாதபடி இருந்தது; தரையில் பாதத்தை ஊன்றியிருக்கவும், முன்னால் இருந்த ஆட்டைக் கடித்துக்கொண்டிருக்கவுமே அதனால் முடிந்தது. கஸ்மாயுடன் இழுபறி சண்டையிட்டுக்கொண்டிருக்கவே அதற்குச் சரியாக இருந்தது. ஏதாவது உதவி செய்ய வேண்டுமென ஜென் தடுமாறினான்; ஆனால் என்ன செய்ய வேண்டுமெனத் தெரியவில்லை. கஸ்மாயின் இரண்டு நாய்கள், அடைத்துக்கொண்டு கிடந்த ஆடுகளினால் வளைக்கப்பட்டிருந்தன. பெரிய ஓநாயை நெருங்க முடியாமல், அவை வெறுமனே காட்டுத்தனமாகக் குரைத்துக்கொண்டிருந்தன. அதே சமயம், பில்ஜியின் ஐந்து அல்லது ஆறு வேட்டை நாய்கள், அண்டை வீட்டாரின் நாய்களோடு சேர்ந்து, பட்டியின் கிழக்கே மற்ற ஓநாய்களோடு சண்டையிட்டுக்கொண்டிருந்தன. குரைப்பு சப்தங்களும் ஊளை சப்தங்களும் நாய்களின் வேதனைமிகுந்த கதறல்களும் சொர்க்கத்தையும் பூமியையும் உலுக்கின. ஜென் கஸ்மாய்க்கு உதவி செய்ய விரும்பினான். ஆனால், அவனுடைய கால்கள் கொஞ்சமும் நகர மறுத்தன. உயிருள்ள ஒரு ஓநாயைத் தொட்டுப் பார்க்கும் அவனுடைய வேட்கை மறைந்துபோய், பயம் அவனை முடக்கிப்போட்டிருந்தது.

கஸ்மாய் பதற்றத்தோடு கத்தினாள்: "நீ அங்கேயே இரு. எங்கள் பக்கத்தில் வராதே. ஓநாய் உன்னைக் கடித்துவிடும். இந்த ஆடுகளைக் கொஞ்சம் நகரச் செய். நாய்கள் உள்ளே வரட்டும்.’’

ஓநாயின் வாலை கஸ்மாய் மிகவும் கெட்டியாக இழுத்துக்கொண்டிருந்தாள்; பின்னால் விழுந்துவிடுவாள் போலிருந்தாள்; அவளுடைய நெற்றி வியர்வையில் குளித்திருந்தது. வாலை அவள் கெட்டியாகப் பிடித்திருந்தது, ஓநாய்க்கு மிகுந்த வலி ஏற்படுத்தியதன் காரணமாக அது குளிர்ந்த காற்றை வாயால் உள்ளிழுக்கும்படி ஆயிற்று. அது திரும்பி, தன்னைத் துன்புறுத்துபவரை நகத்தால் கிழிக்க பிரயத்தனம் செய்தது. ஆனால், அதனால் இயலவில்லை. அது சட்டெனப் பின்வாங்கி, சுழன்று, வாயைப் பிளந்து தன் கூரான கோரைப் பற்களைக் காட்டியபடி கஸ்மாய் முன் வந்தது. அவளது மயிர்த் தோலாலான அங்கியின் கீழ்ப் பாதி பெரும் சப்தத்துடன் கிழிந்தது. அவளுடைய மங்கோலியக் கண்களில் சிறுத்தையினுடையதைப் போன்ற ஒளி வீசியது. அவள் வாலின் பிடியை விட்டு விடாதிருந்தாள். அவள் பின்னால் ஒரு குதி குதித்து மறுபடியும் மிருகத்தை நீட்டுவாக்கில் இருக்கும்படி செய்து, நாய்களின் பக்கமாக அதை இழுக்க ஆரம்பித்தாள்.

பயத்தால் தன் வசமிழந்து போன ஜென், என்ன செய்வதென்று தெரியாமல் கஸ்மாய் மீதும் ஓநாய் மீதும் வெளிச்சம் பாயும்படி ஒளிவிளக்கைப் பிடித்தான்; பிறகு, மேய்ச்சல் தடியால் அவனுக்குப் பக்கத்திலிருந்த ஆட்டின் தலைமீது அடித்தான்.

வெளிச்சம் மந்தைக் கூட்டத்தைப் பெரும் குழப்பத்தில் ஆழ்த்தியது. ஓநாய்க்குப் பயந்து இருளில் கிடந்த அவை, இடையில் பாய்ச்சப்பட்ட ஒளிக்கு எதிராகப் போராடும் வகையில் மீண்டும் ஒன்றோடொன்று முடங்கிக்கொண்டன. ஜென்னால் அவற்றை விலக்க முடியவில்லை. இன்னும் மோசம் என்னவென்றால், ஓநாயுடனான இழுபறிச் சண்டையில் கஸ்மாய் தோற்றுக்கொண்டிருந்ததை அவன் பார்த்தான்; ஓநாய் அவளை முன்னுக்கு இழுத்துக்கொண்டிருந்தது.

''அம்மா! அம்மா!'' ஒரு குழந்தையின் பயந்த கதறல் காற்றைக் கிழித்துக்கொண்டு வந்தது.

கஸ்மாயின் ஒன்பது வயது மகன் பாயர் குடிலிலிருந்து திடீரென வெளிப்பட்டு வந்தான். என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதை அவன் பார்த்த மாத்திரத்தில், அவனுடைய அலறலில் மாற்றம் ஏற்பட்டது. அவன் தன்னுடைய

அம்மாவை நோக்கி ஓடினான். மறித்துக் கிடந்த ஆடுகளைத் தாண்டிக் குதித்து, அம்மாவின் பக்கத்தில் சென்று, ஓநாயின் வாலைப் பற்றினான்.

“அதனுடைய காலைப் பிடி!” அவள் கத்தினாள்.

பாயர் வாலை விட்டுவிட்டு, பின்னங்கால்களில் ஒன்றைப் பற்றி, அதைப் பின்னுக்கு இழுத்து, அது முன்னுக்குச் செல்வதை மட்டுப்படுத்தினான். இருவருமாகச் சேர்ந்து அது முன்னுக்கு இழுப்பதை முழுவதுமாக நிறுத்தினார்கள். அம்மாவும் மகனும் உறுதியான பிடிமானத்தோடு, பெரிய ஓநாய் எந்தவொரு ஆட்டையும் கொண்டு சென்றுவிடாதபடி, அது தங்கள் பிடிக்குள் இருக்குமாறு பார்த்துக்கொண்டார்கள்.

இதற்குள் பில்ஜி அந்த இடத்தை வந்தடைந்தார். வழி மறித்துக் கிடந்த ஆடுகளை, “பார்! பார்!” என்றழைத்து அங்கிருந்து அகற்றினார். மங்கோலிய மொழியில் ‘பார்’ என்றால் ‘புலி’ என்று பொருள்; முகாமிலேயே பில்ஜியுடையதுதான் மிக மூர்க்கமான, மிகப் பெரிய, ஓநாய் வேட்டைக்கான நாய். பெரிய ஓநாய்களைப் போல அது மூக்கிலிருந்து வால் வரை நீளமானதில்லை; ஆனால், அதன் மார்புப் பகுதி நீண்டும் விரிந்தும் அமைந்திருக்கும்; அதன் ஓரளவு திபேத்திய மரபுவழியும் இதற்குக் காரணம். அதன் பெயர் சொல்லி அழைத்தவுடனேயே, வெளியில் அது நிகழ்த்திக்கொண்டிருந்த சண்டையை நிறுத்திவிட்டு, தன் எஜமானனின் அருகில் விரைந்து வந்து நின்றது. அதன் வாயிலிருந்து ஓநாய் ரத்தத்தின் துர்நாற்றம் வந்துகொண்டிருந்தது. ஜென்னிடமிருந்து ஃப்ளாஷ் லைட்டை பில்ஜி வாங்கி ஓநாய்மீது வெளிச்சத்தைப் பாய்ச்சினார். அது இன்னமும் ஆட்டு மந்தைக்கிடையேதான் இருந்தது. ‘பார்’ ஆடுகளின் பின்புறமாகத் தாவி, தலைகளின் மீது நடந்தபடியும், உருண்டு புரண்டும், தட்டித் தடவியும் ஓநாயைத் தாக்குவதற்காகச் சென்றது.

“ஓநாயை நோக்கி ஆடுகளைத் தள்ளிவிடு” என பில்ஜி கத்தினார். “அது வெளியேறி விடாதபடி பட்டியில் அடைத்து விடுவோம்.” அவர் ஜென் சென்னின் கையைப் பிடித்துக்கொள்ள இருவருமாகச் சேர்ந்து ஓநாயையும் கஸ்மாயையும் நோக்கி ஆடுகளைத் தள்ளினார்கள்.

கடைசியாக, 'பார்' மோசமான சுவாசத்தோடு மூக்கிலிருந்து ரத்தம் வழிந்துகொண்டிருக்க, கஸ்மாய் அருகில் வந்து நின்றது. ஆனால், ஓநாய் இன்னமும் ஆடுகளோடு இறுக்கமாக ஒட்டிக்கொண்டிருந்தது. ஓநாயின் தோல் சேதமடையாத வகையில், ஓநாய்களின் பின்புறத்திலோ உடல் பகுதியிலோ கடிக்காதபடி மங்கோலிய வேட்டை நாய்கள் பயிற்சி பெற்றிருக்கின்றன. பார் தன்னுடைய பற்களைப் பதிப்பதற்கேற்ற பகுதியைக் கண்டறிவதில் வெறியோடிருந்தது. பார் தனக்குப் பக்கத்திலிருப்பதைக் கவனித்த கஸ்மாய், பக்கவாட்டில் திரும்பி, ஒரு காலைத் தூக்கி, ஓநாயின் வாலைத் தன் இரு கைகளாலும் பற்றித் தன் கால்களுக்கிடையே அதை இருத்திக்கொண்டாள். பிறகு உரக்கக் கத்தியபடி, தன் முழங்காலால் அதன் வாலை முறித்தாள். கடும் வலியால் உடல் அடைந்த வேதனையோடு ஓநாய் காயமடைந்த தன் வாலைப் பார்க்கத் திரும்பிய தருணமானது, பார் அதன் தொண்டையை நோக்கிக் குறி வைக்க வழி அமைத்தது. ஓநாய் இஷ்டப்படி அதன் வளைநகத்தால் கீறட்டும் என விட்டுவிட்டு, பார் அந்த மிருகத்தின் தலையிலும் மார்பிலும் தன் முன்னங்கால்களை வைத்து அழுத்தியபடி கடிக்க ஆரம்பித்தது. ஓநாயின் தொண்டை ரத்தக் குழாய்களிலிருந்து இரண்டு ரத்த ஓடைகள் வெளியில் பாய்ந்து வந்தன. ஓரிரு நிமிடங்களுக்கு அது வெறி கொண்டு போராடியது. அதன் நீண்ட ரத்தம் தோய்ந்த நாக்கு பற்களின் வழியாக வெளித் தள்ளியது. கஸ்மாய் தன் முகத்திலிருந்து ஓநாயின் ரத்தத்தைத் துடைத்துவிட்டு மூச்சு வாங்கினாள். ஜென் சென்னைப் பொறுத்த வரை, அவளுடைய முகம், ஓநாயின் ரத்தத்தினால் தயாரிக்கப்பட்ட ஒப்பனைப் பொருளைப் பூசியிருப்பதுபோல் தோன்றியது. வரலாற்றுக்கு முந்தைய பெண்ணின் சித்திரத்தைப் போல அவள் அவனுக்குத் தோன்றினாள்: வீரம், வலிமை மற்றும் அழகு.

இறந்துபோன ஓநாயிடமிருந்து வெளிப்பட்ட ரத்த நெடி காற்றில் எழுந்தது. இரவின் இருளில் ஓநாய்கள் ஓட்டமெடுத்து மறைந்ததை அடுத்து, கிழக்குப் பக்கமாகக் குரைத்துக்கொண்டிருந்த நாய்களின் குரைப்பு சட்டென நின்றுவிட்டது. சற்று நேரத்துக்குப் பிறகு, வட மேற்கிலிருந்த சதுப்புநிலப் பகுதியிலிருந்து ஓநாய்களின் இரங்கல் ஊளைகள், அவற்றில் ஒன்று மறைந்து போனதற்கான துக்கத்தை வெளிப்படுத்தும் வகையில் வெளிப்பட்டன.

“நான் கொஞ்சமும் லாயக்கற்றவன்” என ஜென் கூச்சத்தோடும் கடும் அவமானத்தோடும் கூறினான். “ஒரு ஆட்டைப் போலவே கொஞ்சமும் துணிச்சலற்றவன். ஒரு நாய், என்னை விடவும் பெறுமதியானது. பெண்ணைப் பற்றிச் சொல்ல வேண்டியதே இல்லை. ஒன்பது வயதுப் பையன்கூட பிரமாதமாகச் செயல்பட்டான்.”

ஒரு புன்சிரிப்போடு கஸ்மாய் தலையசைத்தாள். “அப்படி யில்லை” என்றாள் அவள். “நீ உதவி செய்ய வந்திருக்காவிட்டால் ஓநாய்கள் நம்முடைய ஆடுகளைக் கொண்டு போயிருக்கும்.”

பில்ஜியும் புன்னகை செய்தார். “ஒரு சீன மாணவன், ஆடுகளை நகர்த்துவதற்கு உதவியதையும் தன்னுடைய ஃப்ளாஷ்லைட்டால் அப்பகுதியில் வெளிச்சம் பாய்ச்சியதையும் நான் காண்பது இதுவே முதல் முறை” என்றார்.

ஜென் சென் குனிந்து, இறந்து கிடந்த ஓநாயின்மீது இன்னமும் இருக்கிற அதன் உடல் சூட்டை உணர்ந்தான். அது உயிரோடிருந்தபோது அதன் வாலைப் பிடித்திழுத்து கஸ்மாய்க்கு உதவ முடியாமல் போன தன் தைரியமின்மைக்காக அவன் தன்னைத் தானே வெறுத்தான். ஒரு சீன மாணவனுக்கு வெறும் கைகளோடு ஓநாயுடன் சண்டையிடக் கிடைத்த ஓர் அரிய வாய்ப்பை இழந்துவிட்டதற்காக வேதனைப்பட்டான். ஓநாய் இறந்து கிடந்தபோதும், உயிருடன் இருந்ததைப் போலவே பயமேற் படுத்தியது. ஜென், பாரினுடைய பெரிய தலையை வருடிக் கொடுத்தான். அதனைத் தொடர்ந்து தைரியமடைந்து, குந்தி உட்கார்ந்து, பெருவிரலாலும் சுண்டு விரலாலும் இறந்துபோன ஓநாயை அளந்து பார்த்தான். அதன் மூக்கிலிருந்து வால் நுனி வரை அளந்தான். அவனுடைய உயரத்தை விடவும் அது நீளமாக இருந்தது. அவன் குளிர்ந்த காற்றை உள்ளிழுத்தான்.

முதியவர் பில்ஜி ஃப்ளாஷ் லைட்டின் மூலம் ஆட்டு மந்தையைப் பரிசோதித்துப் பார்த்தார். மூன்று அல்லது நான்கு ஆடுகளின் தடித்த வால்கள் கடிக்கப்பட்டு ஓநாயினால் தின்னப் பட்டிருந்தன. ரத்தம் சிதறிப் போய் உறைந்து கிடந்தது. இறந்துபோன விலங்கின் உடலை பில்ஜியும் ஜென்னும் குடிலுக்கு இழுத்துச் சென்றபோது, “சில ஆட்டு வால்களுக்குப் பதிலாக இவ்வளவு பெரிய ஓநாய் கிடைத்திருப்பது நல்ல பேரம்தான்” என்றார் பில்ஜி.

ஓநாயின் பாதங்கள் நாயினுடையதை விட மிகவும் பெரியவை. அவனுடைய உள்ளங்கையால் ஒன்றை அளந்தபோது, இரண்டும் கிட்டத்தட்ட சமமாக இருப்பதைப் பார்த்தான். பனியிலும் மலைப் பாறைகளிலும் ஓநாய்கள் அநாயாசமாய் ஓடுவதில் ஆச்சரியமேதுமில்லை.

“நாளை உனக்கு ஒரு ஓநாயின் தோலை எப்படி உரிப்பதென்று சொல்லித் தருகிறேன்” என்றார் பில்ஜி.

பார் மற்றும் பிற நாய்களுக்கான வெகுமதியாகப் பெரிய சட்டி நிறைய கறியோடு கஸ்மாய் வெளியில் வந்தாள். அவளைப் பின் தொடர்ந்து வெளியில் வந்த ஜென் சென், பாரின் பெரிய தலையை வருடிக் கொடுத்தான். ஒரு சிறிய மேசையின் அளவுக்கு இருந்த அதன் பின்புறத்தைத் தட்டிக் கொடுத்தான். நாய் நன்றியோடு தன் வாலை ஆட்டியது. “நீ அந்த சமயத்தில் பயந்துவிட்டாயா?” என்று ஜென் கேட்டான்.

“ஆம், நிச்சயமாக” என்று சின்ன சிரிப்போடு கஸ்மாய் சொன்னாள். “பட்டியிலிருந்து ஆட்டை ஓநாய் கொண்டுபோய் விடுமென்று பயந்துதான் போனேன். அப்படி ஆகியிருந்தால் என்னுடைய வேலைப் புள்ளிகள் அனைத்தையும் நான் இழந்திருப்பேன். நான் ஒரு உற்பத்திக் குழுவின் தலைவி. நான் என் ஆட்டை இழந்திருந்தால் அது எவ்வளவு பெரிய அவமானமாக இருந்திருக்கும் என்பதை உன்னால் கற்பனை செய்ய முடியும்தானே.” பெரிய நாயின் தலையைத் தட்டிக் கொடுக்கக் குனிந்த அவள், “செய்ன் பார்” (நல்ல புலி) என்று மீண்டும் மீண்டும்சொன்னாள். பார், தான் மென்றுகொண்டிருந்த எழும்பைக் கீழேபோட்டுவிட்டு, தலையை நிமிர்த்தி, தன் எஜமானியின் கையை நக்கிக் கொடுத்தது; சந்தோஷமாக வாலை ஆட்டியபடி, சின்னச் சின்னதாய் மூச்சு விட்டது.

“ஜென் ஜென், புத்தாண்டுக்குப் பிறகு நான் உனக்கொரு நாய்க்குட்டி தருவேன்” என்றாள் கஸ்மாய். “ஒரு நாயை வளர்ப் பதற்கு எவ்வளவோ வழிகள் இருக்கின்றன. நல்லபடியாய் கவனி. அது பாரைப் போல் வளரும்.”

அவன் அவளுக்குப் பலமுறை நன்றி சொன்னான்.

மீண்டும் குடிலுக்குள் வந்ததும், தான் செத்துவிடுவோமென பயந்துவிட்டதாக ஜென் ஒத்துக்கொண்டான். முதியவர் பில்ஜி சிரித்தார். “நான் உன்னுடைய

கையைப் பற்றியபோது, நீ ஒரு இலையைப் போல ஆடிக்கொண்டிருந்தாய். இப்படியான ஒரு சண்டையின்போது உன்னுடைய கையில் கத்தி இருக்க வேண்டுமென்று நினைக்கிறாயா? நீ மேய்ச்சல் நிலத்தில் தங்கத் திட்டமிட்டால், ஓநாய்களை விடவும் முரட்டுத்தனமாக இருக்க நீ கற்றுக்கொண்டாக வேண்டும். அவற்றை வேட்டையாட உன்னை ஒரு நாள் வெளியில் அழைத்துச் செல்வேன். முன்னர், ஜெங்கிஸ்கான் தன் படையை உருவாக்கியபோது, அவர் எப்போதுமே சிறந்த ஓநாய் வேட்டைக்காரர்களையே தேர்ந்தெடுத்தார்.''

ஜென் தலையாட்டினான். ''நான் அதை நம்புகிறேன்'' என்றான். ''நான் நிச்சயம் அப்படி ஆவேன். கஸ்மாய் ஒரு யுத்தத்தில் பங்கேற்றால், பெண் தளபதி ஹுவா முலனை விடவும் மிகவும் அச்சமூட்டுபவளாக இருப்பாள்.''

''உங்களுடைய சீனர்களைப் பொறுத்தவரை, ஹுவாமுலன்கள் அதிகம் பேரில்லை; ஆனால் கஸ்மாய் போல நிறைய மங்கோலியப் பெண்கள் இருக்கிறார்கள். குறைந்தபட்சம் குடும்பத்துக்கு ஒருவர்.'' முதியவர் மறுபடியும் தலைமை ஓநாயைப் போல சிரித்தார்.

அந்த சம்பவத்துக்குப் பிறகு, எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்கு ஓநாய்களுக்கு அருகில் இருக்க ஜென் விரும்பினான். அதன் மூலம் அவை பற்றி அதிகம் அறிய முடியுமென்று நினைத்தான். ஓநாய்களைப் பற்றிய புரிதலை அடைவதன் மூலம் மட்டுமே, மங்கோலிய மேய்ச்சல் நிலம் பற்றியும் அங்கு வாழும் மக்கள் பற்றியும் தன்னால் அறிந்துகொள்ள முடியுமென அவன் உணர்ந்திருந்தான். ஓநாய்க் குட்டியொன்றை அதன் குகையிலிருந்து திருடி அதை வளர்க்க வேண்டுமென்ற எண்ணத்தையும் அவனுள் வளர்த்து வந்தான்.

ஓலோன்புலாக் பகுதியில் மிகவும் பிரசித்தி பெற்ற வேட்டைக்காரர் பில்ஜி என்றபோதிலும், அவர் எப்போதாவதுதான் வேட்டைக்குப் போவார். அதுவும் நரிகளுக்காகத் தானே தவிர ஓநாய்களுக்காக அல்ல. கடந்த இரண்டு ஆண்டுகளாக மக்கள் கலாசாரப் புரட்சியில் சிக்கிக்கொண்டிருந்ததால் மேய்ச்சல்நிலத்தின் மரபான வாழ்க்கை முறை — ஆடு மேய்த்தலும் வனவிலங்குகளை வேட்டையாடுதலும் — பனிப்புயலால் சிதறுண்ட ஆட்டு மந்தையைப் போல தலைகீழாக மாறிப் போய்விட்டது. அதன்பிறகு, அந்த வருடத்தின் பனிக்காலத்தில், மங்கோலிய மான் கூட்டங்கள் எல்லையினூடாக இடம் பெயர்ந்து ஓலோன்புலாக்கிற்குள் வந்திருந்தன. ஜென்னுக்கு அளித்த

வாக்குறுதியை நிறைவேற்ற இதுவே சரியான தருணமென்று முதியவர் தீர்மானித்தார். அவனைக் கூட்டிச் சென்று ஓநாய்களை மிக நெருக்கமான தூரத்திலிருந்து பார்க்க வைப்பதன் மூலம் இளைஞனின் தைரியத்தை ஊக்குவிக்கவும் அவனுடைய அறிவை மேம்படுத்தவும் தீர்மானித்தார்.

ஜென் சென், முழங்கையால் முதியவர் தன்னை இடிப்பதை உணர்ந்து, அவர் சுட்டிய பனி மூடிய சரிவைப் பார்த்தான். அந்த இடத்தைத் தொலைநோக்கி மூலம் கவனித்தான். மான்கள் இன்னமும் புற்களைப் பதற்றத்துடன் மேய்ந்துகொண்டிருந்தன. கூட்டத்திலிருந்து ஒரு ஓநாய் விலகி, மேற்கிலிருந்த மலை நோக்கி விரைந்தோடுவதைக் கவனித்தான். அவன் மனம் தளர்ந்தது.

''அவை தாக்குதல் நிகழ்த்தப் போவதில்லை என்றே யூகிக்கிறேன்'' என முணுமுணுத்தான். ''ஒன்றுமில்லாத விஷயத்துக்காக நாம் நம்மை உறைய வைத்துக்கொண்டிருக்கிறோம் எனத் தெளிவாகப்புரிகிறது.''

''இந்த மாதிரியான ஒரு வாய்ப்பை ஓநாய்க் கூட்டம் ஒருபோதும் நழுவவிடாது'' என்றார் பில்ஜி. ''மான்கள் மிக அதிகமாக இருப்பதாகத் தலைமை ஓநாய் உணர்ந்திருக்க வேண்டும். எனவே,மேலும் அதிகமான படையினரை வர வைப்பதற்காக அது ஒரு ஓநாயை அனுப்பியிருக்க வேண்டும். ஐந்து அல்லது ஆறு வருடங் களுக்கு ஒரு முறைதான் இத்தகையதோர் வாய்ப்பு அமையும். கணிசமான உணவு அவற்றுக்குக் கிடைத்திருப்பதாகவே தெரிகிறது. ஒரு பெரிய யுத்தத்துக்கு அவை தயாராகிக் கொண்டிருக்கின்றன. நம்முடைய இந்தக் காத்திருப்பு மிகவும் பெறுமதியானது என்பதை நீ பார்க்கத்தான் போகிறாய். நான் சொன்னது போல, நல்லவேட்டைக்கான முக்கிய சாதனம், பொறுமை.''

## 2

ஆறு அல்லது ஏழு புதிய ஓநாய்கள் வட்ட வடிவ அமைப்புக்குள் அமைதியாகச் சேர்ந்துகொண்டன. அதனுடைய மூன்று பக்கங்கள் வடிவாகத் தயாராகிவிட்டன. ஜென் சென் தன் கனமான மயிர்த்தோல் அங்கியின் ஒரு முனையால் வாயை மூடியவாறு, ‘‘அவை இப்போது வட்டத்தை முடிக்கப் போகின்றனவா?’’ என்று மெதுவாகக் கேட்டான்.

‘‘இப்போது இல்லை’’ பில்ஜி மெதுவாகப் பதில் சொன்னார். ‘‘சரியான தருணத்துக்காகத் தலைமை ஓநாய் காத்திருக்கிறது. நம்மை விடவும் ஓநாய்கள் தங்களுடைய வட்டத்தை வடிவாக அமைப்பதில் மிக கவனமாகவும் உன்னிப்பாகவும் செயல்படுபவை. அது எதற்காகக் காத்திருக்கிறது என்பதை உன்னால் சரியாகக் கணிக்க முடிகிறதா பார்.’’ முதியவரின் முடியடர்ந்த வெண் புருவங்கள் ஒவ்வொரு முறை இழுபட்டபோதும் புருவத்திலிருந்து உறைபனிச் சில்லுகள் உதிர்ந்து தரையில் விழுந்தன.

அவர்கள் ஏற்கெனவே கொஞ்ச நேரம் தங்களுடைய பனிக் குகையில் மறைந்திருந்ததால், இப்போது அவர்கள் சரிவில் புல் மேய்ந்துகொண்டிருக்கும் மான்களின் பக்கம் தங்கள் கவனத்தைத் திருப்பினார்கள். மான் கூட்டத்தின் எண்ணிக்கை அநேகமாக ஆயிரம் இருக்கும். அவற்றில் பல பெரிய ஆண் மான்கள்; நீண்ட கருத்த கொம்புகளுடன் காணப்பட்ட அவை காற்றை மோப்பம் பிடித்தபடி சதா கண்காணித்தவாறு இருந்தன. மற்றவை பனி படர்ந்த நிலத்தில் புல் மேய்ந்துகொண்டிருந்தன.

இந்தப் பகுதியானது, இரண்டாம் உற்பத்திக் குழுமத்துக்கு பனிக்காலத்துக்கென ஒதுக்கப்பட்ட மேய்ச்சலுக்கான புல்வெளிப் பிரதேசமாகும்; இயற்கைப் பேரழிவுக்கெதிரான ஒரு தற்காப்பு ஏற்பாடு இது. கிட்டத்தட்ட இருபது சதுர மைல் பரப்பு கொண்டது

இப்பகுதி; பெரிய மலைப்பாங்கான புல்வெளிப் பிரதேசம்; சூறைக் காற்றிலிருந்து பாதுகாக்கப்பட்டது; மற்ற பகுதிகளை விட, பனியும் குறைவு. உயரமாகவும் தடிமனாகவும் வளரக்கூடிய நல்ல புல்லால் ஆனது.

‘‘கவனமாக அவதானம் செய்; நீ புரிந்துகொள்வாய்’’ என்று முணுமுணுத்தார் முதியவர். ‘‘இது ஒரு சரியான இடம். வடமேற்குக் காற்று வருவதற்குத்

தோதாய் அமைந்திருக்கிறது. அக்காற்று இங்கு பனி குவியாமல் தடுக்கிறது. நான் எட்டு வயதுச் சிறுவனாக இருந்தபோது, பல நூற்றாண்டுகள் கண்டிராத மிகப் பெரிய பனிப்புயலால் ஓலோன்புலாக் தாக்கப்பட்டது; கடுமையான வெண்மைப் பேரழிவு. பனி எங்கள் குடில்களை மூடிவிட்டது. அதிர்ஷ்டவசமாக, பழைய காலத்தைச் சார்ந்த சிலரின் வழிநடத்தலில், பெரும்பாலான மக்களும் விலங்குகளும் அதிலிருந்து சமாளித்து வெளியேறினோம். பனி எங்கள் முழங்கால் அளவுக்கு இருக்கும்போதே, எங்களுடைய ஆயிரக்கணக்கான குதிரைகள் கொண்டு வரப்பட்டு, பனியினூடாக மிதித்து நடக்கவிட்டுப் பாதை உருவாக்கப்பட்டது. அதன்பிறகு, நூற்றுக்கணக்கான எருதுகள் மூலம் நீண்ட பாதை உருவாக்கப் பட்டு, அதன் வழியாக எங்களுடைய ஆடுகளும் வண்டிகளும் பயணப்பட்டன. இந்தப் புல்வெளிப் பிரதேசத்தைப் பாதுகாப்பாக நாங்கள் வந்தடைய மூன்று நாட்கள் ஆயிற்று. இங்கு கணுக்கால் வரைதான் பனி மூடியிருந்தது. நீண்ட புற்களின் நுனி அதற்கு மேலாக நீட்டிக் கொண்டிருந்தது. ஆடுகளும் மாடுகளும் குதிரை களும் _ குளிரிலும் பசியிலும் அவை எல்லாமே பாதி உயிரோடுதான் இருந்தன. இந்தப் புல்வெளியைப் பார்த்தவுடனேயே பாய்ந்து சென்று மேயத் தொடங்கிவிட்டன. மக்களைப் பொறுத்தவரை, அவர்கள் பனியில் விழுந்து அழுது, தரையில் தலைகளை மோதி, அவர்கள் முகம் முழுவதும் பனியால் மூடப்படும்வரை, டெஞ்ஞருக்கு நன்றி தெரிவித்தார்கள். புற்களின் மீது கவிந்திருக்கும் பனியினை நீக்கிவிட்டுப் புற்களை எப்படி மேய்வதென்பதை ஆடுகளும் குதிரைகளும் அறியும். மிகவும் மந்தமான மாடுகள் அவற்றைப் பின்தொடர்ந்து சென்று தங்கள் தீவனத்தை மேய்ந்தன. இளவேனிற் காலத்தில் பனி உருகத் தொடங்கும் வரை, எஞ்சியிருந்த பாதிக்கும் மேற்பட்ட விலங்குகளுக்கு அது போதுமானதாக இருந்தது. சரியான நேரத்தில் தங்கள் விலங்குகளை அழைத்துக்கொண்டு வராதவர்கள் அவற்றை இழந்தனர். அவர்கள் தங்களை மட்டும் பாதுகாத்துக்கொண்டனர்; அவர்களுடைய விலங்குகள் பனிப்புயலில் புதைந்து போயின. இந்தப் பரந்த புல்வெளிப் பிரதேசம் மட்டும் இருந்திருக்காவிட்டால், ஓலோன்புலாக்கில் குடியிருந்த எல்லோருமே, மனிதர்களாகட்டும் மிருகங்களாகட்டும், இறந்து போயிருப்பார்கள். அதன்பிறகு, நாங்கள் வெண்மைப் பேரழிவுக்கு அஞ்சுவதில்லை; அப்படியான ஒன்று வருவதாகத்

தெரிந்தவுடன் நாங்கள் இந்தப் புல்வெளிப் பிரதேசத்துக்குக் குடிபெயர்ந்து, இங்கு அடைக்கலமாகி விடுவோம்.''

முதியவர் பெருமூச்சு விட்டார். ''ஓலோன்புலாக் மனிதர்களுக்கும் விலங்குகளுக்கும் எங்கள் வாழ்வாதாரமான டெஞ்ஞர் அளித்திருக்கும் பரிசு இந்த இடம். முன்னர், டெஞ்ஞரையும் மலைக் கடவுளையும் வணங்குவதற்காக வருடத்துக்கொரு முறை மேய்ப்பர்கள் மலையேறுவார்கள். ஆனால், கடந்த சில வருடங்களாக, இன்றைய அரசியல் சூழ்நிலையில் எவரும் அதற்குத் துணிவதில்லை. ஆனால் எங்கள் இதயங்களில் நாங்கள் இன்னமும் வணங்கிக் கொண்டுதான் இருக்கிறோம். இது எங்கள் புனிதமான மலை. ஒரு வேளை வறட்சி ஏற்பட்டு தீவனத்துக்கான புல் இல்லா விட்டாலும் கூட, இளவேனிற் காலத்திலிருந்து இலையுதிர் காலம் வரை இந்த மலை மேய்ப்பர்களுக்கு எல்லையற்றதாக இருக்கும்.

குதிரைகளைப் பராமரிப்பவர்களுக்கு அவற்றைப் பாதுகாப்பதென்பது சற்று கடினமானதாக இருக்கும். ஓநாய்களும் மலையைப் பாதுகாக்கும். ஐந்து அல்லது ஆறு வருடங்களுக்கு ஒரு முறை அவை மான் கூட்டத்தைக் கொலை வெறியோடு தாக்கி மலைக் கடவுளுக்கும் டெஞ்ஞருக்கும் பலி கொடுக்கும். மலை, மனிதர் களையும் அவர்களுடைய விலங்குகளையும் மட்டுமல்ல, அவர்களை விடவும் திறமைமிக்க ஓநாய்களையும் காக்கிறது. முன்பெல்லாம் மனிதர்களையும் அவர்களுடைய விலங்குகளையும் முந்தி ஓநாய்கள் வந்துவிடும்; அவை பகலில் மலையுச்சியில் இருக்கும் பாதைகளிலோ அல்லது மலைக்குப் பின்னாலோ மறைந்திருக்கும். அங்கு பனி கெட்டியாகி இருக்கும். இரவில் அவை இறங்கிவந்து உறைபனியில் சாகடிக்கப்பட்ட மாடுகளையும் ஆடுகளையும் தோண்டி உண்ணும். அவற்றுக்கு சாப்பிட உணவு இருக்கும்வரை, அவை மனிதர்களையோ, அவர்களின் விலங்குகளையோ எதுவும் செய்வதில்லை.''

மேகத் திட்டுகள் மேலே மிதந்தன. முகத்தில் பக்தி பரவசத்தோடு குளிர் நீல டெஞ்ஞரை முதியவர் உன்னிப்பாகப் பார்த்தார்.

அந்த ஆண்டு பனி முன்னதாகவே வந்து நிலைத்து விட்டிருந்தது; புல்லின் அடிப்பாதி வரை மூடியிருந்தது. இப்போது புல் பச்சைப் பசேலென்று பனிக்கட்டியால் சூழப்பட்டிருந்தது. தண்டுகளின் துளையிலிருந்தும், பனிப்

பிளவுகளிலிருந்தும் சுவையான நறுமணம் வெளிவந்து கொண்டிருந்தது. பசியால் வாடி யிருக்கும் மான்கள், புல்லின் வாசனையால் ஈர்க்கப்பட்டு, பனிப் புயலால் நாசமடைந்த அண்டைப் பகுதியிலிருந்து வட எல்லையைக் கடந்து இங்கு வந்து சேரும். அவற்றைப் பொறுத்த வரை இந்த இடம் பனிக்காலத்தின் பாலைவனச் சோலை. வயிறுகள் முரசுகளைப் போல் தோன்றுமளவுக்கு, அவை புல்லை நன்றாகத் தின்றுவிட்டு ஓடக்கூட முடியாமல் திரிந்து கொண்டிருக்கும்.

மான்கள் மோசமான தவறைச் செய்துள்ளன என்பதை தலைமை ஓநாயும் பில்ஜியும் மட்டுமே அறிவார்கள்.

இது ஒன்றும் மிகப் பெரிய மான் கூட்டமில்லை. மேய்ச்சல் நிலத்திலான அவனுடைய முதலாம் ஆண்டின்போது, பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மான் கூட்டத்தை அடிக்கடி பார்த்திருக்கிறான். 1960களில் அமைந்த மூன்று கடினமான வருடங்களின்போது, இராணுவத்தின் வட பிராந்தியத்தைச் சேர்ந்த படை வீரர்கள் வாகனங்களில் இங்கு வந்து, தங்களுடைய படையணியினரின் உணவுக்காகப் பெருமளவிலான மான்களை இயந்திரத் துப்பாக்கிகளால் கொன்று குவித்ததாக, தலைமையகப் படையணி வீரர் ஒருவர் தெரிவித்தார். இதன் காரணமாக, எஞ்சிய மான்கள் இந்த பகுதியை விட்டுச் சென்றுவிட்டன. ஆனால் சமீப காலமாக, எல்லைப் பகுதிகளில் இராணுவச் சூழல் பதற்றம் தணிந்திருக்கும் நிலையில், பெரிய அளவிலான வேட்டை நிறுத்தப்பட்டுவிட்டது. மான்களும் மிக அதிக எண்ணிக்கையில் திரும்பத் தொடங்கி யிருப்பதை ஓலோன்புலாக் பார்த்துக் கொண்டிருக்கிறது. ஜென் ஆட்டு மந்தையை மேய்க்கும்போது அடிக்கடி மான் கூட்டத்தைப் பார்த்திருக்கிறான். அவனுடைய ஆடுகளைப் பரந்துபட்ட ‘மஞ்சள் கடல்’ சாவகாசமாகவும், அசட்டையாகவும் கடந்து செல்லும். ஆனால், ஆடுகளோ பயத்தில் ஒன்றையொன்று ஒட்டிக்கொண்டு, எச்சரிக்கையோடும் பொறாமையோடும், மான்கள் காற்றைப் போல் சுதந்திரமாக விரைந்து செல்வதைத் தங்கள் சிறிய கண்களால் கவனித்துக் கொண்டிருக்கும்.

மங்கோலிய மான்கள் ஆயுதமற்ற மனிதர்களைப் பொருட்படுத்துவதில்லை. ஒருமுறை, மான்கறியை ருசிக்கும் ஆசையில், கயிறு போட்டு ஒரு மானைப் பிடிப்பதற்காக அடர்த்தியான ஆட்டு மந்தைக்கு நடுவில் குதிரைமீது

அமர்ந்திருந்தான் ஜென். அவன் தோற்றுப் போனான். மேய்ச்சல் நிலத்தின் அதிவேக விலங்கான மான், வேட்டை நாய்களை விடவும், ஏன் ஓநாய்களை விடவும்கூட அதிவிரைவாகச் செல்லக் கூடியது. ஜென் குதிரையைச் சொடுக்கி, மான் கூட்டத்தைத் தாக்கினான். ஆனால் அவை அவனுக்கு இரு பக்கமும் பத்து, பன்னிரெண்டு அடி தூரத்தில் தொடர்ந்து கடந்துகொண்டி ருந்தன. அவனைக் கடந்ததும் அவை மீண்டும்ஒருங்கிணைந்து தன் போக்கில் விரைந்துகொண்டிருந்தன. அவனால் பயபக்தியோடு பார்த்துக்கொண்டிருக்க மட்டுமே முடிந்தது.

அவர்கள் இப்போது பார்த்துக்கொண்டிருக்கும் மான் கூட்டம் சுமாரான அளவுதான். ஆனால், டஜன் கணக்கிலேயே இருந்த ஓநாய்க் கூட்டத்துக்கு இது மிகப் பெரியது என ஜென் உறுதியாக நம்பினான். ஒரு ஓநாயை விட மிகவும் உறுதி கொண்ட விலங்கு எதுவும் கிடையாதென மக்கள் சொல்லக் கேட்டிருக்கிறான். ஓநாய்களின் உணவுப் பசியும் உறுதிப்பாடும் எந்த அளவு இருக்கும் என்பதை அறிவதில் ஜென் ஆவலோடு இருந்தான்.

மேலும், அவை எத்தகைய வேட்டைத் திறன் கொண்டவை என்பதை அறியும் ஆர்வத்தோடும் இருந்தான்.

ஓநாய்களைப் பொறுத்தவரை, இது இழக்கக் கூடாத மிகப் பெரிய சந்தர்ப்பம். அவற்றின் நகர்வுகள் மிக மெதுவாகவும், பொருட்படுத்த ஏதுமற்றதாகவும் அமைந்திருந்தன. ஆண் மான்கள் நிமிர்ந்து பார்த்தபோது, ஓநாய்கள் படுத்துக்கொண்டு சற்றும் அசையாமல் இருந்தன. அவற்றின் மூச்சுக் காற்றுகூட மிக மெல்லிதாகவும் நாசூக்காகவும் வெளிப்பட்டது.

மான் கூட்டம் புல்லை விடாது மேய்ந்துகொண்டிருந்தது. இரு பார்வையாளர்களும் என்ன நடக்கப் போகிறது என்பதை அறிவதில் உறுதியாக இருந்தனர்.

“மேய்ச்சல் நிலத்தின் பேரழிவுக்கு மான்களே காரணம்” என முணுமுணுத்தார் முதியவர். “அவை காற்றைப் போல் ஓடக் கூடியவை. மேலும் எப்போதுமே தின்றுகொண்டிருப்பவை. எவ்வளவு அருமையான தீவனத்தை அவை ஏற்கெனவே தின்று தீர்த்திருக்கின்றன என்பதைப் பார். இந்தப் புல்வெளிப் பிரதேசத்தை நல்ல முறையில் வைத்திருப்பதற்குப் படையணி தன்னால்

முடிந்த எல்லாவற்றையும் செய்திருக்கிறது. ஆனால் இந்த மான்கள், சில நாட்களுக்குள்ளாகவே பாதிக்கு மேல் அழித்துவிடும். இந்த மாதிரி இன்னும் சில மான் கூட்டமிருந்தால் புல் அறவே இல்லாமல் போய்விடும். இந்த ஆண்டு பனிப் பொழிவு மிக அதிகமாக இருப்பதால், பனிப்புயலுக்கான வாய்ப்பும் இருந்துகொண்டிருக்கிறது. இந்தப் புல்வெளிப் பிரதேசம் மட்டும் இல்லாவிட்டால் நாம் உயிர் பிழைக்கப் போவதில்லை. நாம் மட்டுமல்ல, நம் விலங்குகளும். நல்ல வேளையாக இந்த ஓநாய்க் கூட்டமிருக்கிறது. இன்னும் சில நாட்களுக்குள், கொல்லப்படாது எஞ்சியிருக்கும் மான்கள் இங்கிருந்து விரட்டப்பட்டுவிடும்.''

இந்த அபிப்ராயத்தைக் கேட்டு ஆச்சரியப்பட்ட ஜென், முதியவரைப் பார்த்து, ''நீங்கள் ஓநாய்களை வேட்டையாடாமல் இருப்பதில் ஆச்சரியமேதுமில்லை'' என்றான்.

''ஓ, நான் அவற்றை வேட்டையாடுவேன்'' என்று பதில் சொன்னார் முதியவர். ''ஆனால் அடிக்கடி இல்லை. நாம் அவற்றைக் கொன்றுவிட்டால் மேய்ச்சல் நிலம் அழிந்துபோகும். பின் நாங்கள் எப்படி உயிர் வாழ முடியும்? இதுதான் சீனர்களாகிய உங்களுக்குப் புரிவதில்லை.''

''இப்போது எனக்குப் புரிய ஆரம்பிக்கிறது'' என்றான் ஜென். ஓநாய் குலச்சின்னத்தின் தெளிவற்ற படிமம் அவனது மூளையில் வடிவம் பெற்றது. ஏனென்று சரியாகத் தெரியாமலேயே அவன் கிளர்ச்சியடைந்திருந்தான். இரண்டு வருடங்களுக்கு முன்பு, அவன் பீஜிங்கை விட்டுக் கிளம்பவிருந்த சமயத்தில், மேய்ச்சல்நில வாசிகள் பற்றிய புத்தகங்களைப் படிக்கவும் சேகரிக்கவும் செய்தான். அவர்கள் ஓநாயைக் குலச்சின்னமாகப் போற்றிப் பாராட்டுவதை அவன் அறிந்திருந்தான்; ஆனால், சீனர்களாலும் எல்லா விவசாயிகளாலும் இழிவாகக் கருதப்படும் ஒரு விலங்கான ஓநாயை இவர்கள் ஏன் தங்கள் குலச்சின்னமாக, விலங்கு வடிவிலிருக்கும் தம் மூதாதையராகப் போற்றுகிறார்கள் என்பது இப்போதுதான் அவனுக்குப் புரிந்தது.

முதியவர் ஜென்னைப் பார்த்தார். அவருடைய அகன்ற சிரிப்பினால் கண்கள் குறுகிய சிறு பிளவுகளாகத் தோன்றின. ''பீஜிங் மாணவர்களாகிய நீங்கள் உங்கள் குடிலில் குடியேறி ஒரு வருசத்துக்கும் மேலாகிவிட்டது. ஆனால் உங்களுக்குப் போதுமான கம்பளித் திண்டுகள் வைக்கப்படவில்லை. இம்முறை

அதிகப்படியாக சில மான்களை எடுத்துச் சென்று, அவற்றை விற்றுக் கொஞ்சம் கம்பளிகள் வாங்கலாம். அதன் மூலம் நீங்கள் நால்வரும் இந்தப் பனிக்காலத்தில் கொஞ்சம் சூடாக இருக்கலாம்'' என்றார் அவர்.

''இது மிகவும் அருமை'' என்றான் ஜென். ''இப்போது இரண்டு அடுக்கு கம்பளிதான் எங்களுக்குக் கிடைத்திருக்கிறது.

குடிலினுள் எங்களுடைய மை பாட்டில்கள்கூட உறைந்து விடுகின்றன.''

முதியவர் மறுபடியும் சிரித்தார். ''நல்லது, நன்றாகக் கவனி; ஏனென்றால் இந்த ஓநாய்க் கூட்டம் உனக்கு அருமையான பரிசொன்றை வழங்கப் போகிறது.''

அக்காலத்தில் ஓலோன்புலாக்கில், முழு வளர்ச்சியடைந்த மான், அதன் கறியும் தோலுமாகச் சேர்ந்து, இருபது யானுக்கு விற்கப்பட்டது. இது, ஒரு மேய்ப்பனின் இரண்டு வாரக் கூலிக்குச் சமம். ஆகச் சிறந்த தோல்கள் பைலட்டுகளின் மேலாடைகளுக்குப் பயன்படுத்தப்படும். சீன பைலட்டுகளுக்கு இவை கிடைப்பதில்லை. மான் தோல்கள் மங்கோலியாவின் உட்பகுதியில் தயாரிக்கப்பட்டு, சோவியத் யூனியனுக்கும் கீழை ஐரோப்பிய நாடு களுக்கும் எஃகு, மோட்டார் வாகனங்கள், படைக்கலங்கள் ஆகியவற்றுக்குப் பண்ட மாற்றாக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. எஞ்சியிருக்கும் கறியும் எலும்புகளும் வீட்டு உபயோகத்துக்கானவை. இவை எப்போதாவதுதான் மங்கோலிய பிராந்தியத்துக்கு உட்பட்ட கறிக் கடைகளில் கிடைக்கும். அங்கு இதற்கு ரேசன் கூப்பன்கள் தேவை.

அந்த ஆண்டின் பனிக்காலத்தில், மான்கள் மிகப் பெரும் எண்ணிக்கையில் எல்லை கடந்து தொடர்ச்சியாக வந்துகொண்டிருந்தன. இது, மங்கோலியாவின் பல்வேறு பகுதிகளிலுள்ள தலைவர்களிடையே மனக்கிளர்ச்சியை ஏற்படுத்தியது. பொருள் கொள்முதல் நிலையங்களில் மான் உடல்களுக்கென்று சரக்கு அறைகளில் இடம் ஒதுக்கப்பட்டது. அதிகாரிகள், வேட்டைக் காரர்கள், மேய்ப்பர்கள் எல்லோரும் மீன் பிடிப்பவர்களைப் போல் காணப்பட்டார்கள். அநேகமாக எல்லா வேட்டைக்காரர்களும் மேய்ப்பர்களும் விரைந்து செல்லும் குதிரைகள் மீதேறி, வேட்டை நாய்களோடும் துப்பாக்கிகளோடும் எவ்வளவு மான்களைக்கொல்ல முடியுமோ அவ்வளவைக் கொல்வதற்கென கிளம்பினர். ஆடுகளைப் பராமரிக்கும் பணியே ஜென்

சென்னுக்கு சரியாக இருந்தது. வேட்டையில் அவனுக்கு இடமில்லை. மேலும் அவனிடம் துப்பாக்கியோ வெடிமருந்தோ இல்லை. இதுதவிர, ஆடு மேய்ப்பவருக்கு நான்கு குதிரைகள் மட்டுமே தரப்படும்; அதே சமயம் குதிரை மேய்ப்பவர்களுக்கு ஏழு அல்லது எட்டு குதிரைகள் தரப்படுவதோடு, அவர்கள் வசம் ஏழெட்டு டஜன் குதிரைகள் அவர்களுடைய பிரத்தியேக உபயோகத்திற்கென்று இருக்கும். ஆக, வேட்டைக்காரர்கள் வேட்டைக்குச் செல்லும்போது மாணவர் களால் பொறாமையோடு பார்த்துக்கொண்டிருக்க மட்டுமே முடியும்.

இரண்டு இரவுகளுக்கு முன்பு, வேட்டைக்காரர் லாம்ஜாவ் குடிலுக்கு ஜென் விஜயம் செய்தான். இந்தப் பிராந்தியத்திற்கு மான்கள் வந்து சில நாட்களே ஆகியிருந்த போதிலும், அவன் ஏற்கெனவே பதினோரு மான்களைக் கைப்பற்றிவிட்டான். ஒரே சமயத்தில் இரண்டு மான்களை ஒரு முறை கொண்டுவந்து விட்டான். ஒரு குதிரை மேய்ப்பன் மூன்று மாதங்களில் சம்பாதிப் பதை சில நாள் வேட்டையில் அவன் சம்பாதித்துவிட்டான். அவனுக்கு ஒரு வருசத்துக்குத் தேவையான மது மற்றும் சிகரெட்டு களுக்குரியதை அவன் ஏற்கெனவே அடைந்துவிட்டதாகப் பெருமிதத்தோடு சொன்னான். இன்னும் சில தினங்கள் மேய்ச்சல் நிலத்துக்குச் சென்று வந்த பின்பு, 'ரெட் லேன்டெர்ன்' டிரான்சிஸ்டர் ரேடியோ வாங்க அவன் திட்டமிட்டிருந்தான். புதியதை வீட்டில் வைத்துவிட்டுப் பழையதை மேய்ப்பனின் நடமாடும் குடிலுக்கு எடுத்துச் செல்ல அவன் உத்தேசித்திருந்தான்.

ஜென், அவன் வாழ்வில் முதல் முறையாக, அந்த இரவில் காட்டு விலங்குக் கறியை ருசித்தான். கொழுப்பே இல்லாத மானின் கறி. அவற்றின் மிருதுவான கறி, காலம் காலமாக ஓநாய்களுக்கும் அவற்றுக்கும் நிகழும் யுத்தத்திலிருந்து பெறப்பட்டதாகக் கருதலாம்.

ஓலோன்புலாக்குக்கு மான்கள் இடம் பெயர்ந்து வந்ததைத் தொடர்ந்து, பீஜிங் மாணவர்கள் இரண்டாம் தரக் குடிமகன்கள் நிலைக்குத் தள்ளப்பட்டார்கள். அவர்களுடைய இரண்டாண்டு கால மேய்ச்சல் நில வாழ்க்கையில் ஆடு மாடுகளை மேய்க்கவும் பராமரிக்கவும் அவர்கள் தாமாகவே கற்றுக்கொண்டார்கள். ஆனால் வேட்டையாடுவதற்கான தேர்ச்சியைப் பெறவில்லை. கிழக்கு மங்கோலியாவின் உட்பகுதியில் வாழும் மக்களின்

நாடோடி வாழ்க்கையில் ஆடு மாடுகளை மேய்ப்பதை விடவும் வேட்டையாடுவதே உயர்வாகக் கருதப்பட்டது. மங்கோலியர்களின் மூதாதையர்கள் ஹெப்லாங் நதியின் மலையுச்சிப் பகுதிக் காடுகளில் வேட்டையாடியவர்கள். பின்னர் அவர்கள் மெதுவாக மேய்ச்சல் நிலத்துக்குக் குடிபெயர்ந்து வேட்டைக்காரர்களாகவும் மேய்ப்பர்களாகவும் வாழ்ந்தனர். வேட்டையாடுவதே குறிப்பிடத்தகுந்ததாகவும், அவ்வப்போது வருமானத்துக்கான பிரதான ஆதாரமாகவும் இருந்தது. ஓலோன்புலாக்கில் மேய்ப்பர்களிடையே குதிரை மேய்ப்பர்களே உயர்ந்த தகுதியைப் பெற்றிருந்தனர். பெரும்பான்மையான வேட்டைக்காரர்கள் அவர்களாகவே இருந்தனர். இந்தத் தகுதியை எந்தவொரு பீஜிங் மாணவனாலும் அடைய முடியவில்லை. அதிகபட்சமாக ஒரு சிலர் முழு நேரக் குதிரை மேய்ப்பாளரிடம் உதவியாளராக இருந்திருக்கிறார்கள். அவ்வளவுதான். ஆக, இத்தகைய ஒரு பெரிய வேட்டையின்போது மாணவர்கள் முற்றிலுமாக ஒதுக்கப்பட்டார்கள்.

ஜென் சாப்பிட்டு முடிந்ததும், லாம்ஜாவ் அவனுக்குத் தந்த மானின் காலை எடுத்துக்கொண்டு, ஏதோ ஒரு வகையில் விரக்தி அடைந்தவனாக பில்ஜியின் குடிலை நோக்கி விரைந்து சென்றான். இப்போது மாணவர்களுக்கென்று சொந்தமான குடில் இருந்தபோதிலும் ஜென் அடிக்கடி பில்ஜியைப் பார்க்கப் போய் விடுவான். அவருடைய குடில் பெரியதாகவும், அருமையானதாகவும், வெப்பம் கூடுதலாகவும் இருக்கும். அதன் சுவர்களில் மங்கோலிய_திபேத்திய சமயம் சார்ந்த திரைச்சீலைகள் தொங்கிக்கொண்டிருந்தன; அதன் தரைத்தளத்தில் வெள்ளை மான் வரையப்பட்ட தரை விரிப்பு விரிக்கப்பட்டிருந்தது; அகன்ற தட்டும், வெள்ளிக் கிண்ணங்களும் தாழ்ந்த மேசைமீது வைக்கப்பட்டிருந்தன; வெண்கலக் கிண்ணங்களும் அலுமினிய தேனீர் கோப்பைகளும் நன்றாகத் தேய்க்கப்பட்டு மினுமினுப்போடு கப்போர்டில் இருந்தன. ‘சொர்க்கம் மிக உயரத்திலும் மகாராஜா வெகு தொலைவிலும்’ இருக்கிற இந்த ஒதுக்குப்புறமான பகுதியில், நான்கு பழமைகளை — பழைய கருத்துகள், கலாசாரம், சடங்குகள், பழக்கவழக்கங்கள் — அழித்தொழிக்கும் முனைப்போடிருக்கும் சிவப்புக் காவலர்களின் கவனம் இதுவரை பில்ஜியின் திரைச்சீலைகள் மீதோ தரை விரிப்பு மீதோ விழுந்திருக்கவில்லை.

ஜென்னின் குடிலில் இருக்கும் நான்கு மாணவர்களும் பீஜிங் உயர்நிலைப்பள்ளியில் ஒரே வகுப்பில் படித்தவர்கள். அவர்களில் மூவர், 'கருப்புக் கூட்ட முதலாளித்துவப் போக்கினர்' அல்லது 'கல்வித் துறை சார்ந்த பொறுப்புகளை வகிக்கும் பிற்போக்காளர்' களின் மகன்கள். அவர்கள் ஒரே மாதிரியான சூழலையும் கருத்தியலையும் பகிர்ந்துகொண்டதோடு, 'சிவப்புக் காவலர்களின்' அடிப்படைவாதம் மற்றும் அறியாமையின் மீது வெறுப்பு கொண்டவர்கள். எனவே, 1967ஆம் ஆண்டு முன்பனிக் காலத்தில் அவர்கள் பீஜிங்கின் ஆரவாரங்களுக்கு விடை கொடுத்துவிட்டு, மேய்ச்சல் நிலத்துக்கு அமைதியான வாழ்க்கை தேடிப் பயணப்பட்டார்கள். அங்கு தங்கள் நட்பைத் தொடர்ந்து பேணினார்கள்.

ஜென்னைப் பொறுத்தவரை, முதியவர் பில்ஜியின் குடிலானது பழங்குடியினர் தலைவரின் தலைமையிடம் போல் அமைந்திருந்தது. அங்கு அவருடைய வழிகாட்டுதலின் மூலமும் அக்கறையின் மூலமும் அவன் பெரிதும் பயனடைந்திருக்கிறான். அது மிகவும் பாதுகாப்பான மற்றும் அணுக்கமான புகலிடம். குடும்பத்தில் ஒருவரைப் போல் அங்கு அவன் பராமரிக்கப் பட்டான். பீஜிங்கிலிருந்து இரண்டு அட்டைப் பெட்டிகள் நிறைய அவன் கொண்டு வந்திருந்த புத்தகங்கள், குறிப்பாக சீனத்திலும் ஆங்கிலத்திலுமான மங்கோலிய வரலாறு பற்றியவை, முதியவருக்கும் அவனுக்குமிடையே நெருக்கமான பந்தத்தை ஏற்படுத்தின. முதியவர் அடிக்கடி விருந்தினர்களை உபசரிப்பவர். அப்படியான விருந்தினர்களில், மங்கோலிய வரலாறு மற்றும் புராணக் கதைகள் நிரம்பிய பாடல்களைப் பாடும் இசைக் கலைஞர்களும் அடங்குவர். ஜென்னுடைய புத்தகங்களைப் பார்த்த மாத்திரத்தில் _ அதிலும் குறிப்பாக மேப்புகளும் வரைபடங்களும் கொண்டவை _ சீன, ரஷ்ய, பெர்சிய மற்றும் பிற மொழி அறிஞர்கள் எழுதிய மங்கோலிய வரலாறுகள் பற்றி அறிவதில் முதியவர் ஈடுபாடு கொண்டார். அவருடைய குறைந்த அளவிலான சீன மொழி அறிவைக் கொண்டு, சந்தர்ப்பம் கிடைக்கும் போதெல்லாம் ஜென்னுக்கு மங்கோலிய மொழியைக் கற்றுக் கொடுத்தார். புத்தகங்களிலுள்ள எல்லாவற்றையும் அவருக்கு ஜென் விளக்க வேண்டுமென விரும்பினார். அதற்குப் பதிலாக ஜென்னுக்கு மங்கோலியக் கதைகளைச் சொன்னார். இவர்களுக்கிடையே, ஒருவர் முதியவர் மற்றவர் இளைஞர், மங்கோலிய

மற்றும் சீன மொழிகளில் நடந்த உரையாடல்கள், கடந்த இரண்டு ஆண்டுகளில் சகஜமான முன்னேற்றம் அடைந்திருக்கிறது.

பில்ஜியின் குடிலை விட்டுச் செல்ல ஜென் விரும்பவில்லை. ஆனால், அடர்ந்து செழித்த புல்வெளிப் பிரதேசத்தில் வளர்க்கப்படும் விலங்குகளின் எண்ணிக்கை தொடர்ந்து அதிகரித்துக்கொண்டே சென்றது. சமீபத்தில் ஈனப்பட்ட செம்மறிக் குட்டிகளைத் தொடர்ந்து அவனுடைய மந்தையில் இருந்த ஆடுகளின் எண்ணிக்கை மூவாயிரத்தைக் கடந்துவிட்டது. எந்தவொரு ஆடு மேய்ப்பனாலும் இந்த அளவு ஆடுகளை மேய்க்க முடியாது. ஆகவே அவை சிறு சிறு மந்தைகளாகப் பிரிக்கப்பட்டன. அதனால் ஜென் அவனுக்கென்று ஒதுக்கப்பட்ட ஆடுகளுக்குப் பின்னால், அவனுடைய காப்பாளரின் குடிலை விட்டு விலகிச் செல்லும்படி ஆயிற்று. அவனும் அவனுடைய மூன்று வகுப்புத் தோழர்களுமாகச் சேர்ந்து, தங்களுக்கென்று ஒரு குடிலை அமைத்துக்கொண்டு வாழத் தொடங்கினர். அதிர்ஷ்டவசமாக, இரண்டு முகாம்களும் மிக அருகில் இருந்தன. ஒரு முகாமிலிருந்து எழும் ஆடுகளின் கத்தலையும், நாய்களின் குரைப்பையும் மற்ற முகாமிலிருப்பவர்கள் கேட்க முடியும். அதனால் காலையில் வெளியில் செல்லும்போதும் இரவில் திரும்பும்போதும் அவர்கள் சந்தித்துக்கொண்டனர். ஜென், முதியவரின் குடிலுக்குத் தங்கள் உரையாடலைத் தொடர்வதற்காக அடிக்கடி செல்வான். ஆனால் அவன் இப்போது மான்கள் பற்றியும் ஓநாய்கள் பற்றியும் பேச விரும்பினான்.

ஜென் கதவின் திரைச்சீலைகளை விலக்கிச் சென்று, பில்ஜியுடன் வெண்ணெய் கலந்த தேனீர் அருந்துவதில் சேர்ந்துகொண்டான்.

“மான்களை வேட்டையாடி வந்திருக்கிறார்கள் என்பதற்காக மட்டும் அவர்கள் மீது பொறாமை கொள்ள வேண்டாம். நாளை உன்னை வெளியே அழைத்துச் செல்கிறேன். ஒரு வண்டி நிறையும் அளவுக்கு உனக்குக் கிடைக்கும். கடந்த சில நாட்களாக நான் மலையுச்சிகளில்தான் இருந்தேன். அவற்றை எங்கே காண்பது என்று எனக்குத் தெரியும். ஓநாய்க் கூட்டம் பற்றி நேரடியாக அறிவு பெற இது மிகச் சரியான சந்தர்ப்பமாக அமையும். அதைத்தான் நீ பெற விரும்புகிறாய், அப்படித்தானே? புல்லைத் தின்று உயிர் வாழும் ஆடுகளின் தைரியம்தான் சீனர்களாகிய உங்களுக்கு இருக்கும். நாங்கள்

மங்கோலியர்கள், கறி தின்னும் ஓநாய்கள். ஓநாய்த் துணிச்சலை நீ கொஞ்சம் பயன்படுத்திக்கொள்ளலாம்.''

மறுநாள் அதிகாலை, அவர்கள் தென்மேற்கு மலைச் சரிவுக்குச் சென்று நடக்கவிருப்பதைக் கவனிக்கும் வகையில் ஒளிந்து கொண்டார்கள். முதியவர், துப்பாக்கியை எடுத்து வரவில்லை என்பதோடு நாயையும் இட்டு வரவில்லை; தொலைநோக்கிக் கருவிகளை மட்டுமே எடுத்து வந்திருந்தார். இதற்கு முன்னர் பில்ஜியுடன் நரி வேட்டைக்காக மட்டும்தான் ஜென் வந்திருக்கிறான். ஆனால் வெறும் கையோடு கிளம்பி வந்திருப்பது இதுதான் முதல் முறை. ''தொலைநோக்கிக் கருவி மூலம் நாம் ஒரு மானை விழ வைக்க முயற்சிக்கப் போவதில்லை என்று நினைக்கிறேன்'' என்றான் ஜென்.

முதியவர் சிரித்தார். எதுவும் சொல்லவில்லை. அவரிடம் கற்றுக்கொள்பவர்கள் நிறைந்த ஆர்வத்தோடும் சந்தேகங்களோடும் இருப்பது அவருக்கு எப்போதுமே மகிழ்ச்சியளித்திருக்கிறது.

கடைசியாக, தன்னுடைய தொலைநோக்கியின் மூலம் ஓநாய் வட்டத்தை ஜென் கண்டபோது, முதியவரின் வேட்டைத் திட்டம் தெளிவாகியது. ஜென் பரவசமடைந்தான். பில்ஜியிடமிருந்து தந்திரப் புன்னகை வெளிப்பட்டது. ஓநாய்களைப் பார்த்த மாத்திரத்தில் ஜென்னுக்குக் குளிர் மறந்து போனது. அவனுடைய நரம்புகளில் ரத்தம் பாய்ந்தோடியது. முதல் முறை பெரிய ஓநாய்களைப் பார்த்தபோது ஏற்பட்ட பயம் இப்போது மறைந்து விட்டிருந்தது.

மலைகளின் அடர்ந்த பகுதிகளில் இதமான காற்று வீசவில்லை. காற்று குளிர்ந்தும் வறண்டும் இருந்தது. ஜென் சென்னின் பாதங்கள் கிட்டத்தட்ட உறைந்து போய்விட்டன. வேகமாக அடித்த குளிர்காற்று இன்னும் பலமாகியது. படுத்துக்கொள்ள ஒரு ஓநாய்த் தோல் இருந்தால் எவ்வளவு இதமாக இருக்கும்! அவன் முதியவர் பக்கம் திரும்பி, பல நாட்களாய் அவனை உறுத்திக்கொண்டிருந்த ஒரு விஷயம் பற்றி அவரிடம் முணுமுணுத்தான்: ''ஓநாய்த் தோல்தான், எந்த ஒன்றையும்விட, இதமான வெப்பம் தரக்கூடிய படுக்கைக்கு உகந்ததென எல்லோரும் சொல்கிறார்கள். இங்கு வசிக்கும் மக்கள், வேட்டைக்காரர்களாகட்டும் மேய்ப்பர்களாகட்டும், எவ்வளவோ ஓநாய்களைக் கொல்கிறார்கள். ஆனால் அப்படியான ஒன்றை

எவருடைய வீட்டிலும் நான் பார்த்ததில்லை. ஏன் அப்படி? டோர்ஜியின் வீட்டில் ஓநாய்த் தோல் தரை விரிப்பைப் பார்த்திருப்பதுதான் நான் பார்த்த ஒன்றே ஒன்று.

மேலும், டோர்ஜியின் அப்பா, தன்னுடைய ஆட்டுத்தோல் கால் சட்டைகளுக்கு மேலாக ஒரு ஜோடி செருப்பினை வெளியில் மயிர் இருக்கும்படி அணிந்திருப்பதைப் பார்த்திருக்கிறேன்.''

முதியவர் பதில் சொன்னார்: ''டோர்ஜி ஒரு வடகிழக்கு மங்கோலியன். அவர்கள் கொஞ்சம் மாடுகளும் ஆடுகளும் சொந்தமாக வைத்திருக்கும் விவசாயிகள். ஆனால் அவர்கள் சீனர்களைச் சுற்றியே பல காலம் இருந்ததால் அவர்கள் ஹேன் பழக்கவழக்கங்களைப் பின்பற்றத் தொடங்கிவிட்டார்கள். வெளியிலிருந்து இங்கு வந்தவர்கள் மங்கோலியக் கடவுள்களையும் தங்களுடைய பூர்வீகத்தையும் மறந்து போனார்கள். அவர்களுடைய குடும்பத்தில் ஒருவர் இறந்து போகும்போது, ஓநாய்களுக்குத் தீனியாகப் போடுவதற்குப் பதிலாக, அவரைப் பெட்டியில் வைத்து மண்ணில் புதைத்துவிடுகிறார்கள். அதனால் ஓநாய்த் தோலை செருப்பாகப் பயன்படுத்துவது அவர்களுக்குத் தவறாகத் தெரிவதில்லை. இங்கு மேய்ச்சல் நிலத்தில், ஓநாய்த் தோல்களே மிகவும் கனமாகவும் அடர்த்தியாகவும் இருப்பவை. அதனால் குளிரை விரட்டுவதற்கு அவற்றைவிடச் சிறந்தது வேறெதுவும் இருக்க முடியாது. ஒரு ஓநாய்த் தோல் தரும் வெப்பத்தை, இரண்டு ஆட்டுத் தோல்கள் சேர்ந்தாலும் தர முடியாது. ஆனாலும் நாங்கள் அவற்றைப் படுக்கைக்குப் பயன்படுத்துவதில்லை. நாங்கள் ஓநாய் களைப் பெரிதும் மதிக்கிறோம். அப்படி இல்லாத ஒருவன் உண்மையான மங்கோலியன் இல்லை. ஒரு ஓநாய்த் தோலில் படுப்பதை விடவும் மங்கோலியன் உறைந்து சாவதையே மேலாக நினைப்பான். அப்படிச் செய்வது மங்கோலியக் கடவுள்களைப் புண்படுத்தும். அவர்களுடைய ஆத்மா ஒருபோதும் டெஞ்ஞர் போய் சேராது. டெஞ்ஞர் ஏன் ஓநாய்களிடம் பெரும் கருணை கொண்டிருப்பதாக நீ கருதுகிறாய்?''

''ஓநாய்கள், மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாக்கும் ஜீவன்கள் என்று நீங்கள் சொல்லியிருக்கிறீர்கள், இல்லையா?'' என்று ஜென் சென் கேட்டான்.

‘‘சரிதான்’’ என்றார் முதியவர். ‘‘அதுதான் விஷயம். டெஞ்ஞர் தந்தை, மேய்ச்சல் நிலம் தாய். மேய்ச்சல் நிலத்துக்கு ஊறு விளைவிக்கும் மிருகங்களையே ஓநாய்கள் கொல்கின்றன. டெஞ்ஞர் ஓநாய்களிடம் தன் கருணையைக் காட்டாமல் எப்படி இருக்க முடியும்?’’

ஓநாய்க் கூட்டத்திடம் அசைவு காணப்பட்டது. இருவரும் தங்கள் தொலைநோக்கிகள் மூலம், அண்ணாந்து பார்த்துக்கொண்டிருந்த ஒரு ஜோடி ஓநாய்கள் மீது கவனத்தைக் குவித்தனர். அந்த மிருகங்கள் சட்டென தலை தாழ்த்தின. ஜென் வளர்ந்த புற்களினூடாக தேடிப் பார்த்தான்; ஆனால் ஓநாய்களிடம் வேறெந்த அசைவும் காணப்படவில்லை.

முதியவர் ஜென்னிடம் தன்னுடைய கண்ணாடியையும் கொடுத்தார். அதன் மூலம் ஒரு ஜோடி பைனாகுலர்கள் வழியாக நிலைமையை அவனால் அவதானிக்க முடியும். அசலான இரட்டைக் குழாய்க் கண்ணாடி என்பது சோவியத் ராணுவ சமாச்சாரம். இருபது வருடங்களுக்கு முன்பு ஓலோன்புலாக்கில், சோவியத்_ஜப்பானியர்களுக்கிடையே நடந்த பழைய யுத்த களத்தில் பில்ஜி அதைக் கண்டெடுத்தார். இரண்டாம் உலக யுத்தத்தின்போது, ரஷ்யர்களுக்கும் ஜப்பானியர்களுக்குமிடையே வட பகுதிக்கருகில் பெரிய யுத்தமொன்று நிகழ்ந்தது. யுத்தத்தின் கடைசிக் கட்டத்தில் ரஷ்ய_மங்கோலியப் படை மஞ்சூரியாவுக்குள் நுழைவதற்கான முக்கிய தொடர்பு வழியாக ஓலோன்புலாக் இருந்தது. இப்போதும்கூட டேங்குகள் விட்டுச் சென்ற ஆழமான தடங்களும், ரஷ்ய_ஜப்பானியப் படைக்கல வாகனங்களின் தடங்களும் அங்கிருக்கின்றன.

அநேகமாக பழைய மேய்ப்பர்கள் எல்லோருமே ரஷ்ய அல்லது ஜப்பானிய துப்பாக்கிமுனைக் கத்திகள், நீர்க் குவளைகள், மண்வெட்டிகள், தலைக்கவசங்கள், பைனாகுலர்கள் மற்றும் பிற ராணுவத் தளவாடங்களைக் கொண்டிருந்தார்கள். கன்றுக்

குட்டிகளைக் கட்டிப்போட கஸ்மாய் பயன்படுத்தும் நீண்ட சங்கிலி ரஷ்ய ராணுவ வண்டியிலிருந்து கிடைத்தது. ரஷ்யர்களும் ஜப்பானியர்களும் விட்டுச் சென்ற ராணுவக் கருவிகளில் பைனாகுலர்தான் மேய்ப்பர்களுக்குப் பிடித்தமானதாக இருந்தது. அது, உற்பத்தியில் முக்கிய கருவியாக மாறியது.

மேய்ப்பர்கள், அவர்களால் உருவாக்க முடியாத எந்த ஒன்றையும் பொக்கிஷமாகக் கருதுவார்கள். பொதுவாக, பைனாகுலர்களைப் பிரித்து இரண்டு ‘டெலஸ்கோப்’களாக மாற்றிவிடுவார்கள். அது, அவர்கள் எடுத்துச் செல்வதற்கு வசதியாக இருப்பதோடு பயனும் இரு மடங்காகிவிடும். வேட்டையின் போது இவை உதவுவதோடு, காணாமல் போன குதிரைகளைக் கண்டுபிடிப்பதும் சுலபமாக இருக்கிறது” என்றார் பில்ஜி. “ஆனால் ஓநாயின் பார்வை தீட்சண்யம் கூடியிருப்பதாகத் தோன்றுகிறது. இதில் ஏதாவது ஒன்றிலிருந்து நீ ஒரு ஓநாயைப் பார்த்தால் சமயங்களில் அது உன்னைத் திருப்பிப் பார்ப்பதை நீ காணலாம்.”

முதியவரின் குடிலில் ஆறு மாதங்கள் ஜென் தங்கியிருந்த பிறகு, ஒரு நாள் பில்ஜி பார வண்டிப் பெட்டியிலிருந்து ஒரு தொலைநோக்கியை எடுத்து அவனிடம் கொடுத்தார். ரஷ்யத் தொலைநோக்கி பழையது; அதன் தாமிரத்தாலான மேற்புறம் வழுக்காத வகையில் அமைந்திருக்கும்; அதன் சக்திவாய்ந்த கண்ணாடிகள் மிகச் சிறந்த தரம் கொண்டவை. ஜென் அந்தப் பரிசை சிவப்புப் பட்டுத்துணியில் சுற்றிவைத்து பொக்கிஷமாகப் பாதுகாத்து வந்தான். மந்தையிலிருந்து மாடுகள் வழிதவறிச் சென்றுவிடும் போதோ, குதிரை மேய்ப்பர்கள் குதிரை காணாமல் போய்விட்டதாகத் தெரிவிக்கும் போதோ அல்லது பில்ஜியுடன் வேட்டைக்குச் செல்லும் போதோ மட்டும்தான் அதைப் பயன்படுத்துவான்.

ஜென் அந்தப் பகுதியைத் தன்னுடைய தொலைநோக்கி மூலம் கவனித்துப் பார்த்தான். அவனுடைய ‘வேட்டைக்காரனின் கண்கள்’ மூலம் அவன் பார்த்தபோது, அதுவரை அவனுள் மறைந்திருந்த வேட்டைக்கான சுபாவமான உணர்வுகள் விழித்துக்கொண்டன. இத்தகைய வேட்டைக்கான உள்ளுணர்வுகள் அவனுடைய வாழ்வில் மிகத் தாமதமாக விழித்துக்கொண்டிருப்பதாக அவன் உணர்ந்தான். மேலும், விவசாயிகளின் பரம்பரையில் பிறந்துவிட்டதற்காக அவன் துயரப்பட்டான். டஜன் கணக்கான, ஏன் நூற்றுக்கணக்கான தலைமுறைகளாக உழுது பயிரிடும் சமூகங்களின் உற்பத்திப் பொருள்களான தானியங்களையும் பச்சைக் காய்கறிகளையும் சாப்பிட்டு வளர்ந்த விவசாயிகள் ஆடுகளைப் போல் வெகு சுலபமாக அச்சம் கொள்கிறவர்களாகி விட்டார்கள். தங்களுடைய நாடோடி மூதாதையரின்

ஆண்மையை அவர்கள் இழந்துவிட்டார்கள். இனி ஒருபோதும் அவர்கள் வேட்டைக்காரர்களில்லை. அவர்கள் வேட்டையாடப்படுபவர்களாக ஆகிப் போனார்கள்.

ஓநாய்க் கூட்டம் தாக்குதலுக்கான எந்த அறிகுறியும் காட்டவில்லை. இருந்தபடியே இருந்துகொண்டிருக்கும் அவற்றின் அசாதாரணத் திறமை அவனைப் பொறுமையிழக்கச் செய்தது. ‘‘அவை வட்டத்தை இன்று பூர்த்தி செய்துவிடுமா?’’ என்றுகேட்டான். ‘‘இருட்டான பின் தாக்குவதற்காக அவை காத்திருக்கின்றனவா?’’

‘‘யுத்தம் பொறுமையைக் கோருகிறது’’ என்று மென்மையாகச் சொன்னார் முதியவர். ‘‘பொறுமைசாலிகளுக்கே, மனிதனாக இருந்தாலும் சரி, மிருகமாக இருந்தாலும் சரி , சந்தர்ப்பங்கள் தம்மை முன்னிறுத்துகின்றன; மேலும் அவர்களே அத்தகைய சந்தர்ப்பங்களை சாதகமாக்கிக்கொள்கிறார்கள். ஜெங்கிஸ்கான் சில குதிரை வீரர்களை வைத்துக்கொண்டு ஜின்னின் பலம் பொருந்திய இராணுவத்தை வீழ்த்த எப்படி முடிந்ததென்று நினைக்கிறாய்? எல்லா நாடுகளுமே எப்படி அவனிடம் வீழ்ந்தன? ஓநாய்களின் பலத்தை வெளிப்படுத்துவது மட்டும் போதாது. நீ உன் பொறுமையையும் வெளிப்படுத்த வேண்டும். மிகப் பெரிய, பலம் வாய்ந்த இராணுவப் படைகள்கூட தடுமாறிவிடும். பொறுமை இல்லாவிட்டால் நீ ஒரு ஓநாய் இல்லை; நீ ஒரு வேட்டைக்காரன் இல்லை; நீ ஒரு ஜெங்கிஸ்கான் இல்லை. ஓநாய்களையும் ஜெங்கிஸ்கானையும் புரிந்துகொள்ள விழைவதாக நீ எப்போதுமே சொல்லிக்கொண்டிருக்கிறாய். நல்லது, அப்படியானால் பேசாமல் படு. பொறுமையாக இரு.’’

முதியவரின் பேச்சில் கோபத்தின் தெறிப்பு லேசாக வெளிப்பட்டது. அதனால் கொஞ்சம் பொறுமையாக இருக்க ஜென் முயற்சித்தான். அவன் ஏற்கெனவே பலமுறை கூர்ந்து கவனித்த ஒரு ஓநாயைத் தன் தொலைநோக்கிக்கு இலக்காக்கினான். அது இறந்துபோனது போலப் படுத்திருந்தது. சில கணங்களுக்குப் பிறகு, முதியவர் மென்மையான குரலில், ‘‘இவ்வளவு நேரம் இங்கு படுத்திருந்த பிறகு, ஓநாய்கள் எதற்காகக் காத்திருக்கின்றன என்பதை உன்னால் கணிக்க முடிகிறதா’’ என்று கேட்டார்.

ஜென் தலையசைத்தான்.

‘‘மான்கள் வயிறு நிறைய சாப்பிட்டுவிட்டு, சற்று கிறங்குவதற்காக அவை காத்திருக்கின்றன’’ என்றார் பில்ஜி.

‘‘உண்மையிலேயே அவை அந்த அளவு புத்திசாலிகளா?’’ ஜென் ஆச்சரியத்தோடு கேட்டான்.

‘‘சீனர்களாகிய உங்களுக்கு ஓநாய்கள் பற்றி எதுவும் தெரியாது. அவை அளவுக்கு மனிதர்கள் கெட்டிக்காரர்கள் இல்லை. இப்போது உன்னைப் பரிட்சித்துப் பார்க்கிறேன். தனியொரு ஓநாயால், பெரியதென்றே வைத்துக்கொள்வோம், ஒரு மானை வீழ்த்த முடியுமா?’’

பதில் சொல்வதற்கு முன் ஜென் ஒரு கணம் யோசித்தான். ‘‘முடியாது, மூன்று வேண்டியிருக்கும். இரண்டு துரத்திக்கொண்டுபோகும்போது, மூன்றாவது புதருக்குள் மறைந்திருக்க வேண்டும். ஒரு ஓநாயால் தனியாக இதைச் செய்ய முடியாது.’’

முதியவர் தலையசைத்தார். ‘‘ஒரு மூர்க்கமான ஓநாய் தனியாகவே ஒரு மானை வீழ்த்திவிடும் என்பதை உன்னால் நம்ப முடிகிறதா?’’

‘‘உண்மையாகவா?’’ என்றான் ஜென். அவனால் நம்புவதற்கு சிரமமாக இருந்தது. ‘‘எப்படி முடியுமென்று என்னால் கற்பனை செய்ய முடியவில்லை?’‘

‘‘ஓநாய்கள் விசேஷமான திறனை வளர்த்துக்கொண்டிருக்கின்றன. ஒரு ஓநாய் பகல் வெளிச்சத்தில் தனித்திருக்கும் ஒரு மான்மீது தன் கவனத்தைக் குவிக்கும். ஆனால் இரவு கவிழும் வரை எதுவுமே செய்யாது. அப்போது மான், காற்றுக்கு மறைவாக வளர்ந்த புற்களுக்கிடையே இடம் தேடிப் படுத்து உறங்கும். அதுவும்கூடத் தாக்குதலுக்கு உகந்த நேரமில்லை. ஏனென்றால் மான் தூங்கிக்கொண்டிருந்தாலும் கூட அதன் மூக்கும் காதுகளும் உஷாராகவே இருக்கும். அபாயத்தின் முதல் அறிகுறி தோன்றியவுடனேயே, துள்ளி எழுந்து ஓடிவிடும். ஓநாயால் அதைப் பிடிக்க முடியாது. அதனால் ஓநாய், இரவு முழுவதும் அருகிலேயே படுத்திருந்து காத்திருக்கும். சூரிய உதயத்தின்போது, சிறுநீர்ப்பை முழுவதுமாக நிறைந்திருக்க மான் விழித்தெழும். அப்போது ஓநாய் அதன்மீது பாயத் தயாராகும். ஒரு மானால் ஓடிக் கொண்டிருக்கும்போது சிறுநீர் கழிக்க முடியாது. ஆக, அது அதிக தூரம்போவதற்கு முன்பே, சிறுநீர் முட்டி வரத் தொடங்கியதும் அதன்

பின்னங்கால்களில் சதைப் பிடிப்பு ஏற்பட்டு மான் அப்படியே நின்றுவிடும். ஒரு மான் காற்றைப் போல் விரைந்தோடும் என்றாலும் எல்லா நேரமும் அப்படி முடியாது. தனித்திருக்கும் ஒன்றை எப்போது வீழ்த்துவது என்பதை ஞானமிக்க முதிய ஓநாய்கள் நன்கறியும். புத்திசாலி மான்கள் மட்டுமே, தூக்கத்தின் இதத்தைத் துறந்து இரவில் விழித்து சிறுநீர் கழிக்கும். ஓலோன்புலாக் வேட்டைக்காரர்கள் அதிகாலையில் விழித்து, ஓநாய்களால் வீழ்த்தப்பட்ட மான்களை எடுத்துக்கொள்ள வருவார்கள். அவர்கள் அவற்றின் வயிற்றைக் கிழிக்கும்போது, அதனுள் எங்கும் சிறுநீராய் இருக்கும்.''

ஜென் சென் மென்மையாகச் சிரித்தான். ''சாவின் பிடியிலிருக்கும் இக்கட்டான தருணத்தில்கூட இப்படியான ஒரு போர்த் திறன் எனக்குக் கை கூடுமென்று தோன்றவில்லை. இது ஒரு தேர்ந்த ஞானம்தான். மங்கோலிய வேட்டைக்காரர்களும் இப்படியான தந்திரசாலிகள்தானே?''

முதியவர் சிரித்தார். ''நாங்கள் ஓநாய்களிடம் தொழில் கற்றவர்கள். அதனால் அப்படியானவர்களாகத்தான் நாங்கள் இருப்போம்.''

கடைசியாக, பெரும்பாலான மான்கள் நிமிர்ந்து பார்த்தன. அவற்றின் வயிறுகள் எப்போதையும்விட அதிகமாய் உப்பியிருந்தன. சில மான்கள் மிக அதிகமாகச் சாப்பிட்டிருந்ததால் நான்கு கால்களும் நான்கு திசைகளில் அலைந்து கொண்டிருந்தன.

முதியவர் தன்னுடைய தொலைநோக்கி மூலம் பார்த்துவிட்டு, ''அவை ஒரு கட்டு கட்டியிருக்கின்றன. இனி, அவற்றால் ஓட முடியாது. கவனமாகப் பார். ஓநாய்கள் தாக்குவதற்கான நேரம் இதுதான்'' என்றார்.

ஜென் பதற்றமடைந்தான். ஓநாய்க் கூட்டம் அரை வட்டத்தை மெதுவாக இறுக்கியது. மான்களின் கிழக்கு, வடக்கு மற்றும் மேற்குப் பக்கங்களை ஓநாய்கள் வளைத்திருந்தன. தெற்குப் பக்கமாக ஒரு மலைத் தொடர்ச்சி இருந்தது. மலையின் மறுபக்கம் ஓநாய்கள் காத்திருப்பதாகவும், இங்கிருக்கும் பிரதான ஓநாய்க் கூட்டம் அவற்றை நோக்கி மான்களைத் துரத்துமென்றும், காத்திருக்கும் அவை கொலைத் தாக்குதலை மேற்கொள்ளுமென்றும் ஜென் கருதினான். ஓநாய்கள் அடிக்கடி இந்த தந்திரத்தைக் கையாளுமென்று மேய்ப்பர்கள் சொல்லியிருக்கிறார்கள். ''அப்பா, மலைக்குப் பின்னால் எத்தனை

ஓநாய்கள் இருக்கும்? இந்த எல்லா மான்களையும் சுற்றி வளைப்பதற்குப் போதுமானவையாக அவை இருக்குமா?''

''மலைக்குப் பின்னால் ஓநாய் எதுவுமில்லை'' என்று முதியவர் திருட்டுப் புன்னகையோடு பதில் சொன்னார். ''தலைமை ஓநாய் அந்தப் பக்கம் ஓநாய்களை அனுப்பியிருக்கவில்லை.''

''அப்படியானால் அவை வட்டத்தை எப்படி நிறைவு செய்யும்?'' ஜென் சந்தேகத்தோடு கேட்டான்.

''இந்த இடத்தில், இந்த நேரத்தில், முழு வட்ட வடிவத்தைக் காட்டிலும் மூன்று பக்க வடிவ வளைவில் அவை அதிகமாகப் பெறும்'' என்றார் முதியவர்.

''அப்படியானால் அவை என்ன செய்துகொண்டிருக்கின்றன என்று எனக்குப் புரியவில்லை.''

''ஓலோன்புலாக்கின் பிரசித்தி பெற்ற மற்றும் மிகப் பெரிய பனிப் பள்ளத்தாக்கு மலையின் மறுபக்கம் உள்ளது. இங்கிருக்கும் புல்வெளிப் பிரதேசம் காற்றடிக்கும் திசையிலான ஒரு சரிவு. பனிப்புயலின்போது, பனியானது மலையின் மறுபக்கம் குவிந்து ஒரு பள்ளத்தாக்காக வடிவமையும். அங்கு இடுப்பளவு உயரத்துக்குப் பனி குவிந்திருக்கும். இன்னும் சிறிது நேரத்தில் ஓநாய்கள் மான்களை மலையின் மறுபக்கத்துக்கு விரட்டும். அவை முன்னாக்கிச் செல்லும்போது, வட்டத்தை அவை மேலும் இறுக்கும். அது என்ன மாதிரி இருக்குமென்று நீ நினைக்கிறாய்?''

அவன் ஏதோ பனிச் சுழலில் விழுந்து, அது எல்லா வெளிச்சத்தையும் அணைத்துவிட்டது போல எல்லாமே அவனுக்கு இருளத் தொடங்கியது. மங்கோலியர்களை மேய்ச்சல் நிலத்துக்குத் திரும்பும்படிச் செய்த மாபெரும் 'மிங்' தளபதி சூ டா, 'பெரும் சுவரு'க்குத் தென்புறமாக அவன் மேற்கொண்ட எல்லா யுத்தங் களையும் வென்றிருந்த போதிலும் மேய்ச்சல் நிலத்தில் அவனுடைய படையினர் நிர்மூலமாக்கப்படடது ஏனென்று இப்போது அவனுக்குப் புரியத் தொடங்கியது. மற்றொரு மாபெரும் மிங் தளபதியான கியுஃபூ, அவனுடைய லட்சக்கணக்கான படை வீரர்களோடு மங்கோலியக் கூட்டத்தை கெரூலென் நதிப் பக்கமாக புற மங்கோலியப் பகுதியில் விரட்டியடித்தபோது அவர்கள் பதிலுக்குப் பதுங்கியிருந்து தாக்கினர். அவன்

கொலை செய்யப் பட்டபோது, அவனுடைய படையின் ஒழுங்குநிலை குலைந்தது. எல்லா ஹேன் வீரர்களும் கைதிகளாக சிறை பிடிக்கப்பட்டனர்.

''யுத்தத்தில் ஓநாய்கள், மனிதர்களை விடவும் விவேகமிக்கவை'' என்றார் முதியவர். ''எப்படி வேட்டையாடுவது, எப்படி சுற்றி வளைப்பது, ஒரு யுத்தத்தை எப்படி நடத்துவது என்பதையெல்லாம் மங்கோலியர்களாகிய நாங்கள் அவற்றிடமிருந்து கற்றுக் கொண்டோம். சீனர்களாகிய நீங்கள் வாழுமிடத்தில் ஓநாய்க் கூட்டம் இல்லையென்பதால் நீங்கள் சண்டையிடுவது எப்படி என்பதைக் கற்றுக்கொள்ளவில்லை. அதிக அளவில் நிலமும் மக்களும் இருப்பதால் மட்டும் எவராலும் ஒரு யுத்தத்தை வென்றுவிட முடியாது. நீ ஒரு ஓநாயா அல்லது ஆடா என்பதைப் பொறுத்தது அது.''

தாக்குதல் தொடங்கியது. மான் கூட்டத்துக்கு அருகில் மேற்குப் பக்கமாகப் புடைத்துக்கொண்டிருந்த குன்றை நோக்கி, சாம்பல் வண்ணக் கழுத்தும் மார்பும் கொண்ட ஓநாயின் தலைமையில்

வேறு இரண்டு பெரிய ஓநாய்கள் சேர்ந்து மின்னல் வேகத் திடீர்த் தாக்குதலைத் தொடர்ந்தன. அந்தக் குன்றை அடைந்ததன் மூலம் அவற்றின் மூன்று பக்க வளைவு பூர்த்தியானது. இந்தத் திடீர் செயலானது, மூன்று பக்கமும் தாக்குதலை மேற்கொள்வதற்கான கொம்பொலியாக அமைந்தது. நீண்ட நேரமாகப் படுத்தபடியே பொறுமையாகக் காத்திருந்த ஓநாய்கள், புற்களுக்கிடையே இருந்து எழுந்து கிழக்கு, மேற்கு மற்றும் வடக்குப் பக்கங்கள் வழியாக மான்கள் மீது திடீரெனப் பாய்ந்து தாக்கின. இத்தகைய பயங்கரத் தாக்குதலை ஜென் சென் ஒருபோதும் கண்டதில்லை. மனிதர்கள் எதிரிகள்மீது திடீர் தாக்குதல் நிகழ்த்தும்போது, 'தாக்கு', 'கொல்லு' என கத்துவார்கள். நாய்கள் தாக்குதல்களை நிகழ்த்தும்போது, கட்டுக்கடங்கா வெறியோடு அச்சுறுத்தும் வகையில் குரைக்கும். ஆனால் ஓநாய்கள் தாக்கும்போது, அமைதியாக, கத்தலோ ஓநாய்த்தனமான ஊளைகளோ இன்றி அதை நிகழ்த்தும்.

வளர்ந்த புற்களிலிருந்து பாய்ச்சலுடன் வெளியேறிய ஓநாய்கள், மிகவும் கூரானதும் அச்சுறுத்தக்கூடியதுமான பற்களையும், பயமுறுத்தக்கூடிய பார்வையையும் ஆயுதங்களாகக் கொண்டு நேரடியாக மான் கூட்டத்தை நோக்கிச் சென்றன.

வயிறு முட்ட அதிகம் தின்றிருந்த மான்கள் நிலை குலைந்து தடுமாறின. அவற்றின் முதன்மை ஆயுதமான வேகம் மறுக்கப்பட்ட நிலையில் அவை இப்போது ஆடுகளைப் போலவே காணப் பட்டன. அவற்றின் மிக பயங்கரமான நிலையை ஜென் கற்பனை செய்து பார்த்தான். அநேகமாக, பெரும்பாலானவற்றிடமிருந்து ஏற்கனவே ஆன்மாக்கள் வெளியேறி டெஞ்ஞரை நோக்கிச் சென்றுகொண்டிருக்கும். பல மான்கள் நின்ற இடத்திலேயே பயத்தால் நடுங்கியபடி நின்றுகொண்டிருந்தன. மற்றவை தரையோடு சுருண்டு, மண்டியிட்டிருப்பவை போல, நாக்கு வெளியில் நீட்டியிருக்கக் கிடந்தன.

ஓநாய்களின் அறிவுத்திறனையும் பொறுமையையும், அவற்றின் கட்டமைப்பினையும் கட்டுப்பாட்டினையும் ஜென் நேரடியாகக் கண்டறிந்தான். சில ஆண்டுகளுக்கு ஒருமுறைதான் இப்படியான ஒரு வாய்ப்பு அமைகிறது என்றபோதிலும், அவை பொறுமையாகக் காத்திருந்தும் பசியைக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தும், பிறகு எதிரியை, மான் கூட்டத்தை, மிக எளிதாக நிராயுதபாணி ஆக்குகின்றன.

படிக்காத இராணுவ மேதையான ஜெங்கிஸ்கானும் அவரைப் போன்றே படிப்பறிவில்லாத அல்லது அரை குறையாகப் படித்த குவான்ரோங் மக்கள், ஹன் இனத்தவர், துங்கு இனத்தவர், துருக்கியர், மங்கோலியர் மற்றும் ஜுர்சென்னியர் போன்ற மக்களின் ராணுவத் தலைவர்களும் எவ்விதம் சீனர்களை (இவர்களுடைய மகத்தான இராணுவ அறிஞரான சுன்சூ உலகத்தால் பெரிதும் அங்கீகரிக்கப்பட்ட யுத்தக் கலை என்ற ஆய்வை வெளியிட்டிருக் கிறார்.) மண்டியிடச் செய்தனர் என்பதையும், தங்களுடைய எல்லைகளுக்கு வெளியே விரட்டியடித்தனர் என்பதையும், அவர்களுடைய அரச பரம்பரையின் தொடர்ச்சியைத் தடுத்து நிறுத்தினர் என்பதையும் இப்போது அவன் புரிந்துகொண்டான். இராணுவ உத்திகளில் மிகச் சிறந்த வல்லுநர்களை அவர்கள் கொண்டிருந் தார்கள். சண்டைக்கான அருமையான, குறிப்பிடத்தகுந்த, தெளிவான மாதிரி வடிவத்தை அவர்கள் கொண்டிருந்தனர். அவர்கள் நீண்ட போராட்ட வரலாற்றைக் கொண்டிருந்தார்கள்.

ஜென்னைப் பொறுத்தவரை, பல வருடங்களாக சுன்சூ, க்ளாஸ்விட்ஷ் போன்றோரை வாசித்துப் பெற்ற அறிவை விடவும், இவ்வளவு நேரம் நடந்த சண்டை உத்திகள் மிக அதிக ஞானத்தைத் தந்திருந்தன. சிறு வயதிலேயே

வரலாற்றினைப் படிப்பதில் அவன் ஈடுபாடு கொண்டிருந்ததால், உலக வரலாற்றில் மிகப் பெரிய புதிராக இருந்ததை விடுவிக்கும் ஆசை அவனை ஆட்டிப் படைத்துக்கொண்டிருந்தது: ஆசியாவுக்கும், ஐரோப்பியாவுக்கும் ஊடாகக் கடந்து, உலக வரலாற்றிலேயே மிக அதிக நிலப்பரப்பைக் கொண்டமைந்த ‘மகத்தான மங்கோலியப் பேரரசை’க் கட்டி எழுப்பிய மிகச் சிறிய ஓர் இனக் குழுவினர், தங்களுடைய இராணுவ ரகசியங்களை எங்கிருந்து கற்றனர்? அவன் இந்தக் கேள்வியைப் பில்ஜியிடம் பல முறை கேட்டிருக்கிறான். முதியவரின் கல்வித் தகுதி குறைவென்றாலும் அவருடைய ஞானம் விசாலமானது. ஓநாய்களின் சண்டை முறைகளிலிருந்து அவர் பெற்ற ஞானத்தின் வழியாக, அவர் அவனுடைய எல்லாக் கேள்விகளுக்கும் படிப் படியாகப் பதிலளித்திருந்தார். மேய்ச்சல்நில ஓநாய்கள் மீதும், குலச்சின்னமாக ஓநாயை வழிபடும் மக்கள் மீதும் ஆழ்ந்த பெருமதிப்பு அவனுள் ஏற்பட்டது.

யுத்தமும் அவதானிப்பும் தொடர்ந்துகொண்டிருந்தன. மான் கூட்டம் குழம்பத் தொடங்கிய தருணமும் வந்து சேர்ந்தது. போர்க்கள அனுபவத்தை முன்னர் பெற்றிருந்த முதிய உறுப்பினர்களும் கூட்டத்தின் தலைவர்களும் மட்டுமே அவற்றின் வேகத்தைத் தடுக்கக்கூடிய அளவு உண்ணாமல், மத்திய பனிக்காலப் புல்லின் வாசனையால் கவரப்படாமல் இருந்தன. அவை உடனடி யாக மலைகளை நோக்கி ஓட்டம் பிடித்ததோடு, மற்றவற்றையும் ஓடி உயிர் பிழைக்கும்படி வலியுறுத்தின. நிறைந்த வயிறும், பனியின ஆழமும், சரிவுப் பாதையும் அவற்றுக்குத் தப்பிக்க வாய்ப்பு தரவில்லை. பெருமளவில் கொலை நிகழ்ந்தேறியது. முட்டாள் தனமான, கவனமற்றவைகளுக்கு புத்திசாலிகள் அளித்த தண்டனை. பில்ஜியின் கருத்தில், இது மேய்ச்சல் நிலத்தைத் தூய்மையாக்கும் புனிதச் செயல்; அறம் சார்ந்த நல்ல செயல்.

ஓட முடியாத அளவுக்கு சாப்பிட்டுவிட்டு விழுந்து கிடந்த மான்களை அசட்டை செய்துவிட்டு, நின்றுகொண்டிருந்த மான் கூட்டத்தை நோக்கி ஓநாய்கள் நேராகச் சென்றன. பெரிய ஓநாய்கள் உடனடியாக அவற்றை வீழ்த்தி, அவற்றின் தொண்டைகளில் கடித்ததில் காற்றில் ரத்த வெள்ளம் பாய்ந்து பனியைக் கறைப் படுத்தின. உறைந்த காற்றில் ரத்தத்தின் துர்நாற்றம் உடனடியாகக் கலந்தது. மான்கள், அவற்றின் கூர்ந்த பார்வையாலும் வாடையாலும், இந்தப் போர்த்திறன் மற்றும் நுட்பம் கண்டு, அதாவது,

குரங்குகளைப் பயமுறுத்தக் கோழிகளைக் கொல்வது, அதிர்ந்து போய் மலையை நோக்கி விரைந்தன. பல ஆண் மான்கள், தங்கள் குடும்ப மான்களுக்குத் தலைமையேற்று சரிவின் உச்சி வரைக்கும் சென்றன. அங்கு அவை நின்று, மறுபக்கம் போக மனமின்றி, அந்த இடத்தையே சுற்றிச் சுற்றி வட்டமடித்தன. வழி நடத்திச் சென்றவை நிச்சயமாகப் பனிப் பள்ளத்தாக்கின் அபாயத்தைக் கண்டுபிடித்திருக்க வேண்டும். அங்கு ஒரு புல்கூடக் காணப்படவில்லை. அந்த நிலவெளி பற்றி நன்கறிந்த முதிய மான்கள் ஓநாய்களின் தந்திரத்தைக் கண்டுபிடித்திருக்கும்.

ஒரு டஜன் அளவிலான பெரிய மான்கள் எதிர்கொள்ள விருக்கும் அபாயத்தைக் கணித்துப் பார்த்து, நெருக்கமான சிறு கூட்டமாகத் திரும்பிக் கீழ்நோக்கி ஒரு நிலச்சரிவைப் போல் வந்தன. அவை, ஒரு அபாயம் குறைவான வழியாக, ஓநாய் வளைவை ஊடறுத்துச் செல்ல முடிவெடுத்துத் திரும்பின.

அவற்றின் விதி ஊசலாடிக்கொண்டிருப்பதை ஆண் மான்கள் அறிந்திருந்தன. நான்கு அல்லது ஐந்து மான்கள் ஒரு குழுவாகச் சேர்ந்து, தோளோடு தோள் நெருங்கி நின்று, தலைகளைக் குனிந்து, கொம்புகள் மூலம் ஓநாய்களைத் தாக்க முற்பட்டன. மற்ற மான்கள் ஓட்டமாய் சறுக்கி வந்து அவற்றின் பின்னால் விழுந்து கிடந்தன.

அந்தக் கொம்புகள் எந்தளவு ஊறு விளைவிக்கும் என்பதை ஜென் அறிவான். மேய்ச்சல் நிலத்தில் மேய்ப்பர்கள் தோல் வேலைகளுக்கு அவற்றைத்தான் ஊசிகளாகப் பயன்படுத்துவார்கள். பசு மாட்டின் தோலைத் துளைக்குமளவு மிகக் கூர்மையானவை.

ஓநாய்த் தோல் எம்மாத்திரம். எதிர்த் தாக்குதல் வேலை செய்தது; அவை வளைவுக்குள் ஒரு துளையிட்டன. அதன் வழியாக, மஞ்சள் வெள்ளம் புகுந்தது. ஜென் சென் பதற்றமடைந்தான். இப்போது வரிசையில் ஏற்படுத்தப்பட்டிருக்கும் இப்பிளவு, ஓநாய்க் கூட்டத்தின் திட்டங்களைப் பாழடித்துவிடும் என பயந்தான்.

வரிசையில் ஏற்பட்ட உடைப்பினருகில், அந்த வரிசைக் கூட்டத்தின் தலைமை ஓநாய், வெள்ளப் பெருக்கினால் அணைக் கட்டினைத் திறந்துவிடும்

மனிதனைப் போல், எவ்விதப் பாதிப்பும் நேராதது மாதிரி நின்றுகொண்டிருப்பதை அவன் கண்டுபிடித்தான். மான்கள், தங்கள் ஓட்டத்தின் வேகத்திலேயே, தங்கள் கொம்புகளை முன்னுக்கு நீட்டியபடி திறந்துவிடப்பட்ட அணையின் வழியாக விரைந்து வெளியேறியதும், அந்தத் தலைமை ஓநாய் தன் கூட்டத்தோடு சேர்ந்து உடைப்பை மூடியது. இப்போது அந்த வளைவுக்குள் விரைந்து ஓட முடியாத, ஆயுதங்களேதுமில்லாத, அதிகத் திறமையற்ற மான்கள் மட்டுமே அடைபட்டிருந்தன. அவற்றின் தலைவர்களும், வலிமைமிக்க ஆண் மான்களும் வளைவை விட்டு வெளியேறிவிட்ட நிலையில், ஓநாய்களின் மூர்க்கமான தாக்குதலுக்குப் பயந்து, சரிவின் உச்சிக்கு ஓடி, அதன் பிறகு பனிப் பள்ளத்தாக்கில் விழுந்தன. கூரான கொம்புகளோடும், கெட்டியான கால்களோடும், நிரம்பிய வயிறோடும் இருந்த அந்த மான்கள் எத்தகைய முடிவை எட்டியிருக்கும் என்பதை ஜென்னால் உடனடியாக அறிய முடிந்தது.

மலை தொடுவானத்தை சந்தித்த இடத்தில் மான்களும் ஓநாய்களும் மறைந்துபோயின. கிட்டத்தட்ட ஆயிரம் மான்கள் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ள ஓடிவிட்டதால், ரத்தத்தில் தோய்ந்த வளைவுப் பகுதி இப்போது சந்தடியற்று இருந்தது. ஏழு அல்லது எட்டு உடல்கள் புல் படர்ந்த சரிவில் கிடந்தன; காயமடைந்த மற்றவை பலவீனமாகப் போராடிக்கொண்டிருந்தன. தாக்குதல் தொடங்கிய கணத்துக்கும் சண்டை முடிந்ததற்குமிடையே பத்து நிமிஷம்கூடக் கடந்திருக்காது. அவ்வளவு நேரமும் தான் மூச்சை அடக்கி இருந்ததாக ஜென்னுக்குத் தோன்றியது; அவனுடைய இதயம் படபடத்துக்கொண்டிருந்தது.

முதியவர் எழுந்து நின்று, கால் கைகளை நீட்டினார்; பிறகு, பனிக் குகையின் முனையில் இருந்த உயர்ந்த புற்களுக்கிடையே கால்களைக் குறுக்குவாட்டில் போட்டவாறு உட்கார்ந்தார். அங்கு அவர் தன் தோல் காலணியிலிருந்து புகை பிடிக்கும் குழாயை வெளியே எடுத்தார். அவர் அதில் புகையிலையை நிரப்பி, பற்ற வைத்து, அதன் திறப்பினை ஒரு பழைய வெள்ளிக்காசால் செய்யப்பட்ட மூடியைக் கொண்டு மூடி, வாய் நிறைய புகையை இழுத்தார்.

சாங்ஜியாகோங்கிலிருந்து வந்த ஒரு ஹேன் சீன வியாபாரியிடம் இருபது நரித் தோல்களைக் கொடுத்து இந்தப் புகை பிடிக்கும் குழாயை பில்ஜி வாங்கியது ஜென்னுக்குத் தெரியும். இது மோசமான பேரமென்று மாணவர்கள்

நினைத்தார்கள். ஆனால் இந்தக் குழாய் அவர் போற்றிப் பாதுகாக்கும் பொருள் களில் ஒன்று. வியாபாரத்துக்காக மங்கோலியா வரை பயணம் செய்த அந்த வியாபாரிக்காக அவர் அனுதாபப்பட்டார். வரும் வழியில் வழிப்பறிக் கொள்ளையர்களால் மரணத்தை எதிர்கொள்ள வேண்டிய அபாயமும் உண்டு.

முதியவர் புகைத்தபடி இருந்தார். ''இது முடிந்ததும் நாம் கிளம்பலாம்'' என்றார்.

ஆனால் ஜென் இன்னும் வேட்டை பற்றிய எண்ணத்தோடேயே இருந்தான். ''நாம் மறுபக்கம் சென்று பார்க்கப் போவதில்லையா?'' என்று ஆர்வத்தோடு கேட்டான். ''ஓநாய்களின் வலையில் எவ்வளவு மான்கள் விழுந்திருக்கின்றன என்று நான் பார்க்க விரும்புகிறேன்.''

''அது மிகவும் அபாயகரமானது. எப்படியிருந்தாலும் பார்க்காமலேயே எனக்குத் தெரியும். அவை நூற்றுக்கணக்கில் இருக்கும். இளமான்களும், ஒல்லியானவையும், அதிர்ஷ்டக்கார மான்களும் எப்படியாவது பனிப் பள்ளத்தாக்கிலிருந்து தப்பி வெளியில் வந்திருக்கும்; மற்றவை டெஞ்ஞருக்குப் போக விதிக்கப்பட்டவை. நீ கவலைப்படத் தேவையில்லை. இந்த ஓநாய்க் கூட்டத் தால் அவை கொன்ற எல்லாவற்றையும் தின்றுவிட முடியாது. மேலும் நம்முடைய குழுவினர் சென்று நம்மால் முடிந்தவற்றை எடுத்துக்கொண்டு வந்த பிறகும்கூட அங்கு நிறைய மிச்சமிருக்கும்.''

''இளமான்களும் ஒல்லியானவையும் அதிலிருந்து எப்படி தப்பிக்க முடிகிறது?''

அவர் சிரித்தபோது அவருடைய கண்கள் சுருங்கின. அவர் சொன்னார்: ''இளமான்கள் ஒல்லியானவை என்பதால் அவற்றின் உடல் லேசாக இருக்கும். அதனால் அவை பனியின் ஆழத்துக்குள் செல்வதில்லை. பொதுவாக, அவை வெளியேற ஒரு வழி கிடைத்து விடும். மேலும் இந்த ஓநாய்களும் வெளியேறிய அவற்றை ஒன்றும் செய்யாமல் விட்டுவிடும்.'' அவர் புன்னகை செய்தார். ''இன்று ஓநாய்களுடைய நல்ல பண்புகளை நீ நேரடியாகப் பார்த்தாய். அவை மேய்ச்சல் நிலத்தைக் கண்காணிக்கவும் பாதுகாக்கவும் மட்டும் செய்யவில்லை; அவை நமக்குப் புத்தாண்டுப் பரிசுகளும் தந்திருக்கின்றன. இது ஒரு நல்ல வருடமாக அமையப் போகிறது. அதற்காக அவற்றுக்கு நன்றி சொல்வோம். வேட்டையின்போது மிஞ்சியவை, அதை யார் முதலில் பார்த்தார்களோ அவர்களுக்கே சொந்தமென்பது மேய்ச்சல்நில விதி.

ஆக, நீயும் நானும்தான் நேரடி சாட்சிகள் என்பதால் உன்னுடைய குடிலுக்குக் கொஞ்சம் அதிகப்படியாகக் கிடைக்கும்படி நாங்கள் பார்த்துக்கொள்வோம். மங்கோலியர்களாகிய நாங்கள் நன்றிக்கடனைத் தீர்ப்பதற்குப் பெரிதும் முக்கியத்துவம் கொடுப்போம். எதிர்காலத்தில், ஓநாய் வேட்டை பற்றி மற்ற சீனர்களிடமோ அல்லது வெளியாட்களிடமோ பேசி உன் பொழுதை வீணாக்க வேண்டாம்.''

ஜென் சென்னால் மனக்கிளர்ச்சியை அடக்க முடியவில்லை. ஒரு வண்டி நிறைய மான் உடல்களை ஏற்றிக்கொண்டு அவற்றைத் தன் குடிலுக்கு எடுத்துச் செல்லப் பொறுமையின்றித் தவித்தான். ''நான் இங்கிருக்கும் கடந்த இரண்டு வருடங்களில் ஓநாய்கள் எனக்குத் தொல்லை மட்டுமே தந்திருக்கின்றன. அவற்றின் முயற்சிகளால் ஒருநாள் பலனடைவேன் என்று ஒருபோதும் நான் எதிர்பார்த்திருக்கவில்லை.''

''மங்கோலியர்களாகிய நாங்கள் அவற்றின் முயற்சிகளால் எல்லா சமயமும் பலனடைந்திருக்கிறோம்'' என்றார் முதியவர். அவர் தன்னுடைய மேய்ச்சல் தடியை உயர்த்திப் பிடித்து, அவர்களுக்குப் பின்னாலிருந்த ஒரு மலைத் தொடர்ச்சியைச் சுட்டிக் காட்டினார். ''அதற்கும் பின்னால் இன்னொரு மலைத் தொடர்ச்சி இருக்கிறது. அது நம்முடைய புல்வெளிப் பிரதேசத்தைச் சேர்ந்ததில்லை என்றாலும் அது இங்கு மிகவும் பிரசித்தம். ஜெங்கிஸ்கானின் மகத்தான தளபதியான முகாலி அங்கு ஒரு போர் நடத்தியதாக வயதான மக்கள் சொல்வார்கள். மாபெரும் ஜின் பேரரசைச் சார்ந்த பல்லாயிரக்கணக்கான ஜூர்ஜென் குதிரைப் படை வீரர்களை அவன் விரட்டிப் பனிப் பள்ளத்தாக்கில் தள்ளியிருக்கிறான். அதனைத் தொடர்ந்து வந்த இளவேனிற் காலத்தில் யுத்தத்தின் எச்சங்களை சேகரித்து வரும்படி ஆட்களை அனுப்பி யிருக்கிறான். அங்கு வாள், ஈட்டி, வில், அம்பு, தலைக்கவசம், உடல் கவசம், சேணம், கைவிளக்கு ஆகியன மலைபோல் குவிந்து கிடந்திருக்கின்றன. ஓநாய்களிடமிருந்து இல்லாமல் வேறு எங்கிருந்து அவன் இதைக் கற்றுக்கொண்டிருக்கக் கூடும்? மங்கோலியர்கள் சம்பந்தப்பட்ட யுத்தங்கள் எல்லாவற்றையும் சேர்த்துப் பார்த்தால், பாதிக்கும் மேலானவை ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்ட போர்த் திறன்களைக் கொண்டே சண்டையிடப்பட்டிருக்கின்றன.''

அவர்கள் இருவரும் அவர்களுக்குப் பின்னால் இருந்த மலை இடுக்குக்குச் சென்றார்கள். தன்னுடைய எஜமானனைப் பார்த்ததும் பரவசத்தில் கருங்குதிரை தலையை மேலும் கீழுமாக ஆட்டியது. ஜென் அந்தக் குதிரையைப் பார்த்ததும், அவனை ஒருமுறை அது காப்பாற்றியதிலிருந்து, அவனுடைய நன்றியை மீண்டும் ஒருமுறை தெரிவிக்கும் வகையில் அதன் தலையில் அன்பாகத் தட்டுவான். அவனுடைய நன்றியை ஏற்றுக்கொள்ளும் விதமாக, அது அவனுடைய தோளில் லேசாக இடிக்கும். இம்முறை, ஒரு ஓநாயின் தலையை அன்பாகத் தட்டிக் கொடுக்க வேண்டும் என்ற வலிமையான எண்ணம் அவனுள் எழுந்தது.

குதிரைகளின் கொம்புகளிலிருந்த மாட்டுச் சங்கிலிகளை நீக்கிவிட்டு, அவற்றின் மீதேறி அமர்ந்து, வீட்டை நோக்கி லகுவான பாய்ச்சலில் சவாரி செய்தார்கள்.

முதியவர் வானத்தை நிமிர்ந்து பார்த்தார். “டெஞ்ஞர் நம்மைப் பாதுகாக்கிறது” என்றார் அவர். “நாளையும் இதே வானிலை நீடிக்க வேண்டும். ஒருவேளை இன்று இரவு பனிப்புயல் வந்தால் எல்லாமே அதோ கதிதான்.”

# 3

மறுநாள் காலை அருமையான வானிலை அவர்களை வாழ்த்தியது. குடில்களிலிருந்து சமையல் புகை, வெண்மையான ஒல்லிப்பிச்சான் மரங்களைப் போல் உயர்ந்தெழுந்தது. அதன் மிக உயர்ந்த கிளைகளின் முனைகள் சொர்க்கத்துக்குள்ளும் டெஞ்ஞுருக்குள்ளும் துளையிட்டுச் சென்றன. ஆடுகளும் மாடு களும் சாவகாசமாக அசை போட்டுக் கொண்டிருந்தன. குளிர்ந்த இரவுக் காற்றை சூரியன் விரட்டியடித்தது. விலங்குகளின் தோல்கள் மீதிருந்த உறைபனி, அப்போதுதான் பனித்துளிகளாக மாறிக்கொண்டிருந்ததைத் தொடர்ந்து அவற்றின் உடல்களிலிருந்து அது மூடுபனியாக எழுந்தது.

ஜென் சென் தன் பக்கத்து வீட்டுக்காரர் கோம்புவிடம் அவனுடைய ஆடுகளை அன்று மேய்க்கும்படி கேட்டுக் கொண்டான். ஒரு சமயத்தில் மந்தைக்குச் சொந்தக்காரனாக இருந்த கோம்பு, சந்தேகத்திற்கு ஆளாகிக் கண்காணிக்கப்பட்டான். ஆடுகளை மேய்க்கும் உரிமை அவனிடமிருந்து பறிக்கப்பட்டது. ஆனால் நான்கு பீஜிங் மாணவர்களும் அவர்களால் முடியும்போது அவர்களுடைய விலங்குகளைக் கவனித்துக்கொள்ளும்படி அவனிடம் கேட்டுக்கொள்வார்கள். அதற்குரிய வேலைப் புள்ளிகளை அவன் பெற்றுக்கொள்ள கஸ்மாய் வகை செய்வாள்.

ஜென்னும் மற்றொரு மேய்ப்பனான யாங் கீயும் லேசான இரு சக்கர பார வண்டியைப் பூட்டி பில்ஜியின் குடிலை நோக்கிச் சென்றார்கள்.

ஜென் சென்னின் குடிலில் வசிக்கும் அவனுடைய வகுப்புத் தோழனான யாங், பீஜிங்கின் மிகவும் மதிப்பு வாய்ந்த பல்கலைக்கழகமொன்றில் பேராசிரியராகப் பணிபுரிபவரின் மகன். ஒரு சிறு நூலகமளவுக்கு அவர்களுடைய வீட்டில் புத்தகங்கள் இருந்தன. உயர்நிலைப்பள்ளியில் ஜென்னும் அவனும் புத்தகங்களைப் பரிமாறிக்கொள்வார்கள். படித்த பின்பு தங்களுடைய கருத்துகளை வெளிப்படுத்துவார்கள். நல்ல நண்பர்கள். பீஜிங்கில் இருந்தபோது யாங், கூச்சமும் நாசூக்கான சுபாவமும் உள்ளவனாக, அந்நியர்களை சந்திக்கும்போது வெட்கப்படுபவனாக இருந்தான். கடந்த இரண்டு வருடங்களாக செம்மறி ஆட்டுக்குட்டிக் கறியையும், மாட்டிறைச்சித்

துண்டுகளையும், பாலாடைக் கட்டிகளையும் சாப்பிட்டு, மங்கோலிய சூரியனின் வலிமையான கதிர்களின் வேக்காட்டில் ஒவ்வொரு பருவகாலத்தையும் கழித்த பிறகு, மேய்ச்சல் நிலத்தின் வலிமை வாய்ந்த மகனாக அவன் உருமாற்றம் பெற்றதை யாருமே நினைத்துக்கூடப் பார்த்திருக்க மாட்டார்கள். அவன் வந்தபோதிருந்த நடை உடை பாவனைகள் எல்லாமும் போய், உள்ளூர் மேய்ப்பனைப் போலவே சூரிய ஒளியில் முகம் கறுத்துக் காணப்பட்டான்.

ஜென்னை விடவும் யாங் அதிக உற்சாகம் அடைந் திருந்தான். எருதின் பின்புறம் சாட்டையால் அடித்துவிட்டு அவன் சொன்னான்: ‘‘கடந்த இரவு முழுவதும் நான் தூங்கவில்லை. அடுத்த முறை பில்ஜி உன்னை வேட்டைக்குக் கூட்டிச் செல்லும்போது, நானும் கூட வரும்படி பார்த்துக்கொள். இரண்டு நாள் முழுக்க நான் அங்கே படுத்துக் கிடக்க நேர்ந்தாலும் பரவாயில்லை. ஓநாய்கள் மக்களுக்கு நற்செயல்கள் புரிவதை முதன் முறையாக நான் இப்போதுதான் கேள்விப்படுகிறேன். பனியிலிருந்து ஒரு மான் உடலை நானே வெளியில் இழுக்கும்வரை நான் அதை நம்பப்போவதில்லை. நாம் உண்மையிலேயே சிறுவண்டி நிறைய அவற்றை நம்மோடு கொண்டு வரப் போகிறோமா?’’

‘‘நான் உன்னிடம் பொய் சொல்வேனா?’’ ஜென் புன்னகை செய்தான். ‘‘அவற்றைத் தோண்டி வெளியில் எடுப்பது எவ்வளவு சிரமமான காரியமாக இருந்தாலும் சரி, நமக்கு சிறு வண்டி நிறையத் தருவதாக அப்பா உறுதியாகச் சொல்லியிருக்கிறார். நாம் அவற்றை, புத்தாண்டுக்கான பொருட்கள், குடிலுக்கான நீண்ட தோல்கள் போன்றவற்றுக்குப் பண்ட மாற்று செய்துகொள்ளலாம்.’’

யாங் மிகவும் சந்தோஷமடைந்து, எருதின் பின்புறம், அது கோபமாக முறைத்துப் பார்க்கும் வரை சாட்டையால் அடித்தான். ‘‘ஓநாய்கள் மீதான உன்னுடைய இரண்டு வருடக் கவர்ச்சிக்கு இப்போது பலன் கிடைக்கத் தொடங்கியிருக்கிறது’’ என்றான் அவன். ‘‘அவற்றின் வேட்டை உத்திகளை நானாகப் பார்த்துத் தெரிந்துகொண்டாக வேண்டும். ஒரு நாள் ஒரு நிஜமான சண்டையின்போது அது கை கொடுக்கக்கூடும்... நீ சொன்னதென்பது ஒருவித வடிவ மாதிரியாக இருக்கலாம். மேய்ச்சல் நிலத்தில் நீண்ட காலம் ஒரு நாடோடியாக வாழ நேரிட்டால், நீ எந்த இனக் குழுவைச் சேர்ந்தவனாக

இருந்தாலும் சரி, என்றாவது ஒருநாள் நீ ஓநாய்களை வணங்கத் தொடங்கிவிடுவாய். மேலும் அவற்றை உன் ஞான குருக்களாக ஏற்றுக்கொள்வாய். ஹுன் இனத்தவர், வூசுன் மக்கள், துருக்கியர், மங்கோலியர் மற்றும் பிற நாட்டினரிடம் இதுதான் நடந்தது. அல்லது அப்படித்தான் புத்தகங்களில் சொல்லப்பட்டிருக்கிறது. ஆனால் சீனர்கள் இதற்கு விதிவிலக்கு. சீனர்களாகிய நம்மால் ஓநாய் குலச்சின்னத்தை வணங்காமலேயே பல தலைமுறைகளுக்கு இங்கு வாழ முடியும் என்பதை நான் உத்தரவாதமாகக் கூறுகிறேன்.''

''இருக்கலாம், இல்லாமலும் இருக்கலாம்'' என்று ஜென் தன் குதிரையின் கடிவாளத்தைப் பிடித்தபடி சொன்னான். ''என்னையே உதாரணமாக எடுத்துக்கொள். இரண்டு வருசத்துக்குக் கொஞ்சம் கூடுதலான இக்காலத்தில் ஓநாய்கள் என்னை வென்று விட்டிருக்கின்றன.''

''ஆனால் மிகப் பெரும்பான்மையான சீனர்கள் குடியானவர்கள் அல்லது குடியானவர்களுக்குப் பிறந்தவர்கள்'' என்று எதிர்வாதம் செய்தான் யாங். ''ஹேன் இனத்தவர் விவசாய மனோபாவம் கொண்டவர்கள்; அதைப் போக்குவது ஒருபோதும் முடியாது. ஒருவேளை அவர்களை இங்கே கொண்டு வந்தால், மேய்ச்சல் நிலத்தின் கடைசி ஓநாயின் தோலையும் உரிக்காமல் அவர்கள் விடமாட்டார்கள். நாம் விவசாய இனத்தைச் சேர்ந்த வர்கள். ஓநாய்களின் மீதான பயமும் வெறுப்பும் நம் எலும்புகளில் இருக்கிறது. நாம் எப்படி ஓநாய் குலச்சின்னத்திடம் பெருமதிப்பு கொள்ள முடியும்? ஹேன் இனத்தவரான நாம், நம்முடைய உழவர் வாழ்க்கை முறைக்குப் பொறுப்பேற்றிருக்கிற டிராகனையே வழிபடுகிறோம். நாம் வழிபடுகிற டிராகன் குலச் சின்னத்திடம் மட்டும்தான் நம்மை ஒப்புக் கொடுக்க முடியும். இப்படியான மக்கள், மங்கோலியர்களைப் போல, ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொள்ளவும், அவர்களைப் பாதுகாத்துக் கொள்ளவும், அவற்றை வணங்கவும், அதே சமயம் அவற்றைக் கொல்லவும் முடியுமென்று நீ எப்படி எதிர்பார்க்கிறாய்? மக்களுடைய குலச்சின்னத்தால் மட்டும்தான், அது டிராகனாக இருந்தாலும் சரி, ஓநாயாக இருந்தாலும் சரி, ஓர் இனத்துக்குரிய ஆன்மாவையும் குண நலனையும் எழுச்சி கொள்ளச் செய்ய முடியும். விவசாயிகளுக்கும் நாடோடிகளுக்கும் இடையேயான வேறுபாடு மிகவும்

அதிகம். முன்னர், நாம் பரந்து விரிந்த சீனப் பெருங்கடலில் மூழ்கி இருந்தபோது, அந்த வேறுபாடுகள் பற்றிய உணர்வேதும் கொண்டிருக்கவில்லை. ஆனால் இங்கு வந்த பிறகு, நம் விவசாயப் பின்னணியில் இயல்பாகவே இருக்கிற பலகீனங்கள் வெளிப்படையாகத் தெரிகின்றன. நிச்சயமாக, என்னுடைய தந்தை பிரசித்தி பெற்ற பேராசிரியர் என்றாலும் அவருடைய தாத்தாவும், என் அம்மாவுடைய பாட்டியும் குடியானவர்களே.''

அவனுடைய பேச்சின் சரடைப் பின்பற்றி ஜென் சொன்னான். ''பழங்காலத்தில், உலகத்தின் மீதான மங்கோலியர் களின் தாக்கம், ஹேன் இனத்தவரை விட மிக மிக அதிகம். மங்கோலியர்கள் ஹேன் மக்களை விட எண்ணிக்கையில் ஒன்றுக்கு நூறு என்ற விகிதத்தில் மிக அதிகமாக இருந்தனர். இன்றும்கூட, மேற்கத்தியர்கள் நம்மை மங்கோலிய இன உறுப்பினர்கள் என்றே குறிப்பிடுகிறார்கள்; நாமும் அதை ஏற்றுக்கொள்கிறோம். ஆனால் குய்ன் மற்றும் ஹேன் பேரரசர்கள் சீனாவை ஒன்றுபடுத்தியபோது மங்கோலியர் என்ற வார்த்தை இல்லாமல் போனது. நாம் 'பெரும் சுவரை'க் கட்டி, எத்தகைய ஒரு சாதனை இது எனக் கூவி, உலகத்தின் மையம் நாமென நமக்கு நாமே கருதிக்கொண்டோம். ஆனால் மேற்கத்தியர்களின் கண்களுக்கு சீனா என்பது, 'பட்டு நாடு', 'பீங்கான் நாடு', 'தேயிலை நாடு' என்பதாகவே தெரிகிறது. ரஷ்யர்கள், சிறிய கைதான் பழங்குடிதான் சீனா என்று எண்ணுகிறார்கள். அவர்கள் இன்று வரை சீனாவை 'கைடை' என்றே அழைக்கிறார்கள்.''

''ஓநாய்களின் மீதான உன் கவர்ச்சி பெருமதியானது என்றே தோன்றுகிறது'' என்றான் யாங். ''அது தொற்றிக்கொள்ளக் கூடியது. இப்போதெல்லாம் நான் வரலாற்றினைப் படிக்கும்போது, காட்டு வாழ்க்கை சார்ந்த பழங்குடியினர் பற்றி அறியவும், ஓநாய்களோடு அவர்களுக்குள்ள தொடர்புகள் பற்றித் தெரிந்துகொள்ளவுமே மனம் விழைகிறது.''

''உன்னையே நீ பார். நீயே ஒரு மங்கோலியன்தான் என்ற நிலைக்கு நெருக்கமாக வந்துவிட்டாய். உனக்குத் தேவையெல்லாம் ஓநாய் ரத்தத்தை உன்னுள் பாய்ச்சுவதுதான். கலப்பினத்தவை எப்போதுமே மிகச் சிறந்த உயிரினங்கள்'' என்றான் ஜென்.

“மேய்ச்சல் நிலத்துக்கு வரும்படி என்னை நீ தூண்டியபோது, நான் எவ்வளவு சந்தோசப்பட்டேன் தெரியுமா? நீ சொன்ன ஒரு விஷயம் என்னுள்ளிருந்த சிறந்த பகுதியைத் தொட்டுவிட்டது. நீ அதை மறந்திருப்பாய், அப்படித்தானே? இதுதான் நீ சொன்னது: மேய்ச்சல் நிலமானது மிகப் பரந்த தன்மையில் தொன்மையான பண்பாடுகளைக் கொண்டுள்ளது; அங்கு எல்லா இடத்திலும் சுதந்திரம் நிலவுகிறது.”

ஜென் குதிரையின் வேகத்தை சற்றே தளர்த்தி, “நீ என் வாயினுள் வார்த்தைகளைத் திணிக்கிறாய் என்று நினைக்கிறேன்” என்றான்.

அவர்கள் சந்தோசமாக சிரித்தார்கள். வண்டி செல்லும்போது அதன் சக்கரங்களிலிருந்து பனி உருண்டோடியது.

மனிதர்கள், நாய்கள் மற்றும் வண்டிகள் ஒருங்கிணைந்து நாடோடிகளின் கொண்டாட்டத்தைப் போன்றதொரு காட்சியைப் பனியில் உருவாக்கினார்கள். கஸ்மாய் குழுவைச் சேர்ந்த ஒவ்வொரு உறுப்பினரும், எட்டுக் குடில்களில் வசிப்பவர்கள் , தங்கள் ஆட்களையும் வண்டிகளையும் அனுப்பியிருந்தார்கள். எட்டு வண்டிகளும் கம்பளிகள், கயிறுகள், மண்வெட்டிகள், மரப்பிடிக் கொக்கிகள் ஆகியவற்றால் நிரம்பியிருந்தன. ஒவ்வொருவரும், மேற்கொள்ளவிருக்கும் அசுத்தமான வேலைக்கென்று மிகப் பழைய அழுக்கான ஆடைகளையே அணிந்து வந்திருந்தனர். பழங்கால மங்கோலிய நாடோடிகள் யுத்தத்தின் எச்சங்களை அடையும் பொருட்டு யுத்தகளத்தைத் துப்புரவு செய்வதைப் பின்பற்றும் பழங்குடியினராக மக்களும் நாய்களும் படு உற்சாகமாகக் காணப்பட்டனர். கம்பளித் துணியால் சுற்றப்பட்டு ஒரு ஃப்ளாஸ்கில் இருந்த மதுபானம், அதைக் கொண்டு வந்தவரிடமிருந்து எல்லோருக்கும் போய்ச் சேர்ந்தது. அது பெண்களின் கைகளில் இருந்து ஆண்களின் வாய்களுக்குள் சென்றது. காற்றை நிரப்பியது இசை: மங்கோலிய நாட்டுப்புறப் பாடல்கள், போற்றிப் பாடல்கள், யுத்த கீதங்கள், குடிப் பாடல்கள், காதல் பாடல்கள். மடை திறந்துவிட்டது. அங்கிருந்த நாற்பது அல்லது ஐம்பது மங்கோலிய நாய்கள், குழந்தைகள் போல் நடித்தன. அவை, வண்டிகளைச் சுற்றி ஓடித் திரிந்தும், அசுத்தத்தில் உருண்டு புரண்டும், விளை யாட்டாகச்

சண்டையிட்டுக்கொண்டும், சாகசங்கள் செய்தும் அந்த அரிய சந்தோஷமான சம்பவத்தில் தலை சுற்றுகிற அளவுக்கு ஆடிக் களித்தன.

ஜென் சென்னும், குதிரை மேய்ப்பர்களான பட்டுவும் லாம்ஜாவ்வும், இன்னும் ஐந்தாறு மாடு மற்றும் ஆடு மேய்ப்பர்களும் பில்ஜியைச் சுற்றி, பழங்குடித் தலைவருக்கான மெய்க்காப்பாளர்கள் போல நின்றுகொண்டிருந்தார்கள். அகன்ற முகமும், நேரான மூக்கும், துருக்கியக் கண்களும் கொண்ட லாம்ஜாவ், பில்ஜியிடம் சொன்னான்: ‘‘எந்தவொரு இடத்திலும் துப்பாக்கி சுடுவதில் நான் வல்லவன்; ஆனாலும் உங்களுக்கு நான் சமமாக முடியாது. ஒரு குண்டு கூட சுடாமல், நம் குழுவைச் சேர்ந்த ஒவ்வொரு குடும்பமும் மிகத் தாராளமாகப் புத்தாண்டு விடுமுறையைக் கொண்டாட நீங்கள் வழி செய்திருக்கிறீர்கள். உங்களிடம் வேலை கற்றுக்கொள்ளும் உதவியாளனான நம் ஹேன் நண்பர் ஜென் சென்னை மட்டுமல்ல, உங்களுடைய பழைய மங்கோலிய உதவியாளர்களையும் நீங்கள் மறக்கவில்லை. ஓநாய்கள் இங்கு தங்கள் தாக்குதலை நேற்று நிகழ்த்தும் என்று நான் கொஞ்சமும் கருதவில்லை.’’

முதியவர் அவனைக் கோபமாகப் பார்த்தார். ‘‘எதிர்காலத்தில், நீ வெற்றிகரமாக ஒரு வேட்டையை நடத்தி முடித்திருக்கும்போது முதியவர்களையும், குழுவில் உள்ள பீஜிங் மாணவர்களையும் மறந்துவிட வேண்டாம். எவருக்கும் நீ இறைச்சி கொடுத்து நான் ஒருபோதும் பார்த்ததில்லை. நீ ஜென் சென்னுக்கு ஒரு மான் காலைக் கொடுத்ததுகூட அவன் உன் குடிலுக்கு வந்ததால்தான். நம்முடைய விருந்தினர்களை உபசரிக்கும் விதம் இதுதானா? நாங்கள் இளைஞர்களாக இருந்தபோது, வருடத்தின் முதல் மான் எப்போதுமே வயதானவர்களுக்கும் விருந்தினர்களுக்குமானது. மூதாதையர்களால் நமக்குக் கையளிக்கப்பட்ட வரைமுறைகளை இன்றைய இளைஞர்கள் மறந்துவிட்டார்கள். பயன் கோபி சமூகத்தின் மிகச் சிறந்த வேட்டைக்காரனான புஹேயின் சாதனையை முறியடிக்க நீ இன்னும் எவ்வளவு ஓநாய்களைக் கொன்றாக வேண்டுமென நான் உன்னைக் கேட்கிறேன். நீ உன் பெயரை செய்தித் தாளில் பார்க்க விரும்புகிறாய், வானொலியில் கேட்க விரும்புகிறாய். நீ பரிசு பெற வேண்டும், அப்படித்தானே? ஓநாய்களை முற்றிலுமாக அழிக்கும் வகையில் நீ வேட்டையாடினால், நீ இறந்த பிறகு உன்னுடைய ஆன்மா எங்கு

போகுமென்று நினைக்கிறாய்? ஹேன் இனத்தவரைப் போல, நிலத்தில் ஒரு குழிக்குள் புதைக்கப்பட விரும்புகிறேன் என்று மட்டும் என்னிடம் சொல்லாதே. அங்கு புழுக்களும் பூச்சிகளும் உன்னைத் தின்ன வேண்டுமென நினைக்கிறாயா? நீ அப்படிச் செய்தால் உன்னுடைய ஆன்மா, ஒருபோதும் டெஞ்ஞுரைப் போய்ச் சேராது.''

அவனுடைய நரி முடித்தொப்பியின் பின்வளைவைத் தொட்டபடி, ''பட்டு உங்கள் மகன். நீங்கள் என்னை நம்பாவிட்டாலும் அவனை நம்பித்தானாக வேண்டும். மிகப் பெரிய வேட்டைக்காரனாக ஆகும் ஆர்வமேதும் எனக்கிருக்கிறதா என்று அவனையே கேளுங்கள். மங்கோலியப் பிரிவைச் சேர்ந்த ஒரு பத்திரிகையாளன் அன்றொரு நாள் என்னைச் சந்திக்க வந்தான். பட்டுவும் அப்போது என்கூட இருந்தான்; அப்போது நான் எண்ணிக்கையைப் பாதியாகக் குறைத்துச் சொன்னேனா இல்லையா என்று அவனையே கேளுங்கள்.''

''அது உண்மையா?'' என முதியவர் திரும்பி மகனிடம் கேட்டார்.

''ஆம்'' என்று பதில் சொன்னான் பட்டு. ''ஆனால் அந்த மனிதன் இவரை நம்பவில்லை. பொருள் கொள்முதல் பிரிவினரிடம், எவ்வளவு ஓநாய்த் தோல்களை லாம்ஜாவ் அவர்களிடம் விற்றிருப்பதாகக் கேட்டான். வாங்கும் பொருள்களுக்கு அவர்கள் கணக்கு வைத்திருப்பது உங்களுக்குத் தெரியும். பத்திரிகையாளன் அவன் இடம் போய்ச் சேர்ந்ததும், புஹேயை லாம்ஜாவ் நெருங்கிவிட்டதாகவும், அதற்காகப் பயந்து போயிருக்கும் லாம்ஜாவ் அவனுடைய தோல்களைப் பிறரை விற்றுத் தரும்படிக் கேட்பதாகவும் அறிவித்துவிட்டான்.''

முதியவர் தன் வெறுப்பை வெளிக்காட்டினார். ''நீங்கள் இருவரும் ஓநாய்களை அடிக்கடி கொல்கிறீர்கள். இந்தப் புல்வெளியில் எவரையும்விட அதிக கொலைகள் செய்திருப்பது நீங்கள்தான்.''

பட்டு தன் தரப்பு நியாயத்தை முன்வைத்தான்: ''எங்கள் குதிரைகளுக்கான மேய்ச்சல் இடம், புற மங்கோலியாவின் எல்லைக்கு மிக அருகில் இருக்கிறது. அங்குதான் பெரும்பாலான ஓநாய்கள் இருக்கின்றன. நாங்கள் அவற்றை

வேட்டையாடா விட்டால் அவை இன்னும் அதிக எண்ணிக்கையில் எல்லை கடந்து வந்துவிடும். பெரும்பாலான குதிரைக்குட்டிகள் உயிர் வாழ முடியாது.''

''நீங்கள் இருவருமே ஏன் இங்கிருக்கிறீர்கள்? மந்தையின் பொறுப்பை நீ சாங் ஜியோனிடம் ஒப்படைக்கக் கூடாதா?''

''ஓநாய்கள் இரவில் வருகின்றன. அதனால் அந்த நேரம் அவனை நாங்கள் விடுவித்துவிடுகிறோம். நாங்கள் விரைவாக வேலை செய்வோம் என்பதால் இப்போது நாங்கள் வந்திருக் கிறோம்'' என்றான் பட்டு.

பனிக்கால சூரியன் வானில் மிகத் தாழ்வாக, பூமிக்கருகில் நிலைத்துவிடுவதைப் போல அமைந்திருந்தது. நீலவானம் வெண்மையாகி இருந்தது; வறண்ட புற்களும் அப்படியாகி விட்டிருந்தன. தரையில் படிந்திருந்த பனி உருகத் தொடங்கி, ஒளிரும் கண்ணாடி போலாகியது. மனிதர்களிடமும் நாய்களிடமும் வண்டிகளிடமும் ஆவியுருவத் தன்மை அமைந்திருந்தது. ஆண்கள் தங்கள் சூரியக் கண்ணாடிகளைப் போட்டுக்கொண்டார்கள்.

பெண்களும் குழந்தைகளும் தங்கள் ஆடைகளின் முனைகளால் கண்களை மூடிக்கொண்டார்கள். மாடு மேய்ப்பர்களில் சிலர், சூரியக் குருட்டு நோயினால் பாதிக்கப்பட்ட தங்கள் கண்களை மூடிக்கொண்டார்கள். ஆனால் அவர்கள் சரியான நேரத்தில் மூடிக் கொள்ளாததால் கண்களிலிருந்து நீர் வழிந்தோடியது. மறுபக்கம் பெரிய நாய்கள், கண்களை விரித்து, தாவிச் செல்லும் முயல்களைக் கண்காணித்தன; அல்லது சற்று முன்பாகப் பனியில் தடங்களைப் பதித்துச் சென்றிருக்கிற பாதையின் ஓரமாக மோப்பம் பிடித்துக்கொண்டிருந்தன.

தாக்குதல் நடந்த வளைவுப் பகுதியை நாய்கள் நெருங்கியபோது, சரிவில் புதிதாக ஏதோ ஒன்றைக் கண்டுபிடித்தன. கட்டுக்கடங்கா வெறியோடு குரைத்தபடியே அதை நோக்கி ஓடின. ஓநாய்கள் விட்டுச் சென்ற மான் உடல்களை, இன்னமும் பசியோடிருந்த நாய்கள் குதறிக்கொண்டிருந்தன. ஆனால் பில்ஜியின் பார் மற்றும் அக்குழுவைச் சேர்ந்த சிறந்த சில வேட்டை நாய்கள் பனிப் பள்ளத்தாக்கை நோக்கி ஓடி, எத்தனை ஓநாய்கள் அத்தாக்குதலில் ஈடுபட்டிருந்திருக்கும், எவ்வளவு வலிமையான கூட்டமாக அது இருந்திருக்கும், எந்தத் தலைமை ஓநாயின் கீழ் அவை செயல்பட்டிருக்கும்

என்பதைக் கண்டறிவதில் ஈடுபட்டன. “ஓலோன்புலாக் ஓநாய்களின் வாசனையை அவை அறியும்; அதேபோல, அவற்றின் வாசனையை ஓநாய்கள் அறியும். அதன் கழுத்திலுள்ள மயிர் சிலிர்த்து நிற்பதிலிருந்து அது பெரிய கூட்டம்தான் என்பது நிச்சயம்” என்றார் பில்ஜி.

குதிரையாட்கள் வேட்டைக் களத்துக்குள் நுழைந்ததும், அந்த இடத்தை நோட்டம் விட்டார்கள். சரிவில் கிடந்த பெரும்பாலான மான்களின் உடல்களில் எஞ்சியிருந்தவை, தலைகளும் சிதறிக் கிடந்த எலும்புகளும்தான். பனியில் படிந்திருந்த தடங்களைச் சுட்டிக்காட்டி பில்ஜி, “இரவில் சில இங்கு வந்திருக்கின்றன” என்றார். பிறகு அவர் உதிர்ந்து கிடந்த சாம்பல் நிறமோடிய மஞ்சள் மயிர்க் கற்றைகளைக் காண்பித்து, “ஓநாய்க் கூட்டங்களுக்கிடையே இங்கு சண்டை நடந்திருக்கிறது. பெரும்பாலும் எல்லைக்கு மறுபக்கமுள்ள ஓநாய்க் கூட்டமாக அவை இருக்கலாம். மானின் வாசனை அவற்றை இங்கு இழுத்து வந்திருக்கலாம். அங்கு நிலவும் உணவுப் பற்றாக்குறை காரணமாக அவை எப்போதையும் விட மிக மூர்க்கமாக வெளிப்பட்டிருக்கும்.”

குதிரையாட்கள் ஒருவழியாக சரிவின் முகட்டை வந்தடைந்தார்கள். அங்கு அவர்கள் ஏதோ கணக்கிலடங்கா பொக்கிஷத்தைக் கண்டுவிட்டவர்களாக, பைத்தியத்தைப் போல ஆனந்தக் கூச்சலிட்டார்கள். அவர்கள் தங்கள் தொப்பிகளைக் கழற்றி வண்டிகளை நோக்கி ஆட்டினார்கள். கஸ்மாய் தன்னுடைய பார வண்டியிலிருந்து கீழே குதித்து, எருதின் கடிவாளக் கயிறைப் பிடித்தவாறு துரிதமாக நடை போட்டாள். மற்ற பெண்களும் அவ்வாறே செய்தனர். வண்டிகள் லேசாகிவிட்டதால் எருதுகள் வேகமெடுத்துச் சென்றன.

லாம்ஜாவ், கீழே தென்பட்ட காட்சியைப் பார்த்ததும் அவனுடைய கண்கள் பிதுங்கி வெளியே விழுந்துவிடும் போல் ஆயின. “ஹோவ்!” என ஆச்சரியத்தில் கூவினான் அவன். “இவ்வளவு மான்களை வீழ்த்த பெரிய ஓநாய்க் கூட்டம் தேவைப்பட்டிருக்கும். போன வருஷம் முப்பது மான்களை வீழ்த்துவதற்குள் நாங்கள் இருபது குதிரை மேய்ப்பர்கள் படாத பாடு பட்டுவிட்டோம்.”

பில்ஜி குதிரையின் மீதமர்ந்தபடியே கடிவாளத்தை இறுக்கிப் பிடித்து, தன்னுடைய தொலைநோக்கியை எடுத்து, பனிப் பள்ளத்தாக்கையும் சுற்றியிருக்கும் மலைகளையும் பார்த்தார். எல்லோரும் குதிரையில்

இருந்தபடியே சுற்றிலும் பார்த்தார்கள். அவர் என்ன சொல்லப் போகிறார் என்பதைக் கேட்பதற்காகக் காத்திருந்தார்கள்.

ஜென் தன்னுடைய தொலைநோக்கியால் சரிவைப் பார்த்தான். எண்ணிலடங்கா மான்கள் பனிப் பள்ளத்தாக்கில் புதையுண்டிருந்தன. பழங்காலப் படைவீரர்கள் புதைக்கப்பட்ட இடமாகவும் அது இருந்திருக்கக் கூடும். பனிப் பள்ளத்தாக்கின் மையப் பகுதி ஓரளவு மென்மையாக இருந்தது. பனியாலும் பனிக்கட்டியாலும் மூடப்பட்ட மலை ஏரியைப் போல் அது காணப்பட்டது. ஏரியைச் சுற்றியிருந்த சரிவான பகுதியில் பத்து, பனிரெண்டு மான் உடல்கள் தென்பட்டன. ஆனால் ஏரியில் ஏழெட்டு மஞ்சள் புள்ளிகள் மிதந்துகொண்டிருந்த காட்சி அதிர்ச்சி அளிப்பதாக இருந்தது. அவை பனியால் விழுங்கப்படாமல் இருப்பதை ஜென் உணர்ந்தான். அதைச் சுற்றிலுமான சிறிய, பெரிய குழிகளாலான பகுதியின் மூலம் மான்கள் மூழ்கியிருப்பது வெளிப்பட்டது. நீர் ஏரிகளைப் போலல்லாமல் பனி ஏரிகள் மூழ்கிய பலிகளின் இடத்தைக் காட்டக் கூடியன.

பில்ஜி, பட்டுவிடம், “வண்டிகள் நெருக்கமாக வருமளவுக்கு நீயும் மற்றும் சிலரும் சேர்ந்து பனியை அகற்றுங்கள்” என்றார். பிறகு அவர், ஜென் சென் மற்றும் லாம்ஜாவ்வுடன் ஏரியின் முனைக்குச் சென்றார். “நீங்கள் ஒரு அடி எடுத்து வைப்பதற்கு முன்பு, மான் மற்றும் ஓநாய்த் தடங்கள் தெரிகிறதா என்று பார்த்துக் கொள்ளுங்கள். புல்லில்லாத இடத்தில் அடி எடுத்து வைக்க வேண்டாம்.”

அவர்கள் சரிவின் கீழாக மிகுந்த கவனத்துடன் தங்கள் குதிரைகளைச் செலுத்தினார்கள். பனியின் ஆழம் அதிகரித்துக்கொண்டே போனபோது, புல் சரியாகப் புலப்படவில்லை. அவர்கள் இன்னும் கொஞ்சம் நகர்ந்தார்கள். அதன் மேற்தளத்தில், உணவு உண்ணப் பயன்படுத்தும் குச்சி முனையின் தடிமனுக்குக் குழிகள் காணப்பட்டன. ஒவ்வொரு குழியின் நடுவிலும் காய்ந்த மஞ்சள் புல் தண்டு விரைப்பாக நீண்டுகொண்டிருந்தது. “டெஞ்ஞர், ஓநாய்களுக்காக இந்தக் குழிகளை ஏற்படுத்திக் கொடுத்திருக்கிறது. இவை இல்லாவிட்டால், இவ்வளவு ஆழமான பனியில், இறந்து போன தங்கள் பலிகளின் வாசனையை அவை எப்படி கண்டுபிடிக்க முடியும்?” என்றார் பில்ஜி.

ஜென் சிரித்தபடியே தலையாட்டினான். குழிகளும் புல் தண்டுகளும் பாதுகாப்பு அறிகுறிகள். இன்னும் சில எட்டுகள் சரிவின் கீழாகச் சென்றதும் அவர்கள்

மறைந்து விட்டார்களென்றாலும், மான் மற்றும் ஓநாய்த் தடங்கள் இன்னும் அங்கிருந்தன.

கடைசியாக, மேற்கொண்டு குதிரைகள் செல்ல முடியாத நிலை ஏற்பட்டது. ஆட்கள் குதிரைகளிலிருந்து இறங்கி, கெட்டியான மேற்பகுதியை உடைத்துக்கொண்டு ஆழமான பனியினுள் இறங்கினார்கள். அவர்கள் நின்று திரும்புவதற்கான தளமொன்றைக் கண்டுபிடிப்பதற்காக சிரமப்பட்டார்கள். ஜென் சென்னின் பாதத்துக்குப் பக்கத்தில் கடினமாகி இருந்த பனிப் பாறையில் அரைகுறையாகத் தின்னப்பட்ட மானொன்று ஒரு கோணத்தில் கிடந்தது. மானுடைய வயிற்றைச் சுற்றிலும் உறைபனிப் புற்கள் காணப்பட்டன. அதை ஒட்டியிருந்த பகுதியில், முப்பது அல்லது நாற்பது மான்கள் அகப்பட்டு அரைகுறையாகத் தின்னப்பட்ட நிலையில் கிடந்தன. ஓநாய்கள் அந்த அளவு தூரம் வரை சென்றிருந்திருக்கின்றன.

ஜென் சென், அவன் அதுவரை கண்டிராத பரிதாபக் காட்சியை அப்போது பார்த்தான். அவனுக்கு சுமார் நூறடி தூரத்தில் எட்டு அல்லது ஒன்பது இளமான்கள் நடுங்கியபடி ஏரியில் நின்றுகொண்டிருந்தன. அவற்றைச் சுற்றிலும் பனியில் குழிகள் தென்பட்டன. பிற மான்கள் அங்கு புதையுண்டிருந்தன. எஞ்சி உயிர் வாழ்ந்திருந்த இளமான்களும், அவை நின்று கொண்டிருந்த மிகச் சிறிய, கடினமான பனிப் பாறை போன்ற பகுதி எந்த நேரமும் உடைந்து சிதறி விடக்கூடும் என்ற பயத்தில் நகராமல் இருந்தன.

வேறு சில மான்களின் ஒல்லியான கால்கள் பனியில் புதையுண்டிருக்க, அவற்றின் உடல்கள் கெட்டியான பனி அடுக்கின் துணையோடு இருந்துகொண்டிருந்தன. அவை நகர முடியாதபடி இன்னமும் உயிரோடிருந்தன. மேய்ச்சல் நிலத்தின் அதிவேக சுதந்திர ஜீவன்களான அவை, பசியோடும் குளிரோடும், நகர முடியாதபடி, சாவின் கடைசி வேதனையில் அவதிப்பட்டுக் கொண்டிருந்தன.

ஆனால், பனிக்கு மேலாக வரிசையாக மான் தலைகள் மட்டும் நீட்டிக்கொண்டிருக்க, அவற்றின் உடல்கள் முழுவதுமாக மூழ்கியிருந்த காட்சிதான் மிகவும் இதயத்தை நொறுக்குவதாக இருந்தது. அவை சிறு பாறையின் மீது நின்றுகொண்டிருக்கலாம்; அல்லது ஒருவேளை மான்களின் சடலங்கள் மீதாக இருக்கலாம். அவற்றின் வாய்கள் அசைவதை, உதவி

கேட்டுக் கதறுவதை, சத்தமேதும் வெளியில் வராவிட்டாலும் கூட, தன்னுடைய தொலைநோக்கியின் துணையால் தன்னால் பார்க்க முடியும் என ஜென் நினைத்தான்.

இறுகிய மேற்தளம் ஐஸ்கட்டியைப் போல ஒளிர்ந்தது; அது அழகியதுதான் என்றாலும் வஞ்சகமும் கொடுங்குணமும் கொண்டது; மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாக்கும் பயங்கரமான, மறைந்திருக்கும் ஆயுதம். பனிக்காலத்திய பனிப்புயலும் சூரியனும் உருவாக்கியிருப்பதே இந்தக் கெட்டியான தளம். நிலத்தினூடாக அடித்துச் செல்லும் காற்று ஒரு சலிப்பானைப் போல, தூள் போன்ற பனியை நீக்கிவிட்டு, அடர்த்தியான தரை விரிப்பை விட்டுச் செல்கிறது. அதுவே, பனியாலான ஒரு நிலவெளியை உருவாக்குகிறது. காற்றில்லாத காலைப் பொழுதுகளில், நடுப்பகல் வரை, சூரிய ஒளியின் தீவிரக் கதிர்வீச்சுகளினால் பனி உருகத் தொடங்குகிறது. பிற்பகலின் குளிர்ந்த காற்று மீண்டும் அதை உறைய வைக்கிறது. பலமுறை பனிப்புயல் அடித்த பிறகு, மூன்று அங்குலப் பனிப்பாறை உருவாகிறது. பனிக்கட்டியும் பனியும் சேர்ந்த கலவையான அது, பனியை விடக் கெட்டியாகவும், பனிக்கட்டியை விட எளிதில் உடைந்து நொறுங்கக்கூடியதாகவும் அமைந்திருக்கும். அது மென்மையானதாகவும் வழுக்கும் தன்மையும் கொண்டிருப்பதோடு, அதன் ஆழத்தின் மட்டமும் சமமற்று இருக்கும். மிகவும் கெட்டியான பகுதி, ஒரு மனிதனைத் தாங்கக்கூடியது; அதன் சில பகுதிகள் மங்கோலிய மான்களின் கொம்புகளால்கூட துளைக்க முடியாதது.

படுபயங்கரமான அந்தக் காட்சி ஜென்னை நடுங்கச் செய்தது. பனிக்கு வெளியே வந்துவிடக்கூடிய மான்கள் எல்லாவற்றையும் ஓநாய்கள் இழுத்துச் சென்றதால் ஏற்பட்டிருந்த கால்வாய்கள் சூழ்பனிப் பகுதியின் விளிம்புகள் வரை நீண்டிருந்தன. உள்ளுறுப்புகளும் தேர்ந்த கறிப் பகுதிகளும் மட்டுமே தின்னப் பட்டிருந்தன; மற்றவையெல்லாம் கழிக்கப்பட்டவையாக விடப்பட்டிருந்தன. மனிதர்களும் நாய்களும் நெருங்கி வந்து கொண்டிருப்பதை நிச்சயம் ஓநாய்கள் அறிந்து அவசரமாக அங்கிருந்து நீங்கியிருக்க வேண்டும். ஏனெனில் அவை விட்டு விலகிய இடங்கள் இன்னும் முழுமையாக உறைந்திருக்கவில்லை.

பனிக் களத்தில் மங்கோலிய ஓநாய்கள் அற்புதமான சண்டைக்காரர்கள். சண்டையின் எல்லைகளை முழுவதுமாக அறிந்திருக்கும் ஆற்றல் பெற்றவை. மிகவும் ஆழமான பனிப் பகுதியில், அதன் மேலாகவும் அதற்குள் புதையுண்டும் இருந்த மான்களை அவை பொருட்படுத்தவில்லை. பாதுகாப்பான இந்தப் பகுதிக்கு வெளியே நன்றாகப் பரிசோதித்துப் பார்த்ததில், இழுத்துச் செல்லப்பட்ட ஒரு தடம்கூட இல்லை. பனிக்கு வெளியே இழுத்துச் செல்லப்பட்ட மான்கள், பெரிய ஓநாய்க் கூட்டங்கள் பலவற்றுக்குத் தீனியாக அமையக் கூடியவை; புறக்கணிக்கப்பட்ட உறைந்த உடல்கள், வரவிருக்கும் இளவேனிற் காலத்தில் அவற்றுக்கு சுவையான உணவாக அமையவிருப்பவை. இந்த மிகப் பெரிய பனிப் பள்ளத்தாக்கும் பனி ஏரியும் ஓநாய்க் கூட்டத்தின் இயற்கையான குளிர்பதன சேமிப்புக் கிடங்காக இருந்தது. ‘‘ஓலோன்புலாக் முழுவதும் ஓநாய்களுக்கான பனிக்கட்டி மற்றும் பனியாலான சேமிப்பிடங்கள் இருக்கின்றன’’ என்றார் பில்ஜி. ‘‘இது மிகப் பெரியது, அவ்வளவுதான். வரும் வருடத்தில் பசியில் வாடாமல் இருப்பதற்காக, ஓநாய்கள் இதுபோன்ற பல இடங்களில் தாங்கள் கொன்றவற்றை அவ்வப்போது சேமித்து வைக்கின்றன. இளவேனிற் காலத்தில் ஓநாய்களின் உயிரைக் காப்பாற்றும் உணவாக, உறைந்து கிடக்கும் இந்த மான்களின் இறைச்சி அமையும். வாழ்ந்துகொண்டிருக்கும் மிக ஒல்லியான மான்களின் கொழுப்பை விடவும், அவை சேமித்து வைத்திருப்பவை மிகக் கூடுதலாக இருக்கும்.’’ முதியவர் ஒரு துளையைச் சுட்டிக்காட்டி, சிரித்தபடியே சொன்னார்: ‘‘இங்கிருக்கும் ஓநாய்களுக்கு எப்படி வாழ்வதென்று உண்மையிலேயே தெரியும். நாம் அவற்றுக்கு இணை இல்லை. ஒவ்வொரு வருடமும் பனிக்காலத்தில், இலையுதிர் கால சேமிப்பு தீர்வதற்கு முன்பாக, மேய்ப்பர்கள் தங்கள் மாடுகளையும் ஆடுகளையும் வெட்டி இறைச்சிகளை சேமிப்பில் வைத்திருப் பார்கள். பனிக்காலம் முடியும் வரை அவை அவர்களுக்குப் போதுமானதாக இருக்கும். இது ஓநாய்களிடமிருந்து அவர்கள் கற்றுக்கொண்டதுதான்.’’

பார் மற்றும் பிற நாய்கள் உயிரோடிருக்கும் மான்களைப் பார்த்ததும் அவற்றின் வேட்டை உணர்வு துடித்தெழுந்தது. அவற்றை நோக்கி அவை வேகமாக ஓடின. ஓநாய்களின் பாதத் தடங்கள் முடிவடைந்திருந்த இடத்தை அடைந்ததும் அவை அப்படியே நின்றுவிட்டன. அவற்றைக் கொல்ல முடியாத

நிலையில், கழுத்துகளை நீட்டி, மான்களின் திசை நோக்கி வெறியோடு குரைத்தன.

வண்டிகள் மேட்டிலிருந்து இறங்கி வருவதற்கு வசதியாக, குழுவினர் ஒரு பாதையைத் தோண்டியிருந்தனர். முன்னால் வந்த வண்டி, மேற்கொண்டு செல்ல முடியாத ஓரிடத்தை அடைந்ததும் நின்றது. தொடர்ந்து வந்த வண்டிகளும் அதன் பின்னால் வரிசையாக நின்றன. அதிலிருந்து ஆட்கள் வெளியேறி, அவர்களைச் சுற்றிலும் இருந்த பனியை, வண்டியிலிருந்து பொருட்களை எடுப்பதற்கு ஏதுவாக, அகற்றினர்.

ஆட்கள் பில்ஜியை நோக்கி நடந்தார்கள். ‘‘மேற்குப் பக்கமாக பனி எவ்வளவு கெட்டியாக உறைந்திருக்கிறது என்பதைப் பாருங்கள்’’ என்றார் அவர். ‘‘அங்கு குழிகள் அவ்வளவாக இல்லை. ஆனால் அங்கு மான்கள் சென்றதற்கான பாதைகள் வெகுவாக இருக்கின்றன. அப்படியானால் அப்பகுதியிலிருந்து அந்த அளவு மான்கள் வெளியேறி இருக்கின்றன.’’

ஆடு மேய்ப்பனாகிய சஞ்சாய், சிரித்தபடியே, ‘‘சமயங்களில் ஓநாய்களும் தப்புக் கணக்கு போட்டுவிடுகின்றன. தலைமை ஆண் ஓநாய், நான்கைந்து ஓநாய்களை இந்தப் பக்கம் அனுப்பி இந்த வழியை மூடியிருந்தால், அவ்வளவு சுலபமாக அந்த மான்கள் தப்பியிருக்க முடியாது’’ என்றான்.

பில்ஜி வெறுப்பை வெளிப்படுத்தும் வகையில் சப்தமெழுப்பினார். ‘‘நீ தலைமை ஓநாயாக இருந்திருந்தால் பசியிலேயே செத்துப் போயிருப்பாய். ஒரே சமயத்தில் எல்லா மான்களையும் கொன்றுவிட்டால், அடுத்த வருசம் நீ எதைச் சாப்பிடுவாய்? ஓநாய்கள், மனிதர்களைப் போன்று பேராசை கொண்டவை அல்ல. விசயங்களை எப்படிக் கையாள்வது என்பது அவற்றுக்குத் தெரியும்.’’

‘‘இந்த வருசம் ஏகப்பட்ட மான்கள் இருந்தன’’ என்றான் சஞ்சாய். ‘‘நீங்கள் இன்னும் ஓராயிரம் மான்களைக் கொன்றாலும் ஏராளமான மான்கள் மிச்சமிருக்கும். ஒரு புதுக் குடில் கட்டவும், திருமணம் செய்யவும் என்னிடம் போதுமான பணமிருக்க நான் விரும்புகிறேன்.’’

முதியவர் அவனை முறைத்துப் பார்த்தார். ‘‘உன்னுடைய மகன்களுக்கும் பேரன்களுக்கும் திருமணம் முடியும் சமயத்தில் மான்கள் இல்லாது போனால்

பிறகு என்ன நடக்கும்? இளைஞர்களாகிய நீங்கள் பெரும்பாலும் அந்நியர்களைப் போலவே எப்போதும் நடந்துகொள்கிறீர்கள்.''

பெண்கள் வண்டியிலிருந்த பாரத்தை இறக்கி வைத்துவிட்டு, மான்களின் சடலங்களை ஓநாய்கள் இழுத்துச் சென்றதால் ஏற்பட்டிருந்த நீண்ட பள்ளங்களை சரிசெய்து, ஆழ்பனிக்குச் செல்வதற்கான பாதைகளைத் தோண்டிக்கொண்டிருந்தார்கள். அவர்கள் ஒரு பனிக் குவியலை எழுப்பியிருந்தார்கள். பில்ஜி வானத்தை நோக்கிப் பார்த்தவாறு ஏதோ செய்தார். பனிக்குள் சென்று இறந்துபோன மான்களை எடுத்துக்கொண்டு வர டெஞ்ஞரிடம் அவர் அனுமதி கேட்பதாக ஜென் சென் அனுமானித்தான்.

முதியவர் சிறிது நேரம் கண்களை மூடியிருந்தார். மீண்டும் கண்களைத் திறந்தபோது, அவர் சொன்னார்: ''பனிக்கு அடியில் ஏகப்பட்ட மான்கள் உறைந்து கிடக்கின்றன. அதனால் பேராசைப்பட வேண்டாம். நீங்கள் அங்கு சென்றதும், உயிரோடிருக்கும் எல்லா மான்களையும் முதலில் விடுவியுங்கள். அதன் பிறகு உறைந்து கிடப்பவற்றை வெளியில் எடுத்து வரலாம். அவை இறந்து போவதை டெஞ்ஞர் விரும்பவில்லை. அதனால் நாம் அவற்றைக் காப்பாற்றியாக வேண்டும்.'' அவர் தலை தாழ்த்தி ஜென் சென்னிடமும் யாங்கிடமும், ''ஜெங்கிஸ்கான் ஒரு வேட்டையைச் சுற்றி வளைத்து முடித்த பின், சில விலங்குகள் தப்பிச் சென்றுவிட அனுமதிப்பான். நூற்றாண்டுகளாக மங்கோலியர் இவ்விதம்தான் சண்டையிடுகிறார்கள். ஓநாய்களைப் போலவே, வேட்டைக்காளான எல்லா மிருகங்களையும் நாங்கள் கொல்வதில்லை'' என்றார்.

ஒவ்வொரு குடும்பத்துக்குமான மான்களை சேகரிக்கும் பிரிவுகளை பில்ஜி உருவாக்கி, அவர்கள் தம் வழிகளில் பணிகளை மேற்கொள்ள அனுமதித்தார். ஒவ்வொருவரும் வழக்கமான வேட்டை நடைமுறைகளைப் பின்பற்றி, மிக அதிகமான துளைகள் கொண்ட வெகு அருகாமைப் பகுதியை பில்ஜிக்கும் மாணவர்களுக்குமென ஒதுக்கினர். பில்ஜி, ஜென்னையும் யாங்கையும் கூட்டிக்கொண்டு அவருடைய வண்டியை நோக்கிச் சென்றார். அவர்கள் அதிலிருந்து, இரண்டடி அகலமும் நான்கடி நீளமும் கொண்ட இரண்டு கம்பளித் துணிச் சுருள்களை இறக்கினர். ஜென்னும் யாங்கும் ஆளுக்கொரு சுருளை ஒழுங்கு செய்யப்பட்ட பாதை வழியாக இழுத்துச் சென்றார்கள்.

பில்ஜி, உலோகக் கொக்கி பொருத்தப்பட்ட பீச்சமரத் தடியொன்றை தூக்கிச் சென்றார். பட்டுவும் கஸ்மாயும் பெரிய சுருள்களைத் தூக்கிக்கொண்டு ஆழ்பனி நோக்கிச் சென்றார்கள்; சிறுவன் பாயரும் தன் பெற்றோர்களுக்குப் பின்னால் தோளில் ஒரு கொக்கியைச் சுமந்தபடி நடந்து சென்றான்.

ஆழ்பனியின் விளிம்பை அவர்கள் அடைந்ததும், ஒரு கம்பளித் துணிச் சுருளைக் கெட்டியான பனியின் மீது ஜென்னையும் யாங்கையும் விரிக்கச் செய்து, அவர்கள் இருவரில் கனமானவனான யாங்கிடம் அவனுடைய எடையை அது தாங்குகிறதா என்று பார்க்கும்படி சொன்னார். அது ஒரு பிரும்மாண்டமான பனிச்சறுக்குப் பலகை போலிருந்தது. யாங், கம்பளித் துணி மீதேறி நின்றபோது, அதனடியில் இருந்த பனி மொறு மொறுக்கும் ஒலி எழுந்தது, அவ்வளவுதான். அபாய அறிகுறி ஏதுமில்லை. அவன் மேலும் கீழுமாகக் குதித்தான். அவன் பாதங்களுக்குக் கீழிருந்த கம்பளித் துணி லேசாக மூழ்கியது; ஆபத்து ஏதுமேற்படவில்லை. முதியவர், உடனடியாக அவனை நிறுத்தும்படி செய்தார். ''நாம் ஆழ்பனியில் இருக்கும்போது அப்படிச் செய்யாதே. நீ அந்தத் துணியின் வழியாக உள்ளே சென்றுவிட்டால், நீயும் ஒரு உறைந்த மானாக ஆகிவிடுவாய். இது வெறும் விளையாட்டில்லை. இனி, ஜென் சென் உன்னை விடவும் லேசாக இருப்பதால் அவனோடு சேர்ந்து சில மான்களை நான் தோண்டி எடுக்கிறேன். அதன் பிறகு, நீங்கள் இருவரும் சேர்ந்து உங்கள் போக்கில் அதில் ஈடுபடலாம்.''

யாங் அதிலிருந்து கீழே குதித்து, முதியவர் கம்பளித் துணி மீதேற உதவி செய்தான். ஜென் அவரைப் பின்தொடர்ந்து ஏறினான். அவர்கள் இருவரின் எடையையும் கம்பளித்துணி சுலபமாகத் தாங்கி நின்றது. இனி சேர்க்கப்படவிருக்கிற சில மான்களின் எடையையும் அது தாங்கும் என்பதான தோற்றம் தந்தது. அவர்கள் அதில் உறுதியாக நின்றுகொண்டதும், இரண்டாவது கம்பளித் துணிச் சுருளை இழுத்து அவர்கள் நின்று கொண்டிருந்ததற்கு முன்பாக அதை விரித்தார்கள். இரண்டு விரிப்புகளையும் சமமாக்கிய பின், இரண்டாவது விரிப்பில் கால் வைத்தார்கள். கொக்கியுடன் கூடிய நீண்ட மரக்கழியை அதில் போட்டுவிட்டு, மீண்டும் முன்மாதிரியே செய்தார்கள். முதலாவது விரிப்பை இரண்டாவதற்கு முன் போட்டார்கள். இவ்வாறாக மறுபடியும் மறுபடியும் செய்தார்கள். இரண்டு கம்பளித் துணிப்

படகுகளை அவர்கள் ஓட்டிச் செல்வதுபோல் இருந்தது. உயிரோடிருக்கும் மானை நோக்கி அவர்கள் இவ்வாறு இசைவாகச் சென்றார்கள்.

மேய்ச்சல்நில வாசிகள் பேராபத்தான பனிப்புயல்களிலிருந்து தப்பிக்கும் மார்க்கமாக, பனியைக் கடப்பதற்கென உருவாக்கிய அற்புதமான ஆக்கங்கள் ஒன்றில் ஒருவழியாக ஜென் சென் ஏறிச் செல்லும் வாய்ப்பு அமைந்தது. எண்ணற்ற மங்கோலிய மேய்ப்பர்கள் பன்னெடுங்காலமாக இந்தப் படகுகளை ஓட்டியிருக்கிறார்கள். குறிப்பாக, பனிப் பேரழிவின்போது கணக்கிலடங்காத ஆடுகளையும் நாய்களையும் காப்பாற்றுவதற்காக இதைச் செய்திருக்கிறார்கள். மேலும், ஓநாய்களாலும் மனிதர்களாலும் வேட்டையாடப்பட்ட மிருகங்களைத் தோண்டியெடுப்பதற்கும் இவை உதவுகின்றன. தவிர, யுத்தத்தின்போது பனி ஏரிகளில் கைவிடப்பட்ட எண்ணற்ற பொருள்களைக் கைப்பற்றவும் இவை பயன்படுகின்றன. இந்த மங்கோலிய ரகசியத்தை அந்நியரிடமிருந்து காப்பாற்றுவதற்குப் பதிலாக, அதை எப்படிப் பயன்படுத்துவதென்று பில்ஜி மங்கோலிய மாணவர்களுக்கு சொல்லிக் கொடுத்தார். இவ்வாறாக, வரலாற்றுக்கு முந்தைய தொன்மையான படகுகளில் ஒன்றைச் செலுத்தும் முதல் ‘ஹேன் சீனன்’ என்ற நல்ல வாய்ப்பை ஜென் பெற்றான்.

படிப்படியாக, கம்பளித் துணிப் படகு வேகமெடுத்ததும் அவர்களுக்குக் கீழிருந்த கெட்டிப் பனி நொறுங்கவும் மொறு மொறுக்கவும் செய்தது. மாயாஜாலக் கம்பளத்தில் சென்று கொண்டிருப்பதுபோல ஜென் உணர்ந்தான். கீழிருந்த பனி வெண்மையினூடாக இழைந்தோடியும், பயத்தால் நடுங்கியபடியும், அபாய உணர்வின் கிளர்ச்சியோடும், அழியா ஜீவனைப் போல மிதந்தபடியும், கிட்டத்தட்ட புராண வகை சார்ந்த தொன்மையான வாழ்க்கை முறையை அவனுக்கு அறிமுகப்படுத்தியதற்காக ஓநாய்களுக்கும் மேய்ச்சல்நில வாசிகளுக்குமான ஆழ்ந்த நன்றியோடும் அவன் சென்றுகொண்டிருந்தான். எட்டு கம்பளித் துணிப் படகுகள், பதினாறு பறக்கும் கம்பளங்கள், ஒன்றை ஒன்று போட்டி போட்டுக்கொண்டு செல்வதுபோல, பனி ஏரியில் தூள் போன்ற பனியை மேகங்களாக எழுப்பியபடியும், பனிக் கட்டிகளை நீராகத் தூவியபடியும் சென்றுகொண்டிருந்தன. நாய்கள் குரைத்தன, மக்கள் சத்தமிட்டார்கள், டெஞ்ஞர் புன்னகைத்தது. திடீரென, ஒரு கனத்த மேகம் தலைக்கு மேலாகக் கடந்து சென்று, தட்பவெட்பம் சீரானது.

உருகத் தொடங்கிய பனி உடனடியாகப் பனிக்கட்டியாக உருமாற்றம் கொண்டது. அதனால் மேற்தளம் கெட்டியானதோடு மான்களைப் பாதுகாப்பதும் மும்மடங்கு சாதகமானது. ஆண்கள் தங்கள் கண்ணாடிகளைக் கழற்றிவிட்டு, கண்களை அகலத் திறந்து, வானத்தைப் பார்த்தார்கள். "டெஞ்ஞர், டெஞ்ஞர்!" என அவர்கள் சந்தோஷமாகக் குரல் எழுப்பினார்கள். இப்போது படகுகள் வேகமெடுத்தன. படகோட்டிகள் ஊக்கமும் உற்சாகமும் அடைந்தார்கள். அச்சமயத்தில், மங்கோலியர்களின் நித்தியமான டெஞ்ஞரின் இருப்பை அவன் உண்மையிலேயே உணர்ந்தான். அது மீண்டுமொரு முறை அவனுடைய ஆத்மாவை அரவணைத்தது.

பிறகு, யாங் கீ மற்றும் பாயருடைய சந்தோஷக் குரல் அவர்களுக்குப் பின்னால் எழுந்தது. ஜென் அவர்களைப் பார்ப்பதற்காகத் திரும்பினான். "எங்களுக்கு ஒன்று கிடைத்திருக்கிறது! எங்களுக்கு ஒன்று கிடைத்திருக்கிறது!" என்று யாங்கும் பாயரும் சேர்ந்து சத்தமிட்டார்கள். ஜென் தன் தொலைநோக்கியை அவர்களை இலக்காக்கி பாயர் காட்டிய திசையில் பார்த்தபோது, பனியிலிருந்து பெரியதொரு மானை யாங் தோண்டியெடுத்திருந்தான். அவர்கள், அதனுடைய காலைப் பற்றி இழுத்தவாறு வண்டிக்குத் திரும்பிக் கொண்டிருந்தார்கள். மற்றவர்கள் தங்கள் தோள்களில் மணல்வாரிகளோடு ஓடி வந்தார்கள்.

கம்பளித்துணிப் படகு, பாதுகாப்பு எல்லையைக் கடந்து வந்து, ஒரு மானை நெருங்கியது. அது ஒரு கர்ப்பிணி. பார்வையில் பயமும், கண்கள் நம்பிக்கையிழந்து இறைஞ்சுவது போன்றும் காணப்பட்டன. அதைச் சுற்றிலும் குழிகள் நிறைந்திருக்க, ஒரு சிறிய மேஜை அளவுக்கே இருந்த ஒரு கெட்டித் தளத்தின்மீது அது நின்று கொண்டிருந்தது. அந்தத் தளம் எப்போது வேண்டுமானாலும் விழுந்துவிடும் போலிருந்தது. "கொக்கியை மெல்ல இறக்குங்கள். அதைப் பயமுறுத்தாதீர்கள். இரண்டு ஜீவன்களின் உயிர்ப் பிரச்சனை இது. நம் எல்லோருக்குமே மேய்ச்சல் நிலத்தில் வாழ்க்கை சிரமமாகத்தான் இருக்கிறது. சமயங்களில் உயிர்களைக் காப்பாற்றுவதும் பகிர்ந்துகொள்வதும் முக்கியமானதாகிறது" என்றார் முதியவர்.

ஜென் தலையாட்டினான். வயிறு விரிப்பில் படும்படியாகப் படுத்திருந்து, மெதுவாக முன்னாலிருந்த கம்பளி விரிப்பைத் துளைகளைக் கடந்து, பெண்

மானின் பாதத்துக்கருகில் வரும் படியாக நகர்த்தினான். அந்த மான் கம்பளி விரிப்புக்குத் தாவிக் குதித்த உடனேயே, நடுநடுங்கியபடி மடங்கி விழுந்தது. அது களைப்பினால் முடங்கிப் போய்விட்டதுபோல் காணப்பட்டது. கிட்டத்தட்ட உறைந்துவிட்டது போலவும் பயத்தில் வாழ்வதற்கான சாதுர்யங்களை இழந்துவிட்டது போலவும் அது இருந்தது. முன்னாலிருந்த கம்பளி விரிப்பில் இருவர் மிக மெதுவாகக் கால் வைத்தேறியபோது, ஜென் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அவர்கள் மிக கவனமாக பின்னாலிருந்த விரிப்பைத் துளைகளைச் சுற்றி இழுத்து மேற்குப் பக்கமாகத் தள்ளிவிட்டனர். அங்கு பனி மிகவும் கெட்டியாக இருந்தது. இப்படியாகப் பல முறை அச்செயலைத் திறமையுடன் கையாண்டு நேர்த்தியான ஒரு சரிவை வந்தடைந்தனர். அங்கு பனியில் குழிகள் ஏதுமில்லை. மாறாக, மான்களை இழுத்துச் சென்றதில் ஓநாய்கள் உருவாக்கியிருந்த பாதைகள் இருந்தன. "சரி, அதைப் போக விடுங்கள். இப்போது அது விழுந்தால், டெஞ்ஞரின் விருப்பம் அப்படியாக இருக்கலாம்" என்றார் முதியவர்.

ஜென் மானை மெதுவாக நெருங்கி அதன் கண்களைப் பார்த்தான். தாயாகவிருக்கும் சாந்தமான மானாக அதைப் பார்த்தான். அதன் பெரிய, மென்மையான கண்களில் தாய்மையின் அழகு நிறைந்திருந்தது. அவன் அதனுடைய தலை உச்சியைத் தடவிக் கொடுத்தான். அது கண்களை அகலத் திறந்தபோது, கருணைக்காக இறைஞ்சுவது போலிருந்தது. அவனுடைய காலடியில் மண்டியிட்டிருந்த, ஆதரவற்ற, வலுவிழந்த ஜீவனை அவன் தட்டிக் கொடுத்தான். அவனுடைய இதயம் அச்சத்தால் படபடத்தது. கொல்லும் சுபாவமுடைய ஓநாய்களிடம் படிப்படியாக நெருக்கம் கொள்வதைக் காட்டிலும், இதமும் அழகும் அமைதியை நேசிக்கும் குணமும் கொண்டு தாவரங்களை உண்டு வாழும் இவற்றைக் காப்பாற்ற அவன் ஏன் முயற்சிக்கக் கூடாது? ஓநாய்களைக் கொடூர குணம் கொண்டவையாகவும் தீய சக்தியாகவும் சித்தரிக்கும் கதைகளைக் கேட்டு வளர்ந்த அவன், கொஞ்சமும் யோசிக்காமல், "இந்த மான்கள் மிகவும் பரிதாபத்துக்குரிய ஜீவன்கள்; ஓநாய்கள் தீயவை, அப்பாவிகளைக் கொல்பவை, வாழ்வின் பெறுமதியை உணராதவை. அவை பிடிக்கப்படுவதும், தோல் உரிக்கப்படுவதும் தப்பே இல்லை."

முதியவர் பில்ஜியின் முகபாவம் சட்டென மாறியது.

முதியவரின் தெய்வங்களையும் மேய்ச்சல்நில வாசிகளின் பெரு மதிப்புக்குரிய குலச்சின்னத்தையும் தான் புண்படுத்திவிட்டதை அவன் அறிந்தான். ஆனால் அவன் வாயிலிருந்து வார்த்தைகள் வெளிவந்து விட்டன. இனி அதற்கு ஒன்றும் செய்ய முடியாது.

ஜென்னை முறைத்துப் பார்த்துவிட்டு முதியவர் கோபத்துடன் சொன்னார்: ‘‘அப்படியானால் புல்லுக்கென்று உயிர் கிடையாது என்று அர்த்தமா? மேய்ச்சல் நிலமென்பது ஓர் உயிர் இல்லையா? இங்கு, புல்லும் மேய்ச்சல் நிலமும்தான் உயிர், பெரிய உயிர். மற்றவை சிறிய உயிர்கள். அவை உயிர் வாழ்வதற்குப் பெரிய உயிரையே சார்ந்திருக்கின்றன. ஓநாய்களும் மனிதர்களும்கூட சிறிய உயிர்கள்தான். புல்லைத் தின்னும் ஜீவன்கள் இறைச்சி உண்ணும் ஜீவன்களை விட மோசமானவை. உன்னைப் பொறுத்தவரை, மான்கள்மீது இரக்கம் காட்ட வேண்டும். புல்மீது இரக்கம் காட்ட வேண்டியதில்லை, அப்படித்தானே? மான்கள் அதிவேகமாகச் செல்லக்கூடிய நான்கு கால்களைக் கொண்டிருக்கின்றன; ஓநாய்கள் அவற்றைப் பிடிப்பதற்கான முயற்சியில், பெரும்பாலான சமயங் களில், சோர்வடைந்து ரத்தம் கக்குகின்றன. மான்களுக்குத் தாக மேற்படுகிறபோது அவை தண்ணீர் குடிக்க நதிக்கு விரைகின்றன. குளிரெடுத்தால் மலையில் ஓர் இதமான இடத்துக்கு ஓடிக் குளிர் காய்கின்றன. ஆனால் புல்? புல் பெரிய உயிர். எனினும் அது மிக எளிதாக சிதையக் கூடிய, மிகப் பரிதாபகரமான உயிர். அதனுடைய வேர்கள் ஆழமற்றவை. அதன் மண் மிக லேசானது. அது ஒரு நிலப் பிரதேசத்தில்தான் வாழ்கிறது என்றபோதிலும் அதனால் ஓட முடியாது. எவரும் அதன்மீது ஏறி மிதிக்கலாம்; உண்ணலாம்; மெல்லலாம்; கசக்கலாம். குதிரை அதன் பெரும் பரப்பில் மூத்திர மடிக்கலாம். அது மணலிலோ, பாறைப் பிளவுகளிலோ முளைத்து வளர்ந்தால் அது இன்னும் குறைந்த நாட்களே உயிர் வாழும். அவை பூப்பதில்லை என்பதால் அவற்றால் தம் விதைகளைப் பரப்ப முடியாது. மங்கோலியர்களாகிய எங்களைப் பொறுத்தவரை, புல்லை விட வேறெதுவும் எங்களுடைய இரக்கத்துக்கு உரியதல்ல. நீ கொலை புரிவது பற்றிப் பேச விரும்பினால், புல் வெட்டும் எந்தவொரு கருவியையும் விட மான்களே அதிக புல்லைக் கொல்கின்றன.

அவை புல்வெளியை மேய்வது கொலையில்லையா? மேய்ச்சல் நிலத்தின் பெரிய உயிரை அது எடுத்துவிடுவதில்லையா? மேய்ச்சல் நிலத்தின் பெரிய உயிரைக் கொன்று விடும்போது, எல்லாச் சிறிய உயிர்களும் அழிக்கப்படுகின்றன. மான்கள் நிகழ்த்தும் ஊறுகள், ஓநாய்கள் நிகழ்த்தும் ஊறுகளை விட மிக மிக அதிகம். மஞ்சள் மான்கள் மிக பயங்கரமானவை; இங்கு வசிக்கும் மக்களுடைய வாழ்க்கையை அவற்றால் அழித்துவிட முடியும்.'' முதியவரின் வைக்கோல் போன்ற குறுந்தாடி, அவர்களுடைய காலடியில் கிடக்கும் மானை விடவும் மோசமாக நடுங்கியது.

முதியவரின் நீண்ட பேச்சில் ஜென் சென் மிகவும் நெகிழ்ந்து போனான். ஒரு போர் முரசைப் போல அது அவனுடைய இதயத்தில் தொடர்ந்து நீடித்தும் வேதனையோடும் ஒலித்துக் கொண்டிருந்தது. விவசாயிகளின் எந்த ஒரு இனத்தையும் விட மேய்ச்சல் நிலவாசிகள் யுத்த தந்திரங்களில் மட்டுமல்லாது பண்புகளிலும் சிந்தனைப் பாங்கிலும் மிகவும் மேம்பட்டவர் களாகத் திகழ்கின்றனர். இந்தத் தொன்மையான தர்க்கம், ஆயிரம் வருடங்களுக்கும் மேலாக, இறைச்சி உண்ணும் விலங்குகளுக்கும் தாவரம் உண்ணும் விலங்குகளுக்குமிடையே தொடர்ந்து நிலவும் மூர்க்கமான மோதல்களின் அடிப்படையை முன்வைத்தது.

முதியவரின் பேச்சானது, அவர் மங்கோலிய மேட்டு நிலத்தில் நின்றுகொண்டு வட சீன சமவெளியை நோக்கிப் பேசுவதாக, வல்லமையோடும் வலிமையோடும் அதிர்வுகளோடும் தெள்ளத்

தெளிவாகவும் நம்பும் விதத்திலும் அமைந்திருந்தது. ஜென், விவாதத்தில் தனித்திறன் பெற்றவன் என்றபோதிலும் எதுவும் பேசவில்லை. ஹேன் சமூகத்தின் விளைநிலக் கலாசார அடிப் படையில் அமைந்த ஜென்னின் உலகப் பார்வை, மேய்ச்சல் நில கலாசாரம் மற்றும் தர்க்கத்தின் முன் நொறுங்கிப்போனது. மக்கள் உயிர் வாழ்வதை விடவும் மேய்ச்சல் நிலமும் இயற்கையும் உயிர் வாழ வேண்டுமென்பதிலும் அதைப் பாதுகாப்பதிலும் நாடோடி மக்கள் மிக கவனமாகவும், 'பெரிய உயிரி'ன் பெறுமதியை உணர்ந்த வர்களாகவும் இருந்தனர். இதற்கு மாறாக, வேளாண்மை மக்கள் 'சிறிய உயிர்'களைப் பாதுகாப்பவர்களாகவும், மக்களே மிகவும் பெறுமதியானவர்கள், அவர்களைப் பாதுகாப்பதே முக்கியமானதென்று

கருதுபவர்களாகவும் இருந்தனர். ஆனால் பில்ஜி சொன்னதைப் போல, பெரிய உயிர் இல்லாவிட்டால் சிறிய உயிர்கள் அழிந்துவிடும். ஜென் இதைத் திரும்பத் திரும்ப தனக்குள் சொல்லிக்கொண்டான். அது ஏதோ ஒருவகையில் அவனுக்கு வலியேற் படுத்தியது. வரலாறு நெடுகிலும் நாடோடி மக்கள், வேளாண்மை மக்களைப் பெரிய அளவில் படுகொலைகள் செய்திருப்பது அவனுடைய நினைவுக்கு வந்தது. அவை, பயிர் நிலங்களை மீண்டும் புல்வெளிப் பிரதேசமாக மாற்றுவதற்காக மேற்கொள்ளப்பட்ட நடவடிக்கைகள். இத்தகைய நடவடிக்கைகளைப் பிற்போக்கானது, பின்னோக்கிச் செல்வது, காட்டுமிராண்டித்தனமானது என்றே அவன் எப்போதும் கருதி வந்தான். ஆனால், முதியவர் பெரிய மற்றும் சிறிய உயிர் என்ற அளவுகோலை முன்வைத்துக் குற்றம் சாட்டியதைத் தொடர்ந்து, அவன் தன்னுடைய நிலைப்பாட்டை மாற்றிக்கொள்ள வேண்டிய கட்டாயம் ஏற்பட்டுவிட்டது. மேலை நாட்டினரும், கீழை நாட்டினரும் நிலத்தை எப்போதுமே மனிதத்தின் தாய் என்றே குறிப்பிடுகிறார்கள். அப்படியானால், அன்னை பூமியைக் காயப்படுத்தும் ஒருவரை எப்படி நாகரிகம் அடைந்தவராகக் கருத முடியும்?

‘‘பிறகு ஏன் இந்த மானை விடுவிப்பது உங்களுக்கு அவ்வளவு முக்கியமானதாகப் படுகிறது’’ என்று அச்சத்துடன் கேட்டான்.

‘‘மான்கள் ஓநாய்களைக் கவர்கின்றன‘’ என்றார் முதியவர். ‘‘ஓநாய்கள் மான்களை வேட்டையாடுவதால் ஆடுகள், மாடுகள் மற்றும் குதிரைகளின் இழப்பு குறைகிறது. மேலும் மான்கள் மேய்ப்பர்களுக்கு உபரி வருமானம் அளிக்கின்றன. உண்மையில், அநேக மேய்ப்பர்கள், தங்களுக்கான குடில்கள் கட்டுவதற்கும், திருமணம் முடிப்பதற்கும், குழந்தைகள் பெற்றுக்கொள்வதற்கும் மான்களை வேட்டையாடுவதன் மூலம் கிடைக்கும் வருமானத்தையே நம்பியிருக்கிறார்கள். மங்கோலியர்களில் பாதி பேர் வேட்டைக்காரர்கள். நாங்கள் வேட்டையாடாவிட்டால், எங்களுடைய வாழ்க்கை உப்பில்லாத இறைச்சி போல ருசியற்றதாகி விடும். எங்களால் வேட்டையாட முடியாவிட்டால், நாங்கள் பித்துப் பிடித்தவர்கள் போல் ஆகிவிடுவோம். பெரிய உயிரான மேய்ச்சல் நிலத்தை வேட்டை பாதுகாக்கிறது என்பதும் அதற்கொரு காரணம். இறைச்சி சாப்பிடும் விலங்குகளை வேட்டையாடுவதை விட, எங்கள் புல்லைச் சாப்பிடும் விலங்குகளையே நாங்கள் மிக அதிகமாக

வேட்டையாடுகிறோம்.'' முதியவர் பெருமூச்சு விட்டார். ''சீனர்களாகிய உங்களால் புரிந்துகொள்ள முடியாத பல விஷயங்கள் இருக்கின்றன. நீ புத்தகங்கள் படிக்கிறாய்; ஆனால் அவற்றில் காணப்படுவதெல்லாம் போலியான தர்க்க ஞானம். சீனர்கள், சீன நலனை முன்வைத்தே புத்தகங்கள் எழுதுகிறார்கள். எங்களால் புத்தகங்கள் எழுத முடியாது என்பதால் நாங்கள் பாதிக்கப்படுகிறோம். நீ ஒரு மங்கோலியனாக மாற முடிந்து, நமக்காகப் புத்தகங்கள் எழுதினால் அது மிகவும் அருமையான விசயமாக இருக்கும்.''

அவன் குழந்தையாக இருக்கும்போது படித்த தேவதைக் கதைகள் அனைத்தையும் திரும்பவும் நினைத்துப் பார்த்தான். அவற்றில் 'சாம்பல் ஓநாய்கள்' பேராசை கொண்ட, குரூரமான, முட்டாள் ஜீவன்களாக சித்தரிக்கப்பட்டிருக்கும். அதேசமயம், நரிகள் தந்திரமிக்கவையாகவும் விரும்பத்தக்கவையாகவும் சித்தரிக்கப்பட்டிருக்கும். இயற்கையில் எந்தவொரு வனவிலங்கும் சாம்பல் ஓநாய்களை விட மிக உயர்வாகவும் முழு நிறைவு பெற்றதாகவும் பரிணாம வளர்ச்சி கொண்டிருக்கவில்லை என்பதை அவன் மேய்ச்சல் நிலத்துக்கு வரும்வரை அறிந்திருக்கவில்லை. புத்தகங்கள், குறிப்பாக தேவதைக் கதைகள், மக்களுக்குத் தவறான வழிகாட்டல்களையே புரிந்திருக்கின்றன.

மான் எழுந்து நிற்க முதியவர் உதவி செய்தார். சில செடிகளின் நுனிகள் நீட்டிக்கொண்டிருந்த இடத்தில் மானைப் பனிக்குள் இறங்கும்படியாகத் தள்ளினார். கம்பளி விரிப்பை ஜென் அவசரமாக இழுத்தான். தள்ளாட்டத்துடன் சில எட்டுகள் எடுத்துவைத்த மான், மற்ற மான்கள் ஓடிச் சென்ற பாதையைக் கண்டதும், பின்னால் திரும்பிப் பார்க்காமல் மேட்டை நோக்கி ஓடியது. மலைகளில் அது வேகமாக மறைந்துபோனது.

பட்டுவும் கஸ்மாயும் உயிரோடிருந்த ஒரு மானைக் கொண்டு வந்தார்கள். பாதி வளர்ந்திருந்த குட்டி மான். அதைத் தன் கையில் வைத்திருந்த கஸ்மாய், ''கருணை, கருணை'' என்று தணிந்த குரலில் சொன்னாள். அதைப் பனியில் இறக்கிவிட்டு, அதன் பிட்டத்தில் ஒரு தட்டுத் தட்டி மேட்டை நோக்கி ஓடச் செய்தாள்.

ஜென், பெருவிரல் உயர்த்தி கஸ்மாயைப் பாராட்டினான். அவள் சிரித்தபடியே சொன்னாள்: ''அதனுடைய அம்மா பனியில் ஒரு குழிக்குள் விழுந்துவிட்டது.

குட்டி அதை விட்டு விலக மனமில்லாமல் அதைச் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருந்தது. அதைப் பிடிக்க நாங்கள் பெரும் பாடு பட்டோம். கடைசியில் எங்கள் தடிகளின் மூலம் அதை விழச் செய்து பிடித்தோம்.''

மற்ற பனிப் படகுகளும் நெருங்கி வந்தன. பனி ஏரியில் பிழைத்திருந்த மான்கள், மலை மேட்டை நோக்கி ஓடிச் சென்று மறைந்துபோயின. ''அவை இங்கிருந்து ஏதாவது கற்றுக் கொண்டிருக்கும். வரும் காலத்தில ஓநாய்களால் அவற்றைப் பனி ஏரிக்குள் வீழ்த்த முடியாது'' என்றார் முதியவர்.

# 4

இறுதியாக, புத்தாண்டுக்கான உணவுப் பொருள்களை மக்கள் மனம் நிறையும் வகையில் அடைந்தனர். பனி ஏரியின் மீது கடுமையான குளிர் காற்று வீசியதில் மேற்தளப் பனி மிகவும் கடினமாக ஆகியது. முதியவர் வேட்டைக்காரர்களிடம், "வேகமாக நகரும்படி டெஞ்ஞர் வலியுறுத்துகிறது" என்றார். ஆக, ஆண்கள் அவரவரர் இடங்களுக்கு விரைந்தனர். வேட்டைக் களம் மறுபடியும் உணர்ச்சிக் கொந்தளிப்புக்கு உள்ளாகியது. பில்ஜி, ஜென் சென்னைக் கூட்டிக்கொண்டு, பனியில் சராசரி அளவுள்ள பள்ளத்தை நோக்கிச் சென்று, அந்த இடத்தை அடைந்ததும் நின்றார்கள். "பெரிய பள்ளங்களைத் தேடிப் போக வேண்டாம்" என்றார் முதியவர். "ஏனென்றால் அதனுள் பொதுவாக ஏழெட்டு மான்கள் விழுந்து கிடக்கும். அவை ஒன்றின் மீது ஒன்று குவிந்து கிடப்பதால், அவற்றிலிருந்து கிளம்பும் சூட்டால் அவை உடனடியாக உறைந்துவிடுவதில்லை. அவை உப்பிப் போய், கால்கள் விறைத்துவிட்டிருக்க, அவற்றின் அடிவயிற்றுத் தோல் கருஞ்சிவப்பாக மாறியிருக்கும். அவை கடைசியாக உறையும் போது அவற்றின் பாதி இறைச்சி கெட்டுப் போயிருக்கும். ஆக, உனக்குக் கிடைப்பது, பாதிக்கு மேல் உணவுக்கு லாயக்கற்ற இறைச்சியைக் கொண்ட உறைந்த மான். பொருள் கொள்முதல் நிலையத்தில், ஒரு முழு மானுக்குரிய விலையில் பாதிக்கும் குறைவாகத்தான் உனக்குக் கிடைக்கும். தோலுக்குரிய பணம் மட்டுமே கிடைக்கும். அதன் இறைச்சிக்கு சல்லிக் காசு கிடைக்காது. ஆனால் அழுகிய இறைச்சி என்றால் ஓநாய்களுக்கு மிகவும் இஷ்டம். பனிக் காலம் முழுவதும் இங்கு புதைந்து கிடக்கும் மான்கள் பற்றிய எண்ணம் அவற்றின் மனங்களில் நிறைந்திருக்கும். ஆக, ஓநாய்களுக்குப் பிடித்த உணவை நாம் ஓநாய்களுக்கே விட்டு விடலாம்."

முதியவர் கம்பளி விரிப்பில் படுத்துக்கொண்டு, கொக்கி பொருத்தப்பட்ட தடியை பள்ளத்துக்குள் தள்ளினார். அநேகமாக பள்ளம் ஆறடி ஆழமிருக்கும். அதனுள் தடியை விட்டுத் துழாவிக் கொண்டே இருந்தார். திடீரென ஒரு துள்ளலுடன் அதைமேல்நோக்கி இழுத்தார். "ஒன்று மாட்டிக்கொண்டு விட்டது" என்று ஜென்னிடம் சொன்னார் முதியவர். "மேலே இழுப்பதற்கு உதவி செய்." அவர்கள் இருவரும் சேர்ந்து கொஞ்சம் கொஞ்சமாய் மேலே இழுத்தார்கள்.

அது மேலே வரும்போது விலகும் பனி மீண்டும் இடைவெளியை நிரப்புவதற்குத் தோதுவாக அவர்கள் விட்டு விட்டு இழுத்தார்கள். கம்பளி விரிப்பின்மீது நின்று கொண்டு குனிந்தவாறு தடியை மேலே இழுத்தார்கள். இறந்துபோன மானின் பனி மூடிய தலை மேற்தளத்தை உடைத்துக் கொண்டு வந்தது. கொக்கி அதன் தொண்டையில் மாட்டியிருந்தது. அதனால் தோலுக்கு எந்த சேதாரமும் இல்லை. ஜென் நன்றாகக் குனிந்து, அதன் தலையைப் பிடித்து மேலே இழுத்து, கம்பளி விரிப்பின்மீது போட்டான். அதன் எடை சுமார் 50 அல்லது 60 கிலோ இருக்கும். அது முற்றிலுமாக உறைந்துவிட்டிருந்தது. அதன் அடிவயிறு உப்பவுமில்லை; கருஞ்சிவப்பாக ஆகவுமில்லை. ‘‘இதுதான் சரியான மாதிரி’’ என்றார் முதியவர். ‘‘இதற்கு அதிகபட்ச விலை கிடைக்கும்.’’

‘‘அங்கு கீழே இன்னும் சில இருக்கின்றன’’ என்று மூச்சை ஆழமாக இழுத்தவாறு அவர் சொன்னார். ‘‘நீ ஒன்றை மாட்டி இழுக்க முயற்சி செய். கிணற்றடியில் கிடக்கும் வாளியை மாட்டி இழுப்பது போலத்தான் இதுவும். வாகான இடம் கிடைத்ததும் மாட்டி, முழு பலத்தோடு மேலே இழுக்க வேண்டும். தோல் சேதாரம் அடைந்து விலை குறைந்து போகாத வகையில் சரியான இடத்தில் கொக்கியை மாட்ட வேண்டும்.’’

ஜென் ஆர்வத்தோடு ஏற்றுக்கொண்டு, பள்ளத்திற்குள் கொக்கியைத் தள்ளித் துழாவினான். இரண்டு அல்லது அதற்கும் கூடுதலாக மான்கள் அதனுள் கிடப்பதை உணர்ந்தான்.

கொக்கியைத் தொடர்ந்து நகர்த்தியபடி, ஒன்றின் வடிவத்தை அறிய முற்பட்டான். கொக்கி, அதன் தொண்டையைத் தடவுவதை உணர்ந்ததும், ஒரு இழு இழுத்துக் கொக்கியைத் தொண்டையில் சொருகினான். முழு பலத்தையும் செலுத்தி மேலே இழுத்தான். கடைசியில் ஒரு வழியாக, மங்கோலிய மேய்ச்சல்நிலப் பனி ஏரியிலிருந்து ஒரு Ôபெரிய மீனைÕ அவன் பிடித்துவிட்டான். அதுவும்கூட ஐம்பது அல்லது அறுபது கிலோ இருக்கும். அதி விரைவாகச் செல்லக்கூடிய குதிரையையும் ஓட்டத்தில் விஞ்சக் கூடிய விலங்கு. முழு பரவசத்தோடு, யாங் கீயைப் பார்த்து உரக்கக் கத்தினான்: ‘‘நான் ஒன்றைப் பிடித்துவிட்டேன். மிகப் பெரியது. பார், பார்?’’

‘‘உன்னால் இங்கே வர முடியுமா? வா, நான் அதைப் பார்க்க வேண்டும். அப்பா கொஞ்சம் ஓய்வெடுக்கட்டும்’’ என்றான் யாங் கீ.

நிறைய மான்கள் ஏகப்பட்ட இறைச்சியோடும், சேதாரமில்லாத தோலோடும் ஒன்றை அடுத்து ஒன்று என வெளிவந்து கொண்டிருந்தபோது ஏரியிலும், பனிச் சரிவிலும் உற்சாகக் கூச்சல் மேலெழுந்தது. பனித் தெப்பங்கள் கரைக்கு வந்தபடியிருந்தன. மிக வேகமாகச் செயல்படும் சிலர் ஏற்கெனவே இரண்டாவது சேகரிப்புக்குச் சென்றுவிட்டிருந்தனர். பட்டு, கஸ்மாய் மற்றும் லாம்ஜாவ் இருந்த தெப்பம்தான் மிகவும் திறமையானது. அவர்கள் தவறே நேராமலும் அசாத்திய வேகத்திலும் அதிக அளவில் மான்களை வெளியே எடுத்தனர். அவர்கள் நல்ல விலை பெறாத மான்களை வெளியே இழுத்தபோது _ அதாவது, சிறியவை அல்லது அடிவயிறு உப்பிய அல்லது கருஞ்சிவப்பு வண்ணமாக மாறியவை அவற்றை மீண்டும் காலியான பள்ளத்தில் தூக்கிப் போட்டனர். அமோகமான பலன் கிட்டியது. பொதுவாக, இளவேனிற் பருவ காலத்தில் ஆட்டுக் குட்டிகள் பிறக்கும் போதுதான் இப்படியான பலன் அமையும்.

ஜென்னும் முதியவரும் தங்கள் தெப்பத்தை செலுத்தியவாறு, இரண்டு பெரிய மான்களுடன், கரை நோக்கி வந்தார்கள். யாங் கீயும் பாயரும் பில்ஜி இறங்குவதற்கு உதவினார்கள். மிதவையிலிருந்து இரண்டு மான்களையும் ஜென் கீழே தள்ளினான். நான்கு ஆண்கள் அவற்றை இழுத்துக்கொண்டு அவர்களுடைய வண்டிகளை நோக்கிச் சென்றார்கள். அங்கு அவர்களுடைய இரண்டு வண்டிகளிலும் பெரிய மான்கள் குவிக்கப்பட்டு அவை ஏற்கெனவே நிரம்பியிருந்ததை ஜென் பார்த்து, ஏன் இப்படி என்று கேட்டான். “நானும் பாயரும் ஒரு வண்டியை நிரப்பினோம். மீதியெல்லாம் மற்ற குடும்பத்தினர் சிலர் நமக்களித்திருக்கும் பரிசு. ஓலோன்புலாக்கின் வழக்கம் இது என்று அவர்கள் சொன்னார்கள்” என்றான் யாங் கீ. அவன் சிரித்தான். “அப்பாவை சதா சுற்றிக்கொண்டு திரிந்தது நல்ல பலன் தந்திருக்கிறது.”

பில்ஜியும் சிரிப்பில் கலந்துகொண்டார். “நீங்கள் மேய்ச்சல் நிலத்தின் குடிமகன்களும் கூட” என்றார். “அதனால் எங்கள் நடைமுறைகளைத் தெரிந்துகொண்டு அதற்கேற்ப நடந்துகொள்ளுங்கள்.” மிகவும் களைப்படைந்திருந்த முதியவர் வண்டியின் ஓரமாக உட்கார்ந்து தன் பைப் மூலம் புகை பிடித்தார். “நீங்கள் இருவரும் போங்கள். ஆனால் கவனம். ஒருவேளை உள்ளே விழுந்துவிட்டால், உங்கள் கால்களை அகற்றி,

கைகளை அசைக்காமல், மூச்சை உள்ளிழுத்து இருங்கள். அப்படிச் செய்தால் வெகு ஆழத்துக்குள் போக மாட்டீர்கள். தெப்பத்தில் இருப்பவர், கொக்கியை இறக்கி அவரை மேலே தூக்குங்கள். அப்படிச் செய்யும்போது கொக்கியை முகத்தில் மாட்டாமல் பார்த்துக்

கொள்ளுங்கள். அது உங்கள் திருமண வாய்ப்புகளைக் குலைத்து விடும்.'' மூச்சு முட்டும்படியாகச் சிரித்தார் முதியவர்.

ஜென்னும் யாங்கும் மனக் கிளர்ச்சியோடு கம்பளித் தெப்பத்தை நோக்கி நடந்தார்கள். கரை வழியாக அவர்கள் ஆழமான பனிப் பகுதியை நெருங்கியபோது, பனி ஏரியின் ஆழ்பகுதிக்குச் செல்லக் கூடியதாகக் கால்வாயைப் போன்ற ஒரு குழியை ஜென் கண்டான். ''அப்பா நமக்குப் பக்கத்தில் இருந்ததால் அப்போது நான் எதுவும் சொல்ல விரும்பவில்லை. இந்தக் குழி நானும் பாயரும் சேர்ந்து தோண்டியதுதான். இங்குதான் அந்தப் பெரிய மானை நாங்கள் கண்டோம். பாயர் சின்னப் பையனாக இருக்கலாம்; ஆனால் பெரிய தைரியசாலி. அவன் உங்களை அங்கு பார்த்தபோது தன் மயிர் அங்கியைக் கழற்றி, பனிக்குள் விழாமல் ஊர்ந்து சென்றான். ஐந்து அல்லது ஆறு அடி தூரம் சென்றதற்குள் அவன் ஒரு பள்ளத்தைப் பார்த்தான். பின்னர் திரும்பவும் அவன் மேலே வந்தான். நாங்கள் இருவருமாய் பனியில் கால்வாய் தோண்டினோம். மானை அடைய நாங்கள் அதிக தூரம் தோண்ட வேண்டியிருக்கவில்லை. அவன் கீழே சென்று அதன் ஒரு காலைச் சுற்றிக் கயிற்றால் கட்டினான். அவன் திரும்ப மேலே வந்ததும் நான் பனிக்கு வெளியே அதை இழுத்தேன். அவன் கொஞ்சமும் பயப்படவில்லை. அவன் பனிக்குள் புதைந்துவிடுவானோ என்று நான்தான் பயந்துகொண்டிருந்தேன்.''

''எனக்கு அது ஒன்றும் ஆச்சரியம் தரவில்லை'' என்றான் ஜென். ''தன்னுடைய வெறும் கைகளால் ஓநாயை நகர முடியாதபடி பிடித்து வைத்துக்கொண்டிருக்கப் பயப்படாத ஒருவன், பனியிலுள்ள ஒரு குழிக்கு ஒருபோதும் பயப்பட மாட்டான். ஒரு மங்கோலியச் சிறுவன் எத்தகைய காரியத்தைச் செய்யக் கூடியவன் என்பது இப்போது உனக்குத் தெரிந்திருக்கும். அவன் பெரியவனாகும்போது எப்படி இருப்பான் என்பதைக் கொஞ்சம் யோசித்துப் பார்.''

“பனிக்குள் போக வேண்டாம் என்று நான் அவனிடம் சொன்னபோது, அவனுக்கு ஏழு வயது இருக்கும்போது ஓநாயின் மறைவிடம் ஒன்றுக்குள் ஊர்ந்து சென்று, அங்கிருந்த குட்டிகளைத் திருடிக்கொண்டு வந்தேன். இந்தப் பனிக்குகை எம்மாத்திரம் என்றான். நீ ஒரு ஓநாய்க் குட்டியை வளர்க்க விரும்புவதாகச் சொல்லியிருக்கிறாய் தானே? பாயரைக் கூட்டிக்கொண்டு போய் ஒன்றை எடுத்து வா” என்றான் யாங் கீ.

“எனக்கு அப்படியேதுமில்லை. என்னால் செய்ய முடிந்ததெல்லாம், இந்த மங்கோலியர்களுக்குப் பின்னிருந்து அவர்களை வியந்து பாராட்டுவது மட்டும்தான்.”

இரண்டு மாணவர்களும் மங்கோலியப் பனித் தெப்பத்தை செலுத்திக்கொண்டிருந்தபோது யாங்கின் முகம் சந்தோஷத்தில் மலர்ந்திருந்தது. “மேய்ச்சல் நிலத்தில் வேட்டையாடுவதென்பது எவ்வளவு மகத்தானது! என்னால் நம்பவே முடியவில்லை. ஆடுகளை மேய்ப்பது ரொம்பவும் சலிப்பூட்டுவது. ஓநாய்கள் உள்ளே வந்தவுடன் நம் வாழ்க்கை சுவாரஸ்யமாகவும் விறுவிறுப்பாகவும் ஆகிவிட்டது.”

“இது மிகவும் பரந்துபட்ட, மக்கள் ஆங்காங்கே வசிக்கும், நெருக்கடியில்லாத பிராந்தியம்” என்றான் ஜென். “சமயங்களில் சில மைல் தூரங்களுக்கிடையே ஒரு குடில்கூட இருப்பதில்லை. ஓநாய்களும் வேட்டையும் இல்லாவிட்டால் இந்த வாழ்க்கை அர்த்தமற்றதாகிவிடும். இந்த மக்கள் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக ஓநாய்களைப் போற்றிப் பாராட்டுகிறார்ககள் என்பதாக நான் வாசித்தபோது வெகுவாகக் கிளர்ச்சியடைந்தேன்.”

இரு பாதியாக அமைந்த கம்பளித் தெப்பத்தினை மிக விரைவாக மாற்றி மாற்றி பனி ஏரியில் அவர்கள் சென்று கொண்டிருந்தார்கள். விளைவாக, யாங்கும் ஒரு மானை மாட்டி மேலே இழுத்தான். மிகுந்த பரவசத்தில் திளைத்தான் யாங். உறைந்த மானைத் தன் கையால் பலமாகத் தட்டியபடி, “மற்றவர்கள் இப்படி மான்களை மாட்டி அவற்றை மேலே இழுத்தபோது நான் கனவு காண்பதாக நினைத்தேன். அது கனவில்லை என்பது இப்போது தெளிவாகத் தெரிகிறது. இது ஒரு அற்புதம். எல்லா நன்றிகளும் ஓநாய்களுக்கே. ஓநாய்கள்! ஓநாய்கள்!”

யாங் கொக்கித் தடியை ஜென்னுக்குக் கை மாற்ற மறுத்தான்.

ஜென் அவர்களுடைய பாதுகாப்பு குறித்து மிகவும் கவனத்தோடு இருந்தான். எனினும், அவனோடு சச்சரவிடுவதற்குப் பதிலாக, மானை மேலே இழுப்பதற்குத் துணையாக இருப்பதில் ஆறுதலடைந்தான். மொத்தத்தில் மூன்று மான்களை யாங் மாட்டி இழுத்திருந்தான். இந்தக் காரியத்தில் அவன் முழுவதுமாகத் தன் வசமிழந்து ஆட்பட்டு விட்டிருந்தான். அவன் கரைக்குத் திரும்ப விரும்பவில்லை. அவன் குறும்புப் புன்னகையோடு, "நாம் இன்னும் கொஞ்சம் வெளியே எடுத்து, எல்லாவற்றையும் மொத்தமாகக் கொண்டு போகலாம்" என்றான். "அப்படிச் செய்தால் நாம் திறமைசாலிகளாகக் கருதப்படுவோம்." மறுயோசனை எதுவும் செய்யாமல் உறைந்த மான் உடல்களை இறுகிய பனியின் மீது போட்டான்.

கரையில், பில்ஜி பைப் நிறைய புகையிலையை முடித்திருந்தார். அங்கிருந்த மக்களிடம் ஒரு பரந்த இடத்தை சுத்தப் படுத்தும்படி கூறினார். அங்கு ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் வந்திருந்த பெண்கள், உடைந்த பலகைகள், மர அச்சுகள் மற்றும் நெருப்பு உண்டாக்குவதற்கான பொருள்களைக் குவித்திருந்தனர். பின்னர், அந்த இடத்தில் ஒரு பழைய கம்பளித் துணி விரிக்கப் பட்டு, அதன்மீது பாட்டிலில் அடைக்கப்பட்ட பாலிட்ட தேனீர் மற்றும் மது, சமையல் பாத்திரங்கள், உப்புப் பேழை ஆகியன நிரப்பப்பட்டன. சஞ்சாயும் மற்றுமொரு சிறுவனும், கால்கள் ஒடிந்த, அரைகுறை உயிரோடிருந்த ஒரு ஜோடி மான்களை சமையலுக்காக வெட்டினார்கள். ஓலோன்புலாக் மக்கள், உயிரோடு வெட்டப்பட்ட விலங்குகளின் இறைச்சியையே சாப்பிடுவார்கள். வேட்டைக்காரர் களுக்கான மதியச் சாப்பாடு தயாராகத் தொடங்கிவிட்டது. ஓநாய்கள் தின்றுவிட்டு விட்டுச் சென்றிருந்த மிச்சங்களைச் சாப்பிட்டு வயிறு நிறைந்திருந்த நாய்கள், தோலுரிக்கப்பட்டு, தீயில் வாட்டப்பட்டும், நீரில் கொதித்தும் கொண்டிருந்தவற்றை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தன. பெண்களும் குழந்தைகளும் பில்ஜியும் பெரிய துண்டங்களை உப்பு தடவி உலோக மற்றும் மர முள்கரண்டிகளில் சொருகி பெரு நெருப்பின் சுடர்மீது அவற்றை வைத்தனர். பின்னர், அவர்கள் இறைச்சியை உண்ணவும் தேநீர் அருந்தவும் அமர்ந்தனர். மது, இறைச்சி,

தேநீர் இவற்றின் கலவை யான வாசனை ஏரியைச் சுற்றிலும் பரவி, வேட்டைக்காரர்களை உண்ணவும் ஓய்வெடுக்கவும் ஈர்த்தது.

நண்பகலுக்குள் எல்லாத் தெப்பங்களும் இரண்டு அல்லது மூன்று தடவை கரைக்கு வேட்டையாடிய விலங்குகளைக் கொண்டு வந்து சேர்ந்தன. ஒவ்வொரு குடும்பத்தின் வண்டியும் ஆறு அல்லது ஏழு உறைந்த மான்களால் நிரம்பியிருந்தன. நன்றாகச் சாப்பிட்டு முடித்திருந்த பெண்களிடமும் குழந்தைகளிடமும் தெப்பங்களை ஆண்கள் ஒப்படைத்தனர். அவர்கள் அவற்றின் மூதேறிப் பனி ஏரிக்குள், மேலும் விலங்குகளை எடுத்துக்கொண்டு வருவதற்காகச் சென்றனர்.

உயிரோடு வெட்டப்பட்டு, தீயில் வாட்டப்பட்ட மான் கறிதான் மங்கோலிய மேய்ச்சல் நிலத்தின் சுவையான உணவு. அதிலும் குறிப்பாக, வேட்டைக்குப் பின், அந்த இடத்திலேயே வாட்டப்பட்டு உண்ணப்படுவது இன்னும் பிரமாதம். புதிதாக வேட்டைக்காரர்களாக அங்கீகரிக்கப்பட்ட ஜென் சென்னும் யாங் கீயும் விருந்தில் கலந்துகொள்ள அழைக்கப்பட்டனர். வேட்டை தந்த சிலிர்ப்போடு முழு அசதியும் சேர்ந்து ஜென்னுக்கு நல்ல பசி ஏற்பட்டிருந்தது. எந்த ஒரு மங்கோலிய மேய்ப்பனை விடவும் இந்த சம்பவத்தை அவன் வெகுவாகக் கொண்டாடினான். அது மனிதர்களுக்கான ஒரு திறந்தவெளி விருந்து; ஓநாய்க் கூட்டத்தின் திறந்தவெளி விருந்தைத் தொடர்ந்து வந்தது. ஒரு மங்கோலியனைப் போலவே சுதந்திரமாகவும் ஆற்றலோடும் ஜென்னும் யாங்கும் தங்களை அத்தருணத்தில் உணர்ந்தார்கள். மிகுந்த ஆர்வத்தோடும் உணர்ச்சிப் பெருக்கோடும் குடித்துக்கொண்டும் சாப்பிட்டுக்கொண்டும் பாடிக்கொண்டுமிருந்த சக வேட்டைக்காரர்களிட மிருந்து பிளாஸ்குகளை உத்வேகத்தோடு பிடுங்கி வாய் நிறைய மதுவை நிரப்பி விழுங்கினார்கள்.

பலமாக சிரித்தபடியே பில்ஜி, ‘‘இன்னும் ஒரு வருசம் கழித்து உங்கள் பெற்றோர்களைப் பார்க்க பீஜிங் போவதற்குப் பயமாக இருக்கிறது. ஏனென்றால் அதற்குள் உங்களை மங்கோலியக் காட்டு வாசிகளாக நான் மாற்றிவிட்டிருப்பேன்’’ என்றார்.

ஜென், தன் கையிலிருந்த பிளாஸ்கைத் தலைக்கு மேலாகத் தூக்கிப் பிடித்தபடி அடித்தொண்டையிலிருந்து, ‘‘அப்பா’’ என்று மூன்று முறைக் கத்தி, ‘‘பெரு மதிப்பிற்குரிய பழங்குடித் தலைவருக்கு’’ என நலம் கூறினான்.

அவனுடைய பிளாஸ்கிலிருந்து முதியவர் மூன்று முறை மதுவைக் குடித்து, ‘‘மினிகூ, மினிகூ, மினிஷாய்கூ (என் குழந்தையே, என் குழந்தையே, என்னருமைக் குழந்தையே)’’ என தன் உணர்ச்சியை வெளிப்படுத்தினார்.

பட்டு தலை சுற்றுகிற அளவு குடித்துவிட்டு, ஜென்னின் பின்னால் ஒரு தட்டு தட்டினான். ‘‘நீ... நீ பாதி மங்கோலியன் தான்... நீ.... நீ எப்ப... ஒரு மங்கோலியப் பெண்ணை கல்யாணம் செய்கிறாயோ... எப்ப... நீ ஒரு மங்கோலியக் குழந்தைக்கு அப்பாவாகிறாயோ... அப்ப... அப்பதான் நீ ஒரு உண்மையான மங்கோலியன். நீ... நீ ரொம்ப நோஞ்சானாக இருக்கிறாய். சரியில்லை... இது பத்தாது... மங்கோலியப் பெண்கள்... போர்வைக்கு அடியில்... உன்னை ரொம்ப வேலை வாங்குவார்கள்... ஓநாயை விட மோசமாக... ஆமாம்... ஓநாய்கள். மங்கோலிய ஆண்கள்... நாங்கள் எல்லோருமே அவர்களைப் பார்த்து ஆட்டைப் போல பயந்து சாகிறோம்...’’

‘‘ராத்திரியில் ஆண்கள் ஆடுகள், பெண்கள் ஓநாய்கள். அதிலும் குறிப்பாக, கஸ்மாய்’’ என்று ஒத்தூதினான் சஞ்சாய்.

வேட்டைக்காரர்கள் எல்லோருமே சத்தமாக சிரித்தார்கள்.

லாம்ஜாவ், யாங்கை ஒரு கையால் சுழற்றி பனியோட்டத்தில் எறியுமளவுக்கு மிகுந்த உத்வேகத்துடன் காணப்பட்டான். ‘‘நீ எப்ப... எப்ப நீ எனக்கு இப்படி செய்ய முடியுதோ அன்றைக்குத்தான் நீ மங்கோலியன்.’’ யாங், லாம்ஜாவ்வைப் பற்றியிழுத்து தரையில் வீழ்த்த முயற்சித்தான். ஆனால் லாம்ஜாவ் மூன்று முறை யாங்கை சுழற்றி எறிந்து தலை குப்புற விழச் செய்தான். லாம்ஜாவ் சிரித்தான். ‘‘நீங்கள்... ஹேன் சீனரான நீங்கள் புல் தின்பவர்கள், ஆடுகளைப் போல. நாங்கள் மங்கோலியர்கள் இறைச்சி உண்பவர்கள், ஓநாய்களைப் போல.’’

யாங், அவனுடைய ஆடைகளில் தட்டியிருந்த பனியைத் தட்டியவாறே சொன்னான்: ‘‘நீ கொஞ்சம் பொறுத்திரு. அடுத்த வருசம் நான் பெரிய எருது ஒன்றை வாங்கப் போகிறேன். அதன் ஒவ்வொரு துண்டையும் நானே சாப்பிடப் போகிறேன். உன்னை விட ஒரு பிடி உயரமாக வளர நான் திட்டமிட்டிருக்கிறேன். அதன் பிறகு நீ ஒரு ஆட்டைப் போல் ஆகிவிடுவாய்.’’

“சரிதான்.” மற்ற வேட்டைக்காரர்கள் அதை ஆமோதிப்பது போல் சப்தமிட்டார்கள். “சரியான பதிலடி.”

மேய்ச்சல்நில மங்கோலியர்கள், இறைச்சி சாப்பிடுவதில் கொண்டிருக்கும் திறனைக் காட்டிலும் குடிப்பதில் அதிக திறன் கொண்டவர்கள் என்பதாகவே அறியப்பட்டிருக்கிறார்கள். சில சுற்றுகளுக்குப் பிறகு, எல்லா பிளாஸ்குகளும் காலியாகி விட்டதைக் கவனித்த யாங், லாம்ஜாவ்வை நோக்கி தைரியமாக சவால் விட்டான். “நீ மற்போரில் என்னை ஜெயித்திருக்கலாம். ஆனால் யார் அதிகம் குடிக்கிறார்கள் என்று பார்ப்போமா.”

“நீ நரி போல் தந்திரம் பண்ணுகிறாய், அப்படித்தானே. நல்லது. ஆனால் இங்கு, நரிகளைக் காட்டிலும் ஓநாய்களே தந்திரமிக்கவர்கள். கொஞ்சம் பொறு. நான் மதுவுடன் வருகிறேன்.” அவன் குதிரை நின்றிருந்த இடத்துக்கு ஓடிச்சென்று சேணப் பையிலிருந்து ஒரு பாட்டில் மதுவையும் இரண்டு கோப்பைகளையும் எடுத்தான். யாங்கிற்கு முன்னால் அந்த பாட்டிலை ஆட்டியபடியே, “நான் இதை… இதை விருந்தினர்களுக்காக சேமித்து வைத்திருந்தேன்” என்றான். “ஆனால் இப்போது உன்னை தண்டிப்பதற்கு இதைப் பயன்படுத்தப் போகிறேன்.”

“தண்டி. அவனுக்கு தண்டனை கொடு. அவனுக்கு இந்த தண்டனை வேண்டியதுதான்.” வேட்டைக்காரர்கள் சப்தமிட்டார்கள்.

யாங் கீ, சங்கடமான புன்னகையோடு, “இந்த நரி, ஓநாய்க்கு நிகரில்லை போல் தோன்றுகிறது. பரவாயில்லை. நான் தண்டனையை ஏற்றுக்கொள்கிறேன்” என்றான்.

“கேள்… கவனமாகக் கேள்… எங்களுடைய நடைமுறை களைப் பின்பற்றி நீ… நீ நான் எவ்வளவு கோப்பை குடிக்கச் சொல்கிறேனோ… அவ்வளவு குடிக்க வேண்டும். ஒருமுறை நானே தவறாகச் சொல்லிவிட்டதால், ஹேன் மற்றும் மங்கோலிய மரபுகளை அறிந்த ஒரு பத்திரிகையாளன் என்னைவிட அதிகமாகக் குடித்துவிட்டான். இம்முறை உன்னைத் தோற்கடிக்காமல் விட மாட்டேன். ஒரு கோப்பையில் மதுவை ஊற்றியவாறு, “வானம்பாடிகள் ஜோடியாகப் பறந்து சென்றன. ஒரு சிறகில் இரண்டு கோப்பைகள்” என்றான்.

யாங் கீ முகம் வெளிறியது. “நான்கு சிறகுகள்; ஒன்றில் இரண்டு என்றால்... ஆ!... எட்டுக் கோப்பைகள். சிறகொன்றுக்கு ஒரு கோப்பை என்று வைத்துக்கொள்ளக் கூடாதா?”

“விதிகளின்படி நீ விளையாடா விட்டால் நான் மூன்றாக ஆக்கிவிடுவேன். அதாவது... ஒரு சிறகில் மூன்று கோப்பைகள்.”

வேட்டைக்காரர்கள் அனைவரும், ஜென் சென் உட்பட, ஒரே குரலில், “குடி! நீ குடித்துதான் ஆக வேண்டும்” என்றார்கள்.

வேறு வழியில்லாமல் யாங், ஒன்றை அடுத்து ஒன்று என எட்டுக் கோப்பைகள் குடித்து முடித்தான். முதியவர் சிரித்தார். “இங்கு நீ ஒரு நண்பனை ஏமாற்ற முயற்சித்தால் ஒவ்வொரு முறையும் நீதான் சங்கடத்துக்கு ஆளாவாய்” என்றார்.

ஜென்னும் யாங்கும் முதியவரிடமிருந்து வாட்டப்பட்ட கறித் துண்டங்களை எடுத்து, மிகுந்த ஆர்வத்துடன் முகவாய்க் கட்டைகளில் கொழுப்பு எண்ணெய் வழிந்தோட சாப்பிட்டனர்.

“அப்பா, ஓநாயின் உணவை நான் இப்போதுதான் முதன்முறையாகச் சாப்பிடுகிறேன். என் வாழ்க்கையில் நான் சாப்பிட்ட அருமையான உணவு இதுதான். இதுநாள் வரை இவ்வளவு ருசியான இறைச்சியை நான் சாப்பிட்டதில்லை” என்றான் ஜென். “ஏன் பல பேரரசர்களும் அவர்களுடைய மகன்களும் வேட்டையில் மிகுந்த நாட்டம் கொண்டிருந்தனர் என்பது இப்போது புரிகிறது. டேங் பிரதேசத்தின் தெய்சாங், சீனாவின் மகத்தான பேரரசராகத் திகழ்ந்தவர். அவருக்கு வேட்டைமீது தீராக் காதலிருந்தது. அவருடைய மகன், அவருடைய வாரிசு, தன்னுடைய துருக்கியப் பாதுகாவலர்களோடு மேய்ச்சல் நிலத்துக்கு குதிரைகளில் வருவதையும் வேட்டையாடுவதையும் வழக்கமாகக் கொண்டிருந்தான். அவன் அரண்மனை முற்றத்தில் மேய்ச்சல்நில பாணியில் கூடாரம் ஒன்றையும் அமைத்திருந்தான். அங்கு அவன் உங்களைப் போலவே, ஆட்டை வெட்டித் தன்னுடைய கத்தியாலேயே அதைத் துண்டங்களாக்கி சாப்பிடுவான். ஒரு பேரரசனாக இருப்பதை விடவும் மேய்ச்சல்நில வாழ்க்கை மேம்பட்டதாக அவனுக்கு இருந்தது. தன் துருக்கியப் பாதுகாவலர்களோடு, அவனுடைய துருக்கிய ஓநாய்க் கொடியுடன் வேட்டையாடுவதையே அவன்

விரும்பினான். மேய்ச்சல் நிலத்தில் ஒரு துருக்கியனைப் போல வாழவே அவன் ஆசைப்பட்டான். அதன் விளைவாக, அவன் சிம்மாசனத்துக்கான உரிமையை இழந்தான். அவனுடைய அப்பா அவனுடைய சகோதரனை வாரிசாகத் தேர்வு செய்தார். இங்குள்ள வாழ்க்கை ஒரு பேரரசனையும் வெல்லக் கூடியது.''

முதியவர் விரிந்த கண்களோடு கேட்டுக்கொண்டிருந்தார். ''நீ இதை இதுவரை சொன்னதே இல்லை'' என்றார். ''இது ஒரு நல்ல கதை. அந்த இளவரசனைப் போல், எல்லா ஹேன் மக்களும் மேய்ச்சல் நிலத்தைப் பாராட்டினால் பிரமாதமாக இருக்கும். அதே சமயம், அவன் சிம்மாசனத்தை இழக்காமல் இருந்திருந்தால் இன்னும் அற்புதமாக இருந்திருக்கும். குய்ங் பேரரசர்கள் இங்கு அடிக்கடி வேட்டையாடவும், மணம் செய்துகொள்ள மங்கோலியப் பெண்களைத் தேடியும் வந்திருக்கிறார்கள். அக்காலத்தில், மங்கோலியர்களுக்கும் சீனர்களுக்குமிடையே சண்டை இருந்ததில்லை; நாங்கள் சமாதானமாகவே வாழ்ந்தோம்.''

ஜென் சொல்லும் வரலாற்றுக் கதைகளைக் கேட்க பில்ஜிக்குப் பிடிக்கும். அதற்குப் பிரதி உபகாரமாக அவர் அவனுக்கு மங்கோலியக் கதைகளைச் சொல்வார். ''ஓநாயின் உணவினைச் சாப்பிடாத எவரும் உண்மையான மேய்ச்சல்நில மங்கோலியன் இல்லை. அநேகமாக எந்தவொரு மங்கோலியனும் அப்படியாக இருக்க மாட்டான். அழிவின் விளிம்புக்குத் தள்ளப்பட்ட கடந்த காலங்களில் மங்கோலியர்கள் ஓநாய்களின் உணவைச் சாப்பிட்டுத்தான் உயிர் வாழ்ந்தனர். ஜெங்கிஸ்கானின் மூதாதையர் களில் ஒருவர், மலைகளின் உட்பகுதிக்கு விரட்டப்பட்டபோது, ஒரு சாதாரண காட்டுமிராண்டியைப் போல, பசியின் விளிம்பில் சிக்கியிருந்தார். ஓநாய்களின் பாதையைப் பின்தொடர்ந்து செல்லும் நிலைக்கு ஆளாகியிருந்தார். அவை ஒரு வேட்டையை முடிக்கும் போதெல்லாம், அவை சாப்பிட்டு விட்டு நகரும்வரை காத்திருந்து, அவை விட்டுச் சென்ற மிச்சத்தை உண்டு வாழ்ந்து வந்தார். இவ்வாறாகப் பல வருடங்கள் அவர் மலைகளில் தனியாக வாழ்ந்து வந்தார். கடைசியாக, அவருடைய சகோதரர் கண்டுபிடித்து வீட்டுக்கு அழைத்து வந்தார். மங்கோலியர்களுக்கு நல்லது செய்பவையாகவும், சமயங்களில் அவர்களைக் காப்பாற்றுபவை யாகவும் ஓநாய்கள் திகழ்கின்றன. அவையின்றி, ஜெங்கிஸ்கானோ, மங்கோலியர்களோ இல்லை. ஓநாய் உணவு மிகவும்

சுவையானது. நம்முடைய புத்தாண்டுக் கொண்டாட்டத்துக்காக, ஓநாய்கள் நமக்கு அளித்திருப்பதைப் பார்... பல நேரங்களில் இது அவ்வளவு சுலபமாகக் கிடைப்பதில்லை. அதையும் ஒரு நாள் நீ அறிவாய்.”

அங்கிருந்தவர்களைக் கொண்டு பனியை அள்ளிப் போட்டு நெருப்பை அணைக்கச் செய்தார் பில்ஜி.

மேக மூட்டம் அடர்ந்தது. மலையுச்சிகளிலிருந்து வீசிய பனி அவற்றை எட்டத் தொடங்கியதில் பனித் திரையொன்று உருவானது. வலிமைமிக்க வேட்டைக்காரர்கள் மீண்டும் தங்கள் பனி மிதவைகளின் மீதேறி, பனி ஏரியை நோக்கிச் செல்லத் தொடங்கினர். வீசும் பனி பள்ளங்களை நிரப்புவதற்கு முன்பாக, பார வண்டிகளை நிரப்பியாக வேண்டியது அவசியம். ஒரு மானைக் கொக்கியில் மாட்டிக்கொண்டு வருவதென்பது, ஆறு அல்லது ஏழு பெட்டி சிசூவான் தேயிலை; ஒரு டஜன் அல்லது அதற்கும் மேலான ஹாய்சீ சிகரெட் அட்டைப் பெட்டிகள்; பதினைந்து அல்லது பதினாறு மங்கோலிய மது பாட்டில்கள் என்று அர்த்தம்.

பில்ஜியின் ஆணைக்கேற்ப, எல்லா மிதவைகளும் வேட்டைக்காரர்களால் மிகவும் ஆழமான பகுதியிலிருந்து ஆழம் குறைந்த இடங்களுக்குத் திட்டமிட்டுத் திறமையுடன் நகர்த்தப் பட்டன. ஏனெனில் அங்கு உறைந்த மான்களை மேலெடுப்பது சுலபம். மேலும் முதியவர் அவர்களைக் குழுக்களாகப் பிரித்தார்.

கொக்கிக் கம்பங்களைத் திறமையுடன் கையாளுபவர்கள் மான்களைக் கொக்கியிடுவதில் கவனம் செலுத்தும் வகையிலும், மிதவைகளைத் திறம்பட நகர்த்துபவர்கள் மேலெடுக்கப்பட்ட விலங்குகளைக் கரைக்குக் கொண்டுவந்து சேர்க்கும்படியும் அமைத்தார். மிதவைகள் கரையை நெருங்கும்போது, ஏரியின் ஓரத்தில், கயிறுகளுடன் பல ஆண்கள், இறந்த விலங்குகளின் உடல்கள் ஏற்றப்பட்ட மிதவைகளை இழுப்பதற்குத் தோதாக நின்றிருந்தனர். வேட்டைக்காரர்கள் கயிற்றின் ஒரு முனையை மிதவையில் கட்டி மறுமுனையை அவர்களை நோக்கி எறிந்தவுடன், அவர்கள் அதைப் பற்றிக் கரைக்கு இழுத்தார்கள். இச்செயல் மீண்டும் மீண்டும் தொடர்ச்சியாக நிகழ்ந்தது.

பனி ஏரியிலிருந்த எல்லா மனித நிழல்களும் மலையின் நிழல்களால் விழுங்கப்பட்டுவிட்டிருந்த சமயத்தில், பார வண்டிகளில் உடல்கள் உயரமாகக் குவிக்கப்பட்டிருந்தன. ஆனால் சில ஆண்கள், விளக்கு வெளிச்சத்தில் மேலும் சில உடல்களை வேட்டையாட விரும்பினர். ஏரிக்கரையில் அவற்றைக் குவித்து, ஆயுதம் தாங்கிய சில பாதுகாவலர்களையும் இருக்கச் செய்து, மறுநாள் காலையில் வந்து அவற்றை எடுத்துக்கொள்ளலாமென அவர்கள் நினைத்தனர். பில்ஜி அவர்களைத் தடுத்துவிட்டார். “டெஞ்ஞர் ஒரு நல்ல நாளை நமக்குத் தந்திருக்கிறது. டெஞ்ஞர் நியாயமானது. நம்முடைய ஆடுகளையும் குதிரைகளையும் ஓநாய்கள் தின்றிருப்பதால் அந்த இழப்புக்கு இவை ஈடாகும். இப்போது டெஞ்ஞர் காற்றை வீசத் தொடங்கிவிட்டது; இதன் மூலம் மீதியை ஓநாய்களுக்கு விட்டு விட்டுக் கிளம்பும்படி சொல்கிறது. டெஞ்ஞருக்கு அடிபணிய மறுப்பவர்கள் உங்களில் யார்? இந்தப் பனிப் பொழிவில் இங்கு தங்கியிருக்க உங்களில் யாருக்கு விருப்பம்? ஒருவேளை இன்றிரவு பனிப்புயலோடு ஓநாய்கள் வெளியில் வந்தால், இங்கிருக்கப் போகும் உங்களில் யார் மிஞ்சியிருக்கப் போகிறார்கள்?”

அவருடைய அபிப்ராயங்களை அமைதி எதிர்கொண்டது. எல்லோரையும் கிளம்பும்படி உத்தரவிட்டார். களைப்படைந்திருந்தாலும் சந்தோஷமாயிருந்த மக்கள், கனமானதும் அதிகப்படி யாகப் பாரம் ஏற்றப்பட்டதுமான வண்டிகளை, குன்றுகளிலும் மேடுகளிலும் அவை செல்லும்போது அவற்றைத் தள்ளி வண்டியோட்டுபவர்களுக்கு உதவினர். இவ்வாறாக, அவர்கள் தங்கள் முகாமை நோக்கிச் சென்றனர்.

ஜென் சென், அவனுடைய உடல் குளிர்ந்து வியர்ப்பதை உணர்ந்தான். அவன் உடல் நடுங்குவதை அவனால் நிறுத்த முடியவில்லை. எங்கும் — ஏரியாகட்டும் அதற்கு வெளியிலாகட்டும், மேடுகளிலாகட்டும், பனிப் பாதைகளிலாகட்டும் — மனிதர்கள் தங்கள் முத்திரைகளை விட்டுச் சென்றனர்: நெருப்பின் சாம்பல், சிகரெட் துண்டுகள், மதுப் புட்டிகள். இவற்றோடு, முகாம் வரையான டயர் சக்கரங்களின் தடங்கள். ஜென் குதிரையை விரைவாகச் செலுத்தி பில்ஜியை வந்தடைந்தான். “அப்பா, இம்முறை ஓநாய்கள் தோற்றுவிட்டன. அவை பழி வாங்குமா? அவை நெடிய நினைவுகள் கொண்டவை என்று நீங்கள் எப்போதும் சொல்வீர்கள். அவை தங்களுடைய உணவையும் சண்டைகளையும்

நினைவில் கொண்டிருப்பதுபோல தங்கள் பகைவர்களையும் நினைவில் கொண்டிருக்குமா?''

''நாம் நிறைய மான்களைத் தோண்டி எடுத்திருக்கிறோம். அதே சமயம், பாதிக்கும் மேற்பட்டவற்றை ஓநாய்களுக்காக விட்டு வைத்திருக்கிறோம். அடுத்துவரும் இளவேனிற் காலத்தில் ஓநாய்கள் உறைந்த மான்களை விருந்தாகக் கொண்டு வாழும். நம்மைச் சுற்றி வந்து தொல்லை தராது. தவிரவும், அவை நமக்கு ஒரு உதவி செய்திருக்கின்றன. நாமும் அவற்றுக்காக சிலவற்றை விட்டு வந்திருக்கிறோம். கவலைப்படாதே, தலைமை ஓநாய்க்கு என்ன செய்ய வேண்டுமென்பது தெரியும்.''

அன்றிரவு பனிப்புயல் அந்தப் பகுதியைத் தாக்கியது. மாணவர்களின் குடில் பாதிப்புக்குள்ளானது. ஜென் சென், 'மங்கோலியர்களின் ரகசிய வரலாறு' என்ற புத்தகத்தின் பிரதியை ஓரமாக வைத்துவிட்டு, யாங் கீயிடம் ''ஓநாய்கள் சாப்பிட்ட பின் விட்டுச் சென்ற மிச்சத்தை உண்டு வாழ்ந்ததாக பில்ஜி குறிப்பிட்டவர், புதோஞ்சர் என்பவர். இவர் ஜெங்கிஸ்கானின் முப்பாட்டனுக்கு முப்பாட்டனுடைய முப்பாட்டனுக்கு முப்பாட்டன். ஜெங்கிஸ்கானுடைய குடும்பம், போர்ஜிஜின் பழங்குடியின் ஒரு பகுதியாகும். அதனுடைய வரலாற்றுரீதியான நிறுவனர்தான் புதோஞ்சர். அவரைத் தொடர்ந்த தலைமுறையினர் வரலாற்றுச் சிறப்புமிக்க மாற்றங்களுக்கு சாட்சிகளாக இருந்தனர்.''

''அதனுடைய அர்த்தம் என்னவென்றால், அங்கு ஒருவேளை ஓநாய்கள் இல்லாதிருந்தால் அங்கு ஜெங்கிஸ்கான் இருந்திருக்க மாட்டார். அற்புதமான பழங்குடி இருந்திருக்காது. ஞானமும் துணிச்சலுமிக்க மங்கோலியக் குதிரை வீரர்களும் இருந்திருக்க மாட்டார்கள்'' என்றான் யாங். ''மங்கோலிய மக்களின் வரலாற்றில் ஓநாய்கள் பிரதான பங்காற்றி இருக்கின்றன என்பது நிச்சயம்.''

''ஏன் அதோடு நிறுத்திவிட்டாய். அவை சீனர்களின் வாழ்விலும், எல்லா உலக மக்களின் வாழ்விலும் பிரதான பங்கு வகித்திருக்கின்றன. ஜெங்கிஸ்கானும் அவருடைய மங்கோலியக் குதிரைக்காரர்களும் இங்கு வரும்போது, ஜின்னிலிருந்து தெற்கத்திய சாங் வரையான சீனாவின் வரலாறு திரும்ப எழுதப்படுவதற்கான முகாந்திரத்துக்கு இட்டுச் சென்றிருக்கிறது. அதுபோலவே, மத்திய ஆசியா, பெர்சியா, ரஷ்யா மற்றும் இந்தியாவின் வரலாறுகளும்

மாற்றியமைக்கப்பட்டிருக்கின்றன. சீனாவில் கண்டுபிடிக்கப்பட்ட வெடிமருந்தை, ஐரோப்பாவிலும் ஆசியாவிலும் நிகழ்த்திய கொலை வெறிச் சண்டைகளில் மங்கோலிய நாடோடியினர் மேற்கிற்கு அறிமுகம் செய்தனர். மேற்கில் நிலப்பிரபுத்துவக் கோட்டையை விழச் செய்து முதலாளித்துவ அமைப்பின் நிர்மாணத்துக்குத் தடையாக இருந்த எல்லாவற்றையும் அறவே துடைத்தெறிந்தனர். அதன்பிறகு வெடிமருந்து கிழக்குக்குத் திரும்ப வந்தது. அப்போது அது சீனாவுக்குள் நுழைந்தது. இறுதியில், மங்கோலியக் குதிரை வீரர்களின் ஆளுகை முடிவுக்கு வந்து, முழு உலகையும் தலை கீழாகப் புரட்டிப் போட்டது. ஆனால், ஓநாய்களின் வரலாற்று ரீதியான முக்கியத்துவம் வரலாற்றாசிரியர்களால் பதிவு செய்யப்படவில்லை. டெஞ்ஞரிடம் சம்பவங்களின் பதிவுகள் இருந்தால், மங்கோலிய மேய்ச்சல்நில ஓநாய்கள் வரலாற்று அட்டவணையில் தங்களுக்குரிய இடத்தைப் பெற்றிருக்கும்.''

தாராளமான பரிசுகளைப் பார்த்ததும், மாட்டு மந்தையாளனான காவோ ஜியான்சோங்கினால் தன்னுடைய பரவசத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ''நீங்கள் இருவரும் என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள், தொன்மையான கடந்த காலத்தைத் தோண்டி எடுக்கிறீர்களா? பனிப் புதையலில் கிடக்கும் எல்லா மான்களையும் தோண்டியெடுத்துப் பணக்காரர்களாக ஆவதே நம் முதல் நோக்கமாக இருக்க வேண்டும்.''

''சொர்க்கம் ஓநாய்கள்மீது தன் பார்வையைச் செலுத்திக்கொண்டிருக்கிறது. வண்டி நிறைய கிடைத்திருக்கும் மான்களுக்காக நாம் நன்றியோடு இருக்கவேண்டும். குறைந்தது மூன்று நாட்களுக்காவது இந்தப் பனிப்புயல் வீசும். பனி ஏரியின் ஆழம் இன்னும் இரண்டு அல்லது மூன்று அடி கூடும்; குழிகள் நிரப்பப் பட்டுவிடும். அதில் மான்களைத் தேடுவதென்பது, வைக்கோல் படப்பில் ஊசியைத் தேடுவது போலாகிவிடும்'' என்றான் ஜென் சென்.

காவோ குடிலுக்கு வெளியில் வந்து வானத்தை அண்ணாந்து பார்த்தான். ''நிச்சயம் இது மூன்று நாள் அடிக்கும்'' என்றான். ''இன்று நான் அங்கு இருந்திருக்க வேண்டும். பெரிய குழிகளில் நான் கம்பங்களை ஊன்றிவிட்டு வந்திருப்பேன்.'' அவன் பெருமூச்சு விட்டான். ''இனி நான் இளவேனிற் பருவம் வரை காத்திருக்க வேண்டுமென நினைக்கிறேன். அதன்பிறகு, நான் அங்கு சென்று, வண்டியை நிரப்பி, 'பாபன் கோபி சமூகக் கூடத்'திலுள்ள பொருள்

கொள்முதல் நிலையத்துக்குச் செல்வேன். நீங்கள் இருவரும் ஏதும் சொல்லாத பட்சத்தில், வேறு எவருக்கும் இது தெரிய வேண்டிய அவசியமில்லை.''

எவ்வித பிரச்சனையுமின்றி பனிக்காலத்தின் பிற்பாதியை வளர்ப்பு மிருகங்கள் கடந்தன. ஓலோன்புலாக் ஓநாய்க் கூட்டம், சிதறியோடி வெகு தொலைவுக்குச் சென்ற மான்களைப் பின்தொடர்ந்து சென்றுவிட்டிருந்தன. மாபெரும் பனிப்புயல் வரவில்லை.

பனிக்காலத்தின்போது, ஜென் சென் ஆடுகளை மேய்க்கவோ, இரவுக் காவலுக்கோ செல்லவில்லை. மேய்ச்சல் நிலத்தைச் சுற்றித் திரிந்து, ஓநாய்கள் பற்றிய கதைகளைத் தேடியறிவதிலும், பெரும் பாலான நேரத்தைப் 'பறக்கும் ஓநாய்கள்' பற்றிய தொல்கதைகளிலும் செலவிட்டான். தொல்கதையின் அடிவரை ஆழமாகச் சென்று, ஓலோன்புலாக்கில் ஓநாய்களால் எப்படி 'பறக்க' முடிந்தது என்பதை அறிய ஆர்வமும் தீர்மானமும் கொண்டிருந்தான்.

அவர்கள் இங்கு வந்து சேர்ந்த சமயத்தில், ஓநாய்களைப் பூமிக்கு டெஞ்ஞர் அனுப்பியதென்று மேய்ப்பர்கள் மாணவர்களிடம் சொல்லியிருந்தனர். அதன் அர்த்தம் ஓநாய்களால் பறக்க முடியுமென்பது. ஒரு மேய்ப்பன் இறந்துவிட்டால், அவனுடைய உடல் காடுகளுக்குள் எடுத்துச் செல்லப்பட்டு ஓநாய்களின் பார்வையில் படும்படியான இடத்தில் விடப்படுவது பல நூற்றாண்டுகளாக நிலவி வருகிறது. ஓநாய்கள் அதை

முழுவதுமாக, கொஞ்சமும் மிச்சமில்லாமல், தின்றுவிடும்போது 'வான் சமாதி' நிறைவடைகிறது. ஓநாய்கள் டெஞ்சருக்குப் பறந்து செல்லும் என்ற நம்பிக்கையின் காரணமாக இது வானில் புதைப்பது என அழைக்கப்படுகிறது. அவை மனித ஆன்மாவை, திபேத்திய மாயப் பருந்துகளைப் போலவே தங்களோடு எடுத்துச் செல்கின்றன. ஆனால் மாணவர்கள், கலாசாரப் புரட்சியின்போது, கடுமையாகத் தாக்கப்பட்ட 'பழமையான நான்கில்' ஒன்றான மூடப் பழக்கமே இது என முத்திரை குத்தினர். மேய்ப்பர்களோ ஓநாய்கள் பறக்கக்கூடியவை என அவர்களுக்கு வலியுறுத்தினர். அவர்கள் சொன்ன ஒரு சம்பவமிது: கலாசாரப் புரட்சி நடந்து மூன்று வருசம்கூட இருக்காது. இரண்டாம் படைப் பிரிவான செரென்டோர்ஜியின் கற்கோட்டைக்குள் ஓநாய்க் கூட்டமொன்று பறந்து வந்திறங்கி, ஒரு டஜன் செம்மறியாடுகளைத் தின்று

முடித்ததோடு இருநூறுக்கும் மேற்பட்டவற்றைக் கொன்று தீர்த்தன. பசியடங்கியதும் அவை பறந்து சென்றுவிட்டன. அந்தக் கல்சுவர் ஆறு அல்லது ஏழடி உயரமிருக்கும். அதன்மீது ஒருவன் ஏறிச் செல்ல முடியாத அளவுக்கு மிக உயரமானது. ஓநாய்களால் பறக்க முடியாவிட்டால் ஓநாய்கள் அதனுள் எப்படி நுழைந்திருக்கும்?

இயக்குனர் உல்ஜீ, எல்லாத் தலைவர்களையும் காவல்துறைத் தலைவர் ஹார்பர் உட்பட அழைத்துக்கொண்டு சென்று அதைப் பார்வையிட்டார். படங்களும் அளவுகளும் எடுத்த பிறகு, ஓநாய்களால் தாவிக் குதிக்க முடியாத அளவுக்கு சுவர் மிக உயரமானது என்பதை அவர்கள் ஒப்புக்கொண்டனர். மேலும், அவை உள்ளே நுழைவதற்கான உடைப்புகளோ, ஓட்டைகளோ அதில் இல்லை என்பதையும் அவர்கள் குறித்தனர். பல நாள் விசாரணைகளுக்குப் பின்னும், ஓநாய்கள் எப்படி உள்ளே நுழைந்து வெளியேறின என்பதற்கு அவர்களால் விளக்கமேதும் அளிக்க முடியவில்லை. ஆனால் மேய்ப்பர்கள் அறிந்திருந்தார்கள்.

ஜென்னின் மனதில் இக்கதை வெகு நாட்களாகக் குடி கொண்டிருந்தது. இப்போது, ஓநாய்கள் மீதான ஈர்ப்பு அவனுள் வளர்ந்துகொண்டிருந்ததில் அது மீண்டும் மேலெழுந்தது. ஆக, அவன் தன் கண்களால் நேரில் அச்சுவரைப் பார்ப்பதற்காகக் குதிரையில் பயணப்பட்டான். அதை மிகக் கவனமாகப் பரிசோதித்த பிறகு, அவனாலும் எந்தவொரு விளக்கத்தையும் அடைய முடியவில்லை. எனவே, அவன் அக்காலத்தவரான செரென்டோர்ஜியைப் பார்த்துப் பேசுவதற்காகச் சென்றான்.

‘‘என்னுடைய எந்த முட்டாள் பிள்ளைகள் டெஞ்ஞரைப் புண்படுத்தினார்களோ தெரியவில்லை. என்னுடைய குடும்பம் இன்றளவும் சபிக்கப்பட்டிருக்கிறது’’ என்றார் அந்த முதியவர்.

பள்ளிப்படிப்பு முடித்திருந்த முதியவரின் மகன் ‘‘மேய்ச்சலுக்கான புல்வெளி குறித்த முட்டாள்தனமான விதிமுறைகளையே இந்தப் பிரச்சனைக்குக் குற்றம் சொல்ல வேண்டும்’’ என்றான். ‘‘ஓலோன்புலாக்கில் அதற்கு முன்னர் இத்தகைய கற்சுவர்கள் கிடையாது. ஆனால் தலைமையகம், ஆடுகளைப் பாதுகாப்பதற்காகவும் இரவுக் காவல்களுக்காகும் செலவுகளை நீக்குவதற்காகவும் பசும்புல் நிலத்தைச் சுற்றிலும் கற்சுவர்களை எழுப்ப முடிவு

செய்தது. ஓநாய்களால் சுவர்களின் மீது ஏற முடியாது; அதனால் இரவுக் காவலர்களுக்கு அவசியமிருக்காது; எல்லோரும் நிம்மதியாகத் தூங்கலாமென்று அவர்கள் சொன்னார்கள். அதனால் நாங்கள் வாசற் கதவை மூடிவிட்டு எங்கள் குடிலினுள் இருந்தோம். அந்த இரவில் நாய்கள் குரைக்கும் சத்தத்தை நான் கேட்டேன். ஓநாய்கள் கூட்டம் அருகில் இருப்பதாகவும் ஏதோ நடக்கப் போகிறதென்றும் எனக்குத் தோன்றியது. ஆனால் தலைமையகம் கண்காணித்துக் கொண்டிருக்க வேண்டிய அவசியமேதுமில்லை என்று சொல்லியிருந்ததால், நாங்கள் வெளியில்கூட சென்று பார்க்கவில்லை. துரதிர்ஷ்டவசமாக, காலையில் நாங்கள் வாசற்கதவைத் திறந்தபோது, ஆடுகள் செத்துக் கிடப்பதையும் செத்துக்கொண்டிருப்பதையும் பார்த்து உறைந்து போய்விட்டோம். தரை முழுவதும் ரத்தம் இரண்டு விரல் கட்டையளவு கனத்தில் கிடந்தது. கற்சுவரிலும் ரத்தம் சிதறிக் கிடந்தது. இறந்து கிடந்த விலங்குகளின் கழுத்துகளில் நான்கு கோரைப் பற்களின் தடங்கள் வெளித் தெரிந்தன. அவற்றின் ரத்தம் சுவரையும் தாண்டி வெளியில் தெறித்திருந்தது. ஓநாய்களின் சாணமும் ஆங்காங்கே குவிந்து கிடந்தன... அதன் பிறகு, தலைமையகம் விதிகளை மாற்றி, அதன் ஒரு பக்கத்தில் வசித்தவர்களைக் கொண்டு இரவுக் காவலை மேற்கொள்ளவும் அதற்கான பணிப் புள்ளிகளை அளிக்கவும் முன்வந்தது. சமீப வருடங்களில் மேலும் மேலும் கல்லாலான மதிற்சுவர்கள் பசும்புல் நிலத்தில் எழுப்பப்பட்டதாலும், மீண்டும் இரவுக் காவலர்கள் அமர்த்தப்பட்டதாலும் ஓநாய்கள் பறந்து வந்து உள்ளே புகுந்து ஆடுகளைத் தின்ற கதைகள் அதன் பிறகு இல்லாமல் போயின.’’

ஜென் சென்னுக்கு அது போதுமானதாக இல்லையென்பதால், அவன் சுற்றி அலைந்து மற்ற மேய்ப்பர்களிடம் கேட்டான். அனைவருமே _ ஆண்களும் பெண்களும் இளம் வயதினரும் முதியவர்களும் _ ஓநாய்கள் பறக்கக் கூடியவை என்று அவனிடம் சொன்னார்கள். அவர்கள் மேலும், ஒரு ஓநாய் இறந்துவிட்டால் அதனுடைய ஆன்மா டெஞ்ஞருக்குப் பறந்து செல்வதாகச் சொன்னார்கள்.

முடிவாக, காவல்துறைத் தலைமை அதிகாரி ஹார்பர் விசாரணைக் குழுவால் விடுவிக்கப்பட்டு, அவருடைய பொறுப்பை மீண்டும் ஏற்க திருப்பி

அனுப்பப்பட்டார். அவரைச் சந்தித்து, ஓநாய்கள் எப்படிப் பறந்து உள்ளே நுழைந்து வெளியேறின என்பது பற்றிக் கேட்டறிவதற்காக ஜென், பீஜிங் சிகரெட் பெட்டியொன்றை எடுத்துக்கொண்டு அவரைப் பார்க்கச் சென்றான்.

'இன்னர்_மங்கோலியன் போலீஸ் அகாதெமி'யில் பட்டப் படிப்பு முடித்தவரான தலைமை அதிகாரி ஹார்பர் சீன மொழியில் சரளமாகப் பேசக் கூடியவர். அவர் சொன்னார், "இந்த வழக்கு முடிந்துவிட்டது. துரதிர்ஷ்டவசமாக, அறிவியல்ரீதியான விளக்கம் மேய்ச்சல் நிலத்தில் செல்லுபடியாகவில்லை. பெரும்பாலான மேய்ப்பர்கள் அதை நம்பவில்லை. படித்த மற்றும் அனுபவம் வாய்ந்த ஒரு சில வேட்டைக்காரர்கள் மட்டுமே விசாரணையின் முடிவுகளை ஏற்றுக்கொண்டார்கள். மற்ற அனைவருமே ஓநாய்களால் பறக்க முடியுமென உறுதியாக நம்பினார்கள். உள்ளூர் மக்களின் நம்பிக்கைகளையும் நடைமுறைகளையும் நாம் மதிக்கும் பட்சத்தில் ஓநாய்கள் பறந்து வந்ததாகவே கருத வேண்டும்." அவர் சிரித்தார். "அதிலும் ஓரளவு உண்மை இருக்கிறது. ஏனென்றால் ஓநாய்கள் கணிசமான தூரம் காற்றில் நீந்தக் கூடியவை."

"அன்று மேய்ப்பர்கள் மிகுந்த பதற்றத்தோடு இருந்தனர். ஒரு பேரழிவை அனுப்பி வைக்குமளவுக்கு டெஞ்ஞர் கோபத்தோடு இருப்பதாக அவர்கள் நம்பினர்" என்று அவர் தொடர்ந்து பேசினார். "மலையில் மந்தைகளை அப்படியே விட்டு விட்டு, என்ன நடந்திருக்கிறது என்பதை அறிய அவர்கள் விரைந்து வந்தனர். பெண்களும் முதியவர்களும் டெஞ்ஞரை நோக்கி மண்டியிட்டனர். குழந்தைகள் மிகவும் பயந்து போயிருந்தனர். பெரியவர்கள் அவர்களை அடித்தபோதுகூட அவர்கள் அழவில்லை. இந்தக் கிளர்ச்சியின் எதிர்விளைவாக உற்பத்தி பாதிக்கக்கூடுமென கவலைப்பட்ட இயக்குனர் உல்ஜீ, இரண்டு நாளில் வழக்கை முடிக்கும்படி கேட்டுக்கொண்டார். நான், அந்த இடத்தில் பாதுகாப்புப் பணியில் பணியாளர்களை ஒருங்கிணைந்து ஈடுபடும்படி செய்தேன். ஆனால் அதற்கு முன்னதாகவே அந்த இடம் அலங்கோலமாகிவிட்டது. மனிதர்களும் ஆடுகளும் அந்த இடத்தை மிதித்து துவம்சம் செய்ததில் மதிலுக்கு வெளியிலான தரையில் தடயங்கள் எல்லாம் அழிந்துவிட்டன. பெரிதுபடுத்திக் காட்டும் கண்ணாடி மூலம் நான் கல்சுவரின் ஒவ்வொரு அங்குலத்தையும் பரிசோதித்தேன். கடைசியில், சுவரின் வடகிழக்கு

மூலையின் வெளியே இரண்டு மங்கலான, ரத்தம் தோய்ந்த இரண்டு ஓநாய்ப் பாதங்களின் தடங்களைப் பார்த்தேன். வழக்கை அது தீர்த்துவைத்தது. ஓநாய்கள் எப்படி உள்ளே நுழைந்தன என்பதை உங்களால் யூகிக்க முடிகிறதா?''

ஜென் தலையசைத்தான்.

''எனக்கு உறுதியாகத் தெரிந்துவிட்டது'' என்றார் தலைமை அதிகாரி ஹார்பர். ''ஒரு பெரிய ஓநாய், தன் முன்னங்கால் பாதங்களை உயர்த்தி சுவற்றின் மீது வைத்தும், பின்னங்கால்களைத் தரையில் ஊன்றியும் நின்றுகொள்கிறது. இதன் மூலம் அது தன் உடலை ஒரு மிதி பலகையாக ஆக்கிக்கொள்கிறது. பிற ஓநாய்கள் முழு வேகத்தில் ஓடி வந்து அதன் மீதேறித் தாவி உள்ளே நுழைந்திருக்கின்றன. உள்ளிருந்து பார்க்கும்போது, அவை பறந்து வந்திருப்பது போல்தானே இருக்கும்.'' ஜென் அதைக் கேட்டு மிகவும் ஆச்சரியமடைந்தவனாய், ''இந்த ஓலோன்புலாக் ஓநாய்கள் நம்ப முடியாத அளவுக்கு விவேகமானவை'' என்றான். ''மேய்ச்சல் நிலத்தில் கல்சுவர்கள் எழுப்பப்பட்டவுடனேயே, அவற்றை எப்படி எதிர்கொள்வதென்று அவை கணக்கிட்டிருக்கும். ஓநாய்கள் பறக்குமென்று மேய்ப்பர்கள் சொல்வது அப்படி ஒன்றும் மிகையானதாகத் தெரியவில்லை. அவை வானத்திலிருந்து ஆடுகளுக்கிடையே குதித்தபோது, நிச்சயம் ஆட்டு மந்தைக்கு அப்போதே பாதி உயிர் போயிருந்திருக்கும். அதன்பிறகு, மீதி விஷயம் சுலபமாக முடிந்திருக்கும். கொலை வெறியாட்டம் முடிந்து, அவை வயிறு நிறைய சாப்பிட்டிருக்கும். ஆனால், சுவருக்கு அந்தப் பக்கம் மிதிபலகையாக இருந்த ஓநாய் மட்டும் பாவம். அதற்கு எதுவும் கிடைத்திருக்காது. அது ஒரு அற்புதமான விலங்காக இருக்க வேண்டும். அந்தக் கூட்டத்துக்காகத் தன்னை அர்ப்பணித்துக்கொண்ட அது, நிச்சயம் ஆண் தலைமையாக இருக்கும்.''

தலைமை அதிகாரி ஹார்பர் மனப்பூர்வமாகச் சிரித்தார். ''அப்படியில்லை'' என்றார் அவர். ''என்னைப் பொறுத்தவரை, அந்த ஓநாயும் பறந்து உள்ளே வந்து மற்றவற்றைப் போலவே சாப்பிட்டிருக்கும். நீங்கள் ஒன்றைத் தெரிந்துகொள்ள வேண்டும். இந்த ஓநாய்கள் வலுவான கூட்டுணர்வு கொண்டவை. அவை எப்போதும் இணைந்திருப்பவை. தங்களில் ஒன்றைப் புறக்கணிக்கும் இயல்பு அவற்றுக்கில்லை. வயிறு நிறைய சாப்பிட்டுவிட்ட ஒரு

ஓநாய்க்கு உள்ளிருக்கும் இன்னொரு ஓநாய் மிதிபலகையாக இருக்க, அது சுவற்றைத் தாண்டிக் குதித்து வெளியில் வருகிறது. அங்கு அது, பசித்திருக்கும் ஓநாய்க்கு மிதிபலகையாகச் செயல்பட, ஓநாய் உள்ளே பறந்துவந்து வேண்டுமளவு தின்று முடிக்கிறது. அந்த இரண்டு ரத்தம் தோய்ந்த பாதத் தடங்கள் இரண்டாவது ஓநாயுடையதாகத்தான் இருக்கமுடியும். அவை மிக நேர்த்தியாகத் தங்கள் சூழ்ச்சியை நிறைவேற்றியிருக்கின்றன. மதிலுக்குள் இருந்த ஓநாய்க் கூட்டம், தங்கள் இஷ்டம்போல கொன்று தீர்த்திருக்கின்றன. ஓநாய்கள் உள்ளே வராமல் இருப்பதற்காக மக்கள் சுவரெழுப் பினார்கள்; ஆனால் அதற்குப் பதிலாக, நாய்கள் உள்ளே வராதபடி செய்துவிட்டார்கள். ஓநாய்களின் உதாரணத்தை கடைபிடிக்கு மளவுக்கு நாய்களுக்கு விவேகம் கிடையாது. அவை ஒருபோதும் விவேகமான ஓநாய்களுக்கு இணையாக முடியாது.

‘‘ஓநாய்கள் என்னை விடவும் விவேகமிக்கவை’’ என்றான் ஜென். ‘‘ஆனாலும் ஒரு பிரச்சனை இன்னும் இருக்கவே செய்கிறது. ஓநாய்க் கூட்டத்தின் கடைசியான ஒன்று, எப்படி பாதுகாப்பாக வெளியேறியது? அதன் மிதிபலகை எங்கிருந்தது?’’

இந்தக் கேள்வி, தலைமையதிகாரி ஹார்பரை உற்சாகப்படுத்தியது. ‘‘மக்கள் உண்மையில் ஓநாய்களை விடவும் முட்டாள்கள்.’’ என்றார் அவர். ‘‘எல்லோருக்குமே அது ஒரு புதிராகத்தான் இருந்தது. அதாவது, இயக்குனர் உல்ஜீ மதிலுக்குள் நுழைந்து, ரத்தம் தோய்ந்த இடங்களினூடாகச் சென்று பார்க்கும் வரை. வடகிழக்குச் சுவரோரத்தில் ஆறு அல்லது ஏழு இறந்த ஆடுகளின் உடல்களை அவர் கண்டுபிடித்தார். கடைசியாக வெளியேறிய ஓநாய், அவற்றுக்குள் மிகுந்த விவேகமும் வலுவும் கொண்டதாகவும், அவற்றின் தலைமைகளில் ஒன்றாகவும் இருக்க வேண்டும். இறந்த ஆடுகளின் உடல்களைக் குவித்து, அவற்றை மிதிபலகையாகப் பயன்படுத்தி அது பறந்து வெளியேறியிருக்கிறது. ஒரு ஓநாயால் தனியாக அந்த உடல்களைக் கொண்டு வந்து குவித்திருக்க முடியாதென்றும் பல ஓநாய்கள் சேர்ந்து அந்த வேலையைச் செய்திருக்க வேண்டுமென்றும் சிலர் கருதினார்கள். ஒரு வழியாக எல்லாம் முடிந்தது. இயக்குனர் உல்ஜீ சம்பவ இடத்துக்குக் குழுத் தலைவர்களை வரச்செய்து, ஓநாய்கள் எப்படி உள்ளே நுழைந்து

வெளியேறின என்பதை விளக்கினார். அது ஒருவித நிம்மதியைத் தந்தது. செரென்டோர்ஜி தண்டிக்கப்படவில்லை. ஆனாலும் இயக்குனர் உல்ஜீ, ஓநாய்களைக் குறைத்து மதிப்பிட்டுவிட்டதாகவும் அவற்றை மிகவும் சாதாரணமாக நினைத்துவிட்டதாகவும் தன் தவறை ஒப்புக்கொண்டார்."

ஜென் சென்னுக்கு மயிர் சிலிர்த்தது. தலைமை அதிகாரியின் முடிவினை அவன் ஏற்றுக்கொண்டபோதும், அன்றிலிருந்து அவனுடைய கனவுகளில் பறக்கும் ஓநாய்களின் அற்புதப் படிமங்கள் அடிக்கடி வரத் தொடங்கின. பனி வியர்வையில் முழுவதுமாக நனைந்து அவன் அடிக்கடி விழித்தான். மேய்ச்சல்நிலத் தொல்கதைகள் வெறும் பொழுதுபோக்குக்கானவை அல்ல என அவன் கருத்தில் கொண்டான்.

பல நாட்கள் கடந்துபோயின. ஜென், படையணியினருக் கான இரண்டு திறந்தவெளி வான்புதை இடங்களை மிக நெருக்கமாகப் பார்க்கத் தீர்மானித்தான். ஒன்று, சாகன்டோல்காய் மலையின் வட சரிவிலும், மற்றொன்று கரும்பாறை மலையின் வடகிழக்குச் சரிவிலும் இருந்தன. அந்த இரு புதைவிடங்களும் முதல் பார்வையில் மலையின் மறுபுறப் புல்வெளி நிலம் போலவே காட்சியளித்தன. ஆனால் அவற்றை மிக நெருங்கிப் பார்த்தபோது அவற்றுக்கிடையே குறிப்பிடத்தக்க வேறுபாடுகள் தெரிந்தன. அவை ஓநாய்களின் பிராந்தியத்துக்கும் டெஞ்ஞுருக்கும் அருகாமையில் இருந்தன. அதன் காரணமாக, ஆன்மாக்கள் சொர்க்கத்தை அடைவதற்கான தூரம் குறைந்திருந்தது. மேலும், அவற்றின் தரை பாறைகள் நிறைந்து, சமதளமற்றதாக இருந்தது.

ஓலோன்புலாக்கில் பல நூற்றாண்டுகளாக, ஒரு மேய்ப்பன் இறந்துவிடும்போது, மக்கள் அவனை நிர்வாணப்படுத்தி, கம்பளிச் சுருளில் அவன் உடலைக் கட்டுவார்கள். சமயங்களில் பிணத்தை ஆடையோடு விட்டு விடுவதுண்டு. அதன்பிறகு, பிணத்தை ஒரு பார வண்டியில் ஏற்றி, வண்டியின் குறுக்காக ஒரு நீள்பலகையைப் பாதுகாப்புக்காக வைப்பார்கள். விடியலுக்கு முன்பாக,

குடும்பத்தின் இரண்டு மூத்த ஆண்கள் இரு பக்கமும் பலகையைப் பிடித்துக் கொண்டுவர, வான் புதைவிடத்துக்கு வண்டியை ஓட்டிச் செல்வார்கள். புதைவிடம் வந்ததும் குதிரைகளை சவுக்கால் அடித்து பாய்ந்து செல்ல வைப்பார்கள். தவிர்க்க முடியாமல் பிணம் வண்டியி லிருந்து எகிறி விழும்.

அதுவே, அதன் ஆன்மா டெஞ்ஞுருக்குத் திரும்புவதற்கான இடம். இரண்டு உறவினர்களும் கீழே இறங்கி, பிணம் நிர்வாணமாக இருக்கும்பட்சத்தில், கம்பளிச் சுருளை உருவிவிட்டு, வானத்தைப் பார்க்கும்படியாகப் புல்லின்மீது கிடத்துவார்கள். அவன் அல்லது அவள் இந்த உலகுக்கு எப்படி வந்தார்களோ அதுபோலவே நிர்வாணமாகவும் கள்ளங்கபடில்லா மலும் இருப்பார்கள். அத்தருணத்திலிருந்து இறந்துபோனவர் ஓநாய்களுக்கும் கடவுள்களுக்கும் உரியவராகி விடுவார். இறந்துபோனவரின் ஆன்மா டெஞ்ஞுருக்குச் சென்று சேர்வதென்பது, அவர் வாழ்ந்த வாழ்க்கையில் புரிந்த நற்செயல்களைப் பொறுத்தே அமையும். பொதுவாக, மூன்று நாட்களில் அது தெரிந்துவிடும். அதற்குள்ளாக, பிணத்தின் எலும்புகளைத் தவிர மற்றவை இல்லாதிருக்கும் பட்சத்தில், இறந்து போனவரின் ஆன்மா டெஞ்ஞுரை அடைந்துவிட்டிருக்கும். ஆனால் இறந்து போனவரின் உடல் இன்னமும் கிட்டத்தட்ட அப்படியே கிடக்கும் பட்சத்தில், அவரின் குடும்பம் பெரும் அச்சத்திற்கு ஆளாகிவிடும். ஆனால், எந்த ஒருவரின் ஆன்மாவும் டெஞ்ஞுரைச் சென்று அடையவில்லையென ஜென் ஒருபோதும் கேள்விப்பட்டதில்லை.

திபேத்தியர்களின் வான் புதைவு பற்றி அவன் முன்னமே அறிந்திருக்கிறான். ஆனால் மேய்ச்சல் நிலத்துக்கு வந்த பின்னரே, அதுவும் ஒரு மங்கோலிய நடைமுறை என்பதை அவன் கண்டுபிடித்தான். அங்கு, ஓநாய்களுக்குப் பதிலாகப் பருந்துகள் புதைக்கும் பணியை மேற்கொள்கின்றன. ஓலோன்புலாக்கைச் சேர்ந்த எல்லா மேய்ப்பர்களுமே வான் புதைப்பு மூலம் ஒருநாள் ஓநாய்களின் வயிற்றுக்குள் தங்களை முடித்துக்கொள்வதால், ஆயிரம் ஆண்டுகளாக அவர்கள் மரணம் பற்றிய கருத்தில் நிம்மதியாக இருக்கிறார்கள்.

ஜென்னுடைய பய உணர்வையும் மீறி அவனுடைய ஆர்வம் மேலெழுந்தது. உற்பத்திக்கான பொருட்களை விநியோகிக்கும் பார வண்டிகளின் உரிமையாளரிடமிருந்து புதைவிடங்கள் பற்றிச் சரியாக அறிந்துகொண்டு, அவன் ரகசியமாக இருமுறை புதைத்தல் எப்படி நடைபெறுகிறது என்பதைக் கவனிப்பதற்காக அங்கு சென்றான். துரதிர்ஷ்டவசமாக, இரு முறையுமே சம்பவ இடங் களைப் பனி மூடியிருந்தது. அதனால் அவன் பார்க்க நினைத்ததைப் பார்க்க முடியாமல் போய்விட்டது. ஆனால் அதன் பிறகு ஒருநாள், இளவேனிற்

பருவத்துக்குப் பனிக்காலம் வழிவிட விருந்த சமயத்தில், குதிரைகளின் தடங்களும் வண்டிச் சக்கரங் களின் தடங்களும் பனியில் பதிந்து, அவை ஒரு புதைவிடத்தை நோக்கிச் செல்வதைக் கண்டான். அவன் அத்தடங்களைப் பின் தொடர்ந்து சென்று சேர்ந்த இடத்தில், ஒரு முதியவரின் பிணத்தைக் கண்டான். அவ்வுடல் அந்த இடத்தில் கொஞ்ச நேரத்துக்கு முன்னரே விடப்பட்டிருக்க வேண்டும். அமைதியோடும் மாசற்றும் அவர் காணப்பட்டார். மல்லாந்து படுத்திருந்த உடல்மீது பனித்துகள்கள் படிந்திருந்தன. அதனூடாக அவருடைய மிருதுவான முகம் பக்தி பரவசத்தோடு காணப்பட்டது.

அந்த இடத்துக்கு வரும் வழியில் ஜென் அனுபவித்த பதற்றமும் பயமும் இப்போது நீங்கி, அதற்குப் பதிலாக ஒரு புனிதமான உணர்வுநிலை அவனுள் எழுந்தது. சாவை எதிர்கொண்டவரைப் போல் அல்லாமல், டெஞ்ஞரில் ஒரு விருந்தில் கலந்து கொள்பவரைப் போல அவர் காணப்பட்டார். இரண்டாவது ஞானஸ்நானம், மறுபிறவி. அத்தருணத்தில் ஜென்னும் அந்த பயபக்தியைப் பகிர்ந்துகொண்டான். மேய்ச்சல் நில மங்கோலிய மக்களின் ஓநாய் குலச்சின்னம் இந்த பயபக்தியோடு கூடியது. வாழ்வின் கடைசியில், உடலானது ஒப்பனைகளற்று தியாக உணர்வோடு முன்வைக்கப்படுகிறது; தூய்மையான, பூரணமான சுதந்திரத்தோடு அளிக்கப்படுகிறது. டெஞ்ஞரிடமும், ஓநாய் களிடமும், அவற்றால் அவர்களிடம் ஒப்படைக்கப்பட்ட ஆன்மாவிடமும் மங்கோலியர்கள் கொண்டிருந்த பயபக்தியை அவனால் இப்போது புரிந்துகொள்ள முடிந்தது. அந்தப் புனிதமான இடத்தில் சும்மா திரிந்து கொண்டிருக்க மனமின்றியும், இறந்து போனவரின் ஆன்மா கலக்கமடைந்துவிடுமோ என்ற பயத்திலும், மேய்ச்சல்நில மக்களின் புனித நம்பிக்கைகளை அவமதித்துவிடக் கூடாது என்ற எண்ணத்திலும் அவன் அந்த முதியவரின் உடலுக்குத் தலை வணங்கி மரியாதை செய்துவிட்டு, தன் குதிரையின் மீதேறி அந்தப் புதைவிடத்தை விட்டு அகன்றான்.

மூன்று நாட்களுக்குப் பிறகு, இறந்து போனவரின் குடும்பம் கவலைப்படும்படியாக எதுவும் நடக்கவில்லை என்பதை அறிந்து, ஜென் சென் மிகவும் ஆசுவாசமடைந்தான். அந்தக் குடும்பத்தினர், அவர்களுடைய வழக்கப்படி, புதைவிடத்தைச் சென்று பார்த்தபோது ஒரு வெளியாளின் தடங்களையும் பார்த்திருப்பார்கள். ஆனால் எவரும் ஜென் சென்னிடம்

குற்றச்சாட்டுகளோடு வரவில்லை. அவனுடைய ஆர்வமும் ஈடுபாடுகளும் அவர்களுடைய குலச்சின்னங்களோடும் புனித நம்பிக்கைகளோடும் மோதத் தொடங்கியிருப்பதை ஜென் சென் உணர்ந்தான். ஆடுகளை மேய்ப்பதில் முழு கவனம் செலுத்தத் தொடங்கினான். கடினமாக உழைத்தான். அவன் மிகுந்த ஆர்வமும், ஆழ்ந்த மதிப்பும் கொண்டிருந்த அந்தப் புதிரான மக்களை நெருங்குமளவுக்கு அவன் தீவிரமாக உழைத்தான்.

அந்த வருடம் வழக்கத்துக்கு மாறாக, ஒரு மாதத்துக்கும் முன்பாகவே, இளவேனிற் பருவம் வந்துவிட்டது. வெதுவெதுப்பான காற்று, ஓலோன்புலாக்கைப் பொன் மஞ்சளாக மாற்றியது. பனிக்காலம் முழுவதும் பனியால் உள்ளே அழுத்தி வைக்கப் பட்டிருந்த இலையுதிர் காலப் புல், மேலெழும்பி வந்தது. சூரிய ஒளி படும்படியாக அமைந்திருந்த பல சரிவுகளின்மீது பசும் மொட்டுகள் அரைகுறையாக வெளிப்பட்டிருந்தன. உலர்ந்த காற்றும் வெதுவெதுப்பான நாட்களும் இந்த மாற்றங்களை வெகுவாக பாதித்தன. பசும்புல் நிலத்துக்குக் குழுக்கள் சென்றபோது, அங்கு மக்கள் காட்டுத் தீ வராமலிருப்பதற்கான தடுப்பு நடவடிக்கைகளிலும், புதிதாய்ப் பிறந்த விலங்குகளைக் காப்பாற்றுவதற்காக வறட்சிக்கு எதிரான நடவடிக்கைகளிலும் ஈடுபட்டிருந்தனர்.

காவோ ஜியான்சோங் மிகவும் கால தாமதமாக வந்து சேர்ந்தான். அந்த ஆண்டின் தொடக்கத்தில் பலர் நகரத்துக்குப் பெருவாரியாகக் கிளம்பி போக்குவரத்து மற்றும் கட்டுமானப் பணிகளில் வேலை பார்க்கச் சென்றனர். கஸ்மாய் குழுவினர், வண்டி நிறைய மான்களைப் பொருள் கொள்முதல் நிலையத்துக்குக் கொண்டுவந்தபோது அவர்கள் அந்தக் காட்சியைப் பார்த்துப் பொறாமைப்பட்டனர். அவர்கள் வேட்டைக்காரர்களைச் சூழ்ந்துகொண்டு, வேட்டை நடந்த இடம் குறித்து அறிய முற்பட்டனர்.

புதையுண்டு உறைந்துபோன எல்லா மான்களும் எடுக்கப்பட்டு விட்டன என்று அவர்களுக்குச் சொல்லப்பட்டது. அவர்கள் வடகிழக்குக் கற்கண்டுகளோடு பாயரைச் சென்று பார்த்தனர்.

அவன் ஒரு காலியான மலைப் பள்ளத்தாக்குக்கு அவர்களை அனுப்பி வைத்தான். கடைசியில், மஞ்சூரிய பண்ணைகளைச் சேர்ந்த அவர்கள்,

மேய்ச்சல்நில மங்கோலியர்களின் பலவீனத்தைக் கண்டறிந்தனர் _ மது. அவர்கள் ஆடு மேய்க்கும் சஞ்சாயைப் பிடித்து, அவனுக்கு மது ஊற்றிக் கொடுத்து மான்களின் இடத்தை அறிந்துகொண்டனர். அவர்கள் மிக விரைவாக, ஓநாய்க் கூட்டத்தையும் காவோ ஜியான்சோங்கையும் மிஞ்சி, அங்கு வந்து சேர்ந்தபோது, மான்கள் பனித் தளத்தை உடைத்துக்கொண்டு வெளிப்பட்டுக் கொண்டிருந்தன. அவர்கள் ஒரே நாளில் அதற்கருகில் ஒரு முகாம் அமைத்து, சிறியது முதல் பெரியது வரை, நல்லது முதல் கெட்டது வரை ஒன்று விடாமல் எடுத்தனர். அதன் பிறகு அவர்கள் அவற்றை வண்டிகளில் ஏற்றி இரவோடு இரவாக 'பாயன் கோபி கம்யூன்'இல் உள்ள பொருள் கொள்முதல் நிலையத்துக்குக் கொண்டு வந்தனர்.

அதையடுத்த பல இரவுகளில், பள்ளத்தாக்கெங்கும் பசியோடிருந்த ஓநாய்களின் துயரமும் கோபமும்மிக்க ஊளைகளின் எதிரொலிகளை குதிரை மேய்ப்பர்கள் கேட்டனர். அவர்கள் மிகவும் பதற்றத்துக்கு ஆளானார்கள். அவர்கள் பார்வையிலிருந்து குதிரைகள் எங்கும் போய்விடாமல் கவனமாகக் கண்காணித்தனர்.

குடில்களில் இருந்த அவர்களுடைய பெண்கள், ஓநாய்களின் கோபத்துக்கு அவர்கள் கடுமையான விலை கொடுக்க வேண்டிவரும் என்பதை அறிந்திருந்தார்கள். கோபத்தில் வீட்டு விலங்குகளை அடித்தனர்; சோகப் பாடல்களை மிகுந்த விரக்தியோடு பாடினர்.

அதனைத் தொடர்ந்து, தலைமையகத்திலிருந்தது ஒரு சுற்றறிக்கை வந்தது. ஓநாய்க் குட்டிகளைத் திருடும் வருடாந்திர வழக்கம் மீண்டும் அமல்படுத்தப்படுவதாக அதில் தெரிவிக்கப் பட்டிருந்தது. முந்தைய ஆண்டுகளை விட வெகுமதி கூட்டப்பட்டிருந்தது. இராணுவப் பிரதிநிதி பாவோ சுங்காயின் நேரடி தலையீடு இதற்கு உதவியாக இருந்தது. முன்னெப்போதையும் விட குட்டி ஓநாயின் தோல் நல்ல விலைக்கு வாங்கப்படுமெனவும் அதில் குறிப்பிடப்பட்டிருந்தது. மிருதுவாகவும் பளபளப்பாகவும் இருக்கக் கூடிய அந்தத் தோல்கள் கிடைப்பதும் அரிது, விலையும் அதிகம். பெண்களின் தோல் மேலாடைகளுக்கு அது பயன்படுத்தப்படுகிறது. வடக்கத்திய அதிகாரிகளின் மனைவியர்கள் விரும்பி அணிவது.

பில்ஜி அமைதியாக, தொடர்ந்து புகைத்தபடி இருந்தார். அவர் முணுமுணுத்தது ஜென்னுக்குக் கேட்டது: “ஓநாய்கள் விரைவில் பழி வாங்கும்.”

## 5

வட எல்லைத் தொடுவானிலிருந்து அடர்த்தியான கருமேகங்கள், கருந்தீ அல்லது அடர்ந்த புகை போல மூர்க்கமாக நீல வானினூ டாகப் படர்ந்து சென்றன. சில நொடிகளில் மேகங்கள் மலை எல்லைகளின் பல மைல் தொலைவுகளை விழுங்கிச் சென்றன. மேற்கின் பின்னால், ஆரஞ்சு வண்ணச் சூரியன் இன்னமும் மறையவில்லை. வட திசைக் காற்று பனித் துகள்களைச் சுமந்து வந்து, ஓலோன்புலாக்கின் பரந்த பகுதிகளெங்கும் விரைவாகத் தூவின.

மங்கோலியப் பழமொழி ஒன்று: ‘ஓநாய்கள் காற்றைப் பின்தொடரும்.’ பல தலைமுறைகளாக, எல்லைப் பகுதியின் இரு புறமும் கொரில்லா யுத்தங்களை நிகழ்த்திய ஓலோன்புலாக் ஓநாய்க் கூட்டம், தென்பகுதிக்கு முன்னமே வந்த இளவேனிற் பருவத்தை சாதகமாக்கிக் கொண்டு, தீ தடைகளைத் தாண்டி விரைந்து வந்தன. காவல் புரியப்பட்ட பொது சாலைகளைத் தீர்க்கமாகக் கடந்து மேய்ச்சல் நிலத்துக்குத் திரும்பின. ஓநாய்கள் கடும் குளிரினால் பாதிக்கப்பட்டிருந்தன. மேலும், புல் இல்லாததால் வேட்டை யாடப்படுவதற்கான விலங்குகளும் மிகக் குறைவாகவே இருந்தன. அதனால் அவை பசியால் தவித்தன. அவற்றின் சொந்த பிராந்தியத்தில் அவை பதுக்கி வைத்த உறைந்த மான்கள் கொள்ளையடிக்கப்பட்டு விட்டதாலும், அவற்றின் பிராந்தியத்துக்கு அப்பால் பஞ்சம் தலைவிரித்து ஆடியதாலும் அவற்றால் மான்களை வேட்டையாட முடியவில்லை. இரு பிராந்தியங்களுக்குமான எல்லைப் பகுதியில் பசியால் வாடிய எண்ணற்ற ஓநாய்கள் ஒரு கூட்டமாக ஒன்று சேர்ந்தன. அவை தங்கள் பிராந்தியத்துக்குள் நுழைந்தபோது அவற்றின் கண்கள் நெருப்புக் கோளங்களாகச் சிவந்திருந்தன. அவை பெரும் தீனி வேண்டப்படுபவை; அவற்றின் கொல்லும் முறை தாட்சண்யமற்றது; விளைவுகள் பற்றிக் கவலைப் படாமல் செயல்படக்கூடியவை. ஆண் தலைமை ஓநாய்கள், பழி வாங்குவதற்கான கொலைவெறி சிந்தனைகளைக் கொண்டிருந்தன. உணவுக்காக அவை சாகவும் தயாராக இருந்தன. அவை தலைமையேற்று, எப்போதையும் விட மிகப் பக்கமாகக் கூட்டத்தை அழைத்து வந்தன. அச்சமயத்தில் மக்கள் ஓநாய்க் குகைகளை சோதனையிடுவதில் மும்முரமாக இருந்தனர்.

1960களின் பிற்பாதியில், மழை வருமென கணிக்கப்பட்டால் வறட்சி ஏற்படும்; தெளிந்த, பிரகாசமான நாளாக அமையுமென அறிவிக்கப்பட்டால், சூரியன் எட்டியே பார்க்காது. “வானிலை அறிக்கைகள் கேலிக்குரியவை” என்பார் இயக்குனர் உல்ஜீ. பழைய காலத்தைச் சார்ந்தவர்களாகிய சிலரும் பில்ஜியையும் தவிர எவரும் இளவேனிற் பருவம் முன்னதாக வந்துவிடுமென்றோ, ஓநாய்களின் பேரழிவு நடவடிக்கையையோ எதிர்பார்த்திருக்கவில்லை. ஓநாய்க் குகைகளில் சோதனையிடுவதற்காகப் பெருமளவில் மக்களை புல்வெளிப் பிரதேசத் தலைமை எடுத்துக் கொண்டுவிட்டது. எல்லைப் பகுதி நிலையத்தைச் சேர்ந்தவர்கள் எப்போதுமே மேய்ப் பர்களிடமும் வீட்டு விலங்குகளின் உற்பத்தியிலும் அக்கறையோடு இருப்பவர்கள். அவர்களும் கூட, என்ன நடக்கவிருக்கிறதென்பதை எச்சரிக்கத் தவறிவிட்டார்கள். முன்னர், அவர்கள் வழக்கமாகக் கண்காணிப்புப் பணிக்காகச் சுற்றி வரும்போது ஓநாய்க் கூட்டத்தின் தடங்களைக் கண்டால் தலைமையிடத்துக்கும் மேய்ப்பர்களுக்கும் தெரியப்படுத்துவார்கள். ஓநாய்கள், தட்பவெப்ப நிலைக்கேற்ற யுத்தத்தில் ஈடு இணையற்றவை; அவை, பனிப்புயல் சூழலிலும் அடிக்கடி மின்னல் வேகத் தாக்குதல் நிகழ்த்துபவை.

மங்கோலியக் குடிமக்கள் படையின் ஒரு குறிப்பிட்ட பிரிவுக்குச் சொந்தமான பல டஜன் குதிரை மந்தைகளிலிருந்து எழுபது அல்லது எண்பது அருமையான குதிரைகள், ஓலோன்புலாக்கின் அருமையான புல்நிலப் பகுதியொன்றுக்கு சமீபத்தில் இட்டுச் செல்லப்பட்டன. மருத்துவப் பரிசோதனைக்காக அவை அங்கு காத்திருந்தன. எந்தவொரு குதிரைக்கும் சுரப்பிகளில் பாதிப் பில்லையென்று தெரியவந்தால் அவை தங்கள் பணியை மேற்கொள்ளும். யுத்த தயாரிப்புகள் பதற்றத்தைத் தந்திருந்ததால் குதிரைக்காரர்கள் சேணங்களில் மிகுந்த பொறுப்புடன் இருந்தார்கள். இராணுவப் பிரதிநிதியும் புரட்சிக் குழுவினரும் நம்பிக்கைக்குரிய, கண்காணிப்பில் சிறந்த, தீரமிக்க நான்கு மேய்ப்பர்களைக் குறிப்பாகத் தேர்ந்தெடுத்தனர். மேலும் அவர்கள் மிகச் சிறந்த குதிரையோட்டிகள். அவர்களை இரு குழுக்களாகப் பிரித்து, நாளின் 24 மணி நேரமும் குதிரைகளைப் பார்த்துக் கொள்ளும் பொறுப்பை ஒப்படைத்தனர். இவ்விரு குழுக்களும், இரண்டாம் படைப் பிரிவின் தலைவனான பட்டுவின் தலைமையில் இயங்கின. குதிரைகள் தங்களுடைய

சொந்த மந்தைக்குத் திரும்ப ஓடி விடாதபடி பார்த்துக்கொள்வதற்காக, பிற மந்தைகளைப் பல மைல்களுக்கப்பால் நகர்த்த அவன் உத்தரவிட்டான். தென்றல் மிதமாகவும், இளவேனில் காற்று இதமாகவும், நீர் சுத்தமாகவும், புல் அடர்ந்து செழித்துமிருந்தன. அந்த வருடத்தின் முதல் மொட்டுகள் அரும்பி, போர்க் குதிரைகளின் கூட்டம் மிகவும் மகிழ்ச்சியாக ஒன்றிணைந்து தங்கியிருப்பதற்கு நல்லதொரு வழியை அமைத்திருந்தன. நான்கு மேய்ப்பர்களும் தங்கள் பணியை மிகத் தீவிரமாக மேற்கொண்டனர். பல நாட்களுக்கு எல்லாமே நல்லபடியாக அமைந்தன.

திடீரென்று தென்றல் காற்றுக்குப் பதிலாகப் புயல் காற்று கடும் வேகத்துடன் வீசியது. ஏரி நீர் மேய்ச்சல் நிலத்துக்குள் புகுந்தது. வீட்டுப் பிராணிகள் பட்டிகளிலிருந்து வெளியேறத் தொடங்கின. காற்று வீசும் பாதைகளில் அமைக்கப்பட்டிருந்த குடில்கள் தலைகீழாக நிலை குலைந்தன. அவை சில கணங்களுக்கு பிரமாண்டமான கிண்ணங்கள் போலாகிப் பின் துண்டு துண்டாகச் சிதைந்து விழுந்தன. காற்றடித்த திசையில் சென்ற வண்டிகளின் கூடாரங்கள் சிதறி வானில் பறந்தன. பனி மிகவும் அடர்த்தியாக விழுந்தது; எவரேனும் குதிரையில் சென்றால் அவரால் எதையும் பார்க்க முடியாது. “பனிப்புயல், பனிப்புயல் அது தலைமுடியை விரித்துப் போட்டபடி வரும் பைத்தியக்காரத் தனமான வெண்ணிற துஷ்ட தேவதை” என்று பழங்காலத்தில் ஒரு மந்திரவாதி சொல்லியிருப்பதாக முதியவர் பில்ஜி கூறினார். மந்திரவாதியின் வார்த்தைகள் நவீன காலத்துக்கும் பொருந்தின.

மேய்ச்சல் நிலமெங்கும், சொர்க்கத்துக்கும் பூமிக்குமிடையே, பனிப்புயல் என்று வெறுமனே குறிப்பிடுவதுகூட மனிதனுக்கும் மிருகத்துக்கும் பயத்தை விளைவித்தது. மக்கள் வீறிட்டு அலறினர்; குதிரைகள் கனைத்தன; நாய்கள் குரைத்தன; ஆடுகள் கத்தின. இவையெல்லாம் ஒருங்கிணைந்து ஓர் அருவெருப்பொலியாக, ஒரே சப்தமாக பயங்கரமான வெள்ளைமுடிப் பனிப்புயலின் பைத்தியக் காரத்தனமான ஊளையாக வெளிப்பட்டன. ஓநாய்க் குகைகளில் குட்டிகளைப் பிடிக்க மலைகளுக்குச் சென்ற மக்கள், அங்கிருந்து நகர முடியாதபடி ஆகிவிட்டது. உள்ளே செல்வதற்கோ வெளியில் வருவதற்கோ அவர்களுக்கு வழியின்றிப் போனது. வீட்டுப் பிராணிகளைப் பராமரிப்பதற்காக விடப் பட்டிருந்த தொழிலாளிகள், முதியவர்கள் மற்றும்

நோயாளிகள், பெண்கள் மற்றும் குழந்தைகள் தெறித்தோடிய விலங்குகளைப் பிடிப்பதிலும் அவற்றை மீண்டும் பட்டியில் அடைப்பதிலும் மும்முரமாக இருக்கும்படி ஆயிற்று. மேய்ச்சல் நிலத்தில், பல ஆண்டுகளின் உழைப்பில் சேகரமான சேமிப்புகளைத் தக்க வைப்பதென்பது ஒரு பகல் அல்லது இரவுக்குள் சோதனைக்குள்ளாவது அடிக்கடி நேர்கிறது.

எல்லையைக் கடந்து வந்த ஓநாய்க் கூட்டத்தின் வடிவமைக்கப்பட்ட தாக்குதலின் முதன்மை இலக்காக இருந்தது, வளப்பமான போர்க் குதிரைகளின் கூட்டமே. குதிரைகள் ஏற்கனவே உத்தரவின்படி அனுப்பப்பட்டுவிட்டன என்று கருதியிருந்த பில்ஜி, பனிப்புயல் உருவானபோது ரகசியமாக மகிழ்ச்சி அடைந்தார். மருத்துவப் பரிசோதனை அறிக்கை தாமத மானதால், குதிரைக் கூட்டம் புறப்பட்டுச் செல்வது ஒரு நாள் தள்ளிப் போடப்பட்டுவிட்டது அவருக்குப் பிறகுதான் தெரிய வந்தது. அந்த வருடம் வழக்கத்துக்கு மாறாக, அதிக அளவில் ஓநாய்க் குட்டிகள் கண்டுபிடிக்கப்பட்டன. குறைந்தபட்சம் ஒரு டஜன் குகைகளிலிருந்து நூற்றுக்கும் மேற்பட்ட குட்டிகள் எடுக்கப் பட்டன. குட்டிகள் எடுத்துச் செல்லப்பட்டதில் மிகுந்த துயரத்துக்கு ஆளான தாய்கள் ஓநாய்க் கூட்டத்தோடு சேர்ந்துகொண்டன. இதனால் ஓநாய்க் கூட்டம் கொடூரமும் கட்டுக்கடங்கா வெறியும் கொண்டவையாகின.

பில்ஜி, “டெஞ்ஞர் ஓநாய்த் தலைவனுக்கு இந்த வாய்ப்பை பரிசாகத் தந்திருக்கிறது” என்றார். “ஓலோன்புலாக் பற்றி நன்கறிந்த வெண்ணிற ஓநாய் அரசன், பழிக்குப் பழி வாங்க இதைத் தவற விட மாட்டான் என்பதில் எந்த சந்தேகமுமில்லை.”

காற்றின் முதல் சப்தத்தின்போது, தற்காலிக மேய்ப்பர்களின் சிறிய குடிலிலிருந்தது பட்டு பாய்ந்து வெளியில் வந்தான். தொடர்ந்து பல இரவுகள் காவல் புரிந்ததை அடுத்து, இதுதான் ஓய்வுக்கான நாளாக அமைந்தது. அவனும் அவனுடைய குதிரையும் மிகவும் களைத்துப் போயிருந்தார்கள். ஆனாலும் அவனால் தூங்க முடியவில்லை. நாள் முழுவதும் அவன் கண்களை மூடவேயில்லை. குதிரைகளைச் சூழ்ந்தே வளர்ந்த அவன், பல பனிப்புயல்களின் போது வெகுவாகப் பாதிக்கப்பட்டிருக்கிறான். ஓநாய்களினால் அடிக்கடி பலியாக்கப்பட்டிருக்கிறான். ஆனால் சமீபமாக பல நாட்கள் எவ்வித

அசம்பாவிதமும் ஏற்பட்டிருக்கவில்லை என்பதால் அவன் இப்போது எச்சரிக்கையுடன் இருந்தான். ஒரு மங்கோலிய யாழ் இசைக் கருவியின் தந்திகளைப் போல் அவனுடைய நரம்புகள் முறுக்கேறியிருந்தன.

மிக லேசான தென்றல் காற்று, புல்லின் வெறும் அசைவு ஆகியவை கூட அவன் காதுகளில் ரீங்காரமாய் ஒலித்தன. எல்லா மேய்ப்பர்களின் நினைவுகளிலும் மேய்ச்சல்நில முதுமொழியொன்று ரத்தத்தினால் எழுதப்பட்டிருக்கிறது: மங்கோலிய மேய்ச்சல் நிலத்தைப் பொருத்தவரை, அமைதியைப் பின்தொடர்ந்து அமைதி வருவதில்லை; ஆனால் அபாயத்தைப் பின்தொடர்ந்து எப்போதும் அபாயம் வரும்.

குடிலிலிருந்து வெளிவந்த அந்தத் தருணத்திலேயே வரும் பனிப்புயலின் வாசனையை அவன் உணர்ந்தான். காற்று வந்த திசையில் அவன் பார்த்தபோது, அவனுடைய அகன்ற சிவந்த முகம் வெளிறியது; அவனுடைய கண்களில் பயம் ஒளிர்ந்தது.

குடிலுக்குள் அவசரமாய் திரும்பி, தூங்கிக்கொண்டிருந்த அவனுடைய தோழன் லாசுருங்கைத் தட்டி எழுப்பினான். பிறகு, அவன் கடகடவென செயல்பட்டான். அவனுடைய பேரொளி விளக்கை எடுத்துக்கொண்டான்; துப்பாக்கியில் குண்டுகளை நிரப்பினான்; மணிக்கட்டின் மீது அவனுடைய மேய்ச்சல் தடியைக் கட்டிக்கொண்டான்; கம்பளி அங்கியை மாட்டிக்கொண்டான்; அடுப்பிலிருந்த நெருப்பை நீரூற்றி அணைத்தான்; குதிரைகளைக் காவல் காத்துக்கொண்டிருந்த இருவருக்கான கம்பளி ஆடைகளை எடுத்துக்கொண்டான். அவனும் அவனுடைய தோழனும், துப்பாக்கிகள் அவர்களுக்குப் பின்னால் தொங்க, நீண்ட ஃப்ளாஷ் லைட்டுகளை ஏந்திக்கொண்டு, குதிரைகளின் மீதேறி வடதிசை நோக்கிப் பாய்ந்து சென்றனர். அங்குதான் குதிரைகள் புல் மேய்ந்துகொண்டிருந்தன.

மலைகளுக்கப்பால் சூரியன் அஸ்தமனமானதும், மேய்ச்சல் நிலம் இருளில் மூழ்கியது. இரண்டு சவாரியாளர்களும் பனிப் புயலினால், ஒரு கடலலை போலவும், ஒரு பனிப்பாறைச் சரிவில் செல்வதைப் போலவும் ஏறி இறங்கித் தடுமாறிச் சென்றனர். காற்று பெரும் தடையாக இருந்தது. முகம் கருஞ்சிவப்பாக மாறியது.

பெரும் பனித்துளிகள் கண்களை மூடச் செய்தன. குதிரைகளையும் பயம் பீடித்துக்கொள்ள, அவை வேறு வழியின்றித் திரும்பி, தலைகளை நிமிர்த்திப் புயல் காற்றிலிருந்து தப்பியோட எத்தனித்தன. தன் முகத்துக்கு முன்னால் தன் கையைக்கூடப் பார்க்க முடியாத பட்டு உரக்கக் கத்தினான். லாசுருங்கிடமிருந்து எவ்வித பதிலுமில்லை. காற்றும் பனியும் கலந்து சீற்றத்துடன் வெளிப்பட்ட ஊளைச் சத்தத்தில் எல்லாமே அமுங்கிவிட்டன. பட்டு, குதிரையின் கடிவாளத்தை இறுக்கிப் பிடித்துக்கொண்டு, நெற்றியில் உறைந்திருந்த பனியைத் துடைத்துவிட்டான். அவன் அமைதியாக இருக்க முயற்சி செய்தான். பிறகு, தன் கையில் ஃப்ளாஷ் லைட்டை சொருகிக்கொண்டு அதை எரியச் செய்தான். பொதுவாக, அதிலிருந்து கிளம்பும் ஒளிக்கீற்று நூறு அடி தூரத்துக்கும் அப்பால் வெளிச்சத்தைப் பாய்ச்சும். ஆனால், இப்போது அவனால் சில அடி தூரம் மட்டுமே பார்க்க முடிந்தது. அடர்த்தியான பனிச் சிதறல்களே அவன் பார்வைக்குத் தென்பட்டன. திடீரென, ஒரு பனி மனிதனும் பனிக் குதிரையும் ஒளிக்கீற்றுக்குள் நுழைந்தனர். அங்கிருந்தும் ஒரு மங்கலான ஒளிக்கீற்று வெளிப்பட்டது. அவர்கள் இருவருமே தங்கள் ஃப்ளாஷ் லைட்களோடு வட்டங்களடித்துத் தங்கள் குதிரைகளைக் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார்கள். கடைசியாக, அவர்கள் மறுபடியும் பக்கம் பக்கமாக வந்தார்கள்.

பட்டு, லாசுருங்கைப் பிடித்திழுத்து அவனுடைய காதுக்குள் கத்தினான்: ‘‘இங்கேயே இரு. நகர்ந்து விடாதே. இங்குதான் நாம் குதிரைக் கூட்டத்தை நிறுத்தியாக வேண்டும். அதன் பிறகு, அவற்றை நாம் கிழக்கு நோக்கிக் கொண்டு செல்ல வேண்டும். ஜியாஷி மலையிலிருக்கும் சிறிய ஏரியை நாம் எப்பாடு பட்டாவது தவிர்த்தாக வேண்டும். நாம் அப்படிச் செய்யாவிட்டால் எல்லாவற்றையும் இழந்துவிடுவோம்.’’

‘‘என் குதிரைக்கு இப்போதே ஆவி போய்விட்டது. இனி, ஓநாய்கள் வந்து சூழ்ந்துகொண்டால் நாம் நால்வராக மட்டும் எப்படி சமாளிப்பது?’’ என்று பதிலுக்கு லாசுருங் கத்தினான்.

‘‘அதில்தான் நம் வாழ்க்கையே இருக்கிறது’’ என பட்டு கத்தினான்.

அவர்கள் மேற்கு திசை நோக்கி, ஃப்ளாஷ் லைட்டுகளை முன்னும் பின்னுமாக அசைத்து, அவர்களுடைய மற்ற இரு தோழர்களுக்கும் சைகை

கொடுத்தார்கள்.

இரண்டு ஒளிக்கீற்றுகளின் வெளிச்சத்துக்குள் ஒரு சாம்பல் வண்ணக் குதிரை நுழைந்தது; அது வேகத்தைக் குறைத்து பட்டுவின் பக்கமாக, தன்னைக் காப்பாற்றப் போகும் இரட்சகரைக் கண்டு விட்டதைப் போல, வந்து நின்றது. சாம்பல் குதிரை கலக்கத்தோடு கனைத்தது. அதன் கழுத்துக்குக் கீழாகக் கடிக்கப்பட்டிருந்தது. அந்தக் காயத்திலிருந்து கசிந்திருந்த ரத்தம் சிவப்புப் பனிக்கட்டி வரிகளாய் காணப்பட்டது. லாசுருங்கின் குதிரை, ரத்தத்தைப் பார்த்த மாத்திரத்தில் காற்றின் திசையில் தறி கெட்டு ஓடியது. பட்டு, தன் தோழனுக்குப் பின்னால் விரைந்து சென்றான்; சாம்பல் குதிரையும் பனி மூடிய இருட்டில் ஓடியது.

பட்டு, லாசுருங்கை நெருங்கி, அவனுடைய குதிரையின் கடிவாளத்தைப் பிடித்து நிறுத்திய இடத்தில் அவர்களுக்கு வலப் பக்கமாகக் குதிரைக் கூட்டமிருந்தது. அவனுடைய ஃப்ளாஷ் லைட்டின் துணையோடு பார்த்தபோது, எல்லாக் குதிரைகளும் பெரிய சாம்பல் குதிரையைப் போலவே கடிபட்டிருந்தன. அவற்றின் மெல்லிய கனைப்பொலி காற்றினூடாக வெளிப்பட்டுக் கொண்டிருந்தது; அச்சத்தால் நடுங்கிக்கொண்டிருந்த அவற்றின் குளம்புகள் பனியை உதைத்து அலை அலையாய் சிதறடித்துக் கொண்டிருந்தன. பட்டுவும் லாசுருங்கும் தங்கள் விளக்குகளைக் கீழே காட்டியபோது, அங்கு கண்ட காட்சி நிலைகுலையச் செய்தது. முன்னால் விழப்போன லாசுருங், தன் கைகளால் அவனுடைய குதிரையின் கழுத்தைப் பற்றிக் கீழே விழுந்துவிடாமல் சமாளித்தான். ஓநாய் களின் தடங்களைப் பார்க்க முடியாத அளவுக்கு ஒளிக்கீற்றுகளி லிருந்து வெளிப்பட்ட வெளிச்சம் மங்கலாக இல்லை. கூர்மையான பார்வை கொண்ட அந்த இரு மேய்ப்பர்களும், அவர்களால் பார்க்க முடிந்த எல்லாக் குதிரைகளிடத்தும் ஒன்று அல்லது அதற்கு மேற்பட்ட ஓநாய்களின் கோரைப் பற்கள் ஆழமாய்ப் பதிந்திருப் பதைக் கண்டனர். ஓநாய்க் கூட்டத் தலைவனின் மென்முடி, காற்றினால் அங்கு அடித்து வரப்பட்ட பனியால் மேவப்பட்டு, ஒரு வெள்ளைப் பேயுரு போலக் காணப்பட்டது. வழக்கத்தை விடவும் ஓநாய்களின் உடல்கள் பெரியதாக, பயங்கரமான அளவுக்குப் பெரியதாகக் காணப்பட்டன. வெள்ளை ஓநாய்க் கூட்டம், பிசாசு போன்ற ஓநாய்க் கூட்டம், கெடுதியான ஓநாய்க் கூட்டம்

மேய்ப்பர்களைப் பயப்படுத்தியதில் பாதி உயிர் போய் விட்டது. பொதுவாக, ஓநாய்கள் ஃப்ளாஷ் லைட்டுகளுக்குப் பயப்பட்டு ஓடிவிடும் இயல்பு கொண்டவை. ஆனால் இப்போது அவை பழி வாங்கும் திடத்தோடும், வழக்கத்துக்கு மாறான மூர்க்கத்தோடும், பயமற்றும் இருந்தன. ஆண் தலைமையும் தாய் ஓநாய்களும் முன்னின்று வழி நடத்தின.

பட்டுவும் லாசுருங்கும் மற்ற இரண்டு மேய்ப்பர்களையும் அங்கு காணவில்லை என்பதை அறிந்தபோது, பனிப்புயலில் அவர்கள் பாதி உறைந்து போயிருக்கலாமென்று எண்ணினர்; அல்லது பயந்துபோன அவர்களுடைய குதிரைகள் எடுத்த ஓட்டத்தில் எங்காவது போய்ச் சேர்ந்திருக்கலாம். அவர்கள் பகல் நேரக் கண்காணிப்பில் இருந்ததால் அவர்களிடம் ஆயுதங்களோ, ஃப்ளாஷ் லைட்டுகளோ இருக்கவில்லை; மேலும் கம்பளி ஜாக்கெட்டுகளும் குளிரிலிருந்து பாதுகாப்பதற்கு அவர்கள் வசமில்லை. பட்டு, வலி நிறைந்த ஒரு முடிவை எடுத்தாக வேண்டிய கட்டாயத்தில் இருந்தான். “அவர்களை மறந்துவிடலாம். குதிரைகளைக் காப்பாற்றுவதுதான் மிக முக்கியம்” என்றான் அவன்.

பட்டுவின் ஃப்ளாஷ் லைட்டிலிருந்து வெளிப்பட்ட வெளிச்சத்தில் குதிரைக் கூட்டம் இன்னமும் ஓடிக்கொண்டிருப்பதைப் பார்க்க முடிந்தது. எழுபது அல்லது எண்பது உஜிம்ஜின் போர்க் குதிரைகள். அருமையான தோற்றம் கொண்டவை. மிகக் கடினமான, சிரமமான வேலையை ஏற்கக் கூடியவை; பசியோ தாகமோ அவற்றை பாதிப்பதில்லை; கொதிக்கும் உஷ்ணத்தையும் கடும் குளிரையும் தாங்கக் கூடியவை; வெகு தொலைவுக்கு அபார வேகத்தோடு செல்லக் கூடியவை. பொதுவாக, அவற்றின்

மேய்ப்பர்கள் அல்லது தலைமையிடத் தலைவர்களே அவற்றில் சவாரி செய்வார்கள். அவை ஓநாய்களுக்குத் தீனியாகி விட்டாலோ, அல்லது தப்பியோடும்போது ஏரியில் மூழ்கிவிட்டாலோ மற்ற மேய்ப்பர்கள் ஓநாய்களைப் போலவே அவனையும் அவனது தோழர்களையும் துண்டு துண்டாகக் கிழித்தெறிந்து விடுவார்கள்.

லாசுருங் பின்னால் நின்றுவிட்டதைப் பார்த்த பட்டு, முழங்காலை அவனுடைய குதிரையின் மீது இடித்து, அங்கு சென்று தோழனின் தலையில் தட்டினான். பின்னர் மந்தையை நோக்கிச் செல்லும் வகையில் லாசுருங்கின் குதிரையை

முழங்கையால் இடித்தான். அவனுடைய ஃப்ளாஷ் லைட்டை அடுத்தவனின் மீது பாய்ச்சி, “நீ ஓடிப் போனால், நானே உன்னைக் கொன்றுவிடுவேன்” என்று கத்தினான்.

“நான் ஒன்றும் பயப்படவில்லை. ஆனால் இந்தக் குதிரைதான்...” என்று லாசுருங் திரும்பக் கத்தினான். அவன் கடிவாளத்தை சுண்டிவிட்டுக் குதிரையைத் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவந்தான். பின்னர், ஃப்ளாஷ் லைட்டை எரியச் செய்து, தலைக்கு மேலாக மேய்ச்சல் தடியைச் சுழற்றியபடி, மந்தையை நோக்கிச் செலுத்தினான். அவனும் பட்டுவும் தங்களுடைய விளக்குகளோடு குதிரைகளைச் செலுத்தியபடி, தங்களுடைய தடிகளால் கீழ்ப்படிய மறுத்த விலங்குகளை அடித்து, அவற்றை மந்தையின் பிறவற்றோடு தொடர்ந்து வரச் செய்தனர். காற்றின் திசையில் செல்வதற்குப் பதிலாக, கிழக்கு நோக்கி அவற்றைச் செலுத்தினர். அவர்கள் சிறிய ஏரியை நெருங்கிக் கொண்டிருப்ப தாக, அது இன்னும் மூன்று அல்லது நான்கு மைல் தூரமே இருப்பதாக, பட்டு மதிப்பிட்டான். அதிவிரைவாகச் செல்லக்கூடிய பாதங்களை உடைய இவை, அரை மணி நேரத்துக்குள் ஏரியின் முன் நின்றுவிடும். அந்த ஏரி, மேற்கிலிருந்து தெற்காக மிகவும் குறுகியது; கிழக்கிலிருந்து மேற்காக மிகவும் பரந்துபட்டது. அதாவது, அந்த ஏரி அவர்களுக்கு நேராகப் படுக்கை வசத்தில் இப்போது இருக்கிறது. இதுதான் அவர்கள் இருவரும் எதிர்கொள்ளவிருக்கும் பெரிய பிரச்சனை. காற்றின் திசை மாறாத வரை, அதன் ஓரமாகச் சென்று கடப்பது மிகவும் கஷ்டமானது. ஒரு ராட்சசப் பிசாசுவின் திறந்த வாய், கொழுத்த குதிரைகளின் விருந்துக்காக _ காற்று சாத்தானாலும் ஓநாய்க் கடவுளாலும் அளிக்கப்படுவது _ காத்திருப்பதாகப் பட்டுவின் மனதில் தோன்றியது.

பனிப்புயலின் திசை சற்றும் மாறவில்லை; காற்றின் ஊளை சீராகக் கேட்டுக்கொண்டிருந்தது. இருளிலும் கூட, அவனுடையகுதிரை புல்லை மிதித்துச் செல்லும் தன்மையில் அமைந்த மாற்றங் களுக்கேற்ப செல்லும் வழி குறித்து பட்டுவினால் உணர முடிந்தது. அவன் இருக்குமிடம் எது என்பதையும், அவன் சென்றுகொண்டிருக்கும் இடம் எது என்பதையும் பூமி நாளங்களின் சீரான வரிசையிலிருந்தும், தரைப் பரப்பின் தன்மையிலிருந்தும் அவனால் சொல்ல முடியும். அவன் பதற்றத்தையும் மீறியிருந்தான். ஓநாய்க்

குகைகள் கொள்ளையடிக்கப்பட்டதால், ஆண் தலைமை ஓநாயை விடவும் பெண் ஓநாய்களே கட்டுக்கடங்காத வெறியோடு இருப்ப தாக அவன் உணர்ந்தான். அவன் ஓநாய்களால் சூழப்பட்டிருக்கும் நிலைமை குறித்து சற்றும் பொருட்படுத்தவில்லை; அவனுடைய குதிரையை அவை எச்சமயத்திலும் இழுத்துக் கீழே தள்ளிவிடும் சாத்தியத்தைப் பற்றியும் அவன் கவலைப்படவில்லை. மேலும், அவனுடைய குதிரை நிலை தடுமாறி பசியோடும், பழியுணர்ச்சியோடும், கோபத்தோடுமிருக்கும் ஓநாய்க் கூட்டத்தின் நடுவே அவனைக் கவிழ்த்துவிடக் கூடுமென்ற சாத்தியத்தையும் அவன் பொருட்படுத்தவில்லை. அவன் எல்லாவற்றையும் உதாசீனப் படுத்திவிட்டு, கத்தியபடியும் கூச்சலிட்டபடியும் தன் மேய்ச்சல் தடியால் பைத்தியக்காரத்தனமாக அடித்துக்கொண்டு சென்றான். அவன் மனதிலிருந்த ஒரே எண்ணம், குதிரைகளையெல்லாம் ஒருங்கிணைத்து, ஒருமுகப்படுத்தி அவற்றைக் கிழக்கு நோக்கிக்

கொண்டு சென்று, ஏரியின் ஓரமாகச் சுற்றி, அங்கிருந்து குடில்களுக்கு இட்டுச் சென்றுவிட வேண்டுமென்பதுதான். அங்கு சென்றுவிட்டால் அங்குள்ள மனிதர்களும் நாய்களும் ஓநாய்களோடு சண்டையிட்டு அவற்றை விரட்டிவிடுவார்கள்.

ஃப்ளாஷ் லைட்டுகளின் வெளிச்சம் வழிநடத்த, அவற்றை விட்டுச் செல்ல மனமில்லாமல் அவற்றை அடித்துக்கொண்டு வந்த மேய்ப்பர்களின் உறுதுணையோடு குதிரைகள் திரும்பவும் கொஞ்சம் கொஞ்சமாக சமநிலை பெற்றன. ஒரு வெண்குதிரை முன்னுக்குச் சென்று, தலை நிமிர்த்தி, உரக்கக் கனைத்து கூட்டத்தின் தலைமைப் பொறுப்பை ஏற்றது. பட்டுவும் லாசுருங்கும் உடனடியாகப் புதிய தலைமையின் மீது வெளிச்சத்தைப் பாய்ச்சினர். தலைமையேற்ற குதிரையின் செயலானது, பிற குதிரைகளுக்கு உந்துசக்தியாக அமைந்து, மங்கோலியப் போர்க் குதிரைகளின் கட்டுப்பாடான ஒற்றுமையை அவை உடனடியாக மீண்டும் உருவாக்கின. தலைமைக் குதிரை யுத்த முழக்கம் செய்து, குதிரைகளை அதைச் சுற்றி வரவழைத்தது. எவ்விதத் தாக்கு தலுக்கும் அசைந்து கொடுக்காத, குதிரைகளின் பாதுகாப்பு அரண் போல அவை வடிவம் கொண்டன. நூற்றுக்கணக்கான குளம்புகள் மகத்தான சக்தியோடு அழுத்தியும், உதைத்தும், மிதித்தும் அடித்து

நொறுக்கின. திடீரென நிகழ்ந்த இச்செயலில் அதிர்ந்துபோன கொடூரமான ஓநாய்கள் யுத்த தந்திர சாதகத்தை இழந்தன. அந்த வளையத்துக்குள் மாட்டிக்கொண்ட ஓநாய்களால் குதிரைகளின் அடிப்பகுதியிலிருந்து வெளியேற முடியவில்லை. அவற்றின் கால்கள் உடைபட்டன. முதுகெலும்புகள் தூள் தூளாகின. தலைகள் அழுத்தித் தேய்க்கப்பட்டன. பேய்த்தனமாகக் காதுகளைத் துளைத்து ஒலித்த வேதனையான ஓலங்கள், பனிப்புயலின் சத்தத்தை விடவும் பயங்கரமாக இருந்தன. பட்டு, கொஞ்சம் ஆசுவாசமாக மூச்சு விட்டான். குதிரைக் குளம்புகளால் குறைந்தது மூன்று ஓநாய்கள் கொலை செய்யப்பட்டுவிட்டன அல்லது படுகாய மடைந்து விட்டன என்பதை அறிந்தான். இக்கொலைகளின் பலத்தில் குதிரைகள் அவற்றின் தரத்துக்கேற்ப வடிவமைத்துக் கொண்டன. மந்தையின் பயந்த சுபாவமிக்க குதிரைகளைச் சுற்றி பலம் வாய்ந்த குதிரைகள் இருந்துகொண்டன. வலுவான சக்தியோடு, மூர்க்கமான ஓநாய்க் கூட்டத்துக்கு எதிராகத் தற்காப்பை அவை அமைத்துக்கொண்டன.

ஏரி நெருங்கிக்கொண்டிருந்தது. குதிரைகளின் வடிவமைப்பு ஆணைகளிடுவதற்கு வசதியாக அமைந்ததில் பட்டு திருப்தியடைந்தான். தலைமை ஏற்றிருக்கும் குதிரையைத் தன் கட்டுப்பாட்டுக்குள் வைத்துக்கொண்டிருக்கும் வரை, ஏரியின் கிழக்கு விளிம்பைப் பாதுகாப்பாகச் சென்றடைவது சாத்தியமே என்று அவன் கருதினான். எனினும், இந்த ஓநாய்க் கூட்டம் சாதாரணமானதில்லை என்பதால், அவனுடைய இதயத்தில் இன்னமும் கொஞ்சம் பயம் மிச்சமிருக்கவே செய்தது. பித்துப் பிடித்த ஒரு ஓநாயைத் தாக்குவதானது, அதன் மூர்க்கத்தைக் கூட்டவே செய்யும்; அது மேலும் மோசமான கொலை வெறித் தாக்குதலுக்கு வழி வகுக்கும்.

மேய்ச்சல் நிலத்தில் வாழும் ஒவ்வொருவரும் பித்துப் பிடித்த ஓநாயின் பழிவாங்கும் மனோபாவம் குறித்து பயப்பட்டனர். காயமடைந்த ஓநாய்களின் வேதனை ஓலத்தை மொத்த ஓநாய்க் கூட்டமும் நிச்சயம் கேட்டிருக்குமென்பதால், அபாயமானது எல்லாப் பக்கமும் பதுங்கியிருந்தது. பல குதிரைகள் காயமடைந் திருப்பதைப் பட்டு கவனித்தான். ஆனால் இவை அருமையான போர்க் குதிரைகள் என்பதால், காயமடைந்திருந்தாலும் இல்லா

விட்டாலும், அவற்றால் கட்டுக்கோப்போடு ஓடிக்கொண்டிருக்க முடியும்; மேற்கொண்டு தாக்குதலுக்கு இடமளிக்காமல் செல்ல முடியும்.

எனினும், இந்த மந்தையிடம் அபாயகரமான ஒரு குறைபாடு இருந்தது. காயடிக்கப்பட்ட குதிரைகளால் பிரத்தியேகமாக அமைந்த தொகுதி இது. இதில் வலுவான, காயடிக்கப்படாத 'பிள்ளைக் குதிரை' இல்லை. அது இருந்திருந்தால், அது ஓநாய்கள் மீது எதிர் யுத்தத்தை மேற்கொண்டிருந்திருக்கும். மேய்ச்சல் நிலத்தில் குதிரை மந்தைகள், ஒரு டஜன் அல்லது அதற்கு மேற்பட்ட குதிரைகள் அடங்கிய குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கும். பெரிதும் சிறிதும் அடங்கிய இக்குடும்பங்கள் ஒவ்வொன்றுக்கும் 'பிள்ளைக் குதிரை' என்றழைக்கப்படும் குதிரையே தலைமையேற்றிருக்கும். இத்தகைய குதிரைகள் அந்தக் குடும்பத்திலுள்ள மற்ற குதிரைகளை விடவும் ஒரு தலையளவு உயரம் கூடுதலாக இருக்கும்; தீரமிக்க இக்குதிரைகள் உண்மையான தலைவர்கள் மட்டுமல்ல; அச்சமின்றிக் கொல்பவையும் கூட. அவை ஓநாய்களோடு மோத நேரிடும் ஒவ்வொரு முறையும், பிள்ளைக் குதிரைகள் மந்தையை வட்ட வடிவமாக்கும். பெண் குதிரைகளும் இளம் குதிரைகளும் வட்டத்தின் உள்ளும் ஆண் குதிரைகள் வட்டத்தின் வெளியேயும் இருக்கும். அப்படியான ஒரு பிள்ளைக் குதிரை இடியெனப் பாய்ந்து கீழிறங்கித் தாக்கும்போது, ஓநாய்களின் தலைகளையும் உடல்களையும் அதனுடைய பெரிய குளம்புகளால் நசுக்கிவிடும். ஓநாய் வாலைத் திருப்பிக்கொண்டு ஓடத் தொடங்கினால், குதிரை தன் தலையைத் தாழ்த்தி விரட்டிச் சென்று, அதனை மூர்க்கமாக உதைத்துத் தள்ளும். அதன் விலாப் பக்கங்களில் கூர்மையாகத் தாக்கும். இவற்றில் மிகப் பெரிய ஆக்ரோஷமான குதிரைகள், தம் பற்களாலேயே ஓநாய்களைக் கவ்விக் காற்றில் விசிறி எறியும். அவை தரையில் விழுவதற்காகக் காத்திருந்து அவற்றை மிதித்துக் கொல்லும். மிகவும் ஆக்ரோஷமிக்க ஓநாய்கள்கூட பிள்ளைக் குதிரைகளுக்கு ஈடாகாது. அவை மந்தையைப் பகலும் இரவும் விடாது கண்காணிக்கும். அவை தம் குடும்பங்களை, ஓநாய்களிட மிருந்து மட்டுமல்லாது மின்னலின் தாக்குதல்களிலிருந்தும் காட்டுத் தீயிடமிருந்தும் மிகக் குறைந்த காயங்களோடு பத்திரமாய் மீட்கும் திறமை பெற்றவை.

அத்தருணத்தில் ஒரு பிள்ளைக் குதிரை இருக்க வேண்டுமென பட்டு விரும்பினான். ஆனால் தலைமையேற்றிருக்கும் வெள்ளைக் குதிரை மற்ற எல்லாக் குதிரைகளையும் போலவே காயடிக்கப் பட்டது என்பதால், அது ஆற்றல்மிக்கது என்றாலும் அதனிடம் மூர்க்கம் குறைவு. அதனால் தாக்குவதற்கான உத்வேகம் அதனிடம் சற்று குறைந்தே இருக்கும். பட்டு தனக்குள்ளாகவே குறைப்பட்டுக்கொண்டான். போர்க் குதிரைகள் அடங்கிய மந்தையில் ஒரு பிள்ளைக் குதிரை இல்லாததால் ஏற்படக்கூடிய விளைவுகள் பற்றி மக்கள் பொருட்படுத்தவில்லை. அப்படியே அவர்கள் அதுபற்றி யோசித்திருந்தாலும், குதிரைகள் எப்படியும் இங்கிருந்து சில நாட்களில் சென்று விடுமென்பதால் அதன்பிறகு பசும்புல்வெளிப் பிரதேசம் எந்தப் பங்கும் வகிக்கப் போவதில்லை என பேசாமல் இருந்திருப்பார்கள். அதற்குள் ஏதும் தவறாக நடந்துவிட மிக லேசான வாய்ப்புதான் உண்டு. எனினும் ஓநாய்கள் அதற்குள் ஒரு வழி கண்டுபிடித்துவிட்டன. அவற்றின் தலைமையின் தீர்க்கமான பார்வையை அவனால் பாராட்டாமல் இருக்க முடியவில்லை. இது பிள்ளைக் குதிரை இல்லாத மந்தை என்று அதற்குத் தெரிந்திருக்கும்.

பட்டு விரைந்து முன்னுக்குச் சென்றான். தலைமைக் குதிரையை எவ்வளவு முடியுமோ அவ்வளவு கடினமாகச் சவுக்கால் அடித்து, கிழக்கு நோக்கிச் செலுத்தினான். அதேசமயம், தன்னுடைய பாதி தானியங்கித் துப்பாக்கியைக் கை மாற்றி இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, அதன் பாதுகாப்புக்கான தடையை அகற்றி விட்டான். மிக அவசியத் தேவை என்ற நிலையில் மட்டுமே அவன் சுடுவான்; அனுபவமற்ற போர்க்குதிரைகள் என்பதால் துப்பாக்கிச் சத்தத்தில் அவை மிரண்டு விடக்கூடும். பட்டுவைப் போலவே லாசுருங்கும் வருவதை எதிர்கொள்ளத் தயாரானான். பனிப் புயலின் தாக்கம் தீவிரமாகியது. இருவருமே மிகவும் களைத்துப் போனார்கள்; அவர்களுக்கு மேய்ச்சல் தடியைச் சுழற்றுவது சிரமமாக இருந்தது. அதேசமயம் ஏரி நெருங்கிக் கொண்டிருந்தது.

பட்டுவின் கண்கள் கடும் பதற்றத்தினால் சிவந்திருந்தன.

நெருப்பை நெருப்பினால் மோதிப் பார்த்துவிடுவது என பட்டு தீர்மானித்திருந்தான். சேணத்தில் அமர்ந்திருந்த பட்டு, தலைமைக் குதிரையின் தலையில் பலமாகத் தட்டி, காதைத் துளைக்கும் வகையில் நீருக்கான

விசிலடித்தான். தங்களது மேய்ப்பர்களின் எச்சரிக்கையை எல்லாக் குதிரைகளும் புரிந்துகொண்டதாகத் தோன்றியது. இரண்டு நாட்களுக்கு ஒருமுறை அவற்றைத் தண்ணீர் குடிப்பதற்காக அழைத்துச் செல்லும் ஏரி தெற்கு வாக்கில் இருக்கிறது. இளவேனிற் பருவம் வறட்சியானது; ஏரி கிட்டத்தட்ட வறண்டுவிட்டது. அது சேற்றால் சூழப்பட்டிருந்தது. இரண்டே இரண்டு இடங்களில் மட்டும், தண்ணீர் குடிக்க வரும் விலங்குகள் அங்கிருந்த சகதியை மிதித்து, மிதித்துக் கொஞ்சம் பாதுகாப்பாக அமைந்துவிட்டிருந்தன. மற்ற இடங்களெல்லாமே அபாயகரமான மரணப் பொறிகள். குதிரைகள் நீரருந்தச் செல்லும் ஒவ்வொரு முறையும் அவற்றைப் பாதுகாப்பான பாதையில் மிகுந்த பதற்றத்துடன் மேய்ப்பர்கள் விசிலடித்து நடத்திச் செல்வார்கள். அவை தாமாக இந்த வேகத்தில் விரைந்து ஏரிக்கு ஒருபோதும் பகலில் கூட சென்றதில்லை.

பட்டுவின் விசில் சத்தம் எதிர்பார்த்த விளைவை ஏற்படுத்தியது. மேய்ச்சல் நிலத்தோடு நன்கு பரிச்சயமான குதிரைகள் தென் திசையில் அபாயம் காத்திருப்பதைப் புரிந்துகொண்டன. அவை துயரக் குரலில் கனைத்து நின்றன; திசையை மாற்றின; புயற்காற்று தீவிரமாகப் பக்கவாட்டில் அடித்தது; அவற்றால் முடிந்த அளவு விரைந்து, தென்கிழக்கு திசையில் சென்றன. தென்திசையில் சகதிப் படுகுழி இருக்கிறது. கிழக்கு திசையில் கடும் புயற்காற்றும் பயங்கர ஓநாய்களும் காத்திருக் கின்றன. ஆக, தென்கிழக்கு மட்டுமே பாதுகாப்பான பாதையாக இருந்தது. அவை தலை தாழ்த்தி பைத்தியக்காரத்தனமாக ஓடியபோது, அவற்றின் விரிந்த கண்களில் கலக்கம் நிறைந்திருந்தது. பதற்றமும் பயங்கரமும் சூழ்ந்திருக்க, அவை சாவுக்கு எதிராக ஓடியபோது மூச்சு சப்தம் கனத்து ஒலித்தது.

இந்தத் திசை மாற்றம் யுத்தத்தின் முகத்தை மாற்றியது.

தென்கிழக்கு நோக்கித் திரும்பிச் சென்றதில் மந்தையின் அமைப்பு மாறி, பலஹீனமான தற்காப்பு முறைகளைக் கொண்ட பரிதாபமான குதிரைகள் புயற்காற்றுக்கும் ஓநாய்களுக்கும் அண்டையாக வட்டத்துக்கு வெளியே அமைந்துவிட்டன. கடுமையாக வீசிய புயற் காற்று மந்தையின் வேகத்தை மட்டுப்படுத்தியது; ஓநாய்களின் தாக்குதல்களுக்கு எதிரான அவற்றின் திறன் பலஹீனப்பட்டது. சாதாரண சூழ்நிலையில் ஓநாய்கள், காற்றின் திசையிலும்

சரி அதன் எதிர் திசையிலும் சரி, குதிரைகளை விஞ்சி ஓடக் கூடியவை. காற்றடிக்கும் திசையில் அவற்றால் வேகமாக ஓட முடியும் என்றாலும், பின்னாலிருந்து தாக்கி குதிரைகளைக் கீழே வீழ்த்த அவற்றுக்குத் துணிச்சல் இல்லை. ஏனெனில் அச்சமயத்தில் ஒரு சாமர்த்தியமான குதிரை திடீரென மேல்நோக்கித் தாவிக் குதித்தால், ஓநாய் அதன் குளம்புகளால் நசுக்கப்பட்டு விடுமென்பதற்காக அவை அப்படிச் செய்ய பயந்தன. அவை பக்கவாட்டிலிருந்து தாக்கினால்தான் அது வெற்றிகரமாக அமையும். ஆனால் அது தாக்குதலின் வேகத்தைப் பாதிக்கும். ஆனால் குதிரைகளின் திசை மாற்றம் ஓநாய்க் கூட்டத்துக்கு மிகவும் சாதகமாக அமைந்துவிட்டது. காற்று பின்புறமாக வீசியதும், குதிரைகளின் வேகம் மட்டுப் பட்டதும் அவை பக்கவாட்டிலிருந்து பாய ஏதுவாகிவிட்டது.

ஓநாய்கள் ஒவ்வொரு குதிரையின் மீதும் பாய்ந்து தாக்கியதில்

குதிரைகளின் கதறல்கள் மேலெழும்பின. அவற்றின் பக்கவாட்டுகளிலும் மார்புப் பகுதிகளிலும் ரத்தம் பீய்ச்சியடித்தது. வெறி கொண்ட கொலைகாரக் கூட்டத்துக்கு ரத்த வாடை மேலும் குரூரமாகச் செயல்படத் தூண்டியது. அவற்றின் வாய்களிலிருந்த பச்சைக் கறி அவற்றுக்குப் போதுமானதில்லை. அவை கொல்லப் படும் வகையில் குதிரைச் சதைகளைக் கிழித்தெறிவதே முக்கியம். ஓநாய்கள் அலை அலையாகத் தொடர்ந்து தாக்கியதில் மேலும் மேலும் அதிக குதிரைகள் படுமோசமான காயங்களால் பாதிக்கப் பட்டன. ஒவ்வொரு தாக்குதலையும் முன்னின்று நிகழ்த்திய ஓநாய் களாகட்டும் அவற்றைப் பின்தொடர்ந்து தாக்கிய ஓநாய்களாகட்டும் மிக மூர்க்கமாகச் செயல்பட்டன. குதிரைகளின் பின்புறங்களின் மீது பாய்ந்து, சக்தியனைத்தையும் முழுமையாகத் திரட்டி, அவற்றின் தோல், முடி, சதை எல்லாவற்றையும் தம் கூர்மையான பற்களால் கிழித்தெறிந்தன. அவை கடித்தெடுத்தவற்றை வாயில் கவ்வியபடி, தரையில் பாய்ந்து, ஒரு குட்டிக்கரணம் அடித்துப் பின் மீண்டும் கால்களை ஊன்றி, சில எட்டுகள் ஓடிச் சென்று மற்றொரு குதிரையின் மீது பாய்ந்தன. எல்லா ஓநாய்களும் தலைமை ஓநாய்களின் வழியை முன்மாதிரியாகக் கொண்டு செயல்பட்டன.

மந்தை அழியலாயிற்று. தரை மீதிருந்த பனி ரத்தக் கறையானது. கருணையற்ற மேய்ச்சல் நிலம் மீண்டுமொரு முறை ஈவிரக்கமற்ற படுகொலைக்

களமாகியது. ஓநாய்க் கூட்டங்கள், தலைமுறை தலைமுறையாக எண்ணற்ற ஆத்மாக்களை விழுங்கி, மெல்லிய பசும்புல் சரிவுகளில் தங்களின் ரத்தத் தடயங்களைப் பதிவு செய்து வந்திருக்கின்றன.

இரண்டு மேய்ப்பர்களும் அவர்களுடைய ஃப்ளாஷ் லைட்டுகளிலிருந்து வெளிப்பட்ட மங்கலான வெளிச்சத்தில் இந்தப் படுகொலையைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். இது ஒரு வருடாந்திரச் சடங்கு என்பதுபோல் தோன்றினாலும், இம்முறை இது கொஞ்சமும் சகிக்கக் கூடியதாக இல்லை. இராணுவத்திடம் ஒப்படைக்கப்பட இருந்த இக்குதிரைகள், ஓலோன்புலாக்கின் பெருமைக்குச் சான்றுகளாகத் திகழ்ந்தவை. ஓநாய்களின் படுகொலைகளிலிருந்து இதுவரை தப்பித்து வந்திருப்பவை. மேய்ப்பர்கள் பெருமிதம் கொள்ளும் வகையில் வளர்க்கப்பட்டவை.

அவை கொல்லப்பட்டதைக் கண்ட பட்டுவும் லாசுருங்கும் கண்ணீர் வற்றிய நிலையில் இருந்தனர். கோபத்திலும் கவலையிலும் மூழ்கியிருந்த போதிலும் அவர்கள், தங்களுடைய உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்தி, அமைதியாக இருந்து நிலைமையைத் துணிச்சலுடன் எதிர்கொள்ள வேண்டிய அவசியத்தை உணர்ந்திருந்தனர். தங்களால் முடிந்த அளவு, இன்னமும் உயிரோடிருக்கிற குதிரை களைப் பாதுகாக்க வேண்டிய எல்லாவற்றையும் செய்யத் துணிந்தனர்.

பட்டுவைக் கவலைகள் ஆட்கொண்டன. இது ஒரு சாதாரண ஓநாய்க் கூட்டமில்லை என்பதை அவனுடைய பல ஆண்டு கால அனுபவம் சொல்லியது. ஓலோன்புலாக்கை நன்கறிந்த புத்திக் கூர்மையுள்ள விலங்குகளால் இக்கூட்டம் வழிநடத்தப் படுகிறது. தங்களுடைய உணவு கொள்ளையடிக்கப்பட்டதற்காக வெறி கொண்டிருக்கும் ஆண் ஓநாய்களும், தங்களுடைய குட்டிகளைப் பறி கொடுத்ததில் அதிக வெறியோடிருக்கும் பெண் ஓநாய்களும் அடங்கிய கூட்டமிது. ஆண் தலைமை ஓநாய் வெறியின் உச்சத்தில் இருந்தது. மந்தையைத் தெற்கு நோக்கி ஓட வைத்த அதன் திட்டத்திலிருந்தே அதன் நோக்கம் தெளிவாகத் தென்பட்டது. எப்பாடு பட்டாவது குதிரைகளை ஏரிக்குள் தள்ளிவிட வேண்டுமென்பதே அதன் நோக்கம். இது பொதுவான ஓநாய் தந்திரம்தான். பட்டுவின் பய உணர்வு மேலெழுந்தது. சகதிக்குள் மான்களை அவை தள்ளிவிட்டிருப்பதைப்

பார்த்திருக்கிறான். எப்போதாவது மாடுகளையும் குதிரைகளையும் விரட்டிச் சென்று புதைகுழிக்குள் தள்ளி யிருப்பதையும் பார்த்திருக்கிறான்.

குதிரைகளின் மொத்த மந்தையையும் அவை விழுங்கி விடுமோ என்று அவனுக்குத் தோன்றியது. இத்தகைய எண்ணங்கள் எழுவதை அவன் தனக்குத் தானே கட்டுப்படுத்திக் கொண்டான். அவனுடைய ஃப்ளாஷ் லைட் மூலம், தன்னைப் பின்தொடரும்படி லாசுருங்குக்கு சைகை செய்துவிட்டு, பட்டு மந்தையின் பின்புறமிருந்து விரைந்து கிழக்கு நோக்கிச் சென்று அவற்றின் பாதையை மறித்தான். இருவரும் பைத்தியக்காரத் தனமாகத் தங்கள் மேய்ச்சல் தடியையும் ஃப்ளாஷ் லைட்டுகளையும் வீசியபடியும் அடித்தபடியும் ஓநாய்களுக்குத் தொல்லை கொடுத் தனர். ஓநாய்கள் பிரகாசமான ஒளிக்கு அஞ்சுபவை. அவற்றின் கண்களுக்கு அது வேதனை அளிக்கும். அவர்கள் முன்னும் பின்னுமாக விரைந்து ஃப்ளாஷ் லைட்டுகளிலிருந்து வெளிச்சத்தை வீசியபடி, குதிரைகளைக் கிழக்கு நோக்கிச் செல்வதற்கான திசையில் ஒழுங்குபடுத்தினர். அவற்றின் பயம் கொஞ்சம் குறைந்திருப்பது போல் தோன்றியது. ஏரியின் கிழக்கு விளிம்பு நோக்கி அவை உடனடியாக விரைந்தன. இதுவே அவற்றுக்கான கடைசி வாய்ப்பு. ஏரியின் ஓரத்தைக் கடந்துவிட்டால் போதுமென்பது மந்தைக்குத் தெரியும். அதன்பிறகு அவை காற்றோடு விரைந்து அவற்றிடத்துக்குப் போய்விடலாம். அங்கு ஏராளமான மக்கள் இருக்கிறார்கள். அவற்றின் நல்ல நண்பர்களான நாய்கள் இருக்கின்றன. கவலை இல்லை.

ஆனால் ஓநாய்கள், சந்தர்ப்பங்களைக் கண்டறிவதிலும், காத்திருப்பதிலும் மிகவும் பொறுமையானவை. அப்படியான சந்தர்ப்பம் அமையும்போது, அவை அவற்றை ஒன்றும் மிச்ச மில்லாமல் சர்வ நாசமாக்கிவிடும். இப்போது சரியான சந்தர்ப்பம். அதை அவை தமக்கு சாதகமாக்கிக் கொண்டு, ஒரு குதிரையும் அவ்வலையிலிருந்து வெளியேறி விடாமல் முடித்தாக வேண்டும்.

மனிதன், குதிரை மற்றும் ஓநாய் ஒன்றைப் பின்தொடர்ந்து ஒன்றென ஓடினர். ஓநாய்க் கூட்டம் தாக்குதலைக் கொஞ்ச நேரம் நிறுத்திவிட்டிருந்தது. பட்டுவின் பத்தாண்டு கால மேய்ச்சல் அனுபவம், ஓநாய்கள் இறுதிக்கட்ட பாய்ச்சலுக்குத் தயாராகிக் கொண்டிருக்கின்றன எனக் கூறியது. வெற்றிகரமான தாக்குதலை

இழந்துவிட அவை தயாராக இல்லை. பழி வாங்குவதற்கான வாய்ப்பை இந்த ஓநாய்க் கூட்டம் கைவிடப் போவதில்லை.

திடீரென மந்தையிடமிருந்து பயங்கரமான கனைப்புகள் வெளிப்பட்டன. அவனுடைய குதிரையும் தடுமாறுவதாகத் தோன்றியது. அவன் கண்ணீர் வழிந்து எரிந்துகொண்டிருந்த கண்களைத் தேய்த்துவிட்டுக் கொண்டு, தனக்கு முன்னால் விளக்கைக் காட்டினான். அவனுடைய குதிரைக்கு முன்பாகப் பல பெரிய ஓநாய்கள் துள்ளிக்கொண்டிருந்தன. அவன் பின்னால் திரும்பிப் பார்த்தபோது, லாசுருங்கும் இதே போல மாட்டிக் கொண்டிருப்பதைக் கண்டான். அவன், தன்னுடைய குதிரையின் பயத்தைப் போக்க முயற்சித்துக்கொண்டிருந்த அதே சமயத்தில் ஓநாய்கள் தாக்குதலைத் தொடங்கின. அவன் லாசுருங் மீது வெளிச்சமடித்து விரையும்படி சைகை செய்தான். ஆனால் லாசுருங்கின் குதிரை மிகவும் மிரண்டுபோய், எதுவும் செய்ய இயலாமல், கால்களை உதைத்து எம்பியது. ஓநாய்கள் உடனே திரும்பி அதன்மீது பாய்ந்து, அதன் உடலிலிருந்து சதையைப் பிடுங்கிக் கிழித்தன. அந்தக் குழப்பத்தில் எங்கிருக்கிறோம் என்றே லாசுருங்குக்குப் புரியவில்லை. அவன் தன் மேய்ச்சல் தடியைச் சுழற்றினான். அது நீளமாக இருந்ததால் ஒரு பயனும் இல்லாமல் போயிற்று. தன்னுடைய ஃப்ளாஷ் லைட்டின் கைப்பிடியை ஆயுதமாகப் பயன்படுத்தி, பாய்ந்த ஓநாய்களின் தலைகளில் அடித்தான். விளக்கு வெளியே விழுந்தது; கைப்பிடி நசுங்கியது. ஓநாய்களின் தலைகள் காயம் பட்டன. ஆனாலும் தாக்குதல் தொடர்ந்தது. கடைசியில், மிகப் பெரிய ஓநாய்களில் ஒன்று, குதிரையின் தோளில் கடித்துப் பிடுங்கியது. குதிரை வலியால் துடித்து, தலையைத் தாழ்த்தி, தென்மேற்குத் திசையில் உயிருக்கு பயந்து ஓடத் தொடங்கியது. லாசுருங்கால் அதைத் தடுக்க முடியவில்லை. அவன் கடிவாளத்தை எவ்வளவுதான் இறுக்கிப் பிடித்தாலும் அது தலை தெறிக்க ஓடியது. யுத்த களத்திலிருந்து ஒரு கடினமான போராளியை விரட்டியடித்து விட்டதால், ஓநாய்கள் அதைப் பின்தொடர்வதைக் கைவிட்டு, திரும்பவும் மந்தையை நோக்கிச் சென்றன.

தனித்து விடப்பட்ட பட்டுவை, அவை சூழ்ந்துகொண்டன. வேறு வழியின்றி அவன் மேய்ப்பனிலிருந்து வெளியேறி ஒரு மங்கோலியப் போர் வீரனாக உருவெடுத்தான். அவனும் ஓநாய்களும் சாகும் வரையான போராட்டத்தில்

ஈடுபட்டனர். நூற்றாண்டுகளின் தொடர்ச்சியாக அவனை வந்தடைந்திருந்த ஓநாய் சண்டைத் திறன்களை _ பல்வேறுபட்ட உத்திகளையும் உபாயங்களையும் _ அவன் கையாளத் தயாரானான். அவனுடைய தடி, ஒரு வீர வாளைப் போன்று நீளமானது. அத்தடி அவனுக்கு பில்ஜியால் தரப்பட்டது. ஓநாய்களோடு சண்டையிடவும் கொல்லவும் அவனுடைய மூதாதையர்கள் பயன்படுத்தியதைப் போன்றது. ஒரு மண்வெட்டியின் கைப்பிடியளவுக்குத் தடிமனான அதன் முனை, வரிசையான இரும்பு வளையங்கள் கொண்டது. வளையங்களின் இடைவெளிகள், பல தலைமுறையைச் சார்ந்த ஓநாய்களின் ரத்தக் கறைகள் கொண்டவை. பெரிய ஓநாய்கள் பலவும் சேர்ந்து, இரு புறமிருந்தும் அவனுடைய குதிரைமீது பாய்ந்தன. அது அவனுடைய கைத்தடியைப் பயன்படுத்தத் தோதாக அமைந்தது. ஓநாய்களைக் கொல்ல அவனுக்குக் கிடைத்திருக்கும் சிறந்த வாய்ப்பு இது. அவன் திடமாக இருந்து, சரியாகக் குறி வைத்து தாக்குவதைப் பொறுத்தே எல்லாமும் இருக்கிறது.

அவன் தயாரானான். நன்றாக மூச்சிழுத்தான். கைவிளக்கை வலது பக்கமாகத் திருப்பி, தலைக்கு மேலாகத் தடியை உயர்த்தினான். ஒரு சிறு வெளி திறந்திருப்பதைப் பார்த்த அவன், கையைச் சுழற்றித் தடியைக் கீழறக்கி, ஒரு ஓநாயின் தலைமீது எவ்வளவு கடினமாக முடியுமோ அவ்வளவு கடினமாக ஓங்கி அடித்தான். அதன் பற்கள் மீதே அவன் குறி இருந்தது. அவன் அடித்த அடியில் அதனுடைய நான்கு கோரைப் பற்களுமே தெறித்து விழுந்தன. மரண அடி. ஓநாய் பனி படர்ந்த தரையின் மீது விழுந்தது; வாயிலிருந்து ரத்தம் கொட்டிக்கொண்டிருந்தது; அது வான் நோக்கித் தலை உயர்த்தி ஊளையிட்டது. அதன் வேதனைக் குரல், மரண ஓலத்தை விடவும் உறைய வைப்பதாக இருந்தது. மேய்ச்சல் நிலத்தில் ஒரு ஓநாயின் வாழ்வை அதன் கோரைப் பற்களே தக்க வைத்திருக் கின்றன. அவை இல்லாமல் ஓநாய் இல்லை. தனக்கு விருப்பமான இரையையோ, பெரிய வீட்டு விலங்குகளையோ இனி ஒருபோதும் அதனால் வேட்டையாட முடியாது. வேட்டை நாய்களிடமிருந்தோ, எதிரி ஓநாய்களிடமிருந்தோ அதனால் இனி ஒருபோதும் தன்னைத் தற்காத்துக்கொள்ள முடியாது. இனி ஒருபோதும் அதனால், சதைகளைக் கடித்துக் கிழித்து, வாய் முழுவதும் ரத்தம் நிறைந்திருக்க ஒரு விருந்தை அனுபவிக்க முடியாது.

ஒன்று மாற்றி ஒன்றெனக் குதிரைகள் கொல்லப்பட்டதில் ஏற்பட்டிருந்த மரண வாடையால் பீடிக்கப்பட்ட பட்டு, ஓநாய்களைக் கொல்வதில் வெறி கொண்டான். மேய்ச்சல் நிலக்காரனின் மூர்க்கத்தை ஓநாய்கள் அறிய நேர்ந்தது. ஓநாய்கள் மீண்டும் ஒரு குழுவாக வடிவமைப்பதற்கு முன்பாக வெளிப்பட்ட ஒரு திறப்பில் தடியைச் சுழற்றிக் கடினமாக அடித்தான். அவனுடைய குறி தவறியபோதிலும், அதனுடைய மூக்கில் அடி விழுந்து, சதை கிழிந்தது. அது பனித் தரையில் விழுந்து புரண்டது. கூட்டத்தின் இரண்டு பெரிய ஓநாய்கள், வேதனையில் ஊளை யிட்டதைப் பார்த்தது மற்ற ஓநாய்கள் தற்காலிகமாகப் பட்டுவின் திறனுக்கும் தீரத்துக்கும் பணிந்துவிட்டிருப்பது போல் தோன்றியது. அவை பட்டுவுக்கும் மந்தைக்குமான இடைவெளியில் அப்படியே நின்றுகொண்டிருந்தன.

இப்போது தாக்க வழியில்லாத நிலையில், பட்டு மந்தையை நோக்கினான். நேரம் கடந்துகொண்டிருப்பதை உணர்ந்தான். அதேசமயம் ஓநாய்களுக்கு சற்றுப் பின்னடைவு ஏற்பட்டிருப்பதை அறிந்தான். அவை ஒன்றாகச் சேர்ந்து துடிதுடிக்கும் ஒரு ரீங்கார ஒலியை எழுப்பின; புயற்காற்று மின்கம்பியைக் கடந்து செல்லும்போது எழும் ஒலியைப் போலிருந்த அவ்வொலி படுபயங்கர மாகவும், உக்கிரமாகவும் ஒலித்தது.

தலைமையின் உத்தரவுக்கேற்ப அவை மீண்டும் ஒரு தாக்குதலை மேற்கொண்டன. மிகக் குரூரமான ஆக்ரோஷமான தாக்குதல். மங்கோலிய ஓநாய்களின் ஆயுதங்களில் ஒன்றான தற்கொலை முறைகளை கொஞ்சமும் நினைத்துப் பார்க்க முடியாத வகையில் மேற்கொண்டன. ஒன்றை அடுத்து ஒன்றென, குறிப்பாகக் குட்டிகளைப் பறிகொடுத்த பெண் ஓநாய்கள், குதிரைகளின் மீது பாய்ந்து, அவற்றின் தோளுக்குக் கீழான மிருதுவான பகுதியில் தம் கோரப் பற்களால் கடித்துவிட்டு அப்படியே தொங்கின. தம் சொந்த உடல்களை அர்ப்பணிக்க அவை தயாராக இருந்தன. இந்த உபாயம், ஓநாய், குதிரை இரண்டுக்குமே அபாயகரமானது.

குதிரை ஓடும்போது, ஓநாயின் கீழ்ப் பாதி உடல் அதன் பின்னங் கால்களுக்கு இடையில் சிக்கிக்கொள்ளும். அப்போது குதிரை அதனை விசிறி எறிய முற்படுகையில் அதனுடைய வலுவான குளம்புகள் ஓநாயின் எலும்புகளை முறிப்பதோடு, தோலையும் கிழிக்கும். சமயங்களில் குடல் வெளிவந்து விடும்.

வலுவான பெரிய ஓநாய்களால் மட்டுமே அப்படித் தொங்க முடிவதோடு, அந்நிலையில் இருந்தபடியே குதிரையின் வயிற்றைக் கடித்துக் கிழித்து விட்டுப் பிறகு பாதுகாப்பாகத் தரையில் விழவும் முடியும். இப்படியான ஒரு தாக்குதல் குதிரைகளுக்கும் ஓநாய்களுக்குமிடையே கோரமாக நடந்தது.

தங்கள் உயிரையும் பொருட்படுத்தாமல் சண்டையிட்டு குதிரைகளைக் கீழே விழச் செய்த பெரும்பாலான ஓநாய்கள் பெண்களே. அவை ஆண்களை விடவும் மெல்லியவை என்பதால், அவற்றால் தொங்கிக்கொண்டே குதிரைகளின் அடிவயிறுகளைக் கிழிப்பதென்பது மிகவும் சிரமம். அவை தங்கள் வாழ்வைப் பணயம் வைத்து, பழி வாங்கும் உணர்ச்சியோடு, மரணத்தை அமைதி யாக எதிர்கொண்டு, ரத்தமும் பாலும் கலந்த நோக்கத்துக்குத் தம்மை அர்ப்பணித்தன. வயிறு, மார்பு, முலைக்காம்புகள் என உடலின் பல உறுப்புகளில் அவை உயிர்போக்கும் காயங்களை எதிர்கொண்டு, அவை கொல்லும் குதிரைகளின் அருகில் இறந்துவிடும் சித்தத்தோடு செயல்பட்டன.

ஓநாய்களால் கடித்துக் கிழிக்கப்பட்ட குதிரைகளின் வயிறுகள், அந்த வருடத்தில் முளைத்திருந்த முதல் புற்களால் நிறைந்திருந்தன. அவற்றின் அடிவயிறுகள் கனத்திருந்தன. அதன் மீதிருந்த மெல்லிய தோல்கள் ஓநாய்ப் பற்களால் கிழித்தெறியப்பட்டதும், குடல்கள் வெளிவந்து பனியில் விழுந்தன.

ஓநாய்களின் வெறி கொண்ட இறுதித் தாக்குதலில் குதிரைகளின் எதிர்ப்பு சுத்தமாக நசுக்கப்பட்டது. மேய்ச்சல் நிலம்

கொலைக்களமாக மாறியது. ஒன்றை அடுத்து ஒன்றெனக் குதிரைகள், தங்களுடைய குளம்புகளாலேயே மிதிபட்டு, பனியில் விழுந்து வேதனையில் புரண்டன. மார்புகளிலிருந்து வெளிப்பட்ட சூடான ரத்தம், சில நொடிகளில் பனிக்கட்டிகளால் மூடப்பட்டது. பீய்ச்சியடித்த குதிரை ரத்தம், பனியோட்டத்தைக் கறைப்படுத்தியது.

ஓநாய்களின் பழிவாங்கும் தற்கொலை யுத்தம், பட்டுவை பயத்தால் செயலிழக்க வைத்தது. அவனுடைய உடலில் குளிர்ந்த வியர்வை உறைந்தது. எல்லாவற்றையும் இழந்துவிட்டதை அவன் உணர்ந்தான். சில குதிரைகளையாவது காப்பாற்றிவிட வேண்டுமென்பதே அவனுடைய ஒரே

விருப்பமாக இருந்தது. அவன் தன் குதிரையின் இரு பக்கங்களிலும் கால்களால் தட்டி, கடிவாளத்தைத் தளர்த்தி, தலைமைக் குதிரையின் அருகில் செல்ல விரைந்தான். ஆனால் குதிரைகள் ஓநாய்களின் படுபயங்கரமான தாக்குதல்களால் நிலை குலைந்து, காற்றோடு சேர்ந்து தலைதெறிக்க ஓடின. அவை ஓடும் தென் திசையில்தான் ஏரி இருக்கிறதென்பதை மறந்து விட்டன.

ஏரிக்கு இட்டுச் செல்லும் மலைச் சரிவு, வேகத்தை அதிகரிக்கச் செய்தது. பனிப்புயலின் வீச்சு அவற்றின் வேகத்தை மேலும் கூட்டியது. குளம்புகள் தரையில் பட்டும் படாத அளவுக்குப் பறந்து சென்றன. அவற்றின் குளம்புகள் பட்டு, மெல்லிய பனிக்கட்டி நொறுங்கியது. விஷச் சுழலான சேற்று மண் பறந்தது. அவை, மிஞ்சியிருந்த குதிரைகளை விழுங்கப் போகிற சகதியில் சிக்கி, நகர்வதற்குப் போராடியபடி வேதனையோடு கனைத்தன. அவற்றின் பயமும், ஓநாய்க் கூட்டத்தின் மீதான வெறுப்பும் அதன் உச்சத்தைத் தொட்டது. இப்போது அவை எவ்வித நம்பிக்கையு மின்றி சேற்றுப் படுகுழியில் சிக்கிக் கொண்டிருந்த நிலையில், சற்றே தயங்கிய பின்னர், தங்களுடைய சக்தியனைத்தையும் திரட்டி இன்னும் ஆழமாக உள்ளுக்குள் சென்று புதைந்துவிட எத்தனித்தன. ஓநாய்களின் பழிவாங்கலுக்கு இரையாகத் தங்களின் சதைகளை அவற்றுக்கு உணவாக்க விரும்பாமல், மரணத்தைத் தேர்ந்தெடுத்துத் தம்மைத் தாமே புதைத்துக்கொள்ள முயற்சித்தன. மனிதர்களால் காயடிக்கப்பட்டு, ஒரு கத்திக்குத் தங்கள் ஆண்மையைப் பறி கொடுத்த இந்தக் குதிரைகள், தங்கள் எதிர்ப்பின் இறுதி நிகழ்வாகத் தம் வாழ்வை முடித்துக்கொள்ள முன்வந்தன. ஒட்டுமொத்தமான தற்கொலை மூலம் அவை ஓநாய்களின் தாக்குதலுக்கு எதிர்வினையாற்றின. இந்தத் தருணத்தில் அவை, மேய்ச்சல்நில வாழ்க்கையின் மிக முக்கியமான உந்துசக்தியான அஞ்சாமையை பிரதிநிதித்துவப் படுத்தின.

ஆனால், குரூரமான மேய்ச்சல் நிலம் பலஹீனமானவற்றை ஏளனமே செய்யும். கொஞ்சம்கூட அது அவற்றின்மீது பச்சாதாபம் காட்டுவதில்லை. இரவு கவிழ்ந்ததும், கடும் குளிரான வானிலையால் சேற்றுப் படுகையின் மேல்தளம் மெல்லிய பழுப்பு நிறப் பனிக் கட்டியாக மாறியிருந்தது. ஏரியின் கரையோரங்கள் திடமாக

உறைந்திருந்தன. சேற்றுப் படுகுழியின் மையத்தில் படிந்திருந்த பனி கெட்டியாக இல்லாததால், குதிரைகளின் கனத்தை அவற்றால் தாங்க முடியவில்லை; நீரின் ஆழத்துக்குள்ளும், கனத்த சேற்று மண்ணுக்குள்ளும் அவை நுழைந்தபோது அவற்றின் குளம்புகள் பனிக்கட்டிகளை நொறுக்கின. பனிப் பொழிவும் கடுமையான குளிர் காற்றும் அந்த இடத்தை வழக்கத்தை விடவும் மோசமான சகதியாக ஆக்கியிருந்தன. அவை தொடர்ந்து ஆழத்துக்குள் செல்ல முயற்சித்தபோதிலும் அவை சிக்கிக் கொண்டுவிட்டன. அவற்றின் போராட்டங்கள் அந்த சேற்றுப் பகுதியை பனிச் சகதியாக மாற்றின. கடைசியில், தவிர்க்க முடியாதபடி அவை தம் பலத்தை இழந்து, மேற்கொண்டு நகர முடியாமல் தவித்தன. அவை விழைந்த உடனடி மரணம் அவற்றுக்கு மறுக்கப்பட்டதால் மந்தையிடமிருந்து

வேதனையின் ஓலம் வெளிப்பட்டது. எவ்வித நிவாரணமும் சாத்தியமில்லை என்பதை எல்லாக் குதிரைகளும் அறிந்திருந்தன. எவராலும், எந்தவொரு சக்தியாலும் வரப்போகிற கொலை வெறியாட்டத்தைத் தடுக்க முடியாது.

ஏரியின் கரையோரம் பட்டு கவனமாகக் குதிரையின்மீது அமர்ந்திருந்தான். அவனுடைய பெரிய கருப்புக் குதிரையின் குளம்புகள் தண்ணீரைத் தொட்டதும், அது பயத்தில் கனைத்தது. அதன் தலை குனிந்தது; அதன் முன் தென்பட்ட சகதிக் காட்சியைக் கண்டதும் அதனால் மேற்கொண்டு நகர முடியவில்லை. பட்டு தன்னுடைய விளக்கை ஏரியின்மீது காட்டியபோது, சிக்கியிருந்த குதிரைகளின் உருவம் மங்கலாகத் தென்பட்டது. பனிப் புயல் பொழிவும் தெரிந்தது. சில குதிரைகளின் தலைகள் மிகவும் பலஹீனமாக, தங்களின் உயிரைப் பாதுகாக்கும் பொறுப்பிலிருக்கும் மனிதனைப் பார்த்துக் கெஞ்சும் வகையில் அசைந்தன. இன்னும் கொஞ்சம் அருகில் செல்லும் பொருட்டு, குதிரையின் இருபக்கமும் காலணிகளின் குதிகளால் தட்டினான். ஐந்து அல்லது ஆறு எட்டுகள் எடுத்து வைப்பதற்குள் அதன் குளம்புகள் பனிக்கட்டியை நொறுக்கி சேற்றுக்குள் மூழ்கின. உடனடியாக அது பின்னகர்ந்து, கெட்டியான தளத்துக்கு வந்துவிட்டது. இம்முறை பட்டு, தன் மேய்ச்சல் தடியால் அதன் விலாப்பக்கம் அடித்தான். ஆனால் அது நகர மறுத்தது. அவன் கீழிறங்கி, பனிக்கட்டியின் மீது ஊர்ந்து சென்று, குதிரைகளுக்குக் காவலாகத் துப்பாக்கியுடன் நின்றுகொள்ளலாமா என

யோசித்தான். ஆனால் அவன் குதிரையி லிருந்து இறங்கிவிட்டால், இந்த ஓநாய்க் கூட்டத்துக்கு மத்தியில் அவனுடைய வல்லமை செல்லுபடியாகாது என்பதை அவன் அறிந்திருந்தான். அவன் குதிரையில் இருந்தால்தான் மேய்ச்சல் தடியை ஆயுதமாகப் பயன்படுத்த முடியும். அவன்மீது ஓநாய்களுக்கு அச்சமின்றிப் போய்விட்டால், அவனும் குதிரைகளும் கிழித்தெறியப்படுவார்கள். தவிரவும் அவனிடம் பத்து குண்டுகளே இருந்தன. அவன் மிகத் துல்லியமாகக் குறி வைத்து ஒவ்வொரு குண்டுக்கும் ஒரு ஓநாயைச் சுட்டுக் கொன்றால்கூட, பல ஓநாய்கள் எஞ்சி நிற்கும். கண்ணீர்த் துளிகள் அவன் கன்னங்களில் ஓடியிருந்தன. அவன் வான் நோக்கித் தலை உயர்த்தினான். 'டெஞ்ஞர், டெஞ்ஞர், என்றும் நிரந்தரமான டெஞ்ஞர், இந்தக் குதிரை மந்தையைக் காப்பாற்றுவதற்கான சக்தியையும் ஞானத்தையும் எனக்குக் கொடு.'

பட்டு, தன் மேலங்கியால் கன்னங்களிலிருந்து கண்ணீரைத் துடைத்துக்கொண்டான். மேய்ச்சல் தடியைத் தன் மணிக்கட்டைச் சுற்றி மாட்டிக்கொண்டும், துப்பாக்கியை ஏந்தியபடியும், ஃப்ளாஷ் லைட்டை இடது கையில் பிடித்துக்கொண்டும் ஓநாய்களின் வருகைக்காகக் காத்திருந்தான். அவனுடைய மனதில் ஓடிய ஒரே எண்ணம்: எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஓநாய்களைக் கொன்றுவிட வேண்டும்.

நேரம் கடந்துகொண்டிருந்தது. பட்டு, சேணத்தின்மீது கிட்டத்தட்ட உறைந்த நிலையில் இருந்தான். அவன் பார்வையில் படாதபடி எவ்வித அரவமுமின்றி ஓநாய்கள், குனிந்தும் அமைதியாகவும், பனிக்கட்டியின் மீது நடந்து சென்றன. அவை கிழக்குக் கரையோரம் நின்று, அங்கு சூழ்ந்திருந்த பனி மூட்டத்தில் மறைந்துகொண்டன. ஒரு கணத்துக்குப் பிறகு, ஒரு மெல்லிய ஓநாய் பனி மூட்டத்திலிருந்து வெளிவந்து, ஒவ்வொரு அடியாக எச்சரிக்கையுடன் எடுத்து வைத்து, அவனுடைய குதிரையை நெருங்கியது. அந்த ஓநாய் மிகவும் சிறியது. அது மேலும் சில எட்டுகள் எடுத்து வைத்த பிறகு, அது தன் தலையை உயர்த்தி, சிக்கிக்கொண்டிருந்த குதிரைகளை நோக்கிப் பாய்ந்து ஓடியது. அது குதிரைகளை அடைந்ததும் அவற்றின் மீது பாய்ந்து சுருண்டு கொண்டதில், பனி மேகங்களெனக் கிளம்பி விண்ணையும் மண்ணையும் தழுவியது.

பனி மூட்டத்தால் எதையும் பார்க்க முடியாத பட்டு, தாள முடியாத குளிரில் நடுங்கிக்கொண்டிருந்தான். அவனுடைய குதிரை, அதனுடைய நுட்பமான மோப்ப வாசனையால், அச்சத்தில் நடுநடுங்கிக் கொண்டிருந்தது. அது தலையைத் தாழ்த்தி, அதனுடைய தாங்க முடியாத வேதனைக் குரலை வெளிப் படுத்தியது. அந்த இரவின் கும்மிருட்டில், பனிப் புயலானது மீண்டுமொரு முறை, கொலைக் கிடங்கை மூடியது. அங்கு பீய்ச்சியடித்த ரத்தம் பனிக்கட்டியாக உறைந்தது.

கிட்டத்தட்ட உறைந்து விரைத்துப் போய்விட்டிருந்த பட்டு, தன்னுடைய ஃப்ளாஷ் லைட்டை அணைத்தான். அப்போதுதான் அவன் இருளில் மறைந்துவிட நேரிடும். அவன் தலை குனிந்து, ஏரியின் திசையில் தன் துப்பாக்கியால் குறி பார்த்தான். பின் திடீரென அதை மேலே உயர்த்தி நிதானமாகச் சுட்டான். ஒரு தடவை, இரண்டு தடவை, மூன்று தடவை......

## 6

சூரிய ஒளி மெல்லிய கருமேகங்களினூடாக லேசாக வெளிப்பட்டுக்கொண்டிருந்தது. பரந்த ஓலோன்புலாக் முழுவதும் காற்றின் போக்கில் பனித்தூள் பெய்துகொண்டிருந்தது. வெண்முடிப் பனிப்புயலின் இரண்டு நாள் பேயாட்டத்துக்குப் பின், மேற்கொண்டு பனிக்கட்டிகளையோ, சீவல்களையோ அனுப்பும் சக்தி வானத்துக்கு இல்லாமல் போய்விட்டது. மேகங்களுக்குக் கீழாக ஒரு ஜோடி பருந்துகள் வெகு நிதானமாகப் பறந்து சென்றன. முன்னதாகவே வந்துவிட்ட இளவேனிற் பருவத்தின் இதமான காற்று நிலவெளியில் வீசிக்கொண்டிருந்தது. சிவப்பு மற்றும் பழுப்பு நிறப் பறவைக் கூட்டமொன்று, வெண்பவளம் போல் தோற்றமளித்த புதர்க்காட்டிலிருந்து பறந்து சென்றபோது கிளைகள் சலசலத்தன; பஞ்சு போன்ற பனியை உதிர்த்து விட்டதில் மேய்ச்சல்நில வில்லோக்களின் அடர்த்தியான செவ்வண்ணம் வெளிப்பட்டது. அது ஒரு பார்வையாளனுக்கு, வண்ணமயமாகவும் கண்ணைக் கவர்வதாகவும் இருந்தது. மேற்குத் தொடர்ச்சி மலை தெளிந்த வானத்தை ஊடுருவியிருந்தது; அங்கு ஊதா மேகங்கள் மேலெழுந்து, உச்சியை மூடியிருந்த பனிமூட்டத்தின் மீது மேவியிருந்தன.

தொன்மையான ஓலோன்புலாக்கில் அமைதி திரும்பியிருந்தது. லாசுருங்கும் ஜென் சென்னும் பட்டுவின் உறைபனிக் கடிக்கு சிகிச்சை அளித்தபடி, நாள் முழுவதும் அவனோடு இருந்தனர். தெளிந்த, அழகிய வானத்துக்குக் கீழ் அவர்கள் இருந்தபோது, பட்டு சொன்ன பயங்கரமான கதையை நம்புவது அவர்களுக்கு மிகவும் கஷ்டமாக இருந்தது. மேய்ச்சலில் ஈடுபட்டிருந்த அனைவருமே, இரண்டு நாட்கள் பனிப்புயலினால் மிகுந்த சிரமத்துக்கு ஆளானார்கள் என்பதென்னவோ உண்மைதான் என்றாலும் பட்டு அவர்களிடம் சொன்னதை ஜென்னினால் நம்ப முடியவில்லை.

சூறாவளியைத் தொடர்ந்து, உருகிய பனியானது ஆறுகளுக்கும் ஏரிகளுக்கும் தெளிந்த நீரைக் கொண்டு வந்தது. சமவெளிகள் பசும்புல்லாலும் அழகிய மலர்களாலும் நிரம்பின. இளவேனிற் பருவத்தில் வீட்டு விலங்குகள் நன்றாகக் கொழுத்து வளருமென்பதற்கான அறிகுறி தென்பட்டது. வீட்டு விலங்குகள் கொழுப்பை சேகரித்துக்கொள்வதற்கு, மூன்று பருவங்களில் இளவேனிற்

காலமே சிறந்ததென்று முதியவர் பில்ஜி மகிழ்ச்சியோடு கூறுவார். இளவேனிற் காலத்தில் அவை கொழுக்கவில்லையென்றால் கோடை காலத்தை அவற்றால் சமாளிக்க முடியாது.

புல் மஞ்சளாவதற்குள் மூன்று விரல்கடை அளவு கொழுப்பை அவை சேகரித்துக்கொள்ளவில்லை என்றால் ஏழு மாத நீண்ட பனிக்காலத்தைத் தாக்குப் பிடிக்க அவற்றால் முடியாது. அப்படியான செம்மறியாடுகளை பனிக்காலம் வருவதற்கு முன்பாக, சீனாவில் மலிவாக விற்றுவிடுவார்கள். மோசமான வருடங்களில், பாதி மந்தையை, சமயங்களில் அதை விடவும் கூடுதலாக, பனிக்காலம் ஆரம்பிப்பதற்கு முன்பாக விற்றுவிட வேண்டியது அவசியமாகிவிடும். மேய்ச்சல் நிலத்தைப் பொறுத்தவரை, இளவேனிற் பருவம்தான் மிக முக்கியமானது. முன்னர் ஏற்பட்டிருந்த இழப்புகளை இளவேனிற் பனி ஈடுகட்டுமென்ற நம்பிக்கையோடுதான் எல்லோரும் இருப்பார்கள்.

உற்பத்திப் படைப் பிரிவு மற்றும் தலைமையிடத்தால் படுகொலை நிகழ்த்தப்பட்ட இடத்துக்கு அனுப்பப்பட்ட பேரழிவு ஆய்வுக் குழுவினரோடு சேர்ந்து ஜென் சென்னும் பிற மாணவர்களும், அவனுடைய மற்றும் இதர பிரிவைச் சேர்ந்தவர்கள், சென்றனர். அங்கு செல்லும்போது, புரட்சிகரக் குழுவின் தலைவர்கள் (இராணுவப் பிரதிநிதியான பாவோ சுங்காய் மற்றும் மேய்ச்சல் பகுதி இயக்குநரான உல்ஜீ), மேய்ப்பர்களான பட்டு மற்றும் லாசுருங், பொதுமக்கள் அமைப்புகளின் பிரதிநிதிகள் ஆகியோரின் முகங்களில் கவலையும் துயரமும் கவிந்திருந்தன. மேலும், அந்த இடத்தை சுத்தப்படுத்துவதற்காக உடன் அழைத்துச் செல்லப்பட்ட வலிமைமிக்க இளம் மேய்ப்பர்களும் அதே உணர்வோடு இருந்தனர். இராணுவப் பணியில் ஈடுபடுத்துவதற்கு முன்பாக, எல்லாக் குதிரைகளையும் இழந்துவிட்டது குறித்து இராணுவ மற்றும் அப்பகுதித் தலைவர்கள் கோபம் கொண்டிருந்தனர். பட்டு ஒரு புதிய குதிரையில் இருந்தான்; அவனுடைய பெரிய கருப்புக்குதிரை காயங்களுக்கான சிகிச்சையில் இருந்தது. அவனுடைய முகத்தில் பூசப்பட்டிருந்த களிம்பினால்கூட அவனுடைய முகத்தின் கோரத்தை மறைக்க முடியவில்லை. பார்ப்பதற்கு படுபயங்கரமாக இருந்தது. உறைபனிக் கடியால் அவனுடைய மூக்கு மற்றும் கன்னங்களின் தோல் கருப்பாகி இருந்ததோடு,

வடுக்களின் சுருக்கங்களிலிருந்து சீழ் வடிந்துகொண்டிருந்தது. புதிதாக வளர்ந்திருந்த இளஞ்சிவப்பு வண்ணத் தோல் அவனுடைய பழுப்புநிற முகத்தோடு முரண்பட்டு விகாரமாய்த் தெரிந்தது.

ஒரு இரவு முழுவதுமன்றி மறுநாள் பாதிப் பகல் வரை அடித்த பனிப்புயலுக்குப் பின், பெரிய ஏரியின் தென்முனையில், கைவிடப்பட்ட ஒரு விலங்குப் பட்டியின் பின்னால் லாசுருங், பட்டுவைக் கண்டான். மிகக் கடுமையாகக் காயப்பட்டிருந்த அவனுடைய குதிரை நகர முடியாதபடி இருந்தது. பட்டு அரை உயிரோடு உறைந்து கிடந்தான்.

லாசுருங் எப்படியோ சிரமப்பட்டு குதிரையையும் பட்டுவையும் வீட்டுக்குக் கொண்டு வந்தான். என்ன நடந்தது என்பதை விசாரணைக் குழுவினருக்குத் துல்லியமாக விளக்குவதற்காக, பட்டு குதிரையில் அமர்ந்து, அதனால் ஏற்படும் வலியைப் பொறுத்துக்கொண்டு, அந்த இடத்துக்கு வழி நடத்திச் சென்றான். மிக மோசமான உறைபனிக் கடியால் பாதிக்கப்பட்ட மற்ற இரண்டு மேய்ப்பர்களிடம் தனியாக விசாரணை முன்னரே மேற்கொள்ளப்பட்டுவிட்டது.

பிரதான குழுவினருக்குப் பின்னால், பில்ஜிக்குப் பக்கமாக ஜென் சென் சவாரி செய்தான். ‘‘அப்பா, பட்டுவை அவர்கள் எவ்விதம் தண்டிப்பார்கள்’’ என்று மெதுவாகக் கேட்டான்.

முதியவர், அவருடைய குறுந்தாடியிலிருந்த பனித்துளிகளை மேலாடையால் துடைத்துக் கொண்டார். அவருடைய கண்களில் ஆழ்ந்த பரிவு வெளிப்பட்டது. அவர் தன் தலையைத் திருப்பாமலே, தூரத்திலிருந்த மலைகளை வெறித்தபடி, ‘‘அவன் தண்டிக்கப்பட வேண்டுமென்று மாணவர்களாகிய நீங்கள் நினைக்கிறீர்களா?’’ என்று நிதானமாகக் கேட்டார். பின்னர் அவன் பக்கம் திரும்பி, ‘‘தலைமை இடமும் இராணுவப் பிரதிநிதியும் உங்களுடைய அபிப்ராயங்களை அறிய ஆர்வமாக இருக்கிறார்கள். அதனால்தான் உங்களையும் கூட அழைத்து வந்திருக்கிறார்கள்’’ என்றார்.

‘‘பட்டு நல்ல மனிதன். அந்தப் போர்க் குதிரைகளுக்காக அவன் கிட்டத்தட்ட தன் உயிரையே கொடுத்தான். ஆனால் அதிர்ஷ்டம் அவன் பக்கம் இல்லாமல் போய்விட்டது. அவனால் அவற்றைக் காப்பாற்ற முடியாவிட்டாலும் என்னைப் பொறுத்த வரை அவன் ஒரு நாயகன். ஒரு வருடமாக நான் உங்கள் வீட்டில்

வசிக்கிறேன். பட்டுவை நான் அண்ணனாகத்தான் நினைக்கிறேன் என்பது எல்லோருக்கும் தெரியும். நான் பாவோ சுங்காயின் நிலைப் பாட்டைப் பாராட்டுகிறேன். ஆகவே, என்னுடைய அபிப்ராயம் அநேகமாகக் கருத்தில் கொள்ளப்பட மாட்டாது என்றே நினைக் கிறேன். தவிரவும், மாணவர்களாகிய நாங்கள் எங்களுக்கிடையே ஒத்துப் போவதில்லை. அதனால், ஏழை மேய்ப்பர்களின் பிரதிநிதி என்ற முறையிலும், புரட்சிகரக் குழுவின் பிரதிநிதி என்ற முறையிலும், நீங்கள் சொல்வதை எல்லோரும் கேட்பார்கள் என்ற முறையிலும் நீங்கள்தான் கடைசி முடிவெடுத்தாக வேண்டும்?''

‘‘மற்ற மாணவர்கள் என்ன சொல்கிறார்கள்?'' என்று முதியவர் கேட்டபோது இவ்விஷயத்தில் அவர் கவனமாக இருக்கிறார் என்பது தெரிந்தது.

‘‘எங்கள் பிரிவைச் சேர்ந்த பலருக்கு, பட்டுவைப் பற்றிச் சொல்ல நல்ல விசயங்களே இருக்கின்றன. இம்முறை, கொலைகாரப் பனி, கொலைகாரக் காற்று மற்றும் கொலைகார ஓநாய்த் தாக்குதல் என்றான நிலையில் இதை யாராலும் தடுத்திருக்க முடியாது. இதற்காகப் பட்டு தண்டிக்கப்பட வேண்டுமென்று அவர்கள் நினைக்க மாட்டார்கள். அதேசமயம், இயற்கையின் பேரழிவை தங்களுடைய கெட்ட நோக்கங்களுக்காக, இராணுவத்துக்கு எதிராக, எதிர்புரட்சிகர செயல்பாட்டுக்காக மேய்ப்பர்கள் பயன் படுத்திக்கொண்டிருக்கலாம் என்று சொல்லும் சிலரும் இருக் கிறார்கள். நான்கு மேய்ப்பர்களுடைய பின்புலத்தையும் மிகத் தீவிரமாகப் பரிசோதிக்க வேண்டுமென்று அவர்கள் கருதுகிறார்கள்.''

பில்ஜி இறுக்கமாகக் காணப்பட்டார். அவர் மேற்கொண்டு எதுவும் பேசவில்லை.

ஏரியின் கிழக்கு விளிம்பின் ஓரமாகச் சென்று, பட்டு தன் துப்பாக்கியால் சுட்ட இடத்தை அவர்கள் அடைந்தனர். ஜென் சென் ஒரு கணம் தன் மூச்சை இழுத்துப் பிடித்து, தான் பார்க்க விருப்பதை எதிர்கொள்ள உணர்வுபூர்வமாகத் தயாரானான். அங்கு எந்தவொரு இடத்திலும் ஒரு துளி ரத்தம்கூடஇல்லை. அந்த இரவுக் கொலை வெறியாட்டத்துக்குப் பின் பொழிந்த புதுப் பனி, ரத்தக் களரியை மூடியிருந்தது. ஏரிக்கு மேலாக எந்த ஒரு குதிரையின் தலையும் நீட்டிக்கொண்டிருக்கவில்லை; பனிக் கரைகளில் அலைகள் மோதிக்கொண்டிருந்ததைத் தவிர வேறெதுவுமில்லை. அங்கு பனி மிக

ஆழமாக இருந்தது. பனியோட்டம் விரிந்து பரவியிருந்தது. இரவு முழுவதும் அடித்த புயற்காற்றில் பெய்த பனியினால் குதிரையின் சடலங்கள் மூடப்பட்டிருந்தன.

அவர்கள் குதிரைகளில் அமர்ந்திருந்தபடியே அமைதியாகப் பார்த்தார்கள். பனி விரிப்பை நீக்க எவருக்கும் விருப்பமில்லாமல் இருந்தது. பில்ஜி அமைதியைக் கலைத்தார். ''வெட்கக்கேடு.'' ஏரியின் கிழக்கு விளிம்பைத் தன் மேய்ச்சல் தடியால் சுட்டிக் காட்டியபடி அவர் சொன்னார். ''அங்கே பாருங்கள், எவ்வளவு நெருக்கமாக அவை வந்திருக்கின்றன என்பதை. பயங்கரமான புயற்காற்று மற்றும் ஓநாய்க் கூட்டத்துக்கிடையிலும், மேய்ச்சல் நிலத்திலிருந்து கிழக்கு நோக்கி இந்த இடம் வரை குதிரைகளை பட்டு ஓட்டி வந்திருக் கிறான் என்றால் அது சாதாரண விஷயமில்லை. அவன் பயப் பட்டிருக்கவில்லை என்றாலும் அவன் ஓட்டி வந்த குதிரை பயப்பட்டிருக்கும். வழி நெடுகிலும் ஓநாய்களோடு சண்டை யிட்டபடி, முதலிலிருந்து இறுதிவரை அவன் தன் மந்தையை விட்டு நீங்காதிருந்திருக்கிறான். அவன் என்ன செய்திருக்க வேண்டுமோ, அதைத்தான் செய்திருக்கிறான்.''

தன் மகனுடைய வழக்கில் சுலபமாக வாதிட முடியும் என்பதை முதியவர் அறிந்தார். ஜென், பாவோ சுங்காய்க்கு ஓரமாக இருந்தான். ''பட்டு, இரவு முழுவதும் சமூகச் சொத்தைக் காப்பாற்றுவதற்காக ஓநாய்களோடு சண்டையிட்டிருக்கிறான்'' என்றான் அவன். ''அதன்போது அவன் கிட்டத்தட்ட செத்துப்போய்விட்டான். ஒரு நாயகனென பாராட்டும்படியாகத்தான் அவன்...''

பாவோ, ஜென்னை முறைத்துப் பார்த்தார். ''நாயகன் என்றா சொன்னாய்?'' என உறுமினார். ''ஒரு நாயகன் மந்தையைக் காப்பாற்றியிருப்பான்.'' அவர் பட்டுவை நோக்கித் திரும்பினார். ''ஏரியின் கிழக்குப் பக்கமாக மந்தையை ஓட்டிக்கொண்டு வரவேண்டிய அவசியமென்ன? குதிரைகளைப் பராமரிக்கவும் மேற்பார்வையிடவும் உனக்குள்ள இவ்வளவு கால அனுபவங்களிலிருந்து, புயற்காற்று அவற்றை ஏரிக்குள் கொண்டுபோய் தள்ளி விடுமென்பதை நீ எப்படி அறியாதிருந்தாய்? இங்கு நடந்திருப்பதற்கு அதுதானே காரணமாக இருந்திருக்கிறது.''

பட்டுவால் பாவோவின் முகத்தை நேராகப் பார்க்க முடிய வில்லை. ''அது என்னுடைய தவறுதான்'' என்றான் அவன். ''எல்லாமே என்னால்தான். இரவு

கவிழ்வதற்கு முன்பாக, கிழக்கிலுள்ள பசும்புல்வெளிக்கு மந்தையை நான் ஓட்டிச் சென்றிருந்தால், இது எதுவுமே நடந்திருக்காது.''

லாசுருங், தன் காலணியின் குதிமுள்ளால் குதிரையின் மீது குத்தி முன்னகர்ந்து, தன் மாறுபட்ட அபிப்ராயத்தை வெளிப்படுத்தினான். ''தலைமையகம்தான் அந்த இடத்தில் மேய்க்கும்படி எங்களிடம் கூறியது. அங்கு மட்டும்தான் இலையுதிர் காலப் புல் நிறைந்திருப்பதாகவும், அங்குதான் இளவேனிற் காலத்தின் புதிய புல் முளை விட்டிருப்பதாகவும் கூறியது. இராணுவத்தினர் வந்து குதிரைகளை ஏற்றுக்கொள்ளும்போது அவை வளப்பமுடன் இருக்கவேண்டுமென்று எங்களுக்குக் கூறப்பட்டது. 'புரட்சியைப் புரிந்துகொள்; உற்பத்தியைப் பெருக்கு' கூட்டத்தின்போது, பட்டு எழுந்து நின்று, ஏரியின் மேற்கு முனைப் பக்கமாகக் குதிரைகள் மேய்வது பாதுகாப்பானதல்ல என்று கூறியதை நினைவு படுத்துகிறேன். இப்போது அவனுடைய கணிப்பு உண்மையாகி இருக்கிறது. அப்படியிருக்க, நீங்கள் எப்படி அவன் மீது குற்றம் சுமத்த முடியும்?''

தலைமையகத் தலைவர்கள் அமைதியாகப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். உல்ஜீ தொண்டையைச் சரி செய்துகொண்டு பேசத் தொடங்கினார். ''லாசுருங் சொன்னது சரிதான். அது அப்படித்தான் நடந்தது. எல்லோருமே குதிரைகள் வளப்பமும் வலிமையும் பெற வேண்டுமென்றே விரும்பினார்கள். அப்போது தான் அவற்றால் வெகுதொலைவு பயணம் செய்ய முடியும் என்பதோடு யுத்த தந்திரத் திட்டங்களுக்கும் ஒத்துழைக்க முடியும். வெண்முடிப் பனிப்புயலை யாரால் கணிக்க முடிந்தது? அதுவும் மேற்கிலிருந்து அடித்த ஒன்று என்பதை நினைவில் கொள்ளுங்கள். மேலும், ஓநாய்க் கூட்டம் வேறு சேர்ந்துகொண்டது. அவை மட்டும் இல்லாதிருந்தால், பட்டு நிச்சயமாகக் குதிரைகளைப் பத்திரமாக ஓட்டி வந்திருப்பான். கொலைகாரப் புயற்காற்று, கொலைகாரப் பனி, கொலைகார ஓநாய்த் தாக்குதல், நூறாண்டுகளுக்கு ஒருமுறைதான் இப்படி எல்லாம் சேர்ந்த நிகழ்வு ஏற்படும். ஆக, யார் மீதாவது குற்றம் சுமத்த வேண்டுமென்றால், உற்பத்திப் பொறுப்பு என்னுடையது என்பதால், அது நானாகத்தான் இருக்க முடியும்.''

பாவோ சுங்காய் தன்னுடைய சவுக்கை லாசுருங்கின் மூக்கின்மீது நீட்டினார். ''இதில் உன்மீது குற்றமில்லையா?'' என்றார். ''குதிரைகள் கிட்டத்தட்ட

பத்திரமான இடத்துக்கு நெருக்கமாக வந்திருக்கின்றன என்று பில்ஜி சொன்னது சரிதான். யுத்த களத்திலிருந்து நீங்கள் மூவரும் ஓடிப் போயிருக்காமல், பட்டுவோடு சேர்ந்திருந்து மந்தையைத் தொடர்ந்து ஓட்டிக்கொண்டு போயிருந் தால் இது எதுவுமே நடந்திருக்காது. விசாரணைக்கு உன்னை நான் அனுப்பாமல் இருந்ததற்கு ஒரே காரணம், நீயாக முன்வந்து பட்டுவைக் காப்பாற்றியதுதான்.''

பில்ஜி சற்று நகர்ந்து வந்து, தன்னுடைய மேய்ச்சல் தடியால் பாவோவின் சவுக்கைக் கீழிறக்கினார். அவர் தீர்க்கமாகப் பார்த்தபடி, ''பிரதிநிதி பாவோ, விளைநிலம் சார்ந்த ஒரு மங்கோலியன் என்ற முறையில், இங்குள்ள பழக்க வழக்கங்களையாவது நீங்கள் அறிந்திருக்க வேண்டும். நீங்கள் மக்களோடு பேசும்போது, அவர்களுடைய மூக்கை நோக்கி சவுக்கைக் காட்டக்கூடாது. அது அரசர்களுக்கும் மேய்ச்சல்நிலப் பிரபுக் களுக்குமே உரிய சிறப்புரிமை'' என்றார்.

பாவோ, சவுக்கைக் கீழிறக்கி தன்னுடைய இடது கைக்கு மாற்றிக்கொண்டார். தன் வலது சுட்டு விரலால் முதலில் லாசுருங்கையும், பிறகு பட்டுவையும் சுட்டி, ''நீ! நீயும்தான்'' என்று கத்தினார். ''நீங்கள் இருவரும் இறங்கி, ஏன் அங்குள்ள பனியை மணல்வாரி கொண்டு அகற்றக்கூடாது? நான் அங்கு கிடக்கும் மிச்சங்களைப் பார்க்க விரும்புகிறேன். நாம் பேசிக்கொண்டிருக்கும் ஓநாய்க் கூட்டம் எவ்வளவு பெரியதென்று நான் அறிய விரும்புகிறேன். ஓநாய்களுக்கு எதிராக நடந்தது பற்றிக் குற்றம் சுமத்த முயற்சிக்க வேண்டாம். மனிதனே முதன்மையானவன் என தலைவர் மாவோ நமக்குச் சொல்லியிருக்கிறார்.''

இருவரும் தங்கள் குதிரைகளிலிருந்து குதித்து இறங்கினார்கள். மண்வெட்டிகள், மணல்வாரிகள், துடைப்பங்கள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு, புதைகுழியை அவர்கள் சுத்தப்படுத்தத் தொடங் கினார்கள். பாவோ சுங்காய், குதிரையில் அந்த இடத்தைச் சுற்றி வந்து தன் கேமரா மூலம் புகைப்படங்கள் எடுத்தார். மேலும், ''சுத்தமாக நீக்குங்கள். படுசுத்தமாக நீக்குங்கள்'' என்று ஆணையிட்டார்.

உல்ஜீ, பில்ஜி, பட்டு மற்றும் லாசுருங் ஆகியோரோடு, ஜென் சென்னும் ஏரியின் நடுவாக நடந்து சென்றார்கள். பனிக்கட்டி திடமாக இருந்ததோடு,

அவர்கள் கால் பட்டு நொறுங்கவும் செய்தது. ‘‘புதைந்துள்ள குதிரைகள் ஓநாய்களால் கொல்லப் பட்டுள்ளனவா என்பதை நாம் அறிந்தால்தான், ஓநாய்க் கூட்டம் எவ்வளவு மூர்க்கமானது என்பதைத் தீர்மானிக்க முடியும்’’ என்றார் பில்ஜி.

முதியவர், பட்டுவின் பக்கமாகத் திரும்பினார். ‘‘துப்பாக்கியால் சுட்டது உனக்கு உதவியாக இல்லையா?’’

‘‘இல்லை’’ என்று பட்டு சோகமான முகத்துடன் கூறினான். ‘‘என்னிடம் பத்து குண்டுகள்தான் இருந்தன. அவையும் கண நேரத்தில் தீர்ந்து போய்விட்டன. அந்த சத்தத்தைப் புயற்காற்று விழுங்கிவிட்டது. ஒருவேளை அவற்றைப் பயமுறுத்தி நான் விரட்டி யிருந்தாலும்கூட, என்னிடம் வெடிமருந்து தீர்ந்ததும் அவை திரும்ப வந்திருக்கும். அப்போது கும்மிருட்டாக இருந்தது. என்னுடைய ஃப்ளாஷ் லைட் மிகவும் மங்கிவிட்டது. என்னால் எந்த ஒன்றையும் பார்க்க முடியவில்லை.’’

அவனுடைய முகத்திலிருந்த உறைபனிக் கடியைப் பட்டு தொட்டுப் பார்த்தான். ‘‘பனி தொடர்ந்து பெய்துகொண்டிருந்தது. நான் குதிரைகளைச் சுட்டு விடுவேனோ என்று பயப்பட்டேன். புயற்காற்று நின்றுவிடக் கூடுமென நம்பினேன். அப்படியானால் கொஞ்சம் குதிரைகள் பிழைக்கக் கூடுமென்று நினைத்தேன். என்னுடைய துப்பாக்கியைக் கிட்டத்தட்ட ஓரடி உயரத்துக்கு நிமிர்த்தியது நினைவிருக்கிறது.’’

பில்ஜியும் உல்ஜீயும் ஆழ்ந்த பெருமூச்சு விட்டார்கள். ஏரியின் மத்தியில் அவர்கள் நின்றுகொண்டிருந்தபோது, குதிரைகளின் தலைகள் பக்கமாக இருந்த பனியை நீக்குவதற்கு முன்பாகப் பட்டு தயங்கினான். எல்லோரும் மூச்சை இழுத்துக்கொண்டார்கள். மகத்தான வெண்குதிரையின் கழுத்து வெளிப் பட்டபோது, அதன் பாதி பற்களால் மெல்லப்பட்டிருந்தது. அதன் தலையைப் பிடித்து, அது குப்புறக் கிடக்கும் வரை இழுத்தார்கள். அவற்றின் வீங்கிய கண்கள், கரும்பனி முட்டைகளைப் போல உறைந்து காணப்பட்டன. குதிரையின் கடைசி தருணங்களின் அடையாளமாக அவற்றில் நம்பிக்கையின்மையும் பயமும் காணப் பட்டதானது பயங்கரக் காட்சியாக இருந்தது. தலையின் அடிப்புறத்தில் இருந்த பனி, உறைந்த ரத்தத்தால் சிவப்பாகக் காணப் பட்டது. அவர்களின் கருவிகளால் அதை உடைப்பது மிகக்

கடினமாக இருந்தது. அவர்கள் ஒரு வார்த்தையும் பேசாமல், பனியை வெட்டி ஒதுக்கித் தள்ளினார்கள். சடலத்தின் பாதி உடல் வெளிப் பட்டது. ஜென்னைப் பொருத்தவரை, குதிரையின் அடிவயிறானது ஏதோ வெடி வைத்துத் தகர்க்கப்பட்டதுபோல் தோன்றியதே அன்றி ஓநாய்களின் கோரைப் பற்களால் கிழிக்கப்பட்டதாகத் தெரியவில்லை.

அவர்கள் அதைச் சுற்றி நின்றபடி, வாய் பிளந்து பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஜென்னின் கைகளும் பாதமும் பனிக் கட்டியைப் போல் குளிர்ந்து, அவனுடைய எலும்புகளில் குளிர் ஆழமாக ஊடுருவியது.

தன்னுடைய கைகளில் மண்வெட்டியைப் பிடித்தபடி, பில்ஜி ஏதோ யோசனையுடன் பார்த்தார். ''நான் இதுவரை எதிர்கொண்ட ஓநாய்க் கூட்டத்தில் இது இரண்டாவது பெரியதாக இருக்கக்கூடுமென்று நினைக்கிறேன். மேற்கொண்டு நான் எதையும் பார்க்க வேண்டியதில்லை. குதிரையின் அடிப்பகுதி இந்த மாதிரி கிழிக்கப்பட்டிருக்கும்போது, இந்தப் படுகொலையிலிருந்து எந்தவொரு குதிரையும் தப்பியிருக்க முடியாது.''

உல்ஜீ பெருமூச்சு விட்டார். அவருடைய முகம் மிகுந்த மனச்சோர்வை வெளிப்படுத்தியது. ''இரண்டு வருடங்கள் இந்தக் குதிரையில் நான் சவாரி செய்திருக்கிறேன்'' என்றார் அவர். ''இருவருமாகச் சேர்ந்து மூன்று ஓநாய்களைப் பிடித்திருக்கிறோம். நம்முடைய அதிவேகக் குதிரைகளில் ஒன்று இது. இதை விடச் சிறந்த குதிரைமீது நான் சவாரி செய்தது கிடையாது. குதிரைப் படைப் பிரிவின் தலைவராக இருந்து, கொள்ளைக்காரர்களை அடக்கிய சமயத்தில்கூட இப்படியான ஒன்று அமைந்ததில்லை. இந்த ஓநாய்க் கூட்டம் செயல்படுத்தியதைப் போன்ற திட்டத்தையோ, தந்திரங்களையோ எந்தவொரு குதிரைத் திருடனும் வகுக்க முடியாது. புயற்காற்று மற்றும் ஏரியை அவை தங்களுக்கு சாதகமாகப் பயன்படுத்திக்கொண்டன. நாம் அப்படியொன்றும் சாமர்த்தியசாலிகள் இல்லை என்பதையே இது உணர்த்துகிறது. நான் கொஞ்சம் சாமர்த்தியசாலியாக இருந்திருந்தால், இந்தக் குதிரை இன்னமும் உயிரோடு இருந்திருக்கும். இங்கு நடந்திருப்பதற்கான குற்றத்தில் எனக்கும் பங்கிருப்பதை நான் ஏற்றுக்கொண்டாக வேண்டும். அன்று பாவோவிடம் என் கருத்துகளை இன்னும் அழுத்தமாகக் கூறியிருந்திருக்க வேண்டும்.''

படுகொலைகள் நிகழ்ந்த இடத்தில் பெருமளவு பனி அகற்றப்பட்டு விட்டது. உறைபனி ஏரியின் எல்லாப் பகுதிகளிலும் உடல்கள் ரத்தச் சிவப்புப் பனிக்கட்டியுடன் காணப்பட்டன. பெருமளவில் எறிகுண்டுகள் வீசித் தாக்கப்பட்டதற்குப் பின்னான யுத்தகளம் போல், எங்கும் உடைந்த கால்கள் சிதறிக் கிடந்தன. இரண்டு மேய்ப்பர்களும் பனிக்கட்டியின்மீது மண்டியிட்டு இருந்தபடி, விடாமல் அழுதுகொண்டே அவர்கள் நேசித்த குதிரை களின் தலைகளை சுத்தப்படுத்திக்கொண்டிருந்தார்கள். குழுவி லிருந்த ஒவ்வொருவரும் இந்தப் பரிதாபமான காட்சியைப் பார்த்து உறைந்து போயிருந்தார்கள். ஜென் சென்னும் மற்ற மாணவர்களும், இதற்கு முன்னர் யுத்தத்தின் கோரத்தையோ ஓநாய்த் தாக்குதலுக்குப் பின்னரான விளைவுகளையோ பார்த்திராததால், ஒருவரையொருவர் உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தார்கள். அவர்களுடைய முகங்கள் வெளிறிப் போயிருந்தன.

முதியவரின் அதிருப்தி வெளிப்படையாகத் தெரிந்தது. ''சீனர்களாகிய நீங்கள் மோசமான குதிரைக்காரர்கள். சவாரி செய்வது கடினமாகும் சூழ்நிலையில், சேணத்தின்மீது உங்களால் இருக்கக்கூட முடியாது.''

முதியவரின் அபிப்ராயத்தில் உள்ளுறைந்திருக்கும் பொருளை ஜென் புரிந்துகொண்டான். மங்கோலியக் குதிரையில் திறமையாக சவாரி செய்பவனை விடவும், அவருடைய ஆத்மாவில் ஓநாய் குலச்சின்னமே அசைக்க முடியாத இடம் பெற்றிருந்தது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளுக்குப் பிறகும், மேய்ச்சல் நிலக்காரர்கள் பிற விலங்குகளைக் கொன்று வாழ்கிற குலச்சின்னத்தைக் குறை சொல்வதில்லை. எழுபது அல்லது எண்பது குதிரைகளைக் கொன்ற பிறகும்கூட அவர்களின் ஒரே புனித உருவாக அதுவே இருந்துகொண்டிருக்கிறது. ஜென்னுக்கு சில பழமொழிகள் நினைவுக்கு வந்தன: 'மஞ்சள் நதி நூறு பேரழிவுகளை விளைவித்தாலும், அது தொட்டுச் செல்லும் எல்லாவற்றையும் வளப்படுத்துகிறது;' 'மஞ்சள் நதி தன் கரைகளை உடைத்துப் பாயும்போது, மக்கள் மீன்களாகவும் கடல் ஆமைகளாகவும் ஆகிவிடுகிறார்கள்'; 'மஞ்சள் நதி — நம் அன்னை நதி;' 'மஞ்சள் நதி — சீன இனத்தின் தொட்டில்.' மஞ்சள் நதியானது சீன இனத்தின் தொட்டில் என்பதை சீனர் எவரும் மறுப்பதில்லை. அவர்களுடைய இனத்தின் வாழ்வுக்கும்

வளர்ச்சிக்கும் அது முக்கிய பங்கு வகிக்கிறது. அது சமயங்களில் பொங்கிப் பிரவாகமெடுத்துக் கரைகளை உடைத்துப் பல ஏக்கர் பயிர் நிலங்களையும் ஆயிரக்கணக்கான உயிர்களையும் விழுங்கி விட்டாலும் அதன் பெறுமதி குறைவதில்லை. மேய்ச்சல் நிலத்தவரின் ஓநாய் குலச்சின்னமானது அதுபோன்றே போற்றப்படத் தகுதியானது.

பாவோ சுங்காய், கத்தி ஆணைகளிடுவதை நிறுத்திவிட்டு, கொலைக்களத்தின் முழுமையான சித்திரத்தை அறிவதற்காக அதனைச் சுற்றி சவாரி செய்தார். அந்தக் காட்சியைப் பாவோ புகைப்படங்கள் எடுத்தார். ஆத்திரத்தில் அவர் கைகள் நடுங்குவதை ஜென் சென் கவனித்தான். அவர் புகைப்படக் கருவியை நிலையாகத் தாங்கிப் பிடித்திருக்க சிரமப்பட்டார்.

பில்ஜியும் உல்ஜீயும், பல சடலங்கள் கிடந்த ஒரு பகுதியில், ஏதோ ஒரு சாட்சியத்தைத் தேடுவதைப் போல, அங்கும் இங்குமாகத் தோண்டியும் கிளறியும் கொண்டிருந்தார்கள். அவர்களுக்கு உதவி செய்வதற்காக ஜென் அங்கு விரைந்து வந்தான். ''நீங்கள் எதைத் தேடிக¢கொண்டிருக்கிறீர்கள், அப்பா'' என்று அவன் கேட்டான்.

''ஓநாய்கள் வந்த பாதையை'' என்றார் முதியவர். ''நாம் கவனமாகத் தொடர்வது அவசியம்.''

ஜென் குனிந்து கவனமாக அடி எடுத்து வைத்தான். அதிக தூரம் செல்லவேண்டி இருக்கவில்லை. அங்கிருந்த ஒரு தளத்தில் அவர்கள் ஒரு பாதையைக் கவனித்தார்கள். அதன்மீது பனி இறுக்கமாகக் கெட்டித்திருந்தது. அதன்மீது தங்கியிருந்த பனித் துகள்களை அகற்றிய பிறகு, எருதின் குளம்பு அளவுக்குப் பெரியதும் நாயின் பாதத் தடமளவுக்கு சிறியதுமான ஓநாய்த் தடங்கள் தெரிந்தன. சில தடங்களில் ரத்தத்தின் தடயங்களும் இருந்தன.

உல்ஜீயும் பில்ஜியும் ஓநாய்ப் பாதையிலிருந்து பனியை அகற்றுவதற்காக மற்றவர்களை அங்கு அழைத்தார்கள். அந்தப் பாதையிலிருந்து அறிய முடிவதிலிருந்துதான், ஓநாய்க்கூட்டத்தின் அளவை ஓரளவு சரியாகக் கணிக்க முடியுமென பில்ஜி கருதினார். பாதை கொஞ்சம் கொஞ்சமாக வெளிப்படத் தொடங்கியபோது, அது நேராக இல்லாமல் வளைந்திருப்பதை அவர்கள் பார்த்தார்கள். இன்னும் கொஞ்சம் சென்றபிறகு, அது ஒரு அரை வட்டமாக

அமைந்திருந்ததை அவர்கள் கவனித்தார்கள். அந்தப் பாதையின் முழு நீளத்தையும் சுத்தப்படுத்த ஒரு மணி நேரத்துக்கும் மேலானது. அது ஒரு முழுமையான வட்டமாக அமைந்திருந்ததும் தெரிய வந்தது. பனிக்கட்டியும் ரத்தமுமான வட்டம். கைமுஷ்டியளவு கெட்டியாக இருந்த பனி, ரத்தக் கறையோடு காணப்பட்டது. கருப்பும் சிவப்பும் கலந்த உறை சகதியும், சிவப்புப் பனிக்கட்டியும் பயங்கரமான காட்சியாக இருந்தது. அவர்கள் திகிலடைந்துபோய், அவர்கள் அறிந்தது பற்றிப் பேசினார்கள்.

''நான் எவ்வளவோ காலம் வாழ்ந்துவிட்டேன். ஆனால் ஒரே இடத்தில் இவ்வளவு ஓநாய்த் தடங்களை இதுவரை நான் பார்த்ததில்லை.''

''இது ஓநாய்க்கூட்டமில்லை; சைத்தான்களின் கொள்ளைக் கூட்டம்.''

''இதன் எண்ணிக்கை அச்சமூட்டுகிறது.'' ''குறைந்தது நாற்பது அல்லது ஐம்பது இருக்கும்.''

''பட்டு, இத்தகைய ஓநாய்க் கூட்டத்துக்கு எதிராகத் தொடர்ந்துபோராடியிருக்கிறாய். நீ பெரிய தைரியசாலிதான். நானெல்லாம் பயத்திலேயே குதிரையிலிருந்து கீழே விழுந்து, நேரடியாக அந்த ஓநாய்களின் வயிற்றுக்குள் சென்றிருப்பேன்.''

''அந்த இரவு கும்மிருட்டாக இருந்தது. பனி வேறு பெய்துகொண்டிருந்தது. எந்த ஒன்றையும் என்னால் பார்க்க முடியவில்லை. ஓநாய்க் கூட்டம் எவ்வளவு பெரியதென்று எனக்கெப்படி தெரியும்'' என்றான் பட்டு.

''இப்போதிருந்து இனி நம் புல்வெளிப் பிராந்தியத்தில் நிலைமை கடுமையானதாக இருக்கும்.''

''இரவில் பெண்கள் வெளியில் செல்ல இனி பயப் படுவார்கள்.''

''இளவேனிற் காலத்தில் உணவின்றி வாட நேரிடுவதைத் தவிர்க்க ஓநாய்கள் சேமித்து வைத்திருந்த உணவைக் கொள்ளை யடித்த தலைமையக முட்டாள்கள்தான் இதற்குக் காரணம். அதனால்தான் அவை பழி வாங்கும் நடவடிக்கையில் ஈடுபட்டன. நான் அவற்றின் ஆண் தலைமையாக இருந்திருந்தால் இதையே தான் நானும் செய்திருப்பேன். ஆனால் அவர்களின் பன்றிகள் மற்றும் கோழிகளை நான் குறி வைத்திருப்பேன்.''

‘‘தலைமையகம் சரியான ஏதாவதொன்றைச் செய்து, ஓநாய் வேட்டையில் ஈடுபட வேண்டும். அவற்றை நாம் இப்போது கொல்லாவிட்டால், அவற்றின் அடுத்த இரை நாமாகத்தான் இருப்போம்.’’

‘‘கூட்டங்கள் நடத்துவதைக் குறைத்துக்கொண்டு, ஓநாய் வேட்டைகளில் அதிகமாக ஈடுபட வேண்டும்.’’

‘‘இம்முறை அவை தின்று தீர்த்திருக்கும் வெறியைப் பார்த்தால், அவற்றின் பசியைப் போக்க நம்மிடம் போதுமான விலங்குகள் இருப்பதாகத் தெரியவில்லை.’’

‘‘நம்முடைய பசும்புல் நிலத்துக்குத் தலைவர்களாக, விளைநிலங்களைச் சேர்ந்தவர்கள் இறக்குமதி செய்யப்படுகிறார்கள். அவர்கள் செய்யும் எல்லாமே தவறாக இருக்கின்றன. நமக்கொரு பாடமாக டெஞ்ஞர் ஓநாய்களை அனுப்பியிருக்கிறது.’’

‘‘நீ என்ன பேசுகிறாய் என்பதை யோசித்துப் பேசு. இல்லாவிட்டால் அடுத்த விமர்சனக் கூட்டம் உனக்கானதாகத்தான் இருக்கும்.’’

பில்ஜி மற்றும் உல்ஜீயோடு சேர்ந்து பாவோ சுங்காய் அந்தப் பாதையைப் பரிசோதித்தார். புகைப்படங்கள் எடுக்கும்போது, இரு உள்ளூர் மனிதர்களிடமும் பேசுவதை நிறுத்திக்கொண்டார். அவருடைய முகம் கொஞ்சம் கொஞ்சமாக ஆசுவாசமடைந்தது. ‘மனிதனே பிரதானம்’ என்ற அவருடைய கருத்தாக்கத்தை வலுவிழக்கச் செய்யும் வகையில் பில்ஜி சில விசயங்களைக் கூறியிருப்பாரென ஜென் சென் சந்தேகப்பட்டான். இயற்கையின் இந்தப் பேரழிவை, ஓநாய்களின் இந்தக் கொலைத் தாக்குதலை மனிதனால் வெற்றிகரமாகத் தடுத்து நிறுத்த முடியுமா? நீங்கள் எத்தனை விசாரணைக் குழுக்களை உங்கள் விருப்பத்துக்கேற்ப அனுப்பினாலும், இந்தக் கொலைக்களத்தைப் பார்க்கும் எவரும், இப்படியான ஒன்றை நடக்காமல் தடுக்கும் சக்தி மனிதனுக்கில்லை என்பதை ஏற்றுக்கொள்வார்கள். அதிலும் குறிப்பாக, பனிப்புயலும் ஒரு காரணியாக இருக்கும்போது, உங்களால் எதுவும் செய்வதற்கில்லை. பட்டு மற்றும் உல்ஜீ குறித்த அவனுடைய கவலை மெல்லக் குறைந்தது.

ஓநாய்ப் பாதையை நெருக்கமாகப் பரிசீலிப்பதில் அவனுடைய கவனம் திரும்பியது. அதன் வினோதமான வட்டப் பாதை அவனுக்கு மெய்சிலிர்க்கச் செய்தது. ஏன் இந்த வட்ட வடிவம்? அவை என்ன செய்ய முயற்சித்தன? அவற்றின் இலக்கு என்ன? மேய்ச்சல்நில ஓநாய்கள் பற்றி எதுவும் திட்டமாகச் சொல்வதற்கில்லை. அவற்றின் நடவடிக்கை குறித்த எந்தவொரு துப்பும் புதிய புதிரையே உருவாக்குகிறது. கடும்குளிரிலிருந்து விடுபடுவதற்காகவா? தங்களை சூடுபடுத்திக் கொள்ள அவை இப்படி ஓடினவா? அல்லது செரிமானத்துக்காக அப்படி செய்தனவா? அதிகப் படியான சக்தியை எரித்துக்கொள்வதன் மூலம் குதிரைக்கறிக்கான அவற்றின் தேவை அதிகரிக்கலாம். அதுவும்கூட சாத்தியம்தான். மற்ற மேய்ச்சல் நில விலங்கினங்களைப் போலன்றி, ஓநாய்கள் கொன்றதிலிருந்து எவ்வளவு முடியுமோ அவ்வளவு சாப்பிட்டு விட்டுச் சென்றுவிடும். அதனால் அவை, தாம் கொன்றவற்றிலிருந்து எவ்வளவு முடியுமோ அந்த அளவுக்கு வயிறு முட்டச் சாப்பிடும். இனி சாப்பிட முடியாது என்ற அளவுக்கு வெளுத்துக் கட்டும். அதன் பின்னர் அவை செரிமானத்துக்கு உதவும் வகையில் ஓடத் தொடங்கும். வயிற்றைக் காலியாக்கிவிட்டு, மறுபடியும் அங்கு சென்று மீண்டும் உண்ணத் தொடங்கும். அல்லது அது எதிர்கால யுத்தத்துக்கான அணிவகுப்பாக இருக்கலாம். அதுவும்கூட சாத்தியம்தான். ஓநாய்கள் கட்டுக்கோப்பாகவும் மிகுந்த கட்டுப்பாட்டுடனும் இருந்திருப்பதைத் தடங்கள் தெளிவாக வெளிப்படுத்தின. அப்பாதையின் அகலம், அவ்வட்டம் முழுவதும், ஒரு அடிக்கும் சற்று கூடுதலாகத்தான் இருந்தது. அதற்கு வெளியே ஒரு தடம்கூட இல்லை. எனில், அது படை அணிவகுப்பாக அன்றி வேறென்னவாக இருக்கும்? ஜென் யோசித்தான். ஓநாய்கள் பொதுவாக தனித்தே சண்டையிடும்; சமயங்களில் மூன்று முதல் ஐந்து வரை சேர்ந்து சிறு கூட்டமாக வேட்டையாடும்; அல்லது எட்டு முதல் பத்து வரை குடும்பங் களாகச் சேர்ந்து கொள்ளையடிக்கும். ஆனால், இங்கு நடந்திருப்பது போல, ஒரு சிறு படையாக ஒன்று சேர்ந்திருப்பது வெகு அபூர்வம்.

ஒருவேளை, இது வெற்றிக் கொண்டாட்டமாக இருக்குமோ? ஒரு மகத்தான விருந்துக்கு முன் வெளிப்பட்ட அதீத பரவசத்தின் அடையாளமாக இருக்குமோ? அப்படியாக இருப்பதற்கான வாய்ப்பு கூடுதலாகவே இருக்கிறது.

இந்தக் கொலைவெறித் தாக்குதலில் அவை எல்லாக் குதிரைகளையும் ஒன்று விடாமல் கொன்று தீர்த்திருக்கின்றன. பழி வாங்கல். பகைமையின் தாகம் தணித்தல். முழுமையான வெற்றி. கவலை போக்கும் காரியம். இவ்வளவு குதிரைகளைக் கொன்று குவித்த பிறகு, அவை கொண்டாடாமல் எப்படி இருக்கும்? சாவு நடன நிகழ்ச்சிதான் அவை நடத்தியிருக்கும்.

ஓநாய்களின் நடத்தையை மனிதப் பார்வையின் மூலம் அணுகி ஜென் இதைக் கண்டடைந்தான். சில புதிரான நடத்தைகளுக்கு தர்க்கரீதியான காரணங்களை இவ்வாறு அடையலாம். நாய்கள், மனித இயல்புகளை வெளிப்படுத்துகின்றன; மனிதன், ஓநாய் இயல்புகளை வெளிப்படுத்துகிறான். இதை மாற்றியும் சொல்லலாம். சொர்க்கமும் பூமியும் மனிதனும் ஒன்றுபட்டவை; மனிதர்கள், நாய்கள், ஓநாய்களை வகைமைப்படுத்திப் பிரிப்பது சாத்தியமற்றது. இல்லையெனில், இந்த படுபயங்கரமான கொலைக் களத்தில், பலவாறாக மேவிக் கிடக்கிற மனிதத் தடயங்களை எப்படி விளக்குவது? எல்லா மனிதர்களுமே அவர்களுக்குள் ஒருவரோடு ஒருவர் மோதும்போது ஓநாய்களாகத் தானே மாறிவிடுகிறார்கள்.

மனிதர்களும் குதிரைகளும் வரிசையாகப் பட்டுவைப் பின்தொடர்ந்து, சம்பவ இடத்திலிருந்து வடக்கு நோக்கி நகர்ந்தபோது, பில்ஜிக்கு அருகில் ஜென் வந்தான். ‘‘அப்பா, ஓநாய்கள் எதற்காக அந்தப் பாதையை அமைத்தன’’ என்று கேட்டான்.

முதியவர் சுற்றிலும் பார்த்துவிட்டுக் கடிவாளத்தை இழுத்தார். அப்போதுதான் குழுவின் மற்ற உறுப்பினர்களிடமிருந்து அவர்களால் பின்தங்க முடியும். ‘‘நான் ஓலோன்புலாக்கில் அறுபது ஆண்டுகளுக்கும் மேலாக வசித்து வருகிறேன்’’ என்று மெதுவாகச் சொன்னார். ‘‘நான் இதற்கு முன்னரும் இது போன்ற ஓநாய் வட்டப் பாதைகளை சிலமுறை பார்த்திருக்கிறேன். இதே கேள்வியை என் அப்பாவிடம் ஒருமுறை நான் கேட்டேன். புனித மலையான பாயன் உல்லையும் ஓலோன்புலாக்கையும் காக்கும் காவலர்களாக டெஞ்ஞரினால் ஓநாய்கள் மேய்ச்சல் நிலத்துக்கு அனுப்பப்பட்டன. மேய்ச்சல் நிலத்துக்கு அபாயம் ஏற்படும் போதெல்லாம் டெஞ்ஞரும் புனித மலையும் கோபம் கொண்டு, தீங்கிழைப்பவர்களைக் கொன்று தீர்ப்பதற்காக ஓநாய்களை அனுப்புகின்றன. அந்த வெகு மதியைப் பெறும் ஒவ்வொரு முறையும், அவை அதைச் சுற்றி

மகிழ்ச்சியோடு ஓடி வட்டமிடுகின்றன. சூரியனைப் போலவும் சந்திரனைப் போலவும் வட்டம் அமையும் வரை அவை அதைச் செய்கின்றன. வட்டப் பாதையானது, டெஞ்ஞருக்கு அவை தெரி விக்கும் நன்றி அறிவித்தல். நிலவைப் பார்த்து ஊளையிடுவதற்குப் பெயர் பெற்றவை ஓநாய்கள். டெஞ்ஞருக்கான அவற்றின் அழைப்பு அதுதான். நிலவைச் சுற்றி ஒளிவட்டம் தோன்றினால், அந்த இரவில் புயற்காற்று அடிக்கத் தொடங்கும். ஓநாய்கள் புறப்பட்டுவிடும். நம்மை விடவும் தட்பவெப்ப நிலை பற்றிய ஞானத்தில் அவை மேம்பட்டவை. வானில் இருப்பவற்றின் கண்ணாடியாக அவை வட்டங்களை உருவாக்கும். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், சொர்க்கங்களோடு அவை துல்லியமான இசைமை கொண்டவை.''

பிரசித்தி பெற்ற பழங்கதைகளின் ரசிகனான ஜென் சென் பரவசமடைந்தான். ''அற்புதம், வெகு அற்புதம்'' என்றான் அவன். ''சூரியனுக்கு ஒளிவட்டம் அமைவதைப் போன்றே நிலவுக்கும் ஒளிவட்டம் அமைகிறது. தொலைவிலிருக்கும் ஒருவருக்கு மேய்ப்பர்கள் சைகை செய்வதாக இருந்தால், கையால் வானில் ஒரு வட்டமிடுவார்கள். வட்டமென்பது ஓர் ஆன்மீகக் குறியீடாகவே தோன்றுகிறது. நீங்கள் சொல்வது எனக்கு சிலிர்ப்பூட்டுகிறது. இங்குள்ள ஓநாய்கள் ஆன்ம பலமிக்கவை. டெஞ்ஞருக்கான சமிக்ஞைகளாக அவை வட்டங்களை உருவாக்குவது இப்போது எனக்குப் புரிகிறது.''

''அவை அதீதமானவை'' என்றார் முதியவர். ''என்னுடைய வாழ்நாள் முழுவதும் அவற்றோடு பரிமாற்றம் கொண்டிருந்திருக்கிறேன். ஆனால் இப்படியான ஒன்றை நான்கூட ஒருபோதும் எதிர்பார்த்திருக்கவில்லை. நாம் சற்றும் எதிர்பாராத இடத்தில் எதிர்பாராத சமயத்தில் ஓநாய்கள் வெளிப்படும். டெஞ்ஞரின் துணையின்றி அவற்றால் எப்படி இவ்வளவு ஆற்றலுடன் வெளிப்பட முடியும்?''

முன்னால் சென்றவர்கள் நின்றுவிட்டார்கள். சிலர் கீழே இறங்கி, பனியைத் தோண்ட ஆரம்பித்தார்கள். ஜென்னும் பில்ஜியும் குதிரைகளைத் தட்டி வேகமாக அங்கு சென்றார்கள். அங்கு மேலும் பல உடல்கள் தாறுமாறாக சிதறிக் கிடந்தன. திடீரென யாரோ, ''ஓநாய்! செத்த ஓநாயொன்று இங்கு கிடக்கிறது'' என்று கத்தினார்.

ஓநாய்கள், குதிரைகளின் அடிவயிற்றில் தற்கொலைத் தாக்குதல் நிகழ்த்தியதாகப் பட்டு சொன்ன இடம் இதுவாகத்தான் இருக்க வேண்டுமென ஜென் ஊகித்தறிந்தான். அதுவரை ஏற்ற இறக்கத்துடன் நடந்துகொண்டிருந்த யுத்தம், குதிரைகளின் முடிவாகத் தொடங்கியது இங்குதான் என ஜென் ஊகித்தான். அவனுடைய இதயம் வேக வேகமாகத் துடித்தது.

பாவோ சுங்காய் அவருடைய சவுக்கைக் காற்றில் சுழற்றி, குதிரையில் இருந்தபடியே, ‘‘யாரும் ஓட வேண்டாம். எல்லோரும் இங்கே வாருங்கள். இந்தக் குதிரைகளில் சிலவற்றைத் தோண்டி எடுங்கள். முதலில் குதிரைகள், அடுத்தது ஓநாய்கள்.’’

எல்லோரும் அங்கே ஒன்றாகச் சேர்ந்து, தோண்டத் தொடங்கினர். குதிரை உடல்கள் வெளிப்படத் தொடங்கின. மற்றவர் களோடு சேர்ந்து தோண்டிக்கொண்டிருந்த ஜென் சென்னுக்கு, ஏரியில் இறந்து கிடந்த குதிரைகளை விடவும், இங்கிருக்கும் குதிரைகளின் மரணம் அதிக துயரமானதாகத் தோன்றியது. இறந்துபோன கண்களில் உறைந்திருந்த வேதனையும் பயமும், ஏரியில் கிடந்த குதிரைகளைக் காட்டிலும் மிக வெளிப்படையாக இருந்தன.

‘‘ஜப்பானிய பிசாசுகளை விடவும் இந்த ஓநாய்கள் மிகவும் குரூரமானவை’’ என பாவோ கோபத்தில் கத்தினார். ‘‘தாம் செய்ய வேண்டியதெல்லாம் வயிற்றைக் கிழித்துப் பிளந்துவிட்டால் போதும், பின் குதிரைகள் தங்கள் குளம்புகளாலேயே இறந்துவிடுமென்பது அவற்றுக்குத் தெரிந்திருக்கிறது. இதை விடவும் கொடூர குணம் கொண்ட தீய சக்தியை என் வாழ்வில் ஒருபோதும் பார்த்ததில்லை. இந்த ஓநாய்கள் ஜப்பானிய சாமுராயின் ஆன்மாவை உத்வேகமாகக் கொண்டிருக்கின்றன. தற்கொலைத் தாக்குதலுக்கு அவை கொஞ்சமும் அஞ்சுவதில்லை. அதனால்தான் எவற்றை விடவும் மங்கோலிய ஓநாய்கள் அச்சமூட்டுபவையாக இருக்கின்றன. அவற்றின் கடைசி ஓநாயைக் கொல்லும் வரை நான் ஓயப் போவதில்லை.’’

‘‘ஒரு மனிதன் அல்லது இனம், சரணடைவதற்கு முன்பாக மரணத்தைத் தேர்வு செய்யும் ஆன்ம பலத்தைக் கொண்டிருக்கா விட்டால், அடிமையாவதுதான் தவிர்க்க முடியாத விளைவாக இருக்கும். ஓநாய்களின் தற்கொலையெனும் ஆன்ம பலத்தை முன்மாதிரியாக மேற்கொள்ளும் எவரும்

ஆளுமைமிக்க நாயகனாகலாம்; பாடல்களாலும் கண்ணீராலும் அவன் புகழ் பாடப்படும். தவறான பாடத்தைக் கற்றுக்கொள்வது, சாமுராய் அடக்குமுறைக்கே வழி வகுக்கும். சரணடைவதற்கு முன்பாக மரணம் என்ற ஆன்ம பலத்தை இழந்துவிட்டிருக்கும் எவரும் சாமுராய் அடக்குமுறைக்குப் பணியவே நேரிடும்'' என்றான் ஜென்.

பாவோ சுங்காய் ஒரு கணம் மூச்சை உள்ளிழுத்துக் கொண்டார். ''நீ சொல்வது சரிதான்'' என்றார்.

உல்ஜீ, தீர்க்கமான பார்வையுடன், பாவோவை நோக்கி, ''இதுபோன்ற தற்கொலைத் தாக்குதலைத்தானே பட்டு மேற்கொண்டிருந்திருக்கிறான்'' என்றார். ''பசும்புல் நிலத்திலிருந்து இந்த இடம் வரை அவற்றோடு போராடியபடி அவன் வந்திருக்கிறான். அவன் அதை எப்படிச் செய்தானென்று எனக்குத் தெரியவில்லை. அவன் உயிர் மீண்டு இருக்கிறானென்றால் அவனைப் பாதுகாத்த டெஞ்ஞருக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். விசாரணைக் குழுவினர் இதைப் பார்த்தால், அவர்கள் சரியான முடிவுக்கு வருவார்கள் என்று நம்புகிறேன்.''

பாவோ சுங்காய் தலையாட்டி ஆமோதித்தார். அவர் பட்டுவை நோக்கித் திரும்பினார். ''ஓநாய்கள் உன்னுடைய குதிரைக்கு இதே போன்று செய்யக்கூடுமென்று நீ பயப்படவில்லையா?'' என்று இணக்கமான தொனியில் கேட்டார்.

''ஏரியைக் கடந்து மந்தையை ஓட்டிக்கொண்டு சென்றுவிட வேண்டுமென்பது மட்டுமே என் ஒரே தீர்மானமாக இருந்தது. மற்ற எதைப் பற்றியும் யோசிக்க எனக்கு அவகாசமிருக்கவில்லை'' என்று பட்டு பதிலளித்தான். ''நாங்கள் மிக நெருக்கமாக வந்து விட்டிருந்தோம்.''

''ஓநாய்கள் உன்னை ஒன்றும் செய்யவில்லையா?'' பாவோ கேட்டார்.

பட்டு, இரும்பு வளையங்களுடன் கூடிய அவனுடைய மேய்ச்சல் தடியை பாவோவிடம் உயர்த்திக் காட்டினான். ''நான் இதன்மூலம் ஒரு ஓநாயின் கோரைப் பற்களை உடைத்தெறிந்தேன். இன்னொன்றின் மூக்கை உடைத்தேன்'' என்றான். ''நான் அதைச் செய்திருக்காவிட்டால் அவை இரண்டுமே என்னை முடித்திருக்கும். லாசுருங்கிடமும் மற்ற இருவரிடமும் இது

போன்ற ஒன்று இல்லையென்பதால் அவர்களைக் காப்பாற்றிக்கொள்ள அவர்களுக்கு வேறு வழி இல்லை. அவர்கள் என்னைக் கைவிட்டு விடவில்லை.''

பாவோ அவனிடமிருந்து மேய்ச்சல் தடியை வாங்கி அதன் திடத்தை உணர்ந்தார். ''அருமையான தடி'' என்று வியந்தார். ''மிக அருமையான தடி. ஓநாயின் பற்களை அடித்து விழச் செய்யுமளவுக்கு மூர்க்கமானதுதான். நல்லது! ஓநாய்களைப் பொறுத்த வரை, மூர்க்கமே சிறந்த வழி. பட்டு, நீ மிகவும் தைரியசாலி. எப்படி சண்டையிட வேண்டுமென்பதும் உனக்குத் தெரிந்திருக் கிறது. அவர்கள் விசாரணைக் குழுவை அனுப்பி வைக்கும்போது, நீ ஓநாய்களோடு எப்படி தீரத்துடன் சண்டையிட்டாய் என்பதையும், முழுக் கதையையும் அவர்களிடம் சொல்வேன்.''

பாவோ மேய்ச்சல் தடியை அவனிடம் திருப்பிக் கொடுத்து விட்டு, உல்ஜீயை நோக்கித் திரும்பினார். ''உங்களுடைய இந்த ஓநாய்கள் மனிதர்களை விடவும் சாமர்த்தியமானவை. அவை எப்படி இதைச் செய்து முடித்திருக்கின்றன என்பதை என்னால் காண முடிகிறது. எப்பாடு பட்டாவது குதிரைகளை ஏரிக்குள் தள்ளிவிட வேண்டுமென்பதைத் தெளிவான இலக்காக அவை தம் மனதில் கொண்டிருந்திருக்கின்றன. பாருங்கள்...'' அவர் தன் விரல்களால் எண்ணத் தொடங்கினார். ''ஓநாய்கள் அறிந்திருப்ப வற்றைப் பாருங்கள்: வானிலை, நிலவியல், சந்தர்ப்பம், அவற்றினுடைய மற்றும் எதிரியினுடைய பலங்கள், இராணுவத் திட்டங்கள் மற்றும் தந்திரங்கள், நெருக்கமான தாக்குதல், இரவுத் தாக்குதல், கொரில்லா தாக்குதல், நகரும் தாக்குதல், நீண்ட தூரத் தாக்குதல், பதுங்கியிருந்து தாக்குதல், மின்னல் தாக்குதல், மேலும் எதிரியைக் கொல்ல தம் பலத்தில் முழு கவனம் கொண்டிருத்தல். நடந்திருப்பது ஒரு பாடப் புத்தக யுத்த திட்டம்.''

''இங்கு பணியாற்றுவதற்காக நான் நியமிக்கப்பட்ட முதல் நாளிலிருந்தே யுத்தகளத்தை விட்டுத் தொலைவில் இருப்பதாக நான் உணரவில்லை'' என்றார் உல்ஜீ. ''வருடம் முழுவதும் நான் ஓநாய்களோடு சண்டையிட்டுக்கொண்டிருக்கிறேன். நான் எங்கு சென்றாலும் என்னுடன் துப்பாக்கியை எடுத்துச் செல்கிறேன். நான் ஒரு சிப்பாயாக இருந்ததை விடவும் குறி பார்ப்பதில் இப்போது மிகவும் சிறந்து விளங்குகிறேன். நீங்கள் சொல்வது

சரிதான். ஓநாய்கள் யுத்த தந்திரங்களும் திட்டங்களும் அறிந்தவை. ஒரு தலைமுறை காலத்துக்கும் மேலாக அவற்றோடு சண்டை யிட்டிருப்பதில், நான் அதிகம் கற்றுக்கொண்டிருக்கிறேன். கொள்ளையர்களைக் கொன்று தீர்க்கும் இன்னொரு நடவடிக்கைக்கு நான் தலைமையேற்க நேர்ந்தால், நான்தான் சிறப்பாகச் செயல்படுவேன்.''

''மனிதர்கள் யுத்தம் நடத்தும் முறையை ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்டிருப்பதாக நீங்கள் சொல்கிறீர்களா?'' என்று ஜென் ஆர்வம் மேலிடக் கேட்டான்.

உல்ஜீயின் கண்கள் பிரகாசித்தன. ''ஆமாம் யுத்தத்தை நடத்துவது பற்றி நாம் அறிந்திருக்கும் பலவும் ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்டவைதான். பழங்காலத்தில் இங்கு மேய்ச்சல் நிலத்தில், தென்கோடியிலிருந்து வந்த விளைநில மக்களுக்கு எதிராக மேய்ப்பர்கள் சண்டையிட்டபோது, ஓநாய்களிடமிருந்து கற்ற யுக்திகளையே பயன்படுத்தினார்கள். வீட்டு விலங்குகள் வளர்ப்புப் பண்ணை பற்றி நான் ஹோகாட்டில் படித்தபோது, யுத்தகளம் பற்றிய பல புத்தகங்களை வாசித்தேன். சுன் — சூ விவரிக்கும் போர்க் கலைகளுக்கும் ஓநாய்கள் மேற்கொள்ளும் முறைகளுக்கும் எவ்வித வேறுபாடும் இருப்பதாக எனக்குத் தெரியவில்லை.''

''யுத்தம் பற்றிய சீனர்களின் புத்தகங்களில் மேய்ச்சல்நில மக்கள் பற்றியோ ஓநாய்கள் பற்றியோ எவ்விதக் குறிப்பும் இடம் பெற்றதே இல்லை'' என்றான் ஜென் சென். ''இது கொஞ்சமும் நியாயமற்றது.''

''மங்கோலியர்களாகிய நாங்கள் கலாசார ரீதியாகப் பிற்படுத்தப்பட்ட நிலையில் இருக்கிறோம்'' என்று பதில் அளித்தார் உல்ஜீ. ''உலகுக்கு எங்களை அறிமுகப்படுத்திய ஒரே புத்தகம் 'மங்கோலியர்களின் ரகசிய ராணுவ வரலாறு' மட்டும்தான்.''

''இங்குள்ள விலங்குகள் வளர்ப்புப் பண்ணையில் பணியாற்ற நேரிடும்போது, ஓநாய்கள் பற்றியும், யுத்தத்தை எப்படி நடத்த வேண்டும் என்பது பற்றியும் அவசியம் தெரிந்துதானாக வேண்டும் என்பது தெளிவாகப் புரிகிறது'' என்று பாவோ, உல்ஜீயிடம் சொன்னார். ''அப்படி செய்யாவிட்டால் கஷ்டப்பட வேண்டியது தான். சரி, நேரம் கடந்துகொண்டிருக்கிறது. இறந்து கிடக்கும்

ஓநாயைப் போய் நாம் பார்ப்போம். எனக்கு மேலும் சில புகைப்படங்கள் தேவை.’’

இரண்டு தலைவர்களும் சென்ற பிறகு, ஜென் சென் தன்னுடைய மணல்வாரியில் சாய்ந்துகொண்டு வான்வெளியை உற்றுப் பார்த்தான். யுத்தகளத்தில் நடந்த புலன் விசாரணை மேய்ச்சல் நில மக்கள் குறித்த ஆர்வத்தை அவனிடம் அதிகரித்தது. மேலும், ஜெங்கிஸ்கானால் நிகழ்த்தப்பட்ட ராணுவ அதிசயங்கள் குறித்தும் அவனுக்கு ஆர்வம் மேலிட்டது. அவனும் அவனுடைய சந்ததியினரும், ஒரு லட்சத்துக்கும் குறைவான படை வீரர்களைக் கொண்டு, ஆசியா மற்றும் ஐரோப்பா முழுவதையும் எப்படி வாகை சூடினார்கள்? அவர்கள் மேற்கத்திய ஷியாவின் ஆயுதம் தாங்கிய எண்ணற்ற குதிரைப் படையினரை, மகத்தான ஜின்னின் பத்து லட்சம் படையினரை, தெற்கத்திய சாங்கின் பத்து லட்சம் கப்பல் படை மற்றும் குதிரைப் படையினரை, ரஷ்ய கிப்சாக்குகளை, ரோமின் டியுட்டன்களை சர்வ நாசமாக்கினார்கள். மத்திய ஆசியா, ஹங்கேரி, போலந்து மற்றும் முழு ரஷ்யாவையும் அவர்கள் கைப்பற்றினார்கள். மேலும், மிகப் பெரிய நாகரிகமிக்க நாடுகளான பெர்ஷியா, ஈரான், சீனா மற்றும் இந்தியாவின் மீதும் தாக்குதல்கள் நிகழ்த்தினார்கள். அதற்கும் அப்பால், கிழக்கு ரோமின் பேரரசரைக் கட்டாயப்படுத்தி, அவருடைய மகள் இளவரசி மரியாவை, ஜெங்கிஸ்கானின் கொள்ளுப் பேரன் கரம் பற்றினான். உலக வரலாற்றில் மிகப் பெரிய பேரரசை மங்கோலியர்கள் நிர்மாணித்தார்கள். ஒரு நாடோடிக் கூட்டம், நாகரிகமற்றது, எழுத்து முறையற்ற பின்தங்கிய இனம், எலும்பு முனை கொண்ட அம்புகளைப் பயன்படுத்துபவர்கள் (இரும்பு கிடையாது) எப்படி இவ்வளவு மேலான இராணுவ உபாயங்களையும் ஞானத்தையும் பெற்றிருந்தார்கள்? வரலாற்றில் பதிலளிக்கப்படாத மகத்தான கேள்விகளில் இதுவும் ஒன்று.

கடந்த இரண்டாண்டு காலமாக ஜென்னுக்கு மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களுடன் ஏற்பட்ட அனுபவங்களும், அவன் சேகரித்த எண்ணற்ற பழங்கதைகளும், மான் கூட்டத்தை அவை வெகு நேர்த்தியாகக் கொன்றதை அவன் நேரில் பார்த்ததும், குதிரை மந்தைக்கு எதிராக அவை நடத்திய யுத்த

முறையின் சிறந்த உதாரணமும் ஜெங்கிஸ்கானின் இராணுவ ஆற்றலுக்கு ஓநாய்களே காரணமாக இருந்திருக்கின்றன என்ற பதிலில் அவனுக்கு உறுதியான நம்பிக்கையை ஏற்படுத்தின.

மேய்ச்சல் நிலத்தில் புலிகளோ, சிறுத்தைகளோ, கரடிகளோ, சிங்கங்களோ, யானைகளோ இல்லையென்பது குறித்து ஜென் சென் யோசித்தான். அவற்றால் இந்தக் கொடூரமான சீதோஷ்ண நிலையில் வாழ முடியாது; அப்படியே வாழ்ந்தாலும், உயிர் தரித்திருப்பதற்கான குரூர யுத்தங்களுக்கேற்பத் தம்மை ஆக்கிக்கொள்ள முடியாது, மேலும், மேய்ச்சல் நில ஓநாய்கள் மற்றும் மனிதர்களின் தாக்குதல்களுக்கு அவற்றால் ஈடு கொடுக்க முடியாது. மேய்ச்சல் நிலத்தின் முதன்மை இடத்தை வகிப்பதற்கான அனல் பறக்கும் போட்டியில் ஓநாய்களும் மனிதர்களுமே இறுதிப் போட்டியாளர்கள். உயிர் வாழ்வதற்கான போராட்டத்தில் மனிதர்களுக்கு இணையாக ஈடு கொடுக்கக் கூடியவை ஓநாய்கள் மட்டுமே.

ஐயாயிரம் ஆண்டுக்கால சீன வரலாற்றினுள் நுழைவதற்கான சுரங்கப் பாதையின் வாயிலின் முன் நின்றுகொண்டிருப்பதாக ஜென்னுக்குத் தோன்றியது. ஒவ்வொரு பகலும் ஒவ்வொரு இரவும் மங்கோலியப் பகுதியில் இங்கொரு சிறு சண்டை, அங்கொரு கடும்யுத்தம் என்பதாகத்தான் இருந்திருக்குமென ஜென் நினைத்தான். இந்தச் சண்டைகள் அடிக்கடி தொடர்ந்து நடைபெற்று வந்ததால் சண்டையாளர்களுக்கு பலமும் வித்தகமும் கூடிவந்திருக்கிறது.

மேய்ச்சல் நில மக்கள், பயிர் நில மக்கள் இனத்தை விடவும் அல்லது உலகின் எந்தவொரு நாடோடி இனத்தை விடவும் சிறந்த மற்றும் சாமர்த்தியமான சண்டைக்காரர்கள். சீன வரலாற்றில் — ஷவு அரச பரம்பரையில் தொடங்கி, க்யுன், ஹேன், டேங் மற்றும் சாங் பரம்பரைகள் வரை — எல்லா மகத்தான விவசாய சமூகங்களும் மிகப் பெரிய மக்கள் தொகையோடும் அபாரமான பலத்தோடும் விளங்கியபோதும், சிறிய நாடோடிப் பழங்குடியினருடனான சண்டைகளில் மிக மோசமாக அடிக்கடி வீழ்ச்சியடைந்திருக் கிறார்கள். சாங் அரச பரம்பரைக்குப் பிறகு, ஜெங்கிஸ்கானின் மங்கோலிய நாடோடிக் கூட்டத்தார் மத்திய சமவெளியைத் தாக்கி, கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டுக் காலம் ஆட்சி புரிந்தனர். சீனாவின்

கடைசி நிலப்பிரபுத்துவ அரசான க்யுங் அரசவையே நாடோடிகளால் உருவாக்கப்பட்டதுதான்.

பழங்காலத்தில் சீனர்களிடம் சுன் – சூவும் அவருடைய ராணுவ யுத்த முறைகள் பற்றிய ஆய்வுகளும் இருந்திருப்பது உண்மைதான்; ஆனால் அது வெறும் தாளில்தான் இருந்திருக்கிறது.

பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக, வட பகுதி மக்களின் தாக்குதல்களால் பல லட்சம் சீனர்கள் இறந்துபோயிருக்கிறார்கள். இந்த சோக வரலாற்றின் மூல ஆதாரத்தைக் கண்டுபிடித்துவிட்டது போல் ஜென் உணர்ந்தான். பூமியில் உயிரினங்களுக்கிடையேயான உறவுகளானது, வரலாற்றுப் போக்கினாலும் விதியினாலுமே தீர்மானிக்கப்பட்டிருப்பதாக அவன் நினைத்தான். தங்களுடைய வீடுகளையும் நாட்டையும் காப்பாற்ற மக்களின் ராணுவத் திறன்கள் மிகவும் அத்தியாவசியமானவை. அவற்றின் மூலமே அவர்கள் தங்களைத் தற்காத்துக்கொள்ளவும், உயிர் தரித்திருக்கவும் முடியும். ஒருவேளை, மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்கள் இருந்திருக்காவிட்டால், சீனாவும் உலகமும் இன்று இருப்பதைப் போல் அல்லாமல் வேறு மாதிரியாக இருந்திருக்குமோ?

திடீரென, எல்லோரும் கத்திக்கொண்டும் ஓடிக்கொண்டுமிருந்தது ஜென்னின் சிந்தனையைக் கலைத்தது. அவன் குதிரையின்மீது தாவியேறிக் கூட்டத்தைப் பின்தொடர்ந்தான்.

இரண்டு இறந்த ஓநாய்கள் தோண்டி எடுக்கப்பட்டிருந்தன.

குதிரைகளை ஏரிக்குள் கொண்டு தள்ளும் முயற்சியின் பகுதியாக இறந்து போனவை. பட்டுவும் லாசுருங்கும் ஒன்றின் மீதிருந்த பனியை நீக்கிக்கொண்டிருந்தபோது ஜென் அதனருகில் சென்றான். அடிவயிற்றைக் கிழித்துப் பிளந்த தற்கொலைத் தாக்குதல் பற்றி அவர்கள் விளக்கினார்கள். பெரும்பாலானவற்றை விட ஒல்லியாக இருந்த அது, ஒரு பெண். அதன் உடலின் பின் பகுதி குதிரைக் குளம்புகளால் சிதைவுற்று ரத்தத்தால் உறைந்திருந்தபோதிலும், அதன் முலைக்காம்புகள் பார்க்கக் கூடியதாக இருந்தன.

‘‘கேவலம்’’ என்றார் பில்ஜி. ‘‘இதன் குட்டிகள் அவற்றின் குகையிலிருந்து நிச்சயம் திருடப்பட்டிருக்க வேண்டும். தங்கள் குட்டிகளைப் பறிகொடுத்த தாய்மார்கள் பழி வாங்குவதற்காக இந்த ஓநாய்க் கூட்டத்தை ஒருங்கிணைத்திருக்க வேண்டும். அவற்றுக்குத் தொடர்ந்து வாழ்ந்துகொண்டிருக்க ஒரு காரணமும் இல்லை. மேய்ச்சல் நிலத்தில் எந்த ஒன்றையும் அதிகப்படியாகச் செய்வது நல்ல விசயமில்லை. இக்கட்டில் மாட்டிக்கொண்ட முயல்கூட ஓநாயைக் கடிக்க முயற்சி செய்யும்; எனில், வெறி கொண்ட பெண் ஓநாய் சாகும்வரை போராடாமல் என்ன செய்யும்?’’

ஜென் சக மாணவர்களை நோக்கித் திரும்பினான். ‘‘ஓநாய்கள் வலுவான தாய்மை உணர்வுகள் கொண்டவை என வரலாற்றுப் புத்தகங்கள் நமக்குச் சொல்கின்றன’’ என்றான் அவன் ‘‘மனிதக் குழந்தைகளை ஓநாய்கள் வளர்த்திருக்கும் சம்பவங்கள் பதிவாகியுள்ளன. ஹன் இனத்தின் மூதாதையர்களான காவோஜூவும் துருக்கியரும் ஓநாய் தாய்மார்களால் வளர்க்கப்பட்ட ஓநாய் குழந்தைகள்.’’

‘‘ஓநாய் குழந்தைகளா, என்ன உளறல் இது?’’ பாவோ சுங்காய் இடைமறித்தார். ‘‘ஓநாய்கள் மனிதர்களைக் கொன்று சாப்பிடும்; அவை ஒருபோதும் மனிதர்களை வளர்க்காது. மனிதர்களையும்ஓநாய்களையும் பொறுத்தவரை, அது வாழ்வா சாவா உறவு _ நீயா நானா? ஓநாய் குட்டிகளைப் பிடிக்கும்படி மக்களுக்கு நான்தான் உத்தரவிட்டேன். இந்த பூமியில் அவற்றை இல்லாமல் நாம் அழித்தொழிக்க வேண்டும். அப்போது அவை நம்மைப் பழி வாங்குமா? நான் எல்லாவற்றையும் கொன்று தீர்த்த பிறகு, அவை அதை எப்படிச் செய்கின்றன பார்க்கலாம். நான் என்னுடைய உத்தரவிலிருந்து பின்வாங்கப் போவதில்லை. இந்த வேலைமுடிந்ததும் நான் மீண்டும் மக்களை அந்தப் பணிக்கு அனுப்பப் போகிறேன். இரண்டு குடும்பங்கள் சேர்ந்து ஒரு ஓநாய் குட்டியின் தோலுக்குப் பொறுப்பேற்க வேண்டும்; ஒருவேளை அவர்களால் அது முடியாவிட்டால் ஒரு பெரிய ஓநாயின் தோலை அவர்கள் தந்தாக வேண்டும். இல்லையெனில், நான் வேலைப் புள்ளிகளைக் குறைப்பேன்.’’

இறந்துகிடந்த ஓநாயைப் புகைப்படம் எடுத்தார் பாவோ. பின்னர் அதன் உடல் வண்டியில் ஏற்றப்பட்டது.

பிறகு, அவர்கள் இரண்டாவது ஓநாயின் பக்கம் நகர்ந்தார்கள். கடந்த அவனுடைய இரண்டு ஆண்டுகளில் மேய்ச்சல் நிலத்தில் நிறைய ஓநாய்களை உயிரோடும் சடலமாகவும் பார்த்திருக்கிறான். ஆனால் இப்போது அவனுடைய காலடியில் கிடந்த ஓநாயைப் போல் ஒன்றை அவன் இதுவரை பார்த்ததில்லை. அதனுடைய தலை, கிட்டத்தட்ட ஒரு சிறுத்தையினுடையதைப்போன்று, மிகப் பெரியதாக இருந்தது. அதனுடைய மார்பு அதை விடவும் அகன்றிருந்தது. அதன்மீது ஒட்டியிருந்த பனி அகற்றப்பட்டதும் அதனுடைய சாம்பல் மஞ்சள் மயிர் முழுவதுமாக வெளிப்பட்டது. அதன் உடலின் பின்பாதி குதிரைக் குளம்புகளால் உதைபட்டு சின்னாபின்னமாகியிருந்தது. அது கிடந்த இடத்தில் ரத்தப் பனிக்கட்டி ஒரு குட்டைபோல் காணப்பட்டது.

பட்டு உறைந்து கிடந்த அந்த ஓநாயை இழுத்தான்; ஆனால் அவனால் அதை நகர்த்த முடியவில்லை. ‘‘இது மற்றவற்றைப் போல அவ்வளவு சாமர்த்தியமானதில்லை’’ என்று கூறியபடியே தன் நெற்றி வியர்வையைத் துடைத்துக்கொண்டான் பட்டு. ‘‘இதனுடைய இலக்கை இதனால் சரியாகக் கடிக்க முடியவில்லை. அப்படிச் செய்திருந்தால், இவ்வளவு பெரிய தலையுடைய இது, ஒரு குதிரையின் வயிற்றைக் கிழித்தெறிந்துவிட்டு, சட்டெனக் கீழே விழுந்து வெளியேறியிருக்க முடியும்.’’

பில்ஜி கீழே குந்தி அமர்ந்து, ஓநாயைக் கவனமாகப் பரிசோதித்தார். அதன் கழுத்தின் மீதிருந்த முடியை அவர் பின்னுக்கு இழுத்தபோது, இரண்டு கோரமான துளைகள், இரண்டு விரல் கட்டை கனத்துக்கு இருப்பது தெரியவந்தது. மாணவர்கள் திகைத்துப் போனார்கள். செம்மறியாடுகளின் கழுத்துகளில் ஓநாய்களால் கடிக்கப்பட்டதில் அமைந்த இது போன்ற துளைகளை அவர்கள் இதற்கு முன்னர் பார்த்திருக்கிறார்கள்.

‘‘குதிரையால் உதைக்கப்பட்டதில் இந்த ஓநாய் சாகவில்லை’’ என்றார் பில்ஜி. ‘‘உயிர் போகுமளவுக்கு இது காயம் பட்டிருக்கலாம். ஆனால், இது குதிரைச் சதையைக் கடித்துத் தின்ற பிறகுதான் மற்றொரு ஓநாயால் கொல்லப்பட்டிருக்கிறது.’’

‘‘ஓநாய்கள் சமூக விரோதிகளை விடவும் மோசமானவை!’’ பாவோ சுங்காய் சபித்தார். ‘‘அவை காயமடைந்த தன் சொந்தத்தையே கொல்கின்றன.’’

பில்ஜி கோபமாகப் பாவோவைப் பார்த்தார். ‘‘இறந்துபோன சமூக விரோதிகள் சொர்க்கத்துக்குப் போவதில்லை. இறந்த ஓநாய்கள் போகும். இந்த ஓநாய் உயிர் போகுமளவுக்கு ஒரு குதிரை யால் காயமடைந்திருக்கிறது. அது உடனடியாக சாகவில்லை. ஆனால் அது உயிர் பிழைக்க வாய்ப்பில்லை. வேதனையோடு அது தொடர்ந்து இருப்பது சிறந்ததா? அல்லது சாவதா? தன் சொந்தமொன்றின் இந்த நிலையைப் பார்த்து மற்றொரு ஓநாய் வேதனைப்படுகிறது. அதனால், அதன் துன்பத்திலிருந்து அதை விடுவித்து அதன் ஆன்மாவை டெஞ்ஞருக்கு அனுப்புகிறது. அச்செயல் குரூரமானதல்ல; கருணைமிக்கது. இறந்துகொண்டிருக்கும் ஒரு விலங்கு மனிதர்களிடம் மாட்டிக்கொண்டு கேவலமாக நடத்தப்படுவதிலிருந்து அதைக் காப்பாற்றும் செயல். ஓநாய்கள் பணிந்து போகும் உயிரிகள் அல்ல. கேவலப்படுவதை விடவும் சாவதை மேலாகக் கருதுபவை. ஒரு ஆண் தலைமை ஓநாய், தன் கூட்டத்தைச் சேர்ந்த ஒருவருக்கு அப்படியேதும் நடக்க ஒருபோதும் இடம் கொடுக்காது. நீங்கள் குடியானவ சமூகத்திலிருந்து வந்திருக்கிறீர்கள். உங்களில் எத்தனை பேர் கேவலத்தை விடவும் சாவு மேலானது எனத் தேர்ந்தெடுப்பீர்கள்?’’

பாவோவின் முகத்தில் வெளிப்பட்ட சந்தோஷமின்மையைக் கவனித்த உல்ஜீ, ‘‘இந்த ஓநாய்கள் இவ்வளவு அருமையான போராளிகளாக இருப்பதைப் பார்த்து நீங்கள் ஆச்சரியப் பட்டிருப்பீர்கள், இல்லையா? அதன் ஒரு முக்கியமான அம்சம், ஆண் தலைமை காயம் பட்ட தன் சக தோழனைக் கொல்ல ஒருபோதும் தயங்குவதில்லை. அதன் மூலம் கூட்டத்தின் சுமையைக் குறைப்பதோடு, படையினர் தம் ஆற்றலைத் தொடர்ந்து வெளிப் படுத்துவதையும் உறுதி செய்கிறது. அவற்றின் இந்த குணத்தை நீங்கள் புரிந்துகொண்டால், ஓநாய்களுடனான சண்டையின் போது நிலைமையை சரியாகக் கணிப்பது கைகூடும்.’’

பாவோ தலையசைத்தார். ‘‘நீங்கள் சொல்வது சரியாக இருக்கலாம்’’ என்றார். ‘‘காயம் பட்ட வீரர்களுக்கு, அவர்களைத் தூக்கிச் செல்வதற்கான ஆட்கள், மருத்துவர்கள், செவிலியர், மருந்துகள் என எவ்வளவோ தேவைப்படும். ஆம்புலன்ஸ் மற்றும் மருத்துவ உதவி நிலையங்களும் அவசியம். ஒரு காயம் பட்ட வீரனுக்கு உதவ குறைந்தபட்சம் பனிரெண்டு பேராவது தேவைப்படுகிறது.

யுத்த சமயத்தில் இந்தத் துணைப் பணியாளர்கள் சண்டையின் தீவிரத்தைப் பாதிக்கிறார்கள். அப்படிப் பார்க்கும்போது ஓநாய்களின் அணுகுமுறை சரிதான். ஆனால், காயமடைந்த பல வீரர்கள் தீரமிக்க சண்டைக்காரர்கள். அவர்கள் குணமடைந்த பின், அந்தப் படைப் பிரிவின் முதுகெலும்பாகச் செயல்படக் கூடியவர்கள். காயம் பட்ட ஒருவரைக் கொல்வது, சண்டையின் உக்கிரத்தைப் பாதிக்காதா?''

உல்ஜீ பெருமூச்சு விட்டார். ''ஓநாய்களின் இந்த நடத்தைக்கு சில விளக்கங்கள் இருக்கின்றன. முதலாவதாக, ஓநாய்களின் பிறப்பு விகிதம் அதிகம். ஒரு பெண் ஓநாய் ஒரே பிரசவத்தில் ஏழு அல்லது எட்டு, சமயங்களில் ஒரு டஜனுக்கும் மேல் குட்டிகள் போடும். அவற்றின் வாழ்நாள் விகிதமும் அதிகம். ஒரு இலையுதிர் காலத்தில் நான் ஒரு பெண் ஓநாயை, அதன் பதினோரு இளம் குட்டிகளோடு பார்த்தேன். அவை அந்த இளவேனிற் பருவத்தில் பிறந்தவை. அவை, கிட்டத்தட்ட அவற்றின் அம்மாவைப் போலவே பெரிதாக இருந்தன; அதைப் போலவே வேகமாக ஓடின. மூன்று ஆண்டுகளுக்கு ஐந்து என்ற விகிதத்தில் பசுக்கள் பிறக்கின்றன. அதே காலத்தில் எத்தனை பெண் ஓநாய்கள் பிறப்பதாக நீங்கள் நினைக்கிறீர்கள்? அந்த முழுக் கூட்டமளவுக்குப் பிறக்கின்றன. ஒரு வயது ஆனவுடனேயே அவை சண்டையிடத் தயாராகி விடுகின்றன. ஒரு வருசம் முடிந்த நாய், முயல்களை வேட்டை யாடும். அந்த வயதில் ஒரு ஓநாய் ஆடுகளை வேட்டையாடும். ஒரு வயதுக் குழந்தை இன்னமும் அரையாடையோடு இருக்கும். மனிதர்களை அவற்றோடு பொருத்திப் பார்க்கவே முடியாது. அவ்வளவு படை வீரர்கள் அவற்றுக்கு இருப்பதால் அவை படுகாயமடைந்தவற்றைக் கொன்றுவிடுகின்றன. நான் இதை எப்படிப் பார்க்கிறேன் என்றால், ஓநாய்களின் இயற்கையான இனப்பெருக்கக் கட்டுப்பாடு இது. தேர்ந்தெடுக்கப்பட்ட படையினரோடுதான் அக்கூட்டம் அமைவதால் உக்கிரமான சண்டையாளர்களுக்கு மட்டுமே அதில் இடமுண்டு. அதனால்தான், பல நூறு ஆண்டுகளாக அவை மேய்ச்சல் நில ஆளுகையைத் தம் கட்டுப்பாட்டுக்குள் வைத்திருக்கின்றன.''

''ஓநாய்கள் வலிமைமிக்க எதிரிகள் என்பது இந்த சோதனைக்கு வந்ததிலிருந்து எனக்குப் புரிகிறது'' என்றார் பாவோ. ''வானிலை கணிப்புகள், வானிலையால் விளையும் நாசத்திலிருந்து நம்மைத் தற்காத்துக்கொள்ள

உதவும். ஓநாய்கள் சம்பந்தப்பட்டு, அக்கணிப்புகளால் எவ்வித பிரயோஜனமும் இல்லை. குடியானவ சமூகங்களிலிருந்து வந்த எங்களுக்கு, அவை என்னவெல்லாம் செய்யும் ஆற்றல் கொண்டவை என்பது பற்றி எதுவும் தெரிய வில்லை. இந்த சம்பவம் மனித கட்டுப்பாட்டுக்கு அப்பாற்பட்ட ஒன்று என்பதில் சந்தேகமில்லை. விசாரணைக் குழுவினர் இதைப் புரிந்துகொள்வார்கள்.''

''இது பற்றிய மிகத் தெளிவான சித்திரம் அவர்களுக்குக் கிடைக்க வேண்டுமென்றால், அவர்கள் எல்லாவற்றையும் புரிந்துகொள்ள வேண்டியது மிக அவசியம்'' என்றார் உல்ஜீ.

''ஆனால், நாம் ஓநாய்களை வேட்டையாடப் போகிறோம் என்பதில் அது எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தாது. இல்லையெனில், நம் விலங்குகளுக்கான மேய்ச்சல் இடம் மிக விரைவில் அவற்றின் உணவிடமாக மாறிவிடும். தலைமையகத்திடம் வெடிமருந்து அனுப்பி வைக்கும்படி நான் கேட்கப் போகிறேன்.''

அந்த இடத்துக்கு அப்பால், சில மாணவர்கள் சூடான விவாதத்தில் ஈடுபட்டிருந்தார்கள். 'மூன்றாம் குழு' நடுநிலைப் பள்ளி மாணவனும், சிவப்புப் பாதுகாவலர் அமைப்பின் பீஜிங் டாங்ஜியோ பிரிவைச் சார்ந்த மாணவனுமான லீ ஹாங்வெய் உணர்ச்சி வசப்பட்டவனாகப் பேசினான். ''ஓநாய்கள் உண்மையான வர்க்க எதிரிகள். உலகமெங்கும் பரவியிருக்கிற பிற்போக்குவாதிகள் அனைவருமே பேராசை கொண்ட ஓநாய்கள்தாம். ஓநாய்கள் குரூரமானவை. மக்களின் உடமைகளை _ அதாவது, நம்முடைய குதிரைகள், ஆடு மாடுகளை _ அவை கொன்று குவிப்பது ஒரு புறமிருக்கட்டும்; அவை தம் சொந்தத்தைக் கூடக் கொல்கின்றன. அவற்றை வேட்டையாடி அழிக்க நாம் மக்கள் திரளைக் கட்டமைக்க வேண்டியது அவசியம். எல்லா ஓநாய்களுக்கும் எதிராக நாம் உழைக்கும் வர்க்கத்தின் சர்வாதிகாரத்தைப் பிரயோகிக்க வேண்டும். பூமியில் அவற்றை இல்லாமல் அழித்தொழிக்க நாம் உறுதியெடுக்க வேண்டும். அதேபோல, பழமையான எல்லாக் கருத்துகளையும், சடங்குகளையும், பழக்க வழக்கங்களையும் — ஓநாய்கள் மீது இரக்கம், ஓநாய்களுக்குப் பணிந்து போவது, இறந்தவர்களின் உடல்களை ஓநாய்களுக்கு உணவாக அளிப்பது போன்றவை — நாம் தீவிர விமர்சனத்துக்கு உட்படுத்தியாக வேண்டும்.''

பில்ஜிக்கு எதிராக அவன் குற்றம் சாட்டுகிறான் என்பதைத் தெளிவாக உணர்ந்த ஜென், அவன் பேச்சை முடிப்பதற்கு முன்பாகக் குறுக்கிட்டான்: ‘‘ஒரு விஷயத்தை அதன் எல்லை மீறிக் கொண்டு செல்கிறாய், அப்படித்தானே? இரண்டு கால் விலங்குகளுக்குத்தான் வர்க்க வேறுபாடுகள் பொருந்தும். வர்க்க அமைப்புக்குள் ஓநாய்களைக் கொண்டு வருவதாக இருந்தால், பிறகு நீ யார், மனிதனா ஓநாயா? நம்முடைய மகத்தான உழைக்கும் மக்களின் தலைவர்களை நீ ஓநாய்ப் பிரிவுக்குள் சேர்க்க முற்படுவது உனக்குப் பயமாக இல்லையா? மனிதர்கள் மனிதர்களைக் கொல்லும்போது மட்டும் அது தன் இனத்தையே கொல்லும் செயலாகாதா? ஓநாய்களைக் காட்டிலும் மிக அதிகமாகவும் அடிக் கடியும் மனிதர்கள் பிற மனிதர்களைக் கொன்று குவிக்கிறார்கள். உலக யுத்தம் மி, உலக யுத்தம் மிமி ஆகியவற்றில் இறந்தவர்கள் கோடிக் கணக்கானோர். இயல்பாய் அமைந்திருக்கும் உள்ளுணர்வுகள் சார்ந்த பார்வையில், ஓநாயை விடவும் மனிதன் குரூரமானவன். நீ வாசிப்பில் கவனம் செலுத்தலாம் என்பதுதான் என் யோசனை.’’

‘சிவப்புப் பாதுகாவலர்’, தன்னுடைய சவுக்கை ஜென்னை நோக்கிக் கோபமாக நீட்டி, Òமேல்நிலைப் பள்ளிப்படிப்பை முடித்திருப்பதால் நீ மிகவும் புத்திசாலி என்று நினைத்துக் கொண்டிருக்கிறாய். முதலாளித்துவ, நிலப்பிரபுத்துவ, திரிபுவாதக் குப்பைகளால் நிரம்பியதுதான் நீ படித்த புத்தகங்கள். அவை விஷ வித்துகளன்றி வேறில்லை. பள்ளியில் நீ எப்போதும் ஒதுங்கி தனித்திருப்பாய். உலகின் மிகவும் பின்தங்கிய இடமான, மிகவும் தொன்மையான இங்கு, நீரில் வசிக்கும் மீனைப் போல் சகஜமாக இருக்கிறாய். அருவெறுக்கத்தக்க ‘நான்கு பழமை’களில் நீ மிகச் சரியாகப் பொருந்திப் போயிருக்கிறாய்.’’

ரத்தம் தலைக்கேறுவதை உணர்ந்த ஜென், ஓடிப்போய், ‘சிவப்புப் பாதுகாவலனின்’ கழுத்தில் ஒரு ஓநாயைப் போல பற்களைப் பதித்து, அவனைக் குதிரையிலிருந்து கீழே இழுத்துப் போடத் துடித்தான். இலக்கிலிருந்து சற்றும் மாறாது காத்திருக்கும் ஓநாய்களின் பொறுமை நினைவுக்கு வர, அவனை வெறுமனே முறைத்துப் பார்த்துவிட்டு, குதிரையின் பக்கவாட்டில் சத்தமாகத் தட்டித் திரும்பி விலகிச் சென்றான்.

சூரியன் மறையத் தொடங்கி இருள் படர ஆரம்பித்தது. காலையில் கறியும் தேனீரும், மாலையில் முழு உணவு என்று பழக்கப்பட்டிருந்த மாணவர்களுக்கு பசி வாட்டம் ஏற்பட்டு விட்டிருந்தது. அவர்கள் குளிரில் நடுங்கினார்கள். தலைமையிட சோதனைக் குழுவின் தலைவர்களும் பெரும்பான்மையான ராணுவ வீரர்களும் மாணவர்களும் இறந்துபோன ஓநாய்களை ஏற்றிக்கொண்டு சென்ற வண்டிக்குப் பின்னால் முகாமை நோக்கிச் சென்றார்கள். ஜென் சென்னும் பட்டுவும் லாசுருங்கும் பட்டுவின் பெறுமதியான சுருக்குக்கயிற்றுத் தடியைத் தேடியும், அதேசமயம் மேலும் ஏதாவது ஓநாய்கள் குதிரைகளின் பறக்கும் குளம்புகளால் இறந்தோ காயம் பட்டோ கிடக்கின்றனவா என்பதைத் தேடிப் பார்க்கவும் சென்றார்கள்.

# 7

மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களின் பெரும்பாலான வேட்டைகள் முன்பனிக்காலத்திலேயே நடைபெறும். அதன் பிறகு, மர்மோட்டுகள் தங்கள் குளிர்காலத் தூக்கத்தைத் தொடங்கிவிடும். mமுயல்களை விடவும் கொழுத்தும், ஊட்டச்சத்தும் மிக்க மர்மோட்டுகள், ஓநாய்களுக்கு மிகவும் பிடித்த உணவு. ஆனால், மர்மோட்டுகள் தங்கள் பொந்துகளுக்குள் சென்றுவிட்ட பிறகு, ஓநாய்கள் வீட்டு விலங்குகளின் பக்கம் தங்கள் கவனத்தைத் திருப்பும். அதனால் புல்வெளி வாசிகள் எதிர் தாக்குதல்களை நிகழ்த்த வேண்டிய கட்டாயத்துக்கு உட்படுவார்கள். இக்கால கட்டத்தில் ஓநாய்கள் புதிய குளிர்காலத் தோல்களோடு காணப் படும். அவை பளிச்சென்றும் அடர்த்தியாகவும் மிருதுவாகவும் இருக்கும். இப்பருவத்தில் தோல்கள் அதிக விலைக்குப் போகும்.

முன்பனிக்கால ஓநாய் வேட்டைகளே, மேய்ப்பர்களுக்கு அவர்களுடைய வேலைப் புள்ளிகளைத் தவிர்த்து, முக்கியமான வருமானமாகும். இளம் வேட்டைக்காரர்கள், தங்களுடைய தைரியத்தையும், இராணுவ உபாயங்களையும் வெளிப்படுத்த இது ஒரு அருமையான சந்தர்ப்பம். அவர்கள் தங்களுடைய திறன்களைக் கூர்மைப்படுத்திக் கொள்ளவும், சண்டைக்கான சரியான இடத்தையும் நேரத்தையும் தேர்வு செய்யவும் அமையும் சந்தர்ப்பமிது. கடந்த காலத்தில், முன்பனிக்கால ஓநாய் வேட்டையானது, பழங்குடித் தலைவர்களாலும், கான்களாலும் தங்களுடைய மக்களுக்குப் பயிற்சி அளிக்கவும், போர் முறைகளைக் கற்றுக் கொடுப்பதற்குமான ஒரு விசயமாக இருந்தது. பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளைக் கடந்து வந்திருக்கும் இம்மரபு, நவீன காலத்திலும் தொடர்ந்து பின்பற்றப்படுகிறது.

அந்த ஆண்டின் முதல் பெரும் பனிப்பொழிவுக்குப் பிறகு, வேட்டைக்கான தயாரிப்புகள் நிறைவடைந்திருந்தன. இச்சமயத்தில் ஓநாய்களின் தடங்கள் பனியில் மிகத் தெளிவாகக் காணப்படும். அவை நீளமான கால்களைக் கொண்டிருந்தாலும், புதிதாய்ப் பொழிந்த பனியின் ஈரத்தில் ஓநாய்களால் வேகமாக ஓட முடியாது. அவற்றை விடவும் குதிரைகளின் கால்கள் மிகவும் நீண்டவை என்பதால் குதிரைகளுக்கு இது சாதகமாக அமையும். முன்பனிக்

காலமானது, அதன் புதுப் பனிப்பொழிவின் காரணமாக, ஓநாய் களின் மரணத்துக்கான பருவமாகும். ஓநாய்களின் மூர்க்கத்துக்குப் பதிலடி கொடுப்பதற்கு மேய்ப்பர்கள் இக்காலத்தைப் பயன்படுத்திக் கொள்வார்கள். ஓராண்டு காலக் கடும் சிரமங்களுக்குப் பழி வாங்க மக்களுக்கு வழங்கப்படும் காலமிது.

மேய்ச்சல் நிலத்தின் நடைமுறைகளை மக்களும் ஓநாய்களும் நன்கு அறிவார்கள். சமீப காலமாக, நடக்கப்போகும் வேட்டையை அறிந்துகொண்ட ஓநாய்கள், முதல் பனி நிலத்தில் படியத் தொடங்கியதும், மேய்ச்சல் நிலம் மஞ்சள் வண்ணத்திலிருந்து வெள்ளையாக மாறத் தொடங்கியதும், அவை வட எல்லையைக் கடந்து சென்றுவிடும். மலைகளுக்குள் சென்று மான்களையும் காட்டு முயல்களையும் வேட்டையாடும். அல்லது அங்கேயே பதுங்கியிருந்து, விலங்குகளின் எலும்புகளைக் கடித்துத் தின்றபடியோ, அவை முன்னர் கொன்றுவிட்டிருந்த விலங்குகளின் காய்ந்த அல்லது அழுகிப்போன தோல்களைத் தின்றபடியோ பசியையும் பொருட்படுத்தாது நாட்களைக் கடத்தும். அதன்பிறகு, நிலம் கெட்டிப்பட்ட உடனேயே, மறுபடியும் வேகமாக ஓட முடியுமென்பதாலும், மக்கள் சண்டைக்கான உத்வேகத்தை இழந்து விட்டிருப்பார்கள் என்பதை உணர்ந்தும் மீண்டும் சூறையாடக் கிளம்பிவிடும்.

தலைமையகக் கூட்டத்தில் உல்ஜீ பேசினார். ‘‘கடந்த சில வருடங்களாக முன்பனிக் கால வேட்டைகளில் பாதி வளர்ச்சி யடைந்த மற்றும் சிறிய ஓநாய்களையே நாம் அடைந்திருக்கிறோம். அதனால் இனி நாமும், ஓநாய்களைப் போல, மரபான உபாயங்களைக் கைவிட வேண்டும். அவை சற்றும் எதிர்பாராத வகையில், எதிர்பாராத இடத்தில், எதிர்பாராத நேரத்தில் நாம் நம் இஷ்டம்போல வேட்டையாட வேண்டும். இவ்வகையில், ஓநாய்களால் நம் தாக்குதல் முறைகளை அறிய முடியாதென்பதால் நமக்கெதிராக அவை தற்காத்துக்கொள்ளவும் முடியாது.

பொதுவாக நாம் இளவேனிற் பருவத்தில் வேட்டையாடுவதில்லை. இனி நாம் அந்த நடைமுறையை விட்டொழித்துவிட்டு இளவேனிற் பருவ வேட்டையை மேற்கொள்ளலாம் என்பது என் யோசனை. அதன் தோல்கள் முன்பனிக் காலத்தைப் போல் அருமையாக இருக்காதுதான். நமக்கு அதிக விலையும்

கிடைக்காது என்றாலும், கூடுதலாக நமக்கு வெடிமருந்து பரிசாகக் கிடைக்கும்.''

குதிரைகள் மொத்தமாகக் கொலை செய்யப்பட்டதன் தொடர்ச்சியாக ஏற்பட்டிருக்கும் பயங்கரமான நிலைமையை மட்டுப்படுத்தவும், ஓலோன்புலாக் ஓநாய்களை அழித்தொழிக்க வேண்டுமென்ற மேலிட உத்தரவுகளை நிறைவேற்றவும், தலைமையகத்தின் எல்லாப் பிரிவு அலுவலர்களும் ஓநாய் எதிர்ப்புப் பிரச்சாரத்தை மேற்கொள்ள வேண்டுமெனக் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது.

''இது இளவேனிற் காலமென்பதால், வீட்டு விலங்குகளின் பிரசவ காரியங்களில் நீங்கள் அனைவரும் கவனம் செலுத்த வேண்டியிருக்கும் என்பதை நானறிவேன். அந்த வேலையை விட்டு விட்டு வருவது உங்களுக்கு சிரமம்தான். ஆனால், ஓநாய்களுக்கு எதிரான தாக்குதல்களை நாம் மேற்கொள்ளாவிட்டால் நாம் நம்முடைய பொறுப்புகளை நிறைவேற்ற முடியாமல் போய்விடும்'' என்றார் பாவோ சுங்காய். ''ஒரு பெரிய சண்டைக்குப் பிறகு, நாம் திருப்பித் தாக்குவோம் என்பதை அவை அறியுமென்பதால், கூட்டத்தின் முக்கிய அங்கமாக இருக்கும் ஓநாய்கள் அந்தப் பகுதியை விட்டு நீங்கி விடுமென்பதை எங்கள் அனுபவத்தில் நாங்கள் அறிந்திருக்கிறோம்'' என்றார் உல்ஜீ. ''அவை இப்போது எல்லைப் பிராந்தியத்தில் எங்காவது இருக்குமென்று நினைக்கிறேன். இங்கு ஏதாவது கிடைக்க வாய்ப்பிருக்கிறது என்று அவற்றுக்குத் தோன்றும்போது, அவை எல்லை தாண்டி வரும். அதுவரை நாம் காத்திருக்கத்தான் வேண்டும். குறைந்தபட்சம், அவை எவ்வளவு முடியுமோ அவ்வளவு தின்றுவிட்டு, மிச்சமாக விட்டுவிட்டு வந்திருக்கிற குதிரைக் கறி பற்றி அவை நினைக்கத் தொடங்கும் வரை காத்திருக்க வேண்டும். மர்மோட்டுகளும் காட்டெலிகளும் அவற்றின் பொந்து களிலிருந்து இன்னும் வெளிவரவில்லை. அதனால் ஓநாய்களுக்கு உணவேதுமில்லை. அதனால் அவை குதிரைக் கறியைத் தின்ன, நிச்சயம் வருமென்று நான் நினைக்கிறேன்.''

பில்ஜி அதை ஆமோதிக்கும் வகையில் தலை அசைத்தார். ''இறந்த குதிரைகளைச் சுற்றி நான் சில பொறிகளை ஓநாய்களைச் சுண்டியிழுக்கும் வகையில் அமைக்கிறேன்'' என்றார் அவர். ''அதைப் பார்க்கும் ஆண்

தலைமை ஓநாய், நாம் தாக்குதலுக்குத் திட்டமிட வில்லை என அனுமானிக்கும். கடந்த காலத்தில் தலைமையகம் வேட்டையைத் தொடங்கும்போது, அவர்கள் பொறிகளை அமைக்கத் தங்களுடன் நாய்களின் கூட்டமொன்றையும் கூட்டிக்கொண்டு செல்வார்கள். நாம் இப்போது தாக்குதலுக்கு முன்பாகப் பொறிகளை அமைத்தால் மிகப் பெரிய புத்திசாலியான ஆண் தலைமை ஓநாயைக் கூட அது குழப்பிவிடும். இந்தப் பொறிகளின் மூலம் நாம் சில ஓநாய்களைப் பிடித்துவிட்டால், என்ன செய்வதென்று தெரியாமல் பிற ஓநாய்கள் திகைத்து நிற்கும். சற்று தொலை விலிருந்து குதிரைக் கறியை அவை உற்றுப் பார்த்துக் கொண்டிருக்கும். நெருங்கவும் தைரியமிராது; விலகவும் மனம் வராது. அந்தச் சமயத்தில் நாம் அவற்றை சுற்றி வளைத்துவிடலாம். நிச்சயம், பெரிய பல ஆண் ஓநாய்களை நாம் கைப்பற்றிவிடலாம்.''

பாவோ சுங்காய், பில்ஜியை நோக்கித் திரும்பினார். ‘‘இங்கு வசிக்கும் ஓநாய்கள் பொறிகளோ விஷமோ வைக்கப்பட்ட இடங்களை நெருங்குவதில்லை என நான் கேள்விப்பட்டிருக்கிறேன். மேலும் முதிய விலங்குகளோ அல்லது கூட்டத் தலைவர்களோ விஷம் தடவப்பட்ட கறியின்மீது பல் தடங்களைப் பதித்துவிட்டுச் செல்லுமென்றும், அதைச் சுற்றியுள்ள கறிப் பகுதிகளையே பெண் ஓநாய்களும் இளம் ஓநாய்களும் சாப்பிடுமென்றும் கேட்டிருக் கிறேன். மேலும், தலைமை ஆண் ஓநாய்கள் பொறிகளைக் கண்ணி வெடிகளைப் போல அகற்றிவிடுமென்றும் கேள்விப் பட்டிருக்கிறேன். இது உண்மையா?''

‘‘அப்படி இல்லை'' என்று பதிலளித்தார் பில்ஜி. ‘‘கூட்டுறவுப் பண்டகசாலையில் விற்கப்படும் விஷம் கடும் நெடி கொண்டது. நாய்கள் அதை மோப்பம் பிடித்துவிடும்போது, ஓநாய்களாலும் முடியுமென்பது உங்களுக்குத் தெரியும். நான் விஷத்தைப் பயன்படுத்தப் போவதில்லை. ஏனென்றால் அதன்மூலம் நான் நாய்களைக் கொன்றுவிடவும் வாய்ப்பிருக்கிறது. நான் பொறிகள் தான் வைக்கப் போகிறேன். அவற்றை நான் மிகவும் விசேஷமான முறையில் வைப்பேன் என்பதால் எந்த ஓநாயாலும் அதை அகற்றிவிட முடியாது.''

பாவோ, தன் பேனாவை மைக்குடுவையில் தொட்டுவிட்டு அறிவித்தார்: ‘‘நாம் அப்படித்தான் செய்யப் போகிறோம்.’’ பசும்புல் நிலத்துக்கு வடக்கே, தலைமையகத்தின் அனுமதியின்றி எவரும் ஓநாய்களை வேட்டையாடக் கூடாது என உத்தரவு பிறப்பிக்கப்பட்டது. ஓநாய்களை அழித்தொழிக்கும் திட்டத்துக்கு ஒவ்வொருவரும் எந்த நொடியிலும் தயாராக இருக்கவேண்டும் என்றும் தெரிவிக்கப்பட்டது.

குதிரைகளைத் தேர்வு செய்வதிலும், நாய்களுக்கு நல்ல தீனி கொடுப்பதிலும், விலங்குகளைப் பிடிப்பதற்கான சுருக்குக்கயிற்றுத் தடிகளைச் சரி செய்வதிலும், கத்திகளைக் கூர் செய்வதிலும், துப்பாக்கிகளைச் சுத்தப்படுத்துவதிலும், வெடிமருந்துகளைத் தயார் செய்வதிலும் மக்கள் ஈடுபடத் தொடங்கினர். ஒரு திருவிழாவுக்குத் தயாராவதைப் போல எல்லாமே ஓர் இசைமையுடன் நடந்து கொண்டிருந்தன.

அதிகாலை. மேகங்கள் வானத்தில் கவிந்து கருமையாக்கியது. தொலைதூர மலைகளின் உச்சிகள் இருளில் மூழ்கின. ஓலோன்புலாக் எப்போதுமில்லாத வகையில் ஒரே சீராக இருப்பது போலவும் மூட்டமாகவும் காணப்பட்டது. பனி லேசாகப் பொழிந்தது. குடில்களின் உச்சி வழியாக நீட்டிக்கொண்டிருந்த சிம்னி விளக்குகள், மூச்சுவிட சிரமப்படும் ஆஸ்துமா நோயாளியைப் போலக் காணப்பட்டன. பின்இளவேனிற் காலக் குளிர் இன்னமும் இருந்துகொண்டிருந்தது. வெதுவெதுப்புக்கு வழி விடுவதற்கான அறிகுறி தட்டுப்படவில்லை. அதிர்ஷ்டவசமாக, வீட்டு விலங்குகளுக்குக் கொஞ்சம் கொழுப்பு இன்னும் இருந்ததால் பிரச்சனையில்லை. பனி கரைந்து, புல் முளை விடும்வரை அவற்றால் தாக்குப் பிடிக்க முடியும். புதிய மொக்குகள் தரையைத் தொடுமளவு வந்துவிட்டன; பனியை உதைத்துத் தள்ளிவிட்டு ஆடுகளால் அவற்றை மேய முடியும். ஆடுகள் பட்டிகளில் கிடந்தபடி, மிக நிதானமாகத் தீனியை அசை போட்டுக்கொண்டிருந்தன. குடிலின் வாயிலில் மூன்று நாய்கள் பெரும் பசியோடு இரவு முழுவதும் குரைத்தபடி காவல் காத்துக்கொண்டிருந்தன. ஜென் சென் கததவைத் திறந்தபோது, Ôஎல்லோ Õ என்ற பெயர் கொண்ட நாய், எழுந்து நின்று, ஜென்னின் தோள்களில் தன் பாதங்களைப் போட்டபடி, வாலை ஆட்டி இரை போடும்படி கெஞ்சியது. ஜென்

அதன் முன் ஒரு பெரிய தட்டு நிறைய எலும்புகளை வைத்தான். நாய்கள் அவற்றைக் கவ்விக் கடித்து மென்று தின்னத் தொடங்கின.

ஜென் குடிலிலிருந்து கொஞ்சம் ஆட்டுக்குட்டி இறைச்சியை 'யிர்' என்ற பெயர் கொண்ட, பளபளப்பான கருப்புத் தோல் நாய்க்குக் கொண்டு வந்து வைத்தான். யிர் ஒரு பெண் நாய். இதுவும் எல்லோவைப் போன்றே 'கிரேட் ஷிங்' மலைப் பிரதேச நாய். பெரிய தலை, நீண்ட உடல், நீண்ட கால்கள், குறுகிய இடை மற்றும் குட்டையான மயிர் கொண்டது. இரண்டுமே பிறவி வேட்டைக்காரர்கள். நரிகளை வேட்டையாடுவதில் அபார திறன் பெற்றவை. குறிப்பாக, எல்லோ நல்ல வளமும் தனித்திறன்களும் கொண்டது.

எல்லோ, பில்ஜியும் கஸ்மாயும் ஜென்னுக்குத் தந்தது. யிர், யாங் கீ அவன் வேலை பார்க்குமிடத்திலிருந்து கொண்டு வந்தது. எப்போதுமே ஓலோன்புலாக் வாசிகள் அவர்களிடமிருப்பதில் சிறந்தவற்றையே மாணவர்களுக்குத் தருவார்கள். பட்டு வேட்டையாடப் போகும்போது ஜென்னையும் யாங் கீயையும் கூட்டிக்கொண்டு செல்வதற்கு இந்த இரண்டு நாய்களே முக்கிய காரணம். முந்தைய பனிக்காலத்தில் தொடங்கி அதற்குள் எல்லோவும் யிர்ரும் ஐந்து பெரிய நரிகளைப் பிடித்திருக்கின்றன. பனிக் காலத்தில் ஜென்னும் யாங்கும் அணியும் கம்பளித் தொப்பிகள் அவர்களுக்குப் பிரியமான இந்த நாய்கள் பரிசளித்தவையே. இளவேனிற் காலத் திருவிழாவைத் தொடர்ந்து, யிர் ஆறு குட்டிகள் போட்டது. அவற்றுள் மூன்றை, பில்ஜியும், லாம்ஜாவ்வும், ஒரு மாணவனும் ஆளுக்கொன்றாக உடனே எடுத்துக் கொண்டார்கள். ஆக, மிஞ்சியது ஒரு பெண் மற்றும் இரண்டு ஆண் குட்டிகள். ஒன்று கருப்பு; மற்ற இரண்டும் மஞ்சள் நிறம்.

யாங் கீ தன்னுடைய நாயின்மீதும் அதனுடைய குட்டிகள் மீதும் மிகுந்த செல்லத்தோடு இருந்தான். தன் வருமானத்தின் பெரும் பங்கை அவற்றின் உணவுக்காகச் செலவிட்டான். யாங்கிற்கும் ஜென்னுக்கும் கஸ்மாய் புதிதாகக் குட்டிகள் ஈன்ற தாய்க்கு எவ்விதம் உணவு தயாரிக்க வேண்டுமென்பதைக் கற்றுக் கொடுத்தாள். அதன் விளைவாக, யிர்ரிடம் நிறைய பால் சேர்ந்தது. அதனால் அதன் குட்டிகளும், மங்கோலிய மேய்ப்பர்கள் வளர்ப்பதை விடவும், வலுவாக உருவாகின.

மூன்றாவது காவல் நாய் கருப்பு; ஐந்து அல்லது ஆறு வயதான அந்த ஆண் நாய் அகன்ற மூக்கும் பெரிய வாயும் நீண்ட உடம்பும் கொண்டது. புலியைப் போல உறுமக்கூடிய அது படு மூர்க்கமானது. அதன் உடலெங்கும் காணப்பட்ட சண்டைக் காயங்கள் அருவெறுப்பூட்டுபவையாகவும் அச்சமூட்டுபவை யாகவும் தோற்றம் தந்தன. பழைய இலக்கியத்தில் ஒரு கதாபாத்திரமாக வரும் ‘எர்லாங் பிசாசு’ என்ற பெயராலேயே ஜென் அதைக் கூப்பிடுவான்.

ஜென், ஒரு நாள் அருகாமையிலுள்ள கூட்டுறவுப் பண்டக சாலையிலிருந்து திரும்பி வரும்போது அவனுடைய முதுகு சில்லிட்டது. அவன் திரும்பிப் பார்த்தபோது, ஒரு அவலட்சண மான, பிசாசைப் போன்று தோற்றமளித்த நாய் அவனுக்கு எதிரில் நின்றுகொண்டிருந்ததில் அவன் வண்டியிலிருந்து கிட்டத்தட்ட விழப் போனான். மாடு மேய்க்கும் தடியால் அதைப் பயமுறுத்தி விரட்டியடிக்க முயற்சித்தான். ஆனால் அதனால் ஒரு பிரயோசனமும் இல்லை. அவனுடைய வீடு வரை அந்த நாய் பின்தொடர்ந்து வந்தது. குதிரை மேய்ப்பர்கள் பலருக்கும் அந்த நாயைத் தெரிந்திருந்தது. அது ஆடுகளை அடித்துத் தின்னும் ஒரு மோசமான நாய் என்று அவர்கள் கூறினார்கள். அந்த ஆண் நாய் அதன் உரிமையாளரால் விரட்டியடிக்கப்பட்டது. அந்த நாயை விரட்டி விடும்படி மேய்ப்பர்கள் அவனுக்கு ஆலோசனை கூறினார்கள். ஆனால் ஜென் அதற்காகப் பரிதாபப்பட்டான். அந்த நாயிடம் ஏதோ விசேஷமிருப்பதாக அவன் நினைத்தான். மேலும் பில்ஜியின் குடிலை விட்டு வந்த பிறகு, ‘பார்’ உடன் அவனுக்குத் தொடர்பு இல்லாமல் போய்விட்டது. அவனுடைய வலது கையை இழந்து விட்டதுபோல அவன் உணர்ந்தான். அதனால் அவன் மேய்ப்பர்களிடம், ‘‘மாணவர்களாகிய நாங்கள் இளம் மேய்ப்பர்கள் என்பதால், இதைப் போன்ற மூர்க்கமான பெரிய நாய் எங்களுக்கு அவசியம்Ó என்றான். Òஅதனால் இதை நான் பராமரிக்கிறேன். அது இனியொரு முறை ஆட்டைக் கொன்றால் அதன் உயிரை எடுத்துவிடுவேன்.’’

இரண்டு மாதங்கள் கடந்தன. எர்லாங் பிசாசு ஆட்டின் பக்கம் போகவில்லை. அது, ஆட்டுப் பட்டியைக் காவல் காத்தது. தாக்குவதற்கு வந்த எதிரிகளை விரட்டியடித்தது. அது சண்டையிட ஒருபோதும் தயங்கியதில்லை. காலையில் அதன் நீண்ட மூக்கில் அவ்வப்போது ஓநாய் ரத்தத்தின் தடயம் காணப்படும்.

பனிக்காலம் கடந்தது. ஆனால் ஜென்னுடைய அல்லது யாங்குடைய ஒரு ஆடுகூட ஓநாய்களால் எடுத்துச் செல்லப்படவோ கொல்லப் படவோ இல்லை.

எர்லாங் பிசாசு ஒரு நாய் என்பதை விடவும் அதிகமும் ஓநாய்த் தன்மை கொண்டது என ஜென் அவ்வப்போது நினைத்துக் கொள்வதுண்டு. ஓநாய்தான் நாயின் மூதாதை. வடமேற்குப் புல்நிலத்தின் மூத்த குடிகளில் ஒன்றான குவான்ரோங் இனத்தவர், இரண்டு வெள்ளை நாய் ஜோடிதான் அவர்களுடைய மூதாதையர் எனக் கருதினர். நாய்தான் அவர்களுடைய குலச்சின்னம். குவான்ரோங் மக்களால் வணங்கப்படும் நாய்கள் ஒருவேளை ஒரு ஜோடி வெள்ளை ஓநாய்களாக இருக்கக்கூடுமென அவன் நினைத்தான். இப்போது அவன் கொண்டு வந்திருக்கும் இந்த மூர்க்கமான நாயும் ஓநாய் குணங்களைத் தீர்க்கமாகக் கொண்டதாக இருக்குமென நினைத்தான். அல்லது நாய் குணங்கள் கொண்ட ஓநாயாக இருக்கலாம்.

அந்நாயிடம் நெருக்கம் கொள்வதற்காக, ஜென் அடிக்கடி அதனருகில் மண்டியிட்டு அமர்ந்து, அதைத் தடவியும் சொறிந்தும் கொடுப்பான். ஆனால் அதனிடமிருந்து எந்த எதிர்வினையும் இருக்காது. ஜென்னைப் பொறுத்தவரை, அது புதிரான ஒன்றாகவே தோன்றியது. ஆனாலும் அதை நன்கு பராமரிக்க அவன் தவறியதில்லை. அதனுடைய நண்பனாக விரும்பிய ஜென், அதைப் பிசாசு என்று அழைப்பதை நிறுத்தினான்.

யாங்கும் காவோவும் எழுந்திருப்பதற்காகக் காத்திருந்தபோது, ஜென் வெளியில் நாய்களுக்குத் தீனி அளித்தபடியும் குட்டிகளோடு விளையாடியவாறும், எவ்வித பாவமும் இல்லாத எர்லாங்கைத் தட்டிக் கொடுத்துக்கொண்டும் இருந்தான். பீஜிங் வகுப்புத் தோழர்களான நால்வரும் _ ஒரு குதிரை மேய்ப்பன், ஒரு மாடு மேய்ப்பன் மற்றும் இரண்டு ஆடு மேய்ப்பர்கள் _ ஒரு வருடத்துக்கும் மேலாக ஒரு குடிலில் ஒன்றாகத் தங்கியிருந்தார்கள்.

குதிரை மேயப்பனான சாங் ஜியோன் எந்தவொரு செயலையும் நேர்த்தியாகச் செய்பவன். கிட்டத்தட்ட ஐநூறு குதிரைகள் அடங்கிய மந்தையைப் பட்டுவோடும் லாம்ஜாவ்வோடும் சேர்ந்து அவன் மேய்த்து வந்தான். அந்தக் குதிரைகள் அடங்காப் பசி கொண்டவை என்பதால், அவர்கள் குதிரைகளை மலைகளுக்கு இட்டுச் செல்வார்கள். அப்போதுதான் மாடு களோடும் ஆடுகளோடும் அவை பசும்புல் நிலத்தில் போட்டி போட வேண்டி இராது. அது

ஓநாய்களின் பிரதேசம். லாசோயிங் குதிரைகள் வசீகரமானவை. ஓநாய்களைத் துரத்திப் பிடிப்பதிலும் கொல்வதிலும் திறன் பெற்றவை. அதேபோல, ஓலோன்புலாக்கின் விலங்குகளைப் பிடிப்பதற்கான சுருக்குக்கயிற்றுத் தடி மிகச் சிறப்பான பலன் தருவது. அவை நீளமானவை. மிக அருமையாக உருவாக்கப்பட்டவை. ஓநாய்கள் இத்தடியைப் பார்த்தாலே மிரண்டுவிடும். பகலில் குதிரை சவாரி செய்துவரும் ஒருவரிடம் இத்தடியைக் கண்டால் ஓநாய்கள் ஓடி ஒளிந்துகொள்ளும். ஓநாய்கள் இரவு நேரத்தில் மட்டுமே சண்டை போடுவதற்கு ஒருவேளை இதுவே காரணமாக இருக்கலாம்.

ஆடுகளே மேய்ச்சல் நிலத்தில் வீட்டு விலங்குப் பண்ணைக் கான அடிப்படை ஆதாரம். அவை உணவுக்கான இறைச்சியையும், ஆடைகளுக்கான தோல்களையும், சமைப்பதற்கான எரிபொருளாகச் சாணத்தையும், வேலைப் புள்ளிகளையும் அளிக்கின்றன. அவை நாடோடி வாழ்க்கைமுறையின் தொடர்ச்சியை உறுதி செய்கின்றன. ஆனால் ஆடுகளை மேய்ப்பதென்பது அலுப் பூட்டுவது, களைப்படைய வைக்கும் வேலை. பசும் புல்வெளியில் அல்லது பனி மூடிய வனங்களில் காலையிலிருந்து இரவு வரை ஆடுகள் மட்டுமே துணையாக இருக்க ஒரு மனிதனின் பொழுது கழியும். ஏதேனும் ஒரு உச்சிக்கு ஏறிச் சென்று சுற்றிலும் பார்த்தால், எந்தவொரு திசையிலும் பல மைல் தூரத்துக்கு இன்னொரு மனிதன் கண்ணில் தென்பட மாட்டான். காலம் காலமாக மாறாத மேய்ச்சல் நிலம். ஓலோன்புலாக் உறைந்துவிட்ட ஒரு காலத்தில் இருந்துகொண்டிருக்கிறது. ஓநாய்கள்தான் இதன் காரணமாக இருக்குமோ?

ஜென் சென்னைப் பொறுத்தவரை, ஆடுகளை மேய்க்கும் வேலையில் ஒரு சாதகம் இருந்தது. அப்போது அவன் தனியாக இருப்பதால் அவனுடைய எண்ணங்கள் அலைந்து திரிய அது வசதியாக இருந்தது. பீஜிங்கிலிருந்து அவன் கொண்டு வந்திருந்த இரண்டு அட்டைப்பெட்டி நிறைய புத்தகங்களையும், யாங் கீ கொண்டு வந்திருந்த வரலாற்று நூல்களையும் ஆடுகளைப் போல அசை போட அவனுக்கு உதவியாக இருந்தது. ஒவ்வொரு இரவிலும் பழைய மற்றும் புதிய செவ்வியல் நூல்களை விளக்கு வெளிச்சத்தில் அவன் உள்வாங்குவான்; பகலில் தன் மந்தையைக்

கண்காணித்த படியே அவற்றின் சிறந்த பகுதிகளை அசை போடுவான். அவன் படித்த புத்தகத்தின் பழைய தாள்கள், பசும்புல்லைப் போல புத்தம் புதிதாக அவன் நினைவில் எழும். மக்கள் வெளிச்சத்தின்போது வெளியில் சென்று விடுவார்கள்; ஓநாய்கள் இருளில் வெளிவரும். பொதுவாக, ஓநாய்களின் ஊளை ஒரு குறிப்பிட்ட தூரத்திலேயே கேட்கும். சமீப நாட்களாக ஜென்னின் மனதில் ஒரு எண்ணம் தோன்றி, அது வலுப்பெற்றுக்கொண்டிருந்தது. ஒரு ஓநாய்க்குட்டியை எப்படியாவது கண்டெடுத்து, தன்னுடைய குடிலில் வைத்து அதை வளர்க்க வேண்டுமென அவன் தீர்மானித்திருந்தான். ஒவ்வொரு நாளும் அதன் வளர்ச்சியை மிக நெருக்கமாக இருந்து பார்த்துக்கொண்டிருப்பது மகத்தான புரிதலுக்கு இட்டுச் செல்லுமென அவன் நம்பினான்.

சில நாட்களுக்கு முன்பு, பெண் ஓநாயொன்று அவனுடைய ஆட்டுக்குட்டிகளில் ஒன்றைத் தூக்கிக்கொண்டு போனது பற்றி ஜென் சென் யோசித்தான். இங்குதான் எங்கோ பக்கத்தில் ஒரு குகையில் அது தன் குட்டிகளை ஒளித்து வைத்திருக்குமென்று அவனுக்குத் தோன்றியது.

அவன் அப்போதுதான் மந்தையைச் சரி பார்த்துவிட்டுத் திரும்பியிருந்தான். எல்லாமே சரியாக இருப்பது போல்தான் தோன்றியது. அவன் புல்லின்மீது படுத்துக்கொண்டு, நீலவானில் உயரப் பறந்துகொண்டிருந்த பிணம் தின்னிக் கழுகுகளை விடாமல் பார்த்துக்கொண்டிருந்தான். திடீரென, ஆடுகளுக்கிடையே சலசலப்பு ஏற்படுவதை அவன் கேட்டான். சட்டென அவன் எழுந்து பார்த்தபோது, ஒரு பெண் ஓநாய் ஆட்டுக் குட்டியொன்றைக் கழுத்தில் கடித்துப் பற்றியிழுப்பது தெரிந்தது. அது தலையை ஒரு சுண்டு சுண்டி இரையைத் தன் பின்னால் போட்டு, வாயில் கவ்வியபடி ஓடி ‘கரும்பாறை மலை’க்குள் மறைந்தது.

பொதுவாக, ஒரு ஆட்டுக்குட்டி கத்தத் தொடங்கினால் உடனடியாக மற்ற நூற்றுக்கணக்கான குட்டிகளும் அவற்றின் அம்மாக்களும் கத்த ஆரம்பித்து அவற்றின் சத்தம் வானை நிரப்பிவிடும். ஆனால் அந்தப் பெண் ஓநாய், ஆட்டுக்குட்டியின் கழுத்தைத் தன் கோரைப் பற்களால் கவ்வியதன் மூலம் அதைக் கத்தவிடாமல் மூச்சைத் திணர அடித்து, எவ்வித அரவமும் மந்தையில் ஏற்படாமல் செய்து, தூக்கிக்கொண்டு ஓடிவிட்டது. அங்கு என்ன

நடந்துவிட்டிருந்தது என்பதை ஒரு ஆடுகூட அறியவில்லை. அந்த ஆட்டுக்குட்டியின் தாய்க்குக்கூட தான் என்ன இழந்திருக்கிறோம் என்பது தெரிந்திருக் காது. ஜென் சென்னின் நுட்பமான செவித்திறனும், சுதாரிப்புமே இது உடனடியாகத் தெரிய வரக் காரணம். இல்லையெனில், மாலையில் ஆடுகளை எண்ணிப் பார்க்கும்போதுதான் அவனுக்குத் தெரிய வந்திருக்கும். ஒரு பலே கில்லாடியிடம் தன் பொருளைப் பறி கொடுத்தவனாக அவன் அதிர்ந்துபோயிருந்தான்.

அவனுடைய சுவாசம் இயல்புக்குத் திரும்பியவுடன், ஆட்டுக்குட்டி எடுக்கப்பட்ட இடத்துக்கு அவன் குதிரையில் சென்றான். அங்கு ஒரு பள்ளம் இருப்பதை அவன் கண்டான். அந்தப் பெண் ஓநாய் அந்தப் பள்ளத்தில் பதுங்கியிருந்து, மந்தை அந்த இடத்துக்குப் பக்கத்தில் வரும் வரை காத்திருந்திருக்கிறது. ஆகாயத்தில் சூரியன் இப்போது எங்கிருக்கிறது என்பதைக் கவனிப்பதற்காக அவன் மேல்நோக்கிப் பார்த்தான். ஓநாய் மூன்று மணி நேரத்துக்கும் மேலாக அந்தப் பள்ளத்தில் பதுங்கியபடி ஒளிந்திருந்திருக்கும் என்று அவன் கணக்கிட்டான். அந்தப் பருவ காலத்தில், பெண் ஓநாய்கள் மட்டுமே பட்டப்பகலில் ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் செல்லும். தன்னுடைய இளம் குட்டிகளுக்கான வேட்டைப பயிற்சியாக அவ்வாறு செய்யும். இன்னமும் கண்கள் திறக்காமல் பால் குடித்துக்கொண்டிருக்கும் ஓநாய்க் குட்டிகளுக்கு, ஆட்டுக்குட்டியின் இளம் கறி செரிமானத்துக்கு உகந்ததாக இருக்கும்.

கோபத்தில் கொதித்துப்போயிருந்த ஜென், ஒரு வகையில் இது தனக்கொரு அதிர்ஷ்டமென்று நினைத்தான். சமீப நாட்களாக, அவனும் யாங் கீயும் சில நாட்களுக்கொரு முறை ஒரு ஆட்டை இழந்துகொண்டிருந்தார்கள். பருந்துகள் அல்லது கழுகுகள் தூக்கிச் சென்றிருக்கக் கூடுமோ என அவர்கள் நினைத்தார்கள். வானி லிருந்து இறங்கி வரும் அத்திருடர்கள் சட்டெனத் தாக்கக் கூடியவை. ஆனால் அவை இறங்கி வரும்போது மந்தையிடையே அச்ச அலைகள் பரவி, அவை கத்தத் தொடங்கிவிடும். மேய்ப்பனின் கவனத்திலிருந்து தப்ப முடியாது. அதனால் இந்த மாயத்தை அவனாலும் யாங்காலும் விளங்கிக்கொள்ள முடியாமல் இருந்தது. ஆனால் இப்போது ஒரு ஓநாய் ஆட்டுக் குட்டியைத் தூக்கிச் சொல்வதை அவன் பார்த்து விட்டிருந்ததாலும், நிலத்தில் ஒரு பள்ளத்தைக் கண்டுபிடித்திருந்ததாலும்,

இதுவரை இருந்த புதிர் நீங்கியது. இனி ஓநாயின் இந்த தந்திரத்துக்கு ஆட்டுக் குட்டிகள் பலியாகாது. அவன் எவ்வளவுதான் கவனமாக இருந்தாலும், இப்படியான நிகழ்வுகள் இனி நடக்காதென்பதற்கு எவ்வித உத்திரவாதமும் ஜென்னால் தர முடியாது. ஓநாய்கள் நிலைமைக்கேற்ப தந்திரங்களைக் கையாளும். கழுகுகளின் சிறகுகள் அவற்றுக்கு இல்லையென்றாலும், அவைதாம் உண்மையில் மேய்ச்சல் நிலத்தில் பறக்கும் கொள்ளையர்கள். நேரத்துக்கு நேரம் அவை புதுப்புது வழிமுறைகளைக் கண்டுபிடித்து மக்களை ஆச்சரியப்படுத்துபவை.

எர்லாங்கின் காதின் பின்னால் ஜென் வருடிக் கொடுத்தான்; ஆனால் அதற்காக எவ்வித நன்றி பாவத்தையும் அது வெளிப்படுத்தவில்லை. அவன் குடிலுக்குள் நுழைந்தபோது, காற்றில் பனித்துகள்கள் சுழன்றுகொண்டிருந்தன. யாங் கீ மற்றும் காவோ ஜியான்சோங்குடன் சேர்ந்து அவனும் அடுப்பின் முன்னமர்ந்து எரிந்துகொண்டிருந்த வறட்டியில் குளிர் காய்ந்தான். அவர்கள் தேநீர் குடித்தபடி, கொழுத்த இறைச்சியையும், கஸ்மாய் கொண்டு வந்து தந்திருந்த தயிரையும் சாப்பிட்டார்கள். அவர்களுக்கு இப்போது வேலை நேரமாக இல்லாததால், ஒரு ஓநாய்க் குட்டியைத் தேடுவதற்காக வெளியில் செல்லலாமென ஜென் அவர்களைக் கிளப்ப முயற்சித்தான். அவனைப் பொறுத்தவரை, அதற்கான அவனுடைய காரணம் நியாயமாகப் பட்டது: ஓநாய்களோடு சண்டையிடுவதென்பது தவிர்க்க முடியாதது. அதனால் நாமே சொந்தமாக ஒன்றை வளர்க்கும்போது அவற்றின் செயல்பாடுகளை நம்மால் நன்றாகப் புரிந்துகொள்ள முடியும். அப்போது, நாம் நம்மைப் புரிந்துகொண்டிருப்பதைப் போல நம் எதிரியையும் புரிந்துகொள்வோம்.

காவோ ஜியான்சோங், கறி சமைத்தபடியே, வேதனையோடு பார்த்தான். ‘‘ஓநாய்க் குட்டியைத் திருடுவதென்பது குழந்தை விளையாட்டில்லை’’ என்றான் அவன். ‘‘முன்பு, லாம்ஜாவும் மற்றும் சிலரும் சேர்ந்து ஒரு ஓநாய்க் குட்டியைக் குகையிலிருந்து திருட முயன்றபோது, பெண் ஓநாய் சட்டென வெளிப்பட்டு அவன் கையைக் குதறப் பார்த்தது. மூன்று குதிரை மேய்ப்பர்கள், ஒரு மாடு மேய்ப்பன், ஏழெட்டு நாய்கள் சேர்ந்து பெரும் பாடுபட்டு அதைக் கொன்று போட்டார்கள். மிக ஆழமான அந்தக் குகைக்குள் அவர்கள் குழுக்களாகச் சென்று ஓநாய்க் குட்டிகளை எடுக்க இரண்டு நாட்கள்

தேவைப்பட்டது. ஒரு ஆடுகூட தன்னுடைய குட்டியைக் காப்பாற்றப் பாடுபடும். ஓநாயைப் பொறுத்தவரை, அது ஒரு மரணப் போராட்டம். நம்மிடம் துப்பாக்கி இல்லை. மண்வெட்டிகளோடும் மேய்ச்சல் தடிகளோடும் நம்மால் ஒரு ஓநாயை எதிர்கொள்ள முடியுமென்று நினைக்கிறாயா? மேலும், ஓநாயின் குகையைத் தோண்டுவதென்பது மிகவும் சோர்வூட்டும் ஒரு காரியம். நான் கடைசியாக சஞ்சாயோடு சென்றபோது, இரண்டு நாள் முழுவதும் தோண்டியும் அதன் கடைசி வரை செல்ல முடியவில்லை. கடைசியில், நாங்கள் நெருப்பைப் பற்ற வைத்து அதன் வாயிலை அடைத்தோம். ஆனால், தாய் ஓநாய்க்கு புகையை எப்படித் தடுப்பதென்பது தெரியுமென்றும், அங்கு வெளியேறுவதற்கு வேறு ஒரு ரகசியப் பாதை இருக்குமென்றும் சஞ்சாய் சொன்னான். ஓநாய்கள் நம்மை எவ்விதமெல்லாம் தந்திரங்கள் செய்து ஏமாற்றுமென்பதை நீயும் இதற்குள் அறிந்திருப்பாய். மேய்ப்பர்கள் இவ்வாறு சொல்வார்கள். 'ஓநாய்க் குகை, ஓநாய்க் குகை, பத்தில் ஒன்பது காலியாக இருக்கும்.' ஓநாய்கள் தங்கள் குகைகளைத் தொடர்ந்து மாற்றிக்கொண்டே இருக்கும். உள்ளூர் வாசிகளுக்கே அது மிகவும் சிரமமான காரியமாக இருக்கும்போது, நம்மால் முடியுமென்று நீ எப்படி நினைக்கிறாய்?''

ஆனால் யாங் கீ, அதற்கு மாறாக, இது மிகவும் அருமையான யோசனை என்று நினைத்தான். ''நான் உன்னோடு வருகிறேன்'' என்றான் அவன். Òஎன்னிடம் கூர்மையான ஒரு கடப்பாரை இருக்கிறது. நம் இருவரால் ஒரு பெண் ஓநாயை சமாளிக்க முடியாதென்று நான் நினைக்கவில்லை. நாம் இறைச்சி வெட்டும் கத்தியையும் பட்டாசுகளையும் எடுத்துக்கொண்டு செல்லலாம். கத்தியை ஆயுதமாகப் பயன்படுத்தியும் பட்டாசுகளை வெடிக்கச் செய்தும் நாம் ஒரு ஓநாயைக் கொன்றுவிட முடியும். பின்னர் எல்லோரும் நம்மைப் பற்றித்தான் பேசுவார்கள்.''

''அப்படிக் கனவு காணுங்கள்'' என்று நக்கலாகச் சொன்னான் காவோ. Òகவனமாக இருங்கள். ஓநாய் ஒன்றும் சாதாரண மானதல்ல. அவை உங்கள் வாழ்க்கையையே முடித்துவிடும்.''

யாங் தன்னுடைய தலையை மேலும் கீழுமாக ஆட்டினான். ''பள்ளி நாட்களில், 'சிவப்புப் பாதுகாவலர் பிரிவு' சண்டைகளின்போது எங்கள் குழுவைச் சார்ந்த ஐவரில் நால்வர் காய மடைந்தனர். ஆனால் எனக்கு ஒரு

சிறு சிராய்ப்புகூட ஏற்பட வில்லை. அதனால் என் பக்கம் அதிர்ஷ்டமிருக்கிறதென்று எனக்குத் தெரியும். நான் புல் தின்னும் ஆடு என்றும் அவன் இறைச்சி உண்ணும் ஓநாய் என்றும் லாம்ஜாவ் சொல்லிக்கொள்வான். ஆனால் நாம் வெளியில் சென்று ஒரு ஓநாய்க் குட்டியுடன் திரும்பினால் அவனால் இனி ஒருபோதும் அப்படிச¢ சொல்ல முடியாது.''

''பிரமாதம்'' என்றான் ஜென். ''ஆக நீ என்னுடன் வருகிறாய். பின்னால் இந்த முடிவை மாற்ற மாட்டாயென்று நினைக்கிறேன்.''

யாங் தன்னுடைய கோப்பையைப் பெரும் சப்தத்துடன் மேஜை மீது வைத்தான். ''நாம் எப்போது போகப் போகிறோம். எவ்வளவு சீக்கிரம் செல்கிறோமோ அவ்வளவு நல்லது. அதன்பிறகு, ஓநாய் வளைப்பு வேட்டையில் நாம் அவர்களோடு கலந்துகொள்ள வேண்டியிருக்கும். அது என்னுடைய கனவாக இருந்து கொண்டிருக்கிறது.''

ஜென் எழுந்து நின்றான். ''நாம் சாப்பிட்டு முடித்தவுடனேயே செல்லலாமா? நாம் முதலில் கொஞ்சம் வேவு பார்க்க வேண்டும்.''

காவோ, தன் வாயைத் துடைத்துக்கொண்டான். ''உங்களுக்காக கோம்பு மந்தையைப் பார்க்க வேண்டியிருக்கும். அதன் மூலம் நம் குடில் ஒரு நாளுக்கான வேலைப் புள்ளிகளை இழக்க நேரிடும்.''

யாங் இளக்காரமாகப் பதில் சொன்னான். ''நீ ரொம்ப அற்பமானவன். வண்டி நிறைய மான்களோடு ஜென் வந்தானே, அதைப் பற்றி என்ன நினைக்கிறாய்? அவை எவ்வளவு வேலைப் புள்ளிகள் பெறுமதியானவை? உண்மையிலேயே நீ பரிதாபமானவன்.''

ஜென்னும் யாங்கும் தங்கள் குதிரைகளைத் தயார் செய்துகொண்டிருந்தபோது, பாயர் பெரிய மஞ்சள் குதிரையில் அங்கு வந்து சேர்ந்தான். அவனுடைய தாத்தா பில்ஜி ஜென்னைப் பார்க்க விரும்புவதாக அவன் ஜென்னிடம் சொன்னான்.

''எனக்காக அப்பா ஆள் அனுப்பியிருக்கிறார்கள் என்றால் அது முக்கியமான விஷயமாகத்தான் இருக்கும்'' என்றான் ஜென்.

''ஒருவேளை அது வேட்டை பற்றியதாக இருக்கலாம்'' என்றான் யாங். ''நீ போய்விட்டு வா. நீ அவருடன் இருக்கும்போது, ஒரு ஓநாய்க் குட்டியை அடைய

நாம் என்ன செய்ய வேண்டியது அவசியம் என்பது பற்றி ஏதாவது தகவல் கிடைக்கலாம்.’’

ஜென் குதிரையின்மீது தாவி ஏறினான். குதிரையின் மீது தானாக ஏறுமளவுக்கு பாயர் உயரமில்லாதவன் என்பதால், அவனைத் தூக்கிவிடுவதற்கு யாங் முன்வந்தான். பாயர் அதை மறுத்தான். அவன் பாரவண்டியின் பக்கமாகக் குதிரையை இட்டுச் சென்று, ஒரு சக்கரத்தின் மீது கால் வைத்துத் தாவி ஏறினான். இரண்டு குதிரைகளும் பறந்து சென்றன.

# 8

குதிரையிலிருந்து இறங்குவதற்கு முன்பாகவே, முதியவரின் குடிலிலிருந்து இறைச்சி சமைக்கும் வாசனை வருவதை ஜென் உணர்ந்தான். ஆனால் அது ஆட்டிறைச்சி வாசனையாக இல்லாமல் விநோதமாக இருந்தது. அவன் வேகமாக உள்ளே நுழைந்தான். ‘‘ஏன் இவ்வளவு வேகம்’’ என்று பில்ஜி கத்தினார். ஜென் சட்டென நின்றான். மூன்று பக்கங்களின் தரை விரிப்புகளும் சுருட்டப்பட்டு, நடுவில் ஒரு புதிய குதிரைத் தோல் விரிக்கப்பட்டிருந்ததை அவன் உடனடியாகக் கண்டான். அதன்மீது ஏழெட்டு ஓநாய் பொறிகள் கிடத்தப்பட்டிருந்தன. பாத்திரத்திலிருந்து வெளிவந்த ஆவி மூலம் குடிலெங்கும் ஒரு நெடி நிறைந்திருந்தது. அதனுள் கருப்பான, எண்ணெய் போன்ற திரவம் கொதித்துக்கொண்டிருந்தது. கஸ்மாய் அடுப்பின் முன் அமர்ந்து, வறட்டிகளைக் கொண்டு நெருப்பை மூட்டியபடி இருந்தாள். அவள் முகம் முழுவதும் வியர்வை வழிந்திருந்தது. அவளுடைய ஐந்து வயது மகள் சேசெக், அறுபது, எழுபது ஆட்டெழும்புகளை வைத்து விளையாடிக் கொண்டிருந்தாள். உடல் பூரண குணமடைவதற்காக இன்னமும் வீட்டிலேயே இருந்த பட்டு, பில்ஜியின் மனைவி ஈஜியுடன் சேர்ந்து பொறிகளைத் தேய்த்துப் பளபளப்பாக்கிக்கொண்டிருந்தான்.

முதியவருக்குப் பக்கத்தில் ஜென் உட்கார்ந்துகொண்டான்.

‘‘என்ன சமையல் நடக்கிறது? ஓநாய் பொறிகளா?’’

ஜென் கேலியாகக் கேட்டான். ‘‘உங்கள் பற்கள் வலுவானவையாகத் தானிருக்கும்.’’

பில்ஜி சிரித்தபோது கண்கள் சுருங்கின. ‘‘நீ சொன்னது பாதி சரி. பொறிகளைத்தான் நான் சமைத்துக்கொண்டிருக்கிறேன். ஆனால் என் பற்கள்தான் சரியில்லை.’’

‘‘எதற்காக இந்தச் சமையல்?’’ ஜென் கேட்டான்.

‘‘ஓநாய்களைப் பிடிப்பதற்காக’’ என்றார் பில்ஜி. ‘‘உன் வாசனைத் திறனை நான் சோதித்துப் பார்க்கிறேன். இது என்ன வகையான இறைச்சி என்று உனக்குத் தெரிகிறதா?’’ அடுப்புக்கு அருகிலிருந்த ஒரு பாத்திரத்தைக் காட்டி பில்ஜி கேட்டார். ஜென் தலையசைத்தான். “இது குதிரைக் கறி. உறைபனி ஏரியிலிருந்து இதை நான் எடுத்து வந்தேன். முதலில், ஒரு பாத்திரத்தில்

தண்ணீரில் இதை சமைக்க வேண்டும். பிறகு அந்த சூப்பில் பொறிகளைக் கொதிக்க வைக்க வேண்டும். ஏன் தெரியுமா? அப்போதுதான் அதன் கடுமையான நெடியிலிருந்து தப்பிக்க முடியும்.''

''ஓ!'' ஜென் பரவசமடைந்தான். ''இப்படியாகத்தான் ஓநாய்கள் உங்கள் பொறிகளில் வந்து மாட்டப் போகின்றனவா? நாம் ஓநாய்களை விடவும் சாமர்த்தியசாலிகள் என்றுதான் நினைக்கிறேன்.''

முதியவர் தன் நரை தாடியைத் தடவிவிட்டுக்கொண்டார். ''அப்படி இல்லை. அவை நாய்களை விடவும் அதிக மோப்ப சக்தி கொண்டவை. கடுமையான நெடி இருந்தாலோ, மனித வாசனை அடித்தாலோ எல்லாம் வீணாகப் போய்விடும். பொறிகளின் எந்தவொரு இடத்திலும் நெடி அடிக்காதபடி நான் அவற்றை மிகக் கவனமாக சுத்தம் செய்துவிடுவேன். ஓநாய்கள் மிகவும் புத்திசாலிகள். கடவுள்களால் அவை பேணப்படுகின்றன. எல்லா வகையான ஆவிகளும் அவற்றுக்குத் துணை செய்கின்றன. அதனால்தான் அவை பலமிக்க எதிரியாக இருக்கின்றன.''

கடவுள்கள் மற்றும் ஆவிகள் பற்றி ஜென் கேட்க முனைந்தபோது, முதியவர் எழுந்து, பாத்திரத்திலிருந்து ஒரு பொறியை வெளியே எடுத்தார். ஜென் அதற்கு உதவினான். அதை அவர்கள் ஒரு கோணிப்பையில் போட்டுவிட்டு, மற்றொன்றை எடுத்துப் பாத்திரத்தில் போட்டார்கள். பொறிகள் மிகப் பெரிதாகவும், மிகக் கனமாகவும் இருந்தன. ஒன்றொன்றாகத்தான் அதைப் பாத்திரத்தில் போட்டுத் தயாரிக்க முடிந்தது. ''நேற்று வீட்டில் எல்லோரும் சேர்ந்து பொறிகளை சுத்தம் செய்தார்கள்'' என்றார் அவர். ''நான் அவற்றை ஏற்கெனவே ஒருமுறை கொதிக்க வைத்து எடுத்துவிட்டேன். இது இரண்டாவது முறை. இதோடு இவ்வேலை முடியாது. விரைவிலேயே இதன் மீது குதிரையின் குடல் எண்ணெயைத் தடவி, மீண்டும் கொதிக்க வைக்க வேண்டும். அதன் பிறகுதான் இவற்றைப் பயன்படுத்த முடியும். ஓநாய்களோடு சண்டையிடுவதென்பது, ஒரு யுத்தத்தை நடத்தவது போன்றது. மிகக் கவனமாக இல்லாவிட்டால் தோற்றுவிடுவோம். ஒரு பெண்ணை விடவும் மிக நுட்பமாக, கஸ்மாயை விடவும் மிக நுட்பமாகச் செயல்பட வேண்டும்'' என்றார் அவர்.

கஸ்மாய் நிமிர்ந்து, மேல் வரிசையிலிருந்த கிண்ணத்தைப் பார்த்தாள். ‘‘என்னுடைய வெண்ணெய்த் தேநீர் உனக்கு எவ்வளவு பிடிக்குமென்று எனக்குத் தெரியும். என்னுடைய கைகள் அழுக்காக இருப்பதால் நீயாகவே எடுத்துக்கொள்.’’ அவன் ஒரு கோப்பையில் வெண்ணெய்த் தேநீர் ஊற்றிக்கொண்டான். ‘‘அப்பா, பொறிகளை வைக்கப் பட்டுவைக் கூட்டிக்கொண்டு செல்ல நினைத்தார். ஆனால் பட்டுவால் இந்த முகத்தோடு வெளியில் செல்ல முடியாது. அதனால் அப்பா, தனக்குப் பிரியமான ஹேன் சீனனை அவரோடு அழைத்துச் செல்ல இருக்கிறார்.’’

ஜென் சிரித்தான். ‘‘ஓநாய்கள் சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் அப்பாவால் என்னைப் பற்றி நினைக்காமல் இருக்க முடியாது. சரிதானே அப்பா?’’

‘‘ஆம், இளைஞனே’’ என்றார் பில்ஜி. Òஓநாய்கள் உன்னை இறுகப் பற்றியுள்ளன என்றே நான் நினைக்கிறேன். நான் முதியவன். அதனால் நான் பெற்றுள்ள அறிவையெல்லாம் உன்னிடம் கடத்திவிட முயற்சிக்கிறேன். நன்றாகக் கற்றுக்கொள். அதேசமயம் நான் உன்னிடம் சொன்னதை ஒருபோதும் மறந்து விடாதே. மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதற்காக டெஞ்ஞரினால் ஓநாய்கள் அனுப்பப்பட்டிருக்கின்றன. அவை இல்லாவிட்டால் மேய்ச்சல் நிலம் மறைந்துவிடும். ஓநாய்கள் இல்லாமல், மங்கோலியர் களாகிய எங்களால் ஒருபோதும் சொர்க்கத்திற்குள் நுழைய முடியாது.’’

‘‘அப்பா, ஓநாய்கள் மேய்ச்சல் நிலத்தின் புனிதப் பாதுகாவலர் களாக இருக்கும்போது, அவற்றை ஏன் கொல்ல வேண்டும்?’’ என்று கேட்டான் ஜென். ‘‘தலைமையகக் கூட்டத்தின்போது தெரிவிக்கப்பட்ட ஓநாய் வேட்டையை நீங்கள் ஏற்றுக்கொண்டதாகவே நினைக்கிறேன்.’’

‘‘அவை அதிக அளவில் இருக்கும்போது, அவை தமது புனித சக்தியை இழந்துவிடுவதோடு தீயவையாகவும் மாறிவிடுகின்றன. அவை எல்லா ஆடு மாடுகளையும் கொன்றுவிட்டால், நாங்கள் தொடர்ந்து வாழ முடியாது. மேய்ச்சல் நிலமும் இல்லாது போகும். மங்கோலியர்களாகிய நாங்களும் மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப் பதற்காக டெஞ்ஞரினால் அனுப்பப்பட்டவர்களே. மேய்ச்சல் நிலமில்லாமல் மங்கோலியர்கள் இல்லை; மங்கோலியர்கள் இல்லாமல் மேய்ச்சல் நிலமென்று ஒன்றில்லை.’’

‘‘ஓநாய்களும் மங்கோலியர்களும் சேர்ந்து மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதாகச் சொல்கிறீர்களா?’’ முதியவர்சொன்னதில் நெகிழ்ந்துபோய் ஜென் கேட்டான்.

‘‘அது சரிதான். ஆனால் சீனர்களாகிய உங்களால் இதைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியாதென்றே அஞ்சுகிறேன்’’ என்று ஜாக்கிரதை உணர்வோடு முதியவர் சொன்னார்.

‘‘அப்பா நான் ஹேன் ஆதிக்கத்துக்கு எதிரானவன் என்பதும் பண்ணை நிலம் அமைப்பதற்காக இங்கு மக்களை அனுப்பும் கொள்கையை எதிர்ப்பவன் என்பதும் உங்களுக்குத் தெரியும்.’’

குதிரை முடியினால் ஓநாய் பொறியைத் தேய்த்தபடியே முதியவர் பேசினார். “மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதென்பது எங்களுக்கு அளிக்கப்பட்டுள்ள கடினமான பணி. நாங்கள் ஓநாய் களைக் கொல்லாவிட்டால், எங்களில் சிலரே எஞ்சியிருப்போம். அதேசமயம், நாங்கள் அவற்றை மிக அதிகமாகக் கொன்றுவிட்டால், அதற்கும் குறைவாகவே நாங்கள் மிஞ்சியிருப்போம்.’’ முதியவரின் வார்த்தைகளில், ஒருவரால் எளிதில் புரிந்து கொள்ள முடியாத மறைஉண்மை புதைந்திருப்பதாகத் தோன்றியது.

ஜென், தன்னிடம் எழுந்த கேள்விகளை விழுங்கிக்கொண்டு அமைதியாக இருந்தான்.

பொறிகள் தயாரானதும், முதியவர் ஜென்னை நோக்கித் திரும்பினார். ‘‘இவற்றை வைப்பதற்கு நீ என்னுடன் வா’’ என்றார். ‘‘நான் எப்படி வைக்கிறேன் என்பதை உன்னிப்பாகக் கவனி.’’ ஒரு ஜோடி கித்தான் கையுறைகளை மாட்டிக்கொண்ட பில்ஜி, இன்னொரு ஜோடியை ஜென்னிடம் கொடுத்தார். பிறகு, பொறிகளில் ஒன்றை எடுத்துக்கொண்டு வெளியில் வந்தார். அங்கு ஒரு சிறிய பாரவண்டி காத்திருந்தது. ஜென்னும் பாயரும் பல பொறிகளை எடுத்துக்கொண்டு அவரைப் பின்தொடர்ந்தார்கள். அவர்கள் வெளியில் வந்தவுடனேயே, தடவப்பட்டிருந்த கொழுப்பு உறைந்து, மெலிந்த எண்ணெய்த் தடவலாக மாறியதில் உலோகம் வெளியில் தெரிந்தது. எல்லாவற்றையும் ஏற்றி முடித்ததும், முதியவர் வண்டியின் ஒரு பக்கமாகச் சென்று, ஒரு கோணி நிறைய குதிரை வறட்டியோடு திரும்பினார். அதையும்

வண்டியில் ஏற்றினார். இப்போது எல்லாம் தயாரானதை அடுத்து மூவரும் குதிரை மீதேறி அமர்ந்தனர். ஆனால் அவர்கள் கிளம்புவதற்கு முன்பாக வெளியில் ஓடிவந்த கஸ்மாய், ‘‘ஜென் ஜென், கவனமாக இரு; அவை சுலபமாக உன் கைகளை ஒடித்துவிடும்’’ என்று கத்தினாள். அவளுடைய மகனுக்காகவே அவள் அப்படிச் சொன்னாள் என அவன் எண்ணிக்கொண்டான்.

பார் மற்றும் சில பெரிய நாய்கள் பொறிகளைக் கண்டவுடன், அவற்றின் வேட்டை உணர்வு துள்ளியெழ, அவை அவற்றின் பின்னால் ஓடத் தயாராகின. பாரின் கழுத்தைப் பட்டு பிடித்துக்கொண்டான். கஸ்மாய் ஒரு பெரிய நாயைத் தன் கைகளால் அணைத்துக்கொண்டாள். அங்கேயே இருக்கும்படி பில்ஜி அவற்றிடம் சொன்னார். பிறகு, பார வண்டியின் முன்னால் மூவரும் குதிரைகளில் கிளம்பினார்கள்.

மேகங்கள் மலையுச்சிகளை அழுத்திக்கொண்டிருந்தன. மெல்லிய பனி விழுந்துகொண்டிருந்தது. முகத்தில் பனி படும்படி முதியவர் பின்னால் சரிந்துகொண்டார். முகத்தில் பட்டதும் பனி விரைவாக உருகியது. கையுறையைக் கழற்றிவிட்டு, மேலும் கொஞ்சம் பனியைக் கையில் வாங்கி முகமெங்கும் தடவிக்கொண்டார். ‘‘கடந்த சில நாட்களாக நான் வேலையில் மும்முரமாக ஈடுபட்டிருந்ததால் முகத்தைக் கழுவ மறந்துவிட்டேன்’’ என்றார் அவர். ‘‘பனியில் முகம் துடைப்பது நன்றாக இருக்கிறது. அடுப்பின் முன்னால் பல மணி நேரம் உட்கார்ந்திருந்ததால் முகமெல்லாம் புகை படிந்துவிட்டது. பனி, புகை வாடையைப் போக்கிவிட்டது.’’

ஜென்னும் பனியால் தன் முகத்தைக் கழுவிக்கொண்டான். பிறகு, தன் சட்டையின் கைப்பகுதியை முகர்ந்தான். ஆட்டுப் புழுக்கையின் நாற்றமடிப்பதை உணர்ந்தான். ‘‘இந்தப் புகை நாற்றத்தால் ஏதும் சிக்கல் வருமா?’’ என்று கேட்டான்.

‘‘அதனால் ஒன்றுமில்லை. நாம் போகுமிடத்தை நாம் அடைவதற்கு முன்பாக அது இல்லாமல் போய்விடும். ஆனால் உன் மேலாடையோ, தோல் கால்சட்டையோ உறைந்த குதிரைக் கறி மீது படாமல் பார்த்துக்கொள். அது போதும், உனக்கு எந்தப் பிரச்சனையும் வராது.’’

‘‘ஓநாய்களோடு சண்டையிடுவது மிகவும் சிரமமான ஒன்றுதான்’’ என்றான் ஜென். ‘‘நேற்று இரவு முழுவதும் நாய்கள், ஓநாய்களின் ஊளைகளுக்கு எதிராக ஓயாது குரைத்துக் கொண்டிருந்தன. நான் ஒரு பொட்டுகூடத் தூங்கவில்லை.’’

‘‘சீனர்களாகிய நீங்கள் உங்கள் வீட்டில் ஒவ்வொரு நாள் இரவும் சுகமாகத் தூங்குவீர்கள். ஆனால் இது ஒரு யுத்தகளம். மங்கோலியர்களாகிய நாங்கள் சண்டையிடுவதற்காகவே பிறந்த போர் வீரர்கள். அமைதியாகவும் நிம்மதியாகவும் தூங்க விரும்பும் மக்களால் மோசமான வீரர்களையே உருவாக்க முடியும். உன் தலை தலையணையில் விழுந்தவுடனேயே தூங்கிவிடவும், நாயின் குரைப்பு கேட்ட நொடியில் எழுந்துவிடவும் நீ கற்றுக்கொள்ள வேண்டும். ஓநாய்கள் தூங்கும்போது அவற்றின் காதுகள் விடைத்து நிற்கும். அபாயத்தின் முதல் அறிகுறி தென்பட்டவுடனேயே அவை எழுந்து மறைந்துவிடும். நீ அவற்றோடு சண்டை போடுவதென்றால், நீயும் அப்படியாகத்தான் இருக்க வேண்டும். என்னைப் பொறுத்தவரை, நான் ஒரு கிழட்டு ஓநாய்.’’ முதியவர் சிரித்தார். Òநான் சாப்பிடுகிறேன், சண்டையிடுகிறேன், தூங்குகிறேன். மேலும் பூனைத் தூக்கம் போடவும் எனக்குத் தெரியும். என்னைப் பற்றிய எல்லாவற்றையும் ஓலோன்புலாக் ஓநாய்கள் வெறுக்கின்றன. நான் சாகும்போது அவை ஒன்றுவிடாமல் என்னை மென்று தின்றுவிடும். நான் எவரையும் விட சீக்கிரமாக டெஞ்ஞருக்குப் போய்விடுவேன். ஹா ஹா...’’

‘‘இங்கு வசிக்கும் மாணவர்கள் நரம்பு மண்டலப் பாதிப்புக்கு ஆளாகியிருக்கிறார்கள். ஒரு பெண் ஏற்கெனவே பீஜிங்கிற்குத் திரும்ப அனுப்பப்பட்டு விட்டாள். இந்த நிலை தொடரும்போது, எங்களில் பாதிக்கும் மேற்பட்டோரை இன்னும் சில வருடங்களில் ஓநாய்கள் தெற்குப் பக்கமாக அனுப்பிவிடும். நான் சாகும்போது, ஓநாய்களுக்கு உணவாகப் போவதில்லை. என் சடலம் எரியூட்டப்படுவதையே நான் விரும்புகிறேன்’’ என்றான் ஜென்.

முதியவர் சிரித்தார். ‘‘ஹேன் மக்கள் எப்போதுமே வீண்தான். ஒரு மனிதன் இறந்துவிட்டால் அவனுக்கு சவப்பெட்டி தேவையென்பது, மரத்தை வீணாக்கும் காரியம். ஒரு பார வண்டி தயாரிக்க அதைப் பயன்படுத்தலாம்.’’

‘‘எனக்கு சவப்பெட்டி வேண்டாம்’’ என்றான் ஜென். ‘‘நெருப்பில் என்னைத் தூக்கிப் போட்டால் போதும்.’’

‘‘ஆனால் நெருப்புக்கும் மரம் வேணுமே’’ என்றார் முதியவர். ‘‘வீண், உண்மையிலேயே வீண். மங்கோலியர்களாகிய நாங்கள் சிக்கனத்தில் புரட்சிக்காரர்கள். நாங்கள் இறந்துவிடும்போது, ஒரு பார வண்டியில் எங்களைத் தெற்கு நோக்கி எடுத்துச் சென்று, அங்கு உடல்களை எறிந்துவிடுவார்கள் ஓநாய்களுக்கு அடுத்த வேளை உணவு கிடைத்துவிடும்.’’

‘‘ஓநாய்கள் இறந்த உடலை சாப்பிடுவதன் மூலம் ஆன்மா டெஞ்ஞருக்குப் போகுமென்பதோடு, மரங்களையும் பாதுகாப் பதாகச் சொல்கிறீர்களா? ஆனால் இங்குதான் மரங்களேதும் இல்லையே.’’

‘‘மரங்களைப் பாதுகாப்பதை விடவும் முக்கியமானது, மாமிசம் சாப்பிடுபவர்களையே மாமிசமாக்குவது.’’

‘‘மாமிசம் சாப்பிடுபவர்களையே மாமிசமாக்குவதா?’’ ஜென்னுக்கு அந்தச் சொற்றொடர் புதிதாக இருந்தது. ‘‘அதற்கு என்ன அர்த்தம்?’’

‘‘மேய்ச்சல் நிலத்தவர்களாகிய நாங்கள், எங்கள் வாழ்நாள் முழுவதும் மாமிசம் சாப்பிடுகிறோம். அதற்காக நாங்கள் பல பிராணிகளைக் கொல்கிறோம். நாங்கள் இறந்த பிறகு, இந்த மேய்ச்சல் நிலத்துக்கு எங்கள் மாமிசத்தை அர்ப்பணிக்கிறோம். எங்களைப் பொறுத்தவரை, இதுவே நியாயமானது. நாங்கள் டெஞ்ஞருக்குப் போகும்போது, எங்கள் ஆன்மாக்களுக்கு அது நல்லதாகும்.’’

‘‘நீங்கள் சொல்வது சரிதான்’’ என்றான் ஜென். ‘‘அது நியாயமானதுதான். ஒருவேளை என்னை பீஜிங்கிற்குத் திருப்பி அனுப்புவதில் ஓநாய்கள் தோற்றுப்போனால், நான் சாகும்போது அவை என்னைத் தின்பதற்கு சம்மதிக்கிறேன். முழு ஓநாய்க் கூட்டமும், ஒரு உடலைப் பங்கிடும்போது, எரிப்பதை விடவும் சீக்கிரமாகவே முடிந்துவிடும்.’’

முதியவருக்கு இது மகிழ்ச்சியளித்தது என்றாலும், கவலையான பார்வை அவர் முகத்தை இருளச் செய்தது. ‘‘கடந்த காலங்களில் சீனர்கள் ஒருபோதும் ஓலோன்புலாக்குக்கு வந்ததில்லை. நூற்றி முப்பது அல்லது நூற்றி நாற்பது குடில்களிலும் ஏழு நூறு அல்லது எண்ணூறு மங்கோலியர்களே

குடியிருந்தனர். கலாசாரப் புரட்சியை அடுத்து மாணவர்களாகிய நீங்கள் நூறு பேர் பீஜிங்கிலிருந்து வந்தீர்கள். உங்களைத் தொடர்ந்து ராணுவ வீரர்களும் ராணுவ வண்டிகளும் அவற்றின் ஓட்டுனர்களும் வந்தனர். இப்போது அவர்கள் பெரிய கட்டிடங்களை எழுப்பியுள்ளனர். அவர்கள் ஓநாய்களை வெறுக்கிறார்கள். அவற்றின் தோல்கள் மட்டுமே அவர்களுக்குப் பிடித்திருக்கின்றன. கூடிய சீக்கிரம் தங்கள் துப்பாக்கிகளால் அவற்றைத் தீர்த்துக் கட்டி விடுவார்கள். அதன் பிறகு, அவற்றுக்கான இரையாக உன் உடலைக் கொடுக்க நீ விரும்பினாலும் அது நடக்காது.''

''கவலைப்படாதீர்கள்'' என்று ஜென் உத்வேகத்துடன் சொன்னான். Òஇனிவரும் நாட்களில் ஒரு பெரிய யுத்தம் வரும்போது, அணுகுண்டுகள் நம் எல்லோரையுமே, மக்களாகட்டும் ஓநாய்களாகட்டும், கொன்று குவித்துவிடும். யாரும் யாருக்கும இரையாக வேண்டி வராது.''

முதியவர், அவருடைய கையால் காற்றில் ஒரு வட்டம் போட்டார். ''அணு... அணுகுண்டு, என்ன அது?''

ஜென் சென் தன்னால் முடிந்தவரை அதை விளக்க முயற்சி செய்தான். ஒரு பயனுமில்லை. முதியவரால் அதைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

குதிரைகள் இறந்துபோன உறைபனி ஏரியின் வடக்கு மூலையை அவர்கள் நெருங்கியிருந்தார்கள். குதிரையின் கடிவாளத்தை இறுக்கிப் பிடித்தபடி பில்ஜி, பார வண்டியை அங்கு நிறுத்திவிட்டுக் காத்திருக்குமாறு பாயரிடம் சொன்னார். இரண்டு கண்ணிகளையும், சிறு மண்வெட்டியையும், குதிரை வறட்டி இருந்த பையையும் எடுத்துக்கொண்டு அவரும் ஜென்னும், இறந்துபோன குதிரைகள் புதைந்து கிடந்த இடத்துக்கு சவாரி செய்தார்கள். அங்கங்கே நின்று, அப்பகுதியை சோதனை செய்தார் முதியவர்.

''ஓநாய்கள் திரும்ப வருமா?'' ஜென் கேட்டான்.

''பெருங்கூட்டம் வராது.'' முதியவர் பதிலளித்தார். ''அவை பொறுமையாகக் காத்திருப்பதில் வல்லமை பெற்றவை.''

''அப்படியானால் இந்தத் தடங்கள் என்ன?'' தரையைச் சுட்டிக்காட்டி ஜென் கேட்டான்.

‘‘பெரும்பாலும் நரிகளுடையவை. அவற்றோடு ஒரு பெண் ஓநாயின் தடங்களும் இருக்கின்றன. பல பெண் நரிகள், தம் குட்டிகளோடு வந்து இங்கு தங்கி இருந்திருக்கின்றன.’’ அவர் ஒரு கணம் யோசித்துவிட்டு மேலும் பேசினார். ‘‘ஆண் தலைமை ஓநாய்களையும், கூட்டத்தின் சில பெரிய ஆண் ஓநாய்களையும் பிடித்துவிடலாமென நம்பியிருந்தேன். ஆனால் இவ்வளவு நரிகள் இதைச் சுற்றி இருந்திருக்கிறபோது, கொஞ்சம் சிரமம்தான்.’’

‘‘நாம் நம் நேரத்தை வீணடித்துவிட்டோமா?’’

‘‘அப்படியில்லை. நம்முடைய முக்கியமான வேலை, ஓநாய்க் கூட்டம் யோசிக்கும் வகையில் ஒரு தந்திரத்தைப் பிரயோகிப்பதுதான். நாம் பொறிகள் வைக்கப் போவதால், அவற்றுக்கு எதிரான சுற்றி வளைப்பு தாக்குதல் பற்றி நாம் பொருட்படுத்த வேண்டியதில்லை. இந்தக் குதிரைகளைத் தின்று முடிக்க அவை நிச்சயம் திரும்ப வரும். நாம் அவற்றுக்கு எதிர்பாராத ஆச்சரியம் அளிப்போம்.’’

‘‘இந்தப் பொறிகளில் ஒன்றில் ஒரு ஓநாய் மாட்டிக்கொள்ள வாய்ப்பிருக்கிறதா, அப்பா?’’

‘‘நிச்சயமாக இருக்கிறது. பெரிதாக மாட்டுகிறதா பார்க்கலாம். ஓநாய்களாக இருக்க வேண்டும். நரிகளாக இருக்கக்கூடாது.’’

இறந்த உடல்கள் கிடந்த ஓரிடத்துக்குப் பக்கத்தில் ஓரிடத்தைத் தேர்வு செய்வதற்கு முன்பாக, அந்தப் பகுதியை இருமுறை முதியவர் சுற்றி வந்தார். பின்னர், ஒன்றரை அடி அகலமும் இரண்டு இஞ்சு ஆழமும் உள்ள ஒரு வட்டமான குழியைத் தன் சிறு மண் வெட்டியால் அமைத்தார். பின்னர் அதன் நடுவில் ஒரு பள்ளத்தைத் தோண்டினார். அதனுள் ஒரு பொறியை மிக கவனமாக வைத்தார். பிறகு, அக்குழிமீது ஒரு துணி மடிப்பை விரித்தார்.

சற்றே பிசகினாலும் கை நசுங்கிவிடக்கூடிய மிகவும் ஆபத்தான, சிரமமான வேலையை முதியவர் செய்து முடித்ததை ஜென் மிகுந்த பதற்றத்துடன் கவனித்துக்கொண்டிருந்தான். பில்ஜி, சிரமத்துடன் மூச்சு விட்டார். அவர் வேர்வையில் நனைந்திருந்தார். சட்டைக் கையினால் வேர்வையைக் கவனமாகத் துடைத்துக்கொண்டார்; இறந்த குதிரை உடல்மீது அது பட்டு விடுவதை அவர் விரும்பவில்லை. ஜென் முதியவரோடு சேர்ந்து பொறி

வைப்பதற்கு முதல் முறையாக வந்திருப்பதால், அது எப்படி செயல்படுகிறதென்பதை அவனால் யூகிக்க முடிந்தது. ஒரு ஓநாய் துணி மடிப்பின்மீது கால் வைக்கும்போது, அதனுடைய எடை தாங்காமல் அது குழிக்குள் இறங்கும். அப்போது வளையத்திலிருந்து உலோகக் கம்பி வெளியேறும். அதன் சுருள் வளையங்கள் விலங்கின் காலைச் சுற்றி இறுக்கும். எலும்பை ஒடித்து, தசை நார்களைக் கிழித்துவிடும். ஓநாய்கள் பொறிகளுக்கு அஞ்சுவதில் ஆச்சரியமேதுமில்லை. பொறிகளின் உலோகச் சத்தத்துக்கு அவை பயம் கொள்ளாதிருந்தால், முதன்முதலாக அவன் ஓநாய்க் கூட்டத்தை எதிர்கொண்ட தருணத்தில் அவன் நிச்சயம் இறந்து போயிருப்பான்.

பில்ஜி, சாவகாசமாக மூச்சு விட்டபடி, ‘‘குதிரை வறட்டியைக் கொடு’’ என்றார். கோணிப் பையிலிருந்து வறண்ட குதிரைச் சாணத்தை எடுத்து சிறு உருண்டைகளாகச் சுற்றி, அவற்றைத் துணி மடிப்பின்மீது போட்டார். கடைசியாக, பொறியோடு பிணைக்கப்பட்டிருந்த சங்கிலியை, குதிரை எலும்புகளில் ஒன்றின்மீது மாட்டினார். பின் ஜென்னிடம் பனியால் அதை மூடும்படி கூறினார்.

மெல்லிய பனித் தூறல் தொடர்ந்து பெய்துகொண்டிருந்தது. ‘‘பொறி, எவ்வாறு நரிகளை விட்டுவிட்டு ஓநாய்களை மட்டும் பிடிக்கும்’’ என்று ஜென் கேட்டான். ‘‘நான் வழக்கத்தை விடவும் ஆழமாகப் பொறியை வைத்துள்ளேன். பொறியைச் செயல்பட வைக்கக்கூடிய அளவுக்கு நரிக்கு எடை கிடையாது’’ என்றார் பில்ஜி.

முதியவர் மீண்டும் அந்தப் பகுதியை சோதனையிட்டார். இரண்டாவது இடத்தைத் தேர்ந்தெடுத்ததும் ஜென்னிடம், ‘‘இம்முறை பொறியை நீ வை. நான் மேற்பார்வை செய்கிறேன்’’ என்றார்.

‘‘இவ்வளவு நெருக்கமாக ஏன்?’’

‘‘ஓநாய் தன் சொந்த உடம்பிடம்கூட தயவு காட்டுவதில்லை.

பொறியில் ஒரு கால் மாட்டிக்கொண்டுவிட்டால், அதைத் தன் பற்களால் கடித்தெறிந்துவிட்டு, மூன்று கால்களால் தப்பி ஓடிவிடும். முதல் பொறியில் ஒரு கால் மாட்டிக்கொண்டால், அதன் வலி காரணமாக ஓநாய் சுற்றிச் சுற்றி

வட்டமடிக்கும். அப்போது அதன் பின்னங்கால் அடுத்த பொறியில் சிக்கிக்கொள்ளும். ஒரு முன்னங் காலும் ஒரு பின்னங்காலும் சிக்கிக்கொண்டால், அது இரண்டையும் பற்களால் கடித்தெறிந்தாலும், அதனால் தப்பிக்க முடியாது.''

மனிதனுக்கும் ஓநாய்க்குமான சண்டையில் மேற்கொள்ளப் படும் ஈவிரக்கமற்ற தன்மையை அவன் உணர்ந்தபோது அவனுடைய மயிர் சிலிர்த்தது. இரு தரப்புமே கொடூரத்துக்கு எதிராகக் கொடூரத்தையும், தந்திரத்தை முறியடிப்பதற்கான தந்திரத்தையும் பயன்படுத்துகின்றன. அவன் பொறியை வைத்தபோது, அவனுடைய கைகள் நடுங்கின. ஓநாய்களின் மூர்க்கத்தை அப்போது அவன் வெறுத்தான். குதிரையின் சடலத்துக்குப் பக்கத்தில் பொறி கச்சிதமாக மறைத்து வைக்கப்பட்டிருந்தது. அங்கு, குதிரை மாமிசம், குதிரைக் கொழுப்பு மற்றும் குதிரைச் சாணத்தின் வாடை மட்டுமே காற்றில் மிதந்து கொண்டிருந்தது; மனித வாடையோ உலோக வாசனையோ இல்லை. மிகவும் தந்திரமிக்க ஓநாய்கூட இந்தப் பொறியில் மாட்டி, காலை ஒடித்துக்கொண்டு அவஸ்தைப்படுமென ஜென் நினைத்தான். எல்லா ஹேன் ராணுவப் படைகளும் சூவு, க்யுன், ஹேன், டாங், சோங், மிங் ஆகிய எல்லாவற்றின் ராணுவப் படைகளும், மேய்ச்சல் நிலத்தின் உள்ளே ஆழமாக நுழைந்து, மிக நேர்த்தியாகக் கையாளப்பட்ட பொறிகளில் சிக்கி எவ்வாறு சின்னாபின்னமாகின என்பதை அவன் நினைவு கூர்ந்தான். அந்த நாட்களில் மேம்பட்ட நாகரிகங் களை அழித்தொழிக்க, குதிரை வீரர்கள் அதிகப்படியான எண்ணிக்கையை நம்பியிருக்கவில்லை. தங்களுடைய பிராந்தியத்தைப் பாதுகாக்க, ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்ட தீரத்தையும் ஞானத்தையுமே, மேய்ச்சல் நிலத்தின் உண்மையான பாதுகாவலர்கள் கடைப்பிடித்தனர். முதியவர் பேசியதெல்லாம் உண்மைதான் என்றபோதிலும் ஜென்னினால் தன் கைகளை நடுங்காமல் பார்த்துக்கொள்ள முடியவில்லை.

பில்ஜி ஆத்மார்த்தமாகச் சிரித்தார். ''உன் இதயம் கொஞ்சம் மென்மையானதுதான். எனக்குப் புரிகிறது. மேய்ச்சல் நிலமென்பது ஒரு யுத்தகளமென்பதை நீ மறந்துவிட்டாயா? ரத்தத்துக்குப் பயப்படுபவன், தன்னை ஒரு போர்வீரனாகக் கருத முடியுமா? ஒட்டுமொத்தக் குதிரைக₵கூட்டத்தையே அந்த ஓநாய்கள் அழித்து விட்டது உன்னை பாதிக்கவில்லையா? கொடூரமான

வழிமுறைகளை நாம் கையாளாவிட்டால், நாம் அவற்றை எப்படி ஜெயிக்க முடியும்?''

முதியவரின் வார்த்தைகளில் வெளிப்பட்ட உண்மையை ஏற்றுக்கொண்ட ஜென், ஆழ்ந்த பெருமூச்சு விட்டான். அவனிடம் ஊடாடிய கலவையான உணர்வுகளையும் கடந்து, பனி மற்றும் பனிக்கட்டிகளில் ஓரிடத்தைத் தோண்டினான். அந்த உட்குழிவில் அவன் பொறியை வைத்தபோது, மறுபடியும் அவன் கைகள் நடுங்கின. ஆனால் இப்போது, தன்னுடைய இந்த முதல் முயற்சியில், அவன் அதைக் கவனமாகச் செய்யாவிட்டால் என்ன நடக்கும் என்ற பயத்தால் அது ஏற்பட்டது. அவனுக்குப் பக்கத்திலிருந்த முதியவர், எப்படி வைக்க வேண்டுமென்பதற்கான வழிமுறைகளைச் சொல்லிக்கொண்டிருந்தார். ஏதும் பிசகினால் அது அவன் கையைப் பதம் பார்த்துவிடும். அவன் உடல் முழுவதும் மின்சாரம் பாய்ந்துகொண்டிருப்பதைப் போலிருந்தது. முதியவர் பக்கத்தி லிருந்தபோதும் அதனால் ஒரு பிரயோஜனமும் இல்லாமலிருந்தது.

கைகள் நடுங்குவதை ஒருமாதிரி கட்டுப்படுத்தினான். முதல் பொறியை எவ்வித பிரச்சனையும் இல்லாமல் வைத்துவிட்டான். அவன் தன்னுடைய நெற்றியைத் துடைத்துக்கொண்டபோது, அவனை விடவும் பில்ஜிக்கு அதிகமாக வேர்த்திருந்ததைக் கவனித்தான்.

நிம்மதிப் பெருமூச்சு விட்டவராக பில்ஜி, ''அடுத்ததை நீயாகவே வை. நீ தயாராகிவிட்டாய் என்றே நான் நினைக்கிறேன்'' என்றார்.

ஜென் தலையசைத்தவாறே, பார வண்டியை நோக்கிச் சென்று, அதிலிருந்து மேலும் இரண்டு பொறிகளை எடுத்துக்கொண்டு வந்தான். இரண்டாவது குதிரை சடலத்துக்கருகில் ஓரிடத்தைத் தேர்வு செய்து, மூன்றாவது பொறியை அவன் கவனமாக வைத்தான். அதன் பிறகு, கடைசியாக மிச்சமிருந்த நான்கு பொறிகளை, ஆளுக்கு இரண்டாக எடுத்துக்கொண்டு, தனித் தனியாக அவர்கள் அவற்றை வைத்தனர். ஜென்னுக்கு உதவும்படி பாயரிடம் தெரிவித்தார் முதியவர்.

சூரியன் மறைந்ததை அடுத்து, வானம் இருள் மூட்டத்தோடு காணப்பட்டது. ஜென் செய்து முடித்திருந்த வேலையைப் பரிசோதித்துவிட்டு முதியவர்

புன்னகைத்தபடியே கூறினார்: ‘‘நீ அவற்றை நன்றாக மறைத்து வைத்திருக்கிறாய். நான் ஒரு ஓநாயாக இருந்திருந்தால், நிச்சயம் உன்னிடம் மாட்டியிருப்பேன். சரி, நேரமாகிக்கொண்டிருக்கிறது. நாம் இப்போது என்ன செய்ய வேண்டும்.’’

‘‘நல்லது, நானே சொல்கிறேன்’’ என்றான் ஜென். ‘‘ஒரு துடைப்பத்தைக் கொண்டு நம் காலடித் தடங்களை அழிக்க வேண்டும். நாம் இங்கு எதையும் விட்டுச் செல்லவில்லை என்பதை உறுதி செய்துகொள்ளும் பொருட்டு, நாம் கொண்டுவந்த கருவிகளையெல்லாம் கணக்குப் பார்க்க வேண்டும்.’’

‘‘தந்திரத்தைக் கொஞ்சம் கற்றுக்கொண்டு விட்டாய்’’ என முதியவர், அவன் சொன்னதை ஆமோதிக்கும் வகையில் கூறினார்.

அவர்கள், பார வண்டி இருக்கும் இடம் வரை, தங்கள் வேலையை சரி பார்த்தபடியே கூட்டத் தொடங்கினார்கள். ‘‘இந்தப் பொறிகள் மூலம் நாம் எத்தனை ஓநாய்களைப் பிடிப்போம் என்று நினைக்கிறீர்கள்?’’ என்று கருவிகளையெல்லாம் எடுத்து வைத்துவிட்டு ஜென் கேட்டான்.

‘‘வேட்டையாடும்போது, ஒருபோதும் எண்ணிக்கை பற்றிக்கேள்வி கேட்காதே. அப்படிக் கேட்டால் நீ ஒன்றைக்கூடப் பிடிக்க முடியாது. மக்கள், தங்களுடைய வேலைகளை முடித்துவிட்டு, மற்றதை டெஞ்ஞரின் பொறுப்பில் விட்டுவிடுவார்கள்.’’

அவர்கள் குதிரைகள்மீது ஏறி அமர்ந்து, பார வண்டியைத் தங்களுக்குப் பின்னால் இழுத்துக்கொண்டு புறப்பட்டனர்.

‘‘நாம் எப்படி செய்து முடித்திருக்கிறோம் என்பதை அறிய நாளை காலை நாம் இங்கு வருவோமா?’’ என்று ஜென் கேட்டான்.

‘‘நாம் திரும்ப இங்கு வர வேண்டியதில்லை. நமக்கேதும் மாட்டினாலும் சரி, இல்லையென்றாலும் சரி. ஒரு வேளை ஒன்று மாட்டியிருந்தாலும், என்ன நடந்துகொண்டிருக்கிறது என்பதை அறிய ஓநாய்களுக்கு நாம் நிறைய கால அவகாசம் கொடுக்க வேண்டும். இரையை எடுத்துக்கொள்ள எவரும் வரவில்லை என்பது அவற்றுக்கு சந்தேகத்தை ஏற்படுத்தும். அடுத்து என்ன செய்வதென்பதைத் தீர்மானிக்க குதிரைகள் இறந்து கிடக்கும் இடத்தை அவை சுற்றிச் சூழ்ந்துகொள்ளும். சில ஓநாய்களைப் பொறி வைத்துப்

பிடிப்பதில்லை நமக்கு இடப்பட்டிருக்கும் பணி. ஓநாய்க் கூட்டத்தை இங்கிருந்து வெளியேற்றுவதுதான் நம் வேலை. நாளை நீ இங்கு வரவேண்டிய அவசியமில்லை. தூரத்திலிருந்த படியே என்ன நடக்கிறதென்பதை நான் கண்காணிப்பேன்.''

நல்ல மனநிலையோடு அவர்கள் வீடு வந்தடைந்தனர். பிறந்த ஓநாய்க் குட்டிகளைப் பற்றியும், அவற்றில் ஒன்றைத் தான் எப்படி அடைவது என்று பில்ஜியிடம் கேட்பது பற்றியும் ஜென் யோசித்துக்கொண்டிருந்தான். பிறந்த குட்டியை வேட்டையாடிப் பிடிப்பதென்பது மிகவும் சிரமமான, அபாயகரமான ஒன்றென்பதையும், அதற்கு விசேஷமான திறன் வேண்டுமென்பதையும் அவன் அறிந் திருந்தான். ஓநாய்க் கூட்டங்களின் அபரிமிதமான வளர்ச்சியைக் கட்டுப்படுத்துவதற்கான மிக முக்கியமான வழிமுறைகளில் அதுவும் ஒன்று. ஒரு குகையில் இருக்கும் குட்டிகளை அழிப்பதென்பது, ஒரு ஓநாய்க் கூட்டம் பற்றிய கவலையை இல்லாமல் ஆக்கும். ஆனால், ஓநாய்கள் தங்கள் புத்திக்கூர்மையின் முழு வீர்யத்தையும், மூர்க்கமான உபாயங்களையும் தங்களுடைய குட்டிகளின் பாதுகாப்புக்காகப் பயன்படுத்துபவை. ஓநாய்க் குட்டிகளைத் திருடுவதில் மேற்கொண்ட சாகசங்கள் பற்றியும், அதிர்ஷ்டவசமாகத் தப்பியது பற்றியுமான கதைகளை ஜென் கேட்டிருக்கிறான். எனினும் அந்த சவாலை எதிர்கொள்ள, அவன் தன்னை மனதளவில் தயார்படுத்திக் கொண்டிருந்தான். நூற்றுக்கும் மேற்பட்ட மாணவர்கள், மேய்ச்சல் நிலத்துக்கு வந்து சேர்ந்து இரண்டு இளவேனிற் காலங்கள் கடந்துவிட்ட போதிலும், இதுவரை எவரும் தனியாளாக ஓநாய்க் குட்டிகளைத் திருடியதில்லை. இவன்தான் அவ்வகையில் முதலாவது ஆளாக இருப்பதற்கு எவ்வித உத்திரவாதமும் இல்லை என்பதை ஜென் அறிவான். எனினும், அதை எப்படி மேற்கொள்வது என்பதை அறிய பில்ஜியோடு சேர்ந்து அடிக்கடி செல்ல வேண்டுமெனத் திட்டமிட்டிருந்தான். ஆனால் ஓநாய்கள், குதிரை மந்தையைக் கொன்ற பிறகு, குட்டிகளுக்காகச் செலவிட பில்ஜிக்கு நேரமில்லாமல் போய்விட்டது. அதனால் இப்போது ஜென் செய்யக் கூடியதெல்லாம் அவருடைய அனுபவங்களைக் கேட்டறிந்து கொள்வதுதான்.

''அப்பா, நான் முந்தி ஒருநாள் ஆடு மேய்த்துக் கொண்டிருந்தபோது, என் கண்ணெதிரிலேயே என்னுடைய செம்மறிக் குட்டியொன்றை ஒரு பெண் ஓநாய்

கவ்விக்கொண்டு சென்றுவிட்டது. அது ‘கரும்பாறை மலை’யை நோக்கிச் சென்றதைப் பார்த்தேன். அங்கு அதற்கு ஒரு குகை இருக்குமென்று நினைக்கிறேன். நாளை நான் அங்கு போகலாமென்று இருக்கிறேன். நீங்களும் என்னோடு வர முடியுமா...'' என்று கேட்டான் ஜென்.

‘‘நாளை என்னால் வர முடியாது. இதைச் சுற்றிலும் செய்ய வேண்டிய வேலைகள் நிறைய இருக்கின்றன. அது கரும்பாறை மலைக்குச் சென்றதாகத்தானே நீ கூறினாய்?'' என்றார் பில்ஜி. ‘‘ஆமாம்.'' முதியவர் தன் தாடியைத் தடவினார். ‘‘அதை நீ பின் தொடர்ந்து சென்றாயா?''

‘‘இல்லை. அது மிக விரைவாகச் சென்றது. அதைப் பின்தொடர்ந்து செல்ல எனக்கு நேரமில்லை.''

‘‘அது நல்லதுதான். நீ பின்தொடர்ந்து சென்றிருந்தால் அது உனக்குக் கடுமையாகப் போக்கு காட்டியிருக்கும். அவற்றை யாரேனும் துரத்தி வந்தால், அவை குகைகளுக்குத் திரும்பிச் செல்வ தில்லை.'' முதியவர் ஒரு கணம் அமைதியாக இருந்தார். ‘‘அந்தப் பெண் ஓநாய் சாமர்த்தியமானதுதான். கடந்த இளவேனிற் காலத்தின்போது, உற்பத்திக் குழுவினர் அங்கு, குட்டிகளுள்ள மூன்று குகைகளைக் கண்டனர்; அதனால் இந்த வருசம் அங்கு யாரும் போக மாட்டார்கள். தன்னுடைய குட்டிகளை ஈன்றெடுக்க, அங்கு ஒரு ஓநாய் சென்றிருப்பது எனக்கு பிரமிப்பாக இருக்கிறது. நாளை நீ போ. ஆனால் கூடவே மேலும் சிலரையும், நிறைய நாய்களையும் அழைத்துக்கொண்டு செல். தைரியமும் அனுபவமும் மிக்க மந்தைக்காரர்களாகப் பார்த்துக் கூட்டிப் போ. நீயும் யாங்குமாகச் சேர்ந்து இதை மேற்கொள்வதை நான் விரும்பவில்லை. அது மிகவும் அபாயகரமானது.''

‘‘அதிலுள்ள மிகக் கடினமான சவால் எது?'' ஜென் கேட்டான்.

‘‘கவலைப்படும் வகையில் அதில் நிறைய விசயங்கள் இருக்கின்றன. ஆனால் மிகவும் கடினமானதென்பது குகையைக் கண்டுபிடிப்பதுதான். அதை எப்படிக் கண்டுபிடிப்பதென்று நான் உனக்குக் கூறுகிறேன். விடியலுக்கு முன்பாகவே எழுந்து சென்று, மலைகளின் உச்சியில் ஓரிடத்தைக் கண்டுபிடிக்க வேண்டும். அங்கேயே சூரியன் எழும்வரை படுத்திருக்க வேண்டும். பிறகு, தொலைநோக்கிகள் மூலம் அப்பகுதியை அலச வேண்டும். இரவு முழுவதும்

வேட்டையாடிய பிறகு, தன் குட்டிகளுக்கு உணவூட்ட ஓநாய் திரும்பி வரும். அது எங்கு போகிறது என்று உன்னால் பார்க்க முடிந்தால், அங்குதான் அதன் குகை இருக்கும். சில திறமையான நாய்களோடு அப்பகுதியை ஒரு வட்டமடித்துத் தேடினால் உன்னால் அதனிடத்தைக் கண்டுபிடித்துவிட முடியும். அதன்பிறகு, குட்டியைப் பிடிப்பதிலுள்ள கடும் சிக்கலை நீ எதிர்கொள்வாய். அதாவது, கோபம் கொண்ட தாய் ஓநாயை சந்திக்க வேண்டியிருக்கும். மிகவும் கவனமாய் இரு.'' ஒரு கணம் அவர் கண்கள் மூடின. ''அந்தக் குதிரைகளை மட்டும் இழந்திருக்கா விட்டால், இதைச் செய்ய உன்னை நான் விடமாட்டேன். பொது வாக, ஓலோன்புலாக்கிலுள்ள முதியவர்கள், ஓநாய்க்குட்டிகளைத் திருடுவதற்கு மிகவும் தயங்குவார்கள்.''

மேற்கொண்டு கேள்விகள் கேட்க ஜென்னுக்குத் துணிச்சல் இல்லை. பெரிய அளவில் ஓநாய்க் குகைகளில் வேட்டையாட எடுக்கப்பட்ட முடிவு குறித்து பில்ஜி மிகவும் கோபம் அடைந் திருந்தார். இச்சமயத்தில், இந்த விசயம் குறித்து மேலும் வற்புறுத்திக் கேட்டால், அவன் போவதையே அவர் தடுத்துவிடக் கூடுமென அஞ்சினான். எனினும் ஓநாய்க் குட்டியைத் திருடப் போதுமான அறிவு தேவை. அவனுடைய நோக்கம் ஒரு ஓநாய்க் குட்டியை வளர்ப்பதுதானே தவிர, கொல்வதல்ல என்பதால் அவன் விரைவாகச் செயல்பட்டாக வேண்டும். குட்டிகள் பால்குடியை மறக்குமளவு வளர்ந்துவிடுவதற்கு முன்பாக, அவற்றின் கண்கள் திறப்பதற்கு முன்பாக அவன் ஒரு குட்டியை எடுத்துவிட வேண்டும். மிகச் சிறந்த ஓநாய் வேட்டைக்காரனான பட்டுவிடம் இருந்து விசயங்களை அறிந்துகொள்ள அவன் திட்டமிட்டான். குதிரைகளை இழந்ததில் இன்னமும் பட்டு கோபத்திலிருப்பதால், அவன் நிச்சயம் ஜென்னிடம் தன் அனுபவங்களைப் பகிர்ந்துகொள்வான்.

முதியவரின் குடிலை அவர்கள் வந்தடைந்தபோது, இரவாகி விட்டிருந்தது. உள்ளே, கம்பளம் உரிய இடத்தைத் திரும்பவும் அடைந்திருந்தது. மூன்று அரிக்கன் விளக்குகள் அந்த விசாலமான குடிலில் எரிந்துகொண்டிருந்தன. மத்தியிலிருந்த தாழ்வான மேசையின்மீது சில தட்டுகளில் ரத்தப் பொறியலும், ஆட்டுக்குடலும், கொழுத்த இறைச்சித் துண்டுகளும் வைக்கப் பட்டிருந்தன. அவற்றிலிருந்து மணக்க மணக்க ஆவி வெளியேறிக்கொண்டிருந்தது. மூன்று

கடின உழைப்பாளிகளின் வயிறுகளும் உறுமத் தொடங்கின. ஜென் மேசை முன் அமர்ந்தான். கஸ்மாய், அவனுக்குப் பிடித்தமான ஆட்டுக்குடலை ஒரு தட்டில் வைத்துக் கொடுத்தாள். பிறகு, முதியவருக்குப் பிடித்த ஆட்டு ஈரலை ஒரு தட்டில் போட்டு அவர் முன் வைத்தாள். அதன்பிறகு, ஒரு சிறு குவளையில், பீஜிங் மொச்சையும் மேய்ச்சல் நிலக் காளானும் போட்டுச் செய்த குழம்பை ஊற்றிக் கொடுத்தாள். இறைச்சித் துண்டமொன்றை வெட்டி, அக்குழம்பில் தொட்டு ஜென் சாப்பிட்டான். அது மிகவும் ருசியாக இருந்ததில், ஓநாய்க்குட்டி பற்றிக்கூட அவனுக்கு மறந்துபோனது. அதை அவர்கள் கொழுத்த ஆட்டுக் குடல் என்று கூறினாலும், மேய்ச்சல் நிலத்தில் கிடைக்கக் கூடிய அந்த அற்புதமான இறைச்சியில் கொழுப்பேதும் கிடையாது.

பொதுவாக ஒதுக்கிவிடக்கூடிய ஆட்டின் பாகங்களிலிருந்து – சிறு குடல், நாளங்கள், சவ்வுகள் போன்றவை — அது செய்யப்பட்ட போதிலும் அது எண்ணெய்ப் பிசுக்கு இல்லாமல், மொறுமொறுவென்று இருக்கும். மங்கோலிய சமையலில் இது ஒரு மிக முக்கிய அம்சம்.

‘‘ஒரு ஆட்டை சமைக்கும்போது, மங்கோலியர்களாகிய நீங்கள் அதன் எந்தவொன்றையும் வீணாக்குவதில்லை. சவ்வுகளைக் கூட தூக்கியெறிவதில்லை. அருமையான உணவாக மாற்றிவிடுகிறீர்கள்’’ என்றான் ஜென்.

‘‘பசித்த ஓநாய்கள் ஆட்டை சாப்பிடும்போது எந்த ஒன்றையும் விட்டு வைப்பதில்லை’’ என்று தலையாட்டி ஆமோதித்தபடியே சொன்னார் முதியவர்.

‘‘அப்படியானால், ஒரு ஆட்டை எப்படி சாப்பிட வேண்டுமென்று ஓநாய்களிடமிருந்துதான் தெரிந்து கொண்டிருப்பீர்கள்’’ என்றான் ஜென்.

அவர்கள் சிரித்தார்கள். ‘‘ஆம், அது அப்படித்தான்’’ என்று ஆமோதித்தார்கள். ஜென் நன்றாகச் சாப்பிட்டான்.

கஸ்மாய் சந்தோஷமாய் சிரித்தாள். அவன் மேற்கொண்டு சாப்பிடத் தயங்கினான். பில்ஜியும் அவருடைய குடும்பத்தாரும் இந்தக் குறிப்பிட்ட உணவை எவ்வளவு விரும்பிச் சாப்பிடுவார் களென்று அவனுக்குத் தெரியும். ஆனால், அவன் ஏற்கெனவே பாதியைச் சாப்பிட்டு விட்டிருந்தான். ரத்தப் பொறியலிலிருந்து ஒரு துண்டும், தன்னுடைய கத்தியின் மூலம் இன்னொரு

நீண்ட குடலும் எடுத்துகொண்டு கஸ்மாய் வந்தாள். ''நீ அவசரமாகப் போகவேண்டியதில்லை என்று எனக்குத் தெரியும். அதனால் இரண்டு நீண்ட குடல்கள் சமைத்திருக்கிறேன்'' என்று புன்னகையோடு கஸ்மாய் கூறினாள். ''ஒன்று, முழுவதுமாய் உனக்கு. நீ ஒரு ஓநாயைப் போல் எதையும் மிச்சம் வைக்காமல் சாப்பிட வேண்டுமென எதிர்பார்க்கிறேன்.'' மேசையைச் சுற்றியிருந்த எல்லோரும் சிரித்தார்கள். பாயர் எழுந்து சென்று இரண்டாவதை எடுத்துக்கொண்டான்.

கஸ்மாயோடு எவ்வித உறவு கொண்டிருப்பது என்று இந்த இரண்டு ஆண்டுகளில் ஜென்னால் தீர்மானிக்க முடிந்ததில்லை. அண்ணி எனக் கொள்வது பொருத்தமாகத் தோன்றும். சமயங்களில் அவள் தன்னுடைய மூத்த சகோதரி என்பது போலிருக்கும். வேறு சில சமயங்களில் அன்பான ஒரு அத்தை போலத் தெரிவாள். மேய்ச்சல் நிலத்தைப் போல அவள் குணம், விசாலமான இதயமும் மாசற்ற மனமும் கொண்டது.

முழுநீளக் குடலையும், பாதிக்குவளை வெண்ணெய்த் தேனீரோடு சேர்த்து ஜென் சாப்பிட்டு முடித்திருந்தான். ''ஓநாயின் வாலைப் பிடிக்கவோ, ஓநாய்க் குகைக்குள் ஊர்ந்து செல்லவோ, ஒரு முரட்டுக் குதிரையின்மீது சவாரி செய்யவோ பாயர் பயப்படுவதில்லை. அவனுக்கு ஏதாவது ஆகிவிடுமென்று உங்களுக்குப் பயமில்லையா?'' என்று ஜென் கேட்டான்.

''மங்கோலியர்களாகிய எங்களுக்கு இதெல்லாம் சாதாரணம்.'' புன்னகையோடு கஸ்மாய் சொன்னாள். ''பட்டு சிறுவனாக இருந்தபோது, பாயரை விடவும் துணிச்சல் மிக்கவனாக இருந்தான். பாயர் ஓநாய் குகைக்குள் ஊர்ந்து சென்றபோது, தாய் ஓநாய் அங்கில்லை. அதனால் அவனுக்கு அது சுலபமாக இருந்தது. ஆனால் பட்டு குகைக்குள் நுழைந்து சென்றபோது, தாய் ஓநாய் அங்கிருந்தது. எனினும் அதை வெளியில் இழுத்துவர அவனுக்குத் துணிச்சல் இருந்தது.''

இந்தத் தகவல்களைக் கேட்டு ஆச்சரியமடைந்த ஜென், பட்டுவிடம், ''நீ ஏன் இதை ஒருபோதும் எனக்குச் சொல்லவில்லை. இப்போது அதை நான் விபரமாகக் கேட்க விரும்புகிறேன்'' என்றான்.

ஒரு டம்ளரில் மதுவை ஊற்றிக் குடித்தவாறே பட்டு சொல்லத் தொடங்கினான். ‘‘அப்போது எனக்கு பதின்மூன்று வயது. அப்பாவும் சிலரும் சேர்ந்து நீண்ட தேடுதலுக்குப் பிறகு ஒரு ஓநாய்க் குகையைக் கண்டுபிடித்தார்கள். அது மிகப் பெரியதாகவும் மிக ஆழமானதாகவும் இருந்தது. உள்ளே செல்வதற்குப் போதுமான வழி இல்லை. உள்ளே தாய் இருக்கிறதா என்பதை அறிய, அப்பா புகை போட்டார். எல்லாப் புகையும் நீங்கிய பிறகும், எந்த ஓநாயும் வெளியில் வரவில்லை. அதனால் நான் ஒரு சாக்குப் பையையும் சில தீக்குச்சிகளையும் எடுத்துக்கொண்டு, உள்ளே ஊர்ந்து சென்றேன். நான் உள்ளே நுழைந்ததுமே, நான் ஓநாயின் கண்களைப் பார்த்தேன். இரண்டடி தூரம்கூட இருக்காது. நான் கிட்டத்தட்ட என் காற்சட்டையில் சிறுநீர் கழித்துவிட்டேன். நான் ஒரு குச்சியைப் பற்ற வைத்தேன். அது பயந்துவிட்டதைப் பார்த்தேன். பயந்துபோன ஒரு நாயைப் போல, அதனுடைய வால் இரண்டு கால்களுக் கிடையில் இருப்பதைப் பார்த்தேன். நகர தைரியமின்றி நான் அப்படியே படுத்துக்கொண்டேன். ஆனால், நெருப்பு அணைந்ததும், தாய் ஓநாய் பாயத் தயாரானது. பின்னோக்கி

வெளியேற எனக்கு நேரமில்லை. ஆனால் அது என்மீது பாயாமல், என்னைத் தாண்டிக் குகையை விட்டு வெளியேற முயற்சிப்பதறிந்து ஆச்சரியப்பட்டேன். ஆனால் வெளியில் இருப்பவர்கள் இதை எதிர்பார்த்திருக்க மாட்டார்கள் என்பதால், ஓநாய் அப்பாவை நோக்கிச் செல்வதை நான் விரும்பவில்லை. அதனால் நான் தைரியத்தை வரவழைத்துக்கொண்டு, அதன் எதிரில் வழியை மறித்துக்கொண்டு நின்றேன். அதன் தலையைக் குகை முகட்டுக்குத் தள்ளினேன். அப்போது அதனால் வெளியேற முடியாது. அது வெறிபிடித்ததுபோல என்னைப் பிறாண்டியது. சட்டையைக் கிழித்தது. ஆனால் நானா அதுவா எனப் பார்த்துவிடுவது என நான் இருந்தேன். நான் நிமிர்ந்து உட்கார்ந்துகொண்டு, என் தலையால் அதன் தொண்டையையும் தலையையும் முகட்டோடு சேர்த்து அழுத்தியதால் அதனால் கடிக்க முடியவில்லை. அப்படியே அதன் முன்னங்கால்களையும் ஒரு வழியாக இழுத்துப் பிடித்துக் கொண்டேன். ஆக, என்னைக் கடிக்கவோ, பிறாண்டவோ அதனால் முடியவில்லை. அதே சமயம் நானும் அந்நிலையிலிருந்து விலகவோ நகரவோ

முடியாதபடி மாட்டிக்கொண்டேன். மேலும், என் பலத்தையும் நான் இழந்துகொண்டிருந்தேன்.’’

யாருக்கோ நடந்ததுபோல, பட்டு தன் அனுபவத்தை விவரித்துக்கொண்டிருந்தான். ‘‘இதற்கிடையே, நான் ஏன் இன்னும் வராமலிருக்கிறேன் என வெளியில் இருந்தவர்கள் யோசித்துக் கொண்டிருந்திருக்கிறார்கள். ஏதோ தவறு நடந்துவிட்டிருக்கிறது என்று நினைத்த அப்பா ஊர்ந்து உள்ளே வந்து ஒரு குச்சியைப் பற்ற வைத்தார். அங்கு, நான் என் தலையால் முட்டுக்கொடுத்து ஓநாயை முகட்டோடு சேர்த்து அழுத்தி வைத்துக்கொண்டிருப்பதைப் பார்த்தார். அப்படியே இரு, நகர வேண்டாம் என்று சொல்லியபடியே, தன் கைகளால் என் இடுப்பைச் சுற்றிப் பிடித்து, குகை வாசல் முனை வரை பின்னோக்கி இழுத்தார். என்னோடு சேர்ந்து, என் தலையால் முட்டுக் கொடுத்திருந்த ஓநாய்த் தலையும், என் கைகளால் பற்றியிருந்த ஓநாய்க் கால்களும் இழுபட்டு வந்தன. வெளியில் இருந்தவர்களிடம், அவருடைய கால்களைப் பற்றி இழுக்கும்படி உரக்கக் கூவினார். அவருடைய உடலில் பாதி வெளியில் வரும்வரை அவர்களுக்கு ஏதும் புரியவில்லை. அவர்கள் அங்கு கத்திகளோடும் தடிகளோடும் இருந்தனர். நாங்கள் குகை வாசலுக்கு ஓநாயோடு வந்தவுடனேயே, அதனுடைய வாயில் ஒருவர் கத்தியால் குத்தி மேலே நிறுத்தினார்; மற்றவர்கள் ஓடிவந்து அதை அடித்துக் கொன்றனர். நான் மறுபடியும் பலமடைந்து, குகைக்குள்ளே ஊர்ந்து சென்றேன். போகப் போக அது குறுகிக்கொண்டே வந்தது. பிறகு, அது ஒரு அறைக்கு இட்டுச் சென்றது. அங்கு, பிறந்த குட்டிகள் ஒரு ஆட்டுத் தோலின்மீது சுருண்டு கிடந்தன. சுற்றிலும் மயிர்கள் குவிந்து கிடந்தன. மொத்தம் ஒன்பதுகுட்டிகள் உயிரோடு இருந்தன. அந்த அறைக்குள் நுழைவதற்கான முகப்பின் முன்பிருந்த அழுக்கையெல்லாம் நீக்கிவிட்டு, அதற்குள் நுழைந்து, குட்டிகளைப் பிடித்து சாக்குப் பைக்குள் போட்டுக்கொண்டு வெளியில் வந்தேன்.’’

கேட்டுக்கொண்டிருந்த ஜென் திகைத்துப்போயிருந்தான். அந்தக் குடும்பத்தாரும் இந்தக் கதையை ரொம்ப நாளாய் கேட்டிருக்கவில்லை என்பதால், அவர்களும் பதற்றத்தோடு காணப்பட்டனர். ஒரு குகையிலிருந்து குட்டிகளை எடுத்தது பற்றி மற்றவர்கள் இதுவரை சொன்னவற்றைப் போலில்லாமல் பட்டுவின் கதை

ஜென்னுக்கு வித்தியாசமாக இருந்தது. ‘‘ஒரு ஓநாய், அதன் குட்டிகளைக் காப்பாற்றுவதற்காக சாகும்வரை போராடும் என்று சொல்வார்களே. பின் இது ஏன் இப்படி?’’ என்று ஜென் கேட்டான்.

‘‘உண்மையில், ஓநாய்கள் இந்த மக்களைப் பார்த்துப் பயப்படும். ஏனென்றால், அவற்றைக் கொன்று தின்னும் விலங்குகள் நாங்கள் மட்டும்தான். அது ஏற்கெனவே புகை மூட்டத்தால் பாதிக்கப்பட்டிருந்தது. மேலும், பற்ற வைத்த நெருப்புக் குச்சியோடு ஒருவன் உள்ளே வரும்போது அது பயப்படாமல் வேறென்ன செய்ய முடியும்? அதற்கு இரண்டு வயதுக்கு மேல் இருக்காது என்பது அதைப் பார்த்தபோது எனக்குத் தெரிந்தது. மேலும், அதுதான் அதன் முதல் பிரசவம். அது வருத்தத்துக்குரிய நிகழ்வுதான்’’ என்று முதியவர் சொன்னார்.

கஸ்மாயின் முகத்தில் புன்னகை இல்லை. கண்ணீர் தேங்கி அவள் கண்கள் மின்னின.

‘‘ஒரு குட்டியை எடுப்பதற்காக, நாளை ஜென் சென் மலைகளுக்குச் செல்கிறார். நானும் அவருடன் செல்லலாமென்று இருக்கிறேன்’’ என்றான் பாயர். ‘‘அவரும் பிறரும் குகைக்குள் ஊர்ந்து செல்ல முடியாத அளவு பெரியவர்கள். இன்று இரவு அவர்களுடைய குடிலில் நான் தங்கியிருந்து, காலையில் முதல் வேலையாக அவர்களோடு போகப் போகிறேன்.’’

‘‘சரி. உன் விருப்பப்படியே செய். ஆனால் கவனமாக இரு’’ என்றாள் கஸ்மாய்.

‘‘இல்லை, வேண்டாம். ஏதேனும் நடந்துவிடலாம். அவன் உங்களுடைய ஒரே மகன்’’ என்றான் ஜென்.

‘‘இந்த இளவேனிற் காலத்தில் எங்கள் குழுவினர் இதுவரை ஒரு குகையைத்தான் வேட்டையாடி இருக்கிறோம். இன்னும் மூன்று குகைகளுக்குச் செல்ல நாங்கள் அவர்களுக்குக் கடமைப்பட்டிருக்கிறோம். இன்னொரு வேட்டையாவது செய்து கொடுக்கா விட்டால், பாவோ சுங்காய் எங்களைத் தண்டிப்பார்’’ என்றாள் கஸ்மாய்.

‘‘எனக்கு அதுபற்றிக் கவலையில்லை. அவனை என்னோடு கூட்டிச் செல்வதற்குப் பதிலாக நான் போகாமலே இருப்பேன்’’ என்று ஜென்

திட்டவட்டமாகச் சொன்னான்.

முதியவர் பேரனைத் தன் பக்கத்தில் இழுத்து வைத்துக்கொண்டார். ‘‘நீ வீட்டிலேயே இரு, பாயர். நான் ஒன்று அல்லது இரண்டு பெரிய ஓநாய்களைப் பிடிக்கப் போகிறேன். நாம் தர வேண்டிய குட்டிகளுக்கு ஈடாக, நான் அவர்களுக்குத் தோல்களைக் கொடுத்துவிடுவேன்.’’

# 9

அதிகாலை மூன்று முப்பது மணியளவில், ஜென் சென்னும், யாங் கீயும் இரண்டு பெரிய நாய்களோடு, கரும்பாறை மலைக்கு அருகிலுள்ள குன்றை அடைந்திருந்தார்கள். அவர்களின் குதிரை களைச் சங்கிலிகளால் சரியான இடத்தில் கட்டிவிட்டு, குன்றின் பின்னால் அவர்கள் மறைந்திருந்தார்கள். எர்லாங்கும் எல்லோவும் வேட்டை குறித்த பலமான உள்ளுணர்வு கொண்டவை. மிகவும் முன்னதாக எழுந்து செல்வதென்பது ஒன்றே ஒன்றைத்தான் குறிக்கும்: வேட்டை. அவை பனியின்மீது கால்களைப் பரப்பிக் கிடந்தபடி, எவ்வித சத்தமும் இடாமல், எல்லாப் பக்கங்களிலும் உன்னிப்பாகக் கவனித்துக்கொண்டிருந்தன. நிலவையும் நட்சத்திரங் களையும் மேகங்கள் மூடியிருந்ததில் இருண்டு கிடந்த மேய்ச்சல் நிலம் அதீதக் குளிரோடும் பயங்கரமானதாகவும் காணப்பட்டது. சில மைல் தூரத்துக்கு அங்கு ஜென்னும் யாங்கும் தவிர வேறு மனித நடமாட்டமே கிடையாது. மிக நெருக்கத்தில், கரும்பாறை மலையானது, பிரமாண்டமான விலங்குகளின் சிற்பம் போல் காட்சியளித்தது. ஜென்னின் முதுகு சில்லிட்டது. அவன், குதிரைகளை நினைத்துக் கவலைப்பட்டான். இந்த அபாயகரமான செயல் குறித்து அவன் பயப்படத் தொடங்கினான்.

திடீரென ஒரு ஓநாயின் ஊளை, வடமேற்குக்கு எதிராக அமைதியைக் கிழித்துக்கொண்டு கேட்டது. அதன் எதிரொலி சுற்றியிருந்த பள்ளத்தாக்குகளெங்கும் ஒலித்தது. அது தேய்ந்து மறைந்தபோது, புல்லாங்குழலின் ஓசையைப் போலிருந்தது. சத்தம் முழுவதுமாக அடங்கிய பிறகு, தொலைதூரத்தில் ஒரு நாயின் குரைப்பு கேட்டது. ஜென்னுக்குப் பக்கத்திலிருந்த இரண்டு நாய்களும் இந்த சப்தங்களால் தூண்டப்படவில்லை. வேட்டையின் நெறிமுறைகளை அவை நன்கறியும்; இரவில் பட்டிகளுக்குக் காவல் புரியும்போது, தொடர்ந்து குரைத்துக்கொண்டிருக்க வேண்டியது அவசியம்; மலைகளில் வேட்டையாடும்போது மிகுந்த நிசப்தம் தேவை. எர்லாங்கின் முன்னங்கால்களுக்கு இடையில், ஜென் ஒரு கையால் அதன் கழுத்தைச் சுற்றி வளைத்திருந்தான். கிளம்பி வருவதற்கு முன்பாக, யாங் அரை வயிறு நிரம்புமளவு அவற்றுக்கு உணவு கொடுத்திருந்தான். அதிக உணவு அவற்றின் போராட்டத் திறனை மந்தப்படுத்தும்; மிகக் குறைந்த

உணவு அவற்றின் பலத்தைக் குறைத்துவிடும். ஜென்னின் கைகள் வெகு சீக்கிரம் சூடாகின. நாயின் குளிர்ந்த மூக்கு சூடாகும் வகையில் ஜென் அந்தச் சூட்டோடு அதைத் தடவினான். எர்லாங் வாலை லேசாக ஆட்டியது. அவனுக்குப் பக்கத்தில் நாயிருந்தது அவனுக்குத் தெம்பளித்தது.

பல கடுமையான இரவுகளை அடுத்து, ஜென் மிகவும் களைப்படைந்திருந்தான். இரண்டு இரவுகளுக்கு முன்னர், சில மேய்ப்பர் நண்பர்களை, ஓநாய்க் குட்டிகள் வேட்டைக்கு தங்களுடன் வரும்படி யாங் அழைத்துப் பார்த்தான். கரும்பாறை மலையில் குட்டிகளுள்ள குகைகள் இருக்குமென எவரும் நம்ப வில்லை என்பதாலும், அவ்வளவு அதிகாலையில் படுக்கையிலிருந்து எழ எவரும் விரும்பவில்லை என்பதாலும் அவர்கள் மறுத்து விட்டனர். ஜென்னையும் யாங்கையும் போக வேண்டாமெனத் தடுத்தும் பார்த்தனர். ஆனால், அதையெல்லாம் மீறி அவர்கள் இருவர் மட்டுமே போவதென முடிவெடுத்தனர். அதனால்தான், மலையில் அவர்களுக்கு உறுதுணையாக விசுவாசமிக்க இந்த இரு நாய்கள் மட்டுமே இருந்தன.

யாங், எல்லோவைத் தன் கைகளால் இறுக அணைத்துக்கொண்டு ஜென்னிடம் கிசுகிசுத்தான். ‘‘எல்லோ போன்ற ஒன்றே எப்படி நடுங்கிக்கொண்டிருக்கிறதென்று பார். இந்நிலையில் இதனால் ஒரு ஓநாயை மோப்பம் பிடிக்க முடியுமா என்பதே சந்தேகம்தான்.’’

ஜென் நாயின் தலையில் தட்டிக் கொடுத்தான். ‘‘பயப்படாதே’’ அவன் கிசுகிசுத்தான். ‘‘பயப்படுவதற்கு ஒன்றுமில்லை. இன்னும் கொஞ்ச நேரத்தில் சூரியன் எழுந்துவிடும். ஓநாய்கள் பகலில் மனிதர்களைப் பார்த்துப் பயப்படும். மேலும், சுருக்குக் கயிற்றுத் தடியும் நம்மிடம் இருக்கிறது.’’

யாங்கும் தன்னைத் திடப்படுத்திக்கொண்டான். ‘‘ஓநாய்களோடு சண்டையிடுவதென்பது ஒரு யுத்தத்தைப் போன்றது; பலத்துக்கு எதிரான பலம், உத்வேகத்துக்கு எதிரான உத்வேகம், ஞானத்துக்கும் தைரியத்துக்கும் எதிரான ஞானமும் தைரியமும். முப்பத்தாறு வகையான தந்திர உபாயங்களும் — ஓர் அழகிய பெண்ணைப் பயன்படுத்தும் தந்திரத்தைத் தவிர — இதில் பங்காற்றுகின்றன.’’

‘‘நாம் அவ்வளவு சுலபமாக இருந்துவிடக் கூடாது. ஓநாய்கள் நம்முடைய எதிரியாக இருக்கும்போது, முப்பத்தாறு வகையான தந்திர உபாயங்கள் போதுமானவையா என்று எனக்கு நிச்சயமாகத் தெரியவில்லை.’’

‘‘சரிதான். இப்போது நாம் எதைப் பயன்படுத்துவது?

குட்டிகளுக்குப் பாலூட்ட குகைக்குத் திரும்பிச் செல்லும் தாய் ஓநாயைப் பின்தொடர்ந்து சென்று, அதன்மூலம் குகையைக் கண்டறியும் வழியையா? ஆனால் அது, முப்பத்தாறில் ஒன்றில்லை. அப்பாவுடைய வழிமுறை திருட்டுத்தனமானது. உண்மையில் அது மிகவும் குரூரமானது.’’

‘‘எல்லாக் குதிரைகளையும் ஓநாய்களைக் கொல்லச் சொன்னது யார்?’’ என்றான் ஜென். அவைதான் அவரை இந்த முடிவுக்குக் கொண்டு வந்திருக்கின்றன. நாங்கள் பொறிகளை வைத்தபோது, இப்படியான வேலைகள் செய்து பல வருடங்கள் ஆகிவிட்டன என்றார். ஓநாய்களை ஒட்டுமொத்தமாகக் கொல்வதற்கு அவர் எப்போதுமே ஆதரவாக இருந்ததில்லை.’’

வானம் கிழக்கில் வெளுக்க ஆரம்பித்தது. கரும்பாறை மலை, தன் சிற்பப் படிமத்தை இழந்து மீண்டும் மலையாகியது. சூரிய வெளிச்சத்தின் முதல் கதிர்கள், மெல்லிய மேக மூட்டத்தினூடாக வெளிவந்து அவர்களுடைய பார்வைத் தளத்தை விரிவுபடுத்தின. தன்னுடைய தொலைநோக்கியின் மூலம் ஜென் மலைப் பகுதியை அலசினான். நிலத்தில் பனிமூட்டம் கவிந்திருந்ததால், இயற்கைக் காட்சிகளைத் தவிர வேறெதுவும் தெரியவில்லை. ஒருவேளை ஓநாய் பனி மூட்டத்திற்குள்ளாகச் சென்று, தன்னுடைய குகையை அடைந்துவிடுமோ என்று ஜென் கவலைப்பட்டான். அப்படி நடந்தால், அவனும் யாங்கும் நாய்களும் இங்கு பாதி இரவு உறைந்து கிடந்தது வீண் என்றாகிவிடும். ஆனால் அதன்பிறகு, நல்ல வேளையாகப் பனிமூட்டம் கலைந்து மெல்லிய மூடுபனியாக அது நிலத்தின் மேலாகக் கவிந்தது. அதனூடாகச் செல்லும் எந்தவொரு விலங்கும் மூடுபனியைக் கலைத்துக்கொண்டு செல்லும்போது, தன்னை வெளிப்படுத்திக்கொண்டுவிடும்.

திடீரென, எல்லோ வடக்கு நோக்கித் தன் தலையைத் திருப்பியது. அதன் பிடரி மயிர்கள் சிலிர்த்தன; உடல் பதற்றமானது. எர்லாங்கும் அதே திசையில் தன் தலையைத் திருப்பியது. அங்கு ஏதோ வருகிறதென்பதை உணர்ந்த

ஜென், அத்திசையில் தன் தொலைநோக்கி மூலம் பார்வையைச் செலுத்தினான். அங்கு காய்ந்த நாணல்கள் நீண்டு பரந்து கிடந்தன. பனிக்காலத்திலும் இளவேனிற் காலத்திலும் அங்குதான் ஓநாய்கள் சுற்றித் திரியுமென்றும், அதற்குள் மறைந்துகொண்டுதான் உறங்குமென்றும், ஓநாய்களை வேட்டையாடும் மனிதர்களுக்கான போர்க்களமும் அதுதான் என்றும் பில்ஜி அடிக்கடி சொல்வதுண்டு. எல்லோவும் எர்லாங்கும் காய்ந்த நாணல்களை மிதித்துக்கொண்டு செல்லும் ஓநாயின் காலடிச் சத்தத்தைக் கேட்டிருக்கக்கூடும். அவன் அந்தப் பகுதியை அலசியபடி, அது வெளிப்படுவதற்காகக் காத்திருந்தான்.

நாணல் படர்ந்திருந்த பகுதியின் ஓரிடத்தில் நாய்களின் பார்வை நிலை குத்தியிருந்தன. ஜென், அவசரமாக அதன்மீது தொலைநோக்கியைச் செலுத்தினான். அங்கு ஒரு பெரிய ஓநாய் தலை உயர்த்தியிருந்தது; அதன் உடலின் மேற்பாதி நாணல்களுக்கு வெளியே தெரிந்தது. அது சுற்றிலும் பார்த்தது. ஜென்னின் இதயம் படபடத்தது. நாய்கள் உடனடியாக, அவற்றின் முகவாய்க்கட்டை பனியில் புதைந்து விடுமளவுக்கு, தலைகளைத் தாழ்த்தின. தரையில் படுத்திருந்த இருவரும், எவ்வளவு முடியுமோ அவ்வளவுக்குத் தரையோடு ஒட்டிக்கொண்டனர். ஓநாய், மலைப்பகுதியைத் துருவித் துருவிப் பார்த்துவிட்டு, மலை இடுக்கை நோக்கி ஓடியது.

தொலைநோக்கி மூலம் ஜென் அதைத் தொடர்ந்தான். அவன் கடைசியாகப் பார்த்த ஓநாயைப் போலவே அது இருந்தது. அதுதான் இந்த இடத்தைச் சுற்றியிருக்கும் ஒரே ஓநாய் என்னும் பட்சத்தில் ஜென் பயப்படக் காரணமேதுமில்லை. இரண்டு ஆண்கள், இரண்டு நாய்கள், குறிப்பாக அதிலொன்று எர்லாங் என்னும்போது, ஒரு தாய் ஓநாயை வெகு சுலபமாகச் சமாளித்துவிட முடியும்.

ஓநாய் மலைச்சரிவின்மீது ஏறிச் சென்றது. அது எந்த திசையில் செல்கிறது என்பதைக் கவனிப்பது மட்டும்தான் தன் வேலை என ஜென் நினைத்துக்கொண்டான். ஆனால் அந்தத் தருணத்தில், ஓநாய் நின்று திரும்பியவாறு முதலில் ஒரு புறமாகவும், பின் மறு புறமாகவும் பார்த்தது. கடைசியாக, அவர்கள் பதுங்கியிருந்த குன்றின் உச்சியைப் பார்த்தது. இருவரும் மூச்சுகூட விடவில்லை. அது நாணல் புதரில் இருந்ததைவிட

இப்போது இன்னும் உயரத்தில் இருந்தது. அப்போது பார்க்க முடியாததை இப்போது அதனால் சுலபமாகப் பார்க்க முடியும். ஒரு கணத்துக்கு முன்பு, அது மலை இடுக்கை நோக்கி ஓடிய சமயத்தில், அவர்கள் சில எட்டுகள் குன்றின் உச்சியிலிருந்து கீழிறங்கி இருந்திருக்கலாம். தன் அனுபவமின்மைக்காக அவன் வருத்தப்பட்டான். ஓநாயின் சந்தேகம் அவனுக்கு ஆச்சரியமளித்தது. அது தன் உடலை நீட்டி, எம்பி நின்றவாறு, அந்தப் பகுதியில் அபாயகரமாக ஏதும் தென்படுகிறதா என்று மறுபடியும் சோதித்தது. அது, இரண்டு முறை முழுமையாக வட்டமடித்துப் பார்த்தது. ஒருகணம் தயங்கியது. பின் சுற்றிச் சுழன்று ஒரு சரிவில், கிழக்கு நோக்கித் துள்ளியோடியது. அங்கு, அது குகை போன்ற குழிக்குள் நுழைந்து, அதனுள் மறைந்தது.

‘‘அபாரம். அங்கிருக்கிறது வாசல். இனி, நாம் தாய் மற்றும் குட்டிகளைப் பிடித்துவிடலாம்’’ என்று கைகளைத் தட்டியபடி, திடீரெனக் கூவினான் யாங்.

ஜென் மிகுந்த கிளர்ச்சியுடன் எழுந்து நின்றான். ‘‘வா, நாம் போய் நம் குதிரைகளோடு வரலாம்.’’

நாய்கள் மிகவும் கிளர்ச்சியடைந்து, மூசு மூசுவென துள்ளிக் குதித்துக்கொண்டிருந்தபடி, தங்களுடைய எஜமானர்களின் கட்டளைக்காகக் காத்துக்கொண்டிருந்தன. அவன் அடைந்திருந்த மனக்கிளர்ச்சியில் ஜென் அதை மறந்துவிட்டிருந்தான். ‘‘ம்... போங்க’’ என்று ஜென் சொல்லியதுதான் தாமதம், குகை வாசலை நோக்கி அவை விரைந்தோடின. அவர்கள் இருவரும் குன்றின் பின்புறமாய் ஓடி, குதிரைகளின் சங்கிலிகளைக் கழற்றிவிட்டு, அவற்றின் மீதேறி, குகையை நோக்கித் தாவிச் சென்றனர். அங்கு குகை வாசலில் பலமாகக் குரைத்தபடி நாய்கள் அவர்களுக்காகக் காத்திருந்தன. எர்லாங், தன் கோரைப் பற்களை நீட்டியபடி, குகை வாசல் வரை போவதும் வருவதுமாய் துடித்துக்கொண்டிருந்தது. எல்லோ வாசலில் நின்றபடியே, உரக்கக் குரைத்துக்கொண்டும், தரையைப் பிறாண்டி பனிப் புழுதியைப் பறக்கடித்துக்கொண்டு மிருந்தது. இருவரும் குதிரைகளிலிருந்து குதித்திறங்கி, உடனடியாக நிலைமையைக் கணக்கிட்டனர். குகையினுள் இரண்டு அல்லது மூன்றடி தூரத்தில் ஓநாய் தன் குட்டிகளுக்கும் குகைக்கும் காவலாக இருந்து கொண்டிருந்ததால்தான் எர்லாங் முன்னும் பின்னுமாகப் போய் வந்துகொண்டிருந்தது. ஒவ்வொரு முறை அது நுழை வாயிலருகில்

வரும்போதும் ஓநாய் கொஞ்சம் முன்னால் வந்து கோரைப் பற்களைக் காட்டிக் கடிக்கப் போவதுபோல் உறுமி ஏய்ப்புக் காட்டியது. ஜென், சுருக்குக்கயிற்றுத் தடியை உள்ளே விட்டு, ஓநாயின் தலையைச் சுற்றிச் சுழற்றினான். அது மிக வேகமாக விலகிக் கொண்டதில் தடி காற்றில் சுழன்றது. யாங்கும் அவனுடைய கனமான கட்டையைச் சுழற்றினான். அதுவும் தவறியது. பின்னர், அது தன் கோரைப் பற்களை நீட்டியபடி கோபமாக வெளியில் வந்து, மீண்டும் ஓரிரு அடி உள்ளே சென்று நின்றுகொண்டது. இப்படியாக சில சுற்றுகள் அவர்கள் தாக்க முயற்சிப்பதும், அது உறுமியபடி வெளியில் வந்து உள்ளே போவதுமாகத் தொடர்ந்தன. இறுதியில், அதனுடைய தலையில் ஜென் அடித்துவிட்டான். யாங்கும் தாக்கிவிட்டான். இதனால் மேலும் கோபமடைந்த ஓநாய் மிகுந்த வெறி கொண்டது. இம்முறை அது ஓரடி பின்வாங்கிய போது எர்லாங்கும் அதைத் தொடர்ந்தது. எர்லாங்கின் மார்பை உடனடியாக ஓநாய்¢ பாய்ந்து கடித்ததும், அது வேகமாக வெளியில் ஓடி வந்தது. காயத்திலிருந்து ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. அதன் கண்கள் கோபத்தில் சிவந்திருந்தன. அது கோபத்தில் மூர்க்கமாக உறுமியபடி பாய்ந்து உள்ளே நுழைந்தது. உள்ளே அதன் வால் முன்னும் பின்னுமாக ஆடுவதை மட்டுமே காண முடிந்தது.

அச்சமயத்தில், ஜென்னுக்குத் தன்னுடைய சுருக்குக் கயிற்றுத்தடி நினைவுக்கு வந்தது. தரையில் கிடந்த அதைக் கையில் எடுத்தான். ‘‘ஆம், அதைக் கயிற்றால் கட்டுவதுதான் சரி’’ என்றான் யாங். தடியின் நுனியிலுள்ள சுருக்குக்கயிற்றைத் தளர்த்தினான் ஜென். அப்போதுதான் குகையின் நுழைவாயிலில் அதைத் தொங்கவிட முடியும். ஓநாய் அடுத்தமுறை வெளியில் தலை நீட்டும்போது, அது தடியைத் தட்டித் தாண்ட முற்படும்போது, அதன் கழுத்தைச் சுற்றி சுருக்குக்கயிறு இறுக்கிவிடும். பிறகு அதை வெளியே இழுத்து வர வேண்டியதுதான். அது நடந்தவுடன், யாங் கீயின் தடியும் இரண்டு நாய்களும் சேர்ந்து ஓநாயின் கதையை முடித்துவிடும். ஜென் மிகுந்த பதற்றத்துடன் இருந்தான். ஆனால், அந்தப் பொறியை அவன் மாட்டுவதற்குள், எர்லாங் குகையை விட்டு மீண்டும் வெளியில் வந்தது. அதன் பின்னங்கால்கள் கயிற்றின்மீது பட்டு அதை ஒரு பக்கமாகச் சாய்த்தது. சில நொடிகளுக்குப் பிறகு, நாயுடன் நடந்த சண்டையில் தலையிலிருந்து ரத்தம் வழிய, ஓநாய்

மீண்டும் வெளிப்பட்டது. கயிற்றின் மீது அது கால் வைத்தபோது, அங்கிருந்த நீண்ட தடியைப் பார்த்ததும் மின்சாரம் தாக்கியதுபோல் குகை உள்ளே பாய்ந்து திரும்பியது.

ஜென் அப்படியே சோர்ந்துபோய் உட்கார்ந்துவிட்டான். ‘‘நான் ஒரு முட்டாள். சுருக்குக்கயிற்றுத் தடியை நான் முதலிலேயே பயன்படுத்தியிருந்தால் இந்நேரம் அந்த ஓநாய் இறந்துவிட்டிருக்கும். ஓநாயுடன் சண்டையிடும்போது முழு விழிப்போடு இருந்தாக வேண்டும். சிறு தவறும் செய்துவிடக் கூடாது’’ என்றான் ஜென்.

ஜென்னை விடவும் மிகவும் விரக்தியடைந்திருந்த யாங், தரையின் மீது தன் தடியைத் தட்டியவாறே, ‘‘நம்மிடம் துப்பாக்கி இல்லாததால் ஓநாய் ஜெயித்துவிட்டது. நான் ஒரு துப்பாக்கி எடுத்து வந்திருந்தால், அதனுடைய மண்டையைப் பிளந்திருப்பேன்.’’

‘‘இப்போது நாம் யுத்த தயாரிப்புகளுக்கான முனைப்பில் இருப்பதால், எவரும் ஆயுதத்தை உபயோகிக்க அனுமதி கிடையாதென தலைமையகம் கூறியிருக்கிறது. மேலும் ஒரு துப்பாக்கி நமக்கு எந்த வகையிலும் உதவாது.’’

‘‘நாம் சில வெடிகளைப் போட்டாலென்ன?’’ என்று கேட்டான் யாங்.

‘‘ஒரு துப்பாக்கிக்கும் அதற்கும் என்ன வித்தியாசம்?’’ ஜென் ஒரு வழியாக அமைதியடைந்திருந்தான். ‘‘வடக்கிலிருக்கும் ஓநாய்களை நாம் பயமுறுத்திவிட்டால், நம்முடைய வேட்டைத் திட்டங்கள் பாழாகிவிடும். மேலும், வெடிகளின் மூலம் நாம் ஒரு ஓநாயைக் கொல்ல முடியாது.’’

யாங் அதிருப்தி அடைந்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது. ‘‘நாம் புகை எழுப்பினால், அது நிச்சயம் பயந்துபோய் வெளியில் வந்துவிடும். நாம் ஓநாய்க் கூட்டம் இருக்கும் பகுதியி லிருந்து பத்து மைல் தள்ளியிருக்கிறோம். அவற்றுக்கு எதுவும் கேட்காது. இன்னும் உனக்குத் தயக்கமிருந்தால், நான் என் மேலாடையைக் கழற்றிவிட்டு, உள்ளே சில வெடிகளை எறிந்ததும், என் மேலாடையால் வாசலை அடைத்துக்கொள்கிறேன். சத்தம் அமுங்கிவிடும். வெளியே எதுவும் கேட்காது.’’

‘‘ஓநாய் வெளியில் வரவில்லை என்றால் என்ன செய்வது?’’

‘‘நிச்சயம் வரும். என்னை நம்பு’’ என்று தன் இடுப்புக் கச்சையைக் கழற்றியவாறே சொன்னான் யாங். ‘‘வெடி நெருப்புக்கும் வெடிமருந்தின் வாசனைக்கும் ஓநாய்கள் மிரளுமென்று ஒரு மேய்ப்பன் என்னிடம் சொல்லியிருக்கிறான். ஆறு வெடிகளை நான் உள்ளே எறிவேன். உள்ளே அதன் அதிர்வொலி மிகப் பலமாய் இருக்கும். நிச்சயம் அது மிரண்டு போகும். குகை வாசல் மிகவும் குறுகியதென்பதால் அடர்த்தியான புகை மூட்டத்தில் அதற்கு மூச்சுத் திணறும். நான் வேண்டுமானால் பந்தயம் கட்டுகிறேன், மூன்றே வெடிகள் போதும்; அது வெளியில் வந்து நம் கைகளில் விழுந்துவிடும். அதைப் பின்தொடர்ந்து எல்லாக் குட்டிகளும் வெளியில் வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை.’’

‘‘சரி, நீ உன் வேலையை ஆரம்பி’’ என்றான் ஜென். ‘‘அதே சமயம் நாம் எதற்கும் தயாராக இருக்க வேண்டும். எதற்கும் இந்தப் பகுதியில் வேறு துளைகளேதும் இருக்கிறதா என்று ஒரு சுற்றுப் பார்த்துவிடுகிறேன். முயல்கள் கூடத் தப்பிப்பதற்கு மூன்று வழிகள் வைத்திருக்கும். அதனால், ஒன்றுக்கும் மேற்பட்ட நுழைவாசல்கள் இதற்கு இருக்கக்கூடும். ஓநாய்கள் மிகவும் தந்திரமானவை. நாம் எவ்வளவு சாமர்த்தியமாகச் செயல்பட்டாலும் அது குறையுடையதாகத்தான் இருக்கும்.

ஜென் குதிரை மீதேறி, நாய்களோடு அந்தப் பகுதியைப் பலமுறை வட்டமடித்தான். பனியில் இருண்ட துளைகளைக் கண்டறிவது சுலபமென்று அவன் நினைத்தான். நூறடி சுற்று வட்டாரத்தில் அப்படி எதுவுமில்லை. அவன் குதிரையிலிருந்து இறங்கி, குதிரைகள் இரண்டையும் கொஞ்சம் தள்ளி சங்கிலியால் கட்டிப்போட்டுவிட்டு, குகை வாசலை நோக்கி நடந்து வந்தான். பின்னர், சுருக்குக்கயிற்றுத் தடி, உருட்டுக்கட்டை, மண்வெட்டி ஆகியவற்றை ஒதுக்கி வைத்தான். தன் மார்பிலிருந்து வழியும் ரத்தத்தைத் தன் நாக்கால் துடைக்க எர்லாங் முயற்சித்துக்கொண்டிருந்தது. இரண்டு விரல்கட்டையளவு சதையை ஓநாய் கடித்துக் குதறியிருந்தது. வலியினால், அது சத்தமிடாமல் இருந்தது. அவர்கள் தைலமோ துணியோ எடுத்து வந்திருக்கவில்லை. எர்லாங் தன்னுடைய எச்சிலால், ரத்தப் போக்கை நிறுத்தவும் வலியைக் குறைக்கவும் முயற்சி செய்துகொண்டிருந்ததை அவர்கள் வெறுமனே பார்த்துக்கொண்டிருந்தனர். யாங் தயாராகிவிட்டிருந்தான். அவனுடைய

மேலாடை தோள்களில் தொங்கிக்கொண்டிருந்தது. வெடிகள் கைகளில் இருந்தன. அவை குழாய் வடிவ கை வெடிகுண்டுகளைப் போலிருந்தன. பற்ற வைத்த சிகரெட் உதடுகளில் ஆடிக்கொண்டிருந்தது. ‘‘உன்னைப் பார்த்தால் ஏதோ ஜப்பானிய சுரங்கப் பெருச்சாளியைப் போலிருக்கிறதே தவிர, வேட்டைக்காரனைப் போலில்லை’’ என்று சிரித்தபடி சொன்னான் ஜென். மேலும், ‘‘சரி, அவற்றை உள்ளே எறி. என்ன நடக்கிறதெனப் பார்க்கலாம்’’ என்றான் ஜென்.

ஒரு திரியைப் பற்றவைத்து, ஒருகணம் அது பற்றியெரியும் ஒலியைக் கேட்டுவிட்டு, குகைக்குள்ளாக அவனால் எவ்வளவு தூரம் முடியுமோ அவ்வளவு தூரம் செல்லுமளவுக்கு வீசி எறிந்தான் யாங். இப்படியாக மற்றவற்றையும் பற்ற வைத்து எறிந்துவிட்டு, அவை உள்ளே உருண்டு செல்லும் சத்தத்தைக் கொஞ்ச நேரம் கவனித்துவிட்டு, அவனுடைய ஆடையால் வாசலை மூடவும், ஆறு வெடிகள் அடுத்தடுத்து வெடிக்கும் சத்தம் கேட்கவும் சரியாக இருந்தது. அந்த சத்தத்தில் தரை அதிர்ந்தது. குகைக்குள் அந்த சத்தம், காதைக் கிழிக்கக்கூடியதாகவும், அதிர்வு பயங்கரமான தாகவும், புகை மூச்சைத் திணறவைக்கக் கூடியதாகவும் இருந் திருக்கும். இவ்வளவு சக்தி வாய்ந்த குண்டு வெடிப்புகளை, மேய்ச்சல் நிலத்திலுள்ள எந்தவொரு குகையும் இதுவரை சந்தித் திருக்காது. துரதிர்ஷ்டவசமாக, குகையின் ஆழத்திலிருந்து பெரும் வேதனையில் எழுந்த ஓநாயின் ஊளைகளை அவர்கள் கேட்டிருக்கவில்லை.

யாங், குளிரில் உறைந்துவிடாதிருக்கும் வகையில், தன்னைத் தானே இறுகக் கட்டிக்கொண்டிருந்தான். ‘‘சரி, எப்போது இதைத் திறக்கலாம்’’ என்று கேட்டான்.

‘‘இன்னும் கொஞ்ச நேரமாகட்டும். முதலில் சிறு துவாரமளவுக்கு லேசாகத் திறந்து, கொஞ்சம் புகை வெளியில் போகும் வரை காத்திருப்போம். பிறகு, முழுவதுமாகத் திறந்து விடலாம்.’’

மறைப்பின் ஒரு மூலையை லேசாக விலக்கினான் ஜென். ஆனால், புகை ஆகக் குறைவாக இருந்ததால் உடனே அதை மூடிவிட்டான். யாங் குளிரில் மிகவும் நடுங்குவதைப் பார்த்துவிட்டு, தன் மேலாடைக்குள் அவனையும் சேர்த்துக்கொள்ள முயற்சித்தான். ஆனால், யாங் அவனை ஒதுக்கிவிட்டான்.

‘‘முழு கவனத்தோடு இரு. எந்த நிமிடத்திலும் ஓநாய் வெளியில் வரலாம். என்னைப் பற்றிக் கவலைப்படாதே. நான் சரியாகிவிடுவேன்.’’

அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, எல்லோவும் எர்லாங்கும் தூரத்தில் வடமேற்குத் திசையைப் பார்த்தபடி குதித்துக்கொண்டிருந்தன. அங்கிருந்து இருபது அடி தூரத்துக்கு அப்பால் வெளிர்நீலப் புகை வெளியேறிக்கொண்டிருப்பதை ஜென்னும் யாங்கும் அப்போதுதான் கவனித்தனர்.

‘‘ஐயோ, அங்கு இன்னொரு துளை இருக்கிறது. நீ இங்கேயே இரு. நான் போய் பார்த்துவிட்டு வருகிறேன்’’ என்றான் ஜென். அவன் மண்வெட்டியை எடுத்துக்கொண்டு, நாய்கள் பின்தொடர, ஓடினான். துளையிலிருந்து புகை குபுகுபுவென்று வெளியேறிக் கொண்டிருந்தது. ஒரு பெரிய ஓநாயும் அதிலிருந்து ஒரு ஏவு கணையைப் போல வெளியேறி, மலையடிவாரத்திலுள்ள நாணல் புதர்ப் பகுதியை நோக்கிப் பாய்ந்து சென்றது. ஏதாவது செய்ய ஜென் முற்படுவதற்குள், அது அவன் பார்வையை விட்டு மறைந்து விட்டது. எர்லாங், அதைப் பின்தொடர்ந்து நாணல் பிரதேசத்துக்குள் ஓடியது. திகைத்துப்போன ஜென், ‘‘போகாதே, இங்கே வா’’ என் று கத்தினான். அவனுடைய கட்டளையைப் புறக்கணித்தது எர்லாங். நாணல் பகுதியின் முனை வரை சென்று விட்டு, அதற்குள் போகத் தைரியமின்றித் திரும்பியது எல்லோ. தன்னுடைய மேலாடையை மாட்டிக்கொண்டபடி, இரண்டாவது துளை இருந்த இடத்துக்கு யாங் வந்து சேர்ந்தான்.

அந்தத் துளை, புதிதாகத் தோண்டப்பட்டிருப்பதைப் பார்த்து அவர்கள் ஆச்சரியமடைந்தனர். அவசர கால வெளியேறலுக்காக அது மறைத்து வைக்கப்பட்டிருந்திருக்கிறது.

‘‘அந்த ஓநாய் நம்மை முட்டாளாக்கிவிட்டது’’ என்றான் யாங்.

ஜென் பெருமூச்சு விட்டான். ‘‘முயல் தப்பிப்பதற்கு எத்தனையோ வழிகள் வைத்திருந்தாலும், அவற்றை நாம் சுலபமாகக் கண்டுபிடித்துவிட முடியும். ஆனால் இந்தத் தந்திரக்கார ஓநாய், தப்பிப்பதற்கு எத்தனை சுரங்கப் பாதைகளைக் கொண்டிருக்கிறதென்று நம்மால் அறிந்துகொள்ள முடியாது. கன கச்சிதமாகத் திட்டமிடப்பட்ட ஒன்று இது. இங்கே பார், நுழைவுக்குப்

பின்னால் எவ்வளவு சரிவாக இருக்கிறதென்று. இதிலிருந்து நேரடியாக நாணல் பிரதேசத்துக்குப் போய்விடலாம். ஓநாய் அந்த இடத்தை சடுதியில் அடைந்துவிடும். முயலின் எட்டு அல்லது பத்து தப்பிக்கும் வழிகளைவிட இது மிகவும் பிரயோஜனமானது. ஓநாய்கள், நெருக்கமான சண்டையிலும், இரவு நேரச் சண்டை யிலும், நீண்ட பரப்பிலான வேட்டையிலும், கொரில்லா சண்டை யிலும் என எல்லா வகைகளிலும் திறன் பெற்றவை என பாவோ சுங்காய் கூறுவார். அவை சுரங்க யுத்தத்திலும், ஏமாற்று வித்தைகளிலும்கூட சிறந்த ஆற்றல் கொண்டவை என்பதை அடுத்த முறை அவரைப் பார்க்கும்போது, நான் கூறப் போகிறேன். ஓநாய்கள் இவ்வுலகின் மிகச் சிறந்த போர் வீரர்கள்.''

யாங் கோபம் தணியாமல் இருந்தான். ''சுரங்க யுத்தம் மற்றும் ஏமாற்று வித்தைகள் பற்றி வட சீனாவில் தொடர்ந்து திரைப்படம் எடுத்துக்கொண்டிருக்கிறார்கள். அவர்களின் அரிய கண்டுபிடிப்பு போல இதைச் செய்துகொண்டிருக்கிறார்கள். ஆனால் உண்மையில், ஓநாய்கள் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முன்பாகவே இவற்றைக் கண்டுபிடித்துவிட்டன.''

அவர்கள் மீண்டும் முதலாவது நுழைவுக்குத் திரும்பினர். அங்கு, வெடிமருந்து வாசனையோடு புகை திரி திரியாக வெளியேறிக்கொண்டிருந்தது.

''குண்டு வெடிப்புக்குப் பிறகு, குட்டிகள் ஊர்ந்து வெளியே வந்திருக்க வேண்டுமே. ஒருவேளை, புகையில் அவை இறந்து போயிருக்குமோ'' என்று யாங் கேட்டான்.

''நானும் அதுபற்றித்தான் யோசித்துக்கொண்டிருக்கிறேன். ஒருவேளை குட்டிகள் இறந்துபோயிருந்தால்...''

யாங்கால் பெருமூச்சு விடத்தான் முடிந்தது. ''பாயர் இங்கிருந்தால், அவனால் ஊர்ந்து உள்ளே போக முடிந்திருக்கும்.''

ஜென்னும் பதிலுக்குப் பெருமூச்சு விட்டான். ''அவனை இந்த இக்கட்டில் மாட்டிவிட நான் விரும்பவில்லை. உள்ளே வேறு பெரிய ஓநாய்கள் இல்லையென்று எவரால் உறுதியாகச் சொல்ல முடியும்? கஸ்மாய்க்கு ஒரே ஒரு பையன்தான் இருக்கிறான். ஆனாலும், அவன் ஓநாயின் வாலைப் பிடிப்பதையோ, ஓநாய்க் குகைக்குள் ஊர்ந்து செல்வதையோ அவள் தடுப்பதில்லை. சீன முதுரை ஒன்றிருக்கிறது: 'உங்கள் பையனைத் தியாகம்

செய்ய சித்தமில்லாவிட்டால் ஓநாய்களோடு சண்டையிட வேண்டாம்.' இது மேய்ச்சல் நிலத்திலிருந்து வந்ததாகத்தான் இருக்க வேண்டும். மங்கோலியர்கள் சீனாவைக் கிட்டத்தட்ட ஒரு நூற்றாண்டு ஆட்சி செய்தார்கள் என்பதை மறந்துவிட வேண்டாம். ஓநாய்க் குகைக்குள் ஊர்ந்து சென்று குட்டிகளை எடுத்துவரத் தன் மகனை அனுமதிப்பதுதான் இதன் அர்த்தம் என்று இப்போது நான் உணர்கிறேன். இவ்வளவு ஆழமான மற்றும் இவ்வளவு குறுகலான ஒரு சுரங்கத்துக்குள் ஒரு சிறுவனால் மட்டுமே புக முடியும். மங்கோலியச் சிறுவர்கள் பலசாலிகளாகவும் பயமற்றவர்களாகவுமே வளர்கிறார்கள்.''

ஜென் குதிரை இருக்குமிடத்துக்குச் சென்று, அதிலிருந்த கித்தான் பையை எடுத்துக்கொண்டு திரும்ப வந்தான். அந்தப் பையைப் பார்த்ததும், எல்லோ ஓடி வந்து வாலை ஆட்டியது. அந்தப் பையில்தான் நாய்களுக்கான உணவை ஜென் வைத்திருந் தான். அவன் பையைத் திறந்து, இருந்த இரண்டு இறைச்சித் துண்டங்களில் சிறியதை எடுத்து அதற்குக் கொடுத்தான். மற்றது, எர்லாங்கிற்கானது. ஆனால், அது இன்னமும் திரும்பவில்லை; ஜென் கவலைப்பட்டான். பனிக்காலத்திலும் இளவேனிற் காலத்திலும் நாணல் வெளியானது, ஓநாய்களின் அதிகாரத்திற்குட்பட்டது. ஓநாய்க் கூட்டத்துக்கு நடுவில் எர்லாங்கை இந்த ஓநாய் சுற்றி வளைத்துவிட்டால் பெரும் பிரச்சனைதான். இந்த வேட்டைக்கான பயணத்தில் விசயங்கள் சரிவர அமையவில்லை. அவர்களுடைய தளபதி நாயை இழந்துவிட்டால் அது மிக மோசமானதாகிவிடும்.

சாப்பிட்டுக்கொண்டிருந்த எல்லோவின் வால் படுவேகமாக ஆடியது. முயல்கள், நரிகள் மற்றும் மான்கள் விசயத்தில் அது தைரியமானது. ஆனால் ஓநாய்கள் விசயத்தில், நிலைமைகளைக் கணக்கில் கொள்வதில் கவனம் எடுத்துக்கொள்ளும். ஓநாய்களை விட நாய்கள் அதிகமாக இருக்கும்பட்சத்தில் அது தாக்குதல் மேற்கொள்ளும். ஆனால் வலுவான பக்க பலமில்லாதபோது, அதனுடைய சண்டைத் திறன்களைக் காட்டுவதில் அதற்கு ஆர்வமேதுமில்லை. எல்லோவிடம் ஜென்னுக்கு மிகவும் பிரியம். அது மனிதனைப் போன்றது. அதனுடைய விசுவாசக் குறை குறித்து அவனுக்கு வருத்தமேதும் கிடையாது. ஆனால் இளவேனிற் பருவம் தொடங்கியதிலிருந்து, எர்லாங்கிடம் அவனுக்கு

அளவற்ற பிரியம் ஏற்பட்டுவிட்டிருந்தது. அதனுடைய முரட்டு சுபாவம் மிகவும் தீவிரமானது. அது மனிதனைப் போன்று ஒருபோதும் இருப்பதில்லை. அவன் எழுந்து நின்று, தொலைநோக்கிக் கருவி மூலம் நாணல் வெளியை மேய்ந்தான்.

ஆனால் எர்லாங் தட்டுப்படவே இல்லை. ஜென் அவனுடைய கோட்டுக்குள் கைவிட்டு, ஆட்டுத்தோலிலான ஒரு சிறிய பையை வெளியில் எடுத்தான். அது தண்ணீர் மற்றும் எண்ணெயினால் பாதிக்கப்படாத ஓர் உணவுப் பை. கஸ்மாய் அவனுக்கு அளித்தது. அவனுடைய கோட்டுக்கு அடியில் அது வெதுவெதுப்பாக இருந்ததோடு, அவனுடைய ஆடைகளையும் கறைப்படுத்தவில்லை. அதிலிருந்து சில ரொட்டித் துண்டுகளையும், கொழுத்த இறைச்சியையும், இரண்டு பெரிய தயிர்க் கட்டிகளையும் ஜென் எடுத்தான். பாதி உணவை யாங்கிடம் கொடுத்தான். அவர்கள் சாப்பிட்டுக்கொண்டே, ஒரு புதிய திட்டத்தை உருவாக்க முயற்சித்தார்கள்.

ரொட்டியிலிருந்து ஒரு சிறு துண்டைப் பிய்த்து, வாயில் போட்டுக்கொண்டு, யாங், ‘‘இந்தக் குகை முழுவதும் தந்திரங்களும் ஏமாற்றுகளும் நிறைந்திருக்கின்றன. திகைப்பூட்டும் ஓர் இடம்தான், சந்தேகமேயில்லை’’ என்றான். ‘‘நாம் ஒருபோதும் நினைத்துப் பார்த்திராத இடங்களில்தான் அவை குட்டிகளை வைத்திருக் கின்றன. இதைக் கண்டுபிடிக்க நாம் நிறையவே சிரமப்பட்டிருக் கிறோம். இதை இப்படியே கை விட்டுவிட நான் தயாராக இல்லை. நாம் அவற்றைப் புகை மூலம் வெளிவரச் செய்ய முடியாததால், நாம் தண்ணீரை ஏன் உபயோகப்படுத்திப் பார்க்கக் கூடாது. நாம் ஒன்பது அல்லது பத்து தண்ணீர் வண்டிகளைக் கொண்டு வந்து ஊற்றினால் எல்லாக் குட்டிகளும் வெளியேறி வந்துவிடும்.’’

ஜென் கேலியாகச் சிரித்தான். ‘‘இந்த மண் பூமியிலா? ஒரு முழு நீர்த்தேக்கத்தையே இங்கு கொண்டு வந்தாலும் எல்லாவற்றையும் இந்த மண் உறிஞ்சிவிடும்.’’

ஒரு கணத்துக்குப் பின், மிகவும் உற்சாகமடைந்தவனாக, யாங், ‘‘ஏன் இப்படிச் செய்தாலென்ன. இப்போதுதான் பெரிய ஓநாய் வெளியேறி விட்டதே. நாம் எல்லோவை உள்ளே அனுப்பி, ஒவ்வொரு குட்டியாக வாயில் கவ்விக்கொண்டு வரச் செய்யலாமே’’ என்றான்.

இம்முறை வாய்விட்டுச் சிரித்தான் ஜென். ‘‘இந்த நாய் ஏற்கெனவே மனித குணாம்சங்களை வளர்த்துக்கொண்டு விட்டது. ஓநாய்த் தன்மையைப் பாதி இழந்துவிட்டது. நீ சொல்வதைப் போல், ஒரு நாய் உள்ளே சென்று குட்டிகளை எடுத்துவர முடியுமென்றால், பிறகு நாம் செய்ய வேண்டியதெல்லாம் குகையை விட்டுத் தாய் ஓநாய் வெளியில் செல்லும் வரை காத்திருந்துவிட்டு, நாயைக் குகைக்குள் அனுப்ப வேண்டியது மட்டும்தான். அப்படி நடக்க முடியுமென்றால், மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களின் கதை முடிந்துவிட்டிருக்கும்.’’

‘‘நாம் முயற்சித்துப் பார்க்கலாம்’’ என்றான் யாங் பிடிவாதமாக. ‘‘நமக்கு அதனால் என்ன நஷ்டம்.’’ எல்லோவை நுழைவாசலுக்கு வரும்படி யாங் அழைத்தான். வெடிமருந்தின் வாசனை கிட்டத்தட்ட இப்போது இல்லை. சுரங்கத்தை நோக்கிக் கை நீட்டி, ‘‘உள்ளே போய் அவற்றை எடுத்துக்கொண்டு வா’’ என்றான். யாங் என்ன சொல்கிறான் என்பதை அறிந்துகொண்ட எல்லோ, பயத்தில் பின்வாங்கியது. யாங், அதன் முன்னங்கால் களைப் பிடித்து, நுழைவாசலை நோக்கி இழுத்தான். எல்லோ, தன் கால்களுக்கிடையில் வாலை இடுக்கிக்கொண்டு முரண்டியது. ஜென் சென்னை நோக்கிப் பரிதாபமாகப் பார்த்தது; உத்தரவை நீக்கும்படி கெஞ்சியது.

‘‘நான் சொன்னது இப்போது புரிகிறதா? நீ உன் நேரத்தை வீணடித்துக்கொண்டிருக்கிறாய். முன்னோக்கிச் செல்வது கடினமானது; பின்னோக்கிச் செல்வது இன்னும் கடினமானது. நாய்கள் அவற்றின் மூல ஓநாய்த் தன்மைகளிலிருந்து வெகுதூரம் விலகி வந்துவிட்டன. இக்காலத்தில் நாய்கள் பலவீனமும் சோம்பலும் முட்டாள்தன்மையும் கொண்டுவிட்டன, மனிதர்களைப் போலவே.’’ எல்லோவைப் போக விட்டு விட்டு யாங் சொன்னான்: ‘‘எர்லாங் இங்கில்லாமல் போனதுதான் பிரச்சனை. அது இருந்தால் உள்ளே போயிருந்திருக்கும்.’’

‘‘வாஸ்தவம்தான். ஆனால் அது ஒன்றுவிடாமல் எல்லாவற்றையும் கொன்றுவிட்டிருக்கும். எனக்கு உயிரோடு ஒன்று வேண்டும்.’’

‘‘நீ சொல்வது சரிதான். அது, தான் பார்க்கும் ஒவ்வொரு ஓநாயையும் கொல்லவே ஆசைப்படுகிறது.’’

தனக்குக் கொடுக்கப்பட்ட இறைச்சியைத் தின்று முடித்து விட்டிருந்த எல்லோ, வெளியில் நோட்டம் விட நடந்து சென்றது. அது மோப்பம் பிடித்தபடியே சென்றுகொண்டிருந்தது. இதற்கிடையே, எர்லாங் இன்னமும் திரும்பி வரவில்லை. ஜென்னும் யாங்கும் நுழைவாசல் அருகே உட்கார்ந்தபடி காத்துக்கொண்டிருந் தார்கள். அடுத்து என்ன செய்வதென்று அவர்களுக்குத் தெரிய வில்லை. சுரங்கத்துக்குள் எந்த உயிரும் இருப்பதற்கான அறிகுறி ஏதுமில்லை. எல்லாக் குட்டிகளும் இறந்து போயிருக்க முடியாது. ஒன்று அல்லது இரண்டாவது புகையிலிருந்து தப்பிப் பிழைத் திருக்கும். அவை நிச்சயம் வெளியில் வர முயற்சிக்கும். மேலும் அரை மணி நேரம் கடந்தது. எதுவும் வெளிவரவில்லை. அவை எல்லாமே இறந்து போயிருக்க வேண்டும்; அல்லது ஆரம்பத்தி லிருந்தே அங்கு எதுவும் இல்லாமலிருந்திருக்க வேண்டுமென அவர்கள் யூகித்தார்கள்.

அவர்கள் தங்கள் இருப்பிடத்துக்குத் திரும்பத் தயாராகிக் கொண்டிருந்தபோது, எல்லோ குரைக்கும் சத்தம் கேட்டது. வடக்கே, குன்றுக்குப் பின்னால் எங்கிருந்தோ கேட்ட அதன் குரைப்பு, வேட்டை நாயொன்று தன் இரையைக் கண்டபோது வெளிப் படுத்துவதைப் போன்றிருந்தது. அவர்கள் உடனே தங்களுடைய குதிரைகள் மீதேறி விரைந்து சென்று குன்றின் உச்சியை அடைந்தார்கள். அங்கிருந்தும் அவர்களால் எல்லோவைப் பார்க்க முடியவில்லை. அதனால் அவர்கள் அதனுடைய சத்தத்தைப் பின்தொடர்ந்து சென்றனர். கொஞ்ச தூரம் சென்றதும், நிலம் பாறைகளால் அமைந்திருந்ததால், அதன்மீது ஓட குதிரைகள் மிகவும் சிரமப்பட்டன. வேறு வழியின்றி அவர்கள் குதிரைகளிலிருந்து இறங்கினர். குதிரைகள், அபாயகரமான மேடு பள்ளங்களாலான அந்தப் பாறைத் தளத்தில் தட்டுத் தடுமாறியதால் அவர்கள் அவற்றின் கடிவாளங்களை இறுகப் பற்றியிருந்தனர். ஆடோ, மாடோ, குதிரையோ அந்தப் பகுதியில் மேய்ச்சலுக்கு வந்ததில்லை. ஜென்னும் யாங்கும்கூட, இதுவரை அந்த இடத்துக்கு வந்ததில்லை.

எல்லோவின் குரைப்பொலி இப்போது அண்மையில் கேட்டது. ஆனால் அது கண்ணுக்குத் தட்டுப்படவில்லை. ‘‘இங்கிருக்கும் தடங்களைப் பார்க்கும்போது, அநேகமாக அது ஒரு நரியைப் பிடித்திருக்குமென்று நினைக்கிறேன்’’ என்றான்

ஜென். ‘‘நாம் இன்னும் கொஞ்சம் வேகமாகப் போகலாம். குறைந்தபட்சம், இந்தப் பயணம் சுத்தமாக வீணாகவில்லை என்றாவது இருக்கும்.’’

கடைசியில், ஒரு வழியாகத் தட்டுத் தடுமாறி ஒரு மலை இடுக்கின் அடிப்பகுதியை அவர்கள் வந்தடைந்தார்கள். அதன் மூலையில் அவர்கள் எல்லோவைக் கண்டுவிட்டனர். ஆனால் அது நின்றிருந்த கோலத்தைப் பார்த்ததும் அதிர்ச்சியடைந்தனர். அதன் வால் விடைத்துக்கொண்டிருக்க, ஒரு பெரிய, மிகவும் இருண்ட குகை முன் எல்லோ நின்றுகொண்டு விடாமல் குரைத்துக் கொண்டிருந்தது. அந்த மலை இடுக்கு இருண்டிருந்தது. அங்கு ஓநாய்கள் இருப்பது நிச்சயமென்று தோன்றியது. குளிர்ந்த காற்று கடந்து சென்றபோது தன் உடல் சிலிர்ப்பதை ஜென் உணர்ந்தான்.

அவர்கள் தங்களுடைய குதிரைகளைச் சங்கிலிகளால் கட்டிவிட்டு, ஆயுதங்களை எடுத்துக்கொண்டு குகை வாசலை நோக்கி ஓடினார்கள். நுழைவாசல், தெற்கு நோக்கியதாக, மூன்றடி உயரமும் இரண்டடி அகலமும் கொண்டதாக இருந்தது. இவ்வளவு பெரிய குகையை ஜென் அதுவரை பார்த்திருக்கவில்லை. குகை மிக மறைவாகவும், மிக நெருக்கத்தில் மட்டுமே தெரியக் கூடியதாகவும் இருந்தது. அவர்களைப் பார்த்ததில் உற்சாகமடைந்த எல்லோ, குதியாட்டம் போட்டது. ஜென்னைச் சுற்றிச் சுற்றி வந்தது. அதனுடைய கண்டுபிடிப்புக்காக அதற்கு விசேஷமாக ஏதேனும் அளிக்கப்பட வேண்டும் என்பதுபோல அதன் நடவடிக்கை இருந்தது.

‘‘நாம் எதைத் தேடிக்கொண்டிருக்கிறோமோ, அதைக் கண்டுபிடித்துவிட்டோம் என்றே நினைக்கிறேன்’’ என்றான் ஜென்.

‘‘நீ சொல்வது சரிதான். இதுதான் ஒரு உண்மையான ஓநாய்க் குகை போலிருக்கிறது. நரகத்தைப் போல இருண்டிருக்கிறது.’’

‘‘ஓநாய் வாசனையும் இங்கு கடுமையாக இருக்கிறது. நிச்சயம் அவை உள்ளே இருக்கின்றன.’’

நுழைவாசலுக்கு முன்னிருந்த சிறு மேட்டை ஜென் குனிந்து நோட்டம் விட்டான். துளை எந்தளவுக்குப் பெரிதாக இருக்கிறதோ, அந்தளவுக்கு மேட்டுத் தளமும் பெரிதாக இருக்கும். பள்ளிக்கூட மேசைகள் இரண்டைப் பக்கம் பக்கமாகச் சேர்த்துவைத்தால் எவ்வளவு இருக்குமோ அந்த அளவுக்கு

அந்தச் சிறு மேடு இருந்தது. அதன்மீது பனி படிந்திருக்கவில்லை. ஆனால் அதில் நிறைய ஓநாய்த் தடங்கள் காணப்பட்டன.

ஜென்னின் இதயம் துள்ளிக் குதித்தது. இதைத்தான் அவன் எதிர்பார்த்தான். விலங்குகளின் தடங்கள் மீது எல்லோ நடமாடி இருந்தாலும், இரண்டு அல்லது மூன்று பெரிய ஓநாய்களின் தடங்களையும், ஐந்து அல்லது ஆறு குட்டிகளின் தடங்களையும் அவர்களால் வேறுபடுத்திப் பார்க்க முடிந்தது. குட்டிகளின் பாதப் பதிவுகள் சிறியதாகவும், நளினமானதாகவும், மிக அழகாகவும் இருந்தன. கொஞ்ச நேரத்துக்கு முன்பு, குட்டிகள் இந்தச் சிறிய மேட்டுத் தளத்தில் விளையாடியிருக்கின்றன என்பது அவர்களுக்குத் தெரிந்தது. நாயின் குரைப்பு கேட்டு, அவை உள்ளே ஓடிச் சென்றிருக்க வேண்டும். அந்த மேட்டுத் தளத்தைத் தாய் ஓநாய் ஒரு விளையாட்டு மைதானத்தைப் போல் கட்டியிருப்பதாக ஜென்னுக்குத் தோன்றியது.

ஆட்டுக்குட்டியின் எலும்புத் துண்டுகளும், கடிக்கப்பட்ட தோலும் அங்குமிங்குமாகச் சிதறிக் கிடந்தன. ஓநாய்க்குட்டிகள் கொறித்துத் தின்றிருந்த மெல்லிய எலும்புகளும் காணப்பட்டன. மேட்டுத் தளத்துக்கு அருகே குட்டிகளின் விட்டைகளும் சிறு சிறு குவியல்களாகக் கிடந்தன.

ஜென், தன் முழங்காலில் தட்டியவாறே, ''நான் தேடிய ஓநாய்க்குட்டி இங்குதான் உள்ளே இருக்கிறது. தாய் ஓநாய் நம்மை சரியான ஏமாளிகளாக்கிவிட்டது'' என்றான்.

''நீ சொல்வது சரிதான். இதை நோக்கித்தான் அது ஓடி வந்திருக்க வேண்டும். ஆனால் அது மலையில் நம்மைப் பார்த்ததும், பாதையை மாற்றி ஒரு வெற்றுக் குகைக்கு நம்மை அழைத்துப் போய் நமக்கு வேடிக்கை காட்டிவிட்டது. அதுதான் உண்மையான குகை என்று நம்மை நம்ப வைப்பதற்காகத்தான் நாயை சண்டைக்கு இழுத்திருக்கிறது. தன்னுடைய குட்டிகளைக் காப்பாற்றுவதற்காகத் தாய் செய்யும் வேலைகளெல்லாம் செய்து நம்மை அடிமுட்டாள்களாக ஆக்கிவிட்டது.''

''நல்ல வேளையாக, கெட்டிக்கார நாய்கள் நம்மோடு வந்திருக்கின்றன. அவை மட்டும் இல்லையென்றால் நாம் வெறும் கையோடுதான் நம் இருப்பிடம் திரும்பியிருப்போம்.''

‘‘நமக்கு நேரம் அதிகமில்லை’’ என்றான் யாங், நுழைவாசலை உற்றுப் பார்த்தபடி. ‘‘நம்மிடம் இப்போது வெடிகுண்டுகளும் இல்லை. எனவே, இன்றைக்கு இதோடு நாம் முடித்துக் கொள்வோம். வேண்டுமானால் இந்தப் பகுதியைச் சுற்றிப் பார்த்து, வேறு ஏதாவது துளைகள் தென்பட்டால் அவற்றை அடைத்து விடலாம். நாளை நாம் ஏதாவது மேய்ப்பர்களிடம். குறிப்பாக அப்பாவிடம், அடுத்து நாம் என்ன செய்ய வேண்டுமென்று கேட்டுத் தெரிந்துகொண்டு வருவோம்.’’

ஜென்னுக்கு அந்த யோசனை அவ்வளவாகத் திருப்தி அளிக்க வில்லை. ‘‘நாம் ஒரே ஒரு விசயம் முயற்சி செய்து பார்க்கலாம். இந்தத் துளை வாசல் கொஞ்சம் பெரிதாக இருப்பதால், நாம் அதனுள்ளே ஊர்ந்து செல்ல முடியுமென்று நினைக்கிறேன். எர்லாங், தாய் ஓநாயோடு மோதிக்கொண்டிருக்கிறது. வேறு பெரிய ஓநாய் ஏதும் உள்ளே இருக்க வாய்ப்பில்லை. உன் இடுப்புத் துணியால் என் பாதங்களைச் சுற்றிக் கட்டி, என்னைக் குனிய வைத்து உள்ளே தள்ளிவிட்டால், ஒருவேளை நம்முடைய ஓநாய்க் குட்டிகள் நமக்குக் கிடைக்கக்கூடும். ஒருவேளை அவை நமக்குக் கிடைக்காவிட்டாலும், ஓநாய்க்குகை ஒன்று எப்படி அமைக்கப் பட்டிருக்கிறது என்பதையாவது நான் அறிந்துகொள்ள முடியும்.’’

யாங் கீ தலையசைத்து மறுத்தான். ‘‘அது தற்கொலைக்குச் சமமானது. உள்ளே வேறொரு ஓநாய் இருந்தால் என்ன செய்வது? இந்த நாள் முழுவதும் ஓநாய்கள் செய்த தந்திரங்கள் போதாதா? இந்தக் குகை அதனுடையதுதான் என்று எப்படி உன்னால் உறுதியாகச் சொல்ல முடியும்? இது இன்னொரு ஓநாயுடையதாக இருந்தால் என்ன செய்வது?’’

இரண்டு ஆண்டுகளுக்கும் மேலாக, ஜென் தனக்குள் அழுத்தி வைத்திருந்த ஆசை திடீரெனப் பொங்கி மேலெழுந்து வந்தது. ஆனால் அவனுடைய பயம் காரணமாக அது மீண்டும் அமிழ்ந்து போய்விட்டது. பற்களைக் கடித்தபடி, ஜென், ‘‘ஒரு மங்கோலியச் சிறுவனுக்கு ஓநாய்க் குகைக்குள் ஊர்ந்து செல்ல தைரியமிருக்கும் போது, நமக்கேன் இல்லை? என்ன நடந்தாலும் சரி, நான் உள்ளே போகப் போகிறேன். நீ கொஞ்சம் உதவினால் போதும். எதற்கும் என்னுடைய ஃப்ளாஷ் லைட்டையும் மண்வெட்டியையும் எடுத்துச் செல்கிறேன்.’’

‘‘உள்ளே செல்ல நீ தீர்மானமாக இருக்கும்பட்சத்தில், முதலில் நான் செல்கிறேன். உன்னை விட நான் வலுவானவன். நீயோ மிகவும் ஒல்லி.’’

‘‘ஒல்லியாக இருப்பதுதான் வசதி. ஒருவேளை உள்ளே செல்லச் செல்ல சுரங்கம் குறுகலானால் உன்னால் மேற்கொண்டு செல்ல முடியாது. அதனால் இனி எந்த விவாதமும் வேண்டாம். உடம்பு கொழுத்தவன் வெளியே இருக்க வேண்டியதுதான்.’’

யாங், வேண்டா வெறுப்பாக, ஜென்னிடம் ஃப்ளாஷ் லைட், மண்வெட்டி மற்றும் அவனுடைய பையைக் கொடுத்தான். பிறகு, ஜென்னுடைய நீண்ட இடுப்புத் துணியை அவனுடைய பாதங்களைச் சுற்றிக் கட்டினான். பின் தன்னுடைய நீண்ட இடுப்புத் துணியை, அதோடு சேர்த்துக் கட்டினான். உள்ளே செல்வதற்கு முன்பாக ஜென், ‘‘ஓநாய்க் குகைக்குள் நுழைவதற்கு நான் பயந்தால், ஒரு ஓநாய்க் குட்டியை அடைய எனக்கு அருகதை கிடையாது’’ என அறிவித்தான்.

‘‘உள்ளே பெரிய ஓநாய் ஏதுமிருந்தால், உடனே சத்தம் கொடுக்க மறந்துவிடாதே. ஏதும் பிரச்சனை என்றால் கால்களின் கயிற்றைச் சுண்டி விடு. உடனே உன்னை வெளியில் இழுத்து விடுகிறேன்’’ என்றான் யாங். ஜென், லைட்டை அடித்துக்கொண்டு, கைகளையும் கால்களையும் ஊன்றிக் குனிந்து, நாற்பது டிகிரி சரிவிலான அந்த சுரங்கப் பாதைக்குள் நுழைந்தான். ஓநாய் நெடி அவன் மூக்கைத் துளைத்து மூச்சு முட்டச் செய்தது. மூச்சை இழுத்துவிடப் பயந்தவனாக, அவன் மெதுவாக நகர்ந்து, அவ்வப்போது தலைமுடி துருத்திக்கொண்டிருந்த பாறையில் சிக்கிக்கொள்ள, வழுக்குச் சுவர்களைக் கடந்தான்.

அவன் சுரங்கத்துக்குள் போய்ச் சேர்ந்ததும், இன்னும் சில அடிகளில் நான் ஓநாய்க் குட்டிகளை எடுத்துவிடுவேன் என்று சந்தோஷமாக நினைத்துக்கொண்டான். ஜென் திரும்பிவிட விரும்பு கிறானா என தொடர்ந்து யாங் கேட்டுக்கொண்டே, துணிக் கயிறைக் கொஞ்சம் கொஞ்சமாக விட்டுக்கொண்டிருந்தான். முழங்கைகளால் இஞ்ச் இஞ்சாக நகர்ந்தபடியே, தொடர்ந்து செல்வதாக ஜென் பதில் கொடுத்துக்கொண்டிருந்தான்.

அவன் குகைக்குள் ஐந்து அல்லது ஆறு அடி தூரம் சென்றதும், அந்தப் பாதையின் முதல் திருப்பம் வந்தது. அங்கு வெளி வெளிச்சம் உள்ளே வரவில்லை. அவனுடைய ஃப்ளாஷ் லைட்டிலிருந்து வெளிப்பட்ட வெளிச்சம் படும் தூரம் வரை மட்டுமே அவனால் இப்போது சுரங்கத்தைப் பார்க்க முடிந்தது. அவன் அந்தத் திருப்பத்துக்குள் நுழைந்தபோது, அங்கு சுரங்கம் சமதளத்தில் இருந்தாலும் பக்கச் சுவர்கள் குறுகலாகவும், உயரம் குறைந்தும் இருந்தது. தலையைக் குனிந்தும், கைகளை உடலோடு சேர்த்து வைத்துக்கொண்டும் மட்டுமே இப்போது அவனால் நகர முடிந்தது. அவன் அவ்வாறு ஊர்ந்து சென்றபோது, அங்கிருந்த சுவர்களைப் பார்வையிட்டான். அவை, நுழைவாயிலை ஒட்டி உள்ளே இருந்த சுவர்களை விட வழுவழுப்பாகவும் திடமாகவும் மண்வெட்டியைக் கொண்டு செதுக்கியதைப் போலவும் இருந்தன. எல்லாக் கூரிய முனைகளும் வழுவழுப்பாகத் தேய்த்து விடப் பட்டிருந்தன. நிச்சயம் இது ஒரு தனி ஓநாய், தன் கோரைப் பற்களால் செய்து முடித்த காரியமாக இருக்க முடியாது. எண்ணற்ற ஓநாய்களால் ஆண், பெண், பெரிய மற்றும் சிறியவற்றால் நூறாண்டு களாகவோ, அதற்கும் மேலாகவோ செய்யப்பட்டதாகவே இருக்க முடியும். அவன் ஓநாய்களின் உலகத்திற்குள் நுழைந்துவிட்டிருந் தான். அதன் நெடி அவனைத் திணற அடித்துக்கொண்டிருந்தது.

அவன் மேற்கொண்டு உள்ளே செல்லச் செல்ல, அவனுடைய அச்சவுணர்வு அதிகரித்தது. அவனுக்குக் கீழிருந்த தரையில், பெரிய மற்றும் குட்டி ஓநாய்களின் தடங்கள் பதிந்திருந்தன. ஒருவேளை, ஒரு பெரிய ஓநாயை எதிர்கொள்ள நேரிட்டால், தன்னைக் காப்பாற்றிக்கொள்ள மண்வெட்டி போதுமானதாக இருக்குமா? சுரங்கம் மிகக் குறுகலாக இருந்ததால், ஒரு ஓநாயால் தன் கூரிய நகங்களை முழு ஆற்றலுடன் பயன்படுத்துவது சிரமம்தான். ஆனால் அதன் கூரிய பற்கள் விசயத்தை சுலபமாக முடித்துவிடும். தாய் ஓநாய் அநேகமாக, அவனைத் துண்டு துண்டாகக் கிழித்தெறிந்துவிடும். அவன் ஏன் இதைக் கணக்கில் கொள்ளவில்லை? அவனுக்கு வியர்க்க ஆரம்பித்தது. தயக்கம் ஏற்பட்டது. அவன் தன் காலைச் சுண்டினால் போதும், யாங் கீ அவனை இங்கிருந்து வெளியே இழுத்துவிடுவான். ஆனால், ஓநாய்க் குட்டிகளை நினைத்தபோது,

பின்வாங்கக்கூடாது என்ற உறுதி ஏற்பட்டது. பற்களைக் கடித்துக்கொண்டும், கால்களைத் தளர்த்திக்கொண்டும் தொடர்ந்து ஊர்ந்து சென்றான். இப்போது குகையின் சுவர்கள் அவனை இறுக்கின. காற்றோட்டம் குறைந்திருந்தது. ஓநாய் நெடி கடுமையாக இருந்தது. மூச்சுத் திணறி இறந்துவிடுவோமோ என்ற பயம் அவனைத் தொற்றிக்கொண்டது.

ஒரு திறப்பு மங்கலாகத் தென்பட்டது. ஒரு பெரிய ஓநாயால் அதனுள் நுழைந்துவிட முடியும். ஆனால் அவனுக்கு அது மிகச் சிறியதாக இருந்தது. மேய்ச்சல்நில மனிதர்களுக்கு எதிரான ஓநாய்களின் தற்காப்பாக அது அமைந்திருந்தது. தண்ணீர் மற்றும் புகையிலிருந்து குட்டிகளைப் பாதுகாக்கும் பொருட்டு அது அமைந்திருந்தது. இப்போது அது அவனைத் தடுத்துவிட்டிருந்தது. ஆனால் அவன் தன் முயற்சியைக் கை விடுவதாக இல்லை. அவன், மண்வெட்டியால் அவற்றை உடைக்க முயற்சித்தான். சுவர்கள்பெரும் பாறைகளால் ஏராளமான இடைவெளிகளோடு கட்டப் பட்டிருந்தன. அவை உறுதியானவையாகவும் ஆபத்தானவை யாகவும் இருந்தன. அவன் மூச்சுவிட சிரமப்பட்டான். அவன் பலமிழக்கத் தொடங்கினான். தொடர்ந்து அவனால் அதை உடைக்க முடிந்தாலும்கூட, அது அவன் குகைக்குள் சிக்கிக்கொள்வதாக முடியுமென நினைத்தான். ஓநாயின் பொறியில் மாட்டிக் கொள்வதாகிவிடும்.

ஜென் வாய் நிறைய காற்றை உள்ளிழுத்தான். ஆக்சிஜனை விடவும் ஓநாய் நெடிதான் அதிகம் உள்ளே போனது. தான் தோற்றுப் போய்விட்டதை அவன் உணர்ந்தான். இன்று அவனுக்கு ஓநாய்க் குட்டி இல்லை. ஆனால், அதற்குள்ளாக அவன் திரும்பிப் போகத் தயாராக இல்லை. குறைந்தபட்சம், குகையின் நுழைவை ஒட்டிய கட்டுமானத்தை நன்கு பார்வையிடுவது என்றும், ஒன்றிரண்டு குட்டிகள் பார்வையில் பட்டாலே போதுமென்றும் அவன் நினைத்தான். மீதமிருக்கிற தெம்பை இந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்ளப் பயன்படுத்துவதென்று முடிவெடுத்தான்.

குறுகலான அந்த நுழைவுக்குள் தலையையும் வலது கையையும் ஒட்ட வைத்துக்கொண்டு, ஃப்ளாஷ் லைட்டை உள்ளுக்குள் அடித்தான். ஆனால் அந்த நுழைவுக்கு அப்பால், அந்தப் பாதை மேல்நோக்கிச் சென்றது. எதுவுமே பார்வையில் படவில்லை. இக்காட்சி அவனுக்கு மிகுந்த சோர்வை அளித்தது.

அவன் தலையை நீட்டி, ஏதாவது சத்தம் கேட்கிறதா என்று பார்த்தான். ஒரு சத்தமும் இல்லை. ஓநாய்க் குட்டிகள் தூங்கி யிருக்கக்கூடும் அல்லது ஆபத்திலிருந்து ஒளிந்துகொள்ளும் சாதுர்யத்தை அவை அதற்குள்ளாக அறிந்துகொண்டிருக்க வேண்டும். அதாவது, பரிச்சயமில்லாத சத்தங்கள் கேட்கும்போது, அவை ஆடாமல் அசையாமல் இருக்கப் பழகியிருக்கக்கூடும். திடீரென அவனுக்கு மயக்கம் வருவது போலிருந்தது. பலத்தையெல்லாம் திரட்டி, பின்னால் நீட்டிக்கொண்டிருந்த கால்களை உதைத்தான். ஒரே நேரத்தில் கவலையும் அதே சமயம் பரவசமும் கொண்ட யாங், தன் முழு பலத்தோடு ஜென்னை துளைக்கு வெளியாக இழுத்து எடுத்தான். ஜென்னின் முகம் முழுவதும் அழுக்கு படிந்திருந்தது. நுழைவாசலில் உட்கார்ந்திருந்தபடி, காற்றை இழுத்து இழுத்து விட்டான் ஜென்.

‘‘முடியவே முடியாது. இது ஒரு சூன்யக் குகை. தொடர்ந்து நீண்டுகொண்டே போகிறது’’ என்று யாங்கிடம் சொன்னான் ஜென்.

அதிருப்தியான பார்வையுடன் யாங், இடுப்புத் துணியைக் கழற்றி அவனுடைய தோள்களின் மீது போட்டுக்கொண்டான்.

ஜென் ஓய்வெடுத்துக்கொண்டுவிட்ட பிறகு, இருவருமாகச்சேர்ந்து, இருநூறு அடி சுற்றளவுக்கு அந்தப் பகுதியில் வேறேதும் துளைகள் இருக்கிறதா என துருவித் துருவித் தேடிப் பார்த்தார்கள். வெளியேறுவதற்கான பெரிய வழியாக ஒன்று மட்டும் தென்பட்டது. அதைப் பாறைகள் கொண்டு மூடினார்கள். இரு வழிகளையும் அடைத்து முடித்ததும், ஓட்டைகளையும் பிளவுகளையும் மண் கொண்டு இறுக்கினர். தங்கள் இருப்பிடத்துக்குக் கிளம்புவதற்கு முன்னதாக, நாளை நாங்கள் நிறைய ஆட்களோடும், இன்னும் திறமையான வழிமுறைகளோடும் வருவோம் என்று தாய் ஓநாய்க்குத் தெரிவிப்பதுபோல, மண்வெட்டியை அந்த அடைப்பில் சொருகி வைத்தான்.

சூரியன் சாயத் தொடங்கியது. எர்லாங் இன்னும் திரும்பி வரவில்லை. ஒரு ஓநாயின் குரூரத்தையும் தந்திரத்தையும் சமாளிக்கும் அளவுக்கு ஒரு நாயின் தைரியமும் மூர்க்கமும் போதாது என்பதால் இருவரும் மிகுந்த கவலையும் பதற்றமும் அடைந்திருந்தனர். ஆனால் அவர்களால் இனியும் காத்திருக்க முடியாது. எல்லோவுடன் திரும்பிப் போவதைத் தவிர வேறு வழியில்லை. அவர்கள், தங்களுடைய இருப்பிடத்தை அடைவதற்குச் சற்று முன்பாக, ஜென்

தன்னுடைய கருவிகளை யாங்கிடம் ஒப்படைத்துவிட்டு, எல்லோவுடன் வீட்டுக்குச் செல்லும்படி கூறினான். அப்போது வானம் இருண்டிருந்தது. பிறகு, அவன் தன்னுடைய குதிரையில் பில்ஜியின் குடிலை நோக்கிச் சென்றான்.

# 10

ஜென் சென் தங்களுடைய சாகசங்களைச் சொல்லிக் கொண்டிருந்தபோது, தன்னுடைய பைப்பில் புகை பிடித்தபடி முதியவர் எதுவும் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தார். அதன்பிறகு, மிகவும் கோபமாக, பட்டாசுகளை அவர்கள் பயன்படுத்தியது குறித்துக் குற்றம் சாட்டினார். பைப் குமிழின் மூடியை எடுத்துவிட்டுத் தன் தாடியைத் தடவிக் கொடுத்தபடி பேசினார். ‘‘அது மிகவும் குரூரமான, மன்னிக்க முடியாத செயல். அதனுடைய குகையை விட்டு அதை நீங்கள் விரட்டியடித்திருக்கிறீர்கள். சீனர்களாகிய நீங்கள், உங்களுடைய சக்தி வாய்ந்த வெடிகளால், நுழைவாயிலை மண்ணால் மூடக்கூட அதற்கு அவகாசம் கொடுக்கவில்லை. வேறெந்த ஒன்றையும் விட, மங்கோலிய ஓநாய்கள் வெடிமருந்துக்குப் பயப்படுபவை. பிறந்த ஓநாய்க் குட்டிகள் இருக்கக்கூடிய ஒரு குகையில் நீங்கள் அப்படியானவற்றைப் பயன்படுத்தினால், அவை தப்பிக்கவே முயற்சிக்கும். அப்போது நீங்கள் எல்லாவற்றையுமே கூடப் பிடித்துவிடலாம். இந்த கதியில் தொடர்ந்தால், மேய்ச்சல் நிலத்திலுள்ள எல்லா ஓநாய்களும் அழிந்துவிட நீண்ட காலம் எடுக்காது. நாங்கள் ஓநாய்களைக் கொல்கிறோம்; ஆனால் இப்படி இல்லை. நாங்கள் அப்படிச் செய்தால், டெஞ்ஞர் கோபம் கொண்டு விடும். பின்னர், அதுவே மேய்ச்சல் நிலத்தின் முடிவாகிவிடும். இனி ஒருபோதும் இக்காரியத்தை மறுபடியும் செய்யாதே. நீங்கள் செய்ததை குதிரை மேய்ப்பர்களிடமோ அல்லது வேறு எவரிடமோசொல்ல வேண்டாம். இது போன்ற பயங்கரமான காரியத்தை அவர்கள் உங்களிடமிருந்து கற்றுக்கொள்வதை நான் விரும்ப வில்லை.’’

முதியவரின் வசையை எதிர்பார்த்திராத ஜென், அவர்களுடைய செயல் ஏற்படுத்தக்கூடிய விளைவுகளை உணர்ந்துகொண்டான். பில்ஜி தொடர்ந்து பேசினார். ‘‘இங்கு நாங்கள்பண்டிகை நாட்களைக்கூட வெடி வெடித்துக் கொண்டாடுவதில்லை. குடிபெயர்ந்து வந்தவர்களும், மாணவர்களாகிய நீங்களும்தான் அவற்றை உங்களோடு கொண்டு வந்தீர்கள். வெடிகுண்டுகளைப் பொறுத்தவரை, நாங்கள் கடுமையான கட்டுப்பாடுகளைக் கொண்டிருக்கிறோம். ஆனால், பட்டாசுகளுக்கு எவ்விதக் கட்டுப்பாடுகளும் இல்லாததால் அவை உள்ளே புகுந்து விட்டன. பட்டாசுகள், வெடிமருந்து,

மிளகுத்தூள் மற்றும் கண்ணீர்ப்புகை பெரிய அளவில் அறிமுகமாவது, ஓநாய்களின் இருப்பைக் கேள்விக்குறியாக்கிவிடும். அவை ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த மேய்ச்சல் நிலத்தில் ஆதிக்கம் கொண்டிருப்பவை. இங்கு, நாடோடி வாழ்க்கைதான் அடிப்படை. அதை வெடிமருந்தைப் போல மோசமாக அழிக்கக்கூடியது வேறெதுவுமில்லை. ஒரு மக்கள் இனத்தின் குலச்சின்னம் அழிக்கப்பட்டுவிட்டால், அவர்களுடைய ஆன்மா இறந்துவிடும். எங்களுடைய இருப்புக்கு நாங்கள் சார்ந்திருக்கும் இந்த மேய்ச்சல் நிலம் மிக எளிதாக அழிந்துவிடும்.''

தன் இமைகளில் படிந்திருந்த வியர்வையை ஜென் துடைத்துக்கொண்டான். அவருடைய பேச்சிலிருந்து எச்சரிக்கை அடைந்தவனாக, ''கோபப்படாதீர்கள் அப்பா. நான் டெஞ்ஞர் மீது சத்தியமாகச் சொல்கிறேன், நாங்கள் இனி ஒருபோதும் ஓநாய்க்குகையில் வெடிப்பொருட்களைப் பயன்படுத்த மாட்டோம். அதை எப்படி உபயோகிப்பதென்று எவருக்கும் சொல்லிக் கொடுக்கவும் மாட்டோம்'' என்றான்.

முதியவரின் முகத்தில் இறுக்கம் தணிந்தது. ''உங்களுடைய விலங்குக் கூட்டத்தையும், குதிரைகளையும் பாதுகாக்க நீங்கள் ஓநாய்களோடு சண்டை போடுவது எனக்குத் தெரியும். வளர்ப்பு மிருகங்களைப் பாதுகாப்பதை விடவும் மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பது மிகவும் முக்கியமானது. இளைஞர்களிடமும் குதிரை மேய்ப்பர்களிடமும், யார் அதிக ஓநாய்களைக் கொல்வது என்பதில் போட்டி நிலவுவதுபோல் தோன்றுகிறது. அவர்கள் என்ன செய் கிறார்கள் என்பது அவர்களுக்குத் தெரியவில்லை. ஓநாய்களைக் கொல்பவர்களின் வீரதீரம் பற்றியே வானொலி தெரிவித்துக் கொண்டிருக்கிறது. இனி இங்கு எங்களுக்கு விசயங்கள் மோசமாகப் போகிறது என்பது நிச்சயம்.''

கஸ்மாய் ஒரு கோப்பையில் ஆட்டுக்குட்டி இறைச்சி நூடுல்ஸ் கொண்டு வந்து ஜென்னிடம் கொடுத்தாள். அதேபோல முதியவருக்கும் ஒரு கோப்பை நூடுல்ஸ் கொடுத்தாள். ''அப்பா சொல்வதை இங்கு இப்போதெல்லாம் யாரும் காது கொடுத்துக் கேட்பதில்லை'' என்றாள் அவள். ''ஓநாய்களைக் கொல்லக் கூடாது என்று இவர் அவர்களிடம் சொல்கிறார். ஆனால் பின்னர் இவரே அதைச் செய்கிறார். அதனால் அவர்கள் இவர் வார்த்தைகளில் நம்பிக்கை வைப்பதில்லை.''

முதியவர் வேதனையோடு புன்னகைத்தார். ஜென்னைப் பார்த்து அவர், ‘‘நீ எப்படி? உனக்கு நான் சொல்வதில் நம்பிக்கை இருக்கிறதா?’’ என்று கேட்டார்.

‘‘எனக்கு நம்பிக்கை இருக்கிறது, முழுமையாக இருக்கிறது. ஓநாய்கள் இல்லாவிட்டால் மேய்ச்சல் நிலம் இறந்துவிடும். தொலைவில், தென்கிழக்குக்கு வெகு தொலைவில், ஆஸ்திரேலியா என்றொரு நாடு இருக்கிறது. அங்கும் அவர்களிடம் மேய்ச்சல் நிலம் இருந்தது. ஆனால் அங்கு ஓநாய்களோ, முயல்களோ இருக்க வில்லை. பின்னர் யாரோ ஒருவர் முயல்களை அந்த நாட்டுக்குக் கொண்டு வந்தார். ஆனால் அங்கு ஓநாய்கள் இல்லாததால், முயல்களின் இனப்பெருக்கம் அபரிமிதமாக இருந்தது. நாட்டுப் புறமெங்கும் முயல்கள் வளைகளைத் தோண்டி குட்டிகளைப் பெற்றுத் தள்ளின. எங்கு பார்த்தாலும் துளைகள்; தாவரங்களைத் தின்று தீர்த்தன. வளர்ப்பு மிருகங்களோடு விவசாயமும் மேற்கொண்டிருந்த மக்கள் பெரும் இழப்புக்கு ஆளாகினர். இதைத் தடுத்து நிறுத்த அரசாங்கம் எவ்வளவோ முயற்சிகள் மேற்கொண்டும் எவ்வித பலனுமில்லை. கடைசியாக, அவர்கள் நிலத்தில் புல் வளர்வதற்கு ஏதுவாகவும், அதேசமயம் முயல்கள் தோண்ட முடியாதபடியும் கம்பி வலை அடிக்கத் தொடங்கினர். முயல்கள், நிலத்துக்கடியிலுள்ள வளைகளுக்குள் சிக்கிக்கொண்டு, பசியால் வாடி மடிந்து போகுமென அவர்கள் நினைத்தனர். இந்தத் திட்டமும் தோற்றுப்போனது; மேய்ச்சல் நிலம் மிகவும் பரந்து பட்டது; அதன் எல்லாப் பகுதிகளையும் வலை கொண்டு மூட அரசாங்கத்தால் முடியவில்லை. மங்கோலிய மேய்ச்சல் நிலங்கள் அடர்த்தியாகவும் செழுமையாகவும் இருப்பதால், முயல்கள் நிறைய இருக்குமென்றுதான் நான் நினைத்திருந்தேன். ஆனால் நான் ஓலோன்புலாக் வந்த பிறகுதான், முயல் தொகை இங்கு மிகவும் குறைவு என்பதைப் பார்த்தேன். அதற்கு முக்கிய பங்களிப்பு செய்திருப்பது ஓநாய்கள் என்பதை நான் ஏற்றுக்கொள்கிறேன். நான் என்னுடைய விலங்குக் கூட்டத்தை மேய்க்கும்போது, ஓநாய்கள் முயல்களைப் பிடிப்பதை அடிக்கடி பார்த்திருக்கிறேன்.’’

முதியவர் ஏதோ சிந்தனையில் மூழ்கியிருப்பதுபோல் காணப்பட்டார். ‘‘ஆஸ்திரேலியா, ஆஸ்திரேலியா, ஆஸ்திரேலியா. நாளை நீ வரும்போது மறக்காமல் மேப் எடுத்துக்கொண்டு வா. அந்த இடத்தை நான் பார்க்க

ஆசைப்படுகிறேன். அடுத்த முறை யாராவது நம்முடைய ஓநாய்த் தொகையை முற்றிலுமாக அழித்துவிட விரும்புவதாகக் கூறினால், நான் ஆஸ்திரேலியா பற்றி அவர்களிடம் சொல்வேன். முயல்கள் பேரழிவை உண்டு பண்ணுபவை. அவை ஒரு வருடத்தில் பல குட்டிகள் போடும். பனிக்காலம் வரும்போது, எலி போன்றவை தங்கள் வளைகளை மூடிவிட்டுப் பனிக்காலம் முடியும்வரை தூங்கிக்கொண்டிருக்கும். ஆனால் முயல்கள் எப்போதும் உணவைத் தேடிக்கொண்டிருக்கும். எனினும், பனிக்காலத்தில் அவை ஓநாய்களுக்கு உணவாக அமைவதால், ஓநாய்களிடமிருந்து ஆடுகள் தப்பித்துக் கொள்கின்றன. ஓநாய்களால் எல்லா முயல்களையும் தின்றுவிட முடியாது என்றாலும் போதுமான அளவு தின்றுவிடுகின்றன. இல்லையென்றால் ஒவ்வொரு மூன்று எட்டுகளுக்கும் நாம் முயல் துளையில் கால் வைக்க வேண்டியிருக்கும்.''

''நாளை நான் உலக வரைபடம் எடுத்துக்கொண்டு வருகிறேன். உங்களுக்கு விருப்பமான எல்லாவற்றையும் அதில் நீங்கள் காணலாம்'' என ஜென் உறுதியளித்தான்.

''சரி. கடந்த சில நாட்களாக நீ கடுமையாக உழைத்திருக்கிறாய். வீட்டுக்குப் போய் ஓய்வெடு.''

அவன் கிளம்புவதற்குத் தயங்குவதைப் பார்த்த முதியவர், ''ஓநாய்க் குட்டிகளைப் பிடிப்பது எப்படி என்று கேட்க விரும்புகிறாய். அதுதானே?'' என்றார்.

ஜென் கொஞ்சம் தயங்கினான். பின்னர் ஆமாம் என்பது போலத் தலையாட்டினான். ''இதுதான் எனக்கு முதல் தடவை அப்பா. அதை எப்படிச் செய்யவேண்டுமென்பதை நீங்கள்தான் எனக்குச் சொல்லித் தர வேண்டும்.''

''உனக்குச் சொல்வதில் எனக்குச் சங்கடமேதுமில்லை. ஆனால் நீ இக்காரியத்தை அடிக்கடி செய்யக்கூடாதென விரும்புகிறேன்.''

''நிச்சயமாக'' என உறுதியளித்தான் ஜென்.

முதியவர் தேநீர் எடுத்துக்கொண்டு, புதிரான புன்னகையை வெளிப்படுத்தினார். ''நீ இப்போது என்னைப் பார்க்க வந்திருக்காவிட்டால், அந்த ஓநாய்க் குட்டிகள் மீது உன் கைகள் ஒருபோதும் பட்டிருக்காது. முதலில், தாய் ஓநாய்க்குக்

கால அவகாசம் கொடு. இது மாதிரி விசயங்களில், அடையாமல் விடுவதில்லை என்ற மனப்போக்கைக் கைவிடு.''

''அவற்றின் மீது ஒருபோதும் என் கைகள் படாது என்று சொல்கிறீர்களா?'' ஜென் படபடப்போடு கேட்டான்.

முதியவரின் முகத்திலிருந்து புன்னகை மறைந்தது. ''அது சரி, முதலாவது குகைக்குள் நீங்கள் வெடிகளை எறிந்திருக்கிறீர்கள். இரண்டாவது குகைக்குள் நீ ஊர்ந்து போயிருக்கிறாய். குகைக்குள் உன்னுடைய வாசனையை விட்டிருப்பதோடு, இரண்டு துளைகளையும் அடைத்து விட்டிருக்கிறீர்கள். இன்றிரவு அது இடம் மாறிவிடுமென்பது சர்வ நிச்சயம். அது இன்னொரு துளை தோண்டி சுரங்கத்தை அமைக்கும். அதன் பிறகு, ஒவ்வொரு குட்டியாக எடுத்துக்கொண்டு வந்து அந்தத் தற்காலிகக் குகையில் பாது காப்பாக வைக்கும். இன்னும் சில நாட்களில், அது புதிய நிரந்தரமான குகையை, மனிதர்களால் ஒருபோதும் கண்டுபிடிக்க முடியாத ஒன்றை அது கண்டறியும்.''

ஜென்னின் இதயம் மிகுந்த படபடப்புடன் துடித்தது. ''அந்தத் தற்காலிகக் குகையைக் கண்டுபிடித்துவிட முடியுமா?'' என்று ஜென் கேட்டான்.

''மனிதர்களால் முடியாது; ஒருவேளை நாய்களால் முடியலாம். அந்த எல்லோ நாயோடு, இரண்டு கருப்பு நாய்களையும் கூட்டிக்கொண்டு போனால் அநேகமாகக் கண்டுபிடித்துவிடலாம்.''

''அப்பா, நாளை நீங்கள் என்னோடு வந்தாலென்ன? யாங் கீ வேறு, ஓநாய் போதுமான அளவு அவனை ஏமாற்றிவிட்டதாகச் சொல்லிக்கொண்டிருக்கிறான்.''

''பொறிகளை சோதிப்பதற்காக நாளை நான் வடக்கே போக வேண்டும்'' என லேசாகச் சிரித்தபடி முதியவர் சொன்னார். ''நேற்றிரவு ஒரு ஓநாய் மாட்டிக்கொண்டு விட்டது. ஆனால் நான் அதைத் தொடவில்லை. வடக்கே உள்ள ஓநாய்கள் திரும்ப வர வேண்டும். அவை பசியோடிருக்கும். அதனால், எல்லாப் பொறிகளையும் நாளை நான் எடுத்துவிடப் போகிறேன். அடுத்த இரண்டு நாட்களுக்கு, வேட்டைக்குத் தயாராகும் வகையில், நீ ஓய்வெடுத்துக்கொண்டால் நல்லதென்று நினைக்கிறேன்.''

ஜென்னின் முகம் வெளிறியதை முதியவர் கவனித்தார்.

‘‘அல்லது நாளை நீயும் யாங் கீயும் போய் ஒரு சுற்றுப் பார்த்துவிட்டு வரலாம்’’ என்று அவனுக்குச் சமாதானமாகச் சொன்னார் முதியவர். ‘‘ஓநாய் வாடை கடுமையாக இருக்கும் என்பதால், நாய்கள் மோப்பம் பிடித்து அலைந்தால், நீங்கள் கண்டு பிடித்து விடுவீர்கள். புதிய குகைகள் மிக ஆழமாக இருக்காது. தன்னுடைய குட்டிகளை அது வேறொரு பழைய சுரங்கத்துக்கு மாற்றிவிட்டால், அதன் பிறகு நாம் அவற்றை ஒருபோதும் அடைய முடியாது. ஓநாய்க் குட்டிகளைத் திருடுவதில் அதிர்ஷ்டமும் கை கொடுக்க வேண்டும். ஒருவேளை, உங்களால் அவற்றை அடைய முடியாவிட்டால், நான் வந்து பார்க்கிறேன். நான் அங்கு இல்லாதபோது, ஓநாய்க் குகைக்குள் பாயர் ஊர்ந்து செல்ல நான் அனுமதிக்க மாட்டேன்.’’

பாயர், தன்னம்பிக்கை பொங்க, ‘‘நீங்கள் கண்ட துளைக்குள் நான் உடலை நெளித்து உள்ளே போயிருப்பேன். இன்று என்னையும் உங்களோடு கூட்டிக்கொண்டு போயிருந்தால், இந்நேரம் உங்கள் கைகளில் ஓநாய்க் குட்டிகள் இருந்திருக்கும்’’ என்றான்.

ஜென் குடிலுக்குத் திரும்பியபோது, யாங் கீ அவனுக்காகக் காத்திருந்தான். பில்ஜி தெரிவித்த தகவல்களையும் யோசனைகளையும் ஜென் கூறினான். ஆனால் யாங் கீயை அவை சமாதானப்படுத்தவில்லை.

நடு இரவில், தீவிரமாக வெளிப்பட்ட ஊளைச் சத்தத்தில் ஜென் விழித்துக்கொண்டான். ஒருவழியாக எர்லாங் வீடு திரும்பி விட்டதை ஜென் தெரிந்துகொண்டான். குடிலுக்கு வெளியே அதனுடைய வலுவான காலடிச் சத்தங்கள் ஜென்னுக்குக் கேட்டது. அவன் அதற்கு உணவளித்தாக வேண்டும். காயங்களுக்கு மருந்திட வேண்டும். ஆனால் அவன் மிகவும் களைத்துப்போயிருந்தான். எழுந்திருக்க முடியாமல் புரண்டு புரண்டு படுத்தான். எர்லாங் குரைப்பதை நிறுத்தியதும் மீண்டும் தூங்கிப்போனான்.

அடுத்த நாள் காலை ஜென் விழித்தபோது, யாங் கீ, காவோ ஜியான்சோங், டோர்ஜி ஆகியோர் அடுப்பைச் சுற்றி உட்கார்ந்து தேநீர் அருந்தியபடியும், இறைச்சித் துண்டங்களை சாப்பிட்டபடியும் ஓநாய்க் குட்டிகளைத் திருடுவது பற்றி விவாதித்துக் கொண்டிருந்தனர். டோர்ஜி, ‘குழு மூன்று’வில் மாடுகள்

மேய்ப்ப வனாக இருப்பவன். இருபத்தி நான்கு அல்லது இருபத்தைந்து வயதான அவன், அனுபவமும் புத்திக்கூர்மையும் கொண்டவன். அவன் அப்போதுதான் நடுநிலைப் பள்ளியில் பட்டப்படிப்பை முடித்துவிட்டு, மாடுகள் மேய்ப்பதற்காகத் திரும்ப வந்திருந்தான். மேலும் படைப்பிரிவின் கணக்கர் மற்றும் புகழ் வாய்ந்த வேட்டைக்காரன் என்ற இரட்டைப் பதவிகளையும் வகித்தான்.

அவனிடம் ஆலோசனை கேட்பதற்காக, யாங் கீ அவனை அழைத்திருந்தான். டோர்ஜியால் அவர்களுடைய ஆலோசகனாகவும், மெய்க்காப்பாளனாகவும் இருக்க முடியும். அவன் கூட இருப்பது, ஓநாய்க் குட்டிகளை அடைவதற்கான வாய்ப்பை மிகவும் கூடுதலாக்கும்.

ஜென் படுக்கையிலிருந்து எழுந்துகொண்டு, ஆடை அணிந்து, டோர்ஜியை வரவேற்றான்.

''நீ ஒரு ஓநாய்க் குகைக்குள் ஊர்ந்து திரிந்ததாகக் கேள்விப் பட்டேன்'' என்று புன்சிரிப்போடு டோர்ஜி சொன்னான். ''இப்போதிருந்து நீ அதிக கவனமாக இருக்க வேண்டும். தாய் ஓநாய் உன்னுடைய வாசனையைப் பிடித்துவிட்டதால், நீ எங்கு போனாலும் அது உன்னைச் சும்மா விடாது.''

ஒரு சிக்கலில் மாட்டிக்கொண்டுவிட்ட அதிர்ச்சியில் ஜென், ''அது என்னை ஒருநாள் கொல்லாமல் இருக்க வேண்டுமென்றால், நான் அதைக் கொன்றுவிட வேண்டும். இல்லையா?'' என்று கேட்டான்.

''நான் சும்மா உன்னை சீண்டினேன். மனிதர்களைப் பார்த்து ஓநாய் பயப்படும். அது உன்னுடைய வாசனையைப் பிடித்து விட்டாலும், அது உன்னை நெருங்கப் பயப்படவே செய்யும். அவை அந்த அளவு கெட்டிக்காரத்தனமானவை என்றால், நான் எப்போதோ தின்னப்பட்டிருப்பேன். எனக்குப் பதிமூணு அல்லது பதினாலு வயசு இருக்கும்போது, நான் ஒரு சுரங்கத்துக்குள் சென்று பிறந்த சில ஓநாய்க் குட்டிகளை எடுத்திருக்கிறேன். நான் இந்த இடத்தில் இன்னமும் இருந்துகொண்டுதானே இருக்கிறேன்.''

ஜென் ஆசுவாசமடைந்தான். ''இவ்வளவு வருடங்களில் நீ பல ஓநாய்களைக் கொன்றிருப்பாய் இல்லையா?''

‘‘அறுபது அல்லது எழுபது இருக்குமென்று நினைக்கிறேன். பிறந்த குட்டிகளில் ஐம்பது அல்லது அறுபது தேறும்.’’

‘‘ஓ! ஆக மொத்தம் நூற்றிருபது அல்லது நூற்றி முப்பது இருக்கும். இதற்காக உன்னைக் கணக்குத் தீர்க்க அவை ஒருபோதும் முயற்சிக்கவில்லையா?’’

‘‘வாஸ்தவம்தான். கடந்த பத்து வருடங்களில் ஓநாய்கள் எங்களுடைய ஏழு அல்லது எட்டு நாய்களையும் ஏராளமான ஆடுகளையும் கொன்றிருக்கின்றன.’’

‘‘நீ இப்படி எல்லா ஓநாய்களையும் கொன்றுவிட்டால், நீ இறந்த பிறகு உன் உடலை என்ன செய்வது?’’

‘‘யீமெங் மங்கோலியர்களாகிய நாங்கள், உங்களைப் போலத் தான். இறந்த உடல்களை நாங்கள் ஓநாய்களுக்குக் கொடுப்பதில்லை. சவப்பெட்டிக்குள் வைத்து அடக்கம் செய்வதுதான் எங்கள் வழக்கம். இங்குள்ள மங்கோலியர்கள் மிகவும் பின் தங்கியவர்கள்.’’

‘‘திபேத்தியர்கள் தங்களுடைய இறந்த உடல்களைக் கழுகுகளுக்கு உணவாக்குகின்றனர். இங்கு ஓநாய்களுக்குப் போடுகிறார்கள். நீ எல்லா ஓநாய்களையும் கொன்று குவித்தால், இங்குள்ள மக்கள் உன்னை வெறுக்க மாட்டார்களா?’’

‘‘ஓலோன்புலாக்கிலுள்ள எல்லா ஓநாய்களையும் கொன்று தீர்க்க முடியாது. அரசாங்கம் அவற்றை வேட்டையாடும்படி எங்களிடம் சொல்கிறது. ஒரு ஓநாயைக் கொன்றால், அது நூறு ஆடுகளைக் காப்பாற்றிய மாதிரி; ஒரு குகையிலுள்ள பிறந்த குட்டிகளை எடுத்தால், பத்து மந்தைகளைக் காப்பாற்றிய மாதிரி என அரசாங்கம் சொல்கிறது. நான் ஏராளமான ஓநாய்களைக் கொன்றிருப்பதாக நீ கருதினால், ‘பாயன் கோபி கம்யூன்’இன் ஓநாய் வேட்டைக்காரர்களின் சேம்பியனை நீ அவசியம் பார்க்க வேண்டும். சில வருடங்களுக்கு முன்பு, ஒரு இளவேனிற் காலத்தில், ஐந்து குகைகளிலிருந்து பிறந்த ஓநாய்க் குட்டிகளை எடுத்து வந்தான். நான் பத்தாண்டுகளில் செய்ய முடிந்த காரியமிது. பாயன் கோபியில் வெளியிலிருந்து வந்து ஏராளமான மக்கள் வாழ்கிறார்கள். மஞ்சூரியாவிலிருந்து வந்திருக்கும் மங்கோலியர்களும் அதில் அடங்குவர். அவர்களில் பலரும் ஓநாய்களை வேட்டை யாடுபவர்கள். அதனால்தான் இங்கிருப்பதை விட அங்கு ஓநாய்கள் குறைவு.’’

‘‘வீட்டு விலங்குகளின் பெருக்கம் அங்கு எப்படி?’’ ஜென் கேட்டான்.

‘‘இங்கிருப்பதைப் போல அவ்வளவு நன்றாக அங்கில்லை. அவர்களுடைய மேய்ச்சல் நிலம் மோசம். ஏனென்றால் முயல்களும் எலிகளும் அங்கு ஏராளம்.’’

ஜென் தன்னுடைய கோட்டை மாட்டிக்கொண்டு எர்லாங்கைக் கவனிப்பதற்காக வெளியில் வந்தான். அது தோலுரிக்கப்பட்ட ஒரு ஆட்டுக்குட்டியைத் தின்றுகொண்டிருந்தது. இளவேனிற் காலத்தில், காயத்தினாலோ, நோய்வாய்ப்பட்டோ அல்லது குளிரினாலோ சில நாட்களுக்கு ஒருமுறை ஒரு ஆட்டுக்குட்டி இறந்துவிடும். அவை நாய்களுக்கு உணவாகப் போடப்படும். ஆனால் தோலுரித்த பிறகே அவற்றை நாய்கள் சாப்பிடும். ஜென் அதைக் கூப்பிட் டான். ஆனால் அது ஏறெடுத்துப் பார்க்காமல், கால்களைப் பரப்பித் தரையில் கிடந்தபடி வாலை மட்டும் லேசாக ஆட்டியது. மாறாக, எல்லோவும் யிர்ரும் ஓடிவந்து, அவனுடைய தோள்களின்மீது பாதங்களை ஊன்றி நின்றன. யாங்கும் பிறருமாகச் சேர்ந்து ஏற்கெனவே எர்லாங்கின் காயங்களுக்கு சிகிச்சை அளித்துவிட்டனர். அதன்மீது கட்டப்பட்டிருந்த வலைத்துணிகளைப் பற்களால் அகற்ற அது தொடர்ந்து முயற்சித்துக்கொண்டிருந்தது. அப்போதுதான் அதனுடைய காயங்களை அதுவே நக்கிக் கொடுக்க முடியும். இந்த உத்வேகம் கொண்ட மிருகத்தை மீண்டும் மலைக்கு அழைத்துச் செல்வதில் பிரச்சனை ஏதும் இருக்கப் போவதில்லை.

காலை உணவுக்குப் பிறகு, கோம்புவைப் பார்த்து தன்னுடைய மந்தையைக் கவனித்துக¢கொள்ளும்படி கேட்டுக் கொள்வதற்காக, அண்டையிலுள்ள குடிலுக்கு ஜென் சென்றான். ஜென்னும் யாங்கும் ஓநாய்க் குட்டிகளை எடுப்பதில் தீர்மானமாக இருப்பதைப் பார்த்த காவோவுக்கும் ஆசை மேலிட்டது. அதனால் கோம்புவின் மகனிடம் தன் மந்தையைக் கவனிக்கும்படி அவன் கேட்டுக்கொண்டான். ஓலோன்புலாக்கைப் பொறுத்தவரை, ஓநாய்க் குட்டிகளைத் திருடிக்கொண்டு வந்துவிடக்கூடிய எவரும் புகழ் பெற்றுவிடுவார்கள்.

நால்வரும் தங்கள் கருவிகளோடும் ஆயுதங்களோடும் ஒரு நாளைக்குத் தேவையான உணவுப் பொருள்களோடும் இரண்டு நாய்களோடும் கரும்பாறை மலைக்குக் கிளம்பினர். அடர்த்தியான மேக மூட்டம் வானத்தில் நான்கைந்து

நாட்களாகக் கவிந்திருந்தது. சூரியன் ஊடுருவவில்லை. இருண்டிருந்த மேய்ச்சல் நிலத்தில் மேய்ப்பர்களின் முகங்கள், இளவேனிற்கால கருஞ்சிவப்பு வண்ணத் திலிருந்து விடுபட்டு செவ்வண்ணச் சிவப்புக்கு மாறியிருந்தன. பனியின் அடியில் முளைத்திருந்த புதிய புல், பச்சை நிறத்தை இழந்து மஞ்சளாக மாறியிருந்தது. ஆடுகள்கூட அதை மேயாது. டோர்ஜியின் முகத்தில் புன்னகை படர்ந்திருந்தது.

மேகங்களின் திரட்சியைப் பார்த்தபடி அவன் பேசினான். ‘‘இன்னும் சில நாட்களுக்கு உறைபனித் தளத்திலிருந்து ஓநாய்களின் வயிற்றுக்கு உணவு கிடைக்கப் போவதில்லை. நேற்றிரவு இராணுவ வீரர்களின் குடியிருப்பிலிருக்கும் நாய்கள் மிக மூர்க்கமாகக் குரைத்தன. ஓநாய்க் கூட்டம் திரும்பி வந்துவிட்டதென்பதில் சந்தேகமே இல்லை.’’

முதல் நாள் ஜென்னும் யாங்கும் சென்ற தடங்களைப் பின்தொடர்ந்து இரண்டு மணி நேரம் சென்ற பிறகு, முட்புதர்கள் மண்டிக்கிடந்த மலையிடுக்கை வந்தடைந்தனர். ஜென் விட்டுச் சென்ற மண்வெட்டி, அதே இடத்தில் அப்படியே குத்திட்டு நின்றது. ஆனால் மேட்டுத் தளத்தில் பெரிய ஓநாயின் புதிய தடங்கள் தென்பட்டன. பாறைகளாலும் மண்ணாலும் யாங்கும் ஜென்னும் சேர்ந்த மூடிய நுழைவாயில் கொஞ்சமும் கலையாமல் அப்படியே இருந்தது. மண்வெட்டியைப் பார்த்து அது பயந்துவிட்டிருக்கும். மூடிய நுழைவாயிலை அவர்கள் நெருங்கியபோது, நாய்களின் ஆவேசம் அதிகரித்தது. சுற்றிலும் மோப்பம் பிடிக்கத் தொடங்கின; எர்லாங் ஆவேசமாகக் காணப்பட்டது. அதனுடைய கண்கள் வஞ்சம் தீர்க்கும் வெறியில் மின்னின. பக்கத்திலிருந்த சரிவைக் காட்டி, ‘‘போ’’ என உத்தரவிட்டான். இரண்டு நாய்களும் மோப்பம் பிடித்தபடி குன்றின் உச்சியை நோக்கி ஓடின. இரண்டும் இரு வேறு பாதைகளில் சென்றன. அவர்கள் நால்வரும் இரண்டாவது நுழைவை நோக்கிச் சென்றனர். அங்கு அதிக அளவில் புதிய தடங்கள் காணப்பட்டன. அங்கும் அடைப்பு கலையாமல் அப்படியே இருந்தது. வேறு நுழைவுகள் இருக்கிறதா என்று பார்க்க மற்ற மூவரையும் டோர்ஜி அனுப்பினான். அந்தப் பகுதியை அவர்கள் இரண்டு சுற்றுகள் பார்த்து வருவதற்குள், எர்லாங்கும் எல்லோவும் வடக்கு நோக்கிக் குரைக்கத் தொடங்கின. தேடுவதை விட்டுவிட்டு, அவர்கள்

திரும்பி வந்து குன்றின்மீது குதிரைகளில் சென்றனர். ஜென், அவனுடைய மண்வெட்டியைத் தன்னுடன் எடுத்துக்கொண்டான்.

குன்றின் உச்சியை அவர்கள் அடைந்தபோது, நாய்கள் அதற்குப் பின்னால் கீழே இருப்பதைப் பார்த்தார்கள். பாத நகங்களால் தரையைப் பிறாண்டியபடி, எர்லாங் காட்டுத்தனமாகக் குரைத்தது. எல்லோவும் அதற்கு உதவிக்கொண்டிருந்தது. புழுதி பறந்தது. ‘‘அவை ஓநாய்க் குட்டிகளைக் கண்டுபிடித்து விட்டன’’ என டோர்ஜி, சரிவின் கீழாக அவர்கள் நால்வரும் குதிரையில் சென்றபோது, கத்தினான். திடமற்ற பாறைகளில் ஓடியபோது, குதிரைகள் கிட்டத்தட்ட தடுமாறி விழப் பார்த்தன. நாய்களுக்குப் பக்கத்தில் சென்று சேர்ந்தபோது, அவர்கள் சேணத்திலிருந்து நழுவிக் கீழே விழுந்தனர். நாய்கள், தங்களுடைய எஜமானர்களுக்கு வழி விடுவதற்குப் பதிலாக, விடாமல் தோண்டிக்கொண்டிருந்தன.

ஜென், எர்லாங்கை நோக்கிப் போய், தன் கைகளால் அதை அணைத்துக்கொண்டு, அங்கிருந்து நகர்த்தினான். அவன் பார்த்த காட்சி, அவனுக்கு சோர்வை ஏற்படுத்தியது. நிலத்தில் சில இஞ்சுகள் அகலமே கொண்ட ஒரு குழி வெளிப்பட்டிருந்தது. அங்கு மேட்டுத் தளமும் இல்லை. பனி படர்ந்திருந்த அத்தளத்தில் கொஞ்சம் மண் மட்டும் கிடந்தது.

மிகவும் கேலியாக காவோ, ‘‘இது ஒரு ஓநாய்க் குகை என்று நீ சொல்கிறாயா? முயல் வளை இதுபோலத்தான் இருக்கும்; அல்லது ஒரு எலிப் பொந்தாக இருக்கும்’’ என்றான்.

டோர்ஜி அமைதியாகச் சொன்னான். ‘‘நன்றாக உற்றுப் பார். இந்த மண் சமீபத்தில்தான் தோண்டப்பட்டிருக்கிறது. இங்குதான் அது தன் குட்டிகளைக் கொண்டு வந்து வைத்திருக்கிறது என நான் பந்தயம் கட்டத் தயார்.’’

ஜென்னுக்கு அவ்வளவு நிச்சயமாகத் தெரியவில்லை. ‘‘ஒரு புதிய துளை என்றாலும்கூட அது இன்னும் பெரிதாக இருக்க வேண்டும், இல்லையா? இதற்குள் ஒரு பெரிய ஓநாயால் எப்படி நுழைய முடியும்?’’

‘‘இது தற்காலிகமானதுதான்’’ என்றான் டோர்ஜி. ‘‘பெண் ஓநாய்கள், இதற்குள் நுழையுமளவுக்கு ஒல்லியானவை. அது இப்போதைக்குக்

குட்டிகளை இங்கு விட்டு வைத்திருக்கும். புதிய, நிரந்தரமான குகையை இன்னும் சில நாட்களில் அடைந்துவிடும்.''

''இது ஓநாயுடையதோ அல்லது முயலுடையதோ, அது பற்றி எனக்குக் கவலையில்லை'' என்று கூறியபடி மண்வெட்டியைக் கையிலெடுத்தான் யாங்.'' Òநாம் வெறுங்கையோடு திரும்பக் கூடாது. நான் இப்போது இதைத் தோண்டப் போகிறேன்.''

டோர்ஜி அவனருகில் போய் அவனைத் தடுத்து நிறுத்தினான். ''இது எவ்வளவு ஆழமாக இருக்கிறதென்பதையும், இதற்குள் ஏதும் இருக்கிறதா இல்லையா என்பதையும் நான் முதலில் பார்த்துவிடுகிறேன்.'' தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை எடுத்து, அதைத் தலைகீழாகத் திருப்பி, தடித்த பின் பாகத்தைத் துளைக்குள் நுழைத்தான். அதைச் சுற்றிலும் நகர்த்தினான். அது கிட்டத்தட்ட மூன்றடி தூரமளவுக்குச் சென்றதும் அவன் புன்னகைத்தான். ''அடியில் ஏதோ, மிருதுவான ஏதோ இருக்கிறது'' என்றான். ''நீ முயற்சி செய்து பார்.''

ஜென் அதை வாங்கிக்கொண்டு உள்ளுக்குள் திணித்தான். ஏதோ மிருதுவாக இருப்பதையும் துள்ளுவதையும் அவனும் உணர்ந்தான். அவனிடம் ஏற்பட்ட பரவசத்தை அவனால் அடக்க முடியவில்லை. ''அங்கு கீழே ஏதோ இருக்கிறது! நிச்சயமாக இருக்கிறது. அது ஓநாய்க் குட்டிகள் என்று நாம் நம்புவோம்.''

யாங்கும் காவோவும் அவர்கள் பங்குக்கு முயற்சி செய்து பார்த்துவிட்டு, அதே முடிவுக்கு வந்தனர். கீழே ஏதோ இருக்கிறது. அது உயிரோடு இருக்கிறது.

டோர்ஜி, தடி எவ்வளவு தூரம் உள்ளே போகிறது என்று பார்த்தான். நுழைவின் மீது கையை வைத்துக்கொண்டு, மெதுவாக அதை வெளியில் எடுத்து அளந்து பார்த்தான். பிறகு, ''இங்கே தோண்டுங்கள். ஆனால் மிகவும் கவனம். நாம் ஓநாய்க் குட்டிகளைக் காயப்படுத்திவிடக் கூடாது'' என்று கூறினான்.

யாங்கிடமிருந்து மண்வெட்டியைப் பிடுங்கிக்கொண்டு ஜென் கேட்டான், ''எவ்வளவு ஆழம்?''

''இரண்டடி. ஓநாய்க் குட்டிகளின் உடல் சூடே, உறைபனிப் பூமியை மிருதுவாக்கப் போதுமானது. எனவே, மெதுவாக, நிதானமாகத் தோண்டு.''

அந்த இடத்தின்மீது படிந்திருந்த பனியை அகற்றிவிட்டு, மண்வெட்டி முனையால் மெதுவாக அந்த இடத்தைக் கொத்தத் தொடங்கினான். கொஞ்சம் கொஞ்சமாக அழுத்தத்தைக் கூட்டினான். மண் வெளியேறி குழி விரிந்தது. நாய்கள் சுரங்கத்தை நோக்கி வெறியோடு பாய்ந்தபடி பயங்கரமாகக் குரைத்தன. ரத்தம் தலைக்கேறிக் கொப்பளிப்பதை ஜென் உணர்ந்தான். உள்ளே விழுந்த மண் குவியல்களின் இடைப்பட்ட பகுதியில், பழுப்புத் தோல்களோடும், இடையிடையே திட்டுத் திட்டான கருமையான ஓநாய் முடிகளோடும் சின்னஞ்சிறிய ஓநாய்க் குட்டிகள் பார்வையில் பட்டன. ''ஓநாய்க் குட்டிகள்! ஓநாய்க் குட்டிகள்!'' என ஒரு கணம் நம்ப முடியாதவர்களாகக் கத்தினர். ஜென்னும் யாங்கும் அசைவற்று நின்றிருந்தனர்.

''கனவு போலிருக்கிறது'' என்றான் யாங். ''நமக்கு உண்மையிலேயே ஓநாய்க் குட்டிகள் கிடைத்துவிட்டன.''

''பீஜிங் குருட்டுப் பூனைகளாகிய நீங்கள், மங்கோலிய ஓநாய்க் குட்டிகளைப் பிடிப்பீர்கள் என்று யாருமே நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள். நான் சண்டைக்குத் தயாராவதிலேயே என் நாட்களை வீணடித்துவிட்டேன்'' என்றான் காவோ.

ஜென் குந்தி உட்கார்ந்தான். கவனமாக மண்ணைத் தள்ளி விட்டு, எத்தனை இருக்கிறது என எண்ணிப் பார்த்தான். ஏழு இருந்தன. அவனுடைய உள்ளங்கையை விடக் கொஞ்சம்தான் அவை பெரிதாக இருந்தன. ஏழு சின்னஞ் சிறிய தலைகள் ஒன்றோடு ஒன்று நெருங்கி, அசையாத ஒரே உயிரி போல ஒரு கொத்தாக இருந்தன. அவற்றின் கண்கள் மெல்லிய சவ்வுகளால் மூடப்பட்டு, கொஞ்சம் திறந்திருந்தன. ஒளிர்நீலத்தோடு, மையத்தில் கரும்புள்ளிகள் காணப்பட்டன. ''நான் நீண்ட நாட்களாக உன்னை எதிர்பார்த்து இருந்திருக்கிறேன். இப்போது நீ இங்கிருக்கிறாய்'' என அமைதியாகச் சொன்னான் ஜென்.

''இவை பிறந்து மூன்று வாரங்கள் தானிருக்கும். அவற்றின் கண்கள் இப்போதுதான் திறக்க ஆரம்பிக்கின்றன'' என்றான் டோர்ஜி.

''அவை தூங்குகின்றனவா? ஏன் அவை அசையாமல் இருக்கின்றன?'' என்று கேட்டான் ஜென்.

‘‘ஓநாய்கள் பிறவியிலேயே பதுங்கிக்கொள்ளும் ஆற்றல் பெற்றவை. கொஞ்ச நேரம் முன்னால் எழுப்பப்பட்ட குரைப்புகளும் கூச்சல்களும் அவற்றை நிச்சயம் எழுப்பியிருக்கும். அவை இறந்துவிட்டதுபோல நாடகமாடுகின்றன. நீ என்னை நம்பாவிட்டால் ஒன்றை எடுத்துப் பார்’’ என்றான் டோர்ஜி.

அவனுடைய வாழ்வில் முதல் முறையாக, உயிரோடிருக்கும் ஒரு ஓநாயைக் கைகளில் எடுக்கப் போகிறான். அவன் தடுமாறினான். காதைப் பிடித்து ஒன்றைத் தூக்கி, அதைத் தன் உள்ளங்கையில் தாங்கிக்கொண்டான். அது அசையவில்லை. அதன் கால்கள் தளர்ந்து தொங்கின. ஓநாய்க்கான எந்த எதிர்வினையோ, முரண்டோ இல்லை. உயிரோடிருக்கும் ஓநாயைப் போலில்லாமல், செத்துவிட்ட பூனையைப் போல் கிடந்தது. எல்லோரும் நெருக்கமாகப் பார்க்கும் வகையில் அதை அவன் உயரத் தூக்கிப் பிடித்தான். அவன் அதற்கு முன்னதாக, இவ்வளவு நெருக்கமாக நாய்க் குட்டியைப் பார்த்திருக்கிறான். காட்டு விலங்குக்கும் வீட்டு விலங்குக்குமான வேறுபாட்டை அவன் உடனடியாக உணர்ந்தான். ஒரு நாய்க்குட்டி சுத்தமான, பளபளப்பான தோலோடு பிறக்கிறது; ஆனால் ஓநாய்க் குட்டி அப்படி இல்லை. அதன் தோல் அழகாகவும், பழுப்பு மென்மயிர் மிருதுவாகவும் இருப்பதென்னவோ வாஸ்தவம்தான். ஆனால் அதனோடு நீண்ட, முள் போன்ற கருத்த ஓநாய் முடிகளும் கலந்திருந்தன. ஓநாய்க் குட்டியின் தலை, கருப்பாகவும் மினுமினுப்பாகவும், அதன்மீது தார் பூசியது போல இருந்தது. அதன் கண்கள் கொஞ்சம்தான் திறந்திருந்தன என்றாலும், அதனுடைய சின்னஞ்சிறிய நகங்கள் முழு வடிவம் பெற்றிருந்தன.

தோண்டப்பட்ட நிலத்திலிருந்து அது எடுக்கப்பட்டிருந்ததால் அதன்மீது ஓநாய் வாசனையோடு புழுதி வாசனையும் சேர்ந்திருந்தது. எந்த ஒரு நாய்க்குட்டியும் ஒருபோதும் இப்படி நெடியாக இருந்ததில்லை. ஆனால் ஜென் சென்னின் கண்களில், அதுவே எந்தவொரு சிறிய உயிரியை விடவும் மிகவும் பரிசுத்தமானதாகவும், அரிய பொக்கிஷமாகவும், பேரழகாகவும் தென்பட்டது.

அவ்வளவு நேரம் அதன் காதுகளைப் பிடித்துத் தூக்கிப் பிடித்திருந்தபோதும், அது செத்துவிட்டதைப் போல, ஆடாமல் அசையாமல், சத்தமிடாமல் இருந்தது. ஆனால் அதனுடைய மார்பை அவன் தொட்டுப் பார்த்தபோது,

மெல்லிய இதயத் துடிப்பை உணர முடிந்தது. அச்சப்படும் வகையில் அது வேகமாகத் துடித்தது.

‘‘அதைத் தரையில் விடு; அப்போது அது என்ன செய்கிறதென்று பார்’’ என்றான் டோர்ஜி.

அது தரையைத் தொட்டவுடனேயே, அதனால் எவ்வளவு முடியுமோ எவ்வளவு வேகமாக, மனிதர்களிடமிருந்தும் நாய்களிடமிருந்தும் விலகி, விரைந்து ஊர்ந்தது. முடுக்கி விடப்பட்ட காரைப் போல, அது நகர்ந்தது. இரண்டு, மூன்று எட்டுகளில் எல்லோ அதன் மேலாக நின்றுகொண்டு, தன் பற்களை அதன்மீது பதிக்கப் பார்த்தது. நால்வரும் சத்தமிட்டு அதைத் தடுத்து நிறுத்தினார்கள்.

ஜென் ஓடிப்போய் அதை வாரி எடுத்துத் தன்னுடைய கித்தான் பையில் போட்டுக்கொண்டான். எல்லோ, ஜென்னைக் கோபமாக முறைத்துப் பார்த்தது. அதற்கு மாறாக, எர்லாங் அந்தக் குட்டியை வெறித்துப் பார்த்தபடி, தன் வாலை ஆட்டியது.

ஜென் தன்னுடைய பையைத் திறந்தான். மற்றவர்கள் உடனே காரியத்தில் இறங்கினார்கள். பீஜிங்கின் புறநகர்ப் பகுதிகளில் பறவைகளின் முட்டைகளைத் திருடும் பையன்களைப் போல அவர்கள் காணப்பட்டார்கள். அவர்கள் ஒவ்வொரு குட்டியாகக் காதைப் பிடித்துத் தூக்கி ஜென்னின் பையில் போட்டார்கள். குகை காலியானது. குகை நுழைவை மறுபடியும் மண் போட்டு மூடினார்கள். ஜென், தன்னுடைய சேணத்தில் பையைத் தொங்க விட்டான். அவர்கள் கிளம்பத் தயாரானார்கள்.

டோர்ஜி சுற்றிலும் பார்த்தான். ‘‘தாய் ஓநாய் இங்குதான் எங்கேயோ இருக்கும். அதனால் வேறு வழியில் சுற்றிப்போகலாம். இல்லையென்றால், அது நம் இருப்பிடம் வரை நம்மைப் பின்தொடரும்.’’

மூன்று மாணவர்களும், பக்கத்தில்தான் அபாயம் ஒளிந்திருக்கிறதென்பதை அப்போதுதான் உணர்ந்தார்கள். ஹேன் சீனர்களின் இதயங்களில் எந்த விலங்குகள் இத்தகைய பயத்தை ஏற்படுத்தினவோ, அவற்றின் சின்னஞ்சிறு குட்டிகள் ஜென்னின் கித்தான் பையில் இருந்துகொண்டிருந்தன.

# 11

மூன்று மாணவர்களும் குதிரைகள் மீதேறி, டோர்ஜியைப் பின்தொடர்ந்தார்கள். அவன் மேற்குத் திசையில், நாணல் நிலத்தினூடாகச் சென்று, பின் தெற்காகத் திரும்பிச் சென்றான். அவன் வேண்டுமென்றே, குளம்புத் தடங்கள் பதியாதிருக்கும் நிலப்பகுதி வழியாக அவர்களின் இருப்பிடம் நோக்கி அழைத்துச் சென்றான். அவர்கள் தவிர்க்க முடியாத பதற்றத்துடன் இருந்தார்கள். அதேசமயம் குற்றவுணர்விலிருந்தும் மனக் கலக்கத்தி லிருந்தும் விடுபட்டு, வெற்றியுணர்வு அவர்களை ஆக்ரமித்திருந்தது.

அவனுடைய ஆட்டுக்குட்டிகளில் ஒன்றை ஓநாய் தூக்கிக்கொண்டு ஓடியதை நினைத்தபோது, ஜென்னுக்கு ஆறுதலாக இருந்தது. ஒரு மேய்ப்பனாக, அவனுடைய மந்தையிலிருந்து தூக்கிச் சென்று கொல்லப்பட்ட ஆட்டுக்காக அவன் பழி தீர்த்துக்கொண்டான். ஒரு ஓநாய்க் குகையிலிருந்து பிறந்த அதன் குட்டிகளை எடுப்பதென்பது, அது மிகவும் சிரமமென்றாலும்கூட, அதே எண்ணிக்கையிலான பெரிய ஓநாய்களைக் கொல்லுவதை விட சுலபமானது. ஆனாலும் அவனிடம் ஒரு கேள்வி தொக்கி நின்றது: ஓநாய்ப் பெருக்கத்தைக் கட்டுப்படுத்தக்கூடிய வழிமுறையான இக்கொலைச் செயலை மேற்கொள்ள மங்கோலியர்கள் ஏன் தயக்கம் காட்டுகிறார்கள்? டோர்ஜியிடம் கேட்பதென்று தீர்மானித்தான்.

டோர்ஜி பதிலளித்தான். ‘‘ஓநாய்கள் மிகவும் தந்திரமிக்கவை. தங்களுடைய குட்டிகளை வயிற்றில் சுமக்க மிகச் சரியான நேரத்தை அவை தேர்ந்தெடுக்கின்றன. நாய்களும் ஓநாய்களும் பண்டைக் காலம் தொட்டே ஒரே குடும்பத்தைச் சார்ந்தவை என எல்லோரும்சொல்கின்றபோதிலும், நுட்பமான நடவடிக்கைகளில் ஓநாய்கள், நாய்களை விட எப்போதுமே மேம்பட்டவை. புத்தாண்டின் முதல் மாதத்தில் பாதி கடந்த பிறகு, நாய்கள் தங்களுடைய குட்டிகளை பிரசவிக்கின்றன. ஆனால் ஓநாய்களோ, இளவேனிற் காலம் தொடக்கம் கொள்ளும்போது பிரசவிக்கின்றன. அப்போது பனி உருகத் தொடங்கியிருக்கும். ஆடுகள் தம் குட்டிகளைக் கொண்டிருக்கும். கடினமான வேலைகளில் நாம் முழுமூச்சாக ஈடுபட்டிருக்கும் காலமும் அதுதான். ஆடுகள் குட்டிகளைப் பிரசவித்தவுடன், மக்கள் கொஞ்சம் ஆசுவாசமடையலாம்.

ஓநாய்க் குட்டிகள் தங்கள் குகைகளில் அப்போது வளரத் தொடங்குகின்றன. பெண் ஓநாய்கள் குட்டிகளை வயிற்றில் சுமந்திருக்கும் சமயத்தில் மட்டும்தான் ஓநாய்கள் குகைகளில் வாழ்கின்றன. குட்டிகளின் கண்கள் ஒரு மாதத்தில் திறக்கும். அதன் பிறகு கிட்டத்தட்ட ஒரு மாத அளவில், தாய் ஓநாயோடு சேர்ந்து அவையும் குசியாகக் கிளம்பிவிடும். இளவேனிற் காலத்தின் தொடக்கத்தில் குட்டிகளை ஈன்றெடுப்பதில் இன்னொரு சௌகரியமும் இருக்கிறது. புதிதாகப் பிறந்த ஆட்டுக்குட்டிகளைத் தாய் ஓநாய்கள் வேட்டையாடித் தங்களுடைய குட்டிகளுக்கு உணவாகத் தரவும், வேட்டையாடுவது எப்படி என்பதை அவற்றுக்குச் சொல்லிக் கொடுக்கவும் அப்போது அவற்றால் முடியும். இளம் ஆட்டுக்குட்டி, ஓநாய்க்குட்டிகளுக்கு மிகவும் அருமையான உணவு.''

யாங் திரும்பத் திரும்ப கொட்டாவி விட்டுக்கொண்டிருந்தான். குதிரையின் மீது அமர்ந்திருப்பதே ஜென்னுக்கு சிரமமாக இருந்தது. ஜென், திடீரென மிகவும் களைப்பாக உணர்ந்தான். ஆனால் அவனுடைய யோசனைகளிலிருந்து ஓநாய்களை அவனால் விலக்க முடியவில்லை. அவன் டோர்ஜியிடம் கேட்டான். ''இங்கிருக்கும் மேய்ப்பர்கள், ஓநாய்க் குட்டிகளை எடுப்பதில் அவ்வளவு உற்சாகம் காட்டுவதில்லையே, ஏன்?''

''இங்குள்ள மேய்ப்பர்கள், லாமாயிஸ்டுகள். கடந்த காலங்களில், ஒவ்வொரு குடும்பத்திலிருந்தும் ஒருவரை லாமாவாக ஆகும் பொருட்டு அனுப்பிவிடும் வழக்கமிருந்தது. லாமாயிஸ்டுகள் நல்லவற்றைச் செய்வதில் நம்பிக்கை உள்ளவர்கள். எவ்விதக் காரணமுமின்றி அவர்கள் உயிர்களைக் கொல்வதில்லை. ஓநாய்க் குட்டிகளை அதிகமாகக் கொல்வதென்பது, அவர்களுடைய ஆயுளைக் குறைத்துவிடும் என்ற நம்பிக்கை உடையவர்கள். நான் ஒரு லாமாயிஸ்டு இல்லை என்பதால் என் ஆயுள் குறைவது பற்றி நான் பயப்படுவதில்லை. எந்தவொரு கடைசி ஓநாய் கொல்லப் பட்டாலும், நான் அதற்காக ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விட மாட்டேன். மஞ்சூரியன் மங்கோலியர்கள், தங்கள் இறந்த உடல்களை ஓநாய்களுக்கு உணவாகப் போடுவதில்லை. பயிர்களை நடுவதற்கு அறிந்துகொண்டவுடனேயே, நாங்கள் இறந்த உடலை நிலத்தில் புதைக்கும் ஹேன் பாரம்பரியப் பழக்கத்தினை மேற்கொள்ளத் தொடங்கிவிட்டோம்.''

மிக மோசமான இடரொன்று, அவனைத் தொடர்ந்து வந்து கொண்டிருப்பதாக ஜென்னுக்குத் தோன்றியது. அவனுடைய மனதின் ஆழத்தில் குடியிருந்த பயம், கிளரப்பட்டு மேலெழுந்தது. நகரத்தில் ஓநாய்களோடு எவ்விதத் தொடர்புமின்றி இருந்த அவன், இப்போது ஏழு ஓநாய்க் குட்டிகளின் எஜமானனாகி இருக்கிறான். அவற்றின் தாயோ, கற்பனையிலும் நினைத்துப் பார்க்க முடியாத அளவு மூர்க்கமும் தந்திரமும் கொண்டது. அவனுடைய பையி லிருக்கும் ஓநாய்க் குட்டிகள், ஓநாய்க் கூட்டத்தின் தலைமைக்குப் பிறந்தவையாக இருக்காதென்று எவரால் சொல்ல முடியும்? அந்த இனத்தின் மிக அருமையான குட்டிகளாக அவை இருக்கலாம். ஓநாய்க் குட்டியொன்றை அடைவதில் அவன் கொண்டிருந்த தீராத வேட்கை மட்டும் இல்லாதிருந்தால், நிச்சயம் இக்குட்டிகள் மனிதர்களின் கைகளுக்குள் அகப்பட்டிருக்காது; அவை வளர்ந்து பெரியவையாகி துணிச்சல்மிக்க போராளிகளாக உருவாகியிருக்கும். இவனுடைய வருகை அவற்றின் விதியை மாற்றிவிட்டது. மேய்ச்சல் நில ஓநாய்களின் நிரந்தர எதிரியாக அவன் இப்போது ஆகி விட்டான். ஓலோன்புலாக்கிலுள்ள ஓநாய்க் குடும்பங்கள், அமைதி யிழந்த தாய் ஓநாயின் தலைமையில், நள்ளிரவின் இருட்டில் அவனைத் தேடி வந்து, அவனுக்கான தக்க தண்டனையைக் கோரும். அவனுடைய ஆன்மாவின் விளிம்புகளை என்றென்றைக்கும் அவை குத்திக்கொண்டே இருக்கும். அவன் பயங்கரமான ஒரு பாவத்தைச் செய்துவிட்டதாகத் திடீரென உணர்ந்தான்.

மதிய அளவில் அவர்கள், தங்களுடைய குடிலுக்குத் திரும்பினார்கள். சுவற்றில் தன்னுடைய பையைத் தொங்கவிட்டான் ஜென். அடுப்பைச் சுற்றி உட்கார்ந்துகொண்டு, நால்வரும் சூடான தேனீரைக் குடித்தபடியும், பொறித்த இறைச்சியை சாப்பிட்டபடியும், ஏழு ஓநாய்க் குட்டிகளையும் என்ன செய்வதென்று விவாதித்துக் கொண்டிருந்தனர்.

“இதில் பேசுவதற்கு என்ன இருக்கிறது. நாம் முதலில் சாப்பிட்டு முடிப்போம். பிறகு, நான் என்ன செய்கிறேன் என்று பாருங்கள். அதற்கு இரண்டு நிமிடம்கூட எடுக்காது” என்றான் டோர்ஜி.

ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதில், அவன் எதிர்பார்த்திருந்த சிக்கலை ஜென் இப்போது எதிர்கொண்டான். அவனுக்கு அந்த எண்ணம் முதன் முதலாக

மனதில் ஏற்பட்டதிலிருந்தே, மேய்ப்பர்கள், கட்சி அதிகாரிகள் மற்றும் சக மாணவர்களிடமிருந்து அதற்கு எதிர்ப்பு வருமென்பது அவனுக்குத் தெரியும். ஒரு மேம்பட்ட நோக்கத்துக்காக எவரேனும் ஒருவர் ஓநாய்க்குட்டியை வளர்க்க எண்ணினால் அது பரிசீலிக்கப்படலாம். கலாசாரப் புரட்சியின் போதான ஆரம்ப வருடங்களில், பீஜிங் மிருகக்காட்சி சாலை ஊழியர்கள், அநாதையான ஒரு புலிக் குட்டியையும், அதற்குப் பாலூட்ட ஒரு தாய் நாயையும் ஒரே கூண்டில் அடைத்து வைத்திருந்தார்கள். ஆனால் அது ஒரு தீவிர அரசியல் பிரச்சனை யாக உருவெடுத்துவிட்டது. வர்க்க ஒற்றுமை குறித்த பிற்போக்குக் கொள்கையினை இச்செயல் உயர்த்திப் பிடிப்பதாகக் கருதப்பட்டு, அதற்காக அந்த ஊழியர்கள் பலத்த விமர்சனத்துக்கு ஆளானார்கள். ஆடுகளும் மாடுகளும் நாய்களும் நிறைந்திருக்கும் இடத்தில் ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதென்பது, நண்பனையும் பகைவனையும் வேறுபடுத்திப் பார்க்கத் தெரியாத செயலாகத்தான் அடையாளம் காணப்படுமோ? எதிரியையும் நண்பனாகக் கருத வேண்டுமென்ற கருத்தை நான் முன்வைப்பதாகக் கருதப்படுமோ? ஓநாய்கள் மேய்ப்பர்களுடைய பகைவர்கள் என்றாலும், அவைதாம் அவர்கள் பயபக்தியுடன் வணங்கக்கூடிய தெய்வங்கள், அவர்களுடைய குலச்சின்னம் (குறிப்பாக, முதியவர்களின் மனங்களில்), சொர்க் கத்துக்குச் செல்வதற்கான பாலம், அவர்கள் வழிபடக்கூடியவை; எனில், அவற்றை எப்படி வீட்டு நாயைப் போல செல்லப் பிராணி யாக வளர்க்க முடியும்? மதம், உற்பத்தி, பாதுகாப்பு ஆகியவற்றைக் கருதிப் பார்க்கும்போது, ‘புலியை வளர்ப்பது ஆபத்தை வரவழைக்கும்; ஓநாயை வளர்ப்பது பேரழிவைக் கொண்டுவரும்’ என்ற சொலவடையைத்தான் ஒருவர் கணக்கில் கொள்ள வேண்டியது அவசியமாகிறது. இவற்றையெல்லாம் விட, ஜென்னுக்கு மிக முக்கியமான விசயமாகத் தோன்றுவது, அவன் ஒரு ஓநாய்க் குட்டியை வளர்க்க முடிவெடுத்தால் பில்ஜி அதன் பின்னரும் அவனைத் தன்னுடைய இரண்டாவது மகனாகக் கருதுவாரா என்பதுதான்.

மங்கோலியர்கள் புனிதமாகக் கருதுவதை இகழும் நோக்கமோ, அவர்களுடைய சமயம் சார்ந்த நம்பிக்கைகளை மாசுபடுத்தும் ஆசையோ அவனுக்கில்லை. அதற்கு நேர் மாறானதே அவனுடைய நோக்கம்: மங்கோலிய மக்களின் குலச்சின்னம் மீது அவனுடைய மனதில் பெரும் மதிப்பு ஆழமாக

வீற்றிருந்ததும் நிழல்கள் போல அவை வந்து மறையும் விந்தை மற்றும் ஓநாய்களைச் சுற்றிச் சூழ்ந்திருந்த மாயங்கள்மீது அவனுக்கு ஏற்பட்டுவிட்டிருந்த கவர்ச்சியுமே ஒரு ஓநாய்க்குட்டியை வளர்க்கும் ஆர்வத்தை அவனுள் கிளறிவிட்டிருந்தன. ஆனால், மேய்ப்பர்களோடு, குறிப்பாக அந்த முதியவரோடு, பகைமை உருவாகாமல் இருக்கும் வகையில் அவன் சரியான காரணங்களைக் கொண்டிருக்க வேண்டியது முக்கியம்.

பிறந்த ஓநாய்க்குட்டிகளைக் கண்டடைவதற்கு முன்பாகவே, நாட்கணக்கில் தன்னுடைய மூளையைப் பிறாண்டி, அவர்கள் நியாயம்தான் என்று கருதக்கூடிய வகையில் அவன் ஒரு விவாதத்தை இறுதியாக உருவாக்கியிருந்தான்: ஓநாய் வேட்டைக்கான ஒரு புதிய விலங்கினத்தை, கலப்பின வேட்டை ஓநாயை, உருவாக்கக்கூடிய அறிவியல் பரிசோதனையாக, ஓநாய்க் குட்டியை வளர்ப்பது அமையும். வேட்டை ஓநாய்கள் மேய்ச்சல் நிலத்தில் மகத்தான வரவேற்பைப் பெறும். அவை ஓநாய்களையோ நரிகளையோ வேட்டையாடும்போது, வேகமாகவும் படுமூர்க்கமாகவும் செயல்பட்டு, பத்துக்கு ஒன்பதுமுறை வெற்றிகரமாக முடிக்கும். ஒருமுறை, எல்லைப் பாதுகாப்பு நிலைய படைத்தலைவர் சாவோ, இரண்டு படைவீரர்கள் மற்றும் இரண்டு வேட்டை ஓநாய்களோடு, வளர்ப்பு விலங்குகளின் பிராந்தியங்களுக்குக் குடிமக்கள் படையினரின் பணிகளை மேற்பார்வையிடுவதற்காகச் சென்றார். போகும் வழியில் அவருடைய கலப்பின ஓநாய்கள் நான்கு பெரிய நரிகளைப் பிடித்தன. படைத்தலைவர் அவருடைய அந்தக் கண்காணிப்புப் பயணத்தில் ஓரிடத்திலிருந்து மற்றொரு இடத்துக்குச் செல்லும் வழியில், அவரைக் காணும் மேய்ப்பர்கள் பிரமிக்கும் வகையில், நரிகளின் தோல்களை உரிப்பார். மேய்ப்பர்கள் எல்லோருக்குமே அப்படியான வேட்டை ஓநாய்களில் ஒன்றை அடைய விருப்பமிருந்ததில் ஆச்சரியப்பட ஏதுமில்லை. ஆனால் அக்காலகட்டத்தில் அது ஒரு அரிய விலங்கினமாக இருந்தது மட்டுமல்ல, அது இராணுவத்துக்கு உரியதாகக் கருதப்பட்டது. அதனால், மேய்ப்பர்களுக்கு வேட்டை ஓநாய்க்குட்டி கிடைப்பதற்கு ஒருபோதும் வாய்ப்பில்லாமல் இருந்தது. ஆண் ஓநாயும் பெண் நாயும் சேர்வதில் உருவாவதுதானே வேட்டை ஓநாய், வேறென்ன? ஆக, அவன் ஒரு ஆண் ஓநாயை வளர்த்து, அது பெரிதானதும், ஒரு பெண் நாயுடன் சேர வைப்பான்.

அது வேட்டை ஓநாயைப் பெற்றெடுக்கும். அவன் அவற்றை மேய்ப்பர்களுக்கு அன்பளிப் பாகத் தருவான். மங்கோலிய ஓநாய்கள்தான் உலகிலேயே மிக அருமையானவை என்பதால், அவனுடைய இந்த சோதனை முயற்சி வெற்றியடையும் பட்சத்தில், ஜெர்மன் மற்றும் சோவியத் நாடுகளின் ராணுவ நாய்களை விடவும் மேம்பட்ட ஓர் விலங்கினத்தை அவனால் உருவாக்க முடியும். அதன் மூலம் வளர்ப்பு விலங்குப் பண்ணையைக்கூட ஒரு புதிய வடிவத்தில் வளர்ச்சி அடையச் செய்ய முடியும்.

ஜென் உட்கார்ந்து தேனீர் அருந்தியபடி, டோர்ஜியிடம், ‘‘ஆறு குட்டிகளை நீ கழித்துக் கட்டிவிடு. ஆனால், மிக வலுவான ஒரு ஆண் குட்டியை மட்டும் என்னிடம் தா. நான் அதை வளர்க்க விரும்புகிறேன்’’ என்றான்.

டோர்ஜி, எதுவும் பேசாமல், பத்து வினாடிகளுக்கு ஜென்னை உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தான். பிறகு, ‘‘நீ ஒரு ஓநாயை வளர்க்க விரும்புகிறாயா?’’ என்று கேட்டான்.

‘‘ஆம். அது வளர்ந்து பெரிதானதும், அதை நாய்களோடு இனச்சேர்க்கை செய்ய வைப்பேன். புதிய வேட்டை ஓநாய்க் குட்டிகள் பிறந்து பெருகும். அதன்பிறகு, ஒவ்வொரு மங்கோலியக் குடும்பமும் அதில் ஒன்றை அடைய விரும்பும்.’’

டோர்ஜியின் கண்கள், வேட்டையின்போது நாய் தன் இரையைக் கண்டதும் ஏற்படுவதைப் போல, பிரகாசித்தன. ஒருகணம் அவன் மூச்சற்றிருந்தான். ‘‘என்ன ஒரு அருமையான யோசனை! நம் எல்லோருக்கும் வேட்டை ஓநாய்கள் கிடைத்து விட்டால், ஓநாய்களையும் நரிகளையும் பிடிப்பதென்பது, ஒரு குழந்தை விளையாட்டுப் போல ஆகிவிடும். வேட்டை ஓநாய்க் குட்டிகளை விற்பதும், நம்மை ஒருநாள் பணக்காரர்களாக்கிவிடும்.’’

‘‘நான் இதைச் செய்யப் படைப்பிரிவு அனுமதிக்காவிட்டால் என்ன செய்வது?’’

‘‘ஓநாய்களோடு சண்டையிட, நீ ஒரு ஓநாயை வளர்க்கப் போவதாகச் சொல்’’ என்றான் டோர்ஜி. ‘‘நம்முடைய ஒட்டுமொத்த சொத்துகளையும் பாதுகாப்பதற்கான ஒரு நடவடிக்கை. இதை எதிர்ப்பவர்கள் துரதிர்ஷ்டசாலிகள். குட்டிகளின் இனப்பெருக்கம் ஆரம்பிக்கும்போது, அது அவர்களுக்குக் கிடைக்காது.’’

‘‘ஒரு குட்டியை வளர்க்கலாமென உனக்கு யோசனை இல்லையா?’’ என சிரித்தபடி கேட்டான் யாங் கீ.

‘‘நீங்கள் ஒன்றை வளர்த்தால், நானும் ஒன்றை வளர்க்கிறேன்’’ என்றான் டோர்ஜி.

தன்னுடைய முஷ்டியைக் கையில் குத்தியபடி உற்சாகத்துடன் ஜென், ‘‘அற்புதம்!’’ என்றான். ‘‘இரண்டு குடில்கள் இதில் சம்பந்தப் படும்போது, நம்முடைய வெற்றி வாய்ப்பு இரு மடங்காகும்.’’ சற்றே இடைவெளி விட்டு, ‘‘ஆனால் ஒரு ஆண் ஓநாய், பெண் நாயுடன் இணையுமா என்பதற்குத்தான் எவ்வித உத்திரவாதமும் இல்லை’’ என்றான்.

‘‘அதுபற்றிக் கவலைப்பட வேண்டாம். அதை நான் பார்த்துக் கொள்கிறேன். மூன்று வருடங்களுக்கு முன்பு, ஒரு பயங்கரமான பெண் நாயொன்று எனக்குக் கிடைத்தது. என்னிடமிருந்த வேகமும் பலமும் கொண்ட ஒரு ஆண் நாயுடன் அதை இணைய வைக்க விரும்பினேன். ஆனால் எங்களிடம் ஒட்டு மொத்தமாகப் பத்து நாய்கள் இருந்தன; அவற்றில் நல்லதும் மோசமானதுமாக எட்டு ஆண் நாய்கள். அந்தப் பெண் நாய், மோசமான ஒரு ஆண் நாயுடன் இணைய முடிவெடுத்துவிட்டால், அது எவ்வளவு வீணானதாகி விடும். அதனால் நான் ஒரு காரியம் செய்தேன். பெண் நாய் உடல் சூடேறியிருந்தபோது, பாதி தோண்டப்பட்ட ஒரு கிணற்றை நான் கண்டுபிடித்தேன். ஒரு குடிலின் அளவில் இருந்த அந்தக் கிணறு, இரண்டாள் உயரத்துக்கு ஆழமாக இருந்தது. நான் அந்தப் பெண் நாயையும், என்னுடைய ஒரு நல்ல ஆண் நாயையும் அந்தக் கிணற்றுக்குள் விட்டேன். இறந்த ஆட்டையும் அதற்குள் போட்டேன். இருபது நாட்களுக்கு அவற்றுக்கு வேண்டிய உணவும் தண்ணீரும் இருக்கும் வகையில் பார்த்துக்கொண்டேன். அவற்றை நான் வெளியில் எடுத்தபோது, பெண் நாய் கர்ப்பமாகி இருந்தது. புத்தாண்டுக்கு சற்று முன்பாக, அது அருமையான எட்டுக் குட்டிகள் போட்டது. நான்கு பெண் நாய்களைக் கொன்றுவிட்டு, நான்கு ஆண் நாய்களை வைத்துக்கொண்டேன். ஒரு டஜனுக்கும் மேற்பட்ட எங்களுடைய எல்லா நாய்களிலும் அவையே பெரிதாகவும், துரித வேகம் கொண்டவையாகவும், மிகவும் பலம் பொருந்தியவை யாகவும் இருக்கின்றன. ஒரு ஆண்டில் நாங்கள் கைப்பற்றும் ஓநாய்கள் மற்றும் நரிகளில் பாதிக்கும் மேற்பட்டவை அவற்றினாலேயே நடக்கின்றன. அதை நாம் இங்கு

மேற்கொள்ளும்போது, நம்முடைய வேட்டை ஓநாய்க்குட்டிகளை நாம் பெற்றுவிடுவோம். நீ உன்னுடைய ஓநாய்க்குட்டியை வளர்க்கும்போது, அதோடு சேர்த்து ஒரு பெண் நாய்க்குட்டியையும் வளர்க்க மறந்துவிடாதே.''

ஜென் சென்னும் யாங் கீயும் பரவசத்தில் கூக்குரலிட்டார்கள்.

கித்தான் பையில் அசைவு தெரிந்தது. அனேகமாகக் குட்டிகளுக்கு அசௌகரியமும் பசியும் ஏற்பட்டிருக்கக்கூடும். அதனால் அவை இறந்துவிட்டது போல நடிப்பதை விட்டுவிட்டு, பையிலிருந்து வெளியேறுவதற்கான வழியை அறிய பாடுபடத் தொடங்கிவிட்டன. ஏழு புனிதமான உயிர்கள் அவை. அவற்றில் ஐந்து கொல்லப்படவிருக்கின்றன. ஜென்னின் இதயம் கனத்தது. பீஜிங் மிருகக்காட்சி சாலையின் முகப்பு வாசலில் அமைந்திருக்கும் சிற்பங்கள் செதுக்கப்பட்ட சுவரின் காட்சி அவனுடைய நினைவில் ஓடியது. இவற்றை நான் அங்கு அனுப்பினால், அது எவ்வளவு அருமையான விசயமாக இருக்குமென அவன் நினைத்தான். மனிதர்கள் அற்பமானவர்களாகவும் பேராசை மிக்கவர்களாகவும் இருப்பதை அப்போது அவன் உணர்ந்தான். ஏழு குட்டிகளில் பெரிதான மற்றும் வலுவான ஒன்றை மட்டும் எடுத்து வந்திருந்தால் அது ஒரு தவறாக இருந்திருக்காது. அவர்கள் ஏன் எல்லாக் குட்டிகளையும் வீட்டுக்கு எடுத்து வந்திருக்க வேண்டும்? டோர்ஜியையும், காவோ ஜியான்சோங்கையும் கூட்டிச் சென்றிருக்கக் கூடாது. அவர்கள் அங்கு இருந்திருக்காவிட்டால், அவன் ஒரே ஒரு குட்டியை மட்டும் எடுத்துக்கொண்டு வந்திருப்பானோ? அனேகமாக இல்லை. எல்லாக் குட்டிகளையும் எடுத்துக்கொண்டு வருவதென்பது, போட்டி, தீரம், வெகுமதி மற்றும் புகழோடு சம்பந்தப்பட்டிருக்கிறது. மற்றவர்களின் மதிப்பை அது அவனுக்குப் பெற்றுத் தரும். அவற்றோடு ஒப்பிடும்போது, அந்த ஏழு உயிர்களும் மண் துகள்களுக்குச் சமம்.

ஜென்னின் இதயம் வலித்தது. அவன் இங்கு வந்து சேர்ந்ததி லிருந்தே, ஓநாய்க்குட்டிகளின் மீதான ஈடுபாட்டை வளர்த்துக்கொண்டு விட்டான். இரண்டு ஆண்டுகளுக்கும் மேலாக, அவனுடைய மனதில் அவை இருந்துகொண்டிருக்கின்றன. அவன் எல்லாக் குட்டிகளையும் தன்னோடு வைத்துக்கொண்டு வளர்க்கவே இப்போது விரும்பினான். ஆனால் அது கொஞ்சமும் சாத்தியமில்லை. அவை வளர்ந்து பெரிதாகும் வரை,

அவற்றுக்கான உணவை அவனால் தர முடியாது. அதன் பிறகு, அவனுக்கு ஒரு எண்ணம் தோன்றியது. ஏன் மிச்சமுள்ள ஐந்து குட்டிகளை, மீண்டும் கொண்டுபோய் அதன் குகையில் விட்டுவிட்டு வரக் கூடாது? ஆனால், யாங் கீயைத் தவிர இக்காரியத்துக்காகக் கூட வர, வேறு யாரும் சம்மதிக்க மாட்டார்கள். அதே சமயம், அவனால் மட்டும் தனியாகப் போய் வர முடியாது. அவனுடைய குதிரைக்கும் இப்போது அதற்கான சக்தி இருக்காது. மேலும், அச்சமயத்தில் தாய் ஓநாய், அழிக்கப்பட்ட தன் குகைக்கு அருகே துக்கத்தோடு ஓலமிட்டுத் திரிந்துகொண்டிருக்கும். அதனால் திரும்பிச் செல்வதென்பது தற்கொலைக்குச் சமமானது.

ஜென், கொக்கியிலிருந்து பையை எடுத்து, மெதுவாக நடந்து குடிலுக்கு வெளியில் வந்தான். ‘‘சில நாட்களுக்கு இவை என்னுடன் இருக்கட்டும். நான் இவற்றின் நடவடிக்கைகளைக் கொஞ்சம் கவனிக்க விரும்புகிறேன்.’’

‘‘நீ அவற்றுக்கு என்ன கொடுக்கப் போகிறாய்? ஒரு நாள் முழுவதும் அவற்றுக்கு எதுவும் கொடுக்காவிட்டால், அவை எல்லாமே இறந்து போய்விடும்’’ என்றான் டோர்ஜி.

‘‘நான் அவற்றுக்கு மாட்டுப் பால் கொடுப்பேன்’’ என்றான் ஜென்.

‘‘இல்லை, நீ அதைக் கொடுக்கக்கூடாது’’ என்று அதிருப்தியோடு சொன்னான் காவோ.’’ நான்தான் அந்த மாடுகளை மேற்பார்வையிடுகிறேன். அவற்றின் பால் மனிதர்களுக்கானது. ஓநாய்கள் மாடுகளைச் சாப்பிடுகின்றன. அதனால் மாட்டின் பாலை அவற்றுக்குக் கொடுப்பது, வேண்டுமென்றே அவமதிப்பதுபோலாகும். அதற்குப் பிறகு, மேய்ப்பர்கள் ஒருபோதும் மாடுகளை என்னிடம் மேய்ச்சலுக்கு ஒப்படைக்க மாட்டார்கள்.’’

பிரச்சனையை சுமுகமாக முடிக்க யாங் கீ முன்வந்தான். ‘‘டோர்ஜி தன்னுடைய வேலையை முடிக்கட்டும். தனக்கு ஒதுக்கப் பட்ட அளவீடை இன்னும் முடிக்கவில்லை என்ற கவலையில் கஸ்மாய் இருக்கிறாள். நாம் அவளுக்கு ஐந்து குட்டிகளின் தோல்களைக் கொடுத்துவிடலாம். அவளும் நிம்மதியாக இருப்பாள். நாம் ஒன்றைத் திருட்டுத்தனமாக வளர்ப்போம். இல்லையென்றால், ஒட்டுமொத்தப் படைப்பிரிவுமே ஓநாய்க்குட்டிகளைப் பார்ப்பதற்காக இங்கு வந்துவிடும். அதன்பிறகு, உனக்காக ஒன்றை வைத்துக்

கொள்வதுகூட முடியாது. அதனால் டோர்ஜி அவற்றின் வேலையை முடிக்கட்டும். என்னால் அதைச் செய்ய முடியாது; உன்னாலும் அது முடியாதென்று எனக்குத் தெரியும். நமக்காக இதைச் செய்ய, டோர்ஜி இங்கிருப்பது நம் அதிர்ஷ்டம்தான்.''

ஜென் பெருமூச்சு விட்டபடி, ''நமக்கு வேறு வழியில்லை என்றுதான் நானும் நினைக்கிறேன்'' என்றான்.

அவன் உள்ளே சென்று, அடுப்பு மூட்டுவதற்காக வறட்டிகள் வைத்திருந்த பெட்டியை வெளியே இழுத்துக்கொண்டு வந்தான். வறட்டிகளைக் கொட்டிவிட்டு, அந்தப் பெட்டியினுள் கித்தான் பையிலிருந்த குட்டிகளைப் போட்டான். உடனடியாக ஓநாய்க் குட்டிகள், அங்குமிங்குமாகத் தட்டுத் தடுமாறி நகர்ந்தன. ஆனால் அவை ஒரு ஓரத்தை அடைந்ததும், தப்பிக்க முயற்சிப்பது ஆபத்தாகிவிடுமென்பதை உணர்ந்து, அப்படியே செத்துவிட்டதுபோல நாடகமாடின.

டோர்ஜி, தன்னுடைய விரல்களால் அவற்றைச் சுற்றிலும் தடவினான். பின் ஜென்னைப் பார்த்து, ''நான்கு ஆண் மூன்று பெண்'' என்றான் அவன். ''இந்தப் பெரிய, பழுப்புநிறக் குட்டியை நீ வைத்துக்கொள். இந்த ஒன்று, என்னுடையது.''

பிறகு, மற்றவற்றை எடுத்து மீண்டும் பைக்குள் விட்டான். அதை எடுத்துக்கொண்டு, குடிலுக்கு முன்னிருந்த ஒரு திறந்த வெளிக்குச் சென்று ஒன்றை வெளியில் எடுத்துத் தலைகீழாகப் பிடித்தபடி, ''இது ஒரு பெண் குட்டி. டெஞ்ஞருக்கு முதலில் போவது இதுவாக இருக்கட்டும்'' என்றான். ஒரு காலால் மண்டி போட்டபடி, தனது வலது கையைச் சுழலவிட்டு, எவ்வளவு உயரத்துக்கு எறிய முடியுமோ அவ்வளவு உயரமாக ஓநாய்க்குட்டியை மேலே வீசினான். மேய்ப்பர்கள், அதிகப்படியாக இருக்கும் நாய்க்குட்டிகளை ஒழித்துக் கட்டுவது போலவே அவனுடைய செயல் இருந்தது. சொர்க்கத்தை நோக்கி அதனுடைய ஆன்மா மேலே செல்கிறது; கீழே தரைக்கு இறந்து விடக்கூடிய உடல் வந்து சேர்கிறது. கடந்த காலங்களில் ஜென்னும் யாங்கும் இந்தத் தொன்மையான சடங்கைப் பலமுறை பார்த்திருக் கிறார்கள். இது போன்றுதான் ஓநாய்க்குட்டிகளைத் தீர்த்துக் கட்டுவார்களென மேய்ப்பர்கள் சொல்லக்

கேட்டிருக்கிறார்கள். ஆனால் இப்போதுதான் முதன்முறையாக அதைப் பார்க்கிறார்கள். அவர்கள் முகம் வாடியிருந்தது.

அவ்வளவு சீக்கிரமாக டெஞ்ஞருக்குப் போக விருப்பமில்லாது இறந்துவிட்டது போல பாவனை செய்திருந்த அந்த ஓநாய்க் குட்டி, இப்போது அந்தரத்தில் இருந்தது. அது தன் சிறிய கால்களை விரித்து, வினோதமாக நாட்டியமாடியது. பின்னர், பனி படர்ந்திருந்த தரையில் அது பொத்தென விழுந்தது. அதனுடைய வாய், மூக்கு மற்றும் கண்களிலிருந்து ரத்தம் கசிந்து ஒழுகிக்கொண்டிருந்தது.

ஜென் இதயம் கனத்தது.

மூன்று நாய்களும் சடலத்தை நோக்கி ஓடின. டோர்ஜி சத்தம் போட்டு அவற்றைத் தடுத்து நிறுத்தினான். அதனுடைய மதிப்பு வாய்ந்த தோலை அவை சிதைத்துவிடுவதை அவன் விரும்பவில்லை. எர்லாங் அந்த இடத்துக்கு விரைந்தோடி, இறந்த குட்டியை மற்ற நாய்கள் கடித்துவிடாதபடி அவற்றைத் தடுத்து நிறுத்தியது. அதைப் பார்த்து ஜென் பிரமிப்படைந்தான். ஒருவேளை, அதுவும் ஓநாய்க் குட்டிகள்மீது ஈடுபாட்டை வளர்த்துக்கொண்டிருக்கக் கூடுமென நினைத்தான்.

டோர்ஜி, பையிலிருந்து இரண்டாவது குட்டியை வெளியில் எடுத்தான். இது, அதோடு பிறந்த சகோதரியின் ரத்த வாசனையை மோப்பம் பிடித்துவிட்டதுபோலத் தெரிந்தது. டோர்ஜியின் உள்ளங்கைக்கு வந்ததும், அது இறந்துவிட்டது போல பாவனை செய்யாமல், அதனுடைய சிறிய நகங்களால் அவனுடைய கையைப் பிறாண்டி, தப்பிக்கப் போராடியது. அதை மேலே தூக்கியெறிய இருந்த சமயத்தில், திடீரென டோர்ஜி, ஜென்னைப் பார்த்து, ‘‘இதை நீ கொல். உன் நெஞ்சுரம் எப்படி இருக்கிறதென்று பார்க்கலாம்’’ என்றான். ‘‘எந்தவொரு மேய்ச்சல்நில மேய்ப்பனும், ஓநாய்களைக் கொல்லாமல் தன் வாழ்க்கையைக் கடக்கக் கூடாது.’’

ஜென் ஒரு எட்டு பின்னகர்ந்தான். ‘‘இல்லை, நீயே முடித்துவிடு.’’

டோர்ஜி சிரித்தபடி சொன்னான். ‘‘ஹேன் சீனர்களாகிய உங்களுக்குக் கொஞ்சம்கூட தைரியம் கிடையாது. நீங்கள் ஓநாயை வெறுப்பீர்கள். ஆனால் ஒரு ஓநாய்க்குட்டியைக் கொல்லக்கூட முன்வர மாட்டீர்கள். உங்களால் எப்படி ஒரு யுத்தத்தில் சண்டையிட முடியும்? உங்களுடைய மேற்கு எல்லைப் பகுதி

முழுவதும் சுவர் எழுப்புவதில் உங்களுடைய முழு நேரத்தையும் சக்தியையும் செலவழித்ததில் ஆச்சரியப்பட ஏதுமில்லை. என்னைக் கவனி...'' இரண்டாவது குட்டி வானத்தை நோக்கிப் பறந்தபோது, அவனுடைய வார்த்தைகளும் காற்றில் மிதந்துகொண்டிருந்தன. இரண்டாவது குட்டி தரையில் விழுவதற்கு முன்பாகவே, அவன் மூன்றாவதைக் கையில் எடுத்துவிட்டிருந்தான். இந்தக் கொலைச் செயலில் பரவசமடைந்தவனாக, டோர்ஜி, ''டெஞ்ஞுரை நோக்கி நீ போ; அங்கு நீ சந்தோஷமாக வாழ்வாய்'' என்று முணுமுணுத்தான்.

பரிதாபத்துக்குரிய ஐந்து ஓநாய்க்குட்டிகளின் சடலங்களும் இப்போது ரத்தத்தோடு தரையில் கிடந்தன. ஜென் அவற்றை ஒரு சிறு முறத்தால் எடுத்துக் குப்பைக் கூடையில் போட்டுவிட்டு வானத்தை நோக்கிப் பார்த்தான். அவற்றின் ஆன்மாக்களை டெஞ்ஞுர் ஏற்றுக்கொண்டிருக்குமென நம்பினான்.

டோர்ஜி தன்னுடைய செயல் குறித்த எக்களிப்பில் இருந்தான். அவன் குனிந்து, காலணிகளின் நுனியில் தன் கைகளைத் தேய்த்தபடி சொன்னான், ''ஒரே நாளில் ஐந்து ஓநாய்க்குட்டிகளைக் கொல்லும் வாய்ப்பு எப்போதாவதுதான் கிடைக்கும். இவ்வகையில் அவை நம்மை விடவும் மேலானவை. வாய்ப்பு கிடைத்தால் அவை, நூறு அல்லது இருநூறு ஆடுகளைக் கூட ஒரே சமயத்தில் கொன்றுவிடும். சரி நேரமாகிவிட்டது. என்னுடைய கால்நடைகளைக் கவனிக்க நான் போயாக வேண்டும்.'' அவனுடைய ஓநாய்க்குட்டியை எடுத்துக்கொள்ள, அதை நோக்கி நடந்தான்.

''அதற்குள் போகாதே. இவற்றின் தோலை உரிக்க எங்களுக்கு உதவி செய்'' என்றான் ஜென்.

''அது பிரச்சனையில்லை. அதற்கு ஒரு நிமிசம்தான் ஆகும்'' என்றான் டோர்ஜி.

இறந்து கிடந்த ஓநாய்க்குட்டிகளுக்குக் காவலாக நின்றிருந்த எர்லாங், டோர்ஜியைப் பார்த்து உறுமியபடியும் பதற்றத்தோடும் காணப்பட்டது. அந்த நாயின் கழுத்தைச் சுற்றிக் கைகளால் அணைத்தபடி ஜென், குட்டிகளின் தோலை டோர்ஜி உரித்தெடுக்க வகை செய்தான். ஒரு ஆட்டுக்குட்டியின் தோலை உரிப்பது போல அவன் அந்தக் காரியத்தைச் செய்தான். அவை சின்னஞ்சிறியவை என்பதால் கால்களை உரிக்க வேண்டிய அவசியம்

இருக்கவில்லை. ஐந்து குட்டிகளின் தோல்களையும் உரித்து முடித்ததும், குடிலின் வட்டமான மேற்பகுதியின்மீது, அவன் அவற்றை விரித்துப் போட்டான்.

‘‘இவை அருமையான தோல்கள். இதில் நாற்பது இருந்தால் ஒரு பிரமாதமான மேலாடையை _ மெல்லிய, கதகதப்பான, பார்ப்பதற்கு அழகான _ உருவாக்கிவிடலாம். எவ்வளவு பணம் கொடுத்தாலும் அப்படியான ஒன்றை உன்னால் வாங்க முடியாது’’ என்றான் டோர்ஜி.

டோர்ஜி பனியில் தன் கைகளைக் கழுவிவிட்டு, மண்வெட்டி எடுப்பதற்காகப் பார வண்டியை நோக்கிச் சென்றான். ‘‘நீங்கள் ஒன்றுக்கும் லாயக்கற்றவர்கள். நானே எல்லாம் செய்ய வேண்டி யிருக்கிறது. நாய்கள் ஓநாயைச் சாப்பிடாது. அதனால் நாம் உடனடி யாக இவற்றைப் புதைத்தாக வேண்டும். தாய் ஓநாய் மோப்பம் பிடித்துவிட முடியாதபடி மிக ஆழமாகப் புதைக்க வேண்டும். இல்லையென்றால் உங்கள் வளர்ப்பு மிருகங்கள் மற்றும் மந்தைகளின் கதி முடிந்துவிடும்’’ என்றான் டோர்ஜி.

குடிலுக்கு மேற்காக அவர்கள் ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, நான்கடி ஆழத்துக்கு ஒரு குழியைத் தோண்டினார்கள். அதனுள் ஐந்து குட்டிகளையும் போட்டு, அதை மூடினார்கள். பிறகு அந்த இடத்தை நன்றாகத் தட்டி சமப்படுத்தினார்கள். அதன் பிறகு, உள்ளிருக்கும் சடலங்களின் நெடி வெளியில் அடிக்காத வகையில், அதன்மீது மருந்துப் பொடியைத் தூவினார்கள்.

‘‘நம்முடைய ஓநாய்க்குட்டிக்குக் குகை மாதிரியான ஒன்றை அமைப்போமா?’’ என்று டோர்ஜியிடம் கேட்டான் யாங் கீ.

‘‘வேண்டாம், அதற்கு ஒரு குழி தோண்டுங்கள் போதும்.’’

ஜென்னும் யாங்கும், குடிலின் தென்மேற்குப் பக்கமாக சில அடிகள் தள்ளி ஒரு குழியைத் தோண்டினார்கள். அது இரண்டடி அகலமும் ஓரடி ஆழமும் கொண்டிருந்தது. அதன் அடிப்பகுதியின் நடுவில் சிறு இடத்தை மட்டும் விட்டுவிட்டு, சுற்றிலும் ஆட்டுத் தோல்களால் மூடினார்கள். அதன்பிறகு, சிறிய ஆண் ஓநாய்க்குட்டியை அதனுள் வைத்தார்கள்.

சேற்றுமண் தரையைத் தொட்ட அந்த கணத்திலேயே அது உயிர் கொண்டுவிட்டது. அதனுடைய கண்களாலும் மூக்காலும் சுற்றுப்புறத்தை

அவதானித்தது. தன்னுடைய வீட்டுக்குத் திரும்பவும் வந்துவிட்டதாக அது நினைப்பது போலிருந்தது. மெதுவாக அது அமைதியானது. ஒரு மூலையில் இருந்த ஆட்டுத்தோலின்மீது போய் சுருண்டுகொண்டது. அப்போதும் சுற்றும் முற்றும் பார்த்தபடியும், மோப்பம் பிடித்தபடியுமிருந்தது. அதனுடைய சகோதர, சகோதரிகளை அது தேடுவது போல் தோன்றியது. முதலாவதாக வைத்த குட்டிக்குத் துணையாக இரண்டாவது குட்டியையும் ஜென் அதனுள் வைக்கப் போனபோது, டோர்ஜி அதைப் பிடுங்கித் தன்னுடன் நெருக்கமாக வைத்துக்கொண்டான். பின் குதிரை மீதேறி விரைந்து சென்றான். காவோ, குழிக்குள்ளிருக்கும் குட்டியைக் கோபமாகப் பார்த்துவிட்டு, தன்னுடைய குதிரை மீதேறிச் சென்றான்.

ஜென் சென்னும் யாங் கீயும், வரவிருக்கும் ஆபத்துகள் குறித்த பேரச்சத்துடன், அவர்களுடைய புதிய ஓநாய்க் குகையின் அருகில் குனிந்து, மண்டியிட்டு, ஓநாய்க்குட்டியை வெறித்தும் வியந்தும் பார்த்தார்கள். ‘‘இதை நம்மால் ஒழுங்காகச் செய்து முடிக்க முடியுமா என்று எனக்குத் தெரியவில்லை. சிக்கல்கள் நம்மை எதிர்நோக்கி இருக்கின்றன’’ என்றான் ஜென்.

‘‘நல்லபடியாக நடக்கும் என்ற நம்பிக்கை எனக்கிருக்கிறது. ‘எல்லாக் குள்ளநரிகளும் மடியும்வரை, நாம் சண்டையை நிறுத்தப் போவதில்லை’ என்று இந்த நாடே பாடிக்கொண்டிருக்கிறது. ஆனால் நாமோ ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதன் மூலம், பகைவனிடமும் நட்பு பாராட்டுகிறோம்.’’

‘‘இந்த இடத்தைப் பொறுத்தவரை, சொர்க்கம் உயரத்தில் இருக்கிறது. பேரரசர் வெகு தொலைவில் இருக்கிறார். நாம் என்ன செய்துகொண்டிருக்கிறோம் என்பது யாருக்குத் தெரியப் போகிறது? பில்ஜி இதைச் செய்ய நம்மை விடமாட்டார் என்பதுதான் எனக்குப் பெரும் கவலையாக இருக்கிறது.’’

‘‘மாடுகள் திரும்பிவிட்டன. நான் போய் கொஞ்சம் பால் கொண்டு வருகிறேன். இது பசியால் வாடிக்கொண்டிருக்கும்’’ என்றான் யாங் கீ.

ஜென் அவனைத் தடுத்து நிறுத்தினான். ‘‘நாயின் பால் நல்லது. நாம் இதற்கு யிர்ருடைய பாலைக் கொடுக்கலாம். நாயின் பாலைக் குடித்து ஒரு

புலிக்குட்டியால் வாழ முடிகிறபோது, நிச்சயம் ஓநாய்க்குட்டியால் முடியும்’’ என்றான் ஜென்.

குழியிலிருந்து குட்டியை வெளியில் எடுத்து, தன்னுடைய இரண்டு கைகளாலும் ஜென் பிடித்துக்கொண்டான். பசியால் அதன் வயிறு குழி விழுந்திருந்தது; அதனுடைய பாதங்கள் சிறிய பனிக்கட்டிகளைப் போலக் குளிர்ந்திருந்தன. அது நடுங்கிக் கொண்டிருந்தது. ஜென், உடனடியாக அதைத் தன் மேலங்கிக்குள் நெருக்கமாக வைத்துக்கொண்டு கதகதப்பூட்டினான்.

இருள் கவியத் தொடங்கிவிட்டிருந்தது. தன்னுடைய குட்டிகளுக்குப் பாலூட்ட, யிர் திரும்பி வரும் நேரமிது. ஜென்னும் யாங்கும் நாய்ப் பட்டிக்குச் சென்று, குழியொன்றைத் தோண்டினார்கள். அதனுள் பழைய ஆட்டுத் தோல்களை நிரப்பினார்கள். பதனிடப்படாத குதிரைத் தோலினாலான திரைச்சீலை, பட்டியைக் கதகதப்பாக வைத்திருந்தது. யிர்ருக்கும் அதன் மூன்று குட்டிகளுக்கு மான பட்டி அது.

இறைச்சியும் தினையும் கலந்த நீராகார உணவை யிர்ருக்குக் கொடுத்தான் யாங். அதைக் குடித்து முடித்ததும், ஓடிப்போய் முகத்தால் திரைச்சீலையைத் தள்ளிவிட்டுப் பட்டிக்குள் சென்று, சுவரோரமாய் படுத்துக்கொண்டது. அதனுடைய குட்டிகள் அதன் காம்புகளைக் கவ்விப் பேராசையுடன் சப்பின.

ஜென் மிகுந்த எச்சரிக்கையுடன் யிர்ரை அணுகினான். குனிந்து மண்டியிட்டு அதன் தலையைத் தடவிக் கொடுத்தபடி, அது கீழே பார்க்க முடியாதபடி மறைத்தான். அதன் தலையை எவரேனும் தடவிக் கொடுக்கும்போது அடையும் சந்தோஷத்துடன், ஜென்னுடைய கையை யிர் நக்கியது. அப்போது யாங், ஒரு நாய்க்குட்டியை நகர்த்திவிட்டு, உள்ளங்கையில் கொஞ்சம் பாலைக் கறந்தெடுத்தான். ஜென், அவனுடைய மேலங்கிக்குள்ளிருந்து ஓநாய்க்குட்டியை வெளியில் எடுத்ததும், யாங் அதன் தலை, பின்புறம், மற்றும் பாதங்களில் பாலைத் தெளித்தான். மேய்ப்பர்கள், பெண் ஆடுகளை ஏமாற்றி, அனாதையாகிவிட்ட ஆட்டுக்குட்டி களுக்குப் பால் கொடுக்க வைக்க இப்படிச் செய்வது வழக்கம். ஆனால் நாய்கள் ஆடுகளை விட புத்திசாலிகள். அவற்றின் மோப்பத் திறன் மிகவும் நுட்பமானது. ஒருவேளை, யிர்ருடைய குட்டிகள் இறந்துவிட்டிருந்தாலோ அல்லது அதனிடமிருந்து அகற்றப்பட்டுவிட்டிருந்தாலோ, ஒரு ஓநாய்க் குட்டியை அது ஏற்றுக்

கொள்ளக்கூடும். ஆனால் அதனுடைய குட்டிகளே மூன்று இருக்கும்போது, இது சாத்தியமில்லை. அதனுடைய பட்டிக்குள் ஒரு ஓநாய் இருப்பதைக் கண்டுகொண்டதும், தன்னுடைய தலையைத் தூக்கித் தன்னுடைய குட்டிகளைப் பார்க்க அது முயற்சி செய்தது. ஜென்னும் யாங்கும் சேர்ந்து, அதன் தலையைக் கீழே அழுத்தினார்கள்.

பசியோடிருந்த சிறிய ஓநாய்க்குட்டி, யிர்ருடைய ஒரு காம்புக்கருகில் படுத்துக்கொண்டு, பாலின் வாசனையை முகர்ந்தது. இறந்துவிட்டதான பாவனையைக் கைவிட்டு, ரத்தத்தின் வாடையைக் கண்டுகொண்டுவிட்டதைப் போல, வாயைத் திறந்து, தன்னுடைய கோரைப் பற்களைக் காட்டியது. 'இங்கு பாலிருக்கிறதென்றால், இதுதான் என்னுடைய தாய்' என்ற மனோபாவம் அதனிடம் வெளிப்படுவதுபோல் தோன்றியது. நாய்க்குட்டிகளுக்கு ஒரு மாதத்துக்குப் பின்னர் பிறந்த ஓநாய்க் குட்டி, சிறிய தலையுடன் மிகச் சிறியதாகக் காணப்பட்டது. ஆனால் அது இப்போதே நாய்க்குட்டிகளை விடவும் பலமிக்கதாக இருந்தது. பாலைக் காம்பிலிருந்து சப்பிக் குடிக்கும் அதன் திறனும் அவற்றை விட மேம்பட்டதாக இருந்தது. நாயின் காம்புகள் இரண்டு வரிசையாக இருந்தன. சில காம்புகள் மற்றவற்றை விடப் பெரிதாக இருந்தன. அதனால் அவை சுரக்கும் பாலின் விகிதமும் வேறுபட்டிருந்தது. அந்தச் சிறிய ஓநாய்க்குட்டி, பால் குடிப்பதை விடவும், பெரிய காம்பைக் கண்டுபிடிப்பதிலேயே அதிக ஆர்வம் காட்டியது,

ஜென்னுக்கும் யாங்குக்கும் ஆச்சரியமளித்தது. அந்த முயற்சியின்போது, அது நாய்க்குட்டிகளை அங்கிருந்து தள்ளிவிட்டது. அமைதியான நாய்ப் பட்டிக்குள் ஒரு ரௌடியை, வழிப்பறிக் கொள்ளைக்காரனை அறிமுகம் செய்தாகிவிட்டது. பெரிய காம்பைக் கண்டுபிடிக்கும் முயற்சியில், அது நாய்க்குட்டிகளைச் சுற்றிச் சுழலவிட்ட விதத்தில் அதன் முரட்டு சுபாவம் வெளிப்பட்டது. அது ஒரு காம்பில் குடித்துப் பார்த்தது; அதைத் துப்பி விட்டு அடுத்த காம்பில் முயற்சி செய்தது. இப்படி ஒவ்வொன்றாகப் பரிட்சித்துப் பார்த்துவிட்டு, கடைசியாக நடுவிலிருந்த ஆகப் பெரிய, முழுமையான காம்பில் நிலைபெற்று ஆவேசமாகக் குடித்தது. அது குடித்தபோது, தன் பாதங்களை அருகிலிருந்த காம்புகளின் மீது பரப்பிக்கொண்டது. மூன்று சாந்தமான நாய்க்குட்டிகளும் ஒதுங்கி நின்றன.

இருவராலும் தங்கள் கண்களை நம்ப முடியவில்லை. ‘‘ஓநாய்கள் பயங்கரமானவை. இந்தக் குட்டிப் பிசாசின் கண்கள் இன்னும்கூடத் திறக்கவில்லை. அதற்குள் இது நடத்தும் அராஜகத்தைப் பார்’’ என்றான் யாங்.

ஜென், அந்தக் காட்சியைப் பார்த்துக் கட்டுண்டு நின்றிருந்தான். மிகத் தீவிரமாக யோசித்தபடி, ‘‘நாம் இதை மிக நெருக்கமாக அவதானிக்க வேண்டும். இதனிடமிருந்து நாம் கற்றுக்கொள்ள நிறையவே இருக்கிறது. நம்முடைய நாய்ப் பட்டி உலக வரலாற்றில் ஒரு சின்னஞ்சிறு உலகமாக இருக்கப்போகிறது. லூ சுன் ஒரு முறை எழுதிய ஒன்று என் நினைவுக்கு வருகிறது. ‘மேற்கத்தியர்கள் முரடர்கள்; சீனர்களாகிய நாம் பண்பட்டவர்கள்’ என்று அவர் கூறியிருக்கிறார்’’ என்றான் ஜென்.

ஓநாய்க்குட்டியின் தலையை வருடியபடியே ஜென் தொடர்ந்து பேசினான். ‘‘மாறும் மனோபாவம், ஒரு மனிதனின் தலைவிதியைத் தீர்மானிப்பது மட்டுமல்ல, ஒரு இனத்தின் தலைவிதியையும் தீர்மானிக்கிறது. விவசாய மக்கள் பண்பட்டவர்கள்; அவர்களின் பலமற்ற மனமே அவர்களின் தலைவிதியை நிர்ணயித்தது. உலகின் மகத்தான நாகரிகமாக விளைநிலம் சார்ந்த நான்கு நாடுகளே அமைந்திருந்தன. அவற்றில் மூன்று மடிந்துவிட்டன. நான்காவதான சீனா, அதன் பிராந்தியத்துக்குள் ஓடிய இரண்டு மாபெரும் நதிகளான மஞ்சள் மற்றும் யாங்செயினால் அந்த விதியிலிருந்து தப்பிப் பிழைத்தது. மேலும், அது உலகில் அதிக மக்கள் தொகை கொண்ட நாடு என்ற பெருமை கொண்டிருப்பதால் அதைப் பிற நாட்டவரால் அவ்வளவு சுலபமாக அபகரிக்க முடியவில்லை. இவை தவிர, மேய்ச்சல்நில நாடோடி மக்களின் பங்களிப்பும் ஒரு காரணமாக இருக்கக்கூடும்...’’

யாங் ஆமோதிப்பது போலத் தலையசைத்தான். ‘‘இந்த ஓநாயை வளர்ப்பது, ஓநாய்கள் பற்றி நாம் தெரிந்துகொள்வதற்கும் மேலாகப் பயன் தருமென்றே நான் நினைக்கிறேன். மனிதப் பண்பு, ஓநாய்ப் பண்பு மற்றும் பண்படுதல் பற்றியும் நாம் அறிந்துகொள்ள முடியும்.’’

நாய்ப் பட்டியில் காணப்பட்ட சலசலப்பும், கொடுமைக்காளான நாய்க்குட்டிகளின் எதிர்ப்பாக வெளிப்பட்ட மெல்லிய குரைப்பொலிகளும் யிர்ருடைய சந்தேகத்தை அதிகரித்தன.

ஜென்னின் இறுக்கமான பிடியிலிருந்து திமிறி வெளியேறி, கீழே என்ன நடக்கிறதென்று பார்க்க அது முயற்சி செய்தது. ஓநாய்க் குட்டியை அது பார்த்துவிடவும் கொன்றுவிடவும் கூடுமென்று கவலைப்பட்ட ஜென், அதன் தலையைக் கீழ்நோக்கி அழுத்திப் பிடித்தபடி அதன் பெயரை மிக மென்மையாகக் கூறியபடியும் அதைத் தட்டிக் கொடுத்தும் தடவிக் கொடுத்தும் கொண்டிருந்தான். ஆனால் அது ஒரு வகையாகத் தலையைத் திருப்பி, தன்னுடைய பட்டியில் மேலுமொரு குட்டி இருப்பதைப் பார்த்துவிட்டது.

மோப்பம் பிடித்தது. ஓநாய்க் குட்டியின் உடல் மீது அதன் பால் இருந்ததால் அது கொஞ்சம் தயங்கியது. அது என்ன நடந்து கொண்டிக்கிறதென்பதைப் பார்ப்பதற்காக, எழுந்துகொள்ளத் திமிறியது. ஆனால், ஜென் மீண்டும் அதை அமுக்கினான். அவனுடைய தேவையை அது தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். இந்தப் புதிய யதார்த்த நிலையை அது ஏற்றுக்கொள்ளும்படி அவன் செய்தாக வேண்டும். அது முரண்படாமல் கட்டுப்பட வேண்டும். அது பலமுறை, எழுந்துகொள்ளவும், ஓநாயின் வாயிலிருந்து தன்னுடைய காம்பை இழுத்துக்கொள்ளவும் முயற்சி செய்தது. ஆனால் ஜென் தொடர்ந்து அதை அழுத்தி அமுக்கிக்கொண்டிருந்தான். அது கோபமும் ஆத்திரமும் அருவெறுப்பும் அடைந்த போதிலும், அதனுடைய எஜமானனுக்குக் கட்டுப்படுவதை அதனால் தவிர்க்க முடியவில்லை.

யிர்தான் யாங்கும் ஜென்னும் வளர்த்த முதல் பெண் நாய். அதனுடைய கர்ப்ப காலத்தின்போதும், குட்டிகளை ஈன்றபோதும் அவர்கள் அதற்கு நல்ல உணவும் நீரும் தந்ததோடு அதற்குத் தேவையான எல்லாவற்றையும் மிகவும் தாராளமாக அளித்து அதை நன்கு பராமரித்தனர். அதனிடம் பால் நிறைய இருந்தது. அதனுடைய பல குட்டிகளை அகற்றிய பிறகு, தேவைக்கும் அதிக மாகவே அதனிடம் பால் இருந்தது. ஓநாய்க்குட்டி பால் குடிப்பதால் அதனுடைய சுரப்பில் ஒரு பாதிப்புமில்லை. அதனுடைய மூன்று குட்டிகளும் சின்னக் காம்புகளுக்குத் தள்ளப்பட்டுவிட்ட போதிலும், அவை வயிறு நிறைய மெதுவாகக் குடித்து முடித்துவிட்டு, அதன் கழுத்திலும் முதுகிலும் ஏறி விளையாடத் தொடங்கிவிட்டிருந்தன. ஓநாய்க்குட்டி இன்னமும் சப்பிக்கொண்டிருந்தது.

ஜென் பார்த்துக்கொண்டிருந்தான். ஓநாய்க்குட்டியின் வயிறு, நாய்க்குட்டிகளின் வயிறுகளை விடவும் உப்பிப்போயிருந்தது. அதன் வயிறு முரசைப் போல விரைப்பாகவும், தாளைப் போல மெல்லியதாகவும் இருந்தது. அது இப்படியே குடித்துக்கொண்டிருந்தால், அதன் வயிறு வெடித்துவிடுமெனக் கவலைப்பட்ட ஜென், அதன் கழுத்தைப் பிடித்துப் பின்னுக்கு இழுத்தான். ஆனால் ஓநாய்க்குட்டி, காம்பை விட மறுத்ததில், காம்பு இரண்டு இஞ்சு நீளத்துக்கு இழுபட்டு, யிர்ருக்கு வலி ஏற்படுத்தியது. யாங் கீழே குனிந்து, அதன் வாயின் இரண்டு பக்கங்களையும் பிடித்து, ஒரு வழியாகக் காம்பிலிருந்து அதை நீக்கினான். அவன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். ‘‘ஓநாய்களின் வயிறுகள் ரப்பரினால் செய்யப்பட்டவை என மேய்ப்பர்கள் கூறுவார்கள். நான் அதை நம்புகிறேன்.’’

ஜென்னின் முகத்தில் மகிழ்ச்சி தெரிந்தது. Òஎன்ன ஒரு பசி. இது முழு ஜீவனோடு இருக்கிறது. இதை வளர்ப்பது அப்படியொன்றும் சிரமமாக இருக்காது. இப்போதிருந்து, அது விரும்புமளவுக்கு எவ்வளவு வேண்டுமானாலும் சாப்பிடட்டும்.’’

இருட்டிவிட்டது. ஓநாய்க்குட்டியை அதனுடைய குழிக்குள் கொண்டுபோய் விட்டான் ஜென். கூடவே, ஒரு பெண் நாய்க்குட்டியையும் அதனோடு சேர்த்துவிட்டான். அப்போதுதான், அதனுடைய கண்களிலிருந்து சவ்வுகள் விழுவதற்கு முன்பாகவே அது பெண் நாய்க்குட்டியுடன் இணக்கமாக இருக்க முடியும். அவை இரண்டும் நண்பர்களாக இருக்க வேண்டுமென அவன் விரும்பினான். அவை பரஸ்பரம் மோப்பம் பிடித்தன. அவற்றுக் கிடையே யிர்ருடைய பால் நெருக்கத்தை ஏற்படுத்தியது. பின்னர், அவை ஒன்றோடொன்று ஒட்டிக்கொண்டு தூங்கின. பக்கத்தில் எர்லாங் நின்றுகொண்டிருப்பதை ஜென் கவனித்தான். ஓநாய்க் குட்டியையும் தன்னுடைய எஜமானனின் நடவடிக்கைகளையும் கவனித்துக்கொண்டிருந்த எர்லாங், தன்னுடைய எஜமானன் ஓநாய்க்குட்டியை வளர்ப்பதை ஏற்றுக்கொள்வதைப் போல, தன்னுடைய வாலை நன்கு ஆட்டியது. அந்தச் சிறிய குழியை, பாதுகாப்புக்காக, ஒரு மரப்பலகையால் மூடி, அதன் மீது ஒரு பாறாங்கல்லையும் வைத்தான்.

மிகவும் நேர்மையானவனான கோம்பு, ஆடுகளையெல்லாம் கொட்டிலில் அடைத்துவிட்டிருந்தான். ஜென்னும் பிறருமாகச் சேர்ந்து ஓநாய்க்குட்டிகளைக் களவாடி வந்திருக்கிறார்கள் என்று கேள்விப்பட்டதும், ஃப்ளாஷ் லைட்டோடு அங்கு ஓடி வந்தான்.

குடிலின் உச்சியில் கிடந்த ஐந்து சிறிய தோல்களைப் பார்த்ததும் அவன் அதிர்ச்சியடைந்தான். ‘‘இதுவரை எந்த ஹேன் சீனத்தவரும் இந்த ஓலோன்புலாக்கில் ஓநாய்க்குட்டிகளை எடுத்ததே இல்லை. அதுதான் உண்மை.’’

உலோக அடுப்பின் முன்பாக அமர்ந்து, மூன்று மாணவர்களும் ஆட்டு நூடுல்ஸ் சாப்பிட்டுக்கொண்டிருந்தபோது, வெளியில் நாய்களின் குரைப்பொலியும், குதிரைகள் விரைந்து வரும் சத்தமும் கேட்டது. அதனையடுத்து, சாங் கியுன் திரைச்சீலையை விலக்கி விட்டுக் கதவைத் திறந்தான். கதவருகில் நின்றபடி, இரண்டு குதிரைகளின் கடிவாளங்களையும் பிடித்துக் கொண்டிருந்த அவன், ‘‘பெரிய ஓநாய்க் கூட்டம் சிறு சிறு குழுக்களாகத் திரும்பி வந்திருக் கின்றன என தலைமையகம் தெரிவிக்கிறதுÓ என்று கூறிவிட்டுத் தொடர்ந்து பேசினான். ‘‘மூன்று உற்பத்திப் படையணிகளைச் சேர்ந்த அனைவரும், நாளை நடக்கவிருக்கும் சுற்றி வளைப்பு வேட்டையில் கலந்துகொள்ள வேண்டுமென அது உத்தரவிட்டிருக் கிறது. வடமேற்குப் பகுதி எங்கள் பொறுப்பு; பிற படையணி களிலுள்ள சில வேட்டைக்காரர்களின் உதவியுடன் இப்பொறுப்பை நாங்கள் மேற்கொள்வோம். பில்ஜியின் தலைமையில் இவ்வேட்டை நிகழவிருக்கிறது. நள்ளிரவு ஒரு மணி அளவில் பில்ஜியின் குடிலில் நீங்கள் கூடவேண்டுமெனப் படையணித் தலைவர்கள் விரும்பு கிறார்கள். குழந்தைகளும் முதியவர்களும் தவிர, மாடுகளையும் ஆடுகளையும் பராமரிப்பவர்கள் அனைவரும் இந்த வேட்டையில் பங்கு பெற வேண்டும். குதிரை மேய்ப்பர்கள், ஒவ்வொருவரும் தங்கள் குதிரைகளில், மற்றவர்களுக்கு முன்னதாகவே, வேட்டைக் களங்களுக்குச் சென்றுவிட வேண்டும். இப்போது கொஞ்சம் தூங்கிக்கொள்ளுங்கள். நான் கிளம்புகிறேன். குறிப்பிட்ட நேரத்தில் எழுந்துவிட வேண்டுமென்பதில் கவனமாக இருங்கள். அசந்து தூங்கிவிடாதீர்கள்.’’

சாங், கதவைச் சாத்திவிட்டு, குதிரை மீதேறி விரைந்து சென்றான்.

காவோ ஜியான்சோங் தன்னுடைய உணவுக்கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, முகத்தைத் தொங்க வைத்தபடி, ‘‘இப்போது தான் நாம் ஓநாய்க்குட்டிகளை எடுத்து வந்திருக்கிறோம். அதற்குள்

பெரிய ஓநாய்களுக்கான வேட்டை தொடங்கிவிட்டது. இந்த ஓநாய்கள் என்னை சாகடிக்காமல் விடாது’’ என்றான்.

‘‘மேய்ச்சல் நிலத்தில் இன்னும் சில காலம் இருந்தால், நாமும் ஓநாய்களாக மாறிவிடுவோம்’’ என்றான் யாங் கீ.

வேட்டைக்குச் செல்வதற்கான தயாரிப்புகளை அவர்கள் மேற்கொண்டார்கள். காவோ, குதிரைகளைத் திரும்ப வேலிக்குள் கொண்டு வருவதற்காகப் புல்வெளிப் பிரதேசத்துக்கு ஓடினான். யாங் நாய்களுக்கு உணவளித்தான். கடிவாளங்கள், வயிற்றுப் பட்டைகள், சுருக்குக்கயிற்றுத் தடிகள் ஆகியவற்றைச் சரி பார்த்தான். அதன் பிறகு, நாய்களின் தோல் கழுத்துப்பட்டைகள் இரண்டை ஜென் தேர்ந்தெடுக்க உதவி செய்தான். இதற்கு முன்னர், சிறிய அளவிலான வேட்டைகளில் அவர்கள் பங்கெடுத்திருந்ததால், நாய்களின் கழுத்துப்பட்டைகள் மற்றும் தோல் வார்களின் முக்கியத்துவத்தை அவர்கள் அறிந்திருந்தார்கள். எர்லாங்கின் கழுத்தில் ஒரு பட்டையை மாட்டிவிட்டு, தோல் வாரை உலோக வளையத்துக்குள் சொருகி, பின் இரு முனைகளையும் தன் கைகளில் பிடித்துக்கொண்டான் ஜென். சில எட்டுகள் அதை நடத்திச் சென்றான். பின், ஆட்டுக் கொட்டிலின் வட மூலையைச் சுட்டிக் காட்டி, ‘‘போ’’ என்று கத்தியபடியே, வாரின் ஒரு முனையை நழுவவிட்டான். அது ஓடியது. நீண்ட தோல் வாரின் ஒரு முனை ஜென்னின் கையில் இருந்தது. வேட்டையின்போது, நாய்களைத் தங்கள் கட்டுப்பாட்டுக்குள் எப்போதும் வைத்திருக்க இது அவசியம். இல்லையென்றால் அவை தம் பாட்டுக்குச் செயல்பட்டு, வேட்டையின்போது குழப்பத்தை உண்டாக்கிவிடும்.

யாங் கீ, இதையே எல்லோவுக்கும் செய்து, ஒருமுறை பயிற்சி மேற்கொண்டான். இரண்டு நாய்களுமே கட்டளைகளுக்குக் கட்டுப்பட்டன. நாய்கள் வார்களோடு ஓடி விடாதபடி, இருவரின் செயல்களுமே கச்சிதமாக அமைந்திருந்தன.

உற்பத்திப் படையணியினரும் அவர்களுடைய குதிரைகளும் வேட்டை நாய்க் கூட்டத்தோடு, பில்ஜியின் தலைமையில், அவருக்குப் பின்னால் மேய்ச்சல் நிலத்தின் திறந்தவெளியில் வடமேற்குத் திசை நோக்கி, கும்மிருட்டில் விரைந்து சென்றனர். ஒவ்வொருவருமே ஒன்று அல்லது இரண்டு நாய்களைக் கொண்டிருந்தனர். வடமேற்குத் திசையிலிருந்து அடித்த காற்று அவர்களுடைய முகத்தைக் கடுமையாகத் தாக்கியது. அடர்த்தியாக மூட்டமிட்டிருந்த மேகம், சந்திரன் மற்றும் நட்சத்திரங்களிடமிருந்து வரக்கூடிய வெளிச்சத்தைத் தடுத்துவிட்டிருந்தது. அவர்களைச் சுற்றிலும் இருட்டு. தரையில் படிந்திருந்த பனியைக்கூடப் பார்க்க முடியவில்லை. அவனுடைய கண்களில் பார்வை இருக்கிறதா என்று பரிசோதித்துப் பார்க்க, ஒரு தீக்குச்சியைக் கொளுத்த வேண்டும்போல ஜென்னுக்குத் தோன்றியது.

சத்தத்தை மட்டுமே துணையாகக் கொண்டு, பில்ஜியை நெருங்கிய ஜென், ‘‘அப்பா’’ என்று மெதுவாகக் கூப்பிட்டான். ‘‘என்னுடைய சட்டைக் கைக்குள்ளிருக்கும் ஃப்ளாஷ் லைட்டை நான் அடித்துப் பார்க்கலாமா? எனக்குக் கண் தெரிகிறதா என்று சந்தேகமாக இருக்கிறது.’’

‘‘அதை நினைத்துக்கூடப் பார்க்காதே’’ என்று தணிந்த குரலில் சொன்னார் முதியவர். அவருடைய குரலில் சண்டைக்கு முந்தைய அக்கறையும் கவனமும் வெளிப்பட்டது.

ஜென் பதிலேதும் பேசாமல், குதிரையின் குளம்படிச் சத்தங்களின் துணையோடு, பார்வையற்றவனாகத் தொடர்ந்து சென்றான்.

வேட்டைக் குழுவினர் அமைதியாக, இருளினூடாக முன்னேறிக்கொண்டிருந்தனர். ஓநாய்கள் இரவுத் தாக்குதலில் அபாரத் திறன் பெற்றவை. அதேசமயம், மேய்ச்சல் நிலத்தவரும் சற்றும் எதிர்பாராத இரவுத் தாக்குதல்களை நிகழ்த்துவதில் வல்லவர்கள். வழக்கத்துக்கு மாறான ஓநாய்க் கூட்டத்தோடு அவர்கள் இம்முறை மோதவிருப்பதாக உணர்ந்தான் ஜென். அவற்றைப் பசி வாட்டி எடுத்தபோதிலும், அவை கும்மிருட்டில் முழு ஆற்றலோடும் வீச்சோடும் வெளிப்படுவதற்காகக் காத்திருந்தன. தொன்மையான மேய்ச்சல் நிலத்தில், இரண்டு ஓநாய் அரசர்களுக்கிடையே நடைபெற

இருக்கும் போட்டியில் தானும் பங்கேற்க இருப்பதை அறிந்து, ஜென் படு உற்சாகம் அடைந் திருந்தான்.

கொஞ்சம் சரிவான ஓரிடத்தைக் கடந்தபிறகு, வேட்டைக் குழுவினர் மிகவும் செங்குத்தாகச் சரிந்த ஒரு பகுதியில் சென்றனர். ஜென் சென்னுக்குப் பக்கமாக வந்துகொண்டிருந்த பில்ஜி, தன் சட்டைக் கையால் வாயை மூடியபடி, கொஞ்சம் ஆசுவாசமான குரலில், ''நீ ஒரு நல்ல வேட்டைக்காரனாக விரும்பினால், நீ உன் காதுகளைக் கூர்மையாகப் பயிற்றுவிக்க வேண்டும். ஓநாய்களின் கேட்கும் திறன், அவற்றின் பார்க்கும் திறனைவிட மிகவும் கூர்மையானவை'' என்றார்.

ஜென்னும் தன் வாயைச் சட்டைக் கையால் மூடியபடி, ''ஓநாய்கள் இப்போது நம்மைக் கேட்கக்கூடுமென்ற பயம் உங்களுக்கில்லையா?'' என்று கேட்டான்.

முதியவர் முணுமுணுத்தார். ''நாம் மலையின் சரிவில் இருக்கிறோம். சத்தம் இதன் மறுபக்கத்துக்குக் கேட்காது. மேலும் எதிர்காற்று பலமாக அடிப்பதால், நாம் குரலைத் தாழ்த்திப் பேசுவது பாதுகாப்பானது.''

''அப்பா, நீங்கள் உண்மையிலேயே கேட்பதன் மூலமாக எங்களைக் குறிப்பிட்ட இடத்துக்கு அழைத்துக்கொண்டு போகிறீர்களா?''

''இல்லை. ஞாபகமும் ஒத்துழைக்கிறது. என் குதிரையின் குளம்படிச் சத்தத்திலிருந்து எத்தகைய தரையது என்பதும், எந்த இடத்தில் நாமிருக்கிறோம் என்பதும் எனக்குத் தெரியும். என்னுடைய பாதையிலிருந்து தவறி விடாமலிருக்க, காற்று முகத்தில் எவ்விதம் அடிக்கிறதென்பதையும் உணர்கிறேன். வாசனையையும் முகர்வேன். வேறு வார்த்தைகளில் சொல்வதென்றால், காற்றையும் வாசனைகளையும் கொண்டே நான் பயணம் செய்கிறேன். பனி, புல், மணல், உப்பு, காடி, ஓநாய்கள், நரிகள், குதிரைச்சாணம், கூடாரம் ஆகியவற்றின் வாசனைகளைக் காற்று சுமந்துவரும். சமயங்களில் எவ்வித வாசனையும் இருக்காது. அப்போது என் காதுகளையும் ஞாபகங்களையும் நான் சார்ந்திருப்பேன். இரவு இதைவிட இருட்டானாலும் உன் அப்பாவால் வழியைக் கண்டறிய முடியும்.''

ஜென் பெருமூச்சு விட்டான். ''அப்பா, இதையெல்லாம் எப்படிச் செய்வது என்று நான் கற்றுக்கொள்ள எவ்வளவு காலம் பிடிக்கும்'' என்று கேட்டான்.

அவர்கள் ஒரு உச்சியைக் கடந்து, கீழ்நோக்கி சமதளமான பரந்துபட்ட புல்வெளியில் சென்றார்கள். பில்ஜி வேகமெடுத்தார். மற்றவர்களும் அமைதியாகவும் விரைந்தும் அவரைப் பின்தொடர்ந்தனர்.

நிர்ணயிக்கப்பட்ட இடத்தை அவர்கள் நெருங்கியபோது பதற்றம் கூடியது. போர்க் குதிரைகளின் மந்தையை ஓநாய்க் கூட்டம் கொன்று குவித்து நீண்ட நாட்கள¢ஆகியிருக்கவில்லை. இப்போது, ஓலோன்புலாக்கின் மேய்ச்சல் நிலத்தவர்கள், தங்களுடைய எதிரிக்கு எதிராக எல்லாவற்றையும் மேற்கொள்ள இருக்கிறார்கள். அவர்கள் அவற்றைப் பழி வாங்குவார்களா என்பது இன்னமும் சந்தேகம்தான். ஓநாய்களுக்கெதிராக, அவற்றைச் சுற்றி வளைத்துத் திடீர்த் தாக்குதல் நடத்துவது குறித்து ஜென் கவலைப்படத் தொடங் கினான். அவற்றின் அபாரமான மோப்பத் திறனும், அவற்றுக்கு மிகவும் உகந்த இரவு நேரத்தில் சண்டை நடப்பதும் அவற்றுக்கு சாதகமாக இருக்குமென்பதே அவனுடைய கவலைக்குக் காரணம். கடந்த காலங்களில், வருடத்துக்கொரு முறை பெரிய அளவிலான வேட்டை நடைபெற்றபோது, ஓரளவுக்கே வெற்றி கிடைத்திருக் கிறது. சுற்றி வளைப்பில் பாதிக்கும் மேற்பட்ட பகுதியினர் வெறும் கையோடு திரும்பியிருக்கிறார்கள். 'சுற்றி வளைப்பு வேட்டை என்பது ஒரு பந்தைக் கொண்டிருக்கும் கழுதை போன்றது. எப்போதும் இலக்கற்றதாகவே இருக்கும்' என்று போக்குவரத்துப் பிரிவின் தலைமையதிகாரி நக்கலாகச் சொல்வார்.

போர்க் குதிரைகளைப் பறி கொடுத்த பேரழிவுக்குப் பின்னர், இந்த வேட்டையில் கணிசமான பலன் கிடைக்கவில்லை என்றால், பசும்புல்வெளிப் பிரதேச தலைமை அனேகமாக மாற்றப்படும். ஓநாய்களைக் கொல்வதில் வெற்றி கண்ட சமூகத்தைச் சார்ந்த வர்களை, ஓலோன்புலாக்கின் தலைமைக்கு மாற்ற தங்களுடைய உயரதிகாரிகள் ஏற்பாடு செய்து வருவதாகத் தலைமையகப் பணியாளர்கள் தெரிவித்தனர். அதனால்தான், ஓலோன்புலாக் ஓநாய்க் கூட்டத்தின் திமிரை அடக்கி ஒடுக்க, உல்ஜீ, பில்ஜி மற்றும் மேய்ப்பர்கள் உறுதி கொண்டிருந்தார்கள். வேட்டைக்குப் புறப்படுவதற்கு முன்பான ஒருங்கிணைப்புக் கூட்டத்தில் பில்ஜி இவ்வாறு குறிப்பிட்டார்: ''இம்முறை நாம் மிகச் சிறப்பாகச் செயல்பட்டு, பெரிய ஓநாய்களின் ஒரு டஜன் தோல்களையாவது நாம் கொடுக்க வேண்டும். அப்படி நாம்

செய்யாவிட்டால், பிற சமூகக் குழுக்களிலிருந்து ஆட்களைக் கொண்டுவந்து இங்கு செயல்பட வேண்டியிருக்கும்.''

இரவு மேலும் இருட்டாகியது. குளிர் வாட்டியது. சுற்றிச் சூழ்ந்திருந்த கும்மிருட்டும் கடுங்குளிரும் கிட்டத்தட்ட அவர்களை மூச்சு விட முடியாமல் செய்தது. ஜென் சென்னுக்கு அருகில் சென்று யாங் கீ கிசுகிசுத்தான். ''நாம் விரிந்திருக்கும்போது, நமக் கிடையே உள்ள இடைவெளிகள் மிகவும் பெரிதாக இருக்கின்றன. நம் குதிரைகளின் குளம்புகளுக்கு ஊடாக ஓநாய்கள் நழுவிச் சென்றால் நம்மால் அவற்றைப் பார்க்கக்கூட முடியாது. பில்ஜி என்ன திட்டம் வைத்திருக்கிறாரோ தெரியவில்லை.Ó யாங் தலையை உயர்த்தி, அகன்ற சட்டைக் கையை விலக்கி, அவனுடைய ஒளிரும் கைக்கடிகாரத்தில் மணி பார்த்தான். ''நாம் இரண்டு மணி நேரம் பயணம் செய்திருக்கிறோம். தனித்தனியாகப் பிரிய வேண்டிய நேரம் வந்துவிட்டதென்று நினைக்கிறேன்'' என்றான் அவன்.

ஜென் சரிந்து, முகத்தை உயர்த்தி, அந்தப் பழைய சுவிஸ் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். அவனுடைய பயம் அதிகரித்தது. கண்களைத் தேய்த்துவிட்டுக்கொண்டான்.

திடீரென, காற்றினூடாகக் குளிர்ந்த வாசனை மிதந்து வந்தது. அது 'ஆர்டிமிசியா' என்ற மூலிகைச் செடியின் இனிய மருந்து வாசனை. அந்த வாசனை குளிர்ந்தும் கும்மென்றும் புத்துணர்ச்சி அளிப்பதாகவும் இருந்தது. அடர்த்தியான 'ஆர்டிமிசியா'வுக்குள் குதிரைகள் காலடி எடுத்து வைத்ததும், பில்ஜி கடிவாளத்தை இறுக்கிப் பிடித்து குதிரையை நிறுத்தினார். மற்றவர்களும் அவ்வாறே செய்தனர். முதியவரும், அவருக்குப் பின்னால் இருந்த உற்பத்திக் குழுக்களின் தலைவர்களும், பிற வேட்டைக்காரர்களும் தங்களுக்குள் அபிப்ராயங்களைக் கிசுகிசுத்துக்கொண்டார்கள். இரண்டு திசைகளிலும் குதிரை வீரர்களின் வரிசைகள் உருவாகின. நூற்றுக்கும் மேற்பட்ட குதிரை வீரர்கள், வரிசைக்குள் அமைந்து, கிளம்பிச் சென்றார்கள். குதிரைகளின் குளம்படிச் சத்தம் வெகு தொலைவு வரை சென்று, பின் தேய்ந்து மறைந்தது. முதியவருக்கு அருகில் ஜென் இருந்தான்.

திடீரென, ஒரு வெளிச்சம் தோன்றி ஜென்னின் கண்களைக் குருடாக்கியது. பில்ஜியின் ஃப்ளாஷ் லைட்டிலிருந்து ஒளிக்கற்றை வெளிப்பட்டு இருளைக்

கிழித்துக்கொண்டு சென்றது. இரண்டு திசைகளிலிருந்தும் பதிலுக்கு வெளிச்சம் வந்தது. முதியவர் மூன்று முறை தன் ஒளிவிளக்கை அசைத்து ஆட்டினார். தொலைவிலிருந்து அதே போன்று வெளிச்சம் மூலம் சமிக்ஞை கொடுக்கப்பட்டது.

பின்னர், முதியவரின் வறண்ட, காதைத் துளைக்கிற குரல் அமைதியைக் குலைத்தது. ‘‘ஊ... ஹு...’’

சத்தம் எதிரொலித்தது. சில நொடிகளில் பதில் சத்தம் வந்தது: ‘‘ஊ... ஹு...’’ ‘‘யீ... ஹு...’’ ‘‘ஆ... ஹு...’’

ஆண் குரல்கள், பெண் குரல்கள், முதுமைக் குரல்கள், இளமைக் குரல்கள் என எல்லாக் குரல்களும் கலந்துவிட்டிருந்தன. அவற்றுள் அருகிலிருந்த, கஸ்மாயின் மங்கோலியப் பெண்கள் பிரிவிலிருந்து வந்த குரல்கள் உரத்தும் துல்லியமாகவும் கேட்டதோடு, காற்றில் அதிக நேரம் நிலைத்து நின்றன. அவர்கள் ஏதோ இரவுக் காவலில் இருப்பதுபோல, ஓநாய்களைப் பயமுறுத்தக்கூடிய வகையிலும் ஏமாற்றக்கூடிய வகையிலும் அந்தக் குரல்கள் வெளிப்பட்டன. அந்த இரவில் தொடர்ந்த இடி முழக்கம் போல, அலை அலையாய் வடமேற்குத் திசை நோக்கி சப்தம் விடாது ஒலித்துக்கொண்டிருந்தது.

அதே சமயத்தில், தோல் வார்களினால் இறுக்கப்பட்டிருந்த நூற்றுக்கும் மேற்பட்ட நாய்கள் பேய்த்தனமாகக் குரைத்தன. அக்குரைப்புகள் வானில் இடியென முழங்கின.

சத்தத்தின் யுத்தம் முழங்கியதை அடுத்து, ஒளி யுத்தம் கோலாகலமாகத் தொடங்கியது. எல்லா வகையான ஒளி விளக்குகளிலிருந்தும் வெளிப்பட்ட ஒளிக்கற்றைகள் வட மேற்கின் இருளை அப்புறப்படுத்தின. மையிருட்டில் பனி படர்ந்திருந்த தரை, திடீரென எண்ணற்ற ஒளிக்கற்றைகளின் வெளிச்சத்தில் படு பயங்கர மாகக் காட்சியளித்தது. கடும்குளிர்காற்றை ஊடறுத்துச் செல்லும் கத்திகளின் ஒளி வீச்சுகளை விடவும் மிகவும் பயமுறுத்துவதாக இருந்தது.

சப்த அலைகளும், ஒளிக்கற்றைகளின் வெளிச்சமும் மக்களுக்கும் நாய்களுக்குமிடையே இருந்த இடைவெளியை நிரப்பின. மனிதர்களும், நாய்களும், சப்தங்களும், ஒளிக்கற்றை களுமாகச் சேர்ந்து ஒரு வலுவான,

ஆற்றல் மிக்க வலைப்பின்னலை ஓநாய்க் கூட்டத்தின் மீது உருவாக்கியிருந்தன.

இந்த அசாதாரணமான காட்சியைக் கண்ட ஜென் சென், யாங் கீ மற்றும் எல்லா பீஜிங் மாணவர்களுமே கூச்சலும் கூப் பாடும் போட்டனர். மக்களின் ஒழுங்கு சீர்குலைந்து, அவர்களுடைய குரல்கள் சொர்க்கத்தை உலுப்பின. தான் எங்கிருக் கிறோம் என்பதை ஜென்னால் இப்போது அறிய முடிந்தது.

குதிரைகள் படுகொலை செய்யப்பட்ட இடத்துக்குக் கொஞ்சம் தெற்கில் இருந்தது அது. அந்த மகத்தான ஏரியின் வடகிழக்கு முனையை நோக்கிக் கொஞ்சமும் பிசகாமல் வேட்டைக் கூட்டத்தை நடத்தியிருந்தார் பில்ஜி. அவன் அறிவதற்கு முன்பாகவே, ஆண்களும் குதிரைகளும் நாய்களும் ஏரியின் ஓரமாக வந்துவிட்டிருந்தனர். அசுர வேகத்தில் ஏரியின் வடமுனையில் ஒரு வளையத்தை உருவாக்கினர்.

பில்ஜி, தன் குதிரையைத் தட்டி, வேட்டைக்காரர்கள் ஒரு வரிசையில் பின்தொடர கீழ்நோக்கி விரைந்து சென்றார். பனியில் தெரிந்த தடங்களை ஆர்வத்துடன், தன் விளக்கு வெளிச்சத்தில் பார்த்தபடி சென்றார். ஜென், அவருக்கு நெருக்கமாகப் பின்தொடர்ந்தான். முதியவர் குதிரையை நிறுத்தினார். ‘‘ஓநாய்க் கூட்டம் இந்த இடத்தை சமீபத்தில்தான் கடந்திருக்கிறது. நிறைய ஓநாய்கள். அந்தத் தடங்களைப் பார். எவ்வளவு பளிச்சென்று இருக்கிறது. இம்முறை நாம் அவற்றை அடைந்துவிடுவோம். இந்த உறைபனியில் இவ்வளவு மக்களும் வாடிக்கொண்டிருப்பது வீண் போகாது.’’

‘‘ஓநாய்களை ஏரியிலிருந்தே ஏன் சுற்றி வளைக்கக் கூடாது?’’ எனக் கேட்டான் ஜென்.

‘‘அது சரி வராது’’ என்று பதிலளித்தார் முதியவர். ‘‘ஓநாய்கள் அதிகாலையில் உறைந்து கிடக்கும் குதிரைக் கறியை சாப்பிட்டுவிட்டு, சூரியன் உதயமாவதற்கு முன் அங்கிருந்து நழுவிவிடும். இன்னமும் இருட்டாக இருக்கும் இந்த நேரத்தில் அவற்றை நாம் சுற்றி வளைத்தால் அவற்றை நம் பொறியில் எப்படி சிக்க வைக்க முடியும். நாய்களால் அவற்றைப் பார்க்க முடியாது. ஓநாய்கள் எல்லா திசைகளிலும் ஓடித் தப்பித்துவிடும். நமக்கு ஒன்றுகூட சிக்காது. நள்ளிரவுக்குப் பிறகு தொடங்கி, காலை

முடிவதற்குள்ளாக நாம் நம் வளையத்தை உரிய இடத்தில் அமைக்க வேண்டும்.''

ஒளிவிளக்கு சமிக்ஞைகள் இடமும் வலமுமாகத் தொடர்ந்தன. பில்ஜி, தன்னுடைய கால் வளையத்தில் நின்றபடியே, இரண்டு திசைகளிலும் ஒளி உத்தரவுகளைத் தொடர்ந்து அனுப்பினார். சில நீளமாகவும் மிகக் குறுகியதாகவும், சில குறுக்கு நெடுக்குமாகவும் வட்டமாகவும் அமைந்திருந்தன. சிக்கலான சமிக்ஞை முறைகளின் பகுதிகள் அவை. அரைவட்ட வடிவிலிருந்த வேட்டைக்காரர்கள் அவற்றுக்கேற்ப பதற்றத்துடன், அதே சமயம் ஒரு ஒருங்கமைவில், நகர்ந்து முன்னேறினார்கள். அதற்கேற்ப மனிதக் குரல்களும் குதிரைக் கனைப்புகளும் நாய்க் குரைப்புகளும் அலை அலையாய் வெளிப்பட்டன. பனியில் ஓநாய்த் தடங்களைக் கண்டபோது, மனிதர்களிடமிருந்தும் குதிரைகளிடமிருந்தும் நாய்களிடமிருந்தும் ஆவேசமான கூப்பாடுகளும் சீற்றங்களும் குரைப்புகளும் வெளிப்பட்டன. யுத்தம் உறுதியாகிவிட்டிருப்பதை அறிந்த எக்களிப்பின் அறிகுறியாக அவை அமைந்திருந்தன.

''நீங்கள் என்ன சமிக்ஞை கொடுக்கிறீர்கள்?'' என்று கேட்டான் ஜென்.

அவர் தெரிவித்துக்கொண்டிருந்த சமிக்ஞைகளை நிறுத்தாமல் தொடர்ந்தபடியே பேசினார் முதியவர். ''மேற்கிலிருக்கும் மக்களிடம் வேகத்தைக் குறைக்கும்படியும், கிழக்கிலிருப்பவர்களிடம் இன்னும் கொஞ்சம் விரைந்து, மலையிலிருந்து கீழாக வந்துகொண்டிருப்பவர் களோடு இணையும்படியும் தெரிவித்துக்கொண்டிருக்கிறேன். முன்னதாகவே சென்றுவிடுவதென்பது, தாமதமாகக் கிளம்புவதைப் போலவே மோசமானது.''

பெரிய நாய்கள் ஏற்கெனவே ஓநாய்களின் வாசனையை மோப்பம் பிடித்துவிட்டன. அவற்றின் குரைப்புகள் மிகுந்த ஆத்திரத்தோடும் ஆவேசத்தோடும் வெளிப்பட்டன. எர்லாங் தோல் வாரைக் கடித்து, அதோடு போராடியபடி, திமிறிச் செல்லும் ஆவேசத்தோடு இருந்தது. தன்னுடைய சக்தியனைத்தையும் திரட்டி, அதை நிறுத்தி வைத்தபடி ஜென் அதனருகில் சென்று, தன்னுடைய சுருக்குக் கயிற்றுத் தடியால் அதன் தலையில் தட்டி, அதைக் கட்டுப்பாட்டுக்குள் இருக்கச் செய்தான்.

‘‘ஃப்ளாஷ் லைட்டுகள் வருவதற்கு முன்பாக, மக்கள் எப்படி இதை மேற்கொண்டார்கள்?’’ என்று கேட்டான் ஜென்.

‘‘டார்ச் விளக்குகள் மற்றும் வெண்ணெய் தடவப்பட்ட துணியால் சுற்றிய மரக்கட்டைகள். இவை போலவே அவையும் பிரகாசமானவை. அவற்றைப் பார்த்தால் ஓநாய்கள் பயந்து சாகும்.’’

வானம் லேசாக வெளுத்தது. மேய்ச்சல்நிலக் காட்சிகளை ஜென்னால் பார்க்க முடிந்தது. இந்த இடத்தில்தான் அவன் பல மாதங்களாகத் தன்னுடைய ஆடுகளை மேய்த்திருந்தான். வடமேற்குத் திசைக்கு எதிராக, மூன்று பக்கமும் மலைகள் சூழ்ந்த ஒரு நீர்ப் பள்ளத்தாக்கினை அவன் தன்னுடைய மனக் கண்ணால் பார்த்தான். அனேகமாக, பில்ஜி தன்னுடைய வலைப் பின்னலை அங்குதான் இறுக்கத் திட்டமிட்டிருப்பதாக அவனுக்குத் தோன்றியது. மலைகளுக்குப் பின்னாலுள்ள புதர்களில் குதிரை மேய்ப்பர்கள் பதுங்கியிருப்பார்கள். ஓநாய்கள் விரட்டப்பட்டு அந்த நீர்ப் பள்ளத்தாக்கிற்குள் வந்து சேரும்போது, அவற்றுக்குப் பின்னாலிருந்து மனிதர்களும் குதிரைகளும் நாய்களும் அவை வெளியேறுவதற்கான வழிகளை அடைத்துக்கொண்டு அவற்றை நெருங்குவார்கள். அதனையடுத்து அவற்றை நிர்மூலமாக்கும் யுத்தம் தொடங்கப்படும். ஆனால், எத்தனை ஓநாய்கள் பிடிபடுமென ஜென்னால் அனுமானிக்க முடியவில்லை. ஓநாய்க்கூட்டம் உண்மையிலேயே பெரிதாக இருக்குமென்றால், ஓரமாக இருக்கும் ஓநாய்கள் பதிலுக்கு மோதும். அந்த மோதல் நெருக்கமானதாக அமையும். ஜென், சேணத்திலிருந்து தன்னுடைய மேய்ச்சல் தடியை உருவியெடுத்து, தன் மணிக்கட்டில் தொங்கவிட்டுக்கொண்டான். ஓநாய்களைக் கொல்வதில் பட்டுவின் சிறந்த திறனைத் தானும் முயற்சி செய்யத் தயாரானான்.

காற்று மேலும் பலமாக வீசியது. மேகங்கள் மிக விரைவாக நகர்ந்துகொண்டிருந்தன. மேகங்களுக்கு இடையே ஊடுருவிய சூரியக் கதிர்கள், மேய்ச்சல் நிலத்தில் மங்கலான வெளிச்சத்தைப் பாய்ச்சின. வேட்டைக்காரர்கள் நீர்ப் பள்ளத்தாக்கினை அடைந்தபோது, அவர்களிடமிருந்து ஆச்சரியக் கூவல்கள் வெளிக் கிளம்பின. அந்த மங்கலான காலை வெளிச்சத்தில், இரண்டு டஜன் பெரிய ஓநாய்கள் மெல்ல நடை போட்டபடியும்,

நின்றும், சுற்றிலும் கவனிப்பதை அவர்கள் பார்த்தார்கள். ஆனால் நீர்ப் பள்ளத் தாக்குக்குள் இறங்க அவை தயங்கின. மேலும் ஒரு ஓநாய்க் கூட்டம் சற்றுத் தள்ளி, பார்வைக்குப் பட்டும் விலகியும் கொண்டிருந்தது. அவையும் அந்த இடத்தை அவதானிப்பது போலவே தெரிந்தது. அவனுக்குத் தெரிந்த வரை, வரவிருக்கும் அபாயத்தை அவை மோப்பம் பிடித்துவிட்டதாகவே தோன்றியது.

ஒரு வளைய வரிசையை உருவாக்குவதில் பில்ஜியின் துல்லியமான கணிப்புகளும் வழிகாட்டுதலும் குறித்து ஜென் பெருமதிப்பு கொண்டான். தாங்கள் எங்கு விரட்டப்பட்டு வந்து சேர்ந்திருக்கிறோம் என்பதை ஓநாய்க்கூட்டம் அதற்குள் உணர்ந்து விட்டிருந்தது. சுற்றிலும் வேட்டைக்காரர்கள் வளைத்து விட்டிருப் பதை அவை அவதானித்து முடித்தபோது, வலைப்பின்னல் இறுக்கப்பட்டிருந்தது. ஃப்ளாஷ் லைட்டுகள் பயமுறுத்தும் ஆற்றலை இழந்தபோது, வேட்டைக்காரர்களின் சுருக்குக்கயிற்றுத் தடிகள் பார்வையில் படலாயின. அரைவட்டத்தின் இரு முனைகளும் நீர்ப் பள்ளத்தாக்கின் வெளிப்புறங்களை நெருங்கியபோது, ஓநாய்கள் எவ்வித சந்தேகமுமின்றிப் பொறியில் மாட்டிவிட்டிருந்தன.

பல முன்னணி ஓநாய்கள் சூழ்நிலையை நன்கு அவதானித்த பிறகு, ஒரு கணமும் தயங்காமல், திரும்பி, அவை எங்கிருந்து வந்தனவோ அதை நோக்கிக் கூட்டத்தை வழி நடத்தின. அவை அப்போதுதான் குதிரைக் கறியை வயிறு நிறைய சாப்பிட்டிருந்ததால் அளவற்ற உத்வேகம் கொண்டிருந்தன. முழு ஆற்றலோடும் படு மூர்க்கத்தோடும் அவை ஓடின. அவை பனியில் ஓடிய வேகத்தில் படு பயங்கரமான மூட்டம் மேலெழுந்தது. எந்த ஒன்றாலும் அவற்றைத் தடுத்து நிறுத்த முடியாதுபோல் தோன்றியது. மேய்ப்பர்கள் சுருக்குக்கயிற்றுத் தடியைச் சுழற்றியபடியும், உரக்கக் கூவியபடியும் ஓநாய்களை எதிர்கொள்ள விரைந்தார்கள். உருவாகிவிட்டிருந்த இடைவெளியை அடைக்கும் வகையில் அவர்கள் இரு முனைகளி லிருந்தும் விரைவாக நகர்ந்தார்கள்.

ஓநாய்க் கூட்டத்தின் தாக்குதல் இன்னமும் வலுவாகவே இருந்தது. ஆனால் அவை சற்றே திசை மாற்றி, பெண்கள் பக்கமாகத் தங்களுடைய பிரதான தாக்குதலை மேற்கொண்டன. பெண்கள் குழுவினரிடம் குறைந்த அளவிலேயே சுருக்குக்கயிற்றுத் தடிகள் இருந்தன. கஸ்மாய் உட்பட எந்தவொரு

பெண்மணியும் அந்தத் தாக்குதலைப் பார்த்து வெளிறிப் போகவில்லை. குதிரையின் கால் வளையங்களில் நின்றபடி, தங்கள் கைகளை வெறியோடு வீசிக்கொண்டே அடிவயிற்றிலிருந்து கத்தினார்கள். அவற்றைக் கைகளினாலேயே தடுத்துவிடத் தயாராகிவிட்டதுபோல அவர்களுடைய செயல் இருந்தது. பெண்களிடம் குறைவாகவே

சுருக்குக்கயிற்றுத் தடிகள் இருந்ததால், அந்தச் சங்கிலிப் பின்னலில் அதுவே பலஹீனமானது என்பதை அறிந்து, முழு பலத்தோடு திடமாகவும் தீர்க்கமாகவும் முனைந்து அதைப் பிளந்து செல்லும் நம்பிக்கையோடு செயல்பட்டன. அப்பகுதியை உடைத்து அவை வெளியேறிவிடும் சாத்தியத்தை அறிந்த ஜென்னின் இதயம் கிட்டத்தட்ட நின்றுவிட்டது.

அத்தருணத்தில், பில்ஜி சேணத்தின் மீதேறி நின்று கையை மேலே தூக்கிக் கீழே இறக்கினார். ‘‘நாய்களை அவிழ்த்துவிடுங்கள்’’ என்று கத்தினார். உடனே எல்லோரும் கை வார்களை நழுவ விட்டார்கள். நூற்றுக்கும் மேற்பட்ட நாய்கள் பற்களைக் காட்டி உறுமியபடி, சிவப்பேறிய கண்களுடன், கிழக்கிலிருந்தும் தெற்கிலிருந்தும் மேற்கிலிருந்தும் ஓநாய்கள் இருந்த திசை நோக்கி சீறிப் பாய்ந்தன. பார், எர்லாங் மற்றும் அந்தப் படையணியைச் சார்ந்த பல பெரிய, துணிச்சல்மிக்க, கொலை வெறி கொண்ட நாய்கள் ஓநாய்க் கூட்டத்தின் முன்னணியினரை நோக்கிச் சென்றன. பிற நாய்கள் அவற்றைப் பின்தொடர்ந்து, தங்களுடைய எஜமானர்களின் முன் தங்களுடைய திடத்தையும் தீரத்தையும் காட்டும் ஆர்வத்தோடு சென்றன. வெறியோடு குரைத்தபடி, ஒன்றை ஒன்று மிஞ்சும் உத்வேகத்தோடு பாய்ந்து சென்றன.

இதற்கிடையே, சுருக்குக்கயிற்றுத் தடியோடிருந்த குதிரைக்காரர்கள், தாக்குதலை வலுப்படுத்தும் வகையில், நாய்களின் தாக்குதலோடு இணைந்துகொள்ள விரைந்தார்கள்.

குதிரைக் குளம்படிகளிலிருந்து பனியும் புழுதியும் பறந்தன. ஒரு காலத்தில் உலகையே அச்சுறுத்திய மங்கோலிய வீரர்கள், வெறியோடு, Òஹா! ஹா! ஹா!Ó என்று கத்தியபடி, குதிரைகளில் பாய்ந்து சென்றார்கள்.

அந்தக் கொலைவெறித் தாக்குதல் ஓநாய்களை மலைக்கச் செய்தன. தலைமை ஓநாய்கள் சட்டென நின்று, திரும்பி, மலைப் பாதையை நோக்கி

வழிநடத்தி விரைந்தோடின. அவற்றுக்கிருந்த ஒரே புகலிடம் அது மட்டும்தான். அங்கு, அதற்குச் சற்று பின்னாலிருக்கும் ஓநாய்களோடு இணைந்துகொள்வதற்கும் வாய்ப்புள்ளது. அவை மூன்று வெவ்வேறு சரிவுகளை நோக்கிப் பிரிந்து சென்றன. அதன்மூலம் அந்த வளையத்தை உடைத்துக்கொண்டு அவை மலை உச்சிகளை அடைய முடியும்; அல்லது கீழ்நோக்கிச் செல்ல முடியும்.

வேட்டைக்காரர்கள் ஒரு நீள் வரிசையை உருவாக்கி மலைப்பாதையை அடைத்தார்கள். ஓநாய்களை எங்கு மடக்க வேண்டுமென்று பில்ஜி திட்டமிட்டிருந்தாரோ அந்த இடத்தை ஓநாய்கள் அடைந்தன.

மலையின் மறுபக்கத்தில், இயக்குனர் உல்ஜீயும் ராணுவப் பிரதிநிதியான பாவோ சுங்காயும் உயர்ந்து வளர்ந்திருந்த புல்வெளிக்குள் மறைந்திருந்தபடி, அவர்களுடைய கண்களுக்கு முன்னாலிருந்த யுத்த களத்தின் சூழநிலையைப் பதற்றத்துடன் அவதானித்துக்கொண்டிருந்தார்கள். பாவோ, மிகுந்த பரவசத்துடன் தன் முஷ்டியால் பனி படர்ந்திருந்த தரையைக் குத்தினார். ‘‘பில்ஜி எப்போதுமே ஓநாய்களின் பக்கம்தான் என்று யார் சொன்னது? பார்த்தீர்களா, ஓநாய்க் கூட்டத்தை எப்போது, எங்கு சிக்க வைக்க வேண்டுமென்று நினைத்தாரோ, அதன்படியே மிகச் சரியாகச் செய்து முடித்திருக்கிறார். அவர் ஓர் அற்புதம்தான். இவ்வளவு ஓநாய்களை நான் ஒரு காலத்திலும் பார்த்ததில்லை. அந்த முதியவரை நீங்கள் கொண்டாட வேண்டும். அவருடைய பணிக்கு வெகுமதி கிடைக்கும்படி நான் பார்த்துக்கொள்கிறேன்.Ó

உல்ஜீயும் ஆசுவாசப் பெருமூச்சு விட்டார். அவரால் பார்க்க முடிந்த வரை, அங்கு நாற்பது அல்லது ஐம்பது ஓநாய்கள் மாட்டிக்கொண்டிருந்தன. கடந்த வருடங்களில் பத்து அல்லது இருபது கிட்டினாலே அது மிகப் பெரிய வேட்டை என்பதாக இருந்தது. ஆனால் இப்போது தலைமையேற்றிருப்பது ஓலோன்புலாக்கின் தலைமை ஆண்மகனான பில்ஜி. ஒவ்வொரு வருடமும் நடக்கும் சுற்றிவளைப்பு வேட்டையில், அவர் பொறுப்பேற்கா விட்டால், வேட்டைக்காரர்களுக்கு அதில் கலந்துகொள்ள மன மிருப்பதில்லை. ஆனால் குதிரைகள் படுகொலை செய்யப்பட்ட தானது அவருக்கு

ஆத்திரமூட்டியிருந்தது. உல்ஜீ திரும்பி பட்டுவிடம், ‘‘நான் சொல்வதைத் தெரியப்படுத்து. எவரொருவரும் தங்கள் துப்பாக்கிகளால் சுடக்கூடாது. வானத்தை நோக்கிக்கூட அவர்கள் சுடக்கூடாது. இன்று இங்கு நிறைய பேர் இருக்கிறார்கள். தவறுதலாகக்கூட எவர் மீதும் ஒரு குண்டுகூடப் பாய்ந்துவிடக் கூடாது.’’

‘‘நான் ஏற்கெனவே அவர்களிடம் பலமுறை சொல்லி விட்டேன்’’ என்றான் பட்டு.

மலைக்குப் பின்னால், குதிரை மேய்ப்பர்களும் வேட்டைக்காரர்களும் குதிரைகளில் இருந்தபடி சமிக்ஞைக்காகக் காத்திருந்தார்கள். அவர்கள் புல்வெளிப் பிரதேசம் அளித்திருக்கும் மிகச் சிறந்த வேட்டைக்காரர்கள். குதிரை ஓட்டுவதில் வல்லவர்கள். சுருக்குக்கயிற்றுத் தடியையும் மேய்ச்சல் தடியையும் அபாரமாய்ப் பயன்படுத்தும் திறன் பெற்றவர்கள். இந்த வேட்டைக்காக அவர்கள் அதிவிரைவான, உத்வேகமிக்க குதிரைகளைத் தேர்ந்தெடுத் திருந்தார்கள். குதிரை மந்தையின் இழப்பில் ஏற்பட்ட கோபம் அவற்றிடம் இன்னமும் நிறைந்திருந்தது. நாய்களின் வெறித்தனமான குரைப்புகளைக் கேட்ட குதிரைகள், யுத்தத்துக்கு முந்தைய தயார் நிலையில் உஷாராக இருந்தன.

உல்ஜீயும் பட்டுவும் மெதுவாகத் தங்களுடைய உடல்களை வளைத்து, சமிக்ஞை அளிக்கத் தயாரானார்கள்.

ஓநாய்க் கூட்டத்தின் பிரதானமான ஆற்றல் கொண்டவை, வளையத்தை உடைத்துக்கொண்டு, வடமேற்குத் திசைக்கு எதிரிலான உச்சிக்குச் செல்லும் முனைப்போடு இருந்தன. மிக உயர்ந்த தளத்தில் மனிதர்களோ குதிரைகளோ நாய்களோ ஓநாய்களுக்கு நிகராகச் செய்லபட முடியாது. அவற்றின் வலுவான உடல் வாகோடும், நிகரற்ற சக்தியோடும், அபாரமான மூச்சுத் திறனோடும், மலைகளின் உச்சங்களை நோக்கி அவை விரையும்போது, எதிரிகளைப் பின்னுக்குத் தள்ளிவிடும். சில வேட்டை நாய்களும் குதிரைகளும் சமதளத்தில் ஓநாய்களை முந்தி ஓடக் கூடியவை என்றாலும், ஓநாய்கள் மலை உச்சியை நோக்கி ஓடும்போது, அவற்றின் வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாமல் சட்டெனப் பின்தங்கிவிடும்.

ஓநாய்கள் மலையை நோக்கி முழு வேகத்துடன் ஓடின. அவற்றைத் துரத்திச் சென்றவர்கள் சற்றுப் பின்தங்கியிருந்தனர். விரைந்தோடும் ஓநாய்கள் தலைமையேற்றுச் சென்றன. சாம்பலும் வெள்ளையும் கலந்த மயிர் கொண்ட ஒரு ஓநாயை உல்ஜீ சுட்டிக் காட்டி பட்டுவிடம் சொன்னார். ''அதுதான் தலைமை ஓநாய். குதிரைப் படுகொலைச் சம்பவத்தை அதுதான் முன்னின்று நடத்தியது. அது உன்னுடையது. வா, அதை நாம் பிடிக்கலாம்.''

ஓநாய்க் கூட்டம் பல நூறடிகள் தூரத்தில் சென்றன. பட்டு சுருக்குக்கயிற்றுத் தடியை உருவியெடுத்துக்கொண்டு குதிரைமீது தாவி ஏறினான். உல்ஜீயும் தன்னுடைய குதிரையில் ஏறியபடி, ''தாக்கு'' என்று கத்தினார்.

பட்டு தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை, யுத்தக் கொடியைப் போல, உயர்த்திப் பிடித்தான். குதிரை மேய்ப்பர்கள் ''போ! போ!'' என்று கத்தினார்கள். டஜன் கணக்கான வேட்டை நாய்களும் குதிரைகளும் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் மலை உச்சியை அடைந்திருந்தன. மூன்றில் இரண்டு பகுதி குதிரை மேய்ப்பர்கள் முன்னால் சென்று, சரிவின் பாதி மட்டத்தில் ஓர் அரை வட்ட வடிவில் அமைந்து, பில்ஜியின் கட்டளைக்குட் பட்டிருந்த வேட்டைக்காரர்களோடு இணைந்தார்கள். மீதமிருந்த மூன்றாவது பகுதியினர் தங்களுடைய சுருக்குக்கயிற்றுத் தடிகளோடு ஓநாய்களைப் பின்தொடர்ந்து விரட்டிச் சென்றனர்.

பதுங்கியிருந்தவர்கள் திடீரென எம்பிக் குதித்து ஓநாய்களைத் தாக்கியபோது, அவை குழப்பமடைந்து சிதறின. அவை திறம்படப் பிரயோகிக்கும் ஒரு பொறியில் அவை இப்போது சிக்கிக் கொண்டிருந்தன. அவை ஒரு முறை மான்களை இவ்வாறு சிக்க வைத்தபோது மான்கள் தடுமாறியதை விடவும் அவை மோசமாக நிலை குலைந்தன. அவை அடைந்த அவமதிப்பு, அவற்றின் கோபத்தை அதிகரித்தது. அவை திரும்பி, மனிதர்களோடும் நாய்களோடும் இறுதி யுத்தம் மேற்கொள்ள உத்தேசித்திருந்த உயர்ந்த தளத்தைக் கைவிட்டு, மீண்டும் கீழ்நோக்கி ஓடத் தலைப்பட்டன. தங்கள் உயிரைப் பொருட்படுத்தாமல், அவை நாய்க் கூட்டத்தைக் கிழித்துக்கொண்டு பாய்ந்தன. நாய்களில் பல நிலை தடுமாறின. பனி படர்ந்திருந்த அந்தச் சரிவு, பயங்கரமான யுத்த களமாக மாறியிருந்தது. ஓநாய்கள் மற்றும் நாய்களின் கோரைப் பற்கள் கடித்தும் கிழித்தும் நடந்த சண்டையில், பனியும்

மிருகங்களின் மயிர்களும் பறந்தன. நாய்கள் குரைத்தன; ஓநாய்கள் ஊளை யிட்டன. கழுத்துகளிலிருந்தும் தலைகளிலிருந்தும் நாய்களின் ரத்தமும் ஓநாய்களின் ரத்தமும் சீறிப் பாய்ந்து வழிந்தோடின.

அச்சம் பீடித்திருந்த மாணவர்கள், இத்தகைய ரத்த வெள்ள யுத்தத்தை அதுவரை பார்த்திராததால், பேச்சு மூச்சற்றுப் போயினர்.

அதே சமயத்தில், மலை உயரத்தில் இருந்து, சாம்பல் வண்ணம் மேவிய ஓநாய் அரசனைப் பட்டு உற்றுப் பார்த்தான். தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியைச் சுழற்றியபடி தாக்குதலில் ஈடுபட்டான். அந்தத் தலைமை ஓநாய் தன்னுடைய கூட்டத்தோடு சேர்ந்து கீழ்நோக்கிப் பாய்ந்தோடாமல், திரும்பி, மேற்கு நோக்கி ஓடியது. நான்கைந்து ஓநாய்கள் அதைச் சுற்றிச் சூழ்ந்து வளையத்தை உடைக்கும் முயற்சியில் ஈடுபட்டன. மூன்று வேட்டைக்காரர் களோடும் ஐந்து நாய்களோடும் சேர்ந்து, தலைமை ஓநாயையும் அதற்குப் பாதுகாவலாக இருந்த ஓநாய்களையும் பட்டு குறி வைத்தான். ஆனால் ஓநாய் அரசன், அப்பகுதி குறித்த அதனுடைய துல்லியமான அறிவால், தப்பிச் செல்வதற்கான ஒரு மாற்றுவழியில், தன் பார்வையைப் பதித்தது. ஆனால் அது அபாயகரமான பாதை. பனி மூடியிருந்த தரை, சிறிய வழுக்குப் பாறைகளைக் கொண்டிருந்தது. ஓநாய்கள் அவற்றின் மீது கால் வைத்தவுடனேயே, பாறாங்கற்கள் கீழ்நோக்கி உருண்டோடின. ஆனால் அவற்றின் பெரிய தடித்த பாதங்களால், அவை வழுக்கி விழுந்து உருளாமல், வழுக்கியோடும் பாறாங்கற்களோடு சேர்ந்து அவற்றால் விரைந்தோட முடிந்தது. பனிப்பாறைக் கற்கள் உருளும் முழக்கங்கள் பின்தொடர அவை ஓடின. நாய்கள், தங்களுடைய சிறிய பாதங் களால் தட்டுத் தடுமாறியேனும் ஓட்டத்தைத் தொடர்ந்தன. ஆனால் குதிரைகளால் முடியவில்லை. மூன்று வேட்டைக்காரர்களும் வழுக்குப் பாறைச் சரிவை அடைந்ததும், ஒரு குதிரையின் கால் தவறியதில் அதுவும் அதில் சென்ற வேட்டைக்காரரும் கீழே விழுந்தனர். அவருடைய சுருக்குக்கயிற்றுத் தடி மூன்றாக உடைந்தது. பயந்துபோன மற்ற இரண்டு வேட்டைக்காரர்களும் தங்களுடைய குதிரைகளை நிறுத்திவிட்டு, தங்களுடைய சேணங்களிலிருந்து கீழே குதித்து, தங்களுடைய தோழரை மீட்க ஓடினார்கள்.

வஞ்சம் தீர்க்கும் எண்ணங்களால் பீடிக்கப்பட்டிருந்த பட்டு, குதிரையிலிருந்து இறங்கி, தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை ஒரு கைத்தடியைப் போலப் பயன்படுத்திக்கொண்டு, பாறைகளுக் கிடையே இருந்த இடைவெளியைப் பிணைத்திருந்த ஒரு குறுகலான பாதையினூடாக, தன்னுடைய துரத்தலைத் தொடர்ந்தான். அவனைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்தது அவனுடைய குதிரை. ''பிடி!'' ''பிடி!'' என்று கத்தினான். ஒடுக்கமான நீண்ட ஒரு கரை மேட்டை அவன் கடந்தபோது, நாய்களின் இரங்கத்தக்க, வலி நிறைந்த குரைப்புகள் கேட்டன. உடனே அவன் தாவிக் குதித்துக் குதிரையின் மீதேறி, சத்தம் வந்த திசை நோக்கி விரைந்தான். ஒரு கணத்துக்குப் பிறகு, பாதி இறந்த நிலையில் ஒரு நாய் தரையில் கிடந்தது. மற்றொன்று ஒரு காதை இழந்து, முகமெல்லாம் ரத்தத்துடன் காணப்பட்டது. மற்ற மூன்று நாய்களும் பயத்தில் பின்வாங்கி நின்றுகொண்டிருந்தன. அவற்றின் மயிர்கள் சிலிர்த்திருந்தன. ஓநாய்கள் சுருக்குக்கயிற்றுத் தடியைப் பார்த்ததும், திரும்பி, நாணல் பள்ளத்தாக்குக்குள் பாய்ந்தோடின. காயமடைந்த மூன்று நாய்களோடு பட்டு அவற்றைப் பின்தொடர்ந்தான்.

ஒடுக்கமான மேட்டில் பட்டு குதிரையில் செல்வதைப் பார்த்த பிறகு உல்ஜீ, பாவோ சுங்காயுடன் சுற்றி வளைப்புப் பகுதியில் ஒரு தோதான இடத்துக்குச் சென்றார். யுத்த களத்தை அங்கிருந்தபடி நன்கு கவனிக்கவும், அவருடைய படைகளை சரியானபடி பயன்படுத்தவும், ஓநாய்க் கூட்டத்துக்கெதிரான வலைப் பின்னலை மெதுவாக நெருக்கவும் வாய்ப்பான இடமாக அது இருந்தது. எல்லா மங்கோலிய வேட்டைக்காரர்களும் சூழ்நிலையை மிகச் சரியாக உணர்ந்திருந்ததோடு, தங்களுடைய பொறுப்புகளையும் மிகத் துல்லியமாக அறிந்திருந்தனர். தனிப்பட்ட பெருமைக்காக அங்கு எவரும் போராடவில்லை. வளையத்தை உடைத்துக்கொண்டு, அதனூடாக எந்த ஓநாயாவது வெளிவந்தால், இந்த 'வெளிப்புற' வேட்டைக்காரர்கள், அதைத் தங்களுடைய சுருக்குக்கயிற்றுத் தடியால் பிடித்தார்கள்; அல்லது மீண்டும் அதை வளையப் பகுதிக்குள் துரத்திவிட்டார்கள். இந்த வேட்டைக் காரர்கள் அதற்காக இப்படி நகர நேரிடும்போது ஏற்பட்ட வெளியைக்கூட, உடனடியாக மற்றவர்கள் நிறைவு செய்து, வடிவமைப்பு குலையாமல் பார்த்துக்கொண்டார்கள்.

வளையத்தின் மையமானது, மனிதக் கூட்டத்தாலும், குதிரைகளாலும், நாய்களாலும், ஓநாய்களாலும் நிறைந்திருந்தது. சில நாய்களும் ஓநாய்களும் பலத்த காயங்களோடு ரத்தம் வழிந்தோடத் தரையில் கிடந்தன. நாற்பதுக்கும் மேற்பட்ட ஓநாய்களை நூற்றெழுபதுக்கும் மேற்பட்ட நாய்கள் சூழ்ந்திருந்தன. அவை தோளோடு தோளாகவும், முதுகோடு முதுகாகவும், வால்கள் தொட்டுக்கொண்டிருக்கும்படியும், கோரைப் பற்களை வெளிக்காட்டியபடி ஒருங்கிணைந்து சாவை எதிர்நோக்கி இருந்தன. பல ஓநாய்கள் மற்றும் நாய்களின் மார்புகளும் தோள்களும் கடித்துக் கிழிக்கப்பட்டு ரத்தம் வெளியேறிக்கொண்டிருந்தது.

முன்வரிசையில் நாய்கள் நின்றிருக்க, அவற்றுக்குப் பின்னால் பல டஜன் குதிரையோட்டிகள் உட்பகுதியிலிருந்த ஓநாய்களை நோக்கிச் சுருக்குக்கயிற்றுத் தடிகளை வீசிக்கொண்டிருந்தார்கள். பற்களால் கடித்தும் நகங்களால் கிழித்தும் ஓநாய்களும் நாய்களும் மூர்க்கமாகச் சண்டையிட்டுக்கொண்டிருந்தன. அதனால் ஓநாய்களை மட்டும் குறி வைத்து சுருக்குக்கயிற்றுத் தடிகளை வீசுவது வேட்டைக் காரர்களுக்குக் கடினமானதாக இருந்தது. தவறுதலாக கயிற்றுக் கண்ணியில் நாய் சிக்கிவிடக் கூடாதென்பதில் அல்லது ஓநாயும் நாயும் ஒரே வலையில் மாட்டிவிடக் கூடாதென்பதில் அவர்கள் மிகுந்த அக்கறை கொண்டிருந்தார்கள்.

மிகவும் அனுபவம் வாய்ந்த சில வேட்டைக்காரர்கள், தங்களுடைய சுருக்குக்கயிற்றுத் தடிகளை ஓநாய்களின் தலைகளுக்கு மேலாகத் தொங்கவிட்டு, கூட்டத்திலிருந்து ஏதேனும் ஒன்று தானாகவே விலகுவதற்காகக் காத்திருந்தார்கள். அப்படி நடக்கும் போது அவர்கள் கயிற்றுக் கண்ணியைக் கீழே இறக்கினார்கள். அப்போது அது கழுத்தைச் சுற்றியோ, உடம்பிலோ அல்லது காலிலோ மாட்டினால் அதை இறுக்கி, அந்த விலங்கை அப்படியே இழுத்துச் சென்று நாய்கள் அதன்மீது பாய்ந்து, அதன் தொண்டையைக் குதறிக் கிழிக்கும்படி விட்டார்கள்.

மாணவர்களும் பெண்களும் குழந்தைகளும் வளையத்துக்கு வெளியே நிறுத்தப்பட்டிருந்தார்கள். ஜென் சென்னையும் யாங் கீயையும் மலையின் பாதி உயரத்தில் சென்று இருக்கும்படி பில்ஜி அனுப்பினார். கீழே நடப்பவற்றை அங்கிருந்து எவ்விதத் தடங்கலும் இல்லாமல் அவர்களால் பார்க்க முடியும்.

ஓநாய்கள் ஒன்றன் பின் ஒன்றாக, தவிர்க்க முடியாதபடி, சுருக்குக்கயிற்றில் மாட்டி இழுக்கப்பட்டு நாய்கள் வசம் விடப்பட்டன. சிக்கிக்கொண்ட ஓநாய்களின் தொண்டைகளி லிருந்து கரகரப்பான ஊளைகள் வெளிப்பட்டன. ஓநாய்கள் உடனடியாக சண்டை முறைகளை மாற்றிக்கொண்டன. நாய்களின் கழுத்துகளைக் குறிவைத்து எம்பிப் பாய்வதற்குப் பதிலாக, தங்களுடைய தலைகளைத் தாழ்த்திக்கொண்டு, அவற்றுக்கு மேலாகத் தொங்கும் சுருக்குக்கயிற்றில் மாட்டிக்கொள்ளாத வகையில் சண்டையிட்டன.

ஜென் தொலைநோக்கி மூலம் அந்த யுத்தத்தைப் பார்வையிட்டான். தப்பிச் செல்வதற்கான வழியேதும் இல்லாதபோதும், அவை தங்களுடைய சாதுர்யங்களை இழக்காமல் இருப்பதை அவன் பார்த்தான். அவற்றைச் சுற்றிச் சூழ்ந்து பிரதான சக்தியாய் இருக்கும் வேட்டை நாய்களில் எவ்வளவைக் கொல்ல முடியுமோ அந்த அளவு கொன்றுவிடுவதில் அவை முனைப்புடன் செயல் பட்டன. அவை, மூன்று, நான்காகச் சேர்ந்துகொண்டு, தங்களுடைய பயங்கரமான பற்களால் கடித்து, ரத்தத்தை ருசி பார்த்தன.

வளையமாய் அமைந்திருக்கும் வேட்டைக்காரர்களுக்குப் பின்னால் இருந்தபடி, அந்த யுத்தத்தை வழி நடத்திக்கொண்டிருந்த பில்ஜி, திடீரென ''தாக்கு, பார், தாக்கு'' எனக் கத்தினார். பிறகு, பின்வாங்குவதற்கான சமிக்ஞையைக் காட்டினார்.

முதியவரின் மனதில் இருப்பது என்னவென்பதை அறிந்துகொண்ட ஜென்னும் யாங்கும், ''எர்லாங் தாக்கு'' என்று கத்தினார்கள். ''தாக்கு, எர்லாங், தாக்கு!''

இரண்டு கத்தல்களையும் கை சமிக்ஞைகளையும் புரிந்துகொண்டு, படு மூர்க்கமான, கண்கள் சிவந்திருந்த இரண்டு நாய்களும் பல எட்டுகள் பின்வாங்கின. பிறகு, தங்கள் சண்டை முறைகளை மாற்றின. உரத்த உறுமல்களுடன், அந்தக் கூட்டத்துக்குத் தலைமையேற்றிருந்த மிகப் பெரிய ஓநாயை நோக்கி வெறியோடு பாய்ந்தன. அவற்றுள் அதிவிரைவான எர்லாங், ஓநாய் மீது முதலில் மோதி, அதை மூன்று அல்லது நான்கடி பின்னுக்குத் தள்ளியது. ஆனாலும் அந்த ஓநாய் தடுமாறாமல் தன் கால்களில் நிலைத்து நின்றது. அதற்குள் ஆவேசமான, கனத்த நாயான பார் அதன்மீது ஒரு சுத்தியலைப் போல மோதியதில் அது நிலை குலைந்தது. பிறகு, அது எழுந்து

நிற்பதற்குள் எர்லாங் அதைத் தாக்கியது. தலைமை நாயின் தொண்டையில் தன் பற்களைச் செலுத்தியது. நான்கு துவாரங்கள் வழியாக ரத்தம் வானை நோக்கியும் பனி படர்ந்த தரையிலும் பீய்ச்சியடித்தது. எர்லாங்கின் ரத்தக்கறை படிந்த முகம், ஓநாய்க் கூட்டத்திடம் திடீர் பயத்தை உருவாக்கியது. செத்துக்கொண்டிருந்த தலைமை ஓநாய், மிச்சமிருந்த சக்தியைத் திரட்டி, தன் பாத நகங்களால் எர்லாங்கின் மார்பிலும் வயிற்றிலும் ரத்தத் தடங்களை ஏற்படுத்தியது. ஆனால் நாயின் மூர்க்கம் கடுமையாக இருந்தது. அந்த ஓநாய் இறக்கும்வரை அது விடாமல் ஓநாயின் தொண்டையைக் குதறிக்கொண்டிருந்தது. அந்த ஓநாய்க் கூட்டத்துக்கு இந்தக் கொடூரமான நாயைத் தெரியும். அதற்கு முன்னரே, அதனுடைய சண்டைத் திறன்களை அவை எதிர்கொண்டிருக்கின்றன. தங்களுடைய தலைமையைக் கொன்ற அதனிடமிருந்து எட்டி நிற்கும் வகையில் அவை சற்றுப் பின் வாங்கின.

இந்தச் சண்டை முறையிலிருந்து கற்றுக்கொண்டு, பிற பெரிய நாய்களும் ஓநாய்களைப் பந்தாடின. எர்லாங்கும் பாரும் சேர்ந்து கொலை வெறியாட்டத்தைத் தொடர்ந்ததில் ஓநாய்களின் தற்காப்பு அமைப்புகளில் ஒரு விரிசல் வெளிப்பட்டது. வேட்டைக்காரர்கள் உள்ளே நுழைந்தார்கள். சுருக்குக்கயிற்றுத் தடிகள் சரமாரியாக ஓநாய்க் கூட்டத்தின்மீது வீசப்பட்டன. அவற்றின் வடிவமைப்பு தகர்ந்துபோனது. பல ஓநாய்கள் சுருக்குக்கயிற்றில் சிக்கின; அல்லது நாய்க் கடிக்குப் பலியாகின.

யுத்தத்தில் தோற்றுவிட்டதை அறிந்துகொண்ட ஓநாய்க் கூட்டம் குலைந்துபோய், ஒவ்வொன்றும் தன்னுடைய தைரியத்தையும் தீரத்தையும் சார்ந்து, சுற்றிவளைப்பு வளையத்தினூடாக எல்லா திசைகளிலும் தெறித்து ஓடின. யுத்த வழிமுறை குழப்பத்துக் காளானது. ஒவ்வொரு ஓநாயும் தங்கள் உயிரைக் காப்பாற்றிக்கொள்ளும் கடைசி வாய்ப்பாக ஓட்டமெடுத்தன. ஆனால் அப்படி ஓடியபோது, ஒவ்வொரு ஓநாயையும் உடனடியாகப் பல நாய்களும் ஓரிரு வேட்டைக்காரர்களும் சுற்றிச் சூழ்ந்தனர். தப்பிப்பது சாத்திய மில்லை. வெளிவட்ட வேட்டைக்காரர்களான ஆண்கள் மற்றும் பெண்கள், சிறார்கள் மற்றும் முதியவர்கள் கூட்டாகக் கூச்சலிட்ட படி, தங்களுடைய சுருக்குக் கயிற்றுத் தடியால் தாக்குதலை மேற்கொண்டனர்.

உள்வட்டத்தில், பொதுவாக எல்லோராலும் ஓநாய் என்று கருதப்பட்ட லாம்ஜாவ், இரண்டு நாய்கள் சேர்ந்து ஒரு ஓநாயை இறுகப் பிடித்துப் போராடிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். உடனே குதிரையில் அங்கு சென்று, சேணத்திலிருந்தபடியே குனிந்து, தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை, அதன் வழியாக ஓநாய் செல்லும் வகையில், தாழ்வாகப் பிடித்தான். பின் அதைச் சுண்டி, ஓநாயின் பின்னங்கால்களைச் சுருக்குக்கயிற்றுக்குள் மாட்ட வைத்தான். ஓநாய் திரும்பி, தடியைத் தாக்க முயற்சிப்பதற்குள், லாம்ஜாவ் தடியைச் சுழற்றி ஒரு சாக்குப் பையைப் போல அதை இழுத்தான். முன்பாத நகங்களைத் தரையில் தேய்த்தபடி, எப்படி யாவது வெளியேற அது முயற்சித்ததில், பனியில் சிறு பள்ளம் ஏற்பட்டது. லாம்ஜாவ் நாய்களை அழைத்தான்.

மேய்ச்சல் நிலத்தில் சுருக்குக்கயிற்றுத் தடியில் ஒரு ஓநாயைச் சிக்க வைப்பது கடினம்; அதன்மூலம் அதைக் கொல்வது அதை விடவும் கடினம். ஓநாய்களின் கழுத்துகள் மிகச் சிறியவை மற்றும் தடிமனானவை என்பதால் சுருக்குக்கயிற்றிலிருந்து அவை சுலபமாக நழுவி வெளியேறிவிடும். அதனால், அனுபவம் வாய்ந்த வேட்டைக்காரர்கள், அதனுடைய இடுப்பைச் சுற்றிப் பிடிப்பதையே தேர்ந்தெடுப்பார்கள். அதனுடைய உடம்பிலேயே அதுதான் மெல்லியது. அதைச் சரியாகச் செய்துவிட்டால், அந்தப் பிடியிலிருந்து அதனால் தப்பவே முடியாது. அதற்கடுத்த சிரமமான வேலை, ஓநாயைக் கொல்வது. சுருக்கைக் கழுத்தில் மாட்டிப் பிடித்தால், பொதுவாக மூச்சுத் திணறி கதை முடிந்துவிடும்; ஆனால் சுருக்கு இடுப்பைச் சுற்றி இருக்கும்போது, ஒரு வேட்டையாளன் மட்டுமே அதில் ஈடுபட்டிருந்தால், அதில் சிரமங்கள் மிக அதிகம்.

வேட்டைக்காரர் குதிரையிலிருந்து இறங்கும்போது, தடியை ஓநாய் திருப்பித் தாக்கும். பெரும்பாலும் தடியை அது இரண்டாக ஒடித்துவிடும். அதன்பிறகு, அது வேட்டைக்காரரைத் தாக்கும், அல்லது தப்பி ஓடிவிடும். மிகுந்த தைரியமும் திறமைகளும் கொண்ட வேட்டைக்காரரால் மட்டுமே, ஓநாய் எழுந்து கொள்வதற்கு முன்பாகவே, அதை மேலே தனக்கு நெருக்கமாக இழுத்து தன்னுடைய மேய்ச்சல் தடியால் அல்லது கத்தியால் கொல்ல முடியும். பெரும்பாலானவர்கள் தனியாக ஒரு ஓநாயைத் தீர்த்துக் கட்டத்

துணிவதில்லை. தோலை இழந்தாலும் பரவாயில்லை என்று அவர்கள் ஓநாயை அப்படியே இழுத்துச் சென்று இன்னொரு வேட்டைக்காரரிடமோ நாய்களிடமோ விட்டுவிடுவார்கள்.

லாம்ஜாவ், தன்னுடைய ஓநாயைப் பனி ஆழமாக இருந்த ஓரிடத்துக்கு இழுத்துச் சென்று, அதைக் கொல்வதற்கான நாயைத் தேடினான். பல நாய்கள் அந்த ஓநாயைச் சுற்றிச் சூழ்ந்தபோதும், எந்தவொன்றும் கொலைவெறித் தாக்குதலை நிகழ்த்த முன் வர வில்லை. கொஞ்சம் முன்னர்தான் எர்லாங், ஒரு ஓநாயின் தொண்டையைக் கடித்து வீழ்த்தியிருந்ததைப் பார்த்திருந்த லாம்ஜாவ், எர்லாங்கை நோக்கி அதை இழுத்துவந்து, ''கொல்லு! கொல்லு!'' என்று கத்தினான்.

உயிர் போகுமளவு காயம் பட்டிருந்த ஓநாயைக் கைவிட்டு விட்டு, லாம்ஜாவ் இழுத்துக்கொண்டு வந்த ஓநாயிடம் எர்லாங் சென்றது. அதனுடைய முன் பாதங்களை ஓநாயின் தலை மற்றும் மார்பில் ஊன்றிக்கொண்டு, தொண்டையில் பற்களைப் பாய்ச்சியது. ஓநாய் தன்னுடைய நகங்களால் எர்லாங்கோடு சண்டையிட முயற்சி செய்து தோற்றுப்போனது.

லாம்ஜாவ், குதிரையிலிருந்து குதித்திறங்கி, மற்ற வேட்டைக்காரர்களைப் பார்த்துக் கத்தினான். ''அவற்றை இங்கே இழுத்து வாருங்கள். அவை இந்த நாய்க்கு நிகராகாது.''

அருகிலேயே, சுருக்குக்கயிற்றில் சிக்கிய ஒரு ஓநாயை பார் கொன்றுகொண்டிருந்தது. தங்களுடைய சுருக்குக்கயிற்றுத் தடியால் ஓநாய்களைப் பிடித்த பல வேட்டைக்காரர்கள் அவற்றை எர்லாங்கிடமும் பாரிடமும் கொண்டு வந்து ஒப்படைத்தார்கள்.

இந்தக் கொலைவெறித் தாக்குதலில் அவை இரண்டு மட்டுமல்ல, மேலும் பல தீரமும் மனதிடமும் மிக்க நாய்களும் ஈடுபட்டிருந்தன. டோர்ஜிக்கு சொந்தமான எட்டு நாய்களும் நன்கு பயிற்சியளிக்கப்பட்டவை; ஓநாய்க் கொலையில் பிரசித்தி பெற்றவை. ஒன்றோடொன்று இணைந்து இசைமையோடு செயல் படுவதிலும் தேர்ச்சி பெற்றவை. அவை ஓரணியாகவே சண்டை யிடுபவை; ஒருபோதும் தனித்து இயங்குவதில்லை. அப்படியாகத் தான் அவை இப்போது செயல்பட்டுக்கொண்டிருந்தன. எட்டு நாய்கள் அடங்கிய ஓரணி, ஒவ்வொரு

ஓநாயாகக் கொன்று கொண்டிருந்தது. திறம்படவும் விரைவாகவும் அவற்றின் செயல்பாடு இருந்தது. அவை ஏற்கெனவே மூன்றை முடித்துவிட்டு எண்ணிக்கையைத் தொடர்ந்துகொண்டிருந்தன.

வேட்டைக்காரர்களும் மூன்று அல்லது நான்கு பேர் சேர்ந்த குழுக்களாகச் செயல்பட்டுக் கொண்டிருந்தார்கள். ஒருவர் ஒரு ஓநாயைப் பிடித்ததும், மற்றவர்கள் கீழே குதித்து, அதன் வாலையும் பின்னங்கால்களையும் பிடித்துக்கொண்டு, தடிகளால் தலையில் அடித்துக் காரியத்தை முடித்தார்கள். வடமேற்குத் திசையிலிருந்து காட்டுக் கூச்சல் வெளிப்பட்டது. அங்கு இரண்டு பெரிய ஓநாய்களை ஐந்தாறு வேட்டைக்காரர்கள் விரட்டிச் சென்று கொண்டிருந்தார்கள்.

இரண்டு ஓநாய்களும் ஒரு வேட்டைக்காரரிடமிருந்து இன்னொருவரிடமென மாறி மாறி ஓடிக்கொண்டிருந்தன. வேறெங்கும் ஓட முடியாதபடி அவை தலை கிறுகிறுக்க சுற்றிக் கொண்டிருந்தன. பலமுறை அவை அடி வாங்கித் தரையில் விழுந்து மீண்டும் எழுந்து சுற்றின. பின் அதில் ஒன்று இனி ஓட முடியாத படி அடிபட்டது. லாசுருங் தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியைக் கீழே போட்டுவிட்டு, குதிரையிலிருந்து அதன்மீது எகிறிக் குதித்தான். அது சுதாரித்து எதிர்வினை செய்ய முற்படுவதற்குள், அதன் இரு பக்கங்களிலும் கால்களைப் போட்டுக்கொண்டு அதன்மீது உட்கார்ந் தான். அதன் காதுகளைப் பற்றி, அதன் தலையைத் தரையில் ஓங்கி அடித்தான். அதன் வாயிலிருந்தும் மூக்கிலிருந்தும் ரத்தம் ஒழுகியது. மற்ற வேட்டைக்காரர்களும் அந்த இடத்துக்குச் சென்று, குதிரைகளிலிருந்து அதன்மீது எகிறிக் குதித்தார்கள். மூச்சுவிட முடியாதபடி அதை அமுக்கினார்கள். கடைசியாக, லாசுருங், கத்தியை உருவி அதைக் குத்திக் கொன்றான். மற்றொரு ஓநாயை, மூன்று இளம் குதிரை மேய்ப்பர்கள் சுற்றிச் சுற்றி அடித்தார்கள். கடைசியாக ஒருவன் அதைக் கொன்று அந்த ஆட்டத்தை முடித்தான்.

ஜென் சென், யாங் கீ மற்றும் பிற மாணவர்கள் தங்கள் சுருக்குக்கயிற்றுத் தடியை மிகுந்த சோர்வுடன் தரையில் போட்டிருந்தனர். இந்த வேட்டையில் அவர்களுடைய பங்கு, பார்வை யாளர்களாக இருப்பதுதான். ஆனால் அவர்களை மிகுந்த ஏமாற்றமடையச் செய்தது என்னவென்றால், அவர்களுடைய குழுவிலிருந்து சண்டையில் சேர்த்துக்கொள்ளப்பட்ட ஒரே

நபரான, குதிரை மேயப்பாளன் சாங் ஜியோன் ஒரு ஓநாயைக் கூடத் தன்னுடைய சுருக்குக்கயிற்றில் பிடிக்காததுதான்.

எல்லாம் நல்லபடியாக நடந்துகொண்டிருப்பதைக் கண்ட பில்ஜி, ஜென்னிடமும் யாங்கிடமும் குதிரையை ஓட்டி வந்தார். ‘‘மாணவர்களாகிய நீங்கள் அருமையாகப் பணியாற்றினீர்கள்’’ என்றார் அவர். ‘‘நீங்கள் இங்கு இருந்ததால், மேலும் பல வேட்டைக் காரர்களை, அவர்களுடைய சுருக்குக்கயிற்றுத் தடியுடன் என்னால் சண்டையில் ஈடுபடுத்த முடிந்தது.’’ அவர்களுடைய முகங்களில் வெளிப்பட்ட ஏமாற்றத்தைக் கவனித்த முதியவர் சிரித்தபடியே பேசினார். ‘‘உங்களுடைய நாய் வெகு தீரமாய்ப் பங்களித் திருக்கிறது. அது தனியாக இரண்டு ஓநாய்களைக் கொன்றிருக்கிறது. மேலும் இரண்டு ஓநாய்களை வேட்டைக்காரர்கள் கொல்ல உதவி யிருக்கிறது. அதனால் உங்கள் இருவருக்குமே ஆளுக்கொரு தோல் கிடைக்கும். மற்ற இரண்டு தோல்கள், ஓநாய்களைச் சுருக்குக் கயிற்றில் பிடித்த வேட்டைக்காரர்களைச் சேரும். அதுதான் வழக்கம்.’’ அவர் திரும்பி, அவர்களையும் அழைத்துக்கொண்டு சரிவில் இறங்கினார்.

வேட்டை முடிந்தது. தப்பியோடிவிட்ட அரை டஜன் ஓநாய்களைத் தவிர மற்ற எல்லா ஓநாய்களும் கொல்லப்பட்டு விட்டன. தப்பியோடியவை, அதிவிரைவாக ஓடக் கூடியவையாகவோ அல்லது அபாரமான திறன்கள் கொண்டவையாகவோ, அல்லது அந்தக் கூட்டத்தின் அதிர்ஷ்டசாலிகளாகவோ இருக்கக்கூடும்.

வெளிவட்டத்திலிருந்த வேட்டைக்காரர்கள், வழி நெடுகக் கூச்சலிட்டபடியே, யுத்தகளத்தின் கோலத்தை நெருக்கமாகப் பார்ப்பதற்காக அங்கு வந்து சேர்ந்தார்கள். ஜென்னும் யாங்கும் நிற்குமிடத்துக்கு இரண்டு உடல்களை இழுத்துச் செல்லும்படி பில்ஜி ஏற்கெனவே மக்களிடம் கூறியிருந்தார். பிறகு, தன் சட்டைக் கையைச் சுருட்டிக்கொண்டு, அவர்கள் அவற்றின் தோலை உரிப்பதற்கு உதவினார். பார் கொன்ற இரண்டு ஓநாய்களையும், சாஞ்சாயின் நாய் கொன்ற இரண்டையும் காஸ்மாயிடம் இழுத்துக்கொண்டு வந்து போட்டார்கள். சாஞ்சாயும் கோம்புவும் அவற்றைத் தோலுரிக்க அவளுக்கு உதவினார்கள்.

ஓநாயின் தோலை எப்படி உரிப்பதென்று பில்ஜியிடமிருந்து ஜென் தெரிந்துகொண்டிருந்தான். இப்போது அதை யாங்குக்கு அவன் சொல்லிக் கொடுத்தான். தாடை எழும்பிலிருந்த தோலை முதலில் அவன் வெட்டினான். பின் அதைப் பற்றிப் பிடித்துத் தலை வழியாகப் பின்னுக்கு இழுத்தான். அதன் பற்களை யாங் ஒரு தோல் வாரால் அடைத்தான். பிறகு, அவன் தோலைப் பின்னுக்குக் கழுத்து வரை இழுத்தான். அங்கிருந்து தொடர்ந்து பின்னுக்கு இழுத்தான். கடைசியாகக் கால்களிலிருந்தும் வாலி லிருந்தும் வெட்டினான். அப்போது, தோலின் உட்புறம் வெளிப்புறமாகத் திரும்பியிருந்தது. அதனால் இரண்டு பேரும் அதைத் தலைகீழாக்கினார்கள். ஒரு நேர்த்தியான தோல் வெளிப்பட்டது.

‘‘நன்றாகச் செய்தீர்கள்’’ என பில்ஜி அவர்களைப் பாராட்டி னார். ‘‘அதிக பிசுபிசுப்பில்லை. நீங்கள் வீட்டுக்குப் போனதும் அதில் வைக்கோலை நிரப்பி, உயரமான கம்பில் அதைத் தொங்க விடுங்கள். அதன்மூலம், ஓலோன்புலாக் மக்கள் உங்களை உண்மையான வேட்டைக்காரர்களென ஏற்பார்கள்.’’

எர்லாங்கும் எல்லோவும் தங்களுடைய எஜமானர்களுக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்தபடி பார்த்துக்கொண்டிருந்தன. எர்லாங், தன்னுடைய காயம் பட்ட மார்பிலிருந்தும் முன்னங்கால்களி லிருந்தும் வெளிப்பட்ட ரத்தத்தை சதா நக்கிக்கொண்டிருந்தது. அது அதை ரசிப்பதுபோல் தோன்றியது. எவ்விதக் காயமும் பட்டிராத எல்லோ, எர்லாங்கின் தலைக் காயங்களை நக்கிக் கொடுத்தது. இன்னமும்கூட, பல வேட்டைக்காரர்கள் அது பல ஓநாய்களை மல்லுக்கட்டித் தரையில் வீழ்த்தியதைப் பாராட்டிக் கொண்டிருந்தார்கள். எல்லோ இல்லாதிருந்தால் லாம்ஜாவினால் ஓநாய்களைத் தன்னுடைய சுருக்குக்கயிற்றில் சிக்க வைத்திருக்க முடியாது.

யாங் அதைக் கேட்டு மகிழ்ச்சியடைந்தான். ‘‘லாம்ஜாவும் என்னைப் போன்றவன்தானே. நாய்க்குப் பின்னால் துணிச்சலாக நிற்பான்.’’

ஜென், தன்னுடைய பாக்கெட்டிலிருந்து சில கெட்டியான மிட்டாய்களை எடுத்து, அவற்றை நாய் தளபதிகளுக்குக் கொடுத்தான். எர்லாங்கிற்கு மூன்று, எல்லோவுக்கு இரண்டு. எர்லாங்கும் எல்லோவும் அன்று அவர்களைப் பெருமிதப்பட வைக்குமென அவன் முன்னதாகவே உணர்ந்திருந்தான். நாய்கள், மிட்டாய்களைத் தரையில் வைத்துவிட்டுத் தங்களுடைய பற்களால் அதன்

மேல்தாளை உரித்தெடுத்தன. பிறகு, நாக்கினால் ஒவ்வொரு மிட்டாயாக எடுத்து, தலையை உயர்த்தி, அவற்றைச் சத்தமாக மென்று தின்றன. மற்ற நாய்களால் உமிழ்நீர் வழியப் பார்க்க மட்டுமே முடிந்தது. சில அந்தத் தாள்களை நக்கின. மாணவர்களின் வருகையானது, தாங்கள் வழக்கமாக சாப்பிடுவதை விடவும் உலகில் பல நல்ல பொருள்கள் சாப்பிட இருக்கின்றன என்பதை நாய்களுக்கு அறியப்படுத்தியிருந்தது. எல்லா நாய்களுக்கும் முன்பாக மிட்டாய் சாப்பிடுவது, எர்லாங்குக்கும் எல்லோவுக்கும் பெருமை யாக இருந்தது.

கஸ்மாய், பல்லைக் காட்டிச் சிரித்தபடியே ஜென்னிடம் வந்து, ‘‘எங்கள் வீட்டை விட்டுப் போனதும், நீ உன் பழைய நாயை மறந்துவிட்டாயென்று நினைக்கிறேன்’’ என்றாள். அவனுடைய பாக்கெட்டுக்குள் கை விட்டு சில மிட்டாய்களை எடுத்த அவள், அவற்றை பாருக்குக் கொடுத்தாள். ஜென் அவசர அவசரமாக மிச்சமிருந்த எல்லா மிட்டாய்களையும் எடுத்துக் கஸ்மாயிடம் கொடுத்தான். அவள் புன்னகைத்தபடியே, ஒரு மிட்டாயிலிருந்து தாளை நீக்கிவிட்டுத் தன் வாய்க்குள் போட்டுக்கொண்டாள்.

வேட்டை நடந்த இடத்தின்மீது வெயில் பரவத் தொடங்கியது. யுத்தத்தில் கிடைத்தவற்றைப் பிரிப்பதில் வழமை கையாளப்பட்டது. அங்கு எவ்வித விவாதமும் நிகழவில்லை. எந்த நாய் அல்லது எந்த வேட்டைக்காரர், எந்த ஓநாயைக் கொன்றார் என்பது எல்லா மேய்ப்பர்களுக்கும் தெரியும். இருவரிடையே மட்டும் சில வார்த்தைகள் வெளிப்பட்டன. அவர்கள் இருவருமே ஒரு ஓநாயைத் தங்கள் சுருக்குக்கயிறுகளில் ஒரே சமயத்தில் சிக்க வைத்திருந் தார்கள். பில்ஜி அதை ஒரு யோசனை சொல்லி முடித்து வைத்தார்: ‘தோலை விற்று, அதற்கு மது வாங்கி, இருவரும் பங்கிட்டுக் கொள்ளுங்கள்.’ ஒரு ஓநாயையும் கொன்றிராத மேய்ப்பர்களும் வேட்டைக்காரர்களும், மற்றவர்கள் தாங்கள் கொன்றவற்றின் தோல்களை உரிப்பதை உற்சாகத்துடன் பார்த்துக்கொண்டிருந் தார்கள். அவ்வப்போது தோல்களைப் பற்றியும் அவர்களுடைய நாய்களைப் பற்றியும் நல்ல அபிப்ராயம் தெரிவித்துக்கொண்டிருந்தார்கள். நல்ல நாய்களால் கையாளப்பட்டவற்றின் தோல்கள் குறைபாடற்றிருந்தன. மோசமான நாய்களால் கையாளப்பட்ட வற்றின் தோல்கள் பற்களால் மெல்லப்பட்ட குறையோடிருந்தன.

நிறைய தோல்களை அடைந்திருந்தவர்கள், அனைவரையும் உரத்த குரலில் தங்கள் குடிலுக்கு வந்து குடித்துக் கொண்டாட அழைத்தார்கள். மேய்ச்சல் நிலத்தில் சுற்றி வளைப்பு வேட்டையில் எல்லோருமே பயனடைகிறார்கள்.

வேட்டை நடந்த இடம் இப்போது அமைதியாகக் காணப்பட்டது. மக்கள் அங்கு ஓய்வெடுத்தார்கள். காயம் பட்ட நாய்களுக்கான பராமரிப்புகளைப் பெண்கள் மேற்கொண்டனர். வேட்டையின்போது ஆண்கள் நாய்களைப் பயன்படுத்துவார்கள். ஆனால் இரவில் வளர்ப்பு விலங்குகளைக் காவல் புரியப் பெண்கள் நாய்களை நம்பியிருந்தார்கள். அவர்கள் தான் அவற்றைத் தங்கள் குழந்தைகளைப் போல வளர்த்தெடுத்த வர்கள். நாய்கள் காயமடையும்போது அல்லது இறந்துவிடும்போது பெண்கள்தான் வருத்தமடைவார்கள். சில நாய்கள் அங்கு தரையில் இறந்து கிடந்தன. அவை கிடந்த இடத்திலிருந்தே அவற்றின் ஆன்மாக்கள் டெஞ்ஞுருக்குச் சென்றுவிடும்.

''இந்த நாய்கள் ஓநாய்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்'' என்றார் பில்ஜி. ''அவை இந்த உலகுக்குத் திரும்ப வந்ததும், அவற்றின் குட்டிகள் டெஞ்ஞுருக்குச் சென்றுவிடும்.''

மங்கோலியர்களுக்கு நாய்கள் உற்ற தோழர்கள்; அவர்களின் நல்ல நண்பர்கள்; அவர்களின் சகோதரர்கள். மேய்ச்சல் நிலத்தினர் இரண்டு தொழில்கள் மூலம் வாழ்கிறவர்கள்: வேட்டை மற்றும் வளர்ப்பு மிருகங்களை மேய்ப்பது. இந்த இரண்டுக்குமே அவை மிகவும் உறுதுணையாக இருப்பவை. மங்கோலிய மேய்ச்சல் நிலம் பரந்துபட்டது. ஆனால் குறைந்த மக்கள் தொகை கொண்டது. அபாயகரமானது. இங்கு மக்களின் பாதுகாப்புக்கு நாய்களே துணை நிற்கின்றன. ஓர் இலையுதிர் காலத்தின்போது, பார் தன்னைக் காப்பாற்றியதை அவள் இன்னமும் மறக்கவில்லையென ஜென்னிடமும், யாங்கிடமும் கஸ்மாய் கூறினாள். ஒருநாள் அவள் வெளியில் வந்து அடுப்புச் சாம்பலைக் கொட்டினாள். அதில் இன்னமும் அணையாத கங்கு இருந்ததை அவள் கவனிக்கவில்லை. பலமாக வீசிய காற்றில் அது பற்றிக்கொண்டு, அவளுடைய குடிலுக்கு முன்னிருந்த வைக்கோலை நோக்கி நெருப்பு பரவியது. அன்று அவளுடன் முதியவளான ஈஜியும் அவளுடைய குழந்தையும் மட்டுமே இருந்தனர். வெளியில் என்ன நடந்து கொண்டிருக்கிறதென்று அவள் அறியாதிருந்தாள். திடீரென பாரின் ஆவேசமான

குரைப்பு சத்தமும், கதவை இடிக்கும் சத்தமும் கேட்டது. அவள் வெளியில் ஓடிவந்து பார்த்தபோது, நெருப்பு வைக்கோல் பொதிகளை நெருங்கிக்கொண்டிருந்தது. அவை மற்ற படையணியினரைச் சார்ந்தவை. அவை மிக உயர்ந்தும் அடர்த்தியாகப் பொதிக்கப்பட்டும் இருந்தன. அவற்றில் நெருப்பு பற்றிக்கொண்டால், பின் அவற்றைக் காப்பாற்றவே முடியாது. அதன் பிறகு விலங்குகளும் அதில் இறக்கவோ காயம் படவோ நேரிடும். தப்பித்த விலங்குகளும் ஒரு வருடத்துக்கு வைக்கோல் இல்லாமல் பசியில் வாடும்படி ஆகிவிடும். அவள் தண்டிக்கப்படுவாள். பாருடைய எச்சரிக்கை, அவளுடைய வாழ்க்கையை விடவும் பெறுமதிமிக்க அவகாசத்தை அவளுக்குத் தந்திருந்தது. நீண்ட ஈரத்துணியை எடுத்துக்கொண்டு, நேரடியாக நெருப்பு இருந்த இடத்துக்கு ஓடி, ஈரத் துணியைத் தன்மீது சுற்றிக்கொண்டு, தரையில் விழுந்து அதன்மீது புரண்டாள். அது வைக்கோலை அடைவதற்குள் ஒரு வழியாக அதை அணைத்துவிட்டாள். பார் இல்லாவிட்டால், அவள் எப்போதோ இல்லாமல் போயிருப்பாள் என அவள் அடிக்கடி சொல்வாள்.

ஜென்னிடமும் யாங்கிடமும் கஸ்மாய் சொன்னாள்: ‘‘எங்களுடைய ஆண்கள் மிகப் பெரிய குடிகாரர்கள். சமயங்களில் அவர்கள் குதிரைகளிலிருந்து விழுந்து பனியில் உறைந்து இறந்துவிடுவார்கள். அப்படி அதில் இறக்காதவர்கள் தங்களுடைய நாய்களுக்குத்தான் நன்றி சொல்ல வேண்டும். அவைதான் வீட்டுக்கு ஓடிவந்து, அவர்களுடைய மனைவிமார்களின் துணி களைப் பற்களால் பற்றியிழுத்து, அவர்களுடைய கணவன்மார்கள் விழுந்து கிடக்கும் இடத்துக்குக் கூட்டிப் போகும். அங்கு அவர்கள் பனியிலிருந்து அவர்களைத் தோண்டி எடுத்து வீட்டுக்குக் கூட்டி வருவார்கள். ஒவ்வொரு குடிலிலும் அவர்களுடைய வீட்டு நாயால் காப்பாற்றப்பட்ட ஒருவர் இருப்பார்.’’

அதனால்தான், நாய்க்கறி சாப்பிடுவதோ, நாயின் தோலை உரிப்பதோ, அல்லது நாய்த்தோலில் படுத்துத் தூங்குவதோ மன்னிக்க முடியாத துரோகச் செயல்களாகக் கருதப்படுகின்றன. விளைநிலப் பகுதிகளிலிருந்து வந்து குடியேறியவர்களையும், ஹேன் சீனர்களையும் இங்குள்ள மேய்ப்பர்கள் வெறுப்பதற்கு இதுவும் ஒரு காரணம்.

பழைய நாட்களில் ஹேன் இராணுவத்தினர் மேய்ச்சல் நிலத்துக்கு வந்து, நாய்களைக் கொல்லவும் சாப்பிடவும் தொடங்கி, மேய்ப்பர்களுக்குக்

கோபமூட்டியதோடு, ஆயுத ரீதியாக அவர்களை எதிர்க்கவும் தூண்டினார்கள் என்று பில்ஜி தெரிவித்தார். இப்போதும்கூட ஆடு மேய்ப்பவர்களின் நாய்கள் வெளியாட் களால் திருடப்பட்டு, கொன்று தின்னப்படுகின்றன. அவற்றின் தோல்கள் ரகசியமாக வடகிழக்குப் பகுதிக்கு அனுப்பப்பட்டு, அங்கிருந்து சீனாவுக்குப் போகின்றன. மங்கோலிய நாய்களின் தோல்கள் நீளமானவை, அடர்த்தியான மயிர் கொண்டவை என்பதால் தொப்பிகள் மற்றும் படுக்கை உறைகள் செய்வதற்குப் பெரிதும் விரும்பப்படுகின்றன. முதியவர் கோபமாகச் சொன்னார், ‘‘சீனர்களால் எழுதப்பட்ட புத்தகங்களில் இதுபற்றி எதுவுமே இருக்காது.’’

பில்ஜியும் அவருடைய குடும்பத்தாரும் அடிக்கடி ஜென்னிடம் கேட்பார்கள்: ‘‘சீனர்களாகிய நீங்கள் நாய்களை வெறுக்கிறீர்கள்; அவற்றை சபிக்கிறீர்கள்; கொல்லக்கூட செய்கிறீர்களே, பின் எதற்கு அதைத் தின்கிறீர்கள்?’’

இக்கேள்வியினால் சங்கடத்துக்கு ஆளான ஜென், அது பற்றி அவர்களுக்குத் திருப்தியளிக்கும் வகையில் விளக்கம் கொடுப் பதற்காக வெகு நாட்கள் தீவிரமாகச் சிந்தித்திருந்தான். ஒரு மாலைப் பொழுதில், அவர்களுடைய குடும்பத்தினர் நெருப்பைச் சுற்றி உட்கார்ந்திருந்தபோது, ஜென் அது பற்றிப் பேசினான். ‘‘ஹேன் இனத்தவரிடையே நாடோடிகள் இல்லை. வேட்டைக்காரர்களும் கிடையாது. அதனால், ஹேன் இனத்தவர்களாகிய எங்களுக்கு நாய்களின் அருமை தெரியாது. எங்களுடைய மக்கள் தொகை நெருக்கத்தில் சீனர்கள் தனியாக இருப்பதென்பது அபூர்வம். அதனால் எங்களுக்குத் துணையாக நாய்கள் இருக்க வேண்டிய அவசியமில்லை. எங்களிடையே நாய்கள் பற்றிய பழிச் சொற்கள் டஜன் கணக்கில் இருக்கின்றன: ‘ஓநாயைப் போலப் பேராசை, நாயைப் போல கொடூரம்’; ‘பல்லக்கில் இருக்கும் நாயிடம் இரக்கத்தை எதிர்பார்க்க முடியாது’; ‘நாயின் வாயிலிருந்து தந்தம் கிடைக்காது’; ‘அடுத்தவர் விவகாரங்களில் தலையிடும் நாய்கள்தான் எலிகளைப் பிடிக்கும்’; ‘கறியுள்ள உருண்டை ரொட்டியை நாயிடம் தூக்கி எறிந்தால் அது திரும்பி வராது’; ... இப்போது எப்படியோ அரசியலுக்குள்ளும் நுழைந்துவிட்டது. நாட்டில் உள்ள எல்லோருமே, ‘லியு சாவோகியின் நாய்த் தலையை அடித்து நொறுக்கு’ மற்றும் ‘லியு நாய் ஒழிக’ போன்ற சுலோகங் களை எழுப்புகிறார்கள்.

நாங்கள் ஏன் நாய்களை வெறுக்கவும் பழிக்கவும் செய்கிறோம்? முக்கியமான காரணம், நாய்கள் சீன நெறிமுறைகளைப் பின்பற்றுவதில்லை. எங்களுடைய தொன்மையான ஞானியான கன்பூசியஸ் பற்றி உங்களுக்கு நன்கு தெரிந்திருக்கும், இல்லையா? எங்களுடைய அரச பரம்பரை வரலாற்றின் நெடுகிலும் பேரரசர்கள் கூட அவருக்குத் தலை வணங்கியிருக்கின்றனர். அவர் வாழ்வதற் கான பல நெறிமுறைகளை நிறுவியிருக்கிறார். பல நூற்றாண்டு களாக நாங்கள் அந்த நெறிமுறைகளைப் பின்பற்றி வருகிறோம். படிப்பறிவுள்ள ஒவ்வொருவருமே அவரவருக்கான மேற்கோள் களைக் கொண்டிருக்கின்றனர். இன்று தலைவர் மாவோவின் மேற்கோள்கள் சிறிய ‘சிவப்புப் புத்தக’மாக இருப்பதைப் போல. அவர் வகுத்துத் தந்த நெறிமுறைகளைப் பின்பற்றாதவர்கள் எவராக இருந்தாலும் அவர்கள் காட்டுமிராண்டிகளாகக் கருதப் படுகிறார்கள். மிக மோசமானவர்களுக்கு மரணம் காத்திருந்திருக் கிறது. நாய்களிடம் காணப்படும் மிகப் பெரிய பிரச்சனை, கன்பூசிய நெறிமுறைகளை அவை பின்பற்றாததுதான். அறியாதவர்களைப் பார்த்து அது குரைக்கிறது; இது விருந்தோம்பல் பற்றிய எங்கள் நெறிமுறைகளை மீறுவதாகும். அவை தகாத முறையில் உடலுறவு கொள்ளும் குற்றத்தைப் புரிகின்றன. அவை மனித மலத்தைத் தின்கின்றன. ஆனாலும் நாங்கள் நாய்களை வெறுப்பதற்கும், அவற்றைக் கொல்வதற்கும் தின்பதற்குமான முக்கிய காரணம், நாங்கள் விவசாய மக்கள் என்பதுதான். நாங்கள் நாடோடிகள் இல்லை. மேலும் நாஙகள் எங்களுடைய பழக்க வழக்கங்களையும், நெறிமுறைகளையும் மற்றவர்மீது திணிக்க முயற்சிக்கிறோம்.’’

ஜென்னின் பேச்சை மிக அமைதியாகக் கேட்டுக் கொண்டிருந்த பில்ஜியும் பட்டுவும், அவனுடைய பேச்சால் எவ்விதக் காயமும் அடைந்திருக்கவில்லை. சிறிது நேரத்துக்குப் பிறகு பில்ஜி, ‘‘இளைஞனே, இம்மாதிரி விசயங்களில் உன்னைப் போலவே பலரும், அவர்கள் ஹேன் இனத்தவராகட்டும் மங்கோலியர்களாகட்டும், தர்க்கரீதியாகப் பேசினால் அது ஒரு நல்ல விசயமாக அமையும்’’ என்றார்.

கஸ்மாய் பெருமூச்சு விட்டபடி கோபத்துடன் தன் அபிப்ராயத்தைத் தெரிவித்தாள். ‘‘நாய்களுக்கு நேர்ந்த மிக

மோசமான விசயம் என்னவென்றால், அவை சீன சமூகத்துக்கு அறிமுகமானதுதான். அவற்றால் சிறப்பாக என்ன செய்ய முடியுமோ அதை அங்கு அவற்றால் செய்ய முடியாது. நான் ஒரு நாயாக இருந்தால், அங்கிருந்து எவ்வளவு தூரம் விலகியிருக்க முடியுமோ அவ்வளவு தூரம் விலகியிருப்பேன். ஒரு ஓநாயால் நான் கொல்லப்பட்டாலும் சரி, நான் இங்கிருப்பதையே தேர்ந்தெடுப்பேன்.''

''நான் இங்கு வரும்வரை, மனிதர்களும் நாய்களும் கிட்டத்தட்ட ஒரே மாதிரிதான் என்பதை நான் அறிந்திருக்கவில்லை. மனிதனின் சிறந்த நண்பன் நாய்தான்'' என்றான் ஜென். ''ஏழ்மைக்கு ஆளான, பிற்படுத்தப்பட்ட விவசாய மக்கள்தான் நாய்கள் உட்பட எதையும் சாப்பிடுவார்கள். ஒருவேளை, ஒரு நாள், எல்லா சீனர்களும் வசதி படைத்தவர்களாகிவிட்டால், அப்போது எல்லோருக்கும் போதுமான உணவு இருந்தால், அவர்கள் நாய்களோடு சினேகமாகி விடுவார்கள். அவற்றை வெறுப்பதையும் சாப்பிடுவதையும் விட்டு விடுவார்கள். நான் நாய்களை நேசிக்கப் பழகிவிட்டேன். என்னைப் பொறுத்தவரை, நாய்களுடன் இல்லாத ஒரு நாள் வீணான நாளாகப் படுகிறது. எங்களுடைய குடிலில் யாராவது நாய்களைக் கொன்றால், யாங் கீயும் நானும் அவனைச் சும்மா விடமாட்டோம்.'' ஜென்னுடைய உணர்ச்சிகள், அவனே ஆச்சரியப்படுமளவுக்கு பிரமாதமாக வெளிப்பட்டன. ஒரு கனவான் விவாதிப்பானே தவிர சண்டையிட மாட்டான் என்ற கருத்தினைக் கொண்டு வளர்ந்த அவன், இப்போது தன்னுடைய உணர்ச்சிகளை மனிதனைப் போன்றில்லாமல் ஓநாய்த்தனமாக வெளிப்படுத்துவதை அவனே அறிந்தான்.

''நீ ஒரு நாள் பீஜிங்கிற்குத் திரும்பச் சென்று விடும்போது, நீ நாய்களை வளர்ப்பாயா?'' என்று கஸ்மாய் கேட்டாள்.

''இனி நான் வாழும் காலம் வரை, நான் நாய்களை நேசிப்பேன்'' என்று புன்முறுவலோடு பதிலளித்தான் ஜென். ''நீ நேசிக்குமளவுக்கு நானும் அவற்றை நேசிப்பேன். உனக்குத் தெரியுமில்லையா, பீஜிங்கிலிருந்து என் குடும்பத்தார் எனக்கு அனுப்பும் அருமையான மிட்டாய்களை நான் சாப்பிடாமல் வைத்திருப்பேன். நான் உனக்கோ பாயருக்கோகூட அவற்றை அதிகமாகத் தந்ததில்லை. என்னுடைய நாய்களுக்காக நான் அவற்றை சேமித்து வைத்திருக்கிறேன்.''

பட்டு, ஜென்னின் முதுகில் தட்டிக் கொடுத்தான். ‘‘நீ இப்போது குறைந்தபட்சம் பாதி மங்கோலியனாகி விட்டாய்.’’

நாய்கள் பற்றிய அவர்களுடைய உரையாடல் நிகழ்ந்து ஆறு மாதங்களுக்கு மேலாகிவிட்டது. ஆனால் அன்று அளித்த வாக்குறுதிகளை ஜென் ஒருபோதும் மறக்கவில்லை.

வேட்டை நடந்த இடத்தில் அமைதி நிலைபெற்றது. களைப் படைந்திருந்த, காயமடைந்திருந்த நாய்கள் தங்களுடைய தோழர்களின் இழப்புக்கு இரங்கல் தெரிவித்தன. பதற்றத்தோடு அவற்றின் உடல்களை முகர்ந்தன. மீண்டும் மீண்டும் அவற்றைச் சுற்றி வந்தன. ஒருவேளை, விடையளிக்கும் சடங்காக அது இருக்கலாம். ஒரு சிறுவன், தன்னுடைய நாயின் உடலைத் தன் கைகளால் இறுகத் தழுவியபடி, தரையில் குப்புறப் படுத்துக் கிடந்தான். பெரியவர்கள் அவனை அப்புறப்படுத்த முயற்சித் தார்கள். ஆனால் அவன் பெரும் கவலையோடு புலம்பினான். அவனுடைய கண்ணீர் அவனுடைய பிரியமான நாயின் இறந்த உடல்மீது விழுந்துகொண்டிருந்தது. அவனுடைய புலம்பல்கள் வெகுநேரம் காற்றில் மிதந்துகொண்டிருந்தன. ஜென் கண் கலங்கப் பார்த்துக்கொண்டிருந்தான்.

## 13

வேட்டை நடந்த இடத்துக்கு, மேய்ச்சல் பொறுப்பு அதிகாரி களைக் கூட்டிக்கொண்டுபோய் பாவோ சுங்காயும் உல்ஜீயும் காட்டிய பிறகு, அவர்கள் பில்ஜியை நோக்கிக் குதிரைகளில் வந்தார்கள். பாவோ கீழிறங்கி, மிகுந்த பரவசத்துடன் முதியவரிடம், ‘‘அபாரமான வெற்றி! உண்மையிலேயே அற்புதம்! இதற்காக நாங்கள் உங்களுக்கு நன்றி சொல்லியாக வேண்டும். நீங்கள் இதை வெற்றிகரமாக நிறைவேற்றியது குறித்து, மேலதிகாரிகளுக்கான என் அறிக்கை தெரியப்படுத்தும்’’ என்றார்.

பில்ஜிக்குக் கை கொடுப்பதற்காகத் தன் கையை நீட்டியபடி பாவோ முன்னால் வந்தார். தன்னுடைய ரத்தக்கறை படிந்த விரல்களை விரித்துக் காட்டி, ‘‘ரொம்ப அழுக்கு’’ என்றார் பில்ஜி.

ஆனால் பாவோ முதியவரின் கைகளை இறுகப் பற்றிக்கொண்டார். ‘‘உங்களுடைய அதிர்ஷ்டத்தில் கொஞ்சமும், ஓநாயின் ரத்தத்தில் கொஞ்சமும், உங்களுடைய புகழாரத்தில் கொஞ்சமும் இதன் மூலம் என் மீதும் உரசட்டும்.’’

முதியவரின் முகம் இருண்டது. ‘‘தயவுசெய்து இத்தகைய விசயங்களைப் புகழாரம் என்று சொல்லாதீர்கள். புகழ் எந்தளவு உயர்கிறதோ அந்தளவு என்னுடைய பாவங்கள் ஆழமாகின்றன. இது மறுபடியும் நிகழக்கூடாது. இது போன்ற வேட்டைகள் இனி நடந்தால், ஓநாய்கள் மறைந்துவிடும். அதன்பிறகு, மான்களும், காட்டு அணில்களும், முயல்களும், பெருச்சாளிகளும், மர்மோட்டுகளும் பல்கிப் பெருகிவிடும். அதுவே மேய்ச்சல் நிலத்தின் முடிவாகிவிடும். டெஞ்ஞரின் கோபத்துக்கு ஆளாக நேரிடும்.’’ பயத்தோடும் மனக் கலக்கத்தோடும் டெஞ்ஞரை நோக்கித் தன் ரத்தம் தோய்ந்த கைகளை உயர்த்தினார்.

சங்கடத்தோடு சிரித்தபடி, உடல் முழுவதும் ரத்தத்தோடு காணப்பட்ட எர்லாங்கை பாவோ திரும்பிப் பார்த்தார். ‘‘நான் கேள்விப்பட்ட தீரமிக்க நாய் இதுதானா?’’ என உணர்ச்சி வசப் பட்டுக் கேட்டார். ‘‘எவ்வளவு பெரிது. பார்த்தாலே பயமாக இருக்கிறது. இது சண்டையிடுவதை நான் சரிவின் மேலிருந்து பார்த்தேன். உண்மையான புலி. ஓநாய்க் கூட்டத்தை முதலில்

தாக்கியது இதுதான், இல்லையா? அவற்றின் தலைமை ஓநாய்களில் ஒன்றைக் கொன்றதோடு, பெரும்பாலான ஓநாய்களுக்கு அச்ச மூட்டியது. மொத்தமாக இது எத்தனை ஓநாய்களைக் கொன்றது?''

''நான்கு.'' ஜென் பதிலளித்தான்.

''பயங்கரமான நாய்!'' பாவோ சிலாகித்தார். ''நீ ஒரு பெரிய, மூர்க்கமான, ஆடுகளை அடித்துக் கொல்கிற நாயொன்றை வைத்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். மேய்ச்சல் நிலத்தின் விதிகளை அது மீறுவதாகவும், அந்த நாயை நான் கொல்ல வேண்டுமெனவும் மக்கள் புகார் சொன்னார்கள். சரி, நான்தான் இங்கு பொறுப்பில் இருக்கிறேன். இப்போது நான் சொல்கிறேன். நீ இந்த நாயை நல்லபடியாகப் பராமரிக்க வேண்டும். நல்ல உணவு அளிக்க வேண்டும். இனி வரும் நாட்களில் அது ஏதேனும் ஆட்டைக் கொன்றால், நான் பார்த்துக்கொள்கிறேன். அது கொல்லும் ஆட்டின் தோல் சமூகக் கூடத்துக்குரியது. ஆட்டின் இறைச்சிக்கான பணத்தை நீ கொடுத்துவிட வேண்டும்.''

ஜென்னும் யாங்கும் இந்த விதிகளுக்கு சந்தோஷமாக உடன்பட்டார்கள். ''மாணவர்களாகிய நாங்கள் ஒரு ஓநாயைக் கூடக் கொல்லவில்லை. அப்படியானால் நாங்கள் நாய்களுக்குச் சமமானவர்கள் இல்லை. நிச்சயமாக இதற்கு முன் நாங்கள் எதுவுமே இல்லை.'' எல்லோருமே சிரித்தார்கள், மற்ற மாணவர் களும்கூட.

''ஒரு சீனன் பேசுவதுபோல இல்லை, நீ பேசுவது.'' உல்ஜீ சிரித்தபடியே சொன்னார்.

பில்ஜி சந்தோஷமாகக் காணப்பட்டார். ''இந்த இளைஞர்கள் மேய்ச்சல் நிலத்தை மதிக்கிறார்கள்; என்றேனும் ஒருநாள் இவன் எங்களில் ஒருவனாகி விடுவான்.''

யுத்தகளம் முழுவதும், தோல்கள் உரிக்கப்பட்டு ஓநாய்களின் சடலங்களோடும் ரத்தக் கறைகளோடும் காணப்பட்டது. அவற்றின் பாதங்களுக்கு மேலாக மட்டும் ஆங்காங்கே மயிர்கள் காணப் பட்டன. அனைவரையும் ஒன்றுகூடி, 'ஜிங்' வடிவில், நலம் வேண்டு தலுக்காக நிற்கும்படி பாவோ கேட்டுக்கொண்டார். அது முடிந்ததும், ஏறக்குறைய மூன்று டஜன் இறந்த

ஓநாய்களைத் தலை உயரத்துக்குத் தூக்கிப் பிடித்தார்கள். பாவோ, தன் கேமரா மூலம் நான்கைந்து கோணங்களில் படங்கள் எடுத்தார். பிறகு, வெற்றிகரமான வேட்டைக்காரர்களை, அடுக்கி வைக்கப்பட்டிருந்த சடலங்களுக்கு இரு பக்கமாகத் தங்களுடைய வெற்றிக் கோப்பைகளுடன் நிற்கும்படி கேட்டுக்கொண்டார். முப்பதுக்கும் மேற்பட்ட வேட்டைக்காரர்கள், தங்களுடைய வெற்றிப் பரிசான தோல்களை, வால்கள் தரையை நோக்கித் தொங்கி இருக்கும் வகையில், உயரத் தூக்கிப் பிடித்தனர். மிக மோசமாகக் காயம் பட்டு, ரத்தத்தில் தோய்ந்திருந்த, ஓநாய்களைக் கொன்ற நாய்கள், தங்களுடைய எஜமானர்களின் முன் குந்தியிருந்தன. பாவோ ஜென்னை படமெடுக்கச் சொல்லிவிட்டு, அவர்களுக்கு நடுவில் போய், இருப்பவற்றிலேயே ஆகப் பெரிய தோலைப் பிடித்துக்கொண்டு நின்றார். தன்னுடைய வலது கைக்கும் மேலாக ஒரு தோலைப் பிடித்துக் கொண்டு, தலை குனிந்து, முகத்தில் பரிதாபமான புன்னகை வெளிப் பட பில்ஜி நின்றிருந்தார். ஜென் இரண்டு படங்கள் எடுத்தான்.

பாவோ, சில அடிகள் எடுத்து வைத்துப் பின் திரும்பி, வேட்டைக்காரர்களுக்கு முன்பாக நின்றார். ‘‘பேனர் புரட்சிகரக் குழுவின் பிரதிநிதி என்ற முறையிலும், இந்தப் பிராந்தியத்தின் இராணுவப் படைத் தலைவர் என்ற முறையிலும், நான் உங்கள் அனைவருக்கும் நன்றி தெரிவிக்கிறேன். இந்த ஓநாய் வேட்டையின் நாயகர்கள் நீங்கள். இன்னும் சில நாட்களில் பத்திரிகைகளில் உங்கள் புகைப்படங்கள் வெளிவரும். ஓலோன்புலாக்கில் நிகழ்த்தப் பட்ட இந்த ஓநாய் வேட்டையின்போது, எத்தனை ஓநாய்கள் ஒரே வேட்டையில் கொல்லப்பட்டிருக்கின்றன என்பதை மக்கள் அனைவரும் பார்க்க வேண்டுமென நான் விரும்புகிறேன். புற மங்கோலியப் பகுதியிலிருந்து வந்த இந்த ஓநாய்களே யுத்தக் குதிரை களைக் கொன்று குவித்தவை. மிகக் கவனமாக ஒருங்கிணைக்கப் பட்டு, இரும்பின் உறுதியோடும் திடத்தோடும் நாம் பழிக்குப் பழி வாங்கியிருக்கிறோம். ஓலோன்புலாக் அதிகாரிகளோ, மேய்ப்பர் களோ, சீன மாணவர்களோ, அவற்றுக்குப் பணியப் போவதில்லை என்பதை நிரூபித்திருக்கிறோம். அவற்றை நிர்மூலமாக்கும் பணி தொடங்கப்பட்டுவிட்டது. ஓலோன்புலாக்கிலுள்ள கடைசி ஓநாய் சாகும் வரை இது ஓயாது என்பதில் நான் நம்பிக்கையோடு இருக்கிறேன்.’’

பாவோ மேல்நோக்கிக் கையை உயர்த்தி, தன் பேச்சை முடிக்கும் வகையில் ஓர் அறிவிப்பை வெளியிட்டார். ‘‘எல்லாக் குள்ளநரிகளும் சாகும் வரை நாம் சண்டையை நிறுத்தப் போவதில்லை!’’

டோர்ஜியின் குடும்பத்தார் மற்றும் சில மாணவர்களைத் தவிர, மற்ற எவரிடமிருந்தும் எவ்வித ஆதரவுக் குரலும் கிடைக்கவில்லை. பாவோ வேட்டைக் குழுவினர் கலைந்து செல்லலாமென அறிவித்தார். மக்கள் உட்கார்ந்து ஓய்வெடுத்தபடி, பட்டுவுக்காகக் காத்திருந்தார்கள்.

பாவோ, தன்னுடைய கால்களை மடக்கிப் போட்டுத் தரையில் உட்கார்ந்தபடி, உல்ஜீயிடம் பேசினார். ‘‘எல்லைப் பகுதியில் நிலைமை மிகவும் பதற்றமாக இருக்கிறது. குடிமக்கள் படையொன்றை உருவாக்கிப் பயிற்சியளிக்கும்படி என்னுடைய மேலதிகாரிகள் என்னை வற்புறுத்துகிறார்கள். இந்த வேட்டையின்போது நேருக்கு நேரான மோதலைப் பார்க்கக் கிடைத்தது, நான் சற்றும் எதிர்பார்த்திராத அதிர்ஷ்டம்.’’

‘‘மேய்ச்சல்நில மங்கோலியர்கள் பிறவியிலேயே போராளிகள்’’ என்றார் உல்ஜீ. ‘‘அவர்களிடம் ஆயதத்தைக் கொடுங்கள்; அவர்கள் சண்டையில் சேர்ந்துகொள்வார்கள். இந்த வேட்டை உங்களுக்கு இரட்டை வெற்றிகளைக் கொடுத்திருக்கிறது: ஓநாய்களைக் கொன்றது மற்றும் மக்கள் கூட்டத்தினருக்குப் பயிற்சி அளித்தது. இரண்டு சுருக்கமான அறிக்கைகளை உங்களுடைய மேலதிகாரி களுக்கு அனுப்புங்கள். அவை அவர்களைத் திருப்திப்படுத்தும்.’’

ஜென் சென்னையும் யாங் கீயையும் சீன மாணவர்கள் கூட்டமாகச் சூழ்ந்துகொண்டு, அவர்களுடைய தோல்களைப் பார்த்தார்கள். மேலும் அவற்றைப் பொறாமையுடன் தொட்டுத் தடவினார்கள். வாங் ஜுன்லி என்ற மாணவன், ‘‘உங்களிடம் மட்டும் இந்த நாய் இருந்திருக்காவிட்டால், மாணவர்களாகிய நாம் மிகவும் அவமானமடைந்திருப்போம். மஙகோலிய தீரத்தைப் பார்வையிடும் கூட்டமாக நாம் இருந்ததுதான் மிச்சம்’’ என்றான்.

‘‘சீனர்களாகிய நம்மிடம் சண்டைத் திறன்களோ, நாடோடிகளின் துணிச்சலோ இல்லை. மற்றவர்கள் நம்மை விடத் திறமைசாலிகளாக இருக்கும்போது, அவர்களிடமிருந்து கற்றுக் கொள்வதன் மூலம் நாம் நம்மை

மேம்படுத்திக்கொள்ள முடியும். மேய்ப்பர்கள் ஓநாய்களுடன் சண்டையிடும்போது, நாம் அவர்களுக்கு உதவும் கூட்டமாக இருக்க முடிந்ததானது, நமக்கு அளிக்கப்பட்ட அரிய வாய்ப்பு'' என்றான் ஜென்.

எக்காள தொனி குரலில் வெளிப்பட வாங் பேசினான். ''மத்திய சமவெளிப் பகுதிகளில் நாடோடிகள் பலமுறை திடீர் படையெடுப்புகளையும் தாக்குதல்களையும் மேற்கொண்டிருக் கிறார்கள் என்பது வாஸ்தவம்தான். ஆனால் அந்த நாட்டில் அவர்கள் ஆட்சி புரிந்த இரு முறையும், கடைசியில் நடந்தது என்னவென்றால், முன்னேறிய கலாசார சக்தியான சீனர்களிடம் அவர்கள் சரணடைந்துவிட்டார்கள். சரிதானே நான் சொல்வது? மேய்ச்சல் நிலத்தவர், சில மகத்தான தருணங்களைக் கொண்டிருக் கிறார்கள்; அவ்வளவுதான். மற்றபடி, வானத்தில் செல்லும் பறவைகளை வில்லாலும் அம்பாலும் வீழ்த்தும் திறனைத் தாண்டி அவர்கள் வேறேதும் செய்துவிடவில்லை. ராணுவ ரீதியான வல்லமையை மட்டுமே அவர்களால் வெளிப்படுத்த முடியும்.''

ஜென் அவனுக்குப் பதிலடி கொடுத்தான். ''நீ சொல்வது சரியாக இருக்கலாம். ஆனால் நீ ராணுவத்துக்குப் பதிலாக நாகரிகத்தை முன்வைக்கும்போது கவனமாக இருக்க வேண்டும். வரலாற்றிலேயே மிகச் சிறந்த கலாசாரம், ராணுவ வல்லமை இல்லாததன் விளைவாக முடிவில் துண்டு துண்டாகச் சிதைந்துபோனது. நாகரிகம் பெற்ற ஹேன் மற்றும் டேங் பேரரசுகள் ராணுவ வல்லமையினாலேயே உருவாக்கப்பட்டன. உலகம் முழுவதும் எவ்வளவு மகத்தான நாகரிகங்கள், பின்தங்கிய ஆனால் ராணுவரீதியாக வலுவான இனங்களின் கையில் சின்னாபின்ன மாகியிருக்கின்றன என்பதைக் கொஞ்சம் நினைத்துப் பார். அவர்களுடைய எழுத்து மற்றும் பேச்சு மொழிகள்கூட அதன் விளைவாக வழக்கொழிந்துவிட்டன. ஹேன் நாகரிகம், பின்தங்கிய மேய்ச்சல்நில மக்களை சிதைத்துவிட்டதாக நீ சொல்வது தவறு. அவர்கள் தங்களுடைய மொழியை, தங்களுடைய குலச்சின்ன நம்பிக்கையை மற்றும் தங்களுடைய பாரம்பரியப் பழக்க வழக்கங்களைத் தக்கவைத்துக் கொண்டிருக்கிறார்கள். கசகஸ்தான் நாடோடி கலாசாரத்துக்குப் பதிலாக, ரஷ்ய விவசாய மற்றும் தொழில் கலாசாரத்தை குருச்சேவ் புகுத்த

முயற்சித்தார். என்ன நடந்தது தெரியுமா? உலகின் மகத்தான மேய்ச்சல் நிலங்களில் ஒன்று, இன்று பாலைவனமாகிவிட்டது.''

ஆண் மாணவர்கள் தங்களுக்குள் மோதியபடி, வேறொரு விவாதத்தை நோக்கி நகர்வதைக் கவனித்த மாணவியான சுன் வெஞ்சுவான் முன்வந்து பேசினாள். ''சரி, இது போதும். நாம் ஒருவரை ஒருவர் எப்போதாவதுதான் பார்த்துக்கொள்கிறோம். அந்தளவுக்கு நாம் தொலைவில் இருக்கிறோம். நாம் ஒன்று கூடி யிருக்கும் இத்தருணத்தை சண்டை போட்டு வீணாக்க வேண்டாம். நீங்களெல்லாம் மேய்ச்சல் நிலத்துக்கு வந்து சேர்ந்ததுமே ஓநாய்களாக மாறிவிட்டீர்கள். ஒருவருக்கொருவர் விடாமல் தொடர்ந்து பிறாண்டிக்கொண்டே இருக்கிறீர்கள்.''

அவனுடைய தோல்மீது எல்லோரும் எல்லா இடத்திலும் கை வைப்பதில் சங்கடமடைந்த எர்லாங், மெதுவாக நடக்கத் தொடங்கியது. மாணவர்களால் அழைத்துச் செல்லப்பட்ட பிற எந்த நாயும் எந்த ஒன்றையும் கடிக்கவில்லை என்பதால், சுங் தன்னுடைய பாக்கெட்டிலிருந்து இரண்டு தயிர்க் கட்டிகளை எடுத்துக்கொண்டு எர்லாங்கிடம் சென்றாள். ''எர்லாங், நல்ல பையன்.''

வாலை ஆட்டாமல், சத்தமேதும் கொடுக்காமல், கொடூரமாகப் பார்த்தபடி மாணவர் குழுவை நோக்கி எர்லாங் சென்றது. பயந்து பின்வாங்கினாள் சுன். ''இங்கே வா'' என்று ஜென் கத்துவதற்குள், அது மாணவர்களைப் பார்த்து உறுமியபடி, மாணவர்களைத் தாக்கப்போவதுபோல பயமுறுத்தியது. பயந்துபோன சுன், தடுமாறி அப்படியே கீழே உட்கார்ந்துவிட்டாள்.

''பிசாசே'' என்று கத்தியபடி, யாங் மேய்ச்சல் தடியை எடுத்து அதை மிரட்டினான். ஆனால் எர்லாங் கழுத்தை இறுக்கிக் கொண்டு, பின்வாங்காமல் மோதும் முனைப்பைக் காட்டியது. அந்தப் பழக்கப்படாத நாய், அப்போதுதான் நான்கு ஓநாய்களைக் கொன்றிருந்தது. இன்னமும் உக்கிரத்தோடிருந்த அதன் ஓநாய் குணத்தைத் தூண்டிவிடுவோமோ என்று பயந்தான் யாங். தடியை உபயோகிப்பது முட்டாள்தனமானது என்பதை அறிந்த யாங் அதைக் கீழே போட்டான்.

உங்கள் இருவரையும் பார்க்க வர, இதற்குப் பின்பு எவருமே தயங்குவார்கள்'' என்றான் வாங் ஜுன்லி. ''இது மட்டும் அந்த ஓநாய்களைக்

கொன்றிருக்காவிட்டால், இதன் தோலை உரித்து நான் சாப்பிட்டுவிடுவேன்.''

''இது கொஞ்சம் வினோதமான நாய்.'' ஜென் மன்னிப்பு கேட்கும் தோரணையில் சொன்னான். ''பெரும்பாலான அம்சங்களில் ஓநாயைக் கொண்டது. மனிதர்களோடு அவ்வளவு சுலபமாக ஒட்டாது. நீங்கள் அடிக்கடி வந்து போனால் அது உங்களுடன் பழக்கமாகிவிடும்.''

மாணவர்கள் விலகிப் போனார்கள். ஜென், எர்லாங்கின் தலையில் தட்டினான். ''நீ என்ன செய்துவிட்டிருக்கிறாய் பார். என்னுடைய நண்பர்களை அச்சுறுத்திவிட்டாய்'' என்றான்.

குவிக்கப்பட்டிருந்த சடலங்களை நோக்கி சில எட்டுகள் எடுத்து வைத்தது எர்லாங். அவற்றின் வெளிறிய உடல்களை வெறுமனே உற்றுப் பார்த்தது. டஜன் கணக்கிலான மற்ற நாய்கள் சற்றுத் தள்ளி, மரியாதையோடும், ஏதோ ஒருவித பயத்தோடும், அது இருந்த திசை நோக்கி வாலாட்டியபடி நின்றிருந்தன. ஆனால் பார் மட்டும் தலையை உயர்த்தியபடி அதை நோக்கி வந்தது.

எர்லாங் அதன் மூக்கோடு தன் மூக்கை உரசியது. இப்போது அதற்கு மேய்ச்சல் பொறுப்பு தலைவர்கள் மற்றும் மேய்ப்பர்களின் அங்கீகாரம் கிடைத்துவிட்டது. ஆனால் எர்லாங்கின் கண்களில் எதையோ இழந்த ஏக்கம் இருப்பதை ஜென் கண்டுபிடித்தான். அவனுடைய நாயின் கழுத்தைச் சுற்றி வளைத்தான். அதை ஆறுதல்படுத்த அவன் அறிந்திருந்த வழி அது.

பாவோ சுங்காய், பெரும்பாலான வேட்டையாளர்கள் கூடியிருந்த இடத்துக்கு பில்ஜியை அழைத்தார். முதியவர் அங்கு வந்து நடுவில் உட்கார்ந்துகொண்டு, யுத்தத்தை விரிவாக விளக்கினார். எல்லோரும் மெய் மறந்து கேட்டுக்கொண்டிருந்தார்கள். பாவோ, அவ்வப்போது சில கேள்விகள் கேட்டார். கடைசியாக பாவோ, ''இந்த யுத்தம் ராணுவப் பாடப் புத்தகத்தில் இடம்பெற வேண்டும்'' என்றார். ''போர்க் குதிரைகளைக் கொல்ல ஓநாய்கள் மேற்கொண்ட திட்ட நடவடிக்கைகளை விடவும் இது அபாரமானது. ஐயா, நீங்கள் ஒரு ராணுவ மேதை.''

ஜென் முன்வந்து பேசினான். ‘‘ஜெங்கிஸ்கானின் காலத்தில் இவர் இருந்திருந்தால், அவனிடமிருந்த மகத்தான தளபதிகளான முகாலி, ஜேபே மற்றும் சபுதாய் போன்றவர்களைப் போல பில்ஜியும் அவர்களில் ஒருவராக இருந்திருப்பார்.’’

முதியவர் அந்தப் பாராட்டை ஒதுக்கித் தள்ளினார். ‘‘அந்த மங்கோலிய மகா ஞானிகளோடு என்னை ஒப்பிடாதே. டெஞ்ஞருக்குக் கோபம் வந்துவிடும். அவர்கள் மட்டும் இல்லா திருந்தால், இந்த மேய்ச்சல் நிலம் என்றோ பாழாகி இருக்கும். நான் ஒரு வயதான அடிமை, அவ்வளவுதான். அவர்களைப் பற்றிப் பேசிய அதே மூச்சில் என்னைப் பற்றிப் பேசக்கூடாது.’’

கிட்டத்தட்ட மதியமாகிவிட்டது. பட்டு இன்னமும் திரும்பவில்லை. அப்போது ஒரு குதிரை அசுர வேகத்தில், ஏதோ ஒரு அவசரத்தை உணர்த்துவது போல வந்தது. புகே குதிரையி லிருந்து குதித்து மூச்சுவிடாமல் உல்ஜீயிடமும் பாவோவிடமும் தகவல் தெரிவித்தான். ‘‘உடனடியாக வரும்படி பட்டு சொல்லச் சொன்னான். இன்று காலையில் நீங்கள் சண்டையிட்டது பாதி ஓநாய்க் கூட்டம்தான். மீதி பாதி, விடியலுக்கு முன்பாகவே நழுவிச் சென்றுவிட்டது. மலையடிவாரத்திலுள்ள நாணல் பள்ளத்தாக்கிற்கு அவை சென்று விட்டிருக்கின்றன.’’

பில்ஜி அவனை முறைத்தார். ‘‘நீ சொல்வது தவறானது.’’

புஹே பதிலளித்தான். ‘‘பட்டுவும் நானும் பள்ளத்தாக்கிற்குள் சென்றபோது, பனியில் நாங்கள் புதிய ஓநாய்த் தடங்களைப் பார்த்தோம். அனேகமாக இருபது ஓநாய்களாவது இருக்குமெனப் பட்டு சொன்னான். அவற்றுள் குதிரைகள் மீது தாக்குதல் நிகழ்த்திய முதிய சாம்பல் ஓநாயான ஆண் தலைமையும் அடங்குமென்று பட்டு கருதுகிறான். நாம் அந்த ஓநாயைக் கட்டாயம் பிடித்தாக வேண்டுமென்று பட்டு சொன்னான்.’’

உல்ஜீ, பாவோவை நோக்கித் திரும்பி, தன் அபிப்ராயத்தைத் தெரிவித்தார். ‘‘நாம் எல்லோருமே, குதிரைகள் உட்பட, நேற்று இரவிலிருந்து இந்த மதியம் வரை சாப்பிடாமல் இருக்கிறோம். மேலும் பல நாய்கள் காயமடைந்திருக்கின்றன. எனக்கு அந்தப் பள்ளத்தாக்கைத் தெரியும்; அது மிகப் பெரியது. ஆயிரக்கணக்கான ஏக்கர் பரப்பளவு கொண்டது. நம்மால்

சுற்றி வளைக்க முடியாதபடி மிக மிகப் பெரியது. நான் சொல்கிறேன், இதை மறந்துவிடலாம்.''

பாவோ சந்தேகத்துடன் பில்ஜியை உற்றுப் பார்த்தார். ''வெளியாட்களும் சீன மாணவர்களும், நீங்கள் எப்போதுமே ஓநாய்களின் பக்கமே இருப்பீர்களென என்னிடம் சொன்னார்கள். நீங்கள் இதைத் திட்டமிடவில்லை, இல்லையா? உங்களுடைய ஆட்களும் நாய்களும் இன்னும் இருபது ஓநாய்களைக் கூடுதலாக வளைத்திருக்க முடியாதா? அப்படி செய்திருந்தால் நாம் அவற்றை முழுவதுமாக ஒழித்துக் கட்டியிருக்கலாம்."

''இல்லை, அப்படி முடியாது'' என்றார் உல்ஜீ. ''இன்று நாம் நிறைய ஓநாய்களை வளைத்துப் பிடித்திருக்கிறோம். அவை இன்னும் கூடுதலாக இருந்திருந்தால் நமது வளையம் பலஹீனப் பட்டிருக்கும்.''

பாவோ, பில்ஜியைத் திரும்பிப் பார்த்தார். ''நீங்கள் வேண்டுமென்றே அவற்றைத் தப்பிக்க விட்டிருக்கிறீர்கள் என்றே நான் நினைக்கிறேன்.''

பில்ஜி, பாவோவை உற்றுப் பார்த்தார். ''ஓநாய்களை வளைத்துப் பிடிப்பதென்பது, கோப்பையிலிருந்து கரண்டியால் நூடுல்ஸை எடுப்பது போன்ற விசயமில்லை. அப்போது கும்மிருட்டாக இருந்தது. குதிரையோட்டிகளுக்கிடையே கணிசமான இடைவெளிகளும் இருந்தன. சில ஓநாய்கள் தப்பிவிட்டது உண்மைதான். நீங்கள் இந்த வேட்டைக்குத் தலைமை ஏற்றிருந்தால் உங்களால் ஒரு ஓநாயைக் கூடப் பிடித்திருக்க முடியாதென நான் பந்தயம் கட்டுவேன்.''

பாவோவின் கோபம் அதிகரித்ததில் அவருடைய முகம் மாறியது. தன்னுடைய உள்ளங்கையில் முஷ்டியால் குத்தினார். ''நம்மிடம் போதுமான ஆட்களோ, நாய்களோ, குதிரைகளோ இல்லாமலிருக்கலாம். ஆனால் நாம் இன்னும் நம்முடைய துப்பாக்கிகளைப் பயன்படுத்தவில்லை. இப்போது நாணல் பகுதியில் மேலும் பல ஓநாய்கள் இருப்பது தெரிய வந்திருப்பதால், அவற்றை விட்டுவிட நான் விரும்பவில்லை. இந்த வேட்டைக்கு நானே தலைமை ஏற்கிறேன்.''

சரிவின் மேலாக சில அடிகள் குதிரையில் சென்ற பாவோ, ''தோழர்களே, நாணல் பள்ளத்தாக்கில் இன்னொரு ஓநாய்க் கூட்டம் இருப்பது

தெரியவந்துள்ளது. உங்களில் பலருக்கு இன்னமும் தோல்கள் கிடைக்கவில்லை, இல்லையா? குறிப்பாக மாணவர்களாகிய உங்களுக்கு முன்னணியில் உங்களைச் சேர்க்கவில்லை என்ற குறை இருக்கிறது இல்லையா? சரி, இம்முறை நீங்கள்தான் முன்னிற்கப் போகிறீர்கள். தோழர்களே, களைப்பிலிருந்து நம்மால் விடுபட முடியுமென்பதை நாம் நிரூபிப்போம். நம்முடைய போராட்ட உத்வேகத்தைத் தக்க வைத்துக்கொண்டு, இந்தப் படுகொலையைப் போன்ற மற்றொன்றை மேற்கொள்வோம்.''

மாணவர்களில் பலருக்கும் வேட்டைக்காரர்களில் சிலருக்கும் இதில் ஆர்வம் ஏற்பட்டது.

''இதுதான் என்னுடைய திட்டம்'' என பாவோ உரத்த குரலில் சொன்னார். ''இதற்குக் குறைந்த அளவு சக்தி இருந்தால் போதும். நாம் பள்ளத்தாக்கைச் சுற்றிச் சூழ்ந்து, அதற்கு நெருப்பு வைத்து அவற்றை வெளியேற்றுவோம். பிறகு, துப்பாக்கியால் அவற்றை, தேவையான வெடிமருந்தை மட்டும் பயன்படுத்தி, சுட்டுத் தள்ளுவோம்.''

மேய்ப்பர்களும் வேட்டைக்காரர்களும் அதிர்ச்சி அடைந்தார்கள். அவர்களைப் பொறுத்தவரை, புல்லுக்கு நெருப்பிடுவது புனிதமற்ற செயல்.

''புல்லை எரிப்பது சொர்க்கத்தின் விதிகளை மீறும் செயல்'' என்றார் பில்ஜி. ''டெஞ்ஞரின் முகத்தை அது கருக்கிவிடும். அது எங்களை எப்படியெல்லாம் பாதிக்கும் தெரியுமா? நதிகள் கருப்பாகி விடும். நீர் தெய்வங்கள் எங்களுக்குக் குடிக்க எதுவுமில்லாமல் செய்துவிடுவார்கள். எங்களுடைய தொன்மையான சமய நம்பிக்கைகள், இங்கு நெருப்பு வைக்க அனுமதிப்பதில்லை. கடந்த காலத்தில் மேய்ச்சல் நிலத்தில் ஒருவன் நெருப்பு வைத்தால் அவனுடைய முழு குடும்பத்தாரையும் எங்களுடைய மகத்தான கான் வாரிசுகள் கொன்றுவிடுவார்கள். இன்றைய அரசாங்கம்கூட இச்செயலை அனுமதிப்பதில்லை.''

கஸ்மாயின் முகம் கோபத்தில் சிவந்துவிட்டிருந்தது. ''மேய்ச்சல் நிலத்தில் நெருப்புதான் மிகக் கொடூரமானது. ஒரு குழந்தை நெருப்போடு விளையாடுவதை நாங்கள் பார்த்தால், அதனுடைய பின்புறம் வீங்குமளவுக்கு அடிக்காமல் நாங்கள் விட மாட்டோம். இப்போது நீங்கள் நெருப்பு வைத்தால்,

இதற்குப் பின் நெருப்போடு விளையாடும் சிறுவர்கள், பிரதிநிதி பாவோவிடமிருந்து கற்றுக்கொண்டதாகச் சொல்வார்கள்.''

லாம்ஜாவின் தடிமனான கழுத்து புடைத்தது. ''பழைய காலங்களில் ஹேன் ராணுவத்தினர் நம்முடைய மேய்ச்சல் நிலங்களை எரித்தார்கள். அவர்கள் செய்த செயல்களிலேயே மிகக் குரூரமானது அது. பின்னர் அவர்கள்கூட அதைச் செய்யவே இல்லை. ஒரு மங்கோலியனால் எப்படி தன் சொந்த, தொன்மை யான மேய்ச்சல் நிலத்துக்கு நெருப்பு வைக்க முடியும்? பிரதிநிதி பாவோ, நீங்கள் ஒரு மங்கோலியன்தானே அல்லது அப்படி இல்லையா?''

''இப்போது தரையில் பனி இருக்கிறது. அதாவது, தீ பிடிக்கும் காலம் இன்னும் வரவில்லை. ஆனால் இப்போது நாம் நெருப்பு வைத்தால், எதிர்காலத்தில் தடுப்பு நடவடிக்கை மிகவும் சிரமமானதாகிவிடும். மேலும் ஓநாய்களின் உடல்கள் எரிந்து, தோல்கள் பாழாகிவிடும்'' என்றான் சஞ்சாய்.

லாசுருங், தன் அபிப்ராயத்தைத் தெரிவித்தான். ''ஓநாய்களை எரிப்பது அற்பமான, குரூரமான செயல். காற்றில் துர்வாடை நிரம்பி, தொற்று நோய்களைப் பரவச் செய்யும். எங்களுடைய வளர்ப்பு மிருகங்கள் சாக நேரிடும்.''

சாங் ஜியோன் சொன்னான், ''குதிரை மேய்ப்பர்களாகிய நாங்கள், ஓநாய்களோடு சண்டையிடுவதற்காக வந்தோம். ஒரு இரவும் பகலும் எங்களுடைய மந்தையிலிருந்து நாங்கள் விலகி யிருக்கிறோம். இப்போது நாங்கள் அங்கு திரும்பிப் போகாவிட்டால், ஓநாய்கள் அங்கு நம்மை ஏமாற்றிவிட்டுப் போய்விடும். எங்கள் குதிரைகளிடம் நாங்கள் போயாக வேண்டும். ஏதாவது நடந்தால் நான் அதற்குப் பொறுப்பில்லை.''

''அமைதியாக இருங்கள்!'' பாவோ சுங்காய் சத்தமிட்டார். ''எல்லோரும் கொஞ்சம் அமைதியாக இருங்கள். நாம் ஓநாய்களைக் கொல்வதன் மூலம் ஒரு அழிவு சக்தியை ஒழிக்கப் போகிறோம்.

அதன் மூலம் தேசிய சொத்துகளைப் பாதுகாக்கப் போகிறோம். சரியான தாக்குதலே மிகச் சிறந்த பாதுகாப்பு. ஓநாய்கள் நம்மை ஏமாற்றாமல் இருப்பதற்கான ஒரே வழி, அவற்றை ஒழித்துக் கட்டுவதுதான். இதை நாம் தோல்களுக்காகச் செய்யவில்லை. தோல்கள் கருகி ஓநாய்கள் செத்தாலும்

அது வெற்றிதான். நான் இறந்த ஓநாய் உடல்களின் மேலுமொரு குவியலைப் பார்க்க விரும்புகிறேன். இன்னும் கொஞ்சம் படங்கள் எடுக்க வேண்டும். நம்முடைய மகத்தான சாதனையை மேலதிகாரிகள் பார்க்க வேண்டும். நாம் எல்லோரும் இப்போது போகலாம்.''

லாம்ஜாவின் ஓநாய்க் கண்களில் கொலை வெறி வெளிப் பட்டது. 'உங்கள் விருப்பப்படி ஏற்பாடுகளைச் செய்யுங்கள். நான் வரவில்லை. என்னுடைய குதிரைகளை நான் பார்க்க வேண்டும்.''

மேய்ப்பர்களில் பலரும் ''நாங்கள் திரும்பிப் போகிறோம்'' என்றார்கள்.

தன்னுடைய சாட்டையைக் காற்றில் சுழற்றியபடி, பாவோ உறுமினார். ''இந்த யுத்தத்தில் கலந்துகொள்ள மறுப்பவர்களை நான் வேலையிலிருந்து நீக்கிவிடுவேன். இது உங்களுடைய துணையாளர்களுக்கும் பொருந்தும்.''

பில்ஜி, உல்ஜீயை ஒரு முறை பார்த்துவிட்டு, வேறு வழி யில்லாமல், தன் கைகளை ஆட்டி எல்லோரையும் அமைதிப்படுத்தினார். ''போதும், இந்தச் சண்டை. இந்த வேட்டையை நான்தான் வழி நடத்தினேன். அதனால் என்னுடைய வார்த்தையே முடிவானது. ஒவ்வொரு மந்தைக்கும் ஒருவர் திரும்பிச் செல்லட்டும். மற்றவர்கள் பிரதிநிதி பாவோவுடன் செல்வார்கள். விவாதம் இத்துடன் முடிந்தது.''

சாங் ஜியோனிடம் லாம்ஜாவ் சொன்னான்: ''நான் மேய்ச்சலைப் பார்த்துக்கொள்கிறேன். இது முடிந்ததும் நீ வீட்டுக்குப் போய் இரண்டு நாளைக்கு ஓய்வெடு.'' அவன் எட்டு அல்லது ஒன்பது குதிரை மேய்ப்பர்களோடு திரும்பிச் சென்றான்.

வேட்டைக் குழுவினர் மூன்று மலை மேடுகளைக் கடந்து, பரந்து விரிந்திருந்த நாணல் பகுதியை அடைந்தனர். பனியால் சூழ்ந்திருந்த அப்பகுதி வெண்தங்கம் போலக் காணப்பட்டது. பாவோ சுங்காயுடன் துணையாகச் சென்ற வாங் ஜுன்லி மற்றும் ஐந்தாறு மாணவர்கள் ஓநாய்களை எரித்துக் கொல்ல தோதான இடம்தான் என உறுதியளித்தார்கள்.

நாணல்களிலிருந்து வெளிப்பட்ட பட்டு, பாவோ மற்றும் உல்ஜீயை நோக்கிக் குதிரையில் சென்றான். ''இது ஒரு பெரிய கூட்டம்; அவை இன்னும்

அதற்குள்தான் இருக்கின்றன.’’

தன்னுடைய சாட்டையால் நாணல் வெளியைச் சுட்டிக் காட்டி, பாவோ பேசினார். ‘‘பிரிவின் தலைவர்களே, கேளுங்கள். முதலாவது பிரிவு கிழக்கிலும், இரண்டாம் பிரிவு மேற்கிலும், மூன்றாம் பிரிவு வடக்கிலும், நான்காம் பிரிவு தெற்கிலுமென வளையமாகப் பொறுப்பேற்க வேண்டும். தெற்குப் பகுதியினர் முதலில் அங்கே நெருப்பு வைக்க வேண்டும். மற்ற மூன்று பிரிவினரும் தெற்கில் புகை கிளம்புவதைப் பார்த்ததும் தங்கள் பகுதிகளில் நெருப்பு வைக்க வேண்டும். பின்னர் அனைவரும், நாய்கள் உட்பட, வளையத்தின் வெளிவிளிம்பில் காத்திருக்க வேண்டும். ஓநாய்கள் வெளிப்பட்டதும் நாய்களை ஓட விடுங்கள். நீங்கள் சுடத் தொடங்குங்கள்.’’

நான்காவது பிரிவைச் சேர்ந்த மாணவர்கள், மேய்ப்பர்கள் பின்தொடர, தங்கள் குதிரைகளில் உரிய இடத்துக்குச் சென்றார்கள். மற்ற பிரிவினரும் திரும்பி, அவரவருக்கு ஒதுக்கப்பட்ட பகுதிகளை நோக்கிச் சென்றார்கள்.

பில்ஜியும் அவரைப் பின்தொடர்ந்து ஜென்னும், நாணல் பகுதிகளைச் சோதித்துப் பார்க்கச் சென்றார்கள். இயற்கையாக நிகழும் தீ விபத்துகள், பல ஆண்டுகளாக நிகழாததால், நாணல்கள் இரண்டாள் உயரத்துக்கு வளர்ந்திருந்தன. தரையை இரண்டடி கனத்துக்கு நாணல் செத்தைகள் மூடியிருந்தன.

‘‘நாம் இங்கு வந்திருக்கிறோம் என்பது ஓநாய்களுக்குத் தெரியும்; ஆனால் அவை பயப்படவில்லை’’ என்றார் முதியவர். நாணல்கள் மிக அடர்த்தியாக இருப்பதால், நாய்களால் எந்த ஆபத்தும் ஏற்படாது. சுருக்குக்கயிற்றுத் தடிகளும் பிரயோஜனப் படாது. தரையின் அடியில் வளர்ந்திருக்கும் செடிகள் மீது படும்போது கேட்கும் குதிரைகளின் குளம்படிச் சத்தத்திலிருந்து, நாம் எங்கிருக்கிறோம் என்பது அவற்றுக்குத் துல்லியமாகத் தெரியும். அவை சுலபமாக வெளியேறிச் செல்வதற்கான நிறைய பாதைகள் இங்கிருக்கின்றன. பனிக்காலத்திலும் இலையுதிர் காலத்திலும் அவற்றின் பிராந்தியம் இது. அவற்றின் புகலிடம். ஓலோன்புலாக் ஓநாய்கள் இயற்கையாக மூளும் தீயைப் பார்த்திருக்கின்றன. ஆனால் மனிதர்களால் நெருப்பு வைக்கப்படுவது அவை அறியாதது. இப்படியான ஒன்று, இதற்கு முன்னர் எப்போதுமே நிகழ்ந்ததில்லை.

வெளியாட்களான உங்களுக்கு விதவிதமான யோசனைகள் தோன்றுகின்றன. குறிப்பாக, இது மிகவும் குரூரமானது. இந்த ஓநாய்க் கூட்டம் அழிந்துவிடும்.''

''தீ மூட்டுங்கள்'' யாரோ ஒருவர் அமைதியைக் குலைத்தபடி கத்தினார். ''தீ மூட்டுங்கள்!''

பில்ஜியின் குதிரைக் கடிவாளத்தைப் பற்றியபடி நாணல் காட்டை விட்டு அவசரமாக ஜென் வெளியேறினான். தென்கிழக்கு மூலையில் கரும் புகை எழுந்தது. பிறகு, கிழக்கு, மேற்கு, வடக்குப் பகுதிகளில் விண்ணை நோக்கி நெருப்பு கிளம்பியது. மிகவும் அடர்த்தியான, காய்ந்த நாணலை நெருப்பு தீண்டியபோது தீ பரவியது; அடர்த்தியான புகை உயர்ந்தெழுந்து விண்ணை நோக்கிச் சென்றது. பல ஏக்கர் பரப்பிலான காய்ந்த நாணல், நெருப்புக் கடலாக மாறிவிட்டிருந்தது. ஒரு சரிவின் மேலிருந்து கீழே பார்த்துக்கொண்டிருந்த பாவோ சுங்காய் பரவசமடைந்தார்.

மேற்கு மூலையில் புகையின் நடுவே, பில்ஜி குதிரையிலிருந்து இறங்கி, கிழக்கு நோக்கி மண்டியிட்டார். அவருடைய முகத்தைக் கண்ணீர் நனைத்தது. ஏதோ பிரார்த்தனை செய்வதுபோல முணுமுணுத்தார். ஜென் சென்னுக்குத் தெளிவாகக் கேட்கா விட்டாலும், முதியவர் என்ன சொல்கிறார் என்பது அவனுக்குத் தெரிந்திருந்தது.

திடீரென காற்று திசை மாறி, அடர்ந்த கரும்புகையும் நெருப்பும் முதியவரின் பக்மகாகத் திரும்பியது. ஜென்னும் யாங்கும் உடனடியாக அவரைத் தரையிலிருந்து தூக்கிக்கொண்டு பனி மூடியிருந்த மலைப் பக்கமாக ஓடினர். முதியவரின் முகம் புகை படிந்து கருத்திருந்தது; அவருடைய கண்ணீரும் அவ்வாறே இருந்தது. ஜென் அவரைக் கூர்ந்து பார்த்தான். அவர்களுக்கு இடையே அமைதியான, ஆத்மார்த்தமான அலைவரிசையொன்று உருவாகியிருப்பதாக அவனுக்குச் சட்டெனத் தோன்றியது. அதேசமயம், அச்சமூட்டக்கூடியதெனினும் பயபக்தியுடன் போற்றக்கூடிய ஓநாய் குலச்சின்னம் மேலெழுந்து, மங்கோலிய மக்களின் உறுதிவாய்ந்த ஆன்மாக்களைத் தன்னோடு எடுத்துக் கொள்ளுமென அவன் கற்பனை செய்தான்.

காற்றினால் எடுத்துச் செல்லப்பட்ட நெருப்பலைகள் நாணலை எரித்துச் சாம்பலாக்கின. பிற்பகல் வரை கோபாவேசத்துடன் எரிந்த நெருப்பு,

அவ்வெளியைப் பாழ்நிலமாக்கியது. கடைசியாக, தவிர்க்க முடியாதபடி, நெருப்பு அணைந்தது. பரந்த கருமையான நிலவெளி விரிந்து கிடந்தது. ஏக்கர் கணக்கில்கரும்பனி காணப்பட்டது. ஆனால் நாய்களும் துப்பாக்கிகளும் இன்னமும் சத்தமின்றி இருந்தன.

காற்றில் புகை அடித்துச் செல்லப்பட்ட பிறகு, குளிர் தங்கியது. ஒவ்வொருவரும் ஒரு வரிசையில் அமைந்து, யுத்த களத்தைக் கூட்டிப் பெருக்கி, எத்தனை ஓநாய்கள் இறந்து கிடக்கின்றன என்று பார்க்கச் சொல்லி பாவோ உத்தரவிட்டார். அவர்கள் இருபதுக்கும் மேற்பட்டவற்றைக் கண்டுபிடிக்கக் கூடுமென ஒருவர் கணக்கிட்டார். காலை வேட்டையை விடக் கூடுதலாக இருக்குமென இன்னொருவர் ஆருடம் சொன்னார்.

‘‘அங்கு எவ்வளவு இருக்கின்றன என்பது பற்றி எனக்கு அக்கறையில்லை. அவை எந்த நிலையில் இருந்தாலும் பரவாயில்லை. அடையாளம் தெரியாதபடிக் கிடந்தாலும் சரிதான்’’ என்றார் பாவோ. ‘‘இவை சில தோல்களுக்காக மேற்கொள்ளப்பட்டதில்லை. ஓநாய்களைக் கொல்வதன் மூலம் பேரழிவை நாம் அகற்றுகிறோம்.’’

அந்த வரிசையின் ஒரு ஓரத்திலிருந்து ஜென் சென், பில்ஜியிடம் மெதுவாகக் கேட்டான். ‘‘எத்தனை விலங்குகள் கருகிவிட்டிருக்கும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள், அப்பா?’’

‘‘மங்கோலியர்களாகிய நாங்கள் பெரிய அளவுக்குப் பயப்படுவது நெருப்புக்குத்தான். அப்படி இருக்கையில் எவ்வளவு ஓநாய்களைக் கொன்றிருக்குமென்று எனக்கெப்படித் தெரியும்?’’

அவர்கள் வரிசையோடு சேர்ந்தும் நிதானமாகவும் நகர்ந்தபடி சாம்பல்களுக்கிடையே தேடினர். அவர்கள் உயர்ந்த குவியலைக் கடக்கும்போதெல்லாம் பதற்றத்துடன் தங்களுடைய சுருக்குக் கயிற்றுத் தடிகளால் நோண்டினர். அங்கு எதுவுமில்லாததை அறிந்ததும் முதியவரிடமிருந்து நிம்மதிப் பெருமூச்சு வெளிப்படும்.

காற்று நின்றுவிட்டிருந்தது. ஆனால் குதிரைக் குளம்புகளால் சாம்பல் கிளறப்பட்டு மேலெழுந்து மக்களின் கண்களில் நீரை வரவழைத்தது. குதிரைகளும் நாய்களும் இருமின. தீக்கங்குகளோடு இருந்த சாம்பலை

மிதிக்க நேரிட்டபோதெல்லாம் நாய்கள் வலியில் குதித்தன. பாதியளவுக்கு மேல் கூட்டிப் பெருக்கிவிட்ட போதிலும் எதுவுமே அகப்படவில்லை. பாவோ சுங்காய் படபடப்போடு காணப்பட்டார். ‘‘மெதுவாகத் தேடுங்கள்!’’ என அவர் கத்தினார். ‘‘வேகத்தைக் குறையுங்கள், ஒரு சாம்பல் குவியலைக்கூட விட்டுவிடாதீர்கள்.’’

பில்ஜியின் முகத்திலிருந்து கவலை மறையத் தொடங்கியது.

‘‘ஓநாய்கள் தப்பிச் சென்றுவிட்டதாக நீங்கள் நினைக் கிறீர்களா?’’ ஜென் கேட்டான்.

‘‘அப்படியாகத்தான் இருக்கும். இல்லையென்றால் இதற்குள் ஒன்றாவது தட்டுப்பட்டிருக்கும். டெஞ்ஞர் அவற்றுக்கு உதவியிருக்கும்.’’ முதியவர் நம்பிக்கையோடு பதிலளித்தார்.

தூரத்திலிருந்து கேட்ட சத்தம் அவர்களுடைய உரையாடலைத் தடுத்தது. ‘‘இங்கு ஒரு ஓநாய் செத்துக் கிடக்கிறது!’’

அதைப் பார்ப்பதற்காக ஜென்னும் முதியவரும் அங்கு தங்கள் குதிரைகளில் விரைந்தபோது, முதியவரின் முகம் வாடியிருந்தது. மற்றவர்களும் அங்கு வந்து கூடினார்கள். பாவோ மத்தியில் இருந்தார். அவர் பரவசத்தோடு பில்ஜியை அணுகி, சடலத்தை அடையாளம் காணும்படி கேட்டுக்கொண்டார்.

அது தரையில், அடையாளம் காண முடியாதபடி எரிந்து, சுருண்டு கிடந்தது. அதன் உடம்பிலிருந்து கெட்ட வாடை வெளியேறிக்கொண்டிருந்தது. எல்லோரும் ஒரே சமயத்தில் பேசிக்கொண்டிருந்தார்கள். ‘‘வைத்தது வேலை செய்துவிட்டது’’ என்று துள்ளலுடன் சொன்னான் வாங் ஜுன்லி. ‘‘நாம் ஒன்றைக் கண்டுபிடித்துவிட்டோம். மற்றதெல்லாம் இங்குதான் எங்காவது கிடக்கும்.’’

பிறகு, லாசுருங் பேசினான். ‘‘இது ஓநாய் இல்லை. இது ரொம்பவும் சின்னதாய் இருக்கிறது.’’

‘‘தீயில் சுருங்கியிருக்கும். இருந்தாலும் சின்னதுதான்’’ என்றார் பாவோ.

வாங் தலையசைத்தான். ‘‘சின்ன ஓநாயாக இருக்கும்.’’

பில்ஜி, குதிரையிலிருந்து இறங்கி, அவருடைய மேய்ச்சல் தடியால் சடலத்தைத் திருப்பிப் போட்டார். எல்லா முடியும் எரிந்து போயிருந்தன. ‘‘இது ஓநாய் இல்லை; சின்ன ஓநாய்கூடக் கிடையாது.’’

பாவோ சந்தேகத்துடன் முதியவரை உற்றுப் பார்த்தார். ‘‘எப்படிச் சொல்கிறீர்கள்?’’ என்று கேட்டார்.

‘‘இதன் வாயைப் பாருங்கள். ஓநாயின் பற்கள் நாய்களை விடவும் நீளமானவை; கூர்மையானவை. நீங்கள் என்னை நம்பாவிட்டால் படமெடுத்து அனுப்புங்கள். உங்களுடைய மேலதிகாரிகள் என்ன சொல்கிறார்களென்று பார்க்கலாம். ஓநாயைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்த ஒருவருக்கு, நீங்கள் நாயை ஓநாயென்று கூறிப் பொய்யான தகவல் அனுப்பியிருப்பது தெரிந்துவிடும்.’’

பதற்றமடைந்த பாவோ, ‘‘இங்கு ஒரு குறி போட்டு வையுங்கள். மேலும் ஏதாவது கிடைக்கும்போது, இது ஓநாயா நாயா என்பது தெரிந்துவிடும்’’ என்றார்.

முதியவர் சோகத்துடன் கீழே குனிந்தார். ‘‘இந்தக் கிழட்டு நாய்க்கு தன் கதை முடிந்துவிட்டது தெரிந்து இங்கே வந்து செத்துப்போய்விட்டது. ஓநாய்கள் இதை முதலில் பார்க்காமல் போனது பரிதாபம்தான்.’’

‘‘தொடர்ந்து தேடுங்கள்!’’ பாவோ வேண்டினார். ‘‘நேர் வரிசையில் கூட்டிப் பெருக்குங்கள்!’’

அவர்கள் தொடர்ந்து, ஒவ்வொரு சாம்பல் குவியலையும் சோதனை செய்தார்கள். எதுவும் தட்டுப்படவில்லை. மாணவர் களில் பலர் பொறுமையிழக்கத் தொடங்கினர். வேட்டைக்காரர்கள் அனுபவமிக்கவர்கள் என்றாலும் நெருப்பு முறை பற்றி அவர்கள் ஏதும் அறிந்திராததால், ஒருவேளை பட்டு தவறான தகவல் கொடுத்துவிட்டானோ என்று ஆச்சரியப்பட்டார்கள்.

பட்டுவை நோக்கிக் கேள்விகள் கிளம்பியதும் அவன், ‘‘தலைவர் மாவோவின் மீதும் டெஞ்ஞரின் மீதும் ஆணையாகச் சொல்கிறேன். புஹேயும் நானும் அவற்றைப் பார்த்தோம். நீங்களெல்லாம் அவற்றின் தடங்களைப் பார்த்தீர்கள் இல்லையா?’’ என்றான்.

‘‘இது விசித்திரமாக இருக்கிறது’’ என்றார் பாவோ. ‘‘அவை தங்கள் சிறகுகளை விரித்துப் பறந்து சென்றிருக்காதென்பது எனக்குத் தெரியும்.’’

பில்ஜி புன்னகைத்தார். ‘‘ஓநாய்கள் பறக்கக் கூடியவை என்பது உங்களுக்குத் தெரிந்திருக்குமென்று நான் நினைத்தேன். அவை அற்புதமான விலங்குகள். பறப்பதற்கு அவற்றுக்குச் சிறகுகள் கூடத் தேவையில்லை.’’

பாவோ கோபமாகக் கேட்டார். ‘‘அப்படியானால் இன்று காலையில் நம்மால் எப்படி அவ்வளவு ஓநாய்களைக் கொல்ல முடிந்தது?’’

‘‘குதிரைப் படுகொலைக்கான பரிகாரம் அது. கூடுதலாகக் கொல்வதற்கு டெஞ்ஞர் அனுமதிக்காது. அது நியாயமற்றது.’’

பாவோ, அவருடைய பேச்சை இடைமறித்தார். ‘‘டெஞ்ஞர் அது, இது என்று பேசியதெல்லாம் போதும். ‘நான்கு பழமை’களில் அதுவும் ஒன்று.’’ அவர் திரும்பினார். ‘‘பரவலாகச் சென்று வேலையை முடியுங்கள்’’ என உத்தரவிட்டார்.

கிட்டத்தட்ட அதே நேரத்தில் இரண்டு குதிரை மேய்ப்பர்கள் சத்தம் போட்டார்கள். ‘‘மோசமான செய்தி, இரண்டு காளைகள் இங்கே எரிந்து கிடக்கின்றன.’’

எல்லோரும் அதைப் பார்ப்பதற்காக அங்கு விரைந்தார்கள். மேய்ப்பர்களும் வேட்டைக்காரர்களும் பதற்றத்தில் இருந்தார்கள்.

புஹே என அழைக்கப்படும் காளைகள் மிகவும் சுதந்திரமாக, எவ்விதக் கவலையுமின்றி திரிபவை. மேய்ச்சல் நிலத்தில் பெரிதும் மதிக்கப்பட்டு வளர்க்கப்படும் ஆண் விலங்குகள் அவை. அனுபவமிக்க மாடு மேய்ப்பர்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு பொலி காளைகளாக வளர்க்கப்படுபவை. அவை உரிய பருவத்தை அடைந்ததும், கோடை கால மாதங்களைத் தவிர, அவை இடம் விட்டு இடம் சென்று இனப்பெருக்கத்தில் ஈடுபடும். அப்போது அவை தம் மந்தையை விட்டுப் பிரிந்து, மேய்ச்சல் நிலத்தில் மிகவும் சுதந்திரமாக அலைந்து திரியும். அவற்றை மேய்க்கவோ அவற்றுக்குத் தீனி போடவோ எவரும் தேவையில்லை. அவை பெரிதாகவும், சதைப் பிடிப்புடன் வலுவாகவும் காணப்படுபவை. தடித்த கழுத்துகளோடு, மகத்தான ஆற்றலும் கொண்டவை. அவற்றின் முகங்கள், சுருள் முடிகளால் நிரம்பியிருக்கும். குட்டையான,

தடிமனான, மிகவும் கூரான அவற்றின் கொம்புகள், நெருக்கமான சண்டைக்குக் கச்சிதமான ஆயுதங்கள். மேய்ச்சல் நிலத்தின் வலிமையான கொள்ளையர்களான ஓநாய்கள்கூட, அவை கூட்டமாகப் பயணம் செய்யும்போதுகூட, இந்தக் காளைகளைக் கண்டால் விலகிச் சென்றுவிடும். இந்தக் காளைகளின் தடித்த தோல்களுக்கு முன் அவற்றின் கூரிய பற்கள் பயனற்றவை. இவற்றை வெல்லக்கூடிய வலிமை அவற்றுக்குக் கிடையாது.

அதனால் இந்தப் பொலி காளைகளுக்கு இயற்கையான எந்த விரோதிகளும் கிடையாது. பொதுவாக அவை ஜோடியாகத்தான் பயணம் செய்யும். பகலில் இரண்டும் சேர்ந்து அருமையான புல்லை மேயும். இரவில் வாலோடு வால் ஒட்டியிருக்கப் படுத்துறங்கும். பலம், ஆற்றல், ஆண்மை, தைரியம், சுதந்திரம் மற்றும் நற்பலன் ஆகியவற்றின் குறியீடுகளாக அவை திகழ்ந்தன. மேய்ச்சல் நிலத்தினர், அவற்றை அதீத சக்திகளாகப் பன்னெடுங் காலமாகக் கருதி வருகின்றனர். ஆடு, மாடுகளின் வளத்துக்கான ஒரு குறியீடாக அவற்றின் ஆரோக்கியம் கருதப்பட்டது. ஒரு பொலிகாளை நோய் வாய்ப்பட்டால் அது அழிவை முன்னுரைப்பதாகும். இத்தகைய காளைகள் மிகக் குறைவாகவே இருப்பதால், பல கால்நடைப் பண்ணைகளுக்கு ஒன்று என்பதாகவே இவை இருப்பதால், அவற்றுள் இரண்டு, மூட்டப்பட்ட பெரும் தீயில் மாண்டு போன செய்தியானது, மேய்ப்பர்களை நிலை குலையச் செய்தது. தங்களுக்குப் பிரியமான ஒருவரின் மரணச் செய்தியைக் கேள்விப்பட்டதைப் போல அவர்கள் வேதனைப்பட்டனர்.

மேய்ப்பர்கள் குதிரைகளிலிருந்து இறங்கி, அந்த இரண்டு மிகப் பெரிய சடலங்களைச் சுற்றி அமைதியாக நின்றனர். எரிந்த நிலத்தில் அவற்றின் கால்கள் விரைத்துப் பிளந்து கிடந்தன. அவற்றின் தடித்த தோல்கள் கரும் கொப்புளங்களால் நிறைந்திருக்க, அவற்றின் வெடிப்புகளிலிருந்து மஞ்சள் நிற எண்ணெய்க் கொழுப்பு வெளியேறிக்கொண்டிருந்தது. அவற்றின் கண்கள் கருப்பு பல்பு களைப் போலக் காணப்பட்டன. நாக்குகள், எவ்வளவு வெளியில் நீட்டிக்கொண்டிருக்க முடியுமோ அந்தளவு நீட்டிக்கொண்டிருந்தன. மாடு மேய்ப்பர்களும் பெண்களும் அவற்றின் கொம்புகளை வைத்து அடையாளம் தெரிந்துகொண்டனர். கூட்டத்தினரிடையே கோபம் கொப்பளித்தது.

‘‘இது மன்னிக்க முடியாதது’’ என்றாள் கஸ்மாய். ‘‘நம்முடைய உற்பத்திப் பிரிவில் இவையே மிகச் சிறந்த காளைகள். நம்முடைய மந்தையில் பாதி இவற்றால் உருவானதுதான். ஆனால் நீங்கள் அவற்றை எரித்துவிட்டீர்கள். எங்களுடைய மேய்ச்சல் நிலத்தை அழிக்கும் கைங்கரியத்தை நீங்கள் நன்றாகவே செய்கிறீர்கள்!’’

‘‘அவை இரண்டும் மங்கோலியக் காளைகளிலேயே மிகவும் அருமையானவை. நாங்கள் அவற்றை செங்காளைகள் என்றழைப்போம்’’ என்றார் பில்ஜி. ‘‘அவற்றோடு இனப் பெருக்கத்தில் ஈடுபட்ட பசுக்கள் நிறைய பால் கொடுக்கும். அவற்றின் கன்றுகள் மிகுந்த இறைச்சி கொண்டவை; ஆகச் சிறந்தவை. இந்த சம்பவம் குறித்து விசாரணை நடந்த வேண்டுமெனக் கேட்டு நான் மேலிடத்துக்கு அறிக்கை அனுப்புவேன். அவர்களை இந்த இடத்துக்கு வர வைத்து, அவர்களை இதைப் பார்க்கும்படி செய்வேன். ஓநாய்கள் ஏற்படுத்தும் இழப்புகளைவிட மிக மிக அதிகமானது மனிதர்கள் நிகழ்த்தும் பேரழிவு. சில வருடங்களுக்கு முன்பு, ‘மங்கோலியக் கூட்டமைப்பின் வளர்ப்பு மிருகங்களுக்கான அரசியல் அமைப்பு’ இவ்விரு காளையும் விரும்பிக் கேட்டது. நாங்கள் இவற்றைப் பிரிய மனமின்றி, இவற்றுக்குப் பதிலாக, இவற்றின் மூலமாகப் பிறந்த இரண்டு இளம் காளைகளைக் கொடுத்தோம். இது மிக மோசமான இழப்பு.’’

‘‘நாணல்கள் காற்றுக்கு மறைவாக இருக்குமென்பதால், காளைகள் இங்கே வந்து தூங்கியிருக்கின்றன. கடைசியில் தீயில் எரிந்து இறந்துவிட்டன’’ என்றான் லாசுருங். ‘‘எங்களுடைய வரலாற்றில், ஒருவர் மேய்ச்சல் நிலத்தில் கால்நடைகளை எரித்துக் கொன்றதென்பது இதுவே முதல் முறை. டெஞ்ஞருக்குப் பணிய மறுப்பவர் எவரும் அதன் விளைவுகளை அனுபவித்துத்தான் ஆக வேண்டும்.’’

திடீரென ஆவேசமடைந்தவராக பாவோ சுங்காய் பேசினார். ‘‘இந்த இரண்டு காளைகளின் மரணத்துக்கும் ஓநாய்கள் விலை கொடுத்தாக வேண்டும். நீங்கள் என்ன சொன்னாலும் சரி, அதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. ஓலோன்புலாக்கிலுள்ள எல்லா ஓநாய்களையும் கொன்று முடிக்கும் வரை நான் ஓய மாட்டேன்.’’

சூரியன் அஸ்தமனமாகி விட்டிருந்தது. முன் பனிக்காலக் குளிர் ஒரு வலையைப் போல நிலத்தின்மீது பரவியிருந்தது. மக்களும், குதிரைகளும், நாய்களும், பசியோடும் களைப்போடும் குளிரோடும் தங்களுடைய முகாமுக்கு சோகமாகத் திரும்பினார்கள். சாம்பல் நிற ஓநாய் அரசன், எப்படி தன்னுடைய கூட்டத்தோடு, நெருப்பிலிருந்தும், மனித வளையத்திலிருந்தும் வெளியேறியதென்று எவருக்கும் புரியவில்லை. வெவ்வேறு அபிப்ராயங்களைத் தெரிவித்து அவர்கள் பேசியபடி இருந்தார்கள். ஆனால் எல்லோருமே ஓநாய்கள் பாதுகாப்பாகப் பறந்துபோய்விட்டன என நம்பினார்கள். ''இந்த சுற்றி வளைப்பு வளையத்தில் அடிப்படையான குறைபாடு இருந்தது'' என்றார் உல்ஜீ. ''உரிய இடத்தை அடைவதற்கு முன்பாகவே மக்களும் நாய்களும் அதிக கூச்சலை வெளிப்படுத்திவிட்டார்கள். நெருப்பு வைக்கப்படுவதற்கு முன்பாகவே, சாம்பல் ஓநாய் தன் கூட்டத்தோடு வெளியேறி விட்டது.''

குதிரை மேய்ப்பர்கள் தங்களுடைய மந்தையை நோக்கிப் படபடப்புடன் விரைந்தார்கள். தங்களுடைய ஓநாய்க்குட்டி பற்றிய கவலையோடிருந்த ஜென் சென்னும் யாங் கீயும், சாங் ஜியோனையும் காவோ ஜியான்சோங்கையும் பார்த்து, வேட்டைக் குழுவினரிடமிருந்து விலகி, தங்களோடு சேர்ந்து குறுக்குப் பாதையில், எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக முகாமுக்கு வரும்படி சைகை செய்தனர். அவர்கள் சென்று கொண்டிருந்தபோது யாங் கீ, ''நாம் கிளம்புவதற்கு முன்பு, நன்றாக வேக வைத்த இரண்டு ஆட்டிறைச்சித் துண்டுகளை அதற்கு நான் போட்டுவிட்டு வந்தேன். ஆனால் இறைச்சித் துண்டை சாப்பிடுமளவுக்கு இப்போது அது தயாராகி விட்டிருக்குமா என்று எனக்குத் தெரியவில்லை'' என்றான். ''இன்னும் ஒரு மாசத்துக்காவது அது பால் குடிக்காது'' என்றான் டோர்ஜி.

''தீனியால் அதைத் திணறடிக்காதே'' என்றான் ஜென். ''நேற்றிரவே அது நிறைய சாப்பிட்டுவிட்டது. அதன் வயிறு உப்பிப் போயிருந்தது. அது இறைச்சியைச் சாப்பிடாவிட்டாலும், பட்டினியாய் இருக்காது. ஆனால் என்னுடைய கவலையெல்லாம், அங்கு எவ்விதப் பாதுகாவலும் இல்லாமல் நாள் முழுக்க நாம் வெளியே இருந்திருக்கிறோம் என்பதுதான். ஒருவேளை அதன் அம்மா அதைப் பார்த்துவிட்டிருந்தால்...''

அவர்கள் முகாமை வந்தடைந்தபோது நள்ளிரவாகி விட்டது. எர்லாங்கும் எல்லோவும், காலியாக இருந்த தீவனத்தொட்டி முன்பு, தங்களுடைய உணவுக்காகக் காத்துக்கொண்டிருந்தன. ஜென் குதிரையை விட்டிறங்கி, இறைச்சியுடன் கூடிய சில எலும்புத் துண்டுகளை நாய்களுக்குக் கொடுத்தான். சாங்கும் காவோவும் குடிலுக்குள் சென்று, கால் கை முகம் கழுவிவிட்டு, தேனீருக்காகத் தண்ணீரைக் கொதிக்க வைத்தார்கள். ஜென்னும் யாங்கும் ஓநாய்க்குட்டியின் குழியை நோக்கி ஒடிச் சென்று, அதன் மேலிருந்த பலகைகளை நீக்கிவிட்டு, அந்தத் துளைக்குள் ஃப்ளாஷ் லைட் அடித்துப் பார்த்தார்கள். ஓநாய்க்குட்டி ஒரு மூலையில் சுருண்டு படுத்துத் தூங்கிக்கொண்டிருந்தது. அதற்கு மாறாக, பெண் நாய்க்குட்டி பசியால் ஊளையிட்டபடி, சுவரில் ஏறி வெளியில் வர முயற்சித்துக¢கொண்டிருந்தது. யிர்ரும் தவிப்புடன் அந்தப் பகுதியில் நடந்தபடி இருந்தது. ஜென் குனிந்து, நாய்க்குட்டியை மேலே எடுத்து, யிர்ரிடம் ஒப்படைத்தான். அது தன்னுடைய பற்களால் குட்டியைக் கவ்விக்கொண்டு நகர்ந்து சென்றது.

ஜென்னும் யாங்கும் குழியைக் கவனமாகப் பரிசோதித்தார்கள். இரண்டு ஆட்டு இறைச்சித் துண்டங்களும் காணவில்லை. ஓநாய்க்குட்டியின் வயிறு இரண்டு பக்கமும் உப்பிப் போயிருந்தது. அதன் மூக்கிலும் வாயிலும் கொழுப்பு எண்ணெய்ப் பிசுக்குகள் ஒட்டிக்கொண்டிருந்தன. அது தூங்கிக்கொண்டிருந்தபோது அதன் வாயோரங்கள் சுருண்டிருந்தன. ஒரு அற்புதமான கனவை அது அனுபவித்துக்கொண்டிருப்பதுபோல் தோன்றியது. யாங் மிகவும் மனக்கிளர்ச்சியடைந்தான். ‘‘இந்தக் குட்டிப் பிசாசு, எல்லாக் கறியையும் விழுங்கிவிட்டது.’’ அவன் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். ‘‘நல்லவேளை, இதன் அம்மா வேறெங்கோ அலைந்துகொண்டிருக்கிறது.’’

## 14

நீண்ட நாட்களாக எட்டிப் பார்க்காதிருந்த சூரிய ஒளிக்கதிர்கள், மேலே இருந்த மரச் சட்டகத் திறப்பின் வழியாகக் குடிலுக்குள் ஊடுருவின. ஜென் சென் கண்களைத் திறந்து, குளிர்ந்த இளவேனிற் காலக் காலையில் தென்பட்ட நீல நிற ஆகாயத்தை, மேல்நோக்கிப் பார்த்தான். அவன் படுக்கையிலிருந்து துள்ளி எழுந்து, அவசர அவசரமாக உடை மாற்றிக்கொண்டு, ஓநாய்க்குட்டியின் வளையை நோக்கி ஓடினான்.

யாங் கீயும் சாங் ஜியோனும் ஓநாய்த் தோல்களை எப்படி பொதிப்பதென கோம்புவிடமிருந்து கேட்டுத் தெரிந்துகொண்டிருந்தனர். ஜென் அதைக் கவனிப்பதற்காக அங்கு சென்றான். மூத்தவரான கோம்பு, அருகிலிருந்த வைக்கோல் போரிலிருந்து கை நிறைய வைக்கோலை எடுத்து, தோல்களுக்குள் அவற்றை மிக நிதானமாகப் பொதித்துக்கொண்டிருந்தார். அவை கொஞ்சம் கொஞ்சமாக ஓநாய்களின் வடிவத்தைப் பெற்றன. ‘‘தோல்கள் சுருங்காமல் இருக்கவும், அவற்றின் உட்பகுதிகள் ஒன்றோடொன்று ஒட்டிக்கொள்ளாமல் இருக்கவும் இப்படி நாம் செய்ய வேண்டும்’’ என்றார் அவர். ‘‘தோல் ஒட்டிக்கொண்டால் அதன் பெறுமதி குறைந்துவிடும்.’’

தோல்களைப் பொதித்து முடித்ததும், அவற்றின் மூக்குத் துவாரங்களில் ஒரு துளை போட்டு, அதனூடாக மெல்லிய கயிற்றை நுழைத்தார். பிறகு, அவர் சாங் ஜீயோனிடம், சுருக்குக்கயிற்றுத் தடியைப் போலப் பயன்படுத்தக்கூடிய வகையில், ஏதேனும் மரக்கட்டை இருக்கிறதா என்று கேட்டார். அவன், அவரை எருது வண்டியை நோக்கி அழைத்துச் சென்றான். அதிலிருந்த கட்டைகளிலிருந்து நீண்ட, வலுவான நான்கைந்து கட்டைகளை அவர் எடுத்துக்கொண்டார். அதிலொன்று கிட்டத்தட்ட இருபதடி நீளமிருந்தது. பின்னர் அவர், தோலின் மூக்கில் நுழைத்திருந்த கயிற்றை, தடியின் முனையோடு சேர்த்துக் கட்டினார். குடிலின் முன்னால் பல அடி ஆழமான குழியொன்றைத் தோண்டி, அந்தத் தடியை அதனுள் நட்டு வைத்தார். அவர் அந்தச் செயலை முடித்த பிறகு, நன்கு பொதிக்கப்பட்ட இரண்டு ஓநாய்த் தோல்கள், காற்றில் கொடிகளைப் போல அசைந்தன.

‘‘அவற்றை இப்படித்தான் காய வைக்க வேண்டும்’’ என்றார் கோம்பு. ‘‘மேலும், இந்தக் குடிலைக் கடந்து போகிறவர்களுக்கு, வெற்றிகரமான வேட்டைக்காரர்கள் இங்கு வசிப்பதையும் அவை பறை சாற்றும். முன்பெல்லாம் இது போன்ற தோல்கள், திருடர்களையும் கொள்ளையர்களையும் அந்த இடத்தை நெருங்க விடாது.’’

ஜென், யாங் மற்றும் சாங் மூவரும் காற்றில் அசைந்தாடும் ஓநாய்க் கொடிகளைப் பரவசத்துடன் பார்த்தார்கள். அவை ஒரு ஜோடி உயிருள்ள ஓநாய்கள் யுத்தத்துக்குத் தயாராக இருப்பதுபோல் தோன்றின.

யாங் பெருமூச்சு விட்டான். ‘‘ஓநாய்கள்தான் இறந்து விட்டன. ஆனால் அவற்றின் வடிவமும் ஆன்மாவும் இறக்கவில்லை. அவை இங்கு தாக்குதலுக்கான முழு உத்வேகத்தோடு எப்போதும் போலக் காணப்படுகின்றன.’’

ஜென்னின் உணர்ச்சிகளும் எழுச்சி பெற்றிருந்தன. ‘‘இந்தத் தோல்களைப் பார்க்கும்போது, தங்க முலாமில் பொறிக்கப்பட்ட ஓநாய்த் தலைகள் கொண்ட துருக்கிய கொடிகள் நினைவுக்கு வருகின்றன. அக்காலத்தில் அந்நாட்டுக் குதிரை வீரர்கள் அவற்றை ஏந்திக்கொண்டு, மேய்ச்சல் நிலத்தைக் கடந்து, யுத்தத்துக்குச் செல்லும்போது அவர்களுடைய நாளங்களில் ஓநாய் ரத்தம் பாய்ந்துகொண்டிருக்கும். அந்த ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்ட தைரியமும் மூர்க்கமும் ஞானமும் அவர்களிடம் நிறைந்திருக்கும். அதன் மூலமே அவர்கள் உலகை வென்றார்கள்.’’

‘‘ஓநாய் பற்றிய உன்னுடைய கருத்துகளை இப்போது நான் ஏற்றுக்கொண்டு விட்டேன். ஓநாய் பற்றிய அறிவு பல முக்கியமான விசயங்களை உள்ளடக்கி இருக்கிறது. அவை குறித்த உன்னுடைய மனக்கிளர்ச்சியை இப்போது என்னால் புரிந்துகொள்ள முடிகிறது’’ என்றான் சாங்.

‘‘நான் என்ன நினைக்கிறேன் என்றால், நாம் மூவரும் பல்கலைக்கழகப் படிப்புகளை மறந்துவிட்டு, அதைவிட மிகவும் சுவாரஸ்யமான ஓநாய் இயலில் கவனம் செலுத்தலாம்’’ என்றான் யாங் கீ.

காற்று ஓநாய்த் தோல்களை அசைந்தாடச் செய்தது. அதன் மயிர்களைத் தடவிக் கொடுத்து மினுமினுப்பாக்கியது. ஜென்னைப் பொறுத்தவரை, அந்த

ஓநாய்கள் வைக்கோலால் நிரப்பப்பட வில்லை; மாறாக, வாழ்வின் வேட்கையாலும் போராட்டத்துக்கான உத்வேகத்தாலும் அவை அடைக்கப்பட்டிருக்கின்றன. குடிலிலிருந்து புகைபோக்கி மூலமாக வெளிவந்த வெண்புகை அவற்றைச் சூழ்ந்தபோது, மேகங்களுக்கிடையே நடனமாடுவது போல அவை காட்சியளித்தன. அவை டெஞ்ஞரை நோக்கியும், சிரியஸை நோக்கியும், சொர்க்கத்தை நோக்கியும் உயரப் பறந்து கொண்டிருந்தன. அவை தம்மோடு மேய்ச்சல் நிலத்தாரின் ஆன்மாக்களையும் எடுத்துச் சென்றன. இவ்வாறு தான் நின்றுகொண்டு வானத்தை நோக்கிப் பார்த்துக்கொண்டிருப்பதேகூட ஒரு வகையான சடங்கு என்பதை ஜென் உணர்ந்தான். அதே சமயம் அவன் அறியாமலேயே குலச்சின்னத்தின் காலடியில் அவன் நின்றுகொண்டிருந்தான். மேய்ச்சல் நிலத்தின் ஆத்மார்த்தமும் நம்பிக்கையும் காற்றைப் போல சுற்றிச் சூழ்ந்திருந்தன.

சாங்கிடம் ஜென் சொன்னான், ''ஓநாய்க்குட்டியைப் பார்க்க என்னுடன் வா.'' அவர்கள் அந்தப் புதிய குழியை நோக்கிச் சென்றார்கள்.

பெண் நாய்க்குட்டி ஒரு மூலையில் சோம்பலோடு படுத்துக் கிடந்தது. அதற்கு மாறாக, ஓநாய்க்குட்டி பசியோடும் பொறுமையிழந்தும் குழியின் மத்தியில் உட்கார்ந்துகொண்டிருந்தது. பிரகாசமான சூரிய வெளிச்சம் குழிக்குள் விழுந்ததும், தன் பின்னங் கால்களால் எழுந்து சுவற்றில் ஏறத் தொடங்கியது. அது இரண்டு இஞ்ச்கூட ஏறியிருக்காது, அதற்குள் உள்ளே விழுந்துவிட்டது. மறுபடியும் எழுந்துகொண்டு மீண்டும் முயற்சித்தது. நகங்களைச் சுவற்று மண்ணில் ஊன்றிக்கொண்டு, தன் முழு சக்தியையும் திரட்டித் தன்னை மேல்நோக்கி உந்தியது. ஆனால் மண் உதிர்ந்து பிடிமானம் இழந்ததும் ஒரு இறகுப் பந்தைப் போலத் தரையில் விழுந்தது. சுவற்றில் தெரிந்த தன்னுடைய நிழலைப் பார்த்து அது உறுமியது. இந்தக் குழியிலிருந்து வெளியேற உதவாததற்காக அதன் மீது கோபப்பட்டது.

சாங் அதற்கு முன்பு உயிருள்ள ஒரு ஓநாய்க்குட்டியைப் பார்த்திராததால், குனிந்து அதைக் கையிலெடுத்து நெருக்கமாகப் பார்க்க விரும்பினான்.

''ஒரு நிமிசம் பொறு'' என்றான் ஜென். ''அதனால் தானாகவே வெளியேற முடிகிறதா என்று நாம் முதலில் பார்ப்போம். அப்படி அதனால் முடிந்தால், இந்தக் குழியை நான் இன்னும் ஆழமாக்க வேண்டும்.''

மேலும் இரண்டு முறை அது கீழே விழுந்த பிறகு, அந்தப் பகுதியை விட்டுவிட்டு, குழியைச் சுற்றி வரத் தொடங்கியது. அங்குமிங்குமாக முகர்ந்து பார்த்தது. அது தப்பிப்பதற்கான ஒரு புதிய திட்டத்தை வகுப்பது போலத் தோன்றியது. திடீரென பெண் நாய்க்குட்டி அங்கிருப்பதைக் கண்டுகொண்டது. ஒரு நொடியும் தாமதிக்காமல் அதன் முதுகிலேறி, அங்கிருந்து அதன் தலையை நோக்கிச் சென்றது. மீண்டும் மேலேறத் தொடங்கியது. மண் துகள்கள் உதிர்ந்து நாய்க்குட்டியின் மீது விழுந்ததும் அது தூக்கத்தி லிருந்து விழித்துக்கொண்டது. அது எழுந்துகொண்டு, சிணுங்கிய படி, தன் முதுகிலிருந்த தூசியை உதறியது. உடனே ஓநாய்க்குட்டி மறுபடியும் கீழே விழுந்தது. இப்போது அது முழு கோபத்துடன், நாய்க்குட்டியைப் பார்த்து, மூக்கைச் சுருக்கி, கோரைப் பற்களை வெளிக்காட்டி உறுமியது. ''இந்தக் குட்டிப் பிசாசிடம் ஏற்கெனவே நிறைய ஓநாய் குணம் ஊறிப்போயிருக்கிறது!'' சாங் சிரித்தபடியே ஆச்சரியத்துடன் சொன்னான். ''இது எனக்கு மிகவும் புத்திசாலியாகத் தெரிகிறது.''

இந்த இரண்டு குறுகிய நாட்களுக்குள், ஓநாய்க்குட்டியின் கண்களை மூடியிருந்த சவ்வு மிகவும் மெல்லிதாகி விட்டிருப்பதை ஜென் கவனித்தான். இன்னமும் அது நீர்த் தன்மையுடன்தான் இருந்தது. எனினும், அதனால் மங்கலாகப் பார்க்க முடிவதாகவே தோன்றியது. கை அசைவுகளுக்கு அது எதிர்வினை செய்தது. ஜென், தன் கையைத் திறந்து நீட்டியபோது, அந்த ஓநாய்க்குட்டி தன்னுடைய கண்களால் அதைத் தொடர்ந்தது. ஜென் மெதுவாகச் சொன்னான்: ''ஓநாய்... குட்டி.. ஓநாய்... குட்டி... தீனி... தீனி...'' அது, தன் தலையை நிமிர்த்தி, காதுகளை விடைத்துக்கொண்டு, பயமும் ஆர்வமும் கலந்து வெளிப்பட அவன் சொன்னதைக் கேட்டது.

''இதற்கு தன்னுடைய பூர்விகக் குகையின் நினைவேதும் இருக்கிறதா என்று நான் பார்க்க விரும்புகிறேன்'' என்றான் சாங். தன்னுடைய வாயைக் கைகளால் மூடியபடி, ஓநாய் சப்தங்களை எழுப்பினான். ஓநாய்க்குட்டி பதற்றத்துடன் நகர்ந்து, பின் நாய்க் குட்டியின் உடல் மீது தாவிக் குதித்தது. சுவற்றைப் பிறாண்டியது; மீண்டும் மீண்டும் கீழே விழுந்தது. கடைசியாக, ஒரு மூலையில் போய், தன்னுடைய தாயின் அரவணைப்பையும் பாதுகாப்பையும்

வேண்டுவதுபோல, சுருண்டுகொண்டது. மிகவும் குரூரமான ஒரு செயலைச் செய்துவிட்டதை அவர்கள் உணர்ந்தார்கள்.

‘‘இதை வளர்ப்பது அவ்வளவு சுலபமாக இருக்கப் போவதில்லை’’ என்றான் சாங். ‘‘இது பீஜிங் மிருகக்காட்சிசாலை இல்லை. அங்கு அதனுடைய இயற்கையான வாழும் சூழலிலிருந்து அது நீக்கப்பட்டு, கொஞ்சம் கொஞ்சமாக அதனுடைய இயற்கை யான சுபாவத்தில் சிலவற்றை இழக்கும்படி செய்துவிடுவார்கள். ஆனால் இந்தத் தொன்மையான சுற்றுச்சூழலில், இரவு கவிழும்போது, ஓநாய்களின் இடைவிடாத ஊளைகள் நம்மைச் சூழ்ந்திருக்கும். இத்தகைய சூழலில் இது எப்படி தன்னை மாற்றிக்கொள்ளப் போகிறதென்று எனக்குத் தெரியவில்லை. இது முழுமையாக வளர்ந்தபிறகு யாரையேனும் காயப்படுத்தும். மிகவும் கவனமாக இரு.’’

‘‘இதனுடைய இயல்பான மூர்க்க சுபாவத்தை இதனிடமிருந்து நீக்குவது ஒருபோதும் என் நோக்கமாக இருந்ததில்லை’’ என்றான் ஜென். ‘‘அதனால் என்ன பிரயோஜனம்? நான் ஒரு ஓநாயோடு தொடர்பில் இருக்க விரும்புகிறேன். அதைத் தட்டிக் கொடுக்கவும், கட்டிக்கொள்ளவும், ஒவ்வொரு நாளும் அதோடு நெருக்கம் கொள்ளவும் விரும்புகிறேன். நம்மால் ஓநாய்களை, அவற்றின் குகைகளுக்குச் செல்லாமல் அறிந்துகொள்ள முடியாது. அதாவது, கடித்துவிடுமென்று பயந்துகொண்டிருக்க முடியாது. என்னுடைய ஒரே கவலை, இதை வளர்ப்பதற்கு மேய்ப்பர்கள் அனுமதிக்க மாட்டார்கள் என்பதுதான்.’’

குழியிலிருந்து வெளியே வர ஓநாய்க்குட்டி இன்னமும் முயற்சித்துக்கொண்டிருந்தது. ஜென் குனிந்து, அதனுடைய பின்னங் கழுத்தைப் பிடித்து அதனை மேலே தூக்கினான். சாங் அந்தக் குட்டியைத் தன் கைகளில் ஏந்திக்கொண்டு, அதை நெருக்கமாக அவதானித்தான். ‘‘நானும் லாம்ஜாவும் இரண்டு தடவை, பிரசவிக்கப் பட்ட ஓநாய்க்குட்டிகளைத் தேடிப்போய் வெறும் கையோடு திரும்பியிருக்கிறோம். மேய்ச்சல்நில ஓநாய்க்குட்டியை லட்சம் சீனர்களுக்கு ஒருவர் என்றுகூட எவரும் ஒருபோதும் தொட்டுப் பார்த்திருக்க மாட்டார்கள் என்பது நிச்சயம். நாம் அவற்றை வெறுக் கிறோம். அதாவது அவை கொண்டிருக்கும் திறன்கள் அனைத்தையும் நாம் வெறுக்கிறோம். ஓநாய்களிடமிருந்து கற்றுக் கொண்டிருக்கும் மக்கள், நாடோடிகள் மட்டுமே.’’

ஜென், தன்னுடைய சிந்தனையைத் தொடர்ந்து வெளிப்படுத்தினான். ‘‘உலக வரலாற்றில், ஐரோப்பியர்களுக்கு எதிரான சண்டையை மேற்கொண்ட கீழைமக்கள், நாடோடிகள் மட்டுமே. மேற்கின் அஸ்திவாரங்களை, ஹன் மக்கள், துருக்கியர்கள், மங்கோலியர்கள் என்ற மூன்று இனத்தவர்களே உண்மையில் ஆட்டம் காணச் செய்தவர்கள். பழைய ரோமாபுரியைக் கட்டி யமைத்தவர்கள், ஓநாயால் வளர்க்கப்பட்ட இரு சகோதரர்களே. இன்றும்கூட, அந்நகரத்தின் சின்னத்தில் ஓநாய் மற்றும் அதனுடைய இரண்டு ஓநாய்க் குழந்தைகளின் படிமங்கள் அமைந்திருக்கின்றன. ஓநாய்கள் மட்டும் இருந்திருக்காவிட்டால், உலக வரலாறு வேறு மாதிரியாக எழுதப்பட்டிருக்கும். ஓநாய்களைப் பற்றி ஏதும் தெரிந் திருக்காவிட்டால், நாடோடிகளின் ஆன்மாவையும் குணாம் சங்களையும் புரிந்துகொள்ள முடியாது; நாடோடிகளுக்கும் விவசாயிகளுக்குமிடையே உள்ள வேறுபாடுகளை நம்மால் பாராட்ட முடியாது.’’

‘‘கவலைப்படாதே. நீ ஏன் இந்த ஓநாயை வளர்க்க விரும்பு கிறாய் என்பது எனக்குப் புரிகிறது. உனக்காக நான் மேய்ப்பர்களிடம் பேசுகிறேன்’’ என்றான் சாங்.

ஜென் ஓநாய்க்குட்டியைத் தன் மேலங்கிக்குள் வைத்துக் கொண்டு, நாய்ப் பட்டியை நோக்கி நடந்தான். ஒரு ஓநாய் தன்னுடைய பாலைக் குடிப்பதைப் பார்த்த யிர், ஜென் சற்றும் எதிர்பார்த்திராத தருணத்தில் எழுந்துகொண்டு, அதைக் கடிப்பதற் காகத் திரும்பியது. ஆனால் ஓநாய்க்குட்டி காம்பை விடாமல் கவ்வியபடி, நாயின் வயிற்றோடு சேர்ந்து, ஒரு அட்டையைப் போல ஒட்டிக்கொண்டிருந்தது. யிர் சுற்றிச் சுற்றித் திரும்பி, தன்னோடு சேர்த்து ஓநாய்க்குட்டியை அசைத்தாட்டியது. ஆனாலும் அதனால் குட்டியைக் கடிக்க முடியவில்லை. ஜென்னுக்கும் சாங்குக்கும் அது வேடிக்கையாகத் தோன்றியது.

ஜென், யிர்ரைப் பிடித்துக் கீழே படுக்க வைத்து அதைச் செல்லமாகத் தட்டிக் கொடுத்து, ஓநாய்க்குட்டியைப் பால் குடிக்கச் செய்தான். குட்டியின் வயிறு நிறைந்ததும் ஜென் எழுந்து கொண்டான். ‘‘இந்தக் குட்டிகள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து விளையாடும்படி செய்ய வேண்டும்’’ என்றான்.

அவர்கள் நாய்க்குட்டிகளை எடுத்துக்கொண்டு காய்ந்த புல் இருந்த இடத்துக்குச் சென்றனர். அங்கு ஜென் நாய்க்குட்டி களுக்கிடையே

ஓநாய்க்குட்டியை இறக்கிவிட்டான். அதனுடைய பாதங்கள் தரையில் பட்ட உடனேயே, அதனால் எவ்வளவு வேகமாக ஓட முடியுமோ அவ்வளவு வேகமாக அவர்களிடமிருந்தும் நாய்க்குட்டிகளிடமிருந்தும் விலகி ஓடியது. அதனுடைய வயிறு தரையைத் தேய்த்தது. அப்போது அதைப் பார்க்க மயிர் நிறைந்த ஒரு ஆமையைப் போல இருந்தது. ஒரு ஆண் நாய்க்குட்டி அதோடு சேர்ந்து ஓட முயற்சித்தது. ஆனால் ஓநாய்க்குட்டி தன் கோரைப் பற்களைக் காட்டி உறுமியது.

ஜென் ஆச்சரியப்பட்டான். ‘‘அதுக்கு பசிக்கிறபோது பாலிருக்கும் ஒன்று தாயாகத் தெரிகிறது. ஆனால் வயிறு நிறைந்ததும் அப்படித் தோன்றுவதில்லை. அதனுடைய கண்கள் இன்னும் முழுமையாகத் திறக்கவில்லை என்றாலும் அதன் மூக்கு அருமையாக வேலை செய்கிறது. ஓநாயின் மிகச் சிறந்த ஆயுதம் அதுதான்.’’

‘‘இது அதன் உண்மையான வீடில்லை என்பதும், அந்தப் பெண் நாய் அதன் உண்மையான அம்மா இல்லை என்பதும், இந்த நாய்க்குட்டிகள் அதன் சகோதர, சகோதரிகள் இல்லை என்பதும் அதற்கு ஏற்கெனவே தெரிந்திருக்கிறது’’ என்றான் சாங்.

‘‘நாங்கள் முதன்முறையாக இதை அங்கு பார்த்தபோதே, செத்துவிட்டது போல எப்படி நடிப்பதென்று இதற்குத் தெரிந்திருந்தது’’ என்றான் ஜென்.

ஓநாய்க்குட்டிக்குப் பின்னால் நான்கைந்து எட்டுகள் தள்ளியே அவர்கள் இருந்தார்கள். அது என்ன செய்யப் போகிறதென்று பார்ப்பதற்காகப் பின்தொடர்ந்தார்கள். ஆங்காங்கே பனித்திட்டுகளும் காய்ந்த புல்லும் மூடியிருந்த தரையில் பல அடி தூரம் அது ஊர்ந்து சென்றது. பிறகு, நின்று அப்பகுதியை மோப்பம் பிடித்தது. குதிரை விட்டை, மாட்டுச் சாணம், ஆடு மாடுகளின் எலும்புகள் மற்றும் அங்கிருக்கக்கூடிய எல்லாவற்றின் வாசனையையும் அது முகர்ந்தது. அதனுடைய மூக்கு அதை வழி நடத்திச் சென்றது. பல நூறடி தூரம் அதைத் தொடர்ந்து சென்ற பிறகு, அது வெறுமனே நோக்கமின்றி அலையவில்லை என்பது அவர்களுக்குப் புரிந்தது. அதன் மனதில் தெளிவான நோக்க மிருந்தது: குடில்களிலிருந்தும், முகாமிலிருந்தும், பட்டிகளிலிருந்தும், மனிதர்கள், நாய்கள், புகை மற்றும் வளர்ப்பு மிருகங்களிடமிருந்தும் அது விலகி ஓடிக்கொண்டிருந்தது.

அந்த ஓநாய்க்குட்டி இயல்பாகவே பிடிவாதமான சுபாவம் கொண்டதென்பதை ஜென் உணர்ந்தான். மிகவும் அச்சுறுத்தக் கூடிய இயல்பையும், பிற விலங்குகளை விட சுயமதிப்பில் உயர்ந்திருக்கும் தன்மையையும் அது கொண்டிருந்தது. சிட்டுக் குருவிகள் மீது ஜென் எப்போதுமே உயர்ந்த அபிப்ராயம் கொண்டிருந்தான். அவற்றைப் பழக்கப்படுத்துவதென்பது கொஞ்சமும் சாத்தியமற்றது. அவன் சிறுவனாக இருந்தபோது சிட்டுக்குருவி களைப் பிடித்து செல்லப் பறவைகளாக வளர்க்க வீட்டுக்குக் கொண்டு வந்திருக்கிறான். ஆனால் அவை சிறைப்பட்டதும், உண்பதையும் குடிப்பதையும் நிறுத்திவிடும். புதிய சூழலுக்கேற்ப மாற மறுத்துவிடும். சுதந்திரத்தை இழந்த பின்பு, அவை ஒவ்வொரு முறையும் சாவையே தேர்வு செய்கின்றன. ஒருமுறைகூட, பிடித்துக் கொண்டு வந்த சிட்டுக்குருவியை உயிருடன் வைத்திருக்க அவனால் முடிந்ததில்லை. ஓநாய்கள் வித்தியாசமானவை என்பதை அவன் உணர்ந்தான். அவை தங்களுடைய சுதந்திரத்தைப் போற்றுவது போலவே, தங்கள் வாழ்வையும் போற்றுகின்றன. பிடிபட்ட ஒரு ஓநாய் எப்போதும் போல உண்கிறது; உறங்குகிறது. உண்ணாமைக்குப் பதிலாக வயிறு முட்டச் சாப்பிடுகிறது; எவ்வளவு முடியுமோ அவ்வளவு நேரம் தூங்கி சக்தியை சேகரம் செய்கிறது. ஓநாயின் மனோபாவத்தைத் தழுவிக்கொள்ளும் மக்கள் அதைத் தங்களுடைய குலச்சின்னமாக, தங்களுடைய மிருக வடிவிலான மூதாதையராக, யுத்தக் கடவுளாக, ஆழ்ந்த ஞானியாக ஆக்கிப் போற்றுகிறார்கள். இம்மக்கள் எப்போதுமே வெற்றியடைகிறார்கள்.

ஓநாய்க்குட்டியின் வலிமையான சிறிய உடலானது, அவனை ஒரு புதிர்ப் பிராந்தியத்தின் இதயத்துக்குள் எடுத்துச் செல்லக்கூடிய சக்தி பெற்றிருந்ததை நினைத்து அவன் சிலாகித்தான்.

கோம்பு குதிரையின் மீதேறிக்கொண்டு, தன்னுடன் வந்து புதிதாகப் பிறந்த ஆட்டுக்குட்டிகளை அவற்றின் அம்மாக்களுடன் இணை சேர்க்க உதவும்படி ஜென்னிடம் கேட்டுக்கொண்டார்.

இருவருமாகச் சேர்ந்து, ஒரு மணி நேரத்துக்குள் எல்லாக் குட்டிகளையும் அவற்றின் தாய்களோடு இணைத்தார்கள். குட்டிகளுக்குக் காலையிலும்

பிற்பகலிலும் தாய் ஆடுகள் பால் கொடுக்கும். தங்களுடைய தாய்களைக் கண்டுபிடிக்க முடியாத குட்டிகள் பட்டினியில் கிடக்க வேண்டியதுதான். குட்டிகளை அவற்றுக்குரிய தாய்களோடு சரியாகச் சேர்ப்பது எண்ணிக்கையை சரிபார்க்கவும் மேய்ப்பர்களுக்கு உதவும்.

கோம்பு, ஆட்டுக்கூட்டம் குறித்து திருப்தியடைந்தார். ''இங்கு ஓலோன்புலாக்கில் நல்ல புல்லும் தண்ணீரும் இருப்பதால் ஆடுகளிடம் நிறைய பால் சுரக்கிறது. அவற்றுக்குத் தன் குட்டிகளையும் தெரிந்திருக்கிறது. அதனால் நம் வேலை சுலபமாக முடிந்துவிட்டது. புல் மற்றும் தண்ணீர் மோசமானதாக இருந்தால் ஆடுகளிடம் பால் போதுமானதாக இருக்காது. அப்போது அவை தம்முடைய சொந்தக் குட்டிகளைக்கூட புறக்கணித்துவிடும்.

மேய்ச்சல் நிலத்தையும் ஓநாய்களையும் புரிந்துகொண்ட நல்ல தலைவர்களை நாம் பெற்றிருப்பது நம்முடைய அதிர்ஷ்டம். வளர்ப்பு விலங்குக் கூட்டங்கள் பற்றி அவர்கள் கவனம் செலுத் தாமல், புல் மற்றும் அவற்றின் மேய்ச்சலுக்கான புல்வெளிகளில் அவர்கள் தங்கள் கவனத்தை செலுத்துகிறார்கள். முக்கியமான வற்றில் மக்கள் அக்கறை செலுத்தும்போது, ஆடுகள் தாமாகவே மேய்ந்துகொள்கின்றன. ஓலோன்புலாக்கில் மேய்ப்பதென்பது கவலையில்லாத ஒரு வேலை. இன்னும் சில நாட்களில் நான் தனியாகவே ஆடுகளையும் அவற்றின் குட்டிகளையும் சேர்த்து விடுவேன்.''

கோம்பு, தற்பெருமை அடித்துக்கொள்வதில் ஒருபோதும் நாட்டம் கொண்டவரில்லை. அதேசமயம், அவருடைய புறங்கையைப் போல, மேய்ச்சல் நிலத்தை நன்கு அறிந்தவர் அவர்.

## 15

வெதுவெதுப்பான, ஈரப்பதமான இளவேனிற் பருவக் காற்று ஓலோன்புலாக்கைத் தழுவியிருந்தது; கீழ்வானில் வெண்மேகங்கள் படர்ந்திருந்தன. மேய்ச்சல் நிலம் தூக்கக் கலக்கத்திலிருந்து விடுபட்டு, வாழ்வுக்குள் திரும்பியது. ஒளியும் இருளும், மஞ்சளும் வெண்மையுமான காட்சிகள் மாறி மாறித் தோன்றின. சூரியனை மேகங்கள் மறைத்திருந்தபோது, குளிர்காற்று அவன் மேலாடையைத் துளைத்து ஊடுருவதைப் போல சாங் ஜியோன் உணர்ந்தான். ஆனால், மேகங்கள் கலைந்து நகர்ந்தபோது வெளிப்பட்ட சக்தி வாய்ந்த சூரியக் கதிர்கள் அவனை வெக்கையில் வாட்டியது. முகத் துவாரங்களிலிருந்தும் கைகளிலிருந்தும் வியர்வை வழிந்தது. சூரிய வெம்மையில் அவன் உடல் புழுங்கியது. தன்னுடைய சட்டையின் பித்தான்களைக் காற்று புகுவதற்காக அவன் கழற்றத் தொடங் கியதும், இன்னொரு மேகம் நகர்ந்து வந்து சூரியனை மூடி, குளிர்ந்த இளவேனிற் கால நாளுக்கு அவனை இட்டுச் சென்றது.

பனிக்கட்டி மிருதுவாகியது, பனி இளகியது; மஞ்சள் வண்ணப் பரந்த புல்வெளி வெளிப்பட்டது. கடைசிப் பனிபொழிவுக்கும் முன்னதாகத் தோன்றிய இளம் தளிர்கள், இளம் பச்சைத் திட்டுகளோடு மஞ்சளாக மாறியிருந்தன. ஓலோன்புலாக் காற்றில் நடனமாடுவது போல் தோன்றியது.

சாங்கும் பட்டுவும், வளர்ந்த வட்டப் புல்வெளிக்குள், ஒரு மணி நேரத்துக்கும் மேலாக ஓநாய்களுக்காகக் காத்திருந்தார்கள். குதிரைப் படுகொலையும், அதையடுத்து நாணல் பள்ளத்தாக்கில் நடந்த ‘பொய்த் தகவலும்’ மேய்ப்பர்களிடையே பட்டுவைத் தலை குனிய வைத்திருந்தன. அவனுக்குள் வளர்ந்த கோபம் ஓநாய்களின் பக்கம் திரும்பியது. சாங்கைப் பொறுத்தவரை, சுற்றி வளைப்பு வேட்டையின்போது அவனுக்கு வெற்றியேதும் கிடைத்திராததால், ஒரு ஓநாயைக் கொல்வதன் மூலமே அவன் தன் தகுதியை மீண்டும் நிலைநிறுத்த முடியும். அதனால், பல நாள் ஓய்வுக்குப் பிறகு, பெரிய ஏரிக்கு அருகிலுள்ள மலைப் பக்கமாகத் தங்களுடைய பாதி எந்திரத் துப்பாக்கிகளோடு அவர்கள் வந்திருந்தனர். எஞ்சி வாழும் ஓநாய்கள்,

ஏரியில் இன்னமும் மிச்சமாகக் கிடக்கும் குதிரை சடலங் களை அப்படியே விட்டுவிட ஒருபோதும் நினைக்காதென்பதில் பட்டு உறுதியாக இருந்தான்.

பனி உருகி தண்ணீர் மேலேறியிருந்தது. ஆனால் ஏரியின் ஓரங்களில் இன்னமும் இறைச்சிகள் கிடந்தன. அங்கு விரை விலேயே ஓநாய்கள் வருமென்ற நிச்சயத்தோடு பட்டு இருந்தான்.

மலைப் பக்கமாக அவர்கள் தங்களுடைய தொலைநோக்கிக் கருவிகள் வழியாகத் தேடினார்கள். மலையில் ஓடிய நீரூற்றுகள் ஒரு தருணத்தில் பிரகாசமாகவும் மறு தருணத்தில் இருட்டாகவும் தென்பட்டன. சந்தேகத்துக்குரிய ஒவ்வொரு இடத்தையும் அவர்கள் துருவினார்கள். பட்டு சட்டெனத் தலைகுனிந்து முணுமுணுத்தான். ''இடது பக்கமாகப் பார்.'' சாங் தன்னுடைய தொலைநோக்கியை மெதுவாக நகர்த்தினான். மலையின் பின்னாலிருந்து இரண்டு ஓநாய்கள் மெதுவாக வெளிப்பட்டன. முதலில் அவற்றின் தலைகளும் பின்னர் அவற்றின் கழுத்துகளும் மார்புகளும் வெளிப்பட்டதைப் பார்த்த சாங்கின் இதயம் படபடத்தது.

வேட்டைக்காரர்களின் கண்கள் தங்களுடைய இரையின்மீது நிலைகுத்தியிருந்தன. அவற்றின் பாதி உடல்கள் வெளிப்பட்டதும் ஓநாய்கள் நின்று, மிகுந்த எச்சரிக்கையோடு சுற்றுப்புறத்தை அலசின. வளர்ந்த வட்டப் புல்வெளியைக் கடப்பதற்குப் பதிலாக, அவை கீழே படுத்து பார்வையிலிருந்து மறைந்தன. இரண்டு மனிதர்களும் இரண்டு ஓநாய்களும் புல்லின் அடியில் படுத்துப் பதுங்கியிருந்தார்கள். சரியான சந்தர்ப்பத்துக்காகக் காத்திருந் தார்கள். ஓநாய்களுக்கு எவ்வித அவசரமும் இல்லை. இருள் கவியும்வரை அவற்றால் பொறுமையாகக் காத்திருக்க முடியும்.

வட்டப் புல்வெளி என்ற பெயரை பீஜிங் மாணவர்களே, இந்தப் பல்வகையான புல்வெளி நிலத்துக்குச் சூட்டியிருந்தார்கள். மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் பொதுவாகக் காணப்படும் இது, மிகவும் அழகானது. மற்ற புல்வெளிகளை விடவும் வித்தியாச மானது. அது வசீகரமானது மட்டுமல்ல; தொடர்ச்சியாக இல்லாமல் துண்டு துண்டாக வளரக்கூடிய ஒரு வினோத தாவரம். ஒரு வட்டமானி கொண்டு மிகக் கச்சிதமாக நடப்பட்டதைப்போல, அது உண்மையிலேயே வட்ட வடிவில் வளர்ந்திருக்கும். அதன் அளவு மட்டுமே வேறுபட்டிருக்கும். தங்களுடைய ஆடுகளுடனோ, குதிரைகளுடனோ வெளியில்

வரும் மேய்ப்பர்கள் அதன் அடிப்பகுதியில் படுத்து ஓய்வெடுப்பார்கள். இந்த வட்டப் புல்வெளியை சீன மாணவர்கள் பெரிதும் ரசித்தார்கள். அவர்களில் சிலர் இதை சோபா புல் என்றும் நாற்காலி புல் என்றும்கூட அழைத்தார்கள்.

அதனுடைய தனித்துவமான வடிவம் மற்றும் கட்டமைப்பு காரணமாக, மனிதர்களுக்கும் ஓநாய்களுக்கும் அது இயற்கையான மறைவிடமாக இருந்தது. ஓய்வெடுக்கவும், பதுங்கியிருந்து தாக்கவும் தோதான இடமாக அமைந்திருந்தது. மனிதர்களின் ஆளுகைக்குள் வருவதற்கு வெகு காலம் முன்பாகவே, மேய்ச்சல் நிலத்தை ஓநாய்கள் ஆண்டு வந்ததால், அவையே இதை முதலில் கண்டு பிடித்துப் பயன்படுத்தின. துண்டு துண்டான இந்தப் புல்லுக்குப் பின்னால் பதுங்கியிருந்து, கடந்து செல்லும் மான் கூட்டத்தையோ, ஆட்டு மந்தையையோ எதிர்பாராமல் தாக்குவதையே ஓநாய்கள் பெரும்பாலும் தேர்வு செய்யும். அந்த இடத்தின் மத்தியில் ஓநாய்க் கழிவுகள் கிடப்பதை சாங் பார்த்தான்; அவை இந்த இடத்தை எந்த அளவு நேசிக்கின்றன என்பதைப் புரிந்துகொண்டான். இவை டெஞ்ஞரினால் ஓநாய்களுக்கு அளிக்கப்பட்ட மறைவிடங்கள் என்று பில்ஜி சொல்வார்.

இப்போது மனிதர்களும் ஓநாய்களும் அங்கு நன்றாக மறைந்திருந்தார்கள். ஓநாய்களால் மனிதர்களைப் பார்க்க முடியாது. அவர்களுக்கும் ஓநாய்கள் தெளிவாகத் தெரியாது. பட்டுக்குத் தயக்கமாக இருந்தது. சாங்கிற்குக் கவலை மேலிட்டது. அவை வட்டப் புல்வெளிக்குள் முதலில் நுழைந்தபோது, அவர்களை ஒருவேளை பார்த்துவிட்டிருந்தால்? மங்கோலியப் போராளிகளுக்கு அவை கற்றுக் கொடுத்திருந்த ராணுவப் பாடங்களில் ஒன்று, மேய்ச்சல் நிலத்தில் எது வேண்டுமானாலும் நடக்கலாம் என்பது.

நிலைமையைக் கணக்கில் கொண்ட பட்டு, எந்தவொரு நடவடிக்கையையும் மேற்கொள்வதில்லை என முடிவெடுத்தான். அவர்கள் சத்தமில்லாமல் அப்படியே பின்வாங்கி, குதிரைகளை விட்டுவிட்டு வந்த இடத்துக்குச் சென்று, சங்கிலிகளை அவிழ்த்து, அவற்றையும் கூட்டிக்கொண்டு சரிவின் கீழாகச் சென்றனர். பின்னர், திரும்பி தென்மேற்குத் திசை நோக்கி நடந்து சென்றனர். ஓநாய்கள் பதுங்கியிருந்த இடத்திலிருந்து வெகு தூரம் வந்தபிறகு, அவர்கள் குதிரை மீதேறி வட்டமடித்து ஓநாய்கள் மறைந்திருந்த இடம் நோக்கிச்

சென்றனர். தரை ஈரப்பதமாக இருந்ததாலும், காற்றின் சலசலப்பொலியாலும் குதிரைகளிடமிருந்து எவ்வித சப்தமும் வெளிப்படவில்லை.

பட்டு மிகக் கவனமாக உரிய இடம் நோக்கிச் சென்றான். அடுத்த அரைமணி நேரத்தில், ஓநாய்களுக்கு அருகாமையில் வந்து சேர்ந்தார்கள். சரிவின் மேலாக, குதிரையை மெதுவாகப் பட்டு நடத்திச் சென்றான். உச்சியை அடைவதற்குச் சற்று முன்பாக நின்று, குதிரையின் முன்னங்கால்களைக் கட்டினான். சாங்கும் அவ்வாறே செய்தான். துப்பாக்கிகளைத் தயார் செய்துகொண்டு, இடுப்பளவுக்குக் குனிந்து, முன்னோக்கி நடந்தார்கள். அவர்கள் உச்சியை அடைந்ததும், ஓநாய்களின் வாலும் பின்பாகங்களும் வட்டப் புல்வெளியில் அவர்களுடைய கண்களில் படும்வரை, ஊர்ந்து சென்றார்கள். அவற்றின் முக்கிய பாகங்கள் _ தசைகள், மார்புகள், வயிறுகள் — புல்வெளியில் மறைந்திருந்தன. இப்போது அவர்கள் அவற்றிடமிருந்து நூறடி தூரத்தில் இருந்தார்கள்.

இரண்டில் மிகப் பக்கத்தில், இடதுபுறமாக இருக்கும் ஓநாயைக் குறி பார்க்கும்படி சாங்கைப் பார்த்து சைகை செய்தான் பட்டு. மற்றதை அவன் கவனித்துக்கொள்வான். காற்று பலமாக அடித்துக்கொண்டிருந்ததில் வட்டப் புல் வளைந்தாடியது. அதன் அடித்தண்டுகள் ஒன்றோடொன்று உரசின. அதன் காரணமாக ஓநாய்கள் நன்றாக மறைந்திருந்தன. சாங் ஒரு கண்ணை மூடிக் குறி பார்த்தான். ஆனால் அவன் கண்ணுக்கு ஓநாய் படவில்லை.

அவர்கள் காற்று ஓய்வதற்காகக் காத்திருந்தார்கள். பட்டு, தான் துப்பாக்கியால் சுடும் சத்தம் கேட்டதும் அவன் சுடத் தயாராக வேண்டுமென சாங்கிடம் சொன்னான். ஒருவேளை தன் குறி தவறினாலும், பட்டு சுலபமாக அடுத்து சுட்டுவிடுவானென சாங்குக்குத் தெரியும். பட்டு படையணியின் மிகச் சிறந்த துப்பாக்கி வீரனென்று எல்லோருக்கும் தெரியும். இருநூறு அடி தூரத்துக்குள் அவன் குறி ஒருபோதும் தப்பாது. ஐநூறு அல்லது நானூறடி தூரத்தில் ஒரு வேட்டைக்காரன் துப்பாக்கியுடன் இருந்தால் ஓநாய்கள் கவலையே படாதென்று வேட்டைக்காரர்கள் சொல் வார்கள். ஆனால் அந்த தூரம் முந்நூறு அல்லது அதற்கும் குறைவாக இருந்தால் அவை ஓட்டம் பிடித்துவிடும். பட்டு வினாலேயே இது ஏற்பட்டதென்று அவர்கள் சொல்வார்கள். இப்போது இந்தப் புல்வெளியில் இருநூறடிக்கும் குறைவான தூரமே அவர்களை ஓநாயிடமிருந்து

பிரித்திருந்தது. அதனால், சாங் அமைதியாக அவனுடைய இலக்கைக் குறி பார்த்திருந்தான்.

காற்று திடீரென சற்று தணிந்தபோது, தண்டுகள் நிமிர்ந்தன. ஓநாய்களின் உடல்கள் வெளிப்பட்ட அதே தருணத்தில், வலப்புற மிருந்த வட்டப்புல் திட்டொன்றிலிருந்து ஒரு ஒல்லியான ஓநாய் வெளிப்பட்டு, மறைந்திருந்த இரண்டு ஓநாய்களுக்கு முன்பாக, மலையடிவாரத்தை நோக்கி ஓடியது. அதைப் பார்த்ததும் இரண்டு ஓநாய்களும் பாம்பு கடித்ததைப் போலத் துள்ளியெழுந்து, தலையைத் தாழ்த்திக்கொண்டு மூன்றாவது ஓநாயைப் பின்தொடர்ந்து சரிவின் கீழாக ஓடின. அந்த ஒல்லி ஓநாய், மற்ற இரண்டு ஓநாய்களுக்கும் காவலாக இருந்திருக்க வேண்டும். அது இவர்களைப் பார்த்துவிட்டிருக்க வேண்டும். அந்த மூன்றுக்குள்ளும் பெரிதாகவும் ஒல்லியாகவுமிருந்த அந்தக் காவல் ஓநாய், அந்தக் கூட்டத்தின் சாதாரண ஓநாய்களில் ஒன்றல்ல; மாறாக, அதன் தலைவர்களில் ஒன்று. அந்த மூன்றுமே அந்தப் பகுதியின் மிக ஆழமான மலைப் பக்கமாக ஓடின.

பட்டு குதித்தெழுந்து, ‘‘குதிரைகளிடம் போகலாம்’’ என்று கத்தினான். அவர்கள் மலையின் பின்பக்கமாக ஓடினார்கள்.

குதிரைகளை அவிழ்த்து, அவற்றில் தாவி ஏறினார்கள். துரத்துதல் தொடங்கியது. ஆனால் அவர்கள் உச்சியை அடைந்து, கீழே பார்த்த போது, அந்தச் சரிவு அபாயகரமானதாகவும் செங்குத்தாகவும் இருந்தது. குதிரையின் கடிவாளத்தை இறுக்கிப் பிடித்தபடியிருந்த சாங்கிற்கு, தான் ஒரு பாதாளப் படுகுழியைப் பார்த்துக் கொண்டிருப்பதாகத் தோன்றியது.

எனினும், மரணத்துக்கு சவால் விடும் மங்கோலிய ஆன்ம பலத்தோடு தன்னைத் தொடரும்படி சாங்கிடம் கூறிவிட்டு, பட்டு மலைச் சரிவில் விரைந்தான்.

சாங்கின் மனதில் ஒரு எண்ணம் தோன்றியது. இத்தகைய தருணங்களில்தான் தீரமும் கோழைத்தனமும் தீர்மானமாகின்றன. அவன் தன்னுடைய பற்களை இறுகக் கடித்தபடி கடிவாளத்தைத் தளர்த்தி விட்டுக்கொண்டு மலைச் சரிவில் பாய்ந்து சென்றான்.

சாங்கின் குதிரை அதிவிரைவாக, மலைச் சரிவைக் கிழித்துக்கொண்டு பாய்ந்து சென்றது. மிகவும் செங்குத்தாக இருந்ததால், அவன் குதிரையின் பிட்டங்களைத் தொடுமளவுக்குப் பின்னால் வளைந்திருந்தபடி சேணத்தின் முனையைக் கெட்டியாகப் பிடித் திருந்தான். கால் வளையங்கள் குதிரையின் காதுகளைத் தொட்டுக் கொண்டிருந்தன. அவன் கிட்டத்தட்ட அதன்மீது படுத்திருந்தான்.

குதிரைக்கு மிக நெருக்கமாகத் தன் கால்களை வைத்துக் கொண்டிருக்க அவன் தொடர்ந்து போராடிக்கொண்டிருந்தான். எல்லாக் குதிரையோட்டிகளுமே தப்பிப்பதற்கு அறிந்திருந்த மார்க்கமிது. அந்தத் தருணத்தில் அவன் தைரியத்தை இழந்து விட்டால், அவனுடைய எல்லா ஆசைகளும் நேரடியாக டெஞ்ஞருக்குப் போய்விடும். பல நாட்களுக்குப் பிறகு, அந்தச் சரிவில் குறைந்தபட்சம் ஐந்தாறு மர்மோட் வளைகளும், எலிப் பொந்துகளும் இருப்பதாக அவன் கேள்விப்பட்டபோது அவனுக்கு வேர்த்துக் கொட்டியது. மர்மோட் வளையிலோ அல்லது முயல் வளையிலோ அல்லது எலிப் பொந்திலோ குதிரையின் கால் அந்த வேகத்தில் பட்டுவிட்டால் அது குதிரையையும் அதில் சவாரி செய்பவரையும் புரட்டிப் போட்டுவிடும். கடுமையான காயமோ, மரணமோ இந்த விபத்தில் நிச்சயம். அப்போது பட்டு அவனிடம், Òதைரியசாலிகளுக்கு டெஞ்ஞர் துணை நிற்கும்; அவனுடைய பாதையிலிருந்து அபாயங்களை அது அகற்றிவிடும்Ó என்றான்.

மலையடிவாரத்தை சாங் அடைந்தபோது, அவன் பட்டுவைக் கிட்டத்தட்ட முந்திவிட்டிருந்தான். பட்டு, ஆச்சரியத்துடன் அவனைப் பார்த்துப் புன்னகைத்தான். அந்தப் புன்னகை, சாங்கைப் பொருத்தவரை, ஒரு தங்கப் பதக்கத்தை விடவும் பெறுமதியான பிரகாசம்.

சாங் மற்றும் பட்டுவின் குதிரைகள், அவை ஓடிவந்த வேகத்தில், அவற்றுக்கும் ஓநாய்களுக்கும் இடையிலான தூரம் கணிசமாகக் குறைந்துவிட்டதை அறிந்து பரவசமடைந்து மேலும் உத்வேகம் பெற்றன. அந்த வேகத்தில் அவை ஒரு மானையும் விஞ்சி ஓடக்கூடியதாக இருந்தன.

ஓநாய்கள் அடுத்த மலை உச்சியை அடைந்தபோது, இடைவெளி முன்பை விடவும் குறுகிவிட்டிருந்தது. பட்டு அந்தப் பிராந்தியத்தையும், ஓநாய்கள் இருக்குமிடத்தையும் அவதானித்தான். ‘‘அவை பிரிந்து செல்லப் போகின்றன’’

என்றான். ‘‘சிறிய ஓநாயைப் பொருட்படுத்தாமல் அந்தப் பெரிய ஓநாய்கள் இரண்டில் கவனம் செலுத்துவோம். நான் எந்த ஒன்றைச் சுடுகிறேன் என்று கவனி. பின்னர், அவற்றுக்கு முன்னிருக்கும் பாறைகளைக் குறிவைத்து நீ சுடு. முதலில் வலது பக்கப் பாறையைக் குறி வை.’’

அவர்கள் தங்களுடைய துப்பாக்கிகளை உயர்த்தினார்கள். குதிரைகள் ஆடாமல் அசையாமல் நின்றிருந்ததால் அவர்களால் சுலபமாகக் குறி பார்க்க முடிந்தது. அதற்குள் தங்களுடைய எதிரிகளின் பலம் பற்றி ஓநாய்கள் அறிந்துகொண்டு விட்டதால், அடுத்த மலையை நோக்கி மிக வேகமாக ஓடின. ஓநாய்களாலும் சரி, குதிரைகளாலும் சரி இந்த வெறித்தனமான ஓட்டத்தை வெகு நேரம் மேற்கொள்ள முடியவில்லை. ஏதேனும் ஒரு ஓநாய் புதிய திசையில் விலகி ஓடுவதற்காகப் பட்டு காத்திருந்தான். மூன்றுமே வெவ்வேறு திசைகளில் பிரிந்து ஓடத் தொடங்கினால், வலது பக்கமாக ஓடுவதைக் குறி வைக்கும் முடிவில் பட்டு இருந்தான்.

தங்களைப் பின்தொடரும் வேட்டைக்காரர்களிடமிருந்து வெகு தொலைவு செல்ல முடியாததால், ஓநாய்கள் பிரிந்து செல்லத் தயாராகின. அதன் மூலம் ஒன்றாவது நிச்சயம் பிழைத்துக் கொள்ளும். இடைவெளி முந்நூறு அடிகளுக்கும் குறைந்தபோது, பெரிய ஓநாய்கள் இரண்டும் எதிரெதிர் திசைகளில் பிரிந்து ஓடின. வலது பக்கமாக ஓடியதைப் பட்டு குறி வைத்தான். குறி தவறியது. ஓநாய்க்கு முன்னால் இரண்டு முறை குறி வைத்து சாங் சுட்டான். ஒன்று தரைமீதும், மற்றொன்று பாறைமீதும் பாய்ந்தன. தீப்பொறிகளும் சில்லுக் கற்களும் பறந்தன. ஓநாய் பயந்துபோய் தடுமாறியது. அது மீண்டும் சுதாரித்து ஓடத் தொடங்குவதற்குள் பட்டு சுட்ட குண்டு அதன் மீது பாய்ந்தது. ஓநாய் தரையில் மோதிக் கீழே விழுந்தது. அதன் வலது பக்கமாகக் குண்டு பாய்ந்திருந்தது. சாங் சந்தோஷத்தில் கூச்சலிட்டான். ஆனால் பட்டு உற்சாக மடையவில்லை. ‘‘சரியில்லை; தோல் வீணாகிவிட்டது’’ என்றான் பட்டு.

மற்றொரு ஓநாயை அவர்கள் துரத்தத் தொடங்கினார்கள். ‘‘நாம் இதைத் துப்பாக்கியால் சுடக்கூடாது. நான் அதைக் கீழே வீழ்த்த வேறொரு உபாயம் வைத்திருக்கிறேன்’’ என்றான் பட்டு. தம்மீது சவாரி செய்பவர்கள் ஒரு ஓநாயை வீழ்த்திவிட்டதைப் பார்த்ததில் உத்வேகம் அடைந்த குதிரைகள்,

அதிஅற்புதமான வேகத்தில் மலைமீது ஓடின. ஆனால் சில டஜன் அடிகள் ஓடியதுமே அவை களைத்துப்போய் மூச்சு வாங்கின. அவற்றின் வேகம் கணிசமாகக் குறைந்தது. மாறாக, ஓநாய் மிகுந்த திறனை வெளிக்காடடியது. அது அதிவிரைவாக மேலேறியது. இடைப்பட்ட தூரம் கணிசமாகக் கூடியது. தப்பித்துவிட முடியுமென்ற தன்னம்பிக்கையும் அதற்கு மேலிட்டது. பட்டுவும் சாங்கும் தங்களுடைய குதிரைகளை சாட்டையால் அடித்தும், பக்கவாட்டில் கால்களால் தட்டியும் பார்த்தார்கள். ஆனால் ஓநாய் இப்போது வெகு சுலபமாகவும் அபாரமாகவும் ஓடியது. சாங் குனிந்து ஓநாயின் தடங்களைப் பார்த்தான். குதிரைகளின் எட்டுகளை விடவும் ஓநாயின் எட்டுகள் நீளமாக இருந்தன. அவன் திரும்ப மேலே பார்த்தபோது, ஓநாய் மலை உச்சியை எட்டிவிட்டிருந்தது. அது உச்சியைக் கடந்துவிட்டால், வேட்டைக்காரர்களால் அதை மறுபடியும் பார்க்க முடியாது.

திடீரென பட்டு சத்தமிடுவதை சாங் கேட்டான். ‘‘குதிரையிலிருந்து இறங்கு.’’ குதிரைகள் இரண்டுமே திடீரென நின்றதில் அவர்கள் இருவருமே தூக்கி எறியப்பட்டார்கள். பட்டு ஒரு நேர்த்தியான குட்டிக்கரணம் அடித்துத் தரை இறங்கினான். பின்னர் அவன் தரையோடு தேய்த்தபடி, மூச்சு விடாமல், மலையுச்சியின் ஓரிடத்தை நோக்கி, கவனமாக ஊர்ந்து சென்றான். சாங்கும் அவனுக்குப் பின்னால் துப்பாக்கியோடு ஊர்ந்து சென்றான்.

குதிரைகளின் குளம்படிச் சத்தங்கள் கேட்காததால், ஓநாய் தன்னுடைய ஓட்டத்தை எச்சரிக்கையோடு நிறுத்தியது. மேய்ச்சல் நில ஓநாய்களின் கழுத்துகள் மிகவும் குட்டையானவை என்பதால், திரும்பிப் பார்ப்பதற்கு அவை முழுமையாகப் பின்னால் திரும்ப வேண்டும். அந்த ஓநாய் திரும்பியபோது, மலையுச்சியில் அது நின்றிருந்த தோற்றத்தின் வரிவடிவம், அது ஓடிக்கொண்டிருந்த போது இருந்த அளவை விடவும் மும்மடங்கு பெரிதாகத் தெரிந்தது.

சுடும் எல்லைக்குள் இலக்கு இருப்பது போலிருந்தது. பட்டு குதிரையின் ஓட்டத்தை சட்டென்று நிறுத்தியதன் மூலம், ஓநாயிடம் சந்தேகம் ஏற்பட வழி செய்திருந்தான். அது நின்று திரும்பி, என்ன நடக்கிறதென்று அவதானித்தது அவனுக்குத் தோதாகிவிட்டது.

பட்டுவின் துப்பாக்கி வெடித்தது. ஓநாய் முன்னால் விழுந்தது. மலையுச்சிக்கு மேலாகத் தெரிந்த அதன் வரிவடிவம் மறைந்தது.

‘‘அது மிகவும் தொலைவில் இருந்தது. நான் முக்கியமான இடத்தில் சுடவில்லை. ஆனாலும் அதனால் இப்போது எங்கேயும் போக முடியாது. வா, போகலாம்’’ என்றான் பட்டு.

அவர்கள் மீண்டும் குதிரைகளின் மீதேறி, மலை முகட்டை நோக்கிச் சென்றார்கள். அங்கு புல்லிலும் பாறைகளிலும் ரத்தம் சிந்திக் கிடப்பதைப் பார்த்தார்கள். ஓநாயைக் காணோம். சுற்றிலும் நோட்டம் விட்டார்கள். தென்படவில்லை. ரத்தத் தடயத்தைப் பின்பற்றிச் செல்வதைத் தவிர வேறு வழியில்லை.

சாங் பெருமூச்சு விட்டபடி, ‘‘நாம் நாய்களைக் கூட்டிக் கொண்டு வராமல் போனது தப்பு’’ என்றான்.

அவர்கள் கொஞ்ச தூரம் எதுவும் பேசிக்கொள்ளாமல், மெதுவாக சவாரி செய்தார்கள். பிறகு பட்டு சொன்னான், ‘‘அதன் முன்னங்கால்களில் ஒன்றை என் குண்டு முறித்துவிட்டிருக்கிறது. மூன்று பாதத் தடங்கள் மட்டும் எப்படி இருக்கிறதென்று பார். இது தப்பிவிடாது.’’

‘‘மூன்று கால் ஓநாய், நான்கு கால் குதிரையைத் தாண்டி ஓடிவிடாது இல்லையா?’’ என்றான் சாங்.

பட்டு தன் கைக்கடிகாரத்தைப் பார்த்தான். ‘‘அவ்வளவு நிச்சயமாகச் சொல்ல முடியாது. இது ஒரு கூட்டத்தின் தலைவன். ஒரு ஆழமான குகையை அது அடைந்துவிட்டால் என்ன செய்வது? அதன்பிறகு, அதை நம்மால் பிடிக்க முடியாது. நாம் வேகமாகப் போகலாம்.’’

அது அங்குமிங்குமாக விட்டுச் சென்றிருந்த ரத்தத் தடத்தைப் பின்தொடர்ந்து, அடுத்த ஒரு மணி நேரத்துக்கும் மேலாக அவர்கள் சவாரி செய்தார்கள். பின்னர், புல் அடர்ந்த ஒரு சிறு குன்றின் தரையில் ஓநாயின் முன்னங்கால் கிடப்பதைப் பார்த்து ஆச்சரிய மடைந்தார்கள். அதன் மேற்தோலிலும், தசை நார்களிலும், எலும்பிலும் பற்களின் தடங்கள் காணப்பட்டன.

‘‘ஒடிந்த காலை இழுத்துக்கொண்டு செல்வதால், அதனுடைய வேகம் தடைப்படுவதை உணர்ந்த ஓநாய், அதைப் பற்களால் மென்று கடித்து

அகற்றிவிட்டது'' என்றான் பட்டு.

''விஷம் தோய்ந்த அம்பு கையைத் தாக்கிவிட்டால், அந்தக் கையை ஒரு போர்வீரன் வெட்டி எறிந்துவிடுவான் என்று பலர் சொல்லக் கேள்விப்பட்டிருக்கிறேன். நான் பார்த்ததில்லை. ஆனால் ஒரு ஓநாய் தன்னுடைய காலைக் கடித்து அகற்றிவிடுவதை மூன்றாவது தடவையாக இப்போது பார்க்கிறேன்'' என்றான் சாங்.

''மக்கள் ஒவ்வொருவரும் ஒவ்வொரு மாதிரி. ஆனால் ஓநாய்கள் எல்லாமே ஒரே மாதிரி'' என்றான் பட்டு.

அவர்கள் தொடர்ந்து சென்றார்கள். அது விட்டுச் சென்ற ரத்தம் குறைந்திருந்தது. அதன் கால் எட்டுகள் நீண்டிருந்தன. அது எல்லைப் பகுதிக்கு ஒரு குறுக்கு வழியில் சென்று கொண்டிருக் கிறதோ என்று பட்டுவுக்குத் தோன்றியது. ''அது நிச்சயம் ஒரு சிறந்த தலைவன். அது போக நினைக்கும் இடத்துக்கு நாம் போய்க்கொண்டிருக்கக் கூடாது.''

அவர்கள் மேற்குத் திசையில் வெகு தூரம் செல்லச் செல்ல, புல் ஓங்கி உயர்ந்து வளர்ந்திருந்தது. ஓநாயைக் கண்டுபிடிப்பது சிரமமாகத் தோன்றியது. சொர்க்கமும் மனிதனும் சுலபமாக இணைவதில்லை; ஆனால் ஓநாயும் மேய்ச்சல் நிலமும், தண்ணீரும் பாலும் போலக் கலந்துவிடும். மேய்ச்சல் நிலத்துக்கும் ஓநாய்க்கும் இடையிலான நெருங்கிய உறவை சாங் மீண்டுமொரு முறை தெளிவாக உணர்ந்தான். வாழ்வா சாவா என்ற நிலையில், தப்பிப் பதற்கான ஒரு வழியை மேய்ச்சல் நிலம் ஓநாய்களுக்கு அளிக்கிறது. அவை ஒரு ஆபத்தில் சிக்கிக்கொண்டிருக்கும்போது, மேய்ச்சல் நிலம் அவற்றுக்கு சிறகுகள் தந்து ஒரு பறவையைப் போலப் பறந்து செல்ல வைக்கிறது. மேய்ச்சல் நிலம் தன்னுடைய சிறகுக்குள் அவற்றைப் பொத்தி வைத்துக்கொண்டிருக்கிறது. மிகவும் பரந்துபட்ட மங்கோலிய மேய்ச்சல் நிலம், ஓநாய்களுக்கு உறுதுணை யாகவும் பாதுகாப்பாகவும் இருக்கிறது. ஒரு மூத்த தம்பதியரைப் போல பரஸ்பரம் அவற்றின் வாழ்வுக்கு ஒத்தாசையாக அவை இருக்கின்றன. மேய்ச்சல் நிலத்துக்கு நேர்மையாகவும் நம்பிக்கையோடும் தங்களை ஒப்புக்கொடுத்திருக்கிற மங்கோலியர்கள்கூட, ஓநாய்கள் அடைந்திருக்கும் இந்தப் பேறு பெற்ற நிலையை நெருங்க முடியாது.

குதிரைகள் இடையிடையே நின்று தங்களுடைய சக்தியைத் திரும்பப் பெற்றுக்கொண்டு மீண்டும் வேகமெடுத்துச் சென்றன.

மேற்குத் திசையிலான மலைப் பிராந்தியத்தின் முடிவினை அவர்கள் நெருங்கிக் ம்கொண்டிருந்தார்கள். அந்த இடத்தோடு மேய்ச்சல் நிலம் முடிகிறது. ஓலோன்புலாக்கில் ஓநாய்களின் கடைசித் தளமாக அமைந்திருப்பது, தரிசாகவும் ஆழ்ந்த பள்ளத்தாக்குகளோடும் காணப்படும் இந்த மலைகளே என்று மேய்ப்பர்கள் கருதுகிறார்கள். அங்கு அவற்றுக்குப் பகைவர்களே இல்லை. ஒருவேளை இந்த முடமான ஓநாய் அந்தப் புகலிடத்தை அடைந்துவிட்டாலும், அதனால் எப்படி வாழ முடியும் என சாங் நினைத்தான். எப்படிப் பார்த்தாலும் இறுதியில், ஒரு ஓநாயைக் கொல்வதற்கான திறன்தான் மனிதனிடம் இருக்கிறது; அதன் ஆன்மாவை அல்ல.

கடைசியாக, குதிரைகள் பொது நெடுஞ்சாலையில் அடியெடுத்து வைத்தன. அது பொதுவாக, மண் சாலையாக இராணுவ ரோந்து வண்டிகள் செல்வதற்காகப் பயன்படுத்தப் படுவது. இராணுவ வண்டிகள் மற்றும் போக்குவரத்து வாகனங் களின் சக்கரங்கள் அச்சாலையின் ஒரு முனையிலிருந்து மறுமுனை வரை மூன்றடி ஆழத்துக்கு அகலமான பள்ளத்தை ஏற்படுத்தி யிருந்தன. மேய்ச்சல் நிலத்தின் மெல்லிய புல்வெளியின் அடியில் அமைந்திருக்கும் அந்த நிலத்தின் உண்மைத் தன்மையை இந்தச் சாலை தெளிவாக வெளிப்படுத்தியிருந்தது. குதிரைகளின் குளம்பு களிலிருந்து புழுதி கிளம்பி, சவாரி செய்தவர்களின் முகங்களில் பறந்தது. அவர்களுக்கு மூச்சு திணறியது. கண்கள் எரிந்தன.

இரண்டு வேட்டைக்காரர்களும் கிழக்கில் சென்றனர். பின்தொடர ஓநாய்த் தடமேதும் அங்கில்லை. ஆனால் அவர்கள் சாலையில் ஒரு சிறு மேட்டைக் கடந்தபோது, முப்பது அடிகளுக்கு முன்னால், எங்கிருந்தென்று தெரியாமல் ஒரு ஓநாய் தோன்றியது. அது சாலையின் நடுவில் இருந்த, சக்கரத் தடத்தினால் ஏற்பட்டிருந்த, ஒரு சிறு மேட்டை மேலேறிக் கடக்க திணறிக்கொண்டிருந்தது. ஒரு ஆரோக்கியமான மிருகம் இதை வெகு சுலபமாகச் செய்துவிடும். ஆனால் இந்த ஓநாய்க்கு அது பெரும் தடையாக இருந்தது. துண்டாக்கப்பட்ட காலின் அடிப்பகுதி தரையில் மோதி, அது பின்னால் விழுந்து கடும் வேதனையில் அவதிப்பட்டது.

பட்டு, குதிரையிலிருந்து இறங்கியவாறே, ‘‘கீழே இறங்கு’’ என்றான். சாங் இறங்கிவிட்டு, பட்டு என்ன செய்யப் போகிறானென்று பதற்றத்துடன் பார்த்துக்கொண்டிருந்தான். பட்டு, தன்னுடைய தடியை எடுக்கவோ, ஓநாயை நெருங்கவோ செய்யாமல், குதிரையை அருகிலிருந்த புல் பகுதிக்கு மேய அனுப்பி னான். அதன்பிறகு, சாலையின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு, சிகரெட் பாக்கெட்டை வெளியில் எடுத்து, ஒன்றைப் பற்ற வைத்து அமைதியாகப் புகை பிடித்தான். புகையின் நடுவே அவன் கண்களில் வெளிப்பட்ட ஏதேதோ உணர்ச்சிகளை சாங் கவனித்தான். சாங்கும் தன்னுடைய குதிரையை மேய அனுப்பிவிட்டு, பட்டுவின் அருகில் உட்கார்ந்துகொண்டு, ஒரு சிகரெட்டைப் பற்ற வைத்து ஊதினான்.

ஓநாயால் எழுந்து நிற்க முடியவில்லை. ஒரு பக்கமாகச் சரிந்து உட்கார்ந்தது. அது ஒரு நிமிடம்கூடத் தன்மானத்தை இழக்காமல், தன் எதிரிகளை வெறித்துப் பார்த்தது. அது தன் உடலில் ஒட்டியிருந்த மண்ணையும் புல்லையும்ட மூர்க்கமாக உதறியது. ஆனால், இழந்துபோன காலின் அடிப்பாகத்தை நடுங்காமல் வைத்துக்கொண்டு நிற்க, அது மேற்கொண்ட எல்லா முயற்சிகளும் தோற்றுப்போயின. அதன் கண்களிலிருந்து நியாயத்தின் சீற்றம் வெளிப்பட்டது; அது ஆழ்ந்து மூச்சு விட்டது. ஓநாயின் கண்களைப் பார்க்கும் தைரியத்தை இழந்திருந்தான் சாங். அந்தத் தொன்மையான மேய்ச்சல்நில தார்மீகங்களின் அடிப்படையில், அது மனிதர்களிடமிருந்து நீதியையும் நேர்மையையும் வலியுறுத்துவதாகத் தோன்றியது.

பட்டு தன்னுடைய விரல்களில் சிகரெட்டைப் பற்றியபடி, போராடிக்கொண்டிருக்கும் ஓநாயை யோசனையோடு உற்றுப் பார்த்தான். அவன் தன்னுடைய செயலுக்காக வருந்தத் தொடங்கினான். சங்கட உணர்ச்சி அவனை வாட்டியது. வெகு நேரமாகத் தன்னுடைய எதிரிகள் கொஞ்சமும் நகராமல் இருப்பதைப் பார்த்துவிட்டு, ஓநாய் திரும்பி, அதனுடைய எஞ்சி யிருந்த பாதத்தால் அந்தச் சிறு மணல்மேட்டைத் தோண்டியது. அதைத் தொடர்ந்து அதில் ஒரு இடைவெளி ஏற்பட்டது. இப்போது ஊனமுற்ற ஓநாயால் அதைத் தாண்டிப் புல்வெளிக்குள் செல்ல முடிந்தது. பிறகு, அது தன் மூன்று கால்களால் குதித்தபடி, தூரத்திலிருந்த எல்லைப் பகுதியின் திசையை நோக்கிச் சென்றது.

பட்டு நின்றபடி பார்த்துக்கொண்டிருந்தான். ஓநாய், அவ்வப்போது நின்று ஓய்வெடுத்துக்கொண்டு ஓடியது. ஒரு வழியாக, உயர்ந்து வளர்ந்திருந்த புல்வெளிக்குள் சென்று மறைந்தது.

பிறகு பட்டு குனிந்து, சாங் தரையில் போட்டிருந்த சிகரெட் துண்டை எடுத்து அதன்மீது துப்பினான். ஈரமான புல்தரையில், தன் நகங்களால் சிறு குழி தோண்டி அதற்குள் இரண்டு சிகரெட் துண்டுகளையும் போட்டு மூடினான். ‘‘இவ்வாறு செய்யப் பழகிக்கொள்’’ என்றான் பட்டு. ‘‘அஜாக்கிரதையாக இருப்பதை மேய்ச்சல் நிலம் பொறுத்துக்கொள்ளாது.’’

அவன் எழுந்து நின்றான். ‘‘நாம் கொன்றுவிட்டு வந்திருந்த ஓநாயிடம் திரும்பிப் போகலாம்’’ என்றான்.

அவர்கள் தங்களுடைய குதிரைகளின் மீதேறி, வட்டப்புல் கொண்ட மலைப்பக்கமாகப் பயணம் செய்தார்கள். தரை மீதிருந்த பனி சுத்தமாக இருந்தது. குதிரைகளின் குளம்புகள் மெதுவாகப் பதிந்தன. அவர்கள் பேசிக்கொள்ளவில்லை.

## 16

பிரசவ முகாமிற்கு அருகிலிருந்த மலைப்பக்கமிருந்து மிக மோசமான நெடி வெளிவந்து கொண்டிருந்தது. இளவேனிற் கால மழைக்குப் பிறகு அடித்த சூரிய வெயில் வெது வெதுப்பைத் தந்து கொண்டிருந்தது. நீண்ட பனிக்காலத்தில் கைவிடப்பட்டு உறைபனியில் இறந்துபோன நோயுற்ற ஆடுகளிடமிருந்தும், ஓநாய்களால் கொல்லப்பட்ட வளர்ப்பு மிருகங்களிடமிருந்தும் துர்நாற்றமடித்துக்கொண்டிருந்தது. இலையுதிர் காலத்தில் கெட்டுப் போன தாவரங்களிலிருந்து மஞ்சள் மற்றும் கருப்பு அழுகல் நீர் வெளியேறிக்கொண்டிருந்தது. மிருகத்தின் சாணம் திரவமாகி மேய்ச்சல் நிலத்தின் நிறத்தை மாற்றிவிட்டிருந்தது.

முன்இளவேனிற் கால நாளொன்றின் துர்நாற்றமானது, ஜென் சென்னின் உத்வேகத்தையும் ஆர்வத்தையும் சிதைத்துவிடவில்லை. மேய்ச்சல் நிலத்தில் அழுகல் நீர் அவசியமானது. ‘‘புலனாய்வுக் குழுவினருக்கும் நகரத்துக் கவிஞர்களுக்கும் மேய்ச்சல் நில இளவேனிற் காலப் பூக்களின் நறுமணம் பிடிக்கும். ஆனால் இளவேனிற் காலத் துர்நாற்றமே எனக்குப் பிடிக்கும்’’ என்பார் உல்ஜீ. ‘‘ஒரு ஆடு ஒரு வருடத்தில் வெளியேற்றும் புழுக்கை மற்றும் சிறுநீரின் அளவு எவ்வளவு புல்லுக்கு உணவாகிறது தெரியுமா? மாட்டுச் சாணம் குளிர்ச்சியானது. குதிரைச் சாணம் சூடானது. ஆனால் ஆட்டுப் புழுக்கை, இரண்டாண்டு மனித உழைப்புக்குச் சமமானது. வளர்ப்பு மிருகங்களின் எண்ணிக்கையைக் கட்டுப்பாட்டில் வைத்திருப்பதன் மூலம் மேய்ச்சல் நிலம் வெறுமையாகிவிடாது; மாறாக, அவை அதை வளமாக்கும்.’’

இளவேனிற் காலத்தில் ஓலோன்புலாக் தண்ணீரில் சத்துகள் நிறைந்திருக்கும். மக்களின் கண்ணெதிரில் புல் வளரும். சூரிய வெளிச்சமிக்க இரண்டு வாரங்களுக்குப் பிறகு, கடந்த ஆண்டில் பட்டுப்போன புல்லை முற்றிலுமாக மூடிப் புதிய பச்சைப்புல் வளர்ந்திருக்கும். மலைப்பக்க மேய்ச்சல் பகுதிகள் பச்சைப் பசேலென்றிருக்கும். தாவரங்களும் பூக்களும் வளமான நிலத்தில் செழித்திருக்கும்.

முதியவர் பில்ஜியின் பெரிய மஞ்சள் நிறக் குதிரையில் ஜென், மேய்ச்சல் நிலத்தை சந்தோஷமாகச் சுற்றி வந்தான். பச்சைப் பசேலென்று மறுபிறவி

எடுத்திருந்த நிலத்தைக் கண்டு களித்தான். அவனைப் பொறுத்தவரை, மனிதர்களும் ஓநாய்களும் குரூரமாய் சண்டைகளிடுவதற்கான களமாக இருந்த பரந்துபட்ட மேய்ச்சல் நிலம், இப்போது அன்னை பூமியின் அருள் பெற்ற அற்புதமாக மாறியிருந்தது.

ஓலோன்புலாக்கில் இந்த ஆண்டு அருமையானதாக அமையப் போகிறது. இளவேனிற் காலக் கடும்குளிர் பல ஆடுகளைக் கொன்றுவிட்ட போதிலும், இனப்பெருக்க விகிதம், அதிக அளவில் இரட்டைப் பிரசவங்கள் ஏற்பட்டதால், பெரிய அளவில் அதிகரித்திருந்தது. எனினும், மேய்ப்பர்களிடம் முன்னெச்சரிக்கை உணர்வு மிகுந்திருந்தது. ஆடுகளின் தொகை மிகுந்த அளவில் அதிகரித் திருந்ததால் கூடுதலாக மேயப்படுவதற்கான அபாயத்தில் ஓலோன்புலாக் இருந்தது. புதிதாகப் பிறந்த ஆட்டுக்குட்டிகளைப் பெருமளவில் மேய்ப்பர்கள் விற்றுவிட்டால், பின்னர் உற்பத்தியில் அவர்களுடைய பங்கை நிறைவேற்ற முடியாமல் போய்விடும். அதனால் உற்பத்திக் குழுமத்தினர் பலமுறை கூடிப் பேசினார்கள். ஒரே ஒரு தீர்வுதான் உல்ஜீக்குப் பட்டது. அதாவது, மேய்ச்சலுக்கு இன்னொரு புதிய நிலப்பகுதியை உருவாக்குவது.

தேர்ந்தெடுக்கப்பட்ட இடத்தைப் பார்வையிடுவதற்காகச் சென்ற உல்ஜீ மற்றும் பில்ஜியோடு ஜென்னும் சேர்ந்துகொண்டான். அற்புதமான ஆற்றல் கொண்ட, துரிதமாகச் செல்லக்கூடிய நல்ல குதிரையை இந்தப் பயணத்துக்கென ஜென்னுக்குக் கொடுத் திருந்தார் பில்ஜி. உல்ஜீ, பாதித் தானியங்கித் துப்பாக்கியொன்றை எடுத்துக்கொண்டிருந்தார். பில்ஜி தன்னோடு பாரைக் கூட்டிக்கொண்டார். ஜென், எர்லாங்கைக் கூட்டிக்கொண்டு வந்தான். குடிலின் காரியங்களைக் கவனிப்பதற்காக எல்லோவை விட்டுவிட்டு வந்திருந்தான். வேட்டையில் மிகுந்த ஆர்வம் கொண்ட இரு நாய்களும், போகும் வழியில் துரத்திச் செல்ல ஏதும் அகப்படுகிறதா என்று பார்த்தபடி வந்தன. அவையும், ஜென்னைப் போலவே மிகுந்த எழுச்சியோடு காணப்பட்டன.

‘‘உங்களோடு என்னையும் கூட்டிக்கொண்டு வந்ததற்கு நன்றி, அப்பா. எனக்கும் ஒரு மாற்றம் தேவைப்பட்டது.’’

‘‘அந்த எல்லாப் புத்தகங்களையும் படித்து உன் கண்ணைக் கெடுத்துக்கொண்டு விடுவாயோ என்ற கவலை எனக்கிருந்தது’’ என்று பதிலளித்தார் முதியவர்.

மேய்ச்சல் குழுமப் பிராந்தியத்தின் வடகிழக்கு மூலையில் நாற்பது சதுர மைல் தரிசு நிலம், குன்றுகள் நிறைந்து இருந்தது. உல்ஜீயின் கருத்துப்படி, அங்கு இதுவரை எவருமே வசித்ததில்லை. அதனால் அது மிகவும் வளமானதாக இருப்பதோடு பல ஓடை களையும், வெவ்வேறு அளவிலான பல ஏரிகளையும் கொண்டிருக்கிறது. அங்கு புல் மூன்றடி அல்லது அதற்கும் மேலான உயரத்தில் வளரும். தண்ணீர் மிகுந்திருப்பதாலும், புல் அடர்த்தியாகக் காணப் படுவதாலும் அங்கு கொசுக்கள் அமோகம். வெயில் காலத்திலும் இலையுதிர் காலத்திலும் அவை ஒன்றுகூடி ஒரு பசுவையே கொன்றுவிடும். தரையின் கனத்த அடிப்பகுதியில் ஒருவர் கால் வைக்கும்போது, கொசுக்கூட்டம் மேலே கிளம்பும்; நிலக் கண்ணிவெடியில் கால் வைத்தது போலிருக்கும். மக்களும் அவர்களுடைய கால்நடைகளும் அந்த இடத்தைப் பார்த்துப் பயந்து அங்கு போக மறுத்துவிட்டார்கள். தரைப் பகுதி, கிட்டத்தட்ட ஓரடி உயரத்துக்குக் கனமாக இருப்பதால் புல் சூரிய வெளிச்சம் பெறுவதற்காக உயர்ந்து வளர்கிறது. கால்நடைகள் அதை விரும்பு வதில்லை. அவை ஊட்டம் பெற அது அவ்வளவு சிறந்ததில்லை.

கால்நடை மேய்ச்சலுக்கான புல்வெளித் தலைவரான உல்ஜீ, இப்போதைய கொள்கை தரத்துக்குப் பதிலாக எண்ணிக்கையை வலியுறுத்துவதால், வெகு விரைவில் ஓலோன்புலாக் ¢அளவுக் கதிகமாக மேயப்பட்டு விடுமென எதிர்பார்த்திருந்தார். பல ஆண்டு களாகவே இந்தக் கன்னி நிலத்தின்மீது அவர் கண் வைத்திருந்தார். இலையுதிர் காலக் காட்டுத் தீ, தரையை மூடியிருக்கும் அடிப் பகுதியை எரித்துவிடுவதை எதிர்பார்த்திருந்தார். எனினும், இதை இளவேனிற்கால மேய்ச்சலுக்கான புல்வெளியாக அவர்களால் மாற்றிவிட முடியுமென அவர் நம்பினார். அப்படிச் செய்துவிட்டால், உற்பத்திக் குழுமம் கால்நடைகளை இரண்டு மடங்காக விருத்தி செய்துகொள்ள முடிவதோடு அதன் எந்தப் புல்நிலமும் அதிகமாக மேயப்பட்டுவிடும் அபாயமும் இருக்காது.

அவர்கள் அண்டைக் குழுமத்தின் பனிக்கால மேய்ச்சல் பகுதியைக் கடந்தபோது, அதன் புல் இப்போதும்கூட தண்டியாக இருந்ததோடு, நான்கு விரல் கட்டை உயரமும் கொண்டிருந்ததை ஜென் கவனித்தான். ‘‘மேய்ச்சலுக்குப் போதுமான நிலம் இல்லையென்று நீங்கள் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருக்கிறீர்கள். ஆனால் இங்கே பாருங்கள், பனிக்காலம்

முழுவதும் ஆடுகளும் குதிரைகளும் மேய்ந்த பின்னும், இன்னமும் இவ்வளவு மிச்சமிருக்கிறது'' என்று உல்ஜீயிடம் சொன்னான் ஜென்.

உல்ஜீ கீழே பார்த்தார். ''அவை அடிப்புல்'' என்றார் அவர். ''அது மிகவும் கடினமானது; அதைக் கடிப்பது சிரமமென்பதால் தான் அவை விட்டுவிட்டன. மேலும், மோசமான அடித்தண்டினால் அவற்றுக்கு சக்தி கிடைக்காது. புல் இந்த நிலையை அடையும்போது, மேற்கொண்டு அதை மேயக்கூடாது. இல்லையென்றால், மேய்ச்சல் நிலம் சீர்கெட்டுப் போய்விடும். சீனர்களாகிய நீங்கள் மிக அதிகமாக இருப்பதால், உங்களுக்குத் தேவையான இறைச்சி உங்களிடமில்லை. அதனால் ஆடு மற்றும் மாட்டிறைச்சிக்கு உங்கள் நாடு மங்கோலியாவை நம்பியிருக்கிறது. ஆனால் ஒரு டன் மாட்டிறைச்சி மற்றும் ஆட்டிறைச்சியை உற்பத்தி செய்ய எழுபது அல்லது எண்பது டன் புல் தேவைப்படுகிறது. உங்களுடைய மக்கள் எங்களிடம் இறைச்சியைக் கேட்கும்போது உண்மையில் நீங்கள் எங்களுடைய புல்லைத்தான் கேட்கிறீர்கள். அதற்காக வாவது நீங்கள் எங்களுடைய மேய்ச்சல் நிலத்தைக் கொன்று விடாமலிருக்க வேண்டும்.''

''கால்நடைகளை வளர்ப்பதென்பது, தாவரங்களைப் பயிர் செய்வதைக் காட்டிலும் மிகவும் கடினமான காரியமாகத் தெரிகிறது'' என்றான் ஜென் சென்.

அதை ஏற்றுக்கொள்ளும் வகையில் தலையாட்டினார் பில்ஜி. ''மேய்ச்சல் நிலமென்பது ஒரு பெரிய உயிர். ஆனால் அது மனிதர் களுடைய கண்ணிமைகளை விட மெல்லியது. அதனுடைய புல் தளத்தை நீங்கள் தகர்த்துவிட்டால், அதாவது அதைக் குருடாக்கி விட்டால், அதன்பிறகு பனிப் புயல்களை விடவும் மிகவும் ஆபத்தான புழுதிப் புயல்களை எதிர்கொள்ள நேரிடும். மேய்ச்சல் நிலம் மடிந்துவிட்டால், ஆடுகள், மாடுகள், குதிரைகள், அதே போன்று மனிதர்கள், ஓநாய்கள் போன்ற எல்லாச் சிறிய உயிர் களுக்கும் அதே கதிதான். அதன்பிறகு, பெருஞ்சுவரை மட்டுமல்ல பீஜிங்கைக்கூடக் காப்பாற்ற முடியாது.''

அவரைத் தொடர்ந்து உல்ஜீயும் உணர்ச்சிவசப்பட்டுப் பேசினார். ''ஹோஹாட்டில் சில ஆண்டுகளுக்கு ஒருமுறை நடக்கும் கூட்டங்களில் நான் கலந்துகொள்வது வழக்கம். அங்குள்ள மேய்ச்சலுக்கான புல் நிலம் நம்முடையதை விடவும் மோசமான நிலையில் உள்ளது. பெருஞ்சுவரின்

மேற்குப் பகுதியில் பல நூறு மைல்களை ஏற்கெனவே மணல் விழுங்கிவிட்டது. நாங்கள் அளிக்க வேண்டிய பங்கைத் தொடர்ந்து அரசாங்கம் கூட்டிக்கொண்டே போகும்பட்சத்தில், சுவரின் கிழக்குப் பகுதியும் அதே கதியை அடையும் அபாயத்துக்கு ஆளாகும். சில வெளிநாட்டு அரசுகள், தங்களுடைய மேய்ச்சல் நிலங்களைப் பாதுகாக்க சட்டங்கள் இயற்றி யிருப்பதாக நான் கேள்விப்பட்டேன். ஒரு ஏக்கர் புல்நிலத்தில் எவ்வளவு விலங்குகள் மேய வேண்டும், எந்தெந்த இடங்களில் எந்த வகை விலங்குகள் மேய வேண்டும் என்ற கட்டுப்பாடுகள் விதிக்கப்பட்டு அமல்படுத்தப்படுகிறதாம். அளவுக்கதிகமாக மேயப் பட்டால் கடுமையான அபராதம் விதிக்கப்படுகிறது. இருக்கும் மேய்ச்சல் நிலங்களை மேற்கொண்டு அழியாமல் காக்கவே இந்த நடவடிக்கை. ஒருமுறை அது அழிந்துவிட்டால், அதன்பிறகு காலத்துக்கும் அது அவ்வளவுதான். ஏதாவது செய்வதென்றால் அது பாலையாக மாறுவதற்குள் செய்தால்தான் உண்டு.''

அவரைத் தொடர்ந்து பில்ஜி பேசினார். ''மக்கள் மிகவும் பேராசைக்காரர்களாக இருக்கிறார்கள். பெரும்பாலானவர்கள் ஒன்றும் தெரியாதவர்களாக இருக்கிறார்கள். சரியான விசயத்தைச் செய்யச் சொல்லி இந்த முட்டாள்களிடம் எவ்வளவு சொன்னாலும் எந்த பிரயோஜனமும் இல்லை. நேரம் வீணாவதுதான் மிச்சம். இந்தப் பேராசைக்கார முட்டாள்களை சமாளிப்பதற்கான ஒரே வழி ஓநாய்கள்தான் என்று டெஞ்ஞர் தெரிந்து வைத்திருக்கிறது. கால்நடைகளின் தொகையை ஓநாய்கள் கட்டுப்படுத்துவதன் வழியாக, மேய்ச்சல் நிலம் எஞ்சி வாழும்.''

உல்ஜீ மறுப்பது போல் தலையசைத்தார். ''பழைய டெஞ்ஞர் வழிமுறைகள் இனி உதவாது. சீனா அணுகுண்டு பரிசோதனை செய்து முடித்திருக்கிறது. இனி எல்லாமே விபரீதம்தான்.''

தன்னுடைய இதயம் மணலால் நிரம்பியிருப்பதுபோல ஜென் உணர்ந்தான். ''பல இரவுகளாக நான் ஓநாய்களின் குரல்களையோ அல்லது நாய்களின் குரல்களையோ கேட்கவில்லை. நாம் அவற்றை விரட்டிவிட்டோமா, அப்பா? அவை திரும்பி வராவிட்டால் நாம் அழிந்துவிடுவோம்.''

''நாம் கொன்ற முப்பது ஓநாய்களென்பது, ஓலோன்புலாக்கின் ஓநாய் தொகையில் ஆகக் குறைவு. அவை வெளியில் வராததற்குக் காரணம், நாம்

அவற்றைப் பயமுறுத்திவிட்டோம் என்பதல்ல. வருடத்தின் இந்தச் சமயத்தில் அவை செய்வதற்கு வேறு சில விசயங்கள் இருப்பதுதான் காரணம்.''

''அவை இப்போது என்ன செய்யும்?'' ஆர்வம் மேலிட்ட வனாகக் கேட்டான் ஜென்.

அருகிலிருந்த சில மலைகளைச் சுட்டிக் காட்டினார் முதியவர். ''வா, நான் உனக்குக் காட்டுகிறேன்.'' ஜென்னுடைய குதிரையின் புட்டத்தில் தன்னுடைய சவுக்கால் அவர் அடித்தார். ''அது ஓடட்டும். இளவேனிற் காலத்தில் குதிரைகளுக்கு வியர்க்க வேண்டியது அவசியம். அவற்றின் பனிக்காலத் தோல்கள் உதிர்வதற்¢கு அது உதவும். மேலும் அவை நன்கு கொழுக்கவும் உதவும்.''

மூன்றும் பந்தயக் குதிரைகளைப் போல அதிவேகப் பாய்ச்சலில் ஓடின. குதிரைகள் மலைப் பக்கத்தை அடைந்தபோது, மேய்ச்சல் நிலம் முழுவதும் காணப்படுகிற மர்மோட்டுகளின் கூப்பாடுகள் உச்ச ஸ்தாயியில் அவர்களை வரவேற்றன. ஓலோன்புலாக்கிலுள்ள கிட்டத்தட்ட பாதி மலைகள், மர்மோட்டுகளின் வீடுகளாக இருந்தன. ஒவ்வொரு இலையுதிர் காலத்தின்போதும், முதியவர் மர்மோட்டுகளைச் சுடுவதையும், அவற்றின் கொழுப்பும் சுவையும் நிறைந்த இறைச்சியை விருந்தாகப் படைப்பதையும் ஜென் பார்த்திருக்கிறான். இவையும், கரடிகளைப் போலவே, குளிர்காலம் முழுவதும் தம் வளைக்குள் தூங்கியே வாழ்பவை. பன்றிக் கறியைப் போலவே இதன் இறைச்சியும் ஓர் அடுக்கு கொழுப்பு கொண்டது. மங்கோலியர்களின் விருப்பமான உணவு இது. ஆடு மற்றும் மாட்டிறைச்சியை விடவும் இது அவர்களுக்குப் பிடித்தமானது. ஒரு முழுக் குடும்பத்துக்கு ஒருவேளை சாப்பாட்டுக்குப் போதுமான இறைச்சியை, நன்கு வளர்ந்த ஒரு மர்மோட் அளிக்கக் கூடியது.

அறுபது அல்லது எழுபதுக்குக் குறையாத மர்மோட்டுகள் பெரிதும் சிறிதுமாய், மலைச் சரிவுகளில் நின்றுகொண்டிருந்ததைப் பார்த்து ஜென் பிரமிப்படைந்தான். பெரிய பழுப்புநிற ஆண் விலங்குகள் பெரிதாகத் தனித்திருந்த வளைகளுக்கு முன்பும், அவற்றைவிடக் கொஞ்சம் சிறிய பெண் விலங்குகள், ஓநாய்களின் மயிரைப் போல¢¢ காணப்பட்ட மயிரோடு, கொத்தாய் அமைந்திருந்த வளைகளுக்கு முன்பும் நின்றிருந்தன. அவற்றின் அம்மாவைச் சுற்றி ஏழெட்டுக்

குட்டிகள், சிறிய முயல்களின் தலைகளைப் போலிருந்த தலைகளோடு, நின்றிருந்தன. மனிதர்களைப் பார்த்து, அவை வெருண்டு வளைகளுக்குள் செல்லவில்லை. மாறாக, முன்னங் கால்களை மார்புகளுக்கு முன்பாக வைத்துக்கொண்டு, பின்னங் கால்களை ஊன்றி எழுந்து நின்றன. அவை இவர்களைப் பார்த்து, எச்சரிக்கை செய்வது போலக் கத்தின. ஒவ்வொரு கத்தலின் போதும் அவற்றின் வால்கள் மேல்நோக்கி எம்பின.

''மக்கள் இந்த இடத்தை மர்மோட் மலை என்பார்கள்'' என்றார் பில்ஜி. ''வடக்கில் ஒரு மலை இருக்கிறது. அங்கு ஓரிடத்தில், இங்கிருப்பதை விட இவை அதிகமாகக் காணப்படுகின்றன. ஒரு காலத்தில், இந்த இடம்தான் மேய்ச்சல் நிலத்தின் ஏழை மக்களைக் காக்கும் இடமாக இருந்தது. மர்மோட்டுகள் இலையுதிர் காலத்தில் பெரிதாகவும் கொழுத்தும் காணப்படும். அவர்கள் இவற்றைப் பிடிப்பதற்காக இங்கு வருவார்கள். இறைச்சியை சாப்பிட்டுவிட்டு, தோல்களையும் எண்ணெயையும் பணத்துக்கோ அல்லது ஆட்டுக்கோ விற்றுவிடுவார்கள். மர்மோட் மேலங்கிகள் என்றால் சீனர்களாகிய உங்களுக்குப் பைத்தியம் என்பதால், ஒவ்வொரு இலையுதிர் காலத்தின் போதும் சாங்ஜியாகோவ் வியாபாரிகள் இவற்றின் தோல்களை வாங்குவதற்காக வருவார்கள். இவை ஆட்டுத் தோல்களைவிட மூன்று மடங்கு அதிக விலை கொண்டவை. இந்தக் குட்டி விலங்குகள் எவ்வளவோ மக்களை, ஏன் ஜெங்கிஸ்கான் குடும்பம் கஷ்டத்தில் இருந்தபோது அவர்களையும்கூடக் காப்பாற்றியிருக்கின்றன.''

''மர்மோட்டுகள் மிகவும் ருசியாக இருக்கும். அவற்றின் கொழுப்பு அப்படி. காட்டு அணில்கள், எலிகள் போன்ற வளையில் வாழும் விலங்குகள் பனிக்காலத்துக்கான உணவை சேமித்து வைத்துக்கொள்ளும். ஆனால் மர்மோட்டுகள் தங்களுடைய கொழுப்பைக் கொண்டே பனிக்காலத்தை ஓட்டிவிடும்'' என்றார் உல்ஜீ.

''பனிக்காலத்தைக் கடத்திய பிறகு, அனேகமாக அவற்றின் கொழுப்பு முற்றிலுமாகக் கரைந்துபோயிருக்கும். ஆனால் அவற்றின் எலும்புகளில் போதுமான இறைச்சி இருக்கும். அவை எவ்வளவு பெரிதாக இருக்கிறதென்று பார்? இந்த ஆண்டு புல் அமோகமாக வளர்ந்திருப்பதால் அவை கூடிய சீக்கிரமே கொழுத்துவிடும்'' என்றார் பில்ஜி.

‘‘ஓநாய்கள் நம்மைத் தொந்தரவு செய்யாமல் இருப்பதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை’’ என்றான் ஜென். ‘‘உணவில் ஒரு மாற்றத்தை அவை விரும்பியிருக்கும். மர்மோட்டுகள் தங்களுடைய ஆழமான வளைகள் இருக்கும் இடத்தை விட்டு விலகி சுற்றித் திரிவதில்லை இல்லையா? பின் எப்படி ஓநாய்கள் இவற்றைப் பிடிக்கும்?’’

பில்ஜி சிரித்தபடியே, ‘‘மர்மோட்டுகளை வேட்டையாடுவதில் அவை பெரிய கில்லாடிகள்’’ என்றார். ‘‘வளைகளின் முகப்பைப் பெரிய ஓநாய்கள் தோண்டும். அப்போது உள்ளே இருப்பவை தப்பிப்பதற்கான பிற துளைகள் வழியாக அவசரமாக வெளியேறும். அங்கு மற்ற ஓநாய்கள் காத்திருந்து அவற்றைக் கொன்று சாப்பிடும்.

சமயங்களில் சிறிய ஓநாய்கள் வளைகளை ஆழமாகத் தோண்டி, உள்ளே சென்று அவற்றைப் பிடித்து வெளியே இழுத்துக்கொண்டு வரும். நரிகளும் இவ்வாறு செய்யும். மர்மோட்டுகளைச் சுடுவதற் காக நான் வரும்போதெல்லாம், ஒவ்வொரு வருடமும் ஏழெட்டு நரிகள் என்னிடம் மாட்டிவிடும்; ஒரு சமயம் சிறிய ஓநாயொன்று அகப்பட்டிருக்கிறது. ஓநாய்க் குகைக்குள் எங்கள் குழந்தைகள் ஊர்ந்து சென்று பிறந்த குட்டிகளை எடுத்துக்கொண்டு வரும் வித்தை இந்தச் சிறிய ஓநாய்களிடமிருந்தும் நரிகளிடமிருந்தும் நாங்கள் கற்றுக்கொண்டதுதான். அவற்றின் வளைகள் மிகவும் மேலோட்டமானதாக இருந்தால், அவை பனியில் உறைந்து போய்விடும். அதனால் அவை தம்முடைய வளைகளை ஆழமாகத் தோண்டும். பத்து முதல் இருபதடி வரை அவற்றின் ஆழமிருக்கும். ஓநாய்கள் பனிக் காலத்தைத் தூங்கிக் கழிப்பதில்லை என்றாலும் அவை ஏன் தங்களுடைய குகைகளை ஆழமாக அமைக்கின்றன தெரியுமா?’’ என ஜென்னிடம் கேட்டார் முதியவர்.

ஜென், தெரியாது என்பது போலத் தலையசைத்தான்.

‘‘ஏனென்றால் அவை அவ்வப்போது மர்மோட்டுகளின் வளைகளை எடுத்துக்கொண்டுவிடும். இந்த வளைகளில் ஒன்றைக் கைப்பற்றி அவற்றின் குட்டிகளை உள்ளே வைத்திருக்கும்.’’

‘‘மர்மோட்டுகளின் குடும்பத்தைக் கொன்று சாப்பிடுவது மட்டும் அதற்குப் போதாது. அவற்றின் வீட்டையும் எடுத்துக் கொண்டுவிடுமா!’’ ஜென் ஆச்சரியத்தோடு சொன்னான்.

உல்ஜீ புன்னகைத்தார். ‘‘இவ்வகையில்தான் அவை மர்மோட்டுகளை ஒரு கட்டுக்குள் வைத்திருக்கின்றன. இதன்மூலம் அவை மகத்தான சேவை செய்கின்றன. ஏனென்றால் மேய்ச்சல் நிலத்துக்கு இவை கொஞ்சமும் நல்லதல்ல. இந்த மலைப் பக்கம் அவை என்ன செய்து வைத்திருக்கின்றன பார்த்தாயா. எங்கு பார்த்தாலும் துளைகள். பல மைல் சுற்றளவுக்கு மேய்ச்சலுக்கான நிலத்தைப் பாழாக்கியிருக்கின்றன. மேய்ச்சல் நிலத்தை அழிக்கும் நான்கு விலங்கினங்கள்: வயல் எலி, காட்டு முயல், மர்மோட்டுகள், மற்றும் மான்கள். மர்மோட்டுகளின் கொழுத்த உடல்களுக்கு ஆண்டுதோறும் பல ஏக்கர் புல் தேவைப்படுகிறது. மேலும் ஒவ்வொரு வருடமும், இந்தத் துளைகளில் கால் வைத்துப் பல குதிரைகள் தங்கள் கால்களை முறித்துக்கொள்கின்றன. அவற்றில் சவாரி செய்பவர்களும் தூக்கியெறியப்படுகிறார்கள்.’’

உல்ஜீ தொடர்ந்தார். ‘‘இந்தத் துளைகள் அதை விடவும் மேலும் பல தொல்லைகள் தருகின்றன. பனிக்காலத்தில் அவை கொசுக்களின் வசிப்பிடமாக இருக்கின்றன. கிழக்கு மங்கோலியாவின் கொசுக்கள் உலகப் புகழ் பெற்றவை. மஞ்சூரியக் காடுகளில் வசிக்கும் கொசுக்கள் ஒரு மனிதனை உயிரோடு தின்றுவிடக் கூடியவை. நம்முடையவை ஒரு மாட்டை சாப்பிட்டுவிடும். பனிக் காலத்தில், கடுங்குளிரில் நோயுற்ற ஒரு மாடு பனிக்கட்டிச் சிற்பமாக மாறிவிடும்போது, இந்தக் கொசுக்கள் எப்படி சமாளிக்கின்றன என நீ இப்போது யோசிக்கலாம். இந்த மர்மோட் துளைகள் மூலம்தான் அவை பனிக்காலத்தைக் கடக்கின்றன. பனிக்காலம் தொடங்கியதும், அவை மர்மோட்டுகளைப் பின்தொடர்ந்து அவற்றின் ஆழமான வளைகளுக்குள் செல்கின்றன. மூடப்பட்ட துளைகளுக்குள் பனி மற்றும் பனிக்கட்டியின் எவ்வித பாதிப்புமில்லாமல் அங்கு அவை கதகதப்புடன் வாழ்கின்றன. உணவோ தண்ணீரோ இல்லாமல் மர்மோட்டுகள் தூங்கிக் கழிக்கின்றன. ஆனால் கொசுக்களுக்கு உணவும் தண்ணீரும் மர்மோட்டுகள் மூலம் அபரிமிதமாகக் கிடைக்கின்றன. பனிக்காலத்தை சுகமாகக்

கழிக்கின்றன. பிறகு, இளவேனிற் பருவம் தொடங்கியதும், மர்மோட்டுகள் துளைகளை விட்டு வெளியேறுகின்றன. கொசுக்களும் அவற்றைப் பின்தொடர்ந்து வெளியேறி, மேய்ச்சல் நிலத்திலுள்ள எல்லா சிறிய ஏரிகளுக்கும் பறந்து சென்று, தண்ணீரில் அடுத்த தலைமுறையை உருவாக்குகின்றன. கோடை காலத்தில் மேய்ச்சல் நிலம் கொசுக்களின் சொர்க்கமாகத் திகழும்.''

இரண்டு கோடைகளில் ஜென் கடுமையாகக் கடிக்கப் பட்டிருக்கிறான். கொசுக்களின் ரீங்காரம் கேட்டால் போதும், அவனுடைய மயிர்க்கால்கள் குத்திட்டு நிற்கும். சீன மாணவர்கள் ஓநாய்களைக் காட்டிலும் கொசுக்களுக்கு அதிகமாகப் பயப் பட்டார்கள். அதன் விளைவாக, பீஜிங்கிலிருந்து அவனுடைய குடும்பத்தார் கொசுவலை ஒன்றை அவனுக்கு அனுப்பி

வைத்தார்கள். அதன்பிறகு, அவன் இரவில் தூங்கத் தொடங் கினான். கொசுவலை என்பது ஒரு அற்புதமான விசயமென்று மேய்ப்பர்கள் நினைக்கத் தொடங்கினர். அதனைத் தொடர்ந்து கொசுவலையானது மங்கோலியக் குடில்களில் ஒரு அத்தியா வசியமாக மாறியது. அந்த வலைகளை அவர்கள் 'கொசு வீடுகள்' என்றழைத்தனர்.

''நான் இதுவரை எந்தவொரு புத்தகத்திலும், கொசுக்களுக்கும் மர்மோட்டுகளுக்குமுள்ள தொடர்பு பற்றியோ அல்லது வளைகள் எவ்வாறு கொசுக்களின் பதுங்குமிடமாகின்றன என்பது பற்றியோ அல்லது ஓநாய்கள் எவ்வாறு அவற்றின் பரம எதிரியாகின என்பது பற்றியோ ஒரு வார்த்தை கூடப் பார்த்ததில்லை'' என்று ஜென் உல்ஜீயிடம் தெரிவித்தான்.

''மேய்ச்சல் நிலமானது புரிந்துகொள்வதற்கு மிகவும் சிக்கலான ஒன்று'' என்றார் பில்ஜி. ''இங்கு எல்லாமே ஒன்றோடான்று தொடர்புடையது. எல்லாவற்றையும் ஒருங்கிணைத்திருக்கும் பிரதான இணைப்பாக ஓநாய்கள் இருக்கின்றன. அந்த இணைப்பு அகற்றப்பட்டால் கால்நடை வளர்ப்பென்பது இங்கு மறைந்துவிடும். ஓநாய்களினால் ஏற்பட்டிருக்கும் இழப்புகளை விட அவற்றால் பெற்றிருக்கும் பயன்கள் மிகவும் அதிகம். அவை எல்லாவற்றையும் கணக்கிட முடியாது.''

பில்ஜி சிரித்தபடியே, ‘‘அதேசமயம், மர்மோட்டுகளால் நமக்கு ஒரு பிரயோஜனமும் இல்லை என்று நினைத்துவிடாதே’’ என்றார். ‘‘அவற்றின் மயிர், இறைச்சி மற்றும் எண்ணெய் மிகவும் பெறுமதி வாய்ந்தவை. மர்மோட்டுகளின் தோல்கள், மேய்ப்பர்களின் முக்கியமான வருமானங்களில் ஒன்று. ஓநாய்கள் மிகவும் சாமர்த்திய மானவை; அவை எல்லா மர்மோட்டுகளையும் கொன்று விடுவதில்லை. மேய்ப்பர்களும் அப்படித்தான். பெரியவற்றை மட்டுமே நாங்கள் எடுத்துக்கொள்வோம். சிறிய விலங்குகளை விட்டுவிடுவோம்.’’

குதிரைகள் மலைகளினூடாக விரைந்தபோது, எவ்வித பயமுமில்லாத மர்மோட்டுகள் தங்களுடைய கூட்டுக் கத்தல்களை விடாமல் தொடர்ந்துகொண்டிருந்தன. அவர்கள் வடமேற்குத் திசையில் மேலும் முன்னேறியபோது, மிகக் குறைந்த மக்களே கண்ணில் பட்டார்கள்; குடியிருப்புகளுக்கான அறிகுறிகளும் மிகக் குறைந்த அளவிலேயே தென்பட்டன. போகப் போகக் கடைசியில் குதிரையின் சாணம்கூட எங்கும் காணப்படவில்லை.

மூவரும் ஒரு செங்குத்தான சரிவின் முனையை அடைந்தபோது, பச்சைப் பசேலென்றிருந்த குன்றுகள் அவர்கள் முன் விரிந்து காணப்பட்டன. அவர்கள் ஒரு குன்றைக் கடந்தபோது, அங்கு பச்சையோடு மஞ்சளும் கலந்திருப்பதைக் கண்டனர். ஆனால் அவர்களுக்கு முன்னிருந்த மலைகளில் காணப்பட்ட பசுமையானது, சாயம் பூசப்பட்ட திரைச்சீலையைப் போல, அல்லது ஒரு Ôஅனிமேசன்Õ திரைப்படத்தில் வரும் ஒரு விந்தை நிலம் போலக் காணப்பட்டது. உல்ஜீ தன் சாட்டையால் சுட்டிக்காட்டினார். ‘‘கடந்த இலையுதிர் காலத்தின்போது நீ இங்கு வந்திருந்தால், கருப்பு மலைகளைத்தான் பார்த்திருப்பாய். அவை இப்போது பச்சை ஆடை உடுத்தியிருப்பது போல இருக்கிறது இல்லையா?’’ பச்சை மலைகளைப் பார்த்ததும் குதிரைகள் வேகமெடுத்தன.

அவர்கள் சில மேடுகளைக் கடந்து, ஒரு பசும் சரிவை அடைந்தனர். அது பார்லி பயிர்களால் நிறைந்திருந்தது. ஒரு மஞ்சள் புல்கூடக் கண்ணில் படவில்லை. திடீரென ஒரு வாசனை கடுமையாகப் பரவியது. பில்ஜி குனிந்து

பார்த்தார். நாய்களும் அந்த வாசனையை உணர்ந்து, அந்தப் பகுதியைப் பரிசோதிக்கத் தொடங்கின. தரையை மோப்பம் பிடித்தபடி நகர்ந்தன. பில்ஜி,

குதிரைகளின் குளம்புகளைச் சுற்றியிருந்த வளர்ந்த புல்லைக் குனிந்து நெருக்கமாக நோட்டம் விட்டார். அவர் மேலே நிமிர்ந்தபோது, ‘‘உனக்கு ஏதும் வாசனை அடிக்கிறதா?’’ என்று ஜென்னிடம் கேட்டார். ஜென் ஆழமாக மூச்சை உள்ளிழுத்தான். புதிய பசும்புல்லின் வாசத்தை அவன் உணர்ந்தான்.

முதியவர் குதிரையிலிருந்து இறங்கி, தன்னுடைய மேய்ச்சல் தடியால் புல்லைக் கிளறி எதையோ தேடினார். சற்று நேரத்துக்குள் மஞ்சளும் பச்சையுமான ஒன்றைக் கண்டார். அதைக் கிள்ளியடுத்து முகர்ந்து பார்த்தார். ‘‘இது மான் சாணம்’’ என்றார். ‘‘அவை இந்த இடத்தை சமீபத்தில் கடந்து சென்றிருக்கின்றன.’’

உல்ஜீயும் ஜென்னும்கூடக் குதிரைகளிலிருந்து இறங்கி, முதியவர் கையிலிருந்த மான் சாணத்தை சோதித்தனர்.

‘‘இந்த இளவேனிற் காலத்தில் பிரசவப் பட்டிகளிலிருந்து வெளியேறி, அப்போதுதான் பிரசவித்திருந்த தங்களுடைய குட்டிகளோடு மான்கள் புல் மேய வருமென எதிர்பார்த்திருந்தேன். ஆனால் அவை இங்கு வந்திருக்கின்றன. ஏனென்றால் இது அருமையான புல். மான்களும் என்னைப் போலவே யோசிக்கின்றன’’ என்றார் உல்ஜீ.

‘‘மேய்ச்சலுக்கான நல்ல இடத்தைத் தேர்ந்தெடுப்பதில் அவை கில்லாடிகள்தான். அவை அருமையான இடத்தைக் கண்டறிந்து மேய்ந்துகொண்டிருக்க, நாமும் நம் கால்நடைகளும் அதிலிருந்து விலகி இருந்திருந்தால் வெட்கக்கேடுதான். இந்த முறை நீங்கள் கனகச்சிதமாக இடத்தைப் பிடித்துவிட்டீர்கள்’’ என்றார் பில்ஜி.

‘‘அவசரப்பட வேண்டாம். தண்ணீர் இருக்குமிடத்தைக் கண்டறிந்த பிறகுதான் முடிவெடுக்க வேண்டும்’’ என்றார் உல்ஜீ.

‘‘ஆனால் ஆட்டுக்குட்டிகள் இன்னமும் மிகச் சிறியவை. அவற்றால் இவ்வளவு தூரம் நடந்துவர முடியாது. நீண்ட தூரம் நடக்க அவற்றுக்கு இன்னும் ஒரு மாசமாவது ஆகும். ஆனால் அதற்குள் இந்தப் புல் எல்லாம் மான்களின் வயிற்றுக்குள் போய்விடும்’’ என்றான் ஜென்.

‘‘கவலைப்படாதே’’ என்றார் பில்ஜி. ‘‘மக்களை விடவும் ஓநாய்கள் சாமர்த்தியமானவை. சீக்கிரமே அவை இங்கும் வந்துவிடும். மான்களின் பிரசவ காலம் இன்னமும் முடியவில்லை. மேலும் பெருசுகளாலும் சரி, குட்டிகளாலும் சரி இப்போது

வேகமாக ஓட முடியாது. வருடத்தின் இந்தச் சமயத்தில்தான் ஓநாய்கள் மான்களை விருந்தாக்கிக்கொள்ளும். இங்கிருந்து அவை எல்லாவற்றையும் விரட்டிவிட ஓநாய்களுக்கு ரொம்ப நாள் எடுக்காது.’’

அவர்கள் மீண்டும் குதிரைகளின் மீதேறிச் சென்றார்கள். அவர்கள் மேலும் ஒரு மேட்டைக் கடந்தபோது, அடுத்த மேட்டுக்குக் கொஞ்சம் தொலைவில் பரந்துபட்ட ஒரு புல்நிலம் இருப்பதாகவும், அங்கு மான்களும் ஓநாய்களும் தென்படக் கூடுமெனத் தான் அனுமானிப்பதாகவும், அதனால் எச்சரிக்கையோடு இருக்க வேண்டுமெனவும் உல்ஜீ தெரிவித்தார்.

மேட்டின் உச்சியை அவர்கள் அடைந்ததும், குதிரைகளை விட்டிறங்கினர். ஒரு கையில் குதிரைகளையும் மறு கையில் நாய்களையும் பிடித்துக்கொண்டு, தாழ்வாகக் குனிந்து, சத்தமில்லாமல், நிறைய பாறைகள் சூழ்ந்திருந்த ஓரிடத்தை நோக்கி அவர்கள் நடந்தார்கள். இரண்டு பெரிய நாய்களும் தங்களுடைய எஜமானர்களோடு நெருக்கமாக ஒட்டிக்கொண்டு ஒரு வேட்டையை எதிர்பார்த்துச் சென்றன. அவர்கள் பாறைகளை அடைவதற்குச் சற்று முன்பாக, குதிரைகளின் முன்னங்கால்களை கடிவாள வார்களால் சுற்றிக் கட்டினார்கள். பிறகு அவர்கள் பாறைகளுக்குப் பின்னால், தரையில் கால்களைப் பரப்பிப் படுத்துக்கொண்டு, தங்களுடைய தொலைநோக்கிகள் வழியாக அந்தப் பகுதியை அலசினர்.

ஒரு வழியாக ஜென், கன்னி மேய்ச்சல் நிலத்தின்மீது தன் கண்களைப் பதித்தான். ஒட்டுமொத்த சீனாவிலும் இம்மாதிரியான கடைசி இடம் இதுவாகத் தானிருக்கும். அது அற்புதப் பேரழகுடன் காணப்பட்டது. அவன் முன்னால் பல டஜன் சதுர மைல் பரப்புக்குக் கரும்பச்சை ஆற்றுப் பள்ளத்தாக்கு விரிந்திருந்தது. கரும்பச்சை மற்றும் இளம்பச்சை, பழுப்பு, சிவப்பு, கருஞ்சிவப்பு போன்ற வண்ணங்களிலான மலைகள் கண்ணுக்கெட்டிய தூரம் வரை அலை அலையாய் எழுந்து நின்றன. ஆற்றுப் பள்ளத்தாக்கின் மூன்று பக்கங்களிலும் மிதமான சரிவுகள் கொண்ட குன்றுகள் அமைந்திருந்தன. டெஞ்ஞரினால்

ஒப்பனை செய்யப்பட்ட பச்சைக் கம்பளம் போல ஆற்றுப் பள்ளத்தாக்கு காணப்பட்டது. நீலம், வெள்ளை, மஞ்சள் மற்றும் இளஞ்சிவப்பு வண்ண மலைப் பூக்களின் மாசு மருவற்ற வண்ண வேலைப்பாடுகளுடன் அது பொலிவு பெற்றிருந்தது. மலைப் பள்ளத்தாக்கிலிருந்து ஒரு ஓடை கீழ்நோக்கி வளைந்தும் நெளிந்தும் தென்கிழக்கில் ஓடிவந்து ஆற்றுப் பள்ளத்தாக்கை அடைந்தது. அது அதன் மத்தியை அடைந்தபோது நீல ஏரியைப் போலக் காணப்பட்டது.

அந்த மத்திய பகுதியானது அன்னப்பறவை ஏரி. அப்படியொன்றைப் பார்ப்போமென்று ஜென் கனவில்கூட நினைத்ததில்லை. அடர்த்தியாக இருந்த பச்சை நாணல்களினால் வளையமிடப்பட்டிருந்த நீரில் ஒரு டஜன் அன்னங்கள் வெகு பாந்தமாய் மிதந்துகொண்டிருந்ததை தன்னுடைய தொலைநோக்கி மூலம் அவன் பார்த்தான். அன்னங்களைச் சுற்றிலும் நூற்றுக் கணக்கான காட்டு வாத்துகளும் பெயர் தெரியாத நீர்ப் பறவை களும் சூழ்ந்திருந்தன. ஐந்து அல்லது ஆறு பெரிய அன்னங்கள் காற்றில் பறந்தபோது, அவற்றோடு சேர்ந்து நீர்ப்பறவைகளும் பறந்தன. அமைதியான ஏரியின் மேற்பரப்பில் வெண்சிறகுகள் நடனமாடியதைப் பார்த்தபோது, வேறு உலகில் சஞ்சரிப்பதைப் போல ஜென் உணர்ந்தான்.

வடமேற்கில் இயற்கையாக அமைந்திருந்த வடிகால் மூலம், ஆயிரக்கணக்கான ஏக்கர் சதுப்பு நிலத்துக்கு ஏரியின் தண்ணீர் திருப்பிவிடப்பட்டிருந்தது. வடக்கிலான மேய்ச்சல் நிலத்தின் கடைசி இடம் இதுவாகவே இருக்கக்கூடும். அது இன்னமும்கூட தொன்மையான அழகைத் தக்கவைத்துக்கொண்டிருந்தது. அந்தக் காட்சியில் ஜென் தன்னை இழந்து கிறங்கிப்போயிருந்தான். அவன் அந்த அற்புதத்தில் வியந்திருந்த அதே சமயம், அவனுடைய இதயத்தில் பதற்றம் குடிபுகுந்தது. மனிதர்களும் குதிரைகளும் வந்தபிறகு அது பாழ்பட்டு விடுமென அவன் நினைத்தான். இத்தகைய இயற்கையான, புராதன அழகில் எந்தவொரு சீனனின் கண்களும் இனி பதியப் போவதில்லை.

உல்ஜீயும் பில்ஜியும் அதற்கும் கீழாக இருந்த இடங்களைத் தங்களுடைய தொலைநோக்கிகள் மூலம் அலசிக்கொண்டிருந்தனர். முதியவர் தன்னுடைய காலணிகளின் முனையால் ஜென்னுடைய காலை இடித்து வலப்பக்கத்துக்குத்

தொலைவில், ஓடையின் மூன்றாவது வளைவைக் கவனிக்கும்படி செய்தார். அங்கு அதன் ஒரு கரையில் ஒரு ஜோடி மான்கள் தண்ணீரிலிருந்து வெளிவரத் தத்தளித்துக்கொண்டிருந்தன. அவற்றின் மேற்பகுதி தரையில் பத்திரமாக இருக்க, பின்னங்கால்கள் சகதியில் சிக்கிக் கொண்டிருந்தன. அதிலிருந்து விடுவித்துக்கொள்ள அவற்றால் முடியவில்லை. அந்த இடத்துக்குக் கொஞ்சம் தள்ளி புல்லின் மீது, ஒரு டஜனுக்கும் மேற்பட்ட மான்களின் உடல்கள் வயிறுகள் கிழிக்கப்பட்டுக் கிடந்தன. ஜென் தன்னுடைய தொலைநோக்கிக் கருவியை மெல்ல ஏரிக்கரையோர நீண்ட புல்வெளி மீது மெதுவாகத் திருப்பினான். பல பெரிய ஓநாய்கள், தாங்கள் கொன்றுவிட்டிருந்த உடல்களுக்குப் பக்கத்தில், கால்களைப் பரப்பிக்கொண்டு தூங்கிக்கொண்டிருந்தன. அவை எத்தனை இருந்தன என்று துல்லியமாக அவனால் கணக்கிட முடியாதபடி புல் உயர்ந்து காணப்பட்டது.

உல்ஜீயும் பில்ஜியும் தொடர்ந்து அந்தப் பகுதியை அலசி ஆராய்ந்துகொண்டிருந்தனர். தென்கிழக்கிற்குத் தொலைவில் இருந்த ஒரு சரிவில், மான்கள் சிறு கூட்டமாக மேய்ந்துகொண்டிருந்ததைக் கவனித்தனர். பிறந்த மான்குட்டிகள் அவற்றின் அம்மாக்களை ஒட்டி நின்றுகொண்டிருந்தன. ஒரு மான், பிறந்த குட்டியைத் தன் நாவால் நக்கி சுத்தம் செய்துகொண்டிருப்பதை ஜென் ஆர்வத்துடன் விடாமல் கவனித்தான். அந்தக் குட்டி மான் தன் கால்களில் நிற்க சிரமப்பட்டுக்கொண்டிருந்தது. அது நன்றாக நிற்கத் தொடங்கியதும், அதனால் மிக வேகமாக ஓட முடியும். அப்போது ஒரு நாயால்கூட அதைப் பிடிக்க முடியாது.

‘‘திறந்தவெளியில் படுத்துக்கிடக்கும் அந்த ஓநாய்களைப் பார். யாராலும் அவற்றை எதுவும் செய்ய முடியாதென்பது அவற்றுக்கு நன்றாகவே தெரியும். நாம் வெகு தொலைவில் இருக்கிறோம். இந்தத் தொலைவுக்கு நம்முடைய துப்பாக்கிகள் பிரயோஜனப்படாது. மேலும், நாம் நம்மைக் காட்டிக்கொண்டுவிட்டால் அவையும் சரி, மான்களும் சரி சடுதியில் ஓடி மறைந்துவிடும்’’ என்றார் பில்ஜி.

‘‘ஆனால் ஏரியில் சகதியில் மாட்டிக்கொண்டிருக்கும் மான்கள் நமக்குத்தான்’’ என்றார் பில்ஜி. ‘‘மதியச் சாப்பாடு.’’ அவர்கள் குதிரைகளில் அமர்ந்துகொண்டு, ஏரியை நோக்கிச் சென்றார்கள். அவர்களும் குதிரைகளும்

நாய்களும் திறந்தவெளிக்கு வந்த அந்த நொடியில், ஓநாய்கள் தெற்கு நோக்கி சிதறி ஓடின. மான்களும் அவ்வாறே, எவ்வளவு முடியுமோ அவ்வளவு சீக்கிரமாகத் தெறித்து ஓடின.

அவர்கள், ஒரு ஏக்கர் நிலத்தைச் சுற்றிச் சூழ்ந்திருந்த ஓடையின் ஒரு வளைவை நெருங்கினர். ஒரு டஜனுக்கும் மேற்பட்ட மான்கள், பெரியதும் சின்னதுமாய், புல்வெளியில் கிடந்தன. அவற்றின் கால்கள், எலும்போடு சேர்த்து மெல்லப்பட்டிருந்தன. சகதியில் மாட்டியிருந்த ஒன்றால் ஒரு இஞ்ச்கூட நகர முடியவில்லை. மற்றது அதிலிருந்து வெளியேற, முடிந்த அளவு இன்னமும் பிரயத்தனப்பட்டது. அவற்றின் கழுத்துக் காயங்களிலிருந்து இன்னமும் ரத்தம் வழிந்துகொண்டிருந்தது.

‘‘அவை எவ்வளவு பெரிய மேதைகள் என்பதைப் பார்’’ என்றார் உல்ஜீ. ‘‘முந்தைய இரவு முழுவதும் அவை புல்லுக்குள் மறைந்திருந்து, மான்கள் தண்ணீர் குடிக்க வரும்வரை காத்திருந்திருக்கின்றன. பிறகு, உடனடியாக தப்பிப்பதற்கான எல்லா வழிகளையும் அடைத்துவிடுகின்றன. ஓடையின் உதவியோடு மான்களைப் பிடிக்கின்றன. எவ்வளவு சுலபமாகக் கதையை முடிக்கின்றன பார்.’’

சுற்றிலும் இறைந்து கிடக்கும் இறைச்சியின் வாசனையை முகர்ந்த நாய்கள், அவற்றைச் சாப்பிட அவசரப்படவில்லை. ஓநாய்கள் தின்றுவிட்டு மிச்சமிருந்த மான் இறைச்சியை அவை புறக்கணித்தன. உயிரோடு எஞ்சியிருந்த ஒரு மானைத் தாக்கி, பார் அதன் தொண்டையைக் கவ்வியது. அப்படியே அது பில்ஜியைப் பார்த்தது. முதியவர் ஆமோதிக்கும் வகையில் தலையசைத்தார். ‘‘ம்... காரியத்தை முடி, சாப்பிடுÓ என்றார். பார் தன் தலையைத் தாழ்த்தி, மிக மூர்க்கமாகக் கடித்தது. மான் இறந்துபோனது. அதன் தொடைப் பக்க இறைச்சியைக் கடித்தெடுத்து, சாப்பிடத் தொடங்கியது. அந்தக் கொலையைப் பார்த்த எர்லாங்கின் முதுகு மயிர்கள் குத்திட்டு நின்றன. அதனுடைய கொலை வெறி தூண்டப்பட்டது. ஓடையின் ஒரு வளைவில் கொஞ்சம் தள்ளி உயிரோடிருந்த ஒரு குட்டிமானைப் பார்த்ததும், அது தண்ணீருக்குள் குதித்து நீந்திச் சென்றது. அதைத் திரும்பக் கூப்பிட முனைந்த ஜென்னை முதியவர் தடுத்து நிறுத்தினார். ‘‘அந்த நாய் காட்டுக் குணம் கொண்டது. அது காட்டு

விலங்குகளைக் கொல்வதை நீ அனுமதிக்க மறுத்தால், அது மீண்டும் உன் ஆடுகளின் பக்கம் திரும்பிவிடும்'' என்றார்.

ஓடை வரை அவர்கள் சவாரி செய்தார்கள். அங்கு சென்றதும், அவருடைய சேணத்திலிருந்து தோல் வாரை எடுத்து, அதை ஒரு வளையமாக்கி முடிச்சுப் போட்டார். ஜென், தன்னுடைய காலணிகளைக் கழற்றிவிட்டு, கால் சட்டையைச் சுருட்டிவிட்டுக்கொண்டான். பிறகு, தண்ணீருக்குள் நடந்துசென்று, அந்த வார் வளையத்தை ஒரு மானின் கழுத்தைச் சுற்றிக் கட்டினான். பில்ஜியும் உல்ஜீயும் அந்த விலங்கைக் கரைக்கு இழுத்தார்கள். அங்கு தரையில் அதைப் போட்டுவிட்டு, அடுத்த மானை இழுத்து, சுத்தமான புல் தரையில் போட்டார்கள். அவர்கள் சமைப்பதற்கான ஓரிடத்தைத் தேர்ந்தெடுத்தார்கள்.

''ஒன்றை நாம் சாப்பிடுவோம். இன்னொன்றை நம்மோடு கொண்டு போகலாம்'' என்றார் பில்ஜி. ஒரு மானை சமையலுக்காக வெட்டத் தொடங்கினார் உல்ஜீ. பில்ஜி, ஜென்னை கூட்டிக் கொண்டு வடமேற்கிலுள்ள மலைகளுக்கு விறகுகள் எடுத்து வருவதற்காகச் சென்றார்.

இரண்டு கட்டு விறகுகளை எடுத்துக்கொண்டு அவர்கள் சமையல் இடத்துக்கு வந்தபோது, உல்ஜீ மானின் தோலை உரித்துவிட்டுக் கறியை வெட்டி வைத்திருந்தார்.

அவர்கள் மூவரும் குதிரைகளின் சேணங்களை எல்லாம் அவிழ்த்து விட்டனர். குதிரைகள் ஓடையை நோக்கிச் சென்று, தண்ணீர் குடித்தன. எல்லாமே நல்லபடியாக நடப்பது குறித்து பில்ஜி சந்தோஷமடைந்தார். ''இங்கு நல்ல தண்ணீர் இருக்கிறது. ரொம்ப அருமையான தண்ணீர். கோடை கால மேய்ச்சலுக்கான நிலத்தைத் தேர்ந்தெடுக்கும்போது அதுதான் முதல் தேவை'' என்றார்.

குதிரைகள் வயிறு முட்டத் தண்ணீர் குடித்ததும் சரிவை நோக்கிச் சென்று புல் மேயத் தொடங்கின; அவை சந்தோஷமாகக் கனைத்தன.

சமையல் தொடங்கியது. முதல் முறையாக அன்ன ஏரியைச் சுற்றியிருந்த காற்றில் மான்கறி வாசனை பரவியது; கூடவே எண்ணெய்ப் புகையும் சமையல் பொருள்களின் நறுமணத்தோடு சேர்ந்து பரவியது. அவர்கள் ஏரிக்கு அருகில்

உட்கார்ந்து கொண்டார்கள். விடியலுக்கு முன்பாகவே அவர்கள் கிளம்பி வந்திருந்ததால், பெரும் பசியோடிருந்தார்கள். முதியவரின் ஃப்ளாஸ் கிலிருந்த மதுவைக் குடித்தபடியே, இறைச்சியை சாப்பிட்டார்கள்.

''ஓநாய்கள் எனக்கு சாப்பாடு கொடுப்பது, இது இரண்டாவது முறை'' என்றான் ஜென். ''இதைவிட ருசியான ஒன்றை நான் இதுவரை சாப்பிட்டதில்லை. அதுவும் வேட்டையாடப்பட்ட இடத்திலேயே சாப்பிடுவது அற்புதமாக இருக்கிறது.''

பில்ஜியும் உல்ஜீயும் நெருப்பின்மீது மானின் கால்களை வாட்டினார்கள். பின்னர் அதைத் துண்டு துண்டாக வெட்டி, அவர்கள் கொண்டு வந்திருந்த உப்பைத் தடவினார்கள். வெங்காயம், மிளகு சேர்த்து மீண்டும் அதை வேக வைத்தார்கள்.

முதியவர், மிகுந்த பரவசத்தோடு அதைக் கடித்து, அடுக்கடுக்காக சாப்பிட்டார். ஃப்ளாஸ்கிலிருந்த மதுவைக் குடித்தபடியே, ''இந்தப் புதிய புல்வளியைப் பார்ப்பதற்காக ஓநாய்க் கூட்டம் இங்கு வந்திருப்பது எனக்கு சந்தோஷமளிக்கிறது. இன்னும் இருபது நாட்களில் நம்முடைய ஆட்டுக்குட்டிகள் இங்கு வரக்கூடிய அளவுக்கு வலிமை பெற்றதும், நம்முடைய உற்பத்திக் குழுவை இங்கு கொண்டு வந்துவிடலாம்'' என்றார்.

ஒரு காட்டு வெங்காயத்தோடு ஒரு இறைச்சித் துண்டைச் சேர்த்து, உல்ஜீ கடித்தார். ''முழுக் குழுவும் இங்கு வந்துவிடலாமென்று நீங்கள் நினைக்கிறீர்களா?''

''ஓநாய்கள் இங்கிருக்கின்றன. அதுபோல மான்களும் இருக்கின்றன. நாம் ஏன் இருக்கக்கூடாது. புல் அருமையானதாக இல்லாவிட்டால் மான்கள் இங்கிருக்குமா? மான்கள் குறைவாக இருந்திருந்தால் ஓநாய்கள்தான் இங்கு வந்திருக்குமா? நான் அந்த இன்னொரு மானை எடுத்துச் சென்று, நாளை என்னுடைய இடத்தில் எல்லோரையும் கூட்டப் போகிறேன். ஒவ்வொருவருக்கும் மான் இறைச்சி பொதிக்கப்பட்ட ரொட்டி அப்போது உண்டு. இங்கு தண்ணீர் எவ்வளவு அருமையாக இருக்கிறது என்று தெரிந்ததும், எல்லோரும் போட்டி போட்டுக்கொண்டு வருவார்கள். கோடை மேய்ச்சலுக்குப் புல் மட்டும் நன்றாக இருந்தால் போதாது; நல்ல தண்ணீரும் வேண்டும். கோடையில் தேங்கிக்

கிடக்கும் அழுக்குத் தண்ணீரைவிட மோசமானது வேறேதுமில்லை. விலங்குகளுக்கு நோய் வந்துவிடும்.''

''யாராவது ஆட்சேபணை தெரிவித்தால், நானே அவர்களை இங்கு அழைத்துவந்து காட்டுகிறேன்'' என்றார் உல்ஜீ.

முதியவர் மனம் விட்டுச் சிரித்தார். ''அதற்கு அவசியமில்லை. நான்தான் தலைமை ஓநாய். நான் வந்தால், மற்ற ஓநாய்கள் பின்தாடரும். தலைமை ஓநாயைப் பின்தொடர்வதால் ஒருபோதும் தீங்கு ஏற்படாது.'' அவர் திரும்பி ஜென் சென்னைப் பார்த்தார். ''எப்போதும் நீ என் பின்னால் வருகிறாய், அதனால் உனக்கேதும் தீங்கு ஏற்பட்டிருக்கிறதா?''

ஜென் சிரித்தான். ''ஓநாய் அரசனைப் பின்தொடர்ந்ததால், நான் நல்ல உணவு சாப்பிட்டிருக்கிறேன். அருமையான மது குடித்திருக்கிறேன். யாங் கீயும் மற்றவர்களும்கூட அப்பாவோடு பயணம் செய்ய ஆசையாக இருக்கிறார்கள்.''

''அப்படியானால் பிரச்சனை தீர்ந்தது'' என்றார் உல்ஜீ. ''நாம் திரும்பிப் போனதும், ஒரு கூட்டத்தைப் போட்டு அறிவிக்கப் போகிறேன். கடந்த சில வருடங்களாக, நாம் செலுத்த வேண்டிய பங்கு நிர்ணயம் என்னை மூச்சு விட முடியாமல் செய்து கொண்டிருக்கிறது. இந்தப் புதிய மேய்ச்சல் வெளியின் மூலம் இன்னும் நான்கைந்து வருடங்களுக்குக் கவலை இல்லை.''

''அதன் பிறகு?'' என்று கேட்டான் ஜென். ''வேறு ஏதாவது நிலம் வேறெங்காவது இருக்கிறதா?''

உல்ஜீயின் மன நிலை இருண்டது. ''இல்லை. வேறெந்தப் புல்நிலமும் இல்லை.''

''அப்படியானால் நீங்கள் என்ன செய்யப் போகிறீர்கள்?''

''மந்தைகளின் அளவைக் கட்டுப்படுத்தித் தரத்தைக் கூட்ட வேண்டும். உதாரணமாக, சின்ஜியாங்கின் மேம்பட்ட ஆடுகளை நாம் வளர்க்கலாம். அவை இரண்டு மடங்கு கம்பளிகளை உற்பத்தி செய்யும். மேலும் அது மிகவும் தரமானது. நம்முடைய கம்பளியை விட நாலு மடங்கு விலை போகக் கூடியது. நம்முடைய வருமானத்தில் முக்கிய பங்கு வகிப்பது கம்பளிதான்.''

அது ஒரு நல்ல திட்டமென ஜென் ஒப்புக்கொண்டான். ஆனால் அதன்பிறகு உல்ஜீ பெருமூச்சு விட்டார். ‘‘சீனாவில் மக்கள் தொகை ரொம்ப அதிகம். இன்னும் சில வருடங்களில் எங்களுடைய புல்நிலம், நிர்ணயிக்கப்படும் உற்பத்திக்குப் போதுமானதாக இருக்காது. என் தலைமுறையைச் சேர்ந்தவர்கள் பணி ஓய்வு பெற்ற பிறகு, இளம் தலைமுறையினராகிய நீங்கள் என்ன செய்யப் போகிறீர்களென்று எனக்குத் தெரியவில்லை.’’

உல்ஜீயை உற்றுப் பார்த்தார் பில்ஜி. ‘‘பொறுப்பில் இருக்கும் அதிகாரிகளிடம் நீங்கள் பேச வேண்டும். கால்நடைக் குழுக்கள் மீது விதித்திருக்கும் சுமையைக் குறைக்கும்படி கேளுங்கள். இப்படியே போனால், வானம் மஞ்சளாகிவிடும்; பூமி கலகம் செய்யும்; மணல் நம் எல்லோரையும் புதைத்துவிடும்.’’

உல்ஜீ தலையசைத்தார். ‘‘நாம் சொல்வதை யார் கேட்கப் போகிறார்கள். இப்போதெல்லாம் அதிகாரிகள்தான் என்ன செய்ய வேண்டுமென்பதைத் தீர்மானிக்கிறார்கள். அவர்கள் நம்மைவிட நாகரிகமானவர்களாகவும் சீனமொழி பேசுகிறவர்களாகவும் இருக்கிறார்கள். அது மட்டுமல்ல, புல்நிலப் பகுதிகளைச் சேர்ந்த அதிகாரிகள் ஓநாய்களை வேட்டையாடுவதில் குறியாக இருக் கிறார்கள். அவர்களுக்கு நம் நிலம்பற்றி ஒன்றும் தெரியவில்லை. என்ன செய்வது?’’

குதிரைகள் நன்றாக மேய்ந்துவிட்டு, தலை சாய்த்து, கண்மூடி ஓய்வெடுத்தன.

மூவருமாகச் சேர்ந்து பள்ளத்தாக்கின் பிற பகுதிகளைச் சுற்றி வந்தனர். நான்கு குழுக்களும் எங்கு முகாமிடுவது என்பது பற்றி பில்ஜியுடன் விவாதித்தபடி உல்ஜீ நடந்தார். அந்தக் கண் கொள்ளாக் காட்சியில் வியந்து போயிருந்தான் ஜென். மேய்ச்சல் நிலத்தின் மத்தியிலுள்ள ஒரு ஈடன் தோட்டத்தில் அல்லது ஈடன் தோட்டத்துக்கு நடுவிலுள்ள ஒரு மேய்ச்சல் நிலத்தில் கால் பதித்திருப்பதாக ஜென் பிரமித்துப் போயிருந்தான். எது எப்படியிருந்தாலும் அதிலிருந்து வெளியேற அவன் விரும்பவில்லை. சமையல் செய்த இடத்துக்கு அவர்கள் திரும்பியதும், இரண்டாவது மானை வெட்டி அதன் தோலை உரித்தனர். ஓடையின் ஒரு வளைவைச் சுற்றிலும் கிடந்த மான் சடலங்களைப் பார்த்தபோது ஜென்னை வெறுமை சூழ்ந்தது. அந்தப் புல்நிலத்தில் முதல் அடி பதித்தபோது, அவன் அனுபவித்த சுகமான உணர்வை ரத்த வாசனை

வெளியேற்றியது. சிறிது நேர யோசனைக்குப் பிறகு அவன் முதியவரிடம், ''பனிக்காலத்தில் ஓநாய்கள் மான்களைக் கொல்லும்போது, இளவேனிற் காலத்துக்காக பனிக்கட்டியில் அவற்றை உறைய வைத்து சேமிக்கின்றன. ஆனால் கோடை காலத்தில் அவை ஏன் இவ்வளவு மான்களைக் கொல்ல வேண்டும்?'' என்று கேட்டான். ''ஓடையின் மேலும் பல வளைவுகளிலும் இதைப் போல அவை கிடக்குமென்றே நினைக்கிறேன். இன்னும் இரண்டு நாட்களில் அவை அழுகிப் போய்விடும். அதன்பிறகு சாப்பிட முடியாது. ஒருவேளை இந்த ஓநாய்களுக்குக் கொல்லுவதில் ஒரு ஆனந்தம் இருக்குமோ?''

''இந்த மான்களையெல்லாம் ஏதோ வேடிக்கைக்காகவோ அல்லது தங்களுடைய வலிமையைக் காட்டவோ அவை கொல்லவில்லை'' என்றார் பில்ஜி. ''முதிய, நோய்வாய்ப்பட்ட மற்றும் படுகாயமடைந்த ஓநாய்கள் சாப்பிடுவதற்கு ஏதாவது வேண்டுமென்பதற்காகத்தான் அவ்வாறு செய்கின்றன. புலிகள் போன்ற விலங்குகளால் இங்கு ஏன் வாழ முடியவில்லையென்று தெரியுமா? மேய்ச்சல் நிலத்தை ஏன் ஓநாய்கள் ஆதிக்கம் செலுத்துகின்றன என்றால், அவற்றின் கூட்டு மனோபாவம்தான் காரணம். புலிகள் தங்களுக்காக மட்டுமே ஒன்றைக் கொல்கின்றன; மற்ற புலிகளுக்காக அல்ல. தங்களுடைய ஜோடிகளுக்காகக்கூட இல்லை. அல்லது இளவேனிற்கால சேமிப்புக்காகவும் கிடையாது. ஆனால் ஓநாய்கள் தங்களுக்காகவும், கூட்டத்தின் மற்றவை களுக்காகவும், அந்த வேட்டையில் பங்கு பெற முடியாத, முதிய, முடமான, கிட்டத்தட்ட குருடாகிவிட்ட, இளைய, நோய்வாய்ப் பட்ட மற்றும் குட்டிகளைப் பராமரிக்கும் பெண் விலங்கு களுக்காகவும் அவை கொல்கின்றன. இப்போது நீ இந்தச் சடலங்களை மட்டும்தான் பார்க்கிறாய். ஆனால் இன்றிரவு தலைமை ஓநாய் ஊளையிடும்போது, ஓலோன்புலாக்கிலுள்ள பாதிக்கும் மேற்பட்ட ஓநாய்கள், மற்றும் இந்தக் கூட்டத்தோடு ஏதோ ஒருவகையில் சொந்தமுள்ள வேறு சில ஓநாய்களும் வெளியில் வரும். காலையில் ஒரு எலும்புகூட மிச்சமிருக்காது. ஒரு ஓநாய் தன் கூட்டத்தைப் பேணுகிறது; கூட்டமானது அதைச் சேர்ந்த ஒவ்வொரு ஓநாயையும் பேணுகிறது. இந்த அம்சம்தான் அவற்றை வலிமைமிக்கதாக வைத்திருக்கிறது. சமயங்களில் தலைமை ஓநாயின் ஊளையானது, நூறு ஓநாய்களை யுத்தத்துக்கு வரவழைக்கும்.

இங்கு புலிகள் இருந்ததாக எங்களுடைய முன்னோர்கள் சொல்லியிருக்கிறார்கள். ஆனால் அவையெல்லாம் ஓநாய்களால் விரட்டப்பட்டுவிட்டன. மக்களை விடவும் ஓநாய்கள் குடும்பப் பாங்கானவை; கூடி வாழ்பவை.''

முதியவர் பெருமூச்சு விட்டார். ''ஜெங்கிஸ்கானின் காலத்தில் தான், மங்கோலியர்கள் உண்மையிலேயே ஓநாய்களிடமிருந்து கற்றுக்கொண்டார்கள். எல்லாப் பழங்குடியினரும் ஒரு சக்கரத்தின் கம்பிகளைப் போல, அல்லது அம்பாரத் துணியிலிருக்கும் அம்புகள் போல ஒருங்கிணைந்தனர். அவர்களின் எண்ணிக்கை குறைவென்றாலும், கணிசமான பலம் கொண்டவர்கள். ஒவ்வொருவரும் தங்களுடைய தாயான மேய்ச்சல் நிலத்துக்குத் தங்களுடைய வாழ்க்கையை சந்தோஷமாக ஒப்புக் கொடுத்தனர். வேறெப்படி அவர்களால் உலகின் பாதியை வென்றிருக்க முடியும்? அந்த ஒற்றுமை உணர்வை நாங்கள் இழந்ததிலிருந்துதான் எங்களுடைய வீழ்ச்சி தொடங்கியது. இன்று ஒரு பழங்குடியினருக்கு எதிராக இன்னொரு பழங்குடியினர் கோபத்தோடு அம்புகளை ஏவுகிறார்கள். ஓநாய்களிடமிருந்து யுத்த தந்திரங்களை நாங்கள் கற்றுக்கொண்டோம். ஆனால் அவை போல ஒன்றுகூடி ஒட்டி வாழ்வது எங்களை விட்டுப் போய்விட்டதாகத் தெரிகிறது. நூற்றுக் கணக்கான வருடங்களாக நாங்கள் முயற்சித்து வருகிறபோதிலும் எங்களால் அதில் வித்தகம் பெற முடியவில்லை. என்ன செய்வது? அது பற்றி வெறுமனே பேசுவது வேதனை அளிக்கிறது.''

அந்தக் கொள்ளை அழகான அன்ன ஏரியைப் பார்த்தபடி, சிந்தனையில் தன்னை இழந்திருந்தான் ஜென்.

மானின் இறைச்சியை அதனுடைய தோலில் வைத்துக் கட்டினார் முதியவர். அதை இரண்டு கோணிப் பைகளில் திணித்தார். குதிரைகளின் சேணத்தை மாட்டினான் ஜென். இரண்டு முதியவர்களும் ஆளுக்கொரு பையை அவனுடைய குதிரையின் பின்பக்கமாகப் போட்டு, சேணத்துக்குப் பின்னால் அவற்றைப் பத்திரப்படுத்தினார்கள். மூன்று குதிரைகளும் குழுமத்தின் தலைமை அலுவலகத்தை நோக்கிப் பாய்ந்தோடின.

## 17

போர்க் குதிரைகளின் படுகொலை குறித்த வழக்கில் உயரதிகாரிகள் இறுதி நடவடிக்கை எடுத்திருந்தனர். எல்லாவித உற்பத்திகளுக்கும் பொறுப்பேற்றிருந்த உல்ஜீக்கு நிர்வாகரீதியான தகுதியிழப்பு அறிவிக்கப்பட்டிருந்தது. ஒருங்கிணைந்த மூன்று அமைப்புகளின் தலைமையிலிருந்து அவர் நீக்கப்பட்டு, அடிமட்டப் பிரிவில் கடினமான உடல் உழைப்பு அவருக்கு அளிக்கப் பட்டிருந்தது. அதுபோன்ற தகுதியிழப்புகள், மேய்ப்பர்களான பட்டு, லாசுருங், மற்றும் இருவருக்கும் அறிவிக்கப்பட்டிருந்தது. அது தவிர, பாவோ சுங்காய்க்குத் தலைவர்கள் குழுவின் தலைமைப் பொறுப்பு அளிக்கப்பட்டிருந்ததோடு, கூடுதலாக உற்பத்தி மற்றும் எல்லாவிதப் புரட்சிகர செயல்பாடுகளின் பொறுப்பும் அளிக்கப்பட்டிருந்தது.

பாவோ சுங்காயும் சாங் ஜியோனும் உல்ஜீயோடு சேர்ந்து கால்நடைக் குழுமத்துக்குச் சென்றனர். கலாசாரப் புரட்சிக்கு முன்னதாக, கால்நடைக் குழுமத்தில் அல்லது கால்நடைப் பிரிவில் தான் உல்ஜீ பணியாற்றினார். அப்போது அவர் அடிமட்டங்களில் தான் தன்னுடைய நேரத்தைப் போக்குவது வழக்கம். அங்கு செய்யப்பட வேண்டிய எல்லா வேலைகளையும், அவை அவருடைய பணியாக இல்லாவிட்டாலும், எவ்வித கௌரவமும் பார்க்காமல் இழுத்துப் போட்டுக்கொண்டு செய்வார். அதனால் இப்போது நடந்திருப்பதில் அவருடைய கௌரவமோ செல்வாக்கோ பாதிக்கப்பட்டிருப்பதாக அவர் நினைக்கவில்லை.

ஆனால் அவருடைய இப்போதைய பயணம், வழக்கமான வேகத்தை விடப் பாதியளவு வேகத்தில்தான் நடந்தது. அவர் ஒரு கிழட்டு வெண்குதிரையில் சவாரி செய்தார். அது பின் இளவேனிற்காலக் குளிரால் பாதிக்கப்பட்டிருந்தது. சாங் தன்னுடைய வேகமான குதிரையை உல்ஜீக்குத் தர விரும்பினான். ஆனால் உல்ஜீ அதை ஏற்க மறுத்ததோடு, நேரத்தை வீணாக்காமல் அவனுடைய குதிரையில் விரைந்து செல்லும்படி சாங்கை வற்புறுத்தினார். ஆனால் அவருக்குப் பக்கமாகச் செல்வதையே அவன் விரும்பினான். பில்ஜியின் குடிலில் உல்ஜீ தங்கப் போவதை அறிந்து அவன் மனம் ஆறுதலும் சந்தோஷமும் அடைந்தது.

உல்ஜீயின் விசேஷமான குதிரையில், வெல்வெட் தன்மையோடு கூடிய அருமையான தோல் கொண்ட மஞ்சள் குதிரை, பாவோ சுங்காய் சவாரி செய்தார். உல்ஜீக்கு நெருக்கமாக வருவதற்காக அவர் அடிக்கடி கடிவாளத்தை இறுக்கிப் பிடிக்க வேண்டியிருந்தது. குதிரையும் அவ்வப்போது தன் வேகத்தைக் குறைத்து, அதன் முந்தைய எஜமானரின் முழங்காலைத் தன்னுடைய மூக்கால் தேய்த்துக்கொண்டு சோகமாகக் கனைத்தது.

''உங்களைத் தலைவர்கள் குழுவிலேயே வைத்திருக்க என்னால் முடிந்தவரை முயற்சி செய்தேன்'' என்றார் பாவோ. ''கால்நடைகள் வளர்ப்பு பற்றி எனக்கு எதுவுமே தெரியாது. விவசாய கிராமங்களை உருவாக்குவதில்தான் என் காலம் கழிந்தது. ஆனால் என்னுடைய மேலதிகாரிகள் இந்தப் பரந்துபட்ட புல்நிலப் பொறுப்பை என்னிடம் ஒப்படைத்திருக்கிறார்கள்.''

குதிரையை வேகமாகச் செலுத்த அவர் தொடர்ந்து எடுத்துக்கொண்ட முயற்சியில், உல்ஜீயின் நெற்றி முத்து முத்தாக வியர்த்துவிட்டிருந்தது. ஒரு கிழக் குதிரையில் பயணம் செய்வது, சவாரி செய்பவருக்கும் சரி, குதிரைக்கும் சரி மிகவும் சிரமமானது. அவருக்கு உதவும் வகையில் சாங் தன்னுடைய சாட்டையால் உல்ஜீயின் குதிரையை அடித்தான். ஆனால் உல்ஜீ, அக்குதிரையின் தலையைத் தட்டிக் கொடுத்து அதை அமைதிப்படுத்தினார்.

''அவர்கள் செய்தது சரிதான்'' என்றார் உல்ஜீ. ''அவர்கள் இது ஒரு உற்பத்திப் பிரச்சனையே தவிர, அரசியல் பிரச்சனை இல்லை என்றுதானே சொல்கிறார்கள். அந்த சம்பவம் பரவலான தாக்கத்தை ஏற்படுத்தியிருக்கிறது. அவர்கள் என்னைத் தண்டிக்காவிட்டால், மற்ற இடங்களில் அவர்களுக்குப் பிரச்சனை ஏற்படும்.''

''ஒரு வருடத்துக்கும் மேலாக நான் இங்கிருப்பதால், கால்நடைகளுக்கான புல்நிலத்தை சமாளிப்பது, ஒரு விவசாய சமூகத்தை சமாளிப்பதை விடவும் மிகவும் கடினமானதென்பது எனக்குத் தெரியும். இன்னொரு பெரிய சம்பவம் நடந்தால் நானும் ரொம்ப நாள் இதில் நீடிக்க முடியாது.. உங்களை 'இரண்டாவது உற்பத்திக் குழுமத்'துக்குத்தான் அனுப்ப வேண்டுமென நான்தான் வலியுறுத்தினேன். கால்நடைகளை வளர்ப்பதில் உங்களுக்குள்ள அறிவு எனக்குக் கொஞ்சம் சுலபமாக இருக்கும். மேலும் நீங்கள் பில்ஜியோடு

தங்கப் போகிறீர்களென்று கேள்விப்பட்டபோது, எனக்கு மிகவும் நிம்மதியாக இருந்தது.''

உல்ஜீயின் முகம் பிரகாசித்தது. ''மேய்ச்சலுக்கான புதிய புல்நிலத்துக்கு இரண்டாவது குழுமம் செல்ல, புரட்சிகரக் குழு அனுமதி அளித்துவிட்டதா?''

''ஆம், பில்ஜியின் பொறுப்பில் அந்த நடவடிக்கையை மேற்கொள்ளவும், குழுமத் தலைமை அலுவலகம் எனக்கு உத்தரவிட்டிருக்கிறது. எப்போது செல்வது, அதன் தலைமை அலுவலகத்தை எப்படி அமைப்பது, பொறுப்புகளை எப்படிப் பிரித்தளிப்பது போன்றவற்றையும் அவரே முடிவு செய்வார். மிகவும் தொலைவில் இருக்கிறது, ஓநாய்கள் அதிகமிருக்கின்றன, கொசுத் தொல்லை அதிகம், போதுமான வசதிகள் இல்லை போன்ற ஆட்சேபணைகள் எழுந்தன. ஏதாவது விபரீதம் நடந்தால் அதற்கு நானே பொறுப்பு என்றும் தெரிவிக்கப்பட்டது. அதனால்தான் உங்களோடு நான் அங்கு செல்ல முடிவுடுத்தேன். அங்கு மருத்துவக் கூடம், கம்பளிக்கான சேமிப்புக் கிடங்கு, தற்காலிகத் தலைமை அலுவலகம், மலைகளுக்கூடாகச் சில பாதைகள் போன்றவற்றை உருவாக்க, நான் கட்டுமானப் பிரிவையும் கூட்டிக்கொண்டு போக வேண்டும்.''

உல்ஜீயின் முகம் மேலும் பிரகாசித்தது. அவருடைய எண்ணங்கள் வேறெங்கோ இருப்பதுபோல் தோன்றியது.

பாவோ மேலும் தொடர்ந்தார். ''இதற்கான பெறுமதி உங்களுக்குக் கிடைக்கும். உங்களுடைய இந்தத் தொலைநோக்குப் பார்வைக்கான பெறுமதி. எல்லாக் குழுமங்களுமே, மேய்ச்சலுக்கான நிலம் குறைவாக இருப்பதாகப் புகார்கள் தெரிவிக் கின்றன. புதிய புல்நிலத்தை உருவாக்காமல், நிர்ணயிக்கப்பட்ட புதிய அளவை எவராலும் நிறைவேற்ற முடியவில்லை.''

''ஆட்டுக்குட்டிகளால் இப்போதைக்குப் புதிய மேய்ச்சல் நிலத்துக்கு நகர முடியாது. அவை இன்னும் கொஞ்சம் வளரவேண்டும். அடுத்த சில நாட்களுக்கான உங்களுடைய திட்டங்கள் என்ன?''

''ஓநாய் வேட்டைக்காக சிறந்த வேட்டைக்காரர்களைத் தேர்ந்தெடுத்து, துல்லியமாகச் சுடும் பயிற்சியை அவர்களுக்கு அளிக்கப் போகிறேன். வெடிமருந்தைக் கூடுதலாகத் தர வேண்டுமென நான் ஏற்கெனவே

கேட்டிருக்கிறேன். ஓலோன்புலாக்கை ஓநாய்களிடமிருந்து விடுவிக்கும் வரை நான் ஓயமாட்டேன். கடந்த பத்தாண்டுகளில் ஏற்பட்ட கால்நடை இழப்புகள் பற்றி நான் சமீபத்தில் ஒரு அறிக்கையில் படித்தேன். பாதிக்கும் மேற்பட்ட இழப்புகள், ஓநாய்களால் ஏற்பட்டவையே. பனிப்புயல், வறட்சி, நோய் ஆகியவை இணைந்து ஏற்படுத்திய இழப்புகளை விட ஓநாய்கள் ஏற்படுத்தியது அதிகம். கால்நடை களின் தொகையை அதிகரிக்க இரண்டு வழிகள்தான் இருக்கின்றன: ஓநாய்களை ஒழித்துக் கட்டுவது மற்றும் மேய்ச்சலுக்கான புதிய நிலங்களை உருவாக்குவது.''

''நீங்கள் தவறு செய்கிறீர்கள்'' என்றார் உல்ஜீ. ''ஆம், இழப்புகளுக்கு ஓநாய்கள் பொறுப்புதான். ஆனால் அவற்றை நீங்கள் அழித்துவிட்டால், அந்த இழப்பினால் ஏற்படும் பெரும் விபரீதங்கள் பெரும் துன்பத்தில் கொண்டுபோய் விடும்.''

பாவோ மேல்நோக்கி வானத்தைப் பார்த்தார். ''நீங்களும் பில்ஜியும் மேலும் சில வயதான மேய்ப்பர்களும் எப்போதுமே ஓநாய்களின் பக்கம்தான் இருக்கிறீர்களென மக்கள் சொல்லக் கேட்டிருக்கிறேன். நீங்கள் என்ன சொல்ல விரும்புகிறீர்களோ சொல்லுங்கள். கவலைப்பட வேண்டாம்.''

உல்ஜீ தொண்டையை சரிசெய்து கொண்டார். ''கவலையா? நான் மேய்ச்சல் நிலத்தைப் பற்றித்தான் கவலைப்படுகிறேன். எங்களுடைய மூதாதையர்களால் எங்களுக்கு அளிக்கப்பட்ட நிலம் அழிவதைப் பார்த்துக்கொண்டிருக்க என்னால் முடியாது. பல வருடங்களாக நான் ஓநாய்கள் பற்றி மக்களிடம் சொல்லிக்கொண்டு வருகிறேன். அதை நான் நிறுத்தப் போவதில்லை. மேய்ச்சல் நிலத்துக்கான பொறுப்பை, பத்தாண்டுகளுக்கும் மேலாக நான் ஏற்றுக்கொண்டிருக்கிறேன். மேலும், இருபதாண்டுகளுக்கும் மேலாக கால்நடைகளின் தொகையைக் கவனித்து வருகிறேன். மற்ற கால்நடை வளர்ப்புக் குழுமங்களை விடவும், இரு மடங்கு ஆடு மாடுகளை நாங்கள் வழங்கியிருக்கிறோம். மேய்ச்சல் நிலம்தான் கால்நடை வளர்ப்புக்கு ஆதாரமென்பதால், அதைப் பாதுகாப்பது தான் எங்களுடைய முக்கியமான கடமை. அது ஒரு கடினமான வேலை. புல் மேயும் விலங்குகளின் எண்ணிக்கையைக் கட்டுப் பாட்டில் வைத்திருக்க வேண்டும். குறிப்பாகக் குதிரைகள். ஆடு, மாடுகள் அசை போடுபவை. அதனால் அவை இரவுகளில்

மேய்வ தில்லை. ஆனால் குதிரைகள் தின்பதை ஒருபோதும் நிறுத்துவ தில்லை. அவை கொழுத்தும் ஆரோக்கியமாகவும் இருக்க அது அவசியம். ஒரு வருடத்துக்கு ஒரு ஆட்டுக்கு இருபது ஏக்கர் புல் தேவையென்றால், குதிரைக்கு இருநூறு வேண்டும். மேலும் அவற்றின் குளம்புகள் மேய்ச்சல் நிலத்தைத் துவம்சம் செய்துவிடுகின்றன. கோடையில் அதிகமாக மழை பெய்வதால், புல் வேகமாக வளர்கிறது. ஆனால் வருடத்தின் பிற காலங்களில், மாதத்துக்கொரு முறை எங்கள் மந்தைகளை ஓட்டிக்கொண்டு போக வேண்டும். மாடுகளும் மேய்ச்சல் நிலத்தின்மீது கடுமையான விளைவுகளை ஏற்படுத்துபவையே. அவற்றிடம் காணப்படும் பெரிய பிரச்சனை, அவை ஒவ்வொரு இரவும் ஒன்றாகச் சேர்ந்து வீடு திரும்புவதுதான். அவற்றின் எடையும், கனமான குளம்புகளும் நிலத்தைக் கீறிவிடுகின்றன. அதனால் அவற்றை அடிக்கடி ஓட்டிக்கொண்டு போகாவிட்டால், குடில்களைச் சுற்றிய ஒரு மைல் தூரத்துக்கு மண் குழிகளைத் தவிர வேறேதும் இருக்காது. இவற்றோடு ஆடுகளும் சேர்ந்து கொள்ளும்போது, கேட்கவே வேண்டாம். நாங்கள் அடிக்கடி மந்தையிடத்தை மாற்றாவிட்டால், அடிப்படை முகாமுக்கருகில் ஒரு மைல் தூரத்துக்கு எதுவுமே முளைக்காது. நாங்கள் நாடோடிகளாக வாழ்வதன் மூலம் நிலம் தன்னை ஆசுவாசப்படுத்திக் கொள்கிறது. கனமான குளம்புகளும், அதிகப்படியான விலங்குத் தொகையும்தான் அதனுடைய முக்கிய எதிரிகள்.''

பாவோ உன்னிப்பாகக் கேட்டுக்கொண்டிருப்பதைக் கவனித்த உல்ஜீ மேலும் தொடர்ந்தார். ''ஓநாய்களைக் கொல்வதைக் கணிசமாகக் குறைத்துக்கொள்வதுதான் மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதற்கான வழி. மேய்ச்சல் நிலத்தில் பல மோசமான விலங்குகள் இருக்கின்றன. அவற்றில் அணில்கள், முயல்கள், மர்மோட்டுகள் மற்றும் மான்கள் பெரும் சேதத்தை விளைவிக் கின்றன. ஓநாய்களே அவற்றின் எதிரிகளாக இருந்து, அவற்றை ஒரு கட்டுக்குள் வைத்திருக்கின்றன. மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதன் மூலம் இயற்கைப் பேரழிவுகளிலிருந்து எங்களைத் தற்காத்துக்கொள்ளும் திறனும் கூடியிருக்கிறது. உதாரணத்துக்குப் பனிப்புயல்களை எடுத்துக்கொள்ளலாம். மற்ற பல பகுதிகளைவிட அதை நாங்கள் அதிகமாக அனுபவிக்கிறோம். ஒரு பனிப்புயல் மற்ற மேய்ச்சல் நிலப்பகுதிகளைத் தாக்கும்போது, தங்களுடைய

மந்தைகளில் பாதியை அவர்கள் இழந்துவிடுகிறார்கள். ஆனால் எங்களுடைய இழப்பு அவ்வளவு பெரியதல்ல. ஏன் தெரியுமா? ஏனென்றால் எங்களுடைய நிலம் செழுமையானது. ஒவ்வொரு இலையுதிர் காலத்தின் போதும், அவசர காலத் தேவைக்கென்று நாங்கள் புல்லை வெட்டி சேமித்து வைத்துக்கொள்கிறோம். மேலும் இப்போது எங்களிடம் புல் வெட்டிகள் இருப்பதால், முழு புல் நிலத்தையும் நாங்கள் அறுவடை செய்து சேமிப்பில் வைத்துக் கொள்கிறோம். இயற்கைப் பேரழிவின்போது அது கை கொடுக்கிறது. மேலும் நிலம் செழுமையானதென்பதால், புல் நல்ல உயரத்தில் வளர்கிறது. அதை முழுமையாக மூடி விடுமளவுக்குப் பனிப் பொழிவுகள் கடுமையாக இருப்பதில்லை. ஆரோக்கியமான மேய்ச்சல் நிலத்தில் மண் அரிப்பு ஏற்படுவதில்லை என்பதால் குளங்கள் வற்றிப் போவதில்லை. அதனால் வறட்சியின் போதும், கால்நடைகளுக்குக் குடிக்கத் தண்ணீர் இருக்கிறது. நல்ல புல் என்பதால் விலங்குகள் வளப்பமுடன் இருக்கின்றன. சமீப வருடங் களில் எங்கள் மந்தைகளிடையே நோய் பரவியதில்லை. எங்களுடைய உற்பத்தி அதிகரித்திருப்பதால் கிணறுகள் தோண்டவும், பட்டிகள் கட்டவும் உதவக்கூடிய எந்திரங்களை எங்களால் வாங்க முடிந்திருக்கிறது. இயற்கைப் பேரழிவுகளைத் தாங்கக்கூடிய சக்தி இதன்மூலம் கூடியிருக்கிறது.''

பாவோ ஆமோதிப்பதுபோல் தலையசைத்தார். ‘‘நீங்கள் சொல்வது சரியாகப் படுகிறது. மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாப்பதன் மூலமே கால்நடை வளர்ப்பை மேம்படுத்த முடியும். நான் அதை மறந்துவிடவில்லை. இனி என்னால் முடிந்தவரை அதிகாரிகளைக் குழுமங்களுக்கு வரவழைத்துக் காட்டுவேன். மேய்ப்பர்கள் மந்தைகளை ஓட்டிக்கொண்டு நகர வேண்டிய சமயத்தில் அது நடக்குமாறு பார்த்துக்கொள்வேன். குதிரை மேய்ப்பர்கள் இருபத்து நாலு மணி நேரமும் தங்கள் மந்தைகளுடன் இருந்து, அவை ஒரே இடத்தில் அதிக நேரம் தங்காமல் பார்த்துக்கொள்ள வகை செய்வேன். ஒவ்வொரு குழுவினுடைய புல் நிலத்தையும் மாதத்துக்கொரு முறை சென்று கண்காணிப்பேன். அதிகப்படியாக புல் மேயப்பட்டிருந்தால் வேலைப் புள்ளிகளைக் குறைப்பேன். நிலத்தைப் பராமரிப்பதிலும் பாதுகாப்பதிலும் சிரமம் எடுத்துக் கொள்ளும் குழுக்களுக்கு வெகுமதி அளிப்பதோடு ‘மாதிரி குழுக்கள்Õ என அவற்றுக்கு முத்திரை கொடுப்பேன். ராணுவ நிர்வாக முறைகளை அமல்படுத்தி, ஓலோன்புலாக்கைத்

தொடர்ந்து நல்ல முறையில் நான் நடத்திச் செல்வேன்... ஆனால், ஓநாய்களைச் சார்ந்திருந்து மேய்ச்சல் நிலத்தை நீங்கள் எப்படிப் பாதுகாப்பீர்கள் என்பது மட்டும் இன்னமும் எனக்குப் புரியவில்லை. உண்மையிலேயே அவை அவ்வளவு முக்கியமா?''

உல்ஜீ புன்னகை செய்தார். ''ஒரு கூட்டின் அணில்கள் ஒரு மானைவிட அதிகப் புல் தின்னும் என்பது உங்களுக்குத் தெரியும்போது நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். மேலும் அவை பனிக்காலத்துக்காக உணவை சேமித்து வைக்கும். நான் அவற்றின் தங்குமிடக் கூடுகளை நிலத்துக்கடியில் தோண்டிப் பார்த்தபோது அங்கு கட்டுக் கட்டாக, அருமையான புல்லும், புல்விதைகளும் இருந்தன. அவை வருடத்தில் நான்கு அல்லது ஐந்து முறை பிரசவிக்கும். ஒவ்வொரு முறையும் பத்துக்கும் மேற்பட்ட குட்டிகள் போடும். வருடக் கடைசியில் ஒரு கூடு பத்தாகிவிடும். அவ்வளவு அணில்களும் சேர்ந்து ஒரு வருடத்தில் எவ்வளவு புல் தின்னும் என்பதை நீங்கள் கணக்கிட்டுப் பாருங்கள். முயல்களும் அதே மாதிரி, ஒவ்வொரு வருடமும் பல பெரிய பிரசவங்களை மேற்கொள்ளும். மர்மோட்டுகள் தங்களுடைய வளைகளுக்காக மலைப்பக்கத்தை எப்படித் தோண்டி வைத்திருக்கின்றன என்பதை நீங்கள் பார்த்திருப்பீர்கள். தோராயமாகக் கணக்கிட்டாலும், இவை எல்லாம் சேர்ந்து, நம்மிடமிருக்கும் ஒரு லட்சம் கால்நடைகள் தின்னும் புல்லை விடப் பல மடங்கு அதிகம் தின்னும் என்பதில் சந்தேகமில்லை. ஆனால் இங்கு ஆயிரம் மக்களே வசிக்கிறோம். பீஜிங்கிலிருந்து வந்திருக்கும் மாணவர்கள் இல்லாவிட்டால் அதுகூட இருக்காது. இந்த எண்ணிக்கையை வைத்துக்கொண்டு, இந்த விலங்குகளையெல்லாம் எங்களால் எப்படி அழிக்க முடியுமென்று நீங்கள் நினைக்கிறீர்கள்?''

''கடந்த வருடத்தின்போது நான் அதிக முயல்களைப் பார்த்திருக்கவில்லை'' என்றார் பாவோ. ''தலைமை அலுவலகத்துக்கருகில் ஏராளமான அணில்களைப் பார்த்திருக்கிறேன்; ஆனால் அவற்றை நான் வேறெங்கும் பார்த்ததில்லை. ஏகப்பட்ட மர்மோட்டு களையும் அவற்றின் வளைகளையும் பார்த்திருக்கிறேன். ஆனால் நான் பெருமளவில் கவனித்தது மான்களைத்தான். பத்தாயிரத்துக்கும் மேற்பட்ட மான் கூட்டத்தை நான் சில முறை பார்த்திருக்

கிறேன். சிலவற்றை சுட்டுக் கொன்றிருக்கிறேன். அவைதான் உண்மையிலேயே நாசகாரக் கூட்டம்.''

''நம்முடைய புல்நிலம் அருமையானது. அதன் வளர்ந்த, அடர்த்தியான புல்லுக்குள் முயல்களும் அணில்களும் மறைந் திருக்கும். நீங்கள் கவனமாகப் பார்த்தால்தான் தெரியும். ஆனால் அவை அங்கிருக்கின்றன. இலையுதிர் காலத்தின்போது நீங்கள் அவற்றைப் பார்க்கலாம். மான்களை அவ்வளவு மோசமென்று சொல்ல முடியாது. அவை புல்லைத் தின்கின்றனவே தவிர, நிலத்தில் வளைகள் தோண்டுவதில்லை. அணில்கள், முயல்கள் மற்றும் மர்மோட்டுகள் புல்லைத் தின்பதோடு மட்டுமல்லாமல் வளைகளும் தோண்டுகின்றன. மேலும், அநியாயத்துக்குப் பெற்றுத் தள்ளு கின்றன. ஓநாய்கள் இல்லாவிட்டால், ஓலோன்புலாக்கிலுள்ள எல்லாப் புல்லையும் அந்த விலங்குகள் தின்று தீர்த்துவிடும்; இன்னும் சில வருடங்களில் எங்கு பார்த்தாலும் குழிகள் இருக்கும். அதன் பிறகு, மேய்ச்சல் நிலம் கூடிய சீக்கிரமே பாலையாகிவிடும். ஓநாய்களை ஒழித்துக் கட்டுவதில் நீங்கள் தொடர்ந்து பிடிவாதமாக இருந்தால், இன்னும் மூன்று அல்லது நான்கு வருடங்களில் உங்களுக்கு இங்கு வேலை இல்லாமல் போய்விடும்.''

இளக்காரமாகச் சிரித்தார் பாவோ. 'பூனைகளும் பாம்புகளும் வளை விலங்குகளைப் பிடிக்குமென்று எனக்குத் தெரியும். ஆனால் ஓநாய்களும் அவற்றைப் பிடிக்குமென்று நான் ஒருபோதும் கேள்விப் பட்டதில்லை. ஒரு வளை விலங்கைப் பிடிப்பதற்காக ஒரு நாய்கூடத் தன்னுடைய சக்தியை விரயம் செய்யாது. ஓநாய்கள் அப்படிச் செய்யுமென்று நீங்கள் சொல்கிறீர்களா? அவை ஆடுகளைத் தின்னும்; குதிரைகளைத் தின்னும். அந்த வளை விலங்குகளிடம், ஓநாய்களின் பற்களுக்கிடையே வைத்துக் கடிக்கக்கூடிய அளவுக்குக் கூட போதுமான இறைச்சி இருக்காதே. அவற்றின் உணவில் வளை விலங்குகளுக்கு இடமிருக்குமென்று நான் நம்ப மாட்டேன்.''

உல்ஜீ பெருமூச்சு விட்டார். ''விவசாய மக்களாகிய நீங்கள் செய்யும் தவறு இதுதான். நான் ஓலோன்புலாக்கில் பிறந்து வளர்ந்தவன்; அதனால் எனக்கு ஓநாய்களைப் புரிந்துகொள்ள முடியும். ஆடுகள், மாடுகள், குதிரைகள், மான்கள் போன்ற பெரிய விலங்குகளையே அவை பொதுவாகத் தேர்வு செய்யும். ஆனால் முதல் மூன்றும் மனிதர்களால் மேய்க்கப்படுவதால்,

அவற்றை இரையாக்குவது சிரமம். ஆனால் அவை வாழ்வதற்குச் சாப்பிட்டாக வேண்டும். மான்கள் அதிவிரைவாகச் செல்லக்கூடிய பாதங்கள் கொண்டவை என்பதால் அவற்றை விரட்டிப் பிடிப்பது கடினம். அதற்கு மாறாக, சுலபமாக எடுத்துக்கொள்ளக் கூடியதாக அணில்கள் இருக்கின்றன. பழைய நாட்களில் மோசமான வருடங்களின்போது, அணில்களைப் பிடித்துத் தின்றே ஏழை மக்கள் வாழ்ந்திருக்கிறார்கள். நான் சிறுவனாக இருந்தபோது அடிமையாக வாழ்ந்தேன். போதுமான உணவு கிடைக்காத நேரங்களிலெல்லாம் நான் அணில்களைப் பிடிப்பேன். அவை பெரிதாகவும் கொழுத்துமிருக்கும். மூன்று அல்லது நான்கு வயிற்றை நிரப்பிவிடும். நீங்கள் உடனடியாகச் சாப்பிடாதவற்றின் தோலை உரித்துவிட்டு, இறைச்சியைக் காய வைத்தால், அடுத்த வேளைக் கான ருசியான உணவாக அது இருக்கும். உங்களுக்கு நம்பிக்கை இல்லாவிட்டால், நான் சிலவற்றைப் பிடித்து ஒருநாள் உங்களுக்கு வாட்டித் தருகிறேன். எவ்வளவு மென்மையான இறைச்சி என்பதை நீங்கள் அறிவீர்கள். ஜெங்கிஸ்கான்கூட அணில் கறி சாப்பிட்டிருக்கிறார்.''

அவர்களுக்கிடையேயான உரையாடலை ஈடுபாட்டுடன் கேட்டுக்கொண்டிருந்த சாங், தன்னுடைய அபிப்ராயங்களைத் தெரிவிக்க வேண்டிய அவசியத்தை உணர்ந்தான். ``நான் இரண்டு வருடங்களாகக் குதிரைகளை மேய்த்து வருகிறேன். ஓநாய்கள் அணில்களைப் பிடிப்பதை நான் பார்த்திருக்கிறேன். நாய்களை விடவும் அவை திறமையாக அதைச் செய்கின்றன. பெண் ஓநாய்களுக்கும் அவற்றின் குட்டிகளுக்கும் அணில்கள் மிகவும் பிடித்தமான உணவு. குட்டிகள் பால் குடியை மறப்பதற்கு முன்பாக, அவற்றின் தாய் ஓநாய்கள் எப்படி வேட்டையாடுவதென்பதை அவற்றுக்குச் சொல்லிக் கொடுக்கும்போது, அணில்களை வைத்தே ஆரம்பிக்கும். பிரசவித்த குட்டிகள் மிகவும் சின்னதாக இருக்கும்போது தாய் ஓநாய்கள் மற்ற ஓநாய்களோடு வேட்டையில் கலந்து கொள்வதில்லை. மேலும் மனிதர்களுக்குப் பயந்து அவர்களுடைய குடியிருப்புகளிலிருந்து எவ்வளவு தூரம் தள்ளி வைத்திருக்க முடியுமோ அவ்வளவு தள்ளித்தான் தன் குட்டிகளை குகைகளில் வைத்துக்கொள்கின்றன. அந்த இடங்களில் கால்நடைகள் இருப்ப தில்லை என்பதால், அவை எதைச் சாப்பிடும்? எப்போதாவது இறைச்சியையும் எலும்புகளையும், வெற்றிகரமான வேட்டைக்குப் பின்பு மூத்த ஓநாய்கள்

கொண்டு வந்து தருமென்றாலும், அவை அணில்களையும் மர்மோட்டுகளையும் சாப்பிட்டே உயிர் வாழ்கின்றன.''

''இன்னும் இருக்கிறது'' என்றார் உல்ஜீ. ''ஓநாய்கள் இல்லா விட்டால், நாங்களும் எங்களுடைய கால்நடைகளும் இயற்கைச் சீற்றத்தின்போது, மிக மோசமான நெருக்கடிகளுக்கு ஆளாகிவிடுவோம். நூறு அல்லது இருநூறு ஆண்டுகளுக்குள் ஏற்பட்ட மிக மோசமான பனிப்புயலின்போது, எங்களுடைய கால்நடைகளின் எண்ணிக்கை அபரிமிதமாக இருந்தது. பிறகு, பனி உருகியபோது, இறந்துபோன ஆடு மாடுகளின் சடலங்கள் குவிந்து கிடந்தன. அவை கூடிய சீக்கிரம் அழுகிவிடும். அவை புதைக்கப்படா விட்டால், தொற்று நோயால் பாதிக்கும் மேற்பட்ட மக்களும் விலங்குகளும் இறந்துவிடுவார்கள். ஆனால் ஓநாய்கள் கண் மூடிக் கண் திறப்பதற்குள் சடலங்களைக் காலி செய்துவிடும். எங்களைச் சுற்றி ஓநாய்கள் இருந்துகொண்டிருக்கும் வரை, கொள்ளை நோய் எங்களை அண்டாது. ஓலோன்புலாக்கில் ஒருபோதும் கொள்ளை நோய் ஏற்பட்டதில்லை. பழைய நாட்களில், இங்கு யுத்தங்கள் நடந்தபோது, யுத்தகளத்தில் ஆயிரக்கணக்கான மனித மற்றும் மிருகங்களின் சடலங்கள் சிதறிக் கிடக்கும். அவற்றை அப்புறப் படுத்தியது யார்? ஓநாய்கள். ஓநாய்கள் மட்டும் இருந்திருக்கா விட்டால், மேய்ச்சல் நில மக்களைக் கொள்ளை நோய் என்றோ சூறையாடி இருக்குமென்று பழைய காலத்தைச் சார்ந்தவர்கள் எங்களுக்குச் சொல்லியிருக்கிறார்கள். நல்ல நீரும் அடர்ந்த புல்லும் கொண்ட இடமாக ஓலோன்புலாக்கை வைத்துக்கொண்டிருப் பதற்காக நாங்கள் ஓநாய்களுக்கு நன்றி சொல்ல வேண்டும்.''

ஒரு வார்த்தையும் பேசாமல் கேட்டுக்கொண்டிருந்தார் பாவோ. மூன்று குதிரைகளும் ஒரு சரிவில் மேல்நோக்கிச் சென்றன. அவர்களுக்கு மேலாக வானில் பாடிக்கொண்டிருந்த பசும்புல் நில வானம்பாடிகள், கீழிறங்கி வளர்ந்த புல்லுக்குள் மூழ்கின; தரையில் இருந்த வானம்பாடிகள் நீல வான் நோக்கி, தங்களுடைய சொந்த இசையைப் பாடியவாறே, மேலெழுந்து சென்றன.

''இது, என்ன ஒரு அற்புதமான காட்சி, இல்லையா?'' என்று வியந்தார் உல்ஜீ. ''ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னிருப்பதுபோல, எவ்வித நாசமும் அடையாமல் அப்படியே இருக்கிறது. சீனாவிலேயே மிக அழகிய மேய்ச்சல் நிலம் இது. பல நூற்றாண்டுகளாக, மனிதர்களும் ஓநாய்களும் இந்த இடத்தை

நாசமடையாமல் போற்றிப் பாதுகாத்து வந்திருக்கிறார்கள். நம்முடைய கைகளால் இதற்கு எந்த வேதனையும் வந்துவிட அனுமதிக்கக் கூடாது.''

''மாணவர்களாகிய எங்களுக்கு, மேய்ச்சல் நிலம் பற்றியும் அதனுடைய ஓநாய்கள் பற்றியும் நாங்கள் தெரிந்துகொள்ளும் வகையில் நீங்கள் பாடமெடுக்க ஏற்பாடு செய்ய வேண்டும்'' என்றான் சாங் ஜியோன்.

உல்ஜீயின் முகம் இருண்டது. ''நான் அதிகாரியாக நீக்கப்பட்டு விட்டேன். எந்தவொன்றையும் ஏற்பாடு செய்யும் அதிகாரம் எனக்கில்லை. மூத்த மேய்ப்பர்களிடமிருந்து நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டியது அவசியம். எப்படியும் அவர்களுக்கு என்னைவிட அதிகமாகத் தெரியும்.''

அவர்கள் இன்னொரு மேட்டைக் கடந்த பிறகு, கடைசியாக பாவோ பேசினார். ''உல்ஜீ, மேய்ச்சல் நிலம் குறித்த உங்களுடைய ஆழமான உணர்வுகளை எவரும் மறுப்பதற்கில்லை. ஆனால் உங்களுடைய அரசியல்தான் உங்களுக்குப் பிரச்சனை. கடந்த காலத்தில் நடந்த விசயங்களைப் பற்றியே நீங்கள் பேசுகிறீர்கள். ஆனால் இது புதுயுகம். சீனாவுக்கான அணுயுகம். இன்றைய தேவைகளைப் பழைய பாணி சிந்தனை முறைகளைக் கொண்டு அணுகுவதென்பது ஒரு பெரிய பிரச்சனை. நான் இந்தப் புல்நிலத்துக்கு வந்ததிலிருந்து தொடர்ந்து தீவிரமாகச் சிந்தித்து வருகிறேன். இதன் விஸ்தீரமானது, தென்மூலையில் உள்ள ஒரு மாவட்டத்தின் ஒட்டுமொத்தப் பரப்பளவுக்குச் சமமானது. இதில் ஆயிரம் பேர் வசிப்பதானது, எங்களுடைய ஒரு கிராமத்தின் மக்கள் தொகையை விடக் குறைவு. இது அநியாயமான விரயம். கட்சிக்கும் தேசத்துக்கும் மகத்தான செல்வத்தை உருவாக்கும் வகையில், இந்தப் பின்தங்கிய, பழமையான நாடோடி வாழ்க்கை முறைக்கு நாம் ஒரு முடிவு கட்டியாக வேண்டும். இதுபற்றி அலசி ஆராய, சில நாட்களுக்கு முன் நான் சிறு பயணம் மேற்கொண்டேன். நம்முடைய தென்பகுதியில் கருப்பு மண் கொண்ட ஒரு நிலப்பகுதியைப் பார்த்தேன். ஆயிரக்கணக்கான ஏக்கர் பரப்பு கொண்டது. அந்த இடத்தை நான் மண்வெட்டியால் தோண்டியபோது, அதன் மேல்பரப்பு மண் இரண்டடி கனம் கொண்டதாக இருந்தது. இப்படி யான அருமையான நிலத்தை, ஆடுகள் மேய்வதற்காக வைத்திருப்பதென்பது வெட்கக்கேடானது. தலைமை அலுவலகக் கூட்டத்தின்போது, ஒரு விவசாய வல்லுனரிடம் இதுபற்றிக்

கேட்டபோது, அந்த நிலம் கோதுமை பயிரிடுவதற்கு மிகவும் சிறந்தது என்றார். மிகப் பெரிய அளவில் பயிர் நிலமாக்கும் திட்டத்தை மேற்கொள்ளாமல், சில நூறு அல்லது ஓராயிரம் இரண்டாயிரம் ஏக்கர் பரப்பில் மட்டும் பயிர் செய்வதால் அபாயமொன்றும் ஏற்படாது.''

உல்ஜீ ஏதும் பேசவில்லை. பாவோ தொடர்ந்தார். ''தண்ணீர் நிலவரம் பற்றியும் பார்த்தேன். அங்கு தண்ணீர் வர வைப்பதும் சுலபம். ஒரு கால்வாய் வெட்டி, ஆற்றிலிருந்து அங்கு தண்ணீர் கொண்டு வந்துவிடலாம். நம்மிடம் ஆடு மாடுகளின் உரம் ஏராள மாக இருப்பதால் அதுவே செழுமையைக் கூட்டப் போதுமானது. நாம் அங்கு கோதுமையைப் பயிர் செய்தால், முதல் வருடத்தில் மஞ்சள் நதிப் பிராந்தியத்தில் ஒரு ஏக்கரில் விளைவிப்பதை விட நம்மால் அதிக விளைச்சலைத் தர முடியுமென்பதில் சந்தேக மில்லை. இதை நாம் தொடரும்போது, விவசாய உற்பத்தி, கால்நடை உற்பத்தியை சில வருடங்களில் விஞ்சிவிடும். அது நிகழும்போது, நமக்கும் நம் விலங்குகளுக்கும் தேவையான உணவை நம்மால் வழங்க முடிவதோடு, நாட்டின் பிற பகுதிகளுக்கும் நாம் வினியோகிக்க முடியும். நாட்டில் தானியத் தட்டுப்பாடு நிலவுகிறது. என்னுடைய சொந்த ஊரில் மக்களுக்குப் போதுமான உணவில்லை; ஒவ்வொரு வருடமும் சராசரியாக மூன்று மாதத்துக் கான உணவுப் பொருள் பற்றாக்குறை காணப்படுகிறது. பரிசோதனை முயற்சியாக, அந்தக் கருமண்ணில், நான் பயிர் செய்யப் போகிறேன். அது வெற்றிகரமாக அமைந்துவிட்டால், பின் நாம் முழு வீச்சில் அதில் ஈடுபடலாம். தென்மூலையின் சில சமூகங் களில், மேய்ச்சல் நிலப் பற்றாக்குறையால் கால்நடை வளர்ப்பை நிறுத்தப்போவதாகக் கேள்விப்பட்டேன். அவர்கள் பயிர் விளைச்சலில் ஈடுபட முடிவெடுத்திருக்கிறார்கள். மங்கோலிய உட்பகுதிகளின் எதிர்காலம் இனி இவ்வாறுதான் இருக்கப் போகிறதென நான் நினைக்கிறேன்.''

உல்ஜீயின் முகம் தொங்கிவிட்டது. ''அந்த நாள் வரப் போகிறதென்று எனக்குத் தெரியும். கால்நடைகளின் அளவு நிர்ணயம் குறித்து உங்களைப் போன்றவர்கள் ஒருபோதும் யோசித்ததில்லை. எண்ணிக்கையை அதிகரிக்குமாறு தொடர்ந்து எங்களைக் கட்டாயப்படுத்தி வருகிறீர்கள். இப்போது சகட்டுமேனிக்கு ஓநாய்களைக் கொல்லக் கிளம்பியிருக்கிறீர்கள். புல் மறையும் நாளுக்காகக் காத்துக்கொண்டிருக்கிறீர்கள். பிறகு, உங்கள்

பயிர்களால் இந்த நிலத்தை மேவிவிடுவீர்கள். உங்களுடைய சொந்த மண்ணானது, சில தலைமுறைகளுக்கு முன்பு வரை புல்நிலமாகத் தானிருந்தது. அது பயிர்நிலமாக மாற்றப்பட்டது, ஒரு தலைமுறைக்குக் கொஞ்சம் முன்னால்தான். ஆனால் போதுமான தானியம் விளையவில்லை...''

‘‘நீங்கள் கவலைப்பட வேண்டாம்'' என்றார் பாவோ. ‘‘என் சொந்த ஊரிலிருந்து நான் பாடம் கற்றுக்கொண்டிருக்கிறேன். உழுது பயிரிடக்கூடிய நிலத்துக்கும் அப்படித் தோதில்லாத நிலத்துக்குமான வேறுபாட்டை நான் கண்டறிவேன். பயிர் அல்லது புல் என்ற ஒரு வழிப் பாதையைத் தேர்ந்தெடுப்பது தவறு. அதில் பாதி, இதில் பாதி என்பதுதான் சரியானதாக இருக்கும். அருமை யான புல்நிலம் பாதுகாக்கப்படவும், கால்நடைகள் அருமையாக வளர்க்கப்படவும் வேண்டிய எல்லாக் காரியங்களையும் நான் செய்வேன். கால்நடைகள் இல்லாமல் எப்படி நல்ல உரம் கிடைக்கும்? நல்ல உரமில்லாமல் தானிய உற்பத்தி எப்படி நடக்கும்?''

உல்ஜீயின் முகம் கோபத்தில் மாறியது. ‘‘விவசாயிகள் இங்கு வந்து இந்த நிலத்தைப் பார்த்த பின்பு, உங்களால் அவர்களைக் கட்டுப்படுத்த முடியாது. உங்களுடைய தலைமுறையினர் எப்படியோ சமாளித்தாலும், அடுத்த தலைமுறையை எப்படிக் கட்டுப்படுத்த முடியும்?''

‘‘ஒவ்வொரு தலைமுறையும் அதன் விவகாரங்களைக் கவனித்துக்கொள்ளும். என்னுடைய அக்கறை அடுத்த தலைமுறை சார்ந்ததல்ல'' என்றார் பாவோ.

‘‘ஓநாய்களை வேட்டையாடி அழித்தொழிக்க இன்னமும் உங்களுக்குத் திட்டமிருக்கிறதா?''

‘‘இந்த வேட்டைக்கு ஆதரவளிக்காததுதான் உங்களுக்குப் பெரும் சிக்கலை ஏற்படுத்தியிருக்கிறது. அதனால் நான் அந்தப் பாதையைத் தேர்ந்தெடுக்க மாட்டேன். ஓநாய்கள் இன்னொரு குதிரை மந்தையைப் படுகொலை செய்துவிட்டால், உங்கள் கதிதான் எனக்கும் ஏற்படும்.''

தூரத்தில் அடிப்படை முகாமுக்கு மேலாக, சிம்னி புகை வெளிவந்து கொண்டிருப்பதை அவர்கள் பார்த்தார்கள்.

‘‘உங்களுக்கு ஒரு கிழக் குதிரையைக் கொடுத்து, நம்மை மெதுவாக வரச் செய்துவிட்டார்கள்.''

பின், சாங் ஜியோன் பக்கமாகத் திரும்பிய பாவோ, ‘‘நீ மந்தைக்குத் திரும்பிச் சென்றதும், உல்ஜீக்கு ஒரு நல்ல குதிரையைப் பிடி. நான் சொன்னதாகப் பட்டுவிடம் சொல்’’ என்றார்.

‘‘நாங்கள் குழுமத்துக்குச் சென்றுவிட்டால், ஒரு மோசமான குதிரையில் உல்ஜீ சவாரி செய்வதை ஒருவரும் அனுமதிக்க மாட்டோம்’’ என்று பதிலளித்தான் சாங்.

‘‘எனக்கு செய்யவேண்டிய காரியங்கள் இருப்பதால், நான் முன்னால் செல்கிறேன். நான் பில்ஜியின் குடிலில் உங்களுக்காகக் காத்திருப்பேன். நீங்கள் நிதானமாக வந்து சேருங்கள்Ó என்றார் பாவோ. கடிவாளத்தைத் தளர்த்தி, குதிரையில் பாய்ந்து சென்றார்.

சாங் அந்தக் கிழட்டுக் குதிரைக்குப் பக்கமாகச் சென்றவாறே உல்ஜீயிடம் பேசினான். ‘‘பாவோ உங்களை நன்றாகவே நடத்துகிறார். தலைவர்கள் குழுவில் நீங்கள் தொடர்ந்து நீடிக்க வேண்டுமென அவர் வலியுறுத்தியதாகத் தலைமை அலுவலகத்தில் சொன்னார்கள். அவர் முன்னாளில் ராணுவத்தில் இருந்தவரென்பதால் அந்தப் பழக்கங்களும் குணாம்சமும் அவரிடம் வெளிப்படுகிறது. அதனால் நீங்கள் கோபப்பட வேண்டாம்.’’

‘‘அவர் எதைச் செய்தாலும் தீவிர முனைப்போடு செயல்படுபவர். விவசாயம் சம்பந்தப்பட்டு அவரை விஞ்சக் கூடியவர் எவருமில்லை. ஆனால் இங்கு அவர், இந்த மேய்ச்சல் நிலத்துக்கு ஆபத்தானவர்.’’ உல்ஜீ மிகவும் தீர்க்கமாகத் தெரிவித்தார். ‘‘நான் முதன்முதலாக இங்கு வந்தபோது இது நடந்திருந்தால், அனேகமாக அவர் பக்கம்தான் நான் இருந்திருப்பேன். விவசாய கிராமங்களில் ஏராளமான மக்கள் பசியால் வாடிக்கொண்டிருக் கிறார்கள். அதனால் அவருடைய பார்வையைப் பல மாணவர்கள் ஆதரிக்கிறார்கள். ஆனால் இனியும் இந்த விசயத்தை அந்த மாதிரி என்னால் பார்க்க முடியாது. உங்களுடைய பார்வைதான் தீர்க்கமானது. பெரிய உயிர்கள், சிறிய உயிர்கள் என்பதை விவசாய மக்களால் புரிந்துகொள்ள முடியாது. ஆயிரம் ஆண்டுகளுக்கும் மேலாக, இங்கு ஒரு எளிய மேய்ச்சல்நில தர்க்க முறையொன்று நிலவுகிறது; அது வளர்ச்சி பற்றிய புறவயப் பார்வையோடு இணக்கம் கொண்டிருக்கிறது என்று ஜென் சென் சொல்லியிருக்கிறான். க்யுங் அரச பரம்பரையின் முதல் இருநூறு ஆண்டுகளின் போது, மஞ்சு

ஆட்சியாளர்கள் மிக அருமையான கொள்கையைக் கொண்டிருந்ததாக அவன் நினைக்கிறான்; அவர்கள் விவசாயப் பகுதிகளிலிருந்து மக்கள் அதிக அளவில் இடம்பெயர்வதைத் தடை செய்திருந்தார்கள். அதன் மூலம் மிக மோசமான விளைவுகள் ஏற்படுமென அவர்கள் நம்பினார்கள்.''

'மேய்ச்சல் நில தர்க்கமுறை' என்ற வார்த்தைப் பிரயோகமானது உல்ஜீயின் மனதில் ஊடுருவிவிட்டிருந்தது. அதை நினைவில் பதித்துக்கொள்வதற்காக, இரண்டு முறை சொல்லிப் பார்த்துக்கொண்டார். பிறகு அவர், ''ஆனால் பின்னர் வந்த வருடங்களில் அவர்களால் சீனாவிலிருந்து வந்த பெரும் மக்கள் தொகையைத் தடுக்க முடியவில்லை. அதனால்தான் வடக்குப் பக்கமாக மேய்ச்சல் நிலம் சுருங்கியது. அதன்பிறகு, மேற்குப் பக்கமும் சுருங்கியது. பெருஞ்சுவருக்கு வடக்காக இது நடந்திருந்தால் பீஜிங்கின் கதி என்னவாகியிருக்கும்?''

குதிரைகள் ஒரு நீரூற்றில் தண்ணீர் குடித்தன. உல்ஜீக்கு ஒரு நல்ல குதிரையாகப் பார்க்க வேண்டுமென சாங் நினைத்துக்கொண்டான்.

பாலையும் இறைச்சி கலந்த புல்லரிசிக் கூழையும் ஜென் சென் கலக்கினான். அதிலிருந்து <u>வெளியேறிய</u> ஆவியின் மணம் பிரமாதமாக இருந்தது. எல்லா நாய்களும் அவனுடைய வீட்டுக் கதவின் முன் வரிசையாக நின்று பசியோடு ஊளையிட்டன. இறைச்சி கலந்த புல்லரிசிக் கூழ் ஓநாய்க்குட்டிக்கானது.

நாய்க்குட்டிகளுக்கு உணவூட்டும் ரகசியத்தைக் கஸ்மாய் அவனுக்கு சொல்லிக் கொடுத்திருக்கிறாள். ''குட்டிகள் பால்குடி மறந்ததும், உடனேயே அவற்றுக்குப் பாலும், இறைச்சி கலந்த புல்லரிசிக் கூழும் கட்டாயம் கொடுக்க வேண்டும். அவை பெரிதாகவும் பலத்தோடும் வளர அது மிகவும் முக்கியம். பால்குடி மறந்த முதல் மூன்று அல்லது நான்கு மாதங்களில் அவை என்ன சாப்பிடுகிறதோ, அதுதான் அவற்றின் வளர்ச்சியை, குறிப்பாக அவற்றின் எலும்புகளின் பலத்தை, தீர்மானிக்கிறது. அதைச் சரிவரச் செய்யாவிட்டால், அதற்குப் பிறகு என்னதான் கொடுத்தாலும், வலுவான, பெரிய நாய்களாக அவை ஆகமுடியாது. நன்றாக ஊட்டமளிக்கப்பட்ட குட்டிகள், மோசமாக உணவளிக்கப்பட்ட குட்டிகளை விட, இரண்டு மடங்கு பெரியதாக வளரும். அவைதான் ஓநாயோடு நன்கு சண்டையிடும்.''

ஒருமுறை, சுவரொன்று கட்டுவதற்காக அவர்களுடைய குழு பாறைகளை இழுத்துக் கொண்டிருந்தபோது, யாரோ ஒருவருடைய எலும்பும் தோலுமாய் இருந்த நாயைச் சுட்டிக்காட்டி ஜென்னிடம் தணிந்த குரலில் கஸ்மாய், 'பாரோடு சேர்ந்து பிரசவமான நாய் அது. எவ்வளவு வித்தியாசம் பார்?'' என்றாள். இரண்டும் ஒரே பிரசவத்தில் பிறந்தவை என்பதை ஜென்னால் நம்ப முடியவில்லை. ''மேய்ச்சல் நிலத்தைப் பொறுத்தவரை, நாயின் நல்ல இனப்பெருக்கம் மட்டும் முக்கியமில்லை; அதற்குக் கடுமையாகத் தீனி போட வேண்டியதும் அவசியம்.'' ஜென் அதை மனதில் இருத்திக்கொண்டான். குட்டியின் வயிற்றுக்குள் என்ன செல்கிறதென்பதில் கவனமாக இருந்தான். கஸ்மாயின் நாய்க்குட்டி உணவு முறையை அவன் தன்னுடைய ஓநாய்க்குட்டிக்கு அளித்தான்.

கஸ்மாய் தொடர்ந்து பேசினாள். ''குட்டிகள் பால்குடி மறந்ததும் பெண்களுக்கும், ஓநாய் அம்மாக்களுக்கும் இடையே ஒரு போட்டி உருவாகும்.

ஓநாய்கள் தங்களுடைய குட்டிகளுக்கு உணவளிக்கவும், வேட்டை பழக்குவதற்கும் அணில்கள், மர்மோட்டுகள் மற்றும் ஆட்டுக்குட்டிகளை வேட்டையாடும். அவை அருமையான தாயுள்ளம் கொண்டவை. அடுப்போ, நெருப்போ, சட்டிகளோ இல்லை என்பதால் அவற்றால் கறிக் கூழை சமைக்க முடியாது. ஆனால் அவற்றின் வாய்கள், நாம் உபயோகிக்கும் சட்டிகளை விடச் சிறந்தவை. அணில்களையும் மர்மோட்டுகளையும் அவை தம் பற்களால் மென்று, மிருதுவான, வெதுவெதுப்பான கொத்துக்கறியாக்கி, தங்களுடைய எச்சிலோடு சேர்த்துக் குட்டிகளுக்குக் கொடுக்கும். அவை அற்புதமாக வளரும். மேய்ச்சல்நிலப் பெண்கள் தங்களுடைய நாய்களோடு சென்று இரவுக் காவல் செய்வதன் மூலம் வேலைப் புள்ளிகளை சம்பாதிக்கிறார்கள். அதனால்தான் அவர்கள், தாய் ஓநாய்களை விடவும் பரிவோடும் தீவிரமாகவும் பராமரிக்கிறார்கள். சோம்பேறிப் பெண்கள் மோசமான நாய்களையும், சுறுசுறுப்பான பெண்கள் பெரிய வலுவான நாய்களையும் வளர்த்தெடுக்கிறார்கள். ஒரு நாயைப் பார்த்தால், அந்தக் குடிலில் எப்படியான பெண் வசிக்கிறாள் என்பதை உன்னால் தெரிந்துகொள்ள முடியும்.''

ஓநாய்க்குட்டியை வளர்க்கும் பொறுப்பை மேற்கொண்டதிலிருந்து ஜென் தன்னுடைய பழக்க வழக்கங்களை மாற்றிக்கொண்டான். எப்படி இப்படி பாடுபட்டு உழைக்கிறவனாகவும், தாய்மை உள்ளம் கொண்டவனாகவும் மாறினாய் என்று வியப்புடன் கேட்டு சாங் அவனைக் கேலி செய்தான். உண்மையில், ஒரு தாய் ஓநாயை விடவும் அல்லது கஸ்மாயை விடவும் கூடுதலாகக் கவனமெடுத்து பராமரிக்க வேண்டுமென ஜென் உணர்ந்திருந்தான். எலும்புகள் வலுப்பெற பால் மட்டுமே போதாது; கூடுதலான கால்சியம் அவசியம். அதற்காக அவன் இறைச்சியோடு மென்மையான எலும்புகளையும் சேர்த்துக் கொடுத்தான். மேலும், புல்நிலத் தலைமை அலுவலகத்திலுள்ள மருத்துவமனைக்குச் சென்று கால்சியம் மாத்திரைகளை வாங்கி வந்து, அவற்றைப் பொடியாக்கி இறைச்சியோடு கலந்து கொடுத்தான். ஒரு தாய் ஓநாயோ, கஸ்மாயோ இப்படி நினைத்துப் பார்த்திருக்க மாட்டார்கள். மேலும் இறைச்சிக் கூழ் மட்டும் பத்தாது என்று ஜென் நினைத்தான். அதோடு வெண்ணெயும் உப்பும் சேர்த்தான். அப்போது வெளிப்பட்ட வாசனையில் அவனுக்கே அதில் ஒரு கோப்பை சாப்பிட வேண்டும் போலிருந்தது. ஆனால்

மூன்று நாய்கள் வேறு இருந்ததால் அந்த ஆசையைக் கட்டுப்படுத்திக் கொண்டான்.

ஒவ்வொரு வேளை உணவுக்கு பின்பு, அதனுடைய வயிறு ஒரு மத்தளத்தைப் போல இறுக்கமாக இருந்தது. நன்கு கொழுத்த, ஓரக்கண் பார்வை கொண்ட சிரிக்கும் புத்தரைப் போல் காணப்பட்டது. அது வேகமாக வளர்ந்தது. அது இப்போதே, அதனோடிருக்கும் நாய்க்குட்டிகளை விட நீளமாக இருந்தது.

கூழின் சூடு ஆறுவதற்காக, கதவுக்குப் பக்கத்திலேயே இருந்த ஒரு பலகை அடுக்கின் மீது அதை வைத்தான். கதவை லேசாகத் திறந்து, அதை உள்ளே தள்ளிவிட்டு, உடனே கதவை மூடிவிட்டான். எர்லாங்கைத் தவிர, அந்தப் பகுதியிலுள்ள எல்லா நாய்களும் ஓடிவந்தன. எல்லோவும் யிர்ரும் ஜென்னின் மார்பில் பாதங்களை வைத்துக்கொண்டு நின்றன. எல்லோ, அதனுடைய பிரியத்தைக் காட்டும் வகையில், அவனுடைய முகவாய்க்கட்டையை நக்கிக் கொடுத்தது. நாய்க்குட்டிகள் மூன்றும் அவன் கால்களைச் சுற்றி வந்தன. ஆனால் ஓநாய்க்குட்டி கதவைத் தாக்கி, இடைவெளியில் மூக்கை நுழைத்து, குடிலுக்குள் இருந்த கூழை மோப்பம் பிடித்தது. கதவுப் பலகையில் ஊர்ந்து உள்ளே செல்ல முயற்சித்தது.

எந்த ஒன்றுக்கும் முன்னதாக வேறெந்த ஒன்றையும் முன்னிறுத்த அவன் விரும்பவில்லை. ஓநாய்க்குட்டி அவனுடைய செல்லம் என்றாலும், நாய்க்குட்டிகள் மீதும் அது போன்ற பிணைப்பு அவனுக்கிருந்தது. எந்தவொன்றும் புறக்கணிக்கப்பட்டு விட்டதான எண்ணம் ஏற்பட்டால் அதை அவனால் தாங்கிக்கொள்ள முடியாது. நாய்களை சமாதானப்படுத்தும் வரை, ஓநாய்க்கு அவனால் உணவளிக்க முடியாது.

ஜென் தன் கைகளால் எல்லோவைச் சுற்றி வளைத்தான். பிறகு யிர்ரையும் கட்டி அணைத்தான். பிறகு அவற்றைப் பிடித்துக் காற்றில் சுழற்றினான். அவனுடைய நெருக்கமான உணர்வையும், பிரியத்தையும் அவனுக்குத் தெரிந்த வழியில் வெளிப்படுத்தினான். அவையும் சந்தோஷமாகி அவனுடைய முகவாய்க்கட்டை முழுவதும் உமிழ்நீரை வழியவிட்டன. பிறகு, ஒவ்வொரு நாய்க் குட்டியாக எடுத்து, அவற்றை உயரத் தூக்கினான். அவை தரைக்கு வந்ததும், அவற்றின் தலைகளைத் தடவிக் கொடுத்தான். அவன் நாய்களையும் சமமாக நடத்தாவிட்டால், அவை ஒருநாள் ஓநாய்க்குட்டியின்

மீது பொறாமை கொண்டு, அதற்கு எதிராகக் கிளம்பி அதைக் கொன்றுவிடலாம். ஒரு நாடோடி வாழ்க்கைச் சூழலில் ஓநாயை வளர்ப்பதிலுள்ள பிரச்சனையை அவன் உணர்ந்து வந்தான். ஒவ்வொரு நாளும் சவாலாகவே இருந்தது. அது ஆடுகளின் பிரசவ காலமாக இருந்ததால், மேய்ப்பர்கள் அதையொட்டிய வேலைகளில் முழு மூச்சுடன் ஈடுபட்டிருந்தனர்.

ஜென் ஒரு ஓநாய்க்குட்டி வைத்திருப்பதை சிலர் அறிந்திருந்தனர். அதைக் கேள்விப்பட்ட சிலரும் அவர்களே வந்து பார்த்துத் தெரிந்துகொள்ள அவகாசம் இல்லாமலிருந்தனர். அது தெரிந்தால் என்ன நடக்கும்? புலியின்மீது சவாரி செய்வது மோசமானது; அதிலிருந்து இறங்குவதென்பது அதை விடவும் மோசமானது. இது ஓநாய் சம்பந்தப்பட்டு இரண்டு மடங்கு பொருந்தும்.

தட்பவெப்ப நிலை உயர்ந்ததும், உறைபனிக்கால இறைச்சி சிறு துண்டங்களாக வெட்டப்பட்டு வெயிலிலும் காற்றிலும் காய வைக்கப்படும். கொஞ்சம் கறி ஒட்டிக்கொண்டிருக்கும் எலும்புகள் மீது பூஞ்சக் காளான் தடவப்பட்டு காய வைக்கப்படும். பின் இளவேனிற் காலத்தில் நாய்களுக்கான அருமையான உணவாக அது இருக்கும். நாய்கள் பின்தொடர ஜென், கறிக் கூடை இருந்த பாரவண்டியை நோக்கிச் சென்றான். எர்லாங்கின் பெரிய தலையைத் தன் கைகளால் அணைத்துக்கொண்டான். மனித நடத்தைகளுக்கு நன்கு பரிச்சயமான அது, தனக்கு உணவு அளிக்கப்படவிருக்கிறது என்பதைத் தெரிந்துகொண்டு, நன்றி தெரிவிக்கும் வகையில் அவனுடைய கையை நக்கியது. பார வண்டியின் அடியிலிருந்து எலும்புகள் அடங்கிய ஒரு கூடையை எடுத்து, நாய்களுக்கேற்ப அவற்றைப் பிரித்துக் கொடுத்துவிட்டுத் தன் குடிலுக்கு விரைந்தோடினான். இன்னமும் அந்த ஓநாய்க்குட்டி, தன் கோரைப் பற்களால் கதவைத் திறக்க முயற்சி செய்துகொண்டிருந்தது. அதை எடுத்துக்கொண்டு வந்த இந்த ஒரு மாதத்திற்குள், அது ஓரடி நீளமாகியிருந்தது. அதன் கால்கள் அழகாகவும் நேராகவும் அமைந்துவிட்டிருந்தன. எல்லாவற்றுக்கும் மேலாக அது ஒரு ஓநாய் போலத் தோற்றமளிக்கத் தொடங்கியிருந்தது; குறிப்பாக இப்போது கண்களை மூடியிருந்த நீல சவ்வு மறைந்து, சாம்பல் மஞ்சள் கண்கள், மத்தியில் கருப்புப் புள்ளிகளுடன் வெளிப்பட்டிருந்தன. அதன் மூக்கு நீண்டிருந்தது; காதுகள் பூனையைப் போல் இல்லாமல், முக்கோண வடிவம் பெற்றுத் தலைக்கு

மேலாக விடைத்து நின்றிருந்தன. அது பெரும்பாலும் பகலில் நாய்க்குட்டிகளோடு விளையாடியது; ஆனால் அங்கு யாருமில்லாத போதும், இரவிலும் அது ஓடி விடாமலிருப்பதற்காக அதை அதன் குழிக்குள் விட்டு விடுவான். எல்லோவும் யிர்ரும்கூட, அதனிடமிருந்து அவை விலகியே இருந்தாலும், அதன் இருப்பை சகித்துக்கொண்டன. அது யிர்ரை நோக்கிச் சென்று, அதன் முலைக்காம்பை அடைய முயற்சிக்கும் போதெல்லாம், யிர் தன்னுடைய மூக்கால் இடித்துத் தள்ளிவிடும். எர்லாங் மட்டுமே அதனிடம் நட்பு பாராட்டியது. அந்த ஓநாய்க்குட்டி செய்யும் எதுவும் அதை சங்கடப்படுத்த வில்லை. அந்த நாயின் வயிற்றின் மீது ஊர்ந்தும், அதன் பின்புறமெங்கும் துள்ளிக் குதித்தும், அதன் தோல்களைக் கடித்தும், அதன் காதுகளைச் சீண்டியும் ஓநாய்க்குட்டி விளையாடும். எர்லாங் அடிக்கடி ஓநாய்க்குட்டியை நக்கிக் கொடுக்கும். ஓநாய்க்குட்டியின் மூக்கு, இது அதனுடைய உண்மையான வீடல்ல என்று சொன்னாலும் குட்டி ஓநாய் அந்தச் சூழ்நிலையை ஏற்றுக்கொண்டிருந்ததோடு, தன்னுடைய நாய்க்குட்டி நண்பர்களோடு துள்ளி விளையாடவும் செய்தது.

ஜென் ஓநாய்க்குட்டியை எடுத்துக்கொண்டு, கதவைத் திறந்து உள்ளே நுழைந்தான். அடுப்பின் முன்பாக அதை இருக்க வைத்தான். அது திரும்பி, அங்கிருந்த அடுக்கின் மீதிருந்த அலுமினியப் பாத்திரத்தைப் பார்த்தது. ஜென் தன்னுடைய விரலால் அது எவ்வளவு சூடாக இருக்கிறதென்று சோதித்துப் பார்த்தான். அது அறையின் வெப்ப அளவில் இருந்தது. ஓநாய்க்குட்டிக்கு அப்படி இருப்பதுதான் பிடிக்கும். மிகவும் சூடான பொருளை ஓநாய்களால் கையாள முடியாது. ஒருமுறை சூடான உணவை அவன் கொடுத்துவிட்டான். அப்போது, அது தன் வாலைக் கால் களுக்குள் சுருட்டிக்கொண்டு, திகிலடைந்து, வெளியே ஓடிப்போய் பனியில் விழுந்து புரண்டது. அதன் பிறகுதான் ஜென் பழைய பாத்திரத்துக்குப் பதிலாகப் புதிய அலுமினியப் பாத்திரத்தைப் பயன்படுத்த ஆரம்பித்தான்.

அவன் எப்போதும்போல, ‘‘ஓநாய்க்குட்டி, ஓநாய்க்குட்டி, சாப்பாடு, சாப்பாடு’’ என்று கூறினான். உடனே ஓநாய்க்குட்டி காற்றில் எம்பியது. ஜென் உடனடியாக, சில எட்டுகள் தள்ளிப் பாத்திரத்தைத் தரையில் வைத்தான். அது பாய்ந்து சென்று மூக்கைப் பாத்திரத்தில் புதைத்து, உறிஞ்சிக் குடித்தது.

ஒவ்வொரு வேளை உணவும் அதற்கு உத்தரவாதம் என்றாலும், அது ஏதோ பட்டினியால் வாடிய மிருகத்தைப் போலவே நடந்துகொள்ளும். மேலும் அதன் ஒவ்வொரு தேவையையும் பொறுமை யாகக் கவனித்துக்கொள்ளும் ஜென் சென்னிடம், நன்றி தெரிவிக்கும் வகையில் ஒரு சிறு சைகையும் அது செய்வதில்லை. மாறாக, அந்தத் தருணத்தில், அதனுடைய உணவை எடுத்துக் கொண்டு விடக்கூடிய ஒரு ஜென்ம விரோதியைப் போலவே அது ஜென்னைக் கருதியது.

இந்த ஒரு மாத காலத்தில், அந்த ஓநாய்க்குட்டியோடு சில வழிகளில் ஜென் நெருக்கமாகி விட்டிருந்தான். அதைத் தடவிக் கொடுக்கவும், அணைத்துக்கொள்ளவும், முத்தமிடவும், செல்லமாகக் கிள்ளவும், உரசிக்கொள்ளவும் அவனுக்கு முடிந்தது. அதைத் தன் தலைமீது தூக்கி வைத்துக்கொள்வான்; தோள்களில் குறுக்காகப் போட்டுக¢கொள்வான்; அதன் மூக்கோடு தன் மூக்கை வைத்து உரசுவான்; அதனுடைய வாய்க்குள் விரலை விடக்கூட முடிந்தது. ஆனால் ஓநாய்க்குட்டி சாப்பிடும்போது அதைத் தொடவே பயப்படுவான். சில அடி தூரம் தள்ளிக் குந்தி இருந்தபடி கவனித்துக்கொண்டிருப்பான். அவன் லேசாக நகர்ந்தாலும், அது பற்களைக் காட்டி உறுமும்; அதன் கருப்பு முடிகள் சிலிர்த்துக்கொண்டு நிற்கும்; பின்னங்கால்கள் விரைத்துக் கொள்ளும்; தேவைப்பட்டால் பாய்வதற்கும் கொல்வதற்கும் தயாராகிவிடும். அதனுடைய இந்தப் பழக்கத்தை மாற்ற நினைத்து, ஜென், தன் கையில் துடைப்பக் கட்டையோடு அதனருகில் போய், துடைப்பத்தால் ஓநாய்க்குட்டியை லேசாகத் தட்டினான். அவன் சுதாரிப்பதற்குள் குட்டி துடைப்பத்தின்மீது பாய்ந்து, அதன் குச்சிகளைப் பல்லால் கடித்து, ஜென்னின் கைகளிலிருந்து அதைப் பிடுங்கிவிட்டது. ஜென் அதிர்ச்சியில் பின்வாங்கினான். அவன் ரொம்பவும் பயந்து விட்டான். ஒரு ஆட்டுக்குட்டியைத் தாக்குவதைப் போல, அது தலையை மூர்க்கமாக உலுப்பியது. துடைப்பக்கட்டையிலிருந்து ஏகப்பட்ட குச்சிகளைப் பிடுங்கிப் போட்டது. ஒரு சம்பவத்தை வைத்து நம்பிக்கை இழக்க விரும்பாமல், அதே காரியத்தை ஜென் பலமுறை செய்தான். ஒவ்வொரு முறையும் அதேதான் நடந்தது. காவோ ஜியான்சோங், சமீபத்தில்தான் அந்தத் துடைப்பத்தை வாங்கி வந்திருந்தான் என்பதால், துடைப்பம் சின்னா பின்னமாகி யிருப்பதைப் பார்த்துக்

கோபமடைந்து, அதன் கட்டையால் ஓநாயை ஒரு போடு போட்டான். கடைசியில், ஓநாய்க்குட்டி சாப்பிடும்போது அதைத் தொடும் ஆசையை ஜென் கைவிட்டான்.

இம்முறை வழக்கமாகச் செய்வதை விட இரு மடங்கு கூழ் ஆக்கியிருந்தான் ஜென். ஓநாய்க்குட்டி எப்படியும் கொஞ்சம் மிச்சம் வைத்துவிடும் என்று நம்பினான். அதில் கொஞ்சம் பாலையும், இன்னும் கொஞ்சம் இறைச்சியையும் கலந்து நாய்க்குட்டிகளுக்குக் கொடுக்கலாமென்று அவன் நினைத்திருந்தான். ஆனால் ஓநாய்க்குட்டி அந்த உணவைத் தாக்கும் விதத்தைப் பார்த்ததும், அப்படியேதும் நடக்கப் போவதில்லை என்பதை அறிந்தான்.

மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்கள் பிழைத்திருப்பதென்பது மிகவும் சிரமமான காரியம் என்பதை அவன் அறியக்கூடிய சந்தர்ப்பமொன்று அமைந்தது. பெரும்பாலும் பத்து குட்டிகளில் ஒன்றுதான் பிழைத்துப் பெரிதாகிறது. சமயங்களில் டெஞ்ஞர், ஓநாய்களைக் கொஞ்சமும் கருணையில்லாமல் தண்டிக்கிறது என்று பில்ஜி சொல்லியிருக்கிறார். திடீரென அடிக்கும் ஒரு பனிப்புயலில், குறைந்த காலத்துக்குள் பல அடிகள் பனி விழுந்து, நிறைய ஓநாய்கள் குளிர் அல்லது பசியால் கொல்லப்பட்டுவிடும். ஒரு காட்டுத் தீ விண்ணை முட்டுமளவு எழுவதில் எரிந்தோ அல்லது மூச்சுத் திணறியோ பல ஓநாய்கள் இறந்துவிடும். அவற்றின் குகைகளிலிருந்து இளவேனிற் காலத்தின்போது திருடப்படுவதிலிருந்து புதிதாய்ப் பிறந்த குட்டிகளில் சில மட்டுமே தப்பிப் பிழைக்கும். இலையுதிர் காலக் கண்ணிகள், முன்பனிக் கால சுற்றிவளைப்பு வேட்டைகள் மற்றும் நடுப்பனிக்கால வேட்டைகள் மூலமும் பல ஓநாய்கள் கொல்லப்பட்டு விடுகின்றன.

மேய்ச்சல் நிலம் ஓநாய்களுக்கு எப்போதுமே யுத்தகளமாகத் தானிருக்கிறது. மிகுந்த பலமும் ஞானமும் கொண்டவையே தப்பிப் பிழைக்கின்றன. அவை உண்பதிலும் சண்டையிடுவதிலும் அபாரமான வேட்கை கொண்ட விலங்குகளாகக் காணப்படு கின்றன. வயிறு நிறைய சாப்பிட்ட விலங்குகள், பசியோடிருப்பதன் நிலையை ஒருபோதும் மறப்பதில்லை.

மேய்ச்சல்நில ஓநாய்களிடம் காணப்படும் பல முக்கிய அம்சங்களில், உணவுக்காகவும் சுதந்திரத்துக்காகவும் போராடுவதே மிகவும் அடிப்படையானது என்று ஜென் காலகதியில் கண்டறிந் திருந்தான்.

ஓநாய்க்குட்டிக்கு அவன் உணவளிக்கும்போது, அதை வாழ வைப்பதாக அவன் ஒருபோதும் உணர்ந்ததில்லை. ஓநாய்க் குட்டி நன்றி தெரிவிக்கும் வகையிலான எந்தவொரு சமிக்ஞையும் காட்டியதில்லை. ஒரு மனிதனால் தான் வளர்க்கப்படுவதான உணர்வு அதனிடமிருந்து வெளிப்பட்டதில்லை. அதனுடைய எஜமானன் அதற்கான உணவுடன் வருகிறான் என்பதற்காக ஒரு அடிமை போல அதனால் நடந்துகொள்ள முடியாது. ஜென்னுக்கும் ஓநாய்க்குட்டிக்குமான உறவில் 'வளர்ப்பு' என்ற வார்த்தை இல்லவே இல்லை. இப்போதைக்கு அவனால் அது சிறைப்பிடிக்கப்பட்டிருக் கிறது; அவ்வளவுதானே தவிர, அவனுடைய பராமரிப்புக்குட் பட்டதல்ல அது. அதனிடம் ஒரு தனித்துவ இயல்பாகப் பிடிவாதம் அமைந்திருப்பதை அறிந்த ஜென்னுக்கு முதுகுத்தண்டு ஜில்லிட்டது. அதை வெற்றிகரமாக வளர்த்தெடுத்துப் பெரிதாக்க முடியுமென்ற நம்பிக்கையை அவன் இழந்துவிட்டிருந்தான்.

கடைசியாக, அது சாப்பிடும்போது அதை செல்லம் கொஞ்சும் ஆசையை அவன் கைவிட்டான். அதனுடை புனிதமான, இயல்பான உள்ளுணர்வுகளை மதித்தான்.

ஓநாய்க்குட்டி சாப்பிடுவதில் காட்டிய வேகம் மெதுவாகக் குறைந்தது; ஆனால் அதனுடைய வயிறு வெடித்துவிடும் போலத் தோன்றினாலும், அது கோப்பையில் தொடர்ந்து தலை புதைத்து சாப்பிட்டுக்கொண்டிருந்தது. கடைசியாக அந்த இறைச்சிக் கூழ் கோப்பையில், இளம் மஞ்சள் தினை மட்டுமே மிச்சமிருந்தது. இறைச்சி இல்லை, கொழுப்பு இல்லை, எலும்பு இல்லை, தானியம் மட்டுமே மிச்சம். ஆனாலும் அது இன்னமும் தலை தூக்கவில்லை. அடியிலிருந்த பாலில் அது கவனம் செலுத்திக்கொண்டிருந்தது; ஏனென்றால் அதுவும் அதற்குப் பிடித்தமான உணவுதான். அது ஒரு வழியாகத் தலை நிமிர்த்தியபோது, வாசமோ ருசியோ இல்லாத தினை மட்டுமே மிச்சமிருந்தது. ஜென் சத்தமாகச் சிரித்தான். ஓநாய்க்குட்டி மிகவும் சாமர்த்தியமானதுதான்.

அந்தக் கோப்பையில் கொஞ்சம் இறைச்சியையும், மிச்சமிருந்த பாலையும், அவற்றோடு கொஞ்சம் சுடுதண்ணீரையும் கலந்து சூப் போல ஆக்குவதைத் தவிர ஜென்னுக்கு வேறு வழி இல்லாமல் போனது. அதை எடுத்துக்கொண்டு வெளியில் வந்து நாய்க் கோப்பைகளில் ஊற்றினான். நாய்கள் பசியோடு

ஓடிவந்தன; ஆனால் உடனடியாகத் தங்களுடைய ஏமாற்றத்தை ஊளையின் மூலம் வெளிப்படுத்தின. கால்நடைகள் வளர்ப்பிலுள்ள பொறுப்பு களை ஜென் உணர்ந்தான். நாய்களைப் பராமரிப்பது அதன் அத்தியாவசியக் கடமைகளில் ஒன்று.

வயிறு மிதமிஞ்சி நிரம்பியிருந்ததால் ஓநாய்க்குட்டிக்கு நகர்வது மிகவும் சிரமமாக இருந்தது. தரையில் கால்களைப் பரப்பிக் கிடந்தபடி, வெளியில் பார்த்தது. அங்கு நாய்கள் அது மிச்சம் வைத்திருந்ததை சாப்பிட்டு முடித்திருந்தன. ஜென் அதை நோக்கிச் சென்று, அதைப் பார்த்து, ‘‘ஓநாய்க்குட்டி, ஓநாய்க்குட்டி’’ என்று கூப்பிட்டான். அது கால்களை ஒட்டிக்கொண்டு உருண்டு புரண்டது. வயிறு குத்திட்டு நிற்க, தலை தரையில் கிடக்க, அது ஜென்னைப் பார்த்தபோது அதன் கண்களில் குறும்பு மின்னியது.

ஜென் அதை எடுத்துத் தலைக்கு மேலாக நான்கைந்து முறை தூக்கிப் பிடித்தான். பயமும் பரவசமும் அதற்கு ஒரே சமயத்தில் ஏற்பட்டது. இந்த விளையாட்டுக்கு அது ஏற்கெனவே பழக்கமாகி விட்டிருந்தது. ஜென் அதைத் தலையிலும், பிறகு தோளிலும் வைத்துக்கொண்டான். ஓநாய்க்குட்டியைத் திரும்பத் தரையில் விட்டான். ஜென், தன் கால்களைக் குறுக்காக மடித்து உட்கார்ந்துகொண்டு, குட்டியை மல்லாந்து படுக்க வைத்து, அதன் வயிற்றைத் தேய்த்துக் கொடுத்தான். தாய் நாய்களும், தாய் ஓநாய்களும் தம்முடைய குட்டி களுக்கு உணவு ஜீரணமாவதற்காக இவ்வாறு செய்வது வழக்கம். ஓநாய்க்குட்டியின் வயிற்றை மெல்லத் தடவிக்கொண்டிருந்ததில் ஜென் சந்தோஷமடைந்தான். அதுவும் மனநிறைவோடு முனகியது; எப்போதாவது ஏப்பம் விட்டது. உண்ட நிறைவில் ஒரு செல்லப் பிராணி போல ஜென்னோடு ஒட்டி உறவாடியது. அதனுடைய பாதங்களால் ஜென்னுடைய விரலைப் பற்றிக்கொண்டு நக்கிக் கொடுத்தது. விளையாட்டாகக் கடிக்கவும் செய்தது. கண் பார்வையில் சாந்தம் தெரிந்தது.

ஓநாய்க்குட்டி கையடக்கமாகவும், மகிழ்ச்சியளிக்கும் ஒன்றாகவும் இருந்தது. கால நெடுகிலும், எத்தனை தாய் ஓநாய்கள் மனிதக் குழந்தைகளை வளர்த்திருக்கின்றன; எத்தனை மனிதர்கள் ஓநாய்க்குட்டிகளை வளர்த்திருக்கிறார்கள்? இத்தனை ஆண்டுகளில் அவன் கேட்ட பல அற்புதமான ஓநாய்க் கதைகளில் அவன் இப்போது வாழ்ந்துகொண்டிருப்பதாக

ஜென் அறிந்தான். ஓநாய் இயல்பின் சாந்தமான, அன்பான பக்கத்தை அவன் அனுபவித்துக் கொண்டிருந்தான். அவன் குனிந்து, ஓநாய்க்குட்டியின் ஈரமான மூக்கோடு தன் மூக்கை உரசினான்; ஒரு நாயைப் போல ஓநாய்க் குட்டியும் அவனுடைய முகவாய்க் கட்டையை நக்கிக் கொடுத்தது. அவன் சந்தோஷமும் புளகாங்கிதமும் அடைந்தான். அவனிடம் ஏதோ ஒரு வகையில் நம்பிக்கை வைத்திருப்பதை அது வெளிப் படுத்திய முதல் சந்தர்ப்பம் இதுதான். உணர்ச்சிபூர்வமான நெருக்கம் அவர்களுக்கிடையே வளர்ந்தது. இந்தத் தூய்மையான, களங்கமற்ற நட்பு அளிக்கும் அனைத்தையும் போற்றிப் பாதுகாக்க அவன் விரும்பினான். அவனுடைய வாழ்க்கை ஒரு தொன்மையான காலத்துக்குப் பின்னோக்கிச் சென்றுவிட்டதாக அவன் கற்பனை செய்தான். நினைத்துப் பார்க்க முடியாத அளவுக்கு முதியவனாகத் தன்னை உணர்ந்தான்.

அவனை ஒரு விசயம் உறுத்திக்கொண்டிருந்தது. அந்த ஓநாய்க்குட்டி அனாதையோ, கைவிடப்பட்டதோ இல்லை. அப்படியான நிலையில் ஒரு விலங்கை வளர்ப்பது, இயல்பான, தொன்மையான அன்பை உருவாக்கும். ஆனால் இவன் அதன் குகையிலிருந்து அதைத் திருடியிருக்கிறான். அவனுடைய ஆசைக்கும் ஆய்வுக்குமாக, முழுவதும் ஒரு சுயநல நோக்கத்தோடு அக்காரியத்தை செய்திருக்கிறான். காலம் காலமாகப் புழங்கி வந்திருக்கிற, மனிதர்கள் மற்றும் ஓநாய்கள் பற்றிய அற்புதக் கதைகளின் வகையைச் சேர்ந்ததல்ல அவனுடைய கதை. அதனுடைய அம்மா, பழிவாங்குவதற்காக ஒருநாள் வருமென்ற எண்ணம் அவனை விட்டு ஒருபோதும் அகன்றதில்லை. இவ் விசயத்தில் அவனுடைய மன உணர்வு புனிதமானதல்ல; மாறாக, விஞ்ஞானபூர்வ மற்றும் கலாசார ரீதியான வளர்ச்சி என்பதின் பெயரில்தான் அவன் நடந்திருக்கிறான்.

தன்னுடைய பங்கு உணவைச் சாப்பிட்டு முடித்ததும், எர்லாங் மெதுவாக ஜென்னை நோக்கி நடந்து வந்தது. ஓநாய்க்குட்டியை ஜென் தட்டிக் கொடுத்துக்கொண்டிருப்பதைப் பார்க்கும் ஒவ்வொரு முறையும், எர்லாங் பக்கத்தில் வந்து ஆர்வத்தோடு கவனிக்கும். சமயங்களில் ஓநாய்க்குட்டியின் உப்பிய வயிற்றை நக்கிக் கொடுக்கும். எர்லாங்கின் தலையைத் தடவிக் கொடுத்தான் ஜென். அந்த நாய் தன்னுடைய எஜமானனைப் பார்த்துப் புன்னகைத்தது.

ஜென் ஓநாய்க்குட்டியை எடுத்ததிலிருந்தே எர்லாங்குக்கும் அவனுக்குமிடையே இருந்த இடைவெளி வெகுவாகச் சுருங்கியது. அவனிடமும் கொஞ்சம் ஓநாய்த் தன்மை இருந்து, அதை எர்லாங் மோப்பம் பிடித்திருக்குமோ? அவனுடைய நிலைமை எப்படி விசித்திரமாக மாறிப்போய் விட்டதென்பதை அவன் சட்டென உணர்ந்தான். இங்கு ஓநாய் குணங்களுடன் ஒரு மனிதனும், ஓநாய் இயல்பு கொண்ட நாயும், ஒரு அசல் ஓநாயும் மேய்ச்சல் நிலத்தில் சேர்ந்து வாழ்ந்துகொண்டிருக்கிறார்கள். ஓநாய்ச் சிறுவர்களின் கதைகளை விடவும் மிகவும் விசித்திரமானதாக அவனுடைய வாழ்க்கை திடீரென அமைந்துவிட்டிருக்கிறது.

மேய்ச்சல்நில ஓநாய்களின் வசியத்துக்குக் கட்டுப்பட்டதிலிருந்தே, அவனுடைய ஈடுபாடற்ற, சோர்ந்துபோன ரத்தம் மேலும் பலஹீனமடைந்து விட்டதாக ஜென் நினைத்தான். ஓநாய் ரத்தம் அவனுடைய நாளங்களில் ஓடத் தொடங்கியிருப்பதாக உணர்ந்தான். வாழ்க்கை பற்றிய அவனுடைய பார்வை மாறி விட்டிருந்தது. திடம் மிக்கதாகவும் நிறைவளிப்பதாகவும் மாறி விட்டிருந்த இந்த வாழ்க்கையை அவன் இப்போது ஒரு பொக்கிஷ மாகக் கருதினான். ஜாக் லண்டனின் ‘வாழ்க்கை குறித்த காதல்’ (லிஷீஸ்மீ ஷீயீ லிவீயீமீ) என்ற கதையை அவர் ஏன் இறந்து கொண்டிருக்கும் ஒரு ஓநாயோடு சேர்த்து முடிச்சு போட்டார் என்பதை இப்போது அவனால் புரிந்துகொள்ள முடிந்தது. லெனின் மிக மோசமாக நோய்வாய்ப்பட்டிருந்த தருணத்தில் அந்தக் கதையை மறுபடியும் அவருக்காக சத்தமாக வாசிக்கும்படி தன் மனைவியிடம் ஏன் கேட்டுக்கொண்டார் என்பதையும் புரிந்துகொள்ள முடிந்தது. அந்த ரஷ்ய சர்வாதிகாரி, மனிதனுக்கும் ஓநாய்க்கும் இடையிலான போராட்டத்தைக் கேட்டபடி அமைதியாக இறந்துபோனார். அவருடைய ஆன்மா மார்க்ஸின் ஆன்மாவைப் பார்ப்பதற்காக, வேறொரு இனத்தின் ஓநாய் குலச் சின்னத்தால் நல்ல முறையில் எடுத்துச் செல்லப்பட்டிருக்கக் கூடும்.

எர்லாங்கைப் பார்த்ததும், ஓநாய்க்குட்டி அந்தப் பெரிய நாயுடன் விளையாட விரும்பியது. அதனால் ஜென் அதைப் போக விட்டான். அது துள்ளிக் குதித்து, தரையில் சிறுநீர் கழித்துவிட்டு, எர்லாங்கிடம் பாய்ந்து சென்றது. எர்லாங், தரையில் கால்களைப் பரப்பிக்கொண்டு, எல்லாக் குட்டிகளும் அதன் மீது ஏறி விளையாட சந்தோஷமாக அனுமதித்தது. ஒரு மலை போல் கிடந்த

எர்லாங்கின் முதுகின் மீது முதலில் ஏறிய ஓநாய்க்குட்டி, அதைத் தொடர்ந்து மேலேறிய எல்லா நாய்க்குட்டிகளையும் உதைத்துத் தள்ளியது. அதை எதிர்க்க முற்பட்டவைகளைப் பார்த்து, அந்த மலையின் அரசன் போல ஊளையிட்டது. இரண்டு ஆண் நாய்க்குட்டிகள் அதோடு திருப்பி சண்டையிட்டன. ஓநாய்க்குட்டியின் காது களையும் வாலையும் அவை கடித்தன. அந்தச் சண்டையில் மூன்றுமே அவற்றின் மலையிலிருந்து கீழே விழுந்தன. அப்போது ஓநாய்க்குட்டியின் மேல் நாய்க்குட்டிகள் விழுந்ததை அடுத்து, ஓநாய்க்குட்டியின் உடல் முழுவதும் அவை கடிக்கத் தொடங்கின. ஓநாய்க்குட்டி கோபத்தோடு சண்டை போட்டது. கால்களை வெறியோடு வீசியதில் புழுதி பறந்தது. அதனையடுத்து, ஒரு நாய்க்குட்டி வலியில் கத்துவது ஜென்னுக்குக் கேட்டது. அதன் பாதத்தில் ரத்தம் வழிவதை அவன் பார்த்தான். ஓநாய்க்குட்டி சும்மா விளையாட மட்டும் செய்யவில்லை என்பது நிச்சயம்.

நாய்க்குட்டிகள் பயந்துபோய் யிர்ரிடம் ஓடின. அது முதலில் ரத்தம் வெளியான பாதத்தை நக்கிக் கொடுத்தது; பிறகு, ஓநாய்க்குட்டியை நோக்கிக் குதித்தோடிச் சென்று, அதைப் பார்த்து உறுமி, அதைக் கடிக்கத் தயாரானது. ஜென் உடனடியாக அதைத் தன் கைகளில் தூக்கிக்கொண்டான். யிர்ருக்கு முதுகைக் காட்டிய படி அவன் நின்றுகொண்டிருந்தபோது, அவனுடைய இதயம் கனத்தது. என்றாவது ஒரு நாள், பெரிய நாய்களில் ஒன்று, அவனுடைய ஓநாய்க்குட்டியைக் கொன்றுவிடும் சாத்தியத்தை உணர்ந்து அவன் பயந்தான். இப்படியான ஒரு குட்டிக் கொடுங்கோலனை, கூண்டோ பட்டியோ இல்லாமல் வளர்ப்பது அவனுக்குக் கவலையளித்தது. ஆனால் இப்போது அவன் யிர்ரை முதலில் சமாதானப்படுத்த வேண்டும். அதனுடைய தலையை ஆதரவாகத் தடவிக் கொடுத்தான். அவன் மறுபடியும் ஓநாய்க் குட்டியைத் தரையில் விட்டபோது, யிர் அதைப் பொருட்படுத்தாமல், தன் குட்டிகளைக் கூட்டிக்கொண்டு, அவற்றைத் தமக்குள் விளையாடவிட்டது. ஓநாய்க்குட்டி மறுபடியும் எர்லாங்கின் மீதேறி விளையாடியது.

விலங்குகளுக்கு உணவளித்த பிறகு, புதிய புல்நிலத்துக்குச் செல்வதற்கு ஏதுவாகப் பாரவண்டியை அவன் சுத்தம் செய்ய ஆரம்பித்தான். அவன் நிமிர்ந்து பார்த்தபோது, பில்ஜி ஒரு பார வண்டி நிறைய மரக்கட்டைகளோடு

அவனை நோக்கி வந்து கொண்டிருந்தார். அவன் சட்டெனக் கீழே குதித்து, ஓநாய்க் குட்டியைத் தூக்கிக்கொண்டு போய் அதனுடைய குழிக்குள் விட்டு மரப்பலகையால் அதை மூடி, அதன்மீது பாறாங்கல்லை வைத்தான். அவனுடைய இதயம் படபடத்தது.

எல்லோவும் யிர்ரும் வால்களை ஆட்டியபடி, குட்டிகளோடு முதியவரை வரவேற்க விரைந்தோடின. பில்ஜியின் வண்டியிலிருந்து பொருள்களை இறக்கவும், எருதுவைக் கவனிக்கவும், முதியவரின் கனமான தச்சுவேலைப் பொருட்களடங்கிய பெட்டியை இறக்கி வைக்கவுமென ஜென்னும் வேகமாகப் பின் சென்றான். புதிய மேய்ச்சல் நிலத்துக்குச் செல்வதற்கு முன், மாணவர்களுடைய பார வண்டியை சரி செய்வதற்காக பில்ஜி அங்கு வந்திருந்தார்.

''அப்பா, நான் சமாளித்துக்கொள்வேன். எங்களுக்கு இதைச் செய்வதற்காக நீங்கள் வந்திருக்க வேண்டியதில்லை'' என்று பதற்றத்துடன் சொன்னான் ஜென்.

''சமாளித்தால் மட்டும் போதாது'' என்றார் முதியவர். ''இது ஒரு நீண்ட பயணமாக இருக்கப் போகிறது. பாதைகள் வேறு கிடையாது. அங்கு போய்ச் சேர இரண்டு அல்லது மூன்று நாட்களாகும். போகும் வழியில் ஒரு வண்டி நின்று போனாலும், ஒட்டுமொத்தக் குழுமமும் மெதுவாகச் செல்ல வேண்டி நேரிடும்.''

''சரி, நீங்கள் உள்ளே போயிருந்து தேனீர் சாப்பிடுங்கள். அதற்குள் நான் வண்டியிலிருந்து சாமான்களை இறக்கி வைத்து விடுகிறேன்.''

''உங்களுடைய தேனீர் எனக்கு மிகவும் கடுமையாக இருக்கிறது.'' பிறகு, கொஞ்சமும் எதிர்பாராமல், அவர் குழியை நோக்கிச் சென்றார். ''நான் உன்னுடைய ஓநாய்க்குட்டியைப் பார்க்கிறேன்'' என்று கடுப்போடு சொன்னார்.

எதிர்பாராத இந்த சம்பவத்தால் கலக்கமடைந்த ஜென், முதியவரைத் தடுத்து நிறுத்த முயற்சித்தான். ''அதில் பார்ப்பதற்கு ஒன்றுமில்லை. நீங்கள் ஏன் தேனீர் சாப்பிடக்கூடாது?''

''கிட்டத்தட்ட ஒரு மாசமாகிவிட்டது. ஆனால் இன்னமும் நீ என்னைப் பார்க்கவிட மாட்டேனென்கிறாய்!''

வேறு வழியில்லாமல் ஜென், ‘‘அப்பா, ஓநாய் வழியில் வேட்டை நாய்களைப் பிரசவிப்பதற்காக இதை நான் வளர்க்கிறேன்...’’ என்றான்.

அவர் எவ்வளவு கோபமடைந்திருக்கிறார் என்பதை முதியவரின் முகம் காட்டியது. ‘‘மடத்தனம்’’ என்று அவர் உறுமினார். ‘‘இது சுத்தமான மடத்தனம். ஓநாய் வழி வேட்டை நாய்களை ஓநாய்கள் மூலம் நீ வேறெங்காவது உருவாக்கலாம். ஆனால் மங்கோலிய ஓநாய்கள் மூலமாக அல்ல. மங்கோலிய ஓநாய் ஒரு நாயோடு இணையும் என்று நீ எதை வைத்து நினைத்தாய்? ஓநாய், நாயைக் கொன்று சாப்பிட்டுவிடும்.’’ அவருடைய கோபம் அதிகரித்ததில் அவருடைய குறுந்தாடி துடித்தது. ‘‘உங்களுக்குள் சமீப காலமாக என்ன நடந்துகொண்டிருக்கிறதென்று எனக்குத் தெரியவில்லை. அறுபது வருடங்களுக்கும் மேலாக நான் மேய்ச்சல் நிலத்தில் வாழ்ந்து வருகிறேன். இப்படியான ஒரு யோசனையை முதன் முறையாக இப்போதுதான் கேள்விப்படுகிறேன். இதை உன்னால் வளர்க்க முடியுமென்று நினைக்கிறாயா? அதுவும் நாய்க் குட்டிகளுக்குப் பக்கத்தில்? உன்னால் எப்படி ஒரே மூச்சில் ஓநாய்கள் பற்றியும் நாய்கள் பற்றியும் பேச முடிகிறது? நாய்கள் மக்களி¢ன் மலத்தைத் தின்கின்றன. ஓநாய்கள் மக்களைச் சாப்பிடுகின்றன. மலத்தைச் சாப்பிடுவதன் மூலம் நாய்கள் மனிதர்களுக்கு அடிமைகளாக இருக்கின்றன. ஆனால் ஓநாய்கள் மனிதர்களின் சடலங்களைச் சாப்பிட்டு அவர்களின் ஆன்மாக்களை டெஞ்ஞருக்கு அனுப்புகின்றன. சொர்க்கமும் பூமியும் எவ்வளவு வேறுபட்டவையோ அவ்வளவு வேறுபட்டவை ஓநாய்களும் நாய்களும். ஆனால் நீ அவை இரண்டையும் சேர்த்து வளர்க்கத் திட்டமிடுகிறாய். அது மட்டும் போதாதென்று, அதை நாய்களோடு இணை சேர்க்கும் நம்பிக்கை வேறு வைத்திருக்கிறாய். மங்கோலியர்களாகிய நாங்கள், உங்களுடைய ‘டிராகன் அரச’னோடு ஒரு பெண் பன்றியை இணைய வைக்க விரும்பினால், அது பற்றி சீனர்களாகிய நீங்கள் என்ன நினைப்பீர்கள்? அது தெய்வ நிந்தனை என்று சொல்வீர்கள். நல்லது, இப்போது நீ செய்துகொண்டிருப்பது எங்கள் மூதாதையர்களை அவமதிப்பது. டெஞ்ஞரையும் கூட. இதற்கெல்லாம் நீ ஒருநாள் அனுபவிப்பாய்...’’

இவ்வளவு கோபமாக பில்ஜியை ஜென் ஒருபோதும் பார்த்ததில்லை. கடைசியில் அவன் பயந்தது நடந்துவிட்டது.

ஜென்னின் இதயம் நொறுங்கியது. ஒரு கோபமான ஓநாயைப் போல பில்ஜி காணப்பட்டார். அவர் கோபத்தில் பாறாங்கல்லை உதைத்து, தன்னைத் தானே காயப்படுத்திக் கொள்ளக் கூடுமென ஜென் பயந்தான். அல்லது அதைவிட மோசமாக, அந்தப் பாறாங் கல்லை எடுத்து ஓநாய்க்குட்டி மீது போட்டு அதை நசுக்கிவிடக் கூடுமென்றும் பயப்பட்டான். பில்ஜியின் கோபம் இப்போது இன்னும் அதிகரித்திருந்தது. ''நீ ஒரு ஓநாய்க்குட்டியை எடுத்து வளர்க்கிறாய் என்று நான் முதன் முதலில் கேள்விப்பட்டபோது அதை நான் பொருட்படுத்தவில்லை. ஏனென்றால், சீன மாணவர் களாகிய உங்களுக்கு உண்மையிலேயே மேய்ச்சல் நிலத்தின் பாரம்பரியப் பழக்கங்கள் புரிவதில்லை; எங்களுக்கு எது ஏற்புடையது அல்லது ஏற்கப்பட முடியாதது என்பது பற்றி நீ அறியாதிருக்கிறாய்; ஏதோ புதுமையாக முயற்சி செய்து பார்க்க விரும்புகிறாய்; கொஞ்ச நாட்களில் கைவிட்டு விடுவாயென்று நினைத்திருந்தேன். ஆனால் அதன் பிறகு, டோர்ஜியும் ஒன்றை வளர்ப்பதாகவும் நீ ஓநாய் மூலம் வேட்டை நாய் இனத்தை உருவாக்கத் திட்டமிட்டிருப்பதாகவும் அறிந்தேன். நீ அதைச் செய்ய முடியாது. இப்போதே, என் கண் முன்னால், நீ அதை ஒழித்துக்கட்ட வேண்டுமென நான் விரும்புகிறேன்.''

இம்முறை அவன் தன் எல்லையை மீறிவிட்டானென்பதை ஜென் அறிந்திருந்தான். கடந்த ஆயிரக்கணக்கான வருடங்களில் எவரும் மேய்ச்சல் நிலத்தில் ஒரு ஓநாயை வளர்த்ததில்லை. ஒரு போர்வீரனைக் கொல்லலாம்; அவனை அவமதிக்கக்கூடாது. ஒரு ஓநாயைக் கொல்லலாம்; அதை வளர்க்கக் கூடாது. இப்போது இங்கே, மங்கோலியர்களின் மூதாதையர் நிலமான மேய்ச்சல் நிலத்தின் இதய ஆழத்தில், ஒரு இளம் சீன மாணவன், ஒரு நாயை வளர்ப்பது போல ஒரு ஓநாயை வளர்க்கிறான். இந்நிலத்து வாசிகள் டெஞ்ஞரை வணங்குகிறார்கள். இந்தப் புனிதமான இடத்தில் அவர்களுடைய மூதாதை வடிவமாக ஓநாயை வழிபடுகிறார்கள். ஓநாய்: அவர்களுடைய ஞானகுரு; போர்க்கடவுள்; மேய்ச்சல் நிலக் காவலன்; அவர்களுடைய குலச்சின்னம். இங்கு அவன் இதைச் செய்வது, உண்மையிலேயே ஒரு கொடுஞ்செயல். பழங்காலத்தில் இது நடந்திருந்தால், அவன் ஒரு பாவி எனவும், தெய்வ நிந்தனையாளன் எனவும் முத்திரை குத்தப்பட்டுக் கொலை செய்யப் பட்டிருப்பான். அவனுடைய சடலம் நாய்களிடம் எறியப் பட்டிருக்கும்.

அவனுடைய செயல் பில்ஜியை எந்த அளவு பாதித் திருக்கிறது என்பதுதான் அவனை மிகவும் சங்கடப்படுத்தியது. மூத்த மங்கோலியரான அவர்தான் ஓநாய் குலச்சின்னத்தின் திகைப்பூட்டும் புதிர்ப்பிராந்தியத்துக்குள் அவனை அழைத்துக்கொண்டு சென்றவர். அவருடைய கவனமான வழிகாட்டுதலின் மூலம்தான், அவனால் ஓநாய்க்குட்டியைத் திருட முடிந்தது. இனியும் அமைதி காக்கவோ, அவனுடைய செயல்களுக்கான விளக்கமேதும் அளிக்கவோ அவன் முற்படவில்லை. ''அப்பா...'' என்றான். அவனுடைய குரல் நடுங்கியது.

முதியவர் ஆட்சேபிப்பது போல் கையசைத்தார். ''இனி என்னை அப்படிக் கூப்பிடாதே!''

''நான் செய்தது தப்புதான், அப்பா.'' ஜென் முதியவரிடம் மன்றாடினான். ''நீங்கள் சொல்வது சரிதான். மேய்ச்சல் நிலத்தின் பாரம்பரியப் பழக்கங்கள் எனக்குப் புரியவில்லை. நான் உங்களைப் புண்படுத்திவிட்டேன்... சொல்லுங்கள், இந்தப் பாவப்பட்ட ஓநாய்க் குட்டியை நான் எப்படி ஒழித்துக்கட்ட வேண்டுமென்று நீங்கள் விரும்புகிறீர்கள்?'' ஜென்னுடைய கண்களிலிருந்து கண்ணீர் வழிந்தோடி, புல் படர்ந்திருந்த தரையில் விழுந்தது. அந்த இடத்தில்தான், கொஞ்ச நேரத்துக்கு முன்னால் ஓநாய்க்குட்டி சந்தோஷமாக விளையாடிக்கொண்டிருந்தது.

முதியவர் ஜென்னை உற்றுப் பார்த்தார். திடீரென இப்போது என்ன செய்யவேண்டுமென அவருக்கு நிச்சயமில்லாமல் போனது. என்னதான் ஜென் சொன்னாலும், அந்த இளைஞன் மேய்ச்சல் நில ஓநாய்களின் வசியத்துக்கு ஆட்பட்டவன் என்பது அவருக்குத் தெரியும். அவன் ஒரு வகையில் ஸ்வீகரிக்கப்பட்ட மகன்; பாதி மங்கோலியன். ஓநாய்களின் மீது அவன் கொண்டிருந்த ஆர்வம், பெரும்பாலான மங்கோலிய இளைஞர்களை விடவும் கூடுதலானது. ஆனால் இப்போது அவன், அவரால் சகித்துக்கொள்ள முடியாத ஒரு காரியத்தைச் செய்திருக்கிறான். இதற்கு முன் இப்படியான ஒன்றை அவர் எதிர்கொண்டதில்லை. அதற்கு என்ன செய்ய வேண்டுமென்று அவருக்குத் தெரியவில்லை.

பில்ஜி மேல்நோக்கி டெஞ்ஞரைப் பார்த்ததோடு, பெருமூச்சும் விட்டார். ''சீனர்களாகிய நீங்கள் சமய நம்பிக்கை இல்லாதவர்கள் என்பது எனக்குத் தெரியும். மேலும் ஆன்மா என்பது உங்களுக்கு ஒரு விசயமே இல்லை.

கடந்த இரண்டு வருடங்களாக நீ ஓநாய்கள் மீது கொண்டிருக்கும் ஈடுபாடு எனக்குத் தெரியும். அனால் என்னுடைய இதயத்தில் என்ன இருக்கிறதென்று உனக்குத் தெரியவில்லை. எனக்கு வயதாகிவிட்டது. நாளுக்கு நாள் பலஹீன மடைந்து வருகிறேன். மேய்ச்சல் நிலமானது, வாழ்வதற்குக் கடின மான ஒரு இடம். மங்கோலியர்களாகிய நாங்கள், எங்களுடைய வாழ்நாள் முழுவதும், காட்டு மிராண்டிகளைப் போல சண்டை யிட்டுக்கொண்டிருக்கிறோம். வியாதிகளும் வரத் தொடங்கி விட்டன. நீண்ட கால வாழ்க்கையை இனி நாங்கள் வாழ முடியாது. இன்னும் சில வருடங்களில் நான் டெஞ்ஞருக்குப் போய்விடுவேன். என்னை ஒருநாள் டெஞ்ஞருக்கு எடுத்துக்கொண்டு போகக்கூடிய ஒரு ஓநாயை நீ எப்படி உன்னோடு வைத்துக்கொண்டிருக்க நினைக்கிறாய்? மேலும் அதை நாய்க் கூட்டத்தோடு சேர்த்து வேறு வளர்க்க நினைக்கிறாய். அப்படியானால் நான் பாவம் செய்தவன் என்று அர்த்தம். மேலும் டெஞ்ஞர் என்னை ஏற்றுக்கொள்ள மறுத்து, இருண்ட, மூச்சு முட்டச் செய்கிற நரகத்துக்கு அனுப்பி விடும். இங்குள்ள எல்லோரும், உன்னைப் போல ஓநாய்களை அடிமைகளாக நடத்த ஆரம்பித்துவிட்டால், மங்கோலியர்களின் ஆன்மாக்கள் காணாமல் போய்விடும்.''

ஜென் அமைதியாகப் பேசினான். ''அப்பா, இந்த ஓநாய்க் குட்டியை நான் ஒரு அடிமை போல் நடத்தவில்லை. அப்படிச் சொல்லப்போனால், நான்தான் அதன் அடிமையாக இருக்கிறேன். ஒரு மங்கோலிய அரசன் அல்லது இளவரசனுக்காகக் காத்திருப்பதை போல நான் அதற்காகக் காத்திருக்கிறேன். அதற்குக் கொடுப் பதற்காக நான் ஒரு பசுவிலிருந்து பால் கறக்கிறேன். அதற்காக இறைச்சிக் கூழ் தயாரிக்கிறேன். அது குளிரில் அல்லது நோயில் வாடிவிடுமோ என்று கவலைப்படுகிறேன். அதை நாய்கள் கடித்து விடுமோ அல்லது மக்கள் யாரேனும் அடித்து விடுவார்களோ அல்லது ஒரு பருந்தோ அல்லது அதன் தாயோ அதைத் தூக்கிச்சென்றுவிடுமோ என்று பயந்துகொண்டிருக்கிறேன். இப்போதெல்லாம் நான் சரியாகத் தூங்குவதில்லை. ஓநாயின் அடிமை என்று காவோ என்னைக் கூப்பிடத் தொடங்கியிருக்கிறான். எந்தவொரு சீனனையும் விட அதிகமாக ஓநாய்களை நான் போற்று கிறேன் என்பது உங்களுக்குத் தெரியும். டெஞ்ஞர் எல்லாவற்றையும்

பார்த்துக்கொண்டிருக்கிறது; டெஞ்ஞர் நியாயமானது; எதற்காகவும் டெஞ்ஞர் உங்களைக் குற்றம் சாட்டாது.''

முதியவர் நிம்மதியடைந்தார். ஜென் மிகவும் நேர்மையானவன் என்பது அவருக்குத் தெரியும். முதியவரின் முகத்தில் லேசான சாந்தம் தென்பட்டது. கோபம் கொண்ட ஓநாய்த் தோற்றம் மறைந்துவிட்டது. அவருடைய ஞானமும் விவேகமும் தொலைநோக்குப் பார்வையும், ஓநாய் குலச்சின்னம் மீது உண்மையிலேயே பெருமதிப்பு கொண்டிருக்கும் ஒரு சீன மாணவனுக்காக அவரை விட்டுக் கொடுக்கவைக்கும் என்ற நம்பிக்கையை அவனுக்கு ஏற்படுத்தியது. ஒரு மாத ஓநாய்க்குட்டியின் உயிரை அவர் பறிக்க மாட்டார் என்றும் நம்பிக்கை ஏற்பட்டது.

அவன் தன்னுடைய கண்களை நன்றாகத் துடைத்துக்கொண்டு, ஆழமாக மூச்சை உள்ளிழுத்தான். ''அப்பா, நான் இந்த ஓநாய்க்குட்டியை வளர்க்க விரும்பும் ஒரே நோக்கம், அவை உண்மையில் என்னவாக இருக்கின்றன, எப்படி நடந்து கொள் கின்றன என்பதைப் புரிந்துகொள்வதுதான். அவை ஏன் வெல்ல முடியாத அளவுக்கு வலிமையும் சாமர்த்தியமும் கொண்டிருக்கின்றன; மக்கள் ஏன் அவற்றைப் போற்றிப் பாராட்டுகிறார்கள் என்பதை நான் தெளிவாக விளங்கிக்கொள்ள ஆசைப்படுகிறேன். சீனர்கள் எந்த அளவுக்கு ஓநாய்களை வெறுக்கிறார்கள் என்பதை உங்களால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாது. மிகவும் கெட்ட நோக்கம் கொண்ட மக்களை நாங்கள் ஓநாய்கள் என்று கூறுவோம்; காமக் கொடூரன்களை ஓநாய்கள் என்போம்; பேராசை கொண்ட மக்களை ஓநாய்ப் பசி கொண்டவர்கள் என்று சொல்லுவோம்; அமெரிக்க ஏகாதிபத்திய வாதிகளை பேராசைமிக்க ஓநாய்கள் என்று குறிப்பிடுவோம்; ஒரு குழந்தையைப் பயமுறுத்த நினைக்கும் பெரியவர்கள், 'ஓநாய்!' என்று கத்துவார்கள்.''

பில்ஜி மென்மையடைந்து கொண்டிருப்பதை ஜென்னால் பார்க்க முடிந்தது. அதனால் தைரியம் அவனிடம் கூடி வந்தது. ''சீனர்களின் பார்வையில் ஓநாய்கள்தான் மிகவும் மோசமானவை; மிகவும் கொடூரமானவை. ஆனால் மங்கோலியர்களாகிய நீங்கள் அவற்றை ஏதோ கடவுள்களைப் போலக் கொண்டாடுகிறீர்கள். வாழ்வில் அவற்றிடமிருந்து கற்றுக்கொள்கிறீர்கள். சாவில் அவற்றுக்கு உணவாகிறீர்கள். ஆனால் இன்னமும்கூட, ஒரு தொலைவிலிருந்து

ஓநாய்களைக் கவனிப்பதும் படிப்பதும், நான் என்ன தெரிந்துகொள்ள விரும்புகிறேன் என்பதை எனக்குத் தெரிவிக்கவில்லை. அதற்கான ஒரே சிறந்த வழியாக எனக்குத் தெரிந்தது, ஒரு ஓநாயை நானே சொந்தமாக வளர்ப்பதும், அதை நெருக்கமாக அவதானிப்பதும், தினமும் அதோடு இருப்பதும்தான். இதுவரை, ஒரு மாதத்துக்கும் கொஞ்சம் கூடுதலாகத்தான் அதோடு இருந்திருக்கிறேன். அதற்குள் இதற்கு முன் நான் பார்த்திராத பல அரிய விசயங்களை நான் கண்டுகொண்டிருக்கிறேன். போற்றிப் பாராட்டக்கூடிய அளவுக்கு உண்மையிலேயே பெறுமதியான விலங்குகள்தான் அவை. ஆனால் இங்கிருக்கும் பெரும்பாலான மாணவர்கள், இன்னமும் அவர்களுடைய அபிப்ராயத்தை மாற்றிக் கொள்ளவில்லை. அவர்களாலேயே ஓநாய்களைப் புரிந்துகொள்ள முடியாவிட்டால், இங்கு ஒருபோதும் இருந்திராத கோடிக்கணக்கான சீனர்களைப் பற்றி நினைத்துப் பாருங்கள். மேலும் மேலும் அவர்கள் வரப் போகிறார்கள். ஒருவேளை அவர்கள் ஓநாய்களை ஒழித்துக் கட்டும் முயற்சியை செய்து முடித்து விட்டால், மேய்ச்சல் நிலத்தின் கதி என்னவாகும்? மங்கோலியர்களுக்குப் பேரழிவாக இருக்கும். அதுவே காலகதியில் சீனர்களுக்கு இன்னும் மோசமானதாக அமையும். நான் கவலையோடு இருக்கிறேன். இந்த அழகான மேய்ச்சல் நிலம் பாழாவதை என்னால் பார்க்க முடியாது.''

ஓநாய்க்குட்டியின் குழி மீதிருந்த பாறாங்கல்லில் முதியவர் உட்கார்ந்துகொண்டு, புகை பிடிக்கும் குழாயை வெளியில் எடுத்தார். ஜென் அவசரமாக அவருக்குப் பற்ற வைத்தான். ''இது என்னுடைய தவறுதான்.'' ஒரு இழு இழுத்துவிட்டு பில்ஜி பேசினார். ''உன்னை நான் மோசமாக பாதித்திருக்கிறேன்... என்ன செய்வது? நீ ஒரு ஓநாய்க்குட்டியை வளர்க்க நினைத்தபோது, நீ என்னைப் பற்றி யோசித்திருக்க மாட்டாய் என்று எனக்குத் தெரியும். ஆனால் உல்ஜீயைப் பற்றியும் குழுமம் பற்றியும் நீ கட்டாயம் யோசிக்க வேண்டும். அவர் தன்னுடைய பதவியை இழந்திருக்கிறார். நான்கு குதிரை மேய்ப்பர்கள் மீது தகுதிக் குறைபாடு பதிவு செய்யப் பட்டிருக்கிறது. ஏனென்று உனக்குத் தெரியுமா? அவர் ஓநாய்கள் பக்கம் சார்ந்திருந்ததாகவும், நீண்ட நாட்களாக அவர் ஓநாய் வேட்டைக்கு ஏற்பாடு செய்யவில்லை என்றும் அவர்கள் சொல் கிறார்கள். நான் ஒரு கிழட்டு ஓநாய் என்றும், குழுமத்தின்

தலைமை ஓநாய் என்றும் அவர்கள் சொல்கிறார்கள். மேலும், நம்முடைய 'இரண்டாவது குழுமம்' ஒரு ஓநாய்க் குகை என்று நினைக்கிறார்கள். இப்படி ஒரு நெருக்கடியான தருணத்தில், இக்குழுமத்தைச் சேர்ந்த ஒரு மாணவன் ஓநாய்க்குட்டியொன்றை வளர்க்கிறான். பிற குழுமங்களைச் சேர்ந்த மாணவர் யாரும் ஏன் இதைச் செய்ய வில்லை? 'இரண்டாம் குழுமத்'தைச் சேர்ந்த ஒருவர், உனக்கு ஏதோ மோசமாக சொல்லிக் கொடுத்திருக்கிறார் என்பதற்கு இது நிரூபணம் ஆகாதா? அவர்களுக்குத் தேவைப்படும் ஒரு 'ஆயுதத்'தை நீ அவர்களுக்குக் கொடுத்திருப்பதாக நீ நினைக்கவில்லையா?''

முதியவரின் கண்களில் வெளிப்பட்ட துயரமான பார்வை, ஜென்னை நோக்கி அலை அலையாய் வந்தது. முதியவரின் குரலில் சோர்வு அதிகரித்தது.

''உன்னுடைய ஓநாய்க்குட்டியின் தாய் ஒருநாள் வரும். அது சர்வ நிச்சயம். மேலும் அது தனியாக வராது. ஓலோன்புலாக் தாய் ஓநாய்கள் தம் குட்டிகளைப் பாதுகாப்பதில் மிகவும் விசேஷமானவை. அவற்றின் வாசனை உணர்வு அபாரமானது; நிச்சயமாக இதனுடைய தாய் இதை ஒருநாள் கண்டுபிடித்துவிடும். அப்படி அது கண்டுபிடிக்கும்போது, இந்த முகாமை அது பழிவாங்கும். இந்தக் குழுமத்துக்கு அப்படியொரு பயங்கரமான சம்பவம் நேர்ந்தால், உல்ஜீயும் இக்குழும அதிகாரிகளும் தலை குனிய வேண்டியதுதான். ஒரு ஓநாய்க் கூட்டம் உன்னுடைய ஆடு களுக்குப் பின்னால் வந்து, ஏகப்பட்ட ஆடுகளைக் கொன்று விட்டால், இந்த ஓநாய்க்குட்டியை வளர்த்த வகையில் மிகப் பெரிய அளவில் சமூகச் சொத்துக்கு இழப்பு ஏற்பட்டிருக்கும். அதற்கு நிச்சயம் மன்னிப்பு கிடையாது. நீ சிறைக்குப் போக வேண்டி யிருக்கும்...''

ஜென்னுடைய இதயம் நடுங்கியது. சிறுபான்மைப் பிராந்தியத்தில் ஓநாய் வளர்ப்பது, சீன வரைவியல் கோட்பாட்டை மீறிய செயல்; அதை ஆட்டு மந்தைக்கிடையே செய்வது ஓநாய்க் கூட்டத்தை வரவழைக்கும் காரியம். உற்பத்திக்கெதிராக அவன் வேண்டுமென்றே நாச வேலை செய்ததாக அது கருதப்படும். அது ஏதோ ஒரு வகையில், அவனுடைய தந்தை எதிர்கொண்டிருக்கும் பிரச்சனையான 'முதலாளித்துவப் பாதையாளர்' என்பதோடு முடிச்சிடப்பட்டால் மேலும் பல வில்லங்கங்கள் வந்து சேர்வதோடு,

வேறு சிலரையும் இதில் இணைக்கும். ஜென்னுடைய கைகள் நடுங்கத் தொடங்கின.

முதியவர் மிகவும் தணிந்த குரலில் பேசினார்: ‘‘பாவோ சுங்காய்தான் இப்போது பொறுப்பில் இருக்கிறார். அவர் ஒரு மங்கோலியர் என்றாலும், தன்னுடைய வேர்களை அவர் மறந்து நெடுங்காலமாகி விட்டது. சீனர்களை விடவும் கூடுதலாக அவர் ஓநாய்களை வெறுக்கிறார். மேலும் அவற்றை வேட்டையாடித் தீர்த்துக் கட்டாவிட்டால் அவருடைய பதவியை அவரால் காப்பாற்ற முடியாது. இந்த ஓநாய்க்குட்டியை உன்னை வளர்க்க விடுவார் என்று நீ நினைக்கிறாயா?’’

ஜென்னிடம் எந்த நம்பிக்கையும் இல்லை. ஆனாலும் அவன் முயற்சித்தான்: ‘‘நீங்கள் அவரிடம் பேச முடியுமா? ஓநாய்களை எப்படிக் கையாள்வது என்பதை நன்கு அறிவதற்காகவே இதை நான் வளர்க்கிறேன் என்று அவரிடம் சொல்லுங்கள். ஒரு அறிவியல் பூர்வமான சோதனை.’’

‘‘நீயே அவரிடம் பேசு. அவர் இன்றிரவு என்னுடன் தங்குகிறார். அதனால் நாளைக்கு நீ வா.’’

முதியவர் எழுந்துகொண்டு, திரும்பி, கடைசியாக அந்தப் பாறாங்கல்லைப் பார்த்துவிட்டு, ‘‘இந்த ஓநாய் வளர்ந்து பெரிதாகும்போது, அது உன்னுடைய ஆடுகளைத் தாக்கும் என்று நீ பயப்படவில்லையா? அல்லது உன்னை? அல்லது வேறு யாரையாவது? ஓநாய்க்கடி விஷத்தன்மை கொண்டது; ஒரு கடியில் ஒரு மனிதன் இறந்துவிடுவான். இன்று இதை நான் பார்க்கப் போவதில்லை; அது என்னைக் கலக்கமடையச் செய்துவிடும். சரி வா, பார வண்டியை சரி பார்க்கலாம்’’ என்றார்.

பாரவண்டியை சரி செய்யும் வேலையை மேற்கொண்டிருந்த போது, அவர் ஒரு வார்த்தையும் பேசவில்லை. ஓநாய்க்குட்டியைக் கொன்றுவிட வேண்டியது குறித்து அவன் இன்னும் உணர்ச்சி பூர்வமாகத் தன்னைத் தயார்படுத்திக் கொள்ளவில்லை. அதேசமயம், பில்ஜிக்கும் உல்ஜீக்கும் மேலும் சிரமங்களைத் தரக்கூடிய விசயங்களைத் தான் உருவாக்கக் கூடாதென்று அவன் உணர்ந்திருந்தான்.

ஜென் சென்னும் முதியவரும் இரண்டு பார வண்டிகளின் பழுதுகளைச் செப்பனிட்டுவிட்டு, மூன்றாவது வண்டியைக் கவனிக்கத் தொடங்கியபோது, நாய்கள் குரைக்கத் தொடங்கின. பாவோ சுங்காயும் உல்ஜீயும், பாவோ முன்னடத்தி வர, குதிரைகளில் வந்துகொண்டிருந்தார்கள். ஜென் நாய்களை அமைதிப் படுத்தினான்.

‘‘உங்களை இங்கு பார்க்கலாம் என்று உங்களுடைய மனைவி சொன்னார்’’ என்றார் பாவோ. ‘‘ஜென்னுடைய ஓநாய்க்குட்டியைப் பார்க்கவும் இது ஒரு வாய்ப்பாகப் போய்விட்டது. உல்ஜீ உங்களோடு தங்கிக்கொள்ள ‘புல்நிலப் புரட்சிகரக் குழு’ அனுமதி யளித்துவிட்டது. முதலாவதாக, அவர் ‘கட்டுமானக் குழுமத்’தில் சேர்ந்து தொழிலாளியாகச் செயல்பட வேண்டுமென அவர்கள் விரும்புகிறார்கள்.’’

ஜென்னின் இதயம் படுவேகமாகத் துடித்தது.

‘‘சரிதான்’’ என்றார் முதியவர். ‘‘அந்த விசயத்தில் நீங்கள் அவருக்கு நல்லது செய்திருக்கிறீர்கள்.’’

‘‘நீங்கள் மேய்ச்சலுக்குப் புதிய நிலத்தைத் திறக்கப் போவதறிந்து முன்னணித் தலைவர்கள் மனக்கிளர்ச்சி அடைந்திருக்கிறார்கள். இது மிகவும் முக்கியமானதென்று அவர்கள் கருது கிறார்கள். முந்தைய ஆண்டுகளைப் போலவே இதுவும் வெற்றி கரமாக அமைய வேண்டுமென்று விரும்புகிறார்கள். கூடுதலாக ஒரு மேய்ச்சல் நிலமும் சேர்ந்துகொண்டிருப்பதால் கால்நடைகளின் எண்ணிக்கையை நாம் இரு மடங்காக்கலாம். நீங்கள் இருவருமாகச் சேர்ந்து இதை முன்னடத்திச் செல்ல வேண்டும். அதனால்தான் உல்ஜீ உங்களோடு தங்க வேண்டுமென்பதில் நான் குறியாக இருந்தேன். நீங்கள் இருவரும் கலந்து பேசுவதற்கு அது வசதியாக இருக்கும்.’’

‘‘உல்ஜீதான் இதை முன்னெடுத்தவர். அவருடைய இதயம் ஒருபோதும் மேய்ச்சல் நிலத்தை விட்டு விலகியதில்லை.’’

‘‘அது சொல்லாமலேயே தெரியும். நான் ஏற்கெனவே தலைவர்களிடம் தெரிவித்துவிட்டேன். அவர்கள், தோழர் உல்ஜீ தன்னுடைய தவறுகளுக்குப் பிரயாச்சித்தம் செய்ய முற்படுவார் என்ற நம்பிக்கையோடு இருக்கிறார்கள்.’’

உல்ஜீ பலஹீனமாகச் சிரித்தார். ‘‘நாம் பிராயச்சித்தங்களை மறந்துவிட்டு, செய்ய வேண்டியது என்ன என்பது பற்றிப் பேசலாம். புதிய மேய்ச்சல் நிலம் இங்கிருந்து வெகு தொலைவில் இருக்கிறது. அதனால் அந்தப் பயணத்தில் பல பிரச்சனைகள் ஏற்படும். அவற்றை சமாளிக்க, கால்நடை மேய்ச்சல் நில லாரியையும், ரப்பர் டயர்கள் கொண்ட இரண்டு டிராக்டர்களையும் ‘இரண்டாம் குழுமத்’துக்குக் கொடுக்க வேண்டும். மேலும், பாதையை சீரமைக்க எங்களுக்கு மேலும் சில ஆட்கள் வேண்டும்.’’

‘‘குழும அதிகாரிகளின் கூட்டமொன்றை இன்றிரவு கூட்ட ஏற்பாடு செய்கிறேன். என்ன நடக்கிறதென்று பார்க்கலாம்.’’ பாவோ, ஜென்னை நோக்கித் திரும்பினார். ‘‘நீ அனுப்பி வைத்த அந்த இரண்டு தோல்களையும் பதனிடும் நிலையத்துக்கு அனுப்பி, அங்கிருந்து அவற்றை என்னுடைய பழைய மேலதிகாரிக்குக் கிடைக்க ஏற்பாடு செய்தேன். பீஜிங்கிலிருந்து சென்ற மாணவன், இரண்டு மிகப் பெரிய ஓநாய்களை வீழ்த்தியது அறிந்து அவர் மிகவும் பெருமிதப்பட்டார். அவர் உனக்கு நன்றி தெரிவித்தார்.’’

‘‘அவற்றை நான் கொன்றேன் என்று எப்படிச் சொல்ல முடியும்? நாய்கள் செய்தன. அவை செய்த செயலுக்கு நான் சொந்தம் கொண்டாட முடியாது.’’

பாவோ அவனுடைய தோளில் தட்டிக் கொடுத்தார். ‘‘அவை உன்னுடைய நாய்களென்றால், நீ கொன்றதாகத்தான் அர்த்தம். தங்களின் கீழ் பணிபுரிபவர்களின் பங்களிப்புகளுக்கு மேலதிகாரிகள் பாராட்டு பெறுவதுதான் வழக்கம். இராணுவப் படைகளில் நிலவும் மகத்தான மரபுகளில் அதுவும் ஒன்று. நல்லது, இப்போது உன்னுடைய ஓநாய்க்குட்டியை நாம் பார்க்கலாம்.’’

ஜென், பில்ஜியைப் பார்த்தான். அவர் பேசாமல் இருந்தார். ‘‘அதனை வளர்ப்பதில்லை என்று நான் முடிவு செய்துவிட்டேன்.’’

ஜென் அவசரமாகப் பதில் சொன்னான். ‘‘அது மேய்ப்பர்களின் பாரம்பரியப் பழக்கங்களுக்கு எதிரானது. மேலும் அது அபாயகர மானது. ஒரு ஓநாய்த் தாக்குதலுக்கு நான் பொறுப்பாக நேர்ந்தால், பெரும் சிரமங்களுக்கு நான் ஆளாக நேரிடும்.’’ அவன் பேசிக்கொண்டே, பாறாங்கல்லை அகற்றிவிட்டு, மூடியிருந்த பலகையைத் தள்ளி வைத்தான்.

கீழே அடியில், ஒரு பக்கமாக ஓநாய்க்குட்டி மேலேற முயற்சி செய்துகொண்டிருந்தது. ஆனால் மேலே மனித நிழல்கள் அச்சுறுத்தும் வகையில் பெருத்துத் தெரிந்ததால், ஒரு மூலையில் போய் உடலைக் குறுக்கிக்கொண்டு, மூக்கைச் சுருக்கி, கோரைப் பற்களை வெளிக்காட்டியது. ஆனாலும் அதன் உடல் நடுங்கிக்கொண்டிருந்தது. பாவோவின் கண்கள் பிரகாசித்தன. ''ஹேய்!'' அவர் ஆச்சரியப்பட்டார். ''அது பெரிதாக இருக்கிறது. ஒரு மாதம்தான் ஆகியிருக்கிறது. ஆனால் மற்ற குட்டிகளின் தோல் அளவுகளைவிட இரண்டு மடங்கு பெரிதாக இருக்கிறது. இந்த வேகத்தில் இவை வளருமென்று தெரிந்திருந்தால், எல்லாக் குட்டிகளையுமே நீ வளர்க்க விட்டிருப்பேன். அவை பெரிதானதும் நாம் அவற்றைக் கொன்று, ஒரு அருமையான தோல் ஜாக்கெட்டுக்குத் தேவையான தோல்களை வழங்கியிருக்கலாம்.''

ஜென் வெறுப்பாகப் பேசினான். ''இதற்கு உணவு கொடுத்து மாளவில்லை. தொடர்ந்து என்னால் இதற்கு உணவளிக்க முடியாது. நிறைய சாப்பிடுகிறது. ஒவ்வொரு நாளும் ஒரு பெரிய கோப்பை நிறைய இறைச்சிக் கூழும், ஒரு கோப்பை நிறைய பசும்பாலும் கொடுக்க வேண்டியிருக்கிறது.''

''ஒரு அருமையான தோலுக்காக இதைச் செய்யலாம். அடுத்த வருசமெல்லாம், குழுமத்தைச் சேர்ந்தவர்கள் பிறந்த ஓநாய்க் குட்டிகளை எடுக்கும்போது, நாம் எந்தவொன்றையும் கொல்லக்கூடாது. அவை இரண்டு அல்லது மூன்று மடங்கு பெரிதாகும் வரை வளர்க்க வேண்டும்.''

முதியவர் இகழ்ச்சியாகச் சிரித்தார். ''நீங்கள் நினைப்பது மாதிரி, அது அவ்வளவு சுலபமில்லை. இந்தக் குட்டிக்கு ஒரு பெண் நாய் பால் கொடுத்திருக்கிறது. நீங்கள் வளர்க்க விரும்பும் எல்லா ஓநாய்க்குட்டிகளுக்கும் பால் கொடுக்கப் போதுமான பெண் நாய்களை நீங்கள் எங்கே தேடுவீர்கள்?''

பாவோ ஒரு கணம் ஆழ்ந்து யோசித்தார். ''நீங்கள் சொல்வது சரிதான்'' என்றார்.

ஓநாய்க்குட்டியின் பின்புறக் கழுத்தைப் பிடித்து ஜென் அதை வெளியில் எடுத்தான். அது முரண்டியது. அவன் அதைத் தரையில் விட்டதும், பாவோ குனிந்து அதன் பின்புறத்தில் தட்டினார். ''இதற்குமுன் உயிருள்ள ஒரு

ஓநாயை நான் ஒருபோதும் தொட்ட தில்லை. அருமையாகவும் கொழுத்தும் இருக்கிறது. மிகவும் சுவாரஸ்யம்தான்.''

''ஜென் சென்'' என்று உல்ஜீ கூப்பிட்டார். ''கடந்த ஒரு மாதமாக இந்த குட்டிக்காக நீ ரொம்பவும் மெனக்கெட்டிருக்கிறாய் என்பது தெளிவாகத் தெரிகிறது. இவ்வளவு வேகமாக ஓநாய்கள் காட்டில் வளர்வதில்லை. இதன் உண்மையான அம்மாவை விட நீ நல்ல அம்மாவாக இருந்திருக்கிறாய். ஓநாய்கள் குறித்த உன் ஆர்வம் பற்றிக் கொஞ்ச காலமாக எனக்குத் தெரியும். நீ ஒவ்வொருவரிடமும் ஓநாய்கள் பற்றி அவர்களுக்குத் தெரிந்ததைச் சொல்லும்படி கேட்பாயெனக் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் ஒன்றை சிறைப்பிடித்து நீ வளர்ப்பாய் என நான் ஒருபோதும் நினைத்ததில்லை.''

பில்ஜி ஓநாய்க்குட்டியை உற்றுப் பார்த்தார். ''நான் நீண்ட காலமாக இங்கு வசித்து வருகிறேன். ஆனால் சிறைப்பிடிக்கப்பட்ட முதல் ஓநாயை நான் இப்போதுதான் பார்க்கிறேன். இது நன்றாக வளர்க்கப்பட்டிருக்கிறதென்று பார்த்தாலே தெரிகிறது. ஜென், தான் செய்யும் காரியத்துக்குத் தன்னை ஒப்புக் கொடுத்திருக்கிறான். ஆனால் ஆட்டு மந்தைக்குப் பக்கத்தில் ஒரு ஓநாயை வளர்ப்பது சரியாகத் தோன்றவில்லை. நீங்கள் மேய்ப்பர்களிடம் கேட்டால், அவர்கள் இதைக் கடுமையாக எதிர்ப்பார்கள். இப்போது நீங்கள் இருவருமே இருப்பதால், விஞ்ஞானபூர்வமாக சோதனை செய்து பார்க்க நினைக்கும் இந்த இளைஞனின் திட்டம் பற்றி நீங்கள் என்ன சொல்லப்போகிறீர்களென்பதை நாங்கள் அறிந்து கொள்ளலாம்.''

பாவோவுக்கு ஜென்னுடைய யோசனை பிடித்துப் போயிருப்பது தெரிந்தது. ''இதை இப்போது கொல்வது, வெட்கக்கேடான செயல். இதன் தோல் எதற்காவது பயன்படக்கூடிய அளவுக்குப் பெரிதாக இல்லை. பால்குடி மறக்காதிருந்த ஒரு குட்டியை இந்த அளவுக்குப் பெரிதாக வளர்த்திருப்பது பெரிய விசயம். அதனால் நான் என்ன நினைக்கிறேன் என்றால், ஒரு அறிவியல்ரீதியான சோதனையாக, இதை இப்போதைக்கு தொடர்ந்து வளர்க்க நாம் அனுமதிப்போம். தலைவர் மாவோ சொல்லியிருக்கிறார்: 'பகைவனைத் தோற்கடிப்பதற்கு நாம் முதலில் பகைவனைப் பற்றிப் பயில வேண்டும்.' ஓநாய்கள் பற்றி நானும் கூடுதலாகக் கற்றுக்கொள்ள ஆசைப்படுகிறேன். இது எப்படி நடந்து கொள்கிறது என்பதைக் கவனிப்பதற்காக, நானும் தவறாமல்

இங்கு வரப் போகிறேன். நீ ஓநாய்வகை வேட்டை நாய்களை உருவாக்கப் போவதாக அவர்கள் சொன்னார்கள்...''

ஜென் தலையாட்டி ஆமோதித்தான். ''எனக்கு அப்படியொரு யோசனை இருந்தது. ஆனால் அது முடியாது என்று அப்பா சொல்கிறார்.''

பாவோ, உல்ஜீயை நோக்கித் திரும்பினார். ''மேய்ச்சல் நிலத்தில் யாராவது, எப்போதாவது முயற்சி செய்திருக்கிறார்களா?''

''மேய்ப்பர்கள் ஓநாய்களைப் பெரிதும் போற்றுகிறார்கள். கலப்பினச் சேர்க்கைக்கு அவற்றை அவர்கள் பயன்படுத்துவதில்லை.''

''அப்படியான முயற்சி பெறுமதியானதுதான்'' என்றார் பாவோ. ''ஒரு உண்மையான அறிவியல் பரிசோதனையாக அது இருக்கும். மங்கோலிய ஓநாய்வழி வேட்டை நாய்களின் இனப் பெருக்கத்தை நம்மால் உருவாக்க முடிந்தால், அது நிச்சயம் சைபீரிய ஓநாய்வழி வேட்டை நாய்களைச் சின்னதாகக் காட்டும் அளவுக்கு அபாரமானதாக இருக்கும். மங்கோலிய ஓநாய்கள்தான் உலகிலேயே மிகப் பெரியவை; படுமூர்க்கமானவை. அவற்றின் கலப்பில் உருவாகும் விலங்குகள்தான் ஆகச் சிறந்தவையாக இருக்கும். அது போன்ற ஒன்றின்மீது இராணுவமும் ஆர்வம் கொள்ளும். இது நடந்துவிட்டால், அவர்களுக்கான நாய்களை வாங்க நாம் வெளிநாடுகளுக்குச் செல்ல வேண்டியதில்லை. ஆடுகளைக் கண்காணிக்க மேய்ப்பர்களிடம் மங்கோலிய ஓநாய்வழி வேட்டை நாய்கள் இருந்தால், ஓநாய்கள் அனேகமாக நெருங்காது. அதனால், மேய்ப்பர்கள் யாராவது புகார் தெரிவித்தால், இது அறிவியல் பரிசோதனை என்று மட்டும் அவர்களிடம் சொல். ஆனால் பாதுகாப்புதான் முதலாவது என்பதை மறந்துவிடாதே. கவனம்.''

''நீ ஓநாய்க்குட்டியை வளர்க்கலாமென்று பாவோவே சொல்லிவிட்டார். பிறகென்ன, நீ கவலையில்லாமல் வளர்க்கலாம்'' என்றார் உல்ஜீ. ''ஆனாலும் நான் எச்சரிக்கிறேன், ஏதேனும் தவறு நடந்தால் அது உன் தலையில்தான் விழும். பாவோவுக்குச் சங்கடம் ஏற்படாதபடி பார்த்துக்கொள். இது ஆபத்தானது என்றே நான் நினைக்கிறேன். மக்கள் மற்றும் ஆடுகளின் பாதுகாப்புக்காக அதைச் சங்கிலியில் கட்டி வைப்பது அவசியம்.''

‘‘அதுதான் சரி’’ என்றார் பாவோ. ‘‘யாருக்கும் எதுவும் நடந்து விடாமல் பார்த்துக்கொள். அப்படி அது ஏதேனும் தீங்கு செய்தால், அந்த இடத்திலேயே நான் அதைக் கொன்றுவிடுவேன்.’’

ஜென் மிகவும் பதற்றத்தோடு காணப்பட்டான். அவனுடைய இதயம், மார்பை விட்டு வெளியேறிவிடும் போல் இருந்தது. ‘‘கண்டிப்பாக’’ என்றான் ஜென். ‘‘ஆனால் ஒரு விண்ணப்பம். மேய்ப்பர்கள் ஒத்துக்கொள்ள மாட்டார்கள் என்று எனக்குத் தெரியும். அந்த வகையில் நீங்கள்தான் உதவி செய்ய வேண்டும்.’’

‘‘நான் சொல்வதை விடவும் பில்ஜி சொன்னால் அவர்கள் கேட்பார்கள்’’ என்றார் உல்ஜீ.

‘‘ஹா!’’ என்று பெருமூச்சு விட்டார் முதியவர். ‘‘இந்த இளைஞனை நான்தான் தவறான பாதையில் வழிநடத்திச்சென்றுவிட்டதாகப் பயப்படுகிறேன். இது என்னுடைய தவறுதான் என்பதால், நான்தான் ஏதாவது செய்வதாக வேண்டும்.’’

முதியவர், தன்னுடைய தச்சுக் கருவிகளை ஜென் சென்னிடம் விட்டு விட்டு, எருதுவை வண்டியில் பூட்டி, வீட்டை நோக்கிக் கிளம்பினார். அவரைப் பின்தொடர்ந்து, பாவோவும் உல்ஜீயும் குதிரைகளில் சென்றார்கள்.

அப்போதுதான் தற்காலிகமாகத் தண்டனையிலிருந்து விடுபட்ட ஒருவனைப் போல, ஜென் சென் பரவசமும் களைப்பும் அடைந்திருந்தான். ஓநாய் குழிக்குப் பக்கத்தில் சோர்ந்துபோய் உட்கார்ந்துகொண்டு கைகளில் ஓநாய்க்குட்டியைப் பிடித்திருந்தான். அதை அவன் மிகுந்த பலத்தோடு நசுக்கியதும், அது மூக்கைச் சுருக்கிக் கோரைப் பற்களை வெளிக்காட்டியது. ஜென் உடனே அதை சாந்தப்படுத்தும் வகையில் அதன் காதுகளுக்குப் பின்னால் தடவிக் கொடுத்தான். ஒரு கண்ணை மூடிக்கொண்டு, வாய் பாதியளவு திறந்திருக்க, நாக்கு ஒரு பக்கமாகத் தொங்கிக்கிடக்க, ஓநாய்க்குட்டி தன் உடலை ஜென்னின் கை வாக்கில் முன்பக்கமாகத் தள்ளியது. பின், நீட்டிப் படுத்துக்கொண்டு நிம்மதியாக முனங்கியது.

## 19

மேய்ச்சலுக்கான புதிய நிலத்தை நோக்கி, பட்டு, லாசுருங் மற்றும் மூன்று மேய்ப்பர்கள் பாவோ சுங்காய் தலைமையில் சென்றனர். யாங் கீயும் அவர்களோடு சென்றான். ஏழு அல்லது எட்டு பெரிய நாய்களும் உடன் சென்றன. பின்தொடர்ந்து சென்ற, குதிரைகள் பூட்டிய இரண்டு வண்டிகள் நிறைய கூடாரங்களும், வெடிமருந்தும், சமையல் சாமான்களும் உயரமாகக் குவிந்திருந்தன.

புதிய நிலத்தின் மேற்கில் இருந்த ஒரு மலை உச்சியை அடைந்ததும், தொலைநோக்கிகள் வழியாக பாவோவும் மேய்ப்பர்களும் ஆற்றுப் பள்ளத்தாக்கையும், சுற்றிலுமிருந்த மலை நீரோடைகளையும், ஆற்றின் வளைவுகளையும் கிளைகளையும், மேய்ச்சல் நிலத்தையும் பார்வையிட்டனர். அங்கு ஓநாய்களுமில்லை; மான்களுமில்லை. குள்ள வாத்துகளும், காட்டு வாத்துகளும், ஒரு டஜன் அளவில் அன்னப் பறவைகளும் ஏரியில் தென்பட்டன.

அந்த முன்கோடை நாளில், மேய்ப்பர்களுக்கு ஓநாய் வேட்டையில் ஆர்வமேதும் இருக்கவில்லை. அவர்களுக்கு முன் மரகதப் பச்சையெனப் பகட்டாகப் பரந்து விரிந்திருந்த மேய்ச்சல் நிலம் அவர்களை வசியம் செய்துவிட்டிருந்தது. அந்தக் காட்சி, கண்களைப் பச்சையாக மாற்றிவிட்டதாக யாங் கீ உணர்ந்தான். அவன் மற்றவர்களைப் பார்த்தபோது அவர்களுடைய கண்களும் பச்சையாகத் தெரிந்தன. பனிக்கால இரவில் அழகாகவும் அதே சமயம் பயங்கரமாகவும் தெரியும் ஓநாயின் கண்களைப் போலிருந்தன. பச்சை மலைச்சரிவில் அவர்கள் இறங்கியபோது, சுத்தமான காற்று சுமந்துவந்த புதிய பசும்புல் வாசனை அவர்களுடைய நாசிகளை நிறைத்தது. குதிரைகளின் குளம்புகளும், வண்டியின் சக்கரங்களும் பச்சைக் கறை படிந்திருந்தன. ஜென் சென் விவரித்திருந்த பூக்களின் கம்பள விரிப்பைப் பார்க்கும் ஆவலோடு யாங் கீ இருந்தான்.

ஒரு தங்கச் சுரங்கத்தைக் கண்டடைந்த பரவசத்தோடு பாவோ சுங்காய் காணப்பட்டார். ‘‘இது எந்தக் குறையுமில்லாத அற்புதமான இடம். நம் இராணுவ அதிகாரிகளை இங்கு சில நாள் விடுமுறையில் வரவழைத்து,

அன்னப் பறவைகளையும் வாத்துகளையும் வேட்டையாடி, ஒரு திறந்தவெளி விருந்து கொடுக்க வேண்டும்.''

அவர் சொன்ன விதம் யாங் கீக்குப் பிடிக்கவில்லை. 'அன்ன ஏரி' என்ற மௌனக் கூட்டுநடனத்தில் வரும் 'கருஞ் சிறகுகள் கொண்ட பேயுருவம்' அவனுடைய கண் முன்னால் மின்னி மறைந்தது.

குதிரைகள் மலைப் பக்கமாக ஓடி ஒரு மிதமான சரிவைக் கடந்தன. ''உங்களுக்கு இடது பக்கம் பாருங்கள்'' என்று தணிந்த குரலில் பாவோ சுங்காய் சொன்னார். ''அங்கு அன்னப் பறவைகளின் கூட்டம் தெரிகிறது. அவை உண்பதில் மும்முரமாக இருக்கின்றன. நாம் போய் ஒன்றைப் பிடித்து வருவோம்.'' அவருக்குப் பின்னால் வரும்படி, இரண்டு வேட்டைக்காரர்களிடம் சைகை செய்தார். யாங் கீ அவர்களைத் தடுத்து நிறுத்துவதற்குள் அவர்கள் கிளம்பிவிட்டார்கள். அதனால் பின்தங்கிவிட்ட யாங் கீ, கண்களைக் கசக்கியபடியே, வேகமாக விரைந்தான். திடீரென வேட்டைக்காரர்கள் லகானை இழுத்துப் பிடித்துக் குதிரைகளில் இருந்தபடி, துப்பாக்கிகளைத் தாழ்த்திக் குறி பார்க்க முற்பட்டார்கள். அவர்கள் ஏதோ கத்தினார்கள். பாவோவும் குதிரையை நிறுத்திவிட்டு, தன்னுடைய தொலைநோக்கியை வெளியே எடுத்தார். யாங் கீயும் சட்டென அதையே செய்தான். அவனால் தன் கண்களை நம்ப முடியவில்லை. அவன் கண்களை நிறைத்திருந்த பரந்துபட்ட வெண்மையானது, வெண்பூக்களின் விரிந்த தோட்டமாகக் காட்சியளித்தது. கடந்த கோடை காலத்தில், பழைய மேய்ச்சல் நிலத்தில் இந்த வெள்ளை மலர்களை அங்கும் இங்குமாகத் திட்டுத் திட்டாகப் பார்த்திருக்கிறான். இவ்வளவு அடர்த்தியாகவும் ஏராளமாகவும் பார்த்ததில்லை.

பாவோ சுங்காயும் அந்தக் காட்சியைப் பார்த்து சந்தோஷப் பட்டார். ''என்ன ஒரு அழகு!'' என்று ஆச்சரியப்பட்டார். ''இவ்வளவு அருமையான வெண்மலர்களை நான் ஒருபோதும் பார்த்ததில்லை. பீஜிங் பூங்காக்களில் இருப்பதை விட, இங்கு பேரழகோடு இருக்கின்றன. வாருங்கள். இங்கே வந்து, அவற்றைப் பாருங்கள்!'' எல்லோரும் தங்களின் குதிரைகளில் அந்த இடத்துக்கு வந்தனர்.

பூக்களின் இடத்தை அடைந்தபோது, யாங் கீ கிட்டத்தட்ட மயங்கிவிட்டான். செழுமையான நிலத்தில், காட்டு வனப்போடு முப்பது அல்லது நாற்பது

திட்டுகளாகப் பூக்கள் பூத்திருந்தன. மூன்றடி உயரத்துக்கு அப்பூஞ்செடிகள் புதர்களாக வளர்ந்திருந்தன. அவற்றை நெருங்கிப் போய்ப் பார்த்தான் அவன். அவை சீன ரோஜாக்களை விட வளப்பமாகவும் வசீகரமாகவும் இருந்தன. இயற்கை உலகம், இப்படியானதொரு மாசற்ற, பரிபூரண அழகை இதற்கு முன் அவனுக்கு அளித்ததில்லை.

பாவோவும் திகைத்துப் போயிருந்தார். ‘‘இது உண்மையிலேயே வெகு அபூர்வம்! நகரத்தில் இது என்ன விலைக்குப் போகுமென்று நீ நினைக்கிறாய்? சில செடிகளை எடுத்து, இராணுவ மேலதி காரிகளுக்கு அனுப்பப் போகிறேன். அவர்களும் வியக்கட்டும். மூத்த அதிகாரிகளுக்குப் பணத்தில் ஆர்வமில்லை; ஆனால் அவர்களுக்கு உயரிய பூக்கள்மீது காதல் உண்டு. அவர்களுக்கு இது கிடைத்தால் அவர்களுடைய உள்ளம் கொள்ளை போய்விடும். பீஜிங்கிலுள்ள விருந்தினர் மாளிகைகளில் கூட, இத்தகைய வெண் மலர்ச் செடிகள் இருக்காதென்றே நினைக்கிறேன். சரிதானா யாங் கீ?’’

‘‘விருந்தினர் மாளிகைகளிலா? அரசர்களின் தோட்டங்களில் கூட இத்தகைய மலர்களை நீங்கள் பார்க்க முடியாது.’’

பாவோ சந்தோஷமாக மேய்ப்பர்களைப் பார்த்தார். ‘‘கேட்டீர்களா? இந்தப் பூக்கள் உண்மையிலேயே பொக்கிஷம். இவற்றைக் கூடுதல் கவனத்தோடு பராமரிக்க வேண்டும். நாம் திரும்பி வரும்போது, ஒரு வேலி அமைப்பதற்காகக் கொஞ்சம் வாதுமைக் கிளைகளை வெட்டியெடுத்து வர வேண்டும்.’’

யாங் சங்கடப்பட்டான். ‘‘இவற்றைப் புடுங்கி வேறிடத்தில் நட முயற்சிக்காதீர்கள்; அப்படிச் செய்தால் நீங்கள் அவற்றைக் கொன்றுவிடுவீர்கள்.’’

நதியின் ஒரு வளைவைக் குதிரைகளும் பார வண்டிகளும் அடைந்தபோது, மான் கூட்டங்களை ஓநாய்கள் வேட்டையாடி யிருந்த இடங்களை வேட்டைக்காரர்கள் அடையாளம் கண்டார்கள். எலும்புக் கூடுகளும், கொம்புகளும், குளம்புகளும், ஆங்காங்கே கொஞ்சம் தோல்களும் மட்டுமே அங்கு எஞ்சி யிருந்தன.

‘‘ஒன்றுக்கும் மேற்பட்ட தாக்குதல்கள் இங்கு நடந்திருக்கின்றன’’ என்று பட்டு அறிவித்தான். ‘‘ஏகப்பட்ட ஓநாய்கள் வந்திருக்கின்றன. இங்கு கிடக்கும் மலக்

கழிவுகளின் அளவைப் பார்க்கும்போது, கிழட்டு ஓநாய்களும் நொண்டி ஓநாய்களும்கூட இந்த வேட்டைகளில் கலந்துகொண்டிருக்கின்றன என்று தெரிகிறது.''

''அவை இப்போது எங்கிருக்குமென்று நீ நினைக்கிறாய்?'' பாவோ கேட்டார்.

''அவை மான்களைப் பின்தொடர்ந்து மலைகளுக்குள் சென்றிருக்கலாம்; அல்லது மர்மோட்டுகளை வேட்டையாடப் போயிருக்கலாம்; அல்லது அவை மான்களைப் பின்தொடர்ந்து எல்லைப் பகுதி வரை போயிருக்கலாம். வருடத்தின் இந்தச் சமயத்தில், மான் குட்டிகள்கூட, பெரிய மான்களைப் போலப் படு வேகமாக ஓடும். அதாவது, அவற்றைப் பிடிக்க ஓநாய்கள் சிரமப்பட வேண்டியிருக்கும்.''

பட்டு மேலும் தொடர்ந்து, பாவோவைப் பார்த்துச் சொன்னான். ''ஓநாய்களின் சாதகமான பக்கத்தை இப்போது நீங்கள் பார்க்கலாம். அவை மட்டும் இல்லாவிட்டால், இந்தக் கன்னி நிலம் மான்களால் பாழடிக்கப்பட்டிருக்கும். புல்லை மேய் வதால் மட்டுமல்ல, அவை விட்டுச் செல்லும் கழிவுகளாலும்தான். நம்முடைய ஆடுகள் இங்கு வரும்போது, மானின் சிறுநீர் வாடையை அவை முகர்ந்தால், அவை புல்லைத் தின்னாது. ஒரு கடி கூடக் கடிக்காது. இது மிகச் சரியான இடம். குதிரைகள்கூட இங்கு தங்க விரும்பும். நாம் முதலில் ஒரு இடத்தைப் பார்த்துக் கூடாரங்கள் அமைப்போம். அப்போதுதான் நாய்களும் குதிரை களும் ஓய்வெடுக்க முடியும். நாம் மலைகளுக்குள் நாளை போகலாம்.''

ஆழம் குறைவாகத் தண்ணீர் இருக்கும் இடமாகவும், நதிப்படுகை மணற் பாங்காக இருக்கும் இடமாகவும் உள்ள ஒரு தோதான இடத்தைப் பட்டு தேர்ந்தெடுப்பதற்காக, ஆற்றைக் கடந்து செல்லும்படி பாவோ உத்தரவிட்டார். பிறகு, அவரும் சில வேட்டைக்காரர்களுமாகச் சேர்ந்து, இரு கரைகளிலும் மண் வெட்டிகளால் தோண்டி ஒரு சரிவுப் பாதையை வடிவமைத் தார்கள். பிறகு, நதியின் குறுக்காகப் பார வண்டிகளில் ஒன்றை இட்டுச் சென்றார்கள். இதற்கிடையே, மற்ற வேட்டைக்காரர்கள் கிழக்குச் சரிவில் ஒரு கூடாரத்தை அமைத்துவிட்டிருந்தார்கள். பட்டு அவர்களிடம் ஒரு அடுப்பை அமைத்து, தேனீர் தயாரிக்கும்படி சொன்னான். பிறகு, அவன் பாவோவிடம், ''நான் போய் தெற்குப் பக்கமாக உள்ள மலை ஓடைகளில், ஏதேனும் அடிபட்ட மான்

கிடக்கிறதா என்று பார்க்கிறேன். மக்கள் இவ்வளவு தூரம் வந்திருப்பது, நாம் கொண்டு வந்திருக்கும் காய்ந்த இறைச்சியைச் சாப்பிடுவதற்காக இல்லை.''

பாவோ உற்சாகமாக சம்மதித்தார். பட்டுவும் இரண்டு வேட்டைக்காரர்களும் மலையை நோக்கி சவாரி செய்தார்கள். அவர்களோடு பெரிய நாய்களையும் கூட்டிக்கொண்டார்கள். அப்பகுதியில் மான்களை வேட்டையாடிப் பழக்கப்பட்ட பாரும் எர்லாங்கும், அவற்றின் வேட்டை உள்ளுணர்வால் உந்தப்பட்டு, முன்னால் விரைந்தோடின.

பட்டுவோடு வேட்டைக்குச் செல்லும் வாய்ப்பை பிடிவாத மாகவும் வேதனையோடும் ஒதுக்கித் தள்ளிவிட்டு, ஒரு சரிவில் உட்கார்ந்தபடி, அவனை வெகுவாக ஈர்த்துவிட்டிருந்த அன்னப் பறவைகளை லயித்துப் பார்த்துக்கொண்டிருக்க யாங் கீ ஆசைப் பட்டான். அன்ன ஏரியில் திரியும் அன்னப் பறவைகளைப் பார்த்துக்கொண்டிருக்கும் ஆசையில்தான், குழுமம் முழுவதும் — எல்லா மக்களும், குதிரைகளும், கால்நடைகளும் — வருவதற்கு முன்பாகவே இங்கு வர பாவோவையும் பில்ஜியையும் கெஞ்சி அனுமதி பெற்றிருந்தான். அன்ன ஏரிக் காட்சியின் அழகு முழுவதையும் அள்ளிப் பருகும் வேட்கையில் அவன் இப்போ திருந்தான். ஜென் விவரித்திருந்ததை விடவும் பேரழகாய் ஜொலித்தது அன்ன ஏரி. அவன் தரையில் உட்கார்ந்துகொண்டு, தன்னுடைய தொலைநோக்கியை எடுத்து, அதன் வழியாக மூச்சு விடாமல் கவனித்தான். தன்னந்தனியாக அமர்ந்து, பேரமைதியில் அமிழ்ந்துபோய் இருந்த அவனுக்குப் பின்னால் ஒரு குதிரை செல்லும் சத்தம் கேட்டது.

''ஹேய்'' என்றார் பாவோ. ''நீ அன்னப் பறவைகளையும் பயில்கிறாயா? வா, நீயும் நானும் மட்டும் போகலாம். உணவுக்கு நல்லதாய் ஒன்றைப் பிடித்துக்கொண்டு வரலாம். மேய்ப்பர்கள் பறவைகளைச் சாப்பிடுவதில்லை. அவர்கள் கோழியைக்கூட சாப்பிட மாட்டார்கள். என்னோடு வரும்படி கூப்பிட்டுப் பார்த்தேன். முடியாதென்று சொல்லிவிட்டார்கள். அவர்கள் சாப்பிடாவிட்டால் என்ன, நாம் சாப்பிடுவோம்.''

பாவோ, அவருடைய பாதி தானியங்கித் துப்பாக்கியைக் கையில் வைத்திருப்பதைப் பார்த்ததும், யாங் கீக்கு வேர்த்துக் கொட்டியது. வேண்டாம் என்பது போலக் கைகளை ஆட்டினான். வாய் திக்கியது. ''அன்னங்கள்...

அவை அரிதானவை... பொக்கிஷம்... அவற்றைக் கொல்லக் கூடாது. தயவுசெய்து வேண்டாம்... நான் கெஞ்சிக் கேட்கிறேன். நான் சிறுவனாக இருந்தபோதிருந்தே, அன்ன ஏரியை நேசித்திருக்கிறேன். சிரமமான மூன்று வருடங்களின் போதுகூட, ஒருநாள் பள்ளிக்கூடத்துக்குப் போகாமல், சோவியத் மற்றும் சீன இளம் நடனக் கலைஞர்கள் இணைந்து நிகழ்த்திய கலை நிகழ்ச்சியைப் பார்ப்பதற்காக, பசியோடு வரிசையில் நின்று, வெகு நேரம் காத்திருந்து ஒரு டிக்கெட் வாங்கியிருக்கிறேன். படித்தவர்களும் மகத்தான மனிதர்களும் உலகமெங்கும் அன்னப் பறவையை நேசிக்கிறார்கள். நாம் ஒரு நிஜ அன்ன ஏரிக்கு வந்திருக்கிறோம். எவ்வளவு பெரிய விசயம். அவற்றைக் கொன்று சாப்பிடுவதற்காகவா நாம் இங்கு வந்திருக் கிறோம்? நீங்கள் எதையாவது கொல்ல வேண்டுமென்றால், என்னைக் கொல்லுங்கள்.''

பாவோ அதிர்ச்சியடைந்தார். இந்த அளவு மரியாதைக் குறைவாக எவராலும் நடந்துகொள்ள முடியாதென்று நினைத்தார். அவர் யாங்கை முறைத்துப் பார்த்தார். அவருடைய உற்சாகம் காணாமல் போய்விட்டிருந்தது. ''அன்ன ஏரி, என்ன கொடுமை இதெல்லாம்? முதலாளித்துவவாதிகளின் சுயநல ஏமாற்று வித்தை. நீ ஒரு பட்டதாரி மாணவன் என்பதால், என்னை விடப் பெரியவன் என்று உன்னை நினைக்கிறாயா? அன்ன ஏரியை அரங்கத்திலிருந்து வெளியேற்றாத வரை பெண்களின் சிவப்பு விலகல் நாடகத்தை நம்மால் அரங்கேற்ற முடியாது.''

ஏரியை நோக்கி பாவோ துப்பாக்கியோடு சென்று கொண்டிருப்பதைப் பார்த்த லாசுருங், அவரை நிறுத்துவதற்காகப் பாய்ந்து சென்றான். ''அன்னம் ஒரு புனிதப் பறவை. மங்கோலிய மத குருக்களால் எங்களுக்கு அளிக்கப்பட்டது. நீங்கள் அவற்றைச் சுடக் கூடாது. அது மட்டுமல்ல தலைவர் பாவோ, நீங்கள் ஓநாய்களைத்தானே கொல்ல விரும்புகிறீர்கள், அப்படித்தானே? ஓநாய்கள் மலைகளில் இருக்கும்போது, இங்கு துப்பாக்கிச் சூடு நடத்தினால், அவை அங்கிருந்து ஓடிவிடும். நாம் வந்தது வீணாகப் போய்விடும்.''

பாவோ சட்டென்று குதிரையை நிறுத்தினார். லாசுருங்கைப் பார்த்துத் திரும்பியபடி, ''நல்லவேளை, நீ எச்சரிக்கை செய்தாய். அல்லது முட்டாள்தனமாக நான் ஏதாவது செய்துவிட்டிருப்பேன்.'' லாசுருங்கிடம்

துப்பாக்கியைக் கொடுத்துவிட்டு, திரும்பி யாங் கீயைப் பார்த்தார். ''என்னோடு வா. ஏரியைச் சுற்றியுள்ள பகுதியை வேவு பார்த்துவிட்டு வரலாம்.''

யாங் எவ்வித அக்கறையுமில்லாமல் தன் குதிரையின் மீதேறிப் பாவோவைப் பின்தொடர்ந்தான். அவர்கள் ஏரியை நெருங்கிய போது, குள்ள வாத்துகளும் காட்டு வாத்துகளும், பல்வேறு நீர்ப் பறவைகளும் உயரப் பறந்தன. அவர்களுக்கு மேலாக அவை பறந்தபோது அவர்களுடைய தலைகளின்மீது நீர் சொட்டியது.

பாவோ குதிரையை நிறுத்தி, கால் வளையங்களின் மீது ஊன்றி நின்றபடி, நாணல் செடிகளின் மீதாகப் பார்த்தார். அங்கு ஒரு ஜோடி அன்னப் பறவைகள், தம்முடைய சிறகுகளை விரித்து, கழுத்துகளை நீட்டி, நாணல் செடிகளின் மேற்பகுதிகளைத் தொட்டு உயரப் பறந்தன. அவருடைய தலைக்கு மேலாகப் பத்தடி தூரத்தில் அவை பறந்தபோது அவர் பயந்துபோய், சட்டென சேணத்தின்மீது கெட்டியாக உட்கார்ந்துகொண்டார். அதிர்ச்சியில் குதிரை எகிறி முன்னோக்கிப் பாய்ந்ததில், கிட்டத்தட்ட அவர் கீழே விழும் நிலைக்கு ஆளானார். மனிதர்களிடம் எவ்வித பயமுமில்லாத அன்னப் பறவைகள், ஆற்றுப் பள்ளத்தாக்கின் மேலாக சோம்பிப் பறந்தன. அவை, ஏரியை வட்டமடித்துவிட்டு, நாணல் செடிகளின் பின்னால் மறைந்தன.

குதிரையை மீண்டும் தன் கட்டுப்பாட்டுக்குள் கொண்டு வந்தார் பாவோ. சேணத்தை சரி செய்துகொண்டார். அவர் சிரித்தார். ''அன்னப் பறவைகளை வேட்டையாடுவதற்கான மிக சுலபமான இடம் இதுதான். ஒரு கவட்டை இருந்தால் போதும். அடித்துவிடலாம். பறவைகளின் பேரரசர்கள் அவை. அதன் கறியை ஒரு கடி கடித்தால் போதும். இந்த வாழ்க்கையை வாழ்ந்ததற்கான பெறுமதியாக அது இருக்கும். ஆனால், ஓநாய்களை ஒழித்துக் கட்டும் வரை நாம் பொறுத்திருக்கலாம். அதன்பிறகு இவற்றைக் கவனிக்கலாம்.''

யாங் கீ அவரை நோட்டமிடும் வகையில் கேட்டான். ''கொஞ்ச நேரத்துக்கு முன்பு நீங்கள் அந்த வெண்மலர்களைப் பார்த்தபோது, அவை பொக்கிஷமென்றும், அவற்றை எப்பாடு பட்டாவது பாதுகாக்க வேண்டுமென்றும் சொன்னீர்கள். இந்த அன்னப் பறவைகள் தேசிய சொத்து, சர்வதேச பொக்கிஷம். அப்படியிருக்கும்போது, நீங்கள் ஏன் அவற்றைப் பாதுகாக்கக் கூடாது?''

‘‘நான் ஒரு விவசாயி. எந்தவொரு விசயத்தையும் லௌகீகமாகவே நான் பார்ப்பேன். பொக்கிஷங்கள் மக்கள் கையாள வேண்டியவை. வெண்மலர்களுக்குக் கால்கள் கிடையாதென்பதால் அவை வேறெங்கும் போய்விடாது. ஆனால் அன்னப் பறவைகளுக்குச் சிறகுகள் இருக்கின்றன. மக்களும் கால்நடைகளும் இங்கு வந்தபிறகு, அவை வடக்கே பறந்துபோய்விடும். பிறகு அவை சோவியத் அல்லது மங்கோலிய சீர்திருத்தவாதிகளுக்காக சட்டியில் வறுக்கப்பட்ட பொக்கிஷங்களாகிவிடும்.’’

‘‘சோவியத் மக்கள் அவற்றைப் பொக்கிஷங்களாகக் கருதுகிறார்கள்; அவர்கள் அவற்றைக் கொல்லவோ, சாப்பிடவோ மாட்டார்கள்.’’

‘‘நீ இந்த அளவு அறியாமையில் பீடிக்கப்பட்டவனாய் இருப்பாய் என்று தெரிந்திருந்தால், உன்னை என்னோடு கூட்டிக்கொண்டு வந்திருக்க மாட்டேன். பொறுத்திருந்து பார். உன்னுடைய அன்ன ஏரியைக் குதிரைகளுக்கும் மாடுகளுக்குமான தண்ணீர்க் குட்டையாக நான் மாற்றப் போகிறேன்.’’

யாங், ஏதோ சொல்ல வந்து அதை அப்படியே விழுங்கிவிட்டான். ஒரு துப்பாக்கியை எடுத்து, வானில் சுட்டு அதிர்ச்சியில் அன்னப் பறவைகளை மேய்ச்சல் நிலத்தை விட்டும், இந்த நாட்டை விட்டும் பறந்துபோகச் செய்யவேண்டுமென அவன் ஆசைப்பட்டான். அன்ன ஏரி என்ற நாட்டியக் கலை நிகழ்ச்சியை உருவாக்கிய நாட்டுக்கு அவை போய்விட வேண்டுமென விரும்பினான். அங்குதான் அன்னப் பறவைகளை நேசிக்கும் மக்கள் இருப்பார்களென அவன் நினைத்தான். சிட்டுக் குருவிகளைக் கூட, அந்த இனமே அழிந்து போகுமளவுக்குத் தின்று தீர்க்கிற இந்த நாடு எப்படி அன்னப் பறவைகளுக்கான இடமாக இருக்க முடியும்?

அவர்கள் இருவரையும் திரும்பி வரும்படி லாசுருங் சைகை செய்தான். அதனால் அவர்கள் வேகமாக முகாமுக்குத் திரும்பி வந்தனர். அங்கு தென்கிழக்கு மலைகளிலிருந்து வந்திருந்த சஞ்சாய், தன்னுடைய பார வண்டியில் குதிரைகளைப் பூட்டிக்கொண்டிருந்தான். பட்டுவும் அவனுடைய குழுவினரும் மலைகளில் காட்டுப் பன்றிகளைக் கொன்றுவிட்டிருந்தனர். அந்தச் சடலங்களைக் கீழே முகாமுக்குக் கொண்டு வருவதற்காக, பார வண்டியை எடுத்து வரும்படி அவனை அனுப்பியிருந்தனர். வரும்போது பாவோவையும் அழைத்துக்கொண்டு வரும்படி பட்டு கூறியிருந்தான். பாவோவால் அவருடைய

சந்தோஷத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. அவர், தன்னுடைய தொடையில் தட்டிக்கொண்டார். ‘‘இங்கு மேய்ச்சல் நிலத்தில் காட்டு¢¢ப் பன்றிகள் இருக்கிறதென்று சொல்கிறாயா? ஆச்சரியமாக இருக்கிறது. நாட்டுப் பன்றிகளை விட அவை பிரமாதமாக இருக்கும். வா, போகலாம்.’’

யாங் கீ, மேய்ச்சல் நிலத்துக்கு வந்ததிலிருந்து ஒரு காட்டுப் பன்றியைக் கூடப் பார்த்ததில்லை. அதனால் அவனும் பாவோவுடன் சேர்ந்து கிளம்பினான். சஞ்சாய் சுட்டிக்காட்டிய திசையை நோக்கி, அவர்கள் சவாரி செய்தார்கள்.

அவர்கள் பட்டுவை அடைவதற்கு முன்பாகவே, தரையில் கிடந்த காட்டுப் பன்றிகளைப் பார்த்துவிட்டார்கள். மலையின் காலடியில் அமர்ந்து பட்டு புகை பிடித்துக்கொண்டிருந்தான். இருவரும் குதிரைகளிலிருந்து இறங்கினார்கள். பட்டுவுக்குப் பக்கத்தில் இரண்டு காட்டுப் பன்றிகளின் சடலங்கள் சேதாரமின்றிக் கிடந்தன. மேலும் இரண்டு சடலங்கள் நாய்களால் கிழித்துக் குதறப்பட்டிருந்தன. இரண்டு நாய்களும் கால்களைப் பரப்பிக்கொண்டு பெரும் சத்தத்துடன் அவற்றைத் தின்றுகொண்டிருந்தன. எர்லாங்கும் பாரும் ஒரு காலை விருந்தாக்கிக்கொண்டிருந்தன. பட்டுவுக்குப் பக்கத்தில் கிடந்த பன்றிகள், முழு வளர்ச்சியடைந்த நாட்டுப் பன்றிகளை விடச் சின்னதாக இருந்தன. அவற்றின் மூக்குகள் மட்டும் நாட்டுப் பன்றிகளைவிட இரண்டு மடங்கு நீளமிருந்தன. அவை கொழுத்தும், சராசரி நீளப் பற்களோடும் காணப்பட்டன. குறிப்பாக அவை அச்சுறுத்தக்கூடிய தோற்றத்தில் இல்லை. அந்த இரண்டு பன்றிகளின் கழுத்துகளிலும் கோரைப் பற்களின் தடங்கள் காணப்பட்டன.

பட்டு, ஒரு மலை ஓடையைச் சுட்டிக் காட்டினான். ‘‘நாய்கள் ஓநாய்களின் வாசனையை மோப்பம் பிடித்தன. மேலும், காட்டுப் பன்றிகளை அந்த மலை ஓடை வரைக்கும் துரத்திச் சென்றன. அங்கு தரை குண்டும் குழியுமாக இருந்தது. ஓநாய்களால் கொல்லப் பட்டு, சாப்பிடப்பட்டிருந்த மூன்று அல்லது நான்கு காட்டுப் பன்றிகளின் சடலங்களை அங்கு பார்த்தோம். நாய்கள், ஓநாய்களின் பின்னால் செல்ல விரும்பாமல் அங்கேயே நின்றுவிட்டன. அதற்குப் பதிலாக அவை பன்றிகளின் வாசனையை மோப்பம் பிடித்து, மலையிடுக்கின் கீழாக ஓடின. அப்போது ஒரு கூட்டமாகப் பன்றிக்குட்டிகள் பாய்ந்தோடின. பெரிய பன்றிகள் காற்றைப் போல் ஓடின. அதனால் நாய்கள் அவற்றின்

பின்னால் செல்லவில்லை. நான் அவற்றைச் சுடத் துணியவில்லை. ஏனென்றால், அது ஓநாய்களுக்கான எச்சரிக்கையாகிவிடும். கடைசியில் நாய்கள் இந்தப் பன்றிக்குட்டிகளைக் கொன்றன. அதனால் இரண்டை அவை சாப்பிட விட்டுவிட்டேன். மற்ற இரண்டும் நமக்கு.''

இறந்துகிடந்த ஒரு பன்றியின் மீது, பாவோ சுங்காய் தன் பாதத்தை வைத்தார். ''அருமையான வேலை'' என்று புன்னகையோடு சொன்னார். ''இந்த இளம் பன்றியின் இறைச்சி, மிருதுவாகவும் அருமையாகவும் ருசியாகவும் இருக்கும். இன்றிரவு உங்கள் எல்லோருக்கும் நல்ல மது கொடுத்து உபசரிக்கிறேன். இங்கு ஓநாய்கள் சுற்றித் திரிவது நிச்சயமாகத் தெரிகிறது. நாளை நீங்கள் எல்லோரும் சென்று சிலவற்றைக் கைப்பற்றி வாருங்கள்.''

''இங்கிருந்து நூற்றுக்கணக்கான மைல்கள் தாண்டியுள்ள காட்டிலிருந்து இந்தப் பன்றிகள் வந்திருக்கின்றன. அங்கு அவை ஏராளமாக உள்ளன. அவை நதியைப் பின்தொடர்ந்து இங்கு வருகின்றன. ஓநாய்கள் மட்டும் இல்லாவிட்டால், நெடுங் காலத்துக்கு முன்பே இந்த மேய்ச்சல் நிலத்தை அவை அழித்து விட்டிருக்கும்.''

சஞ்சாயின் பார வண்டியில் இரண்டு சடலங்களையும் ஏற்றினார்கள். வேட்டைக்காரர்கள் பார வண்டியோடு கிளம்பியபோது, நாய்கள் சாப்பிட்டுக்கொண்டிருக்கட்டும், நாம் போகலாம் என மற்றவர்களிடம் சைகை மூலம் தெரிவித்தான் பட்டு.

அவர்கள் முகாமைச் சென்றடைந்தபோது, ஏற்கெனவே தீ மூட்டப்பட்டிருந்தது. இரண்டில் பெரியதை அவர்கள் தீயில் வாட்டி, தோலை உரித்து, எலும்பை நீக்கினார்கள். திறந்தவெளி விருந்து தொடங்குவதற்கு முன்பாகவே வாசனை காற்றை நிறைத்தது. மற்றவர்கள், அந்தப் பன்றியை சமையலுக்காகத் தயார் செய்துகொண்டிருந்தபோது, யாங் சென்று காட்டு வெங்காயம், பூண்டு, மூலிகை இலைகள் ஆகியவற்றை எடுத்துக்கொண்டு வந்தான். மேய்ச்சல் நிலத்தில் நடைபெறும் திறந்தவெளி விருந்தில், காட்டு மூலிகைகளைச் சேர்க்கும் பழங்கால முறையை அவன் தெரிந்து வைத்திருந்தான். அதற்காக அவன் தன்னை நினைத்துப் பெருமைப்பட்டுக்கொண்டான்.

வேட்டைக்காரர்களுக்கு அருமையான மது அளித்து உபசரித்த பாவோ சுங்காய், அவர்களை மகிழ்வூட்டும் வகையில், அரசர்களின் விருந்துகளில் அன்னப் பறவைகள் பரிமாறப்படுவது பற்றிப் புழங்கும் கதைகளைச் சொன்னார். அவர்களுக்கு அது பிடிக்காததால், அவரும் சீக்கிரமே சுவாரஸ்யத்தை இழந்துவிட்டார். தரை ஜீவராசிகளை மட்டுமே வேட்டைக்காரர்கள் சாப்பிடு வார்கள். ஏனெனில், டெஞ்ஞர் வரை பறக்கக்கூடிய எந்த ஒன்றையும் அவர்கள் போற்றுவார்கள்.

அந்தப் பகுதியைக் காவல் காக்கும் வகையில், நாய்கள் முகாமுக்குத் திரும்பிவிட்டிருந்தன. ஆண்கள் வயிறு முட்டக் குடித்தும் சாப்பிட்டும் முடித்துவிட்டு, எஞ்சியவற்றை ஒரு பாத்திரத்தில் போட்டார்கள். இதயம் மற்றும் ஈரல் தவிர்த்த மற்ற பாகங்களையும் தலையையும் புல் படர்ந்திருந்த தரையின்மீது, நாய்களின் அடுத்த வேளை உணவுக்காகத் தூக்கி எறிந்தார்கள்.

இரவு கவிழ்வதற்குச் சற்று முன்பாக, அவனுடைய அன்ன ஏரியில் என்ன நடக்கிறதென்பதை அவதானிப்பதற்குத் தோதான ஒரு இடத்துக்கு யாங் கீ தனியாகச் சென்றான். அவனுடைய முட்டி களின் மீது முழங்கைகளை ஊன்றியபடி உட்கார்ந்து கொண்டான். பின்னர், தொலைநோக்கி மூலம் காட்சியைப் பருகத் தொடங்கினான்.

ஏரியின் மேற்பரப்பில் சிற்றலைகள் வெளிப்பட்டன; மேற்குப் பகுதி இரவு வானின் குளிர்ந்த நீலநிறத்தைக் கண்ணாடி போல் பிரதிபலித்துக்கொண்டிருந்தது. கிழக்குப் பகுதி சூரிய அஸ்தமனத்தின் வெம்மையான வண்ணங்களைப் பிரதிபலித்துக் ம்கொண்டிருந்தது. சிற்றலைகள் மெதுவாகப் பரவத் தொடங்கின. வட்ட வட்டமாய் பரவிய சிற்றலைகளில் ரத்தினச் சிவப்பு, மரகதப் பச்சை, ஒளிர் மஞ்சள் என வண்ணங்கள் சுழன்றன. பிறகு, பளிங்குக் கருஞ்சிவப்பு, ஊதாக்கல் நீலம், முத்து வெண்மை என வண்ணங்கள் சுழன்றன. குளிர்ந்த மற்றும் வெம்மையான வண்ணங் கள் மாறி மாறி ஒரு புனிதமான தொனியில் வெளிப்பட்டன. அவன் கண்முன் விரிந்திருந்த காட்சி, இனி நேரப்போகும் அன்னப் பறவைகளின் மரணத்தை முன்னுரைப்பதுபோலத் தெரிந்தது. தனக்குப் பிரியமான அன்னப் பறவைகளைப் பிரியப்போகும்

துயரத்துக்கான முகவுரைபோல, இந்த அற்புத வண்ணங்களை டெஞ்ஞர் அனுப்பி வைத்திருக்கிறது.

சிற்றலைகளின் மெதுவான பரவல் தொடர்ந்து கொண்டிருந்தது. இயற்கைப் பின்னணியில் ஒரு மௌன நாட்டியம் நிகழப் போவதாக அவனுக்குத் தோன்றியது. பச்சை நாணல்களின் நடுவிலிருந்து ஒன்றன் பின் ஒன்றாக அன்னங்கள் வெளிப்பட்டு ஒரு லயத்தோடு ஏரியின் மேற்பரப்பில் மிதந்தன. ஏரியின் பல வண்ண மேற்பரப்பும், மேலே வான விதானமும் சேர்ந்து, ஒரு பிரமாண்டமான அரங்கத்தை உருவாக்கியிருந்தன. அன்னங்கள் நீல வண்ண மாலை ஆடைக்கு மாறியிருந்தன; அவற்றின் நளினமான வளைந்த கழுத்துகள் பிரகாசமான கேள்விக்குறிகளைப் போலத் தோன்றின. அவை, சொர்க்கத்தை, பூமியை, தண்ணீரை, மக்களை, பூமியில் வாழும் எல்லா ஜீவராசிகளையும் கேள்வி கேட்கின்றன. அவை அமைதியாக நகர்கின்றன; பிறகு பதிலுக்காகக் காத்திருக்கின்றன. ஆனால் பதிலேதும் வரவில்லை. மேற்பரப்பில் பரவியிருந்த சிற்றலைகளின் மீதான பிரதிபலிப்பு சற்றே மங்கியது.

ஜென்னும் அவனும், வாழும் ஹேன் சீனர்களிலேயே மிகவும் அதிர்ஷ்டம் வாய்ந்தவர்கள் என்று யாங் எண்ணினான். ஓநாய்களின் காட்டுத்தனமான சக்தியும் ஞானமும் இப்போ திருப்பதை விடவும் மகத்தானதாக வளரும்பட்சத்தில், மேய்ச்சல் நிலத்தில் மனிதர்களும் கால்நடைகளும் விரிவாக்கம் செய்யப் படுவதையும், அத்துமீறி ஆக்கிரமிப்பு செய்வதையும் ஒருவேளை மேலும் தள்ளிப் போடலாம். அந்த விரிவாக்கத்துக்கான உந்துசக்தியாக இருப்பது, சீன விவசாய சமூகம். அவர்களின் மக்கள் தொகை கட்டுக்கடங்காதது. யாங் மிகுந்த கவலையும் வேதனையும் அடைந்தான். அவன் ஓநாய்களிடம் பெரிய மதிப்பு கொண்டிருந்தான். அடுத்து நிகழவிருக்கிற அவற்றின் தோல்வியானது, மேய்ச்சல் நிலம் தோற்பதின் முதல் அறிகுறியாக இருக்கும். மேலும், அதுவே அழகு பற்றிய மனிதர்களின் கருத்தாக்கத்திற்கான தோல்வியாகவும் அமையும். அவனுடைய கண்ணீர் தொலை நோக்கியின் கண்ணாடிகளைத் தெளிவற்றதாக்கியது. அந்தப் புராதன ஏரி, ஒரு தொலைவில் மெதுவாக மங்கியது.

மறுநாள், வேட்டைக்காரர்கள் மலைக்குள் சென்று ஒவ்வொரு மலை ஓடை இடுக்குகளையும் அலசினார்கள். ஆனால் வெறுங்கையோடு திரும்பினார்கள். அதற்கு மறுநாள் மலையின் ஆழ்ந்த உட்பகுதிக்குள் சென்றார்கள். மதியத்துக்குள்ளாக அவர்கள் களைத்துப் போய்விட்டார்கள். குதிரைகளும் சோர்வடைந்து விட்டன. அப்போது சற்று தூரத்தில் துப்பாக்கிச் சத்தம் கேட்டது. சத்தம் வந்த திசையில் அவர்கள் திரும்பிப் பார்த்தபோது, கிழக்குப் பக்கமாக இருந்த ஒரு மேட்டில் இரண்டு ஓநாய்கள் தெரிந்தன. அவை மலைமீது தடுமாறியபடியே ஓடின. இங்கும் மனிதர்கள் இருப்பதை அறிந்ததும், அவை திரும்பி ஒரு பாறையைச் சுற்றி ஓடின. பட்டு, அந்த இடத்தைத் தன் தொலைநோக்கியால் பார்த்தான். ‘‘பிரதான கூட்டம் எப்போதோ போய்விட்டது. பின் தங்கிப்போன இந்த இரண்டும் அவற்றோடு இணைந்து ஓட முடியாத அளவுக்குக் கிழடு தட்டிப் போனவை’’ என்றான் பட்டு.

‘‘அதனால் என்ன? இளசோ கிழமோ, இரண்டு தோல்கள் கிடைத்தால் வெற்றிதான்’’ என்று பரவசத்தோடு சொன்னார் பாவோ.

வேட்டைக்காரர்களும் நாய்களும் இருவேறு திசைகளில் மலைமீது ஏறினார்கள். ஒரு ஓநாய் பெரியது, மற்றொன்று சிறியது. பெரிய ஓநாயின் இடது முன்னங்கால், அது ஓடும்போது நேர்வாக்கில் நீளவில்லை. முந்தைய சண்டை ஒன்றின்போது, நாய்க்கடியால் அதன் தசைநார் கிழிந்துவிட்டிருக்கிறது. இரண்டாவது, வயதான பெண் ஓநாய். அது, எலும்பும் தோலுமாய் வயதானதால் உண்டான சாம்பல் நிறத்தோடு இருந்தது. பார், எர்லாங் மற்றும் பிற வேட்டை நாய்கள், அவை எவ்வளவு வயதான, முடமான ஓநாய்கள் என்று தெரிந்ததும் வேகத்தைக் குறைத்தன. ஆனால் ஒரே ஒரு இளம் நாய் மட்டும், முழு வேகத்தோடு, என்ன நடக்கும் என்பதறியாமல் விரைந்தோடியது.

ஓநாய்கள், அடுக்கடுக்காய் தளர்வான பாறைகள் நிறைந்த, சிக்கலான ஒரு பிராந்தியப் பகுதிக்குள் ஓடின. அவை எடுத்து வைத்த ஒவ்வொரு எட்டின்போதும், பாறைகள் சிறு சிறு துண்டுகளாக நொறுங்கிய சப்தம் மலைப்பக்கமெங்கும் கேட்டது. குதிரைகள் வெகுவாக சிரமப்பட்டதால், வேட்டைக்காரர்கள் இறங்கி, கையில் துப்பாக்கி மற்றும் தடிகளோடு, மூன்று திசைகளை மூடியபடி அவற்றை நெருங்கினர்.

பெரிய ஆண் ஓநாய், ஒரு செங்குத்துப் பாறையை நோக்கிப் பாய்ந்து சென்றது. அதன் மூன்று பக்கங்கள் கல்சுவர்களால் அமைந்திருக்க, தப்பிப்பதற்கான ஒரே பாதையாக மலைக்குச் சீராகச் சென்ற, செங்குத்தான ஒரு சரிவு மட்டுமே இருந்தது. அது, ஒரு கல்சுவற்றோடு போய் ஒட்டி நின்றுகொண்டது. அதன் கண்கள் இரக்கமற்று ஒளிர்ந்தன. நன்றாக மூச்சை இழுத்துக்கொண்டு, அதன் வாழ்விற்காகப் போராடத் தயார்படுத்திக்கொண்டது. நாய்கள் அரை வட்ட வடிவில் இருந்துகொண்டு, உறுமவும் குரைக்கவும் செய்தாலும், கால் நழுவி மறுபக்கமாக விழுந்துவிடுவோம் என்ற பயத்தில் பின்வாங்கியே நின்றன. அச்சமயத்தில் வேட்டைக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர் பார்த்த காட்சி பாவோவை மகிழ்வித்தது. ‘‘யாரும் நகர வேண்டாம். என்னைக் கவனியுங்கள்’’ என்றபடி துப்பாக்கியைத் தயார் செய்துகொண்டு, சரியாகக் குறிபார்த்துச் சுடுவதற்கு ஏதுவாக முன்னகர்ந்தார்.

அவர் ஓநாயை நெருங்குவதற்கு முன்பாக, நாய்களுக்கருகில் சென்ற உடனேயே, ஓநாய் செங்குத்தான பாறையிலிருந்து, சரிவுக்குத் தாவியது. மிகவும் நெகிழ்வான பாறைகளோடிருந்த அந்தச் சரிவில், தன்னுடைய கால் நகங்களால் அவற்றைத் தோண்டித் தகர்த்தபடியே, மலைக்குக் கீழாகச் சறுக்கி ஓடியபோது, பாறைகளும் அதன் பின்னால் உருண்டோடி வந்தன. பாறைகள் அதன் உடலை நசுக்கியவுடன், சாம்பல்நிற மண் மேகக்கூட்டம் போலிறங்கி ஓநாயை விழுங்கியது. ஓநாய் புதைந்துபோனது.

வேட்டைக்காரர்கள் முன்னெச்சரிக்கையோடு, செங்குத்துப் பாறையின் முனை வரை நடந்துபோய், கீழே பார்த்தார்கள். ஒரு வழியாக மணற்புழுதி அடங்கியபோது, ஓநாய் எங்குமே கண்ணில் படவில்லை.

‘‘என்ன நடந்திருக்கிறது? அது கொல்லப்பட்டுவிட்டதா அல்லது தப்பிவிட்டதா?’’ என்று பட்டுவிடம் பாவோ கேட்டார்.

‘‘என்ன நடந்திருந்தால் என்ன? எப்படியிருந்தாலும், இனி அந்த ஒரு தோல் உங்களுக்குக் கிடைக்கப் போவதில்லை’’ என்று வாட்டத்தோடு சொன்னான் பட்டு.

எதுவும் பேசாமல் பாவோ அப்படியே நின்றிருந்தார். அதன்பிறகு, நாய்கள் மிகவும் உரத்த குரலில் விடாது குரைப்பது கேட்டது. உடனே அவர், ‘‘அங்கு

இன்னமும் ஒன்று இருக்கிறது. நாம் அங்கே போகலாம். எப்படியாவது இன்று நமக்கு ஒரு ஓநாய் கிடைக்கப் போகிறது'' என்றார்.

பாறைகள் தகர்ந்தோடியதில் உருவாகியிருந்த குகையை நோக்கி அவர்கள் சென்றார்கள். கழுகுகளின் மலம் கட்டிதட்டிப் போய் பல பாறைகளில் காணப்பட்டது. பாவோ சுங்காய் தலையை நீட்டி, குகையின் அளவை நோட்டம் விட்டார். ''இதை நாம் தோண்டினால், இதற்குள் இன்னொரு குகை இருக்குமென்று நினைக்கிறேன். அதனால் நாம் புகை மூலமாக வெளியில் வர வைக்க முடியாது. ஏனென்றால் அங்கே நிறைய பகுதிகள் இருப்பதால் புகை வீணாகப் பரவிவிடும். உனக்கேதும் யோசனை வருகிறதா?''

பட்டு, தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியால் உள்ளே துழாவினான். பாறைகள் நகரும் சத்தம் கேட்டது. ''நாம் செய்வதற்கு ஒன்றுமில்லை. ஏதாவது செய்யப் போனால், அதாவது பாறைகளை நகர்த்தினால், அவை நம் மீதும் நாய்கள் மீதும்தான் விழும்.''

''இந்தக் குகை எவ்வளவு ஆழமிருக்கிறது?'' என்று பாவோ கேட்டார்.

''அப்படியொன்றும் ஆழமில்லை.'' பட்டு பதிலளித்தான். ''அப்படியானால் நாம் புகை போட்டுப் பிடிக்கலாம். நீங்கள் போய் புல் எடுத்து வாருங்கள். அதை எரித்த பின்பு, புகை ஏதேனும் துவாரங்கள் வழியாக வெளிவந்தால் அவற்றை நாம் அடைத்துவிடலாம். நான் கொஞ்சம் மிளகு கொண்டு வந்திருக்கிறேன். அது ஓநாயை வெளிவரச் செய்துவிடும். அருமையான வேட்டைக்காரர்களைக் கொண்ட ஒரு வேட்டைக் குழுவால் மூன்று நாள் முயற்சி செய்து, ஒரே ஒரு ஓநாயைக் கூடப் பிடிக்க முடியவில்லையென்றால் நாம் கேலிப் பொருளாகிவிடுவோம்.''

வேட்டைக்காரர்கள், தீ பற்றுவதற்குத் தோதான பொருள்களையும் காய்ந்த புல்லையும் தேடி, வெவ்வேறு பக்கமாகப் பிரிந்து சென்றார்கள். குகை வாசலில் பாவோவும் யாங் கீயும் இருந்துகொண்டார்கள். ''இந்த ஓநாய் வயசாகிப்போய், நோயுற்று, எலும்பும் தோலுமாய் பாவமாய் இருக்கிறது. இது ரொம்ப நாள் வாழப் போவதில்லை என்பது நிச்சயம். மேலும், கோடை கால மேலங்கிக்கு மென்மையான முடி வேண்டும் என்பதால் கொள்முதல்

நிலையத்துக்கும் இதில் ஆர்வமிருக்காது. அதனால் இதை விட்டு விடலாமே’’ என்றான் யாங்.

பாவோவின் முகம் இருண்டது. ‘‘நான் உண்மையைச் சொல்கிறேன். ஓநாய்க்கு எந்த வகையிலும் ஈடாக மாட்டார்கள் மக்கள். யுத்தத்தில் நான் போர்வீரர்களுக்குத் தலைமை தாங்கியிருக்கிறேன். அங்கு ஓட்டம் பிடிப்பதோ அல்லது கலகம் செய்வதோ நடக்காதென்பதற்கு எவ்வித உத்திரவாதமும் இல்லை. ஆனால், ஒரு ஓநாய், செத்தாலும் பரவாயில்லை என்று குகையை விட்டு வராமலிருக்கிறதே ஏன்? ஓலோன்புலாக் ஓநாய்கள், அருமையான போர்வீரர்கள் என்பதை ஒத்துக்கொள்வதில் எனக்கு எந்தத் தயக்கமும் இல்லை. காயமடைந்த, முதிய மற்றும் பெண் ஓநாய்கள்கூட மனிதனிடம் பயத்தை ஏற்படுத்திவிடுகின்றன. ஆனால், கோடை காலத் தோலை எவரும் விரும்ப மாட்டார்கள் என்று நீ எனக்குச் சொல்கிறாய். இதிலிருந்தே உனக்குப் பல விசயங்கள் தெரியவில்லை என்பது உறுதியாகிறது. எங்கள் ஊரில் யாரும் கனத்த மயிர் தோலிலான போர்வையைப் பயன்படுத்த மாட்டார்கள். அதன் அதிகப்படியான சூட்டில் மூச்சு திணறிவிடும். மெல்லிய தோல்தான் பலருடைய விருப்பம். மேலும், யுத்தம் என்று வந்துவிட்டால் அவையா, நாமா என்று பார்த்துவிட வேண்டியது தான் முக்கியம்.’’

பட்டுவும் மற்ற வேட்டைக்காரர்களும் காய்ந்த கிளைகளின் கட்டுகளோடு வந்தார்கள். குகையின் வாய்ப் பகுதியில் எல்லா வற்றையும் குவித்து நெருப்பைப் பற்ற வைத்தார் பாவோ. தீயின் முன்னால் வேட்டைக்காரர்கள் மண்டியிட்டு அமர்ந்து, தங்கள் ஆடைகளின் முனைகளால் விசிறி, புகையைக் குகை வாயிலுக்குள் அனுப்பிக்கொண்டிருந்தார்கள். குகைக்குள் புகை அடர்த்தியாகப் பாய்ந்தது. பாறைகளில் இருந்த இடைவெளிகளின் வழியாகப் புகை வெளியேறியது. வேட்டைக்காரர்கள் அந்த ஓட்டைகளையெல்லாம் அடைத்தார்கள். அப்படியும் சின்னச் சின்ன இடைவெளிகள் மூலம் புகை வெளியேறியதில் எல்லோரும் இருமினார்கள்.

பாவோ சுங்காய் கை நிறைய மிளகுகளை நெருப்பில் போட்டார். காரமான புகை மேகங்கள் குகைக்குள் புகுந்தன.

குகை வாசல் ஒரு பிரமாண்டமான அடுப்பு போலக் காணப் பட்டது. மிளகுப் புகை குகையை நிறைத்தது. முதிய ஓநாய் இருமும் சப்தம் உள்ளிருந்து

வந்தது. உடனே அடிப்பதற்குத் தோதாக வேட்டைக் காரர்கள் தடிகளைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள். பாய்வதற்கு நாய்கள் ஆயத்தமாயின. உள்ளிருந்து இருமல் சப்தம் பலமாகக் கேட்டது. ஆனால் ஓநாய் வெளிவரக் காணோம். யாங் கீ பலமாக இருமினான்; கண்ணீர் அவன் முகத்தில் வழிந்தோடியது. ''எப்படி இவ்வளவு நேரம் அது தாக்குப் பிடிக்கிறது. என்னால் நம்ப முடியவில்லை'' என்றான் அவன்.

''சாவுக்குப் பயந்துகூட ஒரு மனிதனால் நிச்சயம் அங்கிருக்க முடியாது.''

திடீரென, பாறைகள் கிட்டத்தட்ட மூன்றடி தூரம் விலகியதில் இடைவெளிகள் உருவாகிப் புகை வெளியே பாய்ந்தது. பல பாறைகள் உடைந்து மலையின் கீழாக உருண்டன. நல்ல வேளையாக புகையை விசிறிவிட்டுக்கொண்டிருந்த வேட்டைக் காரர்கள் மீது அவை மோதவில்லை.

''குகை உடைந்து விழுகிறது. எல்லோரும் இங்கிருந்து விலகிப் போங்கள்'' என்று கத்தினார் பாவோ.

உள்ளிருந்து வந்த இருமல் சத்தம் நின்றுவிட்டது. அங்கு எந்த நடமாட்டமும் இல்லை. மிளகுப் புகை, குகைக்குள் செல்லாமல் மேல் நோக்கிப் பேரலைகள் போல உயர்ந்து சென்றது.

''நீங்கள் மறுபடியும் தோற்றுவிட்டீர்களென்று தோன்றுகிறது. தற்கொலை செய்துகொள்கிற ஓநாய்க்கெதிராக நீங்கள் போராடுகிறீர்கள். அது தன்னைச் சுற்றியுள்ள பாறைகளை நழுவி விழச் செய்து, அவற்றுக்குள் அது புதைந்து போனது. அது தன்னுடைய தோலைக்கூட உங்களுக்குத் தரவில்லை'' என்று பாவோவைப் பார்த்துப் பட்டு சொன்னான்.

''பாறைகளை நகர்த்துங்கள்.'' பாவோ கோபமாகக் கத்தினார். ''அவற்றின் அடியில் கிடக்கும் ஓநாயை நான் எடுக்க இது ஒன்றுதான் வழி.''

பல நாட்களாகக் கடினமாக உழைத்திருந்த வேட்டைக் காரர்கள் அப்படியே உட்கார்ந்திருந்தார்கள். பட்டு சிகரெட் பெட்டியை எடுத்து, அதை எல்லோருக்கும் கொடுத்தான். பாவோவிடம் ஒன்றைக் கொடுத்தபோது அவன் சொன்னான்: ''நீங்கள் தோல்களுக்காக ஓநாய்களை வேட்டையாடவில்லை என்று எல்லோருக்கும் தெரியும். அவை பேரழிவு சக்தி என்று நீங்கள் நினைப்பதால் அவற்றை அழித்தொழிக்கவே விரும்புகிறீர்கள். இப்போது அந்த

ஓநாய் இறந்துவிட்டது. ஆக, நீங்கள் எதற்காக வந்தீர்களோ அது நடந்துவிட்டது, சரிதானா? நாம் இங்கு கொஞ்சம் பேர்தான் இருக்கிறோம். நாம் நாளை வரை தோண்டினாலும் அதை அடைய முடியாது. ஒரு ஓநாய்க் கூட்டத்துக்கு எதிராக நீங்கள் ஒரு வேட்டைக் குழுவுக்குத் தலைமை ஏற்றதற்கும், அதில் இரண்டு பெரிய ஓநாய்கள் கொல்லப்பட்டதற்கும் நாங்கள் சாட்சிகளாக இருக்கிறோம். ஒன்றை செங்குத்தான பாறையிலிருந்து ஓடவிட்டும், மற்றொன்றை ஒரு குகைக்குள் மூச்சுத் திணற வைத்தும் அவற்றை சாகடித்திருக்கிறீர்கள். இது போதாதா?'' எல்லோரையும் ஒருமுறை சுற்றிப் பார்த்துவிட்டு, ''இது போதும் என்று நீங்கள் எல்லோரும் நினைக்கிறீர்களா?'' என்று கேட்டான்.

எல்லோரும் ஒத்துக்கொண்டார்கள். எல்லோரையும் போலக் களைத்துப்போயிருந்த பாவோவும், சிகரெட்டை ஒரு இழு இழுத்துவிட்டு, ''சரி, நாம் எல்லோரும் கொஞ்சம் ஓய்வெடுத்து விட்டுப் பின் இங்கிருந்து கிளம்பலாம்'' என்றார்.

பாறைகளின் குவியல் முன்பு யாங் கீ அதிர்ந்துபோய் நின்றிருந்தான். உருண்டுவந்த ஒரு பாறை அவனுடைய உடலிலிருந்து ஆன்மாவை எடுத்துக்கொண்டு விட்டதைப் போலிருந்தான். உள்ளிருக்கும் மங்கோலியப் போர் வீரனுக்கு மண்டியிட்டு அஞ்சலி செலுத்த அவன் விரும்பியபோதிலும், அப்படியே விறைப்பாக நின்றுகொண்டிருந்தான். கடைசியாக அவன் திரும்பி, பட்டுவிடம் ஒரு சிகரெட் கேட்டான். அதை சில முறை இழுத்துவிட்டு, இரண்டு கைகளாலும் அந்த சிகரெட்டைப் பிடித்துத் தலைக்கு மேலாகத் தூக்கினான். பின்னர் பாறைக் குவியலை நோக்கிப் பவ்யமாகக் குனிந்து, அதன்பிறகு அந்த சிகரெட் துண்டை இரண்டு பாறை களுக்கிடையே வணக்கத்துடன் போட்டான். லேசான புகை காற்றில் மேலேறி, முதிய ஓநாயின் ஆன்மாவை வான் நோக்கி, டெஞ்ஞருக்கு எடுத்துச் சென்றது.

வேட்டைக்காரர்கள் எழுந்து நின்றுகொண்ட போதிலும், அந்தப் புகையில் தங்கள் பங்கைச் செலுத்தவில்லை. புகைக்கப் பட்ட சிகரெட்டுகளை மங்கோலியர்கள் இழிவானவையாகவே கருதினார்கள்; கடவுள்களைக் கும்பிடும்போது, அவற்றைப் பயன் படுத்தக்கூடாது. ஆனாலும் யாங் கீயின் செயலில் இருந்த நல்ல நோக்கம் காரணமாக, அந்தச் செயல்

சுத்தமானதல்ல என்ற போதிலும், அவர்கள் அதைப் பொருட்படுத்தவில்லை. அவர்கள் தங்களுடைய சிகரெட் துண்டுகளை அணைத்துவிட்டு, நேராக நின்று, மேல்நோக்கி டெஞ்ஞுரைப் பார்த்தனர். அவர்கள் எதுவும் சொல்லவில்லை என்றாலும், அவர்களுடைய தூய பார்வைகளின் இறைஞ்சுதலில், முதிய ஓநாயின் ஆன்மா விரைவாக எடுத்துச் செல்லப்படும். பாவோகூட தன்னுடைய சிகரெட்டை அத் தருணத்தில் புகைக்கவில்லை.

''இன்று ஒரு புதிய விசயத்தை நீங்கள் பார்த்தீர்கள்'' என்று பாவோவிடம் பட்டு சொன்னான். ''ஜெங்கிஸ்கானுடைய படை வீரர்கள், இந்த இரண்டு ஓநாய்களைப் போன்றவர்கள். எதிரிகளின் ஆன்மாவைக் கதி கலங்கச் செய்யும் வகையில் சாவைத் தேர்ந்தெடுப்பவர்கள். எங்களுடைய மங்கோலிய மூதாதையர்களின் வழி வந்தவர்தான் நீங்கள். உங்களுடைய வேர்கள் இந்த மேய்ச்சல் நிலத்தில்தான் இருக்கின்றன. நம்முடைய மங்கோலியக் கடவுள்களுக்கு நீங்கள் மரியாதை செய்தாக வேண்டும்.''

''சாவும் ஒரு தீரச் செயலாக முடியும்'' என்று உணர்ச்சி ததும்பக் கூறினான் யாங் கீ. ''எண்ணற்ற மங்கோலியப் படை விரர்களிடம், தங்களுடைய உயிரைத் தியாகம் செய்யும் மனோபாவத்தை ஓநாய் குலச்சின்னம் பேணி வளர்த்திருக்கிறது. அற்புதமான குழுவாகத் திகழும் ஓநாயை அழித்தொழிப்பதன் காரணமாக, மக்களுடைய இந்த எழுச்சிமிக்க மனோபாவமும் அழிந்துவிடுமா?''

வேட்டைக்காரர்கள் முகாமை நெருங்கியபோது, பட்டுவிடம் பாவோ சுங்காய், ''நீங்கள் போய் கொஞ்சம் தண்ணீரை சூடு பண்ணுங்கள். நான் போய் ஒரு அன்னத்தைப் பிடித்துக்கொண்டு வந்து, உங்களுக்கு நல்ல உணவும் மதுவும் தருகிறேன்'' என்றார்.

''இயக்குனர் பாவோ, தயவுசெய்து அன்னத்தைக் கொல்ல வேண்டாம்'' என்று கெஞ்சினான் யாங் கீ.

''நிச்சயம் அதைச் செய்வேன்'' என்று அவனைத் திரும்பிப் பார்க்காமல் பாவோ சொன்னார். ''கடந்த சில நாட்களின் துரதிர்ஷ்டத்தைப் போக்க, அதுதான் ஒரே வழி.'' அவரிடம் பேசுவதற்காக யாங் கீ அவரைப் பின் தொடர்ந்தான். ஆனால் பாவோவின் குதிரை அதிவிரைவாகச் சென்றது.

நீர்ப்பறவைகள், காட்டு வாத்துகள் மற்றும் குள்ள வாத்துகள் தண்ணீருக்குக் கொஞ்சம் மேலாக வட்டமடித்துக்கொண்டிருந்தன. துப்பாக்கியோடு ஒருவர் குதிரையில் வந்துகொண்டிருப்பதை அவை கொஞ்சமும் பொருட்படுத்தவில்லை. ஏழு அல்லது எட்டு பெரிய அன்னப் பறவைகள் எழும்பிக் காற்றில் பறந்தன. அவற்றின் சிறகுகள் காற்றை வெகு நளினமாக விசிறின. அவற்றின் பெருத்த நிழல்கள், கீழே பாவோவின் தலைமீது கவிந்தன. யாங் அங்கு வந்து சேர்வதற்குள், அவர் மூன்று முறை சுட்டார். ஒரு பெரிய வெண்பறவை, யாங்கிற்கு முன்னால் தரையில் விழுந்தது. அதிர்ச்சியில் அவனுடைய குதிரை பின்னகர்ந்ததில், அவன் தூக்கியெறியப்பட்டு ஏரிக்கரையின் ஈரமான புல்லின்மீது விழுந்தான்.

அன்னம் போராடியது, ரத்தம் பெருக்கெடுத்தது. மௌன நாட்டியத்தில் அன்னத்தின் மரணக் காட்சியை அவன் பலமுறை பார்த்திருக்கிறான்; ஆனால் இப்போது அவன் பார்க்கும் பறவையின் கடுமையான மரண வேதனையில் நளினமோ, அழகோ இல்லை. அதனிடமிருந்து உயிர் பிரிந்துகொண்டிருந்தாலும், வாழ் வதற்கான விருப்பமும் யத்தனிப்பும் பலமாக வெளிப்பட்டது. குண்டுக் காயத்திலிருந்து ரத்தம், அதனுடைய பனி வெண்மை மார்பில் பொங்கி வழிந்துகொண்டிருந்தது. யாங் அதைப் பிடிப் பதற்காக ஓடினான். ஆனால் ஒவ்வொரு முறையும் அவனுடைய பிடிக்கு அகப்படாமல் அது தாவியது...

ஒருவழியாக, யாங் அதைத் தன் கைகளில் எடுத்துக்கொண்டான். அதன் மென்மையான வயிறு இன்னும் வெது வெதுப்பாக இருந்தது; ஆனால் அதன் அழகிய கழுத்து, கேள்விக் குறியை எழுப்பும் பலமிழந்து விட்டிருந்தது. அவன் மெதுவாக அதன் தலையைத் தூக்கினான். கருநீல வானம், திறந்திருந்த அதன் கண்களில் உறைந்திருந்தது. அது டெஞ்ஞரைக் கோபத்துடன் முறைத்துப் பார்ப்பதுபோல் இருந்தது. யாங்கின் பார்வையைக் கண்ணீர் கலங்கடித்தது. ஒரு புனிதமான, தூய, சுதந்திரமாகப் பறந்து திரிந்த ஒரு ஜீவன், ஒரு கோழியைப் போல மனிதனால் கொல்லப் பட்டுவிட்டது.

யாங்கினால் தன்னுடைய வேதனையைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஏரிக்குள் குதித்து, நீந்திப்போய் நாணல் செடிகளை அடைந்து, மற்ற அன்னப் பறவைகளை எச்சரிக்க வேண்டுமென்ற எண்ணம் அவனிடம் உதித்தது.

அந்த இரவு, சூர்ய அஸ்தமனத்தின் கடைசி வண்ணங்கள் மறைந்ததும், அவிக்கப்பட்ட அன்னத்தோடு தனியாக பாவோ அமர்ந்து சாப்பிட்டார்; எவரும் அவரோடு பேசவில்லை. வாட்டப் பட்ட காட்டுப் பன்றியை வேட்டைக்காரர்கள் சாப்பிட்டார்கள். இறைச்சியைக் கத்தியால் எடுக்கும் போதெல்லாம் யாங் கீ நடுங்கினான்.

ஏரிக்கு மேலிருந்த வானில், அன்னப் பறவைகளின் சோகக் குரல்கள், இரவு முழுவதும் கேட்டுக்கொண்டே இருந்தன.

நள்ளிரவில், ஓநாய் போல நாய்கள் ஊளையிட்டதால் யாங் கீ விழித்துக்கொண்டான். அதன்பிறகு, ஊளை நின்றுவிட்டது. தொலைவில் சோர்வுற்ற துக்கக் குரல்கள் விட்டு விட்டுக் கேட்டன. மேலும், துயரம் தோய்ந்த நலிந்த ஊளைகளும் அவன் இதயத்தை ஊடுருவின. செங்குத்துப் பாறையிலிருந்து தாண்டி ஓடிய கிழட்டு ஓநாய் இறந்து போயிருக்கவில்லை. கடுமையான காயங்களுடன், பாதி இரவு ஊர்ந்து, அது மலை மீதேறி வந்து பார்த்தபோது, அதன் இணை புதையுண்டு போனதறிந்து, அந்த இடத்தின் முன் அது புலம்பியது. அதன் சோக ஓலம் இதயத்தை உலுக்கியது. பாறைகளை அகற்றிக் கடைசியாக அதன் இணையை ஒருமுறை பார்ப்பதற்கான பலம் அதனிடம் இல்லை. தன்னுடைய இணையின் மரணத்திற்காக ஒரு அன்னத்திடமிருந்து வெளிப்பட்ட சோக ஓலமும், முதிய ஓநாயின் இதயத்தை உலுக்கியெடுத்த அழுகையும் ஒன்றை மேவி ஒன்றெனக் கலந்து துக்க அலைகளாக வந்துகொண்டிருந்தன.

விடியும் வரை யாங் கீ அழுதுகொண்டிருந்தான்.

பல நாட்களுக்குப் பிறகு, தலைமையகத்திலிருந்து வந்த லாசுருங், பாதி வண்டி நிறைய வெண்மலர் மூலிகைச் செடிகளை பாவோ நகரத்துக்கு எடுத்துச் சென்றிருப்பதாகத் தெரிவித்தான்.

மலைகள் சூழ்ந்த மேட்டு நிலங்களில், முன்கோடைகால சூரியன் பிரகாசமாக ஒளி வீசிக்கொண்டிருந்தது. கீழே இருந்த மக்களால் கண்களைத் திறக்க முடியாத அளவுக்குக் கூசியது. ஆடுகளும் அவற்றின் குட்டிகளும் நிலத்தை மேய்ந்துகொண்டிருந்ததால், மலை வெங்காயங்கள் மற்றும் காட்டுப் பூண்டுகளின் வாசனையும் கார நெடியும் காற்றில் நிறைந்திருந்தன. மக்களுடைய கண்களில் எரிச்சல் ஏற்பட்டதால், கண்களை ஈரமாக்க அவர்கள் இமைகளைச் சிமிட்டிக்கொண்டிருந்தார்கள். புதிய மேய்ச்சல் நிலத்தையும் முகாமையும் ஜென் சென் மிக உன்னிப்பாக அவதானித்தான். தாய் ஓநாய் தன்னுடைய குட்டியைத் தேடிவந்து அவனுடைய ஆடுகளைப் பழி வாங்கும் என்ற பயம் அவனிடம் இன்னமும் இருந்துகொண்டிருந்தது.

இரண்டாம் குழுமத்துக்கான முப்பதுக்கும் மேற்பட்ட குடில்கள், ஆற்றுப் பள்ளத்தாக்கின் வடமேற்கில் அமைந்திருந்த ஒரு நேர்த்தியான சரிவில் அமைக்கப்பட்டிருந்தன. ஒவ்வொரு குடிலுக்கும் இடையே கிட்டத்தட்ட ஆயிரம் அடி இடைவெளியே இருந்தது. அப்பகுதியின் ஒரு சிறு இடத்தில் பில்ஜி மற்றும் உல்ஜீயின் உத்தரவுக்கேற்ப முகாம் அமைக்கப்பட்டிருந்தது. ஓலோன்புலாக் ஓநாய்க் கூட்டத்தால் இந்தத் தற்காப்பை ஊடுருவி வர முடியாதென ஜென் நினைத்தான். அப்படி அவை முயற்சித் தால், எல்லாப் பக்கங்களிலிருந்தும் நாய்கள் எதிர்த்தாக்குதலை மேற்கொள்ளும். இந்த எண்ணம் அவனுடைய கவலைகளைக் குறைத்தது.

புதிய மேய்ச்சல் நிலத்துக்கு, ஆடு மற்றும் மாட்டு மந்தைகளும், குதிரைக் கூட்டங்களும் ஏற்கெனவே வந்து சேர்ந்து விட்டிருந்தன. நேற்று வரை கன்னி நிலமாக இருந்தது, இன்று கால்நடைகளுக்கான மேய்ச்சல் வெளியாக மாறிவிட்டிருந்தது. மக்களிடமிருந்தும், ஆடு மாடுகளிடமிருந்தும், குதிரைகளிடமிருந்தும் வெளிப்பட்ட சந்தோஷம் காற்றில் கலந்திருந்தது.

ஜென் மற்றும் யாங்குடைய மந்தைகள், நெடிய பயணத்துக்குப் பின் மிகவும் களைத்துப்போய்விட்டிருந்ததால், குடிலுக்குப் பக்கத்திலேயே இருந்த ஒரு சரிவில் மேய்ந்து கொண்டிருந்தன.

ஜென் உணர்ச்சிமயமாகப் பெருமூச்சு விட்டான். ‘‘இந்தப் புதிய கோடைகால நிலமும் அந்தப் பழைய நிலமும் இரவும் பகலும் போல வேறுபட்டிருக்கின்றன. எனக்குப் பெருமிதமாக இருக்கிறது. நம்முடைய இழப்புகளை விடவும் நாம் அடைந்திருக்கும் வெகுமதிகள் அமோகம். ஏதோ ஒரு கனவு போலிருக்கிறது. மேலும், நாம் நம்முடைய மந்தைகளை ஈடன் தோட்டத்துக்கு அழைத்து வந்துவிட்டதுபோல் இருக்கிறது.’’

‘நானும் அப்படித்தான் உணர்கிறேன்’’ என்றான் யாங். ‘‘இது கிட்டத்தட்ட வேறு உலகத்தைச் சேர்ந்த பிரதேசமாகத் தோன்றுகிறது. இது அன்னப் பறவைகளின் மேய்ச்சல் நிலம். பாவோ சுங்காய், சீன மாணவர்கள் மற்றும் பிற வெளியாட்கள் இங்கு இல்லாதிருந்தால் இந்த இடம் அதன் அழகு குலையாமல் நீடித்திருக்கும். அன்னப் பறவைகளோடு இசைந்தும் அமைதி யாகவும் வாழ்வதில் ஓலோன்புலாக் மேய்ப்பர்களுக்குப் பிரச்சனை ஏதுமிருக்காது. நீலவானில் அன்னப் பறவைகள் பறந்து கொண்டிருக்க, நம்முடைய மந்தைகளை மேய்ப்பதென்பது எவ்வளவு இதமான விசயமென்று யோசித்துப் பார். இன்னும் சில வருடங்களில், ஓநாயின் வாலைப் பிடிக்குமளவு துணிச்சல்மிக்க ஒரு மங்கோலியப் பெண்ணை மணந்துகொண்டு, ஓநாய்க் குகைகளுக்குள் ஊர்ந்து செல்லத் தயங்காத குழந்தைகளுக்கு அப்பாவாக வேண்டுமென்பதுதான் இந்த வாழ்க்கையில் என்னுடைய ஆசை.’’ புல்லின் வாசனையை அவன் ஆழமாக உள்ளிழுத்தான்.

‘‘டேங் இளவரசன்கூட, ஒரு மங்கோலியத் துருக்கியனாக இருக்க வேண்டுமென ஆசைப்படும்போது, நான் ஏன் விரும்பக்கூடாது?’’ என்று தொடர்ந்தான் யாங்.

‘‘சீன மாணவர்கள் இல்லாவிட்டால், இந்த இடம் இன்னும் அருமையாக இருக்குமென்று சொன்னாயே, ஆனால் நீயும் அவர்களில் ஒருவன்தானே?’’

‘‘ஓநாய் குலச்சின்னத்தின் காலடியில் என்னைச் சரண் செய்து, நெடுஞ்சாண் கிடையாக விழுந்துவிட்டதிலிருந்தே, நான் ஒரு மங்கோலியனாகி விட்டேன்’’ என்றான் யாங். ‘‘இந்த மக்கள், தங்களுடைய வாழ்க்கையை விடவும் மேய்ச்சல் நிலத்தின் பெரிய வாழ்க்கையை உயர்வாகக் கருதுகிறார்கள். விவசாய மாவட்டங் களிலிருந்து வரும் மக்களைத் தீய சக்தியாகப் பார்ப்பதை என்னால் தவிர்க்க முடியவில்லை. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இந்த

நாடோடி மேய்ப்பர்கள், விவசாயிகளோடு சண்டையிட்டதில் வியப்பேதுமில்லை.''

''விவசாயிகளும் மேய்ப்பர்களும் வரலாறு நெடுகிலும் இதைச் செய்து வந்திருக்கிறார்கள்'' என்றான் ஜென். ''இடையில்தான் அவர்கள் அதை நிறுத்திவிட்டுத் தங்களுக்குள் மணமுடித்துக் கொண்டதோடு, இணைந்து அமைதியாகக் கொஞ்ச காலம் இருந்தனர். உண்மை என்னவென்றால், மத்திய சமவெளி மக்களுக்கும் மேய்ச்சல்நில மக்களுக்கும் இடையே நிகழ்ந்த கலப்பில் வந்தவர்கள்தான் நாமெல்லோரும். இந்தப் புதிய மேய்ச்சல் நிலம், மக்களுக்கும் அவர்களுடைய கால்நடைகளுக்கும் இன்னும் நான்கைந்து ஆண்டுகளுக்குப் பலனளிக்குமென்று உல்ஜீ சொன்னார். அவர் இங்கு செய்து முடித்திருக்கும் காரியத்திற்கு அவரை மீண்டும் பதவியில் அமர்த்த வேண்டும். என்னுடைய கவலை எல்லாம், இந்த மேய்ச்சல் நிலத்தைத் தமதாக்கிக் கொள்ள விரும்பும் சக்திகளுக்கெதிராகத் தாக்குப் பிடிக்கக்கூடிய அளவுக்கு பில்ஜிக்கும் உல்ஜீக்கும் போதுமான பலமிருக்கிறதா என்பதுதான்.''

''சீனாவின் எதிர்காலமானது, அதன் குடியானவர் தொகையை ஐம்பது கோடிக்குள்ளாகக் குறைப்பதில்தான் தங்கியிருக்கிறதென ஒருமுறை என் அப்பா சொன்னார். ஆனால் குடியானவர்களிடையே நிகழும் மக்கள் தொகைப் பெருக்கம் எவராலும் கட்டுப்படுத்தக் கூடியதாக எனக்குத் தோன்றவில்லை. கடந்த இரண்டு தலைமுறைகளாக, குடியானவர்கள் பெரும்பாலான எண்ணிக்கையில் தொழிற்சாலை வேலைக்குச் சென்றுவிட்டார்கள். அவர்கள் நகரங்களுக்குக் குடிபெயர்ந்து, பள்ளிக்கூடம் தொடங்கி, பின்னர், அறிவுஜீவிகளை நாட்டுப்புறங்களுக்கு விரட்டுவதற்கான எல்லாக் காரியங்களையும் மேற்கொண்டு, அவர்களை இரண்டாம் தரக் குடியானவர்களாகவும் ஆக்கிவிட்டனர். நம்மைப் போன்ற லட்சக்கணக்கான மாணவர்களை நகரங்களை விட்டுக் கட்டாயமாக வெளியேறச் செய்திருக்கின்றனர். இதில் பில்ஜி, உல்ஜீ போன்ற இரண்டு மங்கோலியர்களால் என்ன செய்துவிட முடியும்? ஒரு வாகனத்தைப் பூச்சியொன்று தடுத்து நிறுத்த முயற்சிப்பது போன்றதுதான் இதுவும்.''

ஜென் அவனை உற்றுப் பார்த்தான். ‘‘ஓநாயை ஒரு உண்மையான குலச்சின்னமாக நீ பார்க்கவில்லை என்றுதான் தோன்றுகிறது. அது என்னவென்று உண்மையிலேயே உனக்குத் தெரியுமா? அது, ஒன்றுக்குப் பத்து, அல்லது நூறு, அல்லது ஆயிரம், அல்லது பத்தாயிரம் என எழுச்சி பெறக்கூடிய ஓர் ஆன்மிக சக்தி. அதுதான் மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாக்கிறது. பெரிய உயிர்கள், சிறிய உயிர்களை நிர்வகிப்பதை சொர்க்கம் எப்போதும் பார்த்துக் கொள்கிறது; சொர்க்க வாழ்க்கையானது மனித வாழ்க்கையை நிர்வகிக்கிறது. நீ உண்மையிலேயே ஓநாய் குலச்சின்னத்தைப் போற்றி வணங்கினால், நீ சொர்க்கம் மற்றும் பூமி என்பதன் பக்கமும், இயற்கையின் பக்கமும், மேய்ச்சல் நிலத்தின் பெரிய உயிரின் பக்கமும் நிற்க வேண்டியது அவசியம். ஒரே ஒரு ஓநாய் எஞ்சியிருக்கும் வரையும் நீ போராட வேண்டும். காலங்கள் மாறும் என்ற கருத்தாக்கத்தில் நம்பிக்கை வைக்க வேண்டும். மேய்ச்சல் நிலத்தை டெஞ்ஞர் பாதுகாக்கும். பெரிய உயிரின் பக்கம் நிற்கும்போது, அதிகபட்சமாக, பெரிய உயிரை அழித்தொழிக்க முனையும் கூட்டத்தால், நீயும் சேர்ந்து இறந்து போகலாம். அப்போது உன்னுடைய ஆன்மா மேல்நோக்கி டெஞ்ஞரிடம் செல்லும். அதுதான் பெறுமதியான மரணம். பெரும்பாலான மேய்ச்சல்நில ஓநாய்கள் சண்டையில்தான் இறக்கின்றன.’’ யாங் கீ வெகுநேரம் அமைதியாக இருந்தான்.

உல்ஜீயின் உத்தரவின்படி, ஓநாய்க்குட்டியைத் தோல் வாரினால் கட்டி வைத்திருந்தான் ஜென். அந்தத் தோல்வாரின் ஒரு முனையில் இருந்த கழுத்துப்பட்டி, ஓநாய்க்குட்டியின் கழுத்தைச் சுற்றிப் பிணைக்கப்பட்டிருந்தது. மறுமுனையானது, மூன்றடி உயர மலை எல்ம் மரக் கட்டையிலிருந்த ஒரு பெரிய இரும்பு வளையத்தோடு பிணைக்கப்பட்டிருந்தது. அந்த மரக்கட்டை இரண்டடி ஆழத்துக்குத் தரையில் புதைக்கப்பட்டிருந்தது. கட்டையின் மேல் பாகத்தில் ஒரு உலோக மூடி வளையம், அந்தக் கம்பத்திலிருந்து சங்கிலி நழுவிவிடாமல் இருக்கும்படி போடப்பட்டிருந்தது.

ஓநாய்க்குட்டியின் மிக முக்கியமான தினசரி காரியமே, குடிலுக்குப் பக்கத்தில் வைக்கப்பட்டிருந்த அதனுடைய உணவுத் தட்டை வெறித்துப்

பார்த்துக்கொண்டிருப்பதுதான். அந்தப் பாத்திரம் நிரப்பப்பட்டு, அதனிடம் அவன் எடுத்துக்கொண்டு வரும்வரை பொறுமையின்றிக் காத்திருக்கும். அதைக் கைதியாக நடத்துவது குறித்து, அதன் கண்களில் வெறுப்பான பார்வை இருந்துகொண்டிருந்தது. Ôநாய்க்குட்டிகளெல்லாம் சுதந்திரமாகத் திரியும்போது, நான் ஏன் இருக்கக்கூடாது?' என்று கேள்வி கேட்பது போல அதன் பார்வை இருக்கும். தொன்மையான நாடோடிச் சூழ்நிலைகளில், நாய்கள், ஆடுகள் மற்றும் மனிதர்களுக்கு அருகில் ஒரு ஓநாயை வளர்க்கும்போது, மனிதாபிமானமற்ற முறையில் நடந்து கொள்வது அவசியமாகிறது. இல்லையெனில் அது ஆடுகளையோ மனிதர்களையோ தாக்கிவிடும். அதன்பிறகு அதன் கதி அவ்வளவு தான். இதை அவன் ஓநாய்க்குட்டியிடம் பலமுறை சொல்லி யிருக்கிறான். ஆனால் அதனால் ஒரு பலனுமில்லை.

ஓநாய்க்குட்டியை இம்மாதிரி நடத்துவது, இளம் ஓநாயின் வளர்ச்சியில் நேர்மாறான விளைவுகளை ஏற்படுத்தக் கூடுமென ஜென்னும் யாங்கும் கவலைப்படத் தொடங்கினார்கள். அதை ஒரு சங்கிலியில் கட்டி வைத்து, அதன் சுதந்திரத்தைப் பறிப்பதன் மூலம், அதன் இயல்பான வளர்ச்சிக்குக் குந்தகம் ஏற்படும். இம் மாதிரியான சூழ்நிலையில் வளர்க்கப்படும் ஓநாய் ஒரு நிஜ ஓநாயாக இருக்குமா? Ôஓநாய் மீது ஏறியவனுக்கு அதிலிருந்து இறங்குவது எப்படி என்று தெரியாது' என்று சொல்லப்படுவதைக் கொஞ்சம் மங்கலாகவேனும் ஜென்னும் யாங்கும் உணர்ந்தார்கள். இந்த முயற்சியை விட்டுவிடலாமென்று யாங்கிற்குத் தோன்றினாலும், ஜென் உறுதியோடு இருந்தான். உண்மையில், ஓநாய்க்குட்டியோடு மிகவும் நெருக்கம் கொள்ளும் ஆசை யாங்கிடமும் வளர்ந்து கொண்டிருந்தது.

கால்நடைகள் இணைசேரும் காலமது. காளை ஒன்று ஓநாய்க்குட்டிக்கு நெருக்கமாக அச்சமூட்டும் வகையில் வந்தது. உடனே ஓநாய்க்குட்டி, உயர்ந்து வளர்ந்திருந்த புல் புதருக்குள் பதுங்கிக்கொண்டது. அதன்பிறகு, மாடொன்றின் மீது அக்காளை வெறியோடு ஏறியதைப் பார்த்ததும், பயத்தில் புல்லிலிருந்து வெளியே தாவி, அங்கிருந்து விலகிச் செல்ல முயற்சித்தது. ஆனால் சங்கிலி இறுக்கியதில் அப்படியே தாவி நின்றது; கிட்டத்தட்ட மூச்சு திணறும் நிலைக்கு ஆளாகியது; நாக்கு வெளியே தள்ளிவிட்டது; கண்கள்

சொருகிவிட்டன. அந்தக் காளை இன்னொரு மாட்டை விரட்டிக்கொண்டு சென்ற பிறகுதான் அது அமைதியடைந்தது.

இதற்கிடையில், ஓநாய்க்குட்டி தன்னுடைய சிறைப் பகுதிக்குக் கிட்டத்தட்ட பழகிவிட்டது. அதற்குள்ளாகக் கும்மாளமிடவும், வட்டமடித்துத் திரியவும் ஆரம்பித்தது. அந்த இடத்தில் ஓரடி உயரத்துக்கும் மேலாகப் புல் முளைத்திருந்தது. முதலில் அது அடைபட்டிருந்த வறண்ட, மணற்பாங்கான தரையை விடவும் இதன் தரை கொஞ்சம் சொகுசாக இருந்தது. இங்கு அது மல்லாக்கப் படுத்துக்கொண்டு, வானத்தைப் பார்த்தது; அது தனக்குத் தானே அரை மணிநேரம் விளையாடியது. முழு வீரியத்தோடிருந்த அந்தக் குட்டி, ஒரு நாளில் பலமுறை சற்றும் சளைக்காமல் சுற்றிச் சுற்றி ஓடியது.

முதலில், அது ஒரு திசையில் ஒரு சுற்று சுற்றிவரும். பின்னர் கிறீச்சென ஒலி எழுப்பியபடி நின்று, மறு திசையில் ஒரு சுற்று சுற்றும். இப்படியாகச் சுற்றிச் சுற்றி வந்து இறுதியாகப் புல்தரையில் கால்களைப் பரப்பிக்கொண்டு கிடக்கும். வாய் திறந்திருக்க, நாக்கு ஒருபக்கம் நீட்டிக்கொண்டிருக்க, உமிழ்நீர் வழிந்தோடும். ஓநாய்க்குட்டி, தன்னுடைய பழைய தோல் உரிந்து, புதிய தோல் வருவதற்காகத் தன் உடலைக் கடும் உழைப்புக்கு ஈடுபடுத்திக் கொள்கிறதென ஜென் உணர்ந்துகொண்டான்.

நாலு கால் பாய்ச்சலில், தன் குதிரை மீது சாங் ஜியோன் வந்துகொண்டிருந்தான். அவனுடைய நெற்றியில் வெள்ளைத் துணி கட்டப்பட்டிருந்தது. அவனுடைய எதிர்பாராத வருகையில் ஆச்சரியமடைந்த ஜென்னும் யாங்கும் அவனை வரவேற்பதற்காக ஓடினர். ‘‘வேண்டாம், விலகி நில்லுங்கள்’’ என்று கத்தினான் சாங். அவன் சவாரி செய்த குதிரை நான்கு கால்களையும் தூக்கிக் குதித்தபடியும், உதைத்தபடியும் எல்லோரையும் சிதறி ஓடச் செய்துகொண்டிருந்தது. அது சமீபத்தில்தான் பழக்கப்படுத்தப்பட்டதாக இருக்கும். அதனால் அவர்களும் விலகிக்கொண்டார்கள். சாங், எப்படியாவது அவனால் முடிந்தவரை சமாளித்து இறங்கிக் கொள்ளட்டுமென விட்டுவிட்டனர்.

மங்கோலியக் குதிரைகள் மிகவும் மூர்க்கமானவை. அவற்றுக்கு மூன்று வயதாகும்போது வரும் இளவேனிற்காலத்தின் போது அவற்றை சவாரிக்குப் பழக்கப்படுத்த வேண்டும். அச்சமயத்தில் அவை மெலிதாக இருந்தாலும்,

சவாரி செய்பவரைத் தாங்கிக் கொள்ளக்கூடிய அளவு பெரியதாக இருக்கும். இத் தருணத்தைத் தவறவிட்டால், அதன்பிறகு ஒருபோதும் அவற்றைப் பழக்க முடியாது. அவை காட்டுக் குதிரைகளாகவே இருந்து கொண்டிருக்கும்.

ஒவ்வொரு இளவேனிற் பருவத்தின்போதும், குதிரை மேய்ப்பர்கள் மூன்று வயதுக் குதிரைகளை ஆடு மாடு மேய்ப்பவர்களிடம் கொடுத்துவிடுவார்கள். அவர்கள் அவற்றை வெற்றிகரமாகப் பழக்கப்படுத்தி ஒரு வருடம் சவாரி செய்வார்கள். அதன்பிறகு அவர்கள் அவற்றை மந்தையிடம் ஒப்படைப்பார்கள். அச்சமயத்தில் அவற்றுக்குப் பெயர் வைக்கப்படும். பொதுவாக, ஒவ்வொரு குதிரைக்கும் அதைப் பழக்கப்படுத்தியவரின் பெயரோடு ஒரு வண்ணமும் சேர்த்துப் பெயர் வைக்கப்படும். பில்ஜி சிவப்பு, பட்டு வெள்ளை, லாம்ஜாவ் கருப்பு, லாசுருங் சாம்பல், சஞ்சாய் பச்சை, டோர்ஜி மஞ்சள், யாங் கீ மஞ்சள் பூ, ஜென் சென் பச்சைப் பூ எனப் பெயர்கள் கொண்ட இக்குதிரைகள் அவற்றின் காலம் முழுவதும் இப்பெயர் தாங்கி இருக்கும். ஒரே பெயரில் பல குதிரைகள் இருப்பதென்பது ஓலோன்புலாக்கில் வெகு அபூர்வம்.

மேய்ச்சல் நிலத்தாருக்குக் குதிரைகள், உயிர் வாழ்ந் திருப்பதற்கான ரத்தம் போன்றவை. நல்ல குதிரைகளோ அல்லது அவை போதுமான அளவு இல்லாமலோ இருந்தால், பனிப்புயல், காட்டுத் தீ, எதிரிகளின் தாக்குதல் போன்றவற்றின் நாசத்திலிருந்து தப்பிப்பது மக்களுக்கு மிகவும் சிரமமாகிவிடும். சரியான நேரத்தில் மருந்துகள் மற்றும் மருத்துவர்களைக் கொண்டு வந்து சேர்க்கவும், ராணுவ மற்றும் இயற்கைப் பேரழிவுகள் பற்றி உரிய நேரத்தில் எச்சரிக்கை செய்யவும், ஓநாயைப் பிடிக்கவும், பனிப்புயலின் போது தாறுமாறாகச் சிதறிப் போய்விட்ட குதிரைகள் மற்றும் ஆடு மாடுகளைப் பிடித்துக்கொண்டு வரவும் அவை உறுதுணையாக இருக்கின்றன. குதிரை இல்லாத ஒரு மேய்ச்சல் நிலத்துக்காரன், இரண்டு கால் ஓநாயைப் போன்றவன் என்று ஒருமுறை பில்ஜி சொல்லியிருக்கிறார்.

குதிரையின் கழுத்தை சாங் ஜியோன் தடவிக் கொடுத்தபடி, கால் வளையத்திலிருந்து ஒரு பாதத்தை மெல்ல வெளியே எடுத்தான். குதிரையின் கவனம் திசை மாறியதும், அவன் சட்டெனக் குதித்துத் தரை இறங்கினான். அதிர்ச்சியடைந்த குதிரை பலமுறை எகிறிக் குதித்தது. சாங் உடனடியாகக் கடிவாளத்தைப் பிடித்துக் குதிரையின் கழுத்தைத் தன் பக்கம் திருப்பி, அது

அவனை உதைத்துத் தள்ளிவிடாதபடி பார்த்துக்கொண்டான். எப்படியோ, குதிரையைப் பார வண்டியின் பக்கம் ஒருவாறு சமாளித்துக்கொண்டு வந்தான். பார வண்டியின் அச்சில் அதை முடிச்சிட்டுக் கட்டினான். குதிரை அதை அவிழ்த்துக்கொண்டு வெளியேறப் போராடியதில் வண்டி குலுங்கியது; கிறீச்சிட்டது.

ஜென்னும் யாங்கும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். ‘‘நீ வம்பை விலை கொடுத்து வாங்குகிறாய். இந்த முரட்டுக் குதிரையை உன்னால் அடக்க முடியுமென்று நினைக்கிறாயா?’’ என்றான் யாங்.

சாங் நெற்றியைத் தடவிவிட்டுக்கொண்டான். ‘‘இன்று காலை என்னை இது தூக்கியெறிந்து விட்டது. அதன் ஒரு குளம்பு என் தலையைப் பதம் பார்த்தது. அது என்னைத் துவைத்து எடுத்திருக்கும்; நல்லவேளையாக அப்போது பட்டு என்னோடு இருந்தான். இது இன்னும் சின்னதுதான் என்பதால் நான் பிழைத்தேன். இதன் குளம்புகள் இன்னும் முழு வடிவம் பெறவில்லை. இதுவே ஒரு மூத்த குதிரையாக இருந்திருந்தால், என் மூக்கு பிளந்திருக்கும். அனேகமாக நான் இப்போது உங்களோடு இருந்துகொண்டிருக்க மாட்டேன். நிச்சயம் இது மிக மூர்க்கமான ஒரு குதிரைதான். ஆனால் இன்னும் சில ஆண்டுகளில் இது பெருமதிப்பு பெற்றதாக இருக்கும். ஒரு அருமையான குதிரையை அடைய நாம் விரும்பினால், இதுதான் ஒரே வழி.

‘‘உன்னைப் பற்றிக் கவலைப்படாமல் இருக்க முடியவில்லை. ஒரு அருமையான குதிரையை, உன் உடலில் கட்டுப் போடும்படி நேரிடாமல், நீ அடக்கும் நாளில்தான் எங்களுக்கு நிம்மதி ஏற்படும்.’’

‘‘இன்னும் இரண்டு வருடம் அவகாசம் கொடுங்கள்’’ என்றான் சாங். ‘‘இந்த இளவேனிற் பருவத்தில் ஆறு குதிரைகளைப் பழக்கியிருக்கிறேன். எல்லாமே அருமையான குதிரைகள். எதிர்காலத்தில் நீங்கள் வேட்டைக்குப் போகும்போது, உங்களிடம் போதுமான குதிரைகள் இல்லாவிட்டால், நீங்கள் என்னிடம்தான் வரவேண்டியிருக்கும்.’’

புதிய மேய்ச்சல் நிலத்தில் புதுப்புல்லும் தண்ணீரும் தாராளமாக அமைந்திருந்தன. அவை எல்லாமே ஒரே ஒரு குழுமத்தின் கால்நடைகளுக்காக மட்டுமே என்பதால், ஆடு மாடுகளோடு சேர்த்துக்

குதிரைகளையும், கொஞ்ச காலத்துக்காவது, அங்கேயே மேய விடுவதென அவர்கள் முடிவெடுத்தார்கள்.

அந்தப் பெரிய, வலிமையான இளம் ஆண் குதிரைகள், மின்னும் புதுத் தோல்களோடு மேயும் காட்சி, ஜென்னையும் யாங்கையும் வெகுவாக ஈர்த்தது.

மங்கோலியப் பொலிகுதிரைகளுக்கும் மற்ற குதிரைகளுக்கும் உள்ள மிகவும் குறிப்பிடத்தகுந்த வித்தியாசம், அவற்றின் பிடரி மயிர். அவற்றின் கண்களையும், கழுத்துகளையும், மார்புகளையும், கால்களின் மேற்பகுதிகளையும் அவை மூடியிருக்கும். அவற்றின் கழுத்துகளைச் சுற்றியும், தோள்களின் மீதும் மிக நீளமாக மயிர் வளர்ந்திருக்கும். சிலவற்றின் மயிர் முழங்கால்கள் வரையும், குளம்புகள் வரையும்கூட நீண்டிருக்கும்; தரையைக் கூடத் தொட்டு விடுவதுண்டு. அவை சாப்பிடுவதற்காகத் தலை குனியும்போது, பிடரி மயிர் வழிந்து, அவற்றின் பாதி உடலை மூடிவிடும்; தலையற்ற, முகமற்ற, மயிர்ப் பிசாசுகளைப் போலக் காணப்படும். அவை தலை நிமிர்த்தி ஓடும்போது, பிடரிமயிர் பேரலையெனக் காற்றில் புரளுவதைப் பார்க்க, மங்கோலியப் போர்க்கொடி காற்றில் பறப்பது போலிருக்கும். மேய்ச்சல் நிலத்தில் அவை இரண்டு செயல்பாடு களை மேற்கொள்ளும்: இனப் பெருக்கத்துக்கான செயல் மற்றும் மந்தையைப் பாதுகாப்பது. அவற்றின் குடும்பப் பொறுப்பு மனோபாவம் அபாரமானது. அபாயத்துக்கு அவை ஒருபோதும் அஞ்சுவதில்லை. பொலிகாளைகள், சோம்பேறிகள்; சேர்க்கை முடிந்ததும் அவை தம் பாட்டில் போய்க்கொண்டிருக்கும். ஆனால் பொலிகுதிரைகள், மேய்ச்சல்நிலக் குடும்பங்களுக்கு மகத்தான பங்காற்றுபவை.

வருடத்தில் ஒருமுறை, இளம் பெண் குதிரைகள், மந்தைகளி லிருந்து இனச்சேர்க்கைக்காக வெளியேற்றப்படும். இம்முறை, மூன்று மனிதர்களின் நேரடிப் பார்வையில் அது நிகழப் போகிறது.

நடைபெறப் போகும் யுத்தத்தைப் பார்ப்பதற்காக அவர்கள், ஓநாய்க்குட்டியோடு சேர்ந்து, தரையில் உட்கார்ந்துகொண்டார்கள். சங்கிலியின் முனையில் சுருண்டு, பம்மிக் கிடந்த ஓநாய்க்குட்டி, பனித் தேக்கத்தில் பசியோடிருக்கும் ஒரு ஓநாயைப் போல, பயத்தில் நடுங்கிக்கொண்டிருந்தது. மற்றபடி அது சற்றும் நகரவில்லை. வலிமையான பொலிகுதிரைகளைப் பார்த்து,

ஓநாய்க்குட்டி சுபாவமாகப் பயந்தபோதிலும், முழு வசீகரத்தோடு அவற்றைப் பார்த்துக்கொண்டிருந்தது.

ஐநூறுக்கும் மேற்பட்ட குதிரைகளைக் கொண்ட ஒரு மந்தை, ஒரு டஜனுக்கும் அதிகமான குடும்பங்களாகப் பிரிக்கப்பட்டு, ஒவ்வொன்றும் ஒரு பொலிகுதிரையின் தலைமையில் இயங்கும். பெரிய குடும்பங்கள் எழுபது அல்லது எண்பது குதிரைகளைக் கொண்டிருக்கும். மிகச் சிறிய குடும்பத்தில் பத்து இருக்கும். பொலிகுதிரையின் மகன்கள், மகள்கள், மனைவிகள், கூத்திகள் ஆகியோர் அடங்கியதே ஒரு குடும்பம்.

கோடை தொடங்கும்போது, மூன்று வயது நிரம்பிய இளம் பெண் குதிரைகள் பாலியல் பக்குவத்தை எட்டும். அச்சமயத்தில் பொலிகுதிரைகள் தங்களுடைய தந்தைப் பண்புகளைத் துறந்து விட்டு, தங்களுடைய மகள்களை ஈவிரக்கமின்றிக் குடும்பத்தை விட்டு வெளியேற்றும். அம்மாவை விட்டு விலக மறுத்து முரண்டும் மகள்களை, மிகுந்த கோபத்துடன் அவற்றின் விலாப் பக்கங்களில் கடித்து, ஏதோ ஓநாயைத் துரத்துவது போல, துரத்தியடிக்கும். அவை தங்கள் தந்தையரிடம் இரக்கம் காட்டும்படி கெஞ்சி, வேதனையோடும் பரிதாபமாகவும் கனைக்கும். ஆனால் பொலிகுதிரைகள்அவற்றை முறைத்துப் பார்த்து சீற்றத்தோடு கனைக்கும்; அச்சுறுத்தும் வகையில் பாத நகங்களால் தரையைக் கீறும். தாய்க் குதிரைகள் மகள்களுக்காகப் பரிந்து வந்தால் அவையும் அவற்றின் கோபத்துக்கு ஆளாகும். கடைசியில் தாய்க் குதிரைகள், தங்கள் இணைகளின் செயலுக்கான நோக்கமறிந்து ஒதுங்கிக்கொள்ளும்.

மகள் குதிரை வெளியேற்றப்பட்ட பிறகு, அவற்றுக்குக் கொடூரமான, பிறரைத் துன்புறுத்தி மகிழ்கிற, இணை சேர்க்கைக்கான தேர்ந்தெடுப்பு முயற்சி நடைபெறும். அது உண்மையிலேயே ஆண் அராஜகத்தின் எரிமலை வெடிப்பாகவே அமையும். அப்போதுதான் வீட்டை விட்டு விரட்டப்பட்ட பெண் குதிரைகள், அடுத்து என்ன செய்வதென்று அறியாது திகைத் திருக்கும் அந்தச் சமயத்தில்தான், பிற குடும்பங்களிலுள்ள பொலிகுதிரைகளுக்கிடையேயான சண்டைப் பொருள்களாக அவை மாறும். சாகும் வரையான யுத்தம் தொடங்கும். ஆண் குதிரைகளின் வலுவான குளம்புகளே அவற்றின் ஆயுதம். இந்த ஆயுதத்தை சுத்தி போன்றும், கோடரி போன்றும், கை முஷ்டி போன்றும் கையாண்டு சண்டையிடும்.

இச்சண்டையின்போது பலஹீனமான குதிரைகள் தோற்று ஓடிவிடும். ஆனால் சம பலம் கொண்ட குதிரைகள் விடாது தொடர்ந்து சண்டையிட்டுக் கொண்டே இருக்கும். குளம்புகளால் வெற்றி பெற முடியாவிட்டால், அவை பற்களைப் பயன்படுத்தும். அதுவும் சரிவராவிட்டால், அவை திரும்பிப் பின்னங்கால்களால் உதைக்கும். சுதாரிப்பில்லாத ஓநாயின் மண்டையோட்டை நசுக்கி விடக்கூடிய அளவு அபாயகரமான ஆயுதமது. பல குதிரைகள், அவற்றின் தலைகள் பிளக்கப்பட்ட நிலையிலும், மார்புகள் கன்றிப் போய் வீங்கிய நிலையிலும் அல்லது அவற்றின் கால்கள் மோசமாகக் காயம் பட்ட நிலையிலும்கூட விடாது சண்டையிடும்.

இந்தக் குழப்பத்தை சாதகமாகப் பயன்படுத்திக¢கொண்டு, தாய்களிடம் திரும்பிவிட இளம் பெண் குதிரைகள் முயற்சித்தால் அவை தந்தையரின் பெரும் கோபத்தை மட்டுமல்லாது, அவற்றை இணையாகத் தேர்வு செய்த பொலிகுதிரைகளின் கோபத்தையும் சேர்த்து எதிர்கொள்ள நேரிடும். இரண்டும் கை கோர்த்துக் கொண்டு அவற்றைத் திரும்ப அந்த இடத்துக்கு விரட்டியடிக்கும். அழகும், அருமையான உடற்கட்டும் கொண்டிருந்த ஒரு இளம் பெண் குதிரை, மிகவும் மூர்க்கமான இரண்டு பொலிகுதிரைகளின் கவனத்தை ஈர்த்திருந்தது. அந்தப் பெண் குதிரையின் வெண்பனித் தோல் மின்னியது; அது பெரிய, அழகான, மான் போன்ற கண்களைக் கொண்டிருந்தது. அது உயரமாகவும், ஒல்லியாகவும் இருந்தது. மேலும், அது ஓடும் பாணி, லேசாக மானின் சாயல் கொண்டிருந்தது. யாங் கீயை அது பெரிதும் கவர்ந்துவிட்டிருந்தது. ''என்ன ஒரு அழகு'' என்றான் அவன். ''அந்தப் பொலிகுதிரைகளில் ஒன்றாக நான் இருந்தால், அதை அடைவதற்காக நிச்சயம் சண்டையிடுவேன்.''

இரண்டு பொலிகுதிரைகளும் பிரமாண்டமான திறந்தவெளி அரங்கத்தில் சிங்கங்கள் சண்டையிடுவதைப் போல மோதின. வாழ்வா சாவா எனப் பார்த்துவிடும் வகையான சண்டை. சாங் எழுந்து நின்று கை தட்டினான். ''அந்தப் பெண் குதிரைக்காக இவை நாள் கணக்கில் சண்டையிடும். அவள் அப்படியொரு அழகு. வெண்பனி இளவரசி என்றுதான் நான் அவளை அழைப்பேன். ஆனால் அந்தக் குட்டி இளவரசிக்காக நாம் வருந்தித் தான் ஆகவேண்டும். ஒருநாள் அவள் ஒரு பொலிகுதிரையின் குடும்பத்தில் வற்புறுத்தி

இருக்க நேரிடும்; மறுநாள் இன்னொன்று கொண்டுபோய் விடும். பிறகு, இரண்டு பொலிகுதிரைகளும் அவளுக்காகச் சண்டையிடும். மறுநாள் அது எங்கு, எதோடு போக வேண்டியிருக்குமெனத் தெரியாது. பின்னர் மூன்றாவதாகவும் ஒன்று வரும். அப்போது நம்முடைய இளவரசி அந்த வீட்டுக்குச் செல்ல வேண்டிவரும். இப்படி ஒவ்வொன்றும் தன்னுடைய சொந்தப் பொருளாக அதைத் தம் இஷ்டம்போல் எடுத்துச் செல்லும் நிலைக்கு அது ஆளாகும்; புதுப்புல்லை மேயக்கூட அதற்கு நேரம் கொடுப்பதில்லை. அதைப் பாருங்கள் _ எப்படி எலும்பும் தோலுமாக இருக்கிறது. ஒவ்வொரு முறை வெளியேறும்போதும் இதே கதிதான். பல பெண் குதிரைகள், இனி தம்முடைய சொந்தக் குடும்பத்தில் இருக்க முடியாது என்று தெரிந்ததும், பாதுகாப்புக் கருதி மிகவும் சக்தி வாய்ந்த பொலிகுதிரையின் குடும்பத்துக்கு நேரடியாகவே சென்றுவிடும். ஓநாய்கள் ஒரு குதிரையை என்ன செய்யுமென்பதை அவை பார்த்திருப்பதால், ஒரு குடும்பத்தில் இல்லாவிட்டால், வலிமை வாய்ந்த தந்தை அல்லது ஆண் துணையின் பாதுகாப்பில்லாமல் இருந்தால், ஓநாய்க் கூட்டத்துக்கு உணவாக வேண்டியதுதான் என்பது அவற்றுக்குத் தெரியும்.''

''பொலிகுதிரைகள்தான் மேய்ச்சல் நிலத்தின் கொடுங்கோலர்கள்.'' சாங் தொடர்ந்தான். ''தங்களுடைய இணைகளை ஓநாய்க்கூட்டம் தாக்கக்கூடும் என்பதற்கு மட்டுமே அவை கவலைப்படும். மற்றபடி, எதற்கும் அவை பயப்படுவதில்லை. எருது போன்று, குதிரை போன்று உழைப்பதாக நாம் பேசிக் கொள்வதெல்லாம், இந்தப் பொலிகுதிரைகளுக்குப் பொருந்தாது. மங்கோலியக் குதிரை மந்தைக்கும் காட்டு மந்தைக்கும் பெரிய வித்தியாசமொன்றும் கிடையாது _ இவை காயடிக்கப்படுவதைத் தவிர. நான் குதிரைகளோடு நிறைய நேரம் செலவிட்டிருக்கிறேன்; ஆனாலும் பழங்கால மக்கள் எப்படி அவற்றைப் பழக்கப்படுத் தினார்கள் என்பதை என்னால் யோசித்துப் பார்க்க முடியவில்லை. குதிரைக்குக் காயடிப்பு செய்துவிட்டால், அதன்பிறகு, அதன்மீது சவாரி செய்ய முடியுமென்று அவர்கள் எப்படி அறிந்தார்கள்?''

ஜென்னும் யாங்கும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டார்கள். பின், தெரியவில்லை என்பது போல தலையசைத்தார்கள். சாங் தொடர்ந்தான்: ''நான் ரொம்ப நாளாக இதுபற்றி யோசித்திருக்கிறேன். நான் என்ன நினைக்கிறேன் என்பதைச் சொல்கிறேன். மேய்ச்சல் நிலத்தில் முதலில்

குடியேறியவர்கள், ஓநாய்களால் காயமடைந்த குதிரைகளைக் கண்டுபிடிக்கும் வழிகளை அறிந்திருப்பார்கள். அவற்றைப் பராமரித்துக் குணப் படுத்திய பிறகு, அவற்றில் சவாரி செய்ய முயற்சித்து முடியாமல் போயிருக்கும். கொஞ்சம் சிறிய குதிரைகளில் ஓரளவு சவாரி செய்ய முடிந்திருக்கும். ஆக, அவர்கள் தொடர்ந்து, ஒன்று மாற்றி ஒன்றென, தலைமுறை தலைமுறையாக முயற்சி செய்திருப்பார்கள். கடைசியாக ஒருநாள் அவர்கள், விதைகள் கடித்தெடுக்கப்பட்ட, ஒரு இரண்டு வயதுக் குதிரையைக் கண்டுபிடித்திருப்பார்கள். அது பக்குவ மடைந்ததும் அதன்மீது அவர்களால் சவாரி செய்ய முடிந்திருக்கும். அதிலிருந்து இந்த முடிவுக்கு வந்திருப்பார்கள். அது எப்படி நடந்திருந்தாலும் அதற்கு ரொம்ப காலம் பிடித்திருக்கும் என்பதில் சந்தேகமில்லை. தொடக்க கால மேய்ச்சல் நிலத்தவர்களில் பலர் இந்த முயற்சியில் இறந்து போயிருப்பார்கள். இது மனித வரலாற்றில் நிகழ்ந்த மகத்தான முன்னேற்றங்களில் ஒன்று; சீனாவின் மகத்தான நான்கு கண்டுபிடிப்புகளான காகிதம், அச்சடித்தல், திசைகாட்டி மற்றும் வெடிமருந்து ஆகியவற்றை விடவும் மிகுந்த முக்கியத்துவம் வாய்ந்தது. பழைய காலங்களில் குதிரைகள் இல்லாமல் வாழ்வதென்பது, நவீன சமூகத்தில் போக்குவரத்து வாகனங்கள் இல்லாமல் வாழ்வதை விடவும் மோசமானதாக இருந்திருக்குமென்பதில் சந்தேகமில்லை. அதனால்தான், மனித இனத்துக்குப் பழங்கால நாடோடி மக்கள் அளித்த பங்களிப்புகள் அளவிட முடியாதவை.''

ஜென் சென் பரவசத்தோடு கலந்துகொண்டான். ''நூறு சதவீதம் நான் ஆமோதிக்கிறேன். பழங்கால விவசாயிகள் முதன் முதலாகக் காட்டு அரிசியைப் பக்குவமாகப் பயன்பாட்டுக்குக் கொண்டு வந்ததை விடவும், மேய்ச்சல்நில மக்கள், காட்டுக் குதிரைகளைக் காயடித்துப் பழக்கத்துக்குக் கொண்டுவர வெகுவாக சிரமப்பட்டிருப்பார்கள். அரிசியால் ஓடிவிட முடியாது; எகிறிக் குதித்துக் குப்புறத் தள்ள முடியாது. தன்னுடைய குளம்புகளால் காயப்படுத்தவோ கொல்லவோ முடியாது. அல்லது சாவுக்கு ஒருவரை இழுத்துக்கொண்டு செல்ல முடியாது. பயிர்களைப் பக்குவப்படுத்துவது ஒரு நிம்மதியான உழைப்பு. ஆனால் காட்டுக் குதிரைகளையும் எருதுகளையும் பழக்கப்படுத்துவதென்பது, ரத்தக் களரியான யுத்தம். நாடோடி மக்களின்

அற்புதமான யுத்தங்களின் பலன்களைக் குடியானவ மக்கள் இன்றளவும் அனுபவித்துக் கொண்டிருக்கிறார்கள்.''

ஜென் பெருமூச்சு விட்டான். ''இன்றுள்ள மிகவும் முன்னேற்ற மடைந்த மக்கள், நாடோடி இனங்களின் வழிவந்தவர்கள் என்றே நான் நினைக்கிறேன். அவர்கள் பால் குடிக்கிறார்கள்; பாலாடைக் கட்டியும் இறைச்சியும் சாப்பிடுகிறார்கள்; கம்பளி ஆடைகளை நெய்கிறார்கள்; புல்தரை அமைக்கிறார்கள்; நாய் வளர்க்கிறார்கள்; எருதுகளோடு மோதுகிறார்கள்; குதிரைப் பந்தயத்தில் ஈடுபடு கிறார்கள்; உடல் விளையாட்டுகளில் போட்டியிடுகிறார்கள். அவர்கள் சுதந்திரத்தையும் பொதுத் தேர்தல்களையும் பேணு கிறார்கள்; அவர்களுடைய பெண்களை மதிக்கிறார்கள். இந்த எல்லா மரபுகளும் பழக்கவழக்கங்களும் அவர்களுடைய நாடோடி மூதாதையர்களிடமிருந்து அவர்களை வந்தடைந்திருக்கிறது. தீரத்தையும் போர்க்குணத்தையும் விடாமுயற்சியையும் அவர் களுடைய முன்னோர்களிடமிருந்து அவர்கள் பெற்றுக்கொண்டி ருப்பது மட்டுமல்லாமல், அவற்றை மேலும் வளர்த்துக்கொண்டி ருக்கிறார்கள். மூன்று வயதில் ஒருவன் எந்த அளவு வளர்ந்திருக் கிறான் என்பதை வைத்து, அவன் ஏழு வயதில் எப்படி இருப்பான் என்று சொல்ல முடியுமென மக்கள் சொல்வதுண்டு. ஒரு மக்கள் இனத்துக்கும் இது முழுவதுமாகப் பொருந்தும். மேற்கத்தியர்களின் வளர்ச்சி இப்படியானதுதான். நாடோடி வாழ்க்கை என்பது அவர்களுடைய மூன்று வயதுக் குழந்தைப் பருவம். இப்போது நாம் பார்ப்பது அதன் ஏழு வயது. சீனா, இப்போது ஒரு செயற்கைத் துணைக்கோளை அனுப்பியிருக்கிறது, இல்லையா? அவர்களுடைய முன்னேற்றத் திறன்களைக் கற்றுக்கொள்வது சுலபம். ஆனால் நாடோடிகளின் நரம்புகளில் ஓடுகிற போர்க்குணத்தையும், மூர்க்கத்தையும், தீரத்தையும், நெருக்கடிகளை எதிர்கொள்ளும் மனோபாவத்தையும் கற்றுக்கொள்வது கடினம்.''

''நான் குதிரைகளை மேய்க்கத் தொடங்கியதிலிருந்து, சீனர்களுக்கும் மங்கோலியர்களுக்கும் இடையே காணப்படும் மனோபாவங்களின் வித்தியாசங்களை உணரத் தொடங்கினேன்'' என்றான் சாங். ''அங்கு பள்ளிக்கூடத்தில், எல்லாவற்றிலுமே நான்தான் முதலிடத்தில் இருந்தேன்;

ஆனால் இங்கு நான் ஒரு பூனைக்குட்டியைப் போல பலஹீனமானவனாக இருக்கிறேன்.

என்னை பலசாலியாக ஆக்கிக்கொள்வதற்கான எல்லாவற்றையும் நான் மேற்கொள்கிறேன். ஆனால் நம்மிடம் ஏதோ ஒன்று குறைவதை இப்போது நான் உணர்கிறேன்...''

ஜென் மீண்டும் பெருமூச்சு விட்டான். ''அதுதான் மிகச் சரி! சீனாவின் சிறு அளவிலான குடியானவப் பொருளா தாரமானது, அமைதியான உழைப்பில் போட்டியை சகித்துக்கொள் வதில்லை. நம்முடைய கன்பூசிய வழிகாட்டுதல் கொள்கையானது, பேரரசரிடமிருந்து அமைச்சருக்கு, தந்தையிடமிருந்து மகனுக்கு என்ற மேல் — கீழ் தத்துவத்தையே வலியுறுத்துகிறது. நிபந்தனையற்ற பணிவு, எதேச்சதிகாரத்தின் மூலம் போட்டிகளை அழித்தொழிப்பது போன்றவற்றை, எதேச்சதிகாரத்தையும் அமைதியான சாகுபடியையும் கட்டிக்காப்பதன் பேரில் வலியுறுத்துகிறது. சீனாவின் சிறு அளவிலான குடியானவப் பொருளாதாரமும் கன்பூசியக் கலாசாரமும் மக்களின் சுபாவத்தை பலஹீனமாக்கி விட்டன.''

புல் படர்ந்திருந்த தளத்தில், குதிரைகள் சண்டையிட்டுக் கொண்டிருந்தன. எந்தவொரு முடிவும் ஏற்படுவதாகத் தெரிய வில்லை. ஆனால், ஒரு அதிர்ஷ்டக்காரக் குதிரை வெண்பனி இளவரசியைத் தன்னுடைய குடும்ப மந்தைக்குக் கொண்டு சென்றுவிட்டது. ஆனால், தோற்றுப்போன குதிரைகள் பின் வாங்க வில்லை; அவை ஓடிச் சென்று இளவரசியை உதைத்துத் தரையில் தள்ளின. காப்பாற்றுவதற்கு யாரை அணுகுவது என்றறியாது, அது தரையில் கால்கள் பரப்பிக் கிடந்து, சோகமாகக் கனைத்தது.

இதுவரை பார்த்ததே போதுமென்றிருந்தது யாங்கிற்கு. ''நீ ஒரு குதிரை மேய்ப்பன், நீ ஏன் ஏதாவது செய்யக் கூடாது?'' என்று சாங்கிடம் கேட்டான்.

''என்ன செய்ய வேண்டுமென்கிறாய்?'' சாங் கேட்டான். ''அங்கு போய் சண்டையை நிறுத்தச் சொல்கிறாயா? உயிர் வாழ்வதற்காக மந்தைகளுக்கிடையே நடக்கும் சண்டையில் மேய்ப்பர் களுக்கு எந்த வேலையும் கிடையாது. அவை நூற்றாண்டு காலமாக இதை மேற்கொண்டு வருகின்றன. இந்தக் கோடை காலச் சண்டைகளிலிருந்து, மிகவும் பலம்

வாய்ந்த பொலிகுதிரைகள் வெளிப்படுகின்றன. அவற்றின் மூலம், அதிவிரைவான, மூர்க்கமான அடுத்த தலைமுறை உருவாவது உறுதியாகிறது. ஒவ்வொரு வருடமும் தொடர்ந்து நடைபெறும் இந்தச் சண்டைகள் மூலம் அருமையான குதிரைகள் உருவாவதோடு, அவற்றின் சண்டைத் திறன்களும் தீரமும் மேம்படுகின்றன. ஓநாய்களோடு சண்டை யிடவும் அவற்றைக் கொல்வதற்குமான திறன்களை இந்தச் சண்டைகள் மூலம்தான் அவை பட்டை தீட்டிக் கொள்கின்றன. இந்தப் பயிற்சிகள் இல்லாவிட்டால், மேய்ச்சல் நிலத்தில் மங்கோலியக் குதிரை மந்தைகளால் தாக்குப் பிடிக்க முடியாது.''

''உலகத்தை அதிர்ச்சிக்கும் பிரமிப்புக்கும் ஆளாக்கிய மங்கோலியப் போர்க் குதிரைகள், ஓநாய்களுடன் அவை மேற்கொண்ட சண்டைகளிலிருந்து உருவானவை என்றே எனக்குத் தோன்றுகிறது'' என்றான் ஜென்.

''சரியாகச் சொன்னாய்'' என்றான் சாங். ''மங்கோலியப் போர் வீரர்களை மட்டுமல்ல, மங்கோலியப் போர்க் குதிரைகளையும் ஓநாய்களே வளர்த்தெடுத்திருக்கின்றன. நாம் நாட்டுப்புறங்களில் வேலை பார்க்க அனுப்பப்பட்டிருப்பதால், விவசாய கிராமங்களில் அவர்கள் எப்படி குதிரைகளை வளர்க்கிறார்கள் என்பதும் நமக்குத் தெரியும். அவற்றை ஒரு பட்டியில் அடைத்து வைத்திருப்பார்கள். அங்கு அவற்றுக்குத் தண்ணீரும் உணவும் கொடுக்கப்படும்; இரவு நேரத்தில் கூடுதலாகக் கொஞ்சம் வைக்கோல் கொடுப்பார்கள். அந்தக் குதிரைகள் ஒருபோதும் ஒரு ஓநாயைப் பார்த்ததில்லை. அவை குதிரைச் சண்டைகளிலும் ஈடுபட்டதில்லை. இனச் சேர்க்கை காலத்தின் போது, உயிரைப் பணயம் வைக்கும் சண்டை கிடையாது. ஏனென்றால் தேவையான விசயங்களை அங்கு யாராவது ஒருவர் பார்த்துக்கொள்வார். பெண் குதிரையை அவர்கள் ஒரு கம்பத்தில் கட்டிவைத்துவிட்டுப் பின்பு ஆண் குதிரையை அதனிடம் கூட்டிப் போவார்கள். அவை இரண்டும் கூடி முடித்த பிறகு, அதனுடைய இணை பார்க்க எப்படி இருக்குமென்றுகூடப் பெண் குதிரைக்குத் தெரியாது. இப்படியான ஒரு இனச் சேர்க்கையில் உருவான ஒரு குதிரை எப்படியான இயல்பும் போராட்ட குணமும் கொண்டிருக்க முடியும்?''

யாங் கீ சிரித்தான். ''நிச்சயிக்கப்பட்ட திருமணங்களின் மூலமாக வரும் எதுவுமே மடத்தனமானதாகத்தான் இருக்கும்! நல்ல வேளையாக, நாம்

நிச்சயிக்கப்பட்ட திருமணங்களின் மூலமாக வரவில்லை; அதனால் இன்னமும் நாம் நம்பிக்கையோடு இருக்கலாம். விவசாய கிராமங்களில் இன்றும்கூட நிச்சயிக்கப்பட்ட திருமணங்கள் பரவலாகக் காணப்படுகின்றன. ஆனால் இளம் பெண்களுக்கு ஆண்கள் எப்படி இருப்பார்கள் என்பதாவது குறைந்தபட்சம் தெரியும்.''

''சீனாவில் அதைத்தான் நாம் முன்னேற்றம் என்று சொல் கிறோம்'' என்றான் ஜென்.

''சீனர்களுடைய குதிரைகள், கூலி விலங்குகள்'' என்றான் சாங். ''அவை குடியானவர்களைப் போலவே பகல் முழுவதும் உழைத்துவிட்டு, இரவில் தூங்கும். ஆக, இந்த விசயத்தில் சீனர்கள், உழைக்கும் குடியானவர்கள்; அவர்களுடைய குதிரைகள், உழைக்கும் குதிரைகள். அதனால்தான் மங்கோலியப் போர்வீரர்களுக்கும் மஙகோலியப் போர்க் குதிரைகளுக்கும் அவர்களோ, அவையோ கொஞ்சமும் இணையாவதில்லை.''

பெருமூச்சு விட்டபடி, யாங், ''யுத்தகளத்தில் ஒரு முட்டாள் குதிரையால் வெல்ல முடியாதுதான். ஆனால் குதிரைகள் முட்டாள் தனமாக இருப்பதற்கு முக்கிய காரணம், மக்கள் முட்டாள்களாக இருப்பதுதான்'' என்றான்.

அதை ஏற்கும் வகையில் அவர்கள் எல்லோரும் புன்னகைத்தார்கள்.

சாங் ஜியோன் தொடர்ந்தான். ''அமைதியான உழைப்பின் உத்வேகத்தைவிட, சண்டையிடும் உத்வேகம் மிக முக்கியமானது. உலகின் மிகச் சிறந்த தொழில்நுட்ப சாதனையான நம்முடைய பெருஞ்சுவர், அதற்குச் செலுத்தப்பட்ட மனித உழைப்போடு ஒப்பிடும்போது, உலகின் மிகச் சிறிய இனங்களில் ஒன்றான இந்தக் குதிரை வீரர்களுக்குக் கொஞ்சமும் ஈடாகாது.''

யாங் கீ அதை முழுமையாக ஏற்றுக்கொண்டான். ''பெருஞ் சுவருக்கான உழைப்பு சவம் போன்றது. ஆனால் மேய்ச்சல் நிலத்தில் நடக்கும் சண்டைகள், வாழ்வின் முழு வீர்யமும் கொண்டவை.''

காவோ ஜியான்சோங், எருது பூட்டிய வண்டியொன்றில் அங்கு வந்து சேர்ந்தான். ''நமக்கு யோகம் அடித்திருக்கிறது'' என்று பரவசத்தோடு அவன் கத்தினான். ''ஒரு வாளி நிறைய காட்டு வாத்து முட்டைகளை நான் திருடியிருக்கிறேன்!''

அவனுடைய மூன்று தோழர்களும் ஓடிவந்து, ஒரு தண்ணீர் வாளிக்குள் நிறைந்திருந்த எழுபது அல்லது எண்பது வாத்து முட்டைகளைப் பார்த்தார்கள். உடைந்த முட்டைகளின் கீறல்களிலிருந்து மஞ்சள் திரவம் வெளியேறிக்கொண்டிருந்தது.

‘‘நீ ஒரு வாத்துக் கூட்டத்தையே அழித்துவிட்டிருக்கிறாய்’’ என்றான் யாங் கீ.’’

‘‘நான் மட்டுமில்லை. வாங் ஜுன்லியும் இன்னும் சில பேரும் கூட்டாகச் சேர்ந்து இதைத்தான் செய்திருக்கிறார்கள். தென்மேற்கு ஏரிப் பகுதியினருகில், சிறு ஓடை போன்றிருக்கும் புல்பகுதியில் பத்து எட்டுக்கு ஒரு தடவையாவது இந்த முட்டைக் கூடுகள் தட்டுப்படுகின்றன. முதலில் போனவர்கள் வாளி நிறைய திருடிக்கொண்டு விட்டார்கள். உண்மையில், தண்ணீர் குடிக்கச் செல்லும் குதிரைகள், முரட்டுத்தனமாகப் புல்லில் நடக்கும்போது அவை அழிக்கப்படுவதிலிருந்து நாங்கள் காப்பாற்றியிருக்கிறோம். அந்தப் பகுதி முழுவதும் முட்டை ஓடுகளும், மஞ்சள் கருக்களும் சிதறிக் கிடக்கின்றன. எவ்வளவு விரயம்.’’

‘‘அங்கு இன்னும் ஏதாவது மிச்சமிருக்கிறதா?’’ ஜென் கேட்டான். ‘‘நாம் போய் இன்னும் நிறைய எடுத்து வந்து, இப்போது சாப்பிட முடியாதவற்றை உப்புத் தடவி வைத்துக்கொள்ளலாம்.’’

‘‘அந்த இடத்தைச் சுற்றி எதுவுமில்லை’’ என்றான் காவோ. ‘‘நான்கு குதிரை மந்தைகள் அந்த இடத்தைக் கடந்து சென்றிருக்கும்போது என்ன மிச்சமிருக்குமென்று நினைக்கிறாய்? கிழக்கு ஏரிக் கரையோரம் ஏதாவது இருக்கலாம்.’’

‘‘சரி, எல்லோரும் வாருங்கள்’’ என்று உத்தரவிட்டான் காவோ. ‘‘உடைந்த முட்டைகளைத் தனியாக எடுத்து வையுங்கள். நான் முட்டைப் பொறியல் சாப்பிட்டு, குறைந்தது இரண்டு வருடமாவது ஆகியிருக்கும். நல்லவேளையாக, நம்மிடம் ஏராளமான காட்டு வெங்காயம் குடிலில் இருக்கிறது. காட்டு வெங்காயமும் காட்டு முட்டையும். ஒரு உண்மையான, பரிபூரணமான, ருசியான, காட்டு மரச் சாப்பாடு. யாங் கீ, நீ போய் வெங்காயத்தை உரி.

ஜென் சென் நீ முட்டைகளை உடைத்துப் போடு. சாங், நீ போய் ஒரு கூடை நிறைய வறட்டி எடுத்து வா. நான் சமையல் செய்கிறேன்.''

அங்கு விருந்துச் சூழல் காணப்பட்டது. காட்டு வாத்து முட்டைப் பொறியல் வாசனை, எண்ணெயும் வெங்காயமும் கலந்து பொறிக்கப்பட்ட வாசனை, உடனடியாகக் குடிலை விட்டு வெளியேறிக் காற்றில் கலந்து பரவியது. வாசனையை முகர்ந்த நாய்கள், குடில் வாயிலின் முன் கூட்டமாய்ச் சேர்ந்தன. உமிழ்நீர் ஒழுக, வால்களை ஆட்டிக்கொண்டு நின்றன. ஓநாய்க்குட்டி தன்னுடைய சங்கிலியிலிருந்து திமிறி மேலும் கீழுமாகக் குதித்தபடி உறுமியது. ஜென் அதற்குக் கொஞ்சம் ஒதுக்கி வைப்பதெனவும், ஆட்டுக் கொழுப்பில் பொறித்து அதற்குக் கொடுத்துப் பார்ப்பதெனவும் முடிவெடுத்தான்.

அவர்கள் முட்டைப் பொறியலை விழுங்கிக்கொண்டிருந்தபோது, வெளியிலிருந்து கஸ்மாய் சத்தமிடுவது கேட்டது. ''ஆஹா, நல்ல உணவு செய்துவிட்டு, என்னைக் கூப்பிடாமல் இருக்கிறீர்கள்!'' அவள் கதவைத் திறந்துகொண்டு பாயருடன் உள்ளே நுழைந்தாள்.

வரும் வழியில் நாய்களை ஒதுக்கிவிட்டு வந்தாள். ஜென்னும் யாங்கும் அவள் உட்கார இடம் கொடுத்தார்கள்.

இருவருக்கும் ஜென் கொஞ்சம் முட்டைப் பொறியல் கொடுத்தான். ''இந்த மாதிரி உணவை மேய்ப்பர்கள் சாப்பிடுவார்கள் என்று நான் நினைக்கவில்லை. சாப்பிட்டுப் பாருங்கள்.''

''ஆயிரம் அடிகளுக்கு அப்பாலுள்ள என் இடத்துக்கு இதன் வாசனை அடித்தது; எனக்கு எச்சில் ஊறிவிட்டது. அதனால்தான் இவனையும் கூட்டிக்கொண்டு வந்தேன். பிறகு, இதை சாப்பிடாமல் விடுவேனா? நிச்சயம் சாப்பிடுவேன்.'' அவள் இரண்டு உணவுக் குச்சிகளை எடுத்துக்கொண்டு, சாப்பிடத் தொடங்கினாள். ''பிரமாத மான ருசி'' என்றாள். பாயர் அடுப்பையே பார்த்துக் கொண்டிருந்தான். அங்கு ஒன்றும் அதிகமிருக்காது என்று கவலைப் பட்டான். மேய்ப்பர்கள், காலை உணவாகத் தயிர், இறைச்சி மற்றும் தேனீர் சாப்பிடுவார்கள். பிறகு மாலையில் முழு உணவு சாப்பிடும் வரை இடையில் வேறெதுவும் சாப்பிட மாட்டார்கள். அதனால் அம்மாவும் மகனும் நல்ல பசியோடிருந்தார்கள்.

‘‘இது உண்மையிலேயே அருமையாக இருக்கிறது; ஹோட்டல் உணவை சாப்பிடுவது போல இருக்கிறது. இன்று இதை நான் ஒரு பிடி பிடிக்கப் போகிறேன்’’ என்றாள் கஸ்மாய்.

‘‘வாளி நிறைய நான் எடுத்து வந்திருக்கிறேன்’’ என்று லேசாகச் சிரித்தபடி காவோ சொன்னான். ‘‘உடைந்து போன முட்டைகள் தீர்ந்துவிட்டாலும், உடையாத முழு முட்டைகளை நாம் சமைக்கலாம். நீங்கள் பசியாற சாப்பிட்டுவிட்டுப் போகலாம்; ஒன்றும் பிரச்சனையில்லை.’’ மிச்சமிருந்த உடைந்த முட்டைகளோடு, ஆறு முழு முட்டைகளையும் உடைத்து, கஸ்மாய்க்கும் பாயருக்கும் என்றே அவன் முட்டைப் பொறியல் செய்தான்.

‘‘ஆனால் அப்பா இதை சாப்பிட மாட்டார்’’ என்றாள் கஸ்மாய். ‘‘முட்டைகள் டெஞ்ஞுருக்கு உரியவை; அவற்றை நாம் அப்படியே விட்டுவிட வேண்டும் என்று சொல்லுவார். அதனால் தான் நான் இங்கேயே வந்துவிட்டேன்.’’

‘‘ஆனால் போன வருசம் நான் அங்கிருந்தபோது, யாரோ ஒரு குடும்பத்தாரிடம் அப்பா ஒரு டஜன் கோழி முட்டைகள் கேட்டாரே. அது எதற்காக?’’ ஜென், கஸ்மாயிடம் கேட்டான்.

‘‘ஒரு குதிரை நோய்வாய்ப்பட்டிருந்தது. ரொம்பவே உள் சூடு. அதற்குக் கொடுப்பதற்காகத்தான் அப்பா கேட்டார். இரண்டு முட்டைகளாக சிலமுறை கொடுத்ததும் அதற்குச் சரியாகிவிட்டது.’’

பாயர் மிகவும் விரும்பிச் சாப்பிட்டான். ‘‘இந்த முட்டைகள் எங்கு அதிகமாக இருக்கிறதென்று எனக்குத் தெரியும். எங்களுக்கு இப்போது இன்னும் கொஞ்சம் கொடுங்கள். நாளை நான் உங்களை அங்கு கூட்டிக்கொண்டு போகிறேன். மலைப் பக்கமாக, கைவிடப் பட்ட மர்மோட் துளைகளில் இவற்றை நிறைய பார்க்கலாம்.’’

இன்னும் சில முட்டைகளை உடைத்து, நல்ல தடிமனான ஆம்லெட் ஒன்றை காவோ செய்து கொடுத்தான். அதை ஆளுக்குப் பாதியாகப் பிரித்துக் கொடுத்தான் ஜென். அவர்கள் சாப்பிடும்போது நெற்றி முழுவதும் முத்து முத்தாய் வேர்த்துவிட்டிருந்தது.

ஒரு பெரிய கரண்டியை ஜென் எடுத்துக்கொண்டபடி, ‘‘நான் வித்தியாசமான ஒன்றை உங்களுக்கு செய்து தருகிறேன்’’ என்றான்.

முதலில் கொஞ்சம் ஆட்டுக் கொழுப்பை அதற்குள் போட்டு, பின்னர் இரண்டு முட்டைகளை உடைத்துப் போட்டு, அவற்றை வறுத்தான். கஸ்மாயும் அவளுடைய மகனும் எழுந்து நின்று எட்டிப் பார்த்தார்கள். இருவருக்கும் ஆளுக்கொன்று போட்டெடுத்து அவற்றின் மீது சோயா சாஸையும் தெளித்துக் கொடுத்தான்.

‘‘இது, அதைவிட இன்னும் பிரமாதம். தயவுசெய்து இன்னும் இரண்டு போட்டுக் கொடு’’ என்றாள் கஸ்மாய்.

வாசனை மிகுந்த எண்ணெய்ப் புகை குடிலை நிறைத்தது. அவர்கள் ஆறு பேரும் இனி முடியாது என்கிற அளவுக்குச் சாப்பிட்டுவிட்டுக் குச்சிகளைக் கீழே வைத்தார்கள். வாளியில் இருந்த முட்டைகளில் பாதிக்கு மேல் காலியாகிவிட்டிருந்தது.

கஸ்மாய், கிளம்புவதற்குத் தயாரானாள். அப்போது சிரித்தபடியே, ‘‘இதுபற்றி அப்பாவிடம் மூச்சு விடாதீர்கள். இன்னும் சில நாளில் என் வீட்டில் உங்களுக்கு அருமையான விருந்து கொடுக்கிறேன்’’ என்றாள்.

காவோ, பாயரிடம், ‘‘இன்னும் முட்டைகள் எடுப்பதற்கு, நாளை என்னைக் கூட்டிக்கொண்டு போக மறந்துவிடாதே’’ என ஞாபகப்படுத்தினான்.

ஜென் வெளியே ஓடிச் சென்று, வறுத்த பெரிய முட்டைத் துண்டொன்றை பாரின் வாயில் திணித்தான். பார் அதைத் தரையில் துப்பியது. பின்னர் அதை முகர்ந்தும், நக்கியும் பார்த்துவிட்டு, சாப்பிடக்கூடிய பொருள்தானென முடிவு செய்தது. பின்னர் அதை எடுத்து மெதுவாகச் சாப்பிட்டது; ஜென்னுக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் அது வாலை ஆட்டியது.

விருந்தினர்கள் சென்றதும், அவனுடைய ஓநாய்க்குட்டி என்ன செய்துகொண்டிருக்கிறது என்று பார்ப்பதற்காக அதன் இடத்துக்கு ஜென் விரைந்தான்.

அதைக் காணோம்! ஜென் ஆடிப் போய்விட்டான். பரபரப்புடன் மிக நெருக்கமாகப் போய்ப் பார்த்தான். அவனுடைய ஓநாய்க்குட்டி, வளர்ந்த புல்லுக்குள் மறைந்திருந்ததைக் கண்டு பிடித்தான். அந்நியர்கள் இருவர் வந்ததையும், தெரியாத பல நாய்கள் அங்கு கூடிவிட்டிருந்ததையும் கண்டு

அது பயந்து விட்டதெனப் புரிந்துகொண்டான். அபாயத்திலிருந்து எப்படி ஒளிந்துகொள்வதென்று அதன் உள்ளுணர்வுக்கு நிச்சயம் தெரிந்திருக்கும்.

ஜென் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். ஓநாய்க்குட்டி சுற்றிலும் பார்த்துவிட்டு, அந்நியர்கள் சென்றுவிட்டதை அறிந்ததும், துள்ளிக் குதித்து வெளியில் வந்து, ஜென்னுடைய உடலை முகரத் தொடங்கியது. வறுத்த முட்டைகளின் நெடி கடுமையாக இருந்தது.

ஜென்னுடைய எண்ணெய்ப் பிசுக்கான கைகளை அது நக்கியது.

ஜென் குடிலுக்குள் திரும்பச் சென்று, காவோவிடம் அரை டஜன் முட்டைகள் கேட்டான். சட்டியில் நிறைய எண்ணெய் விட்டு, அவற்றைப் பொறித்தான். ஓநாய்க்குட்டிக்கும் நாய்களுக்கும் அவை போதாது என்றாலும், அவை ருசியாவது பார்க்கட்டும் என்று அவன் நினைத்தான். வழக்கமான உணவுகளுக்கிடையே நொறுக்குத் தீனி தின்பது மேய்ச்சல்நில நாய்களுக்கு வெகுவாகப் பிடிக்கும்.

மேலும், நொறுக்குத் தீனி கொடுப்பது அவற்றோடு நெருக்கம் கொள்வதற்கான சிறந்த வழிகளில் ஒன்று. அவன் முட்டைப் பொறியல் செய்து முடித்ததும், அவற்றை நான்கு பெரிய துண்டங்களாகவும், மூன்று சிறிய துண்டங்களாகவும் பிரித்தான்.

பெரியவை, மூன்று நாய்களுக்கும் ஓநாய்க் குட்டிக்குமானவை; சிறியவை, நாய்க் குட்டிகளுக்கானவை. நாய்கள் அங்கிருந்து போக மறுத்து, வாசல் பக்கமாகவே சுற்றிக்கொண்டிருந்தன. அதனால் முதலில் நாய்களுக்கானதை ஒவ்வொன்றுக்கும் தனித் தனியாகக் கொடுத்தான். இருப்பதிலேயே பெரிய துண்டை எர்லாங்கிற்குக் கொடுத்தான். அது உற்சாகமாக வாலாட்டியது.

புல்தரையில் துள்ளி விளையாடுவதற்காக நாய்கள் சென்றுவிட்ட பிறகு, கடைசிப் பெரிய துண்டை ஓநாய்க்குட்டியின் பாத்திரத்தில் போட்டு, அதை எடுத்துக்கொண்டு ஓநாய்க்குட்டியிடம் போனான். யாங் கீயும், சாங் ஜியோனும், காவோ ஜியான்சோங்கும், அவனைப் பின்தொடர்ந்தார்கள். ஓநாய்க்குட்டி முட்டைப் பொறியலை சாப்பிடுகிறதா என்பதை எல்லோருமே பார்க்க விரும்பினார்கள். இது போன்ற ஒன்றை மேய்ச்சல்நில ஓநாய் எதுவும் இதுவரை பார்த்ததோ, சாப்பிட்டதோ கிடையாது.

‘‘குட்டி ஓநாய்’’ என்று கூப்பிட்டான் ஜென். ‘‘குட்டி ஓநாய் சாப்பாட்டு நேரம்’’ என்றான். அவன் பாத்திரத்தைப் பட்டியில் வைத்த அந்த நொடியில், ஓநாய்க்குட்டி ஓடிவந்து முட்டைப் பொறியலைத் தன் வாயால் கவ்வி, விழுங்கிவிட்டது; ஒரு விநாடிகூட ஆகியிருக்காது, அதற்குள் இது நடந்துவிட்டது.

பார்த்துக்கொண்டிருந்தவர்கள் ஏமாற்றம் அடைந்தார்கள். ‘‘வயிற்றுக்குள் எதையாவது தள்ளினால் போதும் என்றிருக்கிறது, பாவம்’’ என சாங் வருத்தப்பட்டான். ‘‘ஓநாய் என்பதற்கு அகராதியில் பார்த்தால், மணம், சுவை என்ற வார்த்தைகளே அதில் இருக்காது.’’

அவர்களுடைய ஏமாற்றத்தைப் போக்கும் வகையில் ஜென், ‘‘யாருக்குத் தெரியும். ஒருவேளை ஓநாயின் சுவை மொட்டுகள் அவற்றின் வயிறுகளில் இருக்கலாம்’’ என்றான்.

அதைக் கேட்டு எல்லோரும் சிரித்தார்கள்.

ஜென் குடிலுக்குள் போய் எல்லாவற்றையும் ஒழுங்கு செய்யத் தொடங்கினான். அவனுடைய நண்பர்கள், அவர்களுடைய விலங்குகளின் மேய்ச்சலுக்குச் செல்ல முடிவெடுத்தார்கள். அவர்கள் கிளம்புவதற்கு முன் சாங்கிடம் ஜென், ‘‘நீ சேணத்தின்மீது ஏறிக்கொள்வதற்கு வசதியாக, உன்னுடைய குதிரையின் காதுகளைப் பிடித்துக்கொள்ளட்டுமா?’’ என்று கேட்டான்.

‘‘அவசியமில்லை’’ என்று பதிலளித்தான் சாங்.

நல்ல துணிகள் கொஞ்சம் எடுத்துக்கொண்டு, ஜாக் லண்டனின் ‘கடல் ஓநாய்’ புத்தகத்தை இரவல் வாங்கிக்கொண்டு, அவன் வெளியில் சென்றான்.

குதிரைமீது ஏறி அமர்ந்துகொண்டு, தென்மேற்குத் திசையிலிருந்த மலைகளை நோக்கிக் குதிரைகளை வழிநடத்திச் சென்றான்.

## 21

பல ஆடுகள் கொத்துக் கொத்தாக ஏரிக்கரையை விட்டு நகர்ந்து செல்வதைக் கவனித்த ஜென் சென், தன்னுடைய மந்தையை வளைத்து ஏரியை நோக்கி வழிநடத்தினான். அவை நகரத்தொடங்கியதும், அவன் அவற்றுக்கு முன்னால் சென்று சவாரி செய்தான். ஒரு சிறிய குதிரை மந்தை, வயிறு முட்டக் குடித்துவிட்டு, தண்ணீரில் நின்றபடி, கண்களை மூடி ஓய்வெடுத்துக் கொண்டிருந்தது. குதிரைகள் காய்ந்த நிலத்துக்குத் திரும்பிச் செல்ல மனமின்றி இருந்தன. காட்டு வாத்துகளும் பல வகையான நீர்ப் பறவைகளும் ஏரியில் நீந்திக்கொண்டிருந்தன. அவற்றில் சில குதிரைகளைச் சுற்றி, அவற்றின் வயிறுகளுக்கு அடியிலும், கால்களுக்கு நடுவிலும், விளையாடித் திரிந்தன. அன்னங்கள், குதிரைகளிடமிருந்து தள்ளி, ஏரியின் மத்தியில் உல்லாசமாகத் திரிந்தன.

ஜென்னுடைய ஆடுகள் தண்ணீர் இருக்குமிடத்தைப் பார்த்ததும், வடமேற்குக் கரைப் பக்கமாக இருந்த ஒரு மணல் மேட்டிலிருந்து அலறின. அந்த சத்தம் அங்கு நிலவிய அமைதியைக் குலைத்தது. கோடை காலத்தில் ஆடுகள் ஒவ்வொரு நாளும் தண்ணீர் குடிக்கும்; மேலும் அவை தாகத்தை சப்தமிட்டு வெளிப்படுத்தும். அவை ஏரியை நோக்கி ஓடியபோது புழுதி மேகம் எழுந்தது. மேய்ப்பர்களும் அவர்களுடைய கால்நடைகளும் அந்தப் புதிய நிலத்துக்கு வந்து ஒரு வாரத்துக்கும் சற்று மேலாகத்தான் இருக்கும் என்ற போதிலும், ஏரியின் அருகிலிருந்த புல்வெளி நீரருந்த வந்த கால்நடைகளால் மிதிபட்டு நசுங்கிவிட்டிருந்தது. ஆடுகள் ஏரிக்குள் புகுந்து, குதிரைகளைச் சுற்றிக் கூட்டமாக இருந்து கொண்டு, ஆவலோடு நீரருந்தின.

ஜென்னுடைய ஆடுகள் வயிறு முட்டத் தண்ணீர் குடித்துவிட்டு, மணல் மேட்டில் ஏறியபோது, இன்னொரு கால்நடைக் கூட்டம் தாகத்தோடு ஏரியின் விளிம்பை நோக்கி இரைச்சலிட்டபடி ஓடியதில் மற்றுமொரு புழுதி மேகம் எழுந்தது.

ஏரிக்கு ஐநூறு அடி தள்ளி இருந்த ஒரு நேர்த்தியான சரிவில் தொழிலாளர்கள் நான்கு அல்லது ஐந்து கூடாரங்கள் அமைத்திருந்தனர். அங்கு நிறைய தொழிலாளர்கள் கடுமையாக உழைத்துப் பள்ளங்கள்

தோண்டிகககொண்டிருந்தார்கள். அங்கு ஆடுகளைக் குளிப்பாட்டுவதற்கான குளம், கம்பளி சேகரிப்புக் கொட்டாரம், தற்காலிகத் தலைமையகக் கட்டிடம் ஆகியவற்றின் கட்டுமானப் பணிகள், பாவோ சுங்காயின் உத்தரவின் பேரில் நடைபெற்றுக்கொண்டிருந்தன. சில தொழிலாளர்கள் அவர்களுடைய குடும்பத்தாரோடு சேர்ந்து காய்கறித் தோட்டம் போடுவதற்காக நிலத்தை சிறு சிறு பகுதிகளாக்கி உழுது கொண்டிருந்ததை ஜென் கவனித்தான். மற்றொரு தொழிலாளர் கூட்டம், தூரத்து மலையிலிருந்து கற்களை வெட்டியெடுத்துக் கொண்டிருந்தனர். ஒளிரும் மஞ்சள் பாறாங்கற்களையும், தளம் போடுவதற்கான பாவுக்கற்களையும் பெரிய பார வண்டிகளில் அவர்கள் ஏற்றிக்கொண்டிருந்தனர். அங்கிருந்து அவை வேலைகள் நடைபெறும் இடத்துக்குக் கொண்டுவரப்பட்டன. கன்னி நிலத்தில் வடுக்கள் ஏற்படுவதைக் காண சகிக்காமல், ஜென் தன்னுடைய ஆடுகளிடம் திரும்பிச் சென்று, அவற்றை வடமேற்குப் பக்கமாக மேய்ச்சலுக்கு ஓட்டிக்கொண்டு சென்றான்.

ஆட்டுக்கூட்டம் ஒரு மலை மேட்டைக் கடந்து, புல் படர்ந்த ஒரு பள்ளத்தாக்குக்குள் சென்றது. கால்நடைகளைப் பள்ளத்தாக்கில் மட்டுமே மேயவிட வேண்டாமென்று பில்ஜி கேட்டுக் கொண்டிருந்தார். ஏனென்றால் கோடை கால நாட்கள் மிகவும் நீண்டவை என்பதால், கால்நடைகளை எவ்வளவு தூரம் தள்ளி ஓட்டிக்கொண்டு போக முடியுமோ அவ்வளவு தூரம் செல்ல வேண்டுமென அவர் கூறியிருந்தார். அதன்மூலம், கோடை முடிந்த பிறகு, மறுபடியும் நகர வேண்டிய அவசியமிருக்காது. ஜென்னுடைய ஆட்டுமந்தை, அரை வட்ட வடிவில் அமைந்து, மெதுவாக நகர்ந்து மேற்கிலுள்ள மலைகளை நோக்கிச் சென்றது.

புல்நிலத்தில் ஆட்டுக்குட்டிகள் பால் குடிப்பதையும் புல் மேய்வதையும் மாறி மாறிச் செய்துகொண்டிருந்தன. மஞ்சள் நிற லில்லிப் பூக்களின் பொன்னிறப் பளபளப்பு ஜென்னின் கண்களை நிறைத்தது. மலைப் பக்கமாக நிறைந்திருந்த அவை அப்போதுதான் மலர்ந்திருந்தன. அங்கு இரண்டடி உயரக் குத்துச் செடிகள் லட்சக்கணக்கில் காணப்பட்டன. அவற்றில் பெரிய, ஊது கொம்பு வடிவிலான பூக்கள் நிறைந்திருந்தன. நீண்ட, மெல்லிய மொட்டுகள் கீழ்க்கிளைகளில் விரைவில் மலரும் வகையில் காணப்பட்டன.

ஜென் எழுந்துகொண்டு, குதிரையின் மீதேறி, இன்னும் அடர்த்தியான நிலவெளியை நோக்கிப் பூக்களைப் பறிப்பதற்காகப் போனான். பீஜிங் மாணவர்களின் உணவு வகைகளில் இப்போது அது அறிமுகமாகியிருந்தது: லில்லியும் ஆட்டுக்குடலும், லில்லியும் மலை வெங்காயமும் கலந்த சாலட், லில்லியும் ஆட்டு சல்லிகளும் கலந்த சூப் என பலவிதம். உள்ளூர் மேய்ப்பர்களுக்கு இது, அவர்கள் காட்டுப் பூக்களை சாப்பிடுவதில்லை என்பதால், ஆச்சரியமாக இருந்தது. காலையில் ஜென் குடிலை விட்டுக் கிளம்பியபோதே, சாங் இரண்டு பள்ளிக்கூடப் பைகளைக் காலி செய்து, ஜென்னிடமும் யாங்கிடமும் பூக்களை அவை வாடுவதற்கு முன் பறித்துக்கொண்டு வரும்படி கொடுத்துவிட்டிருந்தான். அதன்மூலம், மேய்க்கும்போது புத்தகம் வாசிக்கும் இன்பத்தை அவனுக்கு சாங் மறுத்துவிட்டிருந்தான். சாங், கொதிக்கும் நீரில் பூக்களைப் போட்டு வெளிறச் செய்து, பின் அவற்றைக் காயவைத்து வரும் பனிக்காலத்துக்காக சேகரம் செய்தான். சில நாட்களிலேயே பாதி கோணியளவுக்கு அவர்கள் உலர்ந்த பூக்களை சேர்த்துவிட்டிருந்தார்கள்.

ஜென் பூக்களைப் பறித்துப் பையில் நிரப்பிக்கொண்டிருந்த போது, அவனுடைய காலடியில் ஓநாயின் மலத்தைப் பார்த்தான். அவன் குனிந்து, ஒரு விட்டையை எடுத்துப் பக்கத்தில் வைத்துப் பரிசோதித்தான். அது சாம்பல் நிறத்தில், ஒரு வாழைப்பழம் அளவுக்கு நீளமாக இருந்ததோடு, அது ஏற்கெனவே காய்ந்து விட்டிருந்தது. இருந்தாலும் அது சில நாட்களுக்குள் போடப் பட்டதென்பதில் அவனுக்கு சந்தேகமில்லை. அவன் அங்கு உட்கார்ந்துகொண்டான். ஓநாய், சில நாட்களுக்கு முன்பு, இந்த இடத்தில் ஓய்வெடுத்திருக்கிறது. அது இங்கே என்ன செய்திருக்கும்? அவன் அந்த இடத்தை நன்கு பரிசோதித்தான். அங்கு எலும்புகளோ, மயிர்களோ காணப்படவில்லை. அதனால், அது கொன்ற ஒன்றை இங்கு கொண்டு வந்து தின்னவில்லை. இந்தப் பகுதியை, அடிக்கடி ஆட்டுக்கூட்டம் கடந்து போவதுண்டு. இங்கு புல் அடர்ந்து இருப்பதாலும், பூச்செடிகள் நீண்ட பூக்களைக் கொண்டிருப்பதாலும், இது ஓநாயின் மறைவிடமாக இருக்கலாம். பதுங்கியிருந்து தாக்குவதற்குத் தோதான இடம். திடீரெனப் பதற்றமடைந்தவனாக, எழுந்து நின்று சுற்றிலும் பார்த்தான். ஆடு மேய்ப்பர்கள் சிலர் கண்ணில் தென்பட்டதும் நிம்மதியடைந்தான். அவனுடைய

ஆடுகள் பல நூறடி தூரம் தள்ளி அவனுக்குப் பின்னிருந்ததால், அவன் ஆசுவாசமடைந்தவனாக, மீண்டும் உட்கார்ந்துகொண்டான்.

ஜென்னுக்கு ஓநாய் மலம் பரிச்சயமானதுதான் என்றாலும், அதை நெருக்கமாக ஆராய்ச்சி செய்யக் கிடைத்திருக்கும் முதல் சந்தர்ப்பம் இதுதான். அவன் ஒரு விட்டையை உடைத்துப் பார்த்தான். அதனுள் மான் ரோமமும் ஆட்டு ரோமமும் காணப் பட்டன. ஆனால் ஒரு எலும்புச் சில்லுகூட இல்லை. அதில் வயல் எலியின் இரண்டு பற்களும் கொஞ்சம் கம்பளித் துண்டுகளும் இருந்தன. அவன் தன் கையால் அதை முழுவதுமாக நொறுக்கி உதிர்த்துப் பார்த்தான். வேறெதுவும் இல்லை. ஓநாய் சாப்பிட்ட ஆடு மற்றும் எலியின் இறைச்சி, தோல், எலும்புகள் மற்றும் தசைநார்கள் எல்லாமே ஜீரணமாகிவிட்டிருந்தன. எஞ்சியது பல்லும் ரோமமும்தான்.

மேய்ச்சல் நிலத்தின் சுகாதாரப் பணியாளர்களான ஓநாய்களின் ஜீரணத் திறன் ஆச்சரியகரமானது. மாடுகள், ஆடுகள், குதிரைகள், மர்மோட்டுகள், மான்கள், காட்டு முயல்கள் மற்றும் வயல் எலிகள், ஏன் மனிதர்களையும்கூட அவை முற்றிலுமாகக் காலி செய்துவிடும். ஓநாயின் வாய், வயிறு மற்றும் குடல்கள் வழியாகச் செல்லும் ஒரு மிருகத்திடம் கடைசியில் மிஞ்சியிருப்பது பல்லும் ரோமக் கற்றைகளும்தான். காலம் காலமாக மேய்ச்சல் நிலம் சுத்தமாக இருப்பதற்கு, ஓநாய்களுக்குப் பெரும் பங்குண்டு.

காட்டுப் பூக்கள் காற்றில் அசைந்தாடின. ஓநாய் விட்டையின் கடைசித் துண்டை அவன் நொறுக்கியபோது, அது காற்றில் அடித்துச் செல்லப்பட்டது. கடைசியில் எந்தக் கழிவும் மிச்சமில்லை.

ஜென் ஆழ்ந்த யோசனையில் இருந்தான். காலம் காலமாக

மேய்ச்சல் நிலத்தின் மேய்ப்பர்களும் வேட்டைக்காரர்களும் புதை குழிகளோ, நினைவுச் சின்னங்களோ, கல்லறை மாடங்களோ இல்லாமல் டெஞ்ஞருக்குத் திரும்புகின்றனர். மனிதர்களும் ஓநாய்களும் மேய்ச்சல் நிலத்தில் பிறந்து, வளர்ந்து, சண்டையிட்டு, அங்கேயே இறந்தும் போகிறார்கள். அவர்கள் வந்தபோது எப்படி இருந்ததோ அப்படியே அவர்கள் போகும்போதும் மேய்ச்சல் நிலம் இருந்துகொண்டிருக்கிறது.

ஒவ்வொரு மாதமும், குறைந்தபட்சம் ஒவ்வொரு பருவத்திலும், ஒரு மேய்ச்சல் நிலத்தவருக்கு, அவருடைய ஆன்மா டெஞ்ஞுரைச் சென்றடைவதற்காக வான் புதையல் நடைபெறுகிறது. நீல வானத்தை நோக்கி ஜென் தன் கைகளை உயர்த்தினான். அங்கிருக்கும் ஆன்மாக்கள் சாந்தியில் நிலைத்திருக்க மௌனமாக இறைஞ்சினான்.

மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் கோடை நாட்கள் அச்சமூட்டக் கூடிய அளவு நெடியவை. அதிகாலை மூன்று மணியிலிருந்து இரவு ஒன்பது மணி வரை வெளிச்சம் இருக்கும். சூரியன் உறைபனியை எரித்து முடித்த பின்பு, காலை எட்டு அல்லது ஒன்பது மணிக்கு மேலாகத்தான் ஆடுகளை ஓட்டிக்கொண்டு செல்லமுடியும். இரவில் இருள் கவிந்த பின்னர்தான் அவை பட்டிகளுக்குத் திரும்பும். சூரிய அஸ்தமனத்திலிருந்து இருட்டுவது வரையான இடைப்பட்ட நேரத்தில்தான் அவை பெரும்பசியோடு தின்னும். பனிக் காலத்தை விடவும் கோடை காலத்தில் ஆடுகளை மேய்ப்பது இரு மடங்கு நேரமெடுக்கும். ஒரு வருடத்தில் மேய்ப்பர்களுக்குப் பிடிக்காத பருவம் கோடைதான். காலை உணவுக்குப் பிறகு, இரவு ஒன்பது மணி வரை அவர்கள் பசியோடிருப்பார்கள். நாள் முழுவதும் சூரிய வெக்கையில் புழுங்கிப் போயிருப்பார்கள். தூங்காமலிருக்கப் போராடியபடியும், தாகத்தோடும், பசியோடும், மிகுந்த அலுப்போடு ஒவ்வொரு நாளும் போகும். கோடையின் உச்சத்தில், கொசுக்கள் மேய்ச்சல் நிலத்தை சித்ரவதைக் கூடமாக மாற்றிவிடும். வறண்ட கோடை நாட்களோடு ஒப்பிடும்போது, நீண்ட குளிர்பனிக் காலங்கள் மகிழ்ச்சியானவை.

கொசுக் கூட்டங்களை எதிர்கொள்ளாதவரை பசியும் தாகமுமே மக்களுக்குப் பெரும் துன்பமளிப்பதாக இருக்கின்றன என ஜென் நம்பிக்கொண்டிருந்தான். ஆனால், அதற்கு மாறாக, மேய்ப்பர்கள் பசியையும் தாகத்தையும் சகித்துக்கொண்டார்கள். இவ்வளவிற்கும் அவர்களில் பலர் வயிற்று நோய்களால் பாதிக்கப்பட்டிருந்தனர்.

வளர்ந்த புல்வெளியில் ஜென் நின்றுகொண்டிருந்தபோது, டோர்ஜி அங்கு குதிரையில் வந்து சேர்ந்தான். அவன், வறுத்த மர்மோட் சாப்பிட ஆசையிருக்கிறதா என்று ஜென்னிடம் கேட்டான். ஜென்னுக்கு நாவில் எச்சி ஊறியது.

‘‘அங்கு அவை நிறைய இருக்கின்றன. அந்த மலை மேட்டின் மேற்குப் பக்கம் முழுவதும் மர்மோட் துளைகள் காணப்படுகின்றன. நாம் இன்று அந்த இடத்தை நோட்டம் விடுவோம்; நாளை ஒரு டஜன் கண்ணிகள் வைப்போம். மதியத்திற்குள் நாம் சிலவற்றைப் பிடித்துவிடலாம். மதிய உணவாக வறுத்த மர்மோட்டை சாப்பிடலாம். அப்படி பசியாறிக்கொண்டால், நடுப்பகலில் தூங்கி வழியாமலிருக்க முடியும்.’’

டோர்ஜி, அவர்கள் இருவருடைய மந்தைகளையும் ஒருமுறை பார்த்தான். ஒன்றுகூட அலைந்து திரிந்து மேயவில்லை. எனவே, அவர்கள் இருவரும் சவாரி செய்து மலை மேட்டை அடைந் தார்கள். அங்கு அவர்கள் சில சுண்ணாம்புக் கல் பாறைகளுக்குப் பின்னால், அவர்களுக்குப் பின்னிருக்கும் மந்தைகளும் முன்னிருக்கும் மர்மோட் துளைகளும் தெரியும்படியாக மறைந்து கொண்டார்கள். அவர்கள் தங்களுடைய தொலைநோக்கிகளை எடுத்துக்கொண்டார்கள். அந்த மேடு அமைதியாக இருந்தது; டஜன் கணக்கான மர்மாட் துளைகள் காலியாக இருப்பதுபோல் தோன்றியது.

சிறிது நேரத்திலேயே, மர்மோட்டுகளின் கிறீச்சொலிகளைக் கேட்டனர். துளைகளை விட்டு வெளிவருவதற்கு முன் அவை இப்படி சப்தமெழுப்புவது வழக்கம். பதில் சத்தமேதும் வெளியி லிருந்து வரவில்லையென்றால் அவை பெரும் எண்ணிக்கையில் திமுதிமுவென்று வெளிவரும். இப்போது எவ்விதப் பதில் சத்தமும் இல்லாததால், அவை பெரிதும் சின்னதுமாக, டஜன் கணக்கில் சத்தம் எழுப்பியபடி வெளிவந்தன. பிறகு, தங்களுடைய துளைகளி லிருந்து முப்பது அல்லது நாற்பது மீட்டர் தொலைவிற்குள் பாதுகாப்பாக இருந்தபடி புல்லைத் தின்னத் தொடங்கின. நீலவானில் கழுகுகள் வட்டமடித்துத் திரிந்ததால், பெண்கள் மிகுந்த கவனத்துடன் கண்காணித்துக்கொண்டிருந்தன. அவற்றின் சிறகுகள் கொண்ட எதிரிகளான அவை கீழிறங்கினால், தாய் மர்மோட்டுகள் வெறித்தனமாய் அபாய ஒலி எழுப்பும். உடனே குட்டிகள் விரைந்தோடி துளைகளுக்குள் பாதுகாப்பாக இருந்துகொண்டு அபாயம் நீங்கும்வரை காத்திருக்கும்.

ஜென் லேசாக நகர்ந்தபோது, டோர்ஜி அவன் பின்னால் தன்னுடைய கையைப் போட்டு அப்படியே இருக்கச் செய்தான்.

‘‘அங்கே இருக்கும் அந்தத் துளைக்கு மேலாகப் பார்’’ என்று கிசுகிசுத்தான். ‘‘அங்கே ஒரு ஓநாய் இருக்கிறது. நம்மைப் போலவே அதுவும் மார்மோட் உணவை எதிர்பார்த்திருக்கிறது.’’

உடனடியாக சுதாரிப்படைந்த ஜென், தன் தலையைத் திருப்பிப் பார்த்தான். ஒரு பெரிய ஆண் மர்மோட், அதனுடைய துளைக்கு முன்பாக, முன்னங்கால்களைத் தன் மார்பின் முன்னால் மடித்து வைத்துக்கொண்டு, அந்தப் பகுதியை அலசி ஆராய்ந்தது. ஆண் மர்மோட்டுகளும் பெண் மர்மோட்டுகளும் தனித்தனியாக வாழும். பெண் மர்மோட்டுகள் தங்களுடைய குட்டிகளோடு ஒரு துளையிலும், ஆண் மர்மோட்டுகள் வேறொரு துளையிலும் வாழும். அந்தக் குறிப்பிட்ட ஆண் மர்மோட்டின் துளைக்குப் பக்கத்திலேயே புல் அடர்ந்து வளர்ந்திருந்தது. மெல்லிய காற்றில் அது அசைந்தாடிய போது, பழுப்புப் பாறைகளின் உச்சிகள் அதனூடாகத் தெரிந்தன.

‘‘எனக்கு ஓநாய் தெரியவில்லை. சில பாறைகள் மட்டுமே தெரிகின்றன’’ என்றான் ஜென்.

‘‘அந்தப் பாறைகளொன்றின் பக்கத்தில் ஒரு ஓநாய் பதுங்கியிருக்கிறது. அது ரொம்ப நேரமாக அங்கு இருந்து கொண்டிருக்கிறதென்று நான் நினைக்கிறேன்.’’

‘‘என்னைவிட உனக்குக் கண் நன்றாகத் தெரிகிறது. என்னால் அதைப் பார்க்க முடியவில்லை.’’

‘‘ஓநாய்கள் எப்படி மர்மோட்டுகளை வேட்டையாடும் என்று உனக்குத் தெரியாவிட்டால், இப்படியான ஒன்று உன் கண்ணில் படாது. அவை அடர்ந்த புல்லுக்குள், மர்மோட் துளைக்குக் கீழப் பகுதியில் மறைந்திருக்கும். மர்மோட்டைப் பிடிப்பதென்பது, ஓநாய்க்கே கூட மிகவும் சிரமமான விசயம். அதனால் அவை பெரிய ஆண் மர்மோட்டுகளையே குறி வைக்கும். அங்கு பெரிதாக ஒன்று நின்றுகொண்டிருப்பதைப் பார்த்தாயா? பிறந்த ஆட்டுக் குட்டி அளவுக்குப் பெரியது. ஓநாயின் ஒருவேளை உணவுக்குப் போதுமானது. இப்போது நீ ஓநாயைப் பார்க்க வேண்டுமானால், பக்கத்திலுள்ள ஆண் மர்மோட் துளைக்குக் கீழாக உள்ள உயர்ந்த புல்லை அலச வேண்டும்.’’

‘‘இன்று இன்னொரு விசயத்தைக் கற்றுக்கொண்டு விட்டேன்’’ என்று சந்தோஷமாக அறிவித்தான் ஜென். ‘‘அந்த மர்மோட் எப்போது கீழே போய் புல் தின்ன முடிவெடுக்கும்? அதை எப்படி ஓநாய் பிடிக்கிறதென்பதைப் பார்க்க விரும்புகிறேன். அங்கு, எங்கு பார்த்தாலும் துளைகள் காணப்படுகின்றன. ஓநாய் தலை காட்டிய அந்த நொடியில், மர்மோட்டுகள் பக்கத்திலுள்ள துளைக்குள் தட்டுத் தடுமாறிப் போய்விடுமில்லையா?’’

‘‘மர்மோட்டுகள் துளைக்குள் சென்று விடாதபடி பார்த்துக்கொள்ள ஓநாய்களிடம் ஒரு குயுக்தி இருக்கிறது. இது என்ன செய்கிறதென்று நாம் பார்க்கலாம்’’ என்றான் டோர்ஜி.

அவர்கள் மலையடிவாரத்தைப் பார்த்தார்கள். அங்கு அவர்களுடைய ஆடுகள் இன்னமும் படுத்துக் கிடந்தன. அதனால் அவர்கள் பொறுமையாக இருந்து, என்ன நடக்கிறதென்று பார்க்க முடிவெடுத்தார்கள்.

‘‘நாம் ஒரு நாயைக் கூட்டிக்கொண்டு வந்திருந்தால் நன்றாயிருந்திருக்கும்’’ என்றான் டோர்ஜி. ‘‘அப்படி இருந்திருந்தால், ஓநாய் அதைப் பிடிக்கும் வரை காத்திருந்து, பிறகு நாயை அவிழ்த்து விட்டு விட்டு, நாமும் குதிரைகளில் விரட்டிச் சென்றிருக்கலாம். அப்போது மர்மோட் ஓநாயுடையதாக இல்லாமல் நம்முடைய உணவாக ஆகியிருக்கும்.’’

‘‘இப்போதுகூட நாம் ஏன் விரட்டிச் செல்லக்கூ£து? நம்மால் பிடித்துவிட முடியலாம்’’ என்றான் ஜென்.

‘‘முடியவே முடியாது. நீயே பார். ஓநாய் மலை மேட்டில் இருக்கிறது. அதனால் அது கீழ்நோக்கி ஓடும். நாம் மேல்நோக்கி சவாரி செய்ய வேண்டியிருக்கும். அது மலை மேட்டைக் கடந்து ஓடிய பிறகு, நம்மால் அதைப் பார்க்க முடியாது. மேலும், இவ்வளவு மர்மோட் துளைகள் இருக்கும்போது, நம் குதிரைகளால் வேகமாக ஓட முடியாது.’’

ஜென்னின் முகத்தில் அதிருப்தியும் ஏமாற்றமும் தெரிந்தது.

‘‘நாளை நாம் வந்து சில கண்ணிகள் வைக்கலாம்’’ என்றான் டோர்ஜி. ‘‘இன்று நான் உன்னை இந்த இடத்துக்குக் கூட்டி வந்தது சும்மா சுற்றிப் பார்க்கத்தான். ஓநாய்கள் இன்னும் இரண்டு வாரங்களுக்கு மட்டுமே மர்மோட்டுகளைப் பிடிக்கும். மழை பெய்யத் தொடங்கி, கொசுக்கள் பெருகிய

பிறகு, அவற்றுக்குப் பின்னால் அவை போகாது. ஏன் தெயுமா? கொசுக்களுக்கு அவை பயப்படும். அவற்றின் மூக்கு, கண், காது எல்லாவற்றையும் கொசுக்கள் தாக்கும்போது, அவை துள்ளிக் குதித்து விலக முற்படும். அதற்குள் மர்மோட்டுகள் தங்களுடைய துளைகளுக்கு ஒரு வழியாகப் போய்ச் சேர்ந்துவிடும். அச்சமயத்தில்தான் ஓநாய்கள் மர்மோட்டுகளை விட்டுவிட்டு, நம்முடைய ஆடுகள் மற்றும் குதிரைகள் பக்கம் கவனத்தைத் திருப்பும். நமக்கும் நம்முடைய கால்நடைகளுக்கும் சோதனை ஆரம்பித்துவிடும்.''

அந்தப் பெரிய ஆண் மர்மோட், மற்ற மர்மோட்டுகள் ஆசை ஆசையாய்ப் புல் தின்றுகொண்டிருப்பதைப் பார்த்தது. அதற்கு மேலும் அதனால் நின்றுகொண்டிருக்க முடியவில்லை. பாதுகாப்பான தன் துளையை விட்டு அகன்று, சில அடி தூரம் தள்ளியிருந்த புல்லை நோக்கிச் சென்றது. அது கொஞ்சம் கடிதான் கடித்திருக்கும். அதற்குள் அதன் துளையை நோக்கித் திரும்பி ஓடிவந்து, சத்தமாகக் கிறீச்சொலி செய்தது.

''அதன் துளையைச் சுற்றி இருக்கும் புல்லைக்கூட அதனால் தின்ன முடியவில்லை பார். இங்கு எதுவுமே சுலபமில்லை. அஜாக்கிரதையான ஒரு தருணம் போதும்; அது வாழ்வை முடித்துவிடும்'' என்றான் டோர்ஜி.

ஜென் ஆர்வம் மேலிட ஓநாயைக் கண்காணித்தான். அதன் மறைவிடத்திலிருந்து மர்மோட் சரியாகத் தெரியவில்லை போலத் தோன்றியது. தன்னுடைய இரையின் நகர்வுகளை அதன் சத்தத்தை வைத்தே அது தீர்மானித்தது. அது தரையோடு தரையாகத் தன்னை அழுத்திக்கொண்டது.

நான்கைந்து முறை வேகமாகப் புல்வெளிக்கு வருவதும் திரும்புவதுமாக இருந்த மர்மோட், அதன் பிறகு ஆசுவாசமடைந்தது. எவ்வித அபாயமுமில்லை என உணர்ந்தது. புல் நன்றாக அடர்ந்திருந்த ஒரு பகுதியை நோக்கி அது ஓடியது. ஐந்து அல்லது ஆறு நிமிடங்கள் கடந்திருக்கும்; திடீரென ஓநாய் எழுந்து நின்றது. ஓடிச் சென்று மர்மோட் மீது பாய்வதற்குப் பதிலாக, ஓநாய் சில பாறைகளைத் தன் பாதத்தால் தள்ளிவிட்டது, ஜென்னுக்கு ஆச்சரிய மளித்தது. பாறைகள் கீழ்நோக்கி உருண்டோடின. அவை விரைந்து உருண்டபோது சத்தம் பெருகியது; எண்ணிக்கைகளும் பெருகின.

ஜென் மர்மோட்டைக் கவனித்தான். அது தன்னுடைய துளையிலிருந்து கிட்டத்தட்ட இருபதடி தொலைவில் பயந்துபோய் பார்த்துக்கொண்டிருந்தது. பின் திரும்பி, பாதுகாப்பை நோக்கி ஓடியது. ஓநாய், மர்மோட் துளையை நோக்கிப் பாய்ந்தது. இரண்டுமே ஒரே சமயத்தில் துளையை அடைந்தன. மர்மோட் துளைக்குள் நுழைவதற்கு முன்பாக, ஓநாய் அதன் கழுத்தைக் கவ்வியது. உடனடியாக அதைத் தரையில் அடித்து, அதன் கழுத்தில் பற்களைப் பதித்தது. பின் அதை எடுத்துக்கொண்டு, ஓடி, விரைவாக மேட்டைக் கடந்தது. அந்த முழு நடவடிக்கையும் முப்பது விநாடிகளுக்குள் நடந்து முடிந்துவிட்டது.

மற்ற எல்லா மர்மோட்டுகளும் மறைந்துவிட்டன. இருவரும் எழுந்துகொண்டார்கள். ஓநாய் அதனுடைய இரையைப் பிடித்த காட்சிப் படிமங்கள் ஜென்னுடைய தலையில் மறுபடியும் ஓடின. அவன் பேச்சற்றிருந்தான். ஓநாயின் ஞானம் எல்லையற்றதாகத் தோன்றியது. அது ஒரு மாயாஜால மிருகம்.

சூரியஒளி வெண்மையிலிருந்து மஞ்சளுக்கு மாறியது. ஆடுகள் மீண்டும் மேயத் தொடங்கி, மேற்கு நோக்கிப் பல நூறடி தூரம் நகர்ந்தன. அவர்களுடைய மந்தையிடம் திரும்பிச் செல்ல ஜென்னும் டோர்ஜியும் முடிவெடுத்தனர். இனி மந்தைகளை முகாமுக்குத் திரும்பவும் ஓட்டிச் செல்ல வேண்டியதுதான். ஆனால் அவர்கள் குதிரைகளின்மீது ஏற முயற்சித்தபோது, அவனுடைய ஆடுகளுக்கிடையே ஏதோ குழப்பம் நிகழ்வதை ஜென் கவனித்தான். உடனடியாகத் தன்னுடைய தொலைநோக்கியை எடுத்து, மந்தையின் இடது மூலையை நோக்கி அதைத் திருப்பினான். அங்கு ஒரு பெரிய ஓநாய், பூக்களின் படுக்கையிலிருந்து வெளியேறி, அவனுடைய ஒரு ஆட்டின்மீது பாய்ந்து, அதைத் தரையோடு சேர்த்து அழுத்தியது. ஜென்னுடைய முகம் பயத்தில் வெளுத்தது. அவன் அலற முற்பட்டபோது, டோர்ஜி அவனைத் தடுத்தான். அவன் அதை அப்படியே விழுங்கிவிட்டு, ஓநாயைக் கவனித்தான். அது, உயிருள்ள அந்த ஆட்டின் பின்னங்கால்கள் ஒன்றிலிருந்து சதையைக் கிழித்தது. அந்த ஆடு போராடியது; முன்னங்கால்

பாத நகங்களால் தரையைத் தேய்த்தது. ஆனால், ஒரு வெள்ளாட்டைப் போல அது சப்தமெழுப்பவில்லை; உதவிக்கு இறைஞ்சவில்லை.

''அந்த ஆட்டைக் காப்பாற்ற முடியாத அளவு, நாம் வெகு தொலைவில் இருக்கிறோம்'' எனறான் டோர்ஜி. ''ஓநாய் சாப்பிடட்டும். வயிறு முட்ட சாப்பிட்டுவிட்ட பிறகு, அதனால் ஓட முடியாது. அப்போது நாம் அதைப் பிடித்துவிடலாம்... எங்கள் கண் முன்னாலேயே எங்களுடைய ஆட்டை எடுத்துவிட முடியுமென்று நீ நினைக்கிறாயா? அதையும் பார்த்துவிடலாம்!''

வெகுநேரமாக அந்த மந்தை யாருடைய கவனிப்பிலும் இல்லாததைப் பார்த்த ஓநாய், அதற்குப் பக்கத்திலிருந்த உயர்ந்த புல் மற்றும் காட்டுப் பூக்களினூடாக நகர்ந்து வந்திருக்க வேண்டும். அதன் பிறகு அந்தக் கொழுத்த ஆட்டின்மீது பாய்ந்து, அதை உடனே சாப்பிடவும் தொடங்கிவிட்டது. மனிதர்களும் குதிரை களும் மேட்டின் மீது இருப்பதை அது பார்த்துவிட்டிருந்த போதிலும், அது அங்கிருந்து ஓடி விடவில்லை. அவர்கள் மீது ஒரு கண் வைத்தபடியே, அவர்கள் எவ்வளவு தூரத்திலிருக்கிறார்கள் என்பதைக் கணக்கிட்டபடி, அதனால் எவ்வளவு விரைவாக எவ்வளவு சாப்பிட முடியுமோ அவ்வளவு வேகமாகச் சாப்பிட்டது.

முகாமிலிருக்கும் அவனுடைய ஓநாய்க்குட்டி சாப்பாட்டு நேரத்தை ஒரு யுத்தத்தைப் போல ஆக்கியிருப்பதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை என ஜென் நினைத்துக்கொண்டான். மேய்ச்சல் நிலத்தில், நேரம்தான் உணவு. ஒரு ஓநாய் ஆற அமர சாப்பிடுவதாக இருந்தால், அது பசியிலேயே செத்துவிடும்.

ஓநாய்களுக்காக ஆடுகளைப் பரிமாற்றம் செய்துகொள்வது பற்றிய கதைகளை மேய்ப்பர்கள் சொல்ல ஜென் கேள்விப் பட்டிருக்கிறான். அத்தகைய உத்தியிலான ஒரு யுத்தமாக இந்த எதிர்பாராத் தாக்குதல் உருப்பெறுவதாகத் தோன்றியது.

ஒரு பெரிய ஓநாய்க்காக ஒரு ஆட்டைக் கொடுப்பது நல்ல பேரம்தான். ஒரு பெரிய ஓநாய், ஒவ்வொரு வருடமும் எட்டுக்கும் மேற்பட்ட ஆடுகளை அடித்துத் தின்னும்; அவை தவிர, எப்போதாவது குதிரை அல்லது குதிரைக்குட்டியும் இதில் அடங்கும். ஒரு ஓநாய்க்காக ஒரு ஆட்டை மேய்ப்பன் கொடுப்பது, குழுமத்தின் விமர்சனத்துக்கோ தண்டனைக்கோ ஆளாகாது; மாறாக, அவன்

பாராட்டப்படுவான். ஜென்னுடைய கவலையெல்லாம், ஓநாயை அடையாமல் ஆட்டை இழக்க நேரிடும் வாய்ப்பு குறித்துத்தான். அது மிகப்பெரிய இழப்பாகக் கருதப்படும். அவன் தொலைநோக்கி மூலம் ஓநாயை உற்றுப் பார்த்தான். ஒரு கால் முழுவதும் — கம்பளி, தோல் எல்லாமே — ஓநாயின் வயிற்றுக்குள் அரை நிமிடத்துக்குள் போய்விட்டிருந்தது. முழு ஆட்டையும் அந்த ஓநாய் சாப்பிடுமென ஜென் நம்பினான். அவனும் டோர்ஜியும் அவர்களுடைய குதிரைகளை நோக்கி மெதுவாக நகர்ந்தார்கள்.

செம்மறியாடுகள் உண்மையிலேயே முட்டாள் விலங்குகள். அந்தத் துரதிர்ஷ்டமான ஆட்டை, ஓநாய் அடித்துத் தரையில் கிடத்தியபோது, மற்ற விலங்குகள் பயத்தில் நிலை குலைந்தன. ஆனால், முழு மந்தையும் சற்று நேரத்தில் அமைதியாகிவிட்டது. சில ஆடுகள் அச்சத்தோடு நெருங்கி வந்து, தங்களுடைய மந்தையின் ஒரு உறுப்பினரை ஓநாய் தின்றுகொண்டிருப்பதைப் பார்த்தன. அவை அப்படிப் பார்த்துக்கொண்டிருக்கும்போது, மேலும் பல ஆடுகள் வந்து சேர்ந்துகொண்டன. ஒன்றையொன்று இடித்துத் தள்ளிக்கொண்டு, கழுத்துகளை நீட்டி நன்றாகப் பார்க்க முயற்சி செய்தன. ‘நல்லவேளை, ஓநாய் உன்னைத் தின்கிறது, என்னை இல்லை’ என்று சொல்வது போலவும், ‘நீ செத்துவிட்டாய், அதனால் நான் வாழ்கிறேன்’ என்பது போலவும் அவற்றின் பாவனைகள் இருந்தன. ஓநாயைத் தடுக்க ஒன்றுகூட ஒரு முயற்சியும் எடுக்கவில்லை.

நாடோடி மக்கள் ஹேன் சீனர்களை ஆடுகளாகப் பார்ப்பதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை என்று ஜென் நினைத்துக்கொண்டான்.

டோர்ஜி குழப்பத்திலிருந்தான். குழுமம் முழுவதாலும் முதல் தர வேட்டைக்காரன் என்று அறியப்பட்டிருந்த அவன் இப்போது இக்கட்டான நிலையில் இருந்தான். அவன் தன்னுடைய மந்தைப் பொறுப்பைக் கைவிட்டு விட்டு, ஒரு பீஜிங் மாணவனையும் கூட்டிக்கொண்டு மர்மோட் வேட்டைக்குச் சென்றதன் தொடர்ச்சியாக, ஒரு அருமையான கொழுத்த ஆட்டை ஒரு தனி ஓநாயிடம் பகல் வெளிச்சத்தில் பறி கொடுக்கும்படி நேர்ந்திருக்கிறது. கால்நடை வளர்ப்புக்கு அர்ப்பணிக்கப்பட்ட ஒரு குழுமத்தில், இது பொறுப்பைப் புறக்கணித்த ஒரு செயலாகவே கருதப்படும். இதற்காக ஜென் விமர்சனத்துக்கு ஆளாவது நிச்சயம்; டோர்ஜியும் இதில் சம்பந்தப்படுத்தப்படுவான். இதில்

இன்னும் மோசமான விசயம் என்னவென்றால், முகாமில் ஓநாய்க்குட்டிகளை வளர்க்கும் இவர்களுக்கு மட்டும் ஏன் இப்படி நடந்தது? ஆடுகளின் பராமரிப்பு பற்றிக் கவலைப்படாதவன் மேய்ப்பனாக இருக்க முடியாது. ஓநாய்கள், அவற்றின் ஒன்றை வளர்க்கும் ஒருவன் மீது வஞ்சம் தீர்க்காமல் விடாது. ஓநாய்க்குட்டியை வளர்ப்பதை எதிர்த்த குழுமத்தினர் ஒவ்வொருவரும், இந்த சம்பவத்தை அவர்களுக்கான நிரூபணமாகவே பார்ப்பார்கள். ஜென்னுடைய பயம் அதிகரித்தது.

டோர்ஜி, தன்னுடைய தொலைநோக்கியை ஓநாயின் மீது குவித்தான். அவனுக்குக் கொஞ்சம் கொஞ்சமாக நம்பிக்கை ஏற்பட்டது. ‘‘இந்த ஆட்டின் இழப்புக்கான பொறுப்பை நான் ஏற்றுக்கொள்கிறேன்’’ என்றான் அவன். ‘‘ஆனால் ஓநாய்த்தோல் என்னுடையது. அதை நான் பாவோ சுங்காயிடம் ஒப்படைக்கும்போது, நீயும் நானும் பிரமாதமாகிவிடுவோம்.’’

ஓநாய் தின்னும் வேகத்தை அதிகரித்தது. அதேசமயம் அதைக் கவனித்துக்கொண்டிருக்கும் மனிதர்கள் மீதான கண்ணை எடுக்கவில்லை. சதையைப் பெரிய பெரிய துண்டாய்க் கிழித்து, அப்படியே முழுங்கியது. அதற்கு ஏதோ பைத்தியம் பிடித்துவிட்டது போலத் தோன்றியது.

‘‘மிகவும் சாமர்த்தியமான ஓநாய்கூட, பசியின்போது முட்டாள் தனமான காரியங்கள் செய்யும்’’ என்றான் டோர்ஜி. ‘‘இன்னும் கொஞ்ச நேரத்தில் அதனால் ஓட முடியாமல் போய்விடுமென்று அதற்குத் தெரியவில்லையா? இது நிச்சயமாக சாமர்த்தியமான ஓநாய்களில் ஒன்றில்லை. இதனால் மர்மோட்டுகளைப் பிடிக்க முடியாது. அனேகமாக, இது சாப்பிட்டுப் பல நாளாகி இருக்குமென்று நினைக்கிறேன்.’’

ஓநாய் ஏற்கெனவே பாதி ஆட்டை சாப்பிட்டு விட்டிருந்ததை ஜென் பார்த்தான்; அதன் வயிறு வட்டமாகவும் உப்பியும் இருந்தது. ‘‘நாம் எதற்காகக் காத்திருக்கிறோம்?’’ ஜென் கேட்டான்.

‘‘நாம் இன்னும் கொஞ்சம் காத்திருக்கலாம். ஒன்றும் பிரச்சனையில்லை. ஆனால் அதற்குப் பின் நாம் வேகமாக செயல் பட்டாக வேண்டும். நாம் தெற்குப் பக்கமாகச் சென்று, அதை எதிர்திசையில் விரட்டியடிக்க வேண்டும். ஏனென்றால் அங்குதான் மற்ற மேய்ப்பர்கள் இருக்கிறார்கள்.’’

டோர்ஜி கொஞ்ச நேரம் காத்திருந்துவிட்டுப் பிறகு, ‘‘குதிரை மீதேறு’’ எனக் கத்தினான். மந்தை இருந்த இடத்துக்குத் தெற்குப் பக்க சரிவில் அவர்கள் இறங்கிச் சென்றார்கள். ஓநாய் ஏற்கெனவே அதன் தப்பிக்கும் மார்க்கத்தைத் திட்டமிட்டிருந்தது. அவர்கள் அதை நோக்கி வருவதைப் பார்த்ததும், அது மேலும் சில கடிகள் கடித்து முழுங்கியது. பின் மிச்சத்தை அப்படியே விட்டுவிட்டுத் திரும்பி, மேற்கு நோக்கி ஓடியது. ஆனால் அது கொஞ்ச தூரம் போவதற்குள் தள்ளாடியது. அது மிக மோசமாகக் கணக்குப் போட்டுவிட்டதை உணர்ந்தது. அது தடுமாறி நின்றது; தலையைத் தாழ்த்தி, குதிங்கால்களில் உட்கார்ந்தது.

‘‘அது சாப்பிட்டதை வெளியே எடுக்கிறது.... ஊ... ஓ... மோசமான விசயம்தான் அது!’’ என்று கத்தினான் டோர்ஜி.

ஓநாய் பின்புறத்தை வளைத்து, ஆட்டிறைச்சியைக் குவியல் குவியலாக வாந்தியெடுப்பதை ஜென் பார்த்தான். இது அவர்களுக்கான ஒரு வாய்ப்பு. அவர்கள் குதிரையை அதிவிரைவாகச் செலுத் தினார்கள். அவர்களுக்கும் வாந்தியெடுத்துக்கொண்டிருக்கும் ஓநாய்க்கும் இடையிலான தூரம் கணிசமாகக் குறைந்தது.

ஓநாய்கள் தங்களுடைய குட்டிகளுக்கு உணவெடுத்துச் செல்லுமென்பது ஜென்னுக்குத் தெரியும். ஆனால் இது அவனுக்கு ஆச்சரியமளித்தது. அதன் வேகத்தைக் குறைக்கும் உணவை அது வாந்தியெடுப்பது. அது பசியால் வாடியிருந்த ஓநாயாக இருக்கலாம்; ஆனால் அது ஒரு முட்டாள் இல்லை. அதன் வயிற்றைக் காலி பண்ணுவதில் அது வெற்றியடைந்துவிட்டால், அவர்களுக்கு அது ஒரு பெரிய பிரச்சனைதான். ஜென் சவுக்கால் அடித்துக் குதிரையை விரட்டினான். ஆனால் டோர்ஜி அவனுக்கு முன்னால் விரைந்தபடி, ஓநாயைப் பயமுறுத்தும் வகையிலும் வரவிருக்கும் மலைப் பகுதியில் இருக்கும் மேய்ப்பர்களை உஷார்படுத்தியபடியும் விடாமல் கத்திக்கொண்டு சென்றான். அவன் அபாயகரமான அளவுக்கு மிகவும் நெருங்கிவிட்டதைப் பார்த்த ஓநாய், வாந்தியெடுப்பதை நிறுத்திவ¤ட்டு, உயிர் பிழைப்பதற்காக ஓடியது. சட்டென நல்ல வேகமெடுத்துச் சென்றது.

அதன் வயிறு காலியாவதற்கு முன்னாலேயே அது வாந்தி எடுப்பதை நிறுத்தியிருக்க வேண்டும். வயிற்றில் மிச்சமிருந்ததும் சக்தியாக மாறுவதற்குப்

போதுமான நேரம் அமையவில்லை. அது வேகமாக ஓடியபோதிலும் வழக்கத்தை விட அதன் வேகம் குறைவு தான். அதனால் டோர்ஜியால் சிரமமின்றி அதன் வேகத்துக்கு இணையாகச் செல்ல முடிந்தது. ஓநாய் திடீரென திசையை மாற்றி செங்குத்தான மலையை நோக்கி ஓடியது. உயிருக்கான அபாயம் நெருங்கும்போது, மேய்ச்சல்நில ஓநாய்கள் வழக்கமாக மேற்கொள்ளும் உபாயம்தான் இது. பிறகு, எங்கிருந்தோ வந்து, மேய்ப்பன் சஞ்சாய் மலை முகட்டின் மீது தோன்றினான். தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை உயர்த்தினான். பாதை அடைபட்ட ஓநாய் பயத்தில் நடுங்கியது. ஒரு கணம்தான், பின் மீண்டும் திசையை மாற்றி, பக்கத்தில் மேய்ந்துகொண்டிருந்த ஆட்டு மந்தையை நோக்கி ஓடியது. தனக்கும் சவாரியாளர்களுக்கும் இடையில் அது ஆடுகளை அமைத்துக்கொண்டது. அதன்பிறகு, மறுபக்கமாக அது வெளியேறியது.

ஆனால் அதன் ஒரு கணத் தயக்கமானது, டோர்ஜி பாய்ந்து அதன் பக்கத்தில் வரத் தோதாக அமைந்தது. அதே சமயத்தில் சஞ்சாயும் பாய்ந்து சென்று அதன் வழியை மறித்துக்கொண்டான். அது மறுபடியும் திசை மாற்றி ஓடுவதற்காகத் திரும்பியபோது, டோர்ஜி சேணத்திலிருந்து எம்பி, தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை நீட்டி, அதன் கயிற்றை ஒரு கண்ணி வடிவம் பெறச் செய்து, ஓநாயின் கழுத்தைச் சுற்றிக் கச்சிதமாக அதை மாட்டினான். ஓநாயால் கழுத்தை வெளியே எடுக்கவிடாமல் உடனடியாக அதை இழுத்து இறுக்கினான். அவனுடைய சுருக்குக்கயிற்றுத் தடி அதன் தொண்டையை வளைத்து இறுக்கியது. அதைத் தனக்குப் பின்னால் இழுத்தபடியே, குதிரையில் சுற்றிச் சுழன்றான்.

ஓநாயின் கனம் கயிற்றை மேலும் இறுக்கியதில் அதனால் தாக்குப் பிடிக்க முடியவில்லை. அதன் திறந்த வாயிலிருந்து நாக்கு வெளியே தொங்கியது. மூச்சு விட சிரமப்பட்டது. வாயிலிருந்து நுரை தள்ளியது. டோர்ஜி அதை மலைமீது இழுத்துச் சென்றான். கயிறு கழுத்தை மேலும் நெரித்தது. ஜென்னும் பின்தொடர்ந்து சவாரி செய்தான். அவனிடமிருந்து நிம்மதிப் பெருமூச்சு வெளிப்பட்டது. இனி அவர்களுக்குப் பிரச்சனையேதும் வரப் போவதில்லை என்பதில் அவன் நிம்மதியடைந்தாலும் பெரும் கிளர்ச்சியேதும் அவனுள் நிகழவில்லை. கொஞ்ச நேரத்துக்கு முன்பு வரை, உயிரோடும்

சுறுசுறுப்பாகவும் இயங்கிய ஒரு ஓநாயின் குரூரமான மரணத்திற்கு அவன் சாட்சியாக இருந்திருக்கிறான். ஆழ்ந்த கவலைக்கு ஆளானது அவனது இதயம். இறந்து கொண்டிருக்கும் ஓநாய், வலிமையும் புத்திசாலித்தனமும் கொண்டது. இந்த அளவுக்கு ஆற்றலும் விவேகமும் கொண்ட ஒருவரை மனித உலகில் நீக்கிவிட முடியுமா?

மலைமீது பாதி தொலைவு டோர்ஜி செல்வதற்குள் ஓநாய் நொண்டியாகியது; ஆனால் அது இன்னமும் மூச்சு விட்டுக் கொண்டிருந்தது; ரத்தமும் வெளியேறிக்கொண்டிருந்தது. டோர்ஜி தரையில் குதித்து, இரண்டு கைகளாலும், ஓநாய் எழுந்துகொண்டு விடாதபடி, சுருக்குக்கயிற்றுத் தடியைச் சுண்டினான். அவன் நிற்குமிடத்துக்கு அதை இழுத்தான். பின் மேய்ச்சல் தடியை எடுத்து, அதன் மண்டையில ஒரு போடு போட்டான்.

ஜென் குதிரையிலிருந்து இறங்குவதற்கு முன்பாகவே ஓநாய் இறந்துவிட்டிருந்தது. அந்த ஓநாயை இரண்டு முறை டோர்ஜி உதைத்துப் பார்த்தான். அதனிடமிருந்து எவ்வித அசைவுமில்லை. நன்றாக வியர்த்திருந்த தன்னுடைய நெற்றியைத் துடைத்துக் கொண்டு, கீழே உட்கார்ந்து, ஒரு சிகரெட் பற்ற வைத்துப் புகைத்தான்.

சஞ்சாய் தன் குதிரையில் அங்கு வந்து சேர்ந்து, இறந்து கிடந்த ஓநாயைப் பார்த்தான். ‘‘நல்ல வேலை’’ என்றான் அவன். பின், அவன் டோர்ஜியின் ஆடுகளை ஒன்று சேர்ப்பதற்காகச்சென்றான். ஜென்னும் அதற்காகத் தன் மந்தையை நோக்கிச்சென்றான்.

மந்தையை முகாமுக்கு ஓட்டிச் சென்றுவிட்டுப் பிறகு, ஜென் மீண்டும் டோர்ஜி இருக்கும் இடத்துக்கு, ஓநாயின் தோலை அவன் உரிப்பதைப் பார்ப்பதற்காகச் சென்றான். கோடை வெப்பத்தில், தோல் சுருங்கத் தொடங்கிவிடும் என்பதால், மேய்ச்சல் நிலத்தினர் ஓநாயின் தோலை, ஆட்டுத் தோலை உரிப்பது போல் உரிப்பார்கள். அப்போதுதான் தட்டையான தோல் கிடைக்கும். ஜென் அங்கு போய்ச் சேர்வதற்குள், டோர்ஜி தோலைத் தரையில் விரித்து சூரிய ஒளியில் காயவிட்டிருந்தான்.

‘‘சுருக்குக்கயிற்றுத் தடியால் ஒரு ஓநாயைக் கொல்வதை நான் இப்போதுதான் முதல் முறையாகப் பார்க்கிறேன். உன்னால் எப்படி அவ்வளவு உறுதியாக

அதைச் செய்ய முடிந்தது?'' ஜென் கேட்டான்.

ஒரு நிறைவான சிரிப்போடு டோர்ஜி, ''இது மிகவும் சாமர்த்தியமான ஓநாயில்லை என்பதை அதைப் பார்த்ததும் தெரிந்துகொண்டேன். உண்மையிலேயே சாமர்த்தியமான ஓநாய், கயிறு அதன் கழுத்தில் விழுந்ததுமே அதை அசைத்துக் கழுத்தை வெளியே எடுத்துவிட்டிருக்கும்'' என்றான்.

''நீ மிகவும் கூர்மையான கண்களைக் கொண்டிருக்கிறாய்.'' ஜென் அவனைப் பாராட்டினான். ''நான் உனக்குக் கொஞ்சமும் ஈடாக மாட்டேன். அடுத்த ஐந்து வருசம் முயற்சி பண்ணினாலும் என்னால் ஆக முடியாது. அது போக இந்தக் குதிரை வேறு. அடுத்த வருசம் நல்ல பொலிகுதிரைகளை நான் பெற வேண்டும். நல்ல குதிரையில்லாமல் இங்கு எதையும் அடைய முடியாது.''

''பட்டு அவனுடையதில் ஒன்றை உனக்குத் தருவான். அவன் உன்னுடைய பெரிய சகோதரன்; அவன் நிச்சயம் தருவான்'' என்றான் டோர்ஜி.

திடீரென, டோர்ஜிக்குக் கொடுத்த ஓநாய்க்குட்டியின் ஞாபகம் ஜென்னுக்கு வந்தது. ''இடையில் ஏதேதோ நடந்துவிட்டது. அதனால் உன்னுடைய ஓநாய்க்குட்டி பற்றி விசாரிக்க வாய்ப்பில்லாமல் போய்விட்டது.''

''உனக்கு யாரும் சொல்லவில்லையா? நான் அதை இரண்டு நாளுக்கு முன்பு கொன்றுவிட்டேன்'' என்று தலையை உலுக்கிய படியே சொன்னான் டோர்ஜி.

''என்ன?'' ஜென் அதிர்ச்சியடைந்தவனாகக் கேட்டான்.

''அதைக் கொன்றுவிட்டாயா? ஏன்? என்ன நடந்தது?''

''நானும் உன்னைப்போல் அதைச் சங்கிலியால் கட்டிப் போட்டிருக்க வேண்டும். என்னுடைய குட்டி உன்னுடையதை விடவும் சின்னது. அவ்வளவு மூர்க்கமானதுமில்லை. எனவே நான் அதை சில நாய்க்குட்டிகளோடு சேர்த்து பட்டியில் அடைத்திருந்தேன். ஒரு மாசத்திற்குள் நாய்களைச் சுற்றி இருக்க அது பழகிக்கொண்டுவிட்டது. எல்லோரும் அதை இன்னொரு நாய் என்பது போலவே பாவித்தார்கள். எல்லோருக்குமே அதைப் பிடித்திருந்தது; குறிப்பாக என் நான்கு வயது மகன் அதோடு மிகவும் பிரியமாக இருந்தான். ஆனால் இரண்டு நாட்களுக்கு முன்பு, அவர்கள் விளையாடிக்கொண்டிருந்தபோது, சற்றும் எதிர்பாராத விதமாக அது என் மகனைத் தாக்கிவிட்டது. அவனுடைய

வயிற்றில் மோசமாகக் கடித்துவிட்டது. அவன் பயந்துபோய் அலறிக் கூச்சலிட்டான். நாய்களைப் போலல்லாமல் ஓநாயின் பற்கள் பயங்கரமானவை. கடுமையான கோபத்தில் நான் அதை அடித்துக் கொன்றுவிட்டேன். அதன்பிறகு என் மகனை உடனடியாகக் குழும மருத்துவரான பெங்கிடம் கூட்டிப் போனேன். அவர் இரண்டு ஊசி போட்டார். நல்லவேளையாக, பிரச்சனை முடிந்தது. ஆனால், என் மகனின் வயிறு இன்னமும் வீங்கியிருக் கிறது.

ஜென்னின் மனதில் கலக்கம் குடி புகுந்தது. ‘‘அப்படியே விட்டுவிட வேண்டாம். இன்னொரு ஊசி, அதுவும் சீக்கிரமே போட்டால் நல்லது. வெறிநாய்க் கடியாக இருந்தால், தொடர்ந்து ஊசி போட்டால் சரியாகிவிடும்.’’

‘‘நாய் கடித்தால் ஊசி போட்டுக்கொள்ள வேண்டுமென்பது, எல்லா மேய்ப்பர்களுக்குமே தெரியும். ஓநாய் விசயத்தில் அது இன்னும் முக்கியமானது. நாய்களும் ஓநாய்களும் வேறுபட்டவை. நான் ஒரு ஓநாயை வளர்க்க முயற்சிக்கக் கூடாது என்று ஊர் மக்கள் சொல்லிக்கொண்டே இருந்தார்கள். அவர்கள் சொன்னது சரி என்றாகிவிட்டது. அவற்றிடமிருந்து காட்டுத் தன்மையை நீக்க முடியாது. பிரச்சனை ஏற்படப் போவது நிச்சயம். நீயும் விட்டுவிடு. உன்னுடைய ஓநாய்க்குட்டி பெரியது; படுமூர்க்கமானது. அது கடித்தால் பயங்கரமாக இருக்கும். அதனால் தன்னுடைய பற்களால் மட்டுமே உன்னைக் கொன்றுவிட முடியும். சங்கிலியால் கட்டிப் போட்டிருப்பது, பாதுகாப்புக்கு உத்திரவாதம் தராது.’’

ஜென்னிடம் பயம் லேசாகப் பரவியது. ஒரு கணம் யோசித்துவிட்டுப் பிறகு சொன்னான், ‘‘நான் கவனமாக இருப்பேன். இவ்வளவு தூரம் அதை வளர்த்துவிட்டேன். அது ரொம்ப கஷ்டம்தான். ஆனாலும் என்னால் இப்போது அதைக் கைவிட முடியாது. அதை முதலில் வெறுத்த காவோ ஜியான்சோங் கூட இப்போது அதோடு ஒட்டிக்கொண்டு விட்டான். அதோடு அவன் தினமும் விளையாடுகிறான்.’’

ஆடுகள் அங்குமிங்குமாக அலைவதைப் பார்த்த டோர்ஜி, ஓநாய்த் தோலைச் சுருட்டி, சேணத்தோடு சேர்த்துக் கட்டினான். பிறகு அவன் குதிரையிலேறி தன் மந்தையை முகாமுக்கு ஓட்டிச் சென்றான்.

ஜென் தன்னுடைய ஓநாய்க்குட்டியைப் பற்றி யோசித்தவாறே, பாதி சாப்பிடப்பட்டுக் கிடந்த ஆட்டை நோக்கி நடந்தான். அவன் தன்னுடைய கத்தியை எடுத்து, ஓநாய் சாப்பிட்ட பகுதியிலிருந்து ஒரு துண்டை வெட்டி எடுத்தான். பின் குடல்களை நீக்கினான். இதயத்தையும் நுரையீரல்களையும் ஒதுக்கிவிட்டான். பிறகு, அந்த ஆட்டைத் தலையோடு சேர்த்து சேணத்தில் கட்டி வீட்டுக்கு எடுத்துச் சென்றான். ஓநாய்க்குட்டிக்கும் நாய்களுக்கும் அதை உணவாகக் கொடுக்கலாம். குதிரையின் மீதேறி வீட்டை நோக்கி மெதுவாகச் சென்றான்.

மறுநாள், குழுமம் முழுவதும் டோர்ஜி எவ்வாறு ஒரு ஆட்டை ஒரு ஓநாய்க்காகப் பரிமாற்றம் செய்தான் என்ற கதை பரவியது. ஓநாய்த் தோலைப் பெற்றுக்கொண்ட பிறகு பாவோ சுங்காய் அவ்வளவாக டோர்ஜியைப் பாராட்டவில்லை. ஆனால் ஒரு பாராட்டுப் பத்திரத்தைக் குழுமம் முழுவதும் சுற்றுக்கு அனுப்பியதோடு, முப்பது துப்பாக்கிக் குண்டுகளை அவனுக்குப் பரிசாக அளித்தார்.

சில நாட்களுக்குப் பிறகு, மூன்றாம் குழுமத்தைச் சேர்ந்த ஒரு இளம் மேய்ப்பன், அதே போல தனது ஆடொன்றை விட்டுக் கொடுத்து ஓநாயைக் கைப்பற்றும் முகாந்திரத்தோடு, தனது மந்தையை விட்டு விலகிச் சென்றான். ஆனால் ஒரு தந்திரமிக்க மூத்த ஓநாயை அவன் எதிர்கொள்ளும்படி ஆனது. அது ஒரு முழுக்காலையும் மற்றொரு காலில் பாதியையும் சாப்பிட்டுவிட்டு, போதுமான அளவு வயிறு நிரம்பியதும், அது முன்னை விடவும் வேகமாக ஓடி மறைந்துவிட்டது. குழுமத்தில் அனைவரின் முன்னாலும் வைத்து பில்ஜி அவனை வசை பாடியதோடு, ஒரு மாதத்துக்கு அவனுடைய குடும்பம் உணவுக்காக ஆட்டை வெட்டக்கூடாது என்று தண்டனையும் கொடுத்தார்.

மறுபடியும், ஆடுகளை இரவில் மேற்பார்வையிடும் பணி மாற்றம் ஜென் சென்னுக்கு அளிக்கப்பட்டது. எர்லாங்கோடு சேர்ந்து காவல் புரிவதால், அவன் குடிலில் சாவகாசமாக இருந்து, படிக்கவும் அவனுடைய இதழுக்கு எழுதவும் செய்தான். கதவுக்குப் பக்கத்தில் அவனுடைய மேஜையைக் கொண்டுவந்து போட்டுக்கொண்டான். அதன் விளிம்பில் இரண்டு புத்தகங்களை வைத்து, விளக்கு வெளிச்சம் தூங்கும் தோழர்கள்மீது விழாமல் பார்த்துக்கொண்டான்.

மேய்ச்சல் நிலம் எவ்வித சலனமுமின்றிக் காணப்பட்டது. அந்த இரவில் ஓநாய்கள் ஊளையிடவில்லை; மூன்று காவல் நாய்களும் குரைக்கவில்லை, எனினும் அவை விழிப்போடு இருந்தன. அவன் ஒரே ஒருமுறை மட்டும் குடிலை விட்டு வெளியேறி, ஃப்ளாஷ் லைட்டோடு சென்று, ஆட்டுக் கூட்டத்தைச் சுற்றிப் பார்த்துவிட்டு வந்தான். வடமேற்கு மூலையில் படுத்திருந்த படி, விழிப்போடும் எச்சரிக்கையோடும் எர்லாங் இருப்பதைப் பார்த்தது, அவனுக்கு ஆசுவாசம் தந்தது. அந்தப் பெரிய நாயின் தலையைப் பாராட்டும் வகையில் தடவிக் கொடுத்தான். குடிலுக்குத் திரும்பி, தூங்கி வழியாமல் இருப்பதற்காக மேலும் கொஞ்சம் வாசித்தான். கடைசியாக, அதிகாலை நேரத்தில் அவன் தூங்கிப் போனான். மறுநாள் காலை அவன் எழுந்ததும், ஓநாய்க்குட்டிக்கு உணவூட்டச் சென்றான்.

புதிய மேய்ச்சல் நிலத்துக்கு வந்தபிறகு, ஒவ்வொரு நாளும் விடியும் போதே ஓநாய்க்குட்டி எழுந்துவிடும். தன் இரையின்மீது பாய்வதற்குத் தயாராக இருந்துகொண்டு, குடிலின் வாசலில் இருக்கும் அதனுடைய உணவுப் பாத்திரத்தை உற்றுப் பார்த்துக்கொண்டிருக்கும். அதைப் பொறுத்தவரை, அந்தப் பாத்திரம்தான் அதனுடைய இரை. ஒரு பெரிய ஓநாயைப் போல, சரியான தருணத்தில் அதைத் தாக்குவதற்காகப் பொறுமையாகக் காத்திருக்கும். அப்பாத்திரம் அதன் பக்கத்தில் வந்தவுடனேயே, அது பாயும். அதிலிருந்து அது சாப்பிடும் இறைச்சிதான், அதனுடைய இரையின் சதை; மனிதர்களால் அளிக்கப்பட்டதல்ல அது. தன்னுடைய ஓநாய் சுதந்திரத்தை இவ்வகையில்தான் அந்த ஓநாய்க்குட்டி காப்பாற்றிக்கொள்கிறது.

கோடை மழை வருவதற்கு முன்பாக, மங்கோலிய மேட்டு நிலத்தில் கொஞ்ச நாள் வறண்ட காற்று வீசும். ஆனால் இம்முறை வழக்கத்தை விடவும் வெக்கை மோசமாகக் காணப்பட்டது.

ஜென்னைப் பொறுத்தவரை, மங்கோலிய சூரியன் சீனாவை விடவும் முன்னதாகவே உதிக்கிறது. அது காலை பத்து மணிக்கெல்லாம், தெற்கின் உள்ளார்ந்த பகுதிகளில் நண்பகலில் காணப்படுவதைப் போல, வெப்பமாக இருக்கிறது. கொசுக்களின் கொடுமை இன்னும் தொடங்கவில்லை. ஆனால் பெரிய தலை கொண்ட ஈக்கள், நிலப் பகுதி முழுவதும் கூட்டம் கூட்டமாய்த் திரிந்து, மனிதர்கள் மீதும் கால்நடைகள் மீதும் தாக்குதல்கள் நடத்தின. கண்கள், மூக்கு, வாயோரங்களைக் குறிவைத்து அவை இத்தாக்குதல்களை நடத்தின. மனிதர்களும் நாய்களும் ஓநாய்களும் கைகளை ஆட்டியபடியும் வால்களை வீசியபடியும் எவ்வித பிரயோஜனமுமின்றி அத்தாக்குதலில் இருந்து தப்பிக்கத் தொடர்ந்து முயற்சி செய்தபடி இருந்தனர். ஈக்களை மின்னல் வேகத்தில் தன் வாயால் பிடிக்கும் ஆற்றல் எல்லோவிடம் காணப்பட்டது. அவற்றை அது மென்று துப்பும். அதைச் சுற்றியிருக்கும் இடமெங்கும் ஈக்களின் உடல்கள் சிதறிக் கிடக்கும்.

வெப்பம் ஈவிரக்கமின்றி கூடிக்கொண்டே போனது. பள்ளத்தாக்கானது, பிரமாண்டமான இரும்புச் சமையல் பாத்திரத்தைப் போல மிகவும் சூடாக இருந்தது. புல்லானது, உலர்ந்த தேயிலை களைப் போலக் காணப்பட்டது. குடிலின் வட பகுதியில், பிறைநிலா வடிவில் விழுந்து கிடந்த நிழலில், வாய் திறந்தபடி, நாக்கைத் தொங்கவிட்டபடி நாய்கள் படுத்துக் கிடந்தன. அவற்றின் வயிறுகள் ஏறி இறங்கிக்கொண்டிருந்தன. அவற்றிடையே எர்லாங் இல்லாததைக் கண்ட ஜென், அதைப் பேர் சொல்லிக் கூப்பிட்டான். அது வரவில்லை. அது எங்கு போயிருக்குமென ஜென் வியந்தான். ஒருவேளை ஆற்றுக்குப் போயிருக்கலாம். அங்கு குளுமையாக இருக்கும். எர்லாங் நம்பிக்கைக்குரிய காவல் நாய். ஜென் இரவுப் பணியில் இருக்கும்போது, அது பார்த்துக் கொள்ளுமென்று நிம்மதியாக இருப்பான். குழுமத்தைச் சேர்ந்தவர்களும் இப்போதெல்லாம் அதைக் காட்டு நாய் என்று சொல்வதில்லை. ஆனால் சூரியன் உதித்ததும், அதன் பணி முடிந்துவிட்டதால், அது வெளியில் எங்காவது சுற்றித் திரியும். அதற்கு

மாறாகப் பகலில் எல்லோவும் யிர்ரும் குடிலுக்கு அருகிலேயே விசுவாசத்தோடு இருந்துகொண்டிருக்கும்.

ஓநாய்க்குட்டி அந்த வெப்பத்தில் வெகுவாக பாதிக்கப் பட்டது. அதன் சங்கிலி தொட முடியாத அளவு சூடாக இருந்தது. வெயிலிலிருந்து கொஞ்சமாவது ஆசுவாசமடையக் கூடிய வகையில் நிழலான இடங்களும் அங்கு இல்லை. அது புழுங்கிக் கிடந்தது. தரையானது, மேய்ச்சல் நிலத்தினதைப் போல இல்லாமல் கிட்டத் தட்ட பாலை நிலத்தைப் போலிருந்தது.

கதவு திறக்கப்பட்டதும் ஓநாய்க்குட்டி, தன் பின்னங் கால்களால் எழுந்து நின்றது. அதனுடைய கழுத்துப் பட்டி இறுக்கி அதற்கு மூச்சு முட்டியது. தன்னுடைய முன்பாதங்களைக் காற்றில் உதைத்தது. அதைப் பார்க்கும் எவருக்குமே, அதன் தேவையெல்லாம் நிழலோ, தண்ணீரா அல்ல, உணவுதான் என்பது புரியும். ஓநாயின் இருப்புக்கான ஆதாரமே உணவுதான். இந்தக் கொடுமையான வெயிலிலும் அதனுடைய உணவுப் பசி பாதிக்கப் படவில்லை என்பதை ஜென் கவனித்தான். அது தொடர்ந்து காற்றை உதைத்துக்கொண்டிருந்தது. அதன்மூலம், அதனுடைய உணவுப் பாத்திரத்தைப் பட்டியில் கொண்டுவந்து வைக்கும்படி அது ஜென்னுக்குத் தெரிவித்தது. அதனுடைய எல்லைக்கு 'இரை' வந்ததும், அது உறுமி, ஜென்னைப் பட்டியை விட்டுப் போகச் செய்தது.

ஜென்னுடைய கவலை அதிகரிக்கத் தொடங்கியது; கோடை மாதங்களில் அவர்களுடைய வழக்கமான உணவு பால் பொருட்களென்றும் எப்போதாவது கொஞ்சம் இறைச்சி சேர்த்துக் கொள்வோமென்றும் மேய்ப்பர்கள் அவனிடம் கூறியிருந்தார்கள். காலையில் தேனீரும், மாலையில் இரவு உணவும் இறைச்சியில்லாமல் அவனுக்கு சாப்பிட்டுப் பழக்கமில்லை. நூடுல்ஸ், தினை, சாதம் மேலும் பல்வேறு பால்வகை உணவுகள் _ தயிர், யோகர்ட், வெண்ணெய், மோர் _ அங்கிருந்தன. கோடையில் பால் பொருட்களை சாப்பிடுவதை மேய்பபர்கள் விரும்புவார்கள்; ஆனால் பீஜிங் மாணவர்கள் அவற்றை விரும்புவதில்லை. ஆரம்பத்தில் இறைச்சிக்குப் பதிலாகப் பால் பொருள்களை உண்ண அவர்கள் பழக்கப்பட்டிருக்கவில்லை; ஆனால் அதை விடவும், காலை மூன்று அல்லது நான்கு மணிக்கெல்லாம் எழுந்திருந்து,

அதன்பிறகு நான்கு அல்லது ஐந்து மணி நேரம் பால் கறப்பதை யாருமே விரும்பவில்லை என்பதுதான் இதில் மிக முக்கியம்.

அதைவிட அலுப்பான விசயம், மாலை ஐந்து அல்லது ஆறு மணிக்கு மாடுகள் திரும்பி வரும்வரை காத்திருந்து, அதன் பிறகு மூன்று அல்லது நான்கு மணி நேரம் பால் கறக்க வேண்டும். அதனையடுத்து, அதை உணவுப் பொருள்களாக ஆக்கும் வேலைகள். எனவே, அதற்குப் பதிலாக, வேக வைத்த தினை, காய்கறி நூடுல்ஸ், ரொட்டி போன்றவற்றை சாப்பிட்டார்கள்.

மேய்ப்பர்கள் கோடை காலத்தில் சாப்பிடும் தயிருக்குப் பதிலாக, அவர்கள் காட்டுக் காய்களை _ வெங்காயம், பூண்டு, அல்லி, டேன்டெலியன் போன்றவற்றை _ பறித்து வந்து சாப்பிட்டார்கள்.

கோடை மாதங்களில் உணவுப் பழக்கத்தில் ஏற்பட்ட மாற்றம் ஜென்னையும் அவனுடைய ஓநாய்க்குட்டியையும் வெகுவாக பாதித்தது.

அந்த நாட்களில் சமையல் எண்ணெய்த் தட்டுப்பாடும், இறைச்சிக்குப் பங்கீட்டு முறையும் இருந்ததால், அரசானது ஓலோன்புலாக் மேய்ப்பர்கள், தங்களுடைய விரிந்த ஆட்டு மந்தையிலிருக்கும் ஒவ்வொரு ஆட்டையும் பொக்கிஷமாகக் கருத வேண்டுமென்றும், அவற்றைப் பெருமளவில் கொன்று தின்னக் கூடாதென்றும் உத்தரவு பிறப்பித்திருந்தது.

கோடை முழுவதும், இறைச்சி இல்லாமல் நாய்கள் இருக்க வேண்டிய கட்டாயம் ஏற்பட்டது. அவை பெரும்பாலான நேரங்களில் பசியோடும், அவன் கதவைத் திறப்பதை எதிர்பார்த்தும் காத்திருந்தன. அதனால் முதலில் அவற்றுக்கு உணவளித்துவிட்டு, அவை தங்களுடைய உணவுப் பாத்திரத்தை சுத்தமாக நக்கி முடிக்கும்வரை பார்த்திருப்பான். அதன் பிறகு, ஓநாய்க்குட்டிக்கான உணவை எடுத்துச் செல்வான்.

நாய்களைப் போலில்லை, ஓநாய்க்குட்டி. புல்லரிசி அல்லது அரிசிக் கூழை அதில் இறைச்சி வாடை இல்லாவிட்டால் அது சாப்பிடாது. அதனால் அதற்கு மட்டும் ஆட்டு எண்ணெய் விட ஜென் முடிவு செய்தான். பளிங்கு ஜாடியில் உறைந்திருந்த எண்ணெய், இளகி, வெயிலில் கெட்டுப் போகத் தொடங்கியிருந்தது. ஆனால் ஓநாய்கள் அழுகிய இறைச்சியை விரும்பிச்

சாப்பிடும் என்பதால் ஓநாய்க்குட்டிக்கு அந்த எண்ணெய் பிடிக்குமென்பதில் அவனுக்கு சந்தேகமில்லை.

உணவுப் பாத்திரத்தை எடுத்துக்கொண்டு அதனிடம் போய், வழக்கம் போல, ‘‘குட்டி ஓநாய், குட்டி ஓநாய்’’ என்று கூப்பிட்டான். ‘‘சாப்பாட்டு நேரம்’’ என்றான். ஜென் பாத்திரத்தை வைத்துவிட்டு, பின்னகர்ந்து அது சாப்பிடுவதைப் பார்த்தான். அது திருப்தி அடைந்திருப்பதுபோல் தோன்றியது.

ஒவ்வொரு நாளும் உணவு வேளையின்போது அவன் ஓநாய்க்குட்டியைக் கூப்பிடும் போதெல்லாம், நன்றி தெரிவிக்கும் வகையில் அதனிடமிருந்து ஏதாவது வெளிப்படுமென்று நம்பினான். மேலும், அதற்குத் திருமணமாகிக் குடும்பம் நடத்தும்போது, அது தன்னுடைய சொந்தக் குழந்தைகளிடம், அது இப்போது பெறும் அன்பைச் செலுத்தாது என்று அவன் அடிக்கடி நினைத்துக்கொள்வான். ஒரு ஓநாய்க்குட்டியை வளர்க்கும் முடிவை அவன் தனக்குத் தானே ஏற்படுத்திக்கொண்டிருந்ததால், புராண ரீதியான கனவுகளும் அற்புதக் கற்பனைகளும் அவன் மனதில் தோன்றிக்கொண்டே இருக்கும். ஆரம்பப் பாடசாலையில் அவன் ஒரு சோவியத் கதையைப் படித்திருந்தான். அதில் காயமடைந்த ஓநாயை ஒரு வேட்டைக்காரன் காப்பாற்றி, அது குணமடையும் வரை நன்கு பராமரித்து, பின்னர் காட்டில் கொண்டுபோய் விடுவான். பிறகு ஒருநாள், அவன் தன்னுடைய சிறு குடிலின் கதவைத் திறந்தபோது, பனியில் ஏழு இறந்த முயல்கள் கிடப்பதைப் பார்த்தான். அங்கு பல ஓநாய்த் தடங்கள் காணப்பட்டன... ஓநாய்களுக்கும் மனிதர்களுக்கும் இடையே அமைந்த நட்பு பற்றிய முதல் கதை இதுதான். அவன் பார்த்த பல திரைப்படங்கள் மற்றும் வாசித்த பல புத்தகங்களிலிருந்து ஓநாய்கள் பற்றிய வித்தியாசமான ஒரு பார்வையை முன்வைத்த முதல் கதை இதுதான். அந்த சோவியத் கதை அவன் வாழ்வில் மறக்க முடியாத ஒன்று. அவன் ஒரு வேட்டைக்காரனாகக் காட்டுக்குள் சென்று, அவனுடைய ஓநாய் நண்பர்களோடு கட்டிப் புரண்டபடியும் அவற்றின்மீது சவாரி செய்தபடியும் வாழ்க்கையை அனுபவிப்பதாக அடிக்கடி கனவு காண்பான்.

கடைசியாக, பாத்திரத்தை சுத்தமாக நக்கி முடித்தது ஓநாய்க்குட்டி. மூன்றடி நீளத்துக்கு அது வளர்ந்திருந்தது. அது சேர்ந்து வளர்ந்த நாய்க்குட்டிகளை விடவும் பாதி மடங்கு பெரியதாகக் காணப்பட்டது. உணவுப் பாத்திரத்தைக்

கொண்டு போய் வாசலுக்குப் பக்கத்தில் வைத்துவிட்டு, திரும்பவும் ஓநாய்க்குட்டியிடம் வந்து உட்கார்ந்துகொண்டான். சிறிது நேரம் அதைக் கைகளில் வைத்துக்கொண்டிருந்துவிட்டு, அதைத் திருப்பி, தன் தொடையின் மீது, அதன் வயிற்றைத் தடவிக் கொடுக்கும் வகையில் போட்டுக்கொண்டான். நாய்களும் ஓநாய்களும் சண்டையிடும்போது, அவற்றின் பிரதான இலக்கு எதிராளியின் வயிறுதான். ஏதாவது ஒன்று, மற்றதின் வயிற்றில் தன்னுடைய பற்களையோ, பாத நகங்களையோ பதித்துவிட்டால், காயம் பட்ட மிருகம் வீழ்ந்துவிடும். அதனால்தான் நாய்களோ, ஓநாய்களோ தம்முடைய வயிற்றை, அவை முழுவதுமாக நம்பிக்கை கொள்ளாத எவரிடமும், அது விலங்கானாலும் சரி, மனிதரானாலும் சரி வெளிக்காட்டாது. டோர்ஜியின் ஓநாய்க்குட்டி, டோர்ஜியின் மகனைக் கடித்ததால் இறக்கும்படி ஆகிவிட்டது என்றாலும், ஜென் தன்னுடைய விரல்களை ஓநாய்க்குட்டி நக்கவும் சப்பவும் கொடுத்தான். ஓநாய்க்குட்டி அவனைக் கடிக்காது என்று அவன் நம்பினான். ஓநாய்க்குட்டி அவன் மீது மல்லாக்கப் படுத்திருக்க விரும்பும்போது, அதனுடைய வயிற்றை அவன் தடவிக் கொடுக்க அது அனுமதிக்கும்போது, அவன் ஏன் அதன் வாய்க்குள் தன் விரல்களைக் கொடுக்கக்கூடாது; அவர்கள் ஒருவர் மீது ஒருவர் நம்பிக்கை கொண்டிருந்தனர்.

கிட்டத்தட்ட நடுப்பகலாகி விட்டது. சூரியன் வாட்டி எடுத்தது. ஓநாய்க்குட்டி மறுபடியும் கஷ்டத்துக்கு ஆளானது. அதன் வாய் தளர்ந்திருந்தது; விடாமல் மூச்சு வாங்கியது; அதன் தொங்கிக்கொண்டிருந்த நாக்கிலிருந்து நீர் வழிந்து தரையில் விழுந்தபடி இருந்தது. குடிலை மூடியிருந்த துணியை ஜென் குடிலின் உச்சிவரை திறந்துவிட்டான். மங்கோலியக் குடில்கள் எட்டு பக்கங்களில் காற்றுக்கான திறப்புகளோடு இருக்கும். அதன்மூலம், அவன் குடிலுக்குள் இருந்து படித்துக்கொண்டிருக்கும்போதுகூட, ஓநாய்க்குட்டியின் மீது கண் வைத்திருக்க முடியும்.

ஓநாய்க்குட்டிக்குக் கொஞ்சமாவது குளிர்ச்சியளிக்க எவ்வித வழியும் அறியாத நிலையில், ஜென், அது எந்த அளவுக்கு வெக்கையைத் தாங்கும் சக்தி கொண்டிருக்கிறது என்பதை அவதானிக்க முற்பட்டான். குடிலுக்குள் அனல் காற்று வீசியது.

பள்ளத்தாக்குக்குச் சென்றிருந்த மாடுகள், மேய்வதை நிறுத்திவிட்டு, நதிக்கரையோர ஈரமண்ணில் படுத்துக் கிடந்தன. பெரும்பாலான ஆடுகள், ஓரளவு குளிர் காற்று வீசிய ஒரு மலைப் பாதையில் தூங்கின.

ஈவிரக்கமற்ற சூட்டில் வெந்து புழுங்கிய ஓநாய்க்குட்டி, படுத்துக்கொண்டாலும் சரி, எழுந்து நின்றாலும் சரி, தாள முடியாத கஷ்டத்தில் உழன்றது. மணற்பாங்கான தரையிலிருந்து வெப்ப அலைகள் எழுந்து அதனுடைய பாதங்களைக் கொதிக்க வைத்தது. ஒரே சமயத்தில் அதனால் நான்கு பாதங்களையும் தரையில் வைத்துக்கொண்டிருக்க முடியவில்லை. அதன் விளையாட்டுத் தோழர்களான நாய்க்குட்டிகளை அது தொடர்ந்து தேடியபடி இருந்தது. ஒரு பாரவண்டியின் அடியிலிருந்த நிழலில் ஒரு நாய்க்குட்டி படுத்துக்கொண்டிருப்பதைப் பார்த்ததும், அது கோபத்தில் சங்கிலியிலிருந்து திமிறியது. உடனடியாக ஏதாவது செய்யாவிட்டால் ஓநாய்க்குட்டி வெயிலில் வறுக்கப்பட்டு விடுமென உணர்ந்த ஜென் குடிலிலிருந்து வெளியே ஓடிவந்தான்.

தண்ணீர் வண்டியிலிருந்து ஒரு பாத்திரம் நிறைய தண்ணீர் எடுத்துக்கொண்டு போய் ஓநாய்க்குட்டியின் முன் வைத்தான். அது தலையை உள்ளே விட்டு, எல்லாம் தீரும்வரை, தலையை வெளியே எடுக்காமல் குடித்து முடித்தது. பிறகு, அது முன்னால் ஓடிவந்து, ஜென்னுடைய நிழலில் மறைந்துகொண்டது. ஒரு அனாதைக் குழந்தையைப் போல, அது அவனுடைய பாதங்களில் ஏறிக் கொண்டு அவனைப் போகவிடாமல் தடுத்தது. அவனுடைய பின் கழுத்தில் அரிப்பு ஏற்படும்வரை அவன் அப்படியே நின்றிருந்தான். அதன் பிறகும் அவன் நகராவிட்டால் அவனுடைய தோலில் வெடிப்பு ஏற்படும் என்பதை அறிந்து, பட்டியை விட்டு நகர்ந்தான். அரை வாளி தண்ணீர் எடுத்து வந்து மண் தரையில் ஊற்றினான். அந்த இடத்தில் தரையின் வெப்பம் குறைந்திருப்பதைக் கண்ட ஓநாய்க்குட்டி, ஓடிச் சென்று படுத்துக்கொண்டு ஓய்வெடுத்தது. ஆனால், சீக்கிரமே தரை சூடேறியது. வேதனை திரும்பியது.

ஜென்னுக்கு வேறு வழியேதும் தெரியவில்லை. அவனால் தொடர்ந்து தரைக்குத் தண்ணீர் விட்டுக்கொண்டிருக்க முடியாது; அப்படி அவன் செய்தாலும், மந்தையைப் பார்த்துக்கொள்ள வேண்டிய நேரம் வரும்போது, என்ன நடக்கும்?

குடிலுக்கு வந்த ஜெனுக்கு, படிக்க வேண்டுமென்ற எண்ணம் தோன்றவில்லை. ஓநாய்க்குட்டி நோய்வாய்ப்படும் அல்லது அதன் எடை கணிசமாகக் குறையும் அல்லது இந்தக் கொடூரமான கோடை வெப்பத்தில் அது இறந்துகூடப் போய்விடும் என்ற பயத்தை அவனால் உதற முடியவில்லை. அதைச் சங்கிலியில் கட்டிப் போட்டிருப்பதன் மூலம், மக்கள் மற்றும் கால்நடைகளின் பாதுகாப்புக்கு உத்திரவாதம் அளிக்கப்பட்டிருக்கிறதே தவிர, ஓநாய்க்குட்டியின் உயிருக்கு அல்ல. ஓநாய்க்குட்டி சுதந்திரமாக ஓடித் திரியும் வகையில் ஒரு வேலி அடைப்பு இருந்தால் நன்றாயிருக்கும்; குறைந்தபட்சம் அந்தச் சுவற்றோடு சேர்த்து அதன் புகலிடமாக ஒன்றை அமைக்கலாம்.

அவனுடைய ஓநாய்க்குட்டியைப் பார்த்தவாறே, ஏதேனும் ஒரு வழியைக் கண்டறிய அவன் முயற்சித்தான். எதுவும் தோணவில்லை.

ஓநாய்க்குட்டி சுற்றிச் சுற்றி நடந்தது; அதன் மூளையும் அதையே யோசித்துக்கொண்டிருப்பதாகத் தோன்றியது. பட்டிக்கு வெளியிலிருக்கும் புல்தரை, உள்ளிருக்கும் மண் தரையை விடக் குளுமையானதென்பதை ஓநாய்க்குட்டி உணர்வதாகத் தோன்றியது. அது திரும்பி, தன்னுடைய பின்னங்கால்களால் புல்தரைக்குள் இறங்கியது. அதனுடைய தலையும் கழுத்தும் மட்டும் பட்டிக்குள் கொதி மணலில் இருந்தன. அது சங்கிலியை இறுக இழுத்துக் கொண்டு, ஒரு வழியாக உடலை நீட்டிக் கொஞ்சம் ஓய்வெடுத்தது. அதன் ஒரு பகுதி உடல் சூரியனால் வேகவில்லை. ஜென் மிகுந்த மகிழ்ச்சியடைநதான்; அதற்கு ஒரு முத்தம் கொடுக்க வேண்டும் போல அவனுக்குத் தோன்றியது. ஓநாயின் அறிவுத்திறன் வெளிப்பட்ட விதம் அவனுக்கு நம்பிக்கை அளித்தது. இப்போது என்ன செய்ய வேண்டுமென்று அவனுக்குத் தெரிந்துவிட்டிருந்தது.

வெப்பம் இன்னும் தொடர்ந்து அதிகரிக்கப் போவதால், அவன் ஓநாய்க்குட்டிக்குப் புதிய பட்டியை உருவாக்குவான். இம்முறை அது புல் மேவிய இடமாக இருக்கும். அது புல்லை மிதித்து மிதித்து நடந்து அமுக்கிய பிறகு, மண் வெளிப்பட்டால், மீண்டும் அதை இடம் நகர்த்துவான். வாழ்வதற்கான ஓநாயின் ஆற்றல் மனிதர்களை விடவும் மேம்பட்டது. ஒரு தாயின் வழிகாட்டுதல் இல்லாமலேயே, ஒரு இளம் ஓநாய் தான் எதிர்கொள்ளும் பிரச்சனைகளைத் தீர்த்துக் கொள்கிறது; அது தன்

கூட்டத்தோடு இருந்தாலும் சரி, தனியாக இருந்தாலும் சரி. நிம்மதிப் பெருமூச்சு விட்டபடி, ஜென் தன்னுடைய படுக்கைச் சுருளில் சரிந்துகொண்டு, வாசிக்கத் தொடங்கினான்.

குடிலுக்கு வெளியே அறுபது அல்லது எழுபது அடி தொலைவில் குதிரைகளின் குளம்பொலிகள் சாலையில் உரத்துக் கேட்டன. குதிரை மேய்ப்பர்கள் சென்றுகொண்டிருக்கிறார்கள் என்று கருதிய ஜென், அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. ஆனால் இரண்டு குதிரைகள் சாலையிலிருந்து விலகி அவனுடைய குடிலை நோக்கி வந்தது அவனுக்கு ஆச்சரியமளித்தது. அவை சட்டென திசை மாறி ஓநாய்க்குட்டியின் பட்டியை நோக்கிச் சென்றன. அங்கு ஓநாய்க்குட்டி, பயந்துபோய், சங்கிலியை இழுத்துக்கொண்டு பின்னங்கால்களால் எழுந்து நின்றது. முன்னின்ற சவாரியாளர், தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியின் கயிற்றை சுருக்கிட்டு, ஓநாய்க்குட்டியின் கழுத்தின் மீது வீசி, பின் சுண்டியிழுத்து, அதைத் தரையில் இருந்து மேலே தூக்கினார். அந்த மனிதர் வெளிப் படுத்திய விசையைப் பார்க்கும்போது, சங்கிலியால் இழுபடும்போது சங்கிலி கழுத்தை அறுத்து ஓநாய்க்குட்டி இறந்துவிடுமென எதிர்பார்த்துச் செயல்படுவது போலிருந்தது. ஓநாய்க்குட்டி உடனடியாகத் திரும்பவும் தரையில் விழுந்தது. இரண்டாவது நபர், தன்னுடைய சுருக்குக்கயிற்றுத் தடியை சாட்டையைப் போல் பயன்படுத்தி அதன்மீது பலமாக அடித்தார். அந்த அடியில் அது சுருண்டது. இதற்கிடையே முதலாவது நபர், குதிரையை நிறுத்தி, அதிலிருந்து மேய்ச்சல் தடியை எடுத்துக்கொண்டு குதிரையிலிருந்து கீழே இறங்கத் தயாரானான். அப்போது ஜென் அலறியபடியே, ஒரு பைத்தியக்காரனைப் போல ஓடி வந்தான். அவனைப் பார்த்ததும், தங்கள் குதிரைகளைச் சுற்றித் திருப்பி, புழுதி பறக்க அவர்கள் விரைந்தார்கள். போகும்போது ஒருவன் சத்தமாக, ''எங்களுடைய அருமையான குதிரைகளை ஓநாய்கள் கொன்றிருக் கின்றன. ஆனால் நீ ஒரு ஓநாயை வளர்த்துக்கொண்டிருக்கிறாய். கூடிய சீக்கிரமே அந்த ஓநாயை நான் கொல்லாமல் விடமாட்டேன்'' என்று சொன்னது ஜென்னின் காதில் விழுந்தது.

எல்லோவும் யிர்ரும் அவர்களைப் பின்தொடர்ந்து, மூர்க்கமாகக் குரைத்தபடி ஓடின. அவற்றை சுருக்குக்கயிற்றுத் தடிகளால் அடித்துவிட்டு, தங்களுடைய

குதிரை மந்தைகள் மேயுமிடத்துக்கு அவர்கள் பாய்ந்து சென்றனர்.

தாக்கியவர்கள் யார் என்பதை ஜென் பார்த்திருக்கவில்லை. ஒருவன் பில்ஜியால் கண்டிக்கப்பட்டவனாக இருக்கக் கூடுமென்றும், இன்னொருவன் குதிரை மேயப்பர்களின் நான்காம் பிரிவைச் சேர்ந்தவன் என்றும் ஜென் யூகித்தான். அவர்கள் கொலை செய்யும் நோக்கத்தோடுதான் வந்திருக்கிறார்கள் என்பது தெளிவாகத் தெரிந்தது.

ஓநாய்க்குட்டி படுத்துக்கிடந்த இடத்துக்கு அவன் ஓடிச் சென்றான். அது கால்களுக்கிடையில் வாலை இடுக்கிக்கொண்டு மரண பயத்தில் கிடந்தது. அதனால் எழுந்து நிற்க முடியாத அளவுக்கு அதன் கால்கள் தொய்ந்து தள்ளாடின. ஜென்னைப் பார்த்ததும் அது தட்டுத் தடுமாறி அவனுடைய கைகளில் போய் விழுந்தது; ஒரு பூனையிடமிருந்து தப்பித்த கோழிக் குஞ்சு, தாய்க் கோழியை நோக்கி ஓடுவது போலிருந்தது அதன் செயல்.

ஜென்னும் படபடப்பில் நடுங்கிக்கொண்டிருந்தான். அதை இறுக அணைத்துக்கொண்டான். ஓநாய்க்குட்டியின் கழுத்தைப் பதற்றத்துடன் தடவிப் பார்த்தான். அது நன்றாக இருந்ததைப் பார்த்ததும் நிம்மதி அடைந்தான். ஓநாய்க்குட்டியின் இதயம் இன்னமும் படபடத்துக் கொண்டிருந்தது. இளம் ஓநாயை அவன் சாந்தப்படுத்திக்கொண்டிருந்தான். கொஞ்ச நேரத்துக்குப் பிறகு, இருவருடைய நடுக்கமும் நின்றுவிட்டிருந்தது.

ஜென் குடிலுக்குள் திரும்பச் சென்று, காய்ந்த ஆட்டிறைச்சியின் நீண்ட துண்டொன்றை எடுத்து வந்து அதற்குக் கொடுத்தான். ஓநாய்க்குட்டிக்கு அது மிகுந்த ஆறுதல் அளித்தது. மறுபடியும் ஓநாய்க்குட்டியை எடுத்துத் தன் தொடை மீது போட்டுக்கொண்டு, அதன் முகத்தோடு தன் முகத்தை அழுத்தி வைத்துக்கொண்டான். அப்படியே அதன் மார்பை வருடிக் கொடுத்தான். இதயத்துடிப்பு கொஞ்சம் கொஞ்சமாக சீரானது. ஆனாலும் ஓநாய்க்குட்டியின் பயம் இன்னும் நீங்கவில்லை. அது ஜென்னைக் கண்ணெடுக்காமல் பார்த்துக்கொண்டிருந்தது. திடீரென அது ஜென்னின் கன்னத்தை நக்கியது. இப்படி ஓநாய்க்குட்டி செய்வது இது இரண்டாவது முறை; எனினும் நன்றி தெரிவிக்கும் வகையில் அந்த வெளிப்பாடு அமைந்தது, இதுவே முதல் முறை. காப்பாற்றப்பட்ட ஓநாய், ஏழு முயல்களைப் பரிசளித்துத் தன் நன்றியைத்

தெரிவித்த கதையானது, ஏதோ ஒருவரின் கற்பனையில் முளைத்ததாக இருக்கவேண்டிய அவசியமில்லை என்று ஜென்னுக்குத் தோன்றியது.

ஜென் மிகவும் பயந்துகொண்டிருந்த விசயம் கடைசியில் நிகழ்ந்து விட்டதானது, அவனுடைய அக்கறையை மீண்டும் பரிசீலிக்கத் தூண்டியது. பெரும்பாலான மேய்ப்பர்களை அவன் ஓநாய்க்குட்டி வளர்ப்பது பாதித்திருக்கிறது. பில்ஜிகூட அங்கு வருவதைக் கிட்டத்தட்ட நிறுத்திவிட்டார். மேய்ப்பர்களின் பார்வையில், அவனுக்கும் பாவோ சுங்காய்க்கும் அவருடைய தொழிலாளர்களுக்கும் இடையில் எவ்வித வித்தியாசமுமில்லை. எல்லா வெளியாட்களுக்குமே மேய்ச்சல் நிலத்தின் பாரம்பரியப் பழக்க வழக்கங்கள்மீது எவ்வித மரியாதையும் இல்லை. ஓநாயானது, அவர்களுடைய ஆன்மாவின் குலச்சின்னம்; ஆனால் உடல் ரீதியான எதிரி. அதில் ஒன்றை செல்லப் பிராணியாக வளர்ப்பதென்பது, மேய்ப்பர்களால் மன்னிக்க முடியாத செயல். ஆன்மீக ரீதியாக அது ஒரு தெய்வ நிந்தனை; உடல் ரீதியாக அது எதிராளியுடன் கூட்டுச்சேர்வது. மேய்ச்சல் நிலத்தில் தடை செய்யப் பட்டவற்றில் ஒன்றை அவன் தகர்த்திருக்கிறான்; ஒரு கலாசார புனிதத்தை மீறியிருக்கிறான். அதில் சந்தேகமே இல்லை. அவனால் ஓநாய்க்குட்டியைத் தொடர்ந்து காப்பாற்ற முடியுமா என்பது அவனுக்கு இப்போது நிச்சயமில்லாமல் போயிற்று. அவனால் தொடர்ந்து வளர்க்க முடியுமா என்பதும் தெரியவில்லை. ‘ஓநாய் குலச்சின்னம்’ என்பது ‘மேய்ச்சல் நிலத்தின் ஆன்மா’ என்பதின் ரகசியங்களையும் பெறுமதியையும் பரிட்சித்துப் பார்த்துப் பதிவு செய்ய அவன் மனப்பூர்வமாக ஆசைப்பட்டான். வாழ்வில் ஒருமுறை மட்டுமே கிடைக்கக்கூடிய அரிய வாய்ப்பாக இதைக் கருதினான். அவன் எதற்கும் பணிந்து விடாமலிருப்பது அவசியம்;

பல்லைக் கடித்துக்கொண்டு ஆக வேண்டியதைப் பார்க்க வேண்டியதுதான் என முடிவெடுத்தான். ஆக, அவன் எர்லாங்கைத் தேடிச் சென்றான். அதன் மேற்பார்வையில் விசயங்கள் இருக்கும் போது, ஜென்னுடைய குழுவிலுள்ள மேய்ப்பர்கள் தவிர, வேறு எவருக்கும் அழைக்கப்படாமல் அங்கு வர துணிவிருக்காது. எர்லாங் அப்போது அங்கு இருந்திருந்தால் அது நடந்திருக்கவே முடியாது. அவர்களைத் துரத்தியடித்திருக்கும். எர்லாங் அங்கு

இல்லாததைப் பார்த்த பிறகே, தாக்குதல் நடத்திய இருவரும் அந்த நடவடிக்கையை மேற்கொண்டிருக்க வேண்டும்.

சூரியன், அதன் கடுமையான தினசரி தாக்குதலின் உச்சத்தை இன்னும் எட்டியிருக்கவில்லை. ஆனால் அதற்குள்ளாகவே பள்ளத்தாக்கின் சூடு முழுவதும் ஓநாய்ப் பட்டியில் ஒன்று சேர்ந்து விட்டிருப்பதாகத் தோன்றியது. ஓநாய்க்குட்டியின் தலை தவிர்த்த உடல் பகுதி, இப்போதெல்லாம் தாங்க முடியாத அளவு வெந்து புழுங்குவதில்லை; ஆனால் அதன் தலையும் கழுத்தும் மணல் மீதே இருந்தன. தாக்குதலின்போது ஏற்பட்டுவிட்டிருந்த காயங்களால், நீண்ட நேரம் அதனால் படுத்திருக்கவும் முடியவில்லை. அதனால் வேறு வழியின்றி, பட்டியைச் சுற்றி நடந்தது.

வாசிக்க மனமில்லாதிருந்த ஜென், வீட்டு வேலைகளில் தன்னை ஈடுபடுத்திக்கொண்டான். பல வாத்து முட்டைகளை உடைத்து, அவற்றோடு சேர்க்க வேண்டியவற்றைச் சேர்த்து முட்டைப் பொறியல் செய்தான். பிறகு, ரொட்டித் துண்டுகளை வறுத்தெடுத்தான். எல்லாமாக அரை மணி நேரம் ஆகியது. பிறகு, அவன் பட்டியைப் பார்த்தபோது, ஓநாய்க்குட்டி மணலில் ஒரு குழி தோண்டிக்கொண்டிருப்பதைப் பார்த்து அதிர்ச்சி அடைந்தான். தரையிலிருந்து புழுதி பறந்துகொண்டிருந்தது. ஜென் தன் கைகளைத் துடைத்துக்கொண்டு, வெளியே ஓடினான். ஓநாய்க்குட்டி என்ன செய்துகொண்டிருக்கிறது என்று குனிந்து பார்த்தான்.

பட்டியின் தென்மூலையில் ஓநாய்க்குட்டி வெறியோடு தோண்டிக்கொண்டிருந்தது. ஜென் அங்கு போய்ச் சேர்வதற்குள், அதன் பாதி உடல் தரைக்குள் இருந்தது. அதன் கால்கள் மூலமாக வெளியேறிக்கொண்டிருந்த மண்ணை, அதன் வாலால் விசிறியடித்து அகற்றிக்கொண்டிருந்தது. அது குழியை விட்டு வெளிவந்தபோது, அதன் உடல் முழுவதும் புழுதி படிந்திருந்தது. ஜென்னைப் பார்த்ததும், அதன் கண்களின் பார்வையில் தீவிரம் வெளிப்பட்டது. அது ஏதோ புதையலை எடுப்பதற்காகத் தோண்டியது போல் காணப்பட்டது.

அது எதற்காக இதைச் செய்கிறது? கம்பத்தைப் பெயர்த்தெடுப்பதற்காகவா? இல்லை, அப்படியிருக்க முடியாது. அந்தக் குழி கம்பத்தோடு சம்பந்தப்பட்டிருக்கவில்லை. அதன் பின் பக்கமாகக் கம்பமிருந்தது. சூரியன்

நகரும் திசை நோக்கி அக்குழி இருந்தது. ஓநாய்க்குட்டி என்ன செய்கிறதென்பது, ஜென்னுக்குத் தெளிவாகப் புரிந்தது.

ஓநாய்க்குட்டி மறுபடியும் சென்று, தன் வேலையைத் தொடங்கியது. அது மண்ணைத் தோண்டும்போது, அதன் வாய் திறந்தபடி இருந்தது. கொஞ்ச நேரம் தோண்டிய பிறகு, புழுதியி லிருந்து வெளியில் வந்தது. அதன் கண்கள், சூரிய ஒளியைப் போல பிரகாசித்தன. அதையே பார்த்துக்கொண்டிருந்த ஜென், ‘‘கொஞ்சம் நிதானமாகச் செய்யலாம், ஓநாய்க்குட்டி; கால் நகங்கள் உடைந்து விடப் போகிறது’’ என்றான். ஓநாய்க்குட்டி ஜென்னை நோக்கியது. அதனுடைய கண்களைச் சுருக்கிப் புன்னகை வடிவம் கொடுத்தது; அதன் மீதும், அது மேற்கொண்டிருக்கும் செயல் மீதும் அது மகிழ்ச்சி கொண்டிருப்பதாகத் தோன்றியது.

குழியிலிருந்து வெளியில் எடுக்கப்பட்ட மண் ஈரப் பதத்தோடு இருந்தது; மேல்தள மண்ணைவிட மிகவும் குளுமையாக இருந்தது. தன்னுடைய இடர்களுக்கெல்லாம் வழி காண்கிற ஓநாயாக அதன் செயல்பாடு அமைந்திருந்தது. சூரியனிடமிருந்தும், வெப்பத்திட மிருந்தும், மனிதர்களிடமிருந்தும், இன்னும் பலவித அபாயங்களிட மிருந்தும் தற்காத்துக்கொள்வதற்கான வழியை அது தோண்டிக் கொண்டிருப்பதாக ஜென் நினைத்தான். ஓநாய்க்குட்டியின் சிந்தனை இவ்விதமாக அமைந்திருக்கும்: குளிர்ச்சியும் இருளும் கூடிய ஒரு துணை; அதன் திசையைப் பொறுத்தவரை, நுழைவு மேற்கு பார்த்ததாகவும், குகைப் பாதை தெற்கு பார்த்ததாகவும் இருந்தால் சூரிய ஒளி வளைக்குள் புக முடியாது. ஓநாய்க்குட்டி மேலும் ஆழமாகத் தோண்டியபோது, அதன் உடலின் பெரும்பகுதி சூரியக் கதிர்களிலிருந்து தப்பித்திருப்பதைக் கவனித்தான்.

அது ஆழமாகத் தோண்டத் தோண்ட, வெளிச்சம் குறைந்து கொண்டே போனது. இருட்டின் ஆனந்தத்தை அது ருசிக்கத் தொடங்கியது. அது அடைய நினைத்த ஆழத்தை அது எட்டிக்கொண்டிருந்தது. ஓநாய்கள் இருட்டை நேசிப்பவை;

குளுமை, பாதுகாப்பு, மனநிறைவு ஆகியவை அதில் அடங்கி யிருக்கின்றன. இனிமேல், அதைவிடப் பெரியவையான மாடுகள், குதிரைகள் மற்றும் மனிதர்களின் அச்சுறுத்தல்கள் பற்றியோ, தாக்குதல்கள் பற்றியோ அது

கவலைப்படத் தேவையில்லை. அது இன்னும் வெறியோடு தோண்டியது. அப்படித் தோண்டுவதில் அது மகிழ்ச்சியடைவதாகத் தோன்றியது. வாய் மூடாமல் தோண்டியது. அடுத்த இருபது நிமிடம் கழிந்தது. மயிரடர்ந்த அதன் வால் நுனியைத் தவிர வேறெதுவும் இப்போது தெரியவில்லை;

குளிர்ந்த பூமிக்குள் அது தன்னைப் புதைத்துக்கொண்டது. வாழ்வதற்கான ஓநாய்க்குட்டியின் அசாதாரணமான திறமையையும், அதன் இயல்பான புத்திசாலித்தனத்தையும் கண்டு ஜென் மறுபடியும் வியந்தான். ஜென்னுக்கு ஒரு குட்டிப் பாட்டு நினைவுக்கு வந்தது. ‘ஒரு டிராகன் ஒரு டிராகனையே பெறுகிறது, ஒரு பீனிக்ஸ் ஒரு பீனிக்ஸையே பெற்றெடுக்கிறது, ஆனால் ஒரு எலியின் குழந்தைக்குத் தெரியும், ஒரு துளையை எப்படித் தோண்டுவதென்று.’ பெரிய எலிகள் பொந்துகள் தோண்டுவதைப் பார்ப்பதன் மூலம் எலிக்குஞ்சுக்கு ஒரு பொந்தைத் தோண்டுவது எப்படி என்று தெரியும். ஆனால் இந்த ஓநாய்க்குட்டி, அதன் கண்கள் முழுவதுமாகத் திறப்பதற்கு முன்பே, அதனுடைய அம்மாவிடமிருந்து எடுக்கப்பட்டுவிட்டது; ஒரு பெரிய ஓநாய் குழி தோண்டுவதை இது ஒருபோதும் பார்த்ததில்லை. இந்தத் திறனை எந்த ஒரு நாயும் அதற்குச் சொல்லிக் கொடுத்திருக்க முடியாது; ஏனென்றால், அவை இயல்பிலேயே குழி தோண்டுபவை அல்ல. பின் யார் சொல்லிக் கொடுத்திருப்பார்கள்? குறிப்பாக, இடத்தையும் திசையையும் அது எப்படித் துல்லியமாகக் கணித்தது? கம்பத்திலிருந்து இன்னும் கொஞ்சம் தள்ளி அது தோண்டியிருந்தால், அதற்குத் தேவையான அளவு ஆழத்துக்குத் தோண்ட முடியாதபடி சங்கிலி தடுத்திருக்கும். இப்போது அந்தக் குழி பட்டியின் முனைக்கும் கம்பத்துக்கும் நடுவில் இருக்கிறது. அதன்மூலம் பாதி சங்கிலியை எடுத்துக்கொண்டு அது குழிக்குள் போய் இருந்துகொள்ள முடிகிறது. இதை எங்கு கற்றுக்கொண்டது?

ஜென்னுக்கு மெய் சிலிர்த்தது. மூன்று மாத ஓநாய்க்குட்டி, அதன் இருப்புக்கு அச்சுறுத்தலாக இருந்த ஒரு பிரச்சனையை, எப்படித் தீர்ப்பதென்று எவரும் கற்றுக் கொடுக்காமல் தானாகவே தீர்த்துக்கொண்டிருக்கிறது. வரப்போகும் நாட்களில், ஓநாயிடமிருந்து நிறைய பாடங்களை அறிய நேரிடுமென்று ஜென்னுக்கு உறுதியாகத் தோன்றியது.

ஓநாய்க்குட்டியின் வால் உற்சாகமாக ஆடிக்கொண்டிருந்தது. குளுமைக்காகவும் பாதுகாப்புக்காகவும் மட்டுமே ஓநாய்க்குட்டி குழியைத் தோண்டியதாக ஜென் நினைக்கவில்லை; தன்னுடைய ஆரம்ப கால நாட்களின் நினைவுகளைத் தோண்டி எடுக்கும் முயற்சியாகவும் அது அவனுக்குப் பட்டது. தோண்டும்போது வெளிப்பட்ட அதன் வெளிப்பாடுகளை ஜென் கற்பனை செய்ய முயற்சித்தான். பரவசம், நம்பிக்கை, அதிர்ஷ்டம், கொஞ்சம் வருத்தம் என்ற உணர்வுகளின் கலவையாக அது இருக்கக்கூடும்.

ஜென்னுடைய கண்கள் கலங்கின. ஓநாய்க்குட்டியின் மீதான அவனுடைய பாசம் மிகவும் வலுப்பெற்றது. அதேசமயம் ஓநாய்க்குட்டியின் சுதந்திரமான மற்றும் சந்தோஷமான குடும்ப வாழ்க்கையைச் சிதைத்தது அவன்தான் என்பதையும் உணர்ந்திருந்தான். அவன் மட்டும் இல்லாவிட்டால், அந்த எல்லாக் குட்டிகளும் தங்களுடைய அப்பாவோடும் அம்மாவோடும் இப்போது குதூகலமாக இருந்துகொண்டிருக்கும். தற்சமயம் ஓநாய்களின் அரசனாக இருக்கும் ஓநாய்தான் இந்த அற்புதமான குட்டியின் அப்பாவாக இருக்குமென்ற எண்ணம் ஜென்னுக்கு இருந்தது. ஓநாய்க்கூட்டத்தின் பாதுகாப்பில் இருந்துகொண்டு, பரந்த யுத்த அனுபவங்களோடு, அந்தக் கூட்டத்தின் தலைவனாக இந்த ஓநாய்க்குட்டி ஒருநாள் ஆகியிருந்திருக்கக்கூடும். ஆனால், தொலை தூரத்திலிருந்து வந்த ஹேன் சீனன் ஒருவனால், அதனுடைய பிரமாதமான எதிர்காலம் பறிக்கப்பட்டுவிட்டது பெரிய துயரம்தான்.

ஓநாய்க்குட்டி தொடர்ந்து, சங்கிலி இடம் கொடுக்கும் தூரம் வரை தோண்டியது. அந்தக் குழியைச் சுற்றியிருந்த மண் தரை தளர்வாகக் காணப்பட்டது. ஒரு குதிரையோ மாடோ தற்செயலாக அந்தக் குழிக்கு நெருக்கமாக மிதித்துவிட்டால், ஓநாய்க்குட்டி உயிரோடு புதையுண்டுவிடும். திடீரென, தோண்டுவதில் ஓநாய்க்குட்டிக்கு ஏற்பட்டிருந்த உற்சாகம் மறைந்தது. அதன் அதிருப்தியை ஊளையிட்டுத் தெரிவித்தது. அது திரும்பவும் குழியை விட்டு வெளி வந்தபோது, சங்கிலி நெருக்கியது. அதன் அடிபட்ட கழுத்தில் கழுத்துப்பட்டி உராய்ந்ததில் மூச்சுத் திணறல் ஏற்பட்டது. அப்படியே மூச்சு வாங்கியபடி, கால்களைப் பரப்பிக்கொண்டு தரையில் படுத்துக்கொண்டது. கொஞ்ச நேர ஓய்வுக்குப் பிறகு, குழிக்குள் தலையை விட்டது. இப்போது அது

என்ன செய்யப் போகிறது என ஆச்சரியத்தோடு பார்த்துக்கொண்டிருந்தான் ஜென்.

ஓநாய்க்குட்டியின் மூச்சு சீராக வெளிப்பட்டதும், அது குழிக்குள் படு வேகமாக ஓடியது. உடனே உள்ளிருந்து புழுதி பறந்து வெளியில் வந்தது. ஜென்னுக்கு அது பெரிதும் ஆச்சரியமளித்தது. அவன் குனிந்து குழிக்குள் பார்த்தான்; அங்கு அது குழியை அகலப்படுத்திக்கொண்டிருந்தது. அதன் புத்திசாலித்தனத்தின் இன்னொரு அடையாளம். குளுமையான, பாதுகாப்பான குழியை அமைத்து முடித்ததும், ஓநாய் உள்ளே வசதியாக இருந்துகொண்டது. அதை வெளியில் வரும்படி ஜென் பல முறை கூப்பிட்டதையும் அது பொருட்படுத்த வில்லை. ஜென் உள்ளே எட்டிப் பார்த்தபோது, அகலத் திறந்திருந்த அதன் கண்கள் காட்டில் திரியும் ஒரு ஓநாயின் தோற்றத்தை அவனுக்கு ஏற்படுத்தின. இருட்டையும், குளுமையையும், பூமியின் வாசனையையும் அது சந்தோஷமாக அனுபவிப்பது நன்றாகத் தெரிந்தது. அதனுடைய முதல் வீட்டுக்குத் திரும்பி, அம்மாவோடும் கூடப் பிறந்தவர்களோடும் இருப்பது போலிருந்தது. இப்போது அது அமைதி அடைந்திருந்தது. எப்போதும் பதற்றத்தோடு மனிதர் களோடும் அவர்களுடைய கால்நடைகளோடும இருந்து கொண்டிருந்த நிலையிலிருந்து ஒரு வழியாக அது விடுபட்டிருந்தது. அதனுடைய சொந்தக் குகையில் அது வசிக்கத் தொடங்கிவிட்டது. அதன் இயற்கையான பரப்பெல்லைக்குள் அது மீண்டும் நுழைந்துவிட்டது. கடைசியாக, அது நிம்மதியாகத் தூங்கி, ஓநாய்களின் கனவுகளைக் கனவு காணத் தொடங்கியது.

சூரிய அஸ்தமனத்தின்போது, காவோ ஜியான்சோங்கும் யாங் கீயும் வந்து சேர்ந்தார்கள். குடிலின் முன்பாக ஓநாய்க் குழியைப் பார்த்ததும் அவர்கள் ஆச்சரியமடைந்தார்கள். ‘‘பகல் முழுவதும் அங்கு ஆடு மேய்த்தபோது, நாங்கள் வாடி வதங்கி, தாகத்தில் தவித்தோம். இந்தக் கோடையைக் கடந்து ஓநாய் தபபிப் பிழைப்பது கஷ்டம் என்று அப்போது எனக்குத் தோன்றியது. ஆனால் நான் நினைத்ததை விடவும் இது பெரிய சாமர்த்தியசாலிதான்’’ என்றான் யாங்.

‘‘இனி நாம் இதை மிகக் கவனமாகப் பார்த்துக்கொள்ள வேண்டும்’’ என்றான் காவோ. ‘‘சங்கிலி, கம்பம், அதன் கழுத்துப் பட்டி ஆகியவற்றை நாம் தினசரி

பரிசோதிக்க வேண்டியது அவசியம். ஒரு மோசமான கட்டத்தில் இது நமக்குப் பெரிய நெருக்கடியை ஏற்படுத்திவிடலாம். மேய்ப்பர்களும் மற்ற மாணவர் களும் நம்மைப் பார்த்துப் பரிகசிப்பதற்காகக் காத்துக் கொண்டிருக்கிறார்கள்.''

வாத்து முட்டைப் பொரியல் அடங்கிய வறுத்த ரொட்டியில் மூன்று பேருமே ஓநாய்க்குட்டிக்கென்று ஒரு பகுதியை ஒதுக்கினர். உணவு நேரமென யாங் அறிவித்ததும், ஓநாய்க்குட்டி மேல் தளத்துக்குப் படுவேகமாக ஓடிவந்தது. உணவைத் தன்னோடு எடுத்துக்கொண்டு மீண்டும் உள்ளே சென்றுவிட்டது. அந்த இடம், அதன் பிரத்தியேக இடம். மற்ற எவருக்கும் அனுமதி இல்லாதது.

நாள் முழுவதும் தன் போக்கில் வெளியில் திரிந்த எர்லாங் வீடு திரும்பியது. அதன் வயிறு உப்பியிருந்தது; அதன் வாய் எண்ணெய்க் கொழுப்பின் பிசுபிசுப்போடு காணப்பட்டது. அது எங்கோ எதையோ வேட்டையாடி இருக்கிறதென்பது நிச்சயம். எல்லோவும், யிர்ரும், நாய்க்குட்டிகளும் நீண்ட நாட்களாக இறைச்சியை ருசித்திருக்கவில்லை என்பதால், எர்லாங்கை நோக்கி ஓடி, அதன் நீண்ட மூக்கில் ஒட்டியிருந்த எண்ணெய்க் கொழுப்பை நக்கின.

எர்லாங் வந்துவிட்ட சத்தத்தைக் கேட்டு, ஓநாய்க்குட்டியும் தன் குகையை விட்டு வெளியில் வந்தது. அதை நோக்கி எர்லாங் சென்றதும், ஓநாய்க்குட்டியும் அதன் எண்ணெய்ப் பிசுக்கான மூக்கை நக்கியது. தரையில் இருந்த குழியைப் பார்த்த எர்லாங், ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்து, அதைப் பல முறை சுற்றிச் சுற்றி வந்தது. குழியின் முன்பாக உட்கார்ந்துகொண்டு, உள்ளே மூக்கை நுழைத்து முகர்ந்து பார்த்தது. ஓநாய்க்குட்டி, அதனுடைய மாற்றுத் தந்தையின் முதுகில் தாவியது; அதன்மீது உருண்டும், குதித்தும், குட்டிக்கரணம் அடித்தும் சந்தோஷமாக விளையாடியது. காட்டுத்தனமான வீர்யம் பீறிட்டுக் கிளம்பியதில், அதன் கழுத்துக் காயத்தை அது முற்றிலுமாக மறந்துவிட்டிருந்தது.

சூரிய அஸ்தமனத்தை அடுத்து, வெப்பக் காற்று தணிந்து குளிர்ந்த காற்று வீசியது. யாங் கீ, தன் மேலங்கியை அணிந்து கொண்டு, தன்னுடைய மந்தையைப் பார்த்துவரப் போனான். ஜென்னும் துணைக்குச் சென்றான். கோடை காலத்தில் ஆடுகள் இரவுகளைப் பட்டிகளில் கழிப்பதில்லை; மாறாகக் குடில்களுக்குப் பக்கத்திலேயே இருந்துகொள்ளும். அதனால் கோடைகால இரவு நேரக் கண்காணிப் பானது சிரமமானதாகவும்

அபாயகரமானதாகவும் இருக்கும். தீவிர கண்காணிப்பு அத்தியாவசியம். முகாமில் ஒரு ஓநாய்க்குட்டி இருப்பதை ஏதேனும் ஒரு ஓநாய்க் கூட்டம் கண்டுபிடித்துவிடும் அபாயம் வேறு இப்போது சேர்ந்துகொண்டிருக்கிறது. அப்படி அவை கண்டறிந்துவிட்டால், நிச்சயம் பழி வாங்காமல் விடாது.

பின்னிரவில்தான் ஓநாய்க்குட்டியின் நாள் ஆரம்பமாகும். அதனுடைய பட்டியில் அது ஓடிக்கொண்டிருக்கும். சங்கிலியின் சத்தம் கேட்டபடியிருக்கும். ஜென்னும் யாங்கும் பட்டியின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டு, ஓநாய்க்குட்டி ஓடுவதை ரசித்துக்கொண்டிருந்தார்கள். இருட்டில் அதன் மரகதப் பச்சைக் கண்கள் மின்னின.

அந்த நாளில் நடந்தவற்றை ஜென், யாங்கிடம் தெரியப் படுத்தினான். ‘‘எப்படியாவது நாம் கொஞ்சம் இறைச்சியைக் கைப்பற்றியாக வேண்டும். அது இல்லாமல் ஓநாய்க்குட்டி பெரிதாகவும் வலுவாகவும் வளர முடியாது. சமீப நாட்களாக எர்லாங் இங்கு அதிகமாக இருப்பதில்லை. அதனால் நிலைமை கொஞ்சம் பயப்படும்படியாகத்தான் இருக்கிறது.’’

‘‘இன்று மதியம் மலையில் தீயில் வாட்டப்பட்ட மர்மோட்டை டோர்ஜி தயவில் நான் சாப்பிட்டேன்’’ என்றான் யாங். ‘‘அவனால் அவற்றைக் கண்ணி வைத்து நிறைய பிடிக்க முடிந்தால், ஓநாய்க்குட்டிக்காக ஒன்றை நாம் கேட்கலாம். ஆனால் பிரச்சனை என்னவென்றால், மேய்ப்பர்களும் மந்தைகளும் அங்கு திரிவதால், அவை கண்ணிக்குள் சிக்காமல் பதுங்கிவிடுகின்றன.’’

ஜென் பதற்றத்தாடு காணப்பட்டான். ‘‘இரவில் ஓநாய்க் கூட்டம் வந்து நம் ஆடுகளைக் கொன்று குவிக்குமென்று எனக்குக் கவலையாக இருக்கிறது. ஒரு தாய் ஓநாயைவிட ஆபத்தான பெண்ணை வேறெங்கும் காண முடியாது. பிறந்த குட்டிகளைப் பறிகொடுத்த அந்த ஓநாய், வஞ்சம் தீர்க்கும் வெறியோடு அலைந்துகொண்டிருக்கும் என்பதில் சந்தேகமில்லை. அது கூட்டத்தோடு வந்து நம் மந்தைகளின் மீது கொலை வெறித் தாக்குதல் நடத்தி, சிலவற்றைக் கொன்றுவிட்டால், நம்மைத் துளைத்தெடுத்து விடுவார்கள்.

யாங் கீ பெருமூச்சு விட்டான். ‘‘பெண் ஓநாய்கள் நிச்சயம் வருமென்று மேய்ப்பர்கள் எல்லோருமே சொல்கிறார்கள். ஓலோன்புலாக்கில் இந்த வருடம் டஜன் கணக்கில் குகைகளைச் சூறையாடி இருக்கிறோம். குட்டிகளை இழந்த

தாய்கள் பழிவாங்கும் சந்தர்ப்பத்துக்காகக் காத்துக் கொண்டிருக்கும். இந்த ஓநாய்க் குட்டியைக் கொன்றுவிட வேண்டுமென்பதில் எல்லா மேய்ப்பர்களுமே ஒன்றுபட்டு இருக்கிறார்கள். பிற குழுக்களிலுள்ள எல்லா மாணவர்களும் இதை வைத்துக்கொண்டிருப்பதை எதிர்க்கிறார்கள். அவர்களில் ஒருவனோடு இன்று நான் சண்டைக்குப் போகுமளவு ஆகிவிட்டது. ஏதாவது விபரீதமாக நடந்தால், எல்லா மாணவர்களுக்குமே பிரச்சனைதான் என்று அவர்கள் சொல்கிறார்கள். எல்லாப் பக்கங்களிலிருந்தும் நமக்கு அடி விழுந்துகொண்டிருக்கிறது. நாம் பேசாமல் அதைப் போக விட்டுவிடலாம்; அது சங்கிலியை அறுத்துவிட்டு ஓடிப் போய்விட்டதாகச் சொல்லிவிடலாம். நீ என்ன நினைக்கிறாய்? நம்முடைய பிரச்சனை அதோடு தீர்ந்துவிடும்.'' யாங் ஓநாய்க்குட்டியை எடுத்து வைத்துக்கொண்டு, அதன் தலையைத் தடவிக் கொடுத்தான். ''ஆனால் இதை விட்டு விடுவதை நான் வெறுக்கிறேன். நான் என்னுடைய குட்டித் தம்பியிடம்கூட இவ்வளவு நெருக்கமாக இருந்ததில்லை.''

ஜென் பல்லைக் கடித்துக்கொண்டு சொன்னான். ''சீனர்களாகிய நாம், ஓநாய்க்கு முன்னாலும் புலிக்குப் பின்னாலும் பயப்படுபவர்கள். நாம் ஓநாய்க்குகைக்குள் சென்று, இந்தக் குட்டியை எடுத்து வந்திருப்பதால் நாம் இதைப் பாதியில் கைவிட முடியாது. நாம் இதை நல்லபடியாக வளர்க்க வேண்டுமென்பது தான் இப்போது முக்கியம்.''

யாங் உடனடியாகப் பதில் அளித்தான். ''பொறுப்பு பற்றியதல்ல என்னுடைய கவலை. ஒரு கைதியைப் போல், இதை நாள் முழுவதும் சங்கிலியில் கட்டிப் போட்டிருப்பதைப் பார்க்கும்போது மனம் பதறுகிறது. ஓநாய்கள் சுதந்திரம் வேண்டு பவை; ஆனால் முழுநேரமும் நாம் இதை இரும்புச் சங்கிலியில் பிணைத்து வைத்திருக்கிறோம். அது உனக்குக் கவலை அளிக்க வில்லையா? நான் ஓநாய் குலச்சின்ன முகாமில் என்னை முழுமை யாக ஒப்படைத்திருக்கிறேன். நீ இந்த ஓநாய்க்குட்டியை வளர்ப்பதை அப்பா ஏன் விரும்பவில்லை என்பதை என்னால் புரிந்துகொள்ள முடிகிறது. அவர் இச்செயலை தெய்வ நிந்தனை யாகக் கருதுகிறார்.''

ஜென்னுடைய மனதில் மோதல் நிகழ்ந்தபோதிலும், அதை வெளிக்காட்டிக் கொள்ளாமல் அவன் பேசினான். ''அதை சுதந்திரமாக விட்டுவிட வேண்டுமென நான் நினைத்திருக்க மாட்டேன் என்றா நீ நினைக்கிறாய்? ஆனால்

இப்போதைக்கு இல்லை. நான் இன்னும் பல விசயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியம். இந்த ஓநாய்க்குட்டியை விடுவித்துவிட்டால், ஒரு சுதந்திர ஓநாய் உருவாகும். ஆனால், ஒருநாள் மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களே இல்லாமல் போய்விட்டால், அது என்ன விதமான ஒரு சுதந்திரம்? எவரையும்விட நீதான் தவறு செய்து விட்டதாக வருந்துவாய்.''

யாங் ஒருகணம் அதுபற்றி யோசித்தான். சிறிது தயக்கத்தோடு, சமரசம் செய்துகொள்ள முடிவெடுத்தான். ''சரி, நாம் இதை வளர்க்கலாம்'' என்றான்.

ஜென் குரலைத் தணித்து, ''என்னை விடவும் உன்னிடம்தான் ஓநாய்த் தன்மை அதிகம் உள்ளது. நீ ஒரு இக்கட்டை எதிர்கொள்ளப் பயப்படுவதே இல்லை. நீ உண்மையிலேயே ஒரு மங்கோலியப் பெண்ணை மணந்துகொள்ளும் திட்டத்தோடு இருக்கிறாயா? அவர்களை சமாளிப்பது, ஓநாய்களை விடவும் கடினமானது என்று கேள்விப்பட்டிருக்கிறேன்.''

அவனை சும்மா இருக்கும்படி கையசைத்தான் யாங். ''யாரிடமும் சொல்லி விடாதே'' என்று கெஞ்சினான். ''நீ அப்படிச் செய்தால், ஏதாவது ஒரு மங்கோலியப் பெண் ஓநாயைப் போல என் பின்னால் வர ஆரம்பித்துவிடுவாள். சண்டையிட்டு அவளைத் துரத்த என்னால் முடியாது. முதலில், எனக்கென ஒரு குடிலை நான் அடைய வேண்டும்.''

இரைச்சலாகவும் அலங்கோலமாகவும் இருந்த வேலைத்தளத்துக்கு முதுகைக் காட்டியபடி, யாங் கீ அமைதியாக அன்ன ஏரியைப் பார்த்துக்கொண்டிருந்தான். அவனுக்குப் பின்னால் நடந்து கொண்டிருந்த வேலைகளைப் பார்க்க அவன் மனம் இடம் கொடுக்கவில்லை. ஒரு அன்னப் பறவையைக் கொன்று பாவோ சுங்காய் சாப்பிட்டதிலிருந்து அவனுடைய கனவுகள் அவனை இம்சித்தன. அக்கனவுகளில் ஏரியிலிருந்து ரத்தம் மட்டுமே வெளிவந்து கொண்டிருந்தது; அதில் தண்ணீரானது நீலத்திலிருந்து சிவப்புக்கு மாறிவிட்டிருந்தது.

உள் மங்கோலியாவின் விவசாயப் பகுதிகளிலிருந்து வந்திருந்த, மூன்று டஜனை ஒட்டிய தொழிலாளர்கள் புதிய மேய்ச்சல் இடத்தில் அடித்தளங்கள் அமைத்துக்கொண்டிருந்தார்கள். வலுவான செங்கல் வீடுகளை அவர்கள் மின்னல் வேகத்தில் கட்டிக்கொண்டிருந்தார்கள். இவர்கள் கால்நடை வளர்ப்பு நிலங்களில், முழு நேரமாகவோ அல்லது குறிப்பிட்ட காலங்களிலோ பல வருடங்களாக வேலை செய்து வருபவர்கள். இவர்களுடைய பாட்டன்மார்கள் மேய்ப்பர்களாக இருந்தவர்கள். இவர்களுடைய பெற்றோர்கள் பாதி நேரம் விவசாயமும் மீதி நேரம் மேய்ச்சலும் பார்த்தவர்கள். ஹேன் சீனர்களோடு மங்கோலியர்கள் சேர்ந்து வாழ்ந்த பகுதிகளைச் சேர்ந்தவர்கள் இவர்கள். பெருமளவில் அவர்களுடைய மேய்ச்சல் நிலம் மோசமடைந்து, இவர்கள் வாழ வழியில்லாமல் போனது. ஆக, இடம்பெயர்ந்து செல்லும் பறவை களைப் போல, இவர்கள் இங்கு வந்து சேர்ந்தனர். மங்கோலிய மற்றும் சீன மொழிகளில் சரளமாகப் பேசக்கூடிய இவர்கள், உழவுத் தொழிலிலும் பயிரிடுவதிலும் தேர்ச்சி பெற்றவர்கள். கீழ் தெற்கில் சாகுபடி நிலப் பகுதிகளிலுள்ள ஹேன் சீனர்களாடு ஒப்பிடும்போது, மேய்ச்சல் நிலம் பற்றி நெருக்கமாக அறிந்திருப்பவர்கள். மேலும் அந்தப் பகுதியில் கிடைக்கும் பொருட்களை எப்படிப் பயன்படுத்திக்கொள்வது என்று அறிந்து வைத்திருப் பதோடு, விவசாயத்திற்கான வசதிகளைக் கட்டித் தருவதில் தனித்துவமான திறமை கொண்டவர்கள்.

மிகக் குறுகிய காலத்துக்குள் அங்கு நிறைய வேலைகள் முடிக்க வேண்டியிருந்தது. தற்காலிகப் பொருள் சேமிப்புக் கிடங்கையும், மருந்துக்

கரைசலிட்ட அமிழ் தொட்டியையும் மழைக் காலத்துக்கு முன்பாக முடித்துவிட வேண்டுமென்று பாவோ சுங்காய் உத்தரவிட்டிருந்தார்.

சில நாட்களுக்குள், மேலும் இரண்டு டஜன் தொழிலாளர்கள் டிரக்குகளில் வந்து சேர்ந்தார்கள். கட்டுமானப் பணி முழு வீச்சில் நடந்துகொண்டிருந்தது. வண்ணமயமான மூட்டை முடிச்சுகளும், சாமான்களும் டிரக்குகளில் நிறைந்திருந்தன. தொழிலாளர்கள், மனைவி குழந்தைகளையும் கூட்டி வந்திருந்தனர். வடகிழக்கு சீனாவின் வீட்டு வாத்துகளையும் கூடக் கொண்டு வந்திருந்தனர்.

மேய்ச்சல் நிலத்தில் இனி அவர்கள் காலூன்ற முடிவு செய்து விட்டதைப் போலிருந்தது. மனம் உடைந்த நிலையில் யாங், தன் அதிருப்தியை ஜென்னிடம் வெளிப்படுத்தினான். ‘‘கால்நடை வளர்ப்புக்கான புராதன மேய்ச்சல் நிலம், ஓர் அழுக்கான சிறிய விவசாய கிராமமாக விரைவிலேயே மாறப்போகிறது. அன்ன ஏரியானது, வீட்டு வாத்துகளின் குட்டையாக மாறிவிடும்.’’

ஜென் முகச் சுளிப்போடு பதிலளித்தான். ‘‘அளவுக்கு மீறிய மக்கள் தொகை கொண்ட ஓர் இனத்தின் மிக முக்கியமான பிரச்சனை, உயிர் வாழ்ந்திருப்பதுதான். அழகியல் அணுக்களுக்கு உணவூட்டக்கூடிய சத்துகள் ஏதும் அங்கு மிச்சமிருப்பதில்லை.’’

பாவோ சுங்காயின் சொந்த ஊரிலிருந்தே தொழிலாளர்கள் வந்திருப்பதாக யாங் கேள்விப்பட்டான். பாதி கிராமத்தை மேய்ச்சல் நிலத்துக்குக் கொண்டு வந்துவிடும் நம்பிக்கையோடு அவர் இருப்பதாகவும் தெரிந்தது.

சில நாட்களுக்குப் பிறகு, பல தொழிலாளர்கள், அவர் களுடைய வீடுகளுக்குப் பக்கத்தில் நிலத்தை உழுது கொண்டிருப் பதை யாங் பார்த்தான். பின்னர் ஒரு பெரிய காய்கறித் தோட்டம் உருவாகியது. வெகு சில நாட்களிலேயே காய்கள் முளைக்கத் தொடங்கின. முட்டைக்கோஸ், முள்ளங்கி, மஞ்சள் முலாம், கிழங்குகள், பச்சை வெங்காயம் மற்றும் பூண்டு. மேய்ச்சல் நிலத்தில் கிடைக்காத சீனக் காய்கறிகளுக்காக பீஜிங் மாணவர்கள் ஏற்கெனவே வரிசையில் வந்துவிட்டனர்.

கட்டுமானப் பணி நடக்கும் இடத்தில், தன்னுடைய நேரம் முழுவதையும் செலவிட்டார் பாவோ சுங்காய். புதிய மேய்ச்சல் நிலமானது, பயிர் நிலமாக மாற்றப்படுவதற்குரிய சாத்தியமிக்கதென்று ஏற்கெனவே அறிந்திருந்ததால், அடுத்த வருடம் நான்கு குழுமங்களையும் இங்கு கொண்டுவர அவர் திட்டமிட்டிருந்தார்.

கோடை காலத்துக்கான ஒரே மேய்ச்சல் பிரதேசமாக இதை மாற்றிக்/ கொண்டு, பழைய மேய்ச்சல்நிலக் கருமண்ணை விவசாயத்துக்குப் பயன்படுத்துவதென அவர் முடிவு செய்திருந்தார். அதன் மூலம் இறைச்சி, தானியம் இரண்டுமே அவர்களுக்குக் கிடைக்கும். இந்த சொர்க்க பூமிக்கு அவருடைய எல்லா நண்பர்களையும் குடும்பத்தாரையும் கொண்டு வந்துவிட முடியும். பின், 'பாவோ குடும்ப விவசாய கால்நடை நிலம்' என ஒன்றை அமைத்துவிடலாம். கட்டுமானப் பணி முன்னேற்றத்தில் பாவோ முன்வைத்த கடினமான வேண்டுகோளைக்கூட தொழிலாளர்கள் உடனடியாக ஏற்றுக்கொண்டதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை.

பில்ஜியும் மற்ற மூத்த மேய்ப்பர்களும் தினசரி தொழிலாளர் களிடம், அவர்களுடைய காய்கறித் தோட்டத்தைச் சுற்றிக் கிடக்கும் பள்ளங்களை நிரப்பும்படி சொல்லி சண்டை போட்டனர். இரவில் அப்பள்ளங்களில் குதிரைகள் அடிக்கடி விழுந்துகொண்டிருந்தன. பள்ளங்கள் நிரப்பப்பட்டன; ஆனால் இடுப்பளவு சுவர் எழுப்பப் பட்டு விட்டிருந்தது. உல்ஜீ, கலக்கமான பார்வையுடன் சுற்றிலும் நடந்தார். புதிய மேய்ச்சல் நிலத்தை அவர் தொடங்கியதற்காக வேதனைப்பட்டார்.

பரபரப்பான பணியிடத்துக்கு முதுகு காட்டி நின்றிருந்த யாங், அவனுக்கு முன்பாக விரிந்திருந்த காட்சியில் கவனம் செலுத்தினான். அன்ன ஏரியின் அழகை வியந்து கொண்டாடியபடி வெகு நேரம் நின்றிருந்தான். சமீப நாட்களாக, ஏரியின் மீது அவன் கொண்டிருந்த கவர்ச்சி அபரிமிதமாக வளர்ந்துகொண்டிருந்தது;

ஜென் சென் ஓநாய்கள் மீது கொண்டிருந்த கவர்ச்சியை விடவும் கூடுதலாக அது காணப்பட்டது. இந்த வருடம் முடிவதற்குள், எதிர்க் கரையிலும் புல் சரிவுகளிலும் மற்ற மூன்று குழுமத்தினரின் கால்நடைகளின் கூட்டம் கூடிவிடும். அதைவிடவும் மோசமாக, பெரிய, அருவெறுப்பான பணி இடங்கள்

தொழிலாளர்களால் எழுப்பப்பட்டிருக்கும். கரையை ஒட்டிய நாணல்கள் வெட்டப்பட்டு விடும்போது, அன்னப் பறவைகள், தங்களுடைய பச்சைத் திரைப் பாதுகாப்பை இழந்துவிட்டிருக்கும்.

ஏரியை நோக்கி யாங் சவாரி செய்தான். அங்கு இள அன்னங்களேதும் நீந்துகின்றனவா என்று பார்ப்பதற்காகச் சென்றான். பெண் அன்னங்கள் தங்கள் குஞ்சுகளைப் பொறிக்கும் காலமிது. அதிர்ஷ்டவசமாக, ஏரிக்குப் பக்கத்தில் ஒரு கால்நடையும் இல்லை. ஓடையிலிருந்து ஓடிவரும் சுத்தமான நீர், தேங்கியிருந்த கசடுகளை அகற்றிவிடுவதால், ஏரி நீர் பளிங்குபோல் தெளிந் திருந்தது. பறவைகள் அமைதியாகக¢ காலம் கழிக்குமென அவன் நம்பினான்.

ஆனால் திடீரென நீர்ப் பறவைகளின் கூட்டம் மேலெழுந்தது. அதிர்ச்சியில் வெளிப்பட்ட அதன் கூக்குரல்கள் பின்தொடர்ந்தன. காட்டு வாத்துகளும் குள்ள வாத்துகளும் தென் கிழக்குப் பகுதியை நோக்கி மிதந்து சென்றன; அன்னப் பறவைகள் சட்டென மேலெழுந்து, வடக்கிலுள்ள சதுப்பு நிலத்தை நோக்கிப் பறந்தன. யாங் தன்னுடைய தொலைநோக்கியை எடுத்து, நாணல் புதருக்குள் துழாவினான். அங்கு யாரோ ஒருவர் அன்னப் பறவைகளை வேட்டையாடுவதைப் பார்த்துக் கவலை அடைந்தான்.

ஏரியின் நீர்த்தளம் பல நிமிடங்களுக்கு சலனமற்று அப்படியே இருந்தது. அதன்பிறகு, ஜப்பானுடனான யுத்தத்தின் போது பயன்படுத்தப்பட்டதைப் போன்ற ஒரு கட்டுமரம், நாணல்களினால் உருமாற்றம் செய்யப்பட்டு, மிதந்து சென்றதைப் பார்த்தான். அதில் இருந்த இருவரும், தங்களுடைய தொப்பிகளைப் பச்சை நாணல்களினால் மாற்றி இருந்தார்கள். நாணல்களை மேலாடை போலத் தொங்கவும் விட்டிருந்தார்கள். வெட்டப்பட்ட நாணல் தண்டுகளால், கட்டுமரத்தின் வெளிப்பரப்பு மூடப்பட்டிருந்ததில் நாணல் கொத்து நகர்ந்து செல்வதைப் போன்றிருந்தது. மிகவும் கவனமாகப் பரிசீலித்தால்தான் அது நாணல் இல்லை, கட்டுமரம் என்பது தெரியவரும். அவர்கள் மண்வெட்டியைத் துடுப்பு போலப் பயன்படுத்திக் கரையை நோக்கி நகர்ந்து வந்துகொண்டிருந்தார்கள்.

கட்டுமரம் கரையை நெருங்கியபோது அவர்கள் யாரென்பது யாங்கிற்குத் தெரிந்தது. அவர்கள் ஓல்டு வாங் மற்றும் அவனுடைய ஒன்றுவிட்ட சகோதரனான எர்சுன். அவர்கள் கட்டுமரத்தை மூடியிருந்த பச்சை

நாணல்களை அகற்றியபோது, வெவ்வேறு அளவிலான பறவை முட்டைகள் நிரம்பிய பாத்திரம் வெளிப்/ பட்டது. சிறிய முலாம்பழ அளவுக்கு இரண்டு முட்டைகளும் அதில் காணப்பட்டன. அவற்றின் ஓடுகள் மிருதுவாகவும் பளபளப்/ பாகவும் இருந்தன. யாங்கின் இதயம் நொறுங்கியது. அன்ன முட்டைகள்! மேலும், ரத்தக் கறை படிந்த, பளீர் வெண்சிறகுகளுடன் ஓர் அன்னம் அரைகுறையாகத் தெரிந்தது. யாங்கிற்கு ரத்தம் தலைக்கேறியது. அவன் ஓடிச் சென்றான். தன்னுடைய கோபத்தைக் கட்டுப்படுத்த வேண்டுமென்பதை அவன் அறிந்திருந்தான்.

ஆனாலும் முடியவில்லை. அன்னம் இறந்துவிட்டது. இனி ஒன்றும் செய்ய முடியாது. ஆனால் முட்டைகளைக் காப்பாற்ற அவன் முயற்சிக்கலாம்.

கட்டுமரம் கரையை அடைந்ததும், அந்த இடத்துக்கு விரைந்தான். ‘‘நீங்கள் அன்னங்களைக் கொன்று, அவற்றின் முட்டைகளை எடுக்கலாமென்று உங்களுக்கு யார் சொன்னது? என்னோடு வந்து, குழுமத்தின் தலைமை அலுவலகத்தில் விளக்கம் கொடுங்கள்.’’

குட்டையாகவும் பருத்தும் கரும்தாடியுடனும், மங்கோலிய அடையாளமோ ஹேன் அடையாளமோ இல்லாமல் தென்பட்ட ஓல்டு வாங் மிகுந்த சாமர்த்தியசாலி. ‘‘இயக்குனர் பாவோதான் சொன்னார். உனக்கென்ன பிரச்சனை? இப்படியான ஒரு வழியில் சாப்பிடுவதன் மூலம், உங்களுடைய பல ஆடு மாடுகளைக் கட்டுமானக் குழுவினர் காப்பாற்றுகிறார்கள், புரிகிறதா?’’

‘‘அருவருப்பான தேரைகள், அன்னங்களைச் சாப்பிட ஆசைப்படுமென்பது எல்லா சீனர்களுக்குமே தெரியும். நீ சீனனா, இல்லையா?’’

ஓல்டு வாங் பரிகாசமாகச் சிரித்தான். ‘‘அன்னங்கள் பறந்து ரஷ்யர்களிடம் போய்ச் சேர, எந்தவொரு சீனனும் அனுமதிக்க மாட்டான். நீ எப்படி? அன்னங்களை அவர்களுக்கு வழங்க நீ விரும்புகிறாயா?’’

இடம் பெயர்ந்து செல்லும் இவர்கள், விவாதிப்பதில் கெட்டிக்காரர்கள் என்று யாங் கேள்விப்பட்டிருக்கிறான். அவனுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

அன்னத்தைக் கரைமீது போட்டபோது, அதன் மார்பில் ஓர் அம்பு பாய்ந்திருப்பதை யாங் பார்த்தான். கனத்த மூங்கிலினால் செய்யப்பட்ட பெரிய

வில்லும், ஒரு அம்பாரம் நிறைய அம்புகளும் கட்டுமரத்தில் கிடந்தன. குண்டுச் சத்தம் கேட்காததன் காரணம் இப்போதுதான் அவனுக்குப் புரிந்தது. வில்லும் அம்பும், கைத் துப்பாக்கியை விட ஆபத்தான ஆயுதமென்பதை அவன் உணர்ந்தான். மற்ற பறவைகள் அதிர்ச்சியடைந்து பறந்து போகாமல் இருப்பதால், பலவற்றை சுலபமாகக் கொல்ல முடியும். அவர்களை சுலபமாகக் கருதக்கூடாதென்பதை உணர்ந்த யாங், பிடிவாதத்தை விட தந்திரமே அவர்களைத் தடுத்து நிறுத்துமென்ற முடிவுக்கு வந்தான்.

கோபத்தைக் கட்டுப்படுத்திக்கொண்டதோடு, தன்னுடைய முக பாவத்தையும் மாற்றிக்கொண்டு வில்லை எடுத்துப் பார்த்தான்.

''என்ன ஒரு அற்புதமான வில். உண்மையிலேயே அற்புதம், அருமை. அப்படியே கிண்ணென்று இருக்கிறது. இதைத்தான் நீங்கள் பயன்படுத்தினீர்களா?''

யாங்கின் மாற்றத்தைக் கவனித்த ஓல்டு வாங் தற்பெருமையோடு பேசினான். ''பின் வேறென்ன? இது மிகவும் வலுவானது. நானே செய்தது. இதனால் சுலபமாக ஒரு ஆளைக் கொன்றுவிட முடியும்.''

யாங் ஒரு அம்பை வெளியில் எடுத்தான். ''நான் ஒரு முயற்சி செய்து பார்க்கலாமா?''

நீரின் விளிம்பிலிருந்த சிறு புல்மேட்டில் உட்கார்ந்து கொண்டான் ஓல்டு வாங். பைப்பைப் பற்ற வைத்துப் புகைத்த படியே, ''அம்புகளைச் செய்ய நிறைய நேரமெடுக்கும். வேட்டையாடுவதற்கு நான் அவற்றைப் பத்திரமாக வைத்துக்கொள்ள வேண்டியது அவசியம். நீ வேண்டுமானால் ஒரே ஒருமுறை விடலாம். ஆனால் அதற்கு மேல் கிடையாது.''

யாங் கீ வில்லை ஒரு கணம் நன்றாகப் பார்த்தான். கனத்த மூங்கிலினால் செய்யப்பட்டிருந்த அது, மூன்று விரல் அளவு அகலம் கொண்டிருந்தது. அம்பானது, வில்லோ மரக்கிளையி லிருந்து செதுக்கப்பட்டிருந்தது. அதன் ஒரு முனையில் காட்டு வாத்தின் இறகுகள் இருந்தன. அதன் கூர்முனை ஒரு தகர டப்பாவி லிருந்து செய்யப்பட்டிருந்ததைக் கண்டு யாங் ஆச்சரியப்பட்டான். யாங் அந்தக் கூர்முனையை விரலால் தொட்டுப் பார்த்தான். அது உறுதியாகவும், மிகுந்த கூர்மையோடும் இருந்தது.

வில்லானது மிக இறுக்கமாக இருந்ததால், நாணைப் பாதியளவு இழுக்க அவன் சிரமப்பட்டான். பிறகு அம்பை நாணோடு பொருத்தி, முப்பது அல்லது நாற்பதடி தொலைவில் இருந்த சிறு புல்மேட்டைக் குறி வைத்து அம்பை எய்தினான். அம்பின் நுனி அச்சிறு புல்மேட்டில் புதைந்தது. யாங் அங்கு ஓடிச் சென்று, புழுதியிலிருந்து அதைக் கவனமாக வெளியில் எடுத்தான். பிறகு அதை நன்றாகத் துடைத்துவிட்டுப் பார்த்தான். நுனி இப்போதும் அதே கூர்மையோடு காணப்பட்டது.

யாங் நடந்து ஓல்டு வாங்கிடம் சென்றான். ''நீ அன்னத்தின் மீது அம்பை எய்தபோது, எவ்வளவு தூரத்திலிருந்தாய்?''

''ஏழு அல்லது எட்டு காலடிகள் தொலைவுக்கு மேல் இருக்காது.''

''அன்னம் உன்னை ஒருபோதும் பார்க்கவில்லையா?''

ஓல்டு வாங், தன்னுடைய பைப்பிலிருந்து சாம்பலை வெளியில் தட்டினான்.

''நேற்று நான் நாணல் புதர்களுக்குள் போனபோது, கூட்டினைப் பார்த்தேன். இன்று காலை மிக சீக்கிரமாகவே நாங்கள் எழுந்துகொண்டோம். நாணல்களால் எங்களை மறைத்துக் கொண்டு, துடுப்பு போட்டு உள்ளே நுழைந்தோம். அதிர்ஷ்ட வசமாக, அப்போது மூடுபனியாக இருந்ததால் அன்னத்தால் எங்களைப் பார்க்க முடியவில்லை. கூடு, நம்மளவுக்கு உயரமாக இருந்தது. அதனுள்ளே முட்டைகளின் மீது அன்னம் உட்கார்ந் திருந்தது; ஆண் அன்னமானது, அதற்குப் பக்கத்தில் பாதுகாப்புக் காக நீந்தியபடி இருந்தது.

''நீங்கள் எதைக் கொன்றீர்கள், ஆணையா பெண்ணையா?''

''நாங்கள் கட்டுமரத்தில் மிகவும் தாழ்வாக இருக்க வேண்டியிருந்தது. அதனால் கூட்டுக்குள்ளிருந்த பெண்மீது அம்பெய்துவது சாத்தியமில்லாதிருந்தது. நாங்கள் ஆணுக்காகக் காத்திருந்தோம். அது எங்கள் பக்கம் மிதந்து வந்தபோது நான் அதைக் குறி வைத்தேன். அது மிகச் சரியாக இதயத்தைத் துளைத்தது. அது பலஹீனமாக சிறகுகளை அடித்துக்கொண்டிருந்து விட்டு இறந்துபோனது. கூட்டுக்கு வெளியே நடந்த அமளியைக் கேட்ட பெண் பறவை, வெளியேறிப் பறந்து மறைந்தது. அதன் பிறகு, நாங்கள் இந்த முட்டைகளை எடுத்துக்கொண்டோம்.''

இந்த இடம் பெயர்ந்தோரிடம் காணப்படும் உயிர் வாழ்வதற்கான திறனும், சர்வ நாசத்தில் ஈடுபடும் ஆற்றலும் கணிச மானது என்று யாங் நினைத்தான். அவர்களிடம் துப்பாக்கிகள் இல்லை என்பதால் வில்லும் அம்பும் செய்து கொண்டனர். அவர்களிடம் படகு இல்லை என்பதால் கட்டுமரம் செய்து கொண்டனர். எல்லாவற்றையும் விட, அவர்கள் தங்களை மறைத்துக் கொள்வதிலும் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள். முதல் முயற்சியிலேயே குறி தப்பாமல் அடிக்கிறார்கள். அவர்களுக்குத் துப்பாக்கிகளும், வெடிமருந்துகளும், டிராக்டரும் வழங்கப்பட்டால், அவர்கள் மேய்ச்சல் நிலத்தை என்னவாக மாற்றுவார்கள் என்று சொல்லத் தேவையில்லை. அவர்களுடைய முன்னோர்கள், மேய்ப்பர்கள்; ஆனால் அவர்கள் தோற்கடிக்கப்பட்ட பிறகு, மங்கோலிய மேய்ச்சல் நிலத்தின் எதிரிகளாக மாறிவிட்டார்கள்.

கட்டுமரத்தை சுத்தப்படுத்திவிட்டு, ஓய்வெடுப்பதற்காக எர்சுன் உடகார்ந்தான். மனதிலிருந்து அந்த இரண்டு முட்டைகளை யாங்கினால் நீக்க முடியவில்லை பெண் பறவை இன்னமும் உயிரோடு இருப்பதால், முட்டைகளை அந்தக் கூட்டில் திரும்பவும் சேர்ப்பித்துவிட்டால், குஞ்சுகள் பிறந்ததும், அவை தங்களின் தாயோடு சேர்ந்து, சைபீரியாவுக்குப் பறந்து சென்றுவிடுமென்று அவன் நம்பினான்.

யாங், செயற்கையாக ஒரு விரிந்த புன்னகை செய்தபடி, ஒல்டு வாங்கிடம், ‘‘நீ வல்லவனாக இருக்கிறாய். உன்னுடைய திறமைகளில் சிலவற்றை நீ எனக்கு என்றேனும் ஒருநாள் கற்றுக் கொடுப்பாய் என்று நம்புகிறேன்’’ என்று சொன்னான்.

ஓல்டு வாங் பெருமிதமாகப் புன்னகைத்தான். ‘‘நான் ஒன்றும் அந்த அளவு கெட்டிக்காரனில்லை. அதேசமயம், பறவைகள் மர்மோட்டுகள் மற்றும் ஓநாய்களை வேட்டையாடுவதில் அல்லது கண்ணிகள் வைப்பதில், மூலிகைகளைக் கண்டறிவதில், மஸ்ரூம் களைத் தோண்டியெடுப்பதில் என்னைவிடச் சிறந்தவர்களை அதிகமாகப் பார்க்க முடியாது. பீஜிங்கிலிருந்து வந்திருக்கும் மாணவர்களாகிய உங்களுக்கு இங்கு வீட்டுரிமைப் பதிவு கொடுத் திருக்கிறார்கள். வெளியாட்களாகிய எங்களுக்கும் அது கிடைக்கும் படி, ஏதாவது ஒரு சந்தர்ப்பத்தில் நீங்கள் பேசினால் நன்றாக இருக்கும்.

அப்படியானால்தான், உள்ளூர் மங்கோலியர்கள் எங்களைத் துரத்தியடிக்காமல் இருக்க முடியும். நீங்கள் சொன்னால் அவர்கள் கேட்பார்கள். நீ அதைச் செய்தால், நான் உனக்கு ஒன்றிரண்டு விசயங்களை சொல்லித் தருகிறேன். நான் சொல்லிக் கொடுப்பதை வைத்து, நீ ஒரு வருசத்துக்கு ஆயிரம் சம்பாதிக்க லாம் என நான் உறுதியளிக்கிறேன்.''

''நல்லது, இனிமேல் உன்னை குரு என்றே நான் கூப்பிடுவேன்.''

ஓல்டு வாங், யாங்கை நெருங்கி அவனை ஒட்டி இருந்தபடி, ''உங்களிடமும் மேய்ப்பர்களிடமும் ஆட்டு எண்ணெய் நிறைய இருப்பதாகக் கேள்விப்பட்டேன்'' என்றான். ''எங்களுக்குக் கொஞ்சம் தர முடியுமா? நாங்கள் நாற்பது அல்லது ஐம்பது பேர் முதுகு ஒடிய வேலை பார்க்கிறோம். ஆனால், நாங்கள் பறித்துக் கொண்டு வரும் காட்டுக் காய்களோடு சேர்த்துக்கொள்ள வேண்டிய தானியத்துக்குக் கறுப்புச் சந்தை விலை கொடுக்க வேண்டியிருக்கிறது. ஆனாலும் அவற்றோடு சேர்க்க ஒரு சொட்டு எண்ணெய்கூட எங்களிடம் இல்லை. ஆனால் அதை நீங்கள் சிம்னி விளக்குக்குப் பயன்படுத்துகிறீர்கள். என்ன ஒரு விரயம்! நீங்கள் அதை எங்களுக்கு நல்ல விலைக்குக் கொடுத்தாலென்ன.''

யாங் சிரித்தான். ''ஒரு பிரச்சனையுமில்லை. எங்களிடம் இரண்டு கொப்பரைத் தொட்டி எண்ணெய் இருக்கிறது... அந்த இரண்டு அன்னப் பறவை முட்டைகள் மீது எனக்கு விருப்பமிருக்கிறது. அரைத் தொட்டி எண்ணெய்க்கு அவற்றைப் பரிமாற்றம் செய்துகொள்ளலாமா?''

''அவை உன்னுடையவை... வைத்துக்கொள். நான் கொண்டுபோய் அவற்றை வறுத்து சாப்பிடப் போகிறேன், அவ்வளவுதான். அதற்குப் பதிலாக, ஐந்து அல்லது ஆறு வாத்து முட்டைகளை சாப்பிட்டால் போதும். நீ எடுத்துக்கொள்.''

யாங் உடனடியாகத் தன்னுடைய கோட்டைக் கழற்றி, அதில் இரண்டு முட்டைகளையும் சுற்றி வைத்துக்கொண்டான். ''நான் எண்ணையை நாளை உங்கள் ¢இடத்துக்குக் கொண்டுவந்து தருகிறேன்.''

''நான் உன்னை நம்புகிறேன்'' என்றான் ஓல்டு வாங். ''பீஜிங் மாணவர்களாகிய நீங்கள் சொன்ன சொல்லைக் காப்பாற்றுவீர்கள் என்பது

தெரியும்.''

யாங் சத்தமாக மூச்சு விட்டான். ''எனக்கு இன்னும் நேரமிருக்கிறது. உங்கள் கட்டுமரத்தைக் கொஞ்சம் இரவலாகத் தர முடியுமா? நான் போய் அந்தக் கூட்டைப் பார்க்க விரும்புகிறேன். அது உங்கள் அளவுக்கு உயரமாக இருந்ததென்பது ஆச்சரியமாக இருக்கிறது.''

ஓல்டு வாங், யாங்கின் குதிரையைப் பார்த்தான். ''உன்னுடைய குதிரைக்குப் பதிலாக என்னுடைய கட்டுமரத்தைத் தருகிறேன். நான் இந்த அன்னத்தை சீக்கிரம் அடுப்படிக்குக்கொண்டு செல்ல வேண்டும். ஒரு ஆட்டைப் போல் கனக்கிறது இது.''

யாங் எழுந்து நின்றான். ''சரி, சம்மதம்... கொஞ்சம் பொறுங்கள்... அந்தக் கூட்டை நீங்கள் எங்கு பார்த்தீர்கள் என்பதைச் சொல்லுங்கள்.''

வாங் எழுந்து நின்று, நாணல்கள் பக்கம் கை காட்டினான். ''கிழக்குப் பக்கமாகப் போ... அதன் கடைசிக்குப் போனதும் வடக்குப் பக்கமாகப் போ. நாணல்களுக்கிடையே கட்டுமரம் போன பாதை தெரியும். அதில் போய்க்கொண்டே இரு. உனக்குத் தெரிந்துவிடும்.''

பிறகு, மீண்டும் அவனைப் பார்த்து வாங் சொன்னான். ''நீ திரும்பி வந்ததும், கட்டுமரம் இப்போது எப்படி கட்டப்பட்டிருக்கிறதோ அதே மாதிரி கவனமாகக் கட்டிவிடு.''

வாங், இறந்த அன்னத்தின் உடலை சேணத்தின் குறுக்காகப் போட்டான். பிறகு, குதிரையின் மீதேறி, பறவைக்குப் பின்னால் உட்கார்ந்துகொண்டு, வேலை இடத்தை நோக்கி மெதுவாகச் சென்றான். அவனுக்குப் பின்னால் பெரிய பாத்திரத்தைத் தூக்கிக்கொண்டு எர்சுன் சென்றான்.

அவர்கள் வெகுதூரம் போகும்வரை பார்த்திருந்த யாங், முட்டைகள் சுற்றிய கோட்டை எடுத்துச் சென்று கட்டுமரத்தில் வைத்தான். பின்னர் கிழக்கு நோக்கி வெகு விரைவாகத் துடுப்பு போட்டான்.

யாங் மூச்சு வாங்கியபடியும், கைகள் நடுங்கியபடியும் கூட்டை நோக்கி, நிதானமின்றித் துடுப்பு போட்டுச் சென்று கொண்டிருந்தான். பாதையை மறித்து

மிதந்த நாணல்களை மண்வெட்டியால் அகற்றியபடி, மிக மெதுவாகச் சென்றான்.

கூட்டின் முன்பு அதிர்ச்சியில் உறைந்தவனாக அவன் நின்றிருந்தான். அது மிகப் பெரியதாகவும், மிக உயர்ந்தும், அவன் இதுவரை பார்த்திராத, ஒரு வினோதமான பறவைக் கூடாக இருந்தது. பெண் பறவை அங்கில்லை என்பதை உறுதி செய்து கொண்ட பிறகு, கூட்டை மிக நெருக்கமாக அவன் பரிசோதித்தான். இரண்டு கைகளாலும் அதைத் தள்ளினான். அது கொஞ்சமும் நகரவில்லை. அது நீரின் மீது கட்டப்பட்டிருந்த போதிலும், அதனுடைய வேர்கள் ஒரு ஆலமரத்தினுடையதைப் போல் ஆழமாக ஊன்றியிருந்தன.

ஏரிக்காற்று குளுமையாக இருந்தது. யாங் இரண்டு முட்டைகளையும் தன் நெஞ்சுக்கு நெருக்கமாக வைத்துக்கொண்டு, தன் உடல் சூட்டைக் கொஞ்சம் அவற்றுக்குத் தர முயற்சித்தான். அவன் கவனமாக மேலேறி, ஒரு கையால் அதன் விளிம்பைப் பிடித்துக்கொண்டு, ஒரு முட்டையை மெதுவாகக் கூட்டுக்குள் திரும்பவும் வைத்தான். அதே கவனத்தோடு அடுத்த முட்டையையும் உள்ளே வைத்தான். அதன்பிறகு, அவன் மறுபடியும் கட்டுமரத்தில் கால் வைத்தபோது, நிம்மதிப் பெருமூச்சு விட்டான்.

கடைசியாக, ஒரு வெண்புள்ளி வானில் தோன்றி வட்டமிட்டது. யாங் உடனடியாகக் கயிற்றை அவிழ்த்து தண்ணீர்ப் பாதையில் கட்டுமரத்தை அமைதியாகச் செலுத்தினான். படுக்கை வசமான நாணல்களை எல்லாம் நிமிர்த்தி விட்டபடியே சென்றான்.

போகும் வழியில் மிதந்து சென்ற நாணல் தண்டுகளையும் இலைகளையும் மண்வெட்டியால் அப்புறப்படுத்தினான். அந்தப் பகுதியில் புது நாணல்கள் முளைத்து, வெளிப்பட்டுவிட்ட கூட்டை மறைத்துவிடுமென்று நம்பினான்.

அவன் நாணல் பாதையைக் கடப்பதற்கு முன்பாக, ஒரு அன்னப் பறவை அவசரமாக இறங்கி வருவதை அவன் பார்த்தான். அவன் கரையை அடைந்தபோது, அந்த அன்னம் வானத்தில் இல்லை.

கட்டுமானப் பணியிட அடுப்படியை நோக்கி யாங் நடந்து சென்றான். அங்கு அவனிடம் எர்சுன், அவனுடைய மாமா ‘மூன்றாம் பிரிவு’க்கு நோய்வாய்ப்பட்ட

ஒரு எருதை வாங்கு வதற்காகச் சென்றிருப்பதாகத் தெரிவித்தான். அடுப்படிக்கு வெளியே இருந்த ஸ்டவ்வில் ஒரு பெரிய அண்டா இருந்தது. தரையைச் சுற்றிலும் ஈரமான இறகுகள் குவிந்து கிடந்தன. அண்டாவிலிருந்து ஆவி எழுந்தது. அதனுள் முஷ்டி அளவிலான அன்ன இறைச்சித் துண்டங்கள் வெந்துகொண்டிருந்தன. ஹேன் போல ஆடை உடுத்தியிருந்த ஒரு இளம் பெண், அதனுள் கை நிறைய மிளகுத் தூளைத் தூவினாள். வெட்டப்பட்ட பச்சை வெங்காயத்தையும், இடிக்கப்பட்ட இஞ்சியையும், பின் அரை பாட்டில் சோயா சாஸையும் அதனுள் ஊற்றினாள். கிறுகிறுப் படைந்த யாங், எருது வண்டியின்மீது சரிந்தான்.

‘‘உடனே அவரை உள்ளே கொண்டு வாருங்கள். ஒரு கோப்பை நிறைய இறைச்சிச் சாறை நாம் அவருக்குக் கொடுக்கலாம். சரியாகி விடும்’’ என்று எர்சுனிடம் சொன்னாள் அந்தப் பெண்மணி.

கையை அசைத்து மறுத்த யாங், எர்சுனை அப்பால் தள்ளினான். அந்த அண்டாவை உதைத்துத் தள்ள வேண்டுமென அவன் எண்ணினான். கடும் கோபத்தில் இருந்தான் அவன். அதிலிருந்து வரும் வாசனையை அவனால் சகித்துக்கொள்ள முடியவில்லை. பாவம் எர்சுன்; அவன் என்ன செய்வான் என்று நினைத்துக்கொண்டான்.

அவன் முகாமுக்குத் திரும்பி, ஜென் சென்னிடமும் காவோ ஜியான்சோங்கிடமும் அன்று நடந்தவற்றைச் சொன்னான்.

ஜென் எதுவும் பேச முடியாத அளவு கலங்கிப் போயிருந்தான். அவன் அமைதியடைய கொஞ்சம் நேரமானது. ‘‘கிழக்காசியாவில் ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, நாடோடி களுக்கும் விவசாயிகளுக்கும் இடையே நடந்து வந்திருப்பதின் சின்னஞ்சிறு துணுக்குதான் இப்போது நீ எங்களிடம் சொன்னது. நாடோடிகள், விவசாயிகளாக மாறினார்கள்; பின் அவர்களே மேய்ச்சல் நிலத்தை சிதைத்தார்கள்; இதன் தொடர்ச்சியாக, நாடோடிகள் மற்றும் விவசாயிகள் என இரு பிரிவினராலுமே ஊறு விளைவிக்கப்பட்டது.’’

‘‘இது ஏன் இப்படியாக இருக்க வேண்டும்?’’ யாங் கேட்டான். ‘‘இருவருமே ஒரே வேரிலிருந்து பிறந்தவர்கள்தானே, பின் ஏன் அவர்கள் தங்களுக்குள்

சண்டையிட்டுக்கொள்ள வேண்டும்? நாடோடிகளும் விவசாயிகளும் அவரவர் வாழ்க்கை முறையை ஏன் மேற்கொள்ளக்கூடாது?''

ஜென் அமைதியாகப் பதிலளித்தான். ''இது ஒரு சிறிய உலகம். எல்லோருமே நல்லதொரு வாழ்க்கையை விரும்புகிறார்கள். மனித வரலாறென்பது, வாழும் இடத்தைத் தக்க வைத்துக்கொள்ளவும், பாதுகாத்துக்கொள்ளவும் தொடர்ந்து நடைபெறும் சண்டை களினாலயே அடிப்படையில் அமைந்திருக்கிறது. சீனாவின் சிறு விவசாயிகள், அவர்கள் விவசாயம் செய்யும் சிறு நிலத்தைப் பராமரிப்பதற்கே, தங்கள் வாழ்வை அர்ப்பணித்திருக்கிறார்கள். அது, அவர்களைக் குறுகிய மனமும் பார்வையும் கொண்டவர் களாக ஆக்கியிருக்கிறது. நாம் இங்கு வந்திருக்காவிட்டால், நாமும் இந்த உலகத்தை ஒரு எலியின் சின்னஞ்சிறு கண்களால்தானே பார்த்திருப்போம்; மேலும் நாம்தான் எப்போதுமே சரி என்று வேறு நினைத்துக்கொண்டிருந்திருப்போம்.''

மறுநாள் அதிகாலையில், ஏரிப்பக்கமாய் துப்பாக்கிச் சத்தம் கேட்டு, யாங், ஜென், காவோ விழித்துக்கொண்டார்கள்.

கோபத்திலும் ஆத்திரத்திலும் தரையை உதைத்தார்கள். பைத்தியம் பிடித்ததைப் போல, யாங் தன்னுடைய குதிரைமீது தாவியேறி, ஏரியை நோக்கிப் பறந்தான். ஜென், தன்னுடைய ஆடுகளைக் கவனித்துக் கொள்ளும்படி கோம்புவிடம் கூறிவிட்டு, காவோவையும் ஏற்றிக்கொண்டு குதிரையில் விரைந்தான்.

கட்டுமரம் கரைக்கு வருவதற்காக அவர்கள் பதற்றத்தோடு காத்திருந்தார்கள். அவர்கள் பார்த்த காட்சி, குடும்பத்தைச் சேர்ந்த ஒருவர் இறந்துவிட்டதான உணர்வை அவர்களுக்கு ஏற்படுத்தியது. கட்டுமரத்தின்மீது இன்னொரு அன்னம் கிடந்தது; கூடவே பல காட்டு வாத்துகளும் குள்ள வாத்துகளும் கிடந்தன. அவற்றோடு ரத்தம் தோய்ந்த இரண்டு முட்டைகளும் இருந்தன. அதுதான் அந்தப் பெண் பறவையாக இருக்க வேண்டும். ஏரியில் நிகழ்ந்த பயங்கரத்தின்போது, அது சரியான நேரத்தில் பறந்து செல்லாமல், தன்னுடைய பொக்கிஷங்களான முட்டைகளைக் காப்பாற்றுவதற்காக அங்கேயே இருந்திருக்க வேண்டும். கடைசியில் அதன் துணையைப் போலவே அதன்

கதையும் முடிந்துபோனது. அதன் தலை குண்டுகளால் சிதறடிக்கப்பட்டிருந்தது. அந்த ஆணை விடவும் இது பார்க்கப் பரிதாபமாக இருந்தது.

பிறக்காத குஞ்சுகள் மீதிருந்தபடி அது இறந்திருக்க வேண்டும். தன்னுடைய ரத்தத்தின் மூலம், அது அவற்றுக்குக் கடைசியாக வெதுவெதுப்பைத் தந்திருக்கும்.

யாங்கின் முகம் கண்ணீரில் நனைந்தது. அவன் அந்த முட்டைகளைத் திரும்பவும் கொண்டுபோய் வைத்திருக்காவிட்டால், அந்தப் பெண் பறவையாவது தப்பிப் பிழைத்திருந்திருக்கும்.

அவன் யோசித்துக்கொண்டிருந்தபோது, தன்னுடைய குதிரையிலிருந்து குதித்திறங்கிய டாக்டர் பெங், ரத்தம் தோய்ந்த இரண்டு முட்டைகளையும் எடுத்து, அவற்றை ஒரு பையில் ஆட்டுக் கம்பளியோடு பொதித்துக்கொண்டு, திரும்பவும் குதிரை மீதேறிப் பறந்தார்.

விடுமுறைக் கொண்டாட்ட மனநிலையோடு, தொழிலாளர் கள், தாங்கள் கொள்ளையடித்தவற்றை எடுத்துக்கொண்டு அடுக்களைக்குத் திரும்பினார்கள். அவர்களைக் கோபத்தோடும் குழப்பத்தோடும் மேய்ப்பர்கள் பார்த்துக்கொண்டிருந்தார்கள். சீனர்களைப் போல உடுத்தியிருக்கும் இந்த மங்கோலியர்கள், மேய்ச்சல் நிலத்தின் புனிதமான பறவைகளிடம் ஏன் இவ்வளவு குரூரமாக நடந்துகொள்கிறார்களென்று அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. டெஞ்ஞர் வரை பறந்து செல்லக்கூடிய ஜீவன்களை அவர்களால் எப்படிக் கொல்லவும் சாப்பிடவும் முடிகிறது? தன் வாழ்நாளில் இப்படியான ஒன்றை ஒருபோதும் பார்த்திராத பில்ஜி, மிகவும் கோபமடைந்திருந்தார். அவருடைய குறுந்தாடி துடித்தது. புனிதப் பறவையை அவமதித்துப் படுகொலை செய்ததற்காகவும், தன்னுடைய மங்கோலிய வேர்களை மறந்து விட்டதற்காகவும் அவர் வாங்கை சபித்தார்.

மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் கோடை இரவுகள் பின் இலையுதிர் காலத்தைப் போன்றே குளிராக இருக்கும். இன்னும் சில நாட்களில் கொடூரமான கொசுக் கூட்டத்தின் தாக்குதல் தொடங்கிவிடும் என்பதால், நிம்மதியான சில நாட்களே எஞ்சியிருந்தன.

அப்போதுதான் கம்பளி மயிர்கள் நீக்கப்பட்டிருந்த ஆடுகள், ஒன்றோடொன்று ஒட்டியபடி, உணவை மீண்டும் அசை போட்டபடி படுத்துக் கிடந்தன. மெல்லிய அரைபடும் சப்தம் ஆட்டுக் கூட்டத்திடையே கவிந்திருந்தது. எர்லாங்கும் எல்லோவும் யிர் மற்றும் அவற்றின் மூன்று குட்டிகளோடு, காற்றை எச்சரிக்கையோடு முகர்ந்தபடி அவ்வப்போது சுற்றி வந்து கண்காணித்தன. ஜென் சென், ஃப்ளாஷ் லைட்டை எடுத்துக்கொண்டு, போர்வையளவுக்கு இருந்த ஒரு கம்பளித் துணியையும் இழுத்துக்கொண்டு, நாய்கள் காவல் புரிந்த இடத்துக்கு நடந்து சென்றான். அங்கு ஒரு நல்ல இடத்தைத் தேர்ந்தெடுத்து, அத்துணியைத் தரையில் விரித்தான். அவன் கால்கள் மடக்கி உட்கார்ந்தான். அவன் தோள்மீது கந்தலான, மெல்லிய கோட் கிடந்தது. அவன் படுத்துக்கொள்ளத் துணியவில்லை. புதிய மேய்ச்சல் நிலத்துக்கு வந்த பிறகு, நல்ல இரவுத் தூக்கமென்பது அபூர்வமாகிவிட்டது. ஆடுகளை மேய்ப்பதிலும், காவல் காப்பதிலும், கம்பளியை நீக்குவதிலும், ஓநாய்க்குட்டியைப் பராமரிப்பதிலும் நீண்ட பகல்கள் போய்விடுகின்றன; குறுகிய இரவுகளோ படிப்பதிலும், அவனுடைய இதழுக்கு எழுதுவதிலும், கூடவே கட்டாயமாகச் செய்ய வேண்டிய கண்காணிப்புப் பணியிலுமாகப் போய்விடுகின்றன. இப்போது அவன் உடம்பைக் கிடத்தினால் போதும், உடனடியாக ஆழ்ந்த உறக்கத்துக்கு ஆட்பட்டுவிடுவான். நாயின் குரைப்புகூட அவனை எழுப்பாது. கொசுத் தாக்குதல் வருவதற்கு முன்பாக, நன்றாகத் தூங்கிக்கொண்டு விடவே அவன் விரும்பினான். ஆனால் மேய்ச்சல்நில ஓநாய்கள் அவனுடைய அசட்டையை சாதகமாக்கிக் கொள்ளுமென்று அவன் அறிந்திருந்தான்.

பணியிடத்தில் ஒரு நோய்வாய்ப்பட்ட மாட்டை ஓநாய்கள் தாக்கியதானது, அவற்றின் பசி கால்நடைகளின் பக்கம் திரும்பி விட்டதைக் காட்டியது. இள

மான்கள் ஏற்கெனவே ஓடிவிட்டன; மர்மோட்டுகள் நடுநடுங்கிப் பதுங்கியே இருக்கின்றன. வயல் எலிகளால் பசித்த ஓநாய்களைத் திருப்திப்படுத்த முடியாது. கால்நடைகளால் மட்டுமே முடியும். மேலும் புதிய மேய்ச்சல் நிலத்தில் மந்தைகள் இன்னும் முழுமையாக நிலை கொள்ளவில்லை என்பதால் பில்ஜி அடிக்கடி கூட்டங்கள் போட்டு எச்சரிக்கை செய்தபடி இருந்தார். மேய்ப்பர்களும் மாணவர்களும் ஓநாய்களைப்

போல இருக்க வேண்டுமெனக் கேட்டுக்கொண்டார். கண்கள் மூடி உறங்கினாலும், அவர்களுடைய காதுகள் எந்தவொரு சத்தத்துக்கும் விழித்திருக்க வேண்டும். இன்னொரு மனித — ஓநாய் யுத்தத்துக்கான சமநிலையில் ஓலோன்புலாக் இருந்தது.

ஓநாய்க்குட்டியின் இடத்தை ஒவ்வொரு நாளும் ஜென் சுத்தப்படுத்தினான். பழைய கழிவுகளை நீக்கிவிட்டுப் புது மணல் போட்டான். இதை அவன் சுகாதாரக் காரணங்களுக்காக மட்டும்

செய்யவில்லை. ஓநாய்க்குட்டியின் இருப்பையும் இருப்பிடத்தையும் மறைத்து வைக்கும் நோக்கத்தோடும்தான் செய்தான். ஓநாய்க்குட்டியைத் தற்காலிகக் குகையில் பார்த்த நாளிலிருந்து அவன் ஓரளவு நிம்மதியோடுதான் இருந்தான்.

பாதி வளர்ந்திருந்த மூன்று நாய்க்குட்டிகளும் அவனிடம் ஓடி வந்தன. ஒவ்வொன்றிடமும் அவன் செல்லம் கொஞ்சினான். குட்டிகளைத் தொடர்ந்து, எல்லோவும் யிர்மும் அவனுடைய கவனிப்பைப் பெறுவதற்காக வந்தன. எர்லாங் மட்டும், எப்போதும் போல விசுவாசத்தோடு, ஆட்டுக் கூட்டத்தைக் காவல் காத்தபடி இருந்தது. மற்ற நாய்களை விடவும் அது ஓநாய்களைப் புரிந்து கொண்டிருப்பது; எந்தவொரு ஓநாயையும் போலவே அதுவும் எப்போதும் உஷாராகவே இருக்கும்.

இரவுக் காற்றில் குளிர் அதிகரித்தது. வெதுவெதுப்புக்காக ஆடுகள் ஒன்றோடொன்று மிக நெருக்கமாக ஒட்டிக்கொண்டன. மூன்று நாய்க்குட்டிகளும் மெதுவாக ஊர்ந்து சென்று, ஜென்னுடைய கந்தலான மேலாடைக்குள் பம்மிக்கொண்டன.

ஆட்டுக் கூட்டத்தைச் சுற்றி இரண்டு முறை ஃப்ளாஷ் லைட் அடித்துப் பார்த்துவிட்டு வந்து, கம்பளித் துணி விரிப்பின்மீது உட்கார முனைந்தபோது,

எங்கிருந்தோ _ வெகு தொலைவில் இல்லாமல் _ வந்த துயரம் நிறைந்த ஓநாயின் ஊளை அவனுக்குக் கேட்டது. அந்தக் குரல் மடிவதற்கு முன்பாக, மலைகளின் மூன்று பக்கங்களிலும் இருந்து தாழ்ந்த எதிரொலிகள் கேட்டன. அவை மலைப் பள்ளத்தாக்குகளிலும், ஆற்றுப் பள்ளத்தாக்கிலும், ஆற்றங்கரையோரமும் சுழித்தோடின. அவை தென்றல் காற்றில் அசைந்தாடிய நாணல்களின் சலசலப்பொலியோடு மேவிக் கலந்ததில், ஓநாய், நாணல் மற்றும் காற்றின் கலந்தோசையாக உருக்கொண்டு ஒலித்தன.

அமைதியான, தெளிந்த பின்னிரவில் ஓநாயின் குரலைக் கேட்டு வெகு நாளாகி இருந்ததால், அவன் திகிலடைந்தான். அவனை அச்சுறுத்தி நடுங்க வைத்த அந்த ஊளைகள் அவனுடைய ஆடையையும் தோலையும் ஊடுருவி எலும்புகளுக்குள் பாய்ந்தன. அவன் கை நீட்டிப் பக்கத்திலிருந்த எல்லோவை இழுத்துத் தன் போர்வையோடு சேர்த்து அணைத்துக்கொண்டான். அது கொஞ்சம் இதமளித்தது.

அந்த ஊளை துயர் நிறைந்த ஒரு தொடக்கம், அவ்வளவுதான். அதையடுத்து, பல வலிமைமிக்க ஆண் ஓநாய்களின் தொடர்ந்த ஊளைகள் உச்ச ஸ்தாயியில் வெளிப்பட்டன.

குழாமைச் சேர்ந்த எல்லா முகாம்களிலும் உள்ள நாய்களும் குரைக்கத் தொடங்கின. ஜென்னைச் சுற்றியிருந்த பெரிய மற்றும் குட்டி நாய்கள், ஆட்டுக் கூட்டத்தைச் சுற்றியிருந்த வடமேற்குப் புற எல்லையை நோக்கி ஓடிச்சென்று, அங்கிருந்தபடி மூர்க்கமாகவும் பலமாகவும் தொடர்ந்து குரைத்தன. ஊளை வந்த திசையை நோக்கி, சத்தமிட்டபடியே ஓடிய எர்லாங், திடீரென நின்று, பின்னால் திரும்பிப் பார்த்தது. பின்னாலிருந்து தாக்குதல் நிகழக்கூடுமென அது பயப்படுவதுபோல் தோன்றியது. ஆட்டுக் கூட்டத்தின் முன்பாகத் தன்னுடைய இடத்தை அமைத்துக்கொண்டு, அது தொடர்ந்து குரைத்தது. குழுமத்தின் எல்லா முகாம்களிலும் ஃப்ளாஷ் லைட்டுகள் ஒளி வீசின. ஆற்றுப் பள்ளத்தாக்கின் முனை வரை வெளிச்சம் நீண்டிருந்தது. குழாமைச் சேர்ந்த நூற்றுக்கும் மேற்பட்ட நாய்கள் அரைமணி நேரமாகக் குரைத்துவிட்டு, மெல்ல மெல்ல அமைதியாகின.

அந்த இரவு, இருண்டும் குளிர்ந்தும் இருந்தது. தலைமை ஓநாய் மீண்டும் தொடர் ஊளையைத் தொடங்கியது. பல ஓநாய்களிடமிருந்து பதில் ஊளைகள்

வெளிப்பட்டன. இரவுக் காவல் புரிந்த பெண்கள் எல்லோரும் தங்களுடைய ஃப்ளாஷ் லைட்டுகளை எரியவிட்டு, சத்தம் வரும் திசை நோக்கி அலசியபடி அவர்கள், ''ஆ…ஹோ… ஊ…ஹோ… யீ…ஹோ…'' எனக் கூவினர். அவர்களின் அந்தக் கூவல்கள் அலை அலையாய் எழுந்து பரவி ஓநாய்க் கூட்டத்தை அடைந்தன.

தங்களுடைய எஜமானர்களின் செய்கையிலிருந்து குறிப்புணர்ந்த நாய்களும் படுமூர்க்கமாக சப்தமெழுப்பின. குரைப்புகள், ஊளைகள், உறுமல்கள், சீற்றங்கள், அச்சுறுத்தல்கள் என எல்லாம் கலந்த சப்தங்கள் கொட்டு முழக்கமென வெளிப்பட்டன.

அந்தக் கலவையில், கட்டுப்படுத்த முடியாமல் வெளிப்பட்ட தன்னுடைய சப்தங்களையும் ஜென் சேர்த்தான். ஆனால் அவனுடைய பலவீனமான சப்தங்களை உடனடியாக இரவு விழுங்கிவிட்டது.

புதிய மேய்ச்சல் நிலத்தில் குடில்கள் அருகருகாக இருந்ததால் அவற்றின்மீது கவனம் செலுத்துவது எளிதாக இருந்தது. மேலும் மிகத் தீவிரமான மனிதக் குரல்களும், ஒளிக் கதிர்களின் பாய்ச்சலும் எதிர்த்தாக்குதலாக அமைந்து, ஒரு யுத்தத்துக்கான பதற்றத்தை உருவாக்கி இருந்தன.

ஓநாய்களின் கூக்குரல்கள் உடனடியாக அடங்கின. உல்ஜீயும் பில்ஜியும் குடில்களின்மீது ஒருமித்த கவனத்தைக் குவிப்பதற்கான உபாயங்களை வகுத்தனர். முகாம் ஒருமுனைப்பட்டு தாக்குதலுக்குத் தயாரானது. எனினும் ஓநாய்கள் இப்போது தாக்குதல் மேற்கொள்ளாது என்றே கருதினர்.

திடீரென, சங்கிலியின் சடசடப்பு சத்தத்தை ஜென் கேட்டதும், ஓநாய்க்குட்டியிடம் அவன் ஓடிச் சென்றான். அது, குழிக்கு வெளியே மேலும் கீழுமாகக் குதித்துக்கொண்டிருந்தது. கோரைப் பற்களைக் காட்டி உறுமியபடியும், வளைநகங்களைக் காட்டியபடியும் துள்ளிக்கொண்டிருந்தது. மனிதர்களுக்கும் ஓநாய்களுக்கும் நாய்களுக்கும் இடையே நடந்த ஒலி — ஒளி யுத்தத்தில் அது மிகவும் கிளர்ச்சி அடைந்திருந்தது.

இருட்டு, ஓநாய்களிடம் பரிவு கொண்டது. அவை இரவில் உயிர்த் துடிப்போடும், மேலான யுத்த குணாம்சத்தோடும் காணப்படும். அது, சூறையாடுவதற்கான நேரம்; ரத்தமும் சதையுமான உடல்களை ஆசை ஆசையாய்த் தின்று வயிறு

நிரப்பும் நேரம்; கொன்றதன் மிச்சங்களைப் பகிர்ந்துகொள்ளும் நேரம். ஆனால், ஓநாய்க்குட்டியை இரும்புச் சங்கிலி சிறைப்படுத்தி யிருந்ததால் அது ஒரு பைத்தியக்கார மிருகமாக மாறிவிட்டிருந்தது. சங்கிலிக்கு எதிராக அது வீணாகப் போராடியதில் அதன் கோபம் பெருகியது. பட்டியில் அது உருவாக்கியிருந்த பாதையில் ஓடியது. ஓடும்போது காற்றில் எகிறி, கற்பனையான இலக்குகளைக் கடித்தது. அடுத்த தாக்குதலுக்கு முன்பாகச் சட்டென நின்று, தரையில் விழுந்து உருண்டது.

சில கணங்களுக்குப் பிறகு, பட்டியின் வட முனையில் ஓநாய்க்குட்டி நின்றிருந்தது; அது தனக்கு முன்னால் வெறித்துப் பார்த்துக்கொண்டிருந்தது; காதுகள் விடைத்திருந்தன. சற்றும் அசையாது, இன்னொரு தாக்குதலுக்குத் தயார்படுத்திக்கொண்டிருப்பதைப் போலிருந்தது.

ஜென் சென் வருவதைப் பார்த்ததும் அவனை நோக்கி ஓடிய ஓநாய்க்குட்டி, பின் அவன் பட்டிக்கு வரட்டும் என்பதுபோலப் பின்வாங்கியது. அவன் பட்டிக்குள் ஒரு எட்டு வைத்ததும், ஒரு பசித்த புலியைப் போல, ஓநாய்க்குட்டி அவனுடைய முழங்கால் களைச் சுற்றி வளைத்துக் கடிக்க முற்பட்டது. ஜென் தடுமாறிக் கீழே விழப் பார்த்தான். அந்தத் தாக்குதலுக்கு ஜென் தயாராகவே இருந்தான். ஓநாய்க்குட்டியின் மூக்கில் வைத்து ஃப்ளாஷ் லைட்டை அழுத்தினான். அதைப் பார்க்கவிடாமல் செய்த வெளிச்சம், தாக்குதலைத் தடுத்து நிறுத்தியது.

ஓநாய்க்குட்டி தலையை நிமிர்த்தி, பெரிய நாய்களின் பலத்த குரைப்புகளைப் பொறமையுடன் கேட்டது. பிறகு, தலை குனிந்து, அவற்றைப் போலத் தன்னால் குரைக்க முடியாதென்பதைக் கண்டுபிடித்ததைப் போல, ஏதோ யோசித்தது. அவற்றிடமிருந்து கற்றுக்கொண்டுவிடத் தீர்மானித்துவிட்டதைப் போல, வாயைத் திறந்தது. ஜென் ஆச்சரியமடைந்தான். அடுத்து அது என்ன செய்யப் போகிறதென்பதைப் பார்ப்பதற்காகக் கீழே குனிந்தான். ஓநாய்க்குட்டி வாய் திறந்து, மிகவும் சிரமப்பட்டு, தொண்டையி லிருந்து ஒரு வினோதமான ஒலியை எழுப்பியது. ஆனால் அது கொஞ்சம்கூட நாயின் குரைப்பு போல இல்லை. அதனால் அது மூர்க்கமடைந்தது. அது மீண்டும் முயற்சித்தது. அது மூச்சை இழுத்துப் பிடித்துக்கொண்டு, நாய்களின் அசைவுகளைப் போலவே, வயிற்றை மேலும் மேலும் ஒடுக்கிக்கொண்டு சத்தமிட்டது. ஆனால் வெளிப்பட்ட ஒலி

நாயுடையதைப் போலவும் இல்லை; ஓநாயுடையதைப் போலவும் இல்லை. ஓநாய்க்குட்டி தாங்க முடியாத வேதனைக்கு ஆளானது.

ஓநாய்க்குட்டியின் செய்கை ஜென்னுக்கு சிரிப்பை ஏற்படுத்தியது. ஓநாய்க்குட்டிக்கு இன்னமும் ஓநாய் ஒலிகளை எழுப்ப முடியவில்லை; அதனால் அது நாயின் குரைப்பை போலியாக எழுப்ப முயற்சித்தது. ஆனால் அது மிகவும் சிரமமாக இருந்தது. பெரும்பாலான நாய்களால் ஓநாய்களைப் போலவே சத்தமிட முடியும்; ஆனால் ஓநாய்கள் ஒருபோதும் நாய்களைப் போலக் குரைக்க முற்பட்டதில்லை. ஆனால் இப்போது, நாய்களுக்கிடையே வளர்ந்த ஒரு ஓநாய்க்குட்டி, அவற்றைப் போல ஒலி எழுப்ப விரும்புகிறது. அந்தப் பாவப்பட்ட ஜீவன் அடையாளச் சிக்கலில் மாட்டிக்கொண்டிருக்கிறது.

ஓநாய்க்குட்டி விடாமல் முயற்சித்துக்கொண்டிருந்தது. ஜென் அதனருகில் போய், ஓநாய்க்குட்டியின் காதுக்குப் பக்கத்தில் அவனுடைய வாய் இருக்கும்படியாகக் குனிந்து, குரைத்தான். தன்னுடைய 'எஜமானன்' தனக்கு ஏதோ சொல்லிக் கொடுப்பதை அது உணர்ந்துகொண்டது போலத் தெரிந்தது. அப்போது எர்லாங் அங்கு ஓடிவந்து அதன் முன்னால் நின்றுகொண்டு, குரைக்கத் தொடங்கியது. அது மெதுவாக, ஒரு பொறுமையான ஆசிரியரைப் போலக் குரைத்தது. ஒரு கணத்துக்குப் பிறகு, ஓநாய்க்குட்டி கிட்டத்தட்ட நாயுடைய குரைப்பின் ஏற்ற இறக்கத்தைப் போலவே பெரிதாக சத்தமிட்டது. ஆனால் நாய் எழுப்பும் 'உர்ஃப், உர்ஃப்' சத்தம் அதில் இல்லை. ஓநாய்க்குட்டி படு உற்சாகமடைந்து, காற்றில் எகிறியது; எர்லாங்கின் வாயை நக்கத் தொடங்கியது. அதிலிருந்து அதே சத்தத்தை அது விடாமல் எழுப்பிக்கொண்டிருந்தது.

ஜென்னுக்கு அது சிரிப்பை ஏற்படுத்தியது. அந்த வினோதமான சத்தத்தைக் கேட்டு, மூன்று நாய்க் குட்டிகளும் ஓடி வந்தன. அதே சமயம், மற்ற நாய்கள் ஓநாய்க் குட்டியைப் போல பாசாங்கு செய்து ஏளனமான சத்தங்களை எழுப்பின. அந்தச் சூழலில் குதூகலமடைந்த மூன்று நாய்க் குட்டிகளும் தரையில் விழுந்து உருண்டன.

திடீரென ஒரு ஓநாயின் பலத்த ஊளை, சுற்றுப்புற மலைகளிலிருந்து கேட்டதும், எல்லா சத்தங்களும் அடங்கி ஒடுங்கின. ஃப்ளாஷ் லைட்டுகள் அணைக்கப்பட்டன. ஓநாயின் அந்தக் குரலுக்குப் பதில் கொடுப்பதுபோல, பல

ஓநாய்கள் ஊளையிட்டன. அவை ஏதோ திட்டமிடுவதாக ஜென் சென்னுக்கு உறுதியானது. மனிதர்கள் மற்றும் நாய்களின் பாதுகாப்பு வளையம் எவ்வளவு இறுக்கமாக அமைந்திருக்கிறதென்பதை அவை அறிந்து கொண்டிருந்திருக்குமென்று தோன்றியது. பல இரவுகளுக்கு செயலற்ற நிலை தொடர்ந்தது. எதிரிகளைச் சோர்வடையச் செய்யும் துல்லியமான தந்திரங்களை மேற்கொள்வதில் மேய்ச்சல் நில ஓநாய்கள் கில்லாடிகள்.

ஜென் சென், எல்லோவின் மீது தலை வைத்து, தரை விரிப்பில் படுத்திருந்தான். ஓநாய்களின் ஊளையென்றால் சீனாவில் பீதியடைவார்கள். சீனாவின் மத்திய சமவெளிப் பகுதியில், ‘சாத்தானின் ஓலங்களோடு’ அந்த சத்தத்தைத் தொடர்புபடுத்து வார்கள். ஜென் ஓநாய்களின் ஊளைகளைக் கேட்டு வளர்ந்தவன் என்றபோதிலும், அந்த ஊளைகள் ஏன் இவ்வளவு சோகமாகவும், தாங்க முடியாத வேதனை கொண்டதாகவும், இரங்கல் நிரம்பியதாகவும், வெறுமையும் துக்கமும் கொண்டதாகவும் இருக்கிறதென்பதை அவனால் ஒருபோதும் புரிந்துகொள்ள முடிந்த தில்லை. அவன் முதன்முதலாக அதைக் கேட்டபோது, கொடூரமும் மூர்க்கமும் வாய்ந்த ஓநாய்களின் இதயங்கள் இவ்வளவு வேதனைகளும் துயரங்களும் நிரம்பியதாக இருப்பதைக் கண்டு ஆச்சரியப்பட்டான். மேய்ச்சல் நிலத்தில் அவற்றின் சிரமமான வாழ்க்கை குறித்த வெளிப்பாடா அது? பட்டினியால் சாவதும், எப்போதும் வாழ்வா சாவா யுத்தமும் வழக்கமாகிவிட்ட அந்த இடத்தில் வாழ நேர்ந்த விதி குறித்த அவற்றின் புகாரா? மூர்க்கமும் முரட்டுப் பிடிவாதமும் கொண்ட ஓநாய்கள் மிகவும் பலஹீனமான, மென்மையான இதயம் கொண்டவை என்று ஜென் வெகு காலம் நினைத்திருந்தான்.

ஆனால், கடந்த இரண்டு வருடங்களாக அவற்றோடு அவனுக்கு ஏற்பட்டிருந்த தொடர்பிலிருந்து, குறிப்பாகக் கடந்த ஆறு மாதங்களில், அந்த எண்ணம் தவறானது என்பதை அவன் அறிந்திருந்தான். அவனைப் பொறுத்தவரை, மேய்ச்சல்நில ஓநாய்கள், அவற்றின் வலுவான எலும்புகளோடும், கடினமான இதயங்களோடும், வாழ்வதற்கான திறன்களோடும் இரும்பைப் போலத் திடமானவை. குட்டியை இழந்துவிட்டிருப்பதோ அல்லது ஆண் ஓநாய்க்கு ஏற்பட்ட கடுமையான காயமோ, ஒரு காலை இழந்து விட்டிருப்பதோகூட தற்காலிகமான வேதனைதான். அவை உடனடியாகப் பழிவாங்கும்

எண்ணத்தை, ஒவ்வொரு நாளும் தீவிரமாக வளர்த்துக்கொள்ளத் தொடங்கிவிடும். ஓநாய்க் குட்டியோடு அவன் கழித்த சில மாதங்களில் அவனுடைய இந்த எண்ணம் உறுதிப்பட்டிருக்கிறது. ஓநாய்க்குட்டியிடம் பலஹீனமான ஒரு தருணத்தைக்கூட அவன் இதுவரை பார்த்ததில்லை. அதனுடைய கழுத்தை மேய்ப்பர்கள் கிட்டத்தட்ட உடைத்துவிட்ட போதும்கூட, அது உடனடியாக மீண்டும் உற்சாகத்துடன் வாழ்க்கைக்குத் திரும்பிவிட்டது.

ஓநாய்களின் குரல்களை அவன் தொடர்ந்து கேட்டுக் கொண்டிருந்தபோது, அவற்றின் ஊளைகளில் கர்வமும் அபாயகரமான தன்மையும் வெளிப்படுவதை அவன் கண்டறிந் தான். ஆனால் மனிதர்களுக்கும் அவர்களுடைய கால்நடைகளுக்கு மான அந்த அபாய எச்சரிக்கை, ஏன் துயரம் மிகுந்ததாக ஒலிக்கிறதென்பது அவனுக்கு ஆச்சரியமாகவே இருந்தது. அவற்றின் ஊளைகள் துயர ஒலியைக் கொண்டிருப்பதற்கான காரணம் என்ன?

அந்த இரவில் மேலும் மேலும் அவற்றை ஜென் கேட்டுக் கொண்டிருந்ததில் மனம் தெளிவடைந்தது. நாய்களும் ஓநாய்களும் வெவ்வேறு விதமாக ஒலிக்கின்றன. நாயின் குரைப்பு குறுகியது மற்றும் வேகமானது; ஓநாயின் ஊளை தொடர்ச்சியாக நீண்டு ஒலிப்பது. இந்த இரு ஒலிகளும் கேட்பவரிடம் ஏற்படுத்தும் விளைவு முற்றிலும் வேறுபட்டது. ஓநாயின் ஊளையானது, நாயின் குரைப்பை விட, வெகு தூரம் பயணிப்பது. முகாமின் வடமூலையில் உள்ள குடில்களிலிருந்து வரும் நாய்களின் குரைப்பு, அதே அளவு தொலைவிலிருந்து வரும் ஓநாய்களின் ஊளைகளைப் போலத் தெளிவாகவும் துல்லியமாகவும் இருப்பதில்லை.

அதனால்தான் ஓநாய்கள் ஓலத்தைத் தேர்ந்தெடுத்திருப்பதாக ஜென்னுக்குத் தோன்றியது. ஆயிரக்கணக்கான ஆண்டுகளின் பரிணாம வளர்ச்சியில், காற்றில் நீண்ட நேரம் நிலைத்திருக்கக் கூடிய சத்தமாக அதை அவை கண்டடைந்திருக்கும். மிக அதிக தொலைவுகளைச் சென்றடையக் கூடியதாகவும் அது இருக்கிறது.

மேய்ச்சல்நில ஓநாய்கள் பரந்த எல்லைகளில் தாக்குதல்கள் நிகழ்த்துபவை; நிலைமையை அவதானிக்கவும் வேவு பார்க்கவும் பிரிந்து செல்லும் அவை, தாக்குதலின்போது ஒன்று கூடிவிடும். கூட்டமாய் செயலாற்றும் விலங்குகள் என்ற வகையில், வேட்டையின்போது அவற்றின் எல்லைகள் வெகு தொலைவு

வரை விரிந்தும் பரந்தும் இருப்பதால், மிகவும் மேம்பட்ட இந்தப் பரிமாற்ற முறை மூலம், வெகு தொலைவில் இருப்பவற்றோடு தொடர்பு கொள்ள முடிகிறது. மிகவும் ஈவிரக்கமற்ற யுத்தங்களில், அடையப் போகும் பலன்களே முக்கியம்; அவை எப்படி ஒலிக்கின்றன என்பது ஒரு பொருட்டே அல்ல.

ஊளைகள் மெல்லத் தேய்ந்தொலித்தன. பிறகு சட்டென, குடிலுக்கும் ஆட்டுக் கூட்டத்துக்கும் பின்னால் எங்கிருந்தோ இளமையான ஊளை வெளிப்பட்டது. ஒருகணம் ஜென் ஒடுங்கி விட்டான். எர்லாங் மூர்க்கமாகக் குரைத்தது. மற்ற நாய்கள் அதன் பின்னால் நின்றிருந்தன. ஜென், மேய்ச்சல் தடியையும் ஃப்ளாஷ் லைட்டையும் எடுத்துக்கொண்டு ஓடினான். அவன் குடிலை அடைந்தபோது, எர்லாங்கும் மற்ற நாய்களும் உறுமியபடி, ஓநாய்ப் பட்டியைச் சுற்றிப் புதிரான பாவனையோடு நின்றிருந்தன.

ஃப்ளாஷ் லைட் உதவியோடு, ஓநாய்க்குட்டியை ஜென் பார்த்தான். மரக்கம்பத்துக்குப் பக்கத்தில் அது பதுங்கி இருந்தது. அது ஊளையிட்டபோது, அதன் நீண்ட மூக்கு வானத்தை நோக்கியிருந்தது. ஆக, அங்கிருந்துதான் அந்த சத்தம் வருகிறது! ஒரு ஓநாயைப் போல அது ஊளையிடுவதை ஜென் இப்போதுதான் முதல் முறையாகக் கேட்கிறான். அது முழுமையான வளர்ச்சியடைந்த பிறகுதான் அதைச் செய்ய முடியுமென அவன் நினைத்திருந்தான். ஆனால் நான்கு மாதமேயான அது, வளர்ந்த காட்டு விலங்கைப் போல ஒலி எழுப்புகிறது; நடந்துகொள்கிறது.

முதன் முறையாகத் தன்னுடைய மகன் ‘அப்பா’ என்று கூப்பிடும்போது, ஒரு தந்தை பரவசம் அடைவதைப் போல ஜென் அப்போது இருந்தான். அவன் குனிந்து, அதன் பின்புறத்தைத் தட்டிக் கொடுத்தான்; ஓநாய்க்குட்டி திரும்பி, அவனுடைய பின்கையை நக்கிக் கொடுத்தது. பிறகு, மீண்டும் ஊளையிடத் தொடங்கியது.

நாய்கள் மிகவும் குழப்பமடைந்திருந்தன. அவற்றின் பரம வைரி அவற்றினிடையே இருந்து கொண்டிருப்பதானது, ஆடுகளின் மேய்ச்சலுக்குத் துணை புரியும் நாய்களிடம் மிகுந்த குழப்பத்தை ஏற்படுத்திவிட்டிருந்தது. ஆனால், எர்லாங் சந்தோஷமாக நடந்து பட்டிக்குள் சென்று, ஓநாய்க்குட்டியின் தலை உச்சியை நக்கிக் கொடுத்தது. பின் அதனருகில் படுத்துக்கொண்டு,

அது ஊளையிடுவதைக் கேட்டது. எல்லோவும் யிர்ரும் வெறுப்புடன் ஓநாய்க்குட்டியை முறைத்துப் பார்த்தன. அந்த சில நிமிடங்களில், அது சில மாதங்களாக வாழ்ந்து வந்த நாய்களிடமிருந்து விலகிவிட்டிருந்தது; அதன் உண்மையான அடையாளத்தை வெளிப்படுத்தி விட்டிருந்தது. அது ஒரு ஓநாய்; நாயில்லை. ஆனால் எல்லோவும் யிர்ரும், அவற்றின் எஜமானன் சிரித்தபடி ஓநாய்க்குட்டியின் தலையைத் தட்டிக் கொடுப்பதைப் பார்த்து, அவற்றால் அமைதியாக மட்டுமே சீற்றம் கொண்டிருக்க முடிந்தது.

ஓநாய்க்குட்டியின் பக்கத்தில் ஜென் குந்தியிருந்து, அதன் ஊளையைக் கேட்டதோடு, அதன் உடலசைவுகளையும் கவனித்தான். அந்த இளம் ஓநாய், மென்மையான, சீரான சப்தத்தை எழுப்புவதற்கு முன்பாக தன்னுடைய மூக்கை எப்படி உயர்த்திக் கொள்கிறதென்பதைப் பார்த்தான். நீண்ட மூக்கைக் காற்றில் உயர்த்தி வைத்துக்கொள்வதானது, தொலைவில் இருக்கும் உறவினரோடு தொடர்புகொள்ள ஏதுவாக இருப்பது ஜென்னுக்குப் புலப்பட்டது. அவற்றின் நீண்ட, துயரார்ந்த ஊளைகளும், மூக்கை உயர்த்தி வைத்துக்கொள்ளும் மனோபாவமும் மேய்ச்சல் நிலத்தில் அவை உயிர் தரித்திருப்பதற்கான அவற்றின் செயல்முறைகள்; ஓநாய்களின் துல்லியமான பரிணாமம்; டெஞ்ஞரின் மகத்தான படைப்பு.

ஜென்னுடைய நரம்புகளில் ரத்தம் பாய்ந்தது. அநேகமாக, மங்கோலிய மேய்ச்சல் நிலத்தின் மேய்ப்பர்கள் எவரும், உயிருள்ள ஓநாயின் புன்புறத்தை இதுவரை தட்டிக் கொடுத்திருக்க மாட்டார்கள். முழுமையான, நேர்த்தியான, பரிசுத்தமான ஓநாய்க் குட்டியின் ஊளைகளை அவனை விட எவரும் இவ்வளவு கேட்டிருக்க மாட்டார்கள். ஒரு ஓநாயைப் போலத் தன்னால் ஊளையிட முடிந்ததில் குதூகலமடைந்த ஓநாய்க்குட்டி, நீண்ட, உச்சமான, முந்தையதை விடவும் தீவிரமான ஊளைகளை எழுப்பியபடி இருந்தது. ஒரு புதிய பாடகனுக்கு, அவனுடைய அறிமுக நிகழ்ச்சியிலேயே அபரிமிதமான பாராட்டுகள் கிடைத்தால் எப்படி குதூகலிப்பானோ அப்படி இருந்தது ஓநாய்க்குட்டியின் செயல்பாடு.

கடந்த சில மாதங்களில் ஓநாய்க்குட்டி, ஜென் ஆச்சரியப் படுமளவுக்குப் பல காரியங்கள் செய்திருந்தாலும் இது அவனை வியக்க வைத்தது. நாயைப் போலக் குரைக்க முயற்சி செய்து முடியாமல் போனதால், ஓநாயின் குரலைக்

கேட்டதும், அதன் உள்ளுணர்வால் உந்தப்பட்டு அந்த இளம் ஓநாய் உடனடியாக அதில் வித்தகம் பெற்றுவிட்டது.

ஓநாய்க்குட்டியானது, தன்னுடைய ஊளையின் மூலம் தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறதென்பதையும், அது காட்டிலிருக்கும் தன் இனத்தை அழைக்கிறதென்பதையும் ஜென் திடீரென உணர்ந்தான். ஜென் விதிர் விதிர்த்துப் போனான்.

அங்கிருக்கும் ஓநாய்கள் _ கூட்டத் தலைவர்கள், மூத்த போர் வீரர்கள், ஆண் ஓநாய்கள் மற்றும் பெண் ஓநாய்கள் _ எவையும் இதுவரை மனிதர்களின் முகாம்களிலிருந்து ஓநாயின் ஊளை வெளிப்படுவதைக் கேட்டிருக்காது என ஜென் ஊகித்தான். அவற்றின் நம்ப முடியாத அதிர்ச்சியை அவன் கற்பனை செய்து பார்த்தான். ஓநாய்க் கூட்டத்துக்குக் கொஞ்சமும் புரியாத புதிராக இருந்திருக்கும். அவை ஒன்றை ஒன்று உற்றுப் பார்த்துக்கொண்டிருந்திருக்கும். ஒரு கணம் எல்லாம் அமைதியாக இருந்திருக்கும். ஆனால், கொஞ்சம் முன் பின்னாக என்றாலும், அவற்றைச் சேர்ந்த ஒன்றுதான் குரல் கொடுத்தது என்பதை அவை உணர்ந்து விட்டிருக்கும். குட்டிகளை இழந்த தாய் ஓநாய்களின் இதயங்களில் நம்பிக்கை தூண்டப்பட்டிருக்கும். அவை, அதைத் திரும்ப அடைய ஆவல் கொண்டிருக்கும். ஜென்னின் மோசமான பயங்கள், உண்மையாகப் போகிறது.

ஓநாய் ஊளைகளுக்கு நாய்கள் எதிர்வினை ஆற்றத் தொடங்கின. மூர்க்கமான குரைப்புகள் வெளியேறி இரவைச் சூழ்ந்ததில், மேய்ச்சல் நிலம் தலைகீழாக மாறியது. அவை மனித எஜமானர்களுக்கு அபாய எச்சரிக்கை விடுத்தன.

கடைசியாகத்தான் மக்கள் எதிர்வினை ஆற்றினர். இரவுக் காவலில் இருந்த பெரும்பாலான பெண்கள் அசதியில் தூங்கி விட்டிருந்தனர். ஓநாய்க்குட்டியின் ஊளைகள் அவர்களுக்குக் கேட்டிருக்கவில்லை; நாய்களின் படு மூர்க்கமான குரைப்புகள்தான் அவர்களை எழுப்பின. இப்போது அவர்கள் விழித்துக் கொண்டதால் அவர்களுடைய கூச்சல்களும் கூப்பாடுகளும் இரவைச் சூழ்ந்தன; அவர்களுடைய ஃப்ளாஷ் லைட்டுகள் இருளை ஊடுருவின. கொசுக்களின் கொடூரத் தாக்குதல் தொடங்க விருப்பதற்குச் சற்று முன்பாக ஓநாய்த் தாக்குதலென்பது, எவரும் நினைத்துப் பார்க்க விரும்பாத ஒன்று. அலை அலையாய்ப் பரவிய நாய்களின் மூர்க்கமான சத்தம், ஜென்

சென்னுக்குப் பதற்றத்தை ஏற்படுத்தியது. இந்தக் கூச்சலுக்கும் குழப்பத்துக்கும் அவன்தான் காரணம். காலையில் சூரியன் உதயமானதும், முகாம் உறுப்பினர்களின் பெரும் கோபத்தை அவன் எப்படி எதிர்கொள்ளப் போகிறான் என்று தெரியவில்லை. சில மேய்ப்பர்கள் ஒரு குழுவாக வந்து, அவனுடைய ஓநாய்க் குட்டியை வீசி அடித்து டெஞ்ஞுருக்கு அனுப்பிவிடுவார்களென அவன் கவலைப்பட்டான். ஓநாய்க்குட்டியோ விடாமல் சத்தமெழுப்பிக்கொண்டிருந்தது. அது ஏதோ பெரும் கொண்டாட்டத்தில் இருப்பதுபோல் தோன்றியது.

அதிகாலை சூரிய வெளிச்சத்தில் இருள் விலகத் தொடங்கியது. இரவுக் காவலில் இல்லாத பெண்கள், எழுந்துகொண்டு மாடுகளிடம் பால் கறப்பதற்குச் சென்றனர். அச்சத்தால் தன் வசம் இழக்கத் தொடங்கிய ஜென், தன்னுடைய ஒரு கையால் இளம் ஓநாயை வளைத்துக்கொண்டு, இடது கையால் அதன் மூக்கை மூடி, அது ஊளையிடுவதை நிறுத்த முற்பட்டான். அடங்கிப் போவதென்பது ஓநாயின் குணமில்லை என்பதால், ஜென்னுடைய பிடியிலிருந்து தன்னை விடுவிக்க, அது முழு சக்தியையும் திரட்டிப் போராடியது. அது பாதியளவு வளர்ந்துவிட்ட மிருகமாக இருந்ததால், ஜென்னை விடவும் அது பலம் கொண்டிருப்பதாக ஜென் நம்பினான். அதைச் சுற்றியிருந்த அவனுடைய கையிலிருந்து அது சுலபமாக விடுபட்டது. அதன் மூக்கின் மீதிருந்த பிடியை விட்டு விட்டால் அது அவனைக் கடித்து விடுமென்பதை ஜென் அறிந்தான்.

ஓநாய்க்குட்டி மூர்க்கமாக எதிர்த்தது. அதன் ஆந்தை போன்ற கண்களும், அவற்றில் வெளிப்பட்ட தீச் சுடரும், அவன் இப்போது அதனுடைய எதிரி என்பதைப் புரிய வைத்தன. அதனுடைய நீள்மூக்கை ஜென் விடாமல் பிடித்துக்கொண்டிருந்தபோது, ஓநாய்க் குட்டி தன் வளை நகங்களால் அவனுடைய மேலாடையைக் கிழித்து, அவனுடைய வலது கையின் பின்புறத்தைக் கீறிவிட்டது. வலியால் அதிர்ச்சியடைந்த ஜென், ‘‘யாங் கீ... யாங் கீ’’ எனக் கத்தினான்.

குடிலின் கதவைத் திறந்துகொண்டு வெறுங்காலோடு ஓடி வந்தான் யாங் கீ. ஒரு வழியாக இருவருமாகச் சேர்ந்து, அதைத் தரையோடு படுக்க வைத்தார்கள். அது வேக வேகமாக மூச்சிழுத்த படியும் விட்டபடியும் அந்த மணல்தரையை நகங்களால் பள்ளம் தோண்டுவதுபோல் பிறாண்டியது.

ஜென்னுடைய கையிலிருந்து ரத்தம் வடிந்தது. யாங் குடிலுக்கு ஓடிச் சென்று, முதலுதவிப் பெட்டியிலிருந்து கிருமிநாசினிப் பொடியையும் கட்டுத்துணியையும் எடுத்துக்கொண்டு வந்தான்.

இந்தக் களேபரத்தினால் விழித்துக்கொண்ட காவோ ஜியான்சோங், குடிலுக்கு வெளியே வந்து சபித்தான். ''நீ நாள் முழுவதும் இந்த ஓநாய்க்கு ராஜ உபசாரம் செய்கிறாய். ஆனால் அது உன்னைக் கடிக்கிறது. பேசாமல் அதை நீ என்னிடம் விட்டுவிடு. நான் பார்த்துக்கொள்கிறேன்.''

''ஒன்றும் செய்துவிடாதே'' என்று பதற்றத்துடன் சொன்னான் ஜென். ''அதன்மேல் தப்பில்லை. நான்தான் அதன் வாயை இறுகப் பொத்தினேன்.''

அதற்குள் நன்றாக விடிந்துவிட்டது. ஆனால் ஓநாய்க் குட்டியின் உற்சாகம் கொஞ்சமும் குறையவில்லை. அது துள்ளிக் குதித்தபடி, சத்தமாக மூச்சு விட்டுக்கொண்டிருந்தது. கடைசியில் பட்டியின் விளிம்புக்குச் சென்று படுத்துக்கொண்டபடி, வடமேற்கு வானை நோக்கித் தலை நிமிர்த்திப் பார்த்தபடி மீண்டும் ஊளையிடத் தயாரானது. ஆனால் வினோதம் என்னவென்றால் அதனால் ஊளையிட முடியவில்லை. புதிதாகத் தேர்ச்சி பெற்றிருந்த அந்த சத்தம் மறந்துவிட்டிருந்தது. அது மீண்டும் மீண்டும் முயற்சி செய்தது. ஆனால் நாயின் குரைப்பு போன்ற சத்தமே வெளிவந்தது. அதைக் கேட்டு எர்லாங் சந்தோஷமாக வாலாட்டியது;

பார்த்துக்கொண்டிருந்த மூவரிடமும் மகிழ்ச்சி பெருக்கெடுத்தது. தன்னுடைய தோல்வியில் சங்கடமும் கோபமும் அடைந்த ஓநாய்க்குட்டி, அதனுடைய வளர்ப்புத் தந்தையான எர்லாங்கைப் பார்த்து உறுமியது.

''எப்படி ஊளையிடுவதென்று ஓநாய்க்குட்டிக்கு இப்போது தெரியும்'' என்று ஜென் வருத்தத்தோடு சொன்னான். ''முகாமிலிருக்கும் எல்லோரும் அதைக் கேட்டிருப்பார்கள். அது நமக்குப் பிரச்சனைதான். நாம் என்ன செய்யலாம்?''

காவோ ஜியான்சோங் கொஞ்சமும் தயக்கமின்றிச் சொன்னான்: ''அதைக் கொன்றுவிடலாம். நாம் அப்படிச் செய்யா விட்டால், நம்மிடத்தைப் பார்த்து ஓநாய்க் கூட்டம் ஒவ்வொரு இரவும் இடைவிடாமல் ஊளையிட்டுக்கொண்டிருக்கும். பிறகு, எல்லா நாய்களும் குரைக்க ஆரம்பித்துவிடும். எவராலும் கொஞ்சமும் தூங்க முடியாது. மேலும், அவை நம்

ஆடுகளில் ஒன்றைத் தூக்கிக்கொண்டு போய்விட்டால், பிரச்சனை சமாளிக்க முடியாத அளவு மோசமாகிவிடும்.''

''நாம் அதைக் கொல்ல வேண்டாம். சத்தமில்லாமல் அதை அவிழ்த்து விட்டு விட்டு, அது தப்பிப் போய்விட்டதாகச் சொல்லிவிடலாம்'' என்றான் யாங்.

''நாம் அதைக் கொல்லவும் வேண்டாம், அவிழ்த்து விடவும் வேண்டாம்'' என்றான் ஜென். ''இப்படியே வைத்திருப்போம். ஒவ்வொரு நாளாகச் சமாளிப்போம். நாம் அதை அவிழ்த்து விட்டு விடுவதாக இருந்தால் இப்போது அதைச் செய்ய முடியாது. எல்லா முகாம்களிலும் ஏகப்பட்ட நாய்கள் இருக்கின்றன. நாம் அதை அனுப்பிவிட்டதுமே அதன்மீது அவை பாய்ந்துவிடும். இப்போதைக்கு, சூரியன் உதித்ததும் நீ ஆடுகளின் மேய்ச்சலைக் கவனித்துக்கொள். நான் இரவுப் பணியை எடுத்துக்கொள்கிறேன். அதன் மூலம் நான் பகலிலும் அதன்மீது ஒரு கண் வைத்திருக்க முடியும்.''

''இப்போதைக்கு நாம் செய்யக் கூடியது அதுதான் என்று நினைக்கிறேன்'' என்றான் யாங். ''முகாம் தலைமையகத்திலிருந்து அதைக் கொன்று விடும்படி உத்தரவு வந்தால், நாய்கள் இல்லாத இடத்துக்குக்கொண்டு போய் விட்டுவிட்டு வந்துவிடலாம்.''

''நீங்கள் இருவருமே கனவுகளில் மிதக்கிறீர்கள்'' என்றான் காவோ. ''கொஞ்சம் பொறுங்கள். மேய்ப்பர்கள் இங்கு வந்துவிடுவார்கள். இந்தப் பாழாய்ப்போன ஓநாய் இரவு முழுவதும் என்னைத் தூங்கவிடாமல் செய்திருக்கிறது. எனக்குத் தலைவலி மண்டையைப் பிளக்கிறது. நான் உங்களுக்குச் சொல்கிறேன், அதைக் கொல்ல நான் தயார்.''

அவர்கள் காலைத் தேனீரை முடிப்பதற்கு முன்பாகவே, குதிரைகளின் குளம்படிச் சத்தம் வந்துவிட்டது. வரவிருக்கும் ஆபத்தை உணர்ந்த ஜென் சென்னும் யாங் கீயும் வாசலுக்கு விரைந்தார்கள். அங்கு உல்ஜீயும் பில்ஜியும் தங்களுடைய குதிரை களில் இருந்தபடி குடிலைச் சுற்றி நோட்டம் விட்டார்கள். இரண்டாவது முறையாக அவர்கள் சுற்றிப் பார்த்தபோது, தரையில் ஒரு குழிக்குள் செல்வதாகக் கிடந்த சங்கிலியைப் பார்த்தார்கள். பக்கத்தில் போய்ப் பார்ப்பதற்காக அவர்கள் கீழே இறங்கினார்கள். ''அது

இங்கே ஒளிந்துகொண்டிருக்கிறது; அதனால்தான் நம்மால் பார்க்க முடியவில்லை'' என்றார் பில்ஜி.

ஜென்னும் யாங்கும் ஓடிப்போய், குதிரைகளின் கடிவாளங் களைப் பற்றி, எருதுவண்டிச் சக்கரத்தில் அவற்றைக் கட்டினார்கள். தண்டனைக்காகக் காத்திருப்பவர்களைப் போல, அவர்கள் பேசாமல் நின்றிருந்தார்கள்.

உல்ஜீயும் பில்ஜியும் குனிந்து குழிக்குள் பார்த்தார்கள். ஓநாய்க்குட்டி, அந்நியர்களின் தொந்தரவால் சங்கடமடைந்து, அதனுள் படுத்துக் கிடந்தது. அது தலையை வெளியே நீட்டி, குனிந்து பார்த்துக்கொண்டிருக்கும் மனிதர்களைப் பார்த்து உறுமியது.

''கடைசியாக நான் இதைப் பார்த்ததைவிட, நன்றாக வளர்ந்திருக்கிறது'' என்றார் பில்ஜி. ''நான் காட்டில் பார்த்திருக்கும் இளம் ஓநாய்களை விட இது பெரிதாக இருக்கிறது.''

அவர் ஜென் சென்னைப் பார்த்துத் திரும்பினார். ''நீ அதற்கு செல்லம் கொடுத்து கெடுத்துவிட்டிருக்கிறாய். அது குளுமையாக இருப்பதற்காகக் குழிகூடத் தோண்டியிருக்கிறாய். அதை அப்படியே வெளியில் விட்டிருந்தால் சூரியன் அதை சாகடித்திருக்கும்; எங்களுக்கும் சுலபமாக இருந்திருக்கும்; நாங்கள் அதைக் கொல்ல வேண்டி இருந்திருக்காது.''

ஜென் கவனமாகப் பதிலளித்தான். ''அப்பா, நான் அந்தக் குழியைத் தோண்டவில்லை; அதுவே தோண்டியது. அது வெயிலில் வெந்துகொண்டிருந்தது; பின் அதற்கு இந்தக் குழி தோண்டும் எண்ணம் தோன்றியிருக்கிறது.''

முதியவர் பெரும் வியப்புடன் ஓநாய்க்குட்டியை உற்றுப் பார்த்தார். ''தாய் சொல்லிக் கொடுக்காமலேயே, இதை எப்படிச் செய்வதென்று அதற்குத் தெரிந்திருக்கிறது. ஒருவேளை, இது இறந்துபோவதை டெஞ்ஞர் விரும்பவில்லை போல.''

''ஓநாய்கள் உடனடியாகச் செயல்படும் மூளைகள் கொண்டவை'' என்றார் உல்ஜீ. ''அவை நாய்களை விட சாமர்த்திய மானவை. சில வழிகளில் மனிதர்களை விடவும் சாமர்த்திய மானவை.''

ஜென்னுடைய இதயம் படபடத்துக்கொண்டிருந்தது. ‘‘இவ்வளவு சின்ன ஓநாயால் எப்படி இப்படி யோசிக்கவும் செயல்படுத்தவும் முடிந்ததென்று எனக்குப் புரியவே இல்லை. நான் அதை எடுத்து வந்தபோது அதற்குக் கண்கூடத் திறந்திருக்க வில்லை...’’

‘‘ஓநாய்கள் இயல்பிலேயே ஆச்சரியப்படத்தக்க அளவுக்குப் புத்திக்கூர்மை கொண்டவை’’ என்றார் பில்ஜி. ‘‘அவற்றின் அம்மாக்கள் பக்கத்தில் இல்லாமல் இருக்கலாம்; ஆனால் அவற்றுக்குச் சொல்லிக் கொடுக்க எப்போதுமே டெஞ்ஞர் இருக் கிறது. நேற்றிரவு இது எப்படி ஊளையிட்டதென்பதை நீ நிச்சயம் பார்த்திருப்பாய். மேய்ச்சல்நில விலங்குகளில் ஓநாய்கள் மட்டுமே வானத்தை நோக்கி ஊளையிடுபவை. ஒரு மாடோ ஆடோ, குதிரையோ, நாயோ, நரியோ, மானோ அல்லது மர்மோட்டோ அது போன்று செய்வதில்லை. ஏன் தெரியுமா? டெஞ்ஞரின் பெருமிதமும் மகிழ்ச்சியும் ஓநாய்கள்தான் என்று நான் உனக்குச் சொல்லியிருக்கிறேன். அவற்றுக்கு ஏதாவது தொல்லை ஏற்படும்போது, அவை மேலே பார்த்து ஊளையிடும். அப்போது டெஞ்ஞர் அவற்றுக்கு உதவும். அவை பெரும்பாலான திறன்களை டெஞ்ஞரிடமிருந்து நேரடியாகவே பெறுகின்றன. Ôகாலையில் செயல்முறைகளை எப்படிக் கேட்டுப் பெறுவதென்றும், மாலையில் அறிக்கையைத் தாக்கல் செய்யவும்’ அவற்றுக்குத் தெரியும். இங்கு மக்கள் தொல்லைகளுக்கு ஆட்படும்போது, அவர்கள் மேலே பார்த்து, ஓநாய்களைப் போலவே டெஞ்ஞரின் உதவியை வேண்டுவார்கள். டெஞ்ஞரை வழிபடும் இரண்டு ஜீவராசிகள் நாங்கள் மட்டும்தான்.’’

முதியவர் ஓநாய்க்குட்டியைப் பார்த்த பார்வையில் இதமிருந்தது. ‘‘உண்மையில், நாங்கள் ஓநாய்களிடமிருந்துதான் கற்றுக்கொண்டோம். மங்கோலியர்களாகிய நாங்கள் மேய்ச்சல் நிலத்துக்கு வருவதற்கு முன்பிருந்தே, ஓநாய்கள் டெஞ்ஞரிடம் தங்களுடைய குரல்களை வெளிப்படுத்திக்கொண்டிருந்தன. இங்கு வாழ்க்கை மிகவும் சிரமமானது குறிப்பாக அவற்றுக்கு. ஓநாய்கள் இரவில் ஊளையிடும்போது, பழைய காலத்தினர் வருத்தத்தில் கண்ணீர் விடுவது வழக்கம்.’’

பில்ஜி சொன்னதெல்லாம் உண்மை என்பது ஜென்னுக்குத் தெரியும். ஓநாய்களும் மனிதர்களுமே டெஞ்ஞரைத் தங்களுடைய ஊளைகள் மூலமோ

அல்லது பிரார்த்தனைகள் மூலமோ வழிபடுபவர்கள் என்பதை ஜென் அவதானித்திருக்கிறான். அறிவியல் ரீதியான பார்வையில், ஓநாய்கள் நிலவைப் பார்த்து ஊளையிடுவதன் மூலமாக, அவற்றின் குரல்கள் வெகு தொலைவுக்குப் பரந்தும் விரிந்தும் செல்கின்றன என்பது உண்மைதான். எனினும், பில்ஜியின் விளக்கத்தையே ஜென் தேர்வு செய்தான். ஆன்ம பலமின்றிப் போனால், வாழ்வின் துன்பத்தைத் தாங்க முடியாது. கண்கள் கண்ணீரால் நிரம்புவதை ஜென் உணர்ந்தான்.

முதியவர் அவனைப் பார்த்துத் திரும்பினார். ‘‘நீ அந்தக் கையை என்னிடம் மறைக்க வேண்டியதில்லை. ஓநாய்க்குட்டி நகத்தால் உன்னைக் கீறியிருக்கிறது, அப்படித்தானே. நேற்றிரவு நான் எல்லாவற்றையும் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். நான் இதைக் கொல்ல வந்திருப்பதாக நீ நினைக்கிறாய், இல்லையா? நல்லது, இன்று அதிகாலையில் குதிரை மற்றும் ஆடு மேய்ப்பர்கள் என்னைப் பார்க்க வந்திருந்தார்கள். இந்த ஓநாய் கொல்லப்பட வேண்டுமென வேண்டுகோள் விடுத்தார்கள். நானும் உல்ஜீயும் இதுபற்றிப் பேசினோம். இப்போதைக்கு நீ அதை வைத்துக் கொள்ளலாம் என்று முடிவு செய்தோம். ஆனால் நீ மிகவும் கவனமாக இருக்க வேண்டும். ஓநாய்களால் இந்த அளவு பாதிப்புக்காளான ஒரு சீனனை நான் இதுவரை பார்த்ததில்லை.’’

ஜென் ஒரு கணம் பேச்சு மூச்சற்றிருந்தான். ‘‘நான் அதை வைத்துக்கொள்ள நீங்கள் உண்மையிலேயே அனுமதிக்கிறீர்களா?’’ என்று கடைசியில் ஒருவாறு பேசினான். ‘‘ஏன்? முகாமுக்கு இன்னலைத் தருவிக்கும் ஒருவனாக நான் இருக்க விரும்பவில்லை. உங்களுக்கு மேலும் தொல்லைகள் ஏற்படுத்துவதை நான் வெறுக்கிறேன். அது ஊளையிடுவதைத் தடுப்பதற்காக, அதன் மூக்கையும் வாயையும் மூடும் வகையிலான ஒரு தோல் மூடியைத் தயாரிக்கலாமா என்று நான் யோசித்துக்கொண்டிருந்தேன்.’’

‘‘காலம் கடந்த யோசனை’’ என்றார் உல்ஜீ. ‘‘அங்கே இருக்கும் தாய் ஓநாய்களுக்கு, நம்மிடம் ஒரு ஓநாய்க்குட்டி இருப்பது இப்போது தெரியும். அனேகமாக, இன்று இரவு அவை இங்கே வரலாமென நான் அனுமானிக்கிறேன். நம்மிடம் இருக்கும் மக்கள், நாய்கள், துப்பாக்கிகள் ஆகியவற்றைக் கணக்கில் கொள்ளும்போது, ஓநாய்கள் தாக்குதல் நடத்தாது.

ஆனால் இலையுதிர் கால மேய்ச்சல் நிலத்துக்கு நாம் முகாமிட நகரும்போது, உங்களுக்கு பயங்கரமான அபாயம் நேரலாமென்பதே என் கவலை.''

''ஆனால் அதற்குள் எங்களுடைய நாய்க்குட்டிகள் முழு வளர்ச்சி அடைந்துவிடும்'' என்றான் ஜென். ''அப்போது எங்களிடம் ஐந்து நாய்கள் இருக்கும். ஓநாய்களைக் கொல்வதில் கில்லாடியான எர்லாங்கும் அவற்றில் அடங்கும். எங்களிடம் வெடிமருந்துகளும் இருக்கின்றன. அதனால் ஓநாய்களால் எங்களுக்கு பிரச்சனை வராது.''

''சரி, பார்க்கலாம்'' என்றார் பில்ஜி.

இன்னமும் கவலையோடிருந்த ஜென், ''ஓநாய்க்குட்டியைக் கொல்ல வேண்டுமென்று கோரிக்கை வைத்தவர்களிடம் நீங்கள் என்ன சொன்னீர்கள், அப்பா'' என்று கேட்டான்.

''சமீப காலமாக ஓநாய்கள், நம் குதிரைகளைக் குறி வைத்திருந்ததால், நமக்குக் கடுமையான இழப்பு ஏற்பட்டது. இந்த ஓநாய்க்குட்டி, ஓநாய்களை இங்கு நம்மிடம் வரச் செய்தால், நம்முடைய குதிரைகள் பத்திரமாக இருக்கும் என்று சொன்னதும், மேய்ப்பர்கள் மிகுந்த ஆசுவாசம் அடைந்துவிட்டார்கள்.''

''ஆக, இந்த ஓநாய்க்குட்டியை வளர்த்ததில் ஒரு சாதகமான விளைவு ஏற்பட்டிருக்கிறது'' என்றார் உல்ஜீ. ''ஆனால், அது தன்னுடைய பற்களை உன்மீது பதிக்காமல் பார்த்துக்கொள். அது பேராபத்தில் முடிந்துவிடும்.''

பில்ஜியும் உல்ஜீயும் குதிரைகள் மீதேறி, குதிரைகளின் மேய்ச்சல் இடத்துக்குச் சென்றனர். அங்கு ஏதோ பெரும் சிக்கல் ஏற்பட்டிருக்கிறது. அவர்கள் சென்றபோது எழும்பிய புழுதியைப் பார்த்துக்கொண்டிருந்த ஜென்னுக்கு, அவன் ஆசுவாசமாக இருக்கிறானா அல்லது கூடுதல் பதற்றத்துக்கு ஆளாகி இருக்கிறானா என்று தெரியவில்லை.

# 25

ஜென் சென் கடைசியாக மிஞ்சியிருந்த இரண்டு கறித் துண்டங்களை எடுத்து, அதில் கொஞ்சம் ஆட்டுக் கொழுப்பையும் சேர்த்து, ஒரு பாத்திரம் நிறைய கெட்டியான கறிக் கூழை ஓநாய்க்குட்டிக்காகத் தயார் செய்தான். அது சாப்பிடும் அளவு படு வேகமாகக் கூடிக்கொண்டே போனது. முழுப் பாத்திர உணவு இப்போது அதற்குப்போதுமானதாக இல்லை.

ஜென் பெருமூச்சு விட்டபடி, குடிலுக்குத் திரும்பச் சென்று, கொஞ்ச நேரம் தூங்க ஆயத்தமானான். அப்போதுதான் அபாயகரமான இரவு யுத்தத்தை எதிர்கொள்ள முடியும். பிற்பகல் ஒரு மணி போல, வெளியே பலமான சத்தங்கள் கேட்டு விழித்தான்; வெளியே ஓடினான்.

ஒரு பெரிய குதிரையை சாங் ஜியோன் ஓட்டி வந்திருந்தான். அதன் மேல் ஏதோ இருந்தது. குதிரையின் முன்பாதி உடம்பில் ரத்தம் படிந்திருந்தது. அது பயந்துபோய் காணப்பட்டது. எருது வண்டிகளுக்குப் பக்கமாகச் செல்லத் தயங்கியது. நாய்கள் ஓடிவந்து, குதிரையைச் சுற்றி நின்றுகொண்டு வால்களை ஆட்டின. தூக்கக் கலக்கத்துடன் இருந்த கண்களைத் தேய்த்துவிட்டபடி வந்த ஜென், சேணத்தின் குறுக்காகக் காயமடைந்த குதிரைக்குட்டி கிடப்பதைப் பார்த்து திடுக்குற்றான். அவன் வேகமாகச் சென்று, அதன் கடிவாளத்தைப் பிடித்துக் குதிரையை அமைதிப்படுத்தினான்.

குதிரைக்குட்டிக்கு வலியால் கழுத்தைத் தூக்க முடியவில்லை; அதன் கழுத்திலிருந்தும் மார்பிலிருந்தும் ரத்தம் தொடர்ந்து வழிந்து கொண்டிருந்தது. சேணத்தின்மீதும் பெரிய குதிரையின்மீதும் ரத்தம் படிந்துகொண்டிருந்தது. பெரிய குதிரையின் கண்கள் பயத்தில் பெருத்திருந்தன. சேணத்தின் பின்னால் உட்கார்ந்திருந்த சாங் இறங்குவதற்கு சிரமப்பட்டான். குதிரைக்குட்டி கீழே விழுந்து, பெரிய குதிரையைப் பயப்படச் செய்துவிடுமோ என அவன் அஞ்சினான். குதிரைக்குட்டியின் முன்னங்கால்களில் ஒன்றை ஜென் பிடித்துக்கொள்ள, சாங் ஒருவாறு கால் வளையங்களிலிருந்து மிகுந்த சிரமத்துடன் பாதத்தை வெளியே எடுத்துக் கீழே குதித்துத் தடுமாறி நின்றான்.

குதிரையின் இருபக்கமுமாக நின்றுகொண்டு, குட்டியைத் தூக்கியெடுத்துத் தரையில் நிதானமாகப் படுக்க வைத்தார்கள். பெரிய குதிரை திரும்பி,

குட்டியை சோகமாகப் பார்த்தது. தலையை நிமிர்த்த முடியாத குதிரைக்குட்டி, தன்னுடைய அழகிய பெரிய கண்களால் அவர்களைப் பார்த்தது. அது வலியால் துடித்துக்கொண்டிருந்தது.

''இதை நம்மால் காப்பாற்ற முடியுமா?'' ஜென் கேட்டான். ''பட்டு, காயத்தை சோதித்துப் பார்த்துவிட்டு, இனி காப்பாற்ற முடியாது என்று கூறிவிட்டான். ரொம்ப நாளாகவே நம்மிடம் இறைச்சி இல்லை. நாம் இதைக் கொன்றுவிடலாம். இன்னொரு காயம் பட்ட குதிரைக்குட்டியை பில்ஜிக்கு அனுப்பியிருக்கிறான் லாசுருங்.''

ஜென்னின் இதயம் ஒரு கணம் துடிப்பதை நிறுத்தியது. சாங் கழுவிக்கொள்வதற்காக ஒரு வாளித் தண்ணீர் கொண்டு வந்தான் ஜென். ''குதிரை மந்தை மீதான தாக்குதல் ரொம்ப மோசமானதா?''

சாங் வாட்டத்தோடு பதில் சொன்னான். ''அதைப் பற்றிக் கேட்காதே. ஓநாய்கள், இரண்டு குதிரைகளைக் கொன்று தின்று விட்டன. மற்றொன்றைக் காயப்படுத்தி இருக்கின்றன. லாசுருங் நிலைமை இன்னும் மோசம். அவனுடைய ஐந்து அல்லது ஆறு குதிரைகளை ஓநாய்கள் கொன்றுவிட்டன. மற்ற மந்தைகளின் நிலைமை பற்றி எனக்குத் தெரியவில்லை. ஆனால் அங்கும் மோசமாகத்தான் இருந்திருக்கும். முகாம் தலைவர்கள் எல்லோரும் போயிருக்கிறார்கள்.''

''ஓநாய்க் கூட்டம் முகாமைச் சுற்றியிருந்து இரவு முழுவதும் ஊளையிட்டது எனக்குத் தெரியும். ஆனால் அவை இங்கிருந்தபோது, எப்படி அவற்றால் குதிரைகளைத் தாக்கியிருக்க முடியும்?''

''அதுதான் அவற்றின் திட்டம்: நான்கு பக்கங்களிலிருந்தும் முழு வீச்சான தாக்குதல். மேற்கின் கவனத்தைத் திசை திருப்புவதற் காகக் கிழக்கில் தாக்குதல். ஒரு பக்கம் பாசாங்கான தாக்குதல்; அதேசயம் மறுபக்கம் கொடூரமான பலத்த கொலைவெறித் தாக்குதல். ''அவற்றின் உத்தி அபாரமானது; படு பயங்கரமானது.'' அவன் கைகளைக் கழுவி முடித்துவிட்டு, ''நாம் இந்தக் குதிரைக்குட்டியை உடனடியாகக் கொல்லவேண்டும். அது இறந்துவிட்டால், ரத்தம் உறைந்த இறைச்சி ருசியாக இருக்காது.''

பித்தளைக் கைப்பிடி கொண்ட மங்கோலியக் கத்தியை சாங்கிடம் கொடுத்தான் ஜென். ‘‘நீயே செய். இவ்வளவு அழகான குதிரைக்குட்டியைக் கொல்ல எனக்கு மனமில்லை.’’

‘‘இந்தக் குதிரைக்குட்டியைக் கொன்றது, ஓநாய்கள்தானே தவிர மனிதர்கள் இல்லை. மனித இயல்புக்கும் இதற்கும் எந்த சம்பந்தமுமில்லை. நானே செய்கிறேன். ஆனால் அதை மட்டுமே நான் செய்வேன். மற்றதையெல்லாம் நீதான் செய்ய வேண்டும். தோலை உரிப்பது, தீயில் வாட்டுவது, இறைச்சியைத் துண்டு துண்டாக்குவது எல்லாம் உன் வேலை, சம்மதமா?’’

‘‘சம்மதம்.’’

சாங் கத்தியை எடுத்துக்கொண்டு, குதிரையின் ஒரு பக்க மார்பில் பாதத்தை ஊன்றிக்கொண்டான். மேய்ச்சல்நில மரபின்படி, குதிரைக்குட்டியின் கண்கள் டெஞ்ஞரைப் பார்த்திருக்கும் வகையில் தலையைத் தாங்கிக்கொண்டு கத்தியை அதன் கழுத்தில் சொருகி ரத்தக் குழாயைத் துண்டித்தான். அங்கு பீய்ச்சியடிக்கும் அளவு ரத்தம் இல்லாததால், லேசாக சொட்டியது. குதிரைக்குட்டி போராடியபடி இறந்துபோனது.

‘‘குதிரைக்குட்டியின் இறைச்சி மிருதுவானது; வாசனையானது. ஆனால் மேய்ப்பர்கள் அதைக் கோடை காலத்தில் மட்டுமே சாப்பிடுவார்கள். ஆயிரக்கணக்கான வருடங்களுக்குப் பிறகு, குதிரைக்குட்டியானது மேய்ச்சல் நிலத்தின் சுவையான உணவாகியிருக்கிறது’’ என்றான் சாங். மறுபடியும் கைகளைக் கழுவிவிட்டு, தண்ணீர் வண்டியின் பலகையில் உட்கார்ந்து கொண்டு, ஜென் குதிரையின் தோலை உரிப்பதைக் கவனித்தான்.

குதிரைக்குட்டியின் தோலுக்கடியில் இருந்த மென்மையான இறைச்சியைப் பார்த்து ஜென் சந்தோசமடைந்தான். அது ஒரு பெரிய ஆடு அளவுக்குப் பெரியதாக இருந்தது. ‘‘இந்த ஒரு மாதத்தில், இறைச்சியின் ருசியே கிட்டத்தட்ட மறந்து போய்விட்டது’’ என்றான் ஜென். ‘‘உண்மையில், அது இல்லாமல் நன்றாகத் தானிருக்கிறேன். ஆனால், ஓநாய்க்குட்டி பற்றித்தான் என் கவலை. இறைச்சி இல்லாமல் அது ஆடு போல் ஆகிவிட்டது. அது ஆட்டுக்குட்டி போல் ஒருநாள் கத்திவிடுமோ என்று எனக்குப் பயமாக இருக்கிறது.’’

‘‘இந்த வருடத்தில் பிறந்த முதல் குதிரைக்குட்டி இதுதான். அதனுடைய பெற்றோர் இருவருமே நல்ல வாட்டசாட்டமானவை. உனக்கு இந்த இறைச்சி பிடித்திருந்தால், இன்னும் சில நாட்களில் இன்னொன்று கொண்டு வருகிறேன். கோடை காலத்தில்தான் குதிரைகள் இறக்கும். ஓநாய்களுக்குக் குதிரைக்குட்டிகளை வேட்டையாடுவதில்தான் பிரியம். சில நாட்களுக்கு ஒருமுறை, ஒன்று அல்லது இரண்டு குதிரைக்குட்டிகளை ஓநாய்களிடம் ஒரு மந்தை இழக்கிறது; அவற்றை நம்மால் தடுக்க வழியில்லை. ஒவ்வொரு மந்தையிலும் நூற்றைம்பது குதிரைக்குட்டிகளைப் பெண் குதிரைகள் சேர்த்துவிடுகின்றன. புல்லும் நன்றாக இருக்கிறது; பெண் குதிரைகளிடம் பாலும் நிறைய சுரக்கிறதென்பதால் குதிரைக்குட்டிகள் வேகமாக வளர்கின்றன. அவை பெரும்பாலும் சுற்றிலும் ஓடித் திரிவதால், எல்லா நேரமும் குதிரைகளால் அவற்றைக் கவனித்துக்கொண்டிருக்க முடிவதில்லை.’’

குதிரைக்குட்டியின் தலை, மார்பு மற்றும் கழுத்தில் ஓநாய் கடித்த பகுதிகளை ஒரு கோடரியால் அப்புறப்படுத்தினான் ஜென். பிறகு சிறு சிறு துண்டுகளாக இறைச்சியை வெட்டினான். ஆறு நாய்களும் ஜென்னையும் குதிரைக்குட்டியையும் சூழ்ந்து நின்றிருந்தன. அவற்றில் ஐந்தின் வால்கள், இலையுதிர் காலக் காற்றில் நாணல்கள் ஆடுவதைப் போல அசைந்தாடின. எர் லாங்கின் வால் மட்டும் துப்பாக்கி முனையைப் போல நேராகக் குத்திட்டு நின்றது. அது, ஜென் எப்படி இறைச்சியைப் பங்கு பிரிக்கப் போகிறானென்று பார்ப்பதற்காக அவனைக் கவனித்துக் கொண்டிருந்தது. அப்போதுதான் வெட்டிய இறைச்சியைப் பல நாட்களாக ருசி பார்த்திராத ஓநாய்க்குட்டி ஆர்வத்துடன் ஓடித் திரிந்தது. நாய் போன்ற சத்தங்களும் அதனிடமிருந்து வெளிப் பட்டுக்கொண்டிருந்தன.

இறைச்சியும் எலும்புகளும் வழக்கம்போல, மூன்று பெரிய பங்குகளாகவும் மூன்று சிறிய பங்குகளாகவும் பிரிக்கப்பட்டன. பாதி தலையையும் பாதி கழுத்தையும் எர்லாங்குக்குக் கொடுத்தான். அது வாலாட்டியபடி, தன் பங்கை எடுத்துக்கொண்டு, ஒரு எருதுவண்டிக்குக் கீழிருந்த நிழலில் போய் சந்தோசமாய் சாப்பிடு வதற்காகச் சென்றது. எல்லோவும் யிர்ரும் மூன்று நாய்க்குட்டிகளும் அவற்றின் பங்குகளை எடுத்துக்கொண்டு நிழலான இடங்களுக்கு ஓடின. நாய்கள் போகும்வரை காத்திருந்த ஜென், அதன்பிறகு

நெஞ்சுப் பகுதி இறைச்சியில் நல்லதாகப் பார்த்து வெட்டி எடுத்தான். அதையும் எலும்புகளையும் சிறு துண்டங்களாக்கி, ஓநாய்க்குட்டியின் கோப்பையில் பாதியை நிறைத்தான். பிறகு, மிச்சமிருந்த ரத்தத்தை அதில் ஊற்றி எடுத்துக்கொண்டு ஓநாய்க்குட்டியிடம் சென்றான். ‘‘குட்டி ஓநாய்... குட்டி ஓநாய், சாப்பாட்டு நேரம்’’ என்றான்.

ஓநாய்க்குட்டியின் கழுத்துத் தோல் கெட்டியாகவும் முரடாகவும் வளர்ந்திருந்தது. புதிய, ரத்தத்துடன் கூடிய இறைச்சியைப் பார்த்ததும் அது தன் சங்கிலியோடு மல்லுக்கட்டியது. அதன் வாயில் எச்சில் ஒழுகியது. ஜென் வேகமாக அதன்முன் கோப்பையை வைத்தான். அது இறைச்சியின் மீது பாய்ந்தது; ஏதோ உயிருள்ள குதிரையின் சதையைக் கிழிப்பதுபோல, அது சாப்பிட்டது. ஜென்னைப் பார்த்து உறுமி, அவனை விரட்டியது.

ஜென், திரும்பவும் குதிரைக்குட்டியின் தோலும் இறைச்சியும் எலும்பும் கிடந்த இடத்துக்கு வந்தான். ஓநாய்க்குட்டியை ஓரக் கண்ணால் கவனித்தபடியே, மிச்சமிருந்த இறைச்சியையும் எலும்பு களையும் வெட்டத் தொடங்கினான். அது வெறியோடு சாப்பிட்டுக் கொண்டிருந்தது.

‘‘குதிரை மேய்ப்பர்களால் ஓநாய்களை ஏதும் செய்ய முடியாதா?’’ ஜென் கேட்டான்.

‘‘நான் கிட்டத்தட்ட இரண்டு வருடங்களாக மேய்ப்பனாக இருந்து வருகிறேன். மேய்ச்சல் நிலத்தில் போதிய கவனிப்பின்றி மேய்ச்சலில் ஈடுபடுத்தப்படுவது குதிரைகள்தான். ஒவ்வொரு மந்தை யிலும் நானூறு முதல் ஐந்நூறு குதிரைகள் வரை இருக்கின்றன; ஆனால் ஒரு மந்தைக்கு இரண்டு மேய்ப்பர்கள்தான் இருக்கிறார்கள். மந்தைக்கு ஒரு மாணவனைச் சேர்த்துக்கொண்டாலும்கூட அது போதுமானதில்லை. அவர்கள் பணி நேரங்களைப் பிரித்துக் கொள்ளும்போது, ஒரு சமயத்தில் ஒருவர் மட்டுமே இருக்க முடிகிறது. இது மிக மோசமான நிலைமை.’’

‘‘ஒவ்வொரு மந்தைக்கும் ஏன் கூடுதல் பணியாளர்களை அவர்கள் நியமிக்கக் கூடாது?’’

‘‘மேய்ச்சல் நிலத்தில் விண்வெளியில் பயணம் செய்பவர்கள் குதிரை மேய்ப்பர்கள். அதில் ஒருவருக்குப் பயிற்சி அளிக்கவும், அவர் அதில் தேர்ச்சி

பெறவும் நீண்ட காலம் பிடிக்கும். தகுதி யில்லாத ஒருவரை இப்பணியில் அமர்த்த முடியாது. அப்படிச் செய்தால் மந்தையில் பாதியை அவர் இழக்க நேரிடும். மிகவும் கடினமான, களைப்படையச் செய்கிற, அபாயம் நிறைந்த வேலை அது. வெண்பனிப் புயல் தாக்கும்போது, சீதோஷ்ண நிலை பூஜ்யத்துக்கும் கீழ் முப்பது, நாற்பது டிகிரியாக இருக்கும். அப்போது கவனமாக இல்லாவிட்டால் உறைபனிக் கடியில் கால் விரல்களை இழக்க நேரிடும். கோடை காலத்தில், மேய்ப்பனுடைய ரத்தத்தையும் அவனுடைய குதிரைகளின் ரத்தத்தையும் கொசுக்கள் உறிஞ்சி எடுத்துவிடும். பெரும்பாலான மேய்ப்பர்கள் எட்டு அல்லது பத்து வருடங்களில் இந்த வேலையிலிருந்து விலகிவிடுவார்கள். அவர்கள் வேறு ஏதாவது வேலைக்குப் போவார்கள்; அல்லது காயம் காரணமாக எந்த வேலையும் செய்ய முடியாதவர்களாகி இருப்பார்கள். இரண்டு வருடங்களுக்கு முன்னால், நான்கு மாணவ மேய்ப்பர்கள் இதில் இருந்தோம்; ஆனால் இப்போது நான் மட்டுமே இருக்கிறேன்.''

''குதிரைகள் ஏன் கொல்வதற்கு ஏதுவாக ஓட்டம் பிடிக்கின்றன?''

''நிறைய காரணங்கள். முதலாவதாக, பனிக்காலத்தில் மிகவும் குளிராக இருக்கும் என்பதால் அவை கதகதப்புக்காக ஓடும். அடுத்து, இளவேனிற் காலத்தில் தோல் உரிவதற்கு வசதியாக அவற்றுக்கு நன்கு வியர்க்க வேண்டும் என்பதால் அவை ஓடும். கோடை காலத்தில் கொசுக்களிடமிருந்து தப்பிப்பதற்காக, காற்றுக்கெதிராக அவை ஓடும். இலையுதிர் காலத்தில், நல்ல மேய்ச்சல் நிலத்திற்காக அவை மாடுகளோடும் ஆடுகளோடும் மோத வேண்டியிருக்குமென்பதால் அவை வேகமாக விரைந்தோடும். ஆனால் முக்கியமாக அவை ஓநாய்களிடமிருந்து தப்பிப்பதற்காகவே ஓடுகின்றன. வருடம் முழுவதும் அவை வாழ்ந்திருப்பதற்காகவே ஓடுகின்றன. குதிரைகள் மேயும்போது நாய்கள் உடனிருப்பதில்லை; ஏனென்றால் அவை அடிக்கடி, மிக வேகமாக நகர்ந்துகொண்டிருக்கும். அதனால், நாய்களின் உதவியில்லாமல் ஒரு மேய்ப்பன் கோழைத்தனமிக்க ஒரு குதிரைக் கூட்டத்தைக் கண்காணிக்க வேண்டியிருக்கும். அவனால் எப்படி அதைச் செய்ய முடியும்? அமாவாசை இரவுகளில், ஓநாய்கள் குதிரைகளை இரையாக்கு வதற்காக அடிக்கடி வெளிவரும். அவை அதிக எண்ணிக்கையில் இல்லாத பட்சத்தில், மேய்ப்பனும்

அவனுடைய குதிரைகளும் அவற்றை நெருங்கவிட மாட்டார்கள். ஆனால் அது பெரிய கூட்டமாக இருந்தால், குதிரைகள் திடுக்குற்று, தோற்றுப்போன ராணுவத்தைப் போல ஓட்டமெடுக்கும். அந்த மாதிரி நேரங்களில் மேய்ப்பனால் எதுவும் செய்ய முடியாது.''

அவன் மேலும் தொடர்ந்தான். ''ஜெங்கிஸ்கானுடைய குதிரைப்படை ஏன் மிக விரைவாகப் பயணம் செய்ததென்பது இப்போது எனக்குப் புரிகிறது. அவனுடைய குதிரைகள் இரவை அடுத்து இரவென ஓநாய்களால் ஓட நிர்பந்திக்கப்பட்டதால், நீண்ட தொலைவைக் கடப்பதற்கான வேகமும் சக்தியும் அவற்றிடம் உருவாகின. இரவில் ஓநாய்கள் நடத்தும் தாக்குதலை நான் அடிக்கடி பார்த்திருக்கிறேன். ஓடும்போது பின்தங்கி விடுகிற முதிய, நோயுற்ற, சிறிய, மெதுவான குதிரைகளையும், குதிரைக்குட்டிகள் மற்றும் கர்ப்பமடைந்த பெண் குதிரைகளையும் அவை சூழ்ந்து உயிரோடு சாப்பிடும். உயிர் பிழைத்திருப்பதற்காகக் குதிரைகள் ஓடும்

சோகமான காட்சியை நீ ஒருபோதும் பார்த்திருக்க மாட்டாய். அவை வேர்க்க விறுவிறுக்க, வாயில் நுரை தள்ள ஓடும். ஓடும், ஓடிக்கொண்டே இருக்கும். தப்பிப்பதற்காக அவை தம்முடைய சகல சக்தியையும் பயன்படுத்தும்; அவை நின்றுவிட்டாலோ, கீழே விழுந்துவிட்டாலோ சாக வேண்டியதுதான். மிக வேகமாக ஓடக்கூடியவை, இடையில் நின்று வாய்ப்பு கிடைத்தால் கொஞ்சம் புல்லை விழுங்கிக்கொள்ளும். அவை கடும்பசியில் இருக்கும்போது எதை வேண்டுமானாலும், காய்ந்த நாணல்களைக்கூட சாப்பிடும்; அவை கடுமையான தாகத்தில் இருக்கும்போது எதையும், அழுக்குத் தண்ணீரையோ, ஆடு மாடுகளின் சிறுநீர் கலந்த தண்ணீரையோ கூடக் குடிக்கும். பலத்திலும், உள்ளுரத்திலும், ஜீரண சக்தியிலும், குளிர் மற்றும் வெப்பத்தைத் தாங்கிக்கொள்ளும் திறனிலும் மங்கோலியக் குதிரைகள் முதலிடம் வகிப்பவை. ஆனால் இந்த எல்லாத் தகுதிகளும், ஓநாய்களின் வேகம் மற்றும் கோரைப் பற்களால் வேறு வழியின்றி உருவாக்கப்பட்டவை என்பது குதிரை மேய்ப்பர்களுக்கு மட்டுமே தெரியும்.''

சாங்கின் விளக்கம் ஜென்னைப் பெரிதும் ஈர்த்தது. குதிரைக்குட்டியின் இறைச்சியையும் எலும்புகளையும் உள்ளே கொண்டுபோய் வைத்துவிட்டுத் திரும்பி வந்து தோலைக் குடிலின் உச்சிமீது போட்டான். ''நீ ஒரு குதிரை

மேய்ப்பனாக வல்லமை பெற்றுவிட்டாய். உன்னிடமிருந்து நிறைய தெரிந்துகொள்ள விரும்பு கிறேன். இங்கு வெக்கையாக இருக்கிறது. வா, உள்ளே போகலாம்.''

குடிலுக்குள் வந்த ஜென், பச்சை வெங்காயங்களை வெட்டி, மாவைப் பிசைந்து, இறைச்சியைக் கொத்தி, மிளகு எண்ணெயைக் கொதிக்க வைத்தான். மேய்ப்பர்களிடையே மிகவும் பிரசித்தி பெற்ற இறைச்சி பன்களை அவன் தயார் செய்தான்.

சாங் கொஞ்சம் குளிர்ந்த தேனீரைக் குடித்தபடியே தன் பேச்சைத் தொடர்ந்தான். ''நான் எல்லா நேரமும் குதிரைகளைப் பற்றியே நினைத்துக்கொண்டு இருக்கிறேன். என்னைப் பொறுத்தவரை, மங்கோலியக் குதிரைகளிடம் துன்பத்தைத் தாங்கும் வலிமையையும், முரட்டுத்தனத்தையும் பேணி வளர்த்தது ஓநாய்கள்தான். அதன்மூலம்தான், ஹூன் இனத்தார், துருக்கியர் மற்றும் மங்கோலியர்களின் குதிரைப்படை உருவானது.''

''வரலாற்றுப் புத்தகங்கள் சொல்வது என்னவென்றால், பழங்கால மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் மனிதர்களை விடவும் குதிரைகளே அதிகமாக இருந்தன'' என்றான் ஜென். ''மங்கோலியர்கள் போருக்குச் செல்லும்போது, ஒரு வீரர் ஐந்து அல்லது ஆறு குதிரைகளைக் கூட்டிச் செல்வார். ஒன்று மாற்றி ஒன்று எனப் பயணம் செய்வார். அதன்மூலம்தான் அவர்களால் ஒரு நாளில் ஆயிரம் லீ பயணம் செய்ய முடிந்தது. அவர்களிடம் நிறைய குதிரைகள் இருந்ததால், காயமடைந்தவற்றைப் போர் வீரர்களுக்கான உணவாக்கி விடுவார்கள். அவர்கள் குதிரை இறைச்சியை சாப்பிட்டதோடு, குதிரை ரத்தத்தையும் குடித்தார்கள். படை வீரர்களுக்கு உணவு வழங்குவதிலுள்ள சிரமத்தை இதன்மூலம் அவர்கள் தவிர்த்துவிட்டிருந்தார்கள்.''

ரொட்டி மாவைப் பிசைந்தபடியே ஜென் தொடர்ந்து பேசினான். ''ஆனால் நீ முக்கியமான ஒன்றைக் கண்டுபிடித் திருக்கிறாய். மங்கோலியப் போர்க் குதிரைகளுக்கு ஓநாய்கள் எப்படி பயிற்சி கொடுத்தன என்பது உண்மையிலேயே அபாரமான கண்டுபிடிப்பு. மங்கோலியர்கள் தீரமிக்கவர்களாகவும் மூர்க்கமானவர்களாகவும் அதே சமயம் இராணுவ உத்திகளில் தேர்ச்சி பெற்றவர்களாகவும் இருப்பதற்கு ஓநாய் குலச்சின்னமே

ஒரே காரணம் என்று நான் எண்ணிக்கொள்வது வழக்கம். ஆனால், மங்கோலிய நாடோடிக் கூட்டத்துக்கு உலகத் தரமான போர்க் குதிரைகளைத் திட்டமிடாத கடும் பயிற்சிகளின் மூலம் தந்தது ஓநாய்கள்தான் என்பதை நான் உணர்ந்திருக்கவில்லை. உன்னுடைய அவதானிப்பு அற்புதம்! நீ அங்கு உன் நேரத்தை வீணாக்கவில்லை.''

சாங் புன்னகைத்தான். ''ஒரு உண்மையான ஓநாய் ரசிகனிடமிருந்து நான் பெற்ற பாதிப்புகள்தான் இதற்குக் காரணம். கடந்த இரண்டு வருடங்களாக, வரலாற்றுப் புத்தகங்களிலிருந்து நீ கற்றுக்கொண்டதைப் பகிர்ந்திருக்கிறாய்; அதனால் நேரடி அனுபவங்களிலிருந்து நான் பெற்ற அறிவை உனக்குத் திருப்பிச் செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறேன்.''

ஜென் சிரித்தான். ''நியாயமான வியாபாரம். ஆனால் ஒரு விசயம் இன்னும் எனக்குத் தெளிவாகவில்லை. குதிரைக் குட்டிகளை ஓநாய்கள் எப்படிக் கொல்கின்றன?''

''அவற்றிடம் பல வழிகள் இருக்கின்றன. ஓநாய்கள் பல்லிகளைப் போல ஊர்ந்துவரும். தலை தூக்கிப் பார்க்காமலேயே, வாசனை மற்றும் சத்தத்தின் மூலமாகத் தங்களுடைய இரை இருக்குமிடத்தைத் தெரிந்துகொள்ளும். தாய்க் குதிரைகள் அடிக்கடி தங்ளுடைய குட்டிகளை மெதுவாகக் கூப்பிடும். அதன்மூலம் குதிரைக்குட்டிகள் இருக்குமிடத்தை ஓநாய்கள் தீர்மானித்துவிடும். அவற்றைச் சுற்றிப் பொலிகுதிரை ஏதுமில்லாவிட்டால், ஒரு குதிரைக்குட்டியின் மீது ஓநாய் பாய்ந்து அதன் கழுத்தைக் கடிக்கும். பின் அதை இழுத்துக்கொண்டு ஒதுக்குப்புறமான ஒரு இடத்துக்குச் செல்லும். பொலிகுதிரையோ தாய்க் குதிரையோ பார்த்துவிட்டால் உடனடியாக ஓடிப்போய்விடும். மந்தை நீங்கிய பிறகு வந்து அதைச் சாப்பிடும். ஏனென்றால் மந்தையால் அதை எடுத்துக்கொண்டுபோக முடியாது.''

அவன் மேலும் தொடர்ந்தான். ''மிகவும் தந்திரமான ஓநாய்கள், குதிரைக்குட்டிகளை ஏமாற்றுவதில் மிகுந்த திறமை பெற்றவை. குதிரைக்குட்டியின் பக்கத்தில் தாய்க்குதிரை இருப்பதை ஓநாய் அறிந்தால், அது புல் உயர்ந்திருக்கும் இடத்துக்கு ஊர்ந்து சென்று அங்கு பதுங்கியிருக்கும். அப்போது பாதங்களை மட்டும் வெளியில் நீட்டி முன்னும் பின்னுமாக ஆட்டும். ஒரு குறிப்பிட்ட தூரத்திலிருந்து பார்க்கும்போது, காட்டு

முயலின் காதுகளைப் போலவோ அல்லது அங்கு சுற்றித் திரியும் வேறேதாவது விலங்கினதைப் போலவோ இருக்கும். ஓநாய் அல்லது நாய் போல நிச்சயமாக இருக்காது. புதிதாகப் பிறந்த குதிரைக்குட்டிகளுக்கு இயல்பாகவே அது என்னதென்று பார்க்க ஆர்வமாக இருக்கும். அவை அங்கு ஓடிவரும். அதன் பக்கமிருந்து போக வேண்டாம் என்று தாய் தடுப்பதற்குள், ஓநாய் குதிரைக்குட்டியின் கழுத்தைக் கடித்துவிடும்.''

''சமயங்களில், ஓநாய்கள் மிருகங்களில்லை, பிசாசுகள் என்று நான் நினைப்பதுண்டு'' என்றான் ஜென்.

சாங் அதை ஏற்றுக்கொண்டான். ''நீ சொல்வது சரிதான். பகலில் குதிரைகள் இங்கும் அங்குமாக விரவியிருக்கும். நாங்கள் குதிரைகளோடு இருந்தாலும், எல்லாம் சரியாக இருக்கிறதா என்று நிச்சயம் செய்துகொள்வது மிகவும் சிரமம். இரவு வந்துவிட்டால் ஓநாய்கள் தங்கள் இஷ்டம்போல் புகுந்து விளையாடும். பொலி குதிரைகள், பெண்களையும் குட்டிகளையும் பத்திரமாக மந்தையின் உள் பகுதிக்குள் வைத்திருக்கும். ஒரு டஜன் பொலிகுதிரைகள் ஒன்று சேர்ந்து தற்காப்பு செய்யும்போது, சுமாரான அளவிலான ஓநாய்க் கூட்டத்தால் அதை உடைத்துக்கொண்டு உள்ளே போக முடியாது. ஆனால் சீதோஷ்ண நிலை மோசமாக இருந்து, ஓநாய்களும் கடும் பசியோடு இருந்தால் பொலிகுதிரைகளால் அவற்றைக் கட்டுப்படுத்த முடியாது. அப்போது எங்களுடைய லைட்டுகள் மற்றும் துப்பாக்கிகள் மூலம் நாங்கள் மந்தையைப் பாதுகாக்க வேண்டும். நாங்கள் தவறினால், ஓநாய்கள் மந்தைக்குள் நுழைந்து குதிரைக்குட்டிகளைக் கொன்றுவிடும். இச்சமயத்தில் ஓநாய்க்குட்டிகளும் வளர்ந்து விட்டிருக்கும் என்பதால் உணவுக்கான தேவை கணிசமாக அதிகரித்திருக்கும். அவற்றால் மான்களையோ மர்மோட்டுகளையோ பிடிக்க முடியாதபோது, அவற்றின் கவனம் குதிரைக்குட்டிகளின் பக்கம் திரும்பும்.''

''ஒவ்வொரு வருடமும் எவ்வளவு இழப்பு ஏற்படுகிறது?'' சாங் ஒரு கணம் யோசித்தான். ''நானும் பட்டுவும் சேர்ந்து கடந்த வருடம் பார்த்த மந்தையில் நூற்றுப் பத்து குதிரைக் குட்டிகள் இருந்தன. ஆனால் இந்தக் கோடையின்போது நாற்பது குட்டிகள் எஞ்சியிருக்கின்றன. எழுபது குட்டிகள் ஓநாய்களால் கொல்லப்பட்டன அல்லது சாப்பிடப்பட்டன. அதாவது அறுபது சதவீத இழப்பு. ஆனால் முகாமிலேயே இதுதான் சிறந்த சாதனை. பிரிவு

நான்கில் கிட்டத்தட்ட ஒரு டஜன் குட்டிகளே எஞ்சியிருக் கின்றன; எண்பது சதவீத இழப்பு. ஒட்டுமொத்த மேய்ச்சல் நிலத்தில் ஒவ்வொரு வருடமும் ஏற்படும் சராசரி இழப்பு எவ்வளவு என்று ஒருமுறை உல்ஜீயிடம் கேட்டேன். பொதுவாக எழுபது சதவீதம் என்றார் அவர்.''

''இறப்பு விகிதம் மிக அதிகம்தான். குதிரை மேய்ப்பர்கள் ஓநாய்களை இந்தளவு வெறுப்பதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை.''

ஜென் பன்களைத் தயாரிப்பதற்கு உதவும் வகையில் சாங்கும் கைகளைக் கழுவிக்கொண்டான். ''நாம் எவ்வளவு களைப் படைந்தாலும் சரி அல்லது வேலை எவ்வளவு கடினமானதாக இருந்தாலும் சரி அவையின்றி நம்மால் இருக்கமுடியாது. ஓநாய்கள் இல்லாவிட்டால் குதிரைகளின் தரம் குறைந்துவிடும் என்கிறான் பட்டு. அவை கொழுத்துப் பெருத்து, சோம்பேறிகளாகி ஓட முடியாமல் ஆகிவிடும். மங்கோலியக் குதிரைகள் குள்ளமானவை; அவற்றின் வேகமும், நீடித்திருக்கும் சக்தியும்தான் அவை நல்ல விலைக்குப் போகக் காரணம். மேலும், ஓநாய்கள் இல்லாவிட்டால் மந்தையின் வளர்ச்சி அபரிமிதமாக இருக்கும். மூன்று அல்லது நான்கு வருடங்களில் மந்தையிலிருக்கும் குதிரைகளின் எண்ணிக்கை இரு மடங்காகிவிடும். இயல்பான நிலைமைகளில், நாம் நான்கு அல்லது ஐந்து வயதுக் குதிரைகளையே விற்போம். வயல் எலிகளையும் முயல்களையும் தவிர்த்தால், வேறெந்த விலங்கையும்விட மேய்ச்சல் வெளியில் அதிக சேதாரத்தை ஏற்படுத்துவது குதிரைகள்தான் என்று உல்ஜீ சொன்னார். பல மாடுகள் சாப்பிடக்கூடிய புல்லை ஒரு குதிரை சாப்பிடும். அதேபோல, நூறு ஆடுகள் சாப்பிடக்கூடிய புல் ஒரு குதிரைக்குத் தேவைப்படும். குதிரைப் பெருக்கத்தை நாம் கட்டுப்படுத்தா விட்டால், இன்னும் சில வருடங்களில் ஆடு மாடுகளுக்குப் புல்லிருக்காது. ஓலோன்புலாக் பாலைவனமாகிவிடும்.''

''ஆக, குதிரைகளின் பிறப்புக் கட்டுப்பாடு ஓநாய்கள் மூலம் மேற்கொள்ளப்படுகிறது. அதன் மூலம் குதிரைகளை வளர்ப்பதும், அவற்றின் தரத்தைப் பேணுவதும் சாத்தியமாகிறது. சரிதானா?''

''ஆனால் இன்றைய நாட்களில், எல்லா அதிகாரிகளும் விவசாயப் பகுதிகளிலிருந்து வந்தவர்களே. மேய்ச்சல்நில வாழ்க்கை பற்றி அவர்களுக்கு எதுவும் தெரியவில்லை. அவர்கள் கவனமெல்லாம் எண்ணிக்கையை

அதிகரிப்பதில் மட்டுமே உள்ளது. ஓநாய்கள் இல்லாவிட்டால், மங்கோலியக் குதிரைகள் விலை போகாது. மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் மஞ்சள் மண் மட்டுமே பரந்து விரிந்து கிடக்கும். ஆடுகளும் மாடுகளும் பட்டினியால் சாக நேரிடும். நாம் பீஜிங்கிற்குத் திரும்பிவிடுவோம்.''

இறைச்சி பன்கள் ஆவி பறக்க வெளியில் எடுக்கப்பட்டன. ஜென் அதில் ஒன்றை எடுத்து, அதன் சூட்டைத் தணிப்பதற்காக ஒரு கையிலிருந்து இன்னொரு கைக்குத் தூக்கிப் போட்டான். பிறகு, அதைக் கடித்தான். ''அற்புதம்'' என்றான் அவன். ''அடுத்தமுறை, ஒரு குதிரைக்குட்டி காயமடையும்போது, தவறாமல் இங்கு கொண்டு வா.''

''மற்ற மூன்று குடில்களும் இதை எதிர்பார்க்கின்றன. எனவே, இதற்கு நாம் முறை வைத்துக்கொள்ளலாம்.''

''குறைந்தபட்சம், ஓநாயால் கடிக்கப்பட்ட பாகங்களையாவது, ஓநாய்க்குட்டிக்குக் கொடுப்பதற்காக எனக்குக் கொண்டு வா.'' ஒரு நீராவிப் பாத்திரத்திலிருந்து எடுக்கப்பட்ட பன்களை நண்பர்கள் இருவரும் சாப்பிட்டு முடித்தார்கள். ஜென் எழுந்துகொண்டான். ''ஓநாயால் அளிக்கப்பட்ட உணவை நாம் எத்தனையோ முறை அனுபவித்திருக்கிறோம். வா, நாம் போய் ஓநாய்க்குட்டி மீது இறைச்சி பன் எறிந்து விளையாடுவோம்'' என்றான் ஜென்.

பன்களின் சூடு தணியும்வரை அவர்கள் காத்திருந்தார்கள். பின் ஆளுக்கொன்றைக் கையில் எடுத்துக்கொண்டு, குடிலை விட்டு சந்தோஷமாக வெளியேறி இளம் ஓநாயிடம் சென்றார்கள்.

''குட்டி ஓநாய், குட்டி ஓநாய், சாப்பாட்டு நேரம்'' என்று ஜென் கத்தினான். இரண்டு இறைச்சி பன்கள் அதன் தலையிலும் உடம்பிலும் மெதுவாக விழுந்தன. அது மிரண்டுபோய், வாலைக் கால்களுக்குள் இடுக்கிக்கொண்டு வேகமாக ஓடிச்சென்று குழிக்குள் பதுங்கிக்கொண்டது. எல்லோவும் யிர்ரும் உடனடியாக வந்து இறைச்சி பன்களைக் கவ்விக்கொண்டன.

ஜென் சிரித்தபடியே சொன்னான். ''நாம் சரியான முட்டாள்கள். அது இதுவரை இறைச்சி பன்னைப் பார்த்ததில்லை. எனவே, அது நல்லதா, கெட்டதா என்று அதற்கெப்படித் தெரியும்? ஓநாய்கள் இயல்பிலேயே நம்பிக்கை இல்லாதவை; ஆனால் என்ன அநியாயம், இது என்னைக்கூட நம்பமாட்டேன் என்கிறது.

அனேகமாக, அவை கற்களென்று அது நினைத்திருக்கும். ஏனென்றால், இந்த வழியாகச் செல்லும் மங்கோலியச் சிறுவர்கள் அதன்மீது கற்களை எறிய வாய்ப்பு கிடைத்தால் அதைச் செய்யத் தவறுவதில்லை.''

சாங் அதன் குழிப் பக்கமாகச் சென்றான். ''இது அழகிய சிறு குட்டி'' என்று புன்னகைத்தபடி சொன்னான். ''அதைக் கையில் எடுத்துக்கொண்டு, அதோடு விளையாட வேண்டும் போலிருக் கிறது.''

''அது என்னோடும் யாங் கீயோடும் மட்டும்தான் விளையாடும். நாங்கள் இருவர் மட்டுமே அதைக் கையில் எடுப்பவர்கள். காவோ, அதைத் தொடக்கூட மாட்டான். கடித்து விடும் என்கிற பயம். நீ முயற்சிக்க வேண்டாமென்று நினைக்கிறேன்.''

சாங் குனிந்து குழிக்குள் நன்றாகப் பார்த்தான். ''ஓநாய்க்குட்டி, உனக்குக் குதிரை இறைச்சியைக் கொண்டு வந்தது நான்தான் என்பதை மறந்துவிடாதே. உனக்கு உணவு அளித்த ஒரு நண்பனை நீ மறக்க மாட்டாய் என்று நினைக்கிறேன், சரிதானே.'' அவன் மேலும் சில முறை கூப்பிட்டான். ஆனால் ஓநாய்க்குட்டி அதன் கோரைப் பற்களைக் காட்டி, வெளியில் வர மறுத்தது.

சாங் சங்கிலியைப் பிடித்து இழுக்க முற்பட்டதுதான் தாமதம்; ஓநாய்க்குட்டி குழியிலிருந்து தாவி வெளியில் வந்து, வாயைத் திறந்து கடிக்கத் தயாரானது. சாங் மிக வேகமாகப் பின்னுக்கு நகர்ந்ததில் அவன் கீழே விழுந்தான். ஜென் அதனுடைய கழுத்தைச் சுற்றிக் கையால் அணைத்தபடி அதைத் தடுத்தான். பின் அதன் தலையைத் தடவிக் கொடுத்து அமைதிப்படுத்தினான்.

ஒட்டியிருந்த தூசியைத் தட்டி விட்டபடி சாங் எழுந்துகொண்டான். ''பரவாயில்லை. காட்டில் இருப்பவற்றைப் போலவே இது இன்னமும் மூர்க்கமாகத் தானிருக்கிறது. இது நாயாகி விட்டால் பின் அதில் என்ன சுவாரஸ்யம் இருக்கிறது. நான் அடுத்த முறை வரும்போது, இன்னும் கொஞ்சம் குதிரை இறைச்சி இதற்காகக் கொண்டு வருகிறேன்.''

சாங், 'கடல் ஓநாய்' புத்தகத்தைத் திருப்பிக் கொடுத்துவிட்டு, 'உலக வரலாறு' புத்தகத்தை எடுத்துக்கொண்டான்.

''ஓநாய்க்கூட்டம் இன்றிரவு இங்கு வருமென்று என் அனுபவம் சொல்கிறது. அதனால் கவனமாக இரு. நம்முடைய ஓநாய்க்குட்டியை அவை

எடுத்துக்கொண்டு போக விட்டுவிடாதே. அவை வெடிகளுக்குப் பயப்படும். ஆட்டுக் கூட்டத்துக்குள் அவை வந்துவிட்டால், வெடிகளை வீசி எறி. போனமுறை வந்தபோது நான் தந்த வெடிகள் இன்னமும் உலர்ந்த நிலையில் இருக்கிறதா என்பதை சரிபார்த்துக் கொள்.''

''அவற்றை மெழுகுத்தாளில் சுற்றி, மரப் பெட்டிக்குள் யாங் கீ வைத்திருக்கிறான். அதனால் அவை நன்றாகத்தான் இருக்கும். சில நாட்களுக்கு முன்பு, இடம் பெயர்ந்து வந்திருக்கும் சிலரோடு அவனுக்கு சண்டை ஏற்பட்டது. அப்போது அதில் மூன்றை அவன் கொளுத்திப் போட்டான். பயந்து ஓடிவிட்டார்கள்.''

சாங் ஜியோன் குதிரை மீதேறி, தன் மந்தையை நோக்கிச் சென்றான்.

# 26

இரவு உணவுக்குப் பின்னர், பாவோ சுங்காய் பில்ஜியின் இடத்தி லிருந்து ஜென்னின் குடிலுக்கு வந்தார். அவர் ஆறு பேட்டரிகள் தேவைப்படும் ஒரு பெரிய ஃப்ளாஷ் லைட்டை ஜென்னுக்கும் யாங்குக்கும் கொடுத்தார். அது ஒரு கருவி மட்டுமல்ல, ஆயுதமும் கூட. பொதுவாக, குதிரை மேய்ப்பர்கள் மட்டுமே அதைப் பயன்படுத்தத் தகுதி பெற்றவர்கள். அந்தப் பரிசு ஒரு முக்கியமான காரியத்துக்காக ஜென்னுக்கு அளிக்கப்பட்டிருந்தது.

''ஓநாய்கள் ஆட்டுக்கூட்டத்தின் அருகில் வந்தால், இந்த ஃப்ளாஷ் லைட்டை எரியவிடு. வெடிப் பொருட்களைப் பயன் படுத்த வேண்டாம். நான் ஏற்கெனவே சுற்றி இருப்பவர்களிடம், உன்னிடமிருந்து வெளிச்சம் வருவதைப் பார்த்ததும் அவர்களுடைய நாய்களோடு விரைந்து இங்கு வர வேண்டுமெனச் சொல்லி யிருக்கிறேன்.''

பாவோ புன்னகைத்தபடியே தொடர்ந்தார். ''இந்த ஓநாய்க் குட்டியை வளர்ப்பது, இவ்வளவு நல்லபடியாக அமையுமென்று நான் உணர்ந்திருக்கவில்லை. தாய் ஓநாயும் அதோடு சேர்ந்து ஓநாய்க் கூட்டமும் இன்றிரவு வந்தால், நாம் அவற்றில் ஏழு அல்லது எட்டைக் கொன்றுவிடலாம். அவற்றின் குட்டிகளில் ஒன்றின் மூலமாக நமக்கு ஒரு நல்ல வாய்ப்பு கிடைத்திருக்கிறது. நீங்கள் இருவரும் மிகவும் கவனமாக இருக்கவேண்டும். இதிலிருந்து வரும் வெளிச்சம், பல நிமிடங்களுக்கு ஒருவரைப் பார்வை இழக்கச் செய்யும். ஓநாய்களுக்கு இன்னும் அதிக நிமிடங்கள் அப்படி ஆகிவிடும். எதற்கும் தேவைப்பட்டால் பயன்படுத்த, மண்வெட்டி களையும் தடிகளையும் தயாராக வைத்துக்கொள்ளுங்கள்.''

ஜென்னும் யாங்கும் உறுதியளித்ததும், பாவோ மற்ற குடில்களுக்குச் சென்று, துப்பாக்கிகளைப் பயன்படுத்தக் கூடாதென்று அறிவுறுத்தினார். அதன் மூலம், ஓநாய்கள் மிரண்டு ஓடினால் மக்களுக்கும் அவர்களுக்கும் காயம் ஏற்படும். பிறகு, அவர் அங்கிருந்து வேகமாகச் சென்றார்.

ஓநாய்களை அவற்றின் ஒரு குட்டி மூலம் வர வைப்பதென்பது மேய்ச்சல்நில மக்களிடையே ஒருவித ஆர்வத்தை ஏற்படுத்தியிருந்தது. இதற்குமுன் இப்படியான ஒன்று நடந்ததில்லை என்பதால் அதன் விளைவுகளை

அவர்களால் யூகிக்க முடியவில்லை. ஓநாய்களை மிகத் தீவிரமாக வெறுத்த சில இளம் மேய்ப்பர்கள் ஜென்னையும் யாங்கையும் பார்ப்பதை இதுவரை தவிர்த்து வந்தார்கள். ஆனால் அவர்களும் இப்போது வந்து, அந்த இடத்தின் அமைப்பைத் துல்லியமாக அவதானித்தார்கள். இந்தப் புதிய வேட்டை உத்தி அவர்களை அளவுக்கதிகமாக குஷிப் படுத்தியிருந்தது.

‘‘பெண் ஓநாய்கள், தங்களுடைய குட்டிகளைப் பேணிப் பாதுகாப்பதில் மிகவும் கவனமாக இருப்பவை. அவற்றின் குட்டிகளில் ஒன்று இங்கிருப்பது தெரிந்தால் அவை வருவது நிச்சயம்’’ என்றான் ஒரு மேய்ப்பன்.

‘‘ஒவ்வொரு இரவும் அவற்றை நான் பார்க்க விரும்புகிறேன். அப்போதுதான் ஒவ்வொரு நாளும் நாம் அவற்றைக் கொல்ல முடியும்’’ என்றான் இன்னொருவன்.

‘‘ஒரு தந்திர வலையில் இரண்டு தடவைகள் ஓநாய்கள் விழாது’’ என்றான் ஒரு குதிரை மேய்ப்பன்.

‘‘முழு ஓநாய்க் கூட்டமும் சேர்ந்து தாக்குதல் நடத்தினால் என்னாகும்?’’ என்று ஒரு ஆடு மேய்ப்பன் கேட்டான்.

‘‘அவற்றைவிட நம் நாய்களின் எண்ணிக்கை அதிகம். அவை போதவில்லை என்றால், நம்முடைய லைட்டுகளோடும் கூச்சல் கூப்பாடுகளோடும் நாமும் சேர்ந்துகொள்ளலாம். நாம் துப்பாக்கியால் சுடலாம் அல்லது வெடிகளை வெடிக்கலாம்’’ என்று அவன் பதில் சொன்னான்.

அவர்கள் எல்லோரும் சென்ற பிறகு, கம்பளிப் போர்வை விரிப்பில், ஓநாய்க்குட்டிக்குப் பக்கத்தில் ஜென்னும் யாங்கும் உட்கார்ந்துகொண்டார்கள். அவர்களுடைய இதயம் கனத்திருந்தது. குற்றவுணர்வு அவர்களை வாட்டியது.

‘‘இது ஈவிரக்கமல்லாத செயல்’’ என்றான் யாங். ‘‘ஓநாய்க்குட்டி மூலம் தாய் ஓநாய் வெற்றிகரமாக வரவழைக்கப்பட்டு விட்டால், அதனுடைய குகையை நாம் சூறையாடியதும் இல்லாமல், அதனுடைய தாய்ப் பாசத்தால் அதைக் கொல்லவும் போகிறோம். இந்த நாளில் நாம் செய்யும் இந்தக் குற்றம் வாழ்நாள் முழுவதும் நம்மை இம்சிக்கப் போகிறது.’’

‘‘இந்த ஓநாய்க்குட்டியை வளர்க்க விரும்பியது அவ்வளவு நல்ல விசயமில்லை என்றே தோன்றுகிறது’’ என்றான் ஜென். அவன் தலை குனிந்திருந்தது. ‘‘இந்த

ஒன்றுக்காக ஆறு ஓநாய்க்குட்டிகள் உயிரிழந்திருக்கின்றன; இன்னும் எத்தனை சாகவிருக்கின்றன என்று யாருக்குத் தெரியும். ஆனால் இப்போது என்னால் அதைக் கைவிட முடியாது. அறிவியல் பரிசோதனை என்பது சமயங்களில் இறைச்சிக்கான கொலைச் செயலைப் போன்றதுதான். பாவம் பில்ஜி, அவருக்குத்தான் ரொம்ப சிரமம். ஆனால் மேய்ச்சல் நிலத்திற்காகவும் அதன் மக்களுக்காகவும், ஒருவரை ஒருவர் சார்ந்து வாழும் சமநிலையைப் பேணிப் பாதுகாப்பதற்குத் தேவையான எல்லாவற்றையும் அவர் மேற்கொள்வார். நான் டெஞ்ஞரிடம், தாய் ஓநாய்களிடம் இன்றிரவோ அல்லது வரும் இரவுகளிலோ இங்கு வரவேண்டாம் என்று சொல்லும்படி கேட்டுக்கொள்ள விரும்புகிறேன். எனக்கு இன்னும் கால அவகாசம் கொடுத்தால் அது கொஞ்சம் நன்றாக வளர்ந்ததும் அதன் தாயிடம் ஒப்படைத்துவிடுவேன்.''

பின்னிரவில், போருக்கான அவர்களுடைய தயாரிப்புகளை சோதித்துப் பார்ப்பதற்காக பில்ஜி வந்தார். அவர்களோடு உட்கார்ந்து, எதுவும் பேசாமல், பைப்பில் புகை பிடித்தார். பிறகு, ''இன்னும் சில நாட்களில் கொசுக்கள் படையெடுத்துவிடும்; குதிரைகளின் பாடு திண்டாட்டம்தான்'' என்று மெதுவாக, அவர்களை ஏதோ ஆறுதல்படுத்துவதுபோலச் சொன்னார்.

''இன்றிரவு தாய் ஓநாய் வருமென்று நினைக்கிறீர்களா, அப்பா?'' யாங் கீ கேட்டான்.

''நிச்சயமாக எதுவும் சொல்ல முடியாது. மனிதர்களால் வளர்க்கப்பட்ட ஒரு ஓநாய்க்குட்டி மூலம் தாய் ஓநாயை வசியம் செய்வதைப் போன்ற ஈவிரக்கமற்ற ஒரு காரியத்தை இதுவரை நான் பார்த்ததில்லை. இதுவரை கேள்விப்பட்டதுமில்லை. ஆனால் இயக்குனர் பாவோ அதைத் தூண்டில் இரையாகப் பயன்படுத்தும்படி உத்தரவிட்டிருக்கிறார். நிறைய குதிரைக்குட்டிகள் இறந்துவிட்டதால், குதிரை மேய்ப்பர்கள் சில ஓநாய்களைக் கொன்று தங்கள் கோபத்தைத் தணித்துக்கொள்ளட்டும் என்கிறார் அவர்.''

முதியவர் கிளம்பிப் போனார். மேய்ச்சல் வெளி மிகவும் அமைதியாக இருந்தது. ஆடுகள் அசைபோடும் சத்தமும், எப்போதாவது, கொசுக்களை விரட்டுவதற்காகக் காதுகளை அசைக்கும் சத்தமும் கேட்டன. முதல் கொசுக்கூட்டம் சத்த மில்லாமல் வந்துவிட்டிருந்தது; பெரும்படை இனிதான் வரவிருக்கிறது.

இருவரும் கொஞ்சநேரம் மெதுவாகப் பேசிக்கொண்டிருந்தார்கள். ஜென் முதலில் படுக்கப் போனான். ஜென் தன்னுடைய மின்னும் கைக்கடிகாரத்தில் நேரம் பார்த்தான். பெரிய ஃப்ளாஷ் லைட்டைக் கையில் ஏந்தியபடி, அந்தப் பகுதியைக் கவனமாகக் கண்காணித்தான். வெடிகள் நிறைந்த பை அவனுடைய கழுத்தில் தொங்கிக்கொண்டிருந்தது.

குதிரை இறைச்சியை சாப்பிட்டு முடித்ததும், ஓநாய்க்குட்டி அதனுடைய பட்டியின் விளிம்பில் உட்கார்ந்துகொண்டது; சங்கிலியை முழுவதுமாக இழுத்துக்கொண்டு, காதுகள் விடைத்திருக்க, அது கேட்பதற்காக ஏங்கியிருந்த சத்தங்களுக்காக ஆவலுடன் காத்திருந்தது. அதன் ஒளிரும் கண்கள் மலை முகட்டை ஊடுருவுவதைப்போல் காணப்பட்டன; தன் உறவினருக்காக ஏங்கித் தவிக்கும் ஒரு அனாதையைப்போல அது மிகுந்த சோகத்தோடு இருந்தது.

நள்ளிரவுக்குப் பிறகு, ஊளைகள் வெளிப்பட்டன. ஓநாய்கள் எறிகுண்டுகளைப் போல இரைச்சல்மிக்க தாக்குதலைத் தொடங்கின. மூன்று பக்கங்களிலிருந்தும் கடுமையான ஊளைகள், எதிரியை வீழ்த்தும் தீவிர முனைப்போடு வெளிப்பட்டன. நாய்கள் உடனடியாக, பலமான குரைப்புகள் மூலம் எதிர்த் தாக்குதலை மேற்கொண்டன. ஊளை நின்றது; ஆனால் நாய்கள் அமைதியான அடுத்த கணமே மீண்டும் தொடங்கியது. இம்முறை எப்போதும் இல்லாத அளவுக்குப் படு மூர்க்கமாக இருந்தது. ஆனால் நாய்கள் இடை இடையேதான் குரைத்தன; உடனடி அபாயமேதும் இல்லை என்பதை உணர்ந்ததுபோல் தெரிந்தது; அல்லது உண்மையான யுத்தத்திற்காக அவை தம் குரல்களை சேமித்து வைத்திருக்க முடிவு செய்திருக்கலாம்.

ஜென் சென்னும் யாங் கீயும் உடனடியாக, ஓநாய்க்குட்டி என்ன செய்கிறது என்பதைக் கவனிப்பதற்காக மங்கிய நட்சத்திர ஒளியில் அதை நோக்கி நடந்து சென்றார்கள். ஓநாய்க்குட்டி ஒருவித பதற்றத்துடன் வட்டமடித்துக்கொண்டிருந்ததால், சங்கிலியின் கணீர் சத்தம் ஒலித்துக்கொண்டிருந்தது. அது ஓநாயைப் போல குரல் எழுப்ப பாவனை செய்தது; ஆனால் குரைக்கும் நாய்கள் அதைச் சூழ்ந்திருந்ததால், அது நாயைப் போலக் குரைக்கத் தொடங்கியது. எர்லாங், எல்லோ மற்றும் யிர்

அதன் பக்கத்தில் இருந்தன. பாதி ஊளை, பாதி குரைப்பு என்பதாக, அதற்கான பிரத்தியேக ஒலியைக் கண்டுபிடிக்க மிகவும் சிரமப்பட்டது.

மற்ற நாய்கள் பின்தொடர எர்லாங், ஆட்டுக் கூட்டத்தின் வடமேற்கு முனையில் மிகுந்த பதற்றத்துடன் முன்னும் பின்னுமாக ஓடியது. அவை தொடர்ந்து குரைத்தன. எதிரியின் இருப்பிடத்தைக் கண்டுகொண்டு விட்டதைப் போல அவற்றின் செயல்கள் இருந்தன. சீக்கிரமே அந்தத் திசையிலிருந்து ஓநாயின் ஊளைகள் கேட்கத் தொடங்கின. ஜென்னுடைய ஆட்டுக் கூட்டத்துக்குப் பக்கத்தி லிருந்து வருவது போலிருந்தது. மற்ற குழுவினரின் நாய்கள் கொஞ்சம் கொஞ்சமாகக் குரைப்பதை நிறுத்தின. ஜென்னுடைய குடிலுக்குப் பின்னாலுள்ள குன்றுகளில் அவை ஒன்று கூடுவதைப் போலத் தோன்றியது. ஜென்னுடைய உதடுகள் நடுங்கின. ''பிரதான படை, ஓநாய்க்குட்டி இருக்கும் இந்த இடத்தை நோக்கி இருக்கிறது'' என்று மெதுவாகச் சொன்னான்.

யாங்கிற்கு அச்சம் அதிகரித்தது. ஃப்ளாஷ் லைட்டை இறுகப் பற்றிக்கொண்டான். வெடிகள் இருக்கும் பையைத் தொட்டுப் பார்த்துக்கொண்டான். ''அவை நம்மைக் குறி வைத்துத் தாக்கினால் நான் பின்வாங்கப் போவதில்லை. நான் இவற்றைக் கூட்டத்தின்மீது வீசுகிறேன். நீ ஃப்ளாஷ் லைட் மூலம் சைகை அளி.''

நாய்கள் ஒருவழியாகக் குரைப்பதை நிறுத்தின. ஜென், யாங்கிடம் கிசுகிசுத்தான். ''கீழே குனிந்திருந்து ஓநாய்க்குட்டியைக் கவனி. அது ஊளையிடப் போகிறது.''

நாய்களின் குறுக்கீடு இல்லாமல் போனதால், காட்டிலிருந்து வரும் ஊளைகளை ஓநாய்க்குட்டி உன்னிப்பாகக் கேட்டது. அது தன்னுடைய மார்பை நிமிர்த்தி, காதுகளை விடைப்பாக வைத்துக்கொண்டு, கண்களை மூடியது. அந்த சப்தத்தை பாவனை செய்வதற்கு முன்பாக, அதைக் கவனமாகக் கேட்கக் கற்றுக்கொண்டது. ஊளைகள் அதை இலக்காகக்கொண்டே வந்தன. குரலின் ஆதாரத்தை அடையாளம் காண ஒருவித பதற்றத்துடன் அது முயற்சித்தது. ஊளைகள் மூன்று பக்கங்களிலிருந்தும் வந்ததால் அது சுற்றிச் சுற்றி ஓடத் தொடங்கியது.

மிகவும் கவனமாகக் கேட்ட ஜென், அந்த இரவில் வெளிப்பட்ட ஊளைகளில் ஒரு வித்தியாசம் இருப்பதைக் கண்டுபிடித்தான். கடந்த இரவில் அவை பெரும்பாலும் ஒன்றுகூடி, மனிதர்களைத் தொல்லைப்படுத்தும் நோக்கோடு ஊளையிட்டன. ஆனால் இப்போது குரல்களில் வேறுபாடுகள் தென்பட்டன; சில உச்ச ஸ்தாயியில், சில கீழ் ஸ்தாயியில், கேள்வி கேட்பது போலவும், பரிசோதிப்பது போலவும் வெளிப்பட்டன. ஒரு தாய் தன் குட்டியை அழைப்பது போலவும் இருந்தது. அவற்றைக் கேட்டபோது அவன் உடல் சிலிர்த்தது.

தாய் ஓநாய் தன் குட்டியிடம் காட்டும் பாசம் பற்றிப் பல கதைகள் இருக்கின்றன. வேட்டையைக் கற்றுக் கொடுப்பதற்காக, மிக அபாயகரமான, அச்சுறுத்தும் சூழ்நிலையிலும்கூட அது ஆட்டுக்குட்டியைப் பிடிக்கக் கடும் சவாலை மேற்கொள்ளும்; குகைகளில் இருக்கும் குட்டிகளைக் காப்பாற்றுவதற்காக அது வேட்டைக்காரர்களோடு மரணப் போராட்டம் நடத்தும்; குட்டிகளின் பாதுகாப்புக்காக ஒவ்வொரு இரவும் வெவ்வேறு இடங்களுக்கு அவற்றை எடுத்துச் செல்லும்; கூட்டத்தின் நலனுக்காக, குட்டிகளை இழந்த பெண் ஓநாய்கள் மற்றவற்றின் குட்டிகளைப் பேணும்.

அத்தருணத்தில், ஓநாய்க்குட்டியின் கழுத்துப்பட்டையைக் கழற்றிவிட்டு, அதை அதன் அம்மாவோடும் மற்ற எல்லா அம்மாக்களோடும் போய்ச் சேர விட்டுவிட வேண்டுமென்ற எண்ணம் அவனுள் எழுந்தது. ஆனால் அதைச் செய்ய அவனுக்குத் துணிவில்லை. முகாமின் கட்டுப்பாட்டிலுள்ள பகுதியை விட்டு ஓநாய்க்குட்டி வெளியேறினால், மறுகணம் அவனுடைய மற்றும் அண்டை வீட்டாருடைய நாய்கள் அதைக் கண்ட துண்டமாகப் பிய்த்துவிடும்.

ஊளைகளில் காணப்படும் வித்தியாசத்தை ஓநாய்க்குட்டியும் கண்டுகொண்டதைப் போல் தெரிந்தது. எல்லாப் பக்கங்களிலிருந்தும் அந்த சப்தங்கள் வந்துகொண்டிருந்ததால், தான் என்ன செய்ய வேண்டுமென்பது அதற்குத் தெரியவில்லை. ஊளைகள் கொஞ்சம் கொஞ்சமாக, எவ்விதப் பதிலும் கிடைக்காததால், நின்றுபோயின. ஓநாய்க்குட்டியின் மௌனத்தில் அவை அனேகமாக குழம்பிப் போயிருக்கலாம்.

அத்தருணத்தில், ஓநாய்க்குட்டி தன்னை நிலைநிறுத்திக் கொண்டு, தலை குனிந்து, பரிசோதிப்பது போல முதல் சப்தத்தை வெளிப்படுத்தியது. பிறகு, நன்றாக மூச்சிழுத்துக்கொண்டு, தலை நிமிர்த்தி, இரண்டாவது சப்தத்தை

உருவாக்கியது. ஓரளவு அது ஊளை போலிருந்தது. தொலைதூர ஊளைகள் சட்டென நின்றன. அது என்ன சப்தம்? ஓநாய்க்கூட்டம் காத்திருந்தது.

ஒரு கணத்துக்குப் பிறகு, ஓநாய்க்கூட்டத்திலிருந்து ஓநாய்க்குட்டியின் சப்தத்தை எதிரொலிப்பது போல ஒரு சப்தம் வெளிப்பட்டது; அனேகமாக அது ஒரு இளம் ஓநாயின் குரலாக இருக்கலாம். ஓநாய்க்குட்டிக்குக் குழப்பமாக இருந்தது. அதனால் என்ன கேட்கப்படுகிறது என்பதைப் புரிந்துகொள்ள முடிய வில்லை.

ஓநாய்க்குட்டி தலை குனிந்து மூச்சை மிக ஆழமாக உள்வாங்கியது. பிறகு தலை உயர்த்தி நீண்டதொரு சப்தத்தை வெளியிட்டது. கடந்த இரவின் உச்சத்தை இம்முறை அது எட்டி யிருந்தது. அதனுடைய முயற்சியில் அது சந்தோஷமடைந்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அது, அடுத்தடுத்து நீண்ட ஊளைகளை, ஓநாய்க் கூட்டத்திடமிருந்து பதில் வருவதற்காகக் காத்திருக்காமல், வெளியிட்டபடி இருந்தது.

எர்லாங்கின் தலைமையில் நாய்கள் வடமேற்குத் திசையை நோக்கிப் படுமூர்க்கமாகக் குரைத்தன. அவை நிறுத்தியதும், ஓநாய்க்குட்டி மீண்டும் ஊளையிடத் தொடங்கியது. கொஞ்சம் கொஞ்சமாக, நாய்களின் இடையீட்டைப் பொருட்படுத்தாமல் இருக்கப் பழகிக்கொண்டதோடு, மிக நேர்த்தியாகவும் துல்லிய மாகவும் ஓநாய் ஊளைகளை அது உருவாக்கியது. தொடர்ந்து ஐந்து அல்லது ஆறு முறை ஊளையிட்ட பிறகு, நிறுத்திக்கொண்டு, தண்ணீர் கோப்பையை நோக்கி ஓடித் தண்ணீர் குடித்தது. திரும்பவும் அதே இடத்திற்கு ஓடிவந்து மறுபடியும் ஊளையிட்டது. ஒரு கணம் நிறுத்தி, காதுகளை விடைக்க வைத்துக்கொண்டு, கேட்கத் தயாரானது.

நீண்ட அமைதி நிலவியது. பிறகு, ஆழமான, துயர் நிறைந்த ஊளை மேற்குச் சரிவிலிருந்து எழுந்தது. அது குறுகியதாகவும், ஒரு குறிப்பிட்ட லயத்தோடும், தீர்க்கமானதாகவும் அமைந்திருந்தது. அனேகமாக ஓர் ஆண் ஓநாயின் குரலாக இருக்கலாம். அந்தக் குரலிலிருந்து, அந்த விலங்கின் வலிமையான உடலையும், விரிந்த மார்பையும், அகன்ற பின்புறத்தையும், முழுமையான தொண்டையையும் ஜென்னால் ஊகித்துப் பார்க்க முடிந்தது.

முதலில் ஆச்சரியமடைந்த ஓநாய்க்குட்டி, பின் சந்தோஷ மாகக் காற்றில் எகிறிக் குதித்தது. மூச்சை உள்ளிழுப்பதற்காகத் தலை குனிந்த ஓநாய்க்குட்டி, எப்படி பதில் தருவதென்று புரியாமல் தவித்தது. அதனால் அது இப்போது கேட்ட அந்தக் குரல் போன்ற பாவனைக் குரலை வெளிப்படுத்த முயன்றது. அதன் குரல் இளமையாக இருந்தாலும் நல்லதொரு பாவனையாக இருந்தது. அது பலமுறை அப்படிச் செய்தது; ஆனால் எவ்விதப் பதிலுமில்லை.

அந்த உரையாடலின் அர்த்தத்தையும் அதன் விளைவையும் யூகித்தறிய ஜென் தன் மூளையைக் கசக்கினான். அனேகமாக ஆண் ஓநாய், 'நீ யார்? யாருடைய குழந்தை? பதில் சொல்லு!' என்று ஓநாய்க்குட்டியிடம் கேட்டிருக்கலாம். ஆனால் ஓநாய்க்குட்டி அந்தக் கேள்விகளையே திரும்பக் கேட்டதோடு, ஆண் ஓநாயின் அதிகாரக் குரலை அது பாவனை செய்ததால், பெரிய ஓநாய்க்கு கோபமும் சந்தேகமும் ஏற்பட்டிருக்கலாம்.

ஓநாய்க் கூட்டம் மீண்டும் அமைதியானது. அதற்கு மாறாக, ஓநாய்க்குட்டி மறுபடியும் தொடங்கியது. ஆண் ஓநாயின் கேள்விகளை அது புரிந்து கொள்ளாதபோதும், அதோடு ஏதோ தொடர்புகொள்ள விரும்புவதை உணர்ந்தது. அது உரையாடலைத் தொடர ஆர்வம் கொண்டிருந்தது; ஆனால் தன்னை எப்படி வெளிப்படுத்துவதென்பதை ஓநாய்க்குட்டி அறிந்திருக்கவில்லை. அதனால் அது அப்போது கற்றுக்கொண்டிருந்ததை மீண்டும் தொடர்ந்தது. 'யாருடைய குழந்தை நீ? பதில் சொல்லு! பதில் சொல்லு!'

என்ன நடக்கிறதென்று புரியாத குழப்பத்தில் ஓநாய்க் கூட்டம் இருந்துகொண்டிருக்கும். ஆயிரக்கணக்கான வருடங்களில், அனேகமாக இந்தக் கூட்டம்தான் முதன் முறையாக இப்படியான, மனிதர்களோடும் நாய்களோடும் ஆடுகளோடும் வாழ்ந்து கொண்டிருக்கும் ஓநாய்க்குட்டியை எதிர்கொண்டதாக இருக்கும். அது உண்மையிலேயே ஓநாய்தானா? அப்படியானால், ஓநாய்களின் பரம எதிரிகளான மனிதர்களோடும் நாய்களோடும் அதற்கு என்ன உறவு? ஓநாய்க் கூட்டத்தோடு தொடர்புகொள்ள விரும்பும் ஆர்வம் அதன் குரலில் தொனிக்கிறது; அதேசமயம் மனிதர்களோடும் நாய்களோடும் அது சுமுகமாக இருந்து கொண்டிருக்கிறது. அதன் குரல் முழுமையாகத் திரண்டிருப்பதால், அது நன்றாகச் சாப்பிட்டிருக்க வேண்டும். அப்படியானால் மனிதர்களும்

நாய்களும் அதை நன்றாகக் கவனித்துக் கொள்கிறார்கள். அது என்ன எதிர்பார்க்கிறது?

ஓநாய்க்குட்டி ஊளையிடுவதை நிறுத்தியது. அது பதிலை எதிர்பார்ப்பது போலத் தோன்றியது. அது அமைதியிழந்து தரையைப் பிறாண்டியது.

ஜென் அதிருப்தி அடைந்தான். இது எதில் முடியப் போகிறதென்று கவலைப்பட்டான். அந்த ஆண் ஓநாய் ஓநாய்க்குட்டியின் தந்தையாக இருக்கலாம்; ஆனால் ஓநாய்க் குட்டிக்கு அதோடு எப்படிப் பேசுவதென்று தெரியவில்லை. ஓநாய்க்குட்டி தன்னுடைய தந்தையின் அன்பைப் பெறும் வாய்ப்பை இழந்துவிட்டதென ஜென் கவலைப்பட்டான்; அப்படியெனில் இனிமேல் இந்தத் தனியான ஓநாய்க்குட்டி மனிதர்களுக்கு, அதாவது அவனுக்கும் யாங் கீக்கும், சொந்தமானது.

திடீரென ஒரு நீண்ட ஊளை இருளைக் கிழித்துக்கொண்டு கிளம்பியது. அந்தத் துயரமான குரலில் வலியும், வேதனையும், தாய் ஓநாயின் ஏக்கமும் நிறைந்திருந்தன. அதன் கடைசி ஒலி நீண்டநேரம் துடிதுடித்தது; ஆழ்ந்த அர்த்தத்தையும் உணர்ச்சிப் பெருக்கையும் அது தாங்கியிருந்தது. ஜென் அதன் அர்த்தத்தை இப்படியாக யூகித்தான். 'ஓநாய்க்குட்டி, உனக்கு இன்னும் என்னை நினைவிருக்கிறதா? நான் உன்னுடைய அம்மா. நான் உனக்காக ஏங்குகிறேன். இவ்வளவு காலமும் உன்னை எதிர்பார்த்தபடியே தேடிக்கொண்டிருந்தேன். கடைசியாக உன்னுடைய குரலைக் கேட்டுவிட்டேன். என் அன்புக் குழந்தையே, உடனே உன் அம்மா விடம் ஓடி வா. நாங்கள் எல்லோருமே உனக்காகத் தவித்துக் கொண்டிருக்கிறோம். வா... வா... வா...'

தன் குழந்தைக்கான ஒரு தாயின் பாடல், தொன்மையான மேய்ச்சல் நிலத்தில் எதிரொலித்துக்கொண்டிருந்தது. ஜென்னினால் கண்ணீரைக் கட்டுப்படுத்த முடியவில்லை. யாங் கீயின் கண்களும் ஈரத்தில் ஒளிர்ந்தன.

அந்த சோகக்குரல் ஓநாய்க்குட்டியை வெகுவாகப் பாதித்திருப்பது வெளிப்படையாகத் தெரிந்தது. அந்த அழைப்பு, அதனுடைய குடும்பத்திலிருந்து வந்திருக்கிறதென்பதை உள்ளுணர்வு சொல்லியது. சங்கிலிக்கெதிராக அது வெறித் தனமாகப் போராடியது. கிட்டத்தட்ட கழுத்துப் பட்டையால் அதன் கழுத்து நெரிக்கப்பட்டதில், அதன் நாக்கு வெளித் தள்ளியது; மூச்சுத் திணறக்

கத்தியது. தாய் ஓநாய் மீண்டும் ஊளையிட்டது; மேலும் பல தாய் ஓநாய்களும் அதோடு சேர்ந்து, சோகக் குரல்களை வெளிப்படுத்தின. மேய்ச்சல் நிலம் ஆழ்ந்த சோகத்தில் அமிழ்ந்தது.

அந்த இரவில், மேய்ச்சல் நிலத்தில் ஒப்பாரிப் பாடல் போன்ற ஊளைகள் மீண்டும் மீண்டும் எழுந்து தேய்ந்தன. கடந்த ஆயிரம் வருடங்களாகத் தொடர்ந்து வருடந்தோறும் தங்களுடைய குட்டிகளை இழந்துவரும் தாய் ஓநாய்களின் அடக்கி வைக்கப் பட்டிருந்த கசப்புணர்ச்சிகளை, ஆயிரக்கணக்கான வருடங்களின் சோகத்தை, அவை பரந்து விரிந்த, இருண்ட மேய்ச்சல் நிலத்தில் பாய்ச்சுவது போலிருந்தது.

ஜென் அமைதியாக எழுந்து நின்றான். எலும்புகளை ஊடுருவும் குளிரை உணர்ந்தான். கண் கலங்கியிருந்த யாங் கீ, ஓநாய்க்குட்டியிடம் மெதுவாக நடந்து சென்றான். ஓநாய்க்குட்டியின் கழுத்தைச் சுற்றியிருந்த பட்டையைப் பற்றிக்கொண்டு, அதனுடைய தலையிலும் பின்புறத்திலும் அதற்கு ஆறுதல் அளிக்கும் வகையில் தட்டிக் கொடுத்தான்.

தாய் ஓநாய்களின் துயரார்ந்த ஊளைகள் கொஞ்சம் கொஞ்சமாகத் தேய்ந்தன. ஓநாய்க்குட்டி, யாங்கிடமிருந்து விடுவித்துக்கொண்டு, துள்ளிக் குதித்தது. சத்தம் ஒரேயடியாக மறைந்துவிடுமோ என அது பயப்படுவதுபோல் தோன்றியது. வடமேற்குத் திசையை நோக்கி எம்பியபடி, தலையை உயர்த்தி, அதனுடைய குறைந்த நினைவிலிருந்து நீண்ட ஊளைகளை வெளியிட்டது.

ஓநாய்க் கூட்டம் அமைதி காத்தது. அது ஓநாயில்லை, ஒரு நாய் என அவை முடிவுக்கு வந்திருக்கலாமென்று தோன்றியது. ஓலோன்புலாக்கில் பச்சை உடை அணிந்த மனிதர்கள், துப்பாக்கிகளை ஏந்தியபடி வடக்கு நோக்கிச் செல்லும் சாலையில் செல்வதை ஓநாய்கள் பார்த்திருக்கின்றன. அவர்களோடு கூடவே ஐந்து அல்லது ஆறு பெரிய நாய்கள் செல்லும்; அவற்றின் காதுகள், ஓநாய்களின் காதுகளைப் போல, நேராக விடைத்திருக்கும். அவற்றில் சில, ஓநாய்களைப் போலவே ஊளையிடவும் செய்யும். அவை, எந்தவொரு உள்ளூர் நாய்களை விடவும் மிகவும் அபாயகரமானவை. மேலும் ஒவ்வொரு வருடமும் சில ஓநாய்கள் அவற்றுக்குப் பலியாகி இருக்கின்றன. அனேகமாக, இந்தத் தரம்கெட்ட சின்னப் பிறவியும் ஓநாய்க் காதுகளைக் கொண்ட அந்த நாய்களைப் போல வளரக்கூடியதாக இருக்கும்.

ஓநாய்க் கூட்டத்திடம் இன்னமும் அமைதி நீடித்தது. அமைதியாக இருந்த மேயச்சல் நிலத்தில் ஓநாய்க்குட்டியின் ஊளை மட்டும் வெளிப்பட்டுக்கொண்டிருந்தது; அதன் தொண்டை வீங்கிக் கரகரப்படைந்திருந்தது. அது எழுப்பிய நீண்ட ஊளைகள் மிகவும் குழப்பமானதாகவும் பிடிபடாததாகவும் இருந்ததால், ஓநாய்கள் அதைப் புறக்கணித்துவிட்டன. ஓநாய்களிடமிருந்து ஊளையிடக் கற்றுக்கொள்ளும் வாய்ப்பை, அந்தப் பரிதாபமான ஓநாய்க்குட்டி இப்போது இழந்துவிட்டது.

ஓநாய்க்கூட்டம் பின்வாங்கி விட்டதாக ஜென் உணர்ந்தான். இருண்ட அந்த மலைச் சரிவில் பேரமைதி உறைந்திருந்தது. தூ ங்குவதில் ஆசையில்லாதிருந்த ஜென்னும் யாங்கும் குசுகுசுவென்று விவாதித்துக்கொண்டிருந்தனர்.

அதிகாலையில், விடியலின்போது, ஓநாய்க்குட்டி ஒருவழியாக ஊளையிடுவதை நிறுத்தியது. சோகத்தோடும் நம்பிக்கையிழந்தும் அது தரையில் விழுந்தது. காலை மூடுபனி மெல்லக் கலைந்தது. ஓநாய்க்குட்டி கண்களை மூடி, நம்பிக்கையை முழு முற்றாக இழந்துவிட்டதைப் போல் சரிந்தது. ஜென் மெதுவாகத் தடவிக் கொடுத்தான். ஓநாய்க்குட்டி மீண்டும் அதன் குடும்பத்தோடு சேர்வதற்கான வாய்ப்பை இழந்துவிட்டதை எண்ணியபோது, ஜென்னுடைய குற்றவுணர்வு மேலும் கனத்தது.

உற்பத்திக் குழுவினரும் குழுமத்தின் பிறரும் மற்றுமொரு அச்சத்துடன் கூடிய இரவைக் கடந்தார்கள். எந்தவொரு முகாமும் தாக்கப்படவில்லை. கால்நடைகளுக்கு எவ்வித இன்னலும் நேரவில்லை. மேய்ப்பர்கள் ஆச்சரியத்துடன் அதுபற்றிப் பேசிக் கொண்டார்கள். தங்களுடைய உயிரைக் கொடுத்தாவது குட்டி களின் உயிரைக் காக்கும் தாய் ஓநாய்கள், எவ்வித சண்டைக்கும் வராமல் ஏன் பின்வாங்கின என்பதை அவர்களால் புரிந்துகொள்ள முடியவில்லை. அங்கிருந்த முதியவர்களுக்கும் இது புரியவில்லை.

ஜென் மேய்ச்சல் நிலத்தில் வாழ்ந்த காலங்களில் நிகழ்ந்த, மிகவும் புதிரான சம்பவம் இது.

ஓநாய்களை வரவழைத்துக் கொல்வதை எதிர்பார்த்திருந்த பாவோ சுங்காயும் மேலும் சில மேய்ப்பர்களும் ஏமாற்றமடைந்தனர். ஆனால் விடிந்ததும் ஜென், யாங்கின் குடிலுக்கு வந்த பாவோ, அவர்களுடைய புதிய எண்ணங்களையும் தீரத்தையும் வெகுவாகப் பாராட்டினார். எவ்வித சண்டையும் நிகழாமல், எதிரி பின்வாங்கியதானது இதுவரை கிடைத்திராத வெற்றி என்றார் அவர். அந்தப் பெரிய ஃப்ளாஷ் லைட்டை அதற்கான பரிசாக அவர்கள் வைத்துக்கொள்ளலாம் என்றார். குறைந்தபட்சம், இனி ஓநாய்க்குட்டியை அவர்கள் தொடர்ந்து வளர்க்க முடியும் என்பதை அறிந்து ஜென்னும் யாங்கும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள்.

காலைத் தேனீர் நேரத்தின்போது, உல்ஜீயும் பில்ஜியும் தேனீருக்காகவும் குதிரை இறைச்சி பன்களுக்காகவும் அங்கு வந்தனர்.

கடந்த இரவில் சரியாகத் தூங்கியிராத போதும் உல்ஜீ உற்சாகமாகக் காணப்பட்டார். ‘‘பயங்கரமான இரவு’’ என்றார் அவர். ‘‘ஓநாய்க்கூட்டம் ஊளையிடத் தொடங்கியதும் நான் உண்மையிலேயே கவலை அடைந்தேன். ஏனென்றால் ஒரு டஜன் ஓநாய்கள் உங்களைச் சுற்றி மூன்று பக்கங்களிலும் சூழ்ந்திருந்தன. சமயங்களில் அவை நூறடி தூரத்தில் இருந்தன. அவை உங்களுடைய குடிலைப் பிய்த்தெறிந்து விடுமென்று நாங்கள் பயந்தோம். அவ்வளவு நெருக்கத்தில் இருந்தன.’’

‘‘உங்களிடம் வெடிப் பொருட்களும் எறிகுண்டுகளும் இருப்பது எனக்குத் தெரியாதிருந்தால், எல்லோரையும் நாய்களோடு உங்களை விடுவிக்கச் செல்லும்படி உத்தரவிட்டிருப்பேன்’’ என்றார் பில்ஜி.

‘‘அவை ஏன் ஆடுகளைத் தாக்கவில்லை அல்லது ஓநாய்க்குட்டியை எடுத்துச் செல்ல முயற்சிக்கவில்லை?’’ ஜென் கேட்டான்.

முதியவர் ஒரு மடக்குத் தேனீர் குடித்துவிட்டு, பைப்பில் புகையை இழுத்தார். ‘‘உன்னுடைய ஓநாய்க்குட்டி உண்மையான ஓநாய் மொழி பேசவில்லை என்பதுதான் காரணமென்று நான் நினைக்கிறேன். மேலும் நாய்களும் குரைத்துக்கொண்டிருந்ததில் அவை குழம்பிப் போயிருக்கலாம்.’’

‘‘ஓநாய்கள் ஆன்மிகத் தொர்புள்ளவை என்று எப்போதும் நீங்கள் என்னிடம் சொல்லியிருக்கிறீர்கள். அப்படியானால் டெஞ்ஞர் ஏன் அவற்றிடம்

உண்மையைச் சொல்லவில்லை.''

''நீங்கள் மூன்று பேரும் சில நாய்களும் அவற்றின் முன் ஒன்றுமே இல்லை. ஆனால் எல்லா மக்களும் நாய்களும் ஒரு யுத்தத்துக்கான தயார்நிலையில் இருந்தார்கள். அவை ஒரு தாக்குதலை நிகழத்த முடிவு செய்திருந்தால், அவை மிக மோசமான நிலைக்கு ஆளாகியிருக்கும். இயக்குனர் பாவோவால் மற்றவர்களை ஏமாற்ற முடியலாம்; ஆனால் டெஞ்ஞுரை அல்ல. ஓநாய்கள் பொறியில் மாட்டிக்கொள்வதை டெஞ்ஞுர் விரும்பவில்லை; எனவே, பின்வாங்கும்படி அவற்றுக்கு உத்தரவிட்டிருக்கிறது.''

ஜென்னும் யாங்கும் சிரித்தார்கள். ''டெஞ்ஞுர் மிகுந்த மதிநுட்பம் உள்ளதுதான்'' என்றான் யாங்.

''ஓநாய்கள் ஏன் தாக்குதல் நிகழ்த்தவில்லை என்பதை அறிவியல் பூர்வமாகச் சொல்ல முடியுமா?'' ஜென், உல்ஜீயைப் பார்த்துக் கேட்டான்.

உல்ஜீ ஒரு கணம் யோசித்தார். ''கடந்த இரவில் நடந்ததைப் போன்று நான் இதுவரை பார்த்ததோ கேட்டதோ கிடையாது. ஓநாய்க் கூட்டம் இந்தக் குட்டியை அந்நியமானதாகக் கருதியிருக்கலாமென்று எனக்குத் தோன்றுகிறது. மேய்ச்சல்நில ஓநாய்கள் அவற்றுக்கென்று தனிப் பிராந்தியம் கொண்டவை. அவற்றின் உயிரை விடவும் பிராந்தியம் மிகவும் முக்கியமானது. இப்பிராந்திய ஓநாய்கள், பிற பகுதி ஓநாய்களுடன் அடிக்கடி மரண யுத்தம் நடத்தியிருக்கின்றன. அனேகமாக உன்னுடைய ஓநாய்க்குட்டி பேசிய மொழி அவற்றுக்குப் பிடிபடாமல் இருக்கலாம். ஒரு அந்நிய ஓநாய்க்குட்டிக்காகச் சண்டையிடுவது அவசியமில்லாததாக அவற்றுக்குத் தோன்றி இருக்கலாம். ஆண் தலைமை ஓநாயும் இரவு வந்திருந்தது. அதை அவ்வளவு சுலபமாக ஏமாற்றிவிட முடியாது. அதேசமயம் ஏமாற்றுவதென்பது யுத்த முறைகளில் ஒன்றென்பது அதற்குத் தெரியும். இந்த ஓநாய்க்குட்டி மனிதர்களோடும் நாய்களோடும் நெருக்கமாக இருப்பதை அது கவனித்ததும், அதன் சந்தேகம் கூடியிருக்கும். வெற்றிக்கான வாய்ப்பு எழுபது சதவீதம் இருந்தால் மட்டுமே அது ஆபத்தான நடவடிக்கையில் இறங்கும். மேலும் அதற்குப் புரியாத எதிலும் அது இறங்காது. அது பெண் ஓநாய்களின் உணர்வுகளுக்கு மதிப்பு கொடுக்கிறபோதிலும், அவை ஏமாற்றப்படுவதை அது ஏற்பதில்லை. அதனால்தான் நிலைமையை அவதானிக்க அவற்றுக்காக அது வந்திருக்கிறது.

ஏதோ சரியில்லை என்று அதற்குப் பட்டவுடன் அவற்றை அழைத்துக்கொண்டு போய்விட்டது.''

ஜென்னும் யாங்கும் ஏற்றுக்கொள்வதுபோல் தலையாட்டினார்கள்.

விருந்தினர்கள் வெளியேறினார்கள். மிகவும் சோர்வடைந் திருந்த ஓநாய்க்குட்டி தரையில் கால்கள் பரப்பிக் கிடந்தது. பாதங்களின் பின்புறத்தில் முகவாய்க்கட்டையை வைத்தபடி, நேராக உற்றுப் பார்த்துக்கொண்டிருந்தது. கடந்த இரவில் நல்ல கனவுகளும் தீய கனவுகளும் ஏற்பட்டதைப் போலவும், அதிலிருந்து மீண்டு யதார்த்தத்துக்குத் திரும்ப முடியாதிருப்பதைப் போலவும் அது காணப்பட்டது.

ஓநாய்க்குட்டியைப் பார்த்ததும் முதியவர் நின்றார். ''பாவம் இந்த ஓநாய்க்குட்டி. கூட்டம் இதை விரும்பவில்லை; பெற்றோர்களால் இதைத் தெரிந்துகொள்ள முடியவில்லை. இனி எஞ்சிய காலத்தை, இந்தச் சங்கிலியோடுதான் இது வாழ வேண்டுமா? சீனர்களாகிய நீங்கள் மேய்ச்சல் நிலத்துக்கு வந்தபிறகு, எங்களுடைய பாரம்பரிய விதிமுறைகளைத் தகர்த்தெறிந்து விட்டீர்கள். ஒரு திறமையான ஓநாய்க்குட்டியை, ஒரு அடிமையைப் போல் நீ சங்கிலியில் கட்டி வைத்திருப்பதைப் பார்க்கும்போது என் இதயம் வலிக்கிறது. ஓநாய்கள் மிகவும் பொறுமையானவை. பொறுத்திருந்து பார். அது எப்படியும் உன்னிடமிருந்து தப்பியோடி விடும்; உன்னால் ஒருபோதும் அதை ஜெயிக்க முடியாது. நீ தினமும் நல்ல கொழுத்த ஆட்டுக்குட்டியை அதற்கு உணவாகக் கொடுத்தாலும் அது உனக்குக் கட்டுப்படாது.''

அடுத்து வந்த மூன்றாவது, நான்காவது இரவுகளில் முகாமைச் சுற்றி ஓநாய் ஊளைகள் ஏதும் கேட்கவில்லை; ஓநாய்க்குட்டி மட்டும் தனியாக, அமைதியான மேய்ச்சல் நிலத்தில் ஊளைகளை எழுப்பிக்கொண்டிருந்தது; அந்த சப்தம் மலைப் பள்ளத்தாக்கில் எதிரொலித்துக்கொண்டிருந்தது. அதற்கு எவ்விதப் பதிலுமில்லை. ஒரு வாரத்துக்குப் பின்பு அதுவும் நின்றுபோனது.

அதன் பிறகும் சில காலம், ஜென் மற்றும் யாங்கின் பராமரிப்பிலுள்ள கால்நடைகளையோ அவர்களுக்குப் பக்கத் திலுள்ள இரண்டு உற்பத்திக் குழுக்களின் கால்நடைகளையோ தாக்க ஓநாய்கள் வரவில்லை. இரவுக் காவலில் இருந்த பெண்கள் சந்தோஷமாகக் காணப்பட்டார்கள். ''இப்போது,

காலையில் பால் கறக்கச் செல்லும் நேரம் வரை நன்றாகத் தூங்க முடிகிறது’’ என்று அவர்கள் பேசிக்கொண்டார்கள்.

அந்த நாட்களில், ஓநாய் வளர்ப்பது குறித்து மேய்ப்பர்களிடையே பேச்சு வரும்போதெல்லாம் ஜென்னை அவர்கள் சுலபமாக ஏற்றுக்கொண்டார்கள். பிரிவு நான்கைச் சேர்ந்த முதிய மேய்ப்பர்கள், ‘‘அவர்கள் ஏன் வளர்க்கக் கூடாது. நன்றாக வளர்க்கட்டும். ஓநாய்க்குட்டி பெரியதாக வளர்ந்த பிறகு, அது காட்டுத்தனமாக மாறிய பிறகு, என்ன நடக்கிறதென்று நாமும் பார்க்கலாமே’’ என்றார்கள்.

## 27

இக்கால கட்டத்தில், ஓநாய்க்குட்டிக்கு சாப்பிட ஏராளமாய் கிடைத்தது; சாங் ஜியோன் வழங்கிய குதிரை இறைச்சியின் பலனாகவே இது நடந்தது. தாய் ஓநாய் எப்படி இளம் ஓநாய்க்குட்டிகளைப் பேணிப் பராமரிப்பதில் கவனம் எடுத்துக்கொள்ளுமென்பது நினைவுபடுத்தப்படும் போதெல்லாம், அதை விடவும் சிறந்த, அதிக உணவை ஓநாய்க்குட்டிக்குத் தர வேண்டுமென ஜென் சங்கல்பம் செய்துகொள்வான். ஆனால் எல்லா இறைச்சியையும் அதற்கென்றே அவன் சேமித்து வைத்திருந்த போதிலும், இறைச்சி வரத்து இல்லாமல் போய்விட்டதால், இன்னொரு வேளை உணவுக்கான இறைச்சி மட்டுமே இப்போது அவன் கைவசமிருந்தது. ஜென் கவலைப்பட்டான்.

ஒருநாள் மாலை, மலைச்சரிவில் மேய்ந்துகொண்டிருந்த ஒரு எருது மின்னல் தாக்கி இறந்துவிட்டதாக காவோ ஜியான்சோங் அவனிடம் தெரிவித்தான். அதனால் மறுநாள் அதிகாலையில் ஜென் தன்னுடைய கத்தியோடும் கோணிச்சாக்கோடும் மலைக்குச் சென்றான். ஆனால் அங்கு மண்டையோடும் கடினமான எலும்புகளுமே எஞ்சியிருந்தன. ஓநாய்கள் சிறு இறைச்சித் துண்டைக்கூட விட்டு வைத்திருக்கவில்லை. அவன் கீழே உட்கார்ந்து எலும்புகளை சோதித்துப் பார்த்தான். எலும்பு முறிவுகளில் ஓநாய்க்குட்டிகளின் சிறிய பல்தடங்கள் தெரிந்தன. பெரிய ஓநாய்களும் குட்டிகளுமாகச் சேர்ந்து, சுத்தமாகத் தின்று தீர்த்துவிட்டிருந்தன. பிரிவு மூன்றைச் சேர்ந்த ஒரு முதிய மாடு மேய்ப்பர், ஜென் அங்கு அமர்ந்திருந்த போது வந்தார். அவருடைய மந்தையைச் சேர்ந்த ஒன்றின் எலும்புக் குவியல்தான் அது என்பது தெரிந்தது. அவர் ஜென்னிடம் சொன்னார்: ‘‘ஆடுகளை நோக்கி வருவதற்கான துணிச்சல் இப்போது ஓநாய்க்கூட்டத்திடம் இல்லாததால், அவற்றுக்காக ஒரு எருதை டெஞ்ஞர் கொன்றுவிட்டிருக்கிறது. அதைச் செய்ய அது இரவைத் தேர்ந்தெடுத்திருப்பதைப் பார். அப்போதுதான் இறைச்சியை அள்ளிக்கொண்டு செல்லத் தொழிலாளர்கள் இங்கிருக்க மாட்டார்கள். இளைஞனே, மேய்ச்சல் நிலத்தின் விதிகளை டெஞ்ஞர் தீர்மானிக்கிறது. அவற்றை மீறுபவர்களை அது தண்டிக்கிறது.’’ இருண்ட முகத்தோடு, தன்னுடைய மந்தையை நோக்கி, மலைச் சரிவில் மெதுவாகக் குதிரையில் சவாரி செய்தார்.

முதிய மேய்ப்பர் சொன்ன விதிகள் பற்றி ஜென் யோசித்தான். அவை சொர்க்கத்தால், அதாவது பிரபஞ்சத்தால், நிர்ணயிக்கப்பட்ட இயற்கையான சட்டங்கள். மேய்ச்சல் சார்ந்த நாடோடி வாழக்கைச் சூழலில், ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதென்பது, அதன் உற்பத்தி முறையை நிச்சயம் பாதிக்கும். ஓநாய்க்குட்டி ஏற்கெனவே மேய்ச்சல் நிலத்துக்குத் தொல்லை கொடுத்திருக்கிறது. இனி வரவிருக்கும் நாட்களில் அதனால் என்னென்ன புதிய பிரச்சனைகள் ஏற்படுமென யாருக்குத் தெரியும்.

அவன் வெறும் கையோடு திரும்பினான். அவன் தலையில் ஏகப்பட்ட எண்ணங்கள் சுழன்றன. டெஞ்ஞரை உற்றுப் பார்த்தபடி, சில கவிதை வரிகளை அவன் மனம் பின்னியது: 'நிலவுலகின் கூரையென வானம் பூமியை மூடியிருக்கிறது / வானம் இருண்டு பரந்து விரிந்திருக்கிறது / காற்றடிக்கும்போது புல் சாய்கிறது / ஒரு ஓநாயும் கண்ணில் படவில்லை.'

ஓநாய்கள் அங்கு மின்னல்போல வந்து போகின்றன. மக்கள் அடிக்கடி ஓநாய்களின் குரல்களைக் கேட்கிறார்கள். அவற்றால் விளைந்த பாதிப்புகளைப் பார்க்கிறார்கள். ஆனால் அவற்றை நேரில் அபூர்வமாகத்தான் பார்க்கிறார்கள். அதனால்தான் மக்களுடைய மனங்களில், அவை மிகவும் புதிரானவையாகவும், மிகவும் தந்திரம் மிக்கவையாகவும், மிகவும் மாயாஜாலம் நிறைந்தவையாகவும் இருக்கின்றன.

அவன் தொழிலாளர்களின் முகாமுக்குச் சென்று, கொஞ்சம் தானியங்களை விலைக்கு வாங்கினான். இறைச்சி இல்லாததால், அவனால் செய்ய முடிந்ததெல்லாம் ஓநாய்க்குட்டியின் உணவில் அதிக தானியம் சேர்ப்பதுதான். அடுத்ததாக, ஒரு ஆடு வெட்டப் படும் வரை இப்படி சமாளிக்க வேண்டியதுதான். குடிலுக்குத் திரும்பிய அவன், ஒரு குட்டித்தூக்கம் போட நினைத்தபோது, மூன்று நாய்க்குட்டிகளும் சந்தோஷமாகக் குரைத்தபடி ஓடின. ஜென் வெளியில் வந்து மேற்காகப் பார்த்தான்; எர்லாங், எல்லோ மற்றும் யிர் மலைகளிலிருந்து திரும்பிக்கொண்டிருந்தன. எர்லாங்கும் எல்லோவும் தங்களுடைய தலைகளை உயர்த்தியிருந்தன; அவற்றின் வாய்களில் பெரிய இரையை அவை கவ்வியிருந்தன. தொடர்ந்து, இடைவிடாது பசி கிள்ளிக்கொண்டிருந்ததால் எர்லாங்கைப் பின் தொடர்ந்து மலைகளுக்குச் சென்று வேட்டையாட எல்லோவும் யிர்ரும் போயின. அது ஒரு நல்ல நாளாக

அமைந்துவிட்டிருப்பது தெரிந்தது. அவற்றின் வயிறுகளை நிரப்பிக்கொண்டதோடு, குட்டிகளுக்கும் கொண்டு வர முடிந்திருக்கிறது.

நாய்களை வரவேற்க ஜென் விரைந்தான். நாய்க்குட்டிகள் அவற்றின் வாய்களில் இருந்த உணவுக்காக மல்லாடின. எர்லாங் தன் வாயில் கவ்வியிருந்ததைக் கீழே வைத்துவிட்டு நாய்க்குட்டிகளை விரட்டியடித்தது; மீண்டும் அதைக் கவ்விக்கொண்டு வீட்டை நோக்கி ஓடியது. எர்லாங்கும் எல்லோவும் ஆளுக்கொரு மர்மோட்டைக் கொண்டு வந்திருந்ததைப் பார்த்து, ஜென்னின் கண்கள் பிரகாசித்தன. யிர் பாத அளவிலான பொந்து நாயைக் கொண்டு வந்திருந்தது. அவனுடைய நாய்கள் இரையை வீட்டுக்குக் கொண்டு வருவதை ஜென் இப்போதுதான் முதல் முறையாகப் பார்க்கிறான். அதை எடுத்துக்கொள்வதற்காக அவன் சந்தோஷமாக ஓடினான்.

ஜென்னின் பாராட்டை ஆவலோடு எதிர்பார்த்திருந்த எல்லோவும் யிர்ரும், கொண்டு வந்ததை உடனடியாக அவனுடைய காலடியில் வைத்துவிட்டு, மேலும் கீழுமாகக் குதித்தன. வால்களை ஆட்டியபடியும் சந்தோஷமாகக் குரைத்தபடியும் அவனைச் சுற்றி வட்டமடித்தன. ஜென்னுக்கு இதெல்லாம் புதிராக இருந்தது. எல்லோ, அது கொண்டு வந்திருந்த மர்மோட்டின் முன்பு, கால்களைத் தூக்கி நெஞ்சில் வைத்தபடி நின்றது; தான் பிடித்த இரை என்று அவனிடம் சொல்வது போலிருந்தது. அந்த மர்மோட்டின் வயிற்றில் இருந்த வீங்கிய, இளம் சிவப்பு வண்ணக் காம்புகளிலிருந்து அது பால் கொடுக்கும் பெண் என்பது தெரிந்தது.

ஜென், இரண்டு நாய்களின் தலையிலும் தட்டிக் கொடுத்தபடி, ''நல்ல நாய்கள், நல்ல நாய்கள்'' என்றான்.

ஆனால் எர்லாங், அது பிடித்துக்கொண்டு வந்ததைக் கீழே வைக்க மறுத்தது; ஜென்னைச் சுற்றி நடந்த அது, பிறகு ஓநாய்க்குட்டியை நோக்கி ஓடியது. அதன் இரையான மர்மோட், மிகப் பெரியதாகவும் கொழுத்தும் இருப்பதைப் பார்த்த ஜென், ஓடிச் சென்று எர்லாங்கின் மயிரடர்ந்த வாலைப் பிடித்தபடி, அதனிடமிருந்து மர்மோட்டைப் பிடுங்கிக்கொண்டான். எர்லாங், அதைப் பற்றிக் கவலைப்படாததுபோல் வாலாட்டியது. மர்மோட்டின் பின்னங்கால்களில் ஒன்றைப் பிடித்தபடி, அதை நிறுத்துப் பார்த்தான் பத்து பவுண்டுக்கும் கூடுதலாக அதன் எடை இருக்கும் போலிருந்தது. மினுமினுப்பான ரோமத்துடன்

அந்த ஆண் மர்மோட் இருந்தது. ஜென் அதை அவனுக்கும் அவனுடைய குடில் தோழர்களுக்குமாக வைத்துக்கொள்ள விரும்பினான். அந்த சுவையான உணவை சாப்பிட்டு நீண்ட காலமாகிவிட்டது.

நாய்களால் பிடித்துக்கொண்டு வரப்பட்ட மூன்றையும் எடுத்துக்கொண்டு, மூன்று நாய்களும் குதூகலமாகப் பின்தொடர, ஜென் சந்தோஷமாகக் குடிலை நோக்கி நடந்தான். பெரிய மர்மோட்டைக் குடிலுக்குள் வைத்துவிட்டுக் கதவைச் சாத்தினான். நாய்க்குட்டிகள் மற்ற இரண்டையும் ஆவலுடன் முகர்ந்து கொண்டிருந்தன. பெண் மர்மோட்டை நாய்க்குட்டிகளுக்கும், பொந்து நாயை ஓநாய்க்குட்டிக்கும் கொடுக்க ஜென் முடிவு செய்தான். ஓநாய்களுக்குப் பிரியமான அந்த உணவை ஓநாய்க்குட்டி சாப்பிடவும், மேலும் அது தானாகவே ஒரு விலங்கை சாப்பிடுவதற்கான வழியாகவும் அது அமையும்.

கோடை காலத்தில், மர்மோட்டுகளின் மயிர்த் தோல் பெறுமதியற்றது; பொருள் கொள்முதல் நிலையம் அதை வாங்காது. அதனால் ஜென் அதை நான்காகக் கூறு போட்டான். தோலும் இறைச்சியும், எலும்பும் குடல்களும் என்று அதைப் பிரித்து மூன்று பங்கை நாய்க்குட்டிகளுக்குக் கொடுத்துவிட்டு, கடைசி ஒரு பங்கை ஓநாய்க்குட்டிக்கென சேமித்தான். ரத்தத்துடன்கூடிய இறைச்சியைப் பார்த்த மாத்திரத்தில் என்ன செய்ய வேண்டுமென்பது நாய்க்குட்டிகளுக்குத் தெரியும். அவை தரையில் கால்களைப் பரப்பிக்கொண்டு, அவற்றின் பங்கை சண்டை சச்சரவில்லாமல் சாப்பிட்டன. பெரிய நாய்கள் மூன்றும், உணவை ஜென் பங்கு போட்ட விதத்தைப் பாராட்டும் வகையில் வால்களை ஆட்டின. ஜாக் லண்டனின் 'த கால் ஆஃப் த வைல்டு' புத்தகத்திலிருந்துதான் உணவைக் கூறு பிரிக்கும் வித்தையை ஜென் அறிந்திருந்தான்; அந்தப் புத்தகத்தை அவன் இரவல் கொடுத்த பிறகு, அது அவன் கைக்குத் திரும்பவே இல்லை; இப்போது அது, இரண்டு குழுமங்களில் இருக்கும் மாணவர்களுக்கிடையே சுற்றில் இருந்துகொண்டிருக்கிறது.

பெரிய நாய்களின் வயிறுகள் உப்பியிருந்தன; அவை மலைகளிலேயே வயிறு நிறைய சாப்பிட்டுவிட்டிருந்தன. எனினும், அவற்றின் செயலுக்குரிய வெகுமதி அவற்றுக்கு அளிக்கப்பட வேண்டுமென்பது, மேய்ச்சல் நிலத்தின் நிறுவப்பட்ட விதி. அதனால் ஜென் நான்கு மிட்டாய்களை எடுத்துக்கொண்டு குடிலை விட்டு வெளியில் வந்தான். இரண்டை எர்லாங்குக்குக் கொடுத்தான். அவற்றை அதில்

வாயில் வைத்துக்கொண்டு, ஓரக் கண்ணால் எல்லோவுக்கும் யிர்ருக்கும் அவன் என்ன கொடுக்கப் போகிறான் என்பதைப் பார்த்தது. மற்ற இரண்டு நாய்களுக்கும் அவன் ஆளுக்கொன்று கொடுத்தபோது, எர்லாங் சந்தோஷ மடைந்தது. பல்லாலும் நகத்தாலும் மிட்டாய்த் தாள்களை உரித்து, அவற்றை நறநறவென்று கடித்துச் சாப்பிட்டது. எல்லோவும் யிர்ரும் அவ்வாறே செய்தன. எர்லாங்கை விடக் குறைவாகக் கிடைத்ததில் அவற்றுக்கு வருத்தமேதுமில்லை. எல்லா இரையையும் எர்லாங்தான் பிடித்திருக்குமென்றும், மற்ற இரண்டு நாய்களும் அவற்றைக் கொண்டு வர மட்டுமே உதவியிருக்குமென்றும் ஜென் சந்தேகப்பட்டான்.

ரத்த வாடையால் வெறி கொண்ட ஓநாய்க்குட்டி, தன்னுடைய பின்னங்கால்களால் நின்றபடி காற்றைப் பிறாண்டியது. அதன் பக்கம் பார்க்காமலிருக்க ஜென் முயற்சித்தான். நாய்களின் பராமரிப்பை முடித்த பின்பு அதைக் கவனிக்கலாமென ஜென் நினைத்திருந்தான். மேய்ச்சல் நிலத்தில் பல வகையான கொறிக்கும் விலங்குகள் இருக்கின்றன. தரை அணில்கள், பொந்து நாய்கள், வயல் எலிகள் ஆகியன பரவலாகக் காணப்படுபவை. பொந்து நாய்கள் எல்லா இடங்களிலும் காணப்படும். எந்தவொரு குடிலிலிருந்தும் பதினைந்து அல்லது இருபதடி தூரத்துக்குள் அவை

தென்படும். அவற்றின் துளைகளுக்கு வெளியே நின்றபடி சத்தமாகக் கிறீச்சிடும். சமயங்களில் அவற்றின் துளைகளுக்கு மேலாக ஒரு குடில் அமைக்கப்படும்போது, அவை புல் உணவைத் தவிர்த்துவிட்டுத் தானியங்களை சாப்பிடத் தொடங்கிவிடும். அவை தானியங்கள், பால் பொருட்கள், இறைச்சி போன்றவற்றைத் திருடும். அவை சமயங்களில் புத்தகங்களைக் கூடக் கருமி வைத்துவிடும்.

பில்ஜியைப் பொருத்தவரை, பழங்காலத்தில் மங்கோலியக் குழந்தைகள் வில்வித்தை பழகுவதற்கு இந்தப் பொந்து நாய்களே இலக்காக இருந்தன.

மங்கோலியக் குழந்தைகளிடம் அவர்களுடைய பெற்றோர்கள், குறிப்பிட்ட அளவு பொந்து நாய்களைக் குறி வைத்து அடிக்காமல் வீட்டுக்கு வரக்கூடாது என்று சொல்வார்கள். மேய்ச்சல் நிலமானது குழந்தைகளின் மகிழ்ச்சிப் பூங்கா; அங்கு அவர்களுக்குப் பிடித்தமான விளையாட்டு இது. இதில் அவர்கள் மூழ்கிப் போய்விடும்போது, வீட்டுக்கு சாப்பிடப் போகக்கூட மறந்து விடுவார்கள்.

அவர்கள் வளர்ந்ததும், சிறிய வில்லைக் கொடுத்துவிட்டுப் பெரிய வில்லைப் பெற்றுக் கொள்வார்கள். அதன்பிறகு, குதிரையில் அமர்ந்தபடி பயிற்சி செய்வார்கள். ரஷ்யாவை வென்ற ஜெங்கிஸ்கானின் தளபதியான ஜேபே, பாய்ந்து செல்லும் குதிரையில் இருந்தபடியே, நூறடி தொலைவிலிருந்து ஒரு பொந்து நாயின் தலையைக் குறி வைத்து அடிப்பார்.

மங்கோலியர்கள் குதிரை சவாரியிலும், குறி பார்த்து அம்பு பாயச்சுவதிலும் பெற்றிருந்த வித்தைகள் மேய்ச்சல் நிலத்தைக் காக்கவும் உலகை வெல்லவும் அவர்களுக்கு உதவின என்று பில்ஜி கூறுவார். மிகச் சிறிய, சாதுர்யமான, மிகவும் சிரமமான இலக்கான பொந்து நாயைக் குறி பார்த்து அடிக்கப் பழகியதன் மூலம்தான் அவர்கள் வில்வித்தையில் சூரர்களானார்கள்.

ஜென் பொந்து நாயை அதன் வாலைப் பிடித்துத் தூக்கிப் பரிசோதித்தான். அவன் ஆடுகளோடு மேய்ச்சலுக்குச் சென்ற இடங்களில் அவற்றைப் பெரிய அளவில் பார்த்திருக்கிறான். வளமான மேய்ச்சல்நில மலைகளில் மட்டுமே வளரக்கூடியவை இவை. ஓநாய்களுக்கு மிகவும் பிடித்த உணவான இவற்றின் இறைச்சியானது கொழுத்தும், இளசாகவும் இருக்குமென ஜென் கருதினான். அதன் ரத்தத்தை ஓநாய்க்குட்டி முகர்ந்ததும், பாய்ந்து வந்து அப்படியே விழுங்கிவிடுமென ஜென் கற்பனை செய்தான்.

ஜென் அதைத் தலைகீழாகப் பிடித்தான்; அதன் காயங்களிலிருந்து ரத்தம் ஒழுகி மண் தரையில் விழுந்தது. பட்டிக்கு வெளியில் நின்றபடி ஜென், ‘‘குட்டி ஓநாய், குட்டி ஓநாய், சாப்பாட்டு நேரம், வா’’ என்று கத்தினான்.

அதனுடைய கண்கள் சிவந்து போகுமளவுக்கு ஓநாய்க்குட்டி உற்றுப் பார்த்தது; அப்படியான உணவை அது இதுவரை பார்த்ததில்லை. ஆனால் அது ஒரு நல்ல உணவென ரத்தவாடை அதற்குச் சொல்லியது. ஜென் அதை உயர்த்திப் பிடித்திருந்தான்; ஓநாய்க்குட்டி மீண்டும் மீண்டும் எகிறிப் பாய்ந்தது. ஓநாய்க்குட்டி கொழுத்த பொந்து நாயையே விடாமல் பார்த்துக்கொண்டிருந்தது. இப்போது அது படுமூர்க்கமான காட்டு ஓநாய்போல் காணப் பட்டது. அதனுடைய நான்கு கோரைப் பற்களும் ஈறுகளும் தெரியும் படியாக வாய் திறந்திருந்தது. ஓநாய்க்குட்டியின் கொடூரமான தோற்றம் ஜென்னை அச்சுறுத்தியது. மேலும் சில முறை, இரையை உயரப் பிடித்து

ஆட்டிவிட்டு, கடைசியாக அதை சுண்டிவிட்டான். ஓநாய்க்குட்டி இரையைத் துண்டு துண்டாகக் கிழித்து விழுங்குமென ஜென் எதிர்பார்த்திருந்தான். ஆனால் இரையை எகிறிப் பாய்ந்து கவ்விய பிறகு, ஓநாய்க்குட்டி செய்த காரியம் அவனை வியப்படைய வைத்தது. அவனால் விளக்கவோ மறக்கவோ முடியாத ஒரு காரியமாக அது இருந்தது.

ஏதோ சூடான இரும்புத் துண்டைப் பிடித்துவிட்டது போல, ஓநாய்க்குட்டி அதை உடனடியாகக் கீழே போட்டுவிட்டுப் பின்வாங்கியது. பிறகு, சில அடிகள் தள்ளி நின்றுகொண்டு, தன் கழுத்தையும் உடம்பையும் நீட்டி, செத்த அந்த விலங்கைப் பயத்துடன் பார்த்தது. இப்படியாக மூன்று நிமிடங்கள் கடந்தது. அதன் கண்களிலிருந்து பயம் நீங்கியது. பிறகு, அது தன் உடலை வளைத்து, ஏழெட்டு முறை எகிறியது. கடைசியாக, ஓடிப்போய் பொந்து நாயின்மீது பாய்ந்தது. ஒரு கடி கடித்ததும், பின்னால் குதித்து, கொஞ்ச நேரம் அதைப் பார்த்தபடி இருந்தது. அந்த விலங்கு நகராமல் கிடப்பதைப் பார்த்ததும் மீண்டும் பாய்ந்து இன்னொரு கடி கடித்தது. பிறகு, மீண்டும் அதைப் பார்த்தபடி இருந்தது. இப்படியாக மூன்று அல்லது நான்கு முறை அது தொடர்ந்து செய்தது; பிறகு, ஒருவழியாக நிம்மதி அடைந்தது.

ஓநாய்க்குட்டியின் கண்களில் மூர்க்கம் நீங்கி பயபக்தி குடியிருந்தது. அது நடந்துபோய் பொந்து நாயின் பக்கத்தில் நின்றது. அது மரியாதையுடன் தன்னுடைய வலது முன்னங்காலை வளைத்தது; பிறகு இடது முன்னங்காலை வளைத்தது. பின் அதனுடைய வலது பின்புறத்தால் பொந்து நாயைத் தொட்டு, அதன்மீது உருண்டது. பிறகு, எழுந்து நின்று மணலை உதறியது. பின் அதன் மறுபக்கம் சென்று முன்னர் மாதிரியே, ஆனால் முறை மாற்றிச் செய்தது.

ஜென் மிகுந்த பதற்றத்துடன் கவனித்துக்கொண்டிருந்தான். ஓநாய்க்குட்டி என்ன செய்கிறதென்று அவனுக்குப் புரியவில்லை. இதை எங்கிருந்து கற்றுக்கொண்டதென்றும், அது ஏன் அந்த விலங்கைத் தொட்டு, அதன் மீது உருள்கிறதென்றும் அவனுக்கு விளங்கவில்லை.

ஜென்னால் தன்னுடைய கண்களை நம்ப முடியவில்லை. அவன் ஓநாய்க்குட்டிக்கு எவ்வளவோ ருசியான இறைச்சியைக் கொடுத்திருக்கிறான்; அப்போதுதான் கொல்லப்பட்டதிலிருந்து வெட்டி எடுக்கப்பட்ட இறைச்சியைக்கூட சில சமயங்களில் கொடுத்திருக்கிறான். ஆனால்

ஓநாய்க்குட்டி இதுபோல இதற்குமுன் செய்ததில்லை. இந்தப் பொந்து நாயிடம் அப்படியென்ன வித்தியாசம் இருக்கிறது. ஒரு விலங்கு அப்படியே கிடைத்ததற்காக அது தன்னைத் தானே பாராட்டிக் கொள்கிறதா? அல்லது சாப்பிடுவதற்கு முன்னாலான ஒரு சடங்கா?

அவன் பலவாறு தலை வலிக்குமளவு யோசித்த பிறகு, இப்போது அவன் ஓநாய்க்குட்டிக்குத் தந்திருப்பது வித்தியாசமானது என்பதை உணர்ந்தான். அவன் இதுவரை கொடுத்ததெல்லாம், அவை என்னதான் நல்ல உணவாக இருந்தாலும், உடைந்த எலும்புகள், வெட்டப்பட்ட இறைச்சி மற்றும் மனிதர்களால் உருவாக்கப்பட்ட உணவுதான். ஆனால் இது இயற்கையானது; அதைப் போலவே தலையும் வாலும், உடலும் பாதங்களும், தோலும் மயிரும் என முழுமையாக இருப்பது.

ஓநாய்க்குட்டி மூச்சிழுத்தது; ஆனால் உடனடியாக அது சாப்பிடத் தொடங்கவில்லை. இறந்த விலங்கைச் சுற்றி நடந்து வந்தது. பலமுறை இவ்வாறு வேகமாக நடந்தது. வட்டத்தின் அளவை மாற்றாமல் நடையின் வேகத்தைக் கூட்டியது.

முன்இளவேனிற் காலத்தில், குவியலாய் இறந்து கிடந்த ராணுவக் குதிரைகளைச் சுற்றி, புதிராகவும் அச்சமூட்டும் வகையிலும் வட்டமடித்த ஓநாய்களின் செயல் ஜென்னின் நினைவில் சட்டென எழுந்தது. டஜன் கணக்கான ஓநாய்கள், அடர்த்தியாகக் குவிந்து கிடந்த குதிரை சடலங்களைச் சுற்றி உருவாக்கிய வட்டத் தடயமானது, ஒரு வகையான ஆவயுருவ எழுத்துப் போல அல்லது ஆவியுருவ ஓவியம் போல அமைந் திருந்தது. முதியவர்கள், டெஞ்ஞருக்கு அவை செலுத்தும் நன்றியின் வடிவமென அதைக் கருதினார்கள். அந்த வட்டம் எவ்வளவு கச்சிதமாக அமைந்திருந்ததோ, அதே போன்று ஓநாய்க்குட்டி உருவாக்கியதும் இருந்தது. இரண்டு வட்டங்களுக்கும் நடுவில் இரை கிடந்தது.

அந்த முழுமையான உணவை உண்பதற்கு முன்பாக, ஓநாய்க்குட்டி டெஞ்ஞருக்கு நன்றி செலுத்துகிறதா?

ஓநாய்க்குட்டி இன்னமும் வட்டமடித்துக்கொண்டிருந்தது. அந்த நாள் முழுவதும் அதற்கு இறைச்சி கிடைத்திருக்கவில்லை; அதனால் அது பயங்கரமான

பசியில் இருக்கும். பொதுவாக, ரத்தத்துடனான இறைச்சியைப் பார்த்தவுடன், பசியுடன் இருக்கும் ஓநாய் வெறி கொண்டுவிடும். அப்படி இருக்கும்போது ஏன் இந்த ஓநாய்க்குட்டி இயல்புக்கு மாறாக, தன் பசியைக் கட்டுப் படுத்திக்கொண்டு, சில ‘சமயச் சடங்குÕகளை மேற்கொள்வதில் கவனம் செலுத்துகிறது? ஓநாய்களுக்கிடையே ஒரு தொன்மையான சமயம் நிலவுகிறதா? அவற்றின் நடத்தைகளை வலுவான ஆன்மீக சக்தி கட்டுப்படுத்துகிறதா? கண்கள் திறந்துகொள்வதற்கு முன்பாகவே கூட்டத்தை விட்டுப் பிரிக்கப்பட்டுவிட்ட இந்த ஓநாய்க்குட்டியிடம்கூட அந்த சக்தி செயல்படுகிறதா?

ஒரு வழியாக ஓநாய்க்குட்டி நின்றது. மூச்சு வாங்கியது. மூச்சு இயல்புக்கு வரும்வரை காத்திருந்தது. பிறகு உதடுகளை இருமுறை நக்கிக்கொண்டது. அதன் கண்களில் பேராசையின் மூர்க்கமான ஜுவாலையும் பசியின் வெறியும் பிரகாசித்தன. தொன்மையான சமயம் சார்ந்த சாது நிலையிலிருந்து, பசித்த காட்டு ஓநாயாக அது விரைவாக மாறியது. இரையின்மீது பாய்ந்து கடித்தது. விலங்கின் பாதித் தோலையும் மயிரையும் கிழித்தது; அதனடியில் இருந்த சதை வெளித் தெரிந்தது. அது கிழித்துக் கடித்துத் தின்றது. பொந்து நாயின் ஒரு பக்க இறைச்சியையும் எலும்புகளையும் விழுங்கிய பிறகு, குடல்களைத் தின்று முடித்தது.

அது சாப்பிடும்போது, அதன் சுபாவத்தில் முரட்டுத்தனமும் படபடப்பும் கூடியது. சதை, எலும்பு, தோல், மயிர், இரைப்பை — கசப்பான பித்த நீர்ப்பையைக்கூட — என எல்லாவற்றையும் ஒரே மாதிரி பாவித்து சாப்பிட்டது. கொஞ்ச நேரத்தில் தலையையும் குட்டி வாலையும் தவிர எல்லாவற்றையும் முடித்துவிட்டது. ஆனால் அதோடு நின்றுவிடவில்லை. பாதங்களால் தலையைப் பிடித்துக்கொண்டு, பல் உட்பட பாதியைக் கடித்துத் தின்றது. பின் மறு பாதியையும் முடித்தது. குட்டியான மயிரடர்ந்த வாலையும் விட்டு வைக்கவில்லை. அதை இரண்டாகக் கடித்து விழுங்கியது. கடைசியாக, அந்த மண் தரையில் சிறு ரத்தத் திட்டும், கொஞ்சம் மூத்திரக் கறையுமே எஞ்சியிருந்தன. ஆனாலும் அது முழு திருப்தி அடையவில்லை. ஜென்னுடைய கைகளில் எதுவுமில்லை என்பதை உறுதி செய்துகொள்ளும் வகையில்

அவனையே பார்த்தது. அவனை நோக்கிக் கொஞ்ச தூரம் நடந்தது; பின் தரையில் ஏமாற்றத்துடன் படுத்துக்கொண்டது.

மேய்ச்சல்நிலக் கொறிக்கும் விலங்குகளிடம் ஓநாய்க்குட்டிக்கு இருக்கும் விருப்பத்தை ஜென் தெரிந்துகொண்டான். அதனுடைய உள்ளுணர்வுகளையும் ஆற்றல்களையும் அவை விழிப்புறச் செய்வதை உணர்ந்தான். ஆயிரக்கணக்கான வருடங்களாக, கொறிக்கும் விலங்குகளால் ஓலோன்புலாக்கிற்குப் பெரிய பாதிப்பு ஏற்படாததன் காரணத்தையும் புரிந்துகொண்டான்.

ஓநாய்க்குட்டியின் மீதான அன்பும் பாசமும் ஜென்னின் இதயத்தில் துள்ளி எழுந்தது. கிட்டத்தட்ட ஒவ்வொரு நாளும் அவன் ஒரு நல்ல நாடகத்தை அனுபவித்துக்கொண்டிருந்தான். அது எப்போதும் உயிரோட்டத்துடனும் ஆழ்ந்த ஞானத்தோடும் அமைந்து, ஓநாய்க்குட்டியின் விசுவாசமிக்க ரசிகனாக அவனை மாற்றியிருந்தது.

நாய்க்குட்டிகள் எலும்புகளைக் கருமிக்கொண்டிருப்பதை ஓநாய்க்குட்டி ஏக்கத்துடன் பார்த்தது. ஜென், மர்மோட்டின் தோலை உரிப்பதற்காகக் குடிலுக்குள் சென்றான். நாய்களால் கடிக்கப்பட்டிருந்த கழுத்துப் பகுதியையும், தலையையும் வெட்டி அவற்றைத் துண்டங்களாக்கி, ஓநாய்க்குட்டிக்கு இரவு உணவாகத் தரலாமென ஒரு பாத்திரத்தில் போட்டு வைத்தான். பிறகு, இறைச்சியை வெட்டினான். அது மூன்று பேருக்கான அருமையான உணவாக அமையுமளவு இருந்தது.

மாலையில், மேற்கில் சூரியன் மெல்லப் பாதியளவு மறைவதை ஓநாய்க்குட்டி அமைதியாகப் பார்த்துக்கொண்டிருந்தது. சூரியன் அஸ்தமனம் ஆனதும், பசுமையான மலை உச்சியில் சில ஒளிக்கதிர்கள் மட்டுமே விழுந்திருந்த நிலையில், ஓநாய்க்குட்டி சுழன்று, குடிலின் கதவை நோக்கித் திரும்பியது. வினோதமான சில அசைவுகளை, மத்தளம் கொட்டுவது போலவும் அல்லது இரையின்மீது பாய்வது போலவும், குட்டிக்கரணம் அடிப்பது போலவும், பரபரப்புடன் மேற்கொண்டது. பின்னர், தன்னுடைய சங்கிலியை ஆட்டிக் கிணுகிணுக்கச் செய்து, அது நடை செல்ல வேண்டிய நேரமென்பதை ஜென் அல்லது யாங்கிற்கு நினைவு படுத்தியது.

மற்றவர்கள் திரும்பி வருவதற்கு முன்னதாக, ஜென் கொஞ்சம் இறைச்சியை சாப்பிட்டான். அப்போதுதான், எர்லாங்கும் எல்லோவும் பின்தொடர அவன் ஓநாய்க்குட்டியுடன் நடை போய்வர முடியும். இந்த மங்கலான நேரம்தான், ஒரு நாளில் ஓநாய்க்குட்டியின் மிகவும் சந்தோஷமான தருணம்; சாப்பாட்டு நேரத்தை விடவும் ஆவலோடு அது எதிர்பார்த்திருக்கும் நேரமிது.

ஜென்னைப் பொறுத்தவரை, ஓநாய்க்குட்டியுடன் நடை போவது மிகவும் சந்தோஷமான விசயம் என்றாலும், மிகவும் களைப்படையச் செய்கிற, அந்த நாளின் மிகவும் கடினமான வேலை இதுதான்.

அபரிமிதமாக உட்கொண்ட உணவினால் ஓநாய்க்குட்டி நன்கு வளர்ந்திருந்தது. அதன் வயதையொத்த நாயை விட நீளமும் எடையும் அதற்கு மிக அதிகமாக இருந்தது. அது பிறந்த போதிருந்த முடி உதிர்ந்து, மினுமினுப்பான, சாம்பல்_மஞ்சள் மயிர் வளர்ந்திருந்தது. அதன் பின்னால் இருந்த கருத்த பிடரிமயிர் நீளமாகவும் நேராகவும் ஒரு பெரிய காட்டு ஓநாய்க்கு இருப்பதைப் போலிருந்தது. அதன் முகமும் நீண்டுவிட்டிருந்தது. மூக்கின் மீதிருந்த ஈரமுனை ரப்பர் பாட்டில் மூடியைப் போல் காணப்பட்டது. அந்த மூக்கைக் கிள்ள ஜென்னுக்கு மிகவும் பிடிக்கும். அவன் அப்படிச் செய்யும்போது அது தும்மல் போடும். அதன் காதுகள் கடினமானதாகவும் நீளமாகவும் வளர்ந்திருந்தன. தூரத்திலிருந்து பார்க்கும்போது, அது காட்டு ஓநாயைப் போலவே இருந்தது.

அதன் முகத்தில் மிகவும் அச்சுறுத்தக் கூடியதாகவும், அதேசமயம் மிகக் கவர்ச்சிகரமாகவும் இருந்தது அதனுடைய கண்கள்தான். அவை வட்டமாக இருந்தபோதிலும், மேல்நோக்கியும் வெளிப்புறமாகவும் சற்றே சரிந்திருந்தன. பீஜிங் ஒபெரா கலைஞனின் முகத்தில் வரையப்பட்டிருக்கும் கண்களை விடவும் அவை கவர்ச்சி நிரம்பியிருந்தன. அதன் கண்களின் உள்மூலைகள் கீழ்நோக்கி சரிந்திருந்ததானது, மிகவும் அச்சமூட்டுபவையாகத் தோற்றமளித்தன.

ஓநாய்க்குட்டியின் இமைகள், லேசான சாம்பல் — மஞ்சள் வண்ண மயிர்களால் அடர்ந்திருந்தன. ஆனால் மிகவும் பயங்கரமாகத் தெரிவது என்னவென்றால், அது கோபப்படும்போது அதன் மூக்கின் ஓரமாக விழும் குழிகள்தான். ஓநாய்க்குட்டி கோபப்படும்போது, ஜென் அதன் கண்களைப் பார்க்கத் துணிய மாட்டான்.

அவனோடு ஓநாய்க்குட்டி ஒட்டிப் பழகிய பிறகு, அதன் சந்தோஷமான தருணங்களில் ஜென் உரிமை எடுத்துக்கொண்டு, அதன் காதுகளைப் பிடித்துத் தூக்கி, அதன் முகத்தை ஏந்திக் கொள்வான். நூறு நாட்களுக்கும் மேலாக அவன் அந்த முகத்தை அவதானித்திருக்கிறான்; அதை அவனுக்கு நன்றாகத் தெரியும். அதில் அவன் அடிக்கடி ஒரு சிரிப்பைப் பார்த்திருக்கிறான். ஆனால் வேறு பல சமயங்களில் அவன் பயந்து போயிருக்கிறான். அவனுடைய முதுகுத்தண்டை உறைய வைக்கும் கண்களை அவன் பலமுறை பார்த்து பயந்திருக்கிறான். அது தன்னுடைய நான்கு கோரைப் பற்களையும் வெளிக்காட்டும்போது – நாகப் பாம்பினுடையதை விடவும் ஆபத்தானவை அவை — அவன் நடுங்கியிருக்கிறான். அதேசமயம், அவன் அவ்வப்போது அதன் வாயைத் திறந்து, தன் விரல்களால் அதன் கோரைப் பற்களைத் தடவிப் பார்த்திருக்கிறான். அவை வலுவாகவும் இறுக்கமாகவும் இருந்ததோடு, அவற்றின் முனைகள் மிகவும் கூராகக் காணப்பட்டன. ஓநாய்களுக்கு மிகவும் ஆற்றல்மிக்க, அதேசமயம் அழகான எல்லாவிதமான ஆயுதங்களும் கூடிய முகத்தை டெஞ்ஞர் அளித்திருக்கிறது.

கடந்த சில வாரங்களாக, அதனுடைய உடல் எடையை விடவும் அதன் பலம் மிக வேகமாகக் கூடிவிட்டிருக்கிறது. இப்போதெல்லாம் ஜென் அதை நடத்திக்கொண்டு போவதில்லை; மாறாக, அதோடு சேர்ந்து அவன் இழுபட்டுப் போகிறான். அவன் பட்டியை விட்டு வெளியேறியதும், ஓநாய்க்குட்டி புல் சரிவுக்கு அவனை எருது வண்டியை இழுத்துச் செல்வது போல, இழுத்துக்கொண்டு போகும். ஓநாய்க்குட்டியின் கால்கள் வலுப் பெறவும், அதனுடைய ஓட்டத் திறன் மேம்படவும் வசதியாக ஜென்னும் யாங்கும் ஓடுவார்கள். ஓநாய்க்குட்டி அவர்களை இழுத்துக்கொண்டு, அவர்கள் ஓடமுடியாத அளவு களைத்துப் போன பின்னரும் விடாமல் ஓடும்.

ஜென் சென்னுக்குக் கை வலிக்கும். உடம்பெல்லாம் வியர்த்துக் கொட்டும். ஜென்னின் முகம் வெளுத்து, கால்களில் சதைப் பிடிப்பு ஏற்படுமளவுக்கு அவனை ஓநாய்க்குட்டி ஓட வைக்கும். ஆரம்பத்தில், ஓநாய்க்குட்டியோடு ஓட அவன் திட்டமிட்டபோது, தன்னையும் திடப்படுத்திக் கொள்ளும் காரியமாகவே அதை அவன் நினைத்தான். ஆனால், வெகு தொலைவு ஓடக்கூடிய ஓநாய்க்குட்டியின் ஆற்றல் வெளிப்பட்டதும் அவன் தன்னம்பிக்கை இழந்தான்.

அதிவிரைவாக ஓடக்கூடிய மங்கோலியக் குதிரைகளால்கூட ஓநாய்களின் ஓட்டத்துக்கு ஈடு கொடுக்க முடியாது. ஓநாய்க்குட்டி பெரிதாக வளர்ந்த பின்பு, அதோடு எப்படி 'நடை' போகப் போகிறோம் என்று ஜென்னும் யாங்கும் கவலைப்படத் தொடங்கினார்கள். அவர்கள் ஜாக்கிரதையாக இல்லாவிட்டால், அது என்றேனும் ஒருநாள் அவர்களை இழுத்துக்கொண்டுபோய் ஓநாய்க்கூட்டத்தின் மத்தியில் விட்டுவிடும்.

சமயங்களில், ஓநாய்க்குட்டி ஜென்னையோ யாங்கையோ சுண்டித் தரையில் விழவைத்து விடும்; அதைப் பார்த்து குடில்களில் இருக்கும் பெண்களும் குழந்தைகளும் வெகுவாக ரசிப்பார்கள். ஓநாய் வளர்ப்பதை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லை என்றாலும், பீஜிங் மாணவர்கள் ஓநாய்க்குட்டியோடு நடந்து போவதை அவர்கள் ரசித்தார்கள். அவர்களுடைய 'அறிவியல் பரிசோதனை'க்காக டெஞ்ஞர் அவர்களைத் தண்டிக்கும் நாளுக்காகக் காத்திருந்தார்கள்.

கொஞ்சம் ரஷ்ய மொழி தெரிந்த ஒரு நடுத்தர வயது மேய்ப்பர் ஒருமுறை ஜென்னிடம், ''மனிதர்களால் ஓநாயையோ அல்லது அறிவியலையோ பழக்கப்படுத்திவிட முடியாது'' என்றார்.

ஓநாய்க்குட்டியை அவதானிக்கவும் அறிந்துகொள்ளவுமே தான் விரும்புவதாகவும், அதைப் பழக்கப்படுத்தும் நோக்கம் தனக்கு இல்லையென்றும் ஜென் விளக்கமளித்தான். ஆனால் அதை யாரும் கேட்கவில்லை. வேட்டை நாய் வகையைச் சேர்ந்த ஒரு பெண் நாயோடு ஓநாயை அவன் இணை சேர்க்கும் எண்ணத்தோடு இருக்கிறானென்பது மேய்ச்சல் நிலம் முழுவதும் பரவியிருந்தது. பெண் நாயை ஓநாய் பசி வெறியோடு விழுங்கிய கதையைக் கேட்கக் காத்திருப்பதாக அவர்கள் சொன்னார்கள்.

ஓநாய்க்குட்டி ஜென்னை இழுத்துக்கொண்டு சந்தோஷமாக ஓடியது. அதற்கு இணையாக ஓடியதில் ஜென்னுக்குக் கடுமையாக மூச்சு வாங்கியது. ஆரம்பத்தில் ஓநாய்க்குட்டி எவ்வித இலக்குமின்றிதான் ஓடியது; ஆனால் சமீப நாட்களாக அது வடமேற்குத் திசையை நோக்கி — இரவில் ஓநாய்களின் ஊளைகள் ஒருமுனைப் பட்டிருந்த இடம் — ஜென்னை இழுத்துக்கொண்டு ஓடியது. அதன் ஆர்வம் கிளர்ந்தெழுந்திருந்தது; அது எங்கு போக

விரும்புகிறதோ அங்கு தன்னைக் கூட்டிப் போகட்டுமென்று ஜென் அனுமதித் திருந்தான். ஒரு மலை இடுக்கைக் கடந்து, ஒரு நேர்த்தியான சரிவை அடைந்திருந்தார்கள். இதுவரை இவ்வளவு தொலைவு அவர்கள் வந்ததில்லை.

குடிலிலிருந்து மூன்று அல்லது நான்கு லீ தூரம் அவர்கள் வந்துவிட்டிருப்பதை ஜென் உணர்ந்தான்; அது அவனுக்குக் கொஞ்சம் கவலையை ஏற்படுத்தியது. ஆனால், இரண்டு நாய்களின் பாதுகாப்பும் அவனுடைய கனத்த தடியும் இருப்பதால், ஓநாய்க்குட்டியைத் திரும்பும்படி வலியுறுத்த வேண்டியதில்லை என அவன் முடிவெடுத்தான். அவர்கள் மேலும் அரை லீ தூரமளவுக்கு ஓடினார்கள். அதன்பிறகு, ஓநாய்க்குட்டி நின்று, அதைச் சுற்றிக் கிடந்தவற்றை முகர்ந்து பார்த்தது: குவிந்து கிடந்த மாட்டுச் சாணம், மண்மேடு, ஒரு வெள்ளை எலும்புத் துண்டு, புல் கூட்டம், ஒரு பாறை என தரையில் இருந்த எந்தவொன்றையும் விடாமல் முகர்ந்தது. அப்படி அது முகர்ந்தபடியே சென்றபோது, திடீரென அதன் முதுகு மயிர்கள் சிறகுகளைப் போல் குத்திட்டு நின்றன. அதன் கண்கள் திகைப்பிலும் சந்தோஷத்திலும் பிரகாசித்தன; புல் கூட்டத்தினுள் தலையைப் புதைத்துக்கொண்டு, தொடர்ந்து முகர்ந்து பார்த்தபடி சென்றது. பிறகு, தலை நிமிர்த்தி, அஸ்தமன மாகிக்கொண்டிருக்கும் சூரியனைப் பார்த்து ஊளையிட்டது. அது முன்பைப் போல பரவசத்தோடும் சந்தோஷத்தோடுமான ஊளையாக இல்லாமல் சோகமும் கவலையும் மிகுந்ததாக இருந்தது. அதன் சிறை வாழ்க்கை பற்றி அது தன் உறவுகளிடம் முறை யிடுவதாக ஜென் நினைத்துக்கொண்டான்.

எர்லாங்கும் எல்லோவும் புல்லை முகர்ந்து பார்த்தன. அவற்றின் முதுகு மயிர்ளும் சிலிர்த்துக்கொண்டன. அவை மண்ணைப் பிறாண்டி, வெறியோடு குரைத்தன. ஓநாய்க்குட்டியும் நாய்களும் ஓநாயின் மூத்திர வாசனையைக் கண்டுபிடித்திருக் கின்றன என்பதை ஜென் புரிந்துகொண்டான். தன் ஷூவால் புல்லை விலக்கிப் பார்த்தான். பல புல் தண்டுகளின் அடிப்பகுதி மஞ்சளாகியிருந்தது. கார நெடி அவன் மூக்கைத் தாக்கி, அவனைப் பதற்றமடையச் செய்தது. அது இப்போதுதான் பெய்யப்பட்ட மூத்திரம். அப்படியானால் ஓநாய்கள் இன்னமும் முகாமைச் சுற்றித்தான் திரிந்துகொண்டிருக்கின்றன.

அஸ்தமன சூரியன், கரும்பச்சை நிழலால் மலைச் சரிவை மூடியது. இதமான காற்று வீசியபோது புற்கள் அலைந்ததில், அவை ஓநாய்க் கூட்டத்தின் முதுகுகளைப் போல் தோற்றமளித்தன. ஒரு எதிர்பாராத தாக்குதல் நிகழக்கூடுமென ஜென் பயந்தான். அப்போது, ஓநாய்க்குட்டி மூத்திரம் பெய்வதற்காகத் தன் காலைத் தூக்கியது.

குட்டியைப் பிரிந்த தாய் ஓநாய் பரிதவித்துக்கொண்டிருப்பது தெரிந்தது. மேலும், அதற்கு எப்படி தகவல் அனுப்புவதென்பதை ஓநாய்க்குட்டி கற்றுக்கொண்டு விட்டிருந்தது. தாயோடு அது தொடர்பு கொண்டுவிட்டால், அதன் பின்விளைவுகள் கற்பனை செய்ய முடியாத அளவில் இருக்கும். வேறு யோசனைக்கு இடம் தராமல், ஜென் ஓநாய்க்குட்டியை சுண்டி பின்னுக்கு இழுத்தான். தாயைக் கண்டுபிடிப்பதற்கான அதன் திட்டமும் ஆசையும் தடுக்கப்பட்டதில் ஆத்திரமடைந்த ஓநாய்க்குட்டி பம்மியது. பின் ஒரு அசல் காட்டு விலங்கைப் போல, ஜென் மீது எகிறிப் பாய்ந்தது.

ஜென் சட்டென சுபாவமாகப் பின்னால் விலகிக்கொண்ட போதிலும், கால் இடறிப் புல் கூட்டத்தில் விழுந்தான். அவனுடைய கரண்டைக்கால் சதையில் ஓநாய்க்குட்டி சீற்றத்துடன் கடித்தது. வலி தாங்காமல் அலறினான் ஜென். அவனுடைய உடலில் பீதி படர்ந்தது. அதன் கோரைப்பற்கள், அவனுடைய கால் சராயி னூடாகச் சென்று சதையில் பாய்ந்திருந்தன. அவன் உடனடியாக எழுந்து உட்கார்ந்துகொண்டு, ஓநாய்க்குட்டியின் மூக்கு முனையைப் பிடித்துத் தள்ளிவிட்டான். ஆனால் ஓநாய்க்குட்டி படுமூர்க்கத்துடன் காணப்பட்டது; ஜென்னுடைய காலிலிருந்து சதையைக் குதறி எடுத்தால்தான் அது திருப்தி அடையும் போலிருந்தது.

நாய்கள் திகைத்துப் போயிருந்தன; பின், சுதாரித்துக்கொண்டு செயலில் இறங்கின. ஓநாய்க்குட்டியின் கழுத்துப் பின்புறத்தைக் கவ்வியபடி எல்லோ, அதை இழுத்து வெளியேற்ற முயற்சி செய்தது; எர்லாங் ஓநாய்க்குட்டியைப் பார்த்து வெறித்தனமாகக் குரைத்தது. இடி போன்ற அதன் குரைப்பில் மிரண்டு போன ஓநாய்க்குட்டி ஒதுங்கியது.

பயத்தில் நிலை குலைந்திருந்தான் ஜென். ஓநாய்க்குட்டியின் பற்களில் அவனுடைய ரத்தத்தைப் பார்த்தான். எர்லாங்கும் எல்லோவும் இளம் ஓநாயைக் கட்டுப்படுத்தி வைத்திருந்ததால், ஜென் அதன் கழுத்தைப் பிடித்து,

தன்னுடைய கைகளில் இறுகப் பற்றிக்கொண்டான். ஓநாய்க்குட்டி தொடர்ந்து போராடியது, உறுமியது; அதனுடைய கண்கள் ஒளிர்ந்தன; கோரைப் பற்களைக் காட்டியபடி இருந்தது.

ஜென், குரைப்பதை நிறுத்தும்படி நாய்களைப் பார்த்துக் கத்தினான். ஒரு வழியாய் அவை குரைப்பதை நிறுத்தின. ஓநாய்க் குட்டியும் போராடுவதைக் கைவிட்டது. ஜென் பிடியைக் கொஞ்சம் தளர்த்தியதும், ஓநாய்க்குட்டி தன் உடலை உலுக்கியபடி பின் வாங்கியது. ஜென்னை அச்சுறுத்தும் விதமாகப் பார்த்தது; அதன் முதுகு மயிர் இன்னமும் குத்திட்டபடி இருந்தது. ஜென் கோபத்தோடும் அதேசமயம் பயத்தோடும் காணப்பட்டான். ‘‘ஓநாய்க் குட்டியே, உனக்கென்ன கண் குருடாகிவிட்டதா? என்னைக் கடிப் பதற்கு உனக்கு எவ்வளவு தைரியம்?’’ என்று மூச்சு விடாமல் கேட்டான். ஒரு வழியாக, பரிச்சயமான அந்தக் குரல் குரூரமான பைத்தியக்காரத்தனத்திலிருந்து ஓநாய்க்குட்டியை மீட்டது. அது தலை நிமிர்த்தித் தன் முன்னாலிருக்கும் மனிதனை உற்றுப் பார்த்தது; ஜென் யாரென்பது அதற்கு மெல்லப் பிடிபடுவது போலிருந்தது. அதன் கண்களில் வருத்தம் தெரிவிப்பதற்கான சிறு தடயமும் இல்லை.

ஜென்னுடைய காயத்திலிருந்து ரத்தம் வழிந்தது; அவனுடைய ஷூவுக்குள் ரத்தம் புகுந்துகொண்டிருந்தது. தட்டுத் தடுமாறி எழுந்துகொண்ட ஜென், தன்னுடைய கனத்த தடியை அங்கிருந்த ஒரு விலங்கு வளைக்குள் நுழைத்து, சங்கிலியின் இரும்பு வளையத்தை அந்தத் தற்காலிகக் கம்பத்தில் மாட்டினான். பின் அங்கிருந்து சில எட்டுகள் நகர்ந்து சென்று, திரும்பி உட்கார்ந்து கொண்டு, தன்னுடைய ஷூவைக் கழற்றினான். கால் சராயை சுருட்டி இழுத்து விட்டுக்கொண்டான். நான்கு சிறிய துளைகள் விழுந்திருந்தன. நல்லவேளையாக, அவனுடைய பேன்ட் துணியானது கித்தான் போன்றதென்பதால் அந்தக் கடியின் வீர்யத்தைப் பெருமளவில் அது தாங்கிக்கொண்டு விட்டது. அதனால் காயங்கள் ஆழமாக இல்லை. காயங்களைச் சுற்றியிருந்த தோலை அமுக்கி, சுத்தமான ரத்தத்தை ஜென் வெளிவரச் செய்தான். அதன் மூலம் நஞ்சை வெளியேற்றினான். மேய்ப்பர்களிடமிருந்து அவன் கற்றுக் கொண்டிருந்த விசயமிது. கிட்டத்தட்ட பாதி ஊசிக்குழாயளவு ரத்தத்தை அவன் பிதுக்கி வெளியேற்றிய பிறகு,

அவனுடைய சட்டையிலிருந்து ஒரு துண்டைக் கிழித்துக் காயத்தைச் சுற்றிக் கட்டினான்.

ஜென் மறுபடியும் எழுந்துகொண்டு சங்கிலியைப் பிடித்தபடி, குடிலின் திசையில் அதன் தலையைத் திருப்பினான். குடிலிலிருந்து வரும் சமையல் புகையைக் காட்டி, ‘‘குட்டி ஓநாய், குட்டி ஓநாய், சாப்பிடப் போகலாம் வா. கொஞ்சம் தண்ணீர் குடி’’ என்று கத்தினான். ஒவ்வொரு நடை செல்லலுக்கும் பின், அதை மீண்டும் திரும்பக் கூட்டிக்கொண்டு போவதற்கான ஒரே வழியாக ஜென்னும் யாங்கும் இதைக் கையாண்டார்கள். உணவு, தண்ணீர் என்பதைக் கேட்டவுடன், அப்போது நடந்ததையெல்லாம் மறந்துவிட்டு, வாயில் எச்சில் ஒழுக, வீட்டை நோக்கி ஜென்னை இழுத்துக்கொண்டு ஓடியது.

ஓநாய்க்குட்டி தன்னுடைய உணவுக் கிண்ணத்தை நோக்கி ஓடி, உணவையும் தண்ணீரையும் ஆவலோடு எதிர்பார்த்திருந்தது. கம்பத்தில் இரும்பு வளையத்தை மாட்டிவிட்டு, அதற்கு மர்மோட்டின் கழுத்தையும், ஒரு பாத்திரத்தில் தண்ணீரையும் கொண்டு வந்து தந்தான். அது கழுத்தைப் புறக்கணித்துவிட்டு, தண்ணீரை வேக வேகமாகக் குடித்தது. ஒவ்வொரு முறை நடை போகும்போதும், அது நடை முடிந்ததும் விருப்பத்தோடு திரும்பிவர வேண்டுமென்பதற்காக, அவர்கள் நாள் முழுவதும் நடை போவதற்கு முன்பாக அதற்குத் தண்ணீர் கொடுப்பதில்லை. அது ஓடிக் களைத்து, வறண்டு போய் தாகத்தோடு இருக்கும்போது, தண்ணீர் என்ற வார்த்தையைக் கேட்டவுடன் அவர்களை ஒரே ஓட்டமாகக் குடிலுக்கு இழுத்துக்கொண்டு வந்துவிடும்.

ஜென், தன்னுடைய காயத்தைக் கவனிப்பதற்காகக் குடிலுக்குள் சென்றான். காயத்தைப் பார்த்துப் பதறிப்போன காவோ, அவனை உடனடியாக மருத்தவரைப் பார்த்து விஷ முறிவு ஊசி போட்டுக்கொள்ளும்படி வற்புறுத்தினான். ஜென்னும் ஆபத்தை உணர்ந்தவனாக, பிரிவு மூன்றிலுள்ள மாணவர்கள் குடிலுக்கு சவாரி செய்தான். அங்கு வெறுங்கால் மருத்துவரான லிட்டில் பெங்கிடம் தன் காயத்துக்கு வெறிநாய்க் கடி ஊசி போடும் படியும் சிகிச்சை அளிக்கும்படியும் கேட்டுக்கொண்டான். மேலும், அவரிடம் காயம் பற்றி எவரிடமும் தெரிவிக்க வேண்டாம் என்று கெஞ்சினான். அவர் ஏற்கெனவே அவனிடமிருந்து இரவல் பெற்றிருந்த புத்தகத்தை அவரே வைத்துக்கொள்ளலாம் என்றும், அது தவிர மேலும் இரண்டு புத்தகங்களை –

நெப்போலியன் வாழ்க்கை வரலாறு மற்றும் பால்சக்கின் நாவல் ஒன்று — அவருக்குத் தருவதாகவும் அவன் தெரிவித்தான்.

பெங் சம்மதித்தார் என்றாலும் குறைபட்டுக்கொண்டார். ‘‘குழும அலுவலக மருத்துவமனை ஒரு சமயத்தில் மூன்று அல்லது நான்கு வெறி நாய்க்கடி ஊசி மருந்துக் குப்பிகளையே எனக்குத் தருகிறது. நான் ஏற்கெனவே, மேய்ப்பர்களின் நாய்களால் கடிக்கப்பட்ட தொழிலாளர்களுக்கு இரண்டைப் பயன்படுத்தி விட்டேன். ஆக, நான் மறுபடியும் இந்த வெயிலில் அங்கு போய் வர வேண்டும்.’’

ஜென் அவரை சமாதானப்படுத்திய போதிலும், அவர் சொன்னதை அவன் சரிவரக் கேட்டிருக்கவில்லை. அவனுடைய யோசனையெல்லாம் ஓநாய்க்குட்டியை எப்படித் தக்கவைத்துக் கொள்ளப் போகிறான் என்பது பற்றியே இருந்தது. மேய்ச்சல்நில விதிகளின்படி, ஒரு நாய், ஆட்டைக் கடித்துவிட்டால்கூட அதைக் கொன்றுவிட வேண்டும்; அது ஒரு மனிதனைக் கடித்துவிட்டால் அந்த இடத்திலேயே அதை அடித்துக் கொன்றுவிட வேண்டும். ஓநாய்க்குட்டி மனிதனைக் கடித்துவிட்டிருக்கிறபோது அதற்கு வேறு பரிகாரமிருக்காது. ஓநாய்க்குட்டியை வளர்ப்பதென்பதே ‘இயற்கை விதிகளை மீறிய செயல்.’ இப்போது அதன் இருப்பே கேள்விக்குறியாகி விட்டது.

அவன் குடிலுக்குத் திரும்பியபோது, யாங்கும் காவோவும் மனிதர்களைக் கடிக்கத் தொடங்கிவிட்ட ஓநாய்க்குட்டியை இனி எப்படிக் கையாள்வது என்பது குறித்து விவாதித்துக்கொண்டிருப்பதைக் கேட்டான்.

‘‘என்ன ஒரு மிருகமிது!’’ காவோ கத்தினான். ‘‘அது ஜென்னையே கடிக்கிறதென்றால் வேறு யாரை விட்டுவைக்கும். நாம் அதைக் கொல்லத்தான் வேண்டும். அது வேறு யாரையாவது கடித்துவிட்டால் என்ன செய்வது? இலையுதிர் காலத்தில் நாம் புதிய மேய்ச்சல் பிரதேசத்துக்குச் செல்ல வேண்டி இருக்கும். அப்போது வெறிநாய்க்கடி ஊசி மருந்து கிடைப்பது சுலபமாக இருக்காது. நாய்க்கடியை விடவும் மோசமானது ஓநாய்க்கடி. அது ஆளைக் கொன்றுவிடும்.’’

யாங் கீ மெதுவாகச் சொன்னான். ‘‘குழுமம் இனிமேல் நமக்குத் தடுப்பு மருந்து எதுவும் தராதென்றே நினைக்கிறேன்.

வேலை பார்க்குமிடத்தில் ஓநாயோ, நாயோ கடித்தால் மட்டுமே பயன்படுத்துவதற்காக அவர்கள் அதை பொக்கிஷம் போல் பாதுகாத்து வைத்திருப்பார்கள். நான் என்ன நினைக்கிறேன் என்றால், நாம் எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமாக ஓநாய்க்குட்டியை விடுதலை செய்துவிட வேண்டும். இல்லையென்றால் அதைக் கொல்வதற்கு அவர்கள் யாரையாவது அனுப்புவார்கள்.''

''ஓநாய்க்குட்டி ஏற்கெனவே ஒருவரைக் கடித்துவிட்ட நிலையில் நீ அதை விடுவிப்பது பற்றிப் பேசுகிறாய். அது இப்போது நடக்காது.''

இப்போது அவன் என்ன செய்ய வேண்டுமென்று ஜென் அறிந்திருந்தான். அவன் பல்லைக் கடித்துக்கொண்டு, ''நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். நாம் அதைக் கொல்லவும் வேண்டாம்; விடுவிக்கவும் வேண்டாம். நாம் அதைக் கொன்றால், என்னுடைய இந்தக் காயங்களுக்கு ஒரு அர்த்தமும் இருக்காது. மேலும், கடந்த சில மாதங்களாக நாம் எடுத்துக்கொண்ட எல்லா முயற்சிகளும் வீணாகிவிடும். அதை விடுவிப்பதென்பது மரண தண்டனைக்கு ஒப்பானது. ஒருவேளை, அதன் கூட்டத்தை அது அடைந்து விட்டாலும்கூட, ஓநாய்கள் அதை அந்நியமாகவும் துரோகியாகவுமே பார்க்கும். அப்படியானால் அதனால் எப்படி வாழ முடியும்?''

''சரி, நாம் இப்போது என்ன செய்வது?'' யாங் வெறித்த பார்வையோடு கேட்டான்.

''நாம் இப்போது செய்ய வேண்டியதெல்லாம் பல் அறுவை சிகிச்சை. அதன் பல் முனைகளை நாம் வெட்டிவிட வேண்டும். ஓநாயின் மிக அபாயகரமான ஆயுதம் அதுதான். அதன் பிறகும் அதனால் கடிக்க முடியும்; ஆனால் அதனால் ரத்தத்தை எடுக்க முடியாது. அப்போது மருந்துக்கு அவசியமிருக்காது. நாம் இறைச்சியைச் சின்னச்சின்ன துண்டுகளாக்கி அதற்குக் கொடுக்கலாம்.''

யாங் தலையசைத்தான். ''அதைச் செய்யலாம்தான்; ஆனால் அதுவும் மரணதண்டனைதான். கோரைப்பற்கள் இல்லாமல் ஒரு ஓநாயால் இங்கு உயிர் வாழ முடியாது.''

‘‘இதைத் தவிர வேறு எதையும் என்னால் யோசிக்க முடியவில்லை. எப்படியிருந்தாலும், என்னைக் கடித்து விட்டதென்பதால் அதை நாம் கைவிட முடியாது. ஒருவேளை, மறுபடியும் அதன் முனைகள் வளரக்கூடும். ஆனால் இப்போதைக்கு அவைதான் நமக்கு ஆபத்தாக இருக்கின்றன.’’

அடுத்த நாள் காலையில், ஆடுகளை மேய்ச்சலுக்குக் கூட்டிச் செல்வதற்கு முன்பாக, ஜென்னும் யாங்கும் அறுவை சிகிச்சையை மேற்கொண்டார்கள். முதலில் அது சந்தோஷமாய் இருப்பதற்காக நிறைய உணவு கொடுத்தார்கள். பிறகு, அதன் தலையை யாங் பின்பக்கமாகப் பிடித்துக்கொண்டு, அவனுடைய பெரு விரல்களால் அதன் வாயை வலிந்து திறந்தான். சூரிய ஒளியில் ஓநாய்க்குட்டியின் வாயை அவர்கள் நெருக்கமாகப் பார்த்தார்கள். முனைகளை மட்டும் வெட்டி எடுப்பதால் அதன் வேர்களுக்கு எவ்வித பாதிப்பும் ஏற்படாது என்பது தெரிந்தது.

கத்திரியை முகர்ந்து பார்க்கவும், அதனோடு கொஞ்சம் விளையாடவும் ஓநாய்க்குட்டிக்கு இடம் கொடுத்தான் ஜென். பிறகு, யாங் அதன் வாயை வலியத் திறந்தான். ஜென் விரைவாகவும் கவனமாகவும் கோரைப்பற்களின் முனைகளைக் கத்திரித்தான். ஒவ்வொரு பல்லிலும் கால் பங்கை அவன் வெட்டியிருந்தான். ஒரு நிமிசத்துக்குள்ளாக யாருக்கும் எவ்விதக் காயமுமில்லாமல் அந்த வேலை முடிந்துவிட்டது. உடைந்த பகுதிகளை ஓநாய்க்குட்டி நக்கிப் பார்த்தது; அது எதை இழந்திருக்கிறதென்று அதற்குத் தெரியவில்லைபோல் தோன்றியது. அதை மெதுவாகக் கீழே விட்டார்கள்.

அவர்கள் இப்போது நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள். ஓநாய்க்குட்டி யாரையாவது கடித்துவிடுமோ என்று இனி பயப்படத் தேவையில்லை. ஆனால் அவர்கள் செய்த செயலுக்காகப் பல நாட்களுக்கு வருத்தப்பட்டார்கள். ‘‘ஒரு ஓநாயின் கோரைப் பற்களைக் கத்திரிப்பதென்பது, ஒரு மனிதனைக் காயடிப்பதை விடவும் குரூரமானது’’ என்று யாங் கீ அபிப்ராயப்பட்டான்.

ஜென், தனக்குத் தானே கேட்டுக்கொண்டான்: ‘‘ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதன் உண்மையான நோக்கத்திலிருந்து நாம் வெகுதூரம் விலகிப் போய்விட்டோமோ?’’

லிட்டில் பெங்கிற்கு இரவலாகப் புத்தகங்கள் கொடுத்தது பற்றியும் அவர்கள் மோசமாக உணர்ந்தார்கள். குழுமத்திலுள்ள ஏறத்தாழ நூறு மாணவர்களில் அவர்கள் மட்டும்தான், ‘நிலப்பிரபுத்துவவாதிகள், முதலாளித்துவவாதிகள், திரிபுவாதிகள்’ என கண்டனம் தெரிவிக்கப்பட்ட எழுத்தாளர்களின் செவ்வியல் புத்தகங்களடங்கிய கட்டுகளைக் கொண்டு வந்தார்கள். கொந்தளிப்பான முதல் இரண்டு வருடங்களுக்குப் பிறகு, அலுப்பும் சலிப்பும் சோர்வும் ஏற்பட்ட மனநிலையில் மாணவர்கள் தடை செய்யப்பட்ட புத்தகங்களை ரகசியமாக, வெறியோடு படிக்கத் தொடங்கினார்கள். ஒரு புத்தகத்தை இரவல் கொடுத்தால், அது திரும்பி வருவது பெரும்பாலும் சந்தேகமே. ஆனால் ஜென்னுக்கு வேறு வழியில்லை. என்ன நடந்ததென்று தெரிய வந்தால், நிச்சயம் பாவோ சுங்காய் ஓநாய்க்குட்டியைக் கொன்றுவிடுவார். செவ்வியல் புத்தகங்கள் அவற்றின் பணியைச் செய்து முடித்தன; ஜென்னை அவனுடைய ஓநாய்க்குட்டி கடித்த விசயத்தை நீண்ட காலத்துக்கு குழுமத்தைச் சேர்ந்த எவரும் அறிந்திருக்கவில்லை.

கிழக்கு — மத்திய உட்பகுதி மங்கோலியாதான், உலகின் எந்தப் பகுதியையும் விட கொசுக்கள் அதிகம் காணப்படுவது. அங்குள்ள நிறைய ஆறுகள் மற்றும் ஏரிகள், அடர்த்தியான நீண்ட புல்வெளி, குளிர்காலம் முழுவதும் தூங்குவதற்கான மர்மோட்டுகளின் பதுங்குமிடங்கள் என அவை வாழ்வதற்குத் தோதான இடமாக அது இருந்தது. மேலும், அவற்றுக்குத் தேவையான ரத்தமும் மிதமிஞ்சி இருந்தது: மனிதர்கள், கால்நடைகள், வயல் எலிகள், முயல்கள், பாம்புகள், மர்மோட்டுகள், மங்கோலிய மான்கள் என பல உயிரினங்களின் ரத்தம் அவற்றுக்குக் கிடைத்தது. சமீபத்தில், ஓநாய் ரத்தத்தைக் குடித்துவிட்டு வெறியேறிய கொசுக் கூட்டத்தால், பதினாறு வயது மாணவனின் நரம்புகள் கடும் பாதிப்புக்குள்ளாகி, அவன் பீஜிங்கிற்குத் திருப்பி அனுப்பப்பட்டான்.

ஒரு பிற்பகலில், தன் கொசுவலைப் பாதுகாப்புக்குள் உட்கார்ந்திருந்தபடி ஜென் சென் வாசித்துக் கொண்டிருந்தான். அவன் எழுந்துகொண்டு, தேனீ வளர்ப்போர் அணியும் முகமூடியைப் போட்டுக்கொண்டான். குதிரை முடியினால் செய்யப்பட்ட ஒரு பிரஷ்ஷையும் எடுத்துக்கொண்டான். பின், இறுக்கமாக மூடப்பட்டிருந்த குடிலை விட்டு வெளியேறி, ஓநாய்க்குட்டி என்ன செய்கிறதென்று பார்ப்பதற்காகச் சென்றான். நாளின் அந்த நேரத்தில்தான் கொசுக்களின் தாக்குதல் மூர்க்கமாக இருக்கும். வான்வெளித் தாக்குதலின்போது எழும் சைரன் ஒலியை விடவும் பயங்கரமான இரைச்சலுக்குள் ஜென் நடந்து சென்றான்.

ஓலோன்புலாக்கின் பெரிய மஞ்சள்நிறக் கொசுக்களிடம் ஓநாய்களின் புத்திசாலித்தனம் கிடையாது. அவை எந்தவொரு ஜீவராசியையும், விளைவுகள் பற்றி எண்ணாமல் தாக்கும். குதிரைகள் மற்றும் மாடுகளின் பயங்கர ஆயுதமான வால்களின் சுழற்றலில் எண்ணற்றவை இறந்துவிடும்.

ஜென் அணிந்திருந்த பாதுகாப்பு முகமூடியின் ஜன்னலைக் கொசுக்கூட்டம் அடைத்திருந்தது. அவை பெரும் அளவிலான கூட்டமாக இருந்ததோடு, வழக்கத்தை விடப் பெரிதாக இருந்தன. அவற்றின் சிறகுகள் சதா

அசைந்தபடியே இருந்தன. அவற்றைப் பார்க்கவே அவனுக்குப் பயமாக இருந்தது.

சங்கிலியால் கட்டப்பட்டிருந்த ஜென்னுடைய வெண்குதிரை, மேய விருப்பமின்றி, உரத் தொட்டியின் மத்தியில் நின்று கொண்டிருந்தது. ஆட்டுப் புழுக்கையால் அது நிரம்பியிருந்தது; ஒரு சிறு புல்கூட இல்லை; அந்த இடம் கொசுத் தொல்லையி லிருந்து கொஞ்சம் ஆசுவாசம் தந்தது. கொஞ்சம்தான், போதுமான அளவு இல்லை. குதிரையின் தோலை அவை, நெல் உமி அடுக்கு போல, முழுவதுமாகப் போர்த்தியிருந்தன. ஜென் வருவதைப் பார்த்ததும், குதிரை ஒரு விசிறியைப் போல அசைந்தாடியபடி அவனை நோக்கிச் சற்று நகர்ந்தது. ஜென் உடனடியாக அதன் சங்கிலியைக் கழற்றி, எருது வண்டியின் பக்கமாக அதைக் கூட்டிப் போனான். அங்கு கொசுக்கள் கொஞுசம் குறைவு. எருது வண்டியில் சங்கிலியைப் பிணைத்தான். குதிரை விடாமல் தலையாட்டியபடியே இருந்தது; அதன் வால் கோபத்துடன் வயிற்றைச் சுற்றியும், பின்னங்கால்களிலும், விலாப் பக்கங்களிலும் சுழற்றியடித்துக் கொண்டிருந்தது. முன்புறத் தாக்குதலுக்கு எதிரான ஒரே ஆயுதமாக வாய் மட்டுமே இருந்தது. குதிரையின் தோல் மயிர்களில் லட்சக்கணக்கான கொசுக்கள் இருந்து தங்கள் ஊசி முனைகளால் ரத்தத்தை உறிஞ்சின. குதிரை முழு சக்தியோடு தன் வாலை விசிறியடித்தபோது, அது பட்ட இடங்களிலெல்லாம் ரத்தச் சிவப்பு மைப் பூச்சென அப்பியது. அதன் வால் ரத்தத்தில் நனைந்திருந்தது. அதனுடைய வால், ரத்தம் தோய்ந்த ஒரு கொலைக் களத்தை உருவாக்கியது. வெண் குதிரையான அது, ரத்த தாகம் கொண்ட ஓநாய்களுக்கு நடுவே அகப்பட்டுக்கொண்ட குதிரையைப் போல இப்போது காணப்பட்டது.

ஜென், தன்னுடைய குதிரை மயிர் பிரஷ்ஷால் குதிரையின் முதுகிலும் முன்னங்கால்களிலும் இருந்த கொசுக்களை விரட்டினான். குதிரை தன்னுடைய நன்றியைத் தலை தாழ்த்தித் தெரிவித்தது. ஆனால் அவர்களைச் சுற்றி, அவை அலை அலையாய்க் கூடி வந்ததால், ஜென்னுடைய குதிரையால் அவற்றிடமிருந்து தப்பிக்க முடியவில்லை.

ஜென்னுடைய எண்ணமெல்லாம் ஓநாய்க்குட்டி பற்றியே இருந்தது; அதனால் அவன் குதிரையிடமிருந்து விலகிப் பட்டியை நோக்கி ஓடினான். அங்கு குழியில்

பாதியளவு தண்ணீர் நிரம்பியிருந்ததால், கொசுக்களிடமிருந்து ஒளிந்துகொள்ள ஓநாய்க் குட்டியால் முடியவில்லை. அதனுடைய மெல்லிய கோடைகால மயிரினால், தாக்கும் ஊசி முனைகளிலிருந்து எவ்விதப் பாதுகாப்பும் தர முடியவில்லை. மேலும், மூக்கு, காதுகள், கண்ணிமைகள், முகம், தலை, வயிறு போன்ற மயிர் மூடாத பகுதிகளில் மிக மோசமாக நிகழ்ந்த தாக்குதலில் ஓநாய்க்குட்டி பைத்தியம் பிடித்த நிலைக்கு ஆளாகியிருந்தது. மேய்ச்சல்நிலக் கொசுக்களுக்கு ஓநாய் ரத்தம் என்பது ஒரு டானிக் மாதிரி. அதனால்தான் மஞ்சள் மேகக் கூட்டமென பறந்து தாக்கும் கொசுக்களை அது கவர்ந்திருந்தது. தரையைச் சுற்றி உருண்டதால் ஒரு பிரயோசனமும் இல்லை. வேறு வழியில்லாமல் அது பட்டியைச் சுற்றி ஓடியபடி இருந்தது. அது களைத்துப் போனபோதுகூட நாக்கை வெளிப்படுத்த விரும்ப வில்லை. அது மூச்சுவிட வாய் திறந்தபோது, பூச்சிகள் தொண்டையில் சிக்கின. சிறிது நேரத்துக்குப் பிறகு, அது ஓடுவதை நிறுத்திவிட்டு, ஒரு பந்து போலப் பின்னங்கால்கள் அடியிலும் முன்னங்கால்கள் மூக்கை மூடியிருக்கும் வகையிலும், தன்னைச் சுருட்டிக்கொண்டது. மேய்ச்சல் நிலத்தின் கொடுங்கோலனாகத் திகழக்கூடிய ஓநாயை, இப்படியொரு இழிந்த நிலைக்குக் கொசுக்கள் தள்ளிவிட்டதைப் பார்த்து ஜென் ஆச்சரியப்பட்டான். அப்போதும் கூட அதன் கண்கள் வாழ்வின் சுடரோடு காணப்பட்டன; அதன் பார்வையில் கம்பீரமும், எதற்கும் பணியாத குணமும் வெளிப்பட்டன.

பில்ஜி ஜென்னிடம் ஒருமுறை, ‘‘கொசுக் கொள்ளை நோயைத் தொடர்ந்து எப்போதும் ஓநாய் கொள்ளை நோய் வரும்’’ என்றார். ‘‘ஏனென்றால், இந்தக் கொலைகாரப் பூச்சிகள், ஓநாய்களைத் தூங்கவிடாமல் செய்துவிடும். பசித்த ஓநாய்களைப் பைத்தியம் பிடித்த நிலையில் வைத்திருப்பதால், மனிதர்களும் கால்நடைகளும் தான் அதற்கு விலை கொடுத்தாக வேண்டும். மேய்ச்சல் நிலத்தின் படுமோசமான பயங்கரமென்பது, ஒன்றோடொன்று தொடர்புடைய கொள்ளை நோய்கள்தான். குறிப்பாக, கொசுக்களும் ஓநாய்களும்.’’ குழுமம் முழுவதும் ஒருவித அச்ச உணர்வு கவிந்திருந்தது.

ஓநாய்க்குட்டி வாடிப் போய்விட்டது; ஆனால் அதன் எடை குறைந்த மாதிரி தெரியவில்லை. கொசுக்களின் மூர்க்கமான தாக்குதல் இரவும் பகலும் தொடர்ந்தது. அது இப்போதும் வழக்கத்தை விட அதிகமாகப் பட்டியைச் சுற்றி

ஓடியது. ஜென் கரிசனத்தோடு அதைக் கவனித்துக்கொண்டான். சாப்பிட இறைச்சியும் குடிக்கத் தண்ணீரும் இருக்கும்வரை, ஓநாய்க்குட்டி எதையும் சமாளிக்கும்.

ஆனால் இப்போது, ஏதோ பைத்தியம் பிடித்தது போல ஓநாய்க்குட்டி சுற்றிலும் குதிக்கத் தொடங்கியது. ஒரு கொசு நைசாக நழுவி அதன் அடிவயிற்றுக்குள் புகுந்து, அதன் ஊசிமுனையை அதன் சிறிய குறி முனையில் குத்தியது. கடுமையான வேதனையில் துடித்த ஓநாய்க்குட்டி, தாக்கும் கொசுக்களிடமிருந்து தப்புவதற்கான முயற்சியை ஒரு கணம் வேறு வழியில்லாமல் கைவிட்டது. ஆனால் அடுத்த கணமே நூற்றுக்கணக்கான கொசுக்கள் கூட்டமாக அதன் வயிற்றைத் தாக்கியதில் தாங்கமுடியாத வலியில் துடிதுடித்தது.

அதன் வேதனையோடு அதை இருக்க விட்டுவிட்டு, ஜென் தன்னுடைய அரிவாளை எடுத்துக்கொண்டதோடு வில்லோ கூடையையும் எடுத்துப் பின்னால் போட்டுக்கொண்டு, மக்வோர்ட் செடிகள் வளர்ந்திருக்கும் மேற்கு மலைப் பகுதியிலுள்ள நீரோடையை நோக்கி ஓடினான். கடந்த வருடம், கொசுக்கள் கொஞ்சம் குறைவாக இருந்தபோது, அவன் கஸ்மாயோடு மக்வோர்ட் செடிகளை வெட்டி எடுத்து வருவதற்காகச் சென்றிருந் தான். புதிய மேய்ச்சல் நிலத்துக்கு வந்து சேர்ந்ததும், மக்வோர்ட் அதிக அளவில் எங்கு வளர்கிறதென்று ஜென் பார்த்து வைத்திருந் தான். மழை பெய்து கொசுப் பிரளயத்தை வரவழைத்திருந்த போதிலும், பரந்த அளவிலான பகுதிகளில் அது மக்வோர்ட்டையும் வளரச் செய்திருந்தது. ரத்தம் உறிஞ்சும் பூச்சிகள் உச்சத்தை எட்டியிருந்தபோது, அந்தச் செடிகளின் மருந்து வாடை காற்றில் நிரம்பியிருந்தது. டெஞ்ஞரைப் பார்த்தபடி ஜென், ‘‘மேய்ச்சல் நிலத்தில் மனிதர்கள் உயிர் தரித்திருப்பதை இந்தச் செடிகளே சாத்தியமாக்குகின்றன’’ என்றான்.

புல் அடர்ந்திருந்த நீரோடைப் பகுதியில், காற்று கொஞ்சம்கூட வீசவில்லை. ஜென் அணிந்திருந்த டெனிம் சட்டை வியர்வையில் நனைந்திருந்தது. கொசுக்கூட்டம் அந்தக் கெட்டியான துணியில் பாதியளவு வரை, தம் ஊசிமுனைகளைப் புதைத்திருந்தன.

ஜென் அவற்றைப் பிடுங்கி வெளியே எடுக்கவில்லை; அது பற்றிக் கவலைப்பட அவனுக்கு நேரமில்லை. அவை அங்கேயே சாகட்டுமென விட்டுவிட்டான். ஆனால், திடீரென அவனுடைய தோளில் குத்தப்பட்ட வலியை உணர்ந்தான். அந்த இடத்தைக் கையால் அடித்து வெளியே எடுத்தபோது, ரத்தத் தடயம் தென்பட்டது.

மக்வோர்ட் செடிகளுக்குள் அவன் நுழைந்தபோது, கொசு எண்ணிக்கைக் கணிசமாகக் குறைந்திருந்தது. சாம்பல், நீல, வெண்தண்டுகளோடு இருந்த அந்தச் செடிகள் குறைந்தபட்சம் மூன்றடி உயரம் வளரக்கூடியவை. அதன் இலைகள் சாறு நிறைந்தும் பட்டுப் போன்றும் காணப்படும். கசப்பான மருந்துச் செடியான அதை ஆடு மாடுகளோ குதிரைகளோ சாப்பிடு வதில்லை. அதனால்தான் அவை இந்த அளவு தாராளமாக வளர்ந் திருந்தன. நன்றாக உயர்ந்து வளர்ந்திருந்த செடிப் பகுதிகளை அடைந்ததும், அவன் மெதுவாகவும், அரிவாளை இறுகப் பற்றிய படியும், கவனமாகக் குனிந்து நின்றான். மூத்த மேய்ப்பர்கள் பீஜிங் மாணவர்களை எச்சரித்திருக்கிறார்கள். அதாவது, அவர்கள் தங்களுடைய கால்நடைகளுடன் மேய்ச்சலுக்கு வரும்போது, மக்வோர்ட் செடிப் பகுதிகளில் கவனமாக இருக்க வேண்டும். அங்கு கொசுக்கள் ஆகக் குறைவாக இருக்குமென்பதால், அப் பகுதிகளில் ஓநாய்கள் அடிக்கடி மறைந்திருந்து கொண்டு, உருண்டு திரியும். அந்தச் செடிகளை அப்படி நசுக்கி தம் உடலெங்கும் தேய்த்துக்கொள்ளும். அதன் கார நெடி, ஒரு இயற்கையான கொசு விரட்டியாகும்.

அந்தப் பகுதிக்குள் அதிக தூரம், அவனுடைய நாய்களின் துணையில்லாமல் அவன் போகத் துணியவில்லை. ஜென் நின்று, இருமுறை கத்தினான். எவ்வித அசைவும் தெரியவில்லை. அவன் கொஞ்ச நேரம் காத்திருந்துவிட்டு, பின்னர் செடிகளுக்கிடையே மெதுவாக நடந்தான். மீட்சியின் அற்புதம் தன்னைச் சூழ்ந்திருப்ப தாக அவன் உணர்ந்தான். செடிகள் அடர்ந்து செழித்திருந்த பகுதியை அவன் குறி வைத்திருந்தான். அப்பகுதியை அடைந்ததும், ஒரு பைத்தியக்காரனைப் போல அவற்றை வெட்டத் தொடங் கினான். அவனுடைய அரிவாளில் பச்சைக் கறை படிந்தது; பலமான மருந்து வாடை காற்றில் நிரம்பியது. அவன் ஆழமாக, ஏதோ அவனுடைய உள்ளுறுப்புகள் எல்லாவற்றிலும் அந்த வாசனையை நிரப்பிக்கொள்வது போல, மூச்சிழுத்தான்.

கூடை நிரம்பியதும் ஜென் ஓட்டமும் நடையுமாகத் திரும்பினான். வரும் வழியில் கை நிறைய இலைகளை எடுத்துக் கசக்கி, அந்தச் சாற்றைக் கையின் பின்புறம் பூசிக்கொண்டான். எதிர்பார்த்தது போலவே வெளித்தெரிந்த அந்தப் பகுதியைக் கொசுக்கள் அண்டவில்லை.

அவன் குடிலை வந்தடைந்ததும், உடனடியாக அடுப்பில் வறட்டியைப் போட்டு நெருப்பைப் பற்ற வைத்தான். பிறகு வெளியில் ஓடிச் சென்று தண்ணீர் கொண்டு வந்தான். ஒரு பெரிய பாத்திரத்தில் கங்குகளைப் போட்டு, அதை மக்வோர்ட் இலைகளால் மூடினான். அடர்த்தியான வெண்புகை உடனடியாக எழுந்தது.

ஓநாய்க்குட்டியின் பட்டிக்கு அந்தப் பாத்திரத்தை எடுத்துச் சென்றான். காற்று, புகையைப் பட்டி முழுவதும் படரவிட்டது. மக்வோர்ட், கொசுக்களின் பரமவைரி. சற்று நேரத்தில் கொசுக்கள் பட்டியை விட்டு வெளியேறின.

மக்வோர்ட், ஓநாய்க்குட்டியைக் காப்பாற்றிய போதிலும் எரியும் வறட்டிக் கங்குகளிலிருந்து பறந்த தீப்பொறியும் புகையும் அதைப் பயத்தில் நடுங்க வைத்தன. கண்களில் வெளிப்பட்ட திகிலோடு, அந்தப் பாத்திரத்திலிருந்து எவ்வளவு தூரம் விலகிச் செல்ல சங்கிலி அனுமதிக்கிறதோ அவ்வளவு தூரத்துக்கு அது குதித்தோடியது. அங்கும் அது போராடியபடிதான் இருந்தது. எல்லாக் காட்டு விலங்குகளையும் போல, அதுவும் நெருப்புக்கும் புகைக்கும் பயங்கரமாகப் பயந்து நடுங்கியது. இந்த பயமானது, தலைமுறை தலைமுறையாக அதன் முன்னோர்களிடமிருந்து கடத்தப்பட்டு வந்ததென்பது ஜென்னுக்குத் தெரியும். அவன் நெருப்பின் மீது மேலும் கொஞ்சம் மக்வோர்ட்டைப் போட்டான். பின் அந்தப் பாத்திரத்தைக் குலுக்கி, ஓநாய்க்குட்டியைச் சுற்றிலும் புகை படருமாறு செய்தான். இந்தப் புகை சிகிச்சைக்கு அவன் ஓநாய்க்குட்டியைப் பழக்கியாக வேண்டும். கொசுக்களின் கொடூரத் தாக்குதலிலிருந்து தப்பித்திருக்க இதைவிட வேறு வழி கிடையாது. காட்டில் இருந்திருந்தால் அதன் அம்மா, அதை மலைமேட்டுக்கோ அல்லது மக்வோர்ட் செடிப் பகுதிக்கோ கொசுக்களிடமிருந்து தப்பிக்கக் கூட்டிக்கொண்டு போயிருக்கும். ஆனால் இங்கு முகாமில், புகை மூலம் கொசுக்களை விரட்டும் பொறுப்பு தத்தெடுத்த அப்பாவான ஜென்னுக்கு இருக்கிறது.

புகை, பேரலை போலச் சுற்றிச் சூழ்ந்தது. ஓநாய்க்குட்டிக்கு மூச்சுத் திணறியது. ஆனால் ஜென் அங்கிருந்து நகராமல், தொடர்ந்து நெருப்பில் செடிகளைப் போட்டபடி இருந்தான். கடைசியில், ஓநாய்க்குட்டி போராடுவதை நிறுத்தியது; களைத்துப் போன அது புகைக்கு மத்தியில் நிற்கும்படி ஆயிற்று. புகை பற்றிய பயமிருந்தாலும், கொசுக்கள் போய்விட்டதில் அது மிகவும் ஆசுவாசமாக இருப்பதாகத் தெரிந்தது. அதற்கு இது வினோதமாகப் பட்டது. சுற்று முற்றிலும் பார்த்தது. அதன் கண்களில் குழப்பமும் மகிழ்ச்சியும் கலந்திருந்தன.

ஓநாய்க்குட்டியை நோக்கிப் புகை தொடர்ந்து உருண்டு சென்றபடி இருந்தது. அதைப் பார்த்ததும் அது பின்வாங்கிப் பதுங்கியது. மேலும், பாத்திரத்திலிருந்து சில தீப்பொறிகள் வெளிப் பட்டதும், அதனால் எவ்வளவு தூரம் விலகிச் செல்ல முடியுமோ அவ்வளவு தூரத்துக்கு ஓடிச் சென்றது. ஆனால் அப்படிச் சென்றதன் மூலம் அதற்குக் கிடைத்தது, காத்திருந்த கொசுக்களின் ஈவிரக்கமற்ற தாக்குதல்தான். அதனால் அது மீண்டும் பைத்தியக்காரத்தனமாகச் சுற்றிலும் ஓட ஆரம்பித்தது. அப்படி அது ஓடித் திரிந்தபோது, மற்ற இடங்களை விடவும் புகை மேகங்கள் சூழ்ந்திருந்த இடங்களில் கொசுக்கள் இல்லாமலிருப்பதை அது திடீரெனக் கண்டுகொண்டது. அது கண்களை அகலத் திறந்து பார்த்தது; வெண்புகை மீது அதனால் நம்பிக்கை கொள்ள முடிய வில்லை. எனினும், சீக்கிரமே அது, மற்ற பகுதிகளை விடவும் புகை சூழ்ந்த பகுதிகளில் அதிக நேரம் இருக்கத் தொடங்கியது. அதைச் சுற்றி என்ன நடந்துகொண்டிருக்கிறதென்பதை அந்த இளம் புத்திசாலியான ஓநாய்க்குட்டி அலசிப் பார்த்தது. இன்னமும் புகை குறித்த பயம் அதனிடமிருந்து நீங்கவில்லை. அது புகைக்கும் புகை யற்றதுக்கும் இடையே தொடர்ந்து முயற்சி செய்துகொண்டிருந்தது.

எருதுவண்டிக்கு அடியில் படுத்திருந்த நாய்கள் புகையை உடனடியாகக் கண்டுகொண்டன. மேய்ச்சல்நில நாய்களுக்கு வெண்புகையின் மகிமை தெரியும். தம்முடைய குட்டிகளைக் கூட்டிக்கொண்டு அவை புகைப்பகுதிக்குப் பரவசமாகப் போனபோது, அவற்றின் கண்கள் பிரகாசித்தன. அவற்றின் உடல்களி லிருந்த கொசுக்கள் இப்போது விலகிப் போய்விட்டதால், போதுமான அளவு அடர்த்தியாகவும் அதே சமயம் அதிக அடர்த்தி இல்லாமலும் புகை

இருந்த இடங்களில் போய்ப் படுத்துக்கொண்டு, நிம்மதியாகத் தூங்குவதற்கான வாய்ப்பை முழுமையாக அனுபவித்தன. இளம் நாய்கள், மக்வோர்ட் புகையின் பலன்களை எதிர்கொள்வது இதுவே முதல் முறை. அவை பெரிய நாய்களைப் பின்பற்றிச் சென்று குதூகலம் அடைந்தன. அவையும் சரியான இடங்களைத் தேர்ந்தெடுத்துப் படுத்துக்கொண்டு ஓய்வெடுத்தன.

ஓநாய்க்குட்டிக்கான பிரத்தியேகப் பகுதியாக இருந்த அந்தப் பட்டியில் திடீரென அரை டஜன் நாய்கள் படுத்துக் கிடப்பதைப் பார்த்து, ஓநாய்க்குட்டி ஆச்சரியமடைந்தது போல் தோன்றியது. அதன் ஓரக்கண் பார்வையில், வாய் திறந்திருந்ததில், வால் மேல்நோக்கி நிமிர்ந்து நின்றதில் அதன் சந்தோஷம் வெளிப்பட்டிருந்தது. அதோடு நாய்கள் வந்து விளையாட அது அடிக்கடி முயற்சி செய்யும். ஆனால் அவை அதைப் பொதுவாகப் புறக்கணித்து விடும். ஆனால் இன்று அழைக்காமலே எல்லா நாய்களும் வந்திருக் கின்றன; ஓநாய்க்குட்டி மீது வெறுப்பு கொண்ட பெண் நாயான யிர்கூட வந்திருக்கிறது. ஓநாய்க்குட்டி மிகுந்த பரவசத்துடன் காணப் பட்டது. அதனுடைய பயம் உடனடியாக மறைந்தது. புகை மேகத்தினூடாகப் புகுந்து, எர்லாங்கின் முதுகில் தாவிக் குதித்தது; பிறகு, ஒரு பெண் நாய்க்குட்டியுடன் சேர்ந்து சுற்றிலும் உருண்டது. இப்போது, தனிமையாக இருந்த ஓநாய்க்குட்டி ஒரு சந்தோசமான குடும்பத்தின் ஓர் அங்கமாகியது. அவற்றை முகர்ந்து பார்த்தது, அவற்றுக்கு முத்தம் கொடுத்தது, நக்கியது. மீண்டும் மீண்டும் அப்படிச் செய்துகொண்டிருந்தது. ஒரு சந்தோசமான ஓநாயைப் பார்ப்பது அபூர்வமென ஜென் நினைத்துக்கொண்டான்.

எல்லா நாய்களும் ஓநாய்க்குட்டியும் அங்கு இருந்ததில், புகை தன் ஆற்றலைக் கொஞ்சம் இழக்கத் தொடங்கியது. அதனுடைய பிராந்தியத்துக்குள் வந்திருந்த விருந்தாளிகள், ஓநாய்க்குட்டியை இடித்து அந்தப் புகை மண்டலத்தில் இருந்து தள்ளின. ஓநாய்க் குட்டி மறுபடியும் அதற்குள் நுழைய முயற்சித்தபோது, இரண்டு ஆண் நாய்க்குட்டிகள் மறித்து நின்றன. ஓநாய்க்குட்டிக்குப் புதிராக இருந்தது. நாய்களின் இந்த நடத்தையை அது அவதானித்தது. சிறிது நேரத்துக்குப் பிறகு, அறிந்துகொண்டதன் வெளிச்சம் அதன் கண்களில் தெரிந்தது. அதனுடைய தோழமைக்காக நாய்கள் அங்கு வந்திருக்கவில்லை என்பதையும் வெண்புகைக்காகவே

வந்திருக் கின்றன என்பதையும் தெரிந்துகொண்டது. அது பயப்பட்ட புகை யானது, பயங்கரமான கொசுக்கள் நுழைய அஞ்சும் ஒரு பாதுகாப்பு மண்டலமென்பதைப் புரிந்துகொண்டது. முதல் முறையாக, அதனுடைய இளம் வயதில், ஒரு மோசமான சூழ்நிலையில் அகப் பட்டிருப்பதை உணர்ந்து, அது கோபமடைந்தது. அதன் வளை நகங்கள் அந்தரத்தில் நீட்டியிருக்க, கோரைப்பற்களைக் காட்டியபடி புகை மேகக் கூட்டத்துக்குள் ஆவேசமாகப் பாய்ந்து, அதன் பிராந்தியத்திலிருந்து நாய்க்குட்டிகளை விரட்டியடித்தது. நகர மறுத்து எதிர்த்து நின்ற ஒன்றை, அதன் வாயால் பிடித்து இழுத்துக் கொண்டு போய், புகைக்கு அப்பால் தள்ளியது. ஓநாய்க்குட்டி தன்னுடைய இடத்தை மீண்டும் கைப்பற்றியது. அங்கு கொசுக் களை வரவிடாதபடி புகை போதுமான அடர்த்தியோடு இருந்தது; அதே சமயம் மூச்சைத் திணற அடிக்குமளவு அதிக அடர்த்தி இல்லாமலிருந்தது. ஓநாய்க்குட்டியின் அறியும் ஆர்வமும், ஒரு விசயத்தின் அடிப்படையை உணர்ந்துகொள்ளும் திறனும் நன்கு வளர்ந்திருந்தது. அது புகைப் பாத்திரத்தையே பார்த்துக்கொண்டிருந்தது; அதிலிருந்து வரும் புகையால் அது கவரப்பட்டிருந்தது.

குதிரைக் குளம்புகளின் சத்தம் ஜென்னுக்குக் கேட்டது. அவனுடைய குதிரையும் வெண்புகையில் தஞ்சமடைய வந்தது. அவன் ஓடிச்சென்று, சங்கலியைக் கழற்றிவிட்டு, ஓநாய்ப்பட்டியின் ஒரு மூலைக்கு அதை இட்டுச் சென்றான். அங்கு அதைச் சங்கிலியால் பூட்டினான். அதன் உடலில் அப்பியிருந்த ‘நெல் உமிகள்’ வானத்தை நோக்கிப் பறந்தன. அந்த வெண்குதிரை தலை குனிந்து, உறக்கத்தில் ஆழ்ந்தது; அப்போதும் அதன் கண்கள் பாதி திறந்திருந்தன.

மிக பயங்கரமான கொசுப் படைகளுக்கு மத்தியில், மக்வோர்ட் புகைப் பாத்திரம் ஓநாய்க்குட்டிக்கும், அரை டஜன் நாய்களுக்கும், ஒரு பெரிய குதிரைக்கும் மீட்சி அளித்துக் கொண்டிருந்தது. அந்த எட்டு ஜீவன்களும் ஜென்னுக்குப் பிரியமான விலங்குகள். அவற்றுக்கு மிக மோசமாகத் தேவைப்பட்டபோது, உதவ முடிந்ததற்காக ஜென் நிம்மதி அடைந்தான்.

அந்த இரவில் குழுமத்தின் எல்லா முகாம்களிலும் மக்வோர்ட் நெருப்பு எரிந்தது. நூற்றுக்கணக்கிலான அவை எழுப்பிய அடர்த்தியான புகையானது நிலா வெளிச்சத்தில், பிரமாண்டான டிராகன்கள் போன்ற படிமங்களை

உருவாக்கியிருந்தன. அவை காற்றில் உருண்டன; ஆடின. தொன்மையான மேய்ச்சல் நிலமானது, திடீரென தொழிற்சாலைக் காலத்துக்குள் நுழைந்துவிட்டதைப் போல் தோற்றமளித்தது. அந்தப் புகை பைத்தியக்காரக் கொசுக் களை அண்டவிடாமல் செய்ததோடு, கொசுக்கூட்டத்தால் பசியால் வாடிக்கொண்டிருந்த ஓநாய்களிடத்தும் அச்சமூட்டும் தாக்கத்தை ஏற்படுத்தியது.

விடியலுக்குச் சற்று முன்பாக, தூரத்திலிருந்த சில முகாம்களில் மக்வோர்ட் எரியவில்லை என்பதை ஜென் கவனித்தான். பிறகு, இரவுக் காவலில் இருந்த பெண்களின் உரத்த சப்தங்களும், பீஜிங் மாணவர்களது சப்தங்களும் ஜென்னுக்குக் கேட்டன.

கொசுக்கூட்டம் மிக வேகமாக அதிகரித்தது; அவை மிகத் தீவிரமாகக் குவிந்தன; அவற்றின் ரீங்காரம் உரத்திருந்தது. குழுமத்தின் பாதி முகாம்களில் அமைதி குலைந்தது. மனிதர்களின் கூப்பாடுகளும் நாய்களின் குரைப்புகளும் அங்கு கேட்டபடி இருந்தன. அவற்றோடு ஃப்ளாஷ் லைட்டுகளிலிருந்து ஒளிக் கற்றைகள் மேலும் மேலும் தென்பட்டன.

திடீரென, அடுத்தடுத்து இரண்டு துப்பாக்கிக் குண்டுகள் வெடித்து இரவின் அமைதியைக் குலைத்தன. ஜென் சென்னின் இதயம் கவலையில் மூழ்கியது. ஓநாய்க்கூட்டம் திரும்பவும் தாக்குதல் நடத்தியிருக்கிறது. கொசுக் கடிகளினால் கற்பனை செய்ய முடியாத அளவு வேதனைகளைத் தாங்கியிருந்த ஓநாய்க் கூட்டம், ஒரு வழியை அறிந்துகொண்டு விட்டிருக்கின்றன. இந்தப் பேரழிவுக்கு யார் தலை உருளப் போகிறதோ என்று நினைத்து ஜென் பெருமூச்சு விட்டான். அதே சமயம் ஓநாய்களின் மீதான அவனுடைய ஈர்ப்பு எப்படி அவனுக்கு சாதகமாக இருக்கிறதென்பதை நினைத்து ஆறுதலடைந் தான். ஓநாய்களை ஒருவன் எந்த அளவு அதிகமாகப் புரிந்து கொள்கிறானோ, அப்போது பேரழிவினால் ஏற்படும் தாக்கம் அவ்வளவாகப் பாதிக்காது.

அதன்பிறகு, மேய்ச்சல் நிலம் மீண்டும் நிச்சலனத்துக்குத் திரும்பியது. சூரிய உதயத்துக்குச் சற்று முன்பாகப் பனி விழத் தொடங்கியது; கொசுக்களின் சிறகுகளில் ஈரம் பட்டு அவை தரையில் வீழ்ந்தன. நெருப்பு மெல்ல மெல்ல

அணைந்தது. நாய்கள் மட்டும் எப்போதும் போல உஷாராக, எல்லாவற்றையும் சுற்றி வந்து கண்காணித்தபடி இருந்தன. பெண்கள் பால் கறப்பதற்காக வெளியில் வரும் நேரமது. ஓநாய்க்கூட்டம் பின்வாங்கி விட்டிருக்குமென ஜென் கணித்தான்.

தலையை இரண்டு மென்மயிர் ஜாக்கெட்டுகளால் மூடிக்கொண்டு, அப்படியே தூங்கிப் போனான். கடந்த இருபத்து நாலு மணி நேரத்தில் அவன் இப்போதுதான் அனுபவித்து நிம்மதியாகத் தூங்குகிறான். அவன் நான்கு மணி நேரம் நன்றாகத் தூங்கினான்.

தொடர்ந்த பகலானது, மலையில் ஆடுகளை மேய்த்துக் கொண்டிருந்த ஜென்னுக்குக் கடும் வேதனை மிகுந்ததாக இருந்தது. சூரிய அஸ்தமனத்துக்குச் சற்று முன்பாக, அவன் முகாமுக்கு ஆடுகளை ஓட்டிக்கொண்டு வந்தபோது, அவனுக்காக வரவேற்புக் கம்பளம் விரிக்கப்பட்டிருப்பதாக அவன் உணர்ந்தான்: அங்கு, குடிலின்மீது இரண்டு பெரிய ஆட்டுத் தோல்கள் விரிக்கப் பட்டிருந்தன. ஓநாய்க்குட்டியும் எல்லா நாய்களுமாகச் சேர்ந்து சந்தோஷமாக ஆட்டுக்குட்டியையும் பெரிய எலும்புகளையும் விருந்தாக்கிக்கொண்டிருந்தன. அவன் குடிலுக்குள் நுழைந்தபோது, சமையல் கிண்ணங்களும் பாத்திரங்களும் அடுக்கப்பட்டிருந்த ரேக்கிலும், குடிலின் எல்லாப் பக்கங்களை ஒட்டியும் நீண்ட இறைச்சித் துண்டங்கள் தொங்க விடப்பட்டிருப்பதைப் பார்த்தான். அடுப்பில் ஒரு பாத்திரம் நிறைய இறைச்சி வெந்துகொண்டிருந்தது.

‘‘மேற்கே ஓலோன்டுன்’னின் இடத்தில் இருந்த ஆட்டுக் கூட்டம், கடந்த இரவு தாக்கப்பட்டிருக்கிறது’’ என்றான் யாங். ‘‘டோர்ஜியைப் போலவே, ஓலோன்டுன்னும் பல ஆண்டுகளுக்கு முன்பாக, மேயச்சல் நிலத்துக்கு வடகிழக்குச் சீனாவிலிருந்து வந்து சேர்ந்த ஒரு மங்கோலியர். பாதி விவசாயிகளாகவும் பாதி நாடோடி களாகவும் வாழும் ஒரு பகுதியிலிருந்து, அவர்களுடைய குடும்பத்துக்கு அப்போதுதான் ஒரு மணப்பெண் வந்து சேர்ந்திருந்தாள். இரவு முழுவதும் தூங்கும் பழக்கம் அவளிடம் இன்னமும் இருந்திருக்கிறது. அவள் கொஞ்சம் நெருப்பைப் பற்ற வைத்துவிட்டு, ஆட்டுக் கூட்டத்திடையே படுத்துத் தூங்கிவிட்டாள்.

நெருப்பு அணைந்ததும், ஆடுகள் காற்றின் திசையில் ஓடியிருக்கின்றன. அப்போது சில ஓநாய்களிடம் மாட்டியிருக்கின்றன. நூற்றெண்பது ஆடுகள் கொல்லப்பட்டதோடு மேலும் பல ஆடுகள் காயமடைந்திருக்கின்றன. நல்லவேளையாக, நாய்கள் சத்தமாகக் குரைத்ததில், குடில்களிலிருந்த மக்கள் விழித்துக்கொண்டிருக்கிறார்கள். ஆண்கள் துப்பாக்கிகளை எடுத்துக்கொண்டு ஓடிப்போய், துப்பாக்கிகளால் சுட்டு ஓநாய்களை விரட்டியடித்திருக்கிறார்கள். அவர்கள் இன்னும் கொஞ்சம் தாமதமாகச் சென்றிருந்தால், ஓநாய்க் கூட்டம் முழுவதுமாகச் சேர்ந்துவிட்டிருக்கும். ஒரு ஆடுகூட எஞ்சியிருக்காது.''

''நாள் முழுவதும் பாவோ சுங்காயும் பில்ஜியும் கடுமையாக வேலை பார்த்தார்கள்'' என்றான் காவோ. ''இறந்துபோன ஆடுகளின் தோல்களை உரிக்கவும், அவற்றை வெட்டவும் எல்லோரையும் ஒன்று சேர்த்தார்கள். பாதியை டிரக்குகளில் ஏற்றிக்கொண்டு நகரத்தில் இராணுவத்தினருக்கும் தொழிலாளர்களுக்கும் குறைந்த விலையில் விற்பதற்காகச் சிலர் போனார்கள். மீதியைக் குழுமத்தினருக்காக வைத்துக்கொண்டார்கள். ஒவ்வொரு குடிலுக்கும் இரண்டை இலவசமாகக் கொடுத்தார்கள்; ஆனால் தோல்களைத் திருப்பிக் கொடுத்துவிட வேண்டும். இந்தக் கடும் வெக்கையில், எல்லா இறைச்சியையும் எப்படித் தீர்க்கப் போகிறோமென்று எனக்குத் தெரியவில்லை.''

ஜென் பேச்சற்று இருந்தான். அவனுக்கு மிகவும் சந்தோஷமாக இருந்தது. ''ஓநாய்க்குட்டியை வளர்க்கும் நாம் அதிகப்படியான இறைச்சி பற்றிக் கவலைப்படலாமா?'' பிறகு கேட்டான், ''அந்தக் குடும்பத்தை பாவோ எப்படி தண்டிக்கப் போகிறார்?''

''அவர்கள் பணம் கட்டியாக வேண்டும். ஒவ்வொரு மாதமும் அவர்களுடைய சம்பளத்தில் பாதி பிடித்துக்கொள்ளப்படும். அவர்கள் போதுமான அளவு செலுத்திவிட்டார்கள் என்று பாவோ கருதும்வரை இது நீடிக்கும். கஸ்மாயும் குழுமத்தின் மற்ற பெண்களும் அவளுடைய முட்டாள் கணவனையும் அவனுடைய அம்மாவையும், வேறு பகுதியைச் சேர்ந்த பெண்ணைக் கொசுக் கொள்ளைக் காலத்தில் இரவுக் காவல் புரிய வைத்ததற்காகக் கிழித்தெறிந்து விட்டார்கள். நாம் இங்கு முதல் முறையாக வந்தபோது, முதல் இரண்டு

மாதங்களுக்குக் கஸ்மாயும் மற்றவர்களும் நம்மோடு இரவில் துணையாக வந்திருந்தார்கள். பிறகுதான் நாமே சுயமாகக் காவல் புரிய அனுமதித்தார்கள். பாவோவும் அந்தத் தம்பதியரை வசை பாடினார். மஞ்சூரியாவி லிருந்து வந்திருக்கும் எல்லா மங்கோலியர்களுக்கும் அவர்கள் அவமானத்தைத் தேடித் தந்துவிட்டதாகக் கூறினார். அதேசமயம், அவருடைய சொந்த ஊரிலிருந்து வந்திருக்கும் தொழிலாளர்கள் இந்தப் பேரழிவில் ஆதாயம் அடையும்படி பார்த்துக்கொண்டார். செத்த ஆடுகளில் மூன்றில் ஒரு பங்கை அவர் ஓல்டு வாங்கிடம் ஒப்படைத்தார்.''

''இந்த ஓநாய்த் தாக்குதலில் ஆதாயம் அடைந்திருப்பது அந்தக் கூட்டம்தான்'' என்றான் ஜென்.

காவோ ஜியான்சோங் மேய்ச்சல்நில மது பாட்டில் ஒன்றைத் திறந்தான். ''ஓநாய்களால் அளிக்கப்பட்ட இறைச்சியை உண்ணும்போது, இந்த மது விசேஷமாய் ருசிக்கும். வாருங்கள் தோழர்களே, குடித்துக்கொண்டே சாப்பிடலாம்'' என்று ஒரு பாட்டுப் போல குதூகலமாய்ப் பாடிக் கூப்பிட்டான்.

யாங் கீ சிரித்தபடியே சொன்னான்: ''ஒரு ஓநாய்க்குட்டியை வளர்ப்பதால் நமக்கு நேரப் போவதைப் பார்க்க எல்லோரும் காத்திருந்தார்கள். ஆனால் என்ன நடந்தது? யாரோ ஒருவரைப் பார்த்து நாம் சிரிக்கும்படி ஆகிவிட்டது. ஒரு கோழியை எப்படி திருடுவது என்பதை மட்டுமல்ல, நம்மை வெகுவாக ஈர்க்கும் அரிசியை எப்படிக் காத்துக்கொள்வது என்பதையும்தான் ஓநாய் மக்களுக்குக் கற்றுக் கொடுக்கிறதென்பது அவர்களுக்குத் தெரிவதில்லை.''

எல்லோரும் சிரித்தார்கள்.

தன்னுடைய உணவுப் பாத்திரத்தின் பக்கத்தில் ஓநாய்க்குட்டி கால்கள் பரப்பிப் படுத்துக் கிடந்தது; அதனால் நகர முடியாத அளவுக்கு அது வயிறு முட்டச் சாப்பிட்டிருந்தது. பாத்திரத்துக்குள் மிச்சமிருக்கும் இறைச்சியை, ஒரு வனவிலங்கு தன்னுடைய இரையைப் பாதுகாப்பது போல, அது பாதுகாத்துக்கொண்டிருப்பதை ஜென் கவனித்தான். ஒரு வகையில் இந்த உணவு, அதனுடைய ஓநாய் உறவுகளால் அளிக்கப்பட்டதுதான் என ஜென் நினைத்துக்கொண்டான்.

புதிய மேய்ச்சல் நிலத்தின் வடமேற்குத் திசையிலுள்ள மலை உச்சிக்குத் தங்களுடைய குதிரை மந்தைகளை ஓட்டிச் செல்லப் பட்டுவுக்கும் சாங் ஜியோனுக்கும் முழுமையாக இரண்டு நாட்கள் பிடித்தன; இப்பயணத்திற்கிடையே அவர்கள் நான்கு முறை குதிரைகளை மாற்றிக்கொண்டார்கள். இருவரும் மிகவும் களைத்துப்போயிருந்தார்கள்; அவர்களுடைய கால்கள் சேணத்தோடு ஒட்டிக்கொண்டுவிட்டன போலிருந்தது. அவர்களால் குதிரையை விட்டு இறங்கமுடியுமா என்பதே சந்தேகமாக இருந்தது. பலமுறை ஆழமாக மூச்சிழுத்துக்கொண்ட பிறகு, ஒரு வழியாகத் தங்களுடைய சேணத்திலிருந்து உருண்டு தரையில் விழுந்தார்கள். கழுத்துப் பக்கமிருந்த மேலாடை பட்டன்களைக் கழற்றிவிட்டு, குளிர்ந்த மலைக் காற்றில் வியர்வையால் நனைந்திருந்த மேல்பகுதி களைக் காயவிட்டார்கள்.

வடமேற்குத் திசையிலிருந்து காற்றடித்தது; தென்கிழக்கு சதுப்பு நிலத்தின் மத்தியில் ஏரி இருந்தது. நேர்த்தியாகவும் வட்ட வடிவிலும் அமைந்திருந்த மலை உச்சியைச் சுற்றிலும் குதிரைகள் பரந்திருந்தன. அவை, ரத்தம் உறிஞ்சும் கொசுக்களிடமிருந்து விடுபடுவதற்காக, காட்டு வாத்து ஏரியை நோக்கிக் காற்றின் திசையில் ஓடின. குதிரைகளின் குளம்படி சப்தங்களைக் கேட்ட கொசுக் கூட்டம், நீண்ட புல்லிலிருந்து வெளியேறி வந்தது. அந்தப் புதிய, பசித்த பூச்சிகள், ஓடிய குதிரைகளின் வேர்த்திருந்த தோல்கள்மீது விழுந்து கொடூரமாகக் கடித்தன. அந்தக் கொடூரக் கூட்டத்தைக் குதிரைகள், அவற்றின் குளம்புகளாலும் பற்களாலும் விரட்ட முயற்சித்ததில் அவை தடுமாறித் தடுமாறிச் சென்றன.

குதிரைகள் மலையில் ஓடுவதைப் பார்த்த பட்டுவும் சாங்கும் படுத்துத் தூங்கினார்கள். மேலாடையின் கழுத்துப் பகுதி பட்டன்களைக்கூட மாட்டாமல் படுத்துவிட்டிருந்தார்கள். கழுத்துப் பகுதி திறந்திருப்பதைக் கண்ட கொசுக்கள் அங்கு தங்களுடைய தாக்குதலைத் தொடங்கின. அவற்றின் கொடுக்குக் கடிகள்கூட அவர்களை எழுப்பவில்லை; அசந்து தூங்கினார்கள்.

காட்டு வாத்து ஏரியை நோக்கிக் குதிரைகள் பைத்தியம் பிடித்தது போல் ஓடியபோது, அவற்றின் உடம்பில் தூசியைப் போல் கொசுக்கள் அப்பியிருந்தன.

அவை தண்ணீருக்குள் பாய்ந்தன; தாகத்தைத் தீர்த்துக்கொள்வதை விடவும் தோல்களிலிருந்து கொசுக் களைக் கழுவுவதே அவற்றின் உடனடித் தேவையாக இருந்தது. அவை ஆழமான பகுதிக்குச் சென்றன. குளிர்ந்த நீர் கொசுக்களைக் கொன்றதோடு எரிச்சலையும் தணித்தது. குதிரைகள் பரவசத்தோடு கனைத்தன. செத்த கொசுக்களை உடம்பிலிருந்து உதறின; ஏரித் தளம் அதன்மீது ஓர் அடுக்கு உமி பரவியிருந்ததைப் போல் காணப்பட்டது.

பட்டுவும் சாங்கும் விழித்துக்கொண்ட அதே சமயத்தில் குதிரைகளும் தூக்கம் கலைந்தன. சில நாட்களாக அவர்கள் எதுவும் சாப்பிட்டிருக்கவில்லை. பட்டுவும் சாங்கும் அருகிலிருந்த ஒரு குடிலுக்கு சவாரி போய், தேனீரும் தயிரும் இறைச்சியும் முடிந்த அளவு சாப்பிட்டார்கள். பின் மறுபடியும் தூங்கினார்கள். பசித்த குதிரைகள் மேய்வதற்காக மேலேறிக் கரைக்குச் சென்றன. சூரிய வெப்பம் அவற்றின் தோல்களைச் சுட்டெரித்தன. ஏரியோரமாக இருந்த புலவெளி ஏற்கெனவே ஆடு மாடுகளால் பெருமளவில் மேயப்பட்டிருந்தது. அதனால் பசியைப் போக்கிக்கொள்ளவும், தங்களுடைய ஆற்றலைத் திரும்பப் பெறவும் அவை, மறுபடியும் அவற்றுக்குரிய இடமான சரிவை வந்தடைந்தன. அங்கிருந்த நீண்ட புல்லை அவை மேய்ந்தபோது, கொசுக்களின் அசுரத் தாக்குதல் களால் அவை மறுபடியும் வேதனைக்காளாயின.

பில்ஜியின் வீட்டில் எல்லா உறுப்பினர்களும் அடங்கிய கூட்டம் நடைபெற்றது. ‘‘மேகக் கூட்டம் அடர்த்தியாகவும் இல்லை, மெல்லியதாகவும் இல்லை’’ என்றார் முதியவர். ‘‘அதனால் மழை வருவதற்கு வாய்ப்பில்லை. இந்த ஈரப்பதமான பருவநிலையில், கொசுக்கள் நம்முடைய குதிரைகளை உயிரோடு தின்றுவிடும். நம்முடைய கால்நடைகளை முறையாகக் கவனிப்பதற்குப் போது மான ஆட்கள் நம்மிடம் இல்லை; மேலும் ஆட்டுக்கூட்டம் தாக்கப் பட்ட பேரழிவை அடுத்து, நம்மில் ஒருவர் சென்று குதிரை மேய்ப்பர்களை விடுவிக்கும் நிலையில் இல்லை.’’

சாங் ஜியோன் மிகவும் களைத்துப்போயிருந்த போதிலும், இப்போதைய கடும் துன்பத்தை ஒரு வழியாகக் கடந்துவிட்டால், மேய்ச்சல் நிலத்தில் குதிரை

மந்தையைத் தனி ஒருவனாகத் தன்னால் கவனித்துக்கொள்ள முடியுமென்றிருந்தான். ஜென்னும் யாங்கும் அவனுக்குப் பெருமளவில் உற்சாகம் அளித்தார்கள்.

மதியமும் ஈரப்பதமாகவே காணப்பட்டது; மழை வருவதற்கான அறிகுறி ஏதும் தென்படவில்லை. தூறலுக்கான நம்பிக்கைகூட சிதைந்து போனது. மேய்ச்சல் நிலத்தினர் மழையை எதிர்பார்த் திருந்த அதே சமயம், அது குறித்த பயமும் கொண்டிருந்தனர். கனமழை கொசுக்கள் பறப்பதைத் தடுத்துவிடும்; ஆனால் அதன் பிறகு, அதிக அளவில் கொசுக்கள் பிறக்கும். கொசுக்கூட்டம் பல்கிப் பெருகிப் பாடாய்ப் படுத்தும். பூமியில் ஒரு நரகமாக ஓலோன்புலாக் மாறும். அந்த நரகத்துக்குள் புக சாங் ஜியோன் தயாராக இருந்தான். மற்ற குதிரை மேய்ப்பர்களுடன் சேர்ந்து, மேய்ச்சல் நிலத்தின் சதுப்புநிலப் பகுதிக்கு சவாரி செல்லத் தயாராக இருந்தான்.

ஆனால் பில்ஜி, பட்டுவோடும் சாங்கோடும் சேர்ந்து, தென்மேற்குத் திசையில் அறுபது அல்லது எழுபது லீ தொலைவில் இருந்த பாலைப் பிராந்தியத்துக்கு குதிரை மந்தையை ஓட்டிச் சென்றார். அங்கு தண்ணீருக்கும் புல்லுக்கும் பஞ்சமென்பதால் கொசுக்கள் ஆகக் குறைவு. பில்ஜியின் உதாரணத்தைப் பின்பற்றி, மற்ற மூன்று குழும மந்தைகளையும் வெகு விரைவாக வறண்ட நிலப் பகுதிகளுக்கு ஓட்டிச் சென்றனர்.

‘‘இந்தப் பாழ்நிலம் ஒரு காலத்தில் ஓலோன்புலாக்கின் அருமையான மேய்ச்சல் நிலமாக இருந்தது’’ என்று பில்ஜி, சாங்கிடம் சொன்னார். ‘‘நீரோடைகளும் ஏரிகளும் மிகச் சிறந்த புல்லும் இங்கிருந்தன. ஆடு மாடுகள் நன்கு கொழுத்து வளர்ந்தன.’’ அவர் மேல்நோக்கி வானத்தைப் பார்த்துப் பெருமூச்சு விட்டார். ‘‘ஆனால் சில வருடங்களிலேயே இது இப்படியாகிவிட்டது. நதிப் படுகைகளைக்கூட மணல் மூடிவிட்டது.’’

‘‘இது எப்படி நடந்தது?’’ சாங் கேட்டான்.

முதியவர் மந்தையைச் சுட்டிக் காட்டினார். ‘‘அவை, அழிந்து போகுமளவுக்கு மேய்ந்தன. தென்கோடியிலிருந்து இடம் பெயர்ந்து வந்தவர்களும் அவற்றோடு சேர்ந்து அழித்தார்கள். நாடு அப்போது தான் சுதந்திரம் அடைந்திருந்தது. அப்போது மோட்டார் வாகனங்கள் அதிகமில்லை. இராணுவத்துக்குக்

குதிரைகள் தேவைப்பட்டன. அது போலவே விவசாயிகளுக்கும் மக்களுக்கும் பொருள்களின் போக்குவரத்துக்குக் குதிரைகள் வேண்டியிருந்தன. நாடு முழுவதுக்குமே குதிரைகள் தேவையாக இருந்தன. இந்த அருமையான குதிரைகள் எங்கிருந்து வருகின்றன? மங்கோலி யாவின் உட்பகுதிகளிலிருந்துதான். குதிரைகளுக்கென்று சிறந்த மேய்ச்சல் நிலத்தை ஒதுக்கும்படி எங்களுக்கு உத்தரவிடப்பட்டது. தென்கோடியிலிருந்து மக்கள் இங்கு வந்து, சோதித்துப் பார்க்கவும், தேர்வு செய்யவும், குதிரைகளை வாங்கவும் செய்தார்கள். நாங்கள் அறிவதற்கு முன்பாக, இந்த இடம் பந்தயப் பாதை போலாகி விட்டது. நூற்றுக்கணக்கான ஆண்டுகளில் எந்தவொரு ஆட்சியாளரும், இந்த இடத்தைக் குதிரைகளை வளர்க்குமிடமாக மாற்றுவதற்கான இதயத்தைக் கொண்டிருக்கவில்லை. ஒரு பாழ்நிலத்தை உருவாக்க நிறைய ஆண்டுகள் பிடிக்காது. இப்போது, ஒரு பாலைவனமாக இது ஒரு நல்ல அம்சத்தைக்கொண்டிருக்கிறது; இங்கு கொசுக்கள் குறைவு. கொசுக் கொள்ளைக் காலத்தில், நாம் இங்கு குதிரைகளைக் கொண்டுவர முடிகிறது.''

''அப்பா, இப்போதுதான் டிரக்குகளும் டிராக்டர்களும் வந்து விட்டதே. போர்க்காலத்தின் போது குதிரைப்படைகளின் இடத்தை டேங்குகள் எடுத்துக்கொள்ளும். அதனால் குதிரைகளுக்கு இப்போது அப்படியொன்றும் அவசியமிருப்பதாகத் தெரிய வில்லையே. அதனால் இந்த மேய்ச்சல் நிலம் மீண்டும் உயிர் பெற்றுவிடாதா?'' என்று சாங் கேட்டான்.

முதியவர் தலையசைத்தார். ''மனிதர்களும் டிராக்டர்களும் அதைவிட மோசம். யுத்தத்துக்கான ஆயத்தங்கள் அதிகரித்துவரும் இவ்வேளையில், அதிகாரத்தில் இருப்பவர்கள், மேய்ச்சல் நிலத்தில் உற்பத்தி மற்றும் கட்டுமானக் குழுக்களை நிறுவ முடிவு செய்திருக்கிறார்கள். மக்களோடு டிராக்டர்களும் வந்துகொண்டிருக்கின்றன.''

சாங் எதுவும் பேசவில்லை. காரியங்கள் இவ்வளவு விரைவாக நடக்குமென்று அவன் எதிர்பார்த்திருக்கவில்லை.

முதியவர் தொடர்ந்தார். ''முன்பெல்லாம் விவசாயிகளின் மண்வெட்டிகளும், நெருப்புமே எங்களுடைய மிக மோசமான பயமாக இருந்தது. இப்போது டிராக்டர்கள். சில நாட்களுக்கு முன்பு, ஓலோன்புலாக்கைப் பயிர்நிலப்

பிராந்தியமாக மாற்ற வேண்டாமெனக் கேட்டு உல்ஜீயும் சில மூத்த மேய்ப்பர்களும் உள் மங்கோலியத் தன்னாட்சி பிராந்திய அதிகாரிகளுக்குக் கடிதம் எழுதியிருக்கிறார்கள். இதனால் ஏதும் நல்லது நடக்குமா என்று தெரியவில்லை. பாவோ சுங்காயும் இப்போதெல்லாம் படு உற்சாகமாய் இருக்கிறார். இவ்வளவு நிலமும் பயன்படுத்தப்படாமல் இருப்பது அநியாய வீண் என்று அவர் சொல்லிக்கொண்டிருக் கிறார். கூடிய சீக்கிரமே இதைத் தானிய உற்பத்திக்காக விரிவுபடுத்த வேண்டும் என்ற யோசனையில் இருக்கிறார்.''

சாங்கின் இதயத்தில் அமைதியான வேதனைக் குரல் எழுந்தது. டிராக்டர்களின் யுகம் வந்துவிட்ட இன்றைய நிலையில், மேய்ச்சல் நிலத்திற்கு வெளியே வாழ்பவர்களுக்கும், அதிலேயே வாழ்ந்து கொண்டிருப்பவர்களுக்கும் இடையேயான முரணானது, ஒரு முடிவை நெருங்கிக்கொண்டிருந்தது.

இரவு கவிழத் தொடங்கியது; நான்கு குதிரை மந்தைகளும் பல மைல் சதுரப் பரப்பளவு கொண்ட 'பாயன் கோபி' பகுதிக்குள் நுழைந்தன. அங்கிருந்த ஈரமான மண் தரையானது சமயங்களில் பல்வேறு பாலை நிலச் செடிகளுக்கு இடம் கொடுக்கும். மழைக் காலத்தில் அவை ஆச்சரியப்படுமளவுக்கு உயரமாக வளரும். ஆனால் அது ஒரு மேய்ச்சல் நிலமாக இருந்தது என்பதற்கான ஒரு தடயமும் அங்கில்லை; மாறாக, அது கைவிடப்பட்ட கட்டுமான இடத்தைப் போலக் காணப்பட்டது. ''மேய்ச்சல் நிலத்துக்கு ஒரு உயிர் வாழ்க்கைதான் உள்ளது'' என்றா£¢ பில்ஜி. ''உண்ணத் தகுந்த புல்லின் வேர்கள், களைச் செடிகளின் வளர்ச்சியை அமுக்கிவிட வேண்டும்; ஆனால் அவற்றின் வேர்கள் அழிக்கப்பட்டுவிட்டால், களைகளும் மணலும் அதன் இடத்தை எடுத்துக்கொண்டுவிடும்.''

மந்தைகள் பாலை நிலத்தின் மத்தியை நோக்கி நகர்ந்தன. அங்கு அவற்றுக்கு உண்பதற்கான புல் எதுவும் இல்லையென்ற போதிலும், கொசுக்கள் அதிகம் இல்லாமலிருப்பது குதிரைகள் கொஞ்சம் ஓய்வெடுத்துக்கொள்ள வசதியாக அமைந்திருந்தது. பாவோ சுங்காய் உல்ஜீயுடன் சவாரி செய்து அங்கு வந்தார். ''இதுதான் நம்மால் செய்யக்கூடியது'' என்று பில்ஜி அவர்களிடம் தெரிவித்தார். ''அவை இரவில் பசியோடு இருந்துவிட்டுப் போகட்டும். காலையில் தரையில் பனி இருக்கும்போது, நாம் அவற்றை சதுப்பு நிலத்துக்கு ஓட்டிக்கொண்டு போய் மேய விடலாம். கொசுக்கள் மீண்டும் வரத்

தொடங்கியதும் நாம் அவற்றைத் திரும்பவும் இங்கு ஓட்டிக்கொண்டு வந்துவிடலாம். அவை போதுமான எடை வைக்காது என்றாலும் நாம் அவற்றை உயிரோடு வைத்திருக்கலாம்.''

பாவோ நிம்மதிப் பெருமூச்சு விட்டார். ''உங்கள் இருவரின் ஞானத்துக்கு நன்றி. அதன்மூலம் இந்தக் குதிரைகள் வாழ்ந்துவிட முடியும். கடந்த சில நாட்களாக நான் இது பற்றிய கவலையோடு இருந்தேன்.''

ஆனால் உல்ஜீயின் நெற்றியில் சுருக்கங்கள் பதற்றத்தோடு காணப்பட்டன. ''குதிரை மந்தைகள் வெளிவருவதற்காக ஓநாய்க் கூட்டம் காத்துக்கொண்டிருக்கும் என்று எனக்குக் கவலையாக இருக்கிறது. நம்மால் யோசிக்க முடிந்தவற்றை எல்லாம் ஓநாய்களாலும் யோசிக்க முடியும்.''

''நான் மேய்ப்பர்களுக்குக் கூடுதலாக வெடிமருந்துகள் வழங்கியிருக்கிறேன். என்னுடைய கவலையெல்லாம் ஓநாய்கள் நம் கண்ணில் படுவதில்லை என்பதுதான். அவை வருமென்ற நம்பிக்கையோடு இருக்கிறேன்'' என்றார் பாவோ.

முதல் இரவில், மந்தைகள் முழுமையாகக் காலை வரை ஓய்வெடுத்தன. பனித்துளி விழுந்து கொசுக்களைப் பறக்கவிடாமல் செய்ததும், மேய்ப்பர்கள் குதிரைகளை சதுப்பு நிலத்துக்கு ஓட்டிச் சென்றார்கள். அங்கு அவை சுவையான புல்லைப் பசியோடு விழுங்கின. சூரிய ஒளி பனித்துளியைக¢ காய வைத்ததும், கொசுக்கள் காற்றில் எழுந்தன. உடனே குதிரைகள் தாமாகவே பாழ்நிலத்துக்குத் திரும்பின. இரண்டாவது இரவும் முதல் இரவைப் போலவே கழிந்தது. மூன்றாவது இரவில், ஒரு ஜோடி பெரிய ஆடுகளைச் சிறிய வண்டியில் போட்டு பாவோ சுங்காய் அனுப்பி வைத்தார். தூக்கத்திலிருந்த மேய்ப்பர்கள் எழுந்து நெருப்பின் முன்பாக உட்கார்ந்துகொண்டு சந்தோஷமாகக் குடிக்கவும் உண்ணவும் செய்தார்கள். அவர்கள் குதூகலமாகப் பாடியபடியும் சத்தமிட்டபடியும் விருந்தை அனுபவித்தார்கள். கடந்த ஆண்டை விடவும் மது அருந்தும் அளவு சாங்கிற்குக் கணிசமாகக் கூடியிருந்தது. இப்போது நன்கு குடித்திருந்த அவன், எல்லோரையும் மகிழ்விக்கும் வகையில் 'ஒயின் பாடலை' அடிவயிற்றிலிருந்து பாடினான். அவனுடைய குரல், ஓநாய்களின் ஊளையின் தரத்தை எட்டியிருந்தது.

நான்காம் நாள் காலை, ஒரு தகவலோடு ஒருவர் குதிரையில் பாய்ந்து வந்தார். உற்பத்தி மற்றும் கட்டுமான நிறுவனத்திலிருந்து இரண்டு அதிகாரிகள் குழுமத்தின் தலைமை அலுவலகத்திற்கு வந்திருப்பதாகவும், உல்ஜீயும் பில்ஜியும் அவர்களைப் பார்த்து நிலைமையை எடுத்துக் கூற வேண்டுமென அவர்கள் விரும்புவதாகவும் அவர் தெரிவித்தார். அங்கு செல்வதைத் தவிர வேறு வழி கிடையாதென்பதால் இருவரும் கிளம்பினர். போகும்போது, மிகவும் எச்சரிக்கையுடன் இருக்க வேண்டியதன் அவசியத்தை அங்கிருந்தவர்களிடம் வலியுறுத்தினார்கள்.

இருவரும் கிளம்பிச் சென்றதும், இளம் மேய்ப்பர்கள் சிலர் அவர்கள் விட்டு விட்டு வந்திருக்கும் பெண்களைப் பற்றி யோசிக்கவும் பேசவும் தொடங்கினார்கள். இரவு கவிழ்ந்ததும், அவர்களில் இருவர் குதிரை மீதேறி, இரவுக் காவலுக்குச் செல்ல விருக்கும் பெண்களைப் பார்ப்பதற்காகக் கிளம்பினார்கள். இரவுக்காவல் என்ற வார்த்தைக்கு ஓலோன்புலாக்கில் இரண்டு அர்த்தங்கள் உண்டு.

குதிரை மந்தைகள் அந்த நிலத்தில் காய்ந்த தண்டுகள் மட்டும் மிச்சமிருக்கும் வகையில் மேய்ந்தன. இரவில் அவை எதையும் உட்கொள்ளாததால், அவற்றின் உடல் நலிந்தன. எனினும், பொலி குதிரைகள் தம் குடும்ப உறுப்பினர்களை மிகவும் கவனமுடன், எதற்கும் வளைந்து கொடுக்காத சிறைக் காவலாளிகள் போல, கண்காணித்து வந்தன; அவை சில அடிகள் விலகிச் சென்றாலும் தடுத்து நிறுத்தின. எல்லாக் குதிரைகளுமே பசியால் தண்டிக்கப் பட்டிருந்த போதிலும், பொலிகுதிரைகள் மிகுந்த எச்சரிக்கையுடன் காவல் புரிந்தன.

ஓநாய்களும் பசி வாட்டத்தோடு, நீண்ட களைச் செடிகளுக்குள் மறைந்திருந்து, பொறுமையாக அங்கு காத்திருந்தன. முகாமில் இறைச்சி சமைக்கப்படும் வாசனை அவற்றை ஈர்த்தது. கொசுக்கள் அங்கு குறைவாக இருந்ததால், அவை தம் பலத்தை வலுப்படுத்த அது ஒரு வாய்ப்பாக அமைந்தது. மேலும், அவை ஒரு சண்டைக்குத் தயாராக இருந்தன. ஓலோன்புலாக்கின் பாதி ஓநாய்கள் இந்தப் பாலை நிலப் பிராந்தியத்தில்தான் எங்கோ பதுங்கியிருக்கின்றன என்பது பட்டுவின் கணிப்பு. ஆனால்

தாக்குவதற்கான தைரியத்தை அவை இன்னும் அடையவில்லை என்று அவன் கருதினான். மேய்ப்பர்கள் ஆயுதங்களோடு எதற்கும் தயாராக இருந்தார்கள். வலிமைமிகுந்த பொலிகுதிரைகள், மந்தையைச் சுற்றிலும் தகுந்த இடங்களில் எப்போதும் இருந்து கொண்டிருந்தன. எனினும், மந்தைகளில் சில பலஹீனங்களும் இருந்தன. நாய்கள் அவற்றோடு இல்லை. தங்களுடைய குடும்பக் காவல் நாய்களை, குதிரை மந்தைகளுக்குக் காவலுக்கு அனுப்புவதில் மேய்ச்சல் நிலத்தாருக்கு எவ்வித விருப்பமும் இல்லை.

இரவு உணவுக்குப் பிறகு, பட்டுவும் சாங்கும் அப்பிராந்தியத்தின் சுற்றுப்புறக் களைச்செடிகளின் மத்தியில் ஓநாய்த் தடயங்கள் ஏதும் தென்படுகிறதா என்று பார்க்கச் சென்றார்கள். அவர்கள் கவனமாகப் பார்த்துக்கொண்டே, தேடும் வளையத்தை விரிவாக்கிக்கொண்டே சென்றார்கள். புதிய தடங்கள் ஏதும் அவர்கள் கண்ணில் படவில்லை. பட்டுவின் கவலைகள் அதனால் தீர்ந்துபோய் விடவில்லை. சில நாட்களுக்கு முன்பு, அவன் வெகு தொலைவு சென்று வேவு பார்த்தபோது, இரண்டு ஓநாய்களைப் பார்த்திருந்தான். ஆனால் மந்தைகளைச் சுற்றிலுமான பாதுகாப்பு ஓரளவு தளர்ந்திருந்த சமயத்தில் அவற்றில் ஒன்றுகூட அவன் கண்ணில் படவில்லை. ஓநாய்கள் ஒரு தாக்குதலைத் தொடங்குவதற்கு முன்பாக, அவற்றின் இலக்கிலிருந்து அவை அடிக்கடி விலகிச் செல்லும் என்பதைப் பட்டு நன்கறிவான். இந்தப் பாசாங்கான பின்வாங்கல் மூலம் கால்நடைகளைக் குழப்பத்தில் ஆழ்த்துவதே அவற்றின் நோக்கம்.

ஏதோ ஒரு வினோதமான காரணத்தால், சாங் அருமையான மனநிலையில் இருந்தான். அவன் மனம் அமைதியில் நிறைந்திருந்தது. அவனும் பட்டுவும் ஒரே சமயத்தில் வானிலை பற்றி நினைத்தார்கள்; வானத்தைப் பார்த்தார்கள். நட்சத்திரங்கள் இல்லை; கருத்த மேகங்கள் திரண்டிருந்தன. அவர்கள் குதிரைகளில் விரைவாக முகாமுக்குத் திரும்பினார்கள்.

நள்ளிரவுக்குச் சற்று முன்பாக, சத்தங்கள் கிளம்பின. அந்த மணல் பரப்பை ஃப்ளாஷ் லைட்டுகள் பிரகாசமாக்கின. பயமற்ற மேய்ப்பர்களும் வலிமையான பொலிகுதிரைகளும் மந்தைகளை வளைத்திருந்தனர். சில பெரிய குதிரைகளுக்கு ஓநாய்களின் இருப்பு தென்படுவதாகத் தோன்றியது. அவை நகர்ந்து பெண் குதிரைகளையும் இளைய குதிரைகளையும் குட்டிகளையும் பாதுகாப்பதற்காக ரத்தமும் சதையுமான சுவர்களை உருவாக்கின.

நள்ளிரவுக்குப் பிறகு, திடீரென பலத்த காற்று வீசியது; அதைத் தொடர்ந்து வெடி முழக்கமென இடி இடித்தது. நிலம் அதிர்ந்தது; மலை அசைந்தது. எல்லாக் குதிரைகளும் அச்சத்தில் பாய்ந்தோடத் தொடங்கின. மேய்ப்பர்கள் அடிவயிற்றிலிருந்து கத்தினார்கள்; தங்களுடைய சவுக்குகளைப் பயன்படுத்திப் பொலிகுதிரைகளைத் தற்காப்பு நிலைகளிலிருந்து அகல விடாமல் பார்த்துக்கொண்டனர். ஆனால், அடுத்து வந்த மின்னலுடன் கூடிய தொடர்ந்த இடி முழக்கங்களால் குதிரைகள் பீதியடைந்ததில், தற்காப்பு வளையமானது தகர்ந்த மதில் சுவரென ஆகியது.

பொலிகுதிரைகளாலும் மேய்ப்பர்களாலும் உருவாக்கப்பட்டிருந்த தற்காப்பு வளையத்தைத் தகர்த்துக்கொண்டு குதிரைகள் தெறித்தோடின.

மனிதர்களின் கூப்பாடுகளையும், குதிரைகளின் கனைப்புகளையும், ஏன் துப்பாக்கிச் சூட்டின் சத்தத்தையும்கூட இடி முழக்கங்கள் மூழ்கடித்து விட்டிருந்தன. ஃப்ளாஷ் லைட்டுகளின் வெளிச்சக் கதிர்களை மின்னல் வெட்டுகள் மறைத்தன. கிட்டத் தட்ட இருட்டாகத் தெரிந்த ஒரு குறுகிய தருணத்தில், சாம்பல் வடிவிலான ஓநாய்கள், மந்தைகளினூடாகப் பாய்வது தெரிந்தது. அக்காட்சியைப் பார்த்த மேய்ப்பர்களின் முகம் வெளிறியது.

சாங் ஜியோன், ‘‘ஓநாய்கள்!’’ என்று கத்தினான். அப்போது அவனுடைய குரல், அவனுக்கே அடையாளம் தெரியாதபடி இருந்தது. ‘‘ஓநாய்கள் இங்கிருக்கின்றன!’’ அவன் வாழ்வில் முதன் முறையாக, ஓநாய்க் கூட்டங்களின் ஒருங்கிணைந்த மிகப் பெரிய தாக்குதலைப் பார்க்கிறான். கோபமடைந்த டெஞ்ஞரினால் அனுப்பி வைக்கப்பட்ட, காதுகளைச் செவிடாக்கும் வகையிலான இடியோசை மற்றும் பயங்கரமான மின்னல் வெட்டுகளின் துணையோடு தாக்குதல் நிகழ்ந்துகொண்டிருந்தது. மேய்ச்சல் நிலத்தின் பேரழிவுக்குக் காரணமான மங்கோலியக் குதிரைகளைக்கொன்று குவிப்பதற்கான கொலைத் திட்டத்தோடும், மேய்ச்சல் நிலத்தின் பழி வாங்கும் நடவடிக்கையாக வானிலிருந்து அனுப்பப் பட்ட ராணுவத் துணையோடும் தாக்குதல் நிகழ்ந்தது.

அச்சமடைந்திருந்த குதிரைகளை எல்லாத் திசைகளிலிருந்தும் ஓநாய்கள் தாக்கின. உயிரைக் காப்பாற்றிக்கொள்வதற்காக அவை ஓடத் தொடங்கின. இருளின் பாதுகாப்போடும், படுபயங்கரமான இடி மற்றும் மின்னலின்

உறுதுணையோடும் ஓநாய்கள், தற்காப்புகளைத் துளைத்துக்கொண்டு மையத்துக்குள் சென்று அதிரடித் தாக்குதலை மேற்கொண்டன. அச்சத்திலும் குழப்பத்திலும் குதிரைகள் இருந்ததால், ஓநாய்களின் வேலை சுலபமாக இருந்தது.

குதிரைக் குட்டிகளே முதல் பலியாக அமைந்தன. முதல் முறையாக அந்த பயங்கரத் தாக்குதலுக்கு ஆட்பட்டிருந்ததும், இடி மின்னலும் இளம் குதிரைகளைப் பயத்தில் செயலிழக்கச் செய்திருந்தன. பெரிய ஓநாய்கள் அவற்றை ஒன்றன் பின் ஒன்றாகக் குறி வைத்தன. சில நிமிசங்களில், ஒரு டஜனுக்கும் மேலானவை தரையில் செத்துக் கிடந்தன அல்லது செத்துக்கொண்டிருந்தன. தைரியமான குட்டிகள் அம்மாவோடு நெருக்கமாக இருந்து கொண்டு, காற்றைப் போல விரைந்தோடின.

சாங் ஜியோன், அவனுக்கு மிகவும் பிடித்தமான, ‘வெண்பனி’ என்று அவன் அழைக்கிற குதிரையைப் பதற்றத்துடன் தேடினான். மேலும், அது வெள்ளைக் குதிரை என்பதால் அந்தக் கும்மிருட்டில் அது தனித்துத் தெரியுமென்பதால் அதற்கு அபாயம் அதிக மிருக்குமென பயந்தான். வானில் மேலும் இரண்டு மின்னல்கள் வெட்டியபோது, இரண்டு பொலிகுதிரைகள் தம்முடைய பற்களாலும், குளம்புகளாலும், ஒரு வெண் குதிரைக்குட்டியை மூன்று ஓநாய்களிடமிருந்து காப்பாற்றப் போராடிக்கொண்டிருப்பதைப் பார்த்தான். அந்தக் குட்டி அதன் அப்பாவோடு பசைபோல் ஒட்டிக்கொண்டிருந்தது மட்டுமல்ல, அதனைத் தாக்கியவற்றை உதைத்துத் தள்ளிவிடக்கூடிய தைரியமும் அதனிடம் காணப்பட்டது. ஓநாய்க் கூட்டத்தின் பெரிய பலம், அதனுடைய வேகம்தான்; அந்தக் குட்டியிடம் அவற்றின் தாக்குதல் செல்லுபடி ஆகவில்லை என்று தெரிந்ததும், அவை பின்வாங்கி, இன்னொரு துரதிர்ஷ்டக் குட்டியைத் தாக்கும் பொருட்டு இருளுக்குள் பாய்ந்தன. பொலிகுதிரைகள், மந்தையிலுள்ள தாய்க் குதிரைகளை அழைத்தன; அவற்றின் குட்டிகளைக் காப்பாற்றுவதற்கான தீரமும் திடமும் கொண்டவை அவைதாம். அவை தாம் கொண்டிருக்கும் சகல ஆயுதங்களோடும், தம் இணைகளை நோக்கி வந்தன. மூர்க்கமான பொலிகுதிரைகளும், மிக தைரியமான பெண் குதிரைகளும், அவற்றின் குட்டிகளும் மேலே மின்னலும், கீழே ஓநாய்களுமென அமைந்த

முதல் தாக்குதலை சமாளித்துவிட்டு, தமக்குள்ளாகப் பரஸ்பர குடும்பப் பாதுகாப்பை அமைத்துக்கொண்டன.

எனினும், மந்தையின் பெரும்பகுதியில் ஒற்றுமை குலைந்து விட்டிருந்தது. ஓநாய்கள் படுபயங்கரமான வெடிகுண்டுகளைப் போல் தாக்கின. மந்தையைப் பாதுகாப்பதற்கான எவ்வித மார்க்கமும் மேய்ப்பர்களிடம் இல்லாமல் போனது; அரைமணி நேரத்துக்குள் அவர்கள் தங்களுக்குள் தொடர்பற்றுப் போனார்கள்.

பட்டு, அந்நிலையிலும் பதற்றத்தைக் கட்டுப்படுத்திக¢கொண்டு, தன்னுடைய ஃப்ளாஷ் லைட்டினால் சமிக்ஞை செய்தபடி, உரக்கக் கத்தினான். ‘‘தென்கிழக்கை மறந்துவிடுங்கள். குதிரைகளை வட மேற்கில் ஓட்டுவதில் கவனம் செலுத்துங்கள். அவை எல்லையை நோக்கிப் போகாமல் பார்த்துக்கொள்ளுங்கள்!’’ இது, மேய்ப்பர் களைக் குழப்பத்திலிருந்து விடுவித்தது; அவர்கள் வடமேற்கை நோக்கிக் குதிரைகளை விரட்டியபடி விரைந்தார்கள்.

முதல் வெற்றியை ருசி பார்த்த ஓநாய்களிடம் உத்வேகம் அதிகரித்திருந்தது. மெதுவாகச¢ செல்லக் கூடிய, தாயை விட்டுப் பிரிந்துவிட்ட குட்டிகளைக் கொல்வதோடு திருப்தியடையாமல், குழம்பித் திரிந்த இரண்டு மற்றும் மூன்று வயது இளம் குதிரை களையும் அவை குறி வைத்தன. அடுத்தடுத்து அவை இளம் குதிரைகளை வீழ்த்தி, அவற்றின் தசை நார்களையும் ரத்தக் குழாய் களையும் கடித்துக் குதறியதில் ரத்தம் பீய்ச்சியடித்தது. மந்தையில் எஞ்சியிருந்த குதிரைகள் பயத்தில் வேறெதைப் பற்றியும் கவலைப் படாமல் தங்களைக் காப்பாற்றிக்கொள்ள விரைந்தோடின.

வானில் இடியும் மின்னலும் மறைந்துவிட்டிருந்ததில், மேய்ப்பர்களின் சத்தமும் ப்ளாஷ் லைட்டுகளின் வெளிச்சமும் செயல்படத் தொடங்கின; பொலிகுதிரைகளின் கனைப்பொலிகள் கேட்டு, ஓடிக்கொண்டிருந்த குதிரைகள் தங்களுடைய குடும்பத்துக்குத் திரும்பத் தொடங்கின. முப்பது அல்லது நாற்பது பொலி குதிரைகள் மந்தைக்கு முன்னால் ஒரு வரிசையை உருவாக்கி ஓநாய்களை எதிர்த்தன. ஓநாய்கள் திரும்பி ஓடின. அதனைத் தொடர்ந்து, பலஹீனமான, இளம் வயதான மற்றும் காயமடைந்த குதிரைகள் மந்தையில் மீண்டும் சேர்ந்தன.

ஓநாய்க் கூட்டம் ஓர் ஒழுங்குமுறையில் பின்வாங்கியது. வீழ்த்தப்பட்ட விலங்குகளிடம் திரும்பி, விருந்தை ஆரம்பிக்க அவை அவசரம் காட்டவில்லை. அதற்குப் பதிலாக, அங்குமிங்குமாகப் பிரிந்து போய்விட்டவற்றை மேய்ப்பர்களும் பொலிகுதிரைகளும் மீண்டும் மந்தைக்குக் கொண்டு வந்து சேர்ப்பதற்குள்ளாகக் குறி வைப்பதில் முனைந்தன. பட்டுவும் மூத்த மேய்ப்பர்களும் முன் பகுதிக்கு சவாரி சென்று, பொலிகுதிரைகளைக் கணக்கிட்டனர். மூன்று கணக்கில் வராதது தெரிய வந்தது. அவன் நான்கு மேய்ப்பர்களை அழைத்து, இருவர் இருவராகச் சென்று கிழக்கிலும் மேற்கிலும் விரிவாகத் தேடும்படி கூறினான். மற்ற மேய்ப்பர்களிடம் மந்தையை ஓட்டிச் செல்லும்படி கூறிவிட்டு, இறுதியாக, சாங் ஜியோனை தென்கிழக்காகச் சென்று ஓநாய்களை அந்தப் பகுதியிலிருந்து விரட்டியடிக்கும்படி அனுப்பினான்.

வடமேற்கிலிருந்த ஓநாய்கள், தென்கிழக்கிலிருந்த ஓநாய்களிடம் சேர்ந்துகொள்ளும் பொருட்டு ஓடின. அவை கொலை வெறியோடு இருந்தன; பல குதிரைக் குடும்பங்கள், தங்களுடைய எல்லாக் குட்டிகளையும் இழந்துவிட்டிருந்தன. ஓநாய்கள் ஒன்று திரண்டதும், அவை நோய்வாய்ப்பட்ட மற்றும் முடமான பெரிய குதிரைகளைக் குறி வைத்தன. வடமேற்குத் திசையிலிருந்து வந்த சப்தங்களும் கனைப்புகளும் நெருங்கி வந்தன. ஆனால் ஓநாய்கள் கொல்வதிலேயே குறியாக இருந்தன; தின்பதைப் பிறகு வைத்துக்கொள்ளலாம் என்ற தீர்மானத்தில் அவை இயங்கின. ஓநாய்களை ஒருவனாக விரட்டியடிக்க முடியாதென்பதை அறிந்த சாங், திரும்பி மந்தையிடம் செல்ல முடிவெடுத்தான். மேய்ச்சல் நிலத்தின் பருவ நிலையை மிக நெருக்கமாக அறிந்திருந்த ஓநாய்கள், அவற்றின் அடுத்த பெரிய நடவடிக்கைக்கான சரியான தருணத்துக்காகக் காத்திருப்பதுபோல் தோன்றியது.

மேய்ப்பர்கள் மணல் குன்றில் மூன்று அல்லது நான்கு லீ தூரம் குதிரைகளை ஓட்டிச் சென்றதும், சதுப்பு நிலத்திலிருந்து அடர்த்தியான மேகமெனக் கொசுக்கூட்டம் கிளம்பி மந்தையைச் சூழந்துகொண்டன. அந்த ஆண்டின் மிக மோசமான கொசுக்கள், உடனடியாகக் குதிரைச் சதைகளில் தங்களுடைய ஊசிகளைச் செலுத்தின. மின்னல் மற்றும் ஓநாய்களின் இரட்டைத்

தாக்குதல்களிலிருந்து தப்பிவந்த குதிரைகள், கட்டுப்படுத்த முடியாத பைத்திய நிலைக்கு ஆட்பட்டன.

மந்தையின் பாதுகாவலர்களான பொலிகுதிரைகளின் தோல்கள்தான், உடனடியாக முதல் தண்டனைக்கு ஆளாகின. மிருதுவான, முடியே இல்லாத தோல்களும், விரைப்பான தசைநார் களும் கொண்ட அந்தப் பலம் வாய்ந்த குதிரைகள் பெரும் துயருக்குள்ளாகின. அவற்றின் வால்கள் ரத்தப் பிசுபிசுப்போடு இருந்தன; கொசுக்களை விரட்டியடிக்கும் ஆற்றலை அவை முற்றிலுமாக இழந்துவிட்டிருந்தன. பொலிகுதிரைகளின் கண்ணிமைகளும் குறிகளுமே கொசுக்களின் பிரதான இலக்குகளாக அமைந்ததில் அவை பைத்தியம் பிடித்தது போலாகின. அத்தருணத்தில் கொசுக் களின் எதிரியான காற்று அரவமில்லாமல் இருந்தது. காற்றை உருவாக்க மந்தை செல்ல வேண்டிய திசை அறிகுறி தென்பட்டது. குருடாகுமளவு கடிபட்டு, அரைப் பைத்திய நிலையிலிருந்த பொலிகுதிரைகள், தம் பொறுப்புகளை எல்லாம் உதறி எறிந்துவிட்டு, காற்றெனக் காற்றுக்குள் விரைந்தோடின.

மேய்ப்பர்கள் மணல் குன்றை விட்டு வெளியில் வந்தார்கள். அங்கு கொஞ்சம் கொசுக்கள் இருந்தன. அவர்கள் முகமூடிகள் அணிந்திருக்கவில்லை. உடனடியாக ரத்தம் உறிஞ்சும் கொசுக்கள், அவர்களுடைய முகங்கள், கழுத்துகள் மற்றும் கைகளை கொஞ்சமும் இரக்கமின்றிக் கடித்தன. கடித்த இடமெல்லாம் தடித்து வீங்கிப்போயின. குதிரைகள், சவாரி செய்பவர்களின் ஆணை களைப் புறக்கணித்தன; அவை பின்னகர்ந்தும், பின்னங்கால்களால் எம்பிக் குதித்தும் பைத்தியம் பிடித்ததுபோல் செயல்பட்டன.

மனிதர்களும் குதிரைகளும் கொசுக் கடலில் மூழ்கித் தத்தளித்தனர். பெரும்பாலான குதிரைகள் காற்றுக்குள் விரைந்தோடின. அவை வடமேற்கு நோக்கிப் பறந்தன.

பைத்தியக்காரத்தனமான கடி, பைத்தியக்காரத்தனமான ஓட்டம், பைத்தியக்காரத்தனமான கொலைச் செயல் ஓலோன்புலாக் குதிரைகள் மீது, எல்லாத் தொல்லைகளும் _ இடி, மின்னல், காற்று, கொசுக்கள் மற்றும் ஓநாய்கள் _ ஒருங்கிணைந்து தாக்கின.

மேய்ச்சல்நில வாழ்க்கையின் சிரமங்களை சாங் முழுவதுமாக உணர்ந்தான். இத்தகைய குரூரமான சூழலில் வேறெந்தவொரு இன மக்களும் தாக்குப் பிடிக்க முடியுமா என்று அவன் சந்தேகித்தான். பட்டு அவனுடைய குதிரையை சாட்டையால் விளாசினான்; கொசுக்கடியை அது மறக்கும் வகையில் அதன் தலையிலும் அடித்தான். இந்தத் துணிகரமான செயலைப் பார்த்து உத்வேக மடைந்தவனாக சாங்கும் தன் குதிரையைத் தட்டிப் பறக்க விட்டான்.

‘‘மந்தையை மேற்கு நோக்கித் திருப்புங்கள்!’’ பட்டு உரக்கக் கூவினான். ‘‘அவை எல்லைப் பக்கம் போகாமல் பார்த்துக்கொள்ளுங்கள்.’’

‘‘ஹே! ஹே!’’ மேய்ப்பர்கள் உரத்த பதில் குரல் கொடுத்தார்கள்.

சாங் ஜியோன் கவனத்தை ஒரு அலறல் சத்தம் இழுத்தது; ஒரு குதிரை தடுமாறியதையும், சவாரி செய்தவரைத் தரையில் எறிந்ததையும் அவன் பார்த்தான். எவரும் உதவிக்குச் செல்லவில்லை; அவர்கள் முன்னேறிச் செல்வதிலேயே குறியாக இருந்தனர். குதிரைகளை மேற்கு நோக்கி ஓட்டிச் செல்வதில் மேய்ப்பர்கள் பெரிதும் தடுமாறினர். அவர்களால் அது முடியவே இல்லை. அப்போதும்கூட பட்டுவும் பிறரும் உச்சஸ்தாயியில் கத்தியபடி, குதிரைகளை விரட்டிக்கொண்டிருந்தனர்.

திடீரென, தூரத்து மலையொன்றிலிருந்து வெளிச்சக் கதிர்கள் இருளைக் கிழித்துக்கொண்டு வெளிப்பட்டன. ‘‘ஒரு மீட்புக் குழுவைக் குழுமம் அனுப்பியிருக்கிறது’’ என்று பட்டு உரத்துக் கூவினான். மேய்ப்பர்களும் உற்சாகக் குரல் எழுப்பியபடி, மந்தை எங்கிருக்கிறது என்பதைப் புதியவர்களுக்குத் தெரிவிக்கும் வகையில் ஃப்ளாஷ் லைட்டுகளை அடித்தனர். மலைக்குப் பின்னாலிருந்து சவாரியாளர்களின் வலிமையான சத்தங்கள் எழுந்தன; அவர்கள் ஃப்ளாஷ் லைட்டுகளால் அந்தப் பகுதியை வெளிச்சமாக்கியபடி ஒரு மலைமேட்டைக் கடந்து வந்துகொண்டிருந்தார்கள். குதிரைகள் சிதறி ஓடி விடாதபடி, ஒரு தடுப்பு அரணை அமைப்பது போல இருந்தது அவர்கள் வருகை. அதன் விளைவாக, மந்தை வளைக்கப்பட்டுப் பின்னோக்கித் திருப்பப்பட்டது. குதிரைகள் ஒன்றுக்கொன்று ஒட்டிப் பிணைந்திருக்கும் வகையில் நிர்பந்திக்கப் பட்டதில், அவை தம் உடல்களுக்கிடையில் கொசுக்களை நசுக்கின.

அந்த இக்கட்டான தருணத்தில், பில்ஜி ஒரு பழங்குடித் தலைவரைப் போல அங்கு பொறுப்பேற்க வந்தார். அவர்களுடைய முதிய ஓநாய் அரசன் குதிரையில் வந்துகொண்டிருப்பதைப் பார்த்ததும், மேய்ப்பர்கள் மீண்டும் ஊக்கம் பெற்றார்கள். உரத்த முழக்கங்களையும் பிரகாசமான வெளிச்சக் கதிர்களையும் பார்த்த ஓநாய்கள் தடுமாறின. எனினும், அவை பில்ஜியின் குரலைக் கண்டு கொண்டுவிட்டது போல் தோன்றியது. தலைமை ஓநாய், திரும்பி அவசரமாகப் பின்வாங்கியது. மற்ற ஓநாய்கள் அதன் பின் நின்றன. அவற்றின் நோக்கம் தெளிவானது: முதல் கொலைக்களத்துக்கு அவை திரும்பிச் செல்லவும், அங்கு அவற்றால் முடிந்தவரை சாப்பிட்டுவிட்டு, மலைகளுக்குள் சென்று மறைந்துவிடவும் ஆயத்தமாகின.

பாவோ சுங்காய் மற்றும் உல்ஜீயோடு, ஒரு டஜனுக்கும் மேற்பட்ட ஆடு மற்றும் மாடு மேய்ப்பர்களையும், பீஜிங் மாணவர் களையும் வழி நடத்தி வந்திருந்தார் பில்ஜி. குதிரை மந்தையை ஒருங்கிணைத்து, அவற்றை மணல் பிராந்தியத்துக்கு ஓட்டிச் செல்ல அவர் முனைந்தார். முதலாவதாக, ஒரு மேய்ப்பரைக் காயம் பட்டுக் கிடந்த மேய்ப்பரைப் பராமரிக்க அனுப்பினார். ஜென் சென் தன் குதிரையில் சவாரி செய்தபடி, சாங் ஜியோனை அணுகி, இரவு என்ன நடந்தது என்று தெரிந்துகொள்ளச் சென்றான். மேலும், பில்ஜியும் உல்ஜீயும் குதிரை மீதான தாக்குதலை எதிர்பார்த்து, பருவநிலை மோசமடைவதற்கு முன்பாகவே ஒரு மீட்புக் குழுவைக் கட்டமைத்ததைத் தெரிவித்தான் ஜென். ‘‘இதற்குள்ளாக நாம் முழு மந்தையையும் இழந்துவிட்டிருப்போம். அந்தளவு நிலைமை மோசமாக இருந்தது’’ என்றான் சாங்.

அவர்கள் மணல் குன்றைப் பாதுகாப்பாக வந்தடைந்திருந்த போது, வானம் வெளுக்கத் தொடங்கியது. அங்கும் இங்குமாக சிதறிப்போய் விட்டிருந்த சில குதிரைகளை மேய்ப்பர்கள் வளைத்துக்கொண்டு வந்தனர். ஒட்டுமொத்தமாகப் பார்த்தபோது, மந்தை கணிசமாக இழந்துவிட்டிருப்பது தெரிந்தது. முதிய, நோய் வாய்ப்பட்ட மற்றும் முடமான குதிரைகளில் நான்கு அல்லது ஐந்தும், இரண்டு வயது இளம் குதிரைகளில் பன்னிரண்டு அல்லது பதிமூன்றும் கொல்லப்பட்டிருந்தன. பெருத்த சேதாரத்துக்கு ஆளானது குட்டிகள்தான்; ஐம்பதிலிருந்து அறுபது குட்டிகள் கொல்லப்பட்டிருந்தன. மொத்தத்தில் மந்தை

எழுபதுக்கும் மேற்பட்ட உறுப்பினர்களை இழந்துவிட்டிருந்தது. இந்தப் படுகொலையில் இம்முறை மின்னலும் காற்றும் கொசுக்களும் பங்காற்றிய போதிலும், வழக்கம்போல, உண்மையான கொலைகாரர்கள் ஓநாய்கள்தான்.

மணல் குன்றிலும் சதுப்பு நிலத்திலும் காணப்பட்ட நிலைமையை பாவோ சுங்காய் பரிசீலித்தார். ‘‘மேய்ச்சலுக்கான புதிய நிலத்தை நாம் வடிவமைக்கும்போது, ஓநாய்களை ஒழித்துக் கட்டுவதுதான் நம் முதல் பணியாக இருக்க வேண்டுமென்று நான் அப்போதே சொல்லவில்லையா?’’ என்று அவர் கோபத்துடன் சொன்னார். ‘‘ஆனால் நீங்கள் யாரும் அதைக் கேட்கவில்லை. இப்போது என்ன நடந்திருக்கிறதென்று சுற்றிலும் பாருங்கள். என் எச்சரிக்கையைக் கேட்காததற்கு உங்களுக்குக் கிடைத்திருக்கும் தண்டனை இது. இனி, ஓநாய்களுக்காக யாராவது பரிந்து பேசினால் அவருக்கு வேலை போய்விடும்; மேலும் அவர் படிப்பதற்காக அனுப்பப்படுவார்.’’

ஒரு கையால் மற்றொரு கையைப் பற்றிக்கொண்டு, பில்ஜி வானத்தை நோக்கினார். அவருடைய உதடுகள் அசைந்தன. அவர் என்ன சொல்கிறார் என்பது ஜென்னுக்கும் சாங்குக்கும் நன்கு புரிந்தது.

‘‘மேய்ச்சல் நிலத்தை முழு முற்றாகப் புரிந்து கொள்வதென்பது ஒரு மனிதனுக்கு மிகவும் கடினமானது’’ என்று முணுமுணுத்தான் ஜென். ‘‘அப்படிப் புரிந்துகொள்ள எவரேனும் முயற்சித்தால், தோல்விகளுக்குப் பலிகடாவாக ஆவதில்தான் அது கொண்டுபோய்விடும்.’’

பாவோவின் பக்கத்தில் சென்றான் சாங். ‘‘இந்த அளவு மோசமான இயற்கைப் பேரழிவை எவராலும் தடுத்து நிறுத்த முடியாது’’ என்றான் அவன். ‘‘நாம் ஓரளவு தப்பித்துக் கொண்டிருக்கிறோம் என்றுதான் நான் நினைக்கிறேன். ஐந்து நாட்களுக்கு முன்பே இந்த மணல் பகுதிக்கு மந்தையை அனுப்பிவிட்ட பில்ஜி மற்றும் உல்ஜீயின் தீர்க்க தரிசனத்தை நாம் பெற்றிருப்பது நம்முடைய அதிர்ஷ்டம் என்றுதான் சொல்லவேண்டும். அவர்கள் அப்படிச் செய்திருக்காவிட்டால் நாம் முழு மந்தையையும் இழந்திருப்போம்.’’

‘‘நீ சொல்வதில் எனக்கு எந்த அக்கறையுமில்லை’’ என்று விவாதித்தார் பாவோ. ‘‘அந்த ஓநாய்கள் பெருமளவில் நம்முடைய குதிரைகளைக் கொன்றிருக்கின்றன. கொசுக்கள், அவை எவ்வளவு அதிகமாக இருந்தாலும்,

குதிரைகளைக் கொல்வதில்லை. நாம் ஓநாய்களை, நான் சொன்னபோதே ஒழித்துக் கட்டியிருந்தால் இது இப்போது நடந்திருக்குமா? குழுமத் தலைமையகத்தில், கடந்த சில நாட்களாக காமெண்டர்கள் தங்கியிருக்கிறார்கள். இறந்துபோன இந்தக் குதிரைகளை எல்லாம் அவர்கள் பார்த்தால், ஒரு நொடியில் என்னைப் பதவியிலிருந்து இறக்கிவிடுவார்கள். இந்த ஓநாய்க் கூட்டம் ஒரு பேரழிவு சக்தி; அவற்றில் ஒன்றுகூட மிச்சமிருக்காத வகையில் நாம் தொடர்ந்து அவற்றைக் கொல்லப் போகிறோம். நம்முடைய கால்நடைகளைப் பாதுகாக்க அது ஒன்றுதான் வழி. நம்முடைய மேய்ச்சல் பிரதேசத்துக்கு வர சிப்பாய்கள் தயாராகிக் கொண்டிருக்கிறார்கள். நீங்கள் ஓநாய்களைக் கொல்லாவிட்டால், அவர்களிடம் இக்காரியத்தைச் செய்யும்படி சொல்வேன். அவர்களிடமிருக்கும் டிரக்குகள், ஜீப்கள் மற்றும் இயந்திரத் துப்பாக்கிகள் மூலம் அது சுலபமாக முடிந்துவிடும்.''

குதிரைகள் கொல்லப்பட்ட இடங்களை சுத்தம் செய்வதற்காக மேய்ப்பர்கள் சில குழுக்களாகச் சென்றனர். பகல் முழுவதும் அதில் அவர்கள் முழு மூச்சாக ஈடுபட்டிருந்தார்கள். மனச்சோர்வுக்கும் ஆளாகியிருந்தார்கள்.

எஞ்சியிருந்த குதிரைக்குட்டிகள், இறந்து போனவற்றின் உடல்களைப் பார்த்தபோது நடுநடுங்கின. இந்த ரத்தத்திலிருந்து அவை கற்றுக்கொண்ட பாடமானது, அடுத்தமுறை இம்மாதிரியான ஒரு இக்கட்டில் அவை சிக்கிக்கொள்ளும்போது மிகுந்த எச்சரிக்கையோடும் தீரத்தோடும் செயல்படும் வகையில் அவற்றை உருவாக்கும். ஆனால் ஜென் சென்னின் மனதில் ஒரு நெருடலான எண்ணம் எழுந்தது: அடுத்த முறை என்பது இனி இருக்குமா?

குளிர்ந்த இலையுதிர்கால மழையானது, உள்மங்கோலிய மேய்ச்சல் நிலத்தின் குறுகிய கோடை காலத்தை சற்றும் எதிர்பாராது முடித்து வைத்தது; கொசுக்கள் உறைந்துபோயின.

மேய்ச்சல் நிலத்தைப் பெருவியப்போடும் பேராவலுடனும் பார்த்துக்கொண்டிருந்த ஜென்னுக்கு, ஏன் கொசுக்களும் ஓநாய்களும் அப்படியொரு வெறி பிடித்த நிலையில் இருந்தன என்பது பிடிபட்டது. கோடை காலம் அங்கு மிகவும் குறுகியது; அதே சமயம் இலையுதிர் காலம் அதை விடவும் குறுகியது. அதனைத் தொடர்ந்து வரும் பனிக்காலம் நெடிய ஆறு மாதம் கொண்டது; இக்காலம் விலங்குகளின் இறப்புக் காலம். குளிர்காலம் முழுவதும் தூங்கிக் கழிக்கும் விலங்குகளைத் தவிர மற்றவை தாக்குப் பிடிப்பது சிரமம். மர்மோட்டுகளின் குகை களுக்குள் கொசுக்கள் மறைந்துகொள்ள முடிந்தாலும், பாதிக்கும் மேற்பட்டவை இக்காலத்தில் மடிந்துவிடும். கொழுப்பும் அடர்த்தியான மயிருமின்றி, ஓநாய்களால் பனிக்காலத்தில் தாக்குப் பிடிக்க முடியாது; இக்காலத்தல் மெலிந்த, முதிய, நோய்வாய்ப்பட்ட மற்றும் காயமடைந்த ஓநாய்கள் இறந்துவிடும். அதனால்தான் அவை வளரக்கூடிய அந்தக் குறுகிய கோடை காலத்தை சாதகமாகக் கொண்டு கொசுக்கள் எவ்வளவு முடியுமோ அவ்வளவு ரத்தத்தை உறிஞ்சுகின்றன; அவற்றைக் காப்பாற்றிக்கொள்ள அவை மேற்கொள்ளும் வெறித் தாக்குதல்களே அவை. ஓநாய்க்கும் பனிக்காலத்தை எதிர் கொள்வதற்காகவும், அதையடுத்து வரும் இளவேனிற் பருவத்தில் பெரும்பாலும் நிலவக்கூடிய பஞ்சத்தை சமாளிப்பதற்காகவும்தான் இந்தக் கொலைவெறி யுத்தத்தில் ஈடுபட்டாக வேண்டியிருக்கிறது.

இரண்டு முன்னங்கால்களும், குதிரைக்குட்டியின் உடலில் எஞ்சியிருந்த உள்பாகங்களும் ஜென் சென்னின் குடிலுக்கு ஒதுக்கப்பட்டன. ஓநாய்க்குட்டி வயிறு நிறைய சாப்பிட்டு சந்தோஷ மாக இருந்தது. இப்போதும்கூட, இன்னும் சில நாட்களுக்குப் போதுமான அளவு அழுகிய இறைச்சி அதற்கு இருந்தது. இன்னும் உணவு எஞ்சியிருக்கிறதென்பதை அதன் மூக்கு சொல்லியதால் அது நல்ல மனநிலையில் இருந்தது.

ரத்தத்துடன் கூடிய புதிய இறைச்சி அதற்கு மிகவும் பிடித்தமானது என்றாலும், அதே சமயம் அது அழுகியிருந்தாலும் அதற்குப் பிரச்சனையில்லை.

ஆனால் ஜென்னுக்கு ஆச்சரியமான விசயம் என்னவென்றால், ஓநாய்க்குட்டி இதுவரை நோயுற்றதில்லை; கெட்டுப்போன, அழுகிய, மிகவும் அசுத்தமான உணவாக இருந்தாலும் அவை எதுவும் அதைப் பாதிக்கவில்லை. ஓநாய்க்குட்டியால் குளிர், வெப்பம், பசி, தாகம், துர்நாற்றம், கிருமிகள் என எல்லாவற்றையும் தாங்கிக்கொள்ள முடிவதை ஜென்னும் யாங்கும் வியந்தார்கள். கற்பனை செய்துகூடப் பார்க்க முடியாத அளவுக்கு அனுசரணை யற்ற சுற்றுச்சூழலில் ஒரு ஜீவராசி லட்சக்கணக்கான வருடங்களாக ஜீவித்து வருவதென்பது எவரையும் வியக்க வைக்கும் விசயம்தான்.

ஓநாய்க்குட்டி, அதனுடைய வளர்ச்சியில் பார்ப்பதற்கு மிக அழகாகவும் கம்பீரமாகவும் காணப்பட்டது. இப்போது அது ஒரு மேய்ச்சல்நில ஓநாய்க்குரிய எல்லாத் தன்மைகளோடும் இருந்தது.

ஜென் அதை இப்போது ஒரு பெரிய சங்கிலியால், பிணைத்திருந்தான். மேலும் அதைப் ‘பெரிய ஓநாய்’ என்று கூப்பிடவும் முயற்சித்தான். ஆனால் ஓநாய்க்குட்டிக்குப் பழைய பெயரே விருப்பமாக இருந்தது. ஜென், ‘குட்டி ஓநாய்’ என்று எப்போது கூப்பிட்டாலும் அவனோடு விளையாடுவதற்காக ஓடிவரும்; அவனுடைய கைகளை நக்கும்; அவனுடைய முழங்காலோடு உரசும்; தரையில் மல்லாக்காக வயிற்றைக் காண்பித்தபடி படுத்துக்கொண்டு, ஜென்னை சொறிந்து கொடுக்க வைக்கும். ஆனால் ‘பெரிய ஓநாய்’ என்று அவன் அதைக் கூப்பிட்டால் அது கண்டுகொள்வதில்லை. ஜென் யாரைக் கூப்பிடுகிறான் என்பது போல, சுற்று முற்றும் பார்க்கும்.

ஜென் அதைப் பார்த்து சிரித்தான். ‘‘நீ ஒரு முட்டாள் ஓநாய். நீ பெரிதாகிவிட்ட பின்பும் உன்னைக் குட்டி ஓநாய் என்று நான் கூப்பிட வேண்டுமா?’’ அது, ஜென்னைக் கேலி செய்வதுபோல நாக்கை வெளியில் நீட்டியது.

ஓநாய் உடம்பின் ஒவ்வொரு அங்கத்தையும் ஜென் வெகுவாக ரசித்தான். கொஞ்ச நேரம், அதன் காதுகளோடு அவன் சந்தோசமாக விளையாடினான். முழு வளர்ச்சியடைந்த முதல் உறுப்பு அதன் காதுகள்தான்; அவை நேராகக் குத்திட்டும், வலுவாகவும், வடிவோடும், கூர்ந்த கவனத்தோடும் இருந்தன.

மேய்ச்சல்நில ஓநாய்களுக்கே உரிய உள்ளுணர்வான சுய விழிப்பு அதனிடம் அதிகரித்து வந்தது. பட்டிக்குள் கால்களைக் குறுக்காக மடித்து உட்கார்ந்தபடி, ஓநாய்க்குட்டியின் காதுகளோடு ஜென் விளையாடிக்கொண்டிருந்தான். அதன் காதுகளின் அடிப்பகுதியையும் கழுத்தையும் அவன் சொறிந்துவிட்ட பிறகுதான் அது அவனை விளையாட அனுமதித்தது. அவன், அதன் காதுகளைப் பின்பக்கமாக மடித்து விட்டு, அவை மீண்டும் மேல் நோக்கிச் செல்வதைப் பார்த்து ரசிப்பான். இரண்டையும் ஒரே சமயத்தில் அவன் மடித்துவிட்டால், அவை மீண்டும் பழைய நிலைக்கு ஒன்றை அடுத்து ஒன்றெனத்தான் திரும்பும். இரண்டும் ஒரே சமயத்தில் ஒருபோதும் சேர்ந்து திரும்பாது.

சில நாட்களாக, மேய்ச்சல் நிலத்தில் ராணுவ வண்டிகள் அதிகமாகத் திரிவதை ஜென் கவனித்தான்; அவை புழுதியைக் கிளப்பிக்கொண்டு செல்லும் காட்சி அவனுக்கு மனவேதனை அளித்தது. உள்மங்கோலிய நாடோடி மேய்ப்பர்களின் வாழ்க்கையை அவர்களோடு சேர்ந்து வாழ்ந்து அவதானிக்கும் இந்த வாய்ப்பைப் பெற்ற முதலாவது ஹேன் சீனக் குழுவைச் சேர்ந்தவன் அவன் என்பதையும், ஒருவேளை இதுவே கடைசிக் குழுவாகவும் இருக்குமென்பதையும் ஜென் உணர்ந்தான். அவன் ஒரு பத்திரிகையாளனோ, சுற்றுலாப் பயணியோ அல்ல; அவன் ஒரு நாடோடி ஆடு மேய்ப்பன் என்பதற்காகப் பெருமிதமும் சந்தோஷமும் அடைந்தான். மேலும், அவன் ஓலோன்புலாக் என்ற இடத்தை அவதானிக்கக் கிடைத்த வாய்ப்புக்காக மகிழ்ச்சி யடைந்தான்; அங்கு மறைவான ஓரிடத்தில் இப்போதும்கூட அதிக ஓநாய்கள் அலைந்து திரிகின்றன. மேலும், அவனாகவே குகையிலிருந்து எடுத்துவந்த ஓநாய்க்குட்டியை அவன் வளர்த்து வருகிறான்.

அவனுடைய அவதானிப்புகளையும் தீவிர சிந்தனைகளையும், ஒரு சிறு குறிப்பையும் தவறவிடாமல், நினைவில் கொண்டிருக்க அவன் சங்கல்பம் எடுத்துக்கொண்டான். எதிர்காலத்தில் அவன் தன்னுடைய கதையை நண்பர்களுக்கும் குடும்பத்தாருக்கும், அவன் இந்த உலகத்தை விட்டுப் பிரியும் நாள்வரை, மீண்டும் மீண்டும் சொல்லிக்கொண்டே இருப்பான். ‘மஞ்சள் பேரரசர்களின்’ வாரிசுகள் தங்களுடைய பூர்வீக மேய்ச்சல் நிலத்தை விட்டுச்

சென்று பல காலமாக¤விட்டது ஓர் அவலம்தான். நாடோடி வாழ்க்கை முறையானது, விரைவிலேயே ஒரு முடிவுக்கு வந்துவிடும்; இனி, தங்களுடைய தொன்மையான புனித இடத்துக்கு வந்து, தங்களுடைய மூதாதையருக்கு அஞ்சலி செலுத்தக்கூடிய வாய்ப்பு சீனர்களுக்கு ஒருபோதும் கிடைக்கப் போவதில்லை.

ஓநாய்க்குட்டியை அவன் ரகசியமாக அவிழ்த்துவிட்டு, அது வெட்டவெளியான, குரூரமான மேய்ச்சல் நிலத்துக்குத் திரும்பச் செல்லவும், ஒரு ஓநாய்க்கான வாழ்க்கையை அதற்குத் திரும்பத் தரவும் அவன் யோசித்தான். ஆனால், அவனுக்கு தைரியம் வரவில்லை. மேய்ச்சல் நிலத்தில் தாக்குப் பிடிப்பதற்கான ஆயுதத்தை அது இழந்துவிட்டது; ஜென் அதன் கோரைப் பற்களின் முனைகளைக் கத்தரித்து விட்டபிறகு, நாயின் பற்களைவிட அவை மோசமாகிவிட்டன.

அதனுடைய ஒரு பல்லில் குறடு ஏற்படுத்திவிட்டிருந்த கீறல்தான் ஜென்னுக்கு மிகுந்த வேதனையைத் தந்தது. அதனுடைய ஈறுகளுக்கு எவ்வித சேதமும் ஏற்படக்கூடாது என்பதில் அவன் கவனமாக இருந்தான். ஆனால் இந்தக் கீறல், அது மிகவும் சின்னதுதான் என்றாலும், எப்படியோ ஏற்பட்டுவிட்டது. சில நாட்களுக்குப் பிறகுதான், அந்தப் பல் தொற்றால் பாதிக்கப் பட்டிருப்பதை அவன் கவனித்தான்; அது கறுப்பாக, ஒரு வயதான ஓநாயின் நோயுற்ற பல்லைப் போல மாறிவிட்டிருந்தது. அந்தக் கறுப்புப் பல்லைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மனம் வலித்தது. மேய்ச்சல் நில ஓநாய்களுக்குப் பற்கள்தான் வாழ்வின் ஆதாரம். மூன்று மொண்ணையான பற்களே ஓநாய்க்குட்டிக்கு இருக்கும்பட்சத்தில் அதனால் இறைச்சியைக் கிழிக்கக்கூட முடியாது; தனியாக வேட்டையாடவோ, இரையைக் கொல்லவோ முடியாது.

நாட்கள் செல்லச் செல்ல, தீர யோசிக்காமல் அவன் எடுத்த முடிவின் விளைவுகளைப் பார்க்கும் போதெல்லாம் அவன் மனம் விரக்தியில் ஆழ்ந்தது. தாய் ஓநாய் அதை நாடி சில வாரங்களுக்கு முன்பு வந்தபோது, அதை அவிழ்த்துவிடாமல் போனதற்காக ஜென் வருந்தினான். அறிவியல் ஆராய்ச்சி என்பதெல்லாம் அவனுக்கான தில்லை; அதற்கான மனோபாவமோ, தகுதிகளோ அவனிடம் கிடையாது. மருத்துவப் பரிசோதனைக்காகக் கூறு போட வளர்க்கப் படும் எலி அல்ல ஓநாய்க்குட்டி! அது அவனுடைய நண்பன்

மற்றும் ஆசான்.மேய்ச்சல்நில வாசிகள், ‘உள்மங்கோலிய உற்பத்தி மற்றும் கட்டுமானப் பணிப் படைப்பிரிவின்’ வருகைக்காக மிகவும் ஆர்வத்துடன் காத்திருந்தார்கள். பில்ஜி, உல்ஜீ மற்றும் மூத்தவர்களால் கையொப்பமிட்டு அனுப்பப்பட்ட கடிதமானது, அதன் நோக்கத்தை அடைந்துவிட்டிருந்தது. ஓலோன்புலாக் மேய்ச்சலுக்காகப் பயன்படுத்தப்படுமென்றும், அதன் பசும் நிலப்பகுதி மேய்ச்சல் பிரதேசமாக்கப்படுமென்றும், அதன் ஒரு பகுதி மட்டும் விவசாயத்துக்குக் கொடுக்கப்படுமென்றும் படைப்பிரிவு அதிகாரிகள் முடிவு செய்திருந்தனர். எஞ்சிய மேய்ச்சல் பிரதேசங்களும், பிற சமூகங்களும் விவசாய உற்பத்திக்கானதாக்கப்படும்.

படைப்பிரிவின் இந்த மகத்தான திட்டம் தொன்மையான ஓலோன்புலாக்கில் ஏற்கெனவே அமலாக்கத்துக்கு வந்துவிட்டது. அதன் பிரதான நோக்கம், அப்பகுதியில் ஆயிரக்கணக்கான ஆண்டு களாக நிலவிவரும் மிகவும் பழமையான, நாடோடி பாணியிலான மேய்ச்சல் முறை மூலம் மேற்கொள்ளப்படும் உற்பத்தியை முடிவுக்குக் கொண்டு வருவதும், நிலையான வாழ்க்கை முறையை உருவாக்குவதும்தான். படைப்பிரிவு அதிகாரிகள் பணமும், கருவிகளும், பொறியாளர் குழுக்களும் அளித்து, ஓட்டுக் கூரைகள் கொண்ட செங்கல் வீடுகளையும், சிமெண்ட் மற்றும் கல்லாலான திடமான விலங்குப் பட்டிகளையும் உருவாக்க முனைந்தனர். மேலும், அக்குழுக்கள் கிணறுகள் தோண்டுவதோடு நெடுஞ்சாலை களையும் அமைக்கும்; மற்றும், பள்ளிக்கூடங்கள், மருத்துவமனைகள், தபால் அலுவலகங்கள், கடைகள், கலை அரங்கங்கள், திரை அரங்குகள் ஆகியவற்றையும் அவர்கள் கட்டுவார்கள். மேலும் அவர்கள், விலங்குகளுக்குத் தீனியாக அமையும் விதத்தில், வளமான விளைநிலங்களில் புல்லையும் தானியத்தையும் விளையச் செய்வார்கள்; காய்கறிகள் பயிரிடுவார்கள். இயந்திரங்கள் மூலமாக அறுவடைகள் மேற்கொள்ளப்படும். போக்குவரத்துக் குழுக்களும் டிராக்டர் பிரிவுகளும் கட்டமைக்கப்படும். ஓநாய்களாலும், நோய்களாலும், பூச்சிகளாலும், கொறிக்கும் விலங்குகளாலும் ஏற்படும் அழிவுகள் முற்றிலுமாகக் களையப்படும். பொதுவாக ஏற்படும் இயற்கைப் பேரழிவுகளை எதிர்த்துத் தாக்குப் பிடிக்கும் வகையில் மேய்ச்சல் நிலத்தின் திறன் அவர்களால் பலப்படுத்தப் படும். மேலும், ஆயிரக்கணக்கான வருடங்களாக

அனுசரணையற்ற, மிகவும் கடினமான சூழ்நிலைகளில் வாழ்ந்துவரும் மேய்ப்பர்கள், படிப்படியாக நிலையாகக் குடியிருப்பதையும், ஸ்திரமான சந்தோஷ மான வாழ்க்கையை வாழ்வதையும் அவர்கள் உறுதிசெய்ய விரும்பினார்கள்.

மாணவர்களும், இளம் மேய்ப்பர்களும், பெரும்பாலான பெண்களும், சிறார்களும் படைப்பிரிவின் வருகையை எதிர்பார்த்திருந்தார்கள். பாவோ சுங்காயும் பிற படைப்பிரிவினரும் விளக்கிய அழகான எதிர்காலத்திற்காக அவர்கள் ஆவலுடன் காத்திருந்தார்கள். அதற்கு மாறாக, பெரும்பாலான முதிய மற்றும் நடுத்தர வயது மேய்ப்பர்கள் அமைதியாக இருந்தார்கள். ஜென் சென் முதியவரைப் பார்த்துப் பேசுவதற்காகச் சென்றான். பில்ஜி பெருமூச்சு விட்டபடி சொன்னார். ‘‘எங்களுடைய குழந்தைகளுக்கு ஒரு பள்ளிக்கூடம் வேண்டுமென நாங்கள் எப்போதுமே விரும்பியிருக்கிறோம். இனி, நோயாளிகளை எருது வண்டிகளிலோ அல்லது குதிரை வண்டிகளிலோ எடுத்துக்கொண்டு மருத்துவமனைக்குச் செல்ல வேண்டி வராது என்று நம்புகிறோம். எங்களிடம் மருத்துவமனை இல்லாததால், தேவையில்லாமல் பலர் இறக்கும்படி ஆகியிருக்கிறது. ஆனால், இனி மேய்ச்சல் நிலம் என்னாகும்? மிக அதிக அளவில் இருக்கும் கால்நடைகளுக்குப் போதுமான தீனி கொடுக்குமளவு அது ஏற்கெனவே வளமாகத்தான் இருந்துகொண்டிருக்கிறது. அது

குறிப்பிட்ட அளவு மக்களையும் விலங்குகளையும் ஏற்றிக்கொள்ளக் கூடிய ஒரு எருதுவண்டி போன்றது. நிறைய மக்களும் அவர்களுடைய எந்திரங்களும் அந்த வண்டியில் ஏற்றப்பட்டால் அது என்ன ஆகும்? அப்படி ஆகும்போது, ஹேன் சீனர்களாகிய நீங்கள், உங்களுடைய வீடுகளுக்குப் போய்விடுவீர்கள். ஆனால் எங்களுடைய கதி என்ன?’’

ஓநாய்களின் எதிர்காலம் பற்றிய கவலைதான் ஜென்னைப் பெரிதும் வாட்டியது. விவசாயிகள் வந்து சேர்ந்ததும், அன்னங்கள், வாத்துகள் மற்றும் காட்டு வாத்துகள் சாப்பிடப்பட்டுவிடும் அல்லது பறந்து போய்விடும். ஆனால் ஓநாய்கள், பறவைகள் அல்ல. பல தலைமுறைகளாக மேய்ச்சல் நிலத்தில் இருக்கும் அவை, அழித்தொழிக்கப்பட்டு விடுமா அல்லது சீனாவை விட்டே விரட்டியடிக்கப்பட்டு விடுமா?

இரண்டு கோப்பை குளிர்ந்த தேனீரைக் குடித்து முடித்து விட்டு, யாங் ஜென்னிடம் சொன்னான். ‘‘படைப்பிரிவினர் இவ்வளவு சீக்கிரம் இங்கு வருவார்களென்று யார் நினைத்தார்கள்? அமைதிக் காலத்தில் ராணுவ வாழ்க்கை மேற்கொள்வதை நான் வெறுக்கிறேன். ‘ஹிலோங்ஜியாங் உற்பத்தி மற்றும் கட்டுமானப் படைப்பிரிவு’க்கு என்னை அனுப்ப இருந்ததிலிருந்து எப்படியோ சமாளித்துத் தப்பினேன். ஆனால் அதன் உள்மங்கோலிய அமைப்பின் கட்டுப்பாட்டின்கீழ் ஒருநாள் நான் வருவேன் என்று யார்தான் நினைத்தார்கள்? ஓலோன்புலாக் என்னவாகப்

போகிறதென்று எனக்குத் தெரியவில்லை. ஆனால் ஓநாய்களுக்காக நாம் ஏதாவது செய்தாக வேண்டும், வெகு சீக்கிரமாக.’’

அவர்கள் பேசிக்கொண்டிருந்தபோது, மஞ்சள் புழுதி மேகத்தைக் கிளப்பியபடி, எருதுவண்டிப் பாதையில் ஒரு குதிரை அவர்களை நோக்கிப் படுவேகமாக வந்தது. சாங் ஜியோன், ஓய்வெடுப்பதற்காகத் திரும்ப வந்துகொண்டிருப்பது அவர்களுக்குத் தெரிந்தது.

அவர்கள் அமர்ந்து, காளான்களோடு சேர்த்து வேக வைத்த இறைச்சியை சாப்பிட்டுக் கொண்டிருந்தார்கள்.

‘‘நீ அதிவிரைவான குதிரையை வைத்திருக்கிறாய் என்பதால் செய்திகளும் உனக்கு விரைவாகவே கிடைத்துவிடும். அதனால் படைப்பிரிவினர் பற்றி எங்களுக்குச் சொல், பார்க்கலாம்’’ என்றான் யாங்.

‘‘நல்லது, குழும அலுவலகம் இப்போது படைப்பிரிவினர் அலுவலகமாகிவிட்டது. முதல் குழு வந்திறங்கிவிட்டது. அதில் பாதிப் பேர் மங்கோலியர்கள், மறுபாதியினர் ஹேன் இனத்தவர். அவர்களுடைய முதல் வேலை, அனேகமாக ஓநாய்களை அழித்தொழிப்பதுதான். அவை எவ்வளவு இளம் குதிரைகளைக் கொன்றிருக்கின்றன என்பதைக் கேள்விப்பட்டபோது, அவர்கள் பெருங்கோபம் அடைந்தார்கள். வழக்கமாக இராணுவம் மேய்ச்சல் நிலத்தை அடைந்ததும் செய்யும் முதல் காரியம் கொள்ளையர்களை ஒழித்துக் கட்டுவதுதான். இம்முறை அவர்கள் ஓநாய்களை முதலில் கொல்லப் போகிறார்கள். அவர்கள் தேர்ச்சி பெற்ற சிறந்த ஆட்களை அனுப்பி இருக்கிறார்கள். நம்முடைய நலனுக்காகத்தான், அவர்கள் இதை

மேற்கொள்வதாகச் சொல்கிறார்கள். ஆனால் மூத்த மங்கோலியர்களை இது நெருக்கடிக்கு ஆளாக்கியிருக்கிறது. ஓநாய்களால் அடையும் பயன்கள் குறித்து சீருடை அணிந்திருக்கும் அந்தப் பையன்களிடம் சொல்வதென்பது, எருதுவுக்கு முன் இசைக்கருவியை மீட்டுவது போன்றது. ஓநாய்களின் மயிர்த் தோல்கள் இப்போது முழு வளர்ச்சியடைந்திருக்கின்றன; அதனால் அவற்றின் தோல்கள் நல்ல விலைக்குப் போகும். படைப் பிரிவினருக்கு நல்ல சம்பளம் கிடையாது; அதன் அதிகாரிகள் மற்றும் அலுவலர்களேகூட மாதம் அறுபது அல்லது எழுபது யான் தான் பெறுகிறார்கள். ஒரு ஓநாய்த் தோல் அவர்களுக்கு இருபது யான் மற்றும் ஒரு விருதையும் பெற்றுத்தரும். அதனால்தான் அதைத் தொடங்குவதில் அவர்கள் மிகவும் குறியாக இருக்கிறார்கள்.''

யாங் கீ பெருமூச்சு விட்டான். ''மங்கோலிய ஓநாய்களே, உங்களுக்கு முடிவு நெருங்கிவிட்டது. நிலைமை மாறிவிட்டது. நாயகர்களின் காலம் முடிந்துவிட்டது. உடனே, வெளிப்புற மங்கோலியாவுக்கு ஓடிவிடுங்கள்'' என்றான் அவன்.

## 31

ஒரு நாள் காலையில், மேற்பகுதி திறந்த நிலையிலிருந்த இரண்டு இராணுவ வண்டிகள், ஜென் சென்னின் குடிலின் முன்பு வந்து நின்றன. அந்த பிரமாண்டமான வண்டிகளைப் பார்த்ததோடு, முதன்முறையாகப் பெட்ரோல் வாடையை முகர்ந்த ஓநாய்க்குட்டி தன்னுடைய குழிக்குள் சென்று பதுங்கிக்கொண்டது. அதற்கு மாறாக, நாய்கள் வண்டிகளைச் சுற்றி வளைத்து படுபயங்கரமாகக் குரைத்தன. ஜென்னும் யாங்கும் வெளியில் ஓடிவந்து, அவற்றை விரட்டினர்.

கதவுகளைத் திறந்துகொண்டு இறங்கிய பாவோ சுங்காயும் நான்கு இராணுவ வீரர்களும் நேராக ஓநாய்க்குட்டியின் குழியை நோக்கிச் சென்றனர். என்ன நடக்கிறதென்று தெரியாத ஜென்னும் யாங்கும் காவோவும் அவர்களை நோக்கி விரைந்தனர். ஜென் அமைதியாக இருக்க முயற்சித்தான். ‘‘இயக்குனர் பாவோ, ஓநாய்க் குட்டியைப் பார்க்க யாரையோ அழைத்து வந்திருக்கிறீர்கள்.’’

பாவோ புன்னகைத்தார். ‘‘முதலில் நான் அறிமுகம் செய்து வைக்கிறேன்.’’ முப்பது வயதுகளிலிருந்த இரண்டு அதிகாரிகளை அவர் சுட்டிக்காட்டினார். ‘‘இவர்கள் இருவரும் பணி அதிகாரிகள். சூ மற்றும் படெல்.’’ பிற இரண்டு ஓட்டுனர்களைச் சுட்டி, ‘‘இவர் ஓல்டு லியு; இவர் லிட்டில் வாங். இவர்கள் இங்கு வேரூன்றப் போகிறார்கள். வீடுகளெல்லாம் கட்டி முடித்ததும் தங்களுடைய குடும்பத்தை இங்கு கூட்டி வந்துவிடுவார்கள். ஓநாய்களைக் கொல்வதற்கு நமக்கு உதவும் பொருட்டு இவர்கள் அனுப்பப் பட்டிருக்கிறார்கள்.’’

ஜென் கை குலுக்கினான்; அவனுடைய இதயம் படபடத்தது. தேனீர் அருந்த, அவர்களை உள்ளே அழைத்தான்.

‘‘அவசியமில்லை’’ என்றார் பாவோ. ‘‘முதலில் நாம் ஓநாய்க்குட்டியைப் பார்க்கலாம்; அதை வெளியில் எடு. இதைப் பார்ப்பதற்காகவே இந்தப் பணி அதிகாரிகள் விசேஷமாக இந்தப் பயணத்தை மேற்கொண்டிருக்கிறார்கள்.’’

ஜென் வலிந்து புன்னகைத்தான். ‘‘உங்களுக்கும் ஓநாய்களிடம் ஆர்வமிருக்கிறது, அப்படித்தானே.’’

சாங்சி உச்சரிப்போடு கனத்த குரலில் சூ அன்பாகப் பேசினார். ‘‘ஓநாய்கள் ரத்த தாகம் கொண்ட கொலைகார மிருகங்கள்; அதனால்தான் படைப்பிரிவுத் தலைவர்கள், அவற்றை அழித்தொழிப்பதற்காக எங்களை அனுப்பியிருக்கிறார்கள். நாங்கள் மேய்ச்சல்நில ஓநாய்களை இதுவரை பார்த்ததில்லை. அதனால்தான் பாவோ எங்களை இங்கே கூட்டி வந்திருக்கிறார்.’’

அவரைத் தொடர்ந்து, ஷான்டோங் உச்சரிப்பில் பாடெல் பேசினார். ‘‘உங்களுக்கும் மற்றவர்களுக்கும் ஓநாய்களைப் பற்றி நிறைய தெரியுமென்றும், அவற்றைக் கொல்லவும் அவற்றின் குட்டிகளை எடுத்து வரவும் கூடிய திறமைசாலிகள் என்றும் பாவோ சொன்னார். ஓநாயின் இயல்புகளை அறிவதற்காக அவற்றில் ஒன்றை நீங்கள் வளர்ப்பதாகவும் சொன்னார். மிகவும் அருமையான, துணிச்சலான முடிவு. நாங்கள் அவற்றை வேட்டையாடப் போகும்போது, உங்களுடைய உதவி எங்களுக்குத் தேவைப்படும்.’’

அவர்கள் இணக்கமாகவும் அன்பாகவும் நடந்து கொண்டார்கள். அவர்கள் ஓநாய்க்குட்டியைக் கொல்வதற்காக வரவில்லை என்று தெரிந்ததும் ஜென் ஆறுதலாக உணர்ந்தான். ‘‘ஓநாய்... ஓநாய்கள் மிகவும் சிக்கலான விலங்குகள்.’’ ஜென் திக்கினான். ‘‘அவற்றைப் பற்றி உங்களுக்கு எல்லாம் சொல்லப் பல நாளாகும். நாம் போய் ஓநாய்க்குட்டியைப் பார்ப்போம். நீங்கள் கொஞ்சம் பின்னாலேயே இருங்கள்; பட்டிக்குள் போக வேண்டாம். அந்நியர்களை அது கடித்துவிடும்.’’

ஜென் ஒரு பையிலிருந்து இரண்டு இறைச்சித் துண்டங்களை எடுத்துக்கொண்டு, கூடவே வெட்டுவதற்கான ஒரு பழைய பலகையையும் எடுத்துக்கொண்டு, குகை வாசலுக்கு சத்தமில்லாமல் நடந்து சென்றான். பலகையைத் தரையில் வைத்துவிட்டு, ‘‘குட்டி ஓநாய், குட்டி ஓநாய், சாப்பாட்டு நேரம்’’ என்று கத்தினான். அது குகையை விட்டு வெளியில் வந்து இறைச்சியின்மீது பாய்ந்தது.

ஜென் உடனடியாகப் பலகையைத் தள்ளிக் குகை வாசலை மூடினான். பொதுவாக, ஓநாய்க்குட்டிக்கு காலையிலும் மதியமும் உணவு கொடுக்கப்படும். முதன்முறையாக இடையில் ஒரு உணவு கொடுக்கப்பட்டது,

அதை மிகவும் சந்தோசப்படுத்தியது. பாவோவும் மற்றவர்களும் தள்ளி நின்றுகொண்டார்கள்.

பார்வையாளர்கள் அரை வட்டமாகக் குந்தியிருந்தார்கள். அவர்களின் வருகையும், அவர்களுடைய அறிமுகமில்லாத வாசனையும் ஓநாய்க்குட்டியை வினோதமாக செயல்பட வைத்தது. அவர்களைப் பயமுறுத்தும் வகையில் தாக்க முனைவதற்குப் பதிலாக — பொதுவாக அது அப்படிச் செய்வதுதான் வழக்கம் — அதனுடைய கால்களுக்கிடையில் வாலை இடுக்கிக்கொண்டு, தன்னைக் குறுக்கியபடி ஒரு இறைச்சித் துண்டை எடுத்துக்கொண்டு பட்டியின் ஒரு மூலைக்குப் போனது. அங்கு அது இறைச்சித் துண்டத்தைத் தரையில் போட்டுவிட்டு, மீண்டும் சென்று அடுத்த இறைச்சித் துண்டத்தை எடுத்து வந்தது. பின்னர் சாப்பிடத் தொடங்கியது; ஆனாலும் சுற்றிலும் பலர் இருந்துகொண்டிருப்பது அதற்குப் பிடிக்கவில்லை. சில கடிகள் கடித்த பிறகு, அது தன் நடத்தையை மாற்றிக்கொண்டது. மூக்கைச் சுருக்கிக்கொண்டு, கோரைப் பற்களை வெளிக்காட்டியபடி இராணுவ வீரர்களை நோக்கிப் பாய்ந்து சென்றது. அதன் கோபப் பார்வையையும் வேகத்தையும் பார்த்து மிரண்டுபோன ஐவரும் அப்படியே பின்னால் சரிந்தனர். அதேசமயம் அதன் சங்கிலி அதை மூன்றடி தூரத்துக்கு முன்னால் நிறுத்திவிட்டது.

பணி அதிகாரி பாடெல் எழுந்து உட்கார்ந்துகொண்டு, தன் கைகளிலிருந்த தூசியைத் துடைத்துவிட்டுக்கொண்டார். ‘‘என்ன ஒரு மூர்க்கமான காட்டு விலங்கு; நல்லவேளையாக அந்தச் சங்கிலி நம்மைக் காப்பாற்றியது.’’

‘‘இன்னும் ஒரு வயதுகூட ஆகவில்லை; அதற்குள் முழு வளர்ச்சியடைந்த ஒரு நாயளவுக்குப் பெரிதாக இருக்கிறது’’ என்றார் சூ. ‘‘எங்களை இங்கு அழைத்து வந்ததற்கு மிகவும் நன்றி பாவோ. நான் ஒரு யுத்தகளத்தில் இருப்பதைப் போலத்தான் இப்போது உணர்கிறேன்.’’ அவர் பாடெலை நோக்கித் திரும்பினார். ‘‘வேகத்திலும் பதுங்கிப் பாய்வதிலும் ஓநாய்கள், நாய்களை விட மேம்பட்டவை. அவற்றின் தாக்குதல்கள் மின்னல் வேகம் கொண்டவை.’’

பாடெல் தலையசைத்தார். ஓநாய்க்குட்டி திரும்பித் தன் இறைச்சியை நோக்கிப் பாய்ந்தது. அது கரகரப்பாகவும் அச்சுறுத்தும் வகையிலும் உறுமியபடியே இறைச்சியைச் சாப்பிட்டது.

இரண்டு அதிகாரிகளும் தம்முடைய கண்களால் அதை அளந்து பார்த்தார்கள். அதனுடைய மயிரையும் தோலையும் நன்கு பார்த்தார்கள். தலையில் அல்லது பக்கவாட்டிலிருந்து மார்பில் குறி வைத்தால் சரியாக இருக்குமென்று முடிவுக்கு வந்தார்கள். தோலுக்கு சேதாரமில்லாமல் அது ஓநாயைக் கொல்லும்.

''இந்த இளைஞர்கள் விசயம் தெரிந்தவர்கள்'' என்று பாவோ முகம் பிரகாசிக்கச் சொன்னார். ''எல்லா மேய்ப்பர்களும் பெரும்பாலான மாணவர்களும் இந்த ஓநாய்க்குட்டியை வளர்ப்பதற்கு எதிர்ப்பு தெரிவித்தார்கள். ஆனால் நான்தான் இவர்களை வளர்க்கும்படி சொன்னேன். நம்மைத் தெரிந்து கொண்டிருப்பதைப் போல நம்முடைய எதிரியை நாம் தெரிந்து கொண்டிருந்தால் நாம் ஒருபோதும் தோற்க மாட்டோம். இந்த ஓநாய்க்குட்டியைப் பார்க்க நான் நிறைய பேரைக் கூட்டி வந்திருக்கிறேன். ஓநாயென்றால் பயப்படும் சீனர்கள்தாம் இதைப் பார்க்க ஆசையாக இருக் கிறார்கள். அவர்கள் மிருகக்காட்சி சாலையில் பார்த்ததை விடவும் இது அருமையான விலங்கு என்று எல்லோருமே சொன்னார்கள். மிக நெருக்கத்தில் ஒரு உயிருள்ள ஓநாயைப் பார்ப்பதென்பது அபூர்வமான வாய்ப்புதான். இங்கு இப்படி இருப்பது இது ஒன்று தான். படைப்பிரிவுத் தலைவர்கள் மேற்பார்வையிட வரும்போது, அவர்களை இங்குதான் முதலில் கூட்டிவரப் போகிறேன்.''

''அவர்கள் பிரசித்திபெற்ற மங்கோலிய ஓநாய்க்குட்டியைப் பற்றிக் கேள்விப்படும்போது, நிச்சயம் வருவார்கள் என்பதில் சந்தேகமில்லை'' என்று கூறிய சூ, ஜென்னைப் பார்த்துத் திரும்பினார். ''கம்பமும் சங்கிலியும் பாதுகாப்பானதாக இருக்கிறதா என்று பார்த்துக்கொள்.''

பாவோ தன்னுடைய கைக்கடிகாரத்தைப் பார்த்தார். ''சரி, விசயத்துக்கு வருவோம். நாங்கள் இங்கு வந்தது ஓநாய்க்குட்டியைப் பார்ப்பதற்காக மட்டுமல்ல, உங்களில் ஒருவரை எங்களோடு கூட்டிக்கொண்டு போகவும்தான். ஓநாய்களை ஒழித்துக் கட்டுவதற்காக இவர்கள் வந்திருக்கிறார்கள். பணி அதிகாரி நேற்று வானில் உயரப் பறந்துகொண்டிருந்த பருந்தொன்றைச் சுட்டார். தரையிலிருந்து பார்த்தபோது அது ஒரு பட்டாணி அளவுதான் இருந்தது. ஆனால் ஒரே குறியில் சுட்டுத் தள்ளிவிட்டார். சரி, உங்களில் யார் வரப் போகிறீர்கள்?''

ஜென்னின் இதயம் சோகத்தில் மூழ்கியது. ஓலோன்புலாக் ஓநாய்களைத் தீர்த்துக் கட்டப் போகும் எதிரி வந்தாயிற்று. ''ஓநாய்கள் எங்கிருக்குமென்பது குதிரை மேய்ப்பர்களுக்குத் தெரியும். அவர்களில் ஒருவரை நீங்கள் உங்களுடைய வழிகாட்டியாகக் கூட்டிக்கொண்டு போகலாம்'' என்று தயக்கத்துடன் கூறினான்.

''முதியவர்கள் வரமாட்டார்கள். இளைஞர்களால் ஒரு பிரயோஜனமும் இல்லை'' என்றார் பாவோ. ''அனுபவம் வாய்ந்தவர்கள் எல்லோரும் குதிரைகளின் மேய்ச்சலுக்காக மலைகளுக்குச் சென்றிருக்கிறார்கள். இந்த அதிகாரிகள் இதற்காக இவ்வளவு தூரம் சிரமப்பட்டு இங்கு வந்திருக்கிறார்கள்; அதனால் உங்களில் ஒருவர், இந்த ஒருமுறை மட்டும் போயாக வேண்டும்.''

''இந்தக் குழுமத்திலேயே ஓநாய்களைக் கொல்வதில் கில்லாடியான டோர்ஜியை ஏன் நீங்கள் கேட்கக்கூடாது?''

''இராணுவத் துணைத்தலைவர் ஏற்கெனவே அவனைக் கூட்டிக்கொண்டு விட்டார். அவருக்கு வண்டியில் சென்று கொண்டே வேட்டையாடுவது பிடிக்கும்.'' அவர் மீண்டும் கைக்கடிகாரத்தைப் பார்த்தார். ''நேரத்தை வீணடிக்க வேண்டாம்.''

வேறு வழியில்லை என்பதைத் தெரிந்துகொண்ட ஜென், யாங்கிடம், ''நீ ஏன் போகக்கூடாது?'' என்றான்.

''உன்னளவுக்கு எனக்கு ஓநாய்களைப் பற்றித் தெரியாது... அதனால் நீ போவதுதான் நல்லது.''

''நான் முடிவு செய்கிறேன்'' என்றார் பாவோ பொறுமையிழந்து. ''ஜென், நீ எங்களுடன் வா. ஆனால், நீ பில்ஜியைப் போல ஓநாய்களைப் போக விட்டுவிட்டால், நாம் வெறுங்கையோடு திரும்பினால், நான் உன்னுடைய ஓநாய்க்குட்டியைக் கொன்று விடுவேன். சரி, கிளம்பு. நாம் போகலாம்.''

ஜென்னுடைய முகம் வெளுத்தது. ''சரி, நான் தயார். கிளம்பலாம்.''

இரண்டு வாகனங்களும் மேற்கு நோக்கி விரைந்தன. அவற்றுக்குப் பின்னால் ஒரு ஜோடி மஞ்சள் புழுதிப் படலங்கள் வெளிக் கிளம்பின. ஜென் மோட்டார் வாகனத்தில் பயணம் செய்து இரண்டு வருடங்களுக்கும் மேலாகிவிட்டது.

அவனுக்கு மட்டும் ஓநாய்கள் மீதான ஈர்ப்பு இல்லாதிருந்திருக்குமானால் இப்படியாகப் பயணம் செய்து வேட்டையாடும் அரிய வாய்ப்பை அவன் ஒரு அதிர்ஷ்ட மாகக் கருதியிருப்பான். அவன் அப்போதுதான் மேய்ச்சல் நிலத்துக்கு வந்து சேர்ந்தவனாக இருந்திருந்தால், அவன் ஓநாய்களிட மிருந்து கற்றுக்கொள்ளாதவனாக இருந்திருந்தால் இது ஒரு அரிய சந்தோஷமான வாய்ப்பாக இருந்திருக்கும். மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்களை வேட்டையாடுவதற்காகக் காற்றைப் போல் விரைந்து செல்வதென்பது எவ்வளவு சந்தோஷமான உற்சாகமான விசயம். பிரிட்டிஷ் உயர்குடி மக்களோடு சேர்ந்து நரி வேட்டையாடச் செல்வதை விடவும் அல்லது ரஷ்யக் கோமான்களோடு சேர்ந்து பனிப் பிரதேசத்தில் கரடி வேட்டையாடச் செல்வதை விடவும் இது மிகவும் திருப்தியளிக்கக் கூடியது.

ஆனால் இத்தருணத்தில், வண்டியில் ஏதாவது கோளாறு ஏற்பட்டு நின்றுவிட வேண்டுமென்பதுதான் ஜென்னின் ஒரே ஆசையாக இருந்தது. தன்னுடைய நண்பர்களைக் கைது செய்வதற்காக, இராணுவத்தை நடத்திக்கொண்டு போகும் துரோகியைப் போல அவன் தன்னை உணர்ந்தான். ஓநாய்கள் மீதான அவனுடைய ஈடுபாடு பாவோவுக்குத் தெரியும்.

ஓநாய்களை நிர்மூலமாக்கும் படைப்பிரிவினரின் நடவடிக்கை ஏற்கெனவே மேய்ச்சல் நிலம் முழுவதும் மேற்கொள்ளப்பட்டு விட்டது. இம்முறை ஓநாய்கள் சீனாவை விட்டு விரட்டியடிக்கப் படும்; வரலாற்றிலிருந்தே நீக்கப்படும். ஓநாய் குலச்சின்னத்தின் மேய்ச்சல்நில பக்தர்களில் ஒருவரான பில்ஜியும், குடிலில் இருக்கும் அவனுடைய இரண்டு நண்பர்களும் அவன் எவ்வளவு சோகத்தில் இருப்பான் எனப் புரிந்துகொண்டிருப்பார்கள். அவன் ஒரே சமயத்தில் மிகவும் முன்னேற்றமடைந்தவனாகவும் மிகவும் தொன்மையானவனாகவும் இருப்பதுதான் ஜென்னுடைய சோகம். ஓலோன்புலாக்கில் ஒவ்வொரு ஐந்து மைல்களுக்கு வேறுவிதமான காற்றையும், ஒவ்வொரு பத்து மைல்களுக்கு வேறுவிதமான மழையையும் ஒருவர் எதிர்கொள்ள வேண்டி யிருக்கும். ஈரமான மணல் சாலையில் இப்போது ஜென் சென்று கொண்டிருந்தான். இலையுதிர் காலக் காற்றின் ஊளை அவனைத் தெளிவாக்கியது. அவர்கள் ஓநாய்கள் இருக்கக்கூடிய ஓரிடத்துக்குச் செல்ல வேண்டுமென்றும், அதேசமயம் அந்த

இடம் ஓநாய்கள் சுலபமாகத் தப்பிச் செல்வதற்குத் தோதானதாக இருக்க வேண்டுமென்றும் ஜென் முடிவுக்கு வந்தான்.

பின்னிருக்கையிலிருந்த பாவோவை நோக்கித் திரும்பினான். ‘‘ஓநாய்கள் எங்கிருக்குமென்று எனக்குத் தெரியும். ஆனால் அங்கு போக வண்டி உதவாது. அது குன்றுகளும் நாணல் செடிகளும் மிகுந்த இடம்.’’

பாவோ அவனை உற்றுப் பார்த்தார். ‘‘என்னிடம் உன் விளையாட்டுகளைக் காட்டாதே. வருடத்தின் இந்தச் சமயத்தில் நாணல் புதர்ப் பகுதிகளில் கொசுக்கள் அடர்த்தியாக மிகுந்திருக்கும். அதனால் ஓநாய்கள் அங்கிருக்காது. கடந்த ஆறு மாதங்களாக ஓநாய் வேட்டையில் ஈடுபட்டிருக்கும் எனக்கு இது தெரியாதென்று நினைக்கிறாயா?’’

ஜென் அவனைத் திருத்திக்கொண்டான். ‘‘நான் என்ன சொல்கிறேன் என்றால், நம்மால் மலைகளுக்குள்ளோ, நாணல் பகுதிக்குள்ளோ நுழைய முடியாது. அதனால் நாம் மணல் குன்றுகளும், பெரிய சரிவுகளும் கொண்ட பகுதிக்குத்தான் போக வேண்டும். அங்கு அவ்வளவாகக் கொசுக்கள் இருக்காது.’’

பாவோ, அவனை அவ்வளவு சுலபமாக விடுவதாக இல்லை. ‘‘மணல் குன்றுகளில் இளம் குதிரைகளுக்கு நேர்ந்த கதிக்குப் பின்பு, குதிரை மேய்ப்பர்கள் ஓநாய்களை விரட்டிச் சென்றனர். நேற்று நாங்கள் அங்கு வண்டியில் திரிந்தபோது, நாங்கள் ஒரு ஓநாயைக்கூடப் பார்க்கவில்லை. இன்று உன்னுடைய திறமைகளை எங்களால் பயன்படுத்திக்கொள்ள முடியாதென்றே தோன்றுகிறது. அதனால் கவனமாகக் கேள். நான் சொன்ன வார்த்தையிலிருந்து மாறப் போவதில்லை. நாங்கள் நேற்று ஒரு ஓநாயைக்கூடக் கொல்லவில்லை; அதனால் நாங்கள் மிகவும் கவலை அடைந்திருக்கிறோம்.’’ அவர் தன்னுடைய சிகரெட்டை இழுத்துப் புகையை ஜென்னுடைய தலைக்குப் பின்னால் விட்டார்.

அதிகார வர்க்கத்தின் கீழ்நிலையிலிருந்து வெகுதூரம் மேலேறி வந்திருக்கிற அவருடைய சாமர்த்தியத்துக்கு முன், அவனால் தாக்குப் பிடிப்பது மிகவும் சிரமமென்பதை ஜென் உணர்ந்தான். ‘‘இன்னொரு மணல் பிரதேசம் எனக்குத் தெரியும்’’ என்றான் ஜென். ‘‘சாகனூல் மலைகளுக்கு வடமேற்கில் அது

இருக்கிறது. அப்பகுதி மணல் பாங்கானது; ஆனால் அங்கு எலிகளும், பொந்து நாய்களும், மர்மோட்டுகளும்கூட இருக்கின்றன. இப்போது ஓநாய்களுக்கு சாப்பிடக் குதிரைகள் இல்லாததால், சிறு விலங்குகள் ஏகமாய் இருக்கக்கூடிய இடங்களுக்குச் செல்வதைத் தவிர அவற்றுக்கு வேறு வழி இல்லை.''

மேய்ச்சல் பிரதேசத்தின் வடமேற்கு மூலைக்கு அவர்களைக¢ கூட்டிச் செல்வதென்று ஜென் முடிவெடுத்தான். அங்கு கொசுக்கள் குறைவு. ஆனால் அது எல்லைக்கு மிக அருகில் இருப்பதால், அது குதிரை மேய்ச்சலுக்கான நல்ல இடம் என்றபோதிலும் மேய்ப்பர்கள் தங்களுடைய குதிரைகளை அங்கு ஓட்டிச் செல்வதில்லை. அங்கு இராணுவ வீரர்களால் ஓநாய்களைப் பார்க்க முடியும் என்றாலும், அவை சுலபமாக எல்லையைக் கடந்து தப்பிச் சென்றுவிடுமென்று ஜென் நினைத்தான்.

அவனுடைய யோசனையை பாவோ ஏற்றுக்கொண்டார். அவர் புன்னகைத்தபடியே, ''நீ சொல்வது சரியாகத்தானிருக்கும்'' என்றார். ''எனக்கு ஏன் அது தோணவில்லை? ஓல்டு லியு, வடக்கு நோக்கிச் செல்லுங்கள். இன்று நாம் அங்குதான் போகப் போகிறோம்.''

ஜென் சொன்னான், ''நாம் ஓநாய்களைக் கொல்ல விரும்பினால் நடந்துபோவதுதான் நல்லது. இந்த வண்டிகள் அதிகமாக சத்தமிடுகின்றன. அதைக் கேட்டவுடன் ஓநாய்கள் புல் புதர்களுக்குள் ஓடிவிடும். இந்த வருடம் நன்றாக மழை பெய்திருப்பதால் புல் நல்ல உயரமாக வளர்ந்திருக்கும்; அதனால் அவை அதற்குள் சுலபமாக மறைந்துகொள்ளும்.''

உடனே பணி அதிகாரி சூ, ''நீ ஓநாயை மட்டும் காட்டினால் போதும்; மீதியை நான் பார்த்துக்கொள்கிறேன்'' என்றார்.

ஜென், தான் பெரும் தவறு செய்துவிட்டதாக உணர்ந்தான். அவர்கள் வடமேற்குத் திசையில் விரைந்தார்கள். ஒரு மேய்ச்சல் பிரதேசத்திலிருந்து இன்னொரு மேய்ச்சல் பிரதேசத் திற்குப் பருவ காலத்துக்கேற்ப நகர்வதற்கு வசதியாக மேய்ப்பர் களால் உருவாக்கப்பட்டிருந்த மிகப் பழமையான பாதையில் சென்றுகொண்டிருந்தார்கள். அருமையான புல் வாசனை அவர்களுடைய மூக்கைப் பலமாகத் துளைத்தது.

இலையுதிர் காலப் புல் மற்றும் பூக்களின் கிளர்ச்சியூட்டும் நறுமணத்தை ஜென் ஆழமாக சுவாசித்தான். ஆட்டுக்குட்டிகளின் பிறப்பிற்காக அவர்கள் இங்குதான் திரும்ப வருவார்கள். எழுபது சதவீத வருமானம் கம்பளி மற்றும் ஆடுகளின் விற்பனையால் வருவதென்பதால், பிறப்பிற்கான புல்வெளிப் பிரதேசம் ஒரு புனிதமான இடமாகும்; அது வாழ்வின் ஆதாரம். செல்லும் வழியில் தென்பட்ட அருமையான புல்வெளியை அவன் உன்னிப்பாகப் பார்த்தான்; மிகவும் கவனமாகப் பயிரிடப்பட்ட கோதுமைப் பயிர்களைப் போலக் காணப்பட்டது. ஓநாய்கள் மீதான நன்றியுணர்வு அவனிடம் எழுந்தது. ஓநாய்கள் இல்லாவிட்டால், மான்களாலும், காட்டு முயல்களாலும், எலிகளாலும் இந்த நறுமணப் புல்வெளி பாழ்பட்டுப் போயிருக்கும்.

ஜென்னால் அவனுடைய எண்ணவோட்டத்தைத் தெரிவிக்காமல் இருக்க முடியவில்லை. ‘‘பாருங்கள், எவ்வளவு அருமையாக இந்தப் புல்வெளி பாதுகாக்கப்பட்டிருக்கிறது?’’ என்று பணி அதிகாரி சூவிடம் சொன்னான். ‘‘ஆட்டுக்குட்டிகளின் பிரசவத்திற்காக நாங்கள் இளவேனிற் பருவத்தில் இங்கு வந்தபோது, வெளிப்புற மங்கோலியாவிலிருந்து லட்சக்கணக்கான மான்கள் சூறாவளியென இந்த இடத்தைச் சூழ்ந்திருந்தன. அவற்றை எங்களால் விரட்ட முடியவில்லை, துப்பாக்கிகளைப் பயன்படுத்தியும்கூட. பகலில் அவை ஓடிப் போய்விட்டால் இரவில் வந்து புல்லைத் துவம்சம் செய்துவிடும். அதிர்ஷ்டவசமாக ஓநாய்கள் வந்தன; சில நாட்களில் மான்கள் காணாமல் போயின. ஓநாய்கள் மட்டும் இல்லாவிட்டால், பெண் ஆடுகளுக்குப் புல் இருக்காது; புதிதாகப் பிறந்த குட்டிகளுக்குப் பால் இருக்காது. லட்சக்கணக்கான ஆடுகளை நாம் இழந்துவிட்டிருப்போம். விலங்குகளுக்கான உணவைப் பயிர் செய்வது, விவசாயத்திலிருந்து மாறுபட்டது. ஒரு பேரழிவின்போது, ஒரு விவசாயி அதிகபட்சமாக ஒரு வருடத்தின் பயிர்களை இழக்க நேரிடும். ஆனால் இங்கு ஒரு பேரழிவு ஏற்பட்டால் எட்டு அல்லது பத்து வருடங்களை இழக்க நேரிடும்; சமயங்களில் மேய்ப்பர்களின் வாழ்நாள் வருமானத்தையே இழக்க வேண்டியிருக்கும்.’’

சூவின் பருந்துக் கண்கள் மேய்ச்சல் நிலத்தை அலசியபடி இருந்தபோதும்கூட, அவர் தலையசைத்தார். சிறிது நேரத்துக்குப் பிறகு அவர் சொன்னார், ‘‘மான்களைக் கொல்ல உங்களால் எப்படி ஓநாய்களைச் சார்ந்திருக்க

முடிகிறது? அது மிகவும் பிற்போக் கானது. மேய்ப்பர்களிடம் இருப்பது தரம் குறைந்த துப்பாக்கிகளாக இருக்கும்; அவர்களுடைய குறி பார்க்கும் திறனும் போதாததாக இருக்கும்; டிரக்குகளும் இல்லை. அடுத்த இளவேனிற் காலத்தில் எங்களைக் கவனி. எவ்வளவு மான்கள் இருந்தாலும் அவை எங்களுக்கு இணையாகாது. இரவில் வண்டியின் முன்விளக்கு களைப் போட்டுவிட்டால் போதும்; அவை இருட்டுக்குப் பயப்படும்; அதனால் அவை வெளிச்சத்தைச் சுற்றிக் குழுமும். பின் வண்டியை ஓட்டியபடி, சுட்டுக்கொண்டே போக வேண்டியது தான். ஒரு இரவில் நூற்றுக்கணக்கான மான்களைக் கொன்று விடலாம். ஆக, இங்கு மான்கள் இருக்கின்றன. மிகப் பெரிய விசயம். அவை நிறைய இருந்தால் ரொம்ப நல்லது. தலைமை அலுவலக மக்களுக்கும், விவசாய உற்பத்திப் படைப் பிரிவினருக்கும் நன்றாக இறைச்சி கிடைக்கும்.''

''அங்கே பாருங்கள்.'' அவரது இடது பக்கமாகக் கை காட்டி, பாவோ மெதுவாகச் சொன்னார்.

ஜென் அவனுடைய தொலைநோக்கியால் பார்த்துவிட்டு, ''நரி. நாம் அதை வேட்டையாடலாம்'' என்றான்.

பாவோ கவனமாகப் பார்த்துவிட்டு, ''ஆம்'' என்றார். ''அது வெறும் நரி. அதை விடுங்கள்.'' பின், தன்னுடைய துப்பாக்கியை உயர்த்திப் பிடித்திருந்த சூவிடம், ''சுடாதீர்கள். ஓநாய்களின் காதுகள் மிகக் கூர்மையானவை. அவை உஷாராகிவிட்டால் நாம் வெறும் கையோடுதான் வீடு திரும்ப வேண்டியிருக்கும்'' என்றார்.

''இது நம்முடைய அதிர்ஷ்ட நாள்'' என்று மகிழ்ச்சியோடு சூ சொன்னார். ''நரிகள் எங்கு இருக்கின்றனவோ, அங்கு ஓநாய்கள் இருக்கும்.''

மணல் பாங்கான மேய்ச்சல் பகுதியை அவர்கள் நெருங்கத் தொடங்கியதும் அவர்கள் பல வன உயிரினங்களைப் பார்த்தனர்: மண் குருவிகள், மண் பறவைகள், பாலை நரிகள் மற்றும் வயல் எலிகள். தூரத்தில் தெரிந்த ஒரு மேட்டைச் சுட்டிக்காட்டி ஜென் சொன்னான், ''அந்த மேட்டையடுத்துதான் மணல்பகுதி இருக்கிறது. ஒரு ஊற்றுடன் கூடிய மிகப்பெரிய புல்வெளி இங்கு இருந்ததாக மூத்த மேய்ப்பர்கள் கூறுவார்கள். ஆனால் பல வருடங்களுக்கு

முன்பு ஓலோன்புலாக்கில் மிக மோசமான வறட்சி ஏற்பட்டதால், ஊற்று தவிர பிற ஏரிகளும் ஆறுகளும் குளங்களும் வறண்டுபோய் விட்டிருக்கின்றன. அதனால் கால்நடைகள் தண்ணீருக்காக இங்கு ஓட்டி வரப்பட்டிருக்கின்றன. விடியலில் தொடங்கி இருட்டுவது வரை, ஏகப்பட்ட கால்நடைகள் வரிசையில் நின்று தண்ணீர் குடித்தும் புல் மேய்ந்துமிருக்கின்றன. அதையடுத்து இரண்டே வருடங்களில் இந்தப் புல்வெளிப் பிரதேசம் மணல் பிரதேசமாகி விட்டது. அதிர்ஷ்டவசமாக ஊற்று வறண்டு விடவில்லை. கொஞ்சம் கொஞ்சமாய் புல் மீண்டும் முளைக்கத் தொடங்கியது. ஆனால் அது முன்னிருந்த நிலையை அடைவதற்கு நாம் பல தலைமுறைகள் காத்திருக்க வேண்டும். மேய்ச்சல் நிலமானது, அதன் தாங்கும் சக்திக்கு மீறி அதை ஆக்கிரமிக்கும்போது அது பாலை நிலமாகிவிடுகிறது.''

ஒரு எலி கிறீச்சிட்டபடி, சக்கரங்களிலிருந்து விலகி மிக வேகமாக ஓடியது. ''தாங்கும் சக்தி என்பது இந்த எலிகளையும் சேர்த்துத்தான்'' என்றான் ஜென். ''கால்நடைகளை விடவும் மிக மோசமாக நாசம் செய்வது எலிகள்தான். மேய்ச்சல் நிலத்தின்மீது அதிக சுமை இல்லாமல் பார்த்துக்கொள்வது ஓநாய்கள்தான். நீங்கள் ஒரு ஓநாயைக் கொன்றால், அதன் வயிற்றைத் திறந்து அதிலிருப்பவற்றை நான் உங்களுக்குக் காட்டுகிறேன். இந்தப் பருவத்தில், அதில் நீங்கள் பிரதானமாக எலிகளையே பார்க்க முடியும்.''

''ஓநாய்கள் எலிகளைத் தின்னும் என்று எனக்குத் தெரியாது'' என்றார் சூ.

''நான் வளர்க்கும் ஓநாய்க்குட்டி அவற்றை விரும்பிச் சாப்பிடும். வால்கள் உட்பட எல்லாவற்றையும் அது விழுங்கிவிடும். எலிகளினால் மேய்ச்சல் நிலத்துக்குப் பேரழிவு ஏற்படாததற்கு, மேய்ப்பர்கள் எல்லா ஓநாய்களையும் கொல்வதில்லை என்பதுதான் காரணம். நீங்கள் இப்போது அதைச் செய்தால், எலிகளின் கொட்டத்தில் மேய்ச்சல் நிலத்துக்குப் பேரழிவு ஏற்படும்.''

பாவோ அவனைப் பேசவிடாமல் தடுத்தார். ''நீ உன் கவனத்தை ஓநாய்களைக் காண்பதில் செலுத்து.''

அவர்கள் மேட்டை நெருங்கியபோது, சூ பதற்றத்தோடு காணப்பட்டார். அவர், ஓட்டுநரிடம் மேற்கில் போகும்படி கூறினார். ''ஓநாய்கள் இங்கு இருக்குமென்றால், நாம் நேரடியாக அதற்குள் போக வேண்டாம். முதலில் நாம்

காவல் புரியும் ஓநாய்களைக் குறி வைக்க வேண்டும்.'' கிழக்கிலிருந்து மேற்காக விரிந்திருந்த ஒரு மேட்டில் அவர்கள் சென்றார்கள். அந்தக் குறுகலான எருதுவண்டிப் பாதையின் இடது பக்கம் மலைகளாலும், வலது பக்கம் மணல் குன்றுகளாலும் இருபுறமும் சூழப்பட்டிருந்தது. அதிக சக்திவாய்ந்த பைனாகுலர் மூலம் இரண்டு பக்கமும் சூ அலசிப் பார்த்துக்கொண்டு வந்தவர், தணிந்த குரலில், ''குன்றின் வலதுபக்கம் இரண்டு ஓநாய்கள் இருக்கின்றன'' என்றார். மூன்று அல்லது நான்கு லீ தூரத்தில இரண்டு பெரிய ஓநாய்கள் மேற்குப் பக்கமாகச் சென்றுகொண்டிருப்பதை ஜென்னும் பார்த்தான்.

''அங்கே போக வேண்டாம்'' என்று ஓல்டு லியூவிடம் சூ சொன்னார். ''நாம் இந்தப் பாதையிலேயே வேகமாகச் செல்லலாம். ஓநாய்களுக்கு இணையாக நீங்கள் வண்டியை ஓட்டிச் சென்றால், நான் பக்கவாட்டிலிருந்து சுட வசதியாக இருக்கும்.''

''புரிகிறது'' என்றார் ஓல்டு லியூ. ஓநாய்கள் சென்று கொண்டிருக்கும் திசையில் வண்டியைத் திருப்பிக் கொஞ்சம் வேகமாக ஓட்டினார்.

அவருக்கு வேட்டை ஞானமிருப்பது தெரிந்தது. அவ்வாறாக, ஓநாயை நோக்கிச் செல்வது, தூரத்தைக் குறைப்பதோடு மட்டுமல்லாமல், அவர்கள் ஏதோ தம் போக்கில் கடந்து செல்கிறார்கள் என்ற மாயத்தோற்றத்தை ஓநாய்களிடம் அது ஏற்படுத்தும். எல்லை நிலைய ரோந்து வண்டிகள் அப்பகுதியில் செல்வது சகஜமென்பதால், ஓநாய்கள் அவற்றுக்குப் பழக்கப்பட்டிருந்தன.

ஓநாய்கள் வேகமெடுக்காததைக் கவனித்த ஜென்னின் இதயம் கடும் வேதனையடைந்தது. அவை இம்முறை சிக்கப் போகின்றன என்பதை அவன் உணர்ந்தான். இவை எல்லையோர ரோந்து வண்டிகள் அல்ல; இவர்கள் ஓநாய்களைக் கொல்வதற்காக வந்திருப் பவர்கள். இவர்களுடைய குறி பார்க்கும் திறனும், துப்பாக்கியின் ஆற்றலும் மேய்ப்பர்களை விடப் பல மடங்கு மேலானவை.

வண்டிகள், கிட்டத்தட்ட ஓநாய்களுக்கு இணையாகச் சென்றன. தூரமும் ஆயிரத்து ஐநூறு அடியிலிருந்து எண்ணூறு அடிக்குள் குறைந்துவிட்டிருந்தது.

ஓநாய்கள் சற்றே பதற்றமடைந்து, கொஞ்சம் வேகத்தைக் கூட்டின. இருவரும் குறி பார்த்தனர்.

ஜென்னின் இதயம் அவனுடைய தொண்டைக்குத் தாவுவதுபோல் உணர்ந்தான்.

அவர்கள் கிட்டத்தட்ட ஓநாய்களை நெருங்கிவிட்டார்கள்; தூரமும் நானூறு அல்லது ஐநூறு அடிக்குள் குறைந்துவிட்டிருந்தது. ஓநாய்கள் நின்று, வண்டிகளைப் பார்த்தன. அப்போது அவை துப்பாக்கிகளைக் கண்டதும் சரிவை நோக்கிப் பாய்ந்து சென்றன. Ôபாங் பாங்.Õ சுடப்பட்ட சத்தத்தை ஜென் கேட்டான்; இரண்டு ஓநாய்களும் கிட்டத்தட்ட ஒரே சமயத்தில் கீழே விழுவதைப் பார்த் தான். ‘‘அருமையான குறி’’ என்று பரவசத்தோடு கூக்குரலிட்டார் பாவோ.

ஜென் விதிர் விதிர்த்துப் போனான். ஓடும் வண்டிகளிலிருந்து இருவர், முதல் முயற்சியிலேயே, குறி பார்த்து இலக்கை அடிப்பார்களென்று அவனோ, ஓநாய்களோ கொஞ்சமும் கற்பனை செய்திருக்க மாட்டார்கள். ஆனால் அந்தத் துல்லியமான துப்பாக்கி வல்லுனர்களுக்கு, இது ஒரு பொருட்டே இல்லை. பணி அலுவலர் சூ, ஓல்டு லியுவுக்கு உத்தரவிட்டார். ‘‘மணல் பகுதிக்கு விரைந்து போ. அதன்மீது ஏறு.’’ பிறகு, அடுத்த வண்டிக்கு சைகை செய்தார். அவர்கள் மணல்குன்றை நோக்கி விரைந்தார்கள்.

ஓல்டு லியு குன்றின்மீது வண்டியை ஓட்டினார்; மணல் பாங்கான அந்த மேய்ச்சல் நிலத்தின் உயரமான பகுதியை நோக்கி அவர் சென்றார். சூ எழுந்து நின்று அப்பகுதிகளை நோட்டம் விட்டார். இருவேறு குழுக்களாக இளம் ஓநாய்கள் தொலைவில், வடமேற்கை நோக்கியும் வடக்கை நோக்கியுமென ஓடிக் கொண்டிருந்தன. ஜென் தன்னுடைய தொலைநோக்கியில் பார்த்தபோது, வடக்கே சென்ற குழுவில் நாலு அல்லது ஐந்து பெரிய ஓநாய்கள் இருப்பது தெரிந்தது; அடுத்த குழுவில் அந்த வருடத்தில் பிறந்த எட்டு அல்லது ஒன்பது நடுத்தர ஓநாய்கள் தென்பட்டன.

‘‘வடக்கு நோக்கிச் செல்லும் கூட்டத்தை நாம் குறி வைப்போம்’’ என்றார் சூ. பின் திரும்பி, பின்னால் வரும் வண்டியை வடமேற்குத் திசை நோக்கிச் செல்லுமாறு சைகை செய்தார். இரண்டு வண்டிகளும் பிரிந்து விரைந்தன.

மணல்பாங்கான மேய்ச்சல் நிலமும், அதன் மிதமான குன்றுகளும் வண்டிகளுக்கு மிகவும் தோதாக இருந்தன. ‘‘இறுக்கமாகப் பிடித்துக்கொண்டு, என்னைக் கவனியுங்கள்’’ என்றார் ஓல்டு லியு. ‘‘துப்பாக்கியால் சுடாமலேயே நான் ஒன்றை வீழ்த்துகிறேன், பாருங்கள்.’’

அவர்கள் சென்ற வேகத்தைப் பார்த்தால், அவர்கள் பறப்பது போலிருந்தது. மேய்ச்சல் நிலத்தில் மான்களால் மட்டுமே இந்த வேகத்தோடு போட்டி போட முடியும். ஓநாய்களோ, குதிரைகளோ கூட இந்த வேகத்துக்கு ஈடு கொடுக்க முடியாது. இரண்டு வண்டி களும் ஓநாய்க் கூட்டங்களை நோக்கி, மரணத்தைப் போலப் பின்தொடர்ந்தன. இருபது நிமிடங்களில், எள் விதைகள் போலத் தெரிந்த ஓநாய்கள் பச்சைப் பட்டாணிகள் போல் தெரிய ஆரம்பித்தன. பின்னர் மெதுவாக சோயாபீன்ஸ் அளவில் தெரிந்தன. ஆனால் சூ அவற்றை சுடாதது ஜென்னுக்குப் புதிராக இருந்தது. பச்சைப் பட்டாணி அளவில் தெரிந்த பருந்தை சுட்டு வீழ்த்த முடிந்தவர், ஏன் இப்போது சுடவில்லை?

‘‘இப்போது சுடலாமா?’’ என்று பாவோ கேட்டார்.

‘‘இல்லை, இது ரொம்ப தூரம்’’ என்றார் சூ. ‘‘இப்போது நாம் சுட்டால் கூட்டம் சிதறிவிடும்., நாம் இன்னும் கொஞ்சம் நெருங்கிவிட்டால் நமக்குக் கூடுதலாக இரண்டு கிடைக்கும்; மேலும் தோல்களும் சேதமடையாது.’’

‘‘அனேகமாக, இன்று நமக்கு ஆளுக்கொன்று கிடைக்கும்’’ என்று பரவசத்தோடு சொன்னார் ஓல்டு லியு.

‘‘ஓட்டுவதில் மட்டும் கவனம் செலுத்துங்கள்’’ என்றார் சூ. ‘‘தவறினால் நாம் ஓநாய்களுக்கு உணவாகிவிடுவோம்.’’

அவர்கள் ஒரு மணல் குன்றைக் கடந்தபோது, திடீரென ஒரு பிரமாண்டமான எருதுவின் சடலம் ஒரு சிறிய மணல் மேட்டில் அவர்களுக்கு முன் கிடந்தது. அதனுடைய கொம்புகள் முறிந்திருந்தன. ஓநாய்களால் அதைத் தாவிச் செல்ல முடியும். ஆனால் ஓல்டு லியுவுக்கு அது ஒரு பெரும் தடையாக இருந்தது; அவர் தன்னுடைய கைச் சக்கரத்தைச் சுழற்றியபோது, வண்டி ஒரு பக்கமாகச் சாய்ந்து, வலதுபக்க டயர்கள் தரையை விட்டு விலகின. அமர்ந்திருந்தவர்களும் இருக்கைகளை விட்டு விலகி, கிட்டத்தட்ட வண்டிக்கு

வெளியே விழப் பார்த்தார்கள்; அவர்கள் பயத்தில் கத்தினார்கள். அவர்கள் எலும்புக்குவியலைத் தேய்த்தபடிக் கடந்தார்கள்.

ஜென், வண்டி நேராகி விட்ட பின்பும், இன்னமும் சரிந்திருந்தான். பாவோவின் முகம் சாம்பல் நிறமாகிவிட்டிருந்தது. ‘‘மெதுவா, மெதுவா’’ என்று அவர் கத்தினார்.

‘‘இல்லை, வேகமெடு’’ என்று சூ கூவினார். ஜென் அங்கு ஆடு மேய்த்திருந்ததால் அவனுக்கு அந்தப் பகுதி நன்கு தெரியும். ‘‘அடுத்து வரும் தரை தாழ்வாகவும், நிறைய களைச்செடிகளோடும் இருக்கும். வண்டி சாய்ந்துவிடும். எனவே மெதுவாகப் போங்கள்’’ என்றான் ஜென்.

ஆனால் அவனுடைய வார்த்தைகள் சூவிடம் எவ்விதத் தாக்கத்தையும் ஏற்படுத்தவில்லை. அவர் இரும்புச் சட்டத்தை நன்றாகப் பற்றிக்கொண்டு, முன்னால் பார்த்தபடி, ‘‘வேகம், வேகம்’’ என்றார்.

வண்டி வேகமெடுத்தது. அவ்வப்போது பாதையிலிருந்து விலகியும், இரண்டு சக்கரங்களால் சாய்ந்தும் சென்றது. ஜென்னும் இரும்புச் சட்டத்தை இறுகப் பற்றிக்கொண்டான்.

இந்த வெறி பிடித்த துரத்துதல் அடுத்த ஏழு அல்லது எட்டு லீ தூரத்துக்குத் தொடர்ந்தது. குச்சி போன்ற களைச்செடிகள் வளர்ந்திருந்த தாழ்வான நிலப்பகுதியை அடையும்வரை அது நீடித்தது. குற¤ வைக்கும் எல்லைக்குள் அவர்கள் வந்துவிட்டிருந் தார்கள். ‘‘வண்டியை சுழற்றித் திருப்பு’’ என சூ கத்தினார். லியு வண்டியைச் சுழற்றி வட்டமடித்தார். ஓநாய்களைக் குறி வைப் பதற்குத் தோதாக சூவுக்கு அது அமைந்தது. ‘பாங்!’ பெரிய ஓநாய், தலையில் அடிபட்டுக் கீழே விழுந்தது. ஓநாய்க் கூட்டம் சிதறியது; அதற்குள் அடுத்து குறி பார்த்து சுட்டதில் இரண்டாவது ஓநாயும் விழுந்தது. அதேசமயத்தில், எஞ்சிய ஓநாய்கள் காய்ந்த புதர்களுக்குள் ஓடி, எல்லையைக் கடந்து புல்வெளிக்குள் மறைந்தன.

வியர்த்திருந்த இமைகளைத் துடைத்தபடியே சூ, ‘‘இந்த ஓநாய்கள் மிகவும் சாமர்த்தியமானவை. இல்லாவிட்டால் நான் இன்னும் சிலவற்றையாவது சுட்டுத் தள்ளியிருக்க முடியும்.’’

பாவோ இரண்டு கட்டை விரல்களையும் நிமிர்த்தி அவரை வாழ்த்தினார். ‘‘அற்புதம். முப்பது நிமிடங்களுக்குள் நான்கு ஓநாய்கள். நானும் ஆறு மாதங்களாக இதற்கு முயற்சி செய்து வருகிறேன். இதுவரை ஒன்றைக்கூட என்னால் கொல்ல முடிந்த தில்லை.’’

அப்போதும் உத்வேகம் தணியாதிருந்த சூ, ‘‘இங்கு நிலவியல் மிகவும் சிக்கலானதாக இருக்கிறது. ஓநாய்களின் கொரில்லா யுத்தத்துக்கு மிகவும் உகந்த இடமாக இது இருக்கிறது. அவற்றை ஒழிக்க முடியாது என்பது உண்மைதான்.’’

இறந்துகிடந்த ஓநாய்களை நோக்கி வண்டி மெதுவாகச் சென்றது. இரண்டாவது ஓநாய் மார்பில் சுடப்பட்டிருந்ததால், அது இறந்து கிடந்த இடத்தைச் சுற்றியிருந்த புற்களில் அதன் ரத்தம் தோய்ந்திருந்தது. பாவோவும் லியுவும் சேர்ந்து பெரிய ஓநாயின் கனத்த சடலத்தைத் தூக்கி வந்து வண்டியின் பின்னால் போட்டார்கள். ஓல்டு லியு, அந்த ஓநாயை உதைத்தார். ‘‘இதன் இறைச்சி பத்து பேருக்கு வரும்.’’ இரண்டு மிகப் பெரிய சாக்குப் பைகளை எடுத்து, இரண்டையும் அவற்றுள் திணித்தார்கள்.

ஏதாவது ஒரு ஓநாயின் வயிற்றைக் கீறி, அதனுள் என்ன இருக்கிறதென்பதை அவர்களுக்குக் காட்ட ஜென் விரும்பினான். ஆனால் படை வீரர்களுக்கு அங்கு வைத்துத் தோலை உரிப்பதில் ஆர்வம் இருக்கவில்லை. ‘‘நீங்கள் உண்மையிலேயே ஓநாய்க் கறி சாப்பிடும் யோசனையில் இருக்கிறீர்களா?’’ என்று அவன் கேட்டான். “அது புளிக்கும். மேய்ப்பர்கள் ஒருபோதும் அதை சாப்பிடுவதில்லை.’’

‘‘மடத்தனம்’’ என்றார் லியு. ‘‘ஓநாய்க் கறி புளிக்காது, அது நாய்க்கறி போலவே இருக்கும். நான் சாப்பிட்டிருக்கிறேன். அதை சரியாக சமைக்கத் தெரிந்தால் நாய்க்கறியை விட ருசியாக இருக்கும். இது எப்படி கொழுத்திருக்கிறது பார்? ஓநாயை சமைப்பதும் நாயை சமைப்பது மாதிரிதான். அதை ஒருநாள் முழுக்க குளிர்ந்த நீரில் வைத்திருக்க வேண்டும்; அப்போது அதன் வாடை போய்விடும். பிறகு, அதோடு பூண்டு, இஞ்சி, மிளகாய் மற்றும் மிளகுத்தூளைச் சேர்த்து சில மணி நேரம் வேகவைக்க வேண்டும். வாசனை பிரமாதமாக இருக்கும்.’’

‘‘இங்கு மேய்ப்பர்கள் வான்புதை என்ற ஒரு வழக்கத்தை மேற்கொள்கிறார்கள்’’ என்றான் ஜென். ‘‘ஒருவர் இறந்துவிட்டால், அவருடைய குடும்பத்தார் அந்த உடலை ஓநாய்களுக்கு உணவாக ஒரு இடத்தில் கொண்டுபோய் போடுகிறார்கள். மனித உடலை சாப்பிட்ட ஓநாய்களைச் சாப்பிட நீங்கள் விரும்புகிறீர்களா?’’

லியு அதைப் பொருட்படுத்தவில்லை. ‘‘அந்த விசயமெல்லாம் எனக்குத் தெரியும். அதன் வயிறையோ குடல்களையோ சாப்பிடாத வரையில் சரிதான். நாய்கள் மனிதக் கழிவுகளைச் சாப்பிடுகின்றன; ஆனால் யாராவது நாய்க்கறியை அசிங்கமென்று சொல்வதை நீ கேட்டிருக்கிறாயா? காய்கறிகளுக்கு உரமாகச் சாணங்களைப் போடுகிறோம்; அதனால் அவை இழிவானதாகிவிடுமா? சீனர்களாகிய நாம் நாய்க்கறியையும் காய்கறிகளையும் விரும்பிச் சாப்பிடுகிறோம்.’’

சூ சிரித்தார். ‘‘நான் இங்கு வருவதற்கு முன்பு, எங்கள் படைப் பிரிவின் தலைவர்கள் என்னோடு ஓநாய்க் கறி சாப்பிட விருப்பம் தெரிவித்துள்ளார்கள். அதனால் இன்றிரவு அவர்களுக்கு இவற்றை நான் கொண்டு போயாக வேண்டும். பிராங்கைட்டிஸ் நோயை அது குணப்படுத்துவதாகப் பலர் சொல்கிறார்கள். அதனால் பாதிக்கப்பட்டவர்களும் ஒத்துக்கொள்கிறார்கள். நான் ஒரு மருத்துவர் போல. ஓநாய்களைக் கொல்வது அருமையான பணி. முதலாவதாக, மக்களை அழிவிலிருந்து நாம் காப்பாற்றுகிறோம்; இரண்டாவது, நமக்குத் தோல் கிடைக்கிறது; மூன்றாவது, நோயாளிகளைக் குணப்படுத்துகிறோம்; நான்காவதாக, இறைச்சிக் காக ஏங்கும் மக்களுக்கு உணவளிக்கிறோம். ஒரே கல்லில் நான்கு பறவைகள். ஒன்றில் நான்கு!’’

ஓநாய்களைக் கொல்லும் அவர்களுடைய உத்வேகத்தை அவனால் ஒருபோதும் குலைக்க முடியாதென்பதை ஜென் உணர்ந்தான். அவற்றின் வயிற்றுக்குள் செத்த எலிகள் நிறைந்திருப்பதை ஒருவேளை அவனால் அவர்களுக்குக் காட்ட முடிந்தாலும் அவர்களுடைய வேகம் குறையப்போவதில்லை.

லியு வண்டியை அவர்கள் முதலில் சுட்டுக்கொன்ற ஓநாயின் இடத்துக்கு ஓட்டிச் சென்றார். முதல் ஓநாயின் தலையில் பின்னா லிருந்து குண்டு பாய்ந்திருந்ததால் அதன் தலை சிதறியிருந்தது; ரத்தம் தரையில்

கொட்டிக்கொண்டிருந்தது. அதன் கழுத்திலோ மார்பிலோ வெண்கோடு எதுவும் தென்படாததில் ஜென் நிம்மதி அடைந்தான். அது ‘வெள்ளை ஓநாய் அரசன்’ இல்லை. ஆனால் நிச்சயம் வழி நடத்தக்கூடிய ஆண் தலைமை ஓநாய்களில் ஒன்று என அவன் அறிந்தான். இந்த வண்டி, துல்லியமாகக் குறி வைப்பவர்கள் மற்றும் அவர்களுடைய ஆயுதங்கள் பற்றி இதுவரை அது ஏதும் அறிந்திருக்காததுதான் பிரச்சனை.

புல் கொத்துகளால் ரத்தத்தைத் துடைத்துவிட்டு, லியுவும் பாவோவும் அதை சந்தோசமாக எடுத்துக்கொண்டுபோய் வண்டியின் பின்கதவருகில் போட்டுக் கட்டினார்கள். ‘‘இந்த ஓநாயின் தலை, இரண்டு வயது எருதுவின் தலையளவு உள்ளது’’ என்றார் லியு.

அவர்கள் வண்டியில் ஏறிக்கொண்டு, பணி அதிகாரி பாடெலை நோக்கிச் சென்றனர்.

இரு வண்டிகளும் சந்தித்துக்கொண்டன. ‘‘எங்களுக்கு எதுவும் கிடைக்கவில்லை. வில்லோ மரக் காட்டுக்குள் அவை ஓடிவிட்டன. எங்களால் நகர முடியவில்லை. நான் மூன்று முறை சுட்டும் ஒரு குட்டி மட்டும்தான் விழுநதது. அந்தக் கூட்டத்தில் பெண் ஓநாய்களும் குட்டிகளும்தான் இருந்தன’’ என்றார் பாடெல்.

சூ உணர்ச்சிவசப்பட்டவராக, ‘‘இங்கிருக்கும் ஓநாய்கள் பயங்கரமானவை. அவை, தப்பிப்பதற்கான சிறந்த வழியைப் பெண் ஓநாய்களுக்கும் குட்டிகளுக்கும் விட்டுவிடுகின்றன.’’

பாவோ உரக்கக் கூவினார். ‘‘மேலும் ஒன்று! வெற்றி, மகத்தான வெற்றி! இந்தப் புல்வெளிப் பிரதேசத்துக்கு வந்தபிறகு எனக்கமைந்த மிகவும் சந்தோசமான நாள் இதுதான். கடைசியில், என் கோபத்துக்குப் பழி தீர்த்தாகிவிட்டது. வாருங்கள், நாம் போய் ஏற்கெனவே கொன்ற இரண்டையும் எடுக்கலாம். நான் உணவும் மதுவும் கொண்டு வந்திருக்கிறேன். நாம் கொண்டாடலாம்.’’

ஜென் கீழே குதித்து, ஓநாய்க்குட்டியைப் பார்க்கப் போனான். சாக்கு மூட்டையை அவிழ்த்துப் பார்த்தான். அது அவனுடைய குட்டியைப் போலவே இருந்தது; ஆனால் அதைவிடப் பெரிதாக இருந்தது. அவனால் முடிந்த அளவு

சிறந்த உணவை அவன் கொடுத்திருந்த போதிலும், காட்டில் வாழ்வதை விட அது சிறியதாக இருப்பது அவனுக்கு ஆச்சரியமளித்தது. காட்டு ஓநாய்க்குட்டி, அதன் ஒரு வயதுகுள்ளாகவே முழுவதுமாக வளர்ந்து விடுவதோடு, வேட்டையாடவும் கற்றுக்கொண்டு, தன்னுடைய உணவைத் தானே அடைகிறது. ஆனால் அது தன்னுடைய வாழ்வின் தொடக்கத்திலேயே மனிதனின் கைகளால் இறந்துவிட்டது. இறந்த ஓநாய்க்குட்டியின் தலையை, அவனுடைய குட்டியைத் தொடுவது போல, தடவிக் கொடுத்தான்.

அவர்கள் தெற்காகச் சென்றார்கள். ஜென் திரும்பி, எல்லைப்பகுதி மேய்ச்சல் நிலத்தைப் பார்த்தபோது பரிதாப உணர்வு மேலெழுந்தது. ஒரு மணி நேரத்துக்குள்ளாக, ஆண் தலைமை ஓநாயும் மற்றொரு வழி நடத்தும் ஓநாயும், அவை இதற்குமுன் எதிர்கொண்டிராத தாக்குதல் மூலம் இறந்துவிட்டன. மற்றவை, எல்லையைக் கடந்து ஓடிவிட்டன; அவை இனி ஒருபோதும் திரும்பாமலேயே போகலாம். ஒரு வலுவான தலைமையில்லாமல் அவை எப்படித் தாக்குப் பிடிக்கும்? பில்ஜி ஒருமுறை, ‘‘ஓநாய்க் கூட்டம் அதன் பிராந்தியத்தை விட்டு நீங்கிவிட்டால், எஜமானனை இழந்த நாயைவிட மோசமாகிவிடும்’’ என்று கூறினார்.

அவர்கள் முதலில் சுட்டுத் தள்ளிய இடத்துக்குத் திரும்பினர். மிகவும் ஆற்றல்மிக்க அந்த ஓநாய்கள், தங்களுடைய ரத்தத்தின்மீது கிடந்தன. அதைப் பார்க்க சகிக்காது, ஜென் தனியாக நடந்து

சென்று புல்லின்மீது உட்கார்ந்துகொண்டான்; எல்லை தாண்டி, தொலை தூர வானத்தை வெறித்துப் பார்த்தான். ஓநாய் வேட்டைக்குச் சென்ற ஆட்களை ஜென் வழிநடத்திச் சென்றான் என்பதை பில்ஜி அறிந்தால் என்ன நினைப்பார்? அவனுக்கு ஓநாய்கள் பற்றி அவர் நிறைய கற்றுக் கொடுத்திருக்கிறார்; ஆனால் இப்போது அவன் அந்த அறிவை ஓநாய்களைக் கொல்வதற்குப் பயன்படுத்தி இருக்கிறான். முதியவரை அவன் எப்படி எதிர்கொள்ளப் போகிறானென்று அவனுக்குத் தெரியவில்லை. இரவில், இறந்துபோன சொந்தங்களைப் பார்ப்பதற்காக ஓநாய்கள் வரும். அப்போது அவை ரத்தக் கறைகளை மட்டுமே பார்க்கும். அந்த இரவில் அவற்றின் சோகமான ஊளைகளால் மேய்ச்சல் நிலம் நிறைந்திருக்கும்.

இரண்டு டிரைவர்களும் பெரிய கோணிப்பைகளைத் தூக்கிவந்து, இரண்டாவது வண்டியின் பின்னிருக்கையின் அடியில் போட்டார்கள். புல்தரையில் விரிக்கப்பட்டிருந்த பல பெரிய சாக்குப்பைகளின்மீது, அவர்கள் பல மேய்ச்சல்நில மதுப் புட்டிளையும், ஒரு பெரிய பை நிறைய மசாலாக் கடலையையும், ஒரு டஜன்

வெள்ளரிகளையும், இரண்டு டப்பாக்கள் மாட்டுக் கறியையும், மூன்று டப்பாக்கள் பன்றிக் கறியையும், ஒரு பாத்திரம் நிறைய ஆட்டிறைச்சியையும் பரப்பினார்கள். பாவோ சுங்காய் கையில் மது பாட்டில் இருந்தது; சூ, ஜென்னிடம் வந்து அவனை அங்கு இழுத்துக்கொண்டு போனார். பாவோ அவனுடைய தோளில் தட்டிக் கொடுத்தார். ''குட்டி ஜென், இன்று நீ நல்ல வேலை செய்தாய்'' என்றார். ''எனக்குப் பெரிய உபகாரம் செய்திருக்கிறாய். நீ இல்லாதிருந்தால், நம்முடைய வேட்டைக்காரர்களுக்கு அவர் களுடைய திறமைகளைக் காட்ட சந்தர்ப்பம் கிடைத்திருக்காது.''

நான்கு படைவீரர்களும், தங்களுடைய கோப்பையை உயர்த்தி, Ô'ஜென்னுக்காகÕ' என்றார்கள். ''குடி'' என்றார் சூ. ''இது உனக்காகத்தான். ஓநாய்கள் குறித்த உன் ஆய்வுக்கு நன்றிகள். நாங்கள் எங்கு இருக்க வேண்டுமோ அங்கு நீ எங்களைக் கூட்டிச் சென்றாய். இயக்குனர் பாவோ, கிடடத்தட்ட நூறு லீ தூரம் நேற்று எங்களைக் கூட்டிச் சென்றார்; ஆனால் நாங்கள் ஒரு ஓநாயைக் கூடப் பார்க்கவில்லை. வா. குடி. எங்கள் நன்றிகளை உனக்குச் சொல்ல நாங்கள் கடமைப்பட்டிருக்கிறோம்.''

ஜென்னின் முகம் பேய் போல வெளுத்தது; அவன் ஏதோ சொல்ல விரும்பி, நாக்கைக் கட்டுப்படுத்திக்கொண்டான். அதற்குப் பதிலாக, கோப்பையை ஏற்றுக்கொண்டு அதைக் காலி செய்தான். அவனுக்கு எங்காவது தனியாகப் போய் நன்றாக அழவேண்டும் போலிருந்தது. அவன் ஒரு வெள்ளரியை எடுத்து சாப்பிட ஆரம்பித் தான்; அவன் வெள்ளரிக்காய் சாப்பிட்டு இரண்டு வருடங் களுக்கும் மேலாகிவிட்டது. எல்லா ஹேன் சீனர்களும் பிறப்பிலேயே விவசாயிகள்தான். இல்லாவிட்டால், அவ்வளவு பொருள்கள் இருக்கும்போது, அவன் ஏன் வெள்ளரியை எடுத்தான்?

சூ, அவனுடைய முதுகில் தட்டிக் கொடுத்தார். ''குட்டி ஜென், நாங்கள் கொன்ற ஓநாய்களுக்காக நீ சங்கடப்பட வேண்டாம். நீயே அவற்றின் ஒரு

குட்டியை வளர்க்கிறாய் என்னும்போது, அவற்றோடு நீ கொண்டிருக்கும் உணர்ச்சிபூர்வமான பிணைப்பைப் புரிந்துகொள்ள முடிகிறது; மேலும், மூத்த மேய்ப்பர்களின் பாதிப்பும் உன்னிடம் அதிகமாக இருக்கிறது. முயல்கள், எலிகள், மான்கள் மற்றும் மர்மோட்டுகள் ஆகியவற்றைக் கொல்வதன் மூலம் ஓநாய்கள் மேய்ச்சல் நிலத்துக்கு அளிக்கும் பங்களிப்பை ஏற்றுக் கொள்கிறேன். ஆனால் இந்த மனோபாவம் மிகப் பழமையானது. மனித விண்கலங்கள் வான்வெளியில் பறக்கும் யுகத்தில் நாம் வாழ்ந்துகொண்டிருக்கிறோம். அறிவியல் ரீதியான வழிமுறைகள் மூலம் நாம் மேய்ச்சல் நிலத்தைப் பாதுகாக்க முடியும். ராணுவ அதிகாரிகள் எலிகளை அழித்தொழிப்பதற்கான மருந்தை அனுப்ப இருக்கிறார்கள்.''

ஜென்னுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை; அதேசமயம் சூ என்ன சொல்கிறார் என்பது புரிந்ததும், ''இல்லை, அப்படி செய்யக்கூடாது'' என்றான் அவன். ''இறந்த எலிகளைத் தின்னும் ஓநாய்களும், நரிகளும், பாலை நரிகளும், பருந்துகளும்கூட அப்போது இறந்துவிடும்.''

''எல்லா எலிகளும் செத்துவிட்டால், ஓநாய்கள் இருந்து என்ன பயன்?'' என்றார் பாவோ.

''ஓநாய்களால் பல பலன்கள் இருக்கின்றன'' என்று ஜென் விவாதித்தான். ''மான்கள், முயல்கள் மற்றும் மர்மோட்டுகளின் எண்ணிக்கை குறைவதற்கும் அவை காரணமாக இருக்கின்றன.''

மதுவால் முகம் சிவந்திருந்த ஓல்டு லியு, பலமாகச் சிரித்தார். ''மான்கள், காட்டு முயல்கள் மற்றும் மர்மோட்டுகள் எல்லாம், எங்கள் மக்கள் வந்த பின்பு அவர்களுக்கே பத்தாது. நிச்சயமாக, அவை எதுவும் ஓநாய்களுக்கு மிச்சமிருக்காது.''

32

அவர்கள் சாப்பிட்டு முடித்த பின்பு, சூவிடம் பாவோ கொஞ்ச நேரம் கலந்து பேசினார். அதன்பிறகு, இரு வண்டிகளும் வடகிழக்காக விரைந்தன.

''நாம் தவறான திசையில் போய்க்கொண்டிருக்கிறோம்'' என்றான் ஜென் சென். ''நாம் வந்த பாதையிலேயே போவது நல்லது.''

''நாம் படைக் குழுமத்திலிருந்து நூற்று நாற்பது லீ தள்ளிவந்திருக்கிறோம். இந்த நீண்ட பயணத்தை நாம் மேலும் பெறுமதியானதாக ஆக்க வேண்டும்'' என்றார் பாவோ.

''நாம் ஏற்கெனவே துப்பாக்கிச் சூடு நடத்திய பகுதிகளைத் தவிர்த்துவிட்டுச் சென்றால் நமக்கு மேலும் சில ஓநாய்கள் கிடைக்கலாம். ஒருவேளை ஓநாய்கள் இல்லாவிட்டால் நரிகள்; அவை ஒன்றும் மோசமில்லை. சண்டையைத் தொடர்ந்து நடத்திச் சென்று வெற்றிகளைக் குவிக்கும் பெருமைக்குரிய இராணுவ மரபை நாமும் தொடர வேண்டும்'' என்றார் அதிகாரி சூ.

அவர்கள் விரைவிலேயே மிகவும் பரந்துபட்ட பனிக்காலப் புல்வெளிப் பிரதேசத்தை அடைந்தார்கள். அங்கு ஏகப்பட்ட ஏக்கர் கணக்கில் கூர்மையான புல் பரந்து விரிந்து செழித்திருந்தது. அவை இரண்டடி நீள இலைகளும் ஓரடி நீளக் குஞ்சங்களும் கொண்ட அருமையான பனிக்காலப் புல்வெளி. அவற்றின் தண்டுகளும் குஞ்சங்களும் கால்நடைகளுக்கான அருமையான தீனி. ஆடுகள் பனிக்கடியில் புதைந்திருக்கும் இலைகளைக்கூட சாப்பிட்டுவிடும். ஏழு மாதப் பனிக்காலத்தில் இந்தப் புல்வெளி கால்நடைகளை வாழவைக்கும். ஜென் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். இந்த அளவு வளர்ந்து அடர்ந்து செழித்திருக்கும் புல்வெளியில் டெலிஸ்கோப் மூலமாகக்கூட ஓநாய்களைக் காண முடியாது. மேய்ச்சல்நில ஓநாய் களிடமும், குதிரை மேய்ப்பர்களிடமும் அவனுக்கு நன்றியுணர்வு பெருக்கெடுத்தது. உண்மையில் இந்தப் புராதன மேய்ச்சல் நிலம் அவர்களுடைய முயற்சிகளினாலேயே பேணப்படுகிறது. அவர்கள் இதற்காக மிகக் கடுமையாக உழைக்கிறார்கள். குதிரை மேய்ப்பர்கள் நாட்டுப்புறப் பாடல்களைப் பாடுவதைக் கேட்கும் ஒவ்வொரு முறையும் ஜென் மகிழ்ச்சியடைவான். மேய்ப்பர்கள் அவர்களுடைய பாட்டுகள்

மூலம், இந்தப் பனிக்காலப் புல்வெளியைப் பாதுகாப்பதில் ஓநாய்களின் பங்கைப் பாராட்டுவதையும், அவர்கள் அவற்றுக்குக் கடன்பட்டிருப்பதையும் வெளிப்படுத்துவதை அவன் அறிவான்.

வாகனங்கள் விரைந்து சென்றன. லேசான போதையில் இருந்த வேட்டைக்காரர்கள் தங்களுடைய பைனாகுலர்கள் மூலம் அந்த நிலப்பகுதியை அலசினர். ஜென் அவனுடைய எண்ணங் களில் ஆழ்ந்து போயிருந்தான். பனிக்காலப் புல்வெளிப் பிரதேசத்தை, மக்களும் கால்நடைகளும் அங்கு வந்து சேர்வதற்கு முன்பாகப் பார்க்கும் வாய்ப்பு அவனுக்கு முதல் முறையாக இப்போதுதான் கிடைத்திருக்கிறது.

ஒரு சிறு புகைத் தடம்கூட இல்லை; குதிரைகளோ, மாடுகளோ, ஆடுகளோ இல்லை. ஆறு மாத ஓய்வுக்குப் பின் இந்தப் புல்வெளி, பிரசவ காலத்துக்கான இளவேனிற்காலப் புல்வெளியை விடக் களையிழந்து காணப்பட்டது. இளவேனிற் காலப் புல்வெளியில் ஏகப்பட்ட விலங்குப் பட்டிகள் இருக்கும்; சேமிப்புக் கிடங்குகள், கிணறுகள் மற்றும் மனித பிரயாசைகளின் தடங்கள் இருக்கும். பனிக்காலப் புல்வெளியில் மக்களும் கால்நடைகளும் பனியிலிருந்து தண்ணீர் எடுத்துக்கொள்வார்கள். கிணறுகளோ தொட்டிகளோ அவசியமில்லை. ஆட்டுக்குட்டிகளும் கன்றுக்குட்டிகளும் நன்றாக வளர்ந்துவிட்டிருக்கும் என்பதால் கொட்டகைகளோ, பட்டிகளோ தேவைப்படாது.

இப்போது வாகனங்கள் ஒரு பழைய பாதையில் விரைந்து கொண்டிருந்தன. அந்த மண் பாதை கெட்டியாக இருந்தது. ஆனால் புல் குட்டையாகவும் அடர்ந்தும் காணப்பட்டது. ஜென், அவனுக்கு வலப்புறப் புல்லில் மூன்று கரும்புள்ளிகளைப் பார்த்தான். ஒரு பெரிய நரி, தன் பின்னங்கால்களால் நின்றபடி, அப்புல் வெளியைக் கடந்து செல்லும் மனிதர்களைக் கவனித்தபடி இருந்தது. பிற்பகல் சூரியனின் ஆரஞ்சு வெளிச்சம் நரியின் வெண்மயிரை இளமஞ்சள் நிறமாக்கியிருந்ததில், புல்குஞ்சங்களோடு வேறுபடுத்திப் பார்க்க முடியாதபடி அது இருந்தது. அதன் கழுத்துக்கு மேலாகத் தெரிந்த மூன்று கரும்புள்ளிகள், அதன் காதுகளும் மூக்கும்.

முதியவர் பில்ஜியோடு ஜென் நரி வேட்டைக்குச் செல்லும்போது, அவர் எப்போதுமே இந்த மூன்று கரும்புள்ளிகளைச் சுட்டிக் காட்டுவார் _ குறிப்பாகப் பனி நிலத்தை மூடியிருக்கும்போது அனுபவம் வாய்ந்த வேட்டைக்காரர்கள்

அப்புள்ளிகளைக் குறி வைப்பார்கள். தந்திரமிக்க மேய்ச்சல்நில நரியால் மேய்ச்சல்நில வேட்டைக்காரர்களை ஏமாற்ற முடியாது; ஆனால் ஜென்னுக்கு அருகில் அமர்ந்திருந்த கூரிய கண்கள் கொண்டவர்களை அது குருடாக்கிவிட்டிருந்தது. அதற்கு மேலும் ரத்தத்தைப் பார்க்க விரும்பாமல் ஜென் அமைதியாக இருந்தான். அழகிய சூழ்ச்சிக்கார நரிகள், எலிகளைப் பிடிப்பதில் அபாரத் திறன் கொண்டவை. வண்டிகள் நெருங்கியபோது, கரும்புள்ளிகள் அடர்ந்த புல் புதருக்குள் மெல்ல மறைந்தன.

அவர்கள் தொடர்ந்து சென்றுகொண்டிருந்தபோது, புல்வெளியில் ஒரு காட்டு முயல் நின்றபடி அவர்களைப் பார்த்தது.

ஜென் மெல்லிய குரலில், ‘‘நல்ல கொழுத்த முயலொன்று அங்கே இருக்கிறது. அவை மேய்ச்சல் நிலத்தின் எதிரிகள். அதைச் சுட்டு வீழ்த்தலாமே’’ என்றான்.

‘‘இப்போது வேண்டாம்’’ என்றார் பாவோ. ‘‘எல்லா ஓநாய்களையும் கொன்று முடித்த பிறகு முயல்களைக் கவனிக்கலாம்.’’

வாகனங்களைப பார்த்து எவ்வித பயமுமில்லாமல் அது நின்றிருந்தது. பத்து அல்லது பதினைந்து அடி தூரம் பக்கத்தில் வந்ததும்தான் ஓடி மறைந்தது. புல் வாசனை மேலும் மேலும் கூடிக்கொண்டே இருந்தது. இங்கு எதுவும் கிடைக்காது என்பதை உணர்ந்த வேட்டைக்காரர்கள் திரும்பி, மலைப்பாங்கான இலையுதிர்காலப் புல்வெளிப் பகுதியை நோக்கிச் சென்றார்கள்.

அங்கு புல் மிகவும் குட்டையானது; ஆனாலும் மேய்ப்பர்கள் அதை அவர்களுடைய இலையுதிர்காலப் புல்வெளிப் பிரதேசமாக அமைத்ததற்கு அங்கு நிறைந்திருந்த அபரிமிதமான புல்விதைகள் தான் காரணம். இலையுதிர்காலத்தில் காட்டுக் கோதுமை, கொள்ளு மற்றும் பட்டாணி விதைகளில் கொழுப்பும் புரோட்டினும் நிறைந்திருக்கும். அங்குள்ள செடிகளில் இருக்கும் விதைகளைச் சாப்பிட்டு ஆடுகள் கொழுக்கும்.

பில்ஜியோடு இருந்த கடந்த இரண்டு வருடங்களில் மேய்ச்சல் நிலம் பற்றிய எல்லா விசயங்களையும் அவரிடமிருந்து ஜென் கற்றுக்கொண்டிருக்கிறான். புல் குட்டையாக இருந்ததால் அவர்களால் விசாலமாகப் பார்க்க முடிந்ததோடு,

வண்டிகளும் வேகமாகச் செல்ல ஏதுவாக இருந்தது. அப்போதுதான் கழிக்கப்பட்டிருந்த ஓநாய் மலத்தை பாவோ கவனித்தார். வேட்டைக் காரர்கள் உற்சாகமடைந்தார்கள். ஜென் மீண்டும் கவலைப்படத் தொடங்கினான். அவர்கள் துப்பாக்கியை முன்னதாகப் பயன்படுத்திய இடத்திலிருந்து அறுபது அல்லது எழுபது லீ இப்போது வந்துவிட்டிருந்தார்கள். அங்கிருந்த ஓநாய்களுக்கு வடக்கிலிருந்து மோட்டார் வண்டிகள் சத்தமில்லாமல் நெருங்கி வருவது தெரிந்திருக்கவில்லை. அங்கு மனிதர்களின் நடமாட்டத்துக்கான எவ்விதத் தடயமும் இல்லை.

அவர்கள் ஒரு சரிவைக் கடந்தபோது, வண்டிகளிலிருந்து மூன்று பேர், ‘‘ஓநாய்! ஓநாய்!’’ என்று கத்தினார்கள். ஜென், தன்னுடைய கண்களைக் கசக்கிக்கொண்டு பார்த்தான். முன்னூறு அடி தொலைவில், ஒரு சிறுத்தை அளவுக்குப் பெரிதாக இருந்த ஒரு மிகப் பெரிய ஓநாயை அவன் கண்டான். ஓலோன்புலாக்கில், பெரியதும் பலமிக்கதும் விரைந்து செல்லக்கூடியதுமான ஓநாய்கள் தனியாக வெளியில் வந்து திரியும். அவை பார்ப்பதற்குத் தனித்திருப்பது போலத் தோன்றும்; ஆனால் அவை உண்மையில் ஓநாய்க் கூட்டத்துக்காக வேவு வேலை பார்த்துக்கொண்டிருக்கும். அந்த மிகப்பெரிய ஓநாய், வாகனங்களின் சத்தம் கேட்டதும் திடுக்கிட்டு அடர்ந்த புல்வெளிக்குள் ஓடியது. ‘‘அதைத் தப்பிக்க விடாதீர்கள்’’ என்று கத்தினார் ஓல்டு லியு. அது தப்பிச் செல்வதற் கான வழியை அவர் மறித்ததால், அது சுற்றிச் சுழன்று மலையுச்சியை நோக்கி ஓடத் தொடங்கியது. ஒரு மானின் வேகத்துக்கு இணையாக அது ஓடியபோதிலும், பாடெலின் வண்டி அதற்கு ஈடு கொடுக்கக் கூடியது. வாகனங்கள் எதிர் திசைகளிலிருந்து அதை நோக்கி வந்தன. ஓநாய் அதன் முழு வேகத்தில் ஓடியது.

‘‘நீங்கள் குறி வையுங்கள். உங்களால் சிறப்பாகச் சுட முடியும்’’ என்று கத்தினார் சூ.

‘‘இல்லை, நீங்கள்தான் நன்றாகச் சுடுவீர்கள். நீங்களே குறி வையுங்கள்’’ என்றார் பாடெல்.

‘‘சுட வேண்டாம். யாருமே சுட வேண்டாம்’’ என்று சத்தமிட்டார் பாவோ. ‘‘குண்டுத் துளைகள் இல்லாத தோல் எனக்கு வேண்டும். அதன் தோலை

நான் உயிரோடு உரிக்க விரும்புகிறேன். புத்தம் புதிய, மினுமினுக்கும் மயிருடன் கூடிய தோல் நல்ல விலைக்குப் போகும்.''

''அற்புதமான யோசனை.'' வேட்டைக்காரர்களும் ஓட்டுனர்களும் ஒருசேரக் கூவினார்கள். பாவோவைப் பார்த்துத் தன் கட்டைவிரலை உயர்த்திக் காட்டினார் லியு. ''என்னைக் கவனியுங்கள். நான் அதை விரட்டிச் சென்று கீழே விழ வைக்கிறேன்.''

லிட்டில் வாங்கும் சேர்ந்துகொண்டான். ''அது ரத்தம் கக்கும் வரை நான் விரட்டுகிறேன், பாருங்கள்.''

மிதமான சரிவு அவர்களுக்கு மிகவும் தோதாக இருந்தது. இந்த இருமுனை மோட்டார் வாகனத் தாக்குதலை மீறி அது தப்பிக்கப் போவதில்லை. அதற்கு ஏற்கெனவே வாயில் நுரை தள்ளி விட்டிருந்தது. மனிதனுக்கும் ஓநாய்க்குமான யுத்தம் எப்போதுமே பதற்றமானதாகவே இருந்து வந்திருக்கிறது; ஆனால் இப்போது அது மனிதர்களுக்கான கேளிக்கையாக ஆகிவிட்டிருக்கிறது.

மேய்ச்சல் நிலத்துக்கு ஜென் வந்தபிறகு, இப்போதுதான் முதல் முறையாக ஓநாய்களை விடவும் மனிதர்கள் அபாரமாய் விஞ்சி இருப்பதைப் பார்க்கிறான். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மேய்ச்சல் நிலத்தில் ஆதிக்கம் செலுத்திவந்த ஓநாய்கள், இப்போது முயல்களை விட மிகவும் பரிதாபமாகிவிட்டன.

மிகவும் தேர்ந்த அந்த ஓட்டுனர்கள், நிதானமான வேகத்தில் பின்தொடர்ந்தனர். ஓநாய் வேகமாக ஓடியபோது அவர்களும் வேகமெடுத்தார்கள்; ஓநாயின் வேகம் மட்டுப்பட்டபோது குறைத்துக்கொண்டார்கள். ஆனால் விடாமல் அதை ஓடிக் கொண்டிருக்க வைத்தார்கள். ஐம்பது அல்லது அறுபது அடி தூர வித்தியாசத்தில் அவர்கள் எப்போதும் இருந்துகொண்டிருந்தார்கள். ஓநாய் மிகவும் களைத்துப்போயிருந்தது. அதன் வாய் அகலத் திறந்திருந்தபோதிலும் அது மூச்சு வாங்க சிரமப்பட்டது.

ஓநாய் தன் உயிருக்காக ஓடியபோதிலும், அதன் பலமும் திடமும் தீர்ந்துவிட்டிருந்தது. ஒரு பிரமாண்டமான குழியோ, எருதுவின் எலும்புக் குவியலோ திடீரென எதிர்ப்பட்டால் நன்றாயிருக்குமென ஜென் விரும்பினான்; அவன் வண்டியிலிருந்து தூக்கி எறியப்பட்டாலும் பரவாயில்லை.

இந்தத் துரத்தல் வேட்டையில் வேட்டைக்காரர்களின் முகங்கள் பரவசமடைந்திருந்தன. நன்றாகக் குடித்து விட்டிருப்பவர்களைப் போல அவை சிவந்து மின்னின. ‘‘நாம் இதற்கு முன் அடைந்த ஓநாய்களை விட இது மிகவும் பெரியது. இதன் தோல், எவ்வித ஒட்டும் இல்லாமல், ஒரு போர்வை அளவுக்குப் பெரிதாக இருக்கும்.’’

‘‘நாம் இந்தத் தோலை விற்க வேண்டாம். நம் படைப் பிரிவு கமாண்டெருக்கு இதைக் கொடுத்துவிடலாம்’’ என்றார் சூ.

‘‘நல்ல யோசனை’’ என்றார் பாவோ. ‘‘அதன்மூலம், இங்கு திரியும் ஓநாய்கள் எவ்வளவு பெரியவை என்பதும், அவை மேய்ச்சல் நிலத்துக்கு எந்த அளவு அபாயகரமானவை என்பதும் படைப்பிரிவுத் தலைவர்களுக்குத் தெரியவரும்.’’

ஓல்டு லியு, கைச் சக்கரத்தில் ஓங்கி அடித்தார். ‘‘உள்மங்கோலிய மேய்ச்சல் நிலம் மிகவும் வளப்பமானது; இன்னும் ஒரு வருடத்துக்குள், நகரத்தில் நம்மால் ஒருபோதும் பெற முடியாத அருமையான வீடுகள் நம் எல்லோருக்கும் கிடைத்துவிடும்.’’

லியுவின் பின்புற மண்டையில் ஓங்கி அடிக்க வேண்டும் போல ஜென்னுக்கு இருந்தது; வேறு வழியில்லாமல் ஜென் தன் முஷ்டிகளை இறுகப் பற்றிக்கொண்டான். அவனுடைய ஓநாய்க்குட்டி திடீரென அவன் கண் முன்னால் பளிச்சிட்டது; அவனுடைய இதயத்தில் இதமான மின்சாரம் பாய்ந்தது. வீட்டில் குழந்தை அவனுக்காகக் காத்திருப்பது போல அது இருந்தது. அவனுடைய கைகள் தளர்வடைந்து தொங்கின; தலை முதல் பாதம் வரை வெறுமையாக உணர்ந்தான்.

அவர்கள் கடைசியாக, ஒரு பரந்து விரிந்த சரிவுக்கு ஓநாயைத் துரத்தியிருந்தார்கள். புல் புதரோ, மலையுச்சியோ, குழிகளோ, தாழ்வான நிலப்பகுதிகளோ இல்லாத, ஓநாய் தன்னைத் தற்காத்துக் கொள்ள எவ்வித வழிகளும் இல்லாத இடம். அதனுடைய கால்கள் களைப்பில் இடறின.

சூவின் துப்பாக்கியைப் பிடுங்கி பாவோ, ஓநாய்க்கு ஓரடி முன்பாக இருமுறை சுட்டார். ஓநாய்கள் மிகவும் பயப்படுவது இந்த சத்தத்துக்குத்தான்; அதனிடம் எஞ்சியிருந்த கடைசி பலத்தையும் அந்த சத்தம் பிழிந்தெடுத்துவிட்டது.

அடுத்த அரை லீ தூரம் வரை அதனால் செல்ல முடிந்தது. பின் நின்று, திரும்பி, கீழே விழுந்தது.

வாகனங்கள் கிறீச்சிட்டபடி, நான்கைந்து அடிகள் தள்ளி நின்றன. பாவோ, தன்னுடைய துப்பாக்கியோடு குதித்து இறங்கினார். ஓநாய் அசைவின்றிக் கிடந்தது. துப்பாக்கி முனையில் கத்தியை மாட்டிக்கொண்டு, அதை நோக்கி நடந்தார். அது நடுங்கிக்கொண்டிருந்தது. பாவோ அதை நெருங்கிய பின்னும் அது அசைவின்றிக் கிடந்தது. அவர் அதன் வாயில் கத்தியால் குத்தினார். அப்போதும் அதனிடமிருந்து ஒரு எதிர்வினையும் இல்லை. அவர் சிரித்தார். ‘‘நாம் இதைத் துரத்திப் பிடித்துவிட்டோம்.’’ பிறகு, அவர் அதன் தலையை செல்ல நாயைப் போலத் தடவிக் கொடுத்தார்.

கடந்த ஆயிரக்கணக்கான வருடங்களில், காட்டில் அமர்ந்திருக்கும் ஒரு ஓநாயின் தலையைத் தடவிக் கொடுக்கும் முதல் தைரியசாலி பாவோவாகத்தான் இருப்பார். பாவோவின் கை அதன் காதுகளை அடைந்தபோது, ஓநாய் தரையோடு சுருண்டுகொண்டது.

ஒரு பாவியைப் போல உணர்ந்தவனாக ஜென் வீடு திரும்பினான். குடிலுக்குள் நுழைவதே அவனுக்கு சிரமமாக இருந்தது. தயங்கியபடியே அவன் உள்ளே நுழைந்தபோது, படையணியினரின் ஓநாய் ஒழிப்புத் திட்டத்தைப் பற்றி சாங் ஜியோன் கோபத்தோடு யாங் கீயிடமும் காவோ ஜியான்சோங்கிடமும் பேசிக்கொண்டிருந்தான். ‘‘எல்லோருமே பைத்தியக்காரத்தனமாகக் கொல்லக் கிளம்பிவிட்டார்கள். வேட்டைக்காரர்களும் பணியாளர்களும் டிரக்குகளையும் கார்களையும் பயன்படுத்துகிறார்கள். எல்லோருக்கும் தேவையான அளவு பெட்ரோலும் வெடிமருந்துகளும் கொடுக்கப்பட்டுள்ளன. டாக்டர்கள்கூட இதில் சேர்ந்துகொண்டு விட்டார்கள். அவர்கள் வாசனையும் வண்ணமும் இல்லாத விஷத்தை, இறந்த ஆடுகளின் எலும்புக்குள் இருக்கும் கொழுப்பில் ஊசிமூலம் செலுத்தி, பின் அவற்றைக் காட்டுக்குள் எறிந்துவிடுகிறார்கள். எவ்வளவு ஓநாய்களுக்கு அவர்கள் இதன்மூலம் விஷம் வைத்திருக்கிறார்கள் என்று தெரியவில்லை. படைப் பிரிவினரின் சாலைப் பணியாளர்கள்தான் இதில் ரொம்ப மோசம். அவர்களுக்குக் கிடைக்கும் எந்த ஆயுதத்தையும் பயன் படுத்துகிறார்கள். அவர்கள் ஆட்டு எலும்புகளுக்குள் வெடிப்பொருட்களை

வைத்து, அவற்றின்மீது ஆட்டுக் கொழுப்பைப் பூசி, ஓநாய்கள் அடிக்கடி வருமிடங்களில் வைத்துவிடுகிறார்கள். அவற்றை ஓநாய்கள் கடிக்கும்போது அவை வெடித்து ஓநாய்களின் தலையைத் துண்டித்துவிடும். ஆட்டெலும்பு வெடிகுண்டுகளைப் பணியாளர்கள் எல்லா இடங்களிலும் வைக்கிறார்கள். அவர்கள் ஏற்கெனவே, மேய்ப்பர்களின் பல நாய்களைக் கொன்றுவிட்டார்கள். அவர்களின் படுகுழியில் ஓநாய்கள் விழுந்துகொண்டிருக்கின்றன. எங்கு பார்த்தாலும் மக்கள், 'ஓநாய்களைக் கொல்லுங்கள்! எல்லாக் குள்ள நரிகளும் சாகும்வரை, நாங்கள் எத்தனை தலைமுறையாயினும் சண்டையைக் கைவிட மாட்டோம்'' என்று கூச்சலிடுகிறார்கள். இராணுவத் தலைமையிடம் மேய்ப்பர்கள் புகார் தெரிவித்திருப்பதாக நான் கேள்விப்பட்டேன்.''

''நம் குழுவிலுள்ள வேலையாட்கள்கூட இந்தச் சண்டையில் சேர்ந்துவிட்டார்கள்'' என்றான் காவோ. ''அவர்கள் ஐந்து அல்லது ஆறு பெரிய ஓநாய்களைக் கொன்றுவிட்டார்கள். வேட்டைக் காரர்களாக மாறிவிட்டிருக்கும் இந்த விவசாயிகள், ஓநாய்களைக் கொல்வதில் இன்னும் கெட்டிக்காரர்களாக இருக்கிறார்கள். அவர்கள் எப்படி அதைச் செய்தார்கள் என்று கண்டுபிடிக்க எனக்கு இரண்டு பாட்டில் சாராயம் செலவானது. அவர்கள் ஓநாய்ப் பொறிகளைப் பயன்படுத்துகிறார்கள்; ஆனால் அவை மேய்ப்பர்களுடைய பொறிகளை விடவும் தந்திரமானவை, கண்டுபிடிக்க முடியாதவை. மேய்ப்பர்கள் இறந்த ஆட்டின் அருகே பொறிகளை வைத்துவிடுவார்கள். பிறகு ஓநாய்களுக்கு அது தெரியவரும். காட்டில் செத்த ஆடு கிடந்தால் ஓநாய்கள் எப்போதுமே உஷாராகத்தான் இருக்கும். தலைமை ஆண் ஓநாய் வந்து, அதன் கூர்ந்த மூக்கால் முகர்ந்து பொறியைத் தோண்டி எடுக்கும் வரை, அவற்றை அவை தொடாது. ஆனால் இந்த வேலையாட்கள் அதை வேறு மாதிரி செய்கிறார்கள். ஓநாய்கள் அதிகமாக இருக்கும் இடங்களில், தரையில் செத்த ஆடோ எலும்புகளோ இல்லாமல், அவர்கள் பொறிகளை வைக்கிறார்கள். கடிப்பதற்கு அவர்கள் என்ன பயன்படுத்துகிறார்கள் தெரியுமா? ஒரு லட்சம் வருஷமானாலும் உங்களால் அதை யூகிக்க முடியாது. உருகிய ஆட்டுக் கொழுப்பில் குதிரை சாணத்தை ஊறப்போட்டு எடுத்துப் பின் அதைக் காயவைக்கிறார்கள். அதன்பிறகு, அதை சிறு சிறு துண்டுகளாக உடைத்துப் பொறிகளைச் சுற்றிலும் போடுகிறார்கள்.

ஓநாய்கள் கடிப்பதற்கான பொருள் அதுதான். ஒரு ஓநாய் அதைக் கடிக்கும்போது, ஆட்டுக்கொழுப்பு வாசனையை அது முகர்கிறது; ஆனால் அங்கு செத்த ஆடோ, எலும்புகளோ இல்லாததால் அதற்கு சந்தேகம் ஏதும் வருவதில்லை. சுற்றிலும் அது முகர்ந்து பார்க்கிறது. எப்படியானாலும் கொஞ்ச நேரத்தில் அது பிடிபட்டு விடுகிறது. என்ன ஒரு குரூரம்! அவனுடைய சொந்த ஊரில் அவர்கள் இப்படித்தான் எல்லா ஓநாய்களையும் கொன்றதாக ஓல்டு வாங் சொன்னான்.''

மேற்கொண்டு எதையும் கேட்க சகிக்காமல் ஜென் வெளியில் வந்து, ஓநாய்ப் பட்டியை நோக்கி நடந்தான். அங்கு போய் மெதுவான குரலில் ஓநாய்க் குட்டியைக் கூப்பிட்டான். அதுவும் அன்று முழுவதும் அவனைக் காணாமல் தவித்திருந்திருக்கும். பட்டியின் விளிம்பில் ஜென்னைப் பார்த்ததும், அதனுடைய வால் நிமிர்ந்து நின்றது. ஜென் கீழே உட்கார்ந்து, நீண்ட நேரத்துக்குக் குட்டியைப் பற்றிக்கொண்டிருந்தான்; அவனுடைய முகம் அதன் தலையைத் தொட்டிருந்தது. குளிர்ந்த இலையுதிர்கால இரவில் நிலவு குளிர்ச்சியோடு காணப்பட்டது; ஓநாய்களின் அதிர்வூட்டும் ஊளைகள் இப்புதிய மேய்ச்சல் நிலத்தில் பழைய நினைவுகளாகி விட்டன. ஓநாய்க் குட்டிக்காகத் தாய் ஓநாய்கள் வருமென்ற பயம் இப்போது ஜென்னிடம் அறவே இல்லை; அவை வந்து இதைக் கூட்டிக்கொண்டு வடக்கே எல்லையைக் கடந்து போய்விட வேண்டுமென்றே அவன் இப்போது விழைகிறான்.

அவனுக்குப் பின்னால் காலடிச் சத்தம் கேட்டது. யாங் கீ வந்து, ''வெள்ளை ஓநாய் அரசன் ஒரு ஓநாய்க்கூட்டத்தை வழிநடத்திக் கூட்டிக்கொண்டு, எல்லையைக் கடந்து போனதை லாம்ஜாவ் பார்த்ததாகச் சொன்னான்'' என்றான். ''அது ஓலோன்புலாக்குக்கு இனி ஒருபோதும் திரும்பி வராது என்றே நான் நினைக்கிறேன்.''

அன்றிரவு ஜென்னால் தூங்க முடியவில்லை.

நீங்கள் ஒரு கரடியை, புலியை, சிங்கத்தை அல்லது ஒரு யானையைப் பழக்கப்படுத்தலாம்; ஆனால் உங்களால் ஒரு மங்கோலிய ஓநாயைப் பழக்கப்படுத்த முடியாது.

புதிய இடத்துக்கு நகர்வதை விடவும் கழுத்தை நெரித்துக் கொன்றாலும் பரவாயில்லையென ஓநாய்க்குட்டி அடம் பிடித்தது.

குழுமத்தின் மாடுகளும் ஆடுகளும் விடிந்தவுடனேயே கிளம்பிவிட்டன. ஆட்களையும் உடமைகளையும் ஏற்றிச் செல்லும் பார வண்டிகள் பல பகுதிகளாகப் பிரிக்கப்பட்டு அனுப்பப் பட்டன; அவை இலையுதிர் காலப் புல்வெளி நிலத்துக்குப் போகும் வழியில் மேற்கு மலை மேட்டைக் கடந்து சென்றன. பிரிவு இரண்டைச் சேர்ந்த மாணவர் குழுவினர், அவர்களுடைய பாரம் மிகுந்த ஆறு எருதுவண்டிகள் உட்பட, இன்னமும் கிளம்பவில்லை. இவ்வளவுக்கும் பில்ஜியும் கஸ்மாயும் விரைவில் சாலைக்கு வந்து சேரும்படி இருமுறை அவர்களுக்கு ஆளனுப்பிச் சொல்லி விட்டிருந்தார்கள்.

அவர்கள் கிளம்புவதற்கு உதவும் வகையில் சாங் ஜியோன் அங்கிருந்தான். ஆனால், மிக மூர்க்கமாகப் பிடிவாதம் பிடித்த ஓநாய்க்குட்டியை அவனாலும் ஜென் சென்னாலும் சமாளிக்க முடியவில்லை. கடந்த ஆறு மாதங்களில் ஓநாய்க்குட்டிக்கு ஏற்பட்ட பல்வேறு நெருக்கடிகளை சமாளித்துவிட்டிருக்கிற நிலையில், இப்படியொரு பிரச்சனையை ஜென் கொஞ்சமும் எதிர்பார்த் திருக்கவில்லை.

இளவேனிற் பருவ மேய்ச்சல் நிலத்திலிருந்து இங்கு வந்தபோது, ஓநாய்க்குட்டி ஓரடி உயரமே இருந்தது; அப்போது அதை அவர்கள், மாட்டு வறட்டிகளை அடுக்கி வைக்கப் பயன்படுத்தும் ஒரு மரப்பெட்டிக்குள் வைத்துக்கொண்டு வந்து விட்டார்கள். இந்தக் கோடை காலத்தில் அது நன்றாகச் சாப்பிட்டு, பாதி ஓநாயாக வளர்ந்துவிட்டிருந்தது. அதற்கேற்ற பெரிய கூண்டு எதுவும் இப்போது அவர்களிடம் இல்லை. அப்படியே இருந்தாலும் அதற்குள் ஜென்னால் குட்டியை வைக்க முடியாது; ஆறு வண்டிகளிலுமே தாங்க முடியாத அளவுக்கு சாமான்கள் ஏற்றி விட்டிருந்தார்கள் (மாணவர்களின் புத்தகங்கள் மட்டுமே ஒரு வண்டியை நிறைத்துவிட்டிருந்தது). இந்த நெடும் பயணத்தில் அதுவே ஒரு

பெரும் பிரச்சனைதான்; இடையில் அதிக பாரத்தால் ஏதாவது ஆகிவிடும் சிரமமும் இருக்கத்தான் செய்கிறது. அவர்கள் இங்கிருந்து கிளம்புவதற்காக அந்த நாளைத் தேர்ந்தெடுக்க வானிலையே காரணம்; மழையைத் தவிர்க்கக் குழுமம் தீர்மானித்தே அம்முடிவு எடுக்கப்பட்டிருந்தது. ஜென் கடும் சிக்கலில் மாட்டியிருந்தான்.

சாங் ஜியோனின் நெற்றியில் வேர்வை முத்துகளாக அரும்பியிருந்தன. ‘‘இவ்வளவு காலமாக நீ என்ன செய்து கொண்டிருந்தாய்?’’ என்று அவன் குறைப்பட்டான். ‘‘உன்னோடு நடந்துவர நீ அதை பழக்கப்படுத்தியிருக்க வேண்டாமா?’’

‘‘நான் அப்படி முயற்சி செய்யவில்லை என்று உனக்குத் தெரியுமா?’’ ஜென்னும் பதிலுக்கு எரிச்சல் பட்டான். ‘‘இது சின்னதாக இருந்தபோது, நான் என்னோடு இதை இழுத்துக் கொண்டு போனேன்; ஆனால் அப்படியாக அது தொடரவில்லை. இந்தக் கோடை முழுவதும், இது போக விரும்பிய இடத்துக்கு என்னை இழுத்துக்கொண்டு போனது. நான் இதை என் கட்டுப்பாட்டுக்குள் கொண்டுவர முயற்சி செய்தபோது, என்னைக் கடிக்க வந்தது. ஓநாய்கள் நாய்களில்லை; அவை தம்மை மாற்றிக் கொள்வதைவிட இறந்து போய்விடும். ஒரு புலியைப் போலவோ, சிங்கத்தைப் போலவோ ஒரு சர்க்கஸில் ஒரு ஓநாய் செய்வதை நீ எப்போதாவது பார்த்திருக்கிறாயா? எந்தவொரு விலங்குப் பயற்சியாளராலும் அதை சமாளிக்க முடியாது. என்னை விடவும் நீதான் அதிகமாக ஓநாய்களைச் சுற்றித் திரிந்திருக்கிறாய்; உனக்கது தெரிந்திருக்க வேண்டும்.

சாங் பல்லைக் கடித்துக்கொண்டு சொன்னான். ‘‘நான் மறுபடியும் முயற்சி செய்து பார்க்கிறேன். இம்முறையும் வேலைக்காகா விட்டால், நாம் அதிரடியாக ஏதாவது செய்தாக வேண்டியதுதான்.’’ அவன் ஒரு கையில் மேய்ச்சல் தடியோடு, ஜென்னிடமிருந்து சங்கிலி வளையத்தைப் பெற்றுக்கொண்டு ஓநாய்க்குட்டியை நோக்கிச் சென்றான். அவன் சங்கிலியை இழுக்கத் தொடங்கிய உடனேயே, அது தன்னுடைய கோரைப் பற்களை வெளிக்காட்டி, அச்சுறுத்தும் வகையில் உறுமியது; அது பின்னால் சரிந்து திடமாக இருந்துகொண்டு நான்கு பாதங்களாலும் தரையைப் பிறாண்டியது. சாங் தன்னுடைய முழு சக்தியையும் திரட்டி அதை இழுத்தபோதிலும் அவனால்

குட்டி ஓநாயை நகர்த்த முடியவில்லை. அதனால் அவன் பின்பக்கமாகத் திரும்பி, சங்கிலியைத் தோளில் போட்டுக்கொண்டு, யாங்கே நதியில் ஒரு கூலி ஒரு படகை இழுப்பதைப் போல, இழுத்தான்.

அவனால் அப்போதும் மிகக் குறைந்த அளவே நகர்த்த முடிந்தது. தான் இழுக்கப்படுவதைக் கொஞ்சமும் விரும்பாத ஓநாய்க்குட்டி, தன்னுடைய எடை முழுவதையும் முன்னுக்குக் கொண்டு வந்து பாய்ந்தது; சாங் தலை குப்புற விழுந்தான்; அவன் முகமெல்லாம் புழுதி அப்பியிருந்தது. அவனும் ஓநாய்க்குட்டியும் தாறுமாறாகக் கிடந்ததில், இப்போது சாங்கின் தொண்டையிலிருந்து ஓரடி தூரத்தில் ஓநாய்க்குட்டியின் வாய் இருந்தது. ஜென் பயந்துபோய், ஓடிச்சென்று ஓநாய்க்குட்டியின் கழுத்தை இறுகப் பற்றினான். அப்போதும் ஓநாய்க்குட்டி சாங்கைப் பார்த்து உறுமியது.

இருவரும் மூச்சிழுத்து ஆசுவாசப்படுத்திக்கொண்டார்கள்; அவர்களின் முகங்கள் வெளுத்து விட்டிருந்தன. ‘‘நாம் பெரிய சிக்கலில் மாட்டிக்கொண்டிருக்கிறோம்’’ என்றான் சாங். ‘‘இதை நகர்த்திக்கொண்டு போவதென்றால் நான்கைந்து நாட்கள் ஆகிவிடும். இன்று ஒரு நாளில் முடிய வேண்டுமென்றால், இதை இங்கேயே விட்டுவிட்டுப் போய், பிறகு ஒரு காலி வண்டியோடு வந்துதான் இதைக் கொண்டுபோக வேண்டும். கம்பளிக் கிடங்கின் காவலர்களும் வேலையாட்களும் இன்னமும் கிளம்பவில்லை; நாம் திரும்பிவரத் தாமதித்தால், அவர்கள் இதைக் கொன்றுவிடுவார்கள்; அல்லது இராணுவ அதிகாரிகள் வேட்டையாடிவிடுவார்கள். நம்மோடு இதை எப்படியாவது கூட்டிக்கொண்டு போயாக வேண்டும். ஒரு வண்டியின் பின்னால் இதைக் கட்டி இழுத்துக்கொண்டு போய்விடலாமா?’’

‘‘சில நாட்களுக்கு முன்னால் நான் அதையும் செய்து பார்த்துவிட்டேன். வேலைக்காகவில்லை. கழுத்து நெரிபட்டுக் கொல்லப்பட்டு விடக்கூடுமென்ற கட்டத்துக்குப் போய்விட்டது. ‘கட்டுக்கடங்காத் தன்மை’, ‘சரணடைவதற்கு முன்பாக மரணம்’ என்பதன் அர்த்தத்தை இப்போது நான் புரிந்து கொண்டுவிட்டேன். நம்முடைய கட்டளைகளுக்கு அடி பணிவதை விடவும் கழுத்து நெரிபட்டு இறந்துபோவதையே ஓநாய் தேர்ந்தெடுக்கும்.’’

‘‘நான் அப்படி நினைக்கவில்லை’’ என்றான் சாங். முதலில் ஒரு நாய்க்குட்டியை வைத்து அப்படிச் செய்யலாம். அதைப் பார்த்து இதுவும்

வரும்.''

ஜென் தலையசைத்தான். ''அதையும் செய்து பார்த்து விட்டேன். அதுவும் வேலைக்காகவில்லை.''

''நாம் மறுபடியும் முயற்சி செய்து பார்க்கலாம்.'' பாரம் ஏற்றியிருந்த ஒரு வண்டியை அங்கு கொண்டு வந்து, ஒரு நாய்க் குட்டியின் கழுத்தில் கயிற்றைப் போட்டு, அக்கயிற்றின் மறு முனையை பின்சக்கர அச்சில் கட்டினான்; பணிவான நாய்க்குட்டி வண்டியின் பின்னால் அதைத் தொடர்ந்து இசைவாகப் போனது.

பின்னர் ஓநாய்க்குட்டியிடம் சாங், ''நாம் ஒரு அருமையான இடத்துக்குப் போகிறோம்'' என்றான். ''பார், இதைப் போல வண்டியைத் தொடர்ந்து செல், பார்க்கலாம். நீ ஒரு நாய்க்குட்டியை விடவும் புத்திசாலி; இதை எப்படிச் செய்ய வேண்டுமென்று உனக்குத் தெரியும் இல்லையா? எங்கே ஒருமுறை நன்றாகப் பார்.''

ஓநாய்க்குட்டி தலையை நிமிர்த்தி நாய்க்குட்டியை வெறுப்போடு பார்த்தது. ஜென் அதைக் கொஞ்சியும், புகழ்ந்தும், தாஜா செய்தும் நாய்க்குட்டிக்குப் பின்னால் சில எட்டுகள் இழுத்துக்கொண்டு போனான்; உண்மையில் ஓநாய்க்குட்டிதான் அவனை இழுத்துக்கொண்டு போனது. அது நாய்க்குட்டியைத் தொடர்ந்து போனதற்கு, அதன்மேல் அது கொண்டிருந்த பிரியம்தான் காரணமே தவிர அவர்களுடைய வேண்டுதல்கள் அல்ல. இதனையடுத்து, ஓநாய்க்குட்டி வண்டியைப் பின்தொடரும் என்ற நம்பிக்கையோடு, ஜென் அதன் சங்கிலி வளையத்தை அச்சில் மாட்டினான். ஆனால், சங்கிலி வண்டியோடு பிணைக்கப்பட்ட அடுத்த கணமே ஓநாய்க்குட்டி முரண்டியது; முழு பலத்தோடு அதற்கெதிராகத் தன்னை இழுத்தது. அது வெகுவாக முரண்டியதில் கனத்த பாரத்துடனிருந்த வண்டி கிறீச்சிட்டது.

ஜென் அவனுக்கெதிராகத் தெரிந்த நிலைமையைப் பார்த்தான். எதுவுமே, ஒரு ஆடுகூட இன்னும் செல்லவில்லை. குழப்பம் மேலோங்கியது. அவர்கள் விரைவில் சாலையில் போய்ச் சேராவிட்டால், தற்காலிக முகாமிடத்தை இருட்டுவதற்குள் அடைய முடியாது. போகும் வழி வேறு பல நெளிவுகளையும் வளைவு களையும் கொண்டது. இரவில் இடமாற்றம் செய்வதென்பது மிகவும்

அபாயகரமானது. எல்லோரும் களைத்துப் போயிருப்பார்கள் என்பது மட்டுமல்ல; நாய்களும் சுற்றி இருக்காது. ஓநாய்க்குட்டியால் ஆடுகளுக்கேதும் ஆபத்தேற்பட்டால், ஜென் மறுபடியும் விமர்சனத்துக்கு ஆளாவான். ஓநாய்க்குட்டியும் அநேகமாக சுட்டுத் தள்ளப்படும்.

வேறு வழியின்றி ஜென் மனதைக் கல்லாக்கிக்கொண்டான். ''நம்மோடு இதை நாம் இழுத்துச் சென்றால் இது இறந்து போகக்கூடும்; ஆனால் இதை நாம் இப்படியே விட்டுவிட்டாலும் இது நிச்சயமாக இறந்துவிடும். அதனால் இதை நம்மோடு இழுத்துச் செல்வது மட்டும்தான் ஒரே வழி. வண்டிகளை நீ நகர்த்திக்கொண்டு போ. நான் உன் குதிரையில் பின்னால் வருகிறேன்.''

சாங் பெருமூச்சு விட்டான். ''நாடோடி வாழ்க்கைச் சூழ்நிலைகளில் ஒரு ஓநாயை வளர்ப்பதென்பது முடியாத காரியம்தான்.''

ஒன்றன் பின் ஒன்றாக வண்டிகள் நகர ஆரம்பித்தன. கடைசி வண்டி நகரத் தொடங்கியபோது, அதோடு சேர்ந்து நாய்க்குட்டியும் சென்றது; ஆனால் ஓநாய்க்குட்டி, அதன் ஒன்பதடிச் சங்கிலி முழுவதுமாக நீண்ட பிறகும் அப்படியே இருந்தது. காவோ ஜியான்சோங் ஆகச் சிறந்ததும் அதிவிரைவாகச் செல்லக் கூடியவையுமான ஆறு எருதுகளைத் தேர்ந்தெடுத்திருந்தான்.

மேய்ச்சல்நிலப் பழக்கங்களின்படி, மூன்று நாட்களுக்குத் தண்ணீர் தவிர வேறெதுவும் அவற்றுக்குத் தரப்படவில்லை. வயிறு காலியாக இருந்தால்தான் அவை சிறப்பாக வேலை செய்யும். ஆக, அவை வண்டிகளை இழுத்துச் சென்றதால், ஓநாய்க்குட்டியின் முரண்டு பலிக்கவில்லை; அது முன்னால் எம்பியதில் அதன் தலை ஒரு பக்கமாகச் சரிந்து விழுந்தது; அது நான்கு பாதங்களையும் தரையில் ஊன்றி ஒரு வழியாகச் சமாளித்து நின்றது.

அதிர்ச்சியும் கோபமும் அடைந்த ஓநாய்க்குட்டி விடாமல் போராடியது. அது அவ்வப்போது உருண்டு எழுந்தபோது, தன் பாதநகங்களால் மூர்க்கமாகத் தரையைப் பிறாண்டியது. சில எட்டுகள் ஓடும்; பின் நின்று முரண்டும். அதன் பிறகு, அவர்கள் பாதையை அடைந்ததும், வண்டிகள் வேகமெடுத்தன. அடுத்த நாற்பதடி தூரத்துக்கு அது தடுக்கியது, தடுமாறியது, எகிறியது. அதன் பிறகு அது தரையோடு தரையாக இழுத்துச் செல்லப் பட்டது; ஒரு செத்த நாயைப்

போல இழுபட்டுச் சென்றதில், தரை மீதிருந்த கனத்த புல் அதன் உரோமத்தைத் தேய்த்துவிட்டிருந்தது.

நாய்க்குட்டி தலை நிமிர்த்தி, ஓநாய்க்குட்டியைப் பரிதாபமாகப் பார்த்தது. அது தன் பாதங்களைத் தூக்கி சிணுங்கியதானது, அதைப் போல நடந்து வரும்படியும் இல்லையெனில் அது இழுபட்டுச் செத்துப்போகுமென்றும் சொல்வது போலிருந்தது. ஒரு நாயைப் போலத் தன்னால் செயல்பட முடியாதென்ற கர்வத்தோடு ஓநாய்க்குட்டி தன் முரண்டைத் தொடர்ந்தது.

ஒரு நாயைப் போலப் பின்தொடர்ந்து செல்வதை விடவும், முரண்டுவதால் ஏற்படும் வலியையும் சங்கடங்களையும் தாங்கிக் கொள்ள அது தயாராக இருந்தது. அதன் இந்த எதிர்ப்புதான், ஓநாய்களுக்கும் நாய்களுக்குமான அடிப்படை வேறுபாட்டைக் காட்டுகிறது. சிங்கங்கள், புலிகள், கரடிகள் மற்றும் யானைகளுக்கும் ஓநாய்களுக்கும் இடையே உள்ள வேறுபாட்டையும்; பெரும்பாலான மனிதர்களுக்கும் ஓநாய்களுக்குமிடையேயான வேறுபாட்டையும் இது காட்டுகிறது. எந்தவொரு மேய்ச்சல்நில ஓநாயும் மனிதர்களிடம் சரணடைவதில்லை. எவருக்கும் அடி பணிவதோ, பின் தொடர் வதோ அவற்றின் அடிப்படை குணாம்சமில்லை; தன்னுடைய கூட்டத்தால் ஒருபோதும் கற்பிக்கப்படாத போதும், இந்த அடிப்படை அம்சம் ஓநாய்க்குட்டிக்கும் பொருந்தக்கூடிய ஓர் உண்மை.

ஓநாய்க்குட்டி போராடியதில், சாலைக் கற்களில் அரைபட்டு அதனுடைய பாதங்களில் ரத்தம் சொட்டியது; அதைக் கண்ட ஜென்னின் இதயம் வலியால் துடித்தது. லட்சக்கணக்கான ஆண்டுகளாக ஓநாயானது மேய்ச்சல்நிலத்தின் உறுதி வாய்ந்த மனிதர்களிடம், ஒரு குலச்சின்னமாக இருந்து வருகிறது; ஓர் ஆன்மீக சக்தியாக விளங்குவதோடு, அவர்கள் அதன்மீது பயபக்தியும் கொண்டிருக்கிறார்கள்.

ஓநாய்கள் பற்றிய தன்னுடைய புரிதல், இன்னமும்கூட மிகவும் பொக்காகவே இருப்பதாக ஜென் நினைத்தான். வெகு நாட்கள் வரை, உணவும் அதற்காகக் கொல்லுவதுமே ஓநாய்களுக்கு முக்கியமான விசயமென்று ஜென் நினைத்திருந்தான்; ஆனால் உண்மையில் அதுவல்ல விசயம். மனித நடத்தைகள் பற்றிய புரிதல்களிலிருந்தே அவனுக்கு அப்படித் தோன்றியிருக்க வேண்டும். ஓநாய்களின் இருத்தலானது, உணவையோ, கொல்வதையோ

நோக்கமாகக் கொண்டதல்ல; மாறாக, அவற்றின் புனிதமான சுதந்திரமும், சுயநிர்ணயமும், கௌரவமுமே அவற்றின் வாழ்க்கை நோக்கம்.

நான்கு அல்லது ஐந்து லீ தூரம் சென்ற பிறகு, பிடிவாதமான ஓநாய்க்குட்டி, அதன் கழுத்தைச் சுற்றியுள்ள உரோமங்களில் பாதியை இழந்துவிட்டிருந்தது; அந்த இடத்திலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. பாதங்களின் மேற்பகுதி தேய்ந்து, அதனடியிலுள்ள தோல் வெளிப்பட்டிருந்தது. கடைசியில், மிகவும் களைத்துப் போய்விட்டிருந்த ஓநாய்க்குட்டி உருண்டு புரளாமல் அப்படியே கிடந்தது. வேகமான குதிரையாலும் சுருக்குக்கயிற்றுத் தடியாலும் இழுத்துச் செல்லப்பட்டும் செத்த ஓநாயைப் போல அது கிடந்தது.

அதனுடைய தொண்டையிலிருந்து ரத்தம் சொட்டுவதைப் பார்த்த ஜென், கழுத்துப் பட்டையால் அங்கு காயம் ஏற்பட்டிருப்பதை உணர்ந்தான். வண்டிகளை நிறுத்தும்படி கத்திய ஜென், குதிரையிலிருந்து கீழே குதித்தான். நடுங்கிக்கொண்டிருந்த ஓநாய்க்குட்டியைக் கையிலெடுத்துக்கொண்டு, மூன்றடி தூரம் நடந்தான்; அதன் சங்கிலி கொஞ்சம் தளர்ந்தது. அவனுடைய கைகள், ஓநாய்க்குட்டியின் கழுத்திலிருந்து வடிந்த ரத்தத்தில் தோய்ந்தன. தொடர்ந்து ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. அது மரணத்தை நெருங்குவதாகத் தோன்றியது. ஜென்னுடைய கைகளைத் தன்னுடைய பாதங்களால் அது பிறாண்டியது; அதன் பாத நகங்கள் அதற்கேற்பட்டிருந்த கடும் சோதனையில் முனை மழுங்கி ரத்தம் தோய்ந்திருந்தன. ஜென்னுடைய கண்ணீர் ஓநாய் ரத்தத்தோடு கலந்தது.

ஓநாய்க்குட்டியின் நிலைமையைப் பார்த்து சாங் ஜியோன் அதிர்ச்சியடைந்தான். அவன் அதைச் சுற்றிச் சுற்றி நடந்தான்; ஆனால் என்ன செய்வதென்று அவனுக்குத் தெரியவில்லை. ‘‘எப்படி இவ்வளவு பிடிவாதமாக இருக்க முடிகிறது. வாழ இதற்கு விருப்பமில்லையா? நாம் இப்போது என்ன செய்வது?’’

ஜென்னுக்கு அதைக் கைகளில் தாங்கிப் பிடித்திருப்பதைத் தவிர, வேறொன்றும் யோசனை தோன்றவில்லை. வேதனையில் அவனுடைய இதயம் கலங்கிப்போயிருந்தது.

‘‘நம்மோடு இழுத்துக்கொண்டு செல்ல இது அனுமதிக்கப் போவதில்லை; மேலும், இது இன்னும் முழு வளர்ச்சி அடையவில்லை’’ என்று நெற்றி

வியர்வையைத் துடைத்தபடி சாங் சொன்னான்.

‘‘நாம் இலையுதிர் காலப் புல்வெளி நிலத்துக்கு இதை ஒருவழியாகக் கொண்டு போய்ச் சேர்த்தாலும், நாம் ஒவ்வொரு மாதமும் இடம் பெயர வேண்டியிருக்கும். நம்மால் எப்படி இதைக் கொண்டு போக முடியும்? நான் என்ன நினைக்கிறேன் என்றால்... வேறு வழியில்லை... நாம் இதை இங்கேயே... அவிழ்த்து விட்டுவிடலாம்... அதன் போக்கில் அது வாழ்ந்துகொள்ளட்டும்.’’

ஜென் முகம் மோசமாக வெளுத்தது. ‘‘இதை நீ வளர்க்கவில்லை!’’ என்று கத்தினான். ‘‘உனக்குப் புரியாது. அதுவாகவே வாழ்ந்துகொள்ளட்டுமா? அப்படி விட்டுவிடுவது அதைக் கொல்வதற்குச் சமம். அது பெரிதாக வளர்வதை நான் பார்க்கப் போகிறேன். அது வாழ வேண்டும்.’’

தன் உறுதியிலிருந்து சுடர் பெற்றவனாக ஜென் துள்ளிக் குதித்தான். மாட்டு வறட்டியும் வேறு சிலவும் ஏற்றப்பட்டிருந்த வண்டியை நோக்கி ஓடி, கோபத்தோடு கயிற்றைக் கழற்றி, வண்டித்தொடரின் கடைசிக்கு அதைக் கொண்டு வந்தான். பிறகு ஒரு வில்லோ மரக் கூடையை எடுத்து, அதிலிருந்து பாதியளவு மாட்டு வறட்டிகளை வெளியே போட்டான். ஒரு சிறைக் கைதியை இடமாற்றம் செய்வதுபோல, அதில் வைத்து ஓநாய்க்குட்டியைக் கொண்டு செல்ல அவன் முடிவெடுத்தான்.

‘‘உனக்கென்ன பைத்தியமா? இவ்வளவு எரிபொருளை வீணடித்தால் பயணத்தின்போது நாம் எப்படி சாப்பிடவோ, தேனீர் அருந்தவோ முடியும். மழை பெய்தால், நம்மால் சாப்பிடவே முடியாது. நாம் அங்கு போய்ச் சேர்ந்த பின்னரும் சில நாட்களுக்கு இந்த வறட்டிகள் நமக்குத் தேவைப்படும். ஓநாயைக் கொண்டு செல்வதற்காக அதை நீ இப்படித் தூக்கி எறிய உனக்கென்ன தைரியம்? மேய்ப்பர்கள் உன்னை மன்னிக்க மாட்டார்கள்; ஏன் காவோ ஜியான்சோங்கூட இதைப் பொறுக்க மாட்டான்.’’

‘‘இன்றிரவு நாம் முகாமை அடையும்போது நான் கஸ்மாயிடமிருந்து கொஞ்சம் கைமாற்றாகப் பெற்றுவிடுவேன். அதன்பிறகு, நாம் புதிய புல்வெளிக்குப் போனதும், நான் போய் மாட்டுச் சாணத்தை சேகரிப்பேன். கவலைப்பட வேண்டாம், உங்களுக்கான உணவும் தேனீரும் நிச்சயம் கிடைக்கும்.’’

சாவிலிருந்து தப்பிவிட்டிருந்த ஓநாய்க்குட்டி, தன்னுடைய பாதங்களின் வலியையும் மீறி தீர்க்கமாகத் தரையில் நின்றிருந்தது; அதனுடைய கால்கள் இன்னமும் ஆடிக் கொண்டிருந்தன. அதனுடைய வாயிலிருந்து தொடர்ந்து ரத்தம் ஒழுகிக்கொண்டிருந்தது. எனினும், அது கழுத்தை இறுக்கமாக வைத்துக்கொண்டு தன்னுடைய குதிகளில் ஸ்திரமாக இருந்துகொண்டிருந்தது _ மீண்டும் வண்டி கிளம்பிவிட்டால் தொடர மறுக்கும் பிடிவாதமான பாவனையோடிருந்தது. அதன் பாதங்கள் மோசமாகத் தேய்ந்து எலும்புகள் தெரிந்தாலும் பரவாயில்லை, சாகும்வரை போராட அது தயாராக இருப்பதை அறிவிப்பதைப் போல நின்றிருந்தது.

ஜென் மருந்துப்பொடி எடுத்துவந்து அதன் பாதங்களிலும் கழுத்திலும் வைத்தான். அதன் வாயிலிருந்து ரத்தம் சொட்டிக் கொண்டிருப்பதைப் பார்த்த ஜென், இரண்டு இறைச்சித் துண்டங்களை எடுத்து, அவற்றில் மருந்துப்பொடியைத் தடவிக் கொடுத்தான். அது அவற்றை அப்படியே விழுங்கியது. அதன்பிறகு, ஜென் வண்டியிலுள்ள பொருள்களை ஒழுங்கு செய்து ஒரு காலியிடத்தை உருவாக்கினான். அந்த இடத்தில் பதனிடப்படாத ஒரு ஆட்டுத்தோலை விரித்தான். போர்த்துவதற்கு ஏதுவாக ஒரு கம்பளிப் போர்வையைப் பாதியாகக் கிழித்தான். ஓநாய் இருப்பதற்குப் போதுமானதாக இடம் அமைந்துவிட்டிருந்தது. ஆனால் அதை அவன் எப்படி அங்கு வைக்கப் போகிறான்?

சங்கிலியைக் கழற்றிவிட்டு, தன் சட்டைக் கையைச் சுருட்டி விட்டுக்கொண்டு, ஓநாய்க்குட்டியை எடுத்துக்கொண்டான். ஆனால் அவன் வண்டியை நோக்கி ஒரு எட்டு வைத்ததுமே, ஓநாய்க்குட்டி உறுமவும் போராடவும் தொடங்கியது. அதனால் ஜென் ஓடிப்போய் அதைக் கூடையில் தூக்கிப் போட்டுவிட எத்தனித்தான். ஆனால் அவன் அங்கு போவதற்குள்ளாகவே, ஓநாய்க்குட்டி அவனுடைய கையைக் கடித்துவிட்டது. வலியாலும் பயத்தாலும் ஜென் அலறி நின்றுவிட்டான். அவனுக்கு வேர்த்துக் கொட்டியது. வலியைப் போக்குவதற்காக ஜென் கையை உதறினான். அவன் குனிந்து பார்த்தபோது, தோலில் நான்கு கருஞ்சிவப்புப் பல் தடங்கள் தெரிந்தன; ரத்தம் வெளிவரவில்லை.

சாங்கின் முகம் பேயறைந்தது போல் வெளுத்தது. ‘‘அதன் பற்களின் முனைகளை நீ துண்டித்து விட்டிருந்ததால் தப்பித்தாய்; இல்லாவிட்டால் கடி

தோலுக்குள் இறங்கியிருக்கும். இனிமேலும் நாம் இதை வைத்துக்கொண்டிருக்க முடியாது. அது வளர்ந்து விட்டால் அதன் மொண்ணையான பற்கள்கூட உன்னுடைய கையை முறித்துவிடும்.''

''அதன் பல்லைப் பற்றிப் பேச வேண்டாம், சரியா? அதை மட்டும் நான் செய்திருக்காவிட்டால், அதை மேய்ச்சல் நிலத்துக்கே திரும்பக் கொடுத்திருப்பேன். தோலைக்கூட உடைக்க முடியாத பற்களை வைத்துக்கொண்டு அதனால் எப்படி உயிர் வாழ முடியும்? நான்தான் அப்படிச் செய்தேன்; அதனால் நான்தான் அதற்கு உணவூட்ட வேண்டும். இப்போது இராணுவ அதிகாரிகள் இங்கு வந்துவிட்டதோடு, இங்கேயே நிலைத்துவிடப் போவது பற்றி அவர்கள் பேசிக்கொள்கிறார்கள். நாம் நிரந்தரமாகக் குடியேறிய பிறகு, இதற்கென நான் ஒரு கல் பட்டியைக் கட்டுவேன்; அதன்பிறகு சங்கிலி தேவைப்படாது.''

''சரி'' என்றான் சாங். ''நான் உன்னைத் தடுத்து நிறுத்த முயற்சிக்கவில்லை. நாம் இப்போது இதை வண்டிக்குள் வைக்க ஒரு வழி கண்டுபிடித்தாக வேண்டும். உனக்குக் காயம் ஏற்பட்டிருப்பதால் நான் முயற்சி செய்கிறேன்.''

''நான் இதை எடுத்துக்கொள்கிறேன். உன்னை இதுக்குத் தெரியாது; உன் மூக்கைக் கடித்துவிடும். நீ கம்பளிப் போர்வையைக் கையில் எடுத்துக்கொண்டு இங்கே நில். நான் இதைத் தூக்கி உள்ளே போட்டவுடன், நீ கூடையை மூடிவிடு.''

''உனக்கென்ன பைத்தியமா? நீ அதை மறுபடியும் தூக்கினால் அது உன்னை மிக மோசமாகக் கடித்து வைக்கும். இவ்வளவு கோபமாக இருக்கும்போது ஓநாய்கள் மிக மூர்க்கமாகச் செயல்படும். நீ கவனமாக இல்லாவிட்டால் அது உன் தொண்டையைக் கவ்விவிடும்.''

ஜென் ஒரு கணம் அமைதியாக இருந்தான். ''அது என்னைக் கடித்தாலும் சரி, நான் அதைத் தூக்கத்தான் போகிறேன். நான் என்னுடைய ஒரு மழை கோட்டை இழக்க வேண்டியிருக்குமென நினைக்கிறேன்.'' அவன் ஒரு வண்டியை நோக்கி ஓடிச்சென்று, அதிலிருந்து அவனுடைய இராணுவ மழை கோட்டை வெளியில் எடுத்தான். அதன்பிறகு, மேலும் இரண்டு இறைச்சித் துண்டுகளை எடுத்துக்கொண்டு வந்து ஓநாய்க்குட்டிக்குப் போட்டான். அது

அவற்றைச் சாப்பிடுவதில் மும்முரமாக ஈடுபட்டபோது, மழைக் கோட்டை விரித்து அதன்மீது போட்டான். அவன் உடனடியாக அதை இறுகப் பற்றித் தூக்கிக்கொண்டான். வெறி பிடித்ததுபோல் போராடிய ஓநாய்க்குட்டி நிலை தடுமாறியது. ஜென் ஓடிப்போய் மழை கோட்டோடு அதை உள்ளே போட்டான். சாங் ஓடிச் சென்று கம்பளிப் போர்வையைக் கூடைமேல் போட்டு மூடினான். இருவருமாகச் சேர்ந்து குதிரை ரோமத்தாலான கயிற்றால் இறுக்கிக் கட்டினார்கள். ஜென் களைத்துப்போய் தரையில் விழுந்தான்; வேர்த்து விறுவிறுக்க மூச்சு வாங்கினான்.

வண்டிகள் மீண்டும் கிளம்பிச் செல்லத் தயாராகின. அவ்வளவாக உறுதியில்லாத அந்த வில்லோ மரக்கூடை, கோபம் கொண்ட வலுவான மிருகத்தைத் தாங்குமா என எண்ணி ஜென் கவலைப்பட்டான். அவன் அதைக் கொஞ்சி, தாஜா செய்து ஏகப்பட்ட இறைச்சித் துண்டங்களை உள்ளே போட்டான். வண்டித் தொடரின் பின்னால் நாய்களை ஓநாய்க்குட்டிக்குத் துணையாக வரச் செய்துவிட்டு, கிளம்பும்படி சாங்குக்கு சைகை செய்தான். அவன் ஒரு வண்டியிலிருந்து கனத்த தடியொன்றை எடுத்து வைத்துக்கொண்டான். தேவைப்பட்டால், கூடைக்குள் ஓநாய்க்குட்டி போராடும்போது, கூடையில் தட்டி அதைத் தடுத்து நிறுத்த முடிவு செய்திருந்தான். ஓநாய்க்குட்டியின் மீது ஒரு கண் வைத்தபடியே அவன் சவாரி செய்தான்.

அவர்கள் நகரத் தொடங்கியதும், அவன் கவலைப்படும் படியாக எதுவும் நடக்கவில்லை. ஓநாய்க்குட்டி போராடுவதை நிறுத்திவிட்டிருந்தது; மாறாக, அதன் கண்களில், ஜென் இதுவரை பார்த்திராத பயம் தெரிந்தது. அது படுத்துக்கொள்ளத் தயங்கி, தலை தாழ்த்தி, பின்புறத்தை வளைத்து, கால்களுக்கிடையே வாலிருக்க நின்றபடி ஜென்னைப் பார்த்தவாறு இருந்தது. அது சாப்பிடவோ, குடிக்கவோ, உறுமவோ, கடிக்கவோ இல்லை. முரண்டும் சக்தியை அது இழந்திருந்தது.

இந்த மாற்றம் ஜென்னுக்கு அதிர்ச்சியளித்தது. அவர்கள் ஒரு மலை இடுக்கைக் கடந்தபோது, அவன் வண்டியை ஒட்டி சவாரி செய்தான். ஓநாய்க்குட்டியின் கண்கள் அது தீர்க்கமான எண்ணத்தோடிருப்பதை வெளிப்படுத்தின. அது முற்றிலுமாகக் களைப்படைந்திருந்தபோதிலும், அதன்

பாதங்கள் காயமடைந்திருந்த போதிலும், அதன் வாயிலிருந்து இன்னமும் ரத்தம் சொட்டிக் கொண்டிருந்த போதிலும் அதன் தீர்மானம் உறுதியாக இருந்தது. அதேசமயம், வண்டியின் அசைவும் தரையிலிருந்து அது மேலே இருப்பதும் அதற்கு உள்ளுணர்வு சார்ந்த ஒரு பயத்தை ஏற்படுத்தியிருப்பது போலத் தோன்றியது.

வண்டித் தொடர் சீரான வேகத்தில் சென்றது. அதோடு ஒட்டிச் சென்ற ஜென் எண்ணங்களால் சூழப்பட்டான். அடிக்கடி மூர்க்கமாகிவிடும் ஓநாய்க்குட்டி, திடீரென பலஹீனமாகவும் பயத்தோடும் காணப்படுவது ஏன்? மேய்ச்சல்நில ஓநாயின் இயல்புக்குக் கொஞ்சமும் பொருந்தாத விசயமிது. எல்லா வீரதீர நாயகர்களுக்குமே இப்படியொரு மோசமான குறைபாடு இருக்குமா?

மேய்ச்சல்நில ஓநாயானது, அதன் பரிணாம வளர்ச்சியில் முழுமையை எய்தியிருப்பதாக ஜென் நம்பினான்; ஆனால் அதுவும் ஒரு குணக் குறைபாட்டோடுதான் இருக்கிறதா? பனிக்காலம் முழுவதும் அவர்கள் தொடர்ந்து அடிக்கடி நகர்ந்துகொண்டே இருக்க வேண்டியிருப்பதால் எதிர்கொள்ளவிருக்கும் சிரமங்கள் அவன் பொறியில் தட்டியது. அப்போது ஓநாய் முழு வளர்ச்சியடைந்திருக்கும். அதை ஒவ்வொரு இடமாகக் கொண்டு செல்வதற்குப் போதுமான வசதிகள் இருக்கப் போவதில்லை. எவ்விதத் தீர்வும் அவனுக்கு அகப்படவில்லை.

எருது, மலையைக் கடந்த பிறகு, மாடுகளின் வாசனையை அறிந்தது. முன்னால் சென்ற வாகனங்களை எட்டும் வகையில் அது வேகமெடுத்தது.

கோடை காலப் புல்வெளிப் பிரதேசத்தின் விளிம்பில் இருந்த மலைப் பாதையில் அவர்கள் சென்று கொண்டிருந்தபோது, எதிர்திசையிலிருந்து மெல்லிய டிரக் ஒன்று புழுதியைக் கிளப்பியபடி வந்தது. அது வண்டிகள் கடந்து செல்வதற்காக ஒதுங்கிக் காத்திருக்காமல், பாதையை விட்டு விலகி அவர்களைக் கடந்து சென்றது. துப்பாக்கி ஏந்திய இரண்டு இராணுவ வீரர்களோடு குழுமத்தைச் சேர்ந்த சில வேலையாட்களும் ஒரு மேய்ப்பனும் அதில் இருந்தார்கள். மேய்ப்பன் கையசைத்தான்; அது டோர்ஜி. தேர்ந்த ஓநாய் கொலைகாரர்களைப் பார்த்ததும், மீண்டும் ஜென்னின் இதயம் கனத்தது. அவன் முன்பக்கமாகச் சென்றான். ‘‘மீண்டும் ஓநாய்களை வேட்டையாட டோர்ஜி ஆட்களைக் கூட்டிப் போகிறானா?’’ ஜென் கேட்டான்.

‘‘இங்கு மலைகளும், ஏரிகளும், ஓடைகளும் தவிர வேறெதுவும் கிடையாது’’ என்றான் சாங். ‘‘இம்மாதிரி இடங்களில் இந்த டிரக் பிரயோசனமற்றது. அப்படி இருக்கும்போது அவர்களால் எப்படி ஓநாய்களை வேட்டையாட முடியும்? சரக்கு சேமிப்பிடத்தை இடம் மாற்ற அவர்கள் உதவி செய்யப் போகிறார்கள் போல.’’

அவர்கள் மேய்ச்சல் நிலத்தை அடைந்தபோது, அவர்களை நோக்கி ஒரு குதிரை பாய்ந்து வந்தது. அதில் வந்தது, பில்ஜி. அவர் முகம் இறுகியிருந்தது. ‘‘அந்த டிரக்கில் டோர்ஜி இருந்தானா?’’ என்று அவர் மூச்சிரைக்கக் கேட்டார்.

அவர்கள் அதை உறுதி செய்தார்கள். ‘‘பழைய முகாமிடத்துக்கு என்னோடு வா’’ என்று ஜென்னிடம் சொன்னார் பில்ஜி. பின் அவர் சாங்கை நோக்கித் திரும்பினார். ‘‘நீ வண்டிகளோடு போய்க்கொண்டிரு. நாங்கள் சீக்கிரமே திரும்பி வந்துவிடுவோம்.’’

‘‘உன்னால் முடியும்போது, ஓநாய்க்குட்டியையும் கொஞ்சம் பார்த்துக்கொள்’’ என்று சாங்கிடம் கிசுகிசுப்பாகச் சொன்னான் ஜென். ‘‘அது உனக்கு ஏதாவது தொல்லை கொடுத்தால், நான் திரும்பி வரும்வரை நீ எதுவும் செய்ய வேண்டாம்.’’ அதன் பிறகு, அவன் முதியவரோடு பாய்ந்து சென்றான்.

‘‘ஓநாய்களை வேட்டையாடத்தான் டோர்ஜி அவர்களைக் கூட்டிக்கொண்டு போகிறானென்று நினைக்கிறேன்’’ என்றார் பில்ஜி. ‘‘சமீப நாட்களாக அவனுடைய திறமைகளுக்கு வெகுவாக வரவேற்பிருக்கிறது. அவன் மாண்டரின் மொழியும் பேசுகிறான் என்பதால், இராணுவ அதிகாரிகளுக்கு ஓநாய்களைக் கொல்வதற்கான ஆலோசகனாக ஆகியிருக்கிறான். மாடுகளை அவனுடைய தம்பியின் பொறுப்பில் விட்டுவிட்டான். ஒவ்வொரு நாளும் வேட்டைக்கு ஆட்களைக் கூட்டிக்கொண்டு போகிறான். அதிகாரிகளோடு நல்ல உறவில் இருக்கிறான். சில நாட்களுக்கு முன்பு, இராணுவ உயரதிகாரிகள் சிலர் பல ஓநாய்களைக் கொல்ல அவன் உதவியிருக்கிறான். இப்போது அவர்களுடைய நாயகன் அவன்தான்.’’

‘‘மலைகளும் நதிகளுமே உள்ள இங்கு, வேறெதுவும் இல்லாதபோது, அவர்கள் எப்படி வேட்டையாடுவார்கள்? எனக்குப் புரியவில்லை.’’

‘‘பழைய முகாமிடத்துக்குப் பின்புறமாக அவன் அவர்களை அழைத்துச் செல்கிறான் என்று ஒரு குதிரை மேய்ப்பன் என்னிடம் சொன்னபோது, அவனுடைய திட்டமென்ன என்பது எனக்குத் தெரிந்துவிட்டது.’’

‘‘என்ன அது?’’

‘‘பழைய முகாமிடத்தில் அவன் விஷமிட்ட இரையை வைத்துவிட்டுப் பின் அங்கு பொறிகளை வைக்கிறான். முதிய, நோய்வாய்ப்பட்ட மற்றும் காயமடைந்த ஓநாய்கள் மிக மோசமான நிலையில் இருப்பதால், ஓநாய்க் கூட்டம் விட்டுச் சென்ற எலும்புகளையும், அல்லது மக்களும் அவர்களுடைய நாய்களும் மிச்சம் வைத்துவிட்டிருந்த உணவுகளையும் உண்டுதான் அவை வாழ்கின்றன. பாதி நேரம் அவை பசியோடுதான் இருக்கின்றன. அதனால் எப்போதெல்லாம் மேய்ப்பர்கள் புதிய இடத்துக்குப் பெயர்ந்து செல்கிறார்களோ அப்போதெல்லாம் அவை பழைய இடங்களில் சாம்பல்களிலும் உணவுக் கழிவுகளிலும் உணவு தேடுகின்றன. அழுகிய ஆட்டுத் தோல்கள், நாற்றமெடுத்த எலும்புகள், ஆட்டு மண்டையோடுகள், எஞ்சிய உணவுகள் என எந்த ஒன்றையும் அவை விட்டு வைப்பதில்லை. செத்த நாய்கள், ஆடு மாடுகளைக்கூட அவை தோண்டிச் சாப்பிடும். மூத்த மேய்ப்பர்கள் எல்லோருக்கும் இது தெரியும். இடம் பெயரும்போது அவர்கள் விட்டுச்சென்ற பொருட்கள் எதையாவது எடுக்கத் திரும்பிவரும்போது, அங்கு ஓநாய்த் தடங்களை அவர்கள் பார்த்திருக்கிறார்கள். லாமாயிஸத்தில் நம்பிக்கை கொண்ட நல்லிதயம் படைத்தவர்கள், அந்த ஓநாய்கள் மோசமான நிலைமையில் இருப்பவை எனத் தெரியுமென்பதால், அவர்கள் பொறிகளோ, விஷமிட்ட இரையோ வைப்பதில்லை. சிலர் இடம்பெயரும்போது, இந்த ஓநாய்களுக்காக உணவை விட்டுச் செல்வதும் உண்டு.’’

முதியவர் பெருமூச்சு விட்டார். ‘‘முதிய ஓநாய்கள் பற்றி அந்நியர்கள் அறிந்துகொள்ள அதிக காலம் பிடிக்காது. டோர்ஜி அவனுடைய அப்பாவின் வழியில் நடக்கிறான். இடம்பெயரும் போது, செத்த ஆடுகளில் விஷம் தோய்த்து, பொறிகளை வைத்துவிட்டுச் செல்கிறான். சில நாட்களுக்குப் பின் திரும்பிப் போய், இறந்துவிட்ட அல்லது பொறிகளில் மாட்டிக்கொண்ட ஓநாய்களின் தோல்களை உரித்தெடுக்கிறான். யாரையும்விட அவனுடைய குடும்பம் அதிக தோல்களை விற்பது இப்படித்தான். அவர்களுக்கு

லாமாயிஸத்தில் நம்பிக்கையில்லை; ஓநாய்களையும் அவர்கள் மதிப்பதில்லை. அவை எல்லாவற்றையும் கொல்ல எவ்வளவு குரூரமான வழிகளையும் மேற்கொள்ள அவர்கள் தயங்குவதில்லை; முதிய, காயமடைந்த ஓநாய்களைக்கூட அவர்கள் விட்டு வைப்பதில்லை. நான் என்ன சொல்கிறேன், தெரிகிறதா? ஓநாய்கள் ஒருபோதும் மனிதர்கள் அளவுக்குத் தீயவை அல்ல.''

முதியவரின் கண்களில் சோகம் ததும்பியிருந்தது. அவருடைய தாடி துடித்தது. ''அவர்கள் சமீப நாட்களில் எவ்வளவு ஓநாய்களைக் கொன்றிருக்கிறார்கள், தெரியுமா? அவர்கள் இப்படியே கொன்று கொண்டிருந்தார்களென்றால், இங்குள்ள எவரும் இனி டெஞ்ஞருக்குச் செல்ல முடியாது. மேய்ச்சல் நிலமும் அழிந்துவிடும்.''

நாடோடி மேய்ப்பர்களில் கடைசி வேட்டைக்காரரான அவரின் காயங்களை அவனால் என்ன சொல்லியும் குணப்படுத்த முடியாதென்பது ஜென்னுக்குத் தெரியும். விவசாய மக்கள் தொகையின் அதிகரிப்பையோ, மேய்ச்சல் நிலத்தை விவசாயிகள் கொள்ளையிடுவதையோ எவராலும் தடுக்க முடியாது. முதியவரின் உணர்ச்சிகளுக்கு ஆறுதல் ஏதும் அளிக்க முடியாத நிலையில் அவனால் சொல்ல முடிந்ததெல்லாம், ''என்னைக் கவனியுங்கள். எல்லாப் பொறிகளையும் நான் ஒன்று விடாமல் எடுக்கப் போகிறேன்.''

அவர்கள் ஒரு மேட்டைக் கடந்து, அருகிலுள்ள முகாமிடத்தை நோக்கிச் சென்று கொண்டிருந்தார்கள்.

அப்போது டிரக்கின் டயர் தடங்களை அவர்கள் பார்த்தார்கள்; சரிவின் மறுபக்கம் ஏற்கனவே டிரக் சென்று விட்டிருந்தது. அவர்களுடைய குதிரைகள் பொறியில் மாட்டிக்கொள்ளாத வகையில் அவர்கள் மிகவும் கவனமாக அந்த இடத்தை நோக்கிச் சென்றார்கள்.

முதியவர் அப்பகுதியைப் பரிசோதித்துவிட்டு, ஓரிடத்தை சுட்டிக்காட்டினார். ''பொறிகள் வைப்பதில் டோர்ஜி பெரிய கெட்டிக்காரன். அந்த சாம்பலைப் பார். ஏதோ காற்றில் அடித்து வரப்பட்டதைப் போல அது அங்கே கிடப்பதைப் பார். உண்மையில், பொறிகளுக்கு மேலாக அவன் அதை அப்படித் தூவி விட்டிருக்கிறான். மேலும் அதனருகில் சதையில்லாத இரண்டு ஆட்டுக்கால் குளம்புகளை விட்டுச் சென்றிருக்கிறான். அவற்றில் இறைச்சி இருந்தால்

ஓநாய்களுக்கு சந்தேகம் வந்துவிடும். ஆனால் இறைச்சியில்லாத ஆட்டுக்கால்கள் பிரயோசனமற்றவை என்பதால், அவை இந்த தந்திரத்தில் ஏமாந்துவிடும். அவன் பொறிகளை

வைப்பதற்கு முன்பாக மனித வாடை அடிக்காமலிருப்பதற்காகத் தன் கைகளை சாம்பலால் தேய்த்துக்கொள்வான். மிகவும் கூர்மையான வாசனை உணர்வுள்ள ஓநாய்களால் மட்டுமே அவனுடைய வாடையைக் கண்டுபிடிக்க முடியும். ஆனால் மூத்த ஓநாய்களுக்கு, வயதின் காரணமாக மோப்ப சக்தி மிகவும் மந்தமாகி விட்டிருக்கும்.''

அதிர்ச்சியும் கோபமும் அடைந்த ஜென் எதுவும் பேசவில்லை.

நோய்வாய்ப்பட்டு இறந்துபோன ஒரு ஆட்டின் பாதி சடலத்தை சுட்டிக்காட்டிய முதியவர், ''இது நிச்சயம் விஷம் வைக்கப்பட்டதாக இருக்கும். பீஜிங்கிலிருந்து அவர்கள் சக்திவாய்ந்த விஷத்தைத் தருவித்திருப்பதாகக் கேள்விப்பட்டேன். ஓநாய்களால் அந்த வாசனையைக் கண்டுபிடிக்க முடியாது; ஆனால் இதை சாப்பிட்டவுடன், ஒரு பைப் புகையை நாம் ஊதி முடிப்பதற்கு முன்பாக, அவை இறந்துவிடும்.''

''அப்படியானால் இந்த சடலத்தைத் தூக்கிக் கைவிடப்பட்ட ஒரு கிணற்றுக்குள் போட்டுவிடுகிறேன்.''

"இங்கு ஏகப்பட்ட முகாமிடங்கள் இருக்கின்றன. எல்லாவற்றிலும் அப்படி உன்னால் செய்ய முடியாது.''

அவர்கள் திரும்பவும் குதிரைகள் மீதேறிச் சென்று நான்கைந்து இடங்களைப் பரிசோதனை செய்தார்கள். டோர்ஜி சில இடங்களில் எதையும் விட்டுச் சென்றிருக்கவில்லை; ஆனால் வேறு சில இடங்களில் பொறிகள் வைத்திருந்தான்; அல்லது விஷமிடப்பட்ட இரைகளை வைத்திருந்தான். ஏமாற்றுவதற்கான பல வழிமுறைகளோடு அதை அவன் திறமையாகத் திட்டமிட்டிருந்தான். முகாமிடங்களுக்கு இடைப்பட்ட சிறிய குன்றுகளை அவன் தவிர்த்திருந்தான். அப்போதுதான் ஓரிடத்தில் ஒரு ஓநாய் மாட்டிக்கொண்டால், அது இன்னொரு இடத்தைப் பாதிக்காது.

பொறிகள் வைக்கப்படாமல் விஷம் மட்டுமே வைக்கப்பட்டிருந்த பல இடங்களை அவர்கள் பார்த்தார்கள். சமையல் கலயங்களை அதற்கு அவன்

பயன்படுத்தியிருந்தான்; அதற்குள் அவன் சாம்பலைப் போட்டு வைத்திருந்தான்.

அவர்கள் அந்த இடத்தோடு நின்றுகொள்வதென முடிவு செய்தார்கள்; இல்லையேல் டோர்ஜி அவர்களைப் பார்த்து விடக்கூடும். முதியவர் குதிரையைத் திருப்பும்போது அவனிடம் முணுமுணுத்தார். ‘‘இவற்றை மட்டும்தான் நம்மால் காப்பாற்ற முடியும்.’’

டோர்ஜி வேலை பார்த்திருந்த ஒரு முகாமிடத்தை அவர்கள் அடைந்தபோது, முதியவர் குதிரையிலிருந்து இறங்கி, அழுகிக்கிடந்த ஒரு ஆட்டுக்காலை நோக்கிச் சென்றார். ஆட்டுத்தோலாலான ஒரு சிறிய பையை எடுத்து, அதைத் திறந்து, அதிலிருந்து வெண்பொடியைக் கொஞ்சம் எடுத்து அதன்மீது தூவினார். அவர் என்ன செய்கிறார் என்பது ஜென்னுக்குத் தெளிவாகத் தெரிந்திருந்தது. அது தரம் குறைந்த உள்ளூர் விஷமருந்து. அது மிகவும் சக்தி வாய்ந்ததல்ல; மேலும், படு மோசமான வாடை கொண்டது. முட்டாள் ஓநாய்கள் மற்றும் நரிகள் மட்டுமே அதில் விழக்கூடும். பெரும்பாலான ஓநாய்கள் இந்த விஷத்தை அறிந்துவிடுமென்பதால் டோர்ஜியின் வேலை வீணாகிவிடும்.

என்னதான் இருந்தாலும் டோர்ஜியைவிட முதியவர் புத்திசாலி என ஜென் நினைத்துக்கொண்டான். ஆனாலும் அவனுக்கு ஒரு கேள்வி எழுந்தது. ‘‘காற்றில் இந்த வாடை கரைந்து போனால் என்ன செய்வது?’’ எனக் கேட்டான்.

‘‘கவலைப்பட வேண்டியதில்லை. நம்மால் அதை முகர முடியாவிட்டாலும் ஓநாய்களால் முடியும்’’ என்றார் முதியவர்.

எங்கெல்லாம் பொறிகள் இருந்தனவோ, அங்கு பில்ஜி ஜென்னிடம் கொஞ்சம் ஆட்டெலும்புகளை எடுத்துப் பொறிகளின்மீது எறிந்து அவற்றை மூடிவிடும்படி செய்யச் சொன்னார்.

‘‘அவர்கள் திரும்ப வரும்போது, பொறிகள் மூடப்பட்டிருப்பதைப் பார்த்தால் என்ன நினைப்பார்கள்?’’

‘‘அவர்கள் ஓநாய்களை வேட்டையாடுவதில்தான் குறியாக இருப்பார்கள். அதனால் இதைப் பற்றி அவர்கள் கவலைப்பட மாட்டார்கள்.’’

‘‘ஆனால் அவர்கள் பொறிகளைப் பரிசோதித்துப் பார்த்து, அவை கையாளப்பட்டிருக்கின்றன என்பதை அறிந்தால் என்ன செய்வது? ஓநாய் ஒழிப்புத் திட்டத்துக்கு நீங்கள் குந்தகம் விளைவிப்பதாகப் பெரிய பிரச்சனை செய்வார்களே.’’

‘‘ஓநாய்களுக்கு ஏற்பட்டிருக்கும் பிரச்சனையைவிட அது ஒன்றும் பெரிய விசயமில்லை. அவை இல்லாவிட்டால் எலிகளும் முயல்களும் மேய்ச்சல் நிலத்தை ஆட்சி செய்யும். பிறகு, மேய்ச்சல் நிலமே இல்லாமல் போனதும், அவையும் சிரமத்துக்கு ஆளாகும். யாருமே தப்பிக்க முடியாது. என்னால் சில ஓநாய்களைக் காப்பாற்ற முடிந்திருக்கிறது. அந்த அளவுக்கு நாம் சந்தோசப்பட்டுக் கொள்ள வேண்டியதுதான். உண்மையிலேயே, டோர்ஜியும் மற்றவர்களும் திரும்ப வந்து நான் என்ன செய்திருக்கிறேன் என்பதைப் பார்க்க வேண்டும் என்றுதான் விரும்புகிறேன். அவர்களோடு சண்டையிட அது எனக்கொரு வாய்ப்பாக இருக்கும்.’’

அவர்கள் மேட்டை அடைந்தபோது, ஏகப்பட்ட காட்டு வாத்துகள் சோகமாக அழுது கரைந்தபடி காற்றில் வட்டமடித்துக்கொண்டிருந்ததைப் பார்த்தார்கள். முதியவர் குதிரையை நிறுத்தி, மேல் நோக்கிப் பார்த்து, பெருமூச்சு விட்டார். ‘‘காட்டு வாத்துகளால்கூட ஒரு கூட்டத்தை அமைக்க முடியவில்லை. அவர்கள் அனேகமாக அவை எல்லாவற்றையும் சாப்பிட்டு விட்டார்கள்.’’ அவர் திரும்பி, அவரால் திறக்கப்பட்ட புதிய மேய்ச்சல் நிலத்தைப் பார்த்தார். அவருடைய இருண்ட கண்களைக் கண்ணீர் நிறைத்தது.

முதன்முதலாக முதியவருடன் புதிய மேய்ச்சல் நிலத்துக்கு வந்தபோது, அவர்கள் கண்டறிந்த அழகிய சொர்க்கத்தை ஜென் நினைவு கூர்ந்தான். ஒரே ஒரு கோடை காலத்துக்குள் அழகிய அன்ன ஏரிப் பகுதியை அன்னங்கள், காட்டு வாத்துகள், காட்டுக் குள்ளவாத்துகள் மற்றும் ஓநாய்கள் ஆகியவற்றின் சமாதியாக மக்கள் ஆக்கிவிட்டார்கள். ‘‘அப்பா’’ என்றான் அவன். ‘‘எனக்கு அழவேண்டும் போலிருக்கிறது.’’

‘‘நன்றாக அழு. எனக்கும் அப்படித்தானிருக்கிறது. எத்தனையோ தலைமுறைகளாக, மங்கோலியர்களை ஓநாய்கள் எடுத்துக்கொண்டிருக்கின்றன. நான் மட்டும் ஏன் இப்படி தனித்து விடப்பட

வேண்டும்.'' அவர் கண்ணீர்த் தடயங்களுடன் வான் நோக்கி டெஞ்ஞுரைப் பார்த்து, ஒரு முதிய ஓநாயைப் போல ஓலமிட்டார்.

ஜென்னுடைய முகத்தில் கண்ணீர் வழிந்தது. அது, முதியவரின் கண்ணீருடன் சேர்ந்து தொன்மையான ஓலோன்புலாக்கில் விழுந்தது.

ஓநாய்க்குட்டி வலியைத் தாங்கிக்கொண்டு, இரண்டு நாள் முழுவதும் கூண்டில் நின்றபடியே இருந்தது. ஜென் சென் மற்றும் சாங் ஜியோனின் வண்டிகள், இரண்டாம் நாள் மாலையில், இலையுதிர் காலப் புல் அடர்ந்திருந்த ஒரு நேர்த்தியான சரிவை இறுதியாக வந்தடைந்தன. அவர்களுடைய அண்டை வீட்டுக் காரனான கோம்பு, அவனுடைய குடிலை எடுத்து வைத்துக் கொண்டிருந்தான். காவோ ஜியான்சோங், ஏற்கெனவே புதிய புல்வெளியில் மேய்ச்சலுக்கு மாடுகளை அனுப்பிவிட்டு, ஜென்னுக்காகவும் சாங்குக்காகவும் பில்ஜி தேர்ந்தெடுத்திருந்த குடில் இடத்தில் அவர்களுக்காகக் காத்துக்கொண்டிருந்தான். புதிய இடத்தை யாங் கீயின் ஆடுகளும் நெருங்கிக்கொண்டிருந்தன.

ஜென்னும் அவனுடைய நண்பர்களும் அவர்களுடைய குடிலை விரைவாக அமைத்தனர். கஸ்மாயும் பாயரும் இரண்டு கூடை நிறைய மாட்டு வறட்டிகளைக் கொண்டு வந்தனர். இரண்டு நாள் பயணத்துக்குப் பிறகு, மூன்று நண்பர்களும் சமைப்பதற்காகவும், தேனீருக்காகத் தண்ணீர் கொதிக்க வைக்கவும் நெருப்பு பற்ற வைத்தனர். ஒரு வண்டியின் சிதலமடைந்த கட்டைகளை யாங் கீ, தன் பின்னால் இழுத்துக்கொண்டு வந்திருந்தான். அதை அவன், இரவு உணவுக்கு முன் கொண்டுவந்து கொடுத்தபோது எல்லோரும் ஆச்சரியமும் சந்தோஷமும் அடைந்தார்கள். அது, இரண்டு நாள் உணவுக்கான எரிபொருள் என்பதால், ஜென் வறட்டியைத் தூக்கியெறிந்ததால் பிணக்கு கொண்டிருந்த காவோ ஜியான்சோங்கூட ஒருவழியாக அறுதல் அடைந்தான்.

மூவரும் ஓநாய்க்குட்டி சிறை வைக்கப்பட்டிருந்த வண்டியை நோக்கிச் சென்றனர். அவர்கள் கம்பளிப் போர்வையை நீக்கிவிட்டுப் பார்த்தபோது அதிர்ச்சி அடைந்தனர். வில்லோ கூடையின் ஒரு பக்கத்தில் ஒரு கால்பந்து

அளவுக்கு ஒரு ஓட்டை ஏற்பட்டிருந்தது. முனை மழுங்கிய பாத நகங்களாலும், கூரற்ற பற்களாலும் ஓநாய்க்குட்டி அதை ஏற்படுத்தியிருந்தது.

ஜென் அந்த இடத்தை நெருக்கமாகப் பார்த்தபோது, மெல்லப்பட்டிருந்த வில்லோ கூடைக் கீற்றுகளில் ரத்தக்கறை தெரிந்தது. அவனும் சாங்குமாகச் சேர்ந்து வேகமாகக் கூடையைக் கீழிறக்கினார்கள். ஓநாய்க்குட்டி புல் மேவிய தரையில் தட்டுத் தடுமாறியது. சங்கிலியின் மறுமுனையைக் கழற்றிய ஜென், குடிலை அடுத்து அதை எடுத்துச் சென்றான். அங்கு ஒரு கம்பத்தை நட்டு, அதில் சங்கிலியை மாட்டினான். பிறகு, அதன்மீது மூடியை வைத்தான். எல்லாத் துன்பங்களுக்கும் அதிர்ச்சிகளுக்கும் பிறகு, இப்போதுகூட நகரும் வண்டியின் பாதிப்பிலிருந்து மீளாதது போல அது காட்சியளித்தது; அது உடனடியாகப் புல்லின்மீது படுத்துக்கொண்டது. அதன்மூலம், காயமடைந்த அதன் பாதங்கள் எதன்மீதும் படாமல் இருக்க முடிந்தது. தன் தலையைத் தூக்க முடியாத அளவுக்கு அது மிகவும் களைத்துப்போயிருந்தது.

ஜென், ஓநாய்க்குட்டியை எடுத்து வைத்துக்கொண்டு, தன்னுடைய பெருவிரல்களால் அதன் வாயை வலியத் திறந்து பார்த்தான். தொண்டைப் புண்ணிலிருந்து ரத்தக் கசிவேதும் இருக்கவில்லை; ஆனால் அதன் ஒரு பல்லிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. ஓநாய்க்குட்டியின் கழுத்தை இறுகப் பற்றிக்கொண்டு, யாங் கீயிடம் பல்லைத் தொட்டுப் பார்க்கும்படி ஜென் கூறினான். யாங் அதை முன்னும் பின்னுமாக அசைத்துப் பார்த்தான். ''வேர் தளர்ந்துவிட்டிருக்கிறது; இனி இந்தப் பல் அனேகமாக உபயோகமற்றது.'' தன்னுடைய சொந்தப் பல்லை இழப்பதை விடவும் மோசமாக ஜென் உணர்ந்தான்.

இரண்டு நாட்களாக ஓநாய்க்குட்டி விடாமல் போராடியதில், அதன் உடம்பில் பல மோசமான காயங்கள் ஏற்பட்டிருந்ததோடு ஒரு பல்லும் பழுதடைந்துவிட்டது. ஜென் அதைத் தரையில் விட்டான். அது தன் நாக்கால் மோசமடைந்த பல்லை விடாமல் தடவிக்கொண்டே இருந்ததிலிருந்து அந்த இடம் வலிப்பது நன்கு தெரிந்தது. ஓநாய்க்குட்டியின் பாதங்களில் யாங் கவனமாக மருந்து தடவினான்.

இரவு உணவுக்குப் பிறகு, நூடுல்ஸ், சிறிய இறைச்சித் துண்டங்கள் மற்றும் சூப் கலந்து ஒரு பாத்திரம் நிறைய, மிகவும் கெட்டியாக இல்லாத உணவை

ஜென் தயாரித்தான். சூடு தணிந்ததும், இளம் ஓநாய்க்கு அதைக் கொடுத்தான். அதன் தொண்டையில் ஏதோ அடைத்துக்கொண்டிருப்பதைப் போல, உணவை விழுங்குவதற்கு அது மிகவும் சிரமப்பட்டது. பிறகு, அது தன் நாக்கால் மோசமடைந்திருந்த பல்லைத் தடவிக் கொடுத்தது; அதனையடுத்து அது இறுமியதோடு, ரத்தம் கலந்த ஜீரணமாகாத உணவை வாந்தியெடுத்தது. ஜென்னின் இதயம் கனத்தது. ஓநாய்க்குட்டியின் ஒரு பல் மோசமடைந்திருப்பதோடு, அதன் தொண்டையிலும் ஏதோ பிரச்சனை இருக்கிறது. ஆனால், ஒரு ஓநாய்க்குட்டியைப் பரிசோதிக்கக்கூடிய விலங்கு மருத்துவருக்கு அவன் எங்கு போவான்?

‘‘இப்போது எனக்கு ஒன்று புரிகிறது’’ என்றான் யாங் கீ. ‘‘ஓநாய்கள் எதற்கும் பணிந்து போகாததற்கு, கருணையற்ற சூழ்நிலையானது தகுதியற்றவற்றைக் களைந்தெறிந்துவிடும் என்பதுதான் காரணம்.’’

‘‘இந்த ஓநாய்க்குட்டி அதன் பணிந்து போகாத முரட்டுத்தன்மை காரணமாக நிறையவே இழந்துவிட்டது’’ என்று வருத்தத்துடன் சொன்னான் ஜென்.

அடுத்த நாள் காலை, ஜென் ஓநாய்ப் பட்டியை சுத்தம் செய்தபோது, பொதுவாகக் காணப்படும் சாம்பல்நிறக் கழிவுகளுக்குப் பதிலாக அவை கறுத்துக் காணப்பட்டன. அதிர்ச்சியடைந்த ஜென், உடனடியாக ஓநாய்க்குட்டியின் வாயைத் திறந்து பார்த்தான்; அதன் தொண்டையிலிருந்து ரத்தம் கசிந்து கொண்டிருந்தது. ஓநாய்க்குட்டியின் வாயை நன்றாகப் பிடித்துக் கொள்ளும்படி யாங் கீயிடம் கூறிவிட்டு, ஒரு உணவுக் குச்சியின் முனையில் சிறு துணியைச் சுற்றி, அதில் ஒரு மருந்தை நன்றாகத் தோய்த்து, அதன் தொண்டையில் தடவ முயற்சித்தான். ஆனால் காயம் வெகு ஆழத்தில் இருந்ததால் குச்சியால் அதுவரை செல்ல முடியவில்லை. அவர்கள் எல்லாவிதமான வீட்டு மருத்துவத்தையும் களைப்படையும் வரை உபயோகித்துப் பார்த்தார்கள். இருவரில் ஒருவராவது விலங்கு மருத்துவம் படித்திருந்திருக்கலாமே என வருத்தப்பட்டார்கள்.

நான்காம் நாள், கழிவின் நிறம் மங்கத் தொடங்கியது; ஓநாய்க்குட்டி மீண்டும் தன் வலிமையை அடைந்தது. அவர்கள் இருவரும் நிம்மதிப் பெருமூச்சு விட்டார்கள்.

பில்ஜி பின் ஒருபோதும் படைப்பிரிவு இராணுவ அதிகாரிகளின் கூட்டங்களுக்கோ, உற்பத்திக்குழுக் கூட்டங்களுக்கோ அழைக்கப்படவில்லை. ஜென் அடிக்கடி அவருடைய வீட்டுக்குச் சென்று அவரைப் பார்த்து வந்தான்; அவர் தன்னுடைய குடிலில் அமைதியாகத் தோல் வேலைகளைச் செய்து வந்தார்.

தோல் கடிவாளங்கள், குதிரை மற்றும் ஆடுமாடுகளுக்கான கால்கட்டுகள், துண்டு துணுக்கான தோல் பொருள்கள் ஆகியவை கோடை கால மற்றும் இலையுதிர் கால மழைகளில் நனைந்தும், பின் சூரிய வெளியில் காய்ந்தும் தோலானது முறுகி விரிசல் கண்டுவிடும். அதன் காரணமாக, குதிரையானது தன்னுடைய கடிவாளத்தையோ, கால்கட்டுகளையோ அறுத்துக்கொண்டு மந்தைக்கு ஓடிவிடுவதும் நிகழ்வதுண்டு.

பில்ஜி ஓய்வாக இருந்ததால், அவருடைய குடும்பத்துக்கும், குதிரை மேய்ப்பர்களுக்கும், பீஜிங் மாணவர்களுக்குமான புதிய தோல் சாமான்களை உருவாக்கியபடி இருந்தார். ஜென் சென், யாங் கீ, காவோ ஜியான்சோங் மூவரும் அவ்வப்போது நேரம் எடுத்துக்கொண்டு, முதியவரிடமிருந்து தோல் வேலை பார்க்கக் கற்றுக்கொண்டார்கள். இரண்டு வாரங்களில் அவர்கள் நேர்த்தியான கடிவாளங்களையும் சாட்டைகளையும் செய்யக் கற்றுக்கொண்டார்கள். இருப்பதற்குள்ளேயே தயாரிப்பதற்குக் கடினமானதான கால்கட்டுகளைச் செய்வதற்குக்கூட யாங் கீ கற்றுவிட்டிருந்தான்.

முதியவரின் விசாலமான குடில், தோல் பட்டறையாக மாற்றமடைந்திருந்தது. முடிவடைந்த பொருள்கள் உயரமாகக் குவிந்திருந்தன. தோலின் வாசனை காற்றில் பரவியிருந்தது. இப்போது அவர்கள் செய்ய வேண்டியதெல்லாம், மர்மோட் எண்ணெய் தடவுவதுதான்.

மேய்ச்சல் நிலத்தின் மிகச் சிறந்த எண்ணெய் மர்மோட்டுகளிடமிருந்து தயாரிக்கப்படுவதுதான். கடுமையான பனிக்காலங்களின் போது, ஆடு மற்றும் பிற விலங்குகளிடமிருந்து தயாராகும் எண்ணெய் கெட்டியாகிவிடும். ஒரே விதிவிலக்கு மர்மோட் எண்ணெய்தான். சைபருக்கும் கீழே முப்பது டிகிரியிலும்கூட எண்ணெய் ஊற்றக் கூடியதாக இருக்கும். எல்லா

மேய்ப்பர்களுடைய வீடுகளிலும் இந்த மேய்ச்சல்நில விசேஷ எண்ணெய் இருக்கும். பனிக்காலத்தின் உச்சத்தில், வெண்முடிப் பனிப்புயல் அடிக்கும்போது, எல்லா மக்களும், தங்களுடைய முகங்களைப் பனிக்கட்டியிலிருந்து பாதுகாக்க முகம் முழுவதும் மர்மோட் எண்ணெயைத் தடவிக்கொள்வார்கள். மர்மோட் எண்ணெயால் பொரிக்கப்படும் மங்கோலிய மாவு கேக்குகள் தங்கப் பழுப்பு நிறத்தில் வெகு ருசியாக இருக்கும். அவை மண விழா விருந்துகளின் போதும் விசேஷ விருந்தினர் வருகைகளின் போதுமே தயாரிக்கப் படுவது வழக்கம்.

மர்மோட் எண்ணெயும் அவற்றின் தோல்களும் மேய்ப்பர்களின் வருமானத்திற்கான இரண்டு முக்கிய ஆதாரங்கள். இலையுதிர் காலத்தில் மர்மோட்டுகளின் தோல்கள் மிகக் கனமானதாக இருக்கும்; மேய்ப்பர்கள் மலைகளுக்குச் சென்று அவற்றை வேட்டையாடுவார்கள். இறைச்சியைத் தங்களுக்கு வைத்துக்கொண்டு, தோல்களையும் எண்ணெயையும் கொள்முதல் நிலையத்துக்குக் கொடுத்துவிட்டு, அவற்றுக்கு மாற்றாக தேனீர்ப் பெட்டிகள், துணிமணிகள், பேட்டரிகள், பூட்ஸ்கள், மிட்டாய்கள் மற்றும் அன்றாடத் தேவைகளைப் பெற்றுக்கொள்வார்கள். ஒரு பெரிய தோல் நான்கு யான்கள் பெறும்; ஒரு பவுண்டு எண்ணெய்க்குக் குறைந்தது ஒரு யான் கிடைக்கும். இந்தத் தோல்கள் அந்நிய வர்த்தகத்துக்காக ஏற்றுமதி செய்யப்படுகின்றன. பெண்களுக்கான கோட்டுகள் தயாரிக்க இவை மிகவும் உகந்தவை.

ஆனால் வேட்டை மூலம் கிடைக்கும் வருமானம் எப்போதும் சீராக இருப்பதில்லை. சீனாவின் பிற பகுதிகளில் பழ மரங்கள் எதிர்கொள்வதைப் போன்ற நிலைமைதான் மேய்ச்சல்நில வன வாழ்க்கையிலும் காணப்படுகிறது. வானிலை, புல்லின் வளர்ச்சி, இயற்கைப் பேரழிவுகள் போன்றவற்றால் தீர்மானிக்கப்பட்டு, சில வருடங்கள் நன்றாகவும் சில வருடங்கள் மோசமாகவும் அமை கின்றன. ஆனால் மேய்ச்சல்நில வேட்டைக்காரர்கள் நிலைமைக்கேற்பவே வேட்டையாடுவார்கள். அதிக விலங்குகள் இருக்கும்போது அடிக்கடியும், குறைவாக இருக்கும்போது எப்போதாவதும் தான் வேட்டையாடுவார்கள். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக இப்படித்

தொடர்வதால்தான் அங்கு அவர்கள் வேட்டையாட எப்போதும் விலங்குகள் இருந்து கொண்டிருக் கின்றன.

பெரும்பாலான சமயங்களில் அவர்கள் மர்மோட்டுகளின் தோல்களை மட்டுமே விற்பனை செய்வார்கள். எண்ணெய் பல வகைகளில் அவர்களுக்குப் பயன்படுவதால் அதைப் பெரும்பாலும் விற்பதில்லை. குறிப்பாக, தோல் பொருள்கள் உயர்ந்த பழுப்பு நிறத்தை அடையவும், மிருதுவாகவும் பளபளப்பாகவும் இருக்கவும் அது பயன்படுகிறது. மழைக்காலங்களில் தோல் பொருள்களின் மீது தொடர்ந்து அதைத் தடவி வந்தால் அவை நீண்ட காலம் உழைக்கும்.

ஒருநாள் தோல் வேலைக் கருவிகளைப் பார்த்தபடியே, பில்ஜி, ஜென்னிடம் சொன்னார்: ‘‘பாதி பாட்டில் எண்ணெய்தான் மிச்சமிருக்கிறது. மேலும் மர்மோட் இறைச்சிமீது எனக்கு ஏக்கம் வந்துவிட்டது. வருடத்தின் இச்சமயத்தில் அது மிகப் பிரமாதமாக இருக்கும். நாளை நான் மர்மோட் வேட்டைக்கு உன்னைக் கூட்டிக்கொண்டு போகிறேன்.’’

‘‘அவற்றை வீட்டுக்குக் கொண்டு வரும்போது, நான் உனக்குத் தேனீரும், மர்மோட் எண்ணெயில் பொரிக்கப்பட்ட கேக்குகளையும் விருந்தாகத் தருவேன்’’ என்றாள் கஸ்மாய்.

‘‘பிரமாதமான விசயம்தான். ஆனால் உணவுக்காக நான் இங்கு தொடர்ந்து வந்துகொண்டிருக்க முடியாது’’ என்றான் ஜென்.

கஸ்மாய் சிரித்தாள். ‘‘நீ ஓநாய்க்குட்டியை வளர்க்க ஆரம்பித்தவுடன், நீ என்னை சுத்தமாக மறந்துவிட்டாய். கடந்த சில மாதங்களில் நீ எத்தனை முறை தேனீர் அருந்த வந்திருக்கிறாய்?’’

‘‘நீங்கள் குழுவின் தலைவர். ஓநாய்க்குட்டியால் நான் ஏற்கெனவே உங்களுக்குத் தொல்லை கொடுத்துவிட்டேன். உங்களை வந்து பார்க்க எனக்குத் தைரியம் வரவில்லை.’’

‘‘நான் இல்லாவிட்டால், உன்னுடைய ஓநாய்க்குட்டி மேய்ப்பர்களால் எப்போதோ கொல்லப்பட்டிருக்கும்’’ என்றாள் கஸ்மாய்.

‘‘நீங்கள் அவர்களிடம் என்ன சொன்னீர்கள்?’’

கஸ்மாய் புன்னகைத்தாள். ‘‘சீனர்கள் ஓநாய்களை வெறுப்பதோடு அவற்றை அவர்கள் சாப்பிடவும் செய்வார்கள்; ஆனால் ஜென் சென்னும் யாங் கீயும் அப்படியில்லை. ஓநாய்க்குட்டி அவர்களுடைய தத்துக் குழந்தை மாதிரி. ஓநாய்கள் பற்றி அவர்கள் எல்லாம் அறிந்துகொண்டதும் அவர்களும் மங்கோலியர்களாகிய நம்மைப்போல் ஆகிவிடுவார்கள்.’’

நன்றிப் பெருக்கோடு அவளுக்குத் தன் நன்றிகளை ஜென் தெரிவித்தான்.

கஸ்மாய் சத்தமாக சிரித்தாள். ‘‘நீ எனக்கு ஒரு விருந்து கொடுப்பதன் மூலம் உன் நன்றியைத் தெரிவிக்கலாம். நீ செய்யும் இறைச்சி பொதித்த ரொட்டி எனக்கு ரொம்பப் பிடிக்கும்.’’ ஜென் மகிழ்ச்சியடைந்தான். பிறகு, அவள் கண்களால் சைகை செய்தபடி, சோர்ந்து போயிருந்த முதியவரைச் சுட்டிக் காட்டினாள். ‘‘அந்த சீன இறைச்சி கேக்குகள் அப்பாவுக்கும் ரொம்ப பிடிக்கும்.’’

ஜென் சிரித்தான். ‘‘இன்றிரவே செய்துகொண்டு வருகிறேன். நீங்களும் அப்பாவும் வேண்டுமளவு சாப்பிடலாம்.’’

முதியவரின் முகத்தில் மெல்லிய புன்னகை படர்ந்தது. ‘‘இறைச்சி எதுவும் கொண்டுவர வேண்டியதில்லை; இப்போதுதான் நாங்கள் ஒரு ஆட்டை வெட்டியிருக்கிறோம். காவோ ஜியான்சோங்கின் இறைச்சி கேக்குகள், பெரிய உணவகங்களில் கிடைப்பதை விட மிகவும் மேலானவை. நம்மோடு சேர்ந்து குடிப்பதற்கு யாங் கீயையும் காவோவையும் மறக்காமல் கூட்டிக்கொண்டு வா.’’

அந்த இரவில், கேக்குகளின் உள்ளே வைக்க வேண்டியவற்றை எப்படித் தயாரிப்பது, எப்படி சுருட்டுவது மற்றும் பொரிப்பதென காவோ, கஸ்மாய்க்கு சொல்லிக் கொடுத்தான். பிறகு அவர்கள் பாடினார்கள்; குடித்தார்கள்; சாப்பிட்டார்கள். திடீரென முதியவர், தன் கோப்பையைக் கீழே வைத்துவிட்டு, ‘‘மேய்ப்பர்களெல்லாம் ஓரிடத்தில் நிரந்தரக் குடியிருப்பை மேற்கொள்ள வேண்டுமென இராணுவ அதிகாரிகள் விரும்புகிறார்கள். அதன்மூலம் நமக்கு அடிக்கடி உடல்நலக் குறைவு ஏற்படாதென்றும், நம்முடைய வேலைப் பளுவும் குறையுமென்று சொல்கிறார்கள். நீங்கள் என்ன நினைக்கிறீர்கள்?’’

‘‘இவ்வளவு ஆண்டுகளாக வாழ்ந்த நாடோடி வாழ்க்கை முறையை மேய்ப்பர்களால் மாற்றிக்கொள்ள முடியுமென்று நாங்கள் நினைக்கவில்லை’’ என்றான் யாங் கீ. ‘‘என்னைப் பொறுத்த வரையில் நிச்சயம் அது சாத்தியமில்லை. இங்குள்ள புல்லை ஒரேயடியாக துவம்சம் செய்ய அது இடம் கொடுக்காது; அதனால் மக்களும் அவர்களுடைய கால்நடைகளும் ஓரிரு மாதங்களில் மாறுபட்ட வேறிடத்துக்கு நகர்ந்தாக வேண்டும். நாம் ஓரிடத்தில் நிரந்தரமாக இருந்துவிட்டால், சுற்றுப் பகுதிகளனைத்தும் மணல் பிரதேசமாக மாறிவிடும். பிறகு அது வெறும் பாலைதான். அது தவிர, ஒவ்வொரு குடும்பமும் எப்படி, எங்கு தாங்கள் நிரந்தரமாகத் தங்குவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுக்கும்?’’

முதியவர் ‘சரி’ என்பது போலத் தலையாட்டினார். ‘‘மேய்ச்சல் நிலத்தில் நிரந்தரக் குடியிருப்பை அமைப்பதென்பது பைத்தியக்காரத்தனமானது. விவசாயப் பகுதி மக்களுக்கு இதுபற்றி எதுவும் தெரிவதில்லை. அவர்களுக்கு நிரந்தரமாக ஓரிடத்தில் இருக்க வேண்டும், அவ்வளவுதான். மற்றவர்களும் அப்படி இருக்க வேண்டுமென ஏன் வற்புறுத்த வேண்டும்? நாங்கள் இப்படி தொடர்ந்து இடம்பெயர்ந்து கொண்டிருக்காவிட்டால் வாழ்க்கை சுலபமானதாக இருக்குமென்பது எல்லோருக்கும் தெரியும். ஆனால் தலைமுறைகளாக நாங்கள் அதைச் செய்துகொண்டிருக்கிறோம். நாங்கள் இப்படித்தான் இருக்க வேண்டுமென்பது டெஞ்ஞரின் விருப்பம். இந்தப் புல்வெளிப் பிரதேசத்தை ஒரு உதாரணமாகக் கொள்ளலாம். ஒவ்வொரு பருவத்துக்குமேற்ற புல்வெளிகள் ஒவ்வொன்றும் வெவ்வேறு செயல் தன்மை கொண்டவை. இளவேனிற் காலப் பிரசவத்திற்கான புல்வெளி, அருமையான புல் கொண்டது, ஆனால் குட்டையானது. பனிப்புயல் புல்லை மூடியிருந்தால் கால்நடைகள் இறந்துபோகும். நாங்கள் அங்கு நிரந்தரமாகக் குடியிருக்க முடியாது. குளிர்காலப் புல்வெளியில் புல் நீண்டிருக்கும். ஆனால் கால்நடைகள் முதல் மூன்று பருவங்களுக்கு அங்கு மேய்ந்தால் எதுவும் மிச்சமிருக்காது. கோடை காலப் புல்வெளி நீர்நிலைகளுக்குப் பக்கத்தில் இருக்கவேண்டும், இல்லையேல் தாகத்தில் விலங்குகள் இறந்துவிடும். ஆனால் அவையெல்லாம் மலைகளிலேயே இருக்கின்றன. அதனால் பனிக்காலத்தில் விலங்குகள் விறைத்து இறந்துபோகும். புல் விதைகளுக்காக நாங்கள் இலையுதிர் காலப்

புல்வெளிக்கு இடம் பெயர்ந்தாக வேண்டும். இளவேனில் மற்றும் கோடை காலங்களில் கால்நடைகள் அங்கு மேயாமலிருந்தால்தான் அங்கு விதைகள் இருக்கும். ஒவ்வொரு புல்வெளியும் பல பாதகங்களையும் ஒரு சாதகத்தையும் கொண்டிருக்கிறது. நாடோடி மேய்ச்சலின் பிரதான அம்சமே, பாதகங்களைத் தவிர்ப்பதும் சாதகத்தை நன்கு பயன்படுத்திக் கொள்வதும்தான். நாங்கள் ஓரிடத்தில் நிலைத்திருந்து விட்டால், எல்லாவிதமான பாதகங்களையும், சாதகமே இன்றி எதிர்கொள்ள நேரிடும். பிறகு, நாங்கள் எப்படி மேய்ப்பது?''

சீன மாணவர்கள் மூவரும் ஆமோதிக்கும் விதத்தில் தலையாட்டினர். நிரந்தரமான குடியேற்றத்தில் ஜென்னுக்கு ஒரு சாதகமான அம்சம் தென்பட்டது _ ஓநாய்க்குட்டியை வளர்ப்பது சுலபமாக இருக்கும். ஆனால் அவன் எதுவும் பேசவில்லை.

முதியவர் நிறையவே குடித்தார். பச்சை வெங்காயமும் இறைச்சியும் கொண்ட நான்கு பெரிய கேக்குகளைச் சாப்பிட்டார். ஆனாலும் அவர் மனநிலை மோசமாகிக்கொண்டே இருந்தது.

மறுநாள் காலை, தன்னுடைய வேலைகளை யாங் கீயிடம் ஒப்படைத்துவிட்டு, பில்ஜியுடன் வேட்டைக்குச் சென்றான் ஜென். ஒரு சாக்குப் பை நிறைய டஜன் கணக்கில் பொறிகள் வைக்கப் பட்டு, அது முதியவரின் சேணத்தின் பின்னால் கட்டப்பட்டது. மர்மோட் பொறிகள் மிகவும் எளிமையானவை; இரண்டடி மரக் குழாயும், எட்டு மெல்லிய வயர்கள் ஒன்றோடொன்று பின்னப் பட்ட ஒரு உலோகக் கண்ணியும் கொண்டவை. மர்மோட் குகைக்குப் பக்கத்தில் மரக் குழாயை ஊன்றிவிட்டு, அதன் வாயிலுக்கு மேலாக இரண்டு இஞ்ச் உயரத்தில் கண்ணியை வைத்துவிட வேண்டும். மர்மோட் குகையை விட்டு வெளியே வரும்போது, அதன் கழுத்து அல்லது பின்னங்கால் மாட்டிக்கொள்ளும்.

''கடந்த முறை நான் உங்கள் பொறியைப் பயன்படுத்திய போது, பெரியவை எதுவும் எனக்குச் சிக்கவில்லை. ஏன் அப்படி?'' என்று கேட்டான் ஜென்.

பில்ஜி அவன் முதுகில் அன்பாகத் தட்டிக் கொடுத்தார். ''மர்மோட்டுகளைப் பொறியில் சிக்க வைப்பதற்கான ரகசியத்தை நான் உனக்குச் சொல்லிக் கொடுக்கவில்லை, அதனால்தான். ஓலோன்புலாக் வேட்டைக்காரர்கள் அந்நியர்களிடம் ஒருபோதும் தங்கள் ரகசியத்தை வெளிப்படுத்துவதில்லை;

அவர்கள் எல்லா விலங்குகளையும் கொன்றுவிடுவார்கள் என்ற பயம்தான் காரணம். ஆனால் எனக்கு வயதாகிக்கொண்டிருக்கிறது, அதனால் என்னுடைய ரகசியத்தை உனக்குச் சொல்கிறேன். வெளியாட்கள் நிலையான பொறிகளையே பயன்படுத்துவார்கள்; ஆனால் மர்மோட்டுகள் சாமர்த்தியமானவை _ அவை தம் உடலைக் குறுக்கி சுருக்குக்கயிற்றிலிருந்து வெளிவந்துவிடும். என்னுடைய பொறிகள் வளைந்து கொடுப்பவை; லேசாகப் பட்டால் போதும், இறுக்கிக்கொண்டுவிடும். ஒரு மர்மோட், காலிலோ கழுத்திலோ சிக்கிக்கொண்டுவிட்டால் அதனால் ஒருபோதும் தப்பிக்க முடியாது. அதனால் நீ ஒரு பொறியை வைப்பதற்கு முன்பு அதன் கண்ணியை சிறியதாக்கிக்கொள்ள வேண்டும்; பிறகு விரிக்க வேண்டும். அப்படிச் செய்தால் கண்ணி விரிந்து சுருங்குவதைப் பார்க்க முடியும்.''

''அது திறந்தபடியே இருக்க என்ன செய்ய வேண்டும்?''

''ஒரு சிறிய கொக்கியை வயரில் உருவாக்க வேண்டும். பிறகு கண்ணி வளையத்தை அதற்குள்ளாக விட வேண்டும். அதன்பிறகு அக்கொக்கியை பக்குவமாக வளைக்க வேண்டும். கொக்கி போதுமான அளவு வளைந்திருக்காவிட்டால், காற்றுக்குக் கண்ணி வளையம் மூடிவிடும்; கொக்கி அதிகப்படியாக வளைந்திருந்தால் கண்ணி வளையம் தானாக மூடிக்கொள்ளாது. மர்மோட் சிக்காமல் போய்விடும். அது மிகச் சரியாகவும் வளைந்து கொடுக்கக் கூடியதாகவும் இருக்க வேண்டும். பொறியின் வழியாக மர்மோட் போகும்போது, ஏதோ ஒரு தருணத்தில் அது வயரைத் தொடும். அப்போது கண்ணி வளையம் இறுக்கிக்கொள்ளும். நீ அப்படிச் செய்து பார்; பத்துப் பொறிகளின் மூலம் ஏழு பெரிய மர்மோட்டுகள் உனக்குக் கிடைக்கும்.''

ஜென் நெற்றியில் அடித்துக்கொண்டான். ''அற்புதம்'' என்றான். ''என் பொறிகள் வேலைக்காகாமல் போனதில் ஆச்சரியப்பட ஏதுமில்லை. மர்மோட்டுகள் தங்கள் விருப்பம்போல வந்துபோயிருக்கும்.''

''நான் உனக்குப் பிறகு செய்து காட்டுகிறேன். அது அவ்வளவு சுலபமில்லை. ஏனென்றால் நீ குகையின் அளவையும் விலங்குகளின் பாதத் தடங்களையும் கணக்கில் எடுத்துக்கொள்ள வேண்டும். இன்னொரு கூடுதல் தந்திரமும்

இருக்கிறது. நீ என்னைக் கவனித்தால் உனக்குத் தெரிந்துவிடும். ஆனால் எவரிடமும் இதை வெளிப்படுத்தக் கூடாது.''

''நான் சொல்ல மாட்டேன்'' என ஜென் உறுதியளித்தான். ''இன்னொரு விசயம். குட்டிகள் இல்லாத ஆண் அல்லது பெண் மர்மோட்டுகளைத்தான் நீ வேட்டையாட வேண்டும். அம்மாவும் அதன் குட்டிகளும் சிக்கினால் அவற்றைப் போக விட்டுவிட வேண்டும். எங்கள் மூதாதையர்களின் விதிமுறைகளை எந்தவொரு மேய்ச்சல்நில மங்கோலியனும் மீற மாட்டான். அதனால்தான், நூற்றுக்கணக்கான ஆண்டுகளாக மர்மோட்டுகளை வேட்டையாடி வருகின்றபோதிலும், இன்னமும் எங்களால் மர்மோட் இறைச்சியை உண்ணவும், மர்மோட் தோலை விற்கவும், மர்மோட் எண்ணெயைப் பயன்படுத்தவும் முடிகிறது. மர்மோட்டுகள் மேய்ச்சல் நிலத்தைப் பாழடிக்கின்றன என்றாலும் எங்களுக்கு ஆதாயமளிக்கின்றன. பழைய காலங்களில், பாவப்பட்ட மேய்ப்பர்கள் மிகக் குரூரமான பனிக்காலங்களில் மர்மோட்டுகளை வேட்டையாடியே வாழ்ந்திருக்கிறார்கள். எவ்வளவு மங்கோலியர்களை இந்த மர்மோட்டுகள் காப்பாற்றியிருக்கின்றன என்பது சீனர்களாகிய உங்களுக்கு ஒருபோதும் தெரியப் போவதில்லை.''

அடர்ந்த இலையுதிர் காலப் புல்வெளியினூடாக குதிரைகள் விரைந்து சென்றன. அவற்றின் குளம்படிகள் பட்டுப் பல வகையான வண்ணப் பூச்சிகள் கிளம்பின: இளம் சிவப்பு, ஆரஞ்சு, வெள்ளை, நீலம், பச்சை, மஞ்சள் மற்றும் பல வண்ணக் கலவை. கருஞ்சிவப்பு வண்ணக் குருவிகள் அவற்றின் கீச்சுக் குரல்களில் பாடியபடி அவர்களின் தலைக்கு மேலாக வட்டமடித்துப் பறந்தன.

முதியவர், அவர்களுக்கு முன் தெரிந்த மலைகளைத் தன் தடியால் சுட்டிக்காட்டி, ''அதுதான் ஓலோன்புலாக்கின் மர்மோட் மலை'' என்றார். ''அங்கிருக்கும் மர்மோட்டுகள் நன்கு கொழுத்தும் பொசுபொசுவென்றும் இருக்கும். எங்களைப் பொறுத்தவரை, அது ஒரு பொக்கிஷ மலை. தெற்கிலுள்ள சிறிய மர்மோட் மலையிலும் வடக்கிலுள்ள சிறு மலையிலுமே அவை அதிகமாகக் காணப்படும். இன்னும் சில நாட்களில் மேய்ப்பர்களின் குடும்பங்கள் இங்கு வரும்; ஏனென்றால் மர்மோட்டுகளைப் பிடிப்பது இந்த வருடம் சுலபமாக இருக்கும்.''

''ஏன் அப்படி?''

முதியவர் நீண்டதொரு பெருமூச்சை விட்டபோது அவருடைய கண்கள் கறுத்தன. ‘‘ஓநாய்கள் குறைவாக இருக்கும் போது, மர்மோட்டுகளை சுலபமாகப் பொறிகளில் பிடித்துவிடலாம். இலையுதிர் காலத்தின்போது, ஓநாய்கள் மர்மோட்டுகளைச் சாப்பிட்டு நன்கு கொழுக்கும். அப்போதுதான் பனிக்காலத்தில் உயிர் தரித்திருக்க முடியும். அவை பெரிய மர்மோட்டுகளை மட்டுமே கொல்லும். அதனால் ஒவ்வொரு வருடமும் அவை சாப்பிட மர்மோட்டுகள் இருந்து கொண்டிருக்கும். டெஞ்ஞரினால் தீர்மானிக்கப்பட்ட விதிகளை இங்கு தெளிவாகப் புரிந்து கொண்டிருப்பது மேய்ப்பர்களும் ஓநாய்களுமே.

அவர்கள் மர்மோட் மலையை நெருங்கியபோது, ஒரு நீரோடை அருகே சில கூடாரங்கள் இருப்பதை அவர்கள் பார்த்தார்கள். அங்கிருந்து சமையல் புகை வெளிவந்து கொண்டிருந்தது. அங்கு ஒரு பெரிய பார வண்டியும் ஒரு தண்ணீர் வண்டியும் நின்று கொண்டிருந்ததைப் பார்த்தபோது, அது ஏதோ ஒரு தற்காலிகப் பணி இடம்போல் தோன்றியது.

‘‘ஓ, இல்லை! மறுபடியும் அவர்கள் நம்மை ஒரு எட்டு முந்திவிட்டார்கள்.’’ அவர் அந்தக் கூடாரங்களை நோக்கிக் கருத்த முகத்தோடும் கோபத்தில் சிவந்த கண்களோடும் விரைந்தார்.

மர்மோட் இறைச்சி மற்றும் மர்மோட் எண்ணெயின் மணம், அவர்கள் கூடாரத்தை அடைவதற்கு முன்பாகவே அவர்களை எட்டியது. அவர்கள் குதித்திறங்கியதும், அடுப்பின் மீதிருந்த ஒரு மிகப் பெரிய பாத்திரத்தைப் பார்த்தார்கள். அதன் பாதியளவுக்கு மர்மோட் எண்ணெய் கொதித்துக்கொண்டிருந்தது; அதனுள் கொழுப்பு நீக்கப்பட்ட பெரிய மர்மோட்டுகளின் உடல்கள் வெந்து கொண்டிருந்தன. அந்த இறைச்சி தங்கப் பழுப்பு நிறத்திலும் மொறுமொறுப்பாகவும் இருந்தது. வறுத்த ஒரு மர்மோட்டை ஒரு கரண்டியால் வெளியில் எடுத்த ஓர் இளம் பணியாளன், தோலுரிக் கப்பட்டு வெட்டப்பட்ட இன்னொன்றை அப்பாத்திரத்தில் போட்டான். ஓல்டு வாங்கும் இன்னொரு பணியாளனும் ஒரு மரப்பெட்டியின் மீது உட்கார்ந்திருந்தார்கள். அவர்களுக்குப் பக்கத்தில் ஒரு கோப்பையில் மஞ்சள் சாஸும், உப்பும் மிளகும் தூவப்பட்ட இறைச்சித் துண்டுகளும், ஒரு தட்டில்

பச்சை வெங்காயமும் இருந்தன. அவர்கள் மிகவும் சந்தோஷமாகக் குடித்துக்கொண்டும் இறைச்சியை மென்றுகொண்டும் இருந்தார்கள்.

பக்கத்திலிருந்த ஒரு பெரிய தண்ணீர்த் தொட்டியில் தோலுரிக்கப்பட்ட, பெரும்பாலும் ஓரடி நீளமே உள்ள இளம் மர்மோட்டுகள் நிறைந்திருந்தன. புல் தரையின்மீது ஏகப்பட்ட மரப்பலகைகளும், ஒரு டஜன் வில்லோ மரக் கூடைகளும் இருந்தன. வெவ்வேறு அளவுகளிலான, கிட்டத்தட்ட இருநூறுக்கும் மேற்பட்ட மர்மோட் தோல்கள் காயவைக்கப்பட்டிருந்தன. ஜென் முதிய வருடன் ஒரு கூடாரத்துக்குள் நுழைந்தபோது, அங்கு நூற்றுக்கும் மேற்பட்ட காய்ந்த தோல்கள் இடுப்பளவு உயரத்துக்குக் குவிந்திருந்தன. கூடாரத்தின் நடுவில் இருந்த மூன்றடி உயர கேஸ் கேனில் பாதியளவு மர்மோட் எண்ணெய் நிறைந்திருந்தது; மேலும் இரண்டு சிறிய கேன்களும் காணப்பட்டன.

கூடாரத்தை விட்டு வெளியே ஓடிவந்த முதியவர், தொட்டியை நோக்கி நடந்து போனார். அதிலிருந்த சிறிய மர்மோட்டுகளைத் தன் தடியின் முனையால் ஒதுக்கித் தள்ளினார். அவற்றின் கீழே, மெலிந்த, கொழுப்பு அதிகமில்லாத சில பெண் மர்மோட்டுகள் கிடந்தன. அதைப் பார்த்துக் கோபமும் ஆத்திரமும் அடைந்த முதியவர், தொட்டியின்மீது தடியால் தட்டிவிட்டு, ஓல்டு வாங்கைப் பார்த்துக் கத்தினார். ''பெண்களையும் குட்டிகளையும் கொல்ல உனக்கு யார் அனுமதி கொடுத்தது. இது குழுமத்தின் சொத்து; இவை உயிர் வாழ்ந்திருந்ததற்குத் தலைமுறை தலைமுறையாக மேய்ப்பர்கள் எடுத்துக்கொண்ட முயற்சிகள்தான் காரணம். உனக்கென்ன தைரியம்! அனுமதியில்லாமல் நீ எவ்வளவு கொன்றிருக்கிறாய், பார்!''

அரை போதையிலிருந்த ஓல்டு வாங் தொடர்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தான். ''உங்கள் பிராந்தியத்திலுள்ள மர்மோட்டுகளைக் கொல்லும் தைரியம் எனக்கில்லை'' என்று வெகு நிதானமாகச் சொன்னான் அவன். ''ஆனால் இது இப்போது உங்களுடைய பிராந்தியமில்லை, சரிதானே? உங்களுடைய குழுமம் இப்போது படைப்பிரிவின் ஓர் அங்கம், சரியா? 'ஸ்டாப்சன்'னின் தலைமை அதிகாரிதான் எங்களை இங்கு அனுப்பி வைத்திருக்கிறார். அவர் சொல்கிறார், மர்மோட்டுகள் மேய்ச்சல் நிலத்தைப் பாழடிப்பது மட்டுமல்லாமல், பனிக்காலம் தொடங்குவதற்கு முன்பாக ஓநாய்களுக்கான பிரதான உணவாகவும் அவை

இருக்கின்றன. நாம் எல்லா மர்மோட்டுகளையும் கொன்றுவிட்டால், ஓநாய்களால் பனிக்காலத்தைத் தாக்குப்பிடிக்க முடியாது. ஆக, நம்முடைய ஓநாய் ஒழிப்புத் திட்டத்தில் மர்மோட்டுகளும் அடங்கும். படைப்பிரிவின் மருத்துவமனை மருத்துவர்கள், மர்மோட்டுகள் ப்ளேக் நோயைப் பரப்பக் கூடியவை என்று கூறுகிறார்கள். ஏகப்பட்ட மக்கள் இங்கு வரும் நிலையில், ஏதாவதொன்று கடித்து எவராவது இறந்து விட்டால் அதற்கான பொறுப்பை நீங்கள் ஏற்பீர்களா?''

கொஞ்ச நேரம் அமைதியாக இருந்த பில்ஜிக்கு அதற்கு மேலும் தன்னுடைய கோபத்தைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ''படைப்பிரிவின் மேலிடத்திலிருந்து உத்தரவு வந்திருந்தாலும், இப்படிச் செய்திருக்கக்கூடாது!'' என்று கத்தினார். ''நீங்கள் எல்லா மர்மோட்டுகளையும் கொன்றுவிட்டால் தோல் பொருள்களைத் தயாரிக்க மேய்ப்பர்கள் எதைப் பயன்படுத்துவார்கள்? யாருடைய கடிவாளமோ அறுபட்டு, குதிரை அதிர்ந்துபோய் தறிகெட்டு ஓடி சவாரி செய்தவருக்குக் காயம் ஏற்பட்டால் அதற்கு யார் பொறுப்பு? உற்பத்திக்கு நீங்கள் குந்தகம் விளைவிக்கிறீர்கள்.''

ஓல்டு வாங் ஏப்பமிட்டான். ''மேலதிகாரிகளிடமிருந்து எங்களுக்கு உத்தரவு வந்திருக்கிறது. அதனால் யாராவது அதற்குப் பொறுப்பேற்க வேண்டும். நீங்கள் விரும்பினால் அவர்களிடம் போய் பேசுங்கள். கடினமாக வேலை பார்த்திருக்கும் எங்களிடம் ஏன் எரிந்து விழுகிறீர்கள்! முதியவரின் சேணத்தில் கட்டப் பட்டிருந்த சாக்குப் பையைப் பார்த்தபடி, ''நீங்கள் மர்மோட்டுளை வேட்டையாட வந்திருக்கிறீர்கள், இல்லையா?'' என்றான். ''நீங்கள் வேட்டையாடலாம், ஆனால் நாங்கள் செய்யக்கூடாது, அப்படித்தானே? நீங்கள் இந்த விலங்குகளை வளர்க்கவில்லை. அதனால் யார் அவற்றைக் கொல்கிறார்களோ அவர்கள் அவற்றை வைத்துக்கொள்ளலாம்.''

கோபத்தில் முதியவரின் நாடி நடுங்கியது. ''நீ கொஞ்சம் பொறு. நான் போய் குதிரை மேய்ப்பர்களைக் கூட்டி வருகிறேன். இந்தத் தோல்களும் எண்ணெயும் குழுமத்தைச் சேர வேண்டும்.''

''இராணுவப் படைப் பிரிவின் உணவுக்கூடம் இறைச்சியையும் எண்ணெயையும் கேட்டிருக்கிறது. அதனால் அவை அங்கு போய்ச் சேரும். நீங்கள் ஆட்களைக் கூட்டிக்கொண்டு வந்து பலவந்தமாக எடுத்துக்கொண்டு போனால் படைப்பிரிவு

உங்களைக் கவனித்துக் கொள்ளும். தோல்களைப் பொறுத்தவரை, உயரதிகாரிகள் அவற்றை விரும்புவதால் இயக்குநர் பாவோ தானே கொண்டுபோய் அவர்களிடம் கொடுக்கப் போகிறார்.''

முதியவரின் கைகள் இருபக்கமும் ஆடிக்கொண்டிருக்க, கோபத்தில் துடித்துக்கொண்டிருந்தார். அவரால் பேச முடியவில்லை.

ஜென் சென் நிதானமாகப் பேசினான். ''நீங்கள் உங்களைப் பற்றிப் பெருமைப்பட்டுக்கொள்கிறீர்கள், அப்படித்தானே? பெருசு, சிறுசு என எல்லாவற்றையும் கொன்றிருக்கிறீர்கள். அடுத்த வருசம் நீங்கள் எதைக் கொல்வீர்கள்?''

''நீங்கள் எங்களைப் புலம் பெயர்ந்தோர் என்றுதானே கூப்பிடுகிறீர்கள்? புலம் பெயர்ந்தோர்... புலம் பெயர்ந்தோர், அக்கறை இல்லாத குடி புகுந்தோர். அடுத்த வருசத்தைப் பற்றி நாங்கள் ஏன் கவலைப்பட வேண்டும்? எங்கு உணவு கிடைக்கிறதோ, அங்கு நாங்கள் போவோம். அதற்கடுத்த வருசம் பற்றி நாங்கள் ஒருபோதும் கவலைப்படுவதில்லை. மர்மோட்டுகள் பற்றி நீங்கள் வெகுவாக அக்கறை காட்டுகிறீர்கள்; ஆனால் புலம் பெயர்ந்து வந்திருக்கும் எங்களைப் பற்றி யார் கவலைப் படுகிறார்கள்?''

இந்த முரடர்களிடம் பேசிப் பயனில்லை என்பதை ஜென் உணர்ந்தான். அவர்கள் எப்படி இவ்வளவு மர்மோட்டுகளைக் கொன்றார்கள் என்பதை அவன் இப்போது அறிய விரும்பினான். அதனால் அவன் தொனியை மாற்றிக்கொண்டான். ''நீங்கள் எப்படி இவ்வளவைப் பிடித்தீர்கள்?'' என்று கேட்டான்.

''ஆக, நீ எங்களிடமிருந்து கற்றுக்கொள்ள விரும்புகிறாய்'' என்று அவன் மமதையோடு பேசினான். ''நல்லது, நீ மிகவும் தாமதமாக வந்துவிட்டாய். மிச்சமிருப்பது கொஞ்சம் குகைகள் தான். இரண்டு நாட்களுக்கு முன்பு, ஒரு வண்டி நிறைய இறைச்சியும் எண்ணெயும் நாங்கள் அனுப்பிவிட்டோம். ஆனால், நீ உண்மையிலேயே தெரிந்துகொள்ள விரும்பினால், அந்த மலை உச்சிக்குப் போய்ப் பார், தெரியும். வேகமாகப் போ, இல்லா விட்டால் நீ எதையும் அறியமாட்டாய்.''

முதியவர் மீண்டும் குதிரை மீதேறிக்கொள்ள ஜென் உதவினான். பிறகு, இருவரும் மலை உச்சியை நோக்கி சவாரி செய்தார்கள். வடகிழக்குச் சரிவின் கீழே நான்கைந்து பேர் குனிந்து, மிகத் தீவிரமாக வேலையில் ஈடுபட்டிருந்தார்கள். ஜென்னும் பில்ஜியும் அவர்களை நோக்கிப் பாய்ந்து சென்றார்கள். ‘‘நிறுத்துங்கள், நிறுத்துங்கள்!’’ என்று முதியவர் கத்தினார். வேலையாட்கள் நிமிர்ந்து சுற்றுமுற்றும் பார்த்தார்கள்.

அந்தக் காட்சியைப் பார்த்து ஜென் ஆடிப் போனான். அங்கு ஒன்றோடொன்று தொடர்பு கொண்ட ஆறு மர்மோட் குகைகள் இருப்பதை ஜென் அறிவான். நான்கு துளைகள் பாறைகளால் அடைக்கப்பட்டிருந்தன. தலைமை வேலையாள் தன்னுடைய கையில் இரண்டடி நீளமுள்ள ஒரு இளம் மர்மோட்டைப் பிடித்திருந்தான். அந்த மர்மோட்டின் வாலில் வெடிச்சரம் கட்டப்பட்டிருந்தது; அது ஒரு கயிற்றோடு பிணைக்கப்பட்டிருந்தது. அக்கயிற்றில் முஷ்டி அளவிலான ஒரு பழைய தோல் சுற்றப்பட்டு, அதன்மீது மிளகாய்த் தூளும் மிளகுத் தூளும் தூவப்பட்டிருந்தது. மேலும் டீசல் வாடையும் அதிலிருந்து வந்துகொண்டிருந்தது. அந்த வேலை யாளுக்குப் பக்கத்தில் இன்னொரு வேலையாள் ஒரு தீப்பெட்டியைவைத்திருந்தான். முதியவரும் ஜென்னும் ஒரு கணம் பிந்தி வந்திருந்தால், அந்த வேலையாட்கள் ஏற்கெனவே இளம் மர்மோட்டைத் துளைக்குள் விட்டு, வெடியைப் பற்றவைத்துக் குகையைப் புகைமயமாக்கியிருப்பார்கள்.

முதியவர் ஓடிப்போய் துளையில் தன் பாதத்தை ஊன்றினார். பிறகு அவர் உட்கார்ந்துகொண்டு, இரண்டு வேலையாட்களிடமும், அவர்கள் தங்களுடைய கைகளில் வைத்திருப்பதைக் கீழே போடும்படி கத்தினார். கோடைகாலத்தின்போது பில்ஜியின் மேற்பார்வையின் கீழ் அவர்கள் இருந்திருந்ததால், அவர்களால் பதில் பேச முடியவில்லை.

இவ்வளவு பேராசையோடும் வன்மத்தோடும் நிகழ்த்தப்படும் அழித்தொழிப்புத் திட்டத்தை ஜென் இதுவரை கண்டதில்லை. நெருப்பு வைக்கப்பட்ட வெடிச் சரத்தை, மிளகாய் — மிளகுத் தூளோடும் டீசலோடும் குகைகளுக்குள் இள மர்மோட்டுகள் எடுத்துச் செல்லும்போது, எல்லாமே அடியோடு வெளியேறிவிடும்.

மேய்ச்சல் நிலத்தில் மர்மோட்டுகளின் குகைகள்தான் மிக ஆழமாகவும் செங்குத்தாகவும் அமையப்பெற்றவை. மிகவும் நுட்பங்கள் வாய்ந்த உள்கட்டமைப்பு கொண்டவை; புகைத் தடுப்புக்கான ஏற்பாடுகளும்கூட உண்டு. மனிதர்கள் புகை மூலம் அவற்றை வெளியேற்ற முயற்சித்தால், பிரதான துளையின் குறுகிய பாதையை உடனடியாக அவை அடைத்துவிடும். ஆனால் இந்த வெளி வேலையாட்களின் குரூரமான, ஈவிரக்கமற்ற வழிமுறையில் அவை கொஞ்சமும் எதிர்பாராமல் அகப்பட்டுக்கொண்டன. பயந்துபோன இள மர்மோட், குகையின் அடியில் இருக்கும் விலங்குகளை நோக்கி வேகமாக விரைந்து செல்லும்; அவை பாதையை அடைக்க முற்படுவதற்கு முன்பாகவே வெடிகள் வெடிக்கத் தொடங்கி, காரப் புகை பரவி, வேறு வழியின்றி எல்லா மர்மோட்டுகளும் வலுக்கட்டாயமாக வெளியேறும்படி ஆகிவிடும். ஒரே ஒரு திறப்பு மட்டுமே எஞ்சியிருக்கிற நிலையில், அவை திமுதிமுவென வெளியேறும்போது சாக்குப் பைகளும் தடிகளும் அவற்றைக் கவனித்துக்கொள்கின்றன. எளிய ஆனால் கற்பனை செய்ய முடியாத அளவு குரூரமான வழிமுறை. அந்த வேலையாட்களுக்குத் தேவைப்படுவதெல்லாம் ஒரே ஒரு இள மர்மோட்தான். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ்ந்திருந்த மர்மோட் மலையை சில நாட்களில் அந்த மனிதர்கள் அழித்து விட்டார்கள்.

பில்ஜி தன்னுடைய தடியால் ஓங்கித் தரையில் தட்டினார். பாறைத் துகள்கள் தெறித்துச் சுற்றிலும் பறந்தன. ‘‘அந்த வெடிகளை வெட்டி எறியுங்கள்; கயிற்றை வெட்டிவிட்டு, இள மர்மோட்டைக் குகைக்குள் விடுங்கள்.’’

வேலையாட்கள் நிதானமாகக் கயிற்றைக் கழற்றினார்கள்; ஆனால் மர்மோட்டை உள்ளேவிட மறுத்துவிட்டார்கள். ஓல்டு வாங் ஒரு சிறு வண்டியில் அங்கு வந்தான். அவன் குடித்திருப்பவன் போலத் தெரியவில்லை. பல்லைக் காட்டி இளித்தபடி, முதியவருக்கு ஒரு சிகரெட் கொடுத்தான். பிறகு, வேலையாட்களைப் பார்த்துத் திட்டினான். மர்மோட்டைக் கையில் வைத்திருந்த வேலையாளை நோக்கிச் சென்று, அவனிடமிருந்து அதைப் பிடுங்கினான். பிறகு, கயிற்றை வெட்டிவிட்டான். அதன் பிறகு முதியவரிடம் சென்று, ‘‘கவலைப்படாதீர்கள்; இந்த ஒன்றை நான் விட்டுவிடுகிறேன்.’’

‘‘உடனடியாக அதை விட்டுவிடு. இனி மேற்கொண்டு எங்களுடைய வேலைகளில் தலையிடாதே.’’ என்றார் முதியவர்.

ஓல்டு வாங் மரியாதையுடன் புன்னகைத்தான். ‘‘அப்படிச் செய்யும் தைரியம் எனக்கில்லை. நான் எனக்கிடப்படும் உத்தரவுகளையே மேற்கொள்கிறேன். மர்மோட்டுகளைக் கொல்லாமல் ஓநாய்களைக் கட்டுப்படுத்த முடியாது. ஆக, மக்களுக்கான பேரழிவைத் தடுத்து நிறுத்தும் ஒரு காரியமாகவே இது கருதப் படுகிறது. அதே சமயம், நீங்கள் சொல்வதும் சரிதான். மர்மோட் எண்ணெய் இல்லாமல், கடிவாளங்கள் நீடித்து உழைக்காது; அதனால் விபத்துகள் ஏற்படலாம். மேய்ப்பர்களுக்காக சில மர்மோட்டுகளை விட்டுவைப்பது அவசியம்தான்.’’

அவன் அந்த மர்மோட்டைக் குழிக்கு வெளியே விட்டான். அது உடனடியாகப் பார்வையிலிருந்து மறைந்துவிட்டது.

ஓல்டு வாங் பெருமூச்சு விட்டான். ‘‘அந்த இளம் மர்மோட்டைப் பிடிப்பதற்கு இன்று முழுவதும் நாங்கள் படாத பாடுபட்டோம். நாங்கள் வெடிகளைப் பயன்படுத்துவதால், அவை வெளியில் வர மிகவும் பயப்படுகின்றன.’’

ஆனால் அவனுக்குக் கொஞ்சமும் இடம் கொடுக்காமல் முதியவர் பேசினார். ‘‘இன்னும் வேலை முடியவில்லை. நீ எல்லாவற்றையும் குழும அலுவலகத்துக்கு உடனடியாக அனுப்பிவிடு. லாம்ஜாவும் மற்ற மேய்ப்பர்களும் இதைக் கேள்விப்பட்டால், அவர்கள் வந்து உன்னுடைய கூடாரத்தையும் வண்டிகளையும் நொறுக்கிவிடுவார்கள்.’’

‘‘நாங்கள் எல்லாவற்றையும் ஒன்று சேர்த்து, உடனடியாகக் கிளம்பிவிடுவோம். இயக்குனர் பாவோவிடம் நானே நேரில் சென்று விசயங்களைச் சொல்லிவிடுகிறேன்.’’

முதியவர் தன்னுடைய கைக்கடிகாரத்தைப் பார்த்தார். வடக்கிலுள்ள மர்மோட் மலை குறித்து அவர் கவலை கொண்டிருந்தார். ‘‘நான் ஒருவரைப் பார்க்கப் போகிறேன்’’ என்றார். பிறகு, அவரும் ஜென்னும் குதிரைகள் மீதேறி எல்லைப் பகுதி நெடுஞ்சாலையை நோக்கிச் சென்றார்கள்.

அவர்கள் இரண்டு மலைகளைக் கடந்து சென்றபோது, அவர்களுக்குப் பின்னால் வெடிச்சத்தம் கேட்டது. ‘‘நம்மை ஏமாற்றி விட்டார்கள்’’ என்றார் முதியவர். அவர்கள் திரும்பிப் பார்த்துவிட்டு, மலை உச்சியை நோக்கி சவாரி செய்தார்கள். ஓல்டு வாங் ஒரு துணியால் வாயையும் மூக்கையும்

மூடியிருந்தபடி, மர்மோட்டு களைப் பிடிக்கவும் கொல்லவும் வேலையாட்களை வழிநடத்திக் கொண்டிருந்தான். மர்மோட் குகைக்கு வெளியே ஏற்கெனவே விலங்குகள் இறந்து சுருண்டு கிடந்தன. அடர்த்தியான காரப் புகை அதிலிருந்து வெளிவந்தபடி இருந்தது. கடைசி சில மர்மோட்டுகள், அவை வெளிவந்தவுடன் தடிகளால் அடித்துக் கொல்லப்பட்டன.

முதியவர் கடுமையாக இருமினார்.

முகங்களைத் துணிகளால் மூடியிருந்த வேலையாட்களைப் பார்க்கக் கொள்ளைக்காரர்கள் போலிருந்தனர். அவர்கள் வேக வேகமாக மர்மோட்டுகளை சாக்குப் பையில் திணித்து, அதைத் தூக்கி வண்டியில் போட்டுவிட்டு, மலைச் சரிவை நோக்கிச் சென்றார்கள்.

''அதற்குள் எப்படி இன்னொரு இளம் மர்மோட்டை அவர்கள் பிடித்தார்கள்?'' என்று பில்ஜியிடம் ஜென் கேட்டான்.

''அவர்கள் அனேகமாக இரண்டைப் பிடித்து வைத்திருந்திருப்பார்கள். ஒன்று சாக்குப் பைக்குள் இருந்திருக்கும். அல்லது ஒரு நீண்ட கம்பத்தில் வெடிகளைக் கட்டி உள்ளே கொளுத்தி விட்டிருப்பார்கள். அவர்கள் கொள்ளைக்காரர்களுக்குக் குறைந்தவர்கள் இல்லை; பழங்காலத்திய குதிரைத் திருடர்களை விட மோசமானவர்கள்.''

முதியவர் தன் கைத்தடியின் துணையோடு நடந்து சென்று மர்மோட் குகைகளை அவதானித்தார். எல்லாமே காலியாக இருந்தன. அவர் உடல் நடுங்கியது. அவருடைய முகத்தில் கண்ணீர் வழிந்தோடியது. ''என்ன ஒரு குரூரம். இந்தக் குகைகளை எனக்கு நன்றாகத் தெரியும். நான் சிறுவனாக இருந்தபோது, என் அப்பாவோடு வந்து இங்கு பொறிகளை வைத்திருக்கிறேன். தலைமுறை தலைமுறையாக எங்கள் குடும்பம் இங்கு மர்மோட்டு களைப் பிடித்திருக்கிறது. இப்போது அவை அடியோடு இல்லை. ஒவ்வொரு வருடமும் அவை சந்தோசமாகக் கீச்சிட்டபடி இங்கு திரிந்தன. நூறாண்டுகளுக்கும் மேலாக வளமாக இருந்த குகை இது. ஆனால் அந்தக் கொள்ளைக்காரர்கள், இரண்டு பைப் புகையிலையை ஊதித் தீர்க்கும் நேரத்துக்குள்ளாக அவற்றைத் துப்புரவாகத் துடைத்துவிட்டார்கள்.''

பில்ஜியைப் போலவே ஜென்னும் கலங்கிப் போயிருந்தான்; ஆனால் அவன் முதியவரைத் தேற்ற முயன்றான். ‘‘இனி கோபப்பட்டு என்ன பிரயோசனம் அப்பா. நாம் போய் இனிமேற்கொண்டு ஏதாவது செய்ய முடியுமா என்று பார்க்கலாம்.’’

அவர்கள் சென்று கொண்டிருந்தபோது, குதிரைகள் அவ்வப்போது நின்று புல் மேய்ந்தன. அங்கு புல் மிகவும் பச்சையாக இருந்தது. அதன் தண்டுகளும் தடித்திருந்தன. தரையில் சிறு குவியல்கள் இருந்ததை அவன் பார்த்தான். எலிகள் புல்லை சேகரித்து, தங்கள் பொந்துகளுக்கு வெளியே, அவற்றை உள்ளே எடுத்துச் செல்வதற்கு முன்பாகக் காய வைத்திருக்கின்றன என்று ஜென் தெரிந்துகொண்டான்.

புல் மிகவும் அடர்ந்திருந்த ஓரிடத்தில் முதியவர் குதிரையை நிறுத்தினார். ‘‘நாம் இங்கே கொஞ்சம் ஓய்வெடுக்கலாம்’’ என்றார். ‘‘குதிரைகளும் இந்த அருமையான புல்லை எலிகளிடமிருந்து கொஞ்சம் பெற்றுக்கொள்ளட்டும். இப்போது ஓநாய்கள் போய் விட்டதால் அவை எப்படித் திரிகின்றன பார். இந்தக் குவியல்கள் கடந்த ஆண்டை விடப் பல மடங்கு பெரிதாகி இருக்கின்றன.’’

அவர்கள் குதிரைகளிலிருந்து இறங்கி, அவற்றை அவிழ்த்து விட்டார்கள். அவை சந்தோஷமாக மேயத் தொடங்கின. அவற்றின் வாய்களிலிருந்து பச்சைச் சாறு வழிந்தது. ஒவ்வொரு குவியலாக அவை சாப்பிட்டபோது, காற்றில் புல் வாசனை பரவியது. முதியவர் ஒரு குவியலைக் காலால் உதைத்துத் தள்ளி, ஒரு தேனீர்க் கோப்பை அளவு இருந்த பொந்தை வெளிப்படுத்தினார்; ஒரு பெரிய எலி தலையை வெளியே நீட்டி சுற்றிலும் பார்த்தது. யாரோ ஒருவர் அதன் பனிக்கால சேமிப்பை மிதித்துக்கொண்டிருப்பதைப் பார்த்து, வெளியே ஓடிவந்து முதியவரின் பூட்ஸைக் கடித்துவிட்டு, இரைச்சலிட்டபடி மீண்டும் பொந்துக்குள் ஓடியது. ஒரு கணத்துக்குப் பிறகு, கடிவாளம் அசைந்தாடும் சத்தம் அவர்களுக்குக் கேட்டது. அவர்கள் சட்டெனத் திரும்பிப் பார்த்தபோது, ஓரடி நீளமுள்ள ஒரு எலி, அவர்களுடைய ஒரு குதிரையின் மூக்கைக் கடித்துக்கொண்டிருந்தது; அதிலிருந்து ரத்தம் வழிந்து கொண்டிருந்தது. அவர்களைச் சுற்றிலும் சத்தமான கீச்சொலிகள் எழும்பியிருந்தன.

முதியவர் கோபத்தில் கத்தினார். ‘‘என்ன நடக்கிறது இந்த உலகத்தில்; ஒரு குதிரையைக் கடிக்குமளவுக்கு எலிக்கு எப்படி தைரியம் வந்தது? இவர்கள் தொடர்ந்து ஓநாய்களைக் கொன்று கொண்டிருந்தால், எலிகள் மனிதர்களைச் சாப்பிடத் தொடங்கி விடும்.’’

ஜென் ஓடிப்போய், கடிவாளங்களை இழுத்துப் பிடித்து அவற்றைக் குதிரையின் முன்னங்காலோடு சேர்த்துக் கட்டினான். இப்போது குதிரையால், உண்பதற்கு முன்பாகத் தன் குளம்புகளால் முகத்தை மறைத்துக்கொள்ள முடியும்.

முதியவர் மேலும் பல குவியல்களை உதைத்துத் தள்ளினார். ‘‘ஒன்றுக்கொன்று எவ்வளவு நெருக்கமாக இருக்கிறதென்பதைப் பார்! மிக அருமையான புல்லை இவை தேர்ந்தெடுத்திருக்கின்றன. சியான்ஜியாங்கின் பொலிகிடாக்களுக்குக்கூட இவ்வளவு அருமையான புல் கிடைக்காது. இந்தப் பனிக்காலத்துக்குப் போதுமான அளவு சேகரித்து வைத்துவிட்டால், பசியாலோ குளிராலோ அவை இறந்துபோகாது. பின் இளவேனிற் காலத்தில் பெண் எலிகளிடம் பால் நிறைய இருக்கும் என்பதால் அவை மேலும் பல எலிகளைப் பிரசவிக்கும். அவை நம்முடைய புல்லைத் தின்பதோடு, ஏகப்பட்ட குழிகளையும் பறித்து வைக்கும். அடுத்த வருடம் இந்த இடத்தையே அவை ஆக்ரமித்துவிடும். மேய்ச்சல் நிலத்தில் ஓநாய்கள் குறைந்துவிட்டதும், திருடர்களாக இருந்த எலிகள் கொள்ளையராக மாறிவிட்டன; இனி அவை பதுங்கிச் செல்லப் போவதில்லை.

புல் குவியல்களைக் குனிந்து பார்த்த ஜென்னுக்கு சோகத்துடன் பயமும் சேர்ந்துகொண்டது. ஒவ்வொரு இலையுதிர் காலத்தின் போதும், மனிதர்களுக்கும் எலிகளுக்குமிடையே யுத்தம் நடப்பது மேய்ச்சல் நிலத்தில் ஒரு வாடிக்கை. எலிகள் பிறர் அறியாத வகையில் பதுங்கிச் செல்பவை என்றாலும் அவற்றிடம் ஒரு பலஹீனம் உண்டு. பனிக்காலத்துக்கான உணவை சேமிப்பதற் காக அவை ஆழமான பொந்துகளைத் தோண்டினாலும், புல் காய்வதற்காக வெளியில் அதை அவை குவித்து வைக்கும்; இல்லையென்றால் பொந்துக்குள் புல் அழுகிவிடும். அதனால் எலி ஒழிப்புத் திட்டத்தை மக்கள் மேற்கொள்வதற்கு அவையே ஒரு இலக்காக ஆகிவிடுகின்றன.

புல்வெளிப் பிரதேசத்தில் ஒரு மேய்ப்பன் ஒரு புல் குவியலைக் கண்டால் உற்பத்திக் குழுக்களுக்கு அவன் எச்சரிக்கை செய்வான். அதையடுத்து ஆடு மாடுகளை, குதிரைகளையும்கூட, கூட்டிக் கொண்டு வந்து புல் குவியல்களை மேயவிடுவார்கள். மேய்ச்சல் நிலம் மஞ்சளாகிவிட்ட போதும், எலிகளால் குவிக்கப்பட்ட புல் பச்சையாகவும் எண்ணெய் விதைகளோடும் வாசனையோடு காணப்படும். கால்நடைகள் சில நாட்களில், அவை காய்வதற்கு முன்பாகப் போட்டி போட்டுத் தின்று தீர்த்துவிடும். எலிக் கட்டுப்பாட்டுத் திட்டத்துக்கான இயற்கையான நடைமுறை இது.

ஆனால் மனிதர்களுக்கும் கால்நடைகளுக்கும் இந்த இலையுதிர்கால யுத்தத்தின்போது, ஓநாய்களின் உறுதுணை தேவைப்படும். இக்காலத்தில்தான் எலிகள் நன்றாகக் கொழுத்து, ஓநாய்க்கான சரியான விருந்தாகக் காணப்படும். புல்லைக் கடித்து நகரும் எலிகளைப் பிடிப்பது சுலபம்; பெரிய எலிகளை எங்கு கண்டுபிடிப்பதென்பதைக் குவியல்களைக் கொண்டு ஓநாய்கள் அறிந்துவிடும். ஆனால், முக்கியமான விசயம் என்னவென்றால், எலிகளின் புல் சேகரிப்பு காலத்தில் ஓநாய்கள் அவற்றை எச்சரிக்கையாகப் பதுங்கி இருக்க வைக்கும். இது மறைமுகமாகப் பனிக்காலத்தில் எலிகளைப் பட்டினி கிடக்க வைக்கும். மனிதர்கள் தங்களுடைய கால்நடைகள் மூலம் புல் குவியல்களைக் காலி செய்துவிடுவார்கள்; எலிகள் தங்கள் இஷ்டத்துக்குப் புல்லைக் கடிக்க முடியாதபடி ஓநாய்கள் தடையாக இருக்கும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக, மனிதர்களும் ஓநாய்களும் கால்நடைகளோடு இணைந்து செயல்பட்டு, எலித்தொகையை மிகுந்த கட்டுப்பாட்டில் வைத்திருக்கின்றனர்.

கிட்டத்தட்ட அரைமணி நேரம் மேய்ந்ததில், குதிரைகளின் வயிறுகள் பெருத்திருந்தன. குழுமத்தின் கால்நடைகளின் தேவையை விடவும் மிக அதிகமாகப் புல் குவியல்கள் காணப்பட்டன. இதற்குமுன் எப்போதும் இருந்திராத இந்த யுத்தக் காட்சியைப் பார்த்துக் குழம்பிப் போயிருந்தார் முதியவர். ‘‘நாம் இங்கு குதிரை களைக் கூட்டிக்கொண்டு வரலாமா? இல்லை, அது சரிப்படாது. இந்தப் புல்வெளி ஆடு மாடுகளுக்கானது. குதிரைகளைக் கொண்டு வருவது, நிர்ணயிக்கப்பட்ட நடைமுறைக்குக் குந்தகம் விளைவிக்கும். ஆனால் ஏகப்பட்ட குவியல்கள் கிடக்கிறதே, என்ன செய்வது? இது ஒரு பேரழிவுதான்.’’

‘‘மனிதனால் உருவாக்கப்பட்ட பேரழிவு.’’ ஜென் கோபமாகச் சொன்னான்.

அவர்கள் மீண்டும் குதிரைகள் மீதேறித் தங்கள் பயணத்தைத் தொடர்ந்தனர். போகும் வழியில் மேலும் பல புல் குவியல்களைப் பார்த்தனர். எல்லைப் பகுதி வரை அவை காணப்பட்டன; சில மற்றவற்றை விட அடர்த்தியாக இருந்தன.

அவர்கள் சிறிய வட மர்மோட் மலையை நெருங்கியபோது, பலத்த வெடிச் சத்தத்தைக் கேட்டனர். அது துப்பாக்கிச் சூடு சத்தமாகவும் இல்லை, வெடிச் சத்தமாகவும் இல்லை. பில்ஜி பெருமூச்சு விட்டார். ‘‘படைப்பிரிவின் தலைவர்கள், அவர்களுடைய சர்வநாசத் திட்டத்துக்கு சரியான ஆலோசகரைத்தான் பிடித்திருக்கிறார்கள்’’ என்ற அவருடைய குரலில் விரக்தி வெளிப்பட்டது. ‘‘எங்கெல்லாம் ஓநாய்கள் இருக்கின்றனவோ, அங்கெல்லாம் டோர்ஜி இருப்பான்.’’

அவர்கள் தங்களுடைய குதிரைகளைத் தட்டிவிட்டு விரைந்தனர். மலைப் பள்ளத்தாக்கிலிருந்து ஒரு இராணுவ வண்டி எதிரில் வந்து நின்றது. அவர்களும் குதிரைகளை நிறுத்தினர்.

வண்டியில் இரண்டு துப்பாக்கி வீரர்களும் டோர்ஜியும் இருந்தனர். பணி அதிகாரி வண்டியை ஓட்டினார்; பின்னிருக்கையில் டோர்ஜி இருந்தான். அவனுடைய காலடியில் ஒரு சாக்கு மூட்டை கிடந்தது. பணி அதிகாரி பாடெல் கையிலிருந்த நீண்ட குழல் கொண்ட துப்பாக்கியை வைத்த கண் வாங்காமல் பில்ஜி பார்த்தார். அவர் இதுவரை அப்படியொரு துப்பாக்கியைப் பார்த்திருக்கவில்லை.

‘‘மர்மோட் வேட்டைக்குச் செல்கிறீர்களா?’’ என்று கேட்டார் பாடெல். ‘‘அவசியமில்லை. நானே எங்களுடையதிலிருந்து இரண்டு தருகிறேன்.’’

அந்த மனிதனை உற்றுப் பார்த்தபடியே, ‘‘நாங்கள் அங்கு போகக் கூடாதென்பதற்கு ஏதும் காரணம் இருக்கிறதா?’’ என்று கேட்டார் பில்ஜி.

‘‘குகைகளுக்கு வெளியில் இருந்த எல்லாவற்றையும் நாங்கள் கொன்றுவிட்டோம். உள்ளே இருப்பவை வெளியில் வர பயப்படுகின்றன.’’

‘‘உங்கள் கையில் இருப்பது என்ன? அதற்கு ஏன் அவ்வளவு நீண்ட குழல் இருக்கிறது?’’ என்று கேட்டார் பில்ஜி.

‘‘வாத்து வேட்டையாடப் பயன்படுத்துவது இது. மர்மோட்டுகளைக் கொல்லவும் வசதியாக இருக்கிறது. மயிருக்கு சேதமில்லாமல் கொல்லலாம். இதோ, நீங்களே பாருங்கள்’’ என்றார் பாடெல்.

முதியவர் துப்பாக்கியை வாங்கி, அதையும் அதன் குண்டுகளையும் கவனமாகப் பரிசோதித்தார்.

தன்னுடைய துப்பாக்கியின் சாதகத்தை முதியவருக்குக் காட்ட விரும்பிய பாடெல், வண்டியை விட்டு இறங்கி பில்ஜியிடமிருந்து துப்பாக்கியைப் பெற்றுக்கொண்டு, ஒரு புல் குவியலின்மீது ஒரு எலி இருபதடி தூரத்துக்கு அப்பால் பதுங்கி ஓடுவதைப் பார்த்தார். அவர் அதைக் குறி பார்த்துச் சுட்டார்; எலியின் தலை வெடித்துச் சிதறியது. முதியவரின் உடல் ஆடியது.

சூ சிரித்தார். ‘‘ஓநாய்கள் எல்லாம் வெளிப்புற மங்கோலியாவுக்குச் சென்றுவிட்டன’’ என்றார். ‘‘டோர்ஜி எங்களை எல்லா இடங்களுக்கும் கூட்டிப் போனார்; ஆனால் நாங்கள் ஒன்றைக்கூடப் பார்க்கவில்லை. நல்ல வேளையாக, மர்மோட்டுகளைக் கொல்வதற்காக நான் என்னுடைய துப்பாக்கியை எடுத்து வந்திருந்தேன். நாங்கள் அவற்றின் பக்கத்தில் போனால்கூட அவை திரும்பவும் குகைக்குள் ஓடிப் போகாமல் அப்படியே இருக்கின்றன. அந்த அளவு முட்டாள்களாக, எங்களுடைய குண்டுகள் அவற்றின்மீது பாய்வதற்காகக் காத்துக்கொண்டிருப்பதைப் போல இருக்கின்றன.’’

‘‘இவர்கள் இருவரும் ஐம்பதடி தூரத்திலிருந்து மர்மோட்டுகளின் தலைகளைக் குறிபார்த்துச் சுடுகிறார்கள்.’’ டோர்ஜி புளகாங்கிதத்துடன் சொன்னான். ‘‘நாங்கள் போகும் வழியில் பார்த்தவற்றை எல்லாம் கொன்றோம். பொறிகள் வைப்பதை விடவும் மிக வேகமாகக் கதையை முடிக்க முடிகிறது.’’

‘‘நீங்கள் ஏன் திரும்பி வீட்டுக்குப் போகக்கூடாது?’’ என்றார் பாடெல். ‘‘நான் திரும்பிப் போகும் வழியில் உங்கள் குடிலில் இரண்டு பெரிய மர்மோட்டுகளைப் போட்டுச் செல்கிறேன்.’’

புதிய ஆயுதத்தின் ஆற்றலை நேரில் பார்த்த அதிர்ச்சியிலிருந்து முதியவர் மீள்வதற்கு முன்பாகவே இராணுவ வண்டி கிளம்பிச் சென்றது. வண்டி கிளப்பிய புகையும் தூசியும் அடங்கியதும் இருவரும் குதிரைகளைத் திருப்பி வீடு நோக்கிச் சென்றனர். சீனாவின் கடைசிப் பேரரசர் அடைந்த துயரங்கள்

பற்றி எல்லோருமே பேசுகிறார்கள்; ஆனால் கடைசி நாடோடி மேய்ப்பனின் துயரங்கள் அதைவிட மிக அதிகமென ஜென் நினைத்துக்கொண்டான். ஆயிரம் ஆண்டு கால சீன அரச பரம்பரை தூக்கி எறியப்பட்டதை விடவும் பத்தாயிரம் ஆண்டு கால மேய்ச்சல் நிலத்தின் அழிவை ஏற்பதென்பது எவ்வளவு கொடுமையான விசயம். ஒரு சமயத்தில் மிகுந்த ஆற்றலோடு இருந்த முதியவரின் உடல், இப்போது காற்றெல்லாம் வெளியேறி விட்டதைப் போல பாதியளவாகச் சுருங்கிவிட்டிருந்தது. அவருடைய முகச் சுருக்கங்களினூடாகக் கண்ணீர் வழிந்தோடியது.

முதியவரின் துக்கத்தை எப்படிக் குறைப்பது என அறியாது தவித்திருந்த ஜென், ஒரு வழியாக, ‘‘அப்பா, இலையுதிர்காலப் புல் இந்த வருடம் உண்மையிலேயே மிக அற்புதமாக இருக்கிறது... ஓலோன்புலாக் கொள்ளை அழகாகக் காணப்படுகிறது... ஒருவேளை அடுத்த வருசம்...’’

‘‘அடுத்த வருசமா?’’ என்று முதியவர் உணர்ச்சியில்லாத குரலில் பேசினார். ‘‘அடுத்த வருசம் என்ன வேடிக்கையெல்லாம் நடக்கப் போகிறதென்று யாருக்குத் தெரியும்? கடந்த காலங்களில் ஒரு குருட்டு மனிதனால்கூட மேய்ச்சல் நிலத்தின் அழகைப் பார்க்க முடியும். நான் இப்போது குருடாகிவிட விரும்புகிறேன்; அப்போது தான் அதன் அழிவை என்னால் பார்க்காமலிருக்க முடியும்.’’

முதியவர் குதிரையில் அசைந்தாடியபடி இருந்தார். அவருடைய கண்கள் மூடியிருந்தன. அவருடைய தொண்டையி லிருந்து முதிய சப்தங்கள் வெளியேறி, பச்சைப் புல்லின் வாசனையோடு கலந்தது. ஜென்னைப் பொறுத்தவரை, அந்தப் பாடல் எளிய குழந்தைப் பாடலாக ஒலித்தது.

வானம்பாடிகள் கீதமிசைக்கின்றன, இளவேனிற்காலம் இங்கிருக்கிறது;

மர்மோட்டுகள் கீச்சிடுகின்றன, வண்ணப்பூக்கள் மலர்கின்றன;

சாம்பல் கொக்குகள் அழைக்கின்றன, மழை இங்கு பெய்கிறது;

ஓநாய்க்குட்டிகள் ஊளையிடுகின்றன, நிலா வானில் எழுகிறது.

அந்தப் பாடலை அவர் முணுமுணுப்பாக மீண்டும் மீண்டும் பாடினார். மேய்ச்சல் நிலத்தின் எதிர்காலக் குழந்தைகள் இதைப் பாடுவார்களா? அல்லது புரிந்துகொள்ளவாவது செய்வார்களா என ஜென் வியந்தான். இல்லை,

அவர்களிடம் எல்லாமே கேள்விகளாகி விடுமா: வானம்பாடி என்றால் என்ன? மர்மோட் என்றால் என்ன? சாம்பல் கொக்குகள்? ஓநாய்கள்? காட்டு வாத்துகள்?

பரந்த, மஞ்சள்நிற மேய்ச்சல் நிலத்தில் சில வானம்பாடிகள் எழுந்தன; அவை சிறகடித்தபடி நடுவானில் வட்டமிட்டன; தெளிவான, சந்தோஷமான பாடல்களை இசைத்தன.

35

முதல் குளிர்காலப் பனி உருகியது; காற்றை ஈரப் பதமாக்கியது; நிலங்களைக் குளிர்வித்தது. வயல் காடுகளில் அடர்ந்திருந்த குளிர்காலப் புல் மஞ்சளாகவும் காய்ந்துமிருந்தது. மேலும், அது நிறம் மங்கி, அங்கு புல்லே முளைக்காது என்பதுபோல, பாலைவன மேட்டுநிலத்தை ஒத்திருந்தது.

வானம் மட்டும் அதே நீல நிறத்துடன், இலையுதிர் காலத்தின் இறுதியில் இருப்பதைப் போலக் காட்சியளித்தது. மேகங்கள் மேலோட்டமாக மிதந்திருக்க, வானம் ஒரு தெளிந்த ஏரியைப் போலிருந்தது. வானில் உயரப் பறந்துகொண்டிருந்த கழுகுகள், கண்ணாடியில் படிந்திருக்கும் துருக்களை விடவும் சிறியதாகத் தென்பட்டன. மர்மோட்டுகளும் எலிகளும் குளிர்காலம் முழுவதும் தங்கள் பொந்துகளுக்குள் தூங்கிக் கிடக்கும் என்பதால், கழுகுகள் வெகு உயரத்தில் பறந்து, விரிந்த பார்வையில் முயல்களைத் தேட வேண்டியிருக்கிறது. ஆனால் மங்கோலியக் காட்டு முயல்கள், தங்களை நிற மாற்றம் செய்துகொண்டு உயர்ந்த புல்லுக்குள் மறைந்து கொண்டிருக்கும்; நரிகளால்கூட அவற்றைக் கண்டுபிடிக்க முடியாது. ஒவ்வொரு குளிர்காலத்தின் போதும் ஏகப்பட்ட கழுகுகள் பட்டினியால் சாகின்றன என்று ஒருமுறை பில்ஜி சொல்லி இருக்கிறார்.

புல்லின் அடிப்பகுதியில் பாதி வரை பனி மூடியிருப்பதால், குளிர்கால மேய்ச்சலின்போது கால்நடைகளுக்குப் போதுமான புல் கிடைப்பதில்லை; எனவே, மேய்ப்பர்கள் மாதமொரு முறை இடம்பெயர வேண்டியிருக்கிறது. கால்நடைகள் மேய்ந்து புல்நிலம் வெள்ளையாக மாறியதும் வேறொரு மஞ்சள் நிலத்துக்கு அவர்கள் ஆடுகளையும் மாடுகளையும் ஓட்டிச் செல்வார்கள்; மிச்சமிருக்கும் புல்லைக் குதிரைகள் மேய விட்டுவிடுவார்கள். அவை தம் குளம்புகளால் அடிப்பகுதியைத் தோண்டியெடுத்து சாப்பிடும்.

ஒவ்வொரு இடப்பெயர்ச்சியும் அதிக தொலைவு கொண்டதாக இராது. பொதுவாக, அதற்கு அரை நாள்தான் எடுக்கும். அந்த நேரத்துக்குள் ஓநாய்க்குட்டியால், அது எவ்வளவு கடுமையாக முயற்சி செய்தாலும், அதன் கூண்டை அதிகமாக ஒன்றும் கடித்துவிட முடியாது. ஒரு வழியாக ஜென் நிம்மதிப் பெருமூச்சு விட்டான். அவர்கள் அவ்வப்போது இடம்பெயர

வேண்டியிருந்ததால், இடப்பெயர்ச்சியின்போது, ஓநாய்க்குட்டி உயிர் தரித்திருப்பதற்காக மேற்கொள்ள வேண்டிய நடவடிக்கைகள் குறித்து இரண்டு வாரங்களாக ஜென் மூளையைக் கசக்கி ஒரு தீர்வை அடைந்திருந்தான்.

கூண்டுக்குள் இள ஓநாயை நுழைய வைப்பதற்கான வழிமுறையை ஜென்னும் யாங்கும் கண்டறிந்திருந்தார்கள்: தரையில் ஒரு கூடையால் அதை மூடி, பின் எருதுவண்டியின் சக்கரத்தைத் தூக்கி, வண்டியை ஒரு பக்கமாகச் சரித்து, கூடையை உள்ளே தள்ளிவிடுவார்கள். பின் வண்டியை மீண்டும் கீழே இறக்கி, கூடையைப் பத்திரமாக இருக்கும்படி பார்த்துக்கொண்டால் போதும். புதிய இடத்துக்குப் போனதும் அதே வழிமுறையை மாற்றிச் செய்து இறக்கிவிடலாம். அவர்கள் ஓரிடத்தில் நிலைத்துத் தங்கியிருக்கப் போவது வரை இந்த நடைமுறையைப் பின்பற்றி ஓநாய்க்குட்டியைக் கொண்டு சென்றுவிட முடியுமென நம்பினார்கள். ஓரிடத்தில் நிலைத்துவிட்டால், அங்கு அவர்கள் கல்பட்டியொன்றைக் கட்டுவார்கள்; அதோடு அவர்களுடைய பிரச்சனைகள் முடிவுக்கு வந்துவிடும்; அவர்களும் ஓநாய்க்குட்டியும் தத்தமது வாழ்க்கையை சுமுகமாகவும் இயைந்தும் வாழ முடியும். நாய்க்குட்டிகளோடு சேர்த்து அதை அவர்கள் வளர்ப்பார்கள்; அவை ஆரம்பத்திலிருந்து சேர்ந்தே வளர்ந்திருக்கின்றன என்பதால் அவை நிச்சயம் நல்ல விளைவுகளைத் தரும் _ ஓநாய் இன வேட்டை நாய்களை அவை பிரசவிக்கும்; மேய்ச்சல்நில ஓநாய்களின் உண்மையான வழித் தோன்றல்களாக அவை அமையும்.

ஓநாய்க்குட்டியோடு அமர்ந்து கணிசமான நேரத்தை ஜென்னும் யாங்கும் கழித்தார்கள்; அதன் தலையைத் தடவியபடியே அதோடு பேசினார்கள். அத்தகைய தருணங்களில், அவர்களுடைய ஒரு காலில் அது தலை வைத்துப் படுத்தபடி, காதுகள் விடைத்திருக்க, அவர்களுடைய உரையாடலை ஆவலுடன் கேட்டுக்கொண்டிருக்கும். அது களைப்படையும்போது, அது தலையை ஆட்டி, அதன் கழுத்தை அவர்களுடைய கால்களில் தேய்க்கும்; அல்லது அவர்களை நோக்கித் தலையை உயர்த்திக் காதுகளையும் கன்னங்களையும் சொறிந்து கொடுக்கச் சொல்லும். அந்தக் காட்சியில் திளைத்துப்போய், ஓநாய்க்குட்டியுடனான அவர்களுடைய வாழ்க்கை பற்றி அவர்கள் கனவு காண்பார்கள்.

ஓநாய்க்குட்டியைக் கையில் ஏந்தியபடி, அதன் மேற்தோலை வருடிக் கொடுத்தான் யாங். ‘‘நம்முடைய குட்டி ஓநாய், அதனுடைய சொந்தக் குட்டிகளை அடைந்துவிட்டால், அதன்பிறகு ஓடிப்போக முயற்சிக்காது. ஓநாய்கள் தம் குடும்பங்களிடம் அக்கறை கொண்டவை. ஆண் ஓநாய்கள் நல்ல இணைக்கான உதாரணங் களாகத் திகழ்பவை. காட்டு ஓநாய் ஏதும் வராதவரை, அதை நாம் சங்கிலியால் கட்டிப்போட வேண்டியதுகூட இருக்காது; அது மேய்ச்சல் நிலத்தில் விளையாடிவிட்டுத் தானாகவே பட்டிக்குத் திரும்பிவிடும்.’’

ஜென் மறுக்கும் விதத்தில் தலையசைத்தான். ‘‘அது அப்படிச் செய்தால், அது ஒரு ஓநாயாக இருக்காது. அதை இங்கேயே வைத்திருக்க நான் யோசித்திருக்கவில்லை. என்னுடைய ஆரம்பக் கனவாக இருந்தது, ஒரு ஓநாயை நண்பனாகக் கொண்டிருப்பதுதான். நான் எல்லைப் பகுதி மலைகளுக்குச் சென்று, ‘‘குட்டி ஓநாய், குட்டி ஓநாய், சாப்பிடும் நேரம்’’ என்று கூவும்போது, அது தன்னுடைய குடும்பத்தார் எல்லோரையும் — மேய்ச்சல் நிலத்தின் அசலான ஓநாய்க் கூட்டம் —கூட்டிக்கொண்டு என்னை நோக்கி ஓடிவரும். அவற்றின் கழுத்துகளைச் சுற்றிச் சங்கிலிகள் இருக்காது; அவற்றின் பற்கள் கூர்மையாகவும் வலுவாகவும் இருக்கும்; அவை என்னோடு புல்தரையில் புரளும். என்னுடைய கைகளை மெதுவாகக் கடிக்கும். ஆனால் ஓநாய்க்குட்டி அதன் கூரான பற்களை இப்போது இழந்துவிட்ட நிலையில், என்னுடைய கனவு வெறும் கனவாக மட்டுமே ஆகிப்போனது.’’

ஜென் மெதுவாகப் பெருமூச்சு விட்டான். ‘‘ஆனால் நான் அப்படியே இதை விட்டுவிட விரும்பவில்லை. என்னிடம் இப்போது இன்னொரு விந்தைக் கற்பனை உருவாகி இருக்கிறது. நான் ஒரு பல் மருத்துவராகி, கூர்மையான எஃகுப் பற்களை அதற்குக் கட்டுவேன். அடுத்த இளவேனிற் காலத்தின்போது, அது முழு வளர்ச்சி அடைந்துவிட்டிருக்கும் நிலையில், நான் அதை ரகசியமாக எல்லைக்கு அப்பால் எடுத்துக்கொண்டு போய் வெளி மங்கோலிய மலைகளில் அதை சுதந்திரமாக விட்டுவிடுவேன். அனேகமாக அதன் தந்தை, வெள்ளை ஓநாய் அரசன், அதற்குள்ளாக அவற்றின் சுதந்திரத்துக்கான வழியையும் அதற்கான ஒரு தளத்தையும் உருவாக்கியிருக்கும். ஓநாய்க்குட்டி தன்னுடைய தந்தையைக் கண்டுபிடித்துவிடக் கூடிய அளவு சாமர்த்தியமிக்கது என்பதில்

சந்தேகமில்லை. அவை இரண்டும் சேர்ந்திருக்கும்போது, ஓநாய்க்குட்டியின் ரத்தவோட்டத்தை முகர்ந்து, தந்தை அதை அரவணைத்துக் கொள்ளும். கூர்மையான எஃகுப் பற்களை ஆயுதமாகக் கொண்டு ஓநாய்க்குட்டி எவராலும் வெற்றிகொள்ள முடியாததாகிவிடும். அனேகமாக அடுத்த சில ஆண்டுகளில் அது அரசனாகப் பொறுப்பேற்கவும் கூடும். ஓலோன்புலாக் ஓநாய்களிலேயே சிறந்த மரபணுக்கள் கொண்டதாக நம் ஓநாய்க்குட்டிதான் இருக்கும். அது முரண்டும் பிடிவாதமும் மிக்கது; அபாரமான சாமர்த்தியம் கொண்டது; உரிமைப்படியும் ஓநாய்களின் அரசனாக அதுதான் ஆகவேண்டும். ஆனால் உண்மையான மங்கோலியாவுக்கு அது திரும்ப முடிந்தால் இது நடக்கும்; இங்குதான் மிகப் பரந்த பிராந்தியத்தில் குறைந்த மக்களே குடியிருக்கிறார்கள். உண்மையான மங்கோலியாவில் இரண்டு கோடி மக்களே இருக்கிறார்கள்; இது, ஓநாய் குலச் சின்னத்தைப் பெரிதும் போற்றும் ஆன்மீக சொர்க்க பூமி. விவசாய மக்கள் தொகை இல்லாத ஓரிடம். விவசாயிகள் ஓநாய்களை வெறுப்பதோடு அவற்றைக் கொல்ல மட்டுமே விரும்புகிறார்கள். மிகப் பரந்துபட்ட, அடர்ந்து செழித்த இந்த மேய்ச்சல் நிலத்தில் தான் நம்முடைய குட்டி ஓநாய் தன் வீரதீரத்தைக் காட்ட வேண்டும். இப்படியான மிகச் சிறந்த ஓநாய்க்குட்டியின் எதிர்காலத்தைப் பாழடித்ததின் மூலம் நான் ஒரு பெரும் குற்றம் செய்துவிட்டேன்.''

தூரத்து மலைகளில் தன் பார்வையைப் பதித்தான் யாங். அவன் கண்கள் இருண்டன. அவன் பெருமூச்சு விட்டான். ''பத்து ஆண்டுகளுக்கு முன்பாக நீ இங்கு வந்திருந்தால், ஒருவேளை உன் கனவு ஈடேறியிருக்கும்; ஆனால் உன்னுடைய சமீபத்திய கற்பனை ரொம்ப அபத்தமானது. பல் மருத்துவக் கருவிகளை நீ எங்கு கண்டுபிடிக்கப் போகிறாய்? பேனர் மருத்துவமனையில்கூட அவையெல்லாம் கிடையாது. மூத்த மேய்ப்பர்கள் எண்ணூறு லீ தூரம் பயணம் செய்து லீக் மருத்துவமனைக்குப் போய்த்தான் தங்கள் பற்களைக் கட்டிக்கொள்கிறார்கள். அங்கு ஓநாயை எடுத்துக்கொண்டு போவதற்கு என்ன வாய்ப்புகள் இருக்கின்றன? கனவு காண்பதை நிறுத்து. யதார்த்தத்தை நாம் எதிர்கொள்ள வேண்டும்.''

அந்த யதார்த்தமானது, ஓநாய்க்குட்டியின் காயங்கள். அதன் பாதங்கள் குணமடைந்துவிட்டன. ஆனால் கறுத்துவிட்ட பல்லானது ஆடத் தொடங்கி,

ஈறுகள் வீங்கிவிட்டிருந்தன. அதனால் இறைச்சியைக் கிழித்துக் கடித்துத் தின்ன முடியவில்லை; சமயங்களில் அதனுடைய பசி மோசமான பல்லை மறக்கடித்து விடும்போது, அது ஒரு பெரிய கடி கடித்துவிடும். ஆனால் வலியில் உடனே அதைக் கீழே போட்டுவிட்டு, வாயை அகலத் திறந்து குளிர்ந்த காற்றை உறிஞ்சும். மோசமான பல்லை, வலி போகும்வரை நக்கியபடி இருக்கும். பின்னரே சாப்பிட ஆரம்பிக்கும். அப்போது ஒரு பக்கமாகச் சவைத்து, மிக மெதுவாகச் சாப்பிடும்.

ஓநாய்க்குட்டியின் தொண்டைப் புண்தான் ஜென்னுக்கு மிகுந்த கவலையளித்தது. அவன் தொடர்ந்து மருந்துப் பொடியை உணவில் தூவி வந்தான். ஆனால் தொண்டையிலிருந்து ரத்தம் கசிவது நின்றுவிட்ட போதிலும் அது இன்னமும் உணவை விழுங்க சிரமப்பட்டது. அது தொடர்ந்து இருமியது. பிராணி நல மருத்துவரிடம் ஆலோசனையும் உதவியும் கேட்க ஜென்னுக்குத் தைரியம் இல்லாததால், அவன் புத்தகங்களை இரவல் பெற்றுப் படித்து வந்தான்.

குளிர்காலம் முழுவதற்குமான மக்களின் உணவுத் தேவைக்காக ஆடு மாடுகள் வெட்டப்பட்டுப் பதப்படுத்தப்பட்டன. ஜென்னுடைய குடிலில் இருந்த நால்வருக்குமாக, ஆளுக்கு ஆறு ஆடு வீதம் இருபத்து நான்கு ஆடுகள் குளிர் காலத்துக்கான அவர்களுடைய பங்காகக் கொடுக்கப்பட்டது. ஒரு மாடும் தரப்பட்டது. அவர்களுக்கான தானியப் பங்கீடு அதே அளவில், அதாவது ஒவ்வொரு மாதமும் முப்பது 'ஜின்' தரப்பட்டது. ஆனால் ம்மேய்ப்பர்களுக்கு இறைச்சிப் பங்கீடு அதே அளவுதான் என்றாலும், பத்தொன்பது ஜின் தானியம் மட்டுமே தரப்பட்டது. இதன் விளைவாக, ஜென்னுடைய குடிலில் இறைச்சி எல்லோருக்கும் போதுமானதாக இருந்தது: மக்கள், நாய்கள் மற்றும் ஓநாய்க்குட்டி. கூடுதலாக, குளிரினாலோ நோயாலோ ஆடுகள் இறந்துவிட்டால், மேய்ப்பர்கள் அவற்றை உண்ண மாட்டார்கள் என்பதால், அவையும் அவர்களுடைய நாய்களுக்கும் ஓநாய்க்குட்டிக்கும் கிடைத்தன. ஓநாய்க்குட்டிக்குப் போதுமான இறைச்சியைத் தேட வேண்டிய கவலை ஜென்னுக்கு இல்லாமல் போனது.

குளிர்காலப் பகல்கள் குறுகியவை என்பதால், ஆறு அல்லது ஏழு மணி நேரமே ஆடுகளால் மேய முடியும். இது, கோடை கால மேய்ச்சல் நேரத்தில்

கிட்டத்தட்ட பாதிக்கும் கொஞ்சம் கூடுதல். ஆனால், பனிப்புயல் அடிக்காதவரை, குளிர்காலம்தான் மேய்ப்பர் களுக்கு ஓய்வெடுக்க உகந்த நேரம். ஓநாய்க்குட்டியுடன் அதிக நேரம் செலவிடுவதோடு, கொஞ்சம் படிக்கவும் குறிப்பெடுக்கவும் ஜென் திட்டமிட்டான். பனி நாட்களில் ஓநாய்க்குட்டி என்னவெல்லாம் செய்யப் போகிறதென்பதைப் பார்க்க ஜென் காத்திருந்தான். ஓநாய்களின் வன இயல்பு, ஞானம் மற்றும் மாயப் புதிர்த்தன்மை ஆகியவற்றை மையமாகக் கொண்டதே மேய்ச்சல் நிலத்தின் நிஜ நாடகங்கள். ஓநாய்க்குட்டி அதன் பரம ரசிகனை ஏமாற்றிவிடாது என்ற நம்பிக்கையோடு ஜென் இருந்தான்.

நீண்ட, கடுமையான பனிக்காலத்தின்போது, எல்லைப் பகுதியைக் கடந்து சென்றுவிட்டிருந்த ஓநாய்கள் எல்லையின் இப்பகுதியை விடவும் பத்து மடங்கு மோசமான நிலைமைகளை எதிர்கொள்ள வேண்டியிருக்கும். ஆனால் அவனுடைய ஓநாய்க் குட்டிக்கு ஏராளமான இறைச்சி இங்கு இருக்கிறது. அதனுடைய மயிர் இப்போது முழுமையாக வளர்ந்துவிட்டது. பார்ப்பதற்குப் பெரிதாகவும், அதன் ஒவ்வொரு அம்சமும் ஒரு வளர்ந்த ஓநாயினதைப் போலவும் இருந்தன. ஜென் தன்னுடைய விரல்களை அதனுடைய அடர்த்தியான ரோமங்களுக்குள் நுழைத்தபோது, அதனுடைய உடல் சூட்டை அவன் உணர்ந்தான். அது கையுறைகளை விடவும் இதமாக இருந்தது. ஓநாய்க்குட்டி இன்னமும் அதனுடைய புதிய பெயருக்கு இடம் கொடுக்கவில்லை: பெரிய ஓநாய். அவர்கள் அப்படிக் கூப்பிட்டால், அது காது கேட்காதது போலப் பாசாங்கு செய்யும். ஆனால் அவர்கள் குட்டி ஓநாய் என்று கூப்பிட்டால், அது சந்தோசமாக ஓடிவந்து, அவர்களுடைய கால்கள் மீதும் முட்டிகள் மீதும் பாயும். அதன் நாய்க்குட்டித் தோழி அடிக்கடி பட்டிக்குச் சென்று ஓநாய்க்குட்டியோடு விளையாடும். அது இப்போதெல்லாம் அதை முரட்டுத்தனமாகக் கடிப்பதில்லை. சமயங்களில் ஓநாய்க்குட்டி, நாய்க்குட்டி மீது ஏதோ இனச் சேர்க்கையில் ஈடுபடுவதுபோல ஏறும். அதன் நெருக்கமான, ஆனாலும் மூர்க்கமான நடத்தையைப் பார்த்து யாங் கீ புன்னகையோடு சொன்னான், ‘‘அடுத்த வருடம் நாம் ஏதாவது எதிர்பார்க்கலாம் போல் தெரிகிறது...’’

ஓநாய்க்குட்டியிடம் ஒருபோதும் மாறாத ஓநாய் குணம் என்று சில விசயங்கள் இருந்தன: ஒன்று, அது சாப்பிடும்போது எவருமே, ஜென்னோ யாங்கோ கூட, அதன் பக்கத்தில் இருக்கக் கூடாது. இரண்டு, நடை செல்லும்போது எவருமே அவர்களோடு சேர்ந்து வரும்படி அதை இழுக்கக் கூடாது; அப்படி எவரேனும் செய்தால் அது அவருடைய வாழ்வுக்கான சண்டையாகிவிடும். அதன் விதிகளை மதித்து நடக்க ஜென் எப்போதுமே முயற்சிப்பான். மற்ற பருவ காலங்களை விடவும் குளிர்காலத்தில் உணவு மீதான அதன் வேட்கை அபரிமிதமாக இருந்தது. ஒவ்வொரு முறை ஜென் உணவு கொடுக்கும்போதும், ஜென் பட்டியை விட்டு வெளியேறும் வரை, அது அவனைப் பார்த்து, கோரைப் பற்களை வெளிக் காட்டியபடி உறுமும். அவன் அகன்றதும்தான் அது நிம்மதியாகச் சாப்பிட ஆரம்பிக்கும். அதனுடைய காயங்களிலிருந்து முழுவது மாகக் குணமடைந்திருக்காவிட்டாலும், அது மீண்டும் தன் பலத்தை அடைந்தது. அது இழந்துவிட்டிருந்த ரத்தத்தை, பெரும் தீனியால் ஈடுகட்டி விட்டிருந்ததைப் போல் தோன்றியது.

மோசமாகிவிட்ட பல்லும் தொண்டைப்புண்ணும்கூட அதனுடைய ஓநாய் குணத்தைப் பாதிக்கவில்லை. ஒரு சாப்பாட்டை முன்பெல்லாம் இரண்டு அல்லது மூன்று முறை வாய் நிறைய எடுத்து விழுங்கி முடித்துவிடும்; ஆனால் இப்போது ஏழெட்டு முறை கடித்து விழுங்குகிறது. இனி, அது முழுவதுமாகக் குணமடையாதோ என்று ஜென் கவலைப்பட்டான்.

அமைதியான, மூட்டமிட்டிருக்கிற, ருசிகரமில்லாத குளிர்கால மேய்ச்சல் நிலம் எப்போதையும்விட இப்போது மேலும் களையிழந்து காணப்பட்டது. முடிவேயில்லாத, எல்லையற்ற கவலை ஜென் சென்னிடம் எழுந்தபடி இருந்தது. ஓநாய்க்குட்டியோ, பீஜிங்கிலிருந்து அவன் கொண்டு வந்திருந்த புத்தகங்களோ இல்லாவிட்டால் இந்த சலிப்பான மனநிலையில் அவன் மரத்துப் போயிருப்பான் அல்லது பித்து பிடித்துவிட்டிருக்கும் என்று அவன் நினைத்தான். வடதுருவத்துக்கு அருகில் வசிக்கும் ஐரோப்பியர்களிடம் தற்கொலை விகிதம் அதிகம் காணப்படுவதாக, யாங் கீயின் அப்பா இங்லாந்தில் மாணவனாக இருந்தபோது தெரிந்துகொண்டதாகச் சொன்னதை யாங் கீ ஒருமுறை அவனிடம் கூறியிருக்கிறான். நீண்ட மற்றும் இருண்ட பனிக்காலங்களைக் கொண்ட ரஷ்ய மேய்ச்சல்நில மற்றும் சைபீரியப் பாழ்நிலங்களில்

வாழ்பவர்களிடம் பல நூற்றாண்டு களாகக் கடுமையான மனச்சோர்வு பொதுவாகக் காணப்படுகிறது. ஆனால் அது போன்ற சுற்றுச்சூழலில் வாழும் மங்கோலியர்கள் மட்டும், ஆரோக்கியமான உடலோடும், மேலான உத்வேகத்தோடும் பல்லாயிரக்கணக்கான ஆண்டுகளாக வாழ முடிவது எப்படி? ஓநாய்களுடனான அவர்களுடைய பதற்றமான, மூர்க்கமான, குரூரமான யுத்தங்களின் விளைவுகளாக அவர்களிடம் இந்த மனோபாவம் வளர்ந்துவிட்டிருக்கும் என்ற முடிவுக்கு ஜென் வந்தான்.

ஓநாய்கள் நிர்மூலமாக்கப்பட்ட பிறகு, மேய்ச்சல் நிலத்தில் சிவந்த சூரியன் ஒளிரவில்லை. நீடித்த மாற்றமின்மை மனச் சோர்வையும் சலிப்பையும் ஏற்படுத்தியது; உத்வேகத்தின் மேலும் பல அம்சங்களும் சிதைவுற்றன. ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக அவர்களின் சிறப்பியல்பாக இருந்த ஆண்மையின் வேட்கையும் அவர்களிடமிருந்து நீங்கியது.

ஓநாய்கள் மறைந்த பிறகு, ஓலோன்புலாக்கில் மது விற்பனை கிட்டத்தட்ட இரண்டு மடங்காகிவிட்டது.

ஓநாய் குலச்சின்னமானது, மேய்ச்சல் நிலத்தின் ஆன்மா; மேய்ச்சல்நில மக்களின் சுதந்திரமான, பணிந்து போகாத உத்வேகத்தின் குறியீடு.

இளம் ஓநாய் பெரிதாக வளர்ந்துவிட்டது; அதன் சங்கிலி சின்னதாகிப் போனது. அதன் அளவுக்கேற்ப சங்கிலியின் நீளம் இல்லை என்பதை உணர்ந்ததும், தான் ஏமாற்றப்படுவதை ஏற்காத அந்த நுண்ணுணர்வுமிக்க ஓநாய்க்குட்டி, தன் எதிர்ப்பை வெளிப்படுத்தியது. தன்னுடைய எல்லா பலத்தையும் திரட்டி சங்கிலியை இழுத்தது; சங்கிலி பிணைக்கப்பட்டிருந்த மரக்கம்பத்தை இழுக்கவும் மோதவும் செய்தது; கழுத்து இறுக்கப்பட்டு செத்தாலும் பரவாயில்லை என்ற தீர்மானத்தோடு அது போராடியது.

ஜென், சங்கிலியில் மேலும் சில இஞ்சுகளைச் சேர்த்தான். வளர்ந்துவீட்ட ஓநாய்க்குட்டிக்கு அதுவேகூடக் கொஞ்சம் சிறுசுதான் என்று ஜென்னுக்கே தோன்றியது. ஆனால் சங்கிலியை மேலும் நீட்டித்தால், அதனுடைய ஓடும் தூரம் கூடி, அது சங்கிலியை இழுப்பதற்கான அதிக சக்தியைத் தருமென்ற பயம்தான் ஜென் சங்கிலியை நீளமாக்காமல் இருந்ததற்கான ஒரே காரணம்.

ஒருநாள் அது சங்கிலியைக் கழற்றிவிடவோ அல்லது உடைத்து விடவோ கூடுமென்று ஜென் கவலைப்பட்டான்.

ஓநாய்க்குட்டி, ஒரு சிறைப் போராட்டத்தில் ஈடுபட்டிருப்பது போல் தோன்றியது; சங்கிலியில் ஒவ்வொரு இஞ்ச் கூட்டப்படும் போதும் அது கொண்டாடியது. சங்கிலி நீட்டிக்கப்பட்டவுடனேயே, அது தொடர்ந்து வட்டமடித்தபடி, பைத்தியக்காரத்தனமாக ஓடும்; அதன் சுதந்திரத்தைக் கூட்டிய சில புதிய இஞ்சுகளைக் கொண்டாடிக் குதூகலிக்கும்.

ஜென் அதன் குஷியைக் கவனித்தபோது, ஓநாய்க்குட்டி சங்கிலி நீளமாக்கப்பட்டதை மட்டும் கொண்டாடவில்லை என்பது புரிந்தது. அதன் பரவசம் தணிந்த பிறகும் அது ஓடிக்கொண்டே இருந்தது. அது தப்பிப்பதற்கு உதவும் வகையில், வேகப் பயிற்சி எடுக்கும்படி அதன் உள்ளுணர்வுகள் அதற்குத் தெரிவிப்பதை ஜென் உணர்ந்தான். கோடை காலம் மற்றும் இலையுதிர் காலத்தை விடவும் அது தன் சங்கிலிக்கெதிராக அதிக சக்தியுடன் போராடியது. அது இன்னும் பலத்தோடு கூடுதலாக வளர்ச்சி யடைந்த நிலையில், ஒருநாள் கண்களில் ஏக்கத்துடன் அது மேய்ச்சல் நிலத்தை வெறித்துப் பார்த்தது. அதனுள் சுதந்திர வேட்கை மேலெழ, அது சங்கிலியை இன்னும் கூடுதலாக வெறுத்தது. அதைச் சிறைப் பிடித்து வைத்திருப்பது எவ்வளவு குரூரமானது என ஜென் உணர்ந்தாலும், அது தப்பித்து ஓடி குளிர்காலத்தின் உச்சத்தில் பனி நிலத்தில் திரிய நேரிட்டால் அது நிச்சயம் இறந்துவிடும் என்பதையும் ஜென் உணர்ந்திருந்தான்.

ஓநாய்க்குட்டி சங்கிலியோடு தொடர்ந்து போராடிக் கொண்டிருந்ததில், அதன் தொண்டைப் புண் ஆறுவது தாமதப் பட்டது. அதைப் பார்க்க நேரிடும் போதெல்லாம், ஜென்னுக்குத் தன் தொண்டை அடைத்துக்கொண்டு விட்டதைப் போன்ற உணர்வு ஏற்படும். ஜென், அவ்வப்போது சங்கிலியையும், கழுத்துப் பட்டியையும், கம்பத்தையும் சோதித்தபடி இருந்தான். ஓநாய்க்குட்டி சுதந்திரமும் மரணமுமான நிலத்துக்கு ஓடிப்போய் விடாமல் தடுக்க அவன் பிரயாசை எடுத்துக்கொண்டான்.

ஜென்னின் இதயத்தைக் கடும் வேதனையுடன் கூடிய குற்றவுணர்வு தாக்கியது. முடிவற்ற குளிர்காலத்தைத் தாக்குப் பிடிப்பதற்கான ஆற்றலைத் தந்த ஓநாய்க்குட்டியின் துணையை அவன் வெகுவாக அனுபவித்தான். அவன்

ஓநாய்களை மதிக்கவும் வணங்கவும் செய்தான். ஓநாய்க்குட்டியின் சுதந்திரத்தையும் சந்தோசத்தையும் அதற்கு அளிக்க மறுத்து, அதைச் சிறைப்படுத்தி வைத்திருப்பது உண்மையிலேயே அவசியம்தானா? ஹேன் அறியாமையிலிருந்தும் தப்பெண்ணத்திலிருந்தும் வெளியேறவும் ஓநாய்கள் பற்றிய அறிவைப் பூரணமாகப் பெறவும் இதுதானா வழி?

அவன் மேற்கொண்ட தொடர் நடவடிக்கைகள் குறித்து ஜென் கவலையும் சந்தேகங்களும் கொண்டு அந்த சிந்தனையிலேயே மூழ்கிப் போனான்.

அது ஏதாவது படிக்க வேண்டிய நேரம்; ஆனால் அவனால் தன் பாதங்களை நகர்த்த முடியுமென்று தோன்றவில்லை. ஆன்மீக ரீதியாகவும் உணர்வுரீதியாகவும் அவன் ஓநாய்க்குட்டியை சார்ந் திருப்பதை உணர்ந்தான். ஒரு வழியாகத் தன்னைத் தானே வலிந்து இழுத்துக்கொண்டு வெளியில் வந்தான். சிறைப்பட்டிருக்கும் அந்த விலங்குக்குத் தன்னால் வேறென்ன செய்ய முடியும் என்ற யோசனையே அவனை ஆக்ரமித்திருந்தது.

ஓநாய்க்குட்டியின் இயல்பான மனோபாவம்தான் கடைசியில் அதன் விதியை நிர்ணயித்தது. கடுமையான பனிக்காலத்தின்போது, ஓநாய்க்குட்டியை இழக்கும்படி ஆவதுதான் டெஞ்ஞரின் தவிர்க்க முடியாத திட்டமென ஜென் எப்போதுமே உணர்ந்திருந்தான். டெஞ்ஞரானது ஜென்னுடைய மனசாட்சியின் மீது பெரும் தாக்குதலைத் தொடர்ந்து நிகழ்த்தி வந்திருக்கிறது; அவனுக்கு ஒருபோதும் மன்னிப்பு கிடையாது.

காற்றடிக்காத, நிலவில்லாத, நாய்கள் குரைக்காத, நட்சத்திரங்கள் மின்னாத இருண்ட இரவில் ஓநாய்க்குட்டியின் காயம் மோசமடைந்தது. தொன்மையான ஓலோன்புலாக் நிசப்தமாகவும் உயிர்ப்பின்றியும் காணப்பட்டது.

அந்த இரவின் பின்பாதியில், சங்கிலி மிக மூர்க்கமாக அசைக்கப்படும் சத்தம் கேட்டு ஜென் விழித்தான். அச்சவுணர்வில் அவன் மூளை எப்போதையும் விட தெளிவடைந்திருந்தது; அவனுடைய காதுகள் வழக்கத்தை விடக் கூர்மையாகி விட்டிருந்தன. சங்கிலிச் சத்தத்துக்கு ஊடாக, தெளிவற்ற ஓநாய் ஊளைகள் எல்லைப் பகுதி மலைகளிலிருந்து வருவதை அவன் கண்டு பிடித்தான். விட்டுவிட்டு வெளிப்பட்ட ஊளைகள் முதுமையோடும், சோகத்தோடும், பதற்றத்தோடும், கோபத்தோடும் ஒலித்தன. சொந்த நிலத்திலிருந்து

விரட்டப்பட்ட ஓநாய்க் கூட்டமானது, எல்லைக்கு அந்தப் பக்கமாக உள்ள பகுதியிலுள்ள பலமிக்க ஓநாய்களால் பெரும்பாலும் தாக்கப்பட்டிருக்க வேண்டும். அனேகமாக, வெள்ளை ஓநாய் அரசனும், காயமடைந்த தனியான சில ஓநாய் களும் மட்டும்தான் எஞ்சியிருக்க வேண்டும். எல்லைக் கோட்டுக்கும் நெடுஞ்சாலைக்கும் இடையிலுள்ள யாருமற்ற நிலப் பகுதிக்கு அவை தெற்காக ஓடி வந்திருக்கும். வெள்ளை ஓநாய் அரசனின் ஊளையானது, தோற்கடிக்கப்பட்ட மற்றும் பிரிந்து போன ஓநாய்கள் எல்லாவற்றையும் ஒன்றாக ஒருங்கிணைத்து ஒரு கடைசி யுத்தத்துக்கு அழைப்பு விடுப்பதாக இருந்தது.

சுதந்திரமான ஓலோன்புலாக் ஓநாய்களின் ஊளைகளை ஜென் கடைசியாகக் கேட்டு, ஒரு மாதத்துக்கும் மேலாகிவிட்டது. துடிதுடித்து அதிர்கிற, மெல்லிய, கவலை தோய்ந்த ஊளைகளிலிருந்து வெளிப்பட்ட செய்தி அவனுக்குக் கவலையளித்தது. நம்பிக்கையிழந்த ஓநாய் ஊளைகளைக் கேட்பது எவ்வளவு துயரகரமானது; அந்தத் தருணத்தில் பில்ஜி அழுதுகொண்டிருக்கக் கூடுமென ஜென் நினைத்தான். மிகவும் வலிமையான, படு மூர்க்கமான, சாமர்த்தியமிக்க ஆண் ஓநாய்களில் பெரும்பாலானவை வேட்டைக்காரர்களால் அழிக்கப்பட்டுவிட்டன. மேய்ச்சல் நிலத்தைப் பனி போர்த்திய பிறகு, இராணுவ வண்டிகளால் உபயோகமில்லாமல் போய்விட்டது. அதனால் வேட்டைக்காரர்கள் அவற்றைக் கொடுத்துவிட்டு மாற்றாக அதிவேகக் குதிரைகளைப் பெற்றுக்கொண்டு ஓநாய் வேட்டையைத் தொடர்ந்தார்கள். ஓநாய்களோ தப்பிப்பதற்கான மார்க்கம் எதையும் அடைவதற்கோ, தங்களுக்கான புதிய பிராந்தியத்தை உருவாக்கிக்கொள்வதற்கோ சக்தி இழந்திருந்தன.

ஜென்னைப் பெரும் பயம் ஆட்கொண்டது. நீண்ட நாட்களாக இல்லாமலிருந்த ஓநாய் ஊளைகளை மீண்டும் கேட்டதன் மூலம், ஓநாய்க்குட்டியின் போராட்ட உத்வேகமும், நம்பிக்கையும், ஏக்கமும், எதிர்ப்பு சக்தியும் மீண்டும் கிளறப்பட்டன. சிறைப்படுத்தப்பட்ட மேய்ச்சல்நில இளவரசனைப் போல, வயதான தன் தந்தையின் அழைப்பைக் கேட்டது. உதவி கேட்கும் அந்தக் குரலானது, கவலையையும், கோபத்தையும், மூர்க்கத்தையும் அதனிடம் ஏற்படுத்தியது. ஒரு உரத்த ஊளையின்மூலம் தன் உணர்ச்சியை

வெளிப்படுத்த அது விரும்பியது. ஆனால் அதன் காயமடைந்த தொண்டை, தந்தைக்குப் பதில் அளிக்க அனுமதிக்கவில்லை. அது பதற்றத்தில் பொறுமையிழந்து பித்துப் பிடித்ததுபோல் குதித்தது; ஓடியது. சங்கிலியையும் மரக் கம்பத்தையும் உலுக்கியது. உயிர் போகக்கூடிய காயத்தை உண்டாக்கிக் கொள்ளுமளவு போராடியது. பனி உறைந்த நிலம் நகர்வதைப் போல ஜென் உணர்ந்தான். பட்டியிலிருந்து வெளிப்பட்ட சங்கிலிச் சத்தத்திலிருந்தும் கூக்குரலிலிருந்தும் ஓநாய்க் குட்டி ஓடுவதையும், மோதுவதையும், இருமி ரத்தம் கக்குவதையும் ஜென்னால் கற்பனை செய்ய முடிந்தது.

அவன் பயந்துபோய், கம்பளிப் போர்வையை உதறிவிட்டுத் துள்ளி எழுந்து, பேண்டையும் மேலாடையையும் அவசர அவசரமாகப் போட்டுக்கொண்டு குடிலை விட்டு வெளியில் ஓடி வந்தான். அவனுடைய ஃப்ளாஷ் லைட்டின் ஒளிக்கீற்றிலிருந்து ரத்தம் கண்ணில் பட்டது. ஓநாய்க்குட்டி ரத்தம் வழிந்தோட, தொடர்ந்து ஓடியபடியும் மோதியபடியும் இருந்தது. கழுத்துப் பட்டை தொண்டையை இறுக்கியதில் நாக்கு தானாகவே வெளியே தொங்கிக்கொண்டிருந்தது. சங்கிலி முழுமையாக நீண்டு முறுக்கி யிருந்தது. ரத்தம் அதன் மார்பில் உறைந்து தொங்கிக்கொண்டிருந்தது; ரத்தத்துளிகள் தரையில் சொட்டிக்கொண்டிருந்தன.

எதைப் பற்றியும் கவலைப்படாமல், ஜென் ஓடிப்போய் ஓநாய்க்குட்டியை அதன் கழுத்தோடு சேர்த்துப் பிடித்துக்கொள்ள முயற்சித்தான். ஆனால் அவன் அதனருகில் நெருங்கியதுமே அவனுடைய சட்டையின் கைப் பகுதியில் ஒரு பெரிய துண்டைக் கடித்திழுத்தது. யாங் கீயும் பதற்றத்தோடு அங்கு ஓடிவந்தான். இருவரும் சேர்ந்து முயற்சித்தும் அதனருகில் அவர்களால் நெருங்க முடியவில்லை. அதன் கண்கள் சிவந்து கொடூரமாகக் காட்சி யளித்தன; கொலைவெறியும் குரூரமும் மூர்க்கமும் அதனிடம் குடி புகுந்துவிட்டிருந்தன. அவர்கள் உடனடியாக ஒரு பெரிய, கனத்த கம்பளிப் போர்வையை இழுத்து வந்து, அதன்மீது போட்டு அதைத் தரையோடு சேர்த்து அமுக்கினார்கள்.

வாழ்வா சாவா போராட்டத்தில் ஈடுபட்டிருந்த ஓநாய்க்குட்டி முழு ஆக்ரோஷத்தோடு காணப்பட்டது; அது கம்பளியைக் கடித்தது; அதன்மீது

படும் எந்த ஒன்றையும் கடித்துக் குதறக் காத்திருந்தது. சங்கிலியிலிருந்து விடுபடும் வெறியுடன் கழுத்தைத் தொடர்ந்து ஆட்டியபடி இருந்தது. ஜென் தனக்கும்கூட மனநிலை தவறிவிட்டதாக உணர்ந்தான். ஆனால் தன்னை வெகுவாகக் கட்டுப்படுத்திக்கொண்டு, மிகவும் மிருதுவான குரலில், ''குட்டி ஓநாய், குட்டி ஓநாய்'' என்று கூப்பிட்டான். தன் சக்தியனைத்தையும் இழந்துவிட்ட ஓநாய்க்குட்டி ஒரு வழியாகப் போராட்டத்தைக் கைவிட்டது. ஜென்னும் யாங்கும் சோர்ந்துபோய் தரையில் உட்கார்ந்தபடி, ஆக்ரோஷமான ஒரு காட்டு ஓநாயிடம் நேருக்கு நேர் சண்டையில் ஈடுபட்டிருப்பதைப் போல மூச்சு வாங்கினார்கள்.

விடிகாலை வெளிச்சத்தில், விடுதலைக்கான போராட்டத்தில் தந்தையின் அன்புக்கான ஏக்கத்துடன் ஆவேசமாக ஈடுபட்ட ஓநாய்க்குட்டியின் நிலைமையை அறிவதற்காக அவர்கள் கம்பளியை எடுத்துப் பார்த்தார்கள். பாதிக்கப்பட்டிருந்த பல், அதனுடைய வாய்க்கு வெளியே நீட்டிக்கொண்டிருந்தது. அது கம்பளியைக் கடித்துக் குதறியதில், வேர் உடைந்துவிட்டிருந்தது. அதன் காயங்கள் அழுக்குக் கம்பளியால் இன்னும் மோசமாகியிருக்கக் கூடும்; ரத்தம் வழிந்துகொண்டிருந்தது. அதனுடைய தொண்டையிலிருந்தும்கூட இன்னமும் ரத்தம் வந்துகொண்டிருந்தது. பழைய புண் மீண்டும் திறந்து கொண்டுவிட்டது.

ஓநாய்க்குட்டி ரத்தத்தை விழுங்கியபடி இருந்தது. ஆனால் எல்லாவற்றிலும் ரத்தம் காணப்பட்டது: அவர்களுடைய ஆடைகளில், கம்பளியில், பட்டிக்குள் என ஒரு குதிரைக்குட்டி கொல்லப்படும்போது காணப்படுவதை விடவும் அக்காட்சி மோசமாக இருந்தது. ரத்தம் உடனடியாகப் பனிக் கட்டியாகியது. ஜென்னுடைய முட்டிகள் அச்சத்தில் நடுங்கின. அவன் நடுங்கிய குரலில், ''எல்லாம் முடிந்துவிட்டது. அது நிச்சயம் சாகப் போகிறது'' என்றான்.

''அனேகமாக அது பாதி ரத்தத்தை இழந்துவிட்டது. நாம் உடனடியாக ஏதாவது செய்யாவிட்டால் ரத்தம் வழிந்தே அது இறந்துவிடும்'' என்றான் யாங் கீ.

ரத்தம் வழிவதை எப்படி நிறுத்துவதென்று அவர்களுக்குத் தெரியவில்லை. எனவே, ஜென் குதிரை மீதேறி, பில்ஜியின் உதவி நாடி அவரைப் பார்க்கச் சென்றான்.

ஜென் மீதிருந்த ரத்தத்தைப் பார்த்து அதிர்ச்சியடைந்த முதியவர், உடனடியாக அவனோடு கிளம்பினார்.

‘‘ரத்தப் போக்கைத் தடுத்து நிறுத்த உன்னிடம் ஏதாவது இருக்கிறதா?’’ என்று கேட்டார் முதியவர்.

‘யுன்னான் வெள்ளைப் பொடி’ அடங்கிய நான்கு பாட்டில்களை ஜென் எடுத்து வந்தான். குடிலுக்குள் நுழைந்த முதியவர், அங்கு சமைக்கப்பட்டிருந்த ஆட்டு நுரையீரலைக் கண்டார். அதை இதமான சுடுநீரில் ஊறப் போட்டு மிருதுவாக்கினார். அதன் கடினமான காற்றுக் குழாய்களை வெட்டிப் போட்டுவிட்டு, அதை இரண்டாகப் பிரித்தார். பிறகு, மிருதுவான நுரையீல்கள் மீது பொடியைத் தூவினார். அதை எடுத்துக்கொண்டு பட்டிக்குப் போய், ஜென்னிடம் ஓநாய்க்குட்டிக்குக் கொடுக்கச் சொன்னார். ஜென் அவற்றை உணவுப் பாத்திரத்தில் போட்டு அதை நோக்கித் தள்ளியதும், ஓநாய்க்குட்டி ஒன்றைக் கவ்வி விழுங்கியது. அதன் குரல்வளைப் பாதையிலிருந்து ரத்தத்தை உறிஞ்சியதும் நுரையீரல் வீங்கியதில் அதற்கு மூச்சு திணறியது. அந்த மிருதுவான நுரையீரல் தொண்டையிலேயே கொஞ்ச நேரமிருந்து, ரத்தத்தை உறிஞ்சும் பஞ்சு போல, பின் மெதுவாக உள்ளிறங்கியது. ஓநாய்க்குட்டி அடுத்த பாதியையும் விழுங்கியது. அதுவும் அதே போல செயல்பட்டது. ரத்தப் போக்கு மெதுவாகக் குறைந்தது.

முதியவர் கவலையோடு தலையசைத்தார். ‘‘இது உதவாது. ரத்தம் அதிகமாக வெளியேறுகிறது. அது தன் தொண்டையைக் காயப்படுத்திக்கொண்டிருக்கிறது. உயிர் போகக்கூடிய காயம். இப்போது அதன் ரத்தப் போக்கைத் தடுத்துவிட்டாலும்கூட, அடுத்த முறை அது ஓநாய் ஓளைகளைக் கேட்கும்போது உன்னால் தடுக்க முடியுமா? நான் வேண்டாமென்று சொன்னபோதும், அதை வளர்த்தாக வேண்டுமெனப் பிடிவாதமாக இருந்தாய். இதை இப்படிப் பார்ப்பது, என் தொண்டையில் ஒரு கத்தி இறங்கி யிருப்பதை விடவும் மோசமாக இருக்கிறது. இது ஒரு ஓநாயின் வாழக்கை இல்லை; நாய்கள்கூட இவ்வளவு மோசமாக வாழ்வதில்லை. பழங்கால மங்கோலிய அடிமைகளை விடவும் இது கேவலமாக இருக்கிறது. இப்படி வாழ்வதைவிட மங்கோலிய ஓநாய்கள் இறந்துவிடும்.

ஜென் முதியவரிடம் கெஞ்சினான். ‘‘அப்பா, இது முதிய வயதை அடையும்வரை நான் வளர்க்க விரும்புகிறேன். இதைக் காப்பாற்ற வேறு வழியே இல்லையா? தயவுசெய்து, உங்களுக்குத் தெரிந்த வைத்தியங்களை எல்லாம் எனக்குக் கற்றுக் கொடுங்கள்.’’

முதியவர் அவனை உற்றுப் பார்த்தார். ‘‘நீ இன்னமும் இதை வளர்க்க விரும்புகிறாயா?’’ இது ஓநாய் போலக் காணப்படுகிற இந்நிலையில், மேலும் ஓநாயின் நிஜமான உத்வேகங்களைக் கொண்டிருக்கிற இந்நிலையிலேயே நீ இதைக் கொன்றுவிட வேண்டியது அவசியம். ஒரு யுத்தத்தின்போது ஒரு காட்டு ஓநாய்க்கு நிகழ்வதைப் போல இது இறக்க வேண்டும். ஒரு நோய்வாய்ப்பட்ட நாயைப் போல இழிவாக இது இறந்துபோக விட்டுவிடாதே. அதனுடைய ஆன்மா முழு நிறைவை எய்தட்டும்.’’

ஜென்னால் தன்னுடைய கைகள் நடுங்குவதைக் கட்டுப்படுத்த முடியவில்லை. ஏகப்பட்ட இன்னல்களுக்கு நடுவே அவன் அரும்பாடு பட்டு வளர்த்த ஓநாய்க்குட்டியை, தன்னுடைய கைகளாலேயே கொல்ல வேண்டி நேரிடுமென அவன் ஒருபோதும் கற்பனை செய்திருக்கவில்லை. கண்ணீரை அடக்கியபடி கடைசி யாக ஒருமுறை முதியவரிடம் கெஞ்சிப் பார்த்தான். ‘‘தயவுசெய்து, அப்பா. அதை எப்படி நானே கொல்வேன். நான் அதை எப்படி யாவது காப்பாற்றியாக வேண்டும்…’’

முதியவரின் முகம் கறுத்தது. கோபத்தில் அவர் இருமத் தொடங்கினார். வாய் நிறைய சளியைக் காறித் துப்பிவிட்டு, ‘‘சீனர்களாகிய உங்களால் ஒருபோதும் மங்கோலிய ஓநாய்களைப் புரிந்துகொள்ள முடியாது’’ என்று கத்தினார்.

கோபத்தோடு தன் குதிரை மீதேறி, சாட்டையால் அதன் விலாப்பக்கம் பலமாக அடித்து, தன் குடிலின் திசை நோக்கித் திரும்பிப் பார்க்காமல் சென்றார்.

அந்த சவுக்கடியை ஜென்னின் இதயம் உணர்ந்தது.

இரண்டு நண்பர்களும், ஜென்னும் யாங்கும், பனித் தரையில் மரக்கம்பங்களைப் போலத் தங்களை இழந்து நின்றனர்.

யாங் குனிந்து பார்த்தான். ‘‘அப்பா நம்மீது இந்தளவு கோபப்பட்டது இதுதான் முதல் முறை. இந்த ஓநாய்க்குட்டி இனியும் குட்டியில்லை. இது வளர்ந்துவிட்ட ஓநாய். அதனுடைய விடுதலைக்காக அது நம்முடன் சண்டையிடுகிறது. அவை

உண்மை யிலேயே 'விடுதலை அல்லது மரணம்' என்ற தன்மை கொண்ட இனம். அதைக் கொஞ்சம் பார். அது வாழப் போவதில்லை. அப்பாவின் ஆலோசனையை ஏற்று, நாம் அந்த ஓநாய்க்குட்டிக்கு உரிய கௌரவத்தை அளிக்கலாமென்று நான் நினைக்கிறேன்.''

ஜென்னுடைய முகத்தில் பனி முத்துக்களென கண்ணீர் வழிந்தது. பெருமூச்சு விட்டபடி அவன் சொன்னான், ''அப்பா சொன்னதை நான் புரிந்துகொள்ளாமல் இல்லை. ஆனால் அதைச் செய்ய என்னால் எப்படி முடியும? ஒருநாள் எனக்கு ஒரு மகன் இருந்தால், இந்த ஓநாய்க்குட்டிமீது நான் காட்டிய அதீத பிரியத்தை அவன்மீது செலுத்துவேன் என்று நான் நினைக்கவில்லை. எனக்கு யோசிக்கக் கொஞ்சம் அவகாசம் கொடு.''

அதிகப்படியாக ரத்தத்தை இழந்துவிட்ட ஓநாய்க்குட்டி, தடுமாறியபடி எழுந்து, பட்டியின் ஒரு பக்கமாக நடந்து சென்றது. அங்கு ஒரு மூலையில் குவிந்திருந்த பனியைப் பாதங்களால் பிறாண்டியது. அது வாயைத் திறந்தவுடன், ஜென் அதைப் பற்றிக்கொண்டான். ''அது பனியால் வலியைத் தணிக்கப் பார்க்கிறது. அது அப்படிச் செய்ய நான் விட்டுவிடவா?'' என்று யாங்கிடம் கேட்டான்.

''அதற்குத் தாகமாக இருக்கிறதென்று நான் நினைக்கிறேன். இவ்வளவு ரத்தம் வெளியேறிய பிறகு, வேறெப்படி இருக்கும்? அது என்ன செய்ய விரும்புகிறதோ அதைச் செய்யட்டும்; இப்போதிருந்து அதன் விதிக்கு அதுவே எஜமானாக இருந்துகொள்ளட்டும்.''

ஜென் அதை விட்டுவிட்டான். அது பனியை வாய் நிறைய எடுத்து விழுங்கியது. வலியாலும் குளிராலும் தாக்கப்பட்டதில், பலஹீனமடைந்திருந்த ஓநாய்க்குட்டி வெடவெடவென நடுங்கியது. கடைசியாக, நிற்க முடியாமல் தரையில் விழுந்தது. அது கஷ்டப்பட்டுத் தன்னைச் சுருட்டிக்கொண்டு, தன் வாலால் முகத்தை மூடிக்கொண்டது.

ஒவ்வொரு முறை அது குளிர்ந்த காற்றைப் பலமாக உள்ளிழுக்கும்போதும் அதன் உடல் ஆக்ரோஷமாக வெடவெடத்து ஆடியது; காற்றை மீண்டும் வெளியேற்றும் போதுதான் நடுக்கம் நிதானப்பட்டது. நீண்ட நேரத்துக்கு இது நீடித்தது; அதைப் பார்த்த ஜென்னின் இதயம் துடிதுடித்தது. இவ்வளவு பலஹீனமான, நலிந்த நிலையில் அவன் அதை ஒருபோதும் பார்த்ததில்லை.

அவன் உள்ளே சென்று கனமான கம்பளிப் போர்வையை எடுத்து வந்து ஓநாய்க்குட்டியின்மீது போர்த்தினான். அந்த விலங்கின் ஆத்மா அதன் உடலிலிருந்து கொஞ்சம் கொஞ்சமாக வெளியேறிச் செல்வதை அவன் அப்போது உணர்ந்தான். அது அவன் வளர்த்த ஓநாய்க்குட்டி இல்லை என்பதுபோல் தோன்றியது.

நண்பகலில் ஒரு சட்டி நிறைய, மெல்லிய இறைச்சித் துண்டுகள் சேர்த்துப் புல்லரிசிக் கூழ் சமைத்தான். கொஞ்சம் பனியால் அதைக் குளிர்வித்த பின், அதை ஓநாய்க்குட்டிக்கு எடுத்துச் சென்றான். இப்போதும் கூட உணவை மிகுந்த ஆவலோடு அது பார்த்தபோதும், ஒரு ஓநாயைபோல அதனால் சாப்பிட முடிய வில்லை. இருமவும், ரத்தம் கக்கவும் அது இடையிடையே சாப்பிடு வதை நிறுத்தியது. அதன் தொண்டைப் புண் இன்னும் ஆறவில்லை என்பது தெளிவாகத் தெரிந்தது. ஒரு சட்டி இறைச்சிக் கூழை அது பொதுவாக ஒருவேளையில் சாப்பிட்டுவிடும்; ஆனால் அதையே மூன்று வேளை உணவாக இரண்டு நாட்களில் சாப்பிட்டது.

அந்த இரண்டு நாட்களும், ஜென்னும் யாங்கும் ஒருவர் மாறி ஒருவரென ஓநாய்க்குட்டியை இதயம் படபடக்கப் பார்த்துக்கொண்டார்கள். அது சாப்பிடுவது குறைந்துகொண்டே வந்தது; அதனால் எதையுமே விழுங்க முடியவில்லை. ஜென் மூன்று பாட்டில் மேய்ச்சல்நில மதுவை எடுத்துக்கொண்டு, குழுமத்தின் விலங்கு மருத்துவரைப் பார்க்கப் போனான்.

தரையில் கிடந்த ரத்தத்தைப் பார்த்துவிட்டு விலங்கு மருத்துவர், “கவலைப்பட வேண்டாம். நல்லவேளையாக இது ஓநாய்; இதுவே நாயாக இருந்தால் எப்போதோ இறந்துவிட்டிருக்கும்” என்றார்.

ஒரு மாத்திரைகூடக் கொடுக்காமல் மருத்துவர் மீண்டும் தன் குதிரை மீதேறி வேறொரு குடிலுக்குச் செல்லப் புறப்பட்டார்.

மூன்றாம் நாள் காலை, குடிலிலிருந்து வெளியேறிப் பட்டியை நோக்கி நடந்து சென்றான். ஓநாய்க்குட்டி கம்பளியை ஒருபக்கமாகத் தள்ளிவிட்டு, மல்லாக்கப் படுத்திருந்தது; கழுத்தை நீட்டி வேக வேகமாகக் குறுகிய மூச்சுகளாக சுவாசித்துக்கொண்டிருந்தது. அவனும் யாங் கீயும் ஓடிச்சென்று அதைப் பார்த்தபோது பெரும் அச்சம் அவர்களைப் பீடித்தது. அதனுடைய கழுத்து

பெரிதாக வீங்கி கழுத்துப்பட்டையை முட்டிக்கொண்டிருந்தது. அதனால்தான் அது தன் கழுத்தைப் பின்பக்கமாகச் சாய்த்து சுவாசித்துக் கொண்டிருந்தது. ஜென் உடனடியாக அதன் கழுத்துப் பட்டையை இரண்டு துளைகள் தள்ளி மாட்டித் தளர்த்தினான். ஓநாய்க் குட்டியின் கால்கள் தள்ளாடின. அது வாயால் காற்றைத் தொடர்ந்து விழுங்கிக்கொண்டிருந்தது. அவர்கள் வலிந்து அதன் வாயைத் திறந்து பார்த்தார்கள்;¢ தொண்டை வீங்கிப் போயிருந்தது;¢ ஒரு கட்டியால் ஏற்பட்டது போலிருந்தது. தோல் சிதைந்து விட்டிருந்தது.

ஜென் முழு நம்பிக்கையும் இழந்தவனாகத் தரையில் விழுந்தான். ஓநாய்க்குட்டி மிகவும் சிரமப்பட்டுத் தன்னை உந்தித் தள்ளிக்கொண்டு வந்து ஜென் முன்னால் உட்கார்ந்தது. அதன் வாய் திறந்திருந்தது¢; நாக்கு ஒரு பக்கமாகத் தொங்கிக் கொண்டிருந்தது; அதன் வாயோரத்திலிருந்து ரத்தம் ஊறி எச்சில் வழிந்துகொண்டிருந்தது. ஒரு முதிய ஓநாயைப் பார்ப்பது போலவும், அவனிடம் ஏதோ சொல்ல விரும்புவதைப் போலவும் அவன்முன் உட்கார்ந்து பார்த்துக்கொண்டிருந்தது. அது சுவாசிக்க மிகவும் சிரமப்பட்டது; ஒரு சிறு சத்தம்கூட அதனிடமிருந்து வெளிப் படவில்லை. ஜென்னுடைய முகத்தில் கண்ணீர் வழிந்தோடியது. அதனுடைய கழுத்தோடு சேர்த்து அதைப் பற்றினான். தன்னுடைய தலையையும் மூக்கையும் அதன் தலையோடும் மூக்கோடும் சேர்த்துக் கடைசி முறையாக அணைத்துக்கொண்டான். ஓநாய்க் குட்டியின் பலம் நீங்கியது; அதனுடைய முன்னங்கால்கள் கடுமையாக நடுங்கின.

ஜென் துள்ளி எழுந்து, குடிலின் ஒரு பக்கமாக ஓடிச் சென்று, அங்கு கிடந்த கைப்பிடி உடைந்த மண்வெட்டியை எடுத்தான். மண்வெட்டியை அவனுக்குப் பின்னால் பிடித்துக்கொண்டு, திரும்பி, ஓநாய்க்குட்டியை நோக்கி ஓடிச் சென்றான். அது அங்கேயே கடுமையான மூச்சுத் திணறலோடு உட்கார்ந்திருந்தது; ஆனால் அது மீண்டும் குப்புற விழுந்துவிடும் என்பதுபோலக் காணப்பட்டது. ஜென் அதற்குப் பின்னால் சென்று, மண்வெட்டியை உயரத் தூக்கி, தன்னுடைய முழு பலத்தையும் திரட்டி, ஓநாய்க் குட்டியின் தலையில் அதைக் கனமாகப் போட்டான். ஓநாய்க்குட்டி எவ்வித சத்தமும் எழுப்பாமல் தரையில் விழுந்தது. கடைசிவரை, அது ஒரு அசலான மங்கோலிய மேய்ச்சல்நில ஓநாயாகவே இருந்தது.

அச்சமயத்தில், அவனுடைய ஆன்மா அவனிடமிருந்து அழுத்தியெடுக்கப்பட்டு விட்டதுபோல ஜென் உணர்ந்தான். அவனுடைய தலைக்கு மேலாக, அவனுடைய ஆன்மா வெளியேறிச் செல்லும் சத்தத்தை அவன் மீண்டும் கேட்டுக்கொண்டிருப்பது போலத் தோன்றியது. ஒரு வெண்பனிப் பேயைப்போல, அவன் ஓநாய்ப் பட்டியில் உறைந்துபோய் நின்றிருந்தான்.

என்ன நடந்ததென்று தெரியாமல், எல்லா நாய்களும் அங்கு வந்தன; இறந்துகிடந்த ஓநாயை முகர்ந்து பார்த்தன. பிறகு அவை எல்லாம் அச்சத்தில் அங்கிருந்து ஓடிப் போயின. எர்லாங் மட்டும் அங்கேயே நின்று ஜென் சென்னையும் யாங் கீயையும் பார்த்துக் கோபமாகக் குரைத்தது.

யாங் கண்ணீருடன் சொன்னான், “நாம் அப்பாவின் உதாரணத்தைக் கடைப்பிடித்தாக வேண்டும். நான் தோலை எடுக்கிறேன். நீ உள்ளே போய் கொஞ்சம் ஓய்வெடு.”

“நாம் இருவருமாகத்தான் குகைக்குச் சென்று, இந்தக் குட்டியைச் சேர்த்தெடுத்தோம்; அதனால் நாம் இருவரும் சேர்ந்துதான் தோலை எடுக்க வேண்டும்Ó என்று மரக்கட்டைக் குரலில் சொன்னான் ஜென்.

தங்களுடைய நடுங்கும் கைகளை வெகு சிரமப்பட்டுக் கட்டுப்படுத்தியவாறு, ஓநாய்க்குட்டியின் உடம்பிலிருந்து கவனமாகத் தோலை நீக்கினார்கள். உரோமம் இப்போதும்கூட அடர்த்தியாகவும் மினுமினுப்பாகவும் இருந்தது; ஆனால் ஓநாய்க்குட்டியின் உடம்பில் ஒரு மெல்லிய அடுக்கு கொழுப்புதான் இருந்தது.

தோலைக் குடிலின் உச்சியில் போட்டான் யாங்; ஜென் ஒரு சாக்குப் பையை எடுத்துவந்து, உடம்பை அதில் போட்டு, தன் சேணத்தின் பின்னால் கட்டினான். அவர்கள் மலைகளுக்குள் சவாரி சென்று, பருந்தின் எச்சங்களால் நிறைந்திருந்த ஒரு பாறைத் தளத்தைக் கண்டனர். அதன்மீதிருந்த பனியைத் துடைத்து நீக்கிவிட்டு, மிக நிதானமாக ஓநாய்க்குட்டியின் உடலை அதன்மீது வைத்தார்கள்.

அந்தக் குளிர்ந்த, சடங்கு சார்ந்த வான் புதைத் தரையில் கிடந்த தோலில்லாத ஓநாய்க்குட்டியைப் பார்க்கும்போது, யுத்தத்தில் இறந்துபோய் தோலுரிக்கப்பட்ட ஒரு வளர்ந்த ஓநாயைப் போலவே ஜென்னுக்குத்

தென்பட்டது. அவர்களுடைய அரிய பொக்கிஷமான ஓநாய்க்குட்டியின் வெளிறிய வெண்சடலத்தின் முன்னால், ஜென் சென்னும் யாங் கீயும் ஒரு சொட்டுக் கண்ணீர்கூட விடவில்லை.

மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில் கிட்டத்தட்ட ஒவ்வொரு ஓநாயும் தெளிவற்ற ரோமத் தோலுடன் வந்து, பின் தோலுரிக்கப் பட்டு மறைகின்றன. எனினும் அவை தம் தீரத்தையும், பலத்தையும், ஞானத்தையும், அழகிய மேய்ச்சல் நிலத்தையும் மனிதர்களுக்காக விட்டுச் செல்கின்றன. இத்தருணத்தில், ஓநாய்க்குட்டி தன் தோலைக் களைந்துவிட்டதோடு, சங்கிலியிலிருந்தும் விடுபட்டுவிட்டது. ஒருவழியாக, இனி அது மேய்ச்சல்நிலத்தில், அதனுடைய மற்ற உறுப்பினர்களைப் போலவும், நிர்மூலமாக்கும் செயல்பாட்டின் கீழ் இறந்துபோன பிற மேய்ச்சல்நில ஓநாய்களைப் போலவும் சுதந்திரமாகச் சுற்றித் திரியலாம். டெஞ்ஞர் ஒருபோதும் அதன் ஆன்மாவை நிராகரிக்காது.

இருவரும் ஒரே சமயத்தில் மேல் நோக்கி வானத்தைப் பார்த்தார்கள்; அவர்களின் தலைக்கு மேலாக இரண¢டு பருந்துகள் வட்டமடித்துப் பறந்துகொண்டிருந்தன. அவர்கள் குனிந்து கீழே பார்த்தார்கள். சடலம் உறைந்துகொண்டிருந்தது. அதனால் அவர்கள் உடனடியாகக் குதிரைகள் மீதேறி, மலையின் கீழாகச் சவாரி செய்தனர். தரை மட்டத்துக்கு வந்ததும், அவர்கள் திரும்பிப் பார்த்தனர். பாறைத் தளத்துக்கு அருகில் பருந்துகள் தெரிந்தன. சடலம் முழுமையாக உறைந்திருக்காது என்பதால், ஓநாய்க் குட்டியின் வான் புதை விரைவாக முடிந்து, பருந்துகளால் மிக உயர்ந்த டெஞ்ஞருக்கு எடுத்துச் செல்லப்படும்.

ஜென்னும் யாங்கும் குடிலுக்குத் திரும்பியபோது, காவோ ஜியான்சோங் ஏற்கெனவே பூச்சமரக் கம்பமொன்றை எடுத்துக் கதவருகில் வைத்திருந்தான். காய்ந்த மஞ்சள் புல்லைத் தோலுக்குள் திணித்தான்; ஒரு மெல்லிய தோல் கயிற்றை முறுக்கி ஓநாய்க் குட்டியின் மூக்குத் துவாரங்களுக்குள் நுழைத்து, மறுமுனையைக் கம்பத்தில் கட்டினான். மூவருமாகச் சேர்ந்து கம்பத்தை நிமிர்த்தி, கதவோடு சேர்த்து ஊன்றினார்கள்.

வடமேற்கிலிருந்து வீசிய பலத்த காற்று, ஓநாய்க்குட்டியின் தோலை வானில் உயரப் பறக்கச் செய்தது. சொர்க்கத்தின் பெரு விருந்துக்குச் செல்லும் வகையில் அதன் உடை அமைந்திருப்பது போல் தோன்றியது. குடிலின்

சிம்னியிலிருந்து வெளிவந்த மங்கலான புகை தோலினடியில் காற்றில் நீந்திச் சென்றபோது, ஓநாய்க்குட்டியானது மேகங்களின்மீது சவாரி செய்வது போலவும், மூடுபனிப் புகையில் சுதந்திரமாகவும் சந்தோசமாகவும் ஆனந்தக் கூத்தாடுவது போலவும் தோன்றியது. அத்தருணத்தில் அதன் கழுத்தைச் சுற்றி சங்கிலி இல்லை; அதன் காலடியில் நிர்ணயிக்கப் பட்ட சிறையோ, மிகக் குறுகிய எல்லையோ இல்லை.

ஓநாய்க்குட்டியின் தோலானது காற்றில் நடனமிட்டபோது, ஜென்னின் வெறிச்சோடிய பார்வை, அதன் குறும்பான, உயிர்த்திருப்பது போன்ற உருவத்தைப் பின்தொடர்ந்தது. ஓநாய்க் குட்டி விட்டுவிட்டுச் சென்றிருக்கும் அழிவற்ற வெளித் தோற்றும் அது; ஆனால் அந்த அழகான, வல்லமைமிக்க உருவமானது, இன்னமும்கூட தன்னுடைய சுதந்திரமான, பணிந்து போகாத உத்வேகத்தைக் கொண்டிருப்பதாகவே தோன்றியது. திடீரென, பொதிக்கப்பட்ட அந்த உடலும் புசுபுசுவென்றிருக்கும் வாலும் பறக்கும் டிராகனைப் போல சில முறை சுருண்டு கொண்டபோது, அது சுழித்தோடும் பனியிலும், கலைந்து செல்லும் மேகங்கள் மீதும் உயரப் பறப்பது போலிருந்தது. காற்று ஊளையிட்டது; வெண்பனி பொழிந்தது. ஓநாய்க்குட்டியானது, பறக்கும் தங்க டிராகனைப் போல, மேகங்கள்மீதும் பனி மூட்டத்தின்மீதும் சவாரி செய்தது; மிகுந்த சந்தோஷத்துடன் டெஞ்ஞுரை நோக்கியும், சிரியஸ் நட்சத்திரத்தை நோக்கியும், அண்டவெளியில் சுதந்திரமான பிரபஞ்சத்தை நோக்கியும், லட்சக்கணக்கான ஆண்டுகளாக யுத்தங்களின்போது இறந்துபோன மங்கோலிய ஓநாய்களின் ஆன்மாக்கள் ஒன்று கூடியிருக்கும் இடத்தை நோக்கியும் உயரப் பறந்து சென்றது.

அச்சமயத்தில், தன்னுடைய சொந்த ஓநாய் குலச்சின்னத்தைப் பார்த்ததாக ஜென் நம்பினான்.

முடிப்பு

ஓலோன்புலாக்கிலிருந்து ஓநாய்கள் மறைந்தபிறகு, இரண்டாம் இளவேனிற் காலத்தின் தொடக்கத்தில், உள்மங்கோலிய உற்பத்தி மற்றும் கட்டுமானப் படைப்பிரிவு, நாய்களின் எண்ணிக்கையைக் குறைக்கும்படி உத்தரவிட்டது. அப்போதுதான் பெறுமதி வாய்ந்த ஆடுகளையும் மாடுகளையும் விவசாயப் பிரிவுகளின் இறைச்சித் தேவைக்கு வழங்க முடியும். நாய்க்குட்டிகள்தான் முதலில் துரதிர்ஷ்ட பலிகளாகின. கிட்டத்தட்ட புதிதாகப் பிறந்த எல்லா நாய்க்குட்டிகளுமே தூக்கி வீசப்பட்டு டெஞ்ஞருக்கு அனுப்பப் பட்டன. மேய்ச்சல் நிலமெங்கும் பெண் நாய்களின் சோக ஓலங்கள் கேட்டன. சமயங்களில் தாய் நாய்கள், கொல்லைப்புறங்களில் எஜமானர்கள் புதைத்திருந்தவற்றைத் தோண்டி எடுத்தன; இறந்த குட்டிகளை வாய்களில் கவ்வியபடி அவை சுற்றிச்சுற்றி வட்ட மடித்தன. பெண்கள் புலம்பினார்கள். ஆண்கள் மௌனமாகக் கண்ணீர் வடித்தார்கள். பெரிய நாய்கள் நாளுக்கு நாள் மெலியலாயின.

ஆறு மாதங்களுக்குப் பிறகு, படைப்பிரிவின் டிரக்கிலிருந்து யாரோ ஒருவன், குடிலை விட்டுக் கிளம்பி புல்வெளியில் ஏதேதோ எண்ணங்களுடன் திரிந்துகொண்டிருந்த எர்லாங்கைச் சுட்டுக் கொன்றுவிட்டான். கொன்ற நபர் அதன் உடலையும் எடுத்துக் கொண்டு போய்விட்டான். ஆத்திரமடைந்த ஜென்னும் மற்ற மூன்று மாணவர்களும் சேர்ந்து படைப்பிரிவின் தலைமை அலுவலகத்துக்கு ஓடினார்கள். குற்றவாளி அகப்படவில்லை. நாய்களைச் சாப்பிடும் பிரச்சனையில் ஒருமித்திருந்த, புதிதாக வந்து சேர்ந்த சீனர்கள் கொலைகாரனை ஒரு நாயகனைப் போல பாவித்து அவனை மறைத்து வைத்திருந்தார்கள்.

நான்கு ஆண்டுகளுக்குப் பிறகு, பனிப்புயலின் போதான ஒரு அதிகாலையில், ஒரு முதியவரும் ஒரு நடுத்தர வயதுக்காரரும் தங்கள் குதிரைகளில் ஒரு எருது வண்டியோடு சேர்ந்து எல்லைப் பகுதி நெடுஞ்சாலையை நோக்கிச் சென்றுகொண்டிருந்தார்கள். வண்டியில் பில்ஜியின் உடல் இருந்தது. மூன்று வான் புதையல் இடங்களில் இரண்டு ஏற்கெனவே கைவிடப்பட்டு விட்டன.

மேய்ப்பர்களில் பலர் மண்ணுக்கடியில் புதைக்கும் ஹேன் வழக்கத்தை ஏற்றுக்கொண்டு விட்டிருந்தனர். ஓநாய்கள் இப்போதும்கூட திரியக்கூடிய இடத்துக்குத் தன் உடலைக் கொண்டு போக வேண்டுமென முதியவர் வற்புறுத்தியிருந்தார். அதனால் அவருடைய இரு மைத்துனர்கள், எல்லைப் பகுதி நெடுஞ்சாலையில் வடக்காக இருக்கும் யாருமற்ற நிலப்பரப்புக்கு அவருடைய உடலைக் கொண்டு சென்றார்கள்.

‘‘வடக்கே இருக்கும் ஓநாய்கள் இரவு முழுவதும் ஊளையிட்ட படியே இருந்தன. விடியும் வரை அவை நிறுத்தவில்லைÓ என்றார் இளைய மைத்துனர்.’’

ஜென் சென், யாங் கீ, சாங் ஜியோன் மூவருமே பில்ஜிதான் எவரையும்விட அதிக வேதனைக்குள்ளானவர் என நம்பினார்கள். அதேசமயம், வான் புதையல் நிகழ்ந்து டெஞ்ஞருக்குத் திரும்பிச் செல்லும் கடைசி மங்கோலிய அதிர்ஷ்டக்காரரும் அவர்தான்.

அதையடுத்த சிறிது காலத்திலேயே, ஜென், யாங், காவோ மூவரும் தலைமை அலுவலகப் பொறுப்புக்குச் சென்றார்கள். பள்ளியில் இலக்கண ஆசிரியராக யாங் நியமிக்கப்பட்டான். டிராக்டர்கள் ஓட்டுனராக காவோ அனுப்பப்பட்டான். சேமிப்பு நிலையக் காவலனாக ஜென் வேலை பார்த்தான். சாங் ஜியோன் மட்டும் குதிரை மேய்ப்பனாகவே தன் பணியில் நீடித்தான்.

அவர்கள் யிர்ரையும் அதனுடைய குட்டிகளையும் பட்டுவிடம் விட்டுச் சென்றார்கள். விசுவாசமிக்க எல்லோ ஜென்னோடு சென்றது. ஆனால் கஸ்மாய் தன் எருது வண்டியோடும் நாய்களோடும் வரும் ஒவ்வொரு முறையும் எல்லோ தன் குடும்பத்தோடு குதூகலமாய் இருக்கும். கஸ்மாய் திரும்பிப் போகும்போது அதுவும் வண்டியைப் பின்தொடர்ந்து மேய்ச்சல் குழுவினர் இடத்துக்குச் செல்லும். அதை யாரும் தடுக்க மாட்டார்கள். சில நாட்கள் அங்கு தன் குடும்பத்தோடு இருந்துவிட்டுத்தான் அது திரும்ப ஜென்னிடம் வரும். மேய்ச்சல் பிரிவு எவ்வளவு தொலைவுக்கு நகர்ந்தாலும், நூறு லீ தூரம் இருந்தாலும்கூட, அது திரும்பி வந்துவிடும். ஆனால் திரும்பி வரும்போது, எப்போதுமே சந்தோஷமற்றுக் காணப்படும். வரும் வழியில் அதற்கு ஏதாவது ஏற்பட்டுவிடக்கூடுமென ஜென் கவலைப்படுவான். ஆனால் அதை மறுபடியும் பார்த்ததும் அவனுடைய கவலைகள் மறைந்துபோகும்.

எல்லோ தன்னுடைய மேய்ச்சல்நிலக் குடும்பத்தோடு சுதந்திரமாகவும் சந்தோஷமாகவும் இருப்பதற்கான வாய்ப்பை ஜென் மறுப்பதில்லை. ஒரு வருடத்துக்குப் பிறகு, எல்லோ Ôகாணாமல் போனது.Õ அவர்களுடைய நாய்கள் ஒருபோதும் காணாமல் போவ தில்லை என்பது மேய்ச்சல்நில மக்களுக்குத் தெரியும். ஓநாய்கள் இப்போது அங்கு இல்லாததால் ஓநாய்களால் சாப்பிடப் பட்டிருக்கவும் முடியாது; அப்படியே அவை இருந்தாலும்கூட, ஓநாய்க் கூட்டம் ஒருபோதும் ஒரு தனியான நாயைக் கொல்வதில்லை. எல்லோ மக்களால்தான், மேய்ச்சல் நிலத்தைச் சாராத மக்களால்தான் கொல்லப்பட்டிருக்க வேண்டும்.

பெரும்பாலும் சீனர்கள் குடியேறியிருந்த இடத்தில் ஜென்னும் யாங்கும் ஒரு நிரந்தர வாழ்வை மேற்கொண்டார்கள். அவர்களைச் சுற்றியிருந்த பெரும்பாலான மக்கள், சீனாவின் சகல பகுதிகளிலிருந்தும் வந்திருந்த தொழில்முறை இராணுவ வீரர்களும் அவர்களுடைய குடும்பத்தினரும் ஆவர்; மேலும், தியான்ஜிங் மற்றும் டாங்சன்னிலிருந்து வந்திருந்த மாணவ இராணுவப் படைப் பிரிவைச் சார்ந்த இராணுவ வீரர்களும் அப்பகுதியில் வசித்தனர். எனினும், உணர்வுபூர்வமாக இனி ஒருபோதும் தங்களால் ஹேன் வாழ்க்கை முறையை முழுவதுமாகப் பின்பற்றி வாழ முடியாதென்பதை இருவரும் உணர்ந்திருந்தனர். வேலை நேரமும் படிப்பு நேரமும் முடிந்த பிறகு, அவர்கள் அவ்வப்போது அருகிலிருந்த சிறு மலைமீது ஏறி, வடமேற்குத் திசையில் தொலைவுள்ள டெஞ்ஞரை நோக்கித் தங்கள் பார்வையைக் குவித்து, மேகங்களில் ஓநாய்க்குட்டி மற்றும் பில்ஜியின் தடயங்களைத் தேடுவார்கள்.

1975இல் உள்மங்கோலிய உற்பத்தி மற்றும் கட்டுமானப் படைப்பிரிவு முறைப்படி கலைக்கப்பட்டது. ஆனால், அடர்த்தியான புல்வெளியும் அபரிமிதமான நீர்வளமும் கொண்ட மஜுஸி நதிப்பகுதி விவசாயத்தின் மூலம் ஏற்கெனவே பாலையாக மாறி விட்டிருந்தது. பெரும்பாலான தொழிலாளர்கள், அவர்களுடைய கருத்தியல்களோடும், வாழ்க்கை முறைகளோடும், வீடுகளோடும், இயந்திரங்களோடும் டிராக்டர்களோடும், வாகனங்களோடும் அங்குதான் இருந்தனர். அந்த வருடத்துக்குள்ளாக ஓலோன்புலாக் மிகுந்த பின்னடைவைக் கண்டுவிட்டிருந்தது. ஓநாய் ஒரு ஆட்டை அடித்துக் கொன்றுவிட்ட செய்தி பல நாட்களுக்கு விவாதப் பொருளாக இருந்தது.

குதிரைகள் எலிப் பொந்துகளில் கால் இடறிக் காயத்துக்குள்ளாவதும், சவாரி செய்தவர்கள் காயங்கள் அடைவதும் மேலும் மேலும் அதிகரித்து வந்தது.

சில வருடங்களுக்குப் பிறகு, பட்டப்படிப்பு நுழைவுத் தேர்வுக்காக பீஜிங் செல்வதற்கு முன்பாக, ஜென் ஒரு குதிரையை இரவலாகப் பெற்றுக்கொண்டு பட்டுவிடமும் அவனுடைய குடும்பத்தாரிடமும் விடை பெற்றுக்கொள்வதற்காக அவர்களைப் பார்க்கச் சென்றான். அதன்பிறகு ஓநாய்க்குட்டி பிறந்த அந்தத் தொன்மையான குகையைப் பார்ப்பதற்காகச் சென்றான். குகை அப்போதும் இருண்டும் ஆழமாகவும் திடமாகவும் இருந்தது. ஆனால் சிலந்திகள் நுழைவில் வலைகள் பின்னியிருந்தன. ஒல்லியான இரண்டு பச்சைநிற வெட்டுக்கிளிகள் விடுபடப் போராடிக் கொண்டிருந்தன. உள்ளே பார்ப்பதற்கு வசதியாகப் புல்லை ஒரு பக்கமாக விலக்கித் தள்ளிவிட்டான். மண் வாசனை அடித்தது. ஓநாய்களின் வாடை நெடியாக வெளிப்பட்டது. குகைக்கு வெளியே ஏழு ஓநாய்க்குட்டிகளும் விளையாடித் திரிந்த இடத்தில் புல் உயர்ந்து வளர்ந்திருந்தது. ஜென் குகைக்கு முன்னால் வெகுநேரம் உட்கார்ந்திருந்தான். ஆனால் அங்கு ஓநாய்க்குட்டியோ, வேட்டை நாய்களோ, ஏன் ஒரு நாய்க்குட்டிகூட அவனோடு இல்லை.

பீஜிங் மாணவர்கள் ஓலோன்புலாக்குக்கு அனுப்பப்பட்டதற்குப் பின்னான முப்பதாவது கோடையின்போது, ஜென் சென்னும் யாங் கீயும் நீல நிற செரோகீ ஜீப்பில் தலைநகரை விட்டுக் கிளம்பி மேய்ச்சல் நிலத்தை நோக்கிச் சென்றார்கள்.

சமூக அறிவியல்களுக்கான அகாதெமியில் பட்டம் பெற்ற பின்பு, ஒரு பல்கலைக்கழகத்தின் தேசிய உறவுகள் நிறுவனத்தில் சமூக அமைப்பு சீர்திருத்தம் குறித்த ஆய்வினை ஜென் நிகழ்த்திக் கொண்டிருந்தான். சட்டப் படிப்பில் இளநிலையில் தேர்ச்சி பெற்றபிறகு, தொடர்ந்து படிப்பை மேற்கொண்டு யாங் முதுநிலைப் பட்டம் பெற்றான். உரிமம் பெற்று சட்டத் தொழிலை மேற்கொண்டு வந்தான். இதற்கிடையில், பீஜிங்கில் மிகச் சிறப்பாகக் கருதப்படுகிற சட்ட நிறுவனமொன்றையும் உருவாக்கினான்.

இப்போது ஐம்பது வயதுகளில் இருந்த இரு பழைய நண்பர்களும் மேய்ச்சல் நிலத்தைப் பற்றி ஒருபோதும் நினைக்காமல் இருந்ததில்லை; ஆனால் அங்கு

திரும்பச் செல்வதற்குப் பயந்தார்கள். சீனர்களின் வாழ்வில் முக்கியமான ஆண்டு விழாவாகக் கருதப்படுகிற முப்பதாவது ஆண்டையொட்டி அவர்களுடைய நண்பர்களைப் பார்க்கச் செல்வதென்று முடிவெடுத்தார்கள். அவர்கள் செல்வதற்குப் பயப்பட்ட Ôகிரேட் உஜிம்சின் புல்வெளிÕக்குப் போகவும், கரும்பாறை மலை அடிவாரத்தில் இருக்கும் பழைய ஓநாய்க் குகையைப் பார்க்கவும் முடிவெடுத் தார்கள்.

ஜீப் உள்மங்கோலியாவுக்குள் நுழைந்தபோது வானம் தெளிந்த நீலத்தில் இருந்தது; ஆனால் அங்கு நீண்ட காலம் வாழ்ந்த எவருக்கும் டெஞ்ஞர் அப்போது போல் இப்போது இல்லை என்பது தெரியும். வானம் வறண்டும் மேகங்களற்றும் காணப் பட்டது; மேய்ச்சல் நிலத்தின் டெஞ்ஞூரானது இப்போது பாலை வனத்தின் டெஞ்ஞூராக ஆகிவிட்டது. வறண்ட, கொளுத்தும் வானத்தின் கீழ் அடர்ந்த புல் தென்படவில்லை.

அடர்த்தியில்லாத காய்ந்த மஞ்சள் மேய்ச்சல் நிலத்தில், பிரமாண்டமான மணல் தாள்கள் தரையின் குறுக்காக விரிக்கப் பட்டிருப்பதைப் போல, கெட்டியான பெரும் மண் திட்டுகள் இடையிடையே காணப்பட்டன. பாதியளவு வறண்ட மணல் மூடியிருந்த நெடுஞ்சாலையில், ஆடுகளையும் மாடுகளையும் கொண்டு செல்வதற்கான இரும்புக் கூண்டுகள் கொண்ட டிரக்குகள் தொடர்ந்து இடி முழக்கம் செய்தபடி எதிராக வந்தபடி இருந்தன. அவர்கள் சென்ற பாதையில் குடிலோ, குதிரை மந்தையோ, மாடுகளோ கண்ணில் படவில்லை; அவ்வப்போது ஆட்டுக் கூட்டத்தை மட்டும் பார்த்தார்கள். அவை சின்னதாகவும், மெலிந்தும், அழுக்காகவும், சிக்கும் சிடுக்குமான கறுப்பு உரோமங்களுடனும் காணப்பட்டன. இரண்டு நண்பர்களும் மிகவும் நொந்து போனார்கள். அவர்களுடைய இதயங்களில் இருந்த ஈரப்பதமான, அடர்ந்து செழித்த மேய்ச்சல் நிலத்தின் இடத்தை இந்த வறண்ட புழுதி இடம் பிடித்துக்கொள்ள அவர்கள் விரும்பவில்லை.

தன் உடம்பிலிருந்த தூசியைத் தட்டிவிட்டபடி யாங் பேசினான். ‘‘கடந்த பல வருடங்களாக இங்கு திரும்பி வர எனக்கு நேரம் கிடைக்கவில்லை. இப்போது என் நிறுவன மக்கள் அவர்களாகவே வேலையைப் பார்த்துக்கொள்வார்கள் என்பதால் ஒருவழியாக நேரம் கிடைத்துவிட்டிருக்கிறது. ஆனால் உண்மையைச் சொல்வதென்றால், மேய்ச்சல் நிலத்தைப் பார்ப்பதற்கு எனக்குப்

பயமாக இருக்கிறது. கடந்த இளவேனிற் காலத்தின் போது, சாங் ஜியோன் பார்த்துவிட்டு வந்து, அது பாலையாகி விட்டது பற்றி என்னிடம் சொன்னான். அதனால் மனதளவில் என்னைத் தயார்படுத்திக்கொண்டிருந்தேன். ஆனால் நான் நினைத்திருந்ததை விடவும் மோசமாக இருக்குமோ என்று இப்போது தோன்றுகிறது.''

''அப்பா இறந்து இருபது வருடங்கள்தான் ஆகிறது. ஆனால் அதற்குள், என்னவெல்லாம் நடக்கப் போகிறதென்று அவர் கூறினாரோ அந்த மோசமான முடிவை நாம் ஏற்கெனவே பார்த்து விட்டோம்'' என்றான் ஜென். ''நாம் அவருக்கான மரியாதையை

செலுத்தியாக வேண்டும். அது தவிர, குட்டி ஓநாயின் குகை, நாம் இன்னும் சில ஆண்டுகள் தாமதித்தால் மண்ணால் மூடப்பட்டு விடும். ஆயிரக்கணக்கான ஆண்டுகளாக மேய்ச்சல் நிலத்தில் ஆதிக்கம் செலுத்திய ஓநாய்களால் விட்டுச் செல்லப்பட்டிருக்கும் ஒரே நினைவுச்சின்னம் அதுதான். மேலும் உல்ஜீயையும் மீண்டும் பார்க்க நான் ஆசைப்படுகிறேன். ஆனால் அவர் பணி ஓய்வுக்குப் பின்பு, மேய்ச்சல் நிலம் மோசமடைவதைப் பார்க்க சகிக்காமல் அங்கிருந்து வெளியேறி, நகரத்தில் தன் மகளுடன் இப்போது வசித்து வருகிறார். அங்கு ஏதோ நோய் வசப்பட்டு இப்போது குணமடைந்து வருகிறார். சீனாவில் அறிவியல்பூர்வமான, திறமையைக் கொண்டாடுகிற, ஜனநாயக ரீதியான கட்டமைப்பு இல்லாததால், மிகத் திறமை யானவர்கள், நேர்மையும் வெளிப்படையான இயல்பும் கொண்டவர்கள் உயர்பதவிக்கு வருவதற்கான வாய்ப்பு மறுக்கப்படுகிறது. உல்ஜீ, ஓநாய்கள் பற்றியும் மேய்ச்சல் நிலம் பற்றியும் அறிந்த ஓர் அபூர்வ மேதை. ஆனால் நம்முடைய நடப்பு அமைப்புமுறை காரணமாக அவர் புறக்கணிக்கப்பட்டார். மேய்ச்சல் நிலத்தின் மஞ்சள் மண்ணைவிட இது மிகவும் மோசமானது. ஏனென்றால் இந்த அமைப்பு முறைதான், அங்கு புழுதிப் புயல் உருவானதற்கான உண்மையான மூல காரணம்.''

ஜீப், வறண்ட புழுதிக் காற்றில் தொடர்ந்து ஐநூறு மைல்களுக்கும் மேலாகச் சென்றுகொண்டிருந்தது. அவர்கள் ஓலோன்புலாக்குக்கு மிக அருகில் வருவதற்குள்ளாக, சூரிய வெப்பத்தால் அவர்களுடைய கைகள் பழுப்படைந்ததுடன் வேர்க்குருவும் ஏற்பட்டுவிட்டிருந்தது. அடுத்த நாள் அவர்கள்

ஓலோன்புலாக்குக்குள் நுழைந்தார்கள். ஒருவழியாகத் திட்டுத்திட்டாக இணைந்திருந்த, அடர்த்தியில்லாத புல்வெளி அவர்கள் பார்வையில் பட்டது; என்னதான் இருந்தாலும், கிரேட் உஜிம்சின் புல்வெளிப் பிரதேசத்தின் ஒரு மூலையில் உள்ள எல்லைப்பகுதி இல்லையா. ஆனால் அவர்களுடைய காலுக்குக் கீழே பார்க்க சகிக்காமல் இருந்தது; புல்லின் அடியில் பாறைகள் கண்களில் பட்டன. சில இடங்களில் அங்கு நீண்ட, மெல்லிய சாம்பல் நாய்க்குடைகள் தென்பட்டன. கடந்த காலத்தில், கால்நடைகளின் சாணங்கள் உரமாக அடர்த்தியான புல்லின் அடிப்பகுதியில் காணப்படும்.

ஜென்னும் யாங்கும் கவலைப்பட்டார்கள். இன்னும் கொஞ்சம் தொலைவில், ஆயிரம் ஆண்டு காலப் பழமையான நதியொன்று அங்கிருப்பது அவர்களுக்குத் தெரியும்; குதிரைகளின் முட்டிகள் வரை, சமயங்களில் வயிறுகள் வரைகூட, அதில் நீரோடிக்கொண்டிருக்கும். பெரிய டிரக்குகளில் மட்டுமே அதைக் கடக்க முடியும்; அவர்களுடையதைப் போன்ற ஜீப்புகள் வேகமெடுத்துச் சென்றால் கடக்க முடியலாம். மழைக்காலத்தின் போது, வெள்ளப் பெருக்கினால் தபால் பட்டுவாடா ரத்தாகிவிடும்; இரண்டு வாரங்களுக்கு, சமயங்களில் ஒரு மாதம்கூட, உணவுப் பொருட்கள் மற்றும் அத்தியாவசியப் பொருட்களுக்குத் தட்டுப்பாடு ஏற்படும். ஜென்னும் யாங்கும் நதியை எப்படிக் கடக்கப்போகிறோம் என்று பேசிக்கொண்டு வந்தபடியே நதிக்கரையை அடைந்து விட்டார்கள். அதைப் பார்த்த மாத்திரத்திலேயே உரையாடல் நின்றுவிட்டது. பழைய நாட்களில் வேகமாக அடித்துச் செல்லும் நீரானது, பாறைப் பாங்கான நதிப்படுகை தெரியுமளவு வடிந்து விட்டிருந்தது. ஈர மணலும், வறண்ட பாறைகளினூடாக புழு போன்ற நீரோட்டமும் காணப்பட்டன. ஜீப் நதியை சுலபமாகக் கடந்தது; ஆனால் அவர்களுடைய இதயங்கள் கனத்துவிட்டிருந்தன.

நதியைக் கடந்து கொஞ்ச தூரம் சென்றதும் அவர்கள் ஏதோ ஒரு யுத்தகளத்துக்குள் நுழைந்துவிட்டது போல அவர்களுக்குத் தோன்றியது. ஒரு காலத்தில் பரந்து விரிந்து அடர்ந்து செழித்திருந்த ஓலோன்புலாக் எங்கும் சிமெண்ட் கம்பங்களும் மின்கம்பி வேலிகளும் காணப்பட்டன. சங்கிலித்தொடர் வேலிகள் மூலம் உருவாக்கப்பட்டிருந்த பாதைகள் வழியே ஜீப் செல்ல வேண்டி யிருந்தது. பல நூறு ஏக்கர் பகுதிகளை வளைத்து வேலிகள்

ஒவ்வொன்றும் போடப்பட்டிருந்ததை ஜென் கவனித்தான். வளைவுக்குள்ளிருந்த புல், வெளியில் இருந்த புல்லை விட அதிக உயரத்தில் இருந்தது. எனினும், ஒட்டுமொத்த தோற்றமானது, அடர்த்தியற்ற புல் நிலமாகவும், புல்லுக்கு அடியில் மணலுமாகக் காணப்பட்டது.

“அவற்றை குலன் புல் என்று அவர்கள் சொல்கிறார்கள்” என்றான் யாங் கீ. “இந்தப் புல்லும் வேலியும் செம்மறிக் குட்டிகளின் பிறப்பு காலத்துக்கானது. மற்ற மூன்று பருவங்களில் மேய்ப்பர்கள் இங்கு வசிப்பதில்லை.”

“இவ்வளவு குறைவான புல் எப்படி போதும்?” என்று ஜென் கேட்டான்.

யாங் பதிலளித்தான். “மேய்ப்பர்கள் கால்நடைகளின் எண்ணிக்கையைக் குறைத்து விட்டார்களென்று நான் கேள்விப் பட்டேன்; பலர் பாதியாகக் குறைத்துவிட்டிருக்கிறார்கள்.”

அவர்கள் மேலும் சில குலுன் புல் பகுதிகளைக் கடந்து சென்றார்கள். மூன்று அல்லது நான்கு செங்கல் வீடுகளை அவர்கள் பார்த்தார்கள். ஆனால் அச்சமயத்தில் அங்கு யாரும் வசிக்கவில்லை என்பது தெரிந்தது. சிம்னிகளிலிருந்து புகையேதும் வெளிவரவில்லை; வீடுகளின் முன்வாசல்களில் நாய்களோ, கன்றுகளோ தென்படவில்லை. மக்கள் அவர்களுடைய கால்நடைகளை மலைகளின் உட்பகுதிகளில் மேய்த்துக் கொண்டிருக்கக்கூடும்; அங்கு விலங்குகளால் சுதந்திரமாகச் சுற்றித் திரிய முடியும்.

சங்கிலித் தொடர் வேலிகளைப் பார்த்தபடியே ஜென் உணர்ச்சிவசப்பட்டுப் பேசினான். “கடந்த காலத்தில், உஜிம்சின் போர்க் குதிரைகளுக்குப் பிரசித்திபெற்ற மேய்ச்சல் நிலத்தில் யாருக்கு வேலி கட்டத் தைரியம் வரும்? இரவில் ஒரு குதிரை அதில் சிக்கிக்கொண்டுவிடக்கூடும்; மோசமான சமயங்களில் அது போராடியே இறந்துவிடவும் கூடும். ஆனால் ஒரு காலத்தில் உலகை உலுக்கிய குதிரைகளின் குளம்படிகள், மங்கோலிய மேய்ச்சல் நிலத்தை விட்டே விரட்டப்பட்டுவிட்டன. இப்போதெல்லாம் ஆடு மேய்ப்பர்கள் மோட்டார் சைக்கிள்களைப் பயன்படுத்துவதாகக்

கேள்விப்பட்டேன்; வளமையின் அடையாளமாகத் தொலைக்காட்சியில் காட்டினார்கள். உண்மையில், ஓநாய்கள் மறைந்ததற்குப் பின்பு, மேய்ச்சல்

நிலத்தால் குதிரைகளுக்கான உணவைத் தர முடியாததால் ஏற்பட்ட விளைவே இது. ஆடுகளுக்கும் மாடு களுக்கும் இதே கதிதான் நேரப் போகிறது, இது நிச்சயம். குதிரைப் பந்தயங்கள் இப்போது மோட்டர் சைக்கிள் பந்தயங்களாகி விட்டன. ஒருநாள் இது, உயிரின அகதிகளுக்கான பந்தயமாக வளர்ச்சி பெறும். நாடோடி மேய்ப்பர்களின் சமூகத்துக்கெதிராக விவசாய சமூகம் Ôநிலைநாட்டிய வெற்றிÕயை நாம் பார்த்தோம். இந்த Ôவெற்றிÕயின் மூலம் பெருமளவில் உதவித்தொகை வந்து கொண்டிருக்கிறது. ஆனால், அடுத்த நூற்றாண்டு வரை இந்த உதவித்தொகை தொடர்ந்தாலும், மேய்ச்சல்நிலம் இனி திரும்பப் போவதில்லை.''

அவர்களுடைய முன்னால் தலைமை அலுவலகத்துக்குச் செல்லக்கூடிய புழுதிப் பாதையில் அவர்களின் ஜீப் சென்று கொண்டிருந்தது. அங்கு மேய்ப்பர்களை அல்லது குறைந்தபட்சம் யாரையாவது ஒருவரைப் பார்ப்போம் என்ற ஆசையோடு இருந்தார்கள். ஆனால் அவர்களுக்கு மிகவும் பழக்கமான மலை மேட்டைக் கடந்தவுடன், அவர்கள் பார்த்ததெல்லாம் அந்தப் பழைய இடம் இப்போது மஞ்சள் மணல் மேய்ச்சல் நிலமாக மாறி விட்டிருந்ததையும், தரை முழுவதும் ஏராளமான மணல் குவியல்களைக் குவித்து எலிப் பொந்துகள் நிறைந்திருந்ததையும், ஏகப்பட்ட எலிகள் ஓடித் திரிந்ததையும்தான். ஒரு வரிசையாக அமைந்திருந்த செங்கல் வீடுகளைக் காணவில்லை. ஒரு காலத்தில் சந்தடி மிகுந்த அந்தத் தலைமை அலுவலக இடத்தை ஜென் ஜீப்பில் சுற்றி வந்தபோது, எந்தவொரு சுவரிலும் மோதிவிடாமல் இருப்பது குறித்து அவன் கவலைப்பட வேண்டிய அவசியம் இருக்கவில்லை என்றாலும் பலமுறை எலிப் பொந்துகளின் குவியல்களில் மோதி நிற்கும்படி ஆயிற்று. இரண்டு தலைமுறைக் காலம்தான் கடந்து விட்டிருக்கிறது; ஆனால் அதற்குள்ளாக, கடந்த காலத்தின் மிச்சங்களெல்லாம் மஞ்சள் மணலால் மூடப்பட்டுவிட்டன. பூமியின் முகத்தைத் துப்புரவாக அழித்துத் தேய்த்துவிட்டதுபோல் தோன்றியது.

ஜென் பெருமூச்சு விட்டான். ''ஓநாய்களற்ற மேய்ச்சல் நிலத்தில் எலிகள் அரசர்களாகிவிட்டன. அவை பெரிய பொந்து களைத் தோண்டி, அவற்றுள் பெருமளவில் உணவை வைத்துள்ளதன் மூலம் மேய்ச்சல் நிலத்தில் அவை செல்வாக்கு செலுத்துகின்றன. ஒரு எலி தெருவைக் கடந்து ஓடும்போது,

அதைக் கொல்லு என எல்லோருமே கத்துகிறோம். ஆனால் அடியாழத்தில் நாம் எலியை வணங்குகிறோம். அதனால்தான் நம்முடைய கிரகநிலை அமைப்பில் அதை முதன்மையிடத்தில் வைத்திருக் கிறோம்.''

இப்போது யாங் ஜீப்பை ஓட்டிச் சென்றான். அருகிலிருந்த மலையை நோக்கி அவர்கள் சென்றார்கள். அவர்கள் வடக்கில் பார்த்தபோது, அங்கு சில மாடுகளையும், சில வீடுகளிலிருந்து சிம்னி புகை வெளிவருவதையும் பார்த்தார்கள். ஆனால் இதுவரை குடில்களேதும் தட்டுப்படவில்லை. அருகில் தெரிந்த சிம்னி புகையை நோக்கி யாங் ஓட்டிச் சென்றான்.

அவர்கள் ஒரு டஜன் லீ தூரம் சென்றிருந்தபோது, தொலைவில் ஒரு புழுதிப் பாதையில் மஞ்சள் தூசி எழுந்தது.வேகமான குதிரையொன்றில் ஒரு மேய்ப்பன் வந்து கொண்டிருப்பதாக ஜென் நினைத்தான்; ஆனால் அது நெருங்கி வந்தபோது தான், அது ஒரு பளபளக்கும் யமகா மோட்டர்சைக்கிள் என்பது தெரிந்தது. அதில் சவாரி செய்து வந்த பதின்வயது மங்கோலிய இளைஞன், ஜாக்கெட் போன்ற சட்டையும், 'பேஸ்பால்' தொப்பியும் அணிந்திருந்தான். ஜீப் முன்னால் மோட்டர்சைக்கிள் அலறல் சத்தத்துடன் வந்து நின்றது. அந்த இளைஞனின் தோளில் ஒரு சிறுரகத் துப்பாக்கி தொங்கிக்கொண்டிருந்ததையும், ஒரு நடுத்தரப் பருந்து இருக்கையில் கட்டப்பட்டு அதிலிருந்து ரத்தம் சொட்டிக்கொண்டிருப்பதையும் பார்த்து ஜென் அதிர்ச்சி அடைந்தான். அந்த வகைத் துப்பாக்கியொன்றை முதலில் பார்த்தபோது பில்ஜி திடுக்குற்றதையும் அவர் கண்களில் அப்போது வெளிப்பட்ட பயத்தையும் ஜென் நினைவு கூர்ந்தான். மேலும், ஒரு மங்கோலியச் சிறுவன் அப்படியான ஒன்றை வைத்திருந்ததும், அவன் ஒரு உயர்ரக இரு சக்கர வெளிநாட்டு வாகனமொன்றை ஓட்டிக்கொண்டிருந்ததும் ஜென்னுக்கு ஆச்சரியமளித்தது.

மங்கோலிய மொழியில் யாங் அவனுக்கு வாழ்த்துக் கூறி, அவனைப் பற்றி விசாரித்தான். சிவந்த நிறத்தோடிருந்த பையனின் முகத்தில் அசட்டையான பார்வை வெளிப்பட்டது. செரோகீயைப் பார்த்தபடியே, சீன மொழியில் சான்டோங் உச்சரிப்புடன், தான் சூலுவின் இளைய மகனென்றும் லீக் தலைநகரில் உயர்நிலைப்பள்ளியில் படிப்பதாகவும் கோடை விடுமுறையைத் தான் இங்கு கழிப்பதாகவும் கூறினான். சூலு யாரென்பதை எண்ணிப் பார்க்க

ஜென்னுக்கு ஒரு கணம் பிடித்தது. அவன் பழைய மேய்ச்சல்நிலத் தலைமையகத்தில் கட்டுமானப் பிரிவில் சிறிய வேலை பார்த்த ஒரு வெளியாள் என்பது தெரிந்தது.

மேய்ச்சல்நில அமைப்புமுறை மாறிய பிறகு, படைப்பிரிவிலிருந்து ஓய்வு பெற்ற இராணுவ வீரர்களுக்கும் மேய்ச்சல்நிலப் பணியாளர்களுக்கும் அவர்கள் அங்கேயே தங்கிக்கொள்ள விரும்பினால் அவர்களுக்கு நிலமும் கால்நடைகளும் கொடுக்கப் பட்டன என்று சாங் ஜியோனும், வேறு சில பழைய மாணவர்களும் அவனிடம் கூறியிருக்கிறார்கள்.

''நீ ஏன் அந்தப் பருந்தை சுட்டாய்?'' என்று ஜென் அந்த இளைஞனிடம் கேட்டான்.

''வேடிக்கைக்காக.''

''நீ ஒரு உயர்நிலைப்பள்ளி மாணவன். வனவிலங்குகளை நாம் பாதுகாக்க வேண்டுமென்று உனக்குத் தெரியாதா?''

''பருந்துகள் ஆட்டுக்குட்டிகளைத் தூக்கிச் செல்கின்றன. அப்படியிருக்கும்போது நான் ஏன் அவற்றை சுடக்கூடாது? இங்கு ஏகப்பட்ட எலிகள் இருப்பதால் புற மங்கோலியாவில் இருந்து பருந்துகள் பறந்து வருகின்றன. நான் சிலவற்றைக் கொல்வதால் என்ன ஆகிவிடப் போகிறது?''

பட்டு மற்றும் கஸ்மாயின் வீடு பற்றி யாங் கேட்டான். அந்தப் பையன் வடக்கே கை காட்டி, ''எல்லைப் பகுதி நெடுஞ்சாலைக்கு அப்புறமாக, கடைசியில் வடக்கே மிகப் பெரிய கல்பட்டி கொண்டது.'' பிறகு, திரும்பிப் பார்க்காமல் மலைகளை நோக்கி விரைந்து சென்றான்.

ஜென்னும் யாங்கும் திடீரென அந்நியர்கள் போல உணர்ந்தார்கள். ''நாம் பட்டுவைப் பார்க்கச் செல்வோம். அவனோடும் கஸ்மாயோடும்தான் நாம் அவர்களைச் சார்ந்தவர்கள் என்பதை உணர முடியும்'' என்றான் யாங்.

அவர்கள் புதிய மேய்ச்சல் நிலத்துக்குச் செல்வதற்காக நகர்ந்த சமயத்தில் சென்ற, எல்லைப்பகுதி நெடுஞ்சாலைக்குச் செல்லக் கூடிய, பழமையான பாதையில் இப்போது அவர்களுடைய ஜீப் விரைந்துகொண்டிருந்தது. ஜென் குன்றுகளில் மர்மோட்டுகள் தென்படுகின்றனவா என்று பார்த்தான். கிட்டத்தட்ட ஒரு டஜன் லீ தூரம் கடந்த பின்னும் ஒன்றுகூட அவன் கண்களில்

தட்டுப்படவில்லை. ‘‘சின்ன பையன்கள்கூட இப்போது வேட்டைத் துப்பாக்கிகளை வைத்திருக்கும்போது, மர்மோட்டுகளைப் பார்க்க முடியும் என்று நீ நினைக்கிறாயா?’’ யாங் கேட்டான். ஜென் தேடுவதை நிறுத்திவிட்டான்.

அவர்கள் மக்கள் குடியிருந்த சில வீடுகளைக் கடந்து சென்றார்கள். ஆனால் ஒரு சில நாய்களே –அவையும்கூட சின்னதாக இருந்தன — வெளியில் ஓடி வந்தன. ஒரு டஜனுக்கும் மேற்பட்ட ஆவேசமான நாய்களால் சுற்றி வளைக்கப்படுவதோ, துரத்தப்படுவதோ, மேலே செல்லவிடாமல் தடுப்பதோ போன்ற அச்சமூட்டும் காட்சிகளேதும் அரங்கேறவில்லை. ஒரு காலத்தில் ஓநாய்களைத் துரத்தியடிக்கும் அளவுக்கு வெளிப்பட்ட மூர்க்கமான குரைப்பு அவற்றிடம் சுத்தமாக இல்லை.

‘‘இப்போது ஓநாய்கள் இல்லையென்பதால், இனி நாய்களும் மறைந்துவிடும்’’ என்றான் யாங். ‘‘இனி யுத்தங்கள் என்பது இருக்கப் போவதில்லை. யுத்தங்கள் இல்லாத நிலையில் ஆற்றலற்ற, சோம்பேறிக் கூட்டம்தான் எஞ்சியிருக்கும். மேய்ச்சல்நில நாய்களும் இனி செல்லப் பிராணிகளாகிவிடும்.’’

இளவேனிற் பருவ பிரசவகாலப் புல்வெளிப் பிரதேசமான, பிரிவு இரண்டின் செல்வ வளமிக்க நிலப்பகுதிக்குள் அவர்களுடைய ஜீப் நுழைந்தது. ஆனால் அவர்கள் எதிர் கொண்டதெல்லாம் ஒரே நிறத்திலான தரிசு நிலமும், மணற் பாங்கான புல்லும், மஞ்சள் புழுதியும், காற்றில் உப்புக் கரிப்பும்தான். தொலைவில் கரும்பாறை மலையைத் தாண்டிய புல் வயல்களை அவன் பார்த்தபோது, அவனுடைய கண்கள் சிவந்தன.

‘‘தொலைக்காட்சியில் ‘அனிமல் கிங்டம்’ நிகழ்ச்சியை இருபது வருடங்களாகப் பார்த்து வருகிறேன். அதைப் பார்க்கும் போதெல்லாம் உன் மீதும் என் மீதும் எனக்குக் கோபம் கோபமாக வரும். மேய்ச்சல் நிலத்தின் மீது இந்த அளவுக்கு ஈர்ப்பு உன்னால்தான் எனக்கு ஏற்பட்டது. அந்த அருமையான, மிகச் சிறந்த ஏழு ஓநாய்க்குட்டிகளையும் நம் கைகளால் நாம் கொன்றோம். உன்னோடு சேர்ந்து அதைச் செய்ததில் முதலாமவன் நான். என்னுடைய மகன்கூட, அதைப் பற்றிப் பேச்சு வரும்போதெல்லாம் என்னை முட்டாள் என்றும் அசடு என்றும் கூறுகிறான். என்ன ஒரு குரூரம்! சட்டரீதியாகப் பார்த்தால் கணிசமான பொறுப்பை நான் ஏற்றாக வேண்டும். ஏனென்றால்,

ஓநாய்க் குகையை சோதனையிட நீ விரும்பியபோது அதை நான் ஆதரித்தேன். அந்த இரவில் நான் உன்னோடு வந்திருக்காவிட்டால், அக்காரியத்தைத் தனியாகச் செய்ய உனக்கு தைரியம் ஏற்பட்டிருக்காது. நாம் ஒரு குற்றம் புரிந்திருக்கிறோம். அது ஒருபோதும் மாறப்போவதில்லை.''

ஜென் மௌனமாக இருந்தான்.

யாங் தொடர்ந்து பேசினான். ''சீனாவிலும் வெளிநாடுகளிலும் காணப்படுகிற அமைப்பு முறைகளின் மாதிரிகள், பொருளாதார அரசியல், நகர மற்றும் கிராமத்தின் பிரச்சனைகள் பற்றி இருபது ஆண்டுகளாக நீ ஆய்வு செய்து வந்திருக்கிறாய். ஆனால், கடைசியில், நீ ஏன் தேசியப் பண்பு பற்றிக் கவனம் செலுத்துகிறாய்?''

''மற்ற பிரச்சனைகளைத் தீர்த்துவிட முடியும்; ஆனால் இந்த ஒன்றை முடியாதென்று நினைக்கிறாயா?'' என்று ஜென் திருப்பிக் கேட்டான்.

யாங் பதில் கூறுவதற்கு முன் அக்கேள்வி குறித்து சற்று யோசித்தான். ''நீ சொல்வது சரிதானென்று தோன்றுகிறது. லூ சுன் அரை நூற்றாண்டுகளுக்கு முன்பு முன்வைத்த இந்தப் பிரச்சனைக்கு நாம் இதுவரை ஒரு தீர்வும் காணவில்லை. அந்தக் குறையிலிருந்து சீனர்களாகிய நம்மால் விடுபட முடியாதென்றே தோன்றுகிறது. சீர்திருத்தங்களை அமல்படுத்தி இருபது வருடங்களாகிவிட்டன; ஆனால் இன்னும் நம் கால்கள் ஸ்திரப்படவில்லை.''

அவர்களுடைய ஜீப் நெடுஞ்சாலையில் ஓர் உயரமான இடத்தை வந்தடைந்திருந்தது. அங்கிருந்து, முடிவற்ற எல்லைப் பகுதியை அவர்களால் கீழே குனிந்து பார்க்க முடிந்தது. அவர்கள் பார்த்த காட்சி கண்களை வியப்பில் விரியச் செய்தது. இருபது லீ தூரம் பரந்துபட்ட இராணுவப் பிராந்தியமும், எவருமற்ற நிலப்பகுதியும் இப்போது தடைகளற்று மனிதர்களும் கால்நடை களும் மிகுந்த அழகிய மேய்ச்சல் பிரதேசமாக உயிர்ப்புடன் காணப் பட்டது. அவர்கள் ஐநூறு மைல்கள் கடந்து வந்ததில் மேய்ச்சலுக்கான புல்வெளிப் பிரதேசம் என்று கருதக்கூடியதாக இந்த ஒன்று மட்டுமே அமைந்திருந்தது. அவர்கள் பார்த்துப் பழகியிருந்த புல்லின் உயரத்தில் அந்தப் புல் பாதியளவே இருந்தாலும், கரும்பச்சை வண்ணத்தை அது தக்கவைத்துக்கொண்டிருந்தது.

இராணுவக் கட்டுப்பாட்டுப் பிராந்தியமாகப் பல தலைமுறைகளாகப் பாதுகாக்கப்பட்டு வந்திருந்ததால் மேய்ச்சல் நிலத்தின் இந்தப் பகுதியானது பாலையாக ஆவதற்கான எந்த அறிகுறிகளும் கொண்டிருக்கவில்லை. அவர்கள் வந்த வழியெங்கும் அவர்களை வரவேற்ற வறண்ட காட்சிகளுக்கு மாற்றாக, பனித்துளிகளோடும் ஈரப்பதமாகவும் பச்சை வண்ணத்தோடும் இந்த நிலம் காணப்பட்டது. எல்லைப்பகுதிக்குக் குறுக்காக அமைந்திருக்கும் தொன்மையான மேய்ச்சல் நிலத்தின் ஈரப்பதமும் இதற்கு உதவியாக அமைந்திருக்கும்.

அங்கு ஓட்டுக் கூரைகளுடன் கூடிய செங்கல் வீடுகள், கல் பட்டிகளோடும் கொட்டகைகளோடும் காணப்பட்டதானது, எல்லைப் பகுதியின் குறுக்காகக் கோட்டைகள் அமைந்திருப்பதைப் போல் தோற்றமளித்தது. வீடுகளனைத்தும் உயரமான நிலப் பகுதிகளில் கட்டப்பட்டிருந்தன. அங்கு குடியேறியிருக்கும் குடும்பங்கள் அப்புல்வெளிப் பிரதேசத்தின் மையத்தில் இருக்கும் வகையில் அவை அமைந்திருப்பது தெரிந்தது. டஜன் கணக்கிலான ஆட்டு மந்தைகளும் மாட்டு மந்தைகளும் மேய்ந்துகொண்டிருந்தன. ஆட்டு மந்தைகளின் அளவானது அவர்கள் இருவருக்கும் வியப்பை ஏற்படுத்தியது. ஒவ்வொன்றிலும் மூவாயிரம் ஆடுகள், சிலவற்றில் நாலாயிரம்கூட இருக்கும் போலத் தோன்றியது. நாடோடி மேய்ச்சலானது, பெரிய அளவிலான நிரந்தர மேய்ச்சல் மூலம் ஈடு செய்யப்பட்டிருப்பது தெளிவாகத் தெரிந்தது.

யாங் ஒரு ஜோடி பைனாகுலர்களை எடுத்து, அப்பகுதியை மிகக் கவனமாக அலசினான். ‘‘இந்த மந்தைகள் மிகவும் பெரியவை’’ என்றான் அவன். ‘‘நீயும் நானும் இந்த அளவிலான மந்தையை மேய்த்ததில்லை. நாம் மேய்த்ததை விட இரு மடங்கு ஆடுகள் கூடுதலாக இருக்கும். மேய்ப்பர்கள் எப்படித் தாக்குப் பிடிப்பார்கள்?’’

‘‘நாம் மேய்த்த மந்தைகள் கூட்டமைப்புக்கு உட்பட்டவை. மந்தை தனியாருக்குச் சொந்தமாக இருக்கும்போது அளவு பிரச்சனையில்லை. ஒரு தனிநபரால் மந்தையை சமாளிக்க முடியா விட்டால், மந்தையை மேய்ப்பதற்கான ஆட்களை அவரால் பெற முடியும்; வேலைகளை அவரால் உருவாக்க முடியும். லாபமானது எப்போதுமே கடினமாக உழைப்பதற்கான ஊக்கத்தொகையைக் கூட்டும்.’’

அத்தகைய அதிர்வூட்டும் நிரந்தரக் குடியிருப்பு மேய்ச்சல் பிரதேசத்தை எதிர்கொண்டபோது, ஜென்னுடைய கால்கள் தள்ளாடின. அவர்கள் பார்த்துக்கொண்டிருப்பது, உண்மையில் ஒரு தவறான வளம்; உள்மங்கோலிய மேய்ச்சல் நிலம் சாவதற்குக் கொஞ்சம் முந்தையது.

இரண்டு மோட்டர்சைக்கிள்களும், ஒரு குதிரையும் வேகமாக செரோகீயை நோக்கி விரைந்து வந்தன. ஜென் சென் ஒருவழியாக, குதிரை சவாரி செய்யும் ஒருவரை நீண்ட காலத்துக்குப் பின் பார்த்தான். குதிரைக்கு முன்பாக, மோட்டர்சைக்கிள்கள் அவர்களை வந்தடைந்தன. அவற்றில் ஒன்றில் ஒரு வலிமையான ஆள் நீலநிற மேலாடையோடு காணப்பட்டான். ஜென்னும் யாங்கும் ஒரே சமயத்தில், ''பாயர்! பாயர்!'' என்று கத்தினார்கள்.

அவர்கள் ஜீப்பிலிருந்து குதித்ததும், பாயர் ஜென்னை இறுகக் கட்டித் தழுவிக்கொண்டான். ''ஜென் சென்!'' என்று கத்தினான். ''ஜென் சென், அம்மா இந்த வாகனத்தைப் பார்த்ததும், வருவது நீங்கள்தான் என்று தெரிந்துகொண்டு விட்டார். உடனே போய் உங்களைக் கூட்டி வரும்படி என்னிடம் சொன்னார்.'' அவன் ஜென்னை மீண்டுமொரு முறை கட்டித் தழுவிவிட்டுப் பின் யாங்கைக் கட்டித் தழுவினான். ''ஜென்னுடன் வந்திருப்பது நீங்கள்தான் என்று அம்மாவுக்குத் தெரியும். சரி, வாருங்கள். நீங்கள் இருவரும் எங்களோடு தங்கலாம்.''

பாயருடன் இரண்டு சிறுவர்கள் இருந்தார்கள். ஒருவனுக்கு பதினாறு அல்லது பதினேழு வயதிருக்கும்; அடுத்தவனுக்கு பதினாலு அல்லது பதினைந்து வயதிருக்கும். ''ஜென் தாத்தாவுக்கும் யாங் தாத்தாவுக்கும் ஹலோ சொல்லுங்கள்'' என்றான் பாயர்.

செரோகீயை வட்டமிட்டுப் பார்த்தபடியே, இருவரும் அவர்களை வரவேற்றனர். ''கோடை விடுமுறையில் இவர்கள் வந்திருக்கிறார்கள். இருவரும் லீக் தலைநகரில் பள்ளியில் படிக்கிறார்கள். இருவரையும் கல்லூரிப் படிப்புக்கு பீஜிங்கிற்கு அனுப்பலாமென இருக்கிறேன்; அப்போதுதான் நீங்கள் இருவரும் அவர்களைக் கவனித்துக் கொள்ளலாம். சரி, ஜீப்பில் ஏறுங்கள். நீங்கள் வருவதாக இருக்கிறீர்களென்று சாங் ஜியோன் சொன்னதி லிருந்து எதிர்பார்த்து, எதிர்பார்த்து அம்மாவுக்குக் கிட்டத்தட்ட உடம்பு முடியாமல் போய்விட்டது.''

தூரத்தில் தெரிந்த சிம்னி புகையை நோக்கி, மோட்டர் சைக்கிள்களையும் குதிரையையும் பின்தொடர்ந்து ஜீப் சென்றது. பட்டுவும் கஸ்மாயும் இரண்டு லீ தூரம் நடந்துவந்து அவர்களை வரவேற்றனர். இருவருடைய தலைமுடியும் நரைத்திருந்தது. ஜென் ஜீப்பிலிருந்து எகிறிக் குதித்தான். ‘‘அம்மா! அம்மா! பட்டு!’’ அவர்கள் ஒருவரை ஒருவர் தழுவிக்கொண்டபோது, அவர்களுடைய முகங்களில் சூடான கண்ணீர் வழிந்தோடியது. கஸ்மாயின் கண்ணீர்த் துளிகள் ஜென்னுடைய தோளில் விழுந்தன. அவள் தன்னுடைய முஷ்டிகளால் அவனைக் குத்தியபடியே, கோபத்துடன், ‘‘நீ திரும்பிவர உனக்கு இருபது வருடங்கள் பிடித்திருக்கிறது’’ என்றாள். ‘‘மற்ற மாணவர்களெல்லாம் ஒரு தடவைக்கு மேல் வந்து போய்விட்டார்கள். நீ வருவதற்குள் நான் செத்துப் போய்விடுவேன் என்று நினைத்தேன்.’’

‘‘நீங்கள் சாகமாட்டீர்கள்’’ என்றான் ஜென் ‘‘நான்தான் சாக வேண்டியவன். அதனால் நான் முதலில் போகிறேன்.’’

கஸ்மாய் தன்னுடைய காய்ப்பேறிய கைகளால் கண்ணீரைத் துடைத்துக்கொண்டாள். ‘‘நீ புத்தகத்துக்குள் உன் மூக்கை நுழைத்துக்கொண்டதும் எல்லாவற்றையும், அப்பாவையும் ஈஜியையும்கூட, மறந்துவிட்டிருப்பாய் என்று எனக்குத் தெரியும். பிறகெப்படி உன் மேய்ச்சல்நில வீடு உனக்கு ஞாபகத்துக்கு வரும்?’’

‘‘கடந்த இருபது வருடங்களாக ஒவ்வொரு நாளும் நான் மேய்ச்சல் நிலத்தை நினைத்துக்கொண்டுதான் இருக்கிறேன்’’ என்றான் ஜென். ‘‘இந்த இடத்தைப் பற்றியும் உங்களுடைய குடும்பத்தைப் பற்றியும் நான் ஒரு புத்தகம் எழுதிக்கொண்டிருக்கிறேன். மேய்ச்சல் நிலத்தில் என்னுடைய வீட்டை நான் ஒருபோதும் மறந்ததில்லை. நான் இந்த இடத்தில்தான், உங்கள் எல்லாரோடும், எப்போதும் வாழ்ந்துகொண்டிருகிறேன்.’’

அவர்கள் இருவரும் ஜீப்பில் ஏறிக்கொள்ள ஜென் உதவினான். அவர்களுடைய வீட்டை நோக்கி ஜீப் சென்றது. அவர்களிடம் ஒரு பிரமாண்டமான கல் பட்டி இருந்தது; மேய்ச்சல் குழுவினரிடம் முன்னர் இருந்ததை விட இரு மடங்கு பெரியது. அவர்கள் பட்டியைக் கடந்து சென்றபோது, வேலிக்கு மேற்காக, விசாலமான புதிய வீடுகள், டிவி ஆண்டெனாக்கள் மற்றும் காற்றின் சக்தியால் இயங்கும் ஜெனரேட்டர்களுடன் ஒரு வரிசையில் அமைந்திருந்தன. அப்பகுதி

முழுவதும் நிலம் மணற்பாங்காக இருந்தது. அங்கு இடுப்பளவு உயரம் கொண்ட காட்டுத் தாவரங்களைத் தவிர வேறெதுவும் வளராது. ஒரு வீட்டின் முன்பு ஜென் ஜீப்பை நிறுத்தினான். இருபது வருடங்களுக்குப் பிறகு, இப்போது, முதியவர் வாழ்ந்த வீட்டுக்குள் தன்னால் போக முடிய வில்லையே என்ற ஏமாற்ற உணர்வு அவனை ஆழமாகப் பாதித்தது.

ஜென்னும் யாங்கும் அவர்கள் பரிசுகளாகக் கொண்டு வந்திருந்த சிகரெட்டுகள், மது, டப்பாக்களில் அடைக்கப்பட்ட பானங்கள், ஜெல்லி, இனிப்புகள், சால்வைகள், மூட்டுத் துணிகள், தோல் பெல்ட்டுகள், லைட்டர்கள், பூச்சி மருந்துகள் போன்ற பலவற்றையும் இறக்கினார்கள். அவர்கள் அவை எல்லாவற்றையும், மங்கோலிய பாணியில் அமைந்த முன்னறைக்கு எடுத்துச் சென்றார்கள். நூறு சதுர அடிகளுக்கு மேலிருந்த அந்த அறையில் சோபாக்களும், தேனீர் மேசைகளும், டிவியும், விசிஆரும், மது அலமாரியும் இருந்தன. சுவரில் தொங்கிய மஞ்சள் திரைச்சீலையின் மத்தியில் ஜெங்கிஸ்கானின் இடுப்பளவு உருவப்படம் தெரிந்தது. மகத்துவமிக்க கானின் சரிந்த கண்கள், தன்னுடைய மங்கோலிய வாரிசுகளையும் அவர்களுடைய விருந்தினர்களையும் அவதானித்துக் கொண்டிருப்பதுபோல் தோன்றியது. அந்தப் படத்தின் முன்பு, ஜென் சிறிது நேரம் நின்று மரியாதை செலுத்தினான்.

‘‘அப்பாவின் உறவினர் ஒருவர் புற மங்கோலியாவிலிருந்து ஓலோன்புலாக்குக்கு வந்தபோது, அங்கிருந்து இதை வாங்கி வந்து கொடுத்தார்’’ என்றாள் கஸ்மாய். ‘‘நாங்கள் இங்கு நல்ல வசதியோடு இருப்பதாகவும், சாலைகள் அருமையாக இருப்பதாகவும், ஆனால் எங்களுடைய கல்வியும் மேய்ச்சல் புல்வெளியும் அவர்களுடையதைப் போல நன்றாக இல்லை என்றும் கூறினார்.’’

எல்லோருமாய் உட்கார்ந்து பால் தேனீரும், பாலில் தயாரிக்கப்பட்ட உணவுகளையும் சாப்பிட்டனர். இனிப்பு மிட்டாய்களை விரும்பி சாப்பிட்டபடியே, ‘‘உனக்கு நினை விருக்கிறதா! முன்பெல்லாம் நீ மிட்டாய்களை நாய்களுக்குத்தான் கொடுப்பாய். எனக்குத் தரமாட்டாய்’’ என்று புன்னகையோடு சொன்னாள் கஸ்மாய்.

கஸ்மாய்க்குப் பழச்சாறு ஜெல் மிட்டாய் மிகவும் பிடித்துப் போய்விட்டது. அவள் அதை இப்போதுதான் முதல் முறையாகச் சாப்பிடுகிறாள். ஒன்றன் பின்

ஒன்றாய் அதை வாய்க்குள் பிழிந்து சாப்பிட்டாள். சிரித்தாள். ''எனக்கு எல்லாப் பல்லும் போய்விட்டது உனக்கெப்படித் தெரியும். பல்லில்லாத கிழவிக்கான சரியான மிட்டாய் இது.''

ஜென், தன் தலையின் ஒரு பக்கத்தைத் தொட்டுவிட்டு, ''எனக்கும் வயதாகிவிட்டது'' என்றான். ''இங்கே நரைத்திருப்பதைப் பாருங்கள். எனக்கும் சில பல் போய்விட்டது. ஆனால் என்னால் எப்படி உங்களை மறக்க முடியும்? நீங்கள் தனியாளாக ஒரு ஓநாயின் வாலைப் பிடித்து முறுக்கி, அதன் வால் எலும்பை எப்படி உடைத்தீர்களென்று பீஜிங்கில் நிறைய பேரிடம் சொல்லியிருக்கிறேன். அதில் பலர் உங்களைப் பார்ப்பதற்காக மேய்ச்சல் நிலத்துக்கு வர விரும்புகிறார்கள்.''

அவள் கையசைத்து மறுத்தபடியே, ''இல்லை, இல்லை. எங்களுடைய புற மங்கோலிய உறவினர் ஒருவர் சொன்னார், அங்கு ஓநாய்களுக்கென்று விசேஷ சரணாலயம் இருக்கிறதாம்; ஓநாய் வேட்டையும் அங்கு தடை செய்யப்பட்டிருக்கிறதாம். இங்குள்ள டிவியில்கூட ஓநாய் வேட்டையைத் தடை செய்ய வேண்டுமெனப் பேசுகிறார்கள். அப்படியிருக்கும்போது, நான் செய்த ஒரு மோச மான காரியத்தை நீ ஏன் மக்களிடம் சொல்லிக்கொண்டிருக்கிறாய்.''

இருள் கவியத் தொடங்கியது. வெளியே, மிகவும் பரிச்சயமான ஆடுகளின் குளம்படிச் சத்தம் கேட்டது. ஜென்னும் யாங்கும் வெளியே வந்தார்கள்; அங்கு வெள்ளம் போல ஆட்டுக் கூட்டம் வந்து அவர்களைச் சூழ்ந்துகொண்டது. சீனத் துணிகளால் ஆடை அணிந்திருந்த மேய்ப்பன், குதிரை மீதமர்ந்தபடி ஆடுகளை ஓட்டிவந்தான். அவர்கள் இருவரும் சென்று ஆடுகளைப் பட்டியில் அடைக்க அவனுக்கு உதவினார்கள். பட்டு சிரித்தான். ''உங்களுடைய பழைய தொழிலை நீங்கள் இன்னும் மறக்கவில்லை. இருபது வருடங்கள் ஆன பிறகும்கூட, ஆடுகளின் வயிறு நிரம்பியிருக்கும்போது அவற்றை வேகமாகப் பத்தக்கூடாதென்று உங்கள் நினைவில் இருக்கிறது.''

ஜென் சிரித்தான். ''மேய்ச்சல் நிலம் பற்றிய எந்த ஒன்றையும் நான் ஒருபோதும் மறந்ததில்லை. இது மிகப் பெரிய மந்தையாக இருக்கிறது. எவ்வளவு இருக்கும்?''

''கிட்டத்தட்ட நாலாயிரம்'' என்றான் பட்டு.

யாங் விசிலடித்தபடி சொன்னான். ‘‘ஒவ்வொன்றும் வருடத்துக்கு நூற்றைம்பது யான் அல்லது அதைவிடக் கூடுதலாகத் தரும். அப்படியானால் ஆடுகளின் பெறுமதி மட்டும் ஏழு லட்சம்; அவற்றோடு மாடுகள், வீடுகள், கார்கள் மற்றும் மோட்டர் சைக்கிள்கள் எல்லாம் சேர்த்தால் நீங்கள் மிகப்பெரிய லட்சாதிபதிதான்.’’

‘‘மணல் நிலத்திலிருக்கும் சொத்துக்களை உறுதியாக நம்ப முடியாது’’ என்றான் பட்டு. ‘‘இந்த மேய்ச்சல் புல்வெளி பாலையாக மாறிவிட்டால், நாங்கள் மறுபடியும் ஏழை மேய்ப்பர்களாகி விடுவோம்.’’

‘‘உங்கள் மேய்ச்சல் புல்வெளி எவ்வளவு ஆடுகளுக்கு இடம் கொடுக்கும்?’’ என்று யாங் கேட்டான்.

பட்டியின் கதவை மூடினான் பட்டு. ‘‘போதுமான மழை நீர் இருந்தால், மேய்ச்சல் புல்வெளி இரண்டாயிரம் ஆடுகளுக்கு இடம் கொடுக்கும். வறட்சி ஏற்பட்டால் ஆயிரம் ஆடுகள்தான் மேய முடியும். சமீப வருடங்களாக அதுதான் நடந்து கொண்டிருக்கிறது. கடந்த ஐந்து அல்லது ஆறு வருடங்களாகப் போதுமான அளவு மழை பெய்யவில்லை. ஆயிரத்தை வைத்துக் காப்பாற்றுவதே பெரும் பாடு.’’

ஜென் அதிர்ச்சியடைந்தான். ‘‘பின் ஏன் இவ்வளவு ஆடுகளை வளர்க்கிறீர்கள்?’’

‘‘நீங்கள் கொள்திறன் பற்றிப் பேசுகிறீர்களென்று நினைக்கிறேன், சரிதானே? இங்கிருக்கும் மேய்ப்பர்கள், அப்பாவால் பயிற்சி அளிக்கப்பட்டவர்கள்; கஸ்மாயின் மேய்ச்சல் பிரிவைச் சேர்ந்தவர்கள். கொள்திறனின் முக்கியத்துவம் அவர்களுக்குத் தெரியும். மேலும் மேய்ச்சல் நிலத்தை சரிவரப் பராமரிப்பவர்கள், அவர்கள். ஆறு மாதங்களுக்குத்தான் நான் பாதி மந்தையை வளர்ப்பேன்; பனி பெய்வதற்கு முன்பாக இரண்டாயிரம் ஆடுகளை விற்றுவிடுவேன். அதாவது இந்த வருடத்தில் பிறந்த குட்டிகளில் ஆயிரத்து நானூறு அளவில் பெரிய ஆட்டுக்குட்டிகளையும், சில நூறு ஆடுகளையும், வயதான பெண் ஆடுகளையும் விற்று விடுவேன். பனிக்காலத்தின் பெரும்பகுதிவரை மிச்சமுள்ள ஆடுகளுக்குப் போதுமான புல் கிடைக்கும். பிறகு, ஆடுகள் விற்ற பணத்திலிருந்து காய்ந்த பச்சைப்புல் குவியலை வாங்கி

சமாளித்து விடுவோம். பின்கோடை காலத்தில் அல்லது முன்இலையுதிர் காலத்தில், நான் ஆடுகளை மலைகளுக்கு ஓட்டிச் செல்வேன். வறட்சியின் காரணமாக பெரும்பாலான கொசுக்கள் செத்து விட்டிருக்கும் என்பதால், ஆடுகள் நிம்மதியாக மலைகளில் மேய்ந்து திரியும்.''

அவர்கள் மறுபடியும் முன்னறைக்குச் சென்றார்கள். ''எங்கள் பிரிவிலுள்ள குடும்பங்கள் இப்போதும் பழைய மங்கோலிய வழிமுறைகளையே பின்பற்றுகிறார்கள்'' என பட்டு தொடர்ந்து பேசினான். ''புல் நன்றாக இருக்கும்போது நாங்கள் நிறைய ஆடுகள் வளர்ப்போம். புல் மோசமாக இருக்கும்போது அவற்றைக் குறைத்துக்கொள்வோம். எங்கள் ஆடுகளை வளர்க்கும்போது நாங்கள் டெஞ்ஞரையும் புல்லையும் பின்பற்றுகிறோம்; பேராசைக்காரர்களைத் தவிர்க்கிறோம். ஆனால், வெளியாட்களுக்குப் பழைய விதிமுறைகள் எதுவும் தெரிவதில்லை; அதனால் அவர்களுடைய புல் தீர்ந்ததும் எங்களுடைய புல்லில் மேயவிடுகிறார்கள். இது மிகவும் வேதனை அளிக்கிறது. உள்ளூர் மங்கோலிய சரக்கு இங்கு கிடைக்கிறது. அரசாங்கத்தால் அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட ஆடுகளை மதுவுக்காக விற்றுவிடுகிறார்கள். அதன்பிறகு, அவர்களுடைய மனைவிகள் ஓடிப் போனதும், குழந்தைகள் வீணாகிப் போனதும், தங்களுடைய மேய்ச்சல் புல்வெளியை ஒத்திக்கு விட்டுக் கிடைக்கும் பத்து அல்லது இருபதாயிரம் யான் பணத்தை வைத்து வருடத்தை ஓட்டுகிறார்கள்.''

''அவர்களுடைய மேய்ச்சல் புல்வெளியை யார் ஒத்திக்கு எடுக்கிறார்கள்?''

''விவசாய — மேய்ச்சல் பகுதிகளைச் சார்ந்த வெளியாட்கள்'' என்று கோபமாகச் சொன்னான் பட்டு. ''அவர்கள் அதன் கொள்திறன் பற்றிக் கொஞ்சம்கூட யோசிப்பதில்லை. அதனால் ஐநூறு ஆடுகளுக்கான புல் கொண்ட நிலத்தில் இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ஆடுகளை வளர்க்கிறார்கள். அவர்களுடைய ஆடுகள் அந்த நிலத்தை சில வருடங்கள் மேய்ந்துவிட்டு, அந்த நிலத்தை மண்ணாக்கி விடுகின்றன. பிறகு அவர்கள் ஒத்தியிடத்தை திரும்பக் கொடுத்துவிட்டு, ஆடுகளை விற்றுவிட்டு, அவர்கள் இடத்துக்குப் போய் இங்கு கிடைத்த பணத்தைக் கொண்டு தொழில் செய்கிறார்கள்.''

‘‘வெளியாட்கள் இவ்வளவு மோசமாக இருப்பார்களென்று நான் ஒருபோதும் நினைத்துப் பார்த்ததில்லை’’ என்று யாங் ஜென்னிடம் சொன்னான். ‘‘சீக்கிரமே அவர்கள் மேய்ச்சல் நிலத்தை நாசமாக்கி விடுவார்கள்.’’

பட்டு மற்றும் கஸ்மாயின் மேய்ச்சல் புல்வெளி குறித்து மகிழ்ச்சியடைந்த ஜென், ‘‘நீங்கள் நன்றாக இருப்பதில் எனக்கு மிகுந்த சந்தோஷம்’’ என்றான்.

கஸ்மாய் தலையசைத்தாள். ‘‘பெரிய மேய்ச்சல் நிலம் போய்விட்டது; எங்களுடைய சிறிய புல்வெளி ரொம்ப காலம் தாங்காது. நிலம் வறண்டுவிட்டது; டெஞ்ஞர் மழை தர மறுக்கிறது. இந்த வருடம் எங்கள் மேய்ச்சல் புல்வெளி மோசமாகிவிட்டது. நான் நான்கு குழந்தைகளைப் பள்ளியில் படிக்க வைக்க வேண்டும்; அதன் பிறகு அவர்கள் திருமணம் செய்துகொள்ளவும் வீடுகள் கட்டவும் பணம் சேமிக்க வேண்டும். மருத்துவச் செலவு வேறு இருக்கிறது. மேலும், நெருக்கடியான காலத்தைச் சமாளிப்பதற்கான சேமிப்பும் வேண்டும். இப்போதுள்ள குழந்தைகள் இன்றைய தேவைகளில் மட்டுமே அக்கறை காட்டுகிறார்கள்; அவர்களுடைய கண்களில் படும் எல்லாவற்றையும் வாங்க ஆசைப்படுகிறார்கள். அவர்கள் இப்போதுதான் உங்களுடைய சொகுசான ஜீப்பைப் பார்த்தார்கள்; ஆனால் அதற்குள் அப்படியான ஒன்றை பாயர் வாங்க வேண்டுமென நச்சரிக்க ஆரம்பித்துவிட்டார்கள். மூத்த குடிமக்கள் எல்லாம் போனதும், இந்த இளையவர்கள் பழைய விதிமுறைகளை எல்லாம் புறக்கணித்துவிட்டு எவ்வளவு முடியுமோ அவ்வளவு ஆடுகளை வளர்த்து, புதிய கார்கள், பெரிய வீடுகள், அருமையான துணிமணிகள் என அடைவதில் குறியாக இருப்பார்களென எனக்குப் பயமாக இருக்கிறது.’’

‘‘அதனால்தான் நான் ஜீப்பை விட்டு இறங்கியதுமே, அது என்ன விலை என்று நச்சரித்தார்களா?’’ என்றான் யாங்.

‘‘மங்கோலியர்கள் குடும்பக் கட்டுப்பாட்டையும் மேற்கொள்ள வேண்டும்’’ எனத் தொடர்ந்தாள் கஸ்மாய். ‘‘நிறைய குழந்தைகளுக்கு மேய்ச்சல் நிலத்தால் ஆதரவு தரமுடியாது. இரண்டு பையன்கள். அவர்களால் கல்லூரிக்குச் செல்ல முடியாதென்றால், மேய்ச்சலுக்குச் சென்றாக வேண்டும். அதன்பிறகு, வீட்டு உடமைகளையும் ஆடுகளையும் அவர்களுடைய திருமணத்துக்குப் பிறகு, நாங்கள் பிரித்துக் கொடுத்தாக வேண்டும். அப்போது

ஒவ்வொரு மந்தையும் சின்னதாகிவிடும். அதனால் அதை அவர்கள் பெருக்க நினைப்பார்கள். ஆனால் மேய்ச்சல் புல்வெளி விரிவடையப் போவதில்லை. இந்தச் சின்ன இடத்தில், மேலும் சில வீடுகள் கட்டப்பட்டால் புல்வெளி நெருக்கப்பட்டுவிடும்.''

வெளியில் பாயர் ஒரு ஆட்டை வெட்டினான்; சிறிது நேரத்துக்குப் பிறகு, அவனுக்கு இணையாகத் திடகாத்திரம் கொண்ட மங்கோலியப் பெண்மணியான அவனுடைய மனைவி ஒரு பாத்திரம் நிறைய இறைச்சியுடன் உள்ளே வந்தாள். இருள் முழுமையாகக் கவிந்திராத போதும், முன்னறையில் மின்விளக்குகள் போடப்பட்டன.

''ஹேய், மிகவும் பிரகாசமாக இருக்கிறது'' என்று பட்டுவிடம் சொன்னான் ஜென். ''இப்போதெல்லாம், ஆட்டெண்ணெய் விளக்குகளைப் பயன்படுத்த வேண்டிய அவசியம் மேய்ப்பர்களுக்கு இல்லை, இல்லையா? அப்போதெல்லாம் எண்ணெய் விளக்கின் முன் நான் வாசிக்க முற்படும்போது, அடிக்கடி என் முடி கருகிவிடும்.''

''காற்றின் விசை மூலம் இயங்கும் இந்த ஜெனரேட்டர் தரும் மின்சாரம் எவ்வளவு நேரத்துக்கு வரும்?'' யாங் கேட்டான்.

பட்டு சிரித்தான். ''காற்றடிக்கும்போது நாள் முழுவதும்

ஜெனரேட்டர் சுழன்றுகொண்டிருக்கும். அது பேட்டரிகளில் மின்சாரத்தைத் தேக்கும். அந்த மின்சாரம் இரண்டு மணி நேரத்துக்கு வரும். அது போதவில்லையென்றால், என்னிடம் சிறிய டீசல் ஜெனரேட்டரும் இருக்கிறது.''

வெளியே கார் ஒலிகள் கேட்டன; கஸ்மாயின் 'நாடோடி' மக்கள் எல்லோரும் கார்களிலும் மோட்டர்சைக்கிள்களிலும் வந்து சேர்ந்தனர். விசாலமான முன்னறை இப்போது நெருக்கியடித்துக் கொண்டிருந்தது. பழைய மேய்ச்சல்நில நண்பர்கள் மிகவும் பிரியமானவர்கள். அவர்கள் நட்புரீதியாக முஷ்டிகளை உயர்த்தி, ஜென்மீதும் யாங்மீதும் விழுந்தபடி இருந்தனர். எல்லோரும் குடிக்கத் தொடங்கியிருந்தார்கள்.

லாம்ஜாவ், லாசுருங், சஞ்சாய் மற்றும் பிற பழைய நண்பர்களும் யாங்கிடமிருந்து ஜீப்பை இரவலாகக் கேட்டனர். நல்ல போதை மயக்கத்திலிருந்த யாங்கும் எல்லோருக்கும் சரி, சரி என்றான்.

‘‘பிரச்சனையில்லை, ஒரு பிரச்சனையுமில்லை. உங்களுக்கு சட்டரீதியாக வழக்குத் தொடர வேண்டியிருந்தால் என்னிடம் வாருங்கள்.’’ பிறகு சாவிக்கொத்தை லாம்ஜாவிடம் எறிந்தான்.

எல்லோரும் சிரித்துக் கும்மாளமடித்தபடி, பாடத் தொடங்கினார்கள். மங்கோலியாவின் மிகச் சிறந்த பாடகரான டெஞ்ஞீர் பாடிப் பிரசித்தி பெற்ற பாடல் கடைசியாக அமைந்தது. குரல்கள் உச்சமாகவும் முதுமையாகவும் சோகமாகவும் வெளிப்பட்டன; ஓநாய்களின் ஊளைகளைப் போல அவை அதிர்ந்தன.

இரவு முழுவதும் குடியும் பாடலும் தொடர்ந்தது; கண்ணீர் வழிவது நிற்கவே இல்லை.

குடி விருந்தின்போது, ஜென்னுக்கும் யாங்குக்கும் ‘உத்தரவுகள்’ பிறப்பிக்கப்பட்டபடி இருந்தன. ஒரு நாளைக்கு இரண்டு விருந்து நடைபெற்றது. ஒவ்வொன்றும் வெவ்வேறு குடும்பத்தால் அளிக்கப் பட்டது. குடியும் சாப்பாடும் பாடலும் அமர்க்களப்பட்டன. மூத்த மேய்ப்பர்கள் ஓட்டிப் பார்ப்பதற்கும் உல்லாசத்துக்குமான வாகனமாக நீல நிற செரோகீ மாறியது. பிற பிரிவுகளிலிருந்து நண்பர்களை அழைத்து வரவும் அது பயன்படுத்தப்பட்டது.

மறுநாள் மதியம், பட்டுவின் வீட்டுக்கு வெளியே, குழுமத்தின் பாதி கார்களும் மோட்டர்சைக்கிள்களும் நிறுத்தப்பட்டிருந்தன; ஆனால் குதிரைகள் ஒரு சிலவே காணப்பட்டன. மேய்ப்பர்களில் ஒருவர் சொன்னார், ‘‘பனி பெய்யும் குளிர்காலங்களில், மோட்டர் சைக்கிளில் சென்றபடி ஆடுகளை மேய்ப்பது சிரமமாக இல்லாவிட்டால் மங்கோலியக் குதிரைகளை வளர்ப்பதை மக்கள் கைவிட்டு விடுவார்கள். இரண்டாம் குழுமத்தின் நான்கு குதிரை மந்தைகளில் இப்போது ஒன்று மட்டும் தானிருக்கிறது; அதுவும் பாதி அளவில்.’’

‘‘ஓநாய்கள் போய்விட்டதால், புல்லின் அடர்த்தி மிகவும் குறைந்துவிட்டது’’ என்றான் பட்டு. ‘‘குதிரைகள் சோம்பேறிகளாகி விட்டன; அவற்றால் வேகமாக ஓட முடிவதில்லை. முன்பைவிடச் சின்னதாகிவிட்டன. இனி எவரும் நம் குதிரைகளை விரும்பப் போவதில்லை.’’

பில்ஜியின் தலைமுறையைச் சேர்ந்த எல்லா மேய்ப்பர்களும் போய்விட்டார்கள் என்பதை ஜென் கவனித்தான். யாங்கிடம் பயின்ற இலக்கணப் பள்ளி

மாணவர்கள்தான் இப்போது அப்பணியில் பிரதான சக்தியாக இருக்கிறார்கள்.

மூன்று நாட்களில், இருவரும் மிக அதிகமாகக் குடித்ததில் அவர்களுடைய ரத்த அழுத்தம் எகிறியது; இதயத்துடிப்பும் அதிகரித்தது. நல்ல வேளையாக, ஹேன் காய்கறிகள் நன்கு சேமிக்கப் பட்டிருந்ததால், ஒவ்வொரு வேளை உணவோடும் அதிக அளவில் 'சாலடு' சேர்த்துக்கொண்டார்கள். அந்தப் பிரிவில் குடி விருந்து காரணமாக மேய்ச்சல் நின்றுபோனது. குடும்பங்கள் வெளியாட்களின் உதவியை நாடினர்.

நான்காம் நாளன்று, கஸ்மாயோடும் அவளுடைய குடும்பத்தாரோடும் இரவு நெடுநேரம் வரை ஜென் உரையாடிக் கொண்டிருந்தான்.

ஐந்தாம் நாள் அதிகாலையில், ஜென்னும் யாங்கும் செரோகீ ஜீப்பில் ஏறி, கரும்பாறை மலையை நோக்கிச் சென்றார்கள்.

ஜீப் எல்லைப்பகுதி நெடுஞ்சாலையைக் கடந்தபோது, மலை கொஞ்சம் கொஞ்சமாகத் தெரிய ஆரம்பித்தது. மேய்ச்சல்நிலப் புழுதிப் பாதையில் வேகத்தைக் குறைத்தான்.

ஜென் பெருமூச்சு விட்டான். ''மேய்ச்சல் நிலத்தின் இருப்புக்கு ஓநாய்களே ஆதாரமாக இருந்தன. ஓநாய்கள் மறைந்ததும் மேய்ச்சல் நிலம் தன்னுடைய ஆன்மாவை இழந்துவிட்டது; வாழ்க்கைமுறை இங்கு முற்றிலுமாக மாறிவிட்டது. பச்சைப் பசேலென்று அடர்ந்து செழித்த தொன்மையான மேய்ச்சல் நிலத்துக்காக நான் ஏங்குகிறேன்.''

ஒரு விரலால் நெற்றியைத் தேய்த்தபடியே யாங். ''நானும் கடந்த கால நினைவுகளின் ஏக்கத்தோடுதான் இருக்கிறேன். இங்கு வந்து சேர்ந்ததுமே, என் தலை முழுவதும் இங்கு மேய்ந்து திரிந்த காட்சிகள் நிரம்பிவிட்டன. முப்பது ஆண்டுகள் ஆகிவிட்டன என்றாலும் ஏதோ நேற்று நடந்ததுபோல் இருக்கிறது.''

ஜீப், ஒரு நேர்த்தியான சரிவின் மேலேறிச் சென்றபோது, காய்ந்து கிடந்த மஞ்சள் நிலத்தில் குட்டையான, அடர்த்தி இல்லாத புல் காணப்பட்டது.

''குட்டி ஓநாயின் குகையை உன்னால் கண்டுபிடித்துவிட முடியுமென்று நினைக்கிறாயா?'' யாங் கேட்டான்.

‘‘ஒரு மாணவனால் எப்படி அவனுடைய ஆசிரியரின் வீட்டை மறக்க முடியும்?’’ ஜென் ஆவேசமாகச் சொன்னான். ‘‘பழைய குகைக்கு அருகில் மலையடிவாரத்தில் ஜீப்பை நிறுத்திவிட்டு, மிச்ச தூரத்தை நடந்து போகலாம். நாம் நடக்க வேண்டும்.’’

ஓநாய்க்குட்டியின் பிறப்பிடத்தை ஜீப் நெருங்கியதும், ஜென்னுடைய மனம் படபடத்தது. ஒரு பழைய போர்க் குற்றவாளி, நினைவிடத்தில் மன்னிப்பு கேட்பதுபோல அவன் மனநிலை இருந்தது. ஏழு மங்கோலிய ஓநாய்க்குட்டிகளை அவன் கொன்ற இடமிது. ஐந்து ஓநாய்க்குட்டிகளுக்குக் கண்கள்கூடத் திறந்திருக்கவில்லை; ஆறாவது, அப்போதுதான் ஓடப் பழகியது. ஏழாவது குட்டியின் சுதந்திரத்தைப் பறித்து, அதைச் சங்கிலியால் கட்டி, கடைசியில் அதன் தலையை நசுக்கினான். சுதந்திரத்தை நேசிக்கக் கூடியவனும், பிறர் சுதந்திரத்தை மதிக்கக் கூடியவனுமான அவன்தான், மிகவும் கொடுங்கோன்மையான, சர்வாதிகார மக்கள் மட்டுமே செய்யக்கூடிய குற்றத்தைப் போன்ற ஒரு மிக மோசமான செயலைச் செய்திருக்கிறான். சமயங்களில் அவன் தன்னுடைய ஆய்வின் விளைவு குறித்துக்கூட வெறுப்படைந்திருக்கிறான். ஏனென்றால் அவனுடைய ஆய்வு மனோபாவமும் ஆர்வமும்தான் ஏழு ஓநாய்க்குட்டிகளின் சுதந்திரத்தையும் சந்தோஷத்தையும் பறித்திருக்கிறது. அவன் எழுதி முடித்திருக்கிற கைப்பிரதி, அவற்றின் ரத்தத்தால், வெள¢ளை ஓநாய் அரசனின் புனித ரத்தம் ஓடிய ஓநாய்க்குட்டிகளின் ரத்தத்தால் எழுதப்பட்டது. அவன் கடன் பட்ட இந்த ரத்தம், இரண்டு தலைமுறைகளாக அவனை வதைபட வைத்திருக்கிறது. அதேசமயம் ஓநாய்களைக் கொல்லும் மேய்ச்சல் நிலத்தினர், கடைசியில் தங்கள் உடல்களைத் தாமாக முன்வந்து ஓநாய்களுக்குத் தருவது ஏன் என்பதை அவன் புரிந்துகொண்டான்.

அப்போதுதான் அவர்களுடைய ஆன்மாக்கள் டெஞ்ஞருக்குப் போகும் என்பதற்காக மட்டும் செய்யப்படுவதல்ல அது; அல்லது ‘சதையைத் தின்ற பிறகு சதையைக் கொடுத்துவிடு’ என்ற நம்பிக்கையின் விளைவாக மட்டும் நிகழ்த்தப்படுவதில்லை. குற்றவுணர்வின் பெரும் சுமையை அனேகமாக அவர்களும் உணர்ந்திருப்பார்கள். அவர்கள் போற்றி வணங்கும் மேய்ச்சல்நில ஓநாய்களிடம் பட்ட கடனைத் திருப்பிக் கொடுக்க விருப்பம் கொள்கிறார்கள்.

மேய்ச்சல் நிலத்தில் இனி ஒருபோதும் வான் புதை இடங்கள் இருக்கப் போவதில்லை.

கடந்த இருபது வருடங்களுக்கும் மேலாக, போற்றத்தகுந்த, அருமையான, பரிதாபத்துக்குரிய குட்டி ஓநாய் ஜென்னுடைய கனவுகளிலும் எண்ணங்களிலும் அடிக்கடி தோன்றிக்கொண்டிருந்தது. ஆனால் ஒருமுறைகூட அது அவனைக் கடிக்கவோ, பழி வாங்கவோ இல்லை. குட்டி ஓநாய் எப்போதுமே அவனிடம் சந்தோஷமாக ஓடிவரும்; அவனுடைய கால்களோடு தன்னுடைய கால்களைச் சுற்றிக்கொள்ளும்; அவனுடைய முட்டிகளோடு தன்னுடைய முட்டிகளைத் தேய்க்கும். அவனுடைய கைகளையும் முகவாய்க்கட்டையையும் நக்கிக் கொடுக்கும். அவனுடைய கனவுகளில், ஜென் மேய்ச்சல் நிலத்திலிருந்து விழித்துக்கொண்டு அவனுடைய தலைக்குப் பக்கத்தில் ஓநாய்க்குட்டி படுத்திருக்கிறதா என்று பார்ப்பான். அப்போது அவன் தன்னிச்சையாகத் தன் தொண்டையைக் கையால் மூடிக்கொள்வான். ஆனால் ஓநாய்க்குட்டி அவன் விழித்துக்கொண்டதைப் பார்த்ததும், தரையில் உருண்டு அவன் அதைத் தடவிக் கொடுப்பதற்காக அவனுக்குத் தன்னுடைய வயிற்றைக் காட்டியபடி கிடக்கும். இரண்டு தலைமுறைகளாக அவன் கண்ட எண்ணற்ற கனவுகளில் குட்டி ஓநாய் ஒருபோதும் சீற்றம் காட்டியதில்லை. மாறாக, ஒரு அன்பான குழந்தையைப் போல அவனிடம் பாசம் காட்டும். ஜென்னுக்குப் புதிராக இருந்தது என்னவென்றால், ஓநாய்க்குட்டி அவனை வெறுக்கவோ, அவனைப் பார்த்து உறுமவோ இல்லை என்பது மட்டுமில்லை, அது எப்போதுமே அவனிடம் ஒரு ஓநாயின் நட்பையும் பிரியத்தையும் காட்டியதுதான். இம்மாதிரி தொன்மையான, பேதமற்ற, மென்மையான, மாசற்ற பிரியமானது, மனித உலகில் ஒருபோதும் காணக்கூடியதல்ல.

அந்தத் தரிசான சரிவில் தென்பட்ட தளர்ந்த பாறைகளையும் காட்டுப் புல்லையும் பார்த்தவுடன், கிட்டத்தட்ட முப்பது வருடங்களுக்கு முன்பான குரூரமான நாசச் செயலை யாங் நினைவு படுத்திக் கொள்வது போலத் தெரிந்தது. குற்றவுணர்வுகளும் சுயநிந்தனையும் அவன் கண்களில் தெரிந்தன.

ஜீப் நின்றது. சமதளமான ஒரு பகுதியை ஜென் சுட்டிக் காட்டினான். “அதுதான் ஓநாய்க்குட்டிகளின் தற்காலிக மறைவிடம். நான்தான் அவற்றை வெளியில் எடுத்தேன். நான்தான் குற்றவாளி. நான் ஓலோன்புலாக்கை விட்டு

வெளியேறியபோது அந்தக் குகை சரிந்தது. இப்போது அதன் எந்தத் தடயமும் இல்லை. இங்கிருந்து நாம் பழைய குகைக்கு நடந்து போகலாம்.'' முதுகில் ஒரு பையோடு

ஜென் முன்னால் நடந்து சென்றான்; சிறு மலையை நோக்கி அவர்கள் வளைந்து வளைந்து சென்றார்கள்.

அவர்கள் அதை அடைந்தபோது, அந்த இருண்ட இடத்தைப் பார்த்தார்கள். முன்னர் முட்புதர்களாலும் புல் தண்டுகளாலும் மறைக்கப்பட்டிருந்த அந்த இடம் இப்போது ஒரு தரிசுச் சரிவாகக் காணப்பட்டது. ஒரு கூடாரம் போல் அமைந்து, குகையை மறைத்திருந்த பசும் நாணல் செடிகளும் இப்போது இல்லை. பல அடிகள் தூரத்துக்கு முன்பே, நூறாண்டுகள் பழமையான அந்தக் குகை பார்வையில் பட்டது. எவ்வித மறைப்புமின்றி முழுமையாக வெளிப்பட்டதில், அது முன்பை விடவும் பெரிதாகத் தோன்றியது. மூச்சைப் பிடித்தவாறே, ஜென் ஓடிப்போய் மிக நெருக்கமாகப் பார்த்தான். குகை அதே அளவில்தான் இருக்கிறதென்பதை உணர்ந்தான். உயர்ந்த புல் மறைப்பு இல்லாததாலேயே அது பார்ப்பதற்குப் பெரிதாகத் தெரிகிறது. பல ஆண்டுகளின் வறட்சி காரணமாக, அதன் வடிவமைப்பு பெரிதாக மாறிவிடாமல் இருந்தது. ஆனால் தரையில் கல்லும் மண் புழுதியும் குப்பையாகக் குவிந்து கிடந்தன. குகைக்குள் மண்டியிட்டு நடந்துபோன ஜென், உள்ளே பார்ப்பதற்கு முன் சில நொடிகள் நிதானித்து தன்னை அமைதிப்படுத்திக்கொண்டான். காட்டுச் செடிகளும் முட்புதர்களும் குகையின் பாதியளவு நிறைந்திருந்தன. அவனுடைய முதுகுப் பையிலிருந்து ஒரு ஃப்ளாஷ் லைட்டை எடுத்து, அடித்துப் பார்த்தான். குகைப் பாதையின் வளைவு, பாறைகளாலும் மஞ்சள் மணலாலும் காட்டுச் செடிகளாலும் கிட்டத்தட்ட மூடப்பட்டிருந்தது. மனச்சோர்வோடு அவன் தரையில் உட்கார்ந்து, அந்தப் பழங்குகையை வெறுமையாகப் பார்த்துக்கொண்டிருந்தான்.

யாங் தன்னுடைய ஃப்ளாஷ் லைட்டைக் குகைப் பாதைக்குள் அடித்துப் பார்த்தான். ‘‘இதுதான் அது'' என்றான் அவன். ‘‘இந்தக் குகைதான். இங்கிருந்து நீ அதனுள் ஊர்ந்து போனாய். அச்சமயத்தில் நான் பயந்து போயிருந்தேன். உள்ளே தாய் ஓநாயிடம் நீ மாட்டிக்கொள்வாய் என்றும், வெளியிலிருக்கும் ஓநாய்கள் என்னைத் தாக்குமென்றும் அஞ்சியிருந்தேன்.

அப்போது நமக்கு எப்படி அவ்வளவு தைரியம் வந்ததென்று எனக்குத் தெரியவில்லை.''

குனிந்து, யாங் குகைக்குள் கூக்குரலிட்டான். ''குட்டி ஓநாய்,

குட்டி ஓநாய், சாப்பாட்டு நேரம். ஜென் சென்னும் நானும் உன்னைப் பார்ப்பதற்காக இங்கிருக்கிறோம்.'' குட்டி ஓநாய் தன்னுடைய சொந்தக் குகையைத் தோண்டி அதனுள் இருப்பது போலவும், மீண்டும் புதிய மேய்ச்சல் புல்வெளியில் இருந்துகொண்டு கூப்பிடுவதுபோலவும் பாவனை செய்தான். ஆனால் இம்முறை ஓநாய்க்குட்டி பாய்ந்து வரவில்லை.

ஜென் எழுந்து, தூசியைத் தட்டிவிட்டான். பின் குந்தி உட்கார்ந்துகொண்டு, குகையின் முன்னிருந்த புல்லை அகற்றினான். அதன் பிறகு, ஏழு பீஜிங் கொத்துக் கறிகளை வெளியில் எடுத்தான். அவற்றில் பெரிதாக இருந்தது, அவன் வளர்த்த ஓநாய்க்குட்டிக்கானது. அவற்றை பயபக்தியுடன் தரையில் வைத்தான். ஏழு ஊதுபத்திக் குச்சிகளை எடுத்துத் தரையில் ஊன்றினான்; அவற்றைப் பற்ற வைத்தான். கடைசியாக, அவன் எழுதி முடித்திருந்த கைப்பிரதியின் முதல் பக்கத்தை வெளியில் எடுத்து, படையலாக அதைக் கொளுத்தினான். நெருப்பு, அவனுடைய பெயரையும், ஓநாய் குலச்சின்னம் என்ற தலைப்பையும் தீண்டியபோது, ஓநாய்க் குட்டி மற்றும் முதியவர் பில்ஜியின் ஆன்மாக்கள் அவனுடைய தவறுக்கான ஆழ்ந்த வருத்தத்தை ஏற்றுக்கொள்ளுமென அவன் நம்பினான். நெருப்பு அவன் கைவிரலைத் தொடும் வரை அணையவில்லை. அதன்பிறகு, முதியவருக்கு மிகவும் பிடித்தமான மது பாட்டிலை வெளியில் எடுத்து, குகையைச் சுற்றிலுமிருந்த மண்தரையில் தெளித்தான். ஓலோன்புலாக் மேய்ச்சல் நிலத்திலுள்ள பழைய ஓநாய்க்குகைகள் எல்லாவற்றிலும் முதியவரின் கால் தடங்கள் பதிந்திருக்குமென்று அவனுக்குத் தெரியும். ஓநாய்க் குட்டியை வளர்க்க அவர் தெரிவித்த எதிர்ப்பைப் புறக்கணித்து அவரை வேதனைக்குள்ளாக்கியிருக்கிறான் அவன். அவனுடைய அந்தக் குற்றத்துக்கு அவனால் ஒருபோதும் பரிகாரம் செய்ய முடியாது.

ஜென்னும் யாங்கும் கைகளை நீட்டி, உள்ளங்கைகளை உயர்த்தி, டெஞ்ஞரை நோக்கினார்கள். எழுந்துகொண்டிருந்த பச்சைப் புகையைப்

பின்தொடர்ந்து, ஓநாய்க்குட்டி மற்றும் முதியவரின் ஆன்மாக்களைத் தேடினார்கள்.

“குட்டி ஓநாய், குட்டி ஓநாய்... அப்பா, அப்பா... உங்களைப் பார்ப்பதற்காக நான் இங்கு வந்திருக்கிறேன்” என்று கூக்குரலிட ஜென் விரும்பினான். ஆனால் அவனால் அப்படிச் செய்ய முடியவில்லை. அதற்கான அருகதை அவனுக்கில்லை. அவர்களுடைய ஆன்மாக்களைத் தொந்தரவு செய்ய அவனுக்குத் துணிவில்லை;

அவர்கள் கண்களைத் திறந்தால், கீழேயுள்ள மஞ்சள் நிறமாகிவிட்ட, இறந்துகொண்டிருக்கும் Ôமேய்ச்சல் நிலத்தைÕப் பார்க்க நேரிடுமென அஞ்சினான்.

நிசப்தமான ஓநாய் மலையை ஜென் சென் பார்த்துக்கொண்டிருந்தான்; அவன் எப்போது மறுபடியும் அங்கு திரும்ப வருவான் என்று அவனுக்குத் தெரியாது.

2002ஆம் ஆண்டு இளவேனிற் காலத்தின்போது, பட்டுவும் கஸ்மாயும் ஜென் சென்னோடு தொலைபேசியில் தொடர்புகொண்டு, “ஓலோன்புலாக்கின் மேய்ச்சல் புல்வெளியில் எண்பது சதவீதம் பாலையாகிவிட்டது” என்றனர். “இன்னும் ஒரு வருடத்தில், முழுப் பகுதியும் நிரந்தர மேய்ச்சலிலிருந்து மாறி, ஆடு மாடுகளை வளர்க்கும் இடமாக, கிட்டத்தட்ட உங்களுடைய விவசாய கிராமங்களில் உள்ள விலங்குப்பட்டிகளைப் போல ஆகிவிடும். ஒவ்வொரு குடும்பமும் பெரிய பெரிய வீடுகளை வரிசை வரிசையாகக் கட்டும்.”

ஜென் சென்னுக்கு என்ன சொல்வதென்று தெரியவில்லை.

சில நாட்களுக்குப் பிறகு, அவனுடைய ஜன்னலுக்கு வெளியே மஞ்சள் டிராகன் புழுதிப் புயல் எழுந்து, வானத்தையும் சூரியனையும் மறைத்தது. பீஜிங் முழுவதும், மூச்சைத் திணறடிக்கும் புழுதியால் சுற்றிலும் மூடப்பட்டது. சீனாவின் மேன்மையான நகரமானது, மஞ்சள் மணல்மூட்ட நகரமாக மாறியது.

ஜன்னலுக்கு அருகே தனித்திருந்த ஜென், பாழ்பட்டுப் போனதை அறிந்த உணர்வோடு, வடக்காகத் தொலைவில் நோக்கினான். ஓநாய்கள் புராணக்கதைகளாகிவிட்டன; மேய்ச்சல் நிலமானது தூரத்து நினைவாகிவிட்டது. நாடோடி மேய்ச்சல் சமூகம் இப்போது வழக்கொழிந்து விட்டது. உள்மங்கோலிய மேய்ச்சல் நிலத்தில், ஓநாய்களால் கடைசித்

தடயமாக விடப்பட்டுச் சென்ற ஓநாய்க்குட்டியின் பழங்குகைகூட மஞ்சள் மணலால் புதைக்கப்பட்டுவிட்டது.